உ

கணபதி துணை

ஸ்ரீ பார்க்கவ புராணம்

என்னும்



# விநாயகபுராணம்.

இஃது

ஸ்ரீகைலாயபரம்பரை திருவாவடுதுறையாதீனம்

கச்சியப்ப சுவாமிகள்செய்தருளிய

பாடலுக்கிணங்க,

திருமழிசை

வயித்தியலிங்க முதலியார் குமாரர்

முத்துசாமி முதலியாரால்

வசனரூபமாகச் செய்யப்பட்டு

சென்னை-இட்டா

பார்த்தசாரதி நாயுடு அவர்களால்

ஸ்ரீ பத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1911.

GOLDEN PRESS., MADRAS, N. C.

கடவுள் துணை.

(இரண்டு ரூபா முத்திரை ஸ்டாம்பு)

விநாயக புராணமென்னு மிந்நூலின்

எடிட்டர்

# பாத்திய விக்கிரயப் பத்திரத்தின் நகல்.

1908-ஹு மேமீ 5உ சென்னபட்டணம் பெத்துநாயக்கன் பேட்டை ஆசாரப்பன் தெரு 81 - வது, நெம்பர்வீட்டில் ஸ்தாபித்திருக்கும் ஸ்ரீபத்மநாபவிலாசம் பிரஸ் தலைவராகிய இட்டா - பார்த்தசாரதிநாயுடு அவர்கட்கு ஷை யூர் ஷை பேட்டை குமரப்ப முதலிதெரு 26 வது, நெம்பர்வீட்டிலிருக்கும் திருமழிசை-வைத்தியலிங்கமுதலியார் குமாரராகிய முத்துசாமி முதலியார் எழுதிக்கொடுத்த பார்க்கவபுராணமாகிய விநாயகபுராண வசன மென்னும் புஸ்தகக் காபிரயிட் விக்கிரயபத்திரம் என்னவென்றால், இப்பவும் என்னால் இயற்றப்பட்டு என்பேராலேயே ரிஜிஸ்டர் செய்து யான் உபயோகித்து வந்த ஷை விநாயகபுராண வசனத்தின் காபிரயிட் அவகாசமுதலானவற்றை நாளதுதேதியில் தங்களுக்கு விற்க விலை தீர்மானித்த ரூபா 200. இந்த ரூபா இருநூறும் தங்களிடத்தில் நாளதுதேதியில் நான் பெற்றுக்கொண்டேனாகையால் இனி எனக்கும் அந்தப் புத்தகத்திற்கும் யாதொரு பாத்தியதையில்லை. ஆகையால் தாங்களே வேண்டுமான பதிப்புகளை 1905 - ஹு அக்டோபர்மீ 1உ முதல் அச்சிட்டு அநுபவித்து மற்றும் உண்டான சுதந்தரங்களையும் பெறவேண்டியது. இதற்கு யாதொரு கலனுமில்லை, கலனுளதாகத் தோற்றும்பக்ஷத்தில் நானே முன்னின்று தீர்த்துக் கொடுக்கக்கடவேன். இந்தப்படி என் மனோராஜியில் சம்மதித்து எழுதிக்கொடுத்த விநாயகபுராணவசனக் காபிரயிட் சுதந்தரத்தின் விக்கிரயப் பத்திரம்

இப்படிக்கு,

தி. முத்துசாமி முதலியார்.

சாக்ஷிகள்.

ஜெ. சேஷகிரி ராவ்.

சி. ராஜு முதலியார்.

போ. பார்த்தசாரதி நாயுடு.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# விநாயக புராண வசன

# படலஅட்டவணை.

## முதலாவது,

## உபாசனாகாண்டம்.

# படலஅட்டவணை.

# படலஅட்டவணை.



## இரண்டாவது,
## இலீலாகாண்டம்.



சுபம்! சுபம்!! சுபம்!!!

உ

கணபதிதுணை.

# சிறப்புப்பாயிரம்.

இஃது.

இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை.

## விசாகப்பெருமாளையர் அவர்களால்

இயற்றப்பட்டது.

———:O:———

நிலமண்டில வாசிரியப்பா.

ஏர்தருகமலக் கண்ணனெண் கண்ணன், பார்தனையகழ்ந் தும்பறந் துங்காணாத், திங்களணிந்த செஞ்சடைக்கடவுள் புங்கமலர்கொடு பூசையுஞற்றி, மும்மாதிலு முருக்கிடநின்ற, பெம்மானங்கரன் பீடுறுசரிதையைப், பூதரவில்லிதாள் போற்றுமன்பினனு, மாதவப்பிருகு மாமுனியென்போன், பூமிகாந்தனைநிகர் சோமகாந்தற்கு, நேமிசூழ் தருநெடுநிலவரைப்பில், ஆரியமொழியிலருளியபடியே, நாரியோர்பாகனற்றுளன்றிப், பிறவோர்பற்றும் பேணிடாஞானந், துறவோர்வாழுந் துறைசையம்பதிவாழ், கச்சியப்பனுங் கவிஞர்கோன் புலவர், உச்சிமேற் கொள்ள வுயர்தமிழ்ச்செய்யுளான் மொழிபெயர்த்துரைத்த முதுநூலதுதான், வழியறிந் துணரவடுவிலைந்தியலுங், கற்றோர் சிலர்க்கே யன்றிமற்றோர்க்குத், தெற்றென வுணருந் திறத்ததன்றதனால், வள்ளவாய்க் கமலத் தஞ்சிறைவண்டு, தெள்விளிமுரன்று தேம்பிழியூற்ற,முறுக்கவிழ்ந்தொழுகுநறப்பெருவாரிக், கருங்கழன் மள்ளர் செங்காலன்னம், இரங்குறப்பயிற்றியவெழில்பெறுகழனிக், கட்டியைக்கரைப்பக் கரைவழுக்ககல,மொட்டலர்துடவைமுதிர்தாதுகுக்குஞ், சீரைக்காட்டுந் திருந்துறுசெல்வக், காரைக்காலிற்கலந்துவாழ்வுறுவோன் வியனட்பெமக்கெமக் கென்னமேதினியோர், நயநட்புமீக்கொளு நயனப்பவள்ளல், தகைமைவிளக்கிய தனிமைத்தனுகிப், புகாறு செந்நாப் போதார்புகன்ற, தக்கார்தகவில ரென்பதவரவர், எச்சத்தாற்காணப் படுமெனுந்தெய்வப், பொய்யாமொழிக்குப் பொருந்திலக்கியமாய், எய்யாவைய மின்புற வுதித்தோன், மாற்றருசிறப்பின்வருந்தியோர்போதுவந், தேற்றவர்தமையவ ரேற்றநாட்டானென, வேற்பவர்க்காக்குறு மிசைபுகழாளன், நூலினலனெனநுண்ணிதிற் புணர்வோர், பாவினிசைந்த பண்புடைப்பெரியோன், இகல

## சிறப்புப்பாயிரம்.

றுசிவனடிக் கன்பருக்கினியனுங், தகஸ்ரீ குமாரச் சுவாமிவள்ளல்,
பார்க்கவபுராணப் பனுவலதனின், யார்க்குமிலைமறை கரியெனவமை
க்த, அறமுதனான்கு மையமுன்மூன்று, மறமுறைவெளிவிடை மலை
யெனவாக்கு, யாவருந்தேறி யெளிதுணர் வகையின, மேனாச்செய்
கென விளம்பினனாகத், தொகுத்தன விரித்தும் விரித்தன தொகுத்
தும், வகுத்தனன் வசன காவியமாகக், காவியங்கண்ணினர் கவின்க
வர்வுறுபாக் கோவியந்திகழுமொளிர்மணிமாடமுஞ், சிறையளிபாடு
நறைகமழ்சோலையும், முறையுளிவழாதமறையவராதி, நாற்பால்வரு
ணமு நண்ணிவாழ்மறுகும், நூற்பாவினத்து நுவன்றிடுகழகமுங்,
தெற்றியம்பலமுஞ் சித்திரகூடமும், உற்றிடுமழிசை யொண்பதியு
டையான், எங்கும்புகழ்பெறு செங்குந்தர்கடம், பொங்குமரபினன்
பொறைநிறைவுடையோன, பதிமுதன்முப்பொருட் பான்மைதேற்
றுபு, சதிருறுதலமோ ராறினுந் தான்றரீஇ, இரும்புநீருண்டென
வின்னுயிரின்பப், பெரும்பரலகரியிற் பெபராவிழுங்கிய, பகைபெறு
பவதுயர் பாற்றிவீடளிகுந், தகைபெறுவீர சைவசிகாமணி, மூ
லவல் லிருட்கிடந் தெழுந்துயிர் மும்மலத், தூலபந்தத்திற் சுழலு
றச் சுழற்றும், இருவினையையுந் திரிசுடுகம்போன், றொருசிவங்கு
ருமுத லுயர்மூவடிவாய்த், தன்னருளியலான் மன்னுட லுயிர்பொ
ருண், மூன்றையும்வாங்க முதலியரொருவி, மூன்றியற்கலுவாமூவா
முழுநிலை, யுறுமெனவுணர்ந்தவ் வுறுதிநாடிய, மறுவறுமனத்தன்மலி
சீர்வரைப்பிற், சிவசாதனமே தவசாதனமெனக், கொள்ளுதலதுவே
குணமாண்டோக, டெள்ளிய நெறியெனத்தெரீஇத்தனை யுடை
யார், சங்கமமெனவே தாவின்றுணர்ந்தச், சங்கமந்தனக்குறு தனி
ப்பொருளென்போன, சற்குணநிதியெனச் சாற்றுநர்சாற்றுக, கற்
குணந்தெரீஇப் பின்காட்டாவேதி, ஏருறுவயிதிய லிங்கவேடவத்
திற், சீருறவுதித்தோன் சிவன்றாளிணைமலர், மறவாவுளத்தன்மாசறு
மதிஞரோ, டுறவாயென்று மொழுகுறு பண்பினன், உயர்ந்துபேர்மா
ற்றி னுயர்மக்கட்கு, முந்நூல்கிளந்த முறைப்படத் தொகுத்துப்,
பொதுவறவளர்க்கு முதுமேன்புடையோன், எப்பொருள் யாவர்
வாய்க் கேட்பினு மப்பொருண், மெய்ப்பொருள்காணுறு மீக்கூர்
மதியான், இம்பரினுரைவலா ரிலரெனுமிழுக்கற, உம்பரிம்பரினுறவ
ந் தெய்திய, உத்தமக்கவிஞனெழுளிர்குணமேரு, முத்துச்சாமி
யென் முதுபுகழோனே.

சிறப்புப்பாயிரம்
முற்றிற்று.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பார்க்கவபுராணம்

என்கின்ற

# விநாயகபுராணவசனம்.

## காப்பு

திங்களணி சடைப் பெருமான் பூசை யாறறித்
திரிமதிலுங் கடந்திடமுன் னின்றான் யாவன்
றங்குகடற் புவிவரைப்பி னெடியோ னாதி
சகலருக்கு மூறுதவிர்க் கின்றான் யாவ
னங்கவன்மெய்ச சரிதமொழி பெயர்ப்ப வேண்டி
யவனடியே சரணாக வடுதது ளேற்கு
மங்கலசிர் மயமதீரத் தமிழ்ச்செம் பாடல்
வாரிமட மடையுடுத்து வளரு மன்றே

---

## கடவுள்வாழ்த்து

### விநாயகர்

அகரமென வறிவாகி யுலக மெங்கு
மமர்ந்தகர வுகரமக ரங்க டம்மாற்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொரு ணான்கினையு மிடர்தீர்த் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு
[illegible]மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளு
[illegible]க் கணபதியை நினைந்து வாழ்வாம்.

## விநாயகபுராணம்.

### சித்திபுத்தி.

வேறு.

கருணைமதம் பொழிமுகத்துக் கணேசரவர் தமக்கறிவுந் தொழிலு மான
வருளெனுமுண் மையையெவரு மறியவவ ருமையினவ தரித்த ஞான்று
மொருமுனிவோம் பியதழலி னவதரித்த ஞான்றுமுட னுதித் தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்குஞ் சித்திபுத்தி யெனுமிவர்தாள் சென்னிசேர்ப்பாம்.

### பரசிவம்.

பூமாது தனைமணந்த புயல்வண்ணப் பெருமானும் புலவர் போற்று
நாமாது தனைமணந்த நான்முகனும் போர்மாது நயக்கு மெண்டோட்
கோமானுந் தானேயென் றுணர்ந்ததற்கே பிரணவகுஞ் சரமாய்த்தோன்றி
மாமாவின் முகத்தானை யுயிர்த்தானை நினைந்திறைஞ்சி வழுத்து வாமே. (௯)

தேரேறி வரும்பரிதி மண்டிலத்துஞ் செழுமதிமண் டிலத்துஞ் சீர்கொண்
டேரேறி வருங்கனன்மண் டிலஞ்சத்தி மண்டிலத்து மெண்க ணனு
நீரேறி வருமரியு முருத்திரனு மகேச்சுரனு நிலவச் செய்து
காரேறி வருமவர்த மூளத்தமரெண் குணத்தானை நயந்து வாழ்வாம். (௪)

### சிற்சத்தி.

வேறு.

சத்தியாய் விந்துவாய் மனோன்மனியாய்த் தயங்கிய மகேசையா யுமையாய்
வித்தில வடந்தாழ் முகிழ்முலைத் திருவாய் நெடும்புகழ் வாணியாய் வேறு
மெத்திற மிறைவ னின்றனை னவனுக் கியைதர வத்திற நின்று
மெத்திய வுயிரின் மலவிருள் கெடுத்து விளங்குபூ ரணியையேத் தெடுப்பாம்.

### நடேசர்.

வேறு.

மூத்தமக னிடத்தார்வ மீன்றெடுத்த பிதாமகற்கு முதிரு மாற்றும்
பூத்தபொழிற் சென்னைநகர்ப் புகுந்துபிர சன்னமுகப் புத்தேளன்ப
ரேத்தெடுப்பப் பிரசன்ன மாயிருக்கு மாலயத்து ளெய்தி மன்றுட்
கூத்தியற்று மிளைப்பாறுஞ் சிதம்பரே சுரர்மலர்த்தாள் குறித்து வாழ்வாம். ()

### சிவகாமசுந்தரி.

சேதனசந் திரகலையுந் தினகரன்வெம் மையுங்கனலிற் செறிந்த தேசும்
போதளவு நறுமணமும் போலிறைவன் குணமான புனிதை வேறாய்க்
கோதனவு முயிர்ச்சிவத்தைக் காமுறவே சிவகாமங் கொளுந்து நின்ற
காதலவுங் கருத்தடங்கட் சிவகாம சுந்தரியைக் கருத்துள் வைப்பாம். (௭)

### குமரவேள்.

மாக்குமைந்த கனையாளுஞ் சோவெறிந்த திறலாளு மதிக்குந் தோளுஞ்
சிரக்குனக்க வலைகடலுஞ் சேணிகந்த பெருவரையுந் திறந்திற் குன்றக்

காந்தனுக்குங் குறமுனிக்குங் கருத்தின்மயல் பூட்டியகை தவஞ்சால்வெற்பி
னூர்ந்தனைத்த சேயிலைவேல் வலனுயர்த்த விளையவனை யுளத்துள் வைப்பாம்

திருச்சேஞ்சலூர்ப் பிள்ளையார்.

மறைநெறியிற் பிறழாத வேதியரான் பால்கறந்து வெளவும் நீங்கு
முறைபுரியத் தக்கதென வடுத்த டித்துப் பாற்கலத்தை முனிந்த தாதை
பொறையுடன்மண் ணிடைப்புரள விருதாளு மரவெறிந்த பொல்லாத்நீங்கு
மிறையவன்மெய்ப்பணியாகவிரும்பதத்தையடைந்தவரையிறைஞ்சிவாழ்வாம.

திருநந்திதேவர்

வேறு

வெள்ளி மால்வரை விமலனூர் விளம்பிய வேதந்
தெள்ளு மாகம புராணங்கள் செழுங்கலை பிறவு
முள்ள வாறுதேர்ந் துலகெலாம் வழங்கமுன் னுரைத்த
வள்ள லாகிய நந்தியங் குரவனை மதிப்பாம். (௧0)

சமயகுரவர்.

பருவ மேது மிலார்புகும் பரமதப் பொருள்கள்
கருதி யோம்பவொன் றுதெனக் கண்ணுதற் பெருமா
னருளி னூற்பல வதிசயச் செந்தமிழ் பாடிப
பொருளி தாமெனத் தெரித்தநால் வர்களையும் புகழ்வாம். (

மெய்கண்டதேவர்

சிறிய வாடியிற் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிவெலா மகப்படித் தவற்றி
னெறியெ லாம்விளக் கியசிவ ஞானபோததனைக்
குறிசெய் தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம். (௧௨)

நமச்சிவாயதேசிகர்.

வேறு

இருவினை யநாதி நிற்றற் கேதுவு மிருளநாதி
மருவிய செயலு நீங்கும் வண்ணமு மற்றுந் தேற்றி
யருள்பதித் தெனையு மாட்கொண் டாவடு துறைக்கண் வாழுந்
திருவளர் நமச்சிவாய தேசிகன் மலர்த்தாள்போற்றி (௧௩)

கடவுள்வாழ்த்து.

முற்றிற்று

# விநாயகபுராணம்.

## நூல்விவரம்.

—— *. ——

"தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப் பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப" என்பது கொண்டு சைவசித்தாந்த வேதாந்த சமரச குணரத்ந ஞானதீபகராய், திருவாவடுதுறையாதீனத்தின்கண் எழுந்தருளியிருந்த கச்சியப்ப சுவாமிகள்பால், தயிர், நெய், தேன், கன்னல் என்னும் ஐங்கடலையும் கடைந்து அமுதெடுத்தளித்ததுபோல எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, என்னும் ஐந்திலக்கணமாகிய கடலைக்கடைந்து, முற்காலத்தில் வடமொழியிற் சொல்லப்பட்டிருந்த விநாயக மான்மிய மென்கிற வமுதத்தையெடுத்து யாவரும் இன்போடு செவிமடுத் துண்ணத்தக்கதாகத் தமிழில் மொழிபெயர்த்தருளினர்

அஃது மொழிபெயர்த்துச் சுமார் நூறுவருடமாகியும் இதுகாறும் அநுபத்தியரூபமா யிருத்தலால், நிகண்டு கற்று இலக்கிய ஆராய்ச்சி செய்து, இலக்கண நூல்களிலே பயின்று அடி தொடை முதலிய சந்திகளைக்கூட்டியும் பிரித்தும் உணர வல்ல வித்துவான்களுக்கேயன்றி ஏனையோர்க்குச் சிறிதும் பயன்படாதிருக்கின்றது. அவ்வித்துவான்களுக்கும் நோய், கவலை, மூப்பு முதலிய ஏதுக்களால் விவேகங் குறைந்த காலத்துப் பிரயோசனப்படாது.

கற்று வல்லோர் சிலரேனுங் கற்று வல்லோ ரல்லாதார் பலருக்குத் தாமே யுணர்த்தவும், அக்கற்றுவல்லோ ரல்லாதார் கற்று வல்லோரைத் தாமே யடைந்து உணரவும், அஃது பெருங்காவியமாகியும், அரியநடையாயும் இருத்தலினால் மிகுதியுங் காலத்தைநோக்கி மடிசெய்கின்றனர். அன்றியுமக் காவியத்தில் வியாச முனிவருக்குப் பிரமதேவ னுணர்த்தியவாறு பிருகு முனிவர் சோமகாந்தனென்னும் ஓரரசனுக் குணர்த்தியபடி சூத புராணிகர் நைமிசாரணியமுனிவர்கட்குச் சொல்வதாகமுதலிலெடுத்து, முடிவில் அதனைப் பத்தியோடு கேட்ட மகத்துவத்தால் வியாசமுனிவர் வரம்பெற்றதையுஞ் சோமகாந்தரசன்முத்தியடைந்ததையுங் கூறியிருப்பதன்றி, அதற்கு வகுத்திருக்கின்ற காண்ட மிரண்டனுள் உபாசன காண்டத்திலுள்ளபடலங்கள் பெரும்பாலும் ஒன்றுக்கொன்று தொடர்ச்சி பெற்றுச் சொல்வோரையுங் கேட்போரையும்

வருவிக்கின்றன. இவைகளெல்லாம் புலமையின் மிக்கார் அறிந்து கொள்ளுவரேயன்றி ஒழிந்தோர்கள் யாவரும் ஆங்காங்குச் சொல்வோரையுங் கேட்போரையுங் காணுது மயங்குவர்.

அதனால், "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல காலவகையினுனே" என்பதுகொண்டு பத்திய ரூபமாயிருக்கின்ற அக்காவியத்தை நிறைந்த கல்வியையுடைய வித்துவான்களும், குறைந்த கல்வியையுடைய பிறரும் எக்காலத்துந் தாமே எளிதில் ஐயந்திரிபின்றி யுணர்ந்து, தன்மார்த்த காமமோக்ஷமாகிய நான்கு புருஷார்த்தங்களையு மடைந்து உஜ்ஜீவிக்குமாறும், ஒருவாற்றனுந் தமக்கு நிகரில்லாதவராகிய விநாயகக்கடவுள் இன்ன தன்மையர், அவரை வழிபடத்தக்க நெறிகள் இவ்வகையின, அவர் செய்தருளிய திருவிளையாடல்கள் இத்தகைமைய, அவைகளை யுணர்தலால் வரும்பயன் இவ்வியல்பிற்று என்றறியும் ஒள்ளறிவின்றிக் கல்வியின்மையையே தலைமைகவுடைய வெள்ளறிவினராகிய ஆடவரும் ஸ்திரீகளும் பிறரைக் கொண்டேனும் வாசிப்பித்து உணருமாறும், முற்காலத்திற் பிரமதேவனுலும், பிருகுமுனிவராலுங்கேட்டுணர்ந்த முதலதிகாரிகள் இருவரையும் அந்தப் படலங்களின் முதலினுங் கடையினும் வருவிக்கின் வியர்த்தமாய்ப் பெருகுவதன்றி வாசிப்போருக்கும் வெறுப்பினை யுண்டாக்கு மாதலால் அவர்களை இடையிற்றழுவா தொழிக்கும் வண்ணம் பன்னிரண்டு படலங்களாகவிருக்கின்ற அவர்கள் சரிததிரங்களை நான்முகத் துறப்புக்களுள் ஒன்றாகப் புராண மகத்துவமாக்கி அதனை நான்குவகைச் சரிதத்தினுல் முடித்தும், அவைகளில் விரிந்து அமைந்துகிடக்கின்ற அலங்காரமுதலியவைகளையெல்லாம் அங்ஙனம் பெருகாதவண்ணந் தொகுத்தும், தொகுத்திருக்கின்ற ஏனைய படலங்களில் அவைகளை விரித்துப் பிற்காலத்திற் சூதபுராணிகரா லுணர்த்தப்பெற்ற சவுனகாதி முனிவர்களைமாத்திரந்தழுவி யொரோவிடங்களில் இன்றியமையாச் சிறப்பினரா வருகின்ற கிளையதிகாரிகளை ஆங்காங்கு முடிவினுங் கடையினும் வருவித்தும், உபாசனு காண்டத்திலுள்ள ஐம்பத்தொன்பது படலங்களினுற் காவியததலைவர் திருவுருக்கொள்கின்ற படலங்க ளொழிந்து ஏனையபடலங்களை அவ்வவற்றின் தொடர்பின்படி புணர்த்தி நாற்பது படலங்களாக்கியும், லீலாகாண்டத்தினுள்ள பன்னிரண்டு படலங்களையும் அவ்வாறே யமைத்தும் அவ்வவ்வமையங்களிற் சொல்லப்பட்டிருக்கின்ற தொகைப்பொருள்

களையெல்லாம் பிரித்தும், பிரிக்கப்பட்ட பொருள்களினுடைய பயன்களையும் அவ்வவற்றினடியிற் காட்டியும், ஆங்காங்கு தோத்திரமாகவுஞ் சாத்திரமாகவுங் கூறியிருக்கின்ற செய்யுட்களையெல்லாம் யாவருந் துதிக்கவுஞ் சிந்திக்கவும் உபயோகமாதற்பொருட்டு வேறு படுத்தாது விடுத்தும், பெரும்பான்மை சந்தி விகாரங்களின்றிச் சிறுபான்மை ஆவசியமாகிய திரிசொற்களையும் வடசொற்களையும் பிரயோகித்துங் கத்தியரூபமாக இயற்றப்பட்டது.

பிரணவப் பொருளாய்ப் பேதம பேதமே பேதா பேதம்
வரமலி பொருளா யொன்றாய் வரம்பிலா வின்ப மாகும்
பரவிய வைங்கைப் புத்தேன் மான்மியம் பகரு நூரால்
விரவிய பார்க்க வத்தை விநாயக புராண மென்பார்

# தாற்பயன்.

நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலனாய் நிரஞ்சனமாய் நினைவுக்கெட்டாச்
சத்தியமாய்த் தற்பரமாய்த் தத்துவமாய்ச் சச்சிதா னந்த மாகி
யத்துவிதப் பொருளாகி யகண்டபரி பூரணமா யமல ஞான
மெதநியவுள் ளகத்தமர்ந்த விநாயகமான பியக்தவத்தோர் விரும்பிக்கேட்பார்.

விருத்திரனைக் கொன்றானு நான்முகனு மதுவுயிரை வீட்டினானு
முருத்திரனும் வழிபடுமா றெங்குமொரு தனிமுதலா யுலகுக் கெல்லாங்
கருத்தனுமாய் விளையாடுங் கணபதிமான் மியங்கணக்கில் பிறவி தோறும்
பொருத்தமுறத் தவம்புரியார் விரும்பினுமற் றவர்செவியிற் புகாதோர் நாளும்.

எவனுடைய வாணையினாற் பிரமனுக்குச் சிருட்டியுமெவ் வுயிரும் வாழ
வவணமுயர்த் தவற்களிப்பு முருத்திரனுக் குலகமெலா மொடுக்கும் வீறும்
பவனனுக்கு வீசுதலும் பாற்கரற்குச் சரித்தலும்பன் னாளும் வைகு
மவனுடைய மான்மியத்தை நாந்திகர்பா தகர்முதலோ ரறிய மாட்டார். ()

மறையிடத்து மரியயனிந் திரனாதி யமரர்மதி யிடத்துந் தோன்று
முறையுமொரு பொருடன்னை வழிபடுவோர் தமக்கருளா லுருவு கொண்டு
நிறையவரங் கொடுத்தசரித் திரமனைத்தும் விளக்கிநிலை பேறு செய்த
குறையறுமிப் புராணத்தைக் குறித்தவர்க்கு நாற்பயனுங் கூடுமன்றே. (௪)

## அவையடக்கம்.

பிரணவ சொரூபியாகிய விநாயகக் கடவுளது மான்மியத்தை ஆரியபாடையினின்றுந் திராவிட பாடையின்கண் மொழிபெயர்த்திடுவான் புகுந்த புலவர் பெருமான் கச்சியப்ப சுவாமிகள், தம்மை வழிபடுவோர்க்கு எல்லாக் கலைஞானங்களையும் வரையா தளிக்கவல்லோரில் வள்ளற்றன்மையை யுடையாராகி யிருந்தும் அக்காவியத்திற்கு அவை யடக்கங்கூறுவான் றொடங்கினர்

அறுசீர்க் கழிநெடி லடி யாசிரியவிருத்தம்

சிற்பநூல் வழியிற்செய்த வுருவெனச் சிற்பஞ் சாராப்
புற்பொரு ளுருவு மைங்கைப் புண்ணியன் புணர்ந்து நிற்பி
னற்புதப் பூசை கொள்ளு மவன்புக ழறைத லாலே
நற்பதம் புணர்த ராவென் பாடலு நலத்த தாமே

ஒருபொருண் முழுதுங் காணா ருபபொரு ளியல்பு கூறக்
கருதுவ ரல்லர் மேனாட் கண்ணுதற் பெருமான் றானு
மருவிடை யூறுகண்டு வணங்கினா னென்றா லந்தப்
பொருவிலி கதையான் கூறப் புகுந்தது நகைய தாமே

என்றாராயின், அவர் மொழிபெயர்த்தருளிய அக்காவியத்தை யான் வசனமாகவரையத் துணிந்தமை அகரவருக்கமெழுத அறியாதானொருவன் அரியதிருமுறைக்கு உரை வரையக் கருதினமை போலும். ஆயினும், ஆவின்பால் அசுத்தமாகிய மட்கலத்திற்பெய்திருக்கினும் அப்பாலின் பெருமையினையறிந்தோர் மட்கலத்தினது சிறுமையை நோக்கியொழியார்கள் அதுபோல யான் கூறும் இவ்வசன காவியமானது பொருட்சோர்வுமுதலிய குற்றங்களால்நிறைந்த புன்சொல்லா லாயினும் அஃது தம்மோ டொப்பாரு மிக்காருமில்லாத விநாயகக்கடவுளது பெரும் புகழோடு கலந்திருத்தலின், ஐவித விலக்கணங்களையுமுணர்ந்து, சிங்காரம் வீரியம் பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம் என்கின்ற நவரச வலங்காரங்களோடுஞ் செய்யுள் புனைய வல்ல கவிவாணர்களாயினோர் அக்குற்றத்தைநோக்கி யொழியார்கள் குணத்தினையே பாராட்டுவார். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் நூற்கும் ஓர் குற்றஞ் சாதிக்கத் துணிவரென்பதற்கு "உண்டு குணமிங்கொருவர்க் கெனினுங்கீழ்-கொண்டுபுகல்வதற்குற்றமே-வண்டு மலர்ச், சேக்கைவிரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்பன்றோ-காக்கைவிரும்புங்கனி." என்று அவரை நோக்கிப் பழையாரும் எள்ளியிருத்தலே சான்றாம்.

# நைமிசாரணியப்படலம்.

திருத்தகு மார்பன் வேதன் சிவபிரான் மூவரோடு
விருத்திர னுவி யுண்டோன் விண்ணவர் பலரு மேவி
யிருத்தலின் முனிவர் வேள்வி யிலங்குநை மிசமாங் கான
முருத்தகு மேரு வொக்கு முருவமாத் திரமே வேறு.

உலகங்களிற் சிறந்து கோடி சூரியோதயம்போல விளங்குஞ் சத்தியலோகத்தில் தவத்தர், தேவர், குமார வருக்கங்கள் சூழ, பொற்பிரகாசமாக விளங்குஞ் சபாமண்டபத்தின் முகப்பில் நவரத்தின மயமா யோங்கிய சிங்காதனத்தின்கண் கலைமகள் சமேதனாய் வீற்றிருக்கின்ற பிரமதேவனை முன்னொருநாள் இல்லறங்களை வழுவின்றி யோம்பிய முனிவர் கணங்கள் வந்து சேவித்துப் போற்றி விண்ணப்பஞ் செய்ததாவது, சுவாமீ! இதுகாறுங் கிருகத்தாச்சிரமத்தி னின்றனம் இனி யரிய தவங்களைச் செய்து, முத்தியினை யடைய விருப்புற்றன மாதலால், அதற்குச் சிரேட்டமாகிய தலமொன்றை யநுக்கிரகஞ் செய்யவேண்டுமெனப் போற்ற, பிரமனதற் கிரங்கி ஒருதருப்பையினை வட்டமாக்கி நிலத்திலுருட்டி, மாதவரே! இதனைத் தொடர்ந்துபோவீரேல் இது நின்றவிடம பவித்திரமாகும் அத்தலத்தில் வதிந்து தவங்களைச்செய்யக் கடவீர்களென்றுசொல்ல, அத்தவத்தர்சேவித்து விடைபெற்று அத்தருப்பைச் சக்கரத்தின் பின்சென்று அதுநின்ற விடத்தினையே முக்கியமாகக் கொண்டு, அரியதவங்கள் முதலானவற்றைச் செய்திருந்தார்கள். தருப்பை நேமியா லுண்டாயதாகலால் அவ்விடம் நைமிசாரணியம் (நைமிசம்-சக்கர மோய்ந்தவிடம்) என்னுங்காரணப்பெயரை வகித்திருக்கின்றது.

அந்நைமிசாரணியமானது ஒரு சரீரத்தில் உபநயனத்திற்கு முன்னும் பின்னுமான இரு பிறவிகளையடைந்து, ஆகவனீயம்-தக்கிணாக்கினியம் - காருகபத்தியம் என்னு * முத்தீக்களை வளர்த்தி, இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னு நான்குவேதங்களையோதி, சத்தம்-பரிசம்-ரூபம் ரசம் - கந்தம் என்னு மைம்புலன்களைவாட்டி,

---

* ஆகவனீயம்-வேதத்தை வழங்கச்செய்வது தக்கிணாக்கினியம் - தேவர்கட்குத் தக்கிணை கொடுக்கச்செய்வது காருகபத்தியம் - பூலோகத்தை இரட்சிக்கச்செய்வது. இவைகளே யாகாக்கினிகளாம்.

# நைமிசாரணியப்படலம்.

ஓதல்-ஓதுவித்தல்-வேட்டல்-வேட்பித்தல் ஈதல்-ஏற்றல் என்னு மறுதொழில்களையுஞ் செய்து, தேவர்-மக்கள்-விலங்கு-புள்-ஊர்வன-நீர்வாழ்வன-தாவரம் என்னு மெழுவகைப் பிறவிகளையு மோட்டி, இயமம் நியமம்-ஆதனம்-பிராணாயாமம்-பிரத்தியாகாரம்-தாரணை-தியானம்-சமாதி என்னும் அட்டாங்கயோகங்களையும் பூண்டிருக்கின்ற அந்தணர் குழுஉக்களும், சடைமுடியணிந்து, புலித்தோ லுடுத்தி இருவினைகளையு மதஞ்செய்யத்தக்க வெண்ணீறுபூசி, உருத்திராக்கவடந்தரித்து, அருளோடுங்கூடி நிட்டைசெய்திருக்கின்ற முனிவர் சமூகங்களும் வசிக்குமிடமாயிருக்கின்றது அன்றியும் வேதாத்தியயனஞ்செய்கின்றவர்கள், ஆகமநெறிகளை யாராய்கின்றவர்கள், ஒரு நியமங் கடைப்பிடித்து அந்நியமத்தி னெறியே நிற்கின்றவர்கள், பதினெண்புராணங்களையும் வாசிக்கின்றவர்கள், அவைகளைக்கேட்கின்றவர்கள், வேள்விகளைச்செய்து முடிக்கின்றவர்களாகிய கூட்டங்களை அவ்வனமெல்கு நிறைந்திருக்கின்றன. இத்தன்மையமேலான சிறப்புவாய்ந்த அவ்வனத்தின் பெருமையையும், அவ்வனத்தில் வசித்திருக்கின்றமுனிவர்கள் மாட்சிமையையும், அம்முனிவர்களாற் செய்துவருகின்ற யாகாதிகளின் தகைமையையும், எம்போலிகளால் அளவிட்டுரைக்கற்பாலதோ? அந்நைமிசாரணியத்திற்சவுனகமுனியென்பவர் சத்திரவேள்வியென்னும் ஒருவேள்வியைச்செய்யத்தொடங்கினர் அவ்வேள்வியைக் காணும்பொருட்டுத் திருநீறுபூசிய திருமேனியை யுடையவர்களாயும், மார்பில் உருத்திராக்கவடந் தரித்திருப்பவர்களாயும், கையிற் கமண்டலமேந்தினவர்களாயும், இன்னுமனந்த கோலங்களோடும் அளவற்றமுனிவர்கள் வந்து நெருங்கினார்கள். அச்சமயத்திற் பதினெண்புராணங்களையுங்குறைவறக்கற்றவராய், காலகாலராகிய பரமசிவத்தின் றிருவடிகளல்லது மற்றொரு கடவுளையும் மதியாதவராயிருக்கின்ற சூதமாமுனிவரும் வந்துசேர்ந்தனர். அம்முனிவரை நைமிசவனத்திலுள்ள முனிவர்களும் அயலிடங்களினின்றும் வந்திருக்கின்ற முனிவர்களுங்கண்டவுடன் மேகத்தைக்கண்ட மயில்போல அளவற்ற களிப்படைந்து உள்ளம் பூரித்து, சிறந்த வாசனத்தி லிருக்கச்செய்து, பற்பல வுபசாரங்களோடு பூசித்து, மந்திர மலர்களா லருச்சித்து, சந்தனம் பூசி, அட்சதை சாத்தி, அமுதளித்து இளைப்பாற்றி இதனை விண்ணப்பஞ் செய்வாராயினர்.

சுவாமீ! பூர்வ சனனங்கடோறுஞ் செய்து முற்றிய புண்ணிய
பலத்தினால் மகா தவசிரேஷ்டர்க ளெல்லாங் கண்டு கொண்டாடத்
தக்க தேவரீரை இன்று யாங்களெல்லோரும் ஒருமிக்கக் கண்டு தரி
சிக்கப்பெற்றோம். அத்தரிசன விசேடத்தால் எம்மைத் தொன்று
தொட்டு வருத்தாநின்ற மாயைநீங்கிப்போயிற்று அஃதன்றி வேதங்
களா லோதப்படுகின்ற பயன்களையெல்லாம் எளிதி லடையப் பெற்
றோம். யாங்கள் நிற்கின்ற நிலைகளுங் குற்றங்களி னின்று நீங்கின.
எம்முடைய பிதிரர்களுஞ் சிவன் முத்தரானார்கள் எம்மை யீன்
றோர்களும் எம்மாற் பெறத்தக்க பயனை யடைந்தார்கள். கொடிய
துன்பங்களை விளைவிக்கின்ற இச் சரீரவாதனையும் இன் றொழிந்து
போயிற்று. இப்பூமியில் யாங்க ளடையக்கருதிய பயன்யாதோ அத
னைத் தடையின்றி யடைந்தோம். எங்கட்குத் தேவரீரைப்போலப்
பதினெண் புராணங்களை வழுவின்றிச் சாற்றவல்லவர்கள் யாவரிரு
க்கின்றனர். அப்பதினெண் புராணங்களை முன்ன ரெங்கட்குத்திரு
வாய்மலர்ந்தருளி யிருக்கின்றீ ராயினும், இச் சவுனகமுனிவர்
செய்துவருகின்ற வேள்வி நிறைவேறுவதற்குப் பன்னிரண்டு வரு
டஞ்செல்லு மாதலால் அதுகாறும் மற்றொரு புராணகேள்வியாகிய
வொப்பற்ற வமிர்தத்தைத் தேவரீராற் புசித்து அதனாலுண்டாகும்
பயனையடைவதே யல்லது சிற்றறிவினை யுடைய யாங்கள் செய்யுங்
கடப்பாடு வேறென்ன விருக்கின்ற தென்றார்கள்.

இவ்வாறு மிகுந்த பத்தியோடும் பணிந்து விண்ணப்பஞ் செய்
தவர்களைச் சூதமுனிவர் நோக்கி தவசிரேஷ்டர்களே? வித்தினை
விதைக்காமல் அவ்வித்தினா லுண்டாகும் பயனை யடையத்தக்கவர்
கள் யாவரிருக்கின்றார்கள். அதுபோலப் பிறப்பில்லாத பரமசிவத்தி
னுடைய பெருமைகளைத் துதிசெய்யாதவர்கள் தீவினைகளி னின்
றும் நீங்கமாட்டார்கள். மேலும் நடுவுநிலைமை தவறாத நல்லறிவினை
யுடையவர்களாகிக் கொடுஞ்செய்கைக ளென்பன ஒன்றேனுமில்லா
மல் நாளுக்குநாட் கொழுந்துவிட்டு விர்த்தியாகின்ற சிவபத்தியைக்
கொண்டு எக்காலத்துந் திரிபின்றி விளங்கு மனவுறுதிபெற் றிருக்
கின்ற நீங்களே ஒரு விசேடத்தினைக் கேட்கப்புகின், அதனை எவ்வி
தத்தேனுங் குறைவில்லாமற் கூறல்வேண்டும் அன்றியும் நீங்கள்
குலாசார வொழுக்கங்களிற் குறைவில்லாமல் மிக்க கூர்மையான
புத்தியினை யுடையவர்களாகி நல்ல தவந் தானமுதலானவைகளைக்
கடைப்பிடித்து அம்பிகை பாகராகிய சிவபெருமானது பத்தியென்
கிற மரக்கலத்திலேறி யிருக்கின்றீர்க ளாதலால், நீங்களம்மரக்கலத்.

தையே துணையாகக்கொண்டு, அப்புராண கேள்வியாகிய கடலையுங் கடக்காமற் போவீர்களா? உறவென்றும் பகையென்றும் பேதமில்லாமற் பல்லுயிர்க ளிடத்துங் கருணைவைத் திருக்கின்ற பரிசுத்தமான வுள்ளத்தை யுடையவர்கள் ஒருகாரியத்தில் விழைவார்களாயின், அக்காரியம் அவர்கட்கும் அவர்களை யடுத்துளோர்கட்கும் பழுதின்றி விளங்கி, மேலாகிய பயனையே தரும் அதுபோல நீங்களும் நல்ல விடயத்தையே மதித்துக் கேட்டீர்கள். கரும்பு தின்பார்க்குக் கூலிகொடுப்பதுபோலப் புண்ணியப் பயனையேசொல்ல விழைவுற்றிருக்கின்ற வெனக்குப்பின்னும் அதிக விழைவினை விர்த்திசெய்தீர்கள். உங்களுடைய விருப்பம் நிறைவேறத்தக்கதாக ஒருபுராணமிருக்கின்றது அதனைச் சொல்வதன்முன் அப்புராணம்வந்தவரலாற்றினைச் சொல்வோங் கேட்பீராக என்றனர்.

நைமிசாரணியப்படலம்-முற்றிற்று.

---

# புராண வரலாற்றுப்படலம்.

சாற்றுசனற் குமாரமே நாரசிங்கந் தகுகாந்தஞ்
சிவதருமங் கழைதூர் வாசம்
பொற்றியநா ரதமேகா பிலமெல் லோரும்
புகழுசனஞ் சவுமியமாம் பிரமாண் டஞ்சீர்
மாற்றரும்வா ருணங்காளி புராண மேத்தும்
வாசிட்ட மிலிங்கமொடு சவுரம் பாவம்
பாற்றியபா ராசரிய மாரீசம்பார் பகர்சாம்பம்
பார்க்கவமென் றவற்றின் பேராம்.

வேறு.

விலக்கரு முனிவர் தம்மால் விளங்கிய வுபபுராணந்
துலக்கிய கிரந்த மெல்லாந் தொகையொ ரிலக்கமாகும்
அலக்கணை யறுக்கு மந்தப் புராணமூ வாறனுள்ளும்
நலக்கும்பார்க் கவபுராண நாயக மாகிநிற்கும்.

பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிடியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மற்சம், காருடம், பிரமாண்டம் என்னும் பதினெண் புராணங்களையும், அவைகளிற்

கூறப்பட்டிருக்கின்ற நாலிலக்கத் தெண்ணாயிரங் கிரந்தங்களோடு முன்பு யாம்சொல்லக் கேட்டிருக்கின்றீர்கள். அப்பதினெண் புராணங்களையும் முற்காலத்திற் கைலாசபதியாகிய சிவபெருமான் திருவடிகளிற் பக்திசெய்து பெற்றுக்கொண்ட நந்திதேவரானவர், சனற்குமார முனிவருக்கு உபதேசிக்க, அதை யம்முனிவ ரிடத்தின் மிகுந்த அன்போடு வியாசமுனிவர்கேட்டுச் சுலோகங்களாக்கி இவ்வுலகெங்கணும் விளங்கி வழங்கத்தக்கதாகச்செய்தார். அதுபோலவே இன்னுஞ் சிலமுனிவர்கள் வேறுவேறு பரம்பரைவழியாக வுபதேசம்பெற்று, அம் மகாபுராணங்கட்கு உபபுராணங்களாகத் தங் கடங்கள் அபிதானத்தாற் பதினெண் புராணங்கள் செய்தார்கள். அவைகள் சனற்குமார புராணமென்றும், நாரசிங்க புராணமென்றும், நந்திபுராணமென்றும், சிவதரும புராணமென்றும், துருவாச புராணமென்றும், நாரதீயபுராணமென்றும், கபிலபுராணமென்றும் அவுசனபுராணமென்றும், சௌமியபுராணமென்றும், வாருணபுராணமென்றும, காளிகபுராண மென்றும், வாசிட்ட லிங்கபுராணமென்றும், மானவபுராணமென்றும், சௌரபுராணமென்றும், பராசரீயபுராணமென்றும், மாரீச புராணமென்றும், சாம்பேசபுராணமென்றும், பார்க்கவபுராணமென்றும், வழங்கப்படுகின்றன. இவைகளெல்லாம் ஆரியத்தில் இலக்கஞ்சுலோகங்களாக விருக்கின்றன. இவ்வுபபுராணம் பதினெட்டினுட் பார்க்கவபுராண மென்பது நாரகமாகியிருக்கும். இப் பார்க்கவபுராணத்திற் பிரணவபொருளாகியும், அப்பிரணவததினின்றும் வேறுபட்ட பேதப்பொருளாகியும், பேதாபேதப் பொருளாகியும், இவைக ளனைத்தையுங் கடந்து நிற்கின்ற ஏகவஸ்துவாகியும், பிரமானந்த சொரூபியாகியு மிராநின்ற விநாயகமூர்த்தியினது மகத்துவத்தை விளங்கக்காட்டியிருக்கின்றமையால் விநாயகபுராண மென்று பெரியோர்கள் வழங்குவார்கள். இவ் விநாயகபுராணத்தை முற்காலத்திற் பிரமதேவன் அநேகதவங்களைச்செய்து, அத தவமுயற்சியினாற் கைலாயத்திற் றிரிநேத்திரதாரியாகிய சிவபிரானா லுபதேசிக்கப் பெற்று, தன்னை அன்போடு வழிபட்ட வியாசமுனிவருக் குபதேசித்தனர்.

அவ் வியாசமுனிவ ரிடத்திற் பிருகுமுனிவர் கேட்டுத் திருப்பாற்கடலி லெழுந்த தேவாமிர்தம்போல யாவருக்கு முபயோகமாதற்பொருட்டு உபாசனா காண்டமென்றும், லீலாகாண்டமென்றும், இரண்டுகாண்டங்களாகப் பிரித்து, அவ்விரண்டையும் இருநூற்றைம்பது அத்தியாயங்களாக்கி அவைகட்குக் கூடியதொகை பன்

ஙீராயிரங் கலோகங்களாகமுடித்து ஒருபுராணமாக்கினர். அப்பு ராணம் பிருகுமுனிவராற் கூறப்பட்டமையால் அக்கருத்தாப்பெய ரைக்கொண்டே பார்க்கவபுராணமென்று வழங்கப்படுகின்றது.

இப்பார்க்கவபுராணத்திற்குநாயகர் கணேசமூர்த்தி யாகலால், அதனைக் காணுபத்திய மகத்துவ'மென்றும் யாவரு மறுட்டித்துப் பெறுதற்கரிய பேற்றினையடைகின்றார்கள் சகவுனகர்முதலிய முனி வர்களே! பார்க்கவபுராண மென்கின்ற விநாயகபுராணம் வந்தவா லாறிதுவே இப்புராணத்தில் தேவர்கள்முதலிய அளவற்ற ஆன்ம கோடிகள் விநாயகக்கடவுளைப் பலவாறுபூசிக்க அப்பூசனைகட்கு அவர் பிரசன்னமாகி நிறைந்த கிருபையோடுகூடியிருக்கும் அற்புத தரிசனங்களைக்காட்டி, அவ்வவர்களிட்ட காமியார்த்தங்களை யநுக் கிரகித்தருளிய சரித்திரங்க ளனைத்தும் விளங்கக் காட்டியிருக்கின் றமையால் இப்புராணத்தை மிகுந்த அன்புடன் கேட்போர்களுக் குத் தருமமுதலிய நான்கு புருஷார்த்தங்களும் கைகூடும் முன் னொருகாலத்தில் இப்புராணிகராகிய பிருகுமகாமுனிவரானவர்தம் மைபடுத்த சோமகாந்தன் என்னு மகாராஜனுக்குப் பிரமதேவன் வேதவியாசமுனிவருக் குபதேசித்த முறைப்படி திருவாய்மலர்ந்த ருளினார் அதனை, அவ்வரசன் அன்போடுகேட்ட மகத்துவத்தால் தானடைந்திருந்த சகலவினைகளும் நீங்கப்பெற்றுக் கணேசமூர்த்தி யினுடைய சாயுச்சியபதவியை யடைந்திருந்தான் அம் மகத்துவத் தைச் சொல்லுவோங் கேட்பீராக அவை வருமாறு:—

புராணவரலாறு-முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# உபாசனுகாண்டம்.

## சோமகாந்தன் வனம்புகத் துணிந்தபடலம்.

பன்னிய பிருகு தன்பாற் பார்க்கவ புராணங் கேட்ட
மன்னவன் சோம காந்தன் மழைமதக் களிற்றுத் தேவன்
றன்னுல கடுத்த வாறுஞ் சாற்றினன் சூத மேலோன்
அன்னவ னுரைத்த வாறே யவையெலாம் புகலப் புக்கேன்.

சிவஞானச் செல்வராகிய முனிவர்களே? மூவுலகத்திலுஞ்சிறந்த இப்பூவுலகத்திற் சகல செல்வங்களையும்பெற்றோங்கி மலர்பொரு

ளிய தடாகங்களும், குடிவளப்பமும், வயற்செழுமையுஞ் சிறந்து விளங்கியிருக்கின்ற சௌராட்டிர மென்னும் ஒரு நாடுண்டு அந்த நாட்டிற் பூமிதேவிக்குத் திலகம்போல விளங்கிச் சிறந்த தபதியர்களாற் செய்யப்பட்ட பொறிகள் நிறைந்துள்ள மதில்கள், அகழிகள், கோபுரங்கள், மண்டபங்கள், உத்தியானங்கள், சித்திரகூடங்கள்முதலிய அளவற்ற சிறப்புகள்வாய்ந்த தேவநகரமென்னும் ஒரு பட்டணமுண்டு. அப் பட்டணத்திற் கருணையிற் கடலைவென்றவனாகியும், அறிவிற் பிரகஸ்பதியை வென்றவனாகியும், பொறுமையிற் பூமிதேவியை வென்றவனாகியும், ஒளியிற் சூரியனைவென்றவனாகியும், கீர்த்தியிற் சந்திரனை வென்றவனாகியும், வீணாகானத்தில் மிதுன கின்னரத்தை வென்றவனாகியும், ஈகையில் மேகத்தை வென்றவனாகியும், அழகில் மன்மதனை வென்றவனாகியும், நிதியில் அளகேசனை வென்றவனாகியும், போகத்தில் இந்திரனைவென்றவனாகியும், கலைஞானத்தில் ஆதிசேடனை வென்றவனாகியுமிருந்து நான்கு வேதங்களையுமாராய்ந்துணர்ந்த திறத்தினால் நடுவுநிலைமைகளை நன்றாய்த்தேர்ந்து தத்துவஞானத்தை யறிந்து தனது வலிமைபெற்ற புயத்திற் பூமிபாரத்தைச் சுமந்து சகல வேந்தர்களையுந் திறைதரவென்று தனக்கு வேறொருவர் நிகரின்றி அரசாட்சி செய்துவருகின்ற இராஜாதிராஜனாகிய சோமகாந்த மகாராஜ னென்னும் ஓர் அரசனிருந்தான். அவ்வரசனுக்குத் தனது பஞ்சேந்திரியம்போ லிடைவிடாது வழிபட்டுவருகின்ற உருவவான், வித்தியாதீசன், கெமங்கரன், ஞானகம்மியன், சுப்லன் என்கின்ற ஐந்து மந்திரிகளோடு ஆறாயிரந்தேர்களும், பதினாயிரம் யானைகளும், இருபதினாயிரங் குதிரைகளுங், கணக்கற்ற பதாதிகளு மிருந்தன. அன்றியும், அவ்வரசனுக்கு எக்காலத்தும் உயிருக்குயிராகவிருந்து தருமாதிகளை வழுவாதி நடத்திக் கற்பி லருந்ததியை நிகர்த்து, அழகில் இரதி, இந்திராணி, இலக்மி, அரம்பை, திலோத்தமை என்கின்ற மாதர்களைப் பகைத்துச் சுதன்மையென்னும் பெயரினைப்படைத்த ஒருமனைவி யிருந்தனள். அம்மனைவி வயிற்றிற் பதினாயிரம் யானைக்குள்ள வலிமையையுடையவனாகியும், தன்னைப்பகைத் தெதிர்க்கின்ற மன்னர்கள் நடுங்கிக் காணத்தக்கதாகக் கோபிக்கின்ற பராக்கிரமத்தினால் இராஜகண்டீரவத்திற் கொப்பானவனாகியும், ஏமகண்டனென்னும் பெயரினையுடைய ஒருகுமாரன் உதித்திருந்தான்.

இவ்வாறு மந்திரிமார்முதலிய சகல பரிசனங்களுந் தன்னைப் புடைசூழ்ந்திருக்க பொன்மயமான சிங்கங்களாற் சுமக்கப்பட்டிருக்

கின்ற இரத்தினாசனத்தின்மீதிருந்து நீதிசாஸ்திரவிதிப்படி தனது செங்கோலைத் திசையனைத்தினுஞ் செலுத்தி உறையிற்றங்கிய வாளொளியினாற் பகைவராகிய இருட்கூட்டங்கள் நெருங்காதவண்ணந் துரத்தி மணங்களித்துப் புயங்கள்பூரித்து, அளவற்ற மகிழ்ச்சியோடும் இராச்சிய பரிபாலனஞ் செய்துவருகின்ற காலத்தில் அவ்வரசனுக்கு முற்பிறவியிற்செய்த தீவினைப்பயனாற் சரீரத்திற்குருநோயுண்டாகி, கொழுப்புங் குருதியும் வழிந்து சீயுநோயுங்கொண்டு மணிமந்திர ஔடதங்களினுந்தீராமல் மிக்க துன்பத்தை விளைத்துக்கொண்டுவர, ஒருநாள் அவ்வியாதியின் வருத்தத்தைச் சகிக்கமாட்டாது மனத்தளர்ச்சி யடைந்து கொலுச்சபையில் வந்து ஏவலாளர்களைக்கூவி, அமைச்சர்களை விரைவில் வருவிக்கக் கடவீரென்று கட்டளையிட்டான் உடனே அக்கட்டளையின்படிவந்த அமைச்சர்கள் அரசன்சமுகத்தில் வந்துபணிந்து தத்தமிருக்கைகளைச் சேர்ந்திருந்தார்கள் அரச னவ்வமைச்சர்களை நோக்கி மிகுந்தமனவருத்தத்துடன் இதனைச் சொல்லுவானாயினான்.

அன்பிற்சிறந்த அமைச்சர்களே? இதுகாறுமென்னைப் பகைத்தெதிர்த்த சத்துருக்களை யெல்லாம் வென்றேன் உலகமுழுவதும் நீதிவழுவாது அரசுசெலுத்தினேன். தேவர்கட் கெல்லாந் திருப்தியாக அநந்தயாகங்கள் முடித்தேன். சுற்றத்தாரையெல்லாஞ் சுகம்பெறச் செய்தேன். யாவர்க்கும் இரப்பபாறத்தக்க சோலைகளுண்டாக்கினேன். இன்னு மித்தன்மையான அளவற்ற தருமங்களைச் செய்தும் ஆலைவாயிற்பட்ட கரும்பைப்போல என்னை இடைவிடாதுவாதிக்கவந்த இந்நோயை நீக்கிக்கொள்ளுப் ஏதுவினை யொருவிதத்திலுங்காணேன். முன்னர் எனதுசரீரமானது சந்திரனொளியை நிகர்த்துப் பிரகாசித்திருந்த தன்மையினாலல்லவா சோமகாந்தனென்னும் பெயரையுடையனாயினேன். அத்தன்மையான சிறந்த சரீரத்தில் இத்தன்மையான கொடிய வியாதிவந்து வருத்துமாயின், அதனைவிட்டு நீங்குவதற்கான எண்ணமுறாமல் இன்னுமவ் வியாதியினால்வருகின்ற துன்பங்களை யநுபவித்துக்கொண் டிருக்கின்ற என்னுயிரை இனி வலாற்காரமாயாவது விடல்வேண்டும் அன்றியும் முன்பு இந்திரனுங்கண்டு நாணும்படி இலவமபஞ்சு - செம்பஞ்சு - வெண்பஞ்சு-மயிர்ச்சேணம்-அன்னத்தூவி என்கிற பஞ்சசயனத்திலிருந்து பெண் ஆடை அணிகலன்-போசனம்-தாம்பூலம்-பரிமளம்-பாட்டு-பூவமளி என்கின்ற அஷ்டபோகங்களையு மநுபவித்து, இப்போது தனதுகாந்தியெல்லாம் ஒரு வியாதியினால் மழுங்கி யழியும்

படியாக நேர்ந்தும் இன்னும் வாழவேண்டுமென்னும் எண்ணமுற் றிருக்கின்ற இவ்வுடலை வாளுக்கிரையாகச் சின்னபின்னப் படுத்து வதே உத்தமமா யிருக்கின்றது அமைச்சர்களே இனிப் பற்பலவி தங்களைப் பேசுவதினால் ஒரு பிரயோசனத்தையுங் காணேன். யான் முன்படைத்திருந்த களிப்பும், இந்நோயினால் இப்போ தடைந்தி ருக்கின்ற வெறுப்பும் நீங்களே நன்றாயோசித்துப்பாருங்கள் இனி யிவ்வரசைவிட்டு வனத்திற்சென்று வாசஞ்செய்வதே மிக்கநலமாக விருக்கின்றது என் புதல்வனாகிய ஏமகண்டன் என்னினுஞ்சிறந்த மேம்பாட்டினை யுடையவனாக விருக்கின்றா னாதலால் அவனுக்கு உம்முடைய உத்தம மந்திராலோசனைப்பிரகாரம் இவ்வுலகத்தைப் பாதுகாத்து வரும்படியான மார்க்கத்தைப்போதித்து நமது அரசு ரிமையையும் அவனுக் கொப்புவித்து விடுகின்றோம். அவனை யென் னினு மதிகமாக மதித்து நடந்துகொள்ளக் கடவீர்களென்று சொன்னான்

அவை யனைத்தையும் அவ்வமைச்சர் முதலாயினோர் கேட்டு மிக்க மனவருத்தங்கொண் டிருக்கின்ற சமயத்தில், அவ்வரசன் தனது உள்ளத்திலுண்டாகிய துக்கத்தினாலும், வியாதியினா லுண் டாகிய வருத்தத்தினாலுஞ் சோர்வுற்றுமூர்ச்சையாயினான். உடனே அவ்வரசனைப் புடைசூழ்ந்திருந்த அமைச்சர் முதலாயினோர் திடுக் கிட்டுத் தாமு மதுதுன்பத்தை யடைந்தவர்களாகி, சிலர் தங்களுளே ளங்கரைந்து கண்ணீர் சொரிந்தார்கள். சிலர் நாசியின்மீது விரலை வைத்தார்கள். சிலர் அவ்வரச னுடலில் நெருங்கி கையைவைத்தார் கள். சிலர் தெய்வத்தை நொந்தார்கள். சிலர் வயிற்றி லறைந்துகொ ண்டு மெய்வருந்தினார்கள் சிலர் கைகளைநெரித்துக் கலங்கினார்கள் சிலர் கல்வி கேள்வியிற்சிறந்து, இவ்வுலகத்தை நீதிபோடுங்காக்க வல்லவராகிய இவ்வரசருக்கும் இவ்வினை வரலாமா வென்றார்கள். சிலர் ஊழ்வினையால்வருந் துன்பத்தை யாவரொழிக்க வல்லவரென் றார்கள். இவ்வாறு பற்பலவிதங்களாகத் துக்கித்துத்துயரங்கொண் டிருப்பவர்களை அமைச்சர்கள் கையமர்த்தித் தங்களுள்ளத்தையுந் தாமேதேற்றிக்கொண்டு அரசனருகில்வந்து செவியிற் சுக்குவைத் தூதி, குளிர்ந்த சாந்தாற்றி முதலியவைகளைக் கொண்டு சைத்தி யோபசாரங்கள் செய்தார்கள். அதனால் அவ்வரசன் மூர்ச்சைதெ ளிந்து சேஷசயனத்தி னின்று மெழுந்த திருமாலைப்போல மெல் லனவெழுந்து பரமேஸ்வரருடைய திருவடிகளைச் சிந்தனைசெய்து கொண்டிருந்தான். அவ்வரசன் கொண்டிருக்கின்ற மனோதிடத்தை

முன்னமே யறிந்திருக்கின்ற அமைச்சர்கள்மீளவும் அவனைப் பணிந்தெழுந்து மண்டலேஸ்வரா! இதுகாறுந் தேவேந்திரனைப்போலப் பல பகைவர்களையும் வென்று எங்களையெல்லாந் தாய்தந்தையரினு மிகுந்த அன்போடும் பாதுகாத்துவந்தீர் அத்தன்மையான தேவரீருக்கு வியாதிநேரிட்ட துன்பத்தினல் இனி வனத்திற்சென்று வாசஞ்செய்யவேண்டுமென்றால் தேவரீரைமாத்திரம்போகவிட்டுயாங்களெங்கள் மனையிற் சென்று வாழ்தலுந் தகுமா? அவ்வாறேயிருப்போமாயின் யாங்களும் புத்தியின் மிகுந்தவர்களாகலாமா? அப்பால் தருமமும் நீதியும் நன்றாகத் தழைத்திருக்குமா? ஆ! ஆ! என்னவிசேடஞ்சொன்னீர். தேவரீரது குமாரராகிய ஏமகண்டரோவெனில் தருமமும் அதுதருமத்திற்கேற்ற பொருளுமாகிய இரண்டையும் இடரின்றிச் சம்பாதித்துத் திசைகண் முழுவதுந் தமதுசெங்கோலைச் செலுத்தி மநுநீதி வழாமல் இவ்வுலகத்திற் கெல்லாந்தாம் ஒருவராகவே யிருந்து அரசியற்ற வல்லவராவர் ஆதலால், அவர் செய்யும் அரசாட்சிக்கு மற்றொருவர் துணையும்வேண்டுமா? யாங்களுந் தேவரீரோடு வனத்திற்கு வருவதாக நிச்சயித்திருக்கின்றோம். இனித்தேவரீர் குமாரரை அரசுக் குரியவராக நியமிப்பீரென்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள்.

இவ்வாறு நடந்த விசேடங்களையெல்லாம் அந்தப்புரத்தி லிருந்த மனைவியாகிய சுதன்மையானவள் கேள்வியுற்று மனஞ் சகிக்கமாட்டாது சரேலென் றெழுந்து, மேகலாபரணங்க ளசையவும் பாதசாலங்கள் கலீரென்று சத்திக்கவும் விரைந்துவந்து சோமகாந்தராஜனைவணங்கி எதிர்நின்று, பகைத்த வேந்தர்களெல்லாங்கண்டு வணக்கங் கொள்ளத்தக்க கிருபாநோக்கத்தையுடைய எனது பிராணநாயகா! இருதலைப் புள்ளுக்கு உயிர் ஒன்றேபோலே இதுவரையில் தேவரீர்க் குரியனவாகி இன்ப துன்பங்களையெல்லாம் வேறுபாடின்றி யனுபவித்துவந்த யான் இப்போது தேவரீரை மாத்திரம் வனத்திற் செல்லவிட்டு எவ்வாறு தனித்திருந்து உயிர் தரிக்கவல்லேன். ஒருமித்த மனத்தையுடைய மங்கையராயினோர் தங்கணவர் உயிர்பெற்றிருக்கும் வரையிற் றங்க ளுயிர்பெற்றிருப்பதும், அவரிறக்குங்காலத்திற் றங்க ளிறத்தலுமான கற்புநிலைமை யுள்ளவர்களாயின், அவர்கள் இம்மையிற் புகழுடைவதன்றி மறுமையிற் சுவர்க்காதிபோகங்களையு மடைவாரென்று சான்றோர்கள் சொல்லி யிருக்

கின்றார்கள், அங்ஙியமப்படி யானுந் தேவரீரோடு வனத்திற் சஞ்சரிப்பதன்றி, ஒரு கணமேனுந் தனித்திரே னென்று சொல்லிச் சூறைக்காற்றினு லடியுண்ட இளங்கொடிபோலவும், அம்புகள்தைத்துப் பதைக்கின்ற பெண்மான்போலவும், உள்ளங்கலங்கி உணர்வழிந்து கண்களில் நீர்த்தாரைகளைப் பெருக்கித் தன்னாற் றாங்கமாட்டாத துக்கத்தோடும் முறையிட்டனள். அதனை அவள் குமாரனாகிய ஏமகண்டன் கேட்டு மனம் வருந்தித் தானு மவ்வரச னெதிரில் வணங்கி நின்று, என்னருமைத் தந்தையே! சந்திராதித்தர்களைப் பிரிந்த ஆகாயம் போலவும், அக்கினியும் பசுவுமில்லாத யாகம்போலவும், புருடனையும்புத்திரனையும் பிரிந்த ஸ்திரீகள்போலவும், அமைச்சு மரசுமில்லாத நகரம்போலவும், என்னை அருமையாயீன்ற உம்மிருவரையும்பிரிந்த பின்பு யானெவ்வாறிருந்து அரசாளவல்லேன். புத்திரர்கட்குண்டாகிய கடமை யாதெனில் தம்மையீன்ற தாய்தந்தையர் இருக்கும் காலத்து அவர்களைத் தெய்வமாகப் பூசித்தும், இறந்தகாலத்து அவர்களுக்காகப் பிதிரர் கடன்களைச் செய்தும் இருத்தலே யல்லது அவைகளை மறந்து நிலைமையற்ற போகங்களை யிச்சித்து அற்பமாகிய அரசாட்சியில் மூழ்கி யிருத்த லல்லவே. ஆதலால் யான் செல்வத்தை யொருபொருளாக மதித்தவனல்லன். உம்மிருவரோடு யானும் வனத்திற்குவரத் துணிவுற் றிருக்கின்றே னென்றனன். இவ்வாறு குற்றமற்ற அமைச்சர்களும், உயிர்த்துணைவியாகிய சுதன்மையும், புத்திரராகிய ஏமகண்டனும், அவ்வவர்கள் தனித்தனியே விண்ணப்பஞ் செய்த வார்த்தைகளாகிய அமுதத்தை அரசன் செவியாரவுண்டு மனங்குளிர்ந்து குமாரனாகிய ஏமகண்டனைப்பார்த்து எனதருமை மைந்தனே! நீசிறுபிள்ளையல்லவே புத்தியிற் றாழ்வானவார்த்தைகளை யேன்பேசுகின்றாய். சாத்திரவிதிப்படி தாய்தந்தைய ரிருக்கும்போது அவர்களைத் தெய்வமாகப் பூசித்து அவர்களுக்குப் பின்பு அளவற்ற தானாதிகளைச் செய்து, பலி பிண்ட முதலியதுவுங் கொடுத்து, மற்றுமுள்ள சருமாதிகளை முடிக்கின்றவனே யாவரும் புகழத்தக்க புத்திரனாயினும், அத்தாய் தந்தையர் சொல்லுகின்ற வார்த்தைகளைத் தடுக்காது நடந்துகொள்வதல்லவோ அப்புத்திரனுக்குரிய முதன்மையாகிய தருமம். இதனையறிந்து நடந்து கொள்பவ னெவனோ அவனே பெற்றோர்கள் களிக்கத்தக்க அருமைப்புத்திரனாவன், ஆதலால் என் னுத்தரவின்படி அமைச்சரோடு கூடவிருந்து அவர்கள் மந்திராலோசனைப் பிரகாரம் இராச்சியபரிபாலனஞ்செய்துவரக்கடவை அதுவேயெனக்கு

நீகடத்துகின்ற முதன்மையாகிய தருமமென்று இன்னும் பலவாகிய தேறுதல்களைச் சொல்லி ஏமகண்டனை யழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான்.|

சோமகாந்தன் வனம்புகத்துணிந்தபடலம்.

முற்றிற்று.

---

# அரசியற்கைப் படலம்.

அந்தப்புரஞ்சென்ற சோமகாந்தன் என்னும் அரசன் தனது குமாரனாகிய ஏமகண்டனைத் தன்முன்னாக உட்காரச்செய்து, அரசு செய்ய வேண்டும் முறைமைகளைப் போதிக்கத் தொடங்கினன். எனை உயிரினுஞ்சிறந்த மைந்தனே! உலகத்தவர்கள் யாவரும் ஒழுகி உய்தற்காக வருணாச்சிரமங்களும் தருமங்களும் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றும் அளவில்லாதனவா யிருக்கின்றன. ஆதலால் அவைகளை யிப்பொழுது சொல்லாதுவிடுத்து உனக்குரிய அரசியலாகிய தருமத்தைமாத்திரங் கூறுகின்றேன். குமாரனே! விடியுமுன் ஐந்துநாழிகை யளவுள்ள காலமாகிய பிராமீமுகூர்த்தத்திலே நித்திரைவிட் டெழுந்து, படுக்கையறையை நீங்கி, வேறோரிடத்திற் போயிருந்து, கொடிய பாவங்களை யெல்லாம் நீறாக்கும் திருநீற்றினைத் தரித்து, குருவையும் கடவுளையும் மனத்திற்றியானிக்கக்கடவாய். அதன்பின்னர்ப் பரந்த பூமியை எதிராகப் பார்த்து, பூம்தேவியாகிய அன்னையே! அடியேன் துன்பமில்லாமல் நடக்குந்தோறும் எனதுகால்கள் நினது வடிவத்திலே படுதலால் வருகின்ற|குற்றங்களைப் பொறுத்தருள்வாயாக என்று மனவுருக்கத்தோடும் பிரார்த்தனை செய்தல்வேண்டும். பின்பு யானைமுகப்பெருமானைத் தியானிக்கக்கடவாய். அன்றியும் அளவில்லாத வேதாகம முடிபுப்பொருளே! விட்டுணுமுதலாய தேவர்களா யிருப்பவரே! மனவாக்குக் கெட்டாத பரம்பொருளே! அறமுதலிய நாற்பொருள்களையுஞ் சரணமென்று அடைந்தவர்க்கருளும் அருட்கடலே அநாதிமலமுத்தரே! சகலலோக காரணரே! தத்துவப் பொருளே! எனக்குவருகின்ற நீங்காத பெரிய விக்கினங்களை யெல்லாந் தீர்க்குமாறு இந்த விடியற்காலத்திற் றேவரீரைத் தோத்திரஞ் செய்கின்றேன் என்று அவரையே வேண்டக்கடவாய். நல்வழியில் நடத்தும்

படி சந்திரசேகரனாகிய பரமசிவத்தையும், சம்சாரத்தால்வருந்துன் பங்களைப் போக்கும்படி பார்வதிதேவியாரையும் வழிபட்டு, அரசி யல்செவ்வே நடக்குமாறு பாற்கடலில் அறிதுயில் செய்கின்றவ ரும், சத்துருக்களைத் தேடித்தேடி யறுக்குஞ் சக்கராயுதரும, பூம கள் மணாளருமாகிய திருமாலையும், அறிவோடு கன்மமும் வந்து தேறுதற்குக் காரணமான சூரியபகவானையுந் தோத்திரஞ் செய்ய வேண்டும். இவர்களையல்லாமல் மற்றைய தேவர்களையும், முனிவர் களையும், முறையாக வழிபட்டு நித்தியகருமத்தை முடித்துத்தமது நிலை தவறாமல் பிராமணர் அமைச்சர்முதலியபெரியோரைத்துணைக் கொண்டு உலகத்தைப் பரிபாலிக்க வேண்டும். புத்திரனே! ஒரு மைப்பட்ட தருமவொழுக்கத்தினாலே பொருளும் இன்பமும்மேரு மலைபோலவும், சமுத்திரம்போலவும் வந்து பெருகிப் பிரயோசனத் தைக் கொடுக்கும். அவ்வறம் யாதென்றால் விருப்பு|வெறுப்பில்லாத சிவஞானியாவனே அவனது பாதங்களைக் கதியாக அடைதலாம். அறமுதலிய நான்கு உறுதிப் பொருள்களையும் நிறுத்திக் காத்தற் கேதுவாயுள்ள மழைபெய்யும்படி யாகங்களைச் செய்தலும், செய் வித்தலும், வறுமைவாராமல் தருமங்களைச் செய்தலும் உறுதிப் பொருள்க ளிவையெனத் தெளிவித்து ஐம்பொறிகளையும அடக்கி நிற்கும் அறவரையும் அந்தணரையுங் கல்வியறி வுடையாரையும் வழிபட்டு அவர்கள்மீது நீங்கா அன்புள்ளவனாயிருத்தலுமாம். அற விகளாகிய பெரியோர் சிறிதுகோபிப்பாராயின், அக் கோபாக்கினி யினாலே காவற்கடவுளாகிய திருமாலுங் கலக்கமுறுவர், ஆதலால் அவர்களை வழிபடுவதன்றி யொருகாலு மிகழற்க ஆசாரியரையும் மற்றைய பெரியோர்களையும் அவ்வாறே மதித்து அடுக்கக்கடவை. பெறுதற்கரிய சுவர்க்கவின்பத்தையும், அழிதலில்லாத முத்தியின் பத்தையும், இம்மையின்பத்தையும் ஆக்கங்களையுங் கொடுத்தலால் தருமவொழுக்கத்தைக் கைவிடல் தீதேயாம் அதனை யெப்பொழு துஞ் செய்தல்வேண்டும். செய்யுங்காலத்துக் கடுஞ்சொல், பொறா மை, கோபம்முதலிய குற்றங்களில்லாமற் செய்க அங்ஙனந் தரு மத்தைக் கைக்கொண் டொழுகினால் அன்புதோன்றும் அதனால் வரும் இன்பமே யின்பமெனப்படும். மற்றவற்றான்வரு மின்பமெல் லாம் துன்பத்தையும் பழியையுந் தோற்றுவிக்கும். இன்னகாரணங் களாலே தருமத்தை விடலாகாது. மறந்து விட்டால் உடனே கேடுண்டாகும்,

பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி, தென்புலத்தார், குரவர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், பசுக்கள், பிராமணர், இரந்தார், யாசகர், கூனர்-குருடர்-செவிடர்-முடவர் முதலிய உறுப்பில்லாதவர், நோயாளர், வயோதிகர், பாலர், குழந்தைகள் தம்மையடுத்தார் என்னும் இவர்களைப் பாதுகாக்க வேண்டும். வருகிறபொருளுக்கு இசையச் செலவு செய்து வாழுங் கற்புள்ள மனைவியைப் போல வேறு பொருள்களுளவா? இல்லை! இல்லை!! அவளாலே நாயகனுக்குப் புகழும், புண்ணியமும் சத்துருக்கள் முன்னிலையிற் சிங்கம்போல நடக்கும் வலிமையும், முத்திப்பயனும்வரும். ஆதலால் அப்படிப்பட்ட மனைவியோடு கூடியிருந்து ஒருவன் இல்லறத்தை நடத்தவேண்டும். அதுவே சிறந்த அறம் எழுபிறப்பினும் பாவங்களை யடையாச் சிறப்பும், பிதிரர்கடன்களைச் செய்யும் மாட்சிமையும் இருத்தலால் எவ்விதத்திலாயினும் நற்குண நற்செய்கையினையுடைய மக்களைப்பெறுதலே செல்வமாகும் பெற்றகாலத்தும் அவர்களுக்கு நல்லறிவுவரச் செய்யக்கடவாய். இடம்பொருள் ஏவல் என்னுமிவைக ளிருந்தாலும் அன்பில்லாத விடத்து அவையாவும் எலும்பில்லாத வுடம்புபோல இருத்தலால், ஒவ்வொ ருயிர்களிடத்தும் அன்புடைமை யாவசியகமே அதிதிகள் வருவாராயின் முகத்தைக்கண்டு முகமலர்ந்து, அகமகிழ்ந்து, சிறிதும் வஞ்சகமின்றி இன்சொற்சொல்லி வேண்டியவைகளைச் செய்து நிற்பவ ரல்லவோ மனிடர் எனப்படுவர். காலத்தினாலே செய்த நன்றிதினையளவு சிறிதாயினும் வானகத்தினும் வையகத்தினும் பார்க்கப் பெரிதாகும். ஒருவன்செய்த நன்றியை மறக்கலாகாது. நன்றியுட் பிரயோசனங் கருதாது செய்தவைகளே மேலானவை. ஒருவன் துன்பப்படுங்காலத்திற் பிரயோசனங்கருதிச் செய்த நன்றியுஞ் சிறந்ததேயாம். நன்மையைச் செய்தவர்கள் பின் ஒருகாலத்துத் தீமையைச் செய்தாராயினும் தீமையைவிட்டு அவர்செய்த நன்மையையே நினைத்து நடக்கவேண்டும். எந்தநன்றியை மறந்தாலும் மறக்கலாம் செய்ந்நன்றியைமறந்தால் அப்பாவம் மலைபோல நாளுக்குநாள் வளரும் தாழ்ந்த வருணத்திற் பிறந்தவரும் ஒழுக்கத்தினால் உயர்ந்தவராவர்-உயர்ந்த வருணத்திற் பிறந்தவரானாலும் ஒழுக்க மில்லாவழியிழிந்தவரேயாவர். இங்ஙனமாய் ஒழுக்கத்தை யுயிரினும் பார்க்க அருமையுடைத் தென்று கொண்டு ஒழுகல் முறையாகும். காமாசையின் காரணத்தினாலே பாவவழியிற் பிரவேசித்துப் பிறன்மனையாளைவிரும்பும் பேதையானவன் சிறிதுமின்ப முறுளுகவின் தன்ம

னவி தோளேயே சேரத்தகும். பிறன் மனைவியை விரும்புவோனி டத்து பகை, பழி, பாவம், அச்சம் என்னும் நான்கும் குடிபுகும். தருமமும் பெருமையுந் திருவும் அகன்றுவிடும். இக் காரணங்களா ல் அதனைக் கனவிலாயினும் விரும்புதலாகாது. வெறுப்புவரும்படி ஒருவன் ஒரு காரணத்தினலாயினும் அறியாமையினு லாயினுஞ்செ ய்த குற்றத்தைப் பொறுத்தலே தருமங்களுட் பெரியதருமமாம். அதனுல் கீர்த்தியும் புண்ணியமும் வளராநிற்கும். இதனுல் பொறு மை யென்னுங் குணம் உயிர்க்குத் துணையா யிருக்கின்றது.

ஏமகண்டா? அறத்தையும் பொருளேயும் இகபர வின்பங்களே யும் அழித்து, அடுத்தார்க்குங்கேடுவிளேவித்து, நரகத்துன்பத்தை யுங் கொடுக்கின்ற அழுக்காறு என்னும் பொறாமைக் குணத்தை யொருவன்கொள்ள லாகாது புதுவெள்ளம் பழையநீரையும் உடை க்கச் செய்து வெளிட்போதல் போல முன்னிருந்த பொருட்கும் நாசத்தைச்செய்து, குடிகெடுத்துப் பெருந் துன்பத்தையும் பழி யையும் உண்டாக்குகின்ற மன்றேரஞ் சொல்லிப் பொன்வாங்குந் தொழிலையுடைய பாதகர் படும்பாடு பெரும்பா டாகலால் அதனே நினைத்தலுஞ் செய்யற்க. உறவினர் பகையாவர். சிநேகிதர்களும் ஓர்காற் பிரிந்தும் வடுச் சொற்களேக் கூறியும் நிற்பா ராதலின் நாடோறும் அறத்தைக்கொன்று அளவில்லாக் குற்றங்களேச் செய் யினும் எதிரேநின்று ஒருவனுயிர்போகக் கடுஞ்சொற்பேசினும் மற ந்தாயினும் புறங்கூறுதல் தகாதுமைந்தனே? அறிவினர்க்குவெறுப் பையுண்டாக்கி நகையும் விளேத்து வெளிற் றறிவையுணர்த்தி, நன் குமதிப்பையுங் கெடுத்துச் சிறப்பையுஞ் சிதைத்துத் தருமமுதலி யவற்றின் பயன்களேயுங் கொடுக்காது நிற்கும் பயனில்லாத சொல் லேச் சொல்லற்க. ஊர்க்குநடுவே நின்ற ஊருணிபோலவும், கனிகளே யுடைய மரம்போலவும், பெரியோரிடத்துப் பொருந்தப் பெற்ற செல்வம் யாவர்க்கும் பயன்படும், யாசிப்போன் றன்னிடம்வந்து வறியேன் என்று சொல்லுமுன்னர்க் கொடுத்தலும், சொல்லிவேறு சொற்கள் சொல்லத்தொடங்கிற் கொடுத்தலும், சொல்லிவருந்திய பின்னர்க் கொடுத்தலும் முறையே உத்தமம் - மத்திமம் - அதமம் எனப்படும். மரணம்வந்த காலத்தும் பூதவுடம்புக்கே யன்றி உயி ருக் காகாமல் இருத்தல்போல, உலகமழியுமளவும் புகழுடம்பான தாகிற்கும். இன்னம் புகழுடம்பு அழியா திருத்தலின் கொடையி னுலே அதனைப் படைத்தவரே தேவர்களுந் தொழப்படுந் தன்மை

யுடையார் தருமநூலிற் சொல்லியபடி உலகத்தை யரசாளவேண்டு மாதலால் அமைச்சு, நாடு, அரண் பொருள், படை, நட்பு ஆகிய ஆறும் இன்றி யமையாத அங்கமாம் - அரசர்கள் ஒரு தொழிலைச் செய்யுங் காலத்துப் பயப்படாமையும், அதனைச் செய்வார்க்குப் பொருள் கொடுத்தலும், அதனில் மனஞ் செல்லுதலும், அறிவு கொண்டதனை முடித்தலும், ஆண்மை யுடைமையும் ஆகிய இவைக ளோடு கொலை முதலிய பாவங்களை நீக்குதலும், மானம் முதலிய குணங்களை யுடைமையும் அதற்கியல்பேயாம் பிரசைகள் வருத்த முற்றகாலத்து ஆறிலொருபங்கு இறையைவாங்காது விடுத்தும், தங்கள் குறையைவந்து முறையிடுவார்க்குத் தடையின்றி வெளிப் பட்டுத் தெளிவுறக்கேட்டு, இனியசொற்களைச் சொல்லிக் குற்ற முள்ளாரைத் தண்டித்துத் தீர்ப்புச்சொல்லக் கடவாய். யுத்தகளத் தில் அரசரைக்கொன்றும், இறைவாங்கியும் நாட்டினைக் காத்தும் பொருள்சம்பாதித்து, திருடர் ஈதி-குறும்பு முதலியவற்றால் நாட் டுக்குக் கெடுதி யுண்டாகாமற் காத்து உயிர்களை அறமுதலிய உறு திப்பொருள்களை யடையும் வண்ணஞ் செலுத்த வேண்டும். இது வேசெங்கோலுக்குரிய மாக்ஷியாகும். அன்றியும் சந்தேகம், விபரீ தம், மயக்கம் என்பனவின்றித் தருமநூல் நீதிநூல்-யானையேற்றம் குதிரையேற்றம் படைக்கலப் பயிற்சி-தேர்கடாவல் முதலியவற்றை யுந் தெளிவாகக்கற்றும், கற்றோரொடிணங்கியும், கற்றதின்படி நிற்க வும் வேண்டும் சாதியென்பது உடலைப் பற்றியதேயாம் அதனால் வருகின்ற உயர்வுந் தாழ்வும் அவ்வுடலகன்றபோதே யொழியாநிற் கும். கல்வியாலாகும் பெருமையே உயிர்செல்லுந்தோறும் அத னைத் தொடர்ந்துசெல்லும். ஆதலால் அதனை முயன்று கற்கவேண் டும். வறுமையினாலும் அறியாமையினாலும் வருத்தமுற்று இரங் குங்காலத்து அவைகளொழியுமாறு உதவிசொல்லே துணையாக நிற்றலின், ஒழுக்கமுள்ளாரது வாய்ச்சொற்களைக் கேட்டல் வேண் டும் இழிந்தோன் உயர்ந்த உறுதிச்சொல்லைச் சொன்னாலும், உயர் ந்தவனென்றிருப்பவன் புன்மொழிகூறினாலும் அவை முக்குணவய த்தவாகலின் உள்ள இயல்பையறிந்து பொய்நீக்கி உண்மையைக் காணுதலே அறிவுக் கழகாகும், உயர்ந்தார் எவ்வாறு நடக்கின்ற ரோ அவ்வாறு நடந்து தீமைகள் வருமுன்னர்க் காத்துப் பழிபா வங்கட்கு அஞ்சி, நன்னெறியில் பொறிகளைச் செலுத்தக் கடவா யாக.

மைந்தனே? உயர்ந்தோரைப் பேதமில்லாமல் சிநேகிக்கக்கடவாய். கோட்டுப்பூவைப்போல அவ்வவர்களிடத்தும் முகமலர்ச்சியுடையனாய் செல்வம் வந்த காலத்து சந்தோஷப் படுதலும் வறுமை வந்தகாலத்துத்துக்கித்தலும்ஆகா. தவத்தர், ஆசாரியர், அந்தணர், உயர்ந்தோர் இவர்களிடத்துவணக்கமில்லாமையும், அகங்காரமும், செலவுசெய்யவேண்டியவிடத்து செலவுசெய்யாமையும், காமமும், கோபமும், கண்ணோட்டமும் ஆகிய இத்தீக்குணங்களைக் கொள்ளற்க. குற்றஞ்செய்யாமலிருந்து பிறர் குற்றங்களைக் கடியவேண்டும். சிறிதாயினுங் குற்றஞ்செய்யின் சிறுநெருப்பு மலைபோன்ற வைக்கோற் போர்களை யழிக்கு மாறுபோல பெருவாழ்வையு மழிக்கும் பகைவர்களுக்குச் செல்வத்தைக் கொடுக்கும். பெறுநோயில் வருந்தச் செய்யும் கோபமுறுத பெரியோரையும் கோபிக்கச் செய்யும். இனிமையுள்ள பொருகள் பலவற்றையும் உறவினரும் பகைவருஞ் சிறிதேனு மறியாது அநுபவிக்கவேண்டும் உன்னை யொருகாலத்தும், ஓரிடத்தும் புகழ்ந்து பேசற்க நன்மைபயக்காத தொழிலினை மறந்தாயினுஞ் செய்யலாகாது. மழைமிகுதியினாலும், மழைக்குறைவாலும், காற்றினாலும், நெருப்பினாலும், நோயினாலும், உலகிற்குவருந் துன்பங்களை யெல்லாம் தேவர்களைக் குறித்தும் உயர்ந்தோரைக் குறித்துஞ் செய்யுஞ் சாந்திக் கிரியைகளினால் நீக்கியும், பகைவர்களாலும் கள்வராலும் தீவினைசெய்யுங் கூட்டத்தாராலும் வருகின்ற குற்றங்களைச் சதுர்வித உபாயங்களினால் நீக்கவேண்டும். உனக்குவருகின்ற தீவினைகளை உற்பாதங்களினா லறிந்து அவற்றால் வருத்தப்படாது நடக்கவேண்டும், பகைவர்களுடையவலியும், அவரைவெல்லுங் காலமும் வெல்லுவதற்கு வேண்டிய வினையையும், அதுதொடங்குந் தன்மையினையும், அவ்வினைக்குவருகின்ற இடையூறுகளையும், அவைகளைவிலக்கும் வழியையும், வெற்றிகொள்ளுந் தன்மையினையும், வெற்றியால்வரும் பிரயோசனத்தையும் இன்னும் உனக்கும் பகைவர்க்கும் உள்ளபல நிலைகளையும் முதலில் யோசித்துத் தெளிந்து வினைசெய்ய வேண்டும், வலியவர்களுக்கும் ஒறுத்தலும், மெலியவர்க்குக் கொடுத்தலு மாக அவரவரிடத்து நடக்கவேண்டு முறையைத் தெளிந்து நடக்கக்கடவாய். நீசம்பாதிக்குந் திரவியத்தில் உனக்கு வருந் துன்பத்தை நீக்குதற்காக காற்பாகமும், உண்ணுதற்காக அரைப்பாகமும், தருமத்திற்காக மற்றைக் காற்பாகமும் நியமிப்பது முறையாம் பகைவனை வெல்லுங் காலம் வருமளவும் போர்க்குப்பின்வாங்கும் ஆட்டுக்கடாவைப்போல எண்

ணியிருந்து வினைமுடிக்க யதையரசன் செய்யத்தகாத குற்றங்களை செய்யினும் வெல்லுங் காலம்வரும் வரையும் அப்பகையை வெளியிற் காட்டாமல் நல்ல குணத்தோடு அளவளாவி சிரித்து உவகை கொள்ளுஞ் சுற்றத்தார் போல ஒழுகவேண்டும் காலம் வந்து விட்டால் கருதிய வினை யவ்வளவையுஞ் சிறிதுந் தவறாது முடிக்கக் கடவை.

ஊக்கமில்லாதவனாயினும் இடத்துக்கேற்ற வினையைச் செய்வானாயின் ஊக்கமுடையவனு மழிவான். அவ்வாறு ஒன்றுசெய்யுங் காலத்துப் பிறப்பும், குணமும், அறிவும், நற்செயல்களும், பிரத்தியக்ஷ அநுமான அளவைகளும் கல்வி கேள்விகளி னாராய்ச்சியும் மிக்குள்ள மந்திரிமாரோடும் ஆராய்ந்து தெளிந்து செய்க. முனிவரையும் புரோகிதரையுந் தூதாக வனுப்பி இந்த அரசன் தரும வழியி னிற்பவனல்லன், இவனை நீக்கி அத்தரும வழியினிற்கும் வேறோ ரரசனை அரசாளும்படி நியமித்தற்கு நினைத்தும்; இது எவர்க்கு மொப்பா யுள்ளது; நும்முடைய கருத்தென்னை? என்று ஒவ்வோ ரரசரையும் வினாவி அவருட் பலர் சம்மதப்படி அதனைச் செய்க. சேனாபதியையும அவனைச்சேர்ந்த சேனைகளையும் தூதாக வனுப்பி இந்த அரசன் மிக்க பொருளாசை யுள்ளவன்; இவனைத் துரத்திக் கொடை யுரிமையுள்ள ஒருவனை நியமிக்க நினைந்தனம்; நுங்கருத் தென்னை என்று ஒவ்வொருவரையும் வினாவி அவர் கருத்தையும் ஒட்டி தெளிந்து செய்யக் கடவாய் சுற்றத்தா ரல்லாதவரைத் துணையாகக்கொண்டு ஒருகாரியத்தை யாயினும் யோசிக்கலாகாது பழிபாவங்கட்குப்பயப்படாதவர்களுடைய நட்பைவிடுக. குணமு மறிவுமுள்ள பெரியோரோடு கூடுக. பெருமிதம், பெரிய செல்வம், பேரழகு, பெரும் யோகம் மிக்க களிப்பு இவைகளில் முழுகி யிருக்கின், எமகண்டனே! பொச்சாபபு சோம்பல்முதலிய வற்றா லுன்னைக்காத்துப் பகையை வெல்லுதல் அரிதரிது குற்றஞ் செய்தோர் யாவரா யிருந்தாலும் கண்ணோட்டம் பாராது, நீதியை யறிந்து தருமந்தப்பாமல் தண்டஞ் செய்தலே செங்கோ லெனப் படும்.

அச்செங்கோ லில்லாவிடின், மழையினாற் பிரயோசனத்தை யடையினும் மக்கட்கு உறுதியில்லையாகும். ஆதலால் மழையினால் பயிர்விளைந் தொக்கும்படியும், தருமம்வளரவும். வேதநூல் விளங்கவும், பொருள் சம்பாதிக்கவும் யுத்தத்தில் வெற்றி கொள்ளும்படி

யும், குற்றமில்லாமல் வாழும்படியும் செங்கோலையே நடத்த வேண்டும். களவெடுப்போர், ஆறலைப்போர், பிறர்மனையாளை இச்சிப்போர், உயிர்களைக் கொலை செய்வோர், பொய்யர் முதலிய பாதகர்களைக் கொலை செய்தல் பாவமன்று. அது செவ்விய பயிர் விளையும்படி அவைகட் கிடையூறாய் நிற்கின்ற களைகளைப் பிடுங்குதல்போலாகும். சேனைகளினாலும் பகைவர்களாலும் திருடர்களாலும் மற்ற உயிர் வருக்கங்களாலும் தன்னாலும் உலகிற்கு ஓர் துன்பமும் வாராமற் காத்து, நியாயவழியி னின்றுந் தவறி நடப்பவரைத் தண்டித்து அவரிடத்துள்ள பொருள்களையுங் கவர்ந்து கொள்ளுதல் அரசர்களுடைய தருமமாகும். இங்ஙனந் தருமவழியிற் றவறாது உலகத்தைக் காத்தால் அந்த அரசனை யவன செங்கோலே காக்கும் குற்றத்தையுங் குணத்தையு மாராய்ந்து செங்கோல் முறைப்படி அரசு செய்யாதவனைப் பகைவர் இல்லையாயினும் அந்தப்பாவமே கெடுக்கும் கடுஞ்சொல், கண்ணோட்டமுடைமை அளவுகடந்ததண்டனை, நடுநிலையில்லாமை, முகமலர்ச்சியின்மை, மந்திரிமுதலாயினோரோடு ஆலோசித்துச் செய்யாமை பிழைசெய்தல். யுத்தம் சிறை ஆகிய இவைகளைச் செய்யாமை தீங்கேயாகும். வறுமை யிருக்குமாயின் தொழிலை முற்ற விடாமல் நீடவைக்கும்; சோம்பலையும் நித்திரையினையு முண்டாக்கும்; மூதேவியைக் குடிகொள்ளச் செய்யும்; பகைவர்க்கும் அடிமையாக்கும்; குடிகெடுக்கும்; ஆதலால் அதனைப் பார்க்கவும் மானுடருக்குத் தீமையா யுள்ளது வேறொன்றுண்டோ? செல்வத்துடனே சோம்பலின்றிச் செய்யும் முயற்சியானது மேன்மேலும் பொருளைப் பெருகச் செய்யும். சுற்றத்தாரையும் உறவினரையும் காக்கும் யாவர்க்கும் உபகாரத்தையுஞ் செய்யும்; சீதேவியையுஞ் சேர்க்கும்; தீவினை வந்தாலும் நன்மையையேகொடுக்கும். எனது கண்மணியை யொத்த மைந்தனே! அரசியற்குரிய இலக்கணங்கள் இவைப்போலப் பல உள. அவற்றையெல்லாம் விரித்துரைப்பின் ஆதிசேடற்கு மகாதாகலின் மநுஸ்மிருதி முதலிய நூல்களிற் கண்டுதெளிக.

அரசியற்கைப்படலம் முற்றிற்று.

சிவமயம்.

# பட்டாபிஷேகப் படலம்.

காரினையொத்த களிற்றுச் சேனையையுடைய அரசன் அதன் பின்னர்க் கொலுச் சபையில் வந்து, கணிதசாஸ்திரிகளைக் கூவி, நமது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டுமாதலால், அதற்குரிய நாளை ஆராய்ந்துரைப்பீர்க ளென்றனன் அதற்கு அவர்கள் உத்தராயண புண்ணியகாலமாகிய தைமாசத்திற் பூசநட்சத்திரங்கூடிய சுபதினமே நன்முகூர்த்த மென்றார்கள். பின்னர்த் தனது குலகுருவை யடைந்து தனதெண்ணத்தை அவருக் கறிவித்து அவர் கட்டளையிட்ட வாறே எல்லாப் பொருள்களையுஞ் சேகரித்து ஏமகண்டனுக்கும் அவன் மனைவிக்கும் அளவற்ற பெருமகிழ்ச்சியோடு மகுடாபிஷேகஞ் செய்து முடித்தனன். பின்னர் ஏமகண்டன் சகல வைபவத தோடும் உலாப் போந்து திசையனைத்திலுந் தனது செங்கோலைச் செலுத்தி அரசியற்றி வருகின்ற நாளையில், சோமகாந்தராசன் நமது தோட்சுமையை யொழித்தோமென்னுங் களிப்படைந்தவனாகித் தனது புத்திரனாகிய ஏமகண்டராசனைப் பார்த்து மைந்தனே! யான் முன்பு சொல்லியிருக்கின்ற நீதிப்படி இராச்சியபரிபாலனஞ்செய்து வருவது உனது கடமை இனி என்னிஷ்டப்படி வனத்திற் செல்வது எனது கடமையென்று சொல்லி விரைவிலெழுந்து அங்கிருக்கின்ற அமைச்சர் முதலானவர்களைப் பார்த்து அவ்வவர்கட்குச் சொல்லவேண்டிய கட்டளைகளைச் சொல்லிப் பிரயாணஞ் செய்வானாயினன்.

பட்டாபிஷேகப் படலம் முற்றிற்று.

# வனம்புகு படலம்.

அவ்வாறு பிரயாணப்பட்டுக் கடைவாயிலை நீங்குவதற்கு முன்னமே அமைச்சர் அந்தணர், நட்போர், நாகரீகர் முதலிய கூட்டங்களோடு சுதன்மையும் ஏமகண்ட ராஜனும் வெளிக்கொண்டு மிக்க மனவருத்தத்துடனே அவனை நெருங்கினார்கள். இவ்வாறு நெருங்கியபேர்கள் யாவருந் தன்னைப் புடைசூழ்ந்து வர அரசன் நன்கு கூப்பிடுதூரம் (குரோசஞ்) சென்று, குளிர்ச்சியுள்ள ஒரு பொய்கையைக் கண்டு, அதனருகிற றங்கித் தன்னோடு வந்திருக்கின்ற

முனிவர்கள், அந்தணர்கள் முதலான பெரியோர்களை வணங்கி, மற்றவர்களையுங் கிருபையோடும் பார்த்து அன்பர்களே! என்னுடன் நீங்கள் யாவரும் வன் வீணாக இங்கிருக்கவேண்டும் உங்களுங்க ளிடங்களிற்சேர்ந்து சுபகரமாயிருங்களென்றுசொன்னான். அதைக் கேட்ட அமைச்சர் முதலாயினோர் மனவருத்தங்கொண்டு விழிகளினின்று நீர்பெருகவீழ்ந்து தீர்க்க தண்டன்செய்து, சார்வபௌமா! தீயினிடத்தில் வெம்மைபோலவும், நீரினிடத்திற்றன்மைபோலவும், சூரியனிடத்தி லொளிபோலவும் மலரினிடத்து மணம்போலவும் உடலினிடத்தி னுயிர்போலவுமிருந்து எங்களையெல்லாம்பாதுகாத் தருளிய தேவரீரது கிருபா சமுகத்தை ஒருகணப்போதேனும்யாங் கள் நீங்கியிருக்கத் துணிவோமா? அப்படி நீங்கியிருக்கினும் நிலவைவிட்டு இருளிற் கிடப்பவர்க் கொப்பாவோ மல்லவா? இனி நக ரத்திற் சென்று எவ்வாறு யாங்கள் வாழ்ந்திருப்போம். முற்சனனத்திலன்றி இச்சனனத்திலும் அநந்த புண்ணியங்களை நடாத்தியிருக்கின்றீராதலால் எந்தத் தீர்த்தத்தினாலோ எந்ததவசிரேட்டர்களாலோ இப்போது தேவரீருடலிற் சம்பவித்திருக்கின்ற இவ்வியாதி நீங்கப்போகின்றது. அதுகாறும் யாங்களும் வனத்திலிருந்து பின்பு தேவரீரோடுங் கூடி நகரத்திற்கு வந்து சேருகின்றோமென்று சொன்னார்கள்.

அவையனைத்தையுஞ் சோமகாந்தராசன்கேட்டு அன்பர்களே! இவ்வுலகத்திற் பிறந்த பயனை வேண்டினோர் முதலில் இல்லறவொழுக்கங்களை வழுவாமற் காத்துப் பின்பு துறவறம்பூண்டுவனத்திற் செல்லவேண்டுமென்று வேதங்களிற் சொல்லி யிருக்க அதனை இதுகாறுங் கருதாது மறந்திருந்ததினா லல்லவா இப்பொல்லாங்கான பிணியெனக்குச் சம்பவித்தது நீங்கள் இதனைச் சற்றும் ஆலோசியாம லிருக்கின்றீர்கள். அன்றியும் ஓர் ஆலமரத்திற்குப் பழுதுற்ற காலத்தில் அதனைத் தாங்க அதனடியிலிறங்கி யிருக்கின்ற விழுதைப்போல எனக்குத் துன்ப நேரிட்டகாலத்தில் என்னைப்போ லெனதராசுரிமையைக் காத்துவருவதற்கு என்மகனேற்பட்டிருக்கின்றான். அவனே என்னினு மதிகமாக வுங்களையெல்லாம் பாதுகாத்து மேலான புகழை யடையத் தக்கவன். நீங்கள் ஒன்றுக்கு மஞ்சவேண்டாம் இனியான் வனஞ்செல்வதற்கு உத்தரவு கொடுத்து நீங்கள் யாவரும் நகரத்திற்போய்ச் சுகமாயிருங்களென்று சொன்னான். பின்னர் யாவரும் அரசனாணையை மறுப்பதற் கஞ்சினவர்களாகி லொன்றும்பேசாதிருந்தார்கள். அப்பால் குமா

ராகிய ஏமாண்டனானவன் தனது தாய் தந்தையரிடத்தில் வைத்திருக்கின்ற ஆசைநோயானது தன்னையலைக்க, அதனால் வருந்துகின்றமனத்தோடு அருகிலிருப்பவர்கள் தனது கண்ணீரைத் துடைக்கும்படியாகத் துக்கித்து தந்தையெதிரில் வந்து நின்றனன். அவனைச் சோமகாந்தராசன் பார்த்து; என் அருமைக் கண்மணியே! ஏன் கிலேசப்படுகின்றாய் கிருகத்தாச்சிரமத்தி லிருக்கின்றபேர்கள் வயதுமுதிர்ந்தால் வனத்திற்குச் செல்வது முறைமை யன்றோ? அந்த முறைப்படி யாமும் வனத்திற்குச் செல்லுகின்றோம். தாய் தந்தையருடைய உத்தரவைத் தடுக்காமல் நடந்துகொள்ளவேண்டுவது புத்திரர்கள் கடமை யாதலால் தசரத மகராசனி னுத்தரவின்படி அவர் குமாரராகிய ஸ்ரீராமமூர்த்தி வனத்திற்குச் சென்றானன்றோ? அவ்வாறு உன்னை யான் வனத்திற்குப்போகச் சொன்னேனோ? இல்லையே? சுகமடுத்தாலுந் துன்பம் விளைந்தாலுந் தாய் தந்தையர் சொல்லுகின்ற முறைமைப்படி நிற்பதல்லவா புத்திரர்களுடைய கடமை. இஃதுனக்குத் தெரியாததா? நீ நமது உத்தரவின்படி நகரத்திற் போய்ச் சேர்ந்து சுகமாக இராச்சியபரிபாலனஞ் செய்துகொண்டிருவென்று பல தேறுதல்களைச் சொல்லலும், ஏமகண்டராசன் தன் தந்தையின் பாதங்களிற் சாஷ்டாங்கமாகப் பணிந்து, பல ஆசீர்வசனங்களைப் பெற்றுத் தன் தாயினருகில் வந்து, அவள் பாதமானது தனது கண்ணீரினால் நனையும்படியாக வீழ்ந்து பணிந்தனன்.

உடனே அத்தாயானவள் மிகுந்த துக்கத்தோடு புத்திரனையெடுத்துத் தனது கண்ணீரினால் அவன்மார்பி லணிந்திருக்கின்ற சந்தனமெல்லாங் குழையும்படி யணைத்துப் பல தேறுதல்களைச் சொல்லி என்னருமைச் செல்வனே! எவ்வகைப்பட்ட தேவர்களாயினுந் தங்களை யடுத்திருக்கின்ற ஊழ்வினையை யொழிக்க வல்லவர்களோ? அவ்வூழை நினைத்துத் துக்கித்திருப்பதனா லென்ன பயன். உன்மனதில் எங்களைக்குறித்து யாதொரு கவலையுங் கொள்ளவேண்டாம் சகல விக்கினங்களையு மொழித்து அவ்வவர்கட்குவேண்டிய வரங்களைத் தந்து இரட்சிப்பவர் விநாயகக்கடவுளாதலால், நீ யுன்னரண்மனையைச் சேர்ந்து அவ்விநாயக மூர்த்தியை இடைவிடாமற் பூசித்து, சுவாமி! எனது தந்தையுந் தாயுஞ் சகல துன்பங்களும் ஒழியப்பெற்று விரைவில் இந்நகரத்தைச் சேரவேண்டுமென்று பிரார்த்தனை செய்துகொண்டு, உனது அரசாட்சியைக் கிரமமாகச்

செலுத்திச் சிரஞ்சீவியாய் மார்க்கண்டேயரைப் போலத் தீர்க்காயுளும், புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்கின்ற பதினாறு பேறுகளையும் பெற்று மறுமைப் பயனோடு மிக்க சுகமுற்றிருக்கக்கடவையென்று பல ஆசீர்வாதங்களைச் சொல்லி விடைகொடுத்தனள்.

பின்னர் ஏமகண்டராசன் தனது மனத்தைச் சிறிது கொண்டவனாய், அங்கிருக்கின்ற அமைச்சர் முதலிய யாவருந் தன்னைப் புடைசூழ்ந்துவர நகரத்தையடைந்து, சதாகாலமுங் கணபதி பூசையை நடாத்திக்கொண்டு இராச்சிய பரிபாலனஞ் செய்துவந்தான். இப்பால் சோமகாந்த ராசனுஞ் சுதன்மையும் அவ்விடத்தினின்றும் நீங்கி வனத்தைநோக்கிச்செல்லுகையிற் சுபலன், ஞானகம்மியன் என்னும் இரண்டு மந்திரிகளும் பின் தொடர்ந்தார்கள். பின்னர் அவர்களையும் அழைத்துக்கொண்டு நால்வர்களாக வழி நடந்து, வனவாசஞ் செய்து தேன், கிழங்கு, காய், கனி முதலானவைகளை இரண்டமைச்சர்களுந் தெரிந்து சேகரித்துக் கொடுக்கத் தாங்கள் அவற்றை வாங்கிப் புசித்துவருங்காலத்தில் அச்சோமகாந்தராசன் செய்திருக்கின்ற தவப்பயனுனது நெருங்கி வந்தமையாலும், அவன் புத்திரனாகிய ஏமகண்ட ராசன் இடைவிடாது கணபதி பூசைசெய்து வருகின்ற மாட்சிமையாலும், தவசிரேஷ்டராகிய பிருகு முனிவராசிரமத்தி னருகில் வந்து நடந்த விளைப்பு நீங்கும்படியாகப் பலசோலைக ளீழலாற் சூழப்பட்டிருக்கின்ற வொரு தடாகக்கரையிற் றங்கினார்கள். அச்சோலையில் மயில்க ளாடுகின்றனவும், குயில்கள் கூவுகின்றனவும், வண்டுகள் பாடுகின்றனவும், நாகணவாய்ப் பக்ஷிகளோடு கிளிகள் பலவிஷயங்களைப்பேசி வாதாடுகின்றனவும், பூங்கொடிகளெல்லாம் பூவையர்களைப் போல் அசைகின்றனவும், மலர்க்கொத்துகளால் நிறைந்த கிளைகளெல்லாஞ் சூரியமண்டலத்தை யளாவி நெருங்கியிருக்கின்றனவுமாக நிகழும் பல விசித்திரங்களைக் கண்டு நமது அரண்மனையும், இச்சோலைக்கு நிகரல்லவென்று சந்தோஷித்து, அச்சோலையில் வீசுகின்ற தென்றற் காற்றினால் இளைப்பாறிச் சிறிது நித்திரை செய்வதாயினான். சுதன்மையானவள் அவ்வரச னருகிற் காவலாக விருந்தனள். இரண்டு அமைச்சர்களும் புசித்தற்கு வேண்டுவனவற்றைக் கொண்டு வருவதற்காகச் சென்றார்கள்.

அச்சமயத்தில் ஒருபாலியன் இராஜகுமாரனைப்போல் அழகு வாய்ந்தவனாகி நீர் கொண்டுபோவதற்கு அத்தடாகத்தை நோக்கி வரச் சுதன்மையானவள் அவனைப் பார்த்து ஆச்சரியங்கொண்டு, அப்பா குழந்தாய்! சிங்கம், யானை, புலி, கரடி, முதலான துஷ்ட மிருகங்கள் வாசஞ் செய்யத்தக்க இவ்வனத்தில் தேவர்களும் வருவதற் கஞ்சுவார்களே; நீ சிறுபிள்ளையா யிருக்கின்றனையே, இவ்வளவு துணிவோடும் ஒருவர் துணையுமின்றித் தனிமையாக வந்தனையே நீ யார்? உன் பெயரென்ன? உன்னை யீன்ற தாய் தந்தையர் யார்? இவ்வனத்திற்கு வந்தகாரணம் யாது? அவைகளை யெனக்கு முறைமையாகச் சொல்லுவாயெனக் கேட்டனள். அதற்கு அப்பாலியன சொல்லுவான் தாயே! யான் முனிசிரேட்டருக்குப் பிறந்தவன், என்பெயர் சியவனன். என்னை யீன்றவள் புலோமை என் தந்தை பிருகு முனிவர். யான் இங்கு ஜலங் கொண்டுபோவதற்கு வந்தேன். இதுதா னெனது சரித்திரமென்று சொல்லி, அம்மா! உன்னுடைய சரித்திரம் யாது? இலக்குமியுங் கண்டு நாணத்தக்க அழகினைவாய்ந்த நீ இவ்வாரணியத்தில் இத்தன்மைத்தான பொல்லாப் பிணியாளனோடு வருவதற்குக் காரணமென்ன? இவைகளை எனக்குச் சொல்லவேண்டுமெனக் கேட்டனன். உடனே சுதன்மையானவள் அதற்கிசைந்து தனது விழிகளினின்றும் நீர் பெருகிவர மனமுருகித துக்கித்து, தாங்களிருந்த நிலைமையையும், இப்போ திவ்வனத்திற்கு வந்திருக்கின்ற தன்மையையும், மற்றுந் தமதுள்ளத்தி லிருக்கின்ற துயரங்கள் எவற்றையும் ஒன்றேனும் விடாது சொன்னாள். அதனைக் கேட்ட முனிகுமாரன் மிக்க துயரமடைந்து தனது சிறந்த பேரறிவினாற் பல தேறுதல்களைச் சொல்லிச் சலமெடுத்துக்கொண்டு தன்னாசிரமத்தைச் சேர்ந்தனன்.

வனம்புகு படலம் முற்றிற்று.

# பிருகுமுனியை யடுத்த படலம்.

வாய்ந்த புகழ் நைமிச வனத்துறவிற் சோம
காந்தன் வன மேயது கரைந்தன மறிந்தீர்
வேந்தனவ னற்பிருகு மெய்த்தவ னழைப்பப்
போந்தபடி கேண்மினென வேபுகலுஞ் சூதன்.

இப்பால் அம்முனி குமாரன் நெடுநேரஞ் சென்றுவந்து சேர்தலும், அவனை அவன் தந்தையாகிய பிருகு முனிவர் நோக்கி, அப்பா! நீ இன்று இவ்வளவு காலதாமதப்பட்டு வருவதற்குக் காரணமென்ன? அன்றியும் உன் முகாரவிந்தமானது அங்கியர் துக்கத்திற் கழுங்கி வாட்டமுற்றிருக்கின்றதாதலால், நீசென்றவிடத்தில் நடந்தகாரியங்களென்ன? அவைகளை எனக்கு விளங்கச்சொல்லுவாயென்று கேட்டனர் அதற்குச் சிவனனுனவன் தனதுதந்தையைப் பணிந்தெழுந்து, அண்ணலே! யான் தடாகநோக்கிச் செல்லுகையில் அத்தடாகக் கரையில் ஒருமரத்தினிழலில் இரதிதேவியுங் கண்டு வணங்கத்தக்க பேரழகுவாய்ந்த ஒரு ராஜஸ்திரீயானவள் தன் புருடனோடுங்கூட விருந்தாள் அவள் என்னைப் பார்த்தவுடன் அருகி லழைத்து மிருந்த அன்போடிருக்கவைத்து, அப்பா! நீ சிறு குழந்தையா யிருக்கின்றனையே; உன்னை இக்கொடிய காட்டிற்றனியாய் விட்டவர்கள் யார்? உன்பெய ரென்ன? நீ இங்குவந்த வரலாறென்னென்று கேட்டனள். அதற்குத் தக்கபடி விடை கொடுத்துப் பின்னர் அவள் வரலாற்றைக் கேட்டறிய லாயினேன். அக்காரணத்தாற் காலதாமதமாயிற்று அன்றியும் அந்த ராஜஸ்திரியானவள் தன்னோ டிருக்கின்றவன் தன்புருட னென்றும், அவன் சௌராட்டிர தேயத்திற்கு அரசனென்றும், அவன் பெயர் சோமகாந்த ராஜனென்றும், அவன் தனது சரீரத்தி லிருக்கின்ற தொழுநோயினல் நரகவேதனையினும் அதிக துன்பத்தை யடைந்திருக்கின்றானென்றும், அந்நோயின் காரணத்தால் அவனும் அவன் மனைவியாகிய சுதன்மை என்கின்ற தானும் அரசாட்சி முதலானவற்றைத் தங்கள் குமாரனுகிய ஏமகண்டராசனுக் கொப்புவித்து, இவ்வனத்தில் வந்து வாசஞ்செய்கின்றோ மென்றும், தங்களுடன் இரண்டு அமைச்சர்கள் வந்திருக்கின்றன ரென்றும். அவ்வமைச்சர்கள் கனி, கிழங்கு முதலானவற்றைக் கொண்டுவரச் சென்றிருக்கின்றார்களென்றுஞ் சொல்லி, மனங் கலங்கி நல்லுணர்ச்சியினைப் போக்கி, விழிகளில் நீர்பெருக்கித் தேகமுழுவதும் வியர்த்துத் துக்கசாகரத்தில் மூழ்கி, ஐயையோ! அறுசுவை பதார்த்தங்களோடுங் கூடியுண்பதற்கு மகாயோக்கியகரமான உணவைப் பாகத்தோடு செய்து வைத்தாலும், அதினிலொரு இரசந்தப்பினல் மீட்டும் அதனையுண்ணச்சகியாதவர்க்குக் கனி, கிழங்கு, காய் முதலானவற்றை யுண்ணவு நேரிட்டதே யென்றும், சப்பிரகூட மஞ்சத்தில் மல்லிகை, முல்லை, இருவாட்சி முதலான மலர்களைப் பரப்பிக் குளிர்ந்து பரி

மளிக்கின்ற பனிநீரைத் தெளித்த சயனத்தின்மீது இளந் தென்றலானது கவரிகளை நிகர்த்து மெல்லவீச, நித்திரைசெய்கின்றகாலத்திலும் அச்சயனஞ் சரீரத்தை யுறுத்துமாயின் நித்திரை கொள்ளாது மற்றொரு சயனத்திற் பள்ளிகொள்பவர்க்கு இம்மணற்றரையிற் சயனிக்கவு நேரிட்டதே யென்றும், சந்திர விம்பத்தினைப் போற் பிரகாசித்துக் குங்குமங், கஸ்தூரி, புனுகு, சவாதுமுதலான கலவைச் சேற்றினைப் பூசிக்கொண்டு பரிமள மிகுந்த புட்பமாலைகளைத் தரித்து, இந்திரனுங்கண் டேக்கங் கொள்ளத்தக்க போகங்களை யனுபவித்துவந்த இவ்வுடல், இப்போது இவ்வகைப் பொல்லாப் பெருநோயிற் பொருந்தியழியுமாறு நேரிட்டதே யென்றும் இதுகாறும்முனிவர், அந்தணர், பெரியோர், மன்னவர், சுற்றத்தார் முதலானவர்களோடு நால்வகைச் சேனைகளும் புடைசூழத் தகுதியான அளவற்ற செல்வங்களை ஐம்புலாதிகளுக்கும் விருந்தூட்டி இவ்வுலகத்தை அரசாட்சி செய்துவந்து, இக்காலத்தில் அவ்வரசாட்சி முதலான செல்வங்களை விடுத்து இக்காட்டில் வந்துவாசஞ் செய்ய நேரிட்டதேயென்றும், இன்னு மிவ்வாறு அநந்தவிதமாகச் சொல்லித் துக்கித்தனள் யானத் துக்கத்தினை யெல்லாங் கேட்டிருந்தபடியால் எனது மனமதனுக்கிரங்கி வாட்டங் கொள்ளும்படி நேரிட்டதென்றனன்.

அதைக் கேட்ட பிருகுமுனிவர் மனமிரங்கி அருள் சுரந்து, புத்திரனே! அவர்க ளெங்ஙன மிருக்கின்றார்கள். நீபோ யிங்ஙனமழைத்து வரக் கடவையென்று கட்டளையிட்டனர் உடனே சிவனன் அதிவேகத்துடன் அவர்களிருக்கின்றவிடத்திற்சென்று அவர்களைக் கண்டு, என் தந்தை யுங்களைக் கிருபையோடும் அழைத்து வருமாறு கட்டளையிட்டா ராதலால், நீங்கள் விரைவி லெழுந்து வரக்கடவீர்களென்று மிகுந்த சந்தோஷத்துடன் கூவிப் பிரயாணப்படுத்தித் தான் முன்னதாக நடந்தான். அரசன், சுதன்மை, இரண்டு மந்திரிகள் ஆகிய நால்வரும் அவன் பின்னர் நடந்து அத்தியந்த சந்தோஷங்கொண்டு, அப்போதே வியாதி நீங்கிவிட்டதாகவெண்ணிப் பிருகுமுனிவருடைய ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

அவ்வாசிரமத்திற் புலியானது தன் பாலை மான் கன்றுகளுக் கூட்டுவிப்பதும், யானையானது சிங்கத்தின் முதுகிலிருக்கின்ற மயிரைக்கோதிச் சிக்கறுப்பதும், பாம்புகளுக்கு மயில்கள் இரை தேடி வந்து கொடுப்பது மாகச் சகலசீவராசிகளும் ஒன்றுக் கொன்று

பகையில்லாமல் உறவாடிக் கொண்டிருந்தன. அன்றியும் மழைக் காலமென்று அதிக மழை பெய்வதும், அஃதில்லாத காலமென்று பெய்யாம லிருப்பது மின்றி, சூரிய னெக்காலத்தும் ஒரே விதமாகக் கிரணம் பரப்புவதும், தென்றற்காற்று மிதமிஞ்சி வீசாதிருப்பதும், பனி அதிகரிக்காது சொரிவது - வசந்தருது - கிரீஷ்மருது - வருஷருது - சரருது, ஏமந்தருது - சசிருது என்கின்ற * அறுவகை இருதுக்களுங் காலவேற்றுமை யில்லாமல் எக்காலத்தும் ஒரே படித்தாக விளங்குவது மாக விருந்தலால், சகலமான விருக்ஷங்களுங் கொடிகளும் புற்களும் எக்காலத்துந் தளிர்த்தும் பூத்துங் காய்த்தும் பழுத்தும் வருகின்ற வளமையை யுடைத்தாயிருந்தன. இத்தன்மையவான பெருமிதங்களை அரசன் முதலிய நால்வருங்கண்டு மிகவும் ஆச்சரியங்கொண்டு, அளவற்ற முனி புங்கவர்கள் பிரமதேவனுக்குச் சமானமாக வெண்ணிப் புடைசூழ்ந்திருக்கப் பிருகு மகாமுனிவர் புலித்தோலாசனத்தி லெழுந்தருளியிருப்பதை நோக்கி, தத்தம் பெயர்களைச் சொல்லிச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து இரு கரங்களையுஞ் சிரமேற் கூப்பி, அநந்த முறை துதிசெய்து நின்றார்கள், பிருகு முனிவர் அவ்வவர்கட்குத் தக்க ஆசீர் வசனங்கள் கூறித் தமது கிருபா நோக்கத்தினால் அரசனை அண்ணாந்து பார்த்தனர். உடனே அவ்வரசன் அளவளாவிய அன்பினோடு மீளவும் பணிந்தெழுந்து கடலுண்டுவந்து பெய்கின்ற மேகம் போலக் கண்களினின்றும் ஆனந்த நீர்த் தாரைகளைச் சொரிந்து; சரீரமெங்கும் உரோமாஞ்சிதங் கொண்டு, நெட்டுயிர்ப்புற்று, வியர்த்து, வெங்கனற்பட்ட வெண்ணெய்போ லுருகி சுவாமி! அடியேன பூர்வசன்மத்திற் செய்தன வெல்லாந் தீவினையே யென்றும், அத்தீவினையால் இவ்வுடலில் இத்தன்மைத்தான சொல்லாத துன்பத்தை யநுபவிக்கப் பெற்றே னென்றும் இதுகாறும் யோசித்திருந்தேன். இன்று யோசிக்கு மிடத்தில் அடியேன் செய்தவெல்லா நல்வினையே யென்றும், இந்நோயானது தேவரீருடைய திவ்விய சரணார விந்தங்களைச் சேவிக்குமாறு எனது பிடரியைப் பிடித்துத் தள்ளுவதற்கான ஒரு முன்னிலை யென்றுந் தெரிந்து கொண்டேன், பின்னுந் தேவரீருடைய கிருபாதரிசனத்தை இத்தினத்திற் கிடைக்கப் பெற்றேனாதலால், அடியேனுடைய இம்மை

* இவையே இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்ச் சித்திரை முதல் இரண்டிரண்டு மாதம் ஒன்றாகி வரும்.

மறுமை உம்மை என்று முச்சனனங்கட்குஞ் சுத்த பவித்திர முண்டாயது. அடியேன் செய்த தவங்க ளெல்லாஞ் சித்தியாய்விட்டன, அடியேனுடைய கல்வியுங் குலமும் அடையத்தக்க பயன்களை யடைந்தன, அடியேனை யீன்ற பிதிரர்களும் நல்லபேற்றினையடைந்தார்கள், கற்பகவிருட்சத்தை யடைந்தோர்க்கு என்ன குறையிருக்கின்றது, அதுபோலத் தேவரீருடைய பாதார விந்தத்தை அடுத்துளேற்கு இனியொரு குறையுண்டாகுமோ? இச்சனனத்தில் அடியேன் செய்த பாவங்க ளொன்றேனுங் காணேன், முற்சனனத்தில் என்ன பாவங்கள் விளைந்திருக்கின்றனவோ அவைகளை யறிந்திலேன், மறு சனனத்திற்கும் நற்கதியை யடைய வொட்டாது இவ்வியாதி வந்து எனது சரீரத்திற் சம்பவித்திருக்கின்றது. இதுநீங்குமாறு அளவிறந்த ஔஷதங்களைப் புசித்தேன், அளவிறந்த மந்திரங்களை யநுட்டித்தேன் அளவிறந்த தானங்களைச் செய்தேன், அளவிறந்த தவங்களை முடித்தேன், இது காறும் இவ்வியாதியென்னை நீங்காமல் நாளுக்குநாள் அதிக உபத்திரவத்தையும் விசனத்தையும் விர்த்தி செய்து வருகின்றது, இனி இவ்வியாதியானது தேவரீருடைய கிருபையினாற் றீரவேண்டுவதே யன்றி மற்ற மணி மந்திர ஔஷதாதிகளாற் றீர்வதில்லை, மேலும் தேவரீருடைய ஆசிரமத்திற் பலவகைப்பட்ட மிருகாதி செந்துக்க ளெல்லாம் ஒன்றுக்கொன்று பகையின்றி உறவு கலந்திருத்தலினால் தேவரீரை யடுத்த அடியேனையும், இனி இவ்வியாதி துன்பப்படுத்தாமல் என்னைவிட்டு நீங்கு மென்பதற்குச் சந்தேகமில்லை, என்றிவ்வாறு அளவிறந்த துதிகளைச்செய்து நின்றனன்.

அவை யனைத்தையும் பிருகு முனிவர் கேட்டு மீளவும் அவ்வரசனைக்கிருபையோடும் பார்த்துச் சற்றுநேரந் தியானித்திருந்து, தமது ஞானதிருஷ்டியினால் அவன் அவ்வியாதியை யடைந்த காரணத்தைத் தெரிந்து கொண்டு அரசனே! நின்மல சொரூபியாகிய கடவுளனுக்கிரகத்தினால் உனதெண்ணம் நிறைவேறுகின்றது இனி உனது மனத்தி லிருக்கின்ற வியாகூலத்தை யொழித்துவிட்டுநீமிகவும் வழிநடந்த இளைப்பால் வாட்டமுற் றிருக்கின்றனை யாதலால். விரைவில் அதனை ஆற்றிக்கொள்ளுக வென்று திருவாய் மலர்ந்தனர். அவ்வாக்கினை யவரருகில் நின்ற சீடர்கள் குறிப்பால் அறிந்து அரசன் முதலாயினோரை உள்ளே யழைத்துக்கொண்டு சென்று பல சுகந்த புஷ்பங்களா லூட்டப்பட்டிருக்கின்ற தைலங்களைக் கொண்டு ஸ்நானஞ் செய்வித்துக் கைப்பு - தித்திப்பு - புளிப்பு-

உவர்ப்பு-துவர்ப்பு - கார்ப்பு - என்னும் அறுவகைச் சுவைகளோடு உண்டல்-தின்னல்-நக்கல் பருகல்-என்னு நால்வகை * உண்டிகளையும் ஊட்டுதல்செய்து, அளவற்ற அன்போடும் உபசரித்தார்கள். அதனால், அவ்வரசன் முதலிய நால்வரும் இளைப்பாறி யதிக மகிழ்ச்சியுற்றிருந்தார்கள்.

பிருகுமுனிமை யடுத்தபடலம் முற்றிற்று

# இருவகைவினையு முரைத்தபடலம்.

என்றுமா தவர்கேட்ப விருந்தவத்துப் பிருகுவின்பா
லன்றுவேற் கரத்தரச னடுத்ததுரைத் தவனவற்குத்
துன்றுதீ வினைநன்மை சூழ்ந்துரைத்த வவ்விரண்டு
மின்றுகூ றுவன்முறையே யெனச்சூத முனியியம்பும்.

இவ்வாறு சனன வாதையினை வேரோடுங்களையவல்ல அப்பிருகு முனிவருடைய பேரருளைப்பெற்ற 'அரசனனவன் அன்றிரவெல்லாம் ஆனந்த நித்திரைசெய்து மறுநாள் உதய காலத்திலெழுந்திருந்து, நித்திய நியமங்களை நிறைவேற்றி ஐம்புலன்களையு மொருவழிப்படுத்தித் தவசிரேஷ்டராகிய பிருகு முனிவரருகில் வந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, இரு கரங்களையுங் குவித்து அவரது அருளுக்கத்திற்கு நேராக அநந்த முறை துதித்து நின்றனன். அத்தருணத்தில் விநாயகக் கடவுளுடைய திருவடித் தாமரைகட்கு அன்பு செலுத்துகின்ற அப்பிருகு முனிவரானவர் அரசனை வருத்தி வாட்டுகின்ற நோயினை நீக்கி அவனை யாட்கொள்ளுமாறுலோசித்து ஓர் சிறந்த ஆசனத்தி லிருக்கச் செய்து, அவன் முற்பிறப்பிற் செய்திருக்கின்ற நல்வினை தீவினைகளை யெடுத்துணர்த்த எண்ண முற்றவராகி முன்னர் அவன் தீவினைகளை விளம்புவதாயினர். சோமகாந்த ராஜனே! நீ முற் சனனத்தில் விந்த பர்வதத்தின் சமீபத்திற் கொல்லமென்னும் பட்டினத்திற் சிதருபனென்னும் வைசியனுக்கும். சுலோசனையென்னும் அவன் மனைவிக்கும் புத்திரனாகச் சனித்துக் காமந்தனென்னும் பெயரை வகித்து, நல்லயௌவன காலத்திற் குடும்பினி யென்பவளை விவாகஞ்செய்து

* அவை சோறுமுதலிய உண்டல். கறிமுதலிய தின்னல். தேன் முதலிய நக்கல். நீர் முதலிய பருகல் என வறிக.

ஏழுபிள்ளைகளையும், ஐந்து பெண்களையும் பெற்று வாழ்ந்திருக்கின்றநாளையில், உனது தாதை விருத்தாப்பியத்தை யடைந்து இகலோகவாசையை யொழித்தனன். உனது தாயும் உடனே அநுமரணஞ் செய்தனள்.

அப்பால் உனக்குப் புத்தியுரைக்கத் தக்கவர்களில்லாமல் நீ வேசையர் மையலில் வீழ்ந்து, அவர்களுக்காகப் பெரியோர்களாற் சேகரித்து வைத்த பொருள்களை யெல்லாமழித்தனை. இது தருமமல்ல வென்று மனைவியானவள் பலவாறு சொல்வதையுங் கேளாமல், ஆபரணங்கள்-வீடுகள் நிலங்கள் முதலானவைகளையும் அவர்கட்கு விற்றுக் கொடுத்தனை பின்னர்க் கொடுத்தற்குப் பொருளில்லாமற் றரித்திரனாகிச் சிறிதுநாள் யாசகஞ்செய்து பொருள் சம்பாதித்துக் கொடுத்தனை சிறிதுநாள் பொய்ச்சாட்சி, கோள், அசத்திய முதலானவைகளைக் கூறி அவைகட்கேற்ற கூலிகளை வாங்கிக் கொடுத்தனை. சிறிதுநாள் சூதாட்டினாலுங் களவாட்டினாலுஞ் சில பொருள்களைச் சேகரித்துக கொடுததனை சிறிது நாள் ஸ்திரீகள் கைகளிலணிந்த சூடகங்களையும், கால்களி லணிந்த பாடகங்களையும், காதிலணிகின்ற குழைகள் முதலான ஆபரணங்களையும் வழியினின்று பறித்துக்கொடுத்தனை பின்னும் பரஸ்திரீகளைப் பலாத்காரமாகப்பிடித்து அவர்கள் கற்பைகெடுத்தனை. இத்தன்மையன அளவற்ற பொல்லாங்குகளைச் செய்து காமாந்த காரத்திற் சுழன்று, யாவருந் தூர்த்தனென்றுசொல்லி யஞ்சத் தக்கவனாகித் திரிகின்ற காரணத்தால் உனது மனைவியாகிய குடும்பினி யென்பவள் தன்னைப் பாது காப்பவ ரொருவருமின்றி; மனந் தளர்ந்து பசியால் வருந்திப் பலநாள் புசிப்பின்றிப் பட்டினியிருக்கச் சகியாதவளாய், தனது தாய்வீட்டைச் சேர்ந்தனள்.

பின்னர் நீ அந்நகரிற்றனே இருந்து கள்ளுண்டு, களித்தாடித் தலைகால் தெரியாமல் மனதிஷ்டப்படிக் கெல்லாம் அளவற்ற தீங்குகளை நடத்திக்கொண்டு வந்தனை. இந்நடத்தைக ளனைத்தையும் அந்நகரத் தரசன் கேள்வியுற்று உன்னை யந்நகரத்தி னின்றுந் துரத்தி பின்னர்விட, நீகாட்டிற் சென்று. கள்ளர்களுடன் கூடிக் கொண்டு, அவ்வழியிற் போகின்றவர்களையும் வருகின்றவர்களையுங் கொலைசெய்து கொள்ளையிட்டு மிருகங்கள்-பட்சிகள் முதலானவைகளைப் படையினாற்கொன்று பசிதீரத தின்று திரிகின்றகாலத்தில், ஒருநாள் அம்மார்க்கமாகக் கணவர்த்தனென்னும் ஒரு பிராமணன்

வர அவனை நீ பார்த்தவுடன் பொருக்கென்றெழுந்து எதிர்சென்று மறித்து அவன் கைகளைச் சேரப்பிடித்துக் கொல்ல வெத்தனித்தனை. அப்பிராமணன் உன்னைக் காண்டலும் எமதூதனைக் கண்டாற்போல நடுங்கிப்பயந்து, பெருமூச்சுவிட்டு, அப்பா! நான் அந்தணன் என்னைக் கொல்லலாமா? நான் வைத்திருக்கின்ற பொருள்களையெல்லாம் ஒளிக்காமற் றருகின்றேன். என்னைக் கொல்லாமல் மாத்திரம்விட்டுவிடு முன்பொரு கன்னிகையைக் கல்யாணஞ் செய்தேன். அவள் புத்திரப் பேறில்லாமல் இறந்துவிட்டாள். பிதிர் கருமங்கட்குப் பிள்ளை வேண்டுமாதலால் இப்போது இரண்டாவது கல்யாணஞ் செய்திருக்கின்றேன் அவ்வனிதையோ இன்னும் புத்திரர்களைப் பெறமாட்டாத பருவத்தினளா யிருக்கின்றனள். அவளுக்கென்னைவிட ஆதரிக்கத்தக்கவர்கள் ஒருவருமில்லை நண்பனே! எனது பிராணனை உன தடைக்கல மாக்கினேன். யான் தருகின்ற திரவியங்களை வாங்கிக்கொண்டு என்னைக் கொல்லாமல் உயிர்ப்பிச்சை தந்துவிடல்வேண்டுமென்று மேலும் மேலும் பிரார்த்தித்துக்கொண்டனன். அதற்கு நீ கொலை களவு-கள்-காமம்- பொய் என்கின்ற பஞ்சமா பாதகங்களிலே ஒன்றையும் விடாது செய்கின்றவனாதலால் அப்பிராமணன் சொல்லைக் கற்பாறை மீதுதாக்கிய கோடாலியெனத்தள்ளி, சற்றேனு மனதிரங்காமல் உனதிஷ்டத்தின்படி அவனைக் கொன்று விட்டனை. உடனே உன்னைப் பிரமஹத்திபிடித்துக் கொண்டு அனந்த வுபத்திரவங்களைச் செய்துவர, அதனால் ஒருநிமிடம் ஒருகமாகககழித்துப்பல துன்பங்களையநுபவித்து வந்தனை. இத்தன்மைத்தான துன்பத்தோடு வருந்தி யிருக்கின்ற காலத்தில் ஒரு புண்ணியப் பலனுங் கிடைக்கப் பெற்றனை அப்புண்ணிய பலத்தாலல்லவா? இச்சனனத்தில் இப்பூவுலகத்தை யாள்வதான அரசுரிமையைப் பெற்றனை யென்றனர்

இவ்வாறு சொல்லிய பிருக முனிவரை மீளவும் அவ்வரசன் பணிந்தெழுந்து அப்புண்ணியத்தையுஞ் சொல்லவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து கொண்டனன் அதற்குப் பிருகு முனிவரிசைந்து அரசனே! நீ முற்கூறியவண்ணம் அபபிரமகத்திபாவத்தினாற் பல துன்பங்களை யநுபவித்து வனத்திற் சஞ்சரித் திருக்குங் காலையில் உனக்கு நடுக்கம, இளைப்பு, கபம், காச முதலான வியாதிகள் நேர்ந்து வயது முதிர்ந்து சவரட்சனை செய்வதற்கான துணைவர்கள் ஒருவரு மில்லாமல் மிக்கதுன்பத்தினை யநுபவித திருக்கின்ற தருணத்தில் நீ உன்மனைவியை நினைத்து அவளிடத்திற்றொரு

தூதுவனையனுப்பினை. அத்தூதுவன் அவ்வாறே இராக்கொண்டு சென்றுநீதனியாயிருந்துபடுகின்ற துன்பங்களனைத்தையுஞ்சொல்லினன். அவற்றை உன்மனைவி முதலான மற்றையாவர்களுங் கேட்டுப்பயந்து இக்காரணம் அரசனறிவானாயின் நம்மெல்லாரையும் ஒருசேரவதைசெய்யத் துணிகுவனென்று நடுங்கி அத்தூதுவனைப் பார்த்து நீ இவ்வார்த்தைகளை யெங்கும் வெளிவிடாமல் விரைவிற் செல்லக்கடவை யென்று பயமுறுத்தியனுப்பினர்

அதனை யத்தூதுவன்வந்து சொல்லக்கேட்டு இனி யாதுசெய்யக்கடவோமென்று துன்பமுற்றிருக்குங் காலையில் முற்பிறப்பிற் செய்த நல்வினைப்பயனானது உன்னை நெருங்கிவருங் காரணத்தால் அவ்வழியிற்செல்லுகின்ற ஒருவேதியன் உனதுவரலாறு இன்னதென்றறியாதவனாயுன்னைவந்து யாசித்தான் அவ்வேதியனுக்குநீ ஆடையாபரணமுதலிய திரவியங்களைக்கொடுத்துமீட்டு மவனைப்பார்த்து இன்னும் பிராமணர்களை யழைத்துவருவையாயின் அவ்வவர்கட்கு வேண்டுமட்டுந் தானஞ்செய்கின்றேனென்று சொல்லினை, அவ்வந்தணன் அவ்வாறே பல ஆசிரமங்களிற்சென்று ஆங்காங்கிருக்கின்ற பிராமணர்களைக்கூவி, ஆடையாபரண முதலான திரவியங்களை ஒருவன் தானஞ் செய்கின்றான். நீங்கள்யாவரும் விரைவில் வாருங்கள் வாருங்களென்று அழைக்க அவ்வேதியர்கள் நீயென்றறியாது அப்பிராமணன் வழிகாட்டியபடி உன்னிடத்திற்கு வந்தார்கள் நீயவர்களைக் கண்டவுடன் மிகவும் பயபத்தியோடு வணங்கிநின்றனையாயினும் அவ்வேதியர்களுன்னைப்பார்த்து உன்னை இன்னானென்றறிந்துகொண்டு மனவருத்தமுற்று நகைத்து உன்னைப் பாவியென்றறியாமல் அப்பிராமணன் சொன்ன வார்த்தையைக் கேட்டல்லவோ இங்குவரலாயினோம் ஐயோ! பாதகங்களனைத்தையும் விடாமற்செய்த மகாபாவியாகிய உன்னை அடுத்தவர்சள், கண்டவர்கள், உன்பெயரைக் கேட்டவர்கள், உன்பெயரைச் சொன்னவர்கள், உன்னையாசிப்பவர்கள் முதலான யாவர்களும் தீவினைக்காட்டிலகப்பட்டுப் பின்பு நரகக்குழியிலழுந்தி வருந்துவார்களே, ஆயினும் உனக்குத் தருமஞ்செய்யக் கருத்திருக்குமாயின் இவ்வனத்தில் நிர்மலமூர்த்தியாகிய விநாயகக் கடவுளாலய மொன்று அடிமுதல் முடிவரையிற் செடிகண் முதலானவைகளால் மூடப்பட்டுக் கிலமடைந்திருக்கின்றது. அவ்வாலயத்தைப் புதுக்கக்கடவையென்றுசொல்லி, அவ்வவர்களாசிரமத்திற் சென்று உன்னைக்கண்ட பாவநீங்குமாறு ஸ்நா

னஞ்செய்து செபதபங்கள் முதலானவற்றையுஞ் செய்து பரிசுத் தராஞர்கள்.

பின்னர் உன்னை மனைவி முதலாயினோர் வெறுத்துக் கைவிட்டதையும் அப்பிராமணர்களுன்னைப் பாவியென்று கழித்ததன்றிநீசெய்யப்புகுந்த தருமத்தையு மேற்றுக்கொள்ளாமற் சென்றதையும், உன்னைப் பல துன்பங்கள் நேர்ந்து வாட்டுவதையும், நீயே எண்ணியெண்ணி யேக்கமுற்றுச் சகல ஆபத்துக்களையும் விலக்கி இரட்சிப்பவர் விக்கின கருத்த ராதலால், அக்கடவுளுடைய ஆலயத்தைக் கட்டுவிப்பதைவிட மேலான தருமம் ஒன்று மில்லை யென்று நிச்சயித்து, அதுவரையிற்பல துன்மார்க்க விஷயங்களாற் சேகரித்து வைத்திருந்த பொருள்களை யெல்லாம் எடுத்துக் கொண்டு பழுதுபட்டிருக்கின்ற விநாயக ராலயத்திற்கு மிகுந்த பத்தியுடன் வந்து, அவ்வாலயத்தில் அநாதியா யெழுந்தருளி யிருக்கின்ற கணேசமூர்த்தியைத் தரிசித்து உனது மனக்கவலை யெல்லாம் வாய் விட்டாற்றி, அநந்தமுறை சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, ஆனந்த பரவசமுற்று, ஆடிப்பாடி, சிறந்த கம்மியர் முதலாயினோரை வரவழைத்துச் சொன்னத்தாற் கர்ப்பக்கிருகஞ் செய்வித்து, அதன்முகப்பில் மாணிக்கமுதலிய இரத்தினங்களை யிழைப்பித்து அர்த்த மண்டபம், மகாமண்டபம், மடைப்பள்ளி, யாகசாலை, ஆகாயத்தை யளாவியுயர்ந்தமதில் முதலானவைகளை வெள்ளிமுதலிய உலோகங்களாலும், கருங்கல் - செங்கல் முதலியவைகளாலும், மரங்களினாலும், தெய்வகம்மியர்களுங் கண்டு நாணத் தக்கதாகச் செய்வித்து, நாற்றிசைகளிலும் நான்குகோபுரங்களையு மெழுப்புவித்து மாடவீதிகளேற்படுத்தி, வீடுகள் உப்பரிகைகள் முதலானவைகளை அணியணியாகக் கட்டுவித்து, ஆலயத்தி னாற்றிசையினு நான்கு தடாகங்களைத் தொடுவித்து பொன் வெள்ளி முதலானவைகளால் ஆலயத்திற்குவேண்டிய பாத்திரங்களைச் செய்வித்து, ஆதிசைவப் பிராமணர்களைக் குடியேற்றி, அவர்களால் விநாயகமூர்த்திக்கு அபிடேகமுதலிய ஆராதனைகளைச் செய்வித்து நாடகசாலையுண்டாக்கி, அதிற் சகல வாத்தியங்களையு முழக்குவித்து, கணிகைமாதர்களை நடிப்பித்து, யாழ் முதலியவைகளை வாசிப்பித்து, சொன்னத்தாற் செய்யப்பட்டு நவரத்தினங்களா லிழைக்கப்பட்டிருக்கின்ற வாகனங்கள் குடைகள், பல்லக்குகள், இரதங்கள் முதலானவைகளை வரவழைத்து, யாவருங் கண்டு அற்புதம்! அற்புத மென்று கொண்டாடத் தக்க திருவிழாக்களு நடப்பித்தனை, அரச! இவ்வாறு அளவற்ற

சிறப்புடன் பூசனைகளுந் திருவிழாக்களும் இடைவிடாது நடாத்தி வருகின்ற நாளையில், உன்னுடைய வாழ்நாள் முடிவெய்து இறந்து விட்டனை.

பின்னர், யமதூதருன்னைக் கொண்டுபோய்த் தங்களரசனெதிரேவிட்டார்கள். அவ்வரசனாகியயமதருமராசன் சித்திரகுப்பதனைக் கூவி, இவன் இதுகாறுஞ் செய்திருக்கின்ற பாவ புண்ணியங்களையெல்லாங்கிரமமாகச்சொல்லக்கடவையென்று ஆஞ்ஞாபிக்க, உடனே அவன்நீசெய்துவந்த துன்மார்க்கங்களையெல்லாந்தினவரலாறாகவெடுத்து மழைபெய்ததுபோல ஒன்றையும்விடாமற்சொல்லிப் பின்னுஞ் சொல்லுவான் தரும பூபதி! இவன் பிறந்த நாட்டொடங்கி இதுகாறுஞ் செய்துவந்ததெல்லாம் பாவமென்றும், அப்பாவத்தாற் சம்பாதித்ததிரவியங்களைக்கொண்டு அந்தியகாலத்தில் விநாயகக்கடவுளுடைய ஆலயத் திருப்பணி செய்தானென்றுஞ் சொன்னான் இவையனைத்தையும் யமதருமராசன் செவியுற்றுச் சற்று நேரமாலோசித்துப பஞ்சமலைகளில் ஓரழற்பொறி பட்டதுபோல, இவனிதுகாறுஞ்செய்துவந்த தீவினைகளனைத்தையும் விநாயகக்கடவுளின் ஆலயத்திருப்பணிசெய்து பெற்றபேற்றினாலொழிந்து போயின ஆயினும் இவன் பூவுலகின்கண் மீளவும் உற்பவிக்கவேண்டுமென்று யோசித்து ஒருநேரலென்று திரும்பி, உனது முகத்தைப் பார்த்துச் சொல்லுவான். நீ அளவிறந்த பாவங்களைச்செய்து உன்னந்தியகாலத்தில் ஓரற்பமானபுண்ணியமொன்றைச்செய்திருக்கின்றாயாதலால், முன்னர் உனக்குப் பாவத்திற்கேற்ற பலனையநுபவிக்கவேண்டுமா வென்று கேட்டான். அதற்கு நீ இளகிய நெஞ்சினால் முன்னர்ப் புண்ணியப் பயனை யநுபவிக்க வேண்டுமென்று சொல்லினை. அவ்வாறே யமதருமராசன் சம்மதித்து உன்னைப் போகும்படி உத்தரவு செய்தான். ஆதலால் நீ இப்பூவுலகததில் அரசனாகப் பிறநது நல்வினைப்பயனை முன்ன ரனுபவித்து, பின்னர் இவ்வியாதியாற் றீவினைப்பயனை யனுபவிக்கின்றனை. இத்தீவினைப்பயனு மொழியுமாறு நீ அவ்விநாயகக் கடவுளையே போற்ற வேண்டுமென்று சொல்லினர்.

முற்றத் துறந்து நிற்கு முனிவர்களே! காமந்த னென்னும்பெயரைப்படைத்தற் கேற்றபடி காமாந்தகாரனாகத்திரிந்து அளவற்ற பாதகங்களை நாடோறுஞ்செய்துவந்து, இறக்குங்காலத்திற்செய்த

வொரு புண்ணியத்தினால் அப்பாதகங்கள் குறைந்து பின்னிடப்
பெற்றாராயின், விநாயகக்கடவுளைச் சதாகாலமுஞ் சிந்திக்குந் தன்
மையை யுடையவர்கள் எவ்வளவு பேற்றைப் பெறமாட்டார்கள்.

இருவகைவினையுமுரைத்த படலம் முற்றிற்று.

---

# சோமகாந்த னோய்தீர்ந்த படலம்.

இருவினை பிருகு வென்போ னெடுத்தியம் பியது சொற்றா
முருவவார் சடையீர் மன்ன னுருக்கிளர் குட்ட நோயை
யருளினான் முனிவன் சீறி யகற்றிய தறிக வென்னத்
தெருளுறு சூத மேலோன் சிந்தையின் மகிழ்ந்து கூறும்.

முனிவர்களே! இப்பால் இவ்வளவுகருணையோடும்பிருகுமுனி
வரருளிச்செய்த வுண்மையிற் சோமகாந்த ராசனுக்குநிச்சயந்தோ
ற்றாமல் சந்தேகங்கொண்டனன் உடனே அவன் சரீரத்திலிருந்து
ஆயிரம் வலியன்பட்சிகள் தோன்றி வச்சிரத்தால் வடித்து வைத்த
தற் கொப்பா யிருக்கின்ற மூக்குகளினாற் றொழுநோய்கொண்டசரீ
ரத்தையெல்லாங் தந்தித்தசைகளை யெல்லாம் பிடுங்கித் தின்றன.
அதனால் அரசன்மிகவும்பயந்து அவ்வுபத்திரவத்தைச்சகிக்கக்கூ
டாது வருத்தங் கொண்டு பிருகுமுனிவருடைய பாதத்தில் அடிய
ற்றமரம்போல் வீழ்ந்து; ஓமேலான தவசிரேஷ்டரே! அபய மப
யம் அடியேனுக்குத் தேவரீரை யன்றி வேறு கதியில்லை அபய மப
யம் தேவரீரென்னைக் கைவிட்டாலும் உமது திருவடிகளை விட்டு
நீங்கேன் அபயமபயம், மகாதவக்குன்றமே! குளிர்ந்த கிருபாசமுத்
திரமே! ஓ தயாநிதியே! ஓ ஞானசூரியரே! ஓ புண்ணிய மூர்த்தியே
தேவரீரைத் தியானஞ் செய்கின்றபேர்கள் எவ்வளவு தூரத்திலிருக்
கினும் அவர்களை யமனுமணுகமாட்டானே; அத்தன்மைத்தான
தேவரீர் திவ்விய சமுகத்திற்கு எதிராகநிற்குமென்னை அவ்வலியன்
கூட்டங்கள் சின்ன பின்னப் படுத்துவதைப் பார்க்கவில்லையோ தே
வரீருடைய ஆசிரமத்தில் எக்காலமும் பறவைகளு மிருகங்களும்
பகையில்லாமல் உறவுபெற்று விளையாடுகின்றனவே, தேவரீருடைய
திருவடிகளைச் சேர்ந்திருக்கின்ற அடியேன் மாத்திரம் இத்துன்பத்
தை யடைந்திருப்பது நீதிதானோ? மகமேருவைச்சார்ந்த காகமும்
பொன்னிறமாகின்றதே, அடியேன்படுகிற துன்பத்தை நீக்கி யாட்

கொள்ளாதிருப்பது தேவரீருடைய கிருபைக்குத் தக்கதா என்றிவ்வாறு அனந்தமுறை ஓலமிட, அவ்வரசன் தேவியாகிய சுதன்மையானவள் திடுக்கிட்டுப் பிருகுமுனிவரைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து தேக மாத்திரந்தமும் நடுக்குற்று விழிகளினின்று நீர்த்தாரைகளைச் சொரிந்து இரண்டு கரங்களையு மேந்தி எங்கள் மனோரதங்களை ஈடேற்ற வெழுந்தருளிய தயாநிதியே! அடியாட்குமாங்கல்லிய பிச்சை தந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனள் இரண்டமைச்சர்களுங் கீழேவிழுந் துநமஸ்கரித்து, எமக்கு அன்னையும்பிதாவுமா யெழுந்தருளியகருணாநந்தமூர்த்தியே! அரசனைவலியன்பக்ஷிகளெல்லாங் கூடிவதைக்கின்றனவே, அவைகளைவிலக்கியாட்கொள்ள வேண்டாவோவென்று அரற்றினார்கள் அருகிலிருக்கின்ற மற்ற முனிவர்களும் பயந்து, ஆ ஆ சுவாமீ! இதென்னபாவம். இப்பக்ஷிகள் செய்யுங்கொடுமையைப் பார்க்க இரண்டு கண்ணுங் கூசுகின்றதே. என்றுமிகுந்த இரக்கத்தோடுந் துயருற்றுச் சொன்னார்கள் இவ்வாறு யாவரும்வருந்தி முறையிடப் பிருகு முனிவர் சோம காந்தராசனைப் பார்த்து, அரசனே! யாம் சொன்ன வார்த்தைகளை உண்மையென்று நம்பாமற் போயினை யாதலால் உனக்கு இத்தன்மைத்தான துன்பங்கள் நேர்ந்தன. இனியாயினும் யாம்கூறியவார்த்தைகளிற் சந்தேகமுறாமல் நம்பக்கடவாய். அதனால்நீயும்புனிதனாகலாமென்று மிகுந்த அன்புடன் அருளிச் செய்து, வலியன் பக்ஷிகளை நோக்கி ஒரு உங்காரஞ்செய்தனர். அவ்வோசையைக் கேட்டலும் பக்ஷிக ளெல்லாம் ஆகாயத்திற் பறந்து போய்விட்டன.

பின்னர் அரசனானவன் பிருகு முனிவரருளிச் செய்த தனது பூர்வவினைகளையெல்லாம் உண்மையென்று நம்பி ஆனந்தங் கொண்டனன். சுதன்மைமுதலிய யாவருந் தங்கள் தங்கள் துயர்நீங்கிச் சந்தோஷமானார்கள் இப்பால்பிருகுமுனிவர்தமது கமண்டலத்திற் சலத்தைநிரப்பி, விநாயகக்கடவுளை மனதிற் றியானித்து, இவ்வரசன் படுகின்ற வியாதியை விலக்கி யருளவேண்டுமென்று பிரார்த்தித்து, அவரது மந்திரத்தை நூற்றெட்டுருச் செபித்து அக்கமண்டலசலத்தைக் கரத்தில் வார்த்துக்கொண்டு அரசன் சரீரத்திற்றெளினார் உடனே அவ்வரசன்செய்த பூர்வசன்ம பாதகங்க ளெல்லாம் ஒன்றாகச்சேர்ந்து வோருருவங் கொண்டு நின்றதுபோலச் சிவந்து திரண்டுநீண்டிருக்கின்றகால்களும், நீண்டுநெருங்கிப்பரந்திருக்கின்றமயிர்சடைகளும், மேலெழும்பி வளைந்திருக்கின்ற கோரப்பற்களும்; நீண்டபாதங்களும், குழிபட்டிருக்கின்ற விழிகளும், இருளை

ப்போன்ற கறுத்த நிறமும், அகன்றவயிறும், ஏழுபனைமரங் கொண்ட உயரமும், அவ்வுயர்வுக்குத்தக்க பருமையுமாக ஒரு பூதமானது அவன் சரீரத்தினின்றும் வெளிக்கொண்டு நெறநெறவென்று பற்களைக்கடித்துக் கண்கள் புருவத்தின்மேலேற நெறித்து, விழிகளிலிருந்து தீப்பொறிக ளெழும்பிச் சிந்தத்தக்கதாகப் பார்த்துத தோள்களைத் தட்டிக்கொண்டு இடிமுழக்கம்போலக்குரலெடுத்துக் கூவி, அரசனே! முன்னாளிலே உன்னுடைய ஆயுதவல்லபங்களைக் காட்டினையே. அவ்வல்லபங்களை யிப்போதுகாட்டுவாய் பார்ப்போமென்று அதிக வுக்கிரத்தோடு வாய்விட்டுத் தருக்கியெதிர்த்துநின்றது. இவ்வாறு அப்பூதம் அரசனைத் தொடர்ந்து எதிர்த்து நிற்பதைப் பிருகுமுனிவர் கண்டு உங்காரஞ்செய்து பயமுறுத்தி, அரசனருகிற் செல்லவொட்டாமற்றடுத்துக் கையமர்த்தி, பாரிடமே! நீ யார்? உன்வரலா றென்னவென்று கேட்டனர். அதற்கது சொன்னதாவது சுவாமீ! நான் இவ்வரசனைப் பிடித்திருக்கின்ற பிரமகத்தி தேவரீர் கரங்கொண்டு தூவிய சலத்தினாலே யான் அவனை விட்டு வெளிப்பட்டுவந்தேன். எனக்குமிகப் பசியா யிருக்கின்றது. தேவரீர் கிருபையுண்டாயின், இந்நிமிடத்தில் இவ்வரசனையும் இவன் மனைவியையும் இரண்டமைச்சர்களையுந் தின்று செல்கின்றேனென்று சொல்லி உத்தரவு தரும்படிபிரார்த்தித்தது அதற்குப்பிருகுமுனிவர்வியந்து வலிமையிற்சிறந்த கிருத்திமமே! நீ அவசரப்படவேண்டாம் உனக்குஞ் சுகமுண்டாகுங் காரியத்தையே செய்கின்றோம். அதுகாறும் அம்மரத்தின் பொந்தினுட் புகுந்திருக்கக் கடவையென்று தம்மெதிரிலோங்கித் தழைத்திருக்கின்ற ஓர்மாமரத்தைக் கரத்தாற் சுட்டிக்காட்டினார். அவ்வாறே அப்பூதமானது பொந்தினுள் நுழைந்து புகுதலும் அப்பூதமும் மாமரமும் ஒன்றாகவெரிந்து சாம்பராயின.

பின்னர், அப்பூதசரீரத்தினுளிருந்த ஆன்மாவானது மகாதிவ்வியசரீரத்தோடும் ஒருதேவரூபமாகிப் பிருகுமுனிவருடையசரணாரவிந்தங்களில் நமஸ்காரம்புரிந்து கிருபாமூர்த்தியே! இப்பாவிமுற்காலத்தில் என்னை ஆயுதத்தால் மாய்த்துவிட்டான். அந்தத்துர்மரணத்தினால் ஒப்பில்லாமல் மிக்கதுயரத்தைப் பெற்றிருந்த வெனக்குத் தேவரீர் தரிசன விசேடத்தால் நற்கதிகிடைத்ததென்றுசொல்லிநிற்கும்போது, விநாயகமூர்த்தியினுடைய கட்டளையினால் ஆகாயத்தினின்றும், ஒரு தெய்வவிமானமிறங்க, உடனே அவ்விமானத்தில் தேவசரீரம் பெற்றிருக்கின்ற அப்புருடனைவனேறிக்கொண்டு

ஆகாயமார்க்கமாகப் போய்விட்டனன். அவ்வற்புதங்களையெல்லாங் கண்டு ஆனந்தபரவசராகித் தீவினைகளையெல்லாங் கடியவல்லபிருகு முனிவருடைய திருவடிகளைப்பலமுறை பணிந்து துதித்திருந்தார்கள். இப்பால்பிருகுமுனிவர் சோமகாந்தராசனைப் பார்த்து அரசனே! இதுகாறும் உன்னைத் தொடர்ந்திருந்த பிரமகத்திவிலகிப்போனதைக்கண்டனை. இனிஉனது சரீரத்தைத் தொடர்ந்திருக்கின்ற, தொழுநோய் நீங்குவதற்கான திறத்தையுஞ்சொல்லுவோங்கேட்கக் கடவாயென்று திருவாய் மலர்ந்தருளுவ தாயினர் அரசனே! மூன்றுநேத்திரங்களுள்ள வேழமுகப் பெருமானாகியும், என்னைமுழுமையும் ஆட்கொள்ளத்தக்க இறைவனாகியுமிருக்கின்ற விநாயகக்கடவுளுடைய புராணத்தைக்கேட்பையாயின் சகலதுன்பங்களும்உன்னைவிட்டொழியும். அன்றியும் யான் அப்புராணத்தை கேட்டிருக்கின்ற மகிமையினால் என்னையடுத்த உன்னுடைய தீவினையும் விலகிப்போயது இனி அவ்விநாயக புராணகதைக் கேட்டாலன்றியித்தொழுநோ யுன்னைவிட்டுநீங்காது அவ்வியாதிக்கு அதைவிடமேலாகிய ஔடதமொன்றுமில்லை மகத்துவமுள்ள இப்புராணத்தை முற்காலத்திற் பிரமதேவர் சிவபெருமானா லுபதேசிக்கப் பெற்று, வேதவியாசமுனிவருக் கருளிச்செய்தனர்

அவ்வேதவியாசர் நமக்குபதேசித் திருக்கின்றார் மேலும் பூர்வத்திற் கைலாசபதியாகிய சிவபிரானைநீக்கித் தக்கன்யாகஞ்செய்தபோது, அப்பரமசிவத்தினுடைய கோபாக்கினியினின்றுத் தோன்றிய வீரபத்திரமூர்த்தியினால் அவன் யாகமழிவுற்றுச்சகலதுன்பங்களையு மடைந்தனன் பின்னர் அவை நீங்குமாறு அத்தக்கன் முற்கல முனிவரை யடைந்து அவர் திருவடிகளைப் பணிந்துபத்திசெய்து வந்தனன். அதனால அம்முனிவருக்கு மனமிரங்கி விநாயகருடையமகத்துவங்களை யுபதேசித்தனர் அவைகளை அத்தக்கன்மிக்கபத்தியுடனேகேட்டு வந்த பலத்தினாலே சகல துன்பங்களுநீங்கிச் சந்திரசடாதரக்கடவுளாகிய சிவபெருமானது கிருபைக்குப் பாத்திரனாகி, அதிக மகிழ்ச்சியை யடைந்திருந்தான். ஏழு பிறவிகள் தோறுஞ் செய்து வந்த பாவங்களை யெல்லாம் ஏககாலத்தி லொழிப்பதும், சரீரத்தி லுண்டான வியாதிகளைப்போக்கி வேண்டியவரங்களை யளிப்பதும், நாளுக்குநாள் நூதனமான உயர்ந்த சுகங்களைத் தருவதும், இம்மையிற்றவங்கள் முதலியவைகளைச் செய்யும்படி கூட்டுவித்து மறுமையில் முத்தியைக் கொடுத்து இரட்சிப்பதும், அவ்விநாயகமகத்துவத்தின் கேள்வியேயன்றி அதனின் மிக்கது வே

றென்றுண்டோ? அந்தணர், அரசர், வைசியர், சூத்திரர் என்னும் நால்வகைவருணங்களுக்குங்கூறியிருக்கின்ற * ஒழுக்கங்களிற்றாழ் வில்லாதவர்களாகியும், பிரமசாரி இல்வாழ்வோன்-வானப்பிரத்தன்-சந்நியாசி எ ன்னு நால்வகை யாச்சிரமங்களுக்குமுரியவாகச்சொல் லப்பட் டிருக்கின்ற ‡ நன்னிலைகளிற் றவறாதவர்களாகியும் உள்ள சான்றோர்களே அவ்விநாயக மகத்துவத்தைப் பத்தியோடு கேட் பார்களன்றி மற்றையர்கள்கேட்கமாட்டார்கள். கேளாதவர் தங்கள் பிறப்பினும் வருணத்தினுஞ் சரியாகநின்று என்ன வொழுக்கத்திலி ருந்தாலும் அவர்கள தாழ்ந்தவர்களே யன்றி உயர்ந்தவராகார்கள்.

ஆதலால் அநேக தவங்களைச் செய்து உயர்ந்தவருணத்திலும் நல்ல ஆச்சிரமத்திலு மிருந்து அவர்களுடைய தருமங்களிற் குறை வின்றி நடந்து விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளை மிகுந்த அன்போடு துதிசெய்யத்தக்கவர்களுக்கே அம்மான்மியத்தை யுப தேசிக்க வேண்டுவதல்லது, மற்றையோர்க்கு உபதேசிக்கத் தக்க தன்று. நீயதனைக்கேட்பதற்கு யோக்கியனானதால் அதனையுனக்கு பதேசிக்கின்றோம் நீஸ்நானஞ்செய்துவரக்கடவையென்று ஆஞ்ஞா பித்தனர். இவையனைத்தையுஞ் சோமகாந்தராசன் செவிக்கமுத மாகக்கேட்டு, ஆனந்த பரவசங் கொண்டு, உடனே பிருகுதீர்த்தத் தையடைந்து அதை மும்முறை வலம்வந்து நமஸ்கரித்துப் பின் னர் ஸ்நானஞ்செய்து, நித்திய நியமாதிகளைக் கிரமப்படி முடித்து, விநாயக மகத்துவங் கேட்பதற்குச் சங்கற்ப மோதினன். அந்நேரமி டத்தில் அவ்வரசன் சரீரத்தி லிருந்த தொழுநோய் மாய்ந்து விட்

* அந்தணரொழுக்கமாவது:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித் தல், ஈதல், ஏற்றல் எனவாறும். அரசரொழுக்கமாவது:—ஓதல், வேட்டல், ஈதல், உலகோம்பல், படை பயிற்றல், பொருதல், எனவாறும். வைசிய ரொ ழுக்கமாவது:—ஓதல், வேட்டல் பொருளீட்டல், ஈதல். பசுக்காத்தல், ஏரு ழூல் எனவாறும் சூத்திரரொழுக்கமாவது:—ஓதல், முன்னவர்க் கேவல்செய் தல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், வேட்டல், எனவாறும்.

‡ பிரமசரிய நிலையாவது:—ஆசரியரிடத்தோதி, விரதங்காத்து விவாக மின்றி யிருத்தலும், விவாகஞ்செய்துகொள்ளலுமென விருவகையர். அவர் முறையே நைட்டிகன், உபகுருவாணன் எனப்படுவர். கிருகத்த நிலையாவது இல்லறத்தின் வழாது இல்லாளோடுங் கூடிவாழ்தல் வானப் பிரத்த நிலையா வது இல்லந்துறந்து இல்லாளோடாயினுந் தனித்தாயினும் வனத்திற் றவஞ் செய்தல் சந்நியாசநிலையாவது முற்றத் துறத்தல், இவற்றின்விரிவுகளையெல் லாங் கூர்மபுராணத்திற் காண்க.

டது. இவ்வாறு வியாதி மாய்ந்து போகலும், அரசன் தனதுசரீரத்தைப் பலமுறை பார்த்து ஆனந்தித்து இரவெல்லாந் தீயசொப்பனங் கண்டவனுக்கு விழித்தபின்பு எவ்வளவு மகிழ்ச்சியுண்டாமோ அவ்வளவு மகிழ்ச்சியை யடைந்து பிருகு முனிவரிடத்தில் வந்து அவரைச்சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்துசுவாமீ! தேவரீர்கிருபை அடியேற்குக் கிடைத்ததினுலே அடைதற்கரிய பலன்க ளெல்லாம் எளிதிலடையப் பெற்றேன்

அன்றியுஞ் சுவாமிகளிடத்தில் புராணங்கேட்பதற்குச் சங்கற்பமோதிய மாத்திரத்தில் அடியேனை வருத்தியிருந்த வியாதியொழிந்து போய்விட்டது இவ்வற்புதத்தினை யான் என்னென்றுசொல்ல மாட்டுவேன். கிருபாமூர்த்தியே, தேவரீரை யடுத்தவர்கட்குக்கிடைக்காதபொருள் சுவர்க்கமத்திய பாதலமென்கின்ற மூவுலகங்களினுமில்லை. ஊரற்று, உறவற்று, மகனற்று, மனையற்று, நாடற்று, நகரற்று, அழகான தேகமற்று, அருமையான போகமற்று, தடாகக்கரையிற் றுன்புற்றிருந்த எளியேனை இங்ஙனம வருமாறுகிருபைசெய்து மகா அற்புதமான சுகத்தைக் கொடுத்தருளிய தேவரீருக்கு யானுதவத் தக்கபொருள் என்னுவியே யன்றி வேறொன்றுமில்லை. இனிமேல் சுவாமிகள் அருள்சுரந்து விநாயக புராணத்தைத் திருவாய் மலரவேண்டு மென்று பிரார்த்தித்தனன் அதனை யன்னைக் கொப்பாகிய பிருகுமுனிவர் கேட்டு மனமிரங்கி, அவனை யருகிலழைத்துத் தமது தாமரை மலர்போன்ற திருக்கரத்தினல் அவனுடைய சரீரத்தைத் தடவித்தமது சிறந்தஆசனத்தி லொன்றை யவனுக்குக்கொடுத்து அதில் வீற்றிருக்கச் செய்தனர். பின்னர் அப்பிருகுமுனிவருடையதிருக்கரத்தாற் சரீரத்தைத்தடவிய மகத்துவத்தினும் அவராதனத்தினுலிருந்த மாட்சிமையினுலும், அவ்வரசன் சரீரமானது முன்னிருந்தகாந்தியினு மிகுந்தகாந்தியை யுடைத்தாயது அவ்வற்புதத்தைக் கண்டவர்களெல்லாம் அதிக ஆச்சரியம் அடைந்தார்கள். துக்கசாகரத்தின் மூழ்கியிருந்த சுதன்மையும் அமைச்சர்களும் தேவாமிர்தம் புசித்தவர்கட் கொப்பாக ஆனந்தித்தார்கள்.

சோமகாந்த னேய்தீர்ந்த படலம்

முற்றிற்று.

# வியாசமுனி

# பிரமதேவனை யடுத்தபடலம்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

என்று சால மொழிந்த சூதன் வியாத னென்னு மிருந்தவற்
கன்று வேத னுரைத்த வாறறி வாயெ னப்பிரு குப்பெய
ரொன்று மாமுனி சோம காந்த னுவப்ப வோதிய வண்ணமே
நன்று றும்வர லாற்றி னோதுத னாடி னானரு ளீடினான்.

சௌநகாதி முனிவர்களே! இப்பால் பிருகு முனிவர் கிருபைகூர்ந்து அரசனே! முன்னொரு காலத்தில் சுவர்க்க மத்திய பாதலங்களில் அமர்ந்த பிராணிகள் செய்த பிராரத்துவ கன்மசம்பந்தத்தினால் அளவுபடாத வேதங்களனைத்தும் ஆதியந்த பதக்கிரமங்கள் தடுமாறிச் சிந்தின அக்காரணத்தினால் விண்ணவர், தவத்தர், மானிடர் முதலாயினோர்க்கு அறிவு விளங்காமல் வேதவாய்மைகளினின்றும் மாறிப் பல துராகிருதியங்களை யநுபசரித்து அதற்கடுத்த சில மோகன சாத்திரங்களை யுண்டாக்கிப் பூவுலகத்தின்கண் முக்கியமாக வழங்குகின்ற தருமங்களனைத்துங் கொடிய பாசபந்த வினையென்று நீக்கிப பாதகங்களுக்கேதுவாகிய மார்க்கங்களை உறுதியாக வெண்ணிச் சகலரு மவைகளைத் தொடர்ந்து செய்து வந்தனர் அதை விண்டுவும் பிரமனுங் கண்டு பரமசிவ கடாட்ச மில்லாது இந்த மாறுபாடு நீங்காதென்று நிச்சயித்து இந்திரன் முதலான தேவர்களுடன் திருக்கைலையைச் சேர்ந்து முதல் வாயிலிற் றமதாணையைச் செலுத்திக் கணங்கள் போற்ற வீற்றிருக்கின்ற நந்திதேவரைப் பணிந்து எங்கள் வரவைச் சிவபிரானுக் கறிவிக்கவேண்டுமெனப் போற்றினர். அதற்கவர், கிருபைகூர்ந்து அவர்களை யவ்விடத்தில் நிறுத்தி, கர்த்தன் றிருச்சந்நிதானத்திற் சென்றுவணங்கிக் கேசவன் முதலாயினோர் வரவை விண்ணப்பஞ்செய்து அநுமதிபெற்றுவந்து, உங்களைச் சபைக்கு அழைத்துவருமாறு பரமசிவங் கட்டளையிட்டருளினரென்றனர் அவ்வுறுதிமொழியை அவர்கள் அமிர்தமாகக் கேட்டு ஆனந்த பரவசராய்ச் சிவகணங்கள் காவல்கொண்டிருக்கும் பலவாயில்களைக் கடந்து திரிநேத்திர தாரியாகிய சிவபெருமானைத் தரிசித்தவுடன் விழிகளில் ஆனந்தவாரி பெருக, திருவடிகளிற் கற்பகமலரைச் சொரிந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்துப் பலமுறை போற்றிக் கரங்களைக் கூப்பிக் கர்த்தன் கிருபாநோக்கத்தைப்பெற்று, கட்டளையிட்டவாறே தத்தமக்குரிய விடங்களிலிருந்தனர்.

பின்பு சிவபிரானவர்களைநோக்கி, நுங்கள் செய்கைகள் குறைவற நடந்துவருகின்றனவா வென்று வினவ, கேசவன் எழுந்து துதித்துத் தேவரீர் திருவுளப்படிக்கு அடியேங்கள் விருத்திகள் சிதைவின்றி முற்றுகின்றனவாயினும் பூமியின்கணிராநின்ற தபோதனர் முதலாயினோர் சிலமோகனசாத்திரங்களிற் பட்டுத் தேவரீரைப்பரமென நினையாது தமது கட்டளையின்படி நடாத்தி வருகின்ற என்னையும் பிரமனையுங் கடவுளாகக் கருதித் தொழுகின்றனர் சிலர் மற்றைய தேவர்களுடன் தேவரீரைச் சமமாகத் துணிவுற்றிருக்கின்றனர் சகல கருமங்களைக் கடந்த ஆதிமூர்த்தியுமுண்டோவெனச் சிலரவமதிக்கின்றனர் கடவுள் வேறில்லை நாங்கற்ற சாஸ்திரவுணர்ச்சியே நித்தியமெனச் சிலர் பாவிக்கின்றனர் சிலர் ஆகமவிதிப்படி விபூதி உருத்திராக்கங்களணிவதை மறந்து தங்களுக்கிஷ்டமான குறிகளைத் தரிக்கின்றனர் சிலர் உண்ணல், உடுத்தல், புணர்தல், களித்தலென்னும் இவைகளன்றி வேறொரு முத்தியுமிருக்கிறதென்பது அஞ்ஞானமெனவும் நினைக்கின்றனர். இவ்வாறு பற்பல விதங்களிற் சகலருமுயன்று பிறவிச்சாகரத்தைக் கடக்குமுண்மையினை யறியாது உழன்று வேதாகம வரம்பைக் கடந்து பலநெறிகளை முக்கியமாகத் தொடர்ந்து தீவினைகளிற் படர்ந்து அலைந்து மயங்குகின்றார்கள். இவைகளனைத்துந் தேவரீர் திருவுள்ளத்திற்கு விளங்கியிருப்பனவாயினும் அடியேங்கள் அறிந்தவாற்றை விண்ணப்பஞ்செய்தனம். இதனைத் திருவுளத்திற்கொண்டு எங்களுக்காக இரக்கமுற்றுச் சீவராசிகள் மையலைநீக்கி முமுட்சுக்களாய்த் தேவரீர் பாதகமலங்களைக் கருதி மோட்சவீட்டினைச் சேருதற்குக் கிருபை செய்யவேண்டுமென்றிரந்தனர்

அவைகளனைத்தையும் எமது கர்த்தன் செவிசாய்த்து விண்டுவே! உனது கலைகளில் ஒன்றைக்கொண்டு பூமியின்கணவதரித்துப் பலவாறு மாறுபட்டிருக்கின்ற வேதங்களைச் சேகரித்து அவைகளை நான்குவகைப்படுத்தித் தகுதியான இருடியர்களுக்கு அவைகளைப் போதித்து அவ்விருடியர்களால் ஆன்மகோடிகளது சிற்றுணர்வை மாற்றிப் புனிதராக்கக் கடவை அன்றியும் அவைகளை யோதப்பெறாத சூத்திராதியர்கள் எளிதின் முத்திபெறத் தக்கதாகவே தங் கட்டுமுறை விதிக்கப்பட்டதாய் * ஆகமமென்று பேருள்ள ஒரு

* சிவாகமம் இருபத்தெட்டாவன:—காமிகம், யோகசம், சிந்தியம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரமம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சர்வோத்தம், சந்தானம், சந்திரஞானம், புரோற்கீதம், இலலிதம், சித்தம், முகவிம்பம், பாரமேசுரம், கிரணம், காரணம், விசயம், வாதுளம் என்பனவாம்.

சாத்திரமிருக்கின்றது அஃது நமதுபெருமைகளையே முக்கியமாக விளக்கும். மேலும் வாசித்தவர்களைப் பவித்திரமாக்கவல்ல பதி னெண் புராணங்களுள் அவைகளை நந்திக்கருளி யிருக்கின்றனம். அவன் சனற்குமாரனுக்குவரன்முறையாகப்போதித்திருக்கின்றான். அவனிடத்து அப்புராணங்களை யுணர்ந்து சகலருக்கும் ஓதி அறிவுவிளங்கச் செய்யக் கடவையென்று அநுக்கிரகஞ்செய்ய, அதற் கிசைந்த விண்டுவானவர் பிரமன் முதலானவர்களுடன் கர்த்தனை வணங்கி விடைபெற்று வைகுந்தத்திற்சென்று, யாவருக்கும்விடை கொடுத்தனுப்பிச் சிலகாலஞ்சென்றபின்பு பூமியின்கண் தவமகிமை யையுடைய பராசரமுனிவர் ஒருதினம் பிராதக்காலையிற் கங்கை யைக்கடக்க ஓடமேறினவராய், அதைச் செலுத்து மச்சகந்தியி னது சுந்தரத்தைக்கண்டு மோகித்து அவளைச் சம்மதப்படுத்தி யோசனைகந்தியாக்கிப் புணர, அக்காலத்தில் அவளுடையகருப்பத் திற் பிரவேசித்துத் தண்டகமண்டலத்துடன் அவதரித்து, அவர்க ளிடத்திற் செலவு பெற்றுச் சென்று வதரிகாச்சிர மென்னும் வன வாசமே யோக்கியமென் றெண்ணி அவ்விடத் தமர்ந்தார்.

அக்காரணத்தினு லவர் வாதராயணரென்னுந திருநாமம்பெற் றுப் பரமசிவகடாக்ஷத்தினுல்வேதாகமங்களையொருவரிடத்தோதா துணர்ந்து, அவ்வேதத்தை நான்குவகைப்படுத்தினர் அச்செய்கை யினுல் * வேதவியாசரென்னு நாமமும்பெற்றுச் சனற்குமாரரிடத் திற் பதினெண் புராணங்களையும் வாசித்துணர்ந்து பின்னர் வேத சாத்திரங்களைப் போலவும் மிருதியைப் போலவும் பொருள் படத் தக்கதாக விளங்கி யிருக்கின்ற அப்புராணங்களைச் சுலோகமாகச் சொல்லுவதற்கு ஆரம்பித்தனர். அப்போது முன்னர்ச் சிவபெரு மான் சகலதேவர்களும் புடைசூழ்ந்துவரத் திரிபுரசங்காரஞ் செய் யப் பிரயாணமான காலத்தில் அவர் தம்மைப்பூசியாது பிரயாணங் கொண்டதனுல், அவரதுதேரை முரிந்துபோகும்படி செய்த விநா யகமூர்த்தியை நினைக்காமலும் யாவரும் வழிபடத்தக்க கடவுள் அவரேயென்றும், ஒருவர் தம்மைக்கருதி யெடுத்துச் செய்கின்ற காரியங்களை விக்கினமின்றி நிறைவேற்று விக்குந் தெய்வ மவரே யென்றும், அழிவினுக் கழிவுசெய்யுங் கர்த்தர் யானை முகத்தை

---

* வேதவியாசர்=வேதங்களை நான்காகப் பிரித்தவர். வியாசம் - பிரித் தல், வியாதர் பிரித்தற்கு முன்னர் தைத்திரீயம், தலவகாரம், சாமம் பௌடி யம், எனப் பெயர்பெற்றிருந்தது.

யுடைய விக்கினேசுவரரே யென்றும், எவ்வளவுந் தன்மனத்திற் றெளியாமலும் ஆரம்பித்தார்.

அக்காரணத்தால் அவருத்தேசித்த காரியத்திற்கு அவ்விக்கின கர்த்தருடைய கிருபையில்லாமல் எண்ணியபொருள்களொன்றுந்தோன்றாமலும், நடக்கவேண்டுவது இன்னதென்று தெரியாமலும், ஊமைக்கொப்பாகி மயங்கி நமக்குச் சோக முண்டாயதோ பித்தமுயர்ந்ததோ, அல்லது மற்றெதினாலாயினு மயக்கம் வந்து நோந்ததோ வென்று தெரியாமற் சத்தியலோகத்திற்சென்று பிரமதேவனை அட்டாங்கமாக வணங்கிப பலமுறை வந்தித்து நின்றனர். பிரமன் அவ்வேதவியாசருக்கு ஓராதனந்தந்து நீரிங்கு வந்தகாரியமென்னென்று வினவ, சுவாமி! பிரபஞ்சத்தின்கண் சிலர் கடவுளில்லையென்று சொல்லுகின்ற நாஸ்திகராகியும், சிலர் வேதங்களைப் பழிக்கின்றவர்களாகியு மிருந்து அவ்வவர்கட்குரிய வருணாச்சிரம தருமங்களைத்தள்ளி நிலைகுலைந்திருப்பதினாலே, அவைகளையொழித்துச் சீர்திருத்தவேண்டியது. இன்னபொருளாலென்று யோசித்து, அவ்வவர்செய்யுங் காரியங்களில் இது செய்யத் தக்கதென்று அறிந்து நடந்து நற்கதியினை யடையுமாறு உண்மையாய் விளக்காநிற்கும் புராணங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல யாவர்க்குந் தெளிவாய்த் தெரியும்வண்ணஞ் சொல்லவேண்டு மென்று ஆரம்பித்தேன். நித்தியவிதி, நைமித்திகவிதி, விவாகநிதி முதலான சகலவிதிகளும் நிறைந்திருக்கின்ற மகா வேதசாகைகளில் மேன்மேலும் வளர்ந்தேறி யிருக்கின்ற என்புத்தியானது மழுங்கிப்பித்தங்கொண்டவனைப்போ லாயினேன் இதற்கென்னசெய்வேன். யாருகென்ன பிழைசெய்தேனோ? அதனையுந் தெரிகிலேன். என்னை மூடியிருக்கின்ற இவ்வறியாமை யென்னை யகலும் மார்க்கத்தைத் தேவரீர் சொல்லியருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர்.

அவை யனைத்தையும் பிரமன் கேட்டுச் சிறிதுநேரந் தியானித்திருந்து, நடந்த விசேடங்களைத் தெரிந்துகொண்டு புன் சிரிப்போடும் வேதவியாசரைப் பார்த்து இதனைச்சொல்லுவாராயினர். அநாதியாகியும் அமலமாகியும் அகண்டானந்த ரூபமாகியு மிருந்து, அழிவினுக் கழிவுசெய்யத்தக்க விநாயகக்கடவுளது கிருபை யில்லாவிடில் எவ்வகைப்பட்ட புத்தியும் வல்லபமும் உடையவராயினும் ஈடேற்றமாட்டாது, சோர்வுற்றுப் போவார்கள். விநாயகக்கடவுளை முதலிற் றுதிக்காமல் அளவற்றபேர்கள் தாங்களெடுத்த காரி

யங்களெல்லாங் கைகூடாமல் இகழ்வடைந்தார்கள். பறவைகளுக்கு அரசனாகிய கருடன் முற்காலத்தில் அமிர்தங் கொண்டு வருவதற்காகச்சென்று கோபத்தினாலும் அகங்காரத்தினாலும் ஐங்கரக்கடவுளை யகத்திற் றியானிக்காமையால், திருமால் ஒரு சொல்லைக் கொண்டு வாகனமாக்க அவரடிக்கீழ்நின்று இன்னமுஞ் சுமந்துதிரிகின்றான். உருத்திரக் குரிசிலின் வீரியத்தினின்றுந் தோன்றிய அநுமனானவன் அவனை முதனினைக்காமையால் முத்தியடையாது, இராமனைச் சுமந்து திரிகின்றான் ஸ்ரீராமனும் முதலில் வாலியுடன் எதிர்த்து யுத்தஞ்செய்யச் சத்தியின்றி யொடுங்கி நின்றனன்.

பிரணவத்தை முதலாகவுடைய வேதங்கட்கு நீர்வாம்பு செய்தபோது அப்பிரணவத்தை முன்னே உச்சரிக்காமல் வேதமோதுவது வழக்கின்மையாதலினால், பிரணவப் பொருளா யிருக்கின்ற விநாயகர் தம்மை அப்பிரணவத்தினாலே நீர் தோத்திரஞ் செய்ததாக வுட்கொண்டு இடையூறுகள் சேரவொட்டாது காத்திரட்சித்தார். விநாயகமூர்த்தியினுடைய வுருவமும் ஓமென்கிறசொல்லாகவிருந்து சகல இடர்களையுந் தீர்க்கத்தக்க தாகலால் ஆதியில் மகேஸ்வரர் வேதத்தைச் சொல்லுவதற்கு ஆரம்பித்த காலத்தில் தாமெடுத்த காரியம் முழுவதுங் கைகூடவேண்டு மென்றே அப்பிரணவத்தை முதலில்வைத்துப் பின்பு வேதங்களை யோதினார். இஃதன்றியும் சகலருந் தாங்கள் முயல்கின்ற மகாகாரியங்கட்கும் இவ்வோங்காரரூபியாயிருக்கின்ற விநாயகமூர்த்தியைமுதலிற்றானே தோத்திரஞ்செய்யவேண்டிய நிமித்தமே யாவையுமுணர்ந்த பெரியோர்கள் முதலில் எல்லா மந்திரங்கட்கும் இவ்வோங்காரமந்திரத்தையே வைத்திருக்கின்றார்கள் அவன், அவள், அதுவென்னும் ஆண், பெண் அலியென விருந்துயாவையுஞ்செய்துமுடிக்கின்றவரும், தம்மைதியானித்தவர்களுக்கெல்லாம் அநுக்கிரகஞ் செய்கின்றவரும், அவ்வவர்கள்மனத்திற்கெட்டாத அரும்பொருளா யிருக்கின்றவரும், வேதங்களாலும் அளவிட்டுரைக்கக் கூடாதவரும், இந்திரனும் பிரமனாகியயானும்விண்டுவும் உருத்திரரும் மற்றுமுள்ளதேவர்களும் அக்கடவுளுடைய ஆக்கினையைக் கடக்கமாட்டாமல் அவருடைய பாததாமரையைத் தோத்திரஞ் செய்து தொழும்படியாகத் தலைமைபெற்றதெய்வமாகியிருக்கின்றவரும், ஒன்றைச் செய்பவரும், ஒன்றைவிலக்குபவரும், ஒன்றைவிட்டு மற்றொன்றை முடிப்பவரும், தம்மைக் கருதாதவர்களுக்கு இடர் செய்பவரும் அவ்விநாயகக் கடவுளேயன்றி வேறொருவரில்லை. ஆதலால், அத்தன்மையான முதற் கடவுளை நீ மனத்

தால் நினைக்காமலும், வாயால் வாழ்த்தாமலும், காயத்தால் வணங்காமலும், நமக்கொருவர் நிகரில்லையென்கின்ற வித்தியாகர்வத்தினால் உனது சுயவதிகாரமாகப் புராணஞ் சொல்லுவதற் காரம்பித்தனை. அதனால் இவ்வளவு துன்பங்கள் வந்து சேர்ந்தன. இனிமேலும் வேழமுகத்தையுடைய விநாயகக் கடவுளைத் தோத்திரஞ் செய்து, பரம கருணாநிதியே! சர்வஞ்ஞ மூர்த்தியே; பரமாநந்தசொரூபியே! யான்செய்த அபசாரத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று பூசை செய்யக்கடவாய். அவ்வாறுசெய்யாமல் உனது சுயாபேட்சையால் ஒரு புராணத்தைச் செய்யத் தொடங்குவையாயின் ஆயிரங்கோடி கற்பகாலமாயினும் ஒரு பாயிரமேனுஞ் சொல்லி முடிக்கமாட்டாய். அன்றியும், அவருடைய மந்திரங்களாகிய,

சுமுகரே யேக தந்தரே கபிலர் குஜ்கச கன்னரே நாக
மிமிழ்தரு மிலம் போதர ரெழில் விகட ரிலகிய விக்கினராச [யக்க
ரமைவர்சூழ்ந் தேத்துங் கணாதிபர் தூமகேது நன்றருள் கணாத்தி
ருமிமொழிப் பால சந்திர னானை யூற்றிருந் தெழுங்கசா னனரே.

வக்கிர துண்டர் வங்கிய சூர்ப்ப கன்ன ரேரம்பர் வான்வ ரங்க
டொக்கருள கந்த பூர்வச ரெனவே சொல்லிய பெயர்பதி னாறு [ச
மிக்குரைத்திடினுங் கேட்பினும்வித்தைவிவாகம்வேட்டெழும்பிரவே
நிக்க மடுபோர் யாகமா திகளு நினைக்குமுன் முற்றுறும் பிள்ளாய்.

ஓம் சுமுகாயநம:, ஓம் ஏகதந்தாயநம:; ஓம் கபிலாயநம:, ஓம் கஜகர்ணிகாயநம:, ஓம் லம்போதராயநம:, ஓம் விகடாயநம. ஓம் விக்கினராஜாயநம:, ஓம் கணாதிபதியேநம', ஓம் தூமகேதுவேநம:, ஓம் கணாதியக்ஷாயநம:, ஓம் பாலசந்திராயநம:, ஓம் கஜானனாயநம:, ஓம் வக்கிரதுண்டாயநம:, ஓம் சூர்ப்பகன்னாயநம:, ஓம் ஏரம்பாய நம:, ஓம் ஸ்கந்தபூர்வஜாயநம என்கிற சோடநாமங்களை மாத்திரம் முதலில் வாக்கினால் வசனித்தாலும், செவியாற் கேட்டாலும் வித்தை, விவாகம், சுபம், சோபனம், யாகம், யுத்தம் இவை முதலான சகல காரியங்களும் நினைக்கு முன்னரே கைகூடும். ஆதலால் அவ்விநாயகக் கடவுளைப் பூசனைசெய்து உமதறிவை மறைந்திருக்கின்ற மயக்கத்தைத் தீர்த்துக் கொண்டு நீரெடுத்த காரியத்தை நிறை வேற்றிப் புகழுடையக் கடவீரென்று சொற்றனர் என்று பிருகு முனிவர் சோமகாந்த ராஜனுக்கு உபதேசித்தனர்.

வியாசர் பிரமனை யடுத்த படலம்

முற்றிற்று.

## வியாசர்

# உபதேசம் பெற்ற படலம்.



இதுமலர்த் தவிசன் வீற்றிருந் தருளு மிறைவனை வியாதமா முனிமுன், கதுமெனவடுத்த வாறினிச்சோம காந்தனை யான்முனி தனக்கு, விதுவணி சடிலத் தைங்கரப் பெருமான் வியத்தரு மந்திரஞ் செவியின், வதிதரப் புகன்ற மரபுமே வென்று வழங்குவன் பிருகுமாதவனே.

சூதமுனிவர் சொல்லுகின்றார். முனிவர்களே! பின்னு மவ்வரசனைப்பார்த்துப் பிருகுமுனிவர் கூறியவை யென்னென்றால், வேந்தனே! வேதவியாசர் இவ்வளவும் உண்மையேயென்று மனமகிழ்ந்து மீட்டும் பிரமதேவரைப் பணிந்தெழுந்து சுவாமி! பிரணவ ரூபமாயிருக்கின்ற அக்கணபதி மூர்த்தியைப் பூசனை செய்யத்தக்க முறைமை யெவ்வாறென்று கேட்டனர். அதற்குப் பிரமனிசைந்து வியாசமுனியே! கணேசாகமத்திற் சத்தகோடி மகாமந்திரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தச் சத்தகோடி மகாமந்திரங்களினும் சடாக்கர மந்திரஞ் சிறந்ததாகும் அச் சடாக்கர மந்திரத்தினும் ஏகாக்ஷர மந்திர மேலாயதாகும். அவ்வேகாக்ஷர மந்திரத்தை உனது மையல் நோய் நீங்கும்படியாகச் சொல்லுவோம் நீ தடாகத்திற் சென்று ஸ்நானஞ் செய்து வருவாயாக வென்றனர். அவ்வாறே ஸ்நானஞ்செய்து வந்தவுடன் பிராமணருக்கு ஆகமவிதிப்படி செய்யுந்தீட்சை முதலியவைகளைச் செய்து அவ்வேகாக்ஷர மநுவை யுபதேசித்து அம்மகாமந்திரத்தைத்தியானிக்கும்படி தியானமுறைமையுந் தெருட்டிப் பின்னுஞ்சொல்லுவார். பராசரன மைந்தனே! ஊறுபாடில்லாத உத்தமத்தானத்திலிருந்து மந்திரஜலத்தினாற்புரோக்ஷித்துப் *பூதசுத்தி முதலானவைகளைச்செய்து, அகம்புறமாகியவிரண்டினுள்ளும் †நியாசஞ்செய்து ‡பிராணாயாமத்தி லிருந்து இம் மந்திரத்தைத் தியானிக்கக்கடவாய். இம்மந்திரஞ் சித்தியாக வேண்டுமெனில், இதற்குரிய கணேசமூர்த்தியினது திருவுருவத்தை யெல்லா மனதிற் றியானித்து அந்தரியாக பூசை செய்யக்கடவாய்.

* பூதசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி, திரவியசுத்தி, ஆன்மசுத்தி என்பனவாம். † நியாசம் அங்கத்தைத் தொடுதல் ‡ பிராணாயாமம்-பிராணவாயுவை, ஆயாமம் தடுத்தல். § நாத்திகராவார் கடவுளும் புண்ணியபாவமுஞ் சுவர்க்க நரகமும் இல்லையென்போர்.

# வியாசர் உபதேசம்பெற்ற படலம்.

இவ்வாறு தினந்தோறும் பூசனைசெய்து மேற்சொன்ன மந்திரத்தை உமது சத்திக்குத்தக்க உருச் செபித்துக்கொண் டிருப்பீராயின் எங்கும் பரிபூரணமா யிருக்கின்ற விநாயக மூர்த்தியானவர் உன்னெதிரி லுருவங்கொண்டு அநந்தகோடி சூரிய ருதயமானது போலப் பிரத்தியக்ஷமாகிச் சோதிமயமா யிருக்கின்ற தமது தரிசனத்தைக் கொடுத் தருளுவர். நீ அப்போது மனவுறுதி பெற்று மிகுந்த அன்பு பொங்கத துதித்து நமஸ்காரஞ் செய்து சுவாமி! அடியேன் மீது கிருபை புரிந்து இரட்சிக்க வேண்டு மென்று பல முறைவந்திப்பா யானால் சேய்க்குத் தாயிரங்குவதுபோல உனது தோத்திரங்கட்கு மனமிரங்கி அருள் சுரந்து நீகேட்ட வரங்களை யெல்லாம் வரையாது கொடுத்தருள்வர் இவ்வாறு பூசனை செய்து இம்மந்திர சித்திபெற்றவர்கள், சகல வியாதிகளும் நீங்கத்தாங்கள் முயன்ற கருமங்களெல்லாம் இடையூறின்றி நிறைவேறப் பெற்று அங்கை நெல்லிக் கனிபோல அளவற்ற சித்திகளையடைந்து ஆணவ மலசம்பந்தத்தையொழித்து, அருள் வடிவாயிருந்து, சீவன்முத்தியென்கின்ற மேலான பேற்றினையடைந்து, தேவர்களெல்லாம்புடை சூழ்ந்து வணங்கத்தக்க பரமானந்த சுகத்திற் கற்பகோடி.காலம் வாழ்ந்திருப்பார்கள் விநாயகக்கடவுளைப் பூசனை செய்கின்றாரை விருப்போடு காண்கின்றவர்களும். அவர்கள் குணங்களைக் குறித்து வசனிக்கிறவர்களும், அவர்களுடன் அன்போடு கூடுகின்றவர்களு மாகிய யாவர்களும் இம்மைமுதலிய முப்பிறவிகளினு நற்கதியடையப்பெறுவார்கள் கடவுளில்லையென்று சொல்லுகின்ற § நாத்திகர்கள், ஒழுக்கமில்லாதவர்கள், துஷ்டர்கள் சோரர்கள் முதலானவர்களை நினைத்தவர்களுக்கும இம்மகா மந்திரத்தை. உபதேசிக்கத்தகாது உபதேசிப்பாராயின் அவர்கள் இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி முதலிய கொடிய நரகங்களிற் சதாகாலமுமிருந்து வருந்துவார்கள்.

வணக்கம் அன்பு-அருள்-ஆசாரம்-வேதாகம நெறிகளிற் றவருதவொழுக்கம்-நல்லோரிடத்திலிணக்கம் மந்திர முபாசிக்கவேண்டுமென்னும் ஆசை இவைமுதலான நன்னடைகளுள்ள * ஆத்திகர்களுக்கு உபதேசிக்கவேண்டுமாயின் கிரமப்படி தீக்ஷைசெய்து

---

* ஆத்திகர்—கடவுள் முதலிய புண்டு என்பவர் அதனை "பொன்னுலகம் வெந்நரகம் புண்ணியபாவம்புரிவார் - இன்மலனு முண்டென்று நிச்சயித்தா—ரிக்கிலைம்-யாத்திகரே யார்கண்டா ரம்மைப் பலமென்பார் - நாத்திகரொன் றேயுணர்த்துறைடு." "என்றதனு னறிக.

உபதேசித்தல் வேண்டும். இவ்வாறு பக்குவாபக்குவங்களை யறிந்து உபதேசித்தவர்களும், உபதேசிக்கப் பெற்றவர்களும், அளவற்றகாலம் பேரின்ப வீட்டைத் தமக்குக் காணியாகக் கொண்டு வாழ்வார்கள்! இப்பூசாவிதியை முன்பு சந்திர சடாதர மூர்த்தியாகிய சிவபெருமான் என்மீதுகிருபைகூர்ந்து உபதேசித்தமுறைமைப்படியே உமக் குபதேசஞ் செய்தோமென்றனன் இவைகளனைத்தையும் வியாசமுனிவர் செவிகுளிரக்கேட்டு சகலதுயரங்களையுநீக்கிப் பின்னும் பிரமதேவனைத் தோத்திரஞ்செய்து சுவாமி! இதற்குமுன் இப்பூசனைசெய்து பேறுபெற்றவர்களுடைய சரித்திரங்களும் அடியேற்கருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனர் தாமரைமலர் ஆசனனாகிய பிரமதேவன் மனவிரக்கங் கொண்டு வியாசமுனிவரே! தேவர்-தானவர்-சித்தர் முனிவர்-நாகர்-இயக்கர்-சாரணர்-விஞ்சையர்-கின்னரர் மனிதர்-முதலான அநந்தம் பேர்கள் விநாயகபூசை செய்து பேறுபெற்றிருக்கின்றார்கள் அவர்களுள் யாமறிந்த வரையிற் சிலரது சரித்திரங்களைச் சொல்லுவோங் கேளுமென்று கல்லுமிரும்புங் கசிந்துருகத்தக்கதாய் கரும்புந்தேனுங் கலந்ததுபோலக்கிருபையோடுஞ் சொல்லுவான்

பின்னர்த் தங்கள் பரப்பிரம சொரூபியாகிய விநாயகமூர்த்தி யெமக்கு விசுவரூபங்காட்டியதும், பிரமதேவனாகிய தான் பின்னர் உலகசிருட்டிசெய்ததும், கணேசமூர்த்தி சித்திபுத்தியென்னு மிருவர்களைத் திருமணஞ் செய்ததும், விட்டுணு சடாக்கர மந்திரமநுட்டித்து மது கைடவர்களை வென்றதும புத்திரப்பேறு வேண்டி வனத்திற் சென்றவீமராசன் விசுவாமித்திர முனிவரை யடுத்ததும், முற்கலமுனிவரது வடிவினின்றும் படிந்துவந்தகாற்றினால் தக்கன்பிணி நீங்கியதும், அந்தக்கனுக்கு முற்கல முனிவருபதேசித்ததும், விநாயகமூர்த்தி வல்லாளன் வேதனையை விலக்கியதும், அவ்வல்லாளன் முத்தியடைந்ததும், தக்கனரசாட்சிபெற்றதும் விசுவாமித்திரமுனிவர் வீமராசனுக்குபதேசித்ததும் உருக்குமாங்கதராசன் சாபம் பெற்றதும், நாரதமுனிவர் அவ்வுருக்குமாங்கதராசனுக்குச் சாபத்தீர்வு கூறியதும், கௌதமமுனிவரால இந்திரன்பூசித்து வரம்பெற்றதும், வீமராசனும், அவன் குமாரனாகிய உருக்குமாங்கதராசனும் முத்தியடைந்ததும், கிருச்சமதமுனிவர் தமது தந்தையிடத்திலுபதேசம்பெற்றதும், அக்கிருச்சமதமுனிவர் உபாசித்து வரம் பெற்றதும், திரிபுரன்பூசித்து வரம்பெற்றதும், அத்திரிபுரன் மூவுலகத்தினையும் அரசாட்சிசெய்ததும், அவனழியும் படியாகத் தேவர்கள்

பூசித்ததும், அதனிமித்தஞ் சிவபிரான் வரம்பெற்றதும், அச்சிவபி
ரான் திரிபுரதகனஞ்செய்ததும், உமையம்மைபர்வதராசனிடத்திற்
சதுர்த்திவிரதங் கேட்டதும், பின்னர் அவ்விரதத்தை யநுட்டித்
ததும் கர்த்தமகாராசன் பிருகுவாகியநம்மிடத்தில் அவ்விரதத்தை
க்கேட்டு உபாசித்ததும், நளமகாராசன் கௌதமமுனிவரால் உப
தேசிக்கப்பெற்றுப் பூசித்ததும், சந்திராங்கதமகாராசன் அநுட்டி
த்து முத்தியடைந்ததும், சண்முகர் வந்துதித்துத் தாருகாசுரனை
வென்றதும். மன்மதனருச்சித்து உருவம் பெற்றதும், ஆதிசேடனா
ராதித்து வரம்பெற்றதும், சூரசேனமகாராசன் இந்திரனைக்கண்டு
புருசுண்டிமுனிவர் மகத்துவங்கேட்டதும், புருசுண்டிமுனிவர் சங்
கடசதுர்த்திவிரததைபநுட்டித்ததும், கிருதவீரியமகாராசன்புத்
திரப்பேறுவேண்டி வனத்திற்சென்று தவம்புரிந்ததும், அங்கார
கன் சங்கட சதுர்த்திவிரத மநுட்டித்ததும், சந்திர னுபாசித்துச்
சாபந்தீர்ந்ததும் தூர்வை மகத்துவத்தால் * விடைகரம் புலைச்சி
ஆகியவிம்மூன்றும் வீடுற்றதும், கணேசமூர்த்தி அனலாசுரனைவிழு
ங்கிய வெப்புநீங்கும்படி தேவர்கள் தூர்வையருச்சனை செய்ததும்
விநாயகமூர்த்தி தூர்வை யாசகஞ்செய்து பல வற்புதங்களை நடாத்
தியதும், வன்னிமகத்துவத்தால் ஓரரக்கனுங் கிராதனுமுத்தியடை
ந்ததும், விண்டு † வாமனவதாரத்தில் வன்னி யருச்சனை செய்து
மாவலியை வென்றதும், கீர்த்தியென்பவள் வன்னிமகத்துவத்தால்
மகப்பேறு பெற்றதும், அந்தக்கீர்த்தியின்மகன் வன்னிமகிமையால்
விடம்நீங்கியதும், சமியென்பவளும் மந்தார னென்பவனும் வன்னி
யு மந்தாரமுமாக வுற்பவித்ததும், தேவர்கட்குச் சாவித்திரியிட்ட
சாபத்தை அத்தேவபத்தினிகள் வன்னியருச்சனையா லகற்றியதும்
கிப்பிரசாத மகாராசன் வன்னியையருச்சித்து வரம்பெற்றதும், கி
ருதவீரிய மகாராசன் சங்கடசதுர்த்திவிரத மநுட்டித்து மகப்பே
றுபெற்றதும், ஓர்புலைச்சியின் பார்வையால் இந்திரவிமானம் விண்
ணிலெழுந்ததும், சூரசேனமகாராசன் சங்கடசதுர்த்திவிரத மநுட்
டித்து முத்திபெற்றதும், பரசுராமன் சிவபெருமானிடத்திற் சடா
க்கரமந்திரத்தை உபதேசம் பெற்றுப் பூசித்ததும் ‡ இராவணன்

* விடை—இடபம் கரம்—கழுதை. † வாமனம்—இரண்டடிக்குறளுரு
வம் ‡ இராவணன்—அழுதலைச்செயபவன் அதனை "ஆயிரம் பருவமில்வாற
ழுதலா லரக்கர் கோனுக்-கேய்வுற வியம்பு நாம மிராவணனென்றுகூறி" என
ப் புராணத்தினமாகிய கூர்மபுராணங் கூறுமாற்று னறிக.

உபாசித்துத் தான்செய்த அபசாரத்தை நீக்கிக்கொண்டதும், அக த்தியமுனிவர் வந்தித்துத் தமது கமண்டலத்திற் காவேரிதீர்த்தத் தையடைந்ததும், காசிபர்முதலாயினோர் சகத்திரநாமத்தா லருச் சித்துப் பல வரங்களைப் பெற்றதும் ஆகிய இச்சரித்திரங்களையெல் லாம் விவரமாகச்சொல்ல வியாசமுனிவர் சிரவணானந்தமாகக் கேட் டு மீளவும் பணிந்தெழுந்து சுவாமீ! இன்னுஞ் சிலசரித்திரங்களை அடியேற்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர்.

அதற்குப் பிரமதேவ னிசைந்து வியாசமுனிவரே! பரம கரு ணாநிதியாகிய விநாயகமூர்த்தியானவர் அநந்த யுகங்கடோறும் உ லகங்களில் வெவ்வேறு திருவுருவங்கொண்டு, வேதாகம நெறிகளிற் பிறழ்ந்துநடக்கின்ற துட்டர்களையெல்லாம் மறக்கருணையாற் றண் டித்துந் தமது திருவடிகளை வழிப்பட்ட அன்பினர்க்கு அறக்கரு ணையால் அநுக்கிரகித்து மிருக்கின்ற திருவிளையாடல்கள் அளவற் றனவாகும். அவைகளுள் முன்னொருகாலத்திற் சிவபெருமான் சுப் பிரமணியமூர்த்திக்குச் சில திருவிளையாடல்களைத் திருவாய்மலர்ந் தருளி யிருக்கின்றனர். அவைகளையுஞ் சொல்லுவோங் கேட்பீராக வென்று பிரமதேவன சொல்லுவான்.

வக்கிரதுண்டவிநாயகர் திருவவதாரஞ் செய்து உருத்திரர்முதலிய எங்கள் மூவர்களையுஞ் சிருட்டித்து அழித்தல், காத்தல். படைத்தல் ஆகிய முத்தொழில்களைத் தந்தருளியதும்,

சிந்தாமணி விநாயகர் திருவவதாரஞ் செய்து கபிலமுனிவருடைய சிந்தாமணியைக்கவர்ந்த கணராசனை யுத்தகோலங்கொண்டு எழுந்தருளி வென்று அதனைமீட்டு மவர்க் களித்தருளிய தும்,

கசானன விநாயகர் திருவவதாரஞ்செய்து என்னுடைய கொட்டா வியி னின்றுந் தோன்றிய சிந்தூரன் என்னும் அசுரனைக் கொன்று தேவர்களைக் காத் தருளியதும்,

விக்கினராச விநாயகர் திருவவதாரஞ் செய்து காலரூபனென்கின்ற விக்கினனை யழைத்து உலகங்களை யெல்லாங் காத்தருளி யதும்,

மயூரேச விநாயகர் திருவவதாரஞ் செய்து வேதசாத்திரங்களைத் தேவர்களிடத்தி னின்றுங் கவர்ந்த கமலாசுரனைச் சங்கரித்

து மீட்டு மவ்வேதசாத்திரங்களை யந்தத் தேவர்கட்குத்தந் தருளியதும்,

உபமயூரேசர் திருவவதாரஞ்செய்து தேவர்களைச் சிறையில்வைத்த சிந்தாசுரனைக்கொன்று மற்றைய அவுணர்கள்செய்யுமாயை யினை யொழித்ததும்,

பாலசந்திரவிநாயகர் திருவவதாரஞ்செய்து தவராசனுக்கும், அவன் மனைவி சுமுதைக்குந் தீங்குசெய்த நூமராசனைக்கொன்று அவ்விருவரையும் பாதுகாத்ததும்,

கணேச விநாயகர் திருவவதாரஞ்செய்து திரிபுராதிகளை வெல்லும் படியாகச் சிவபிரானுக்கு அநுக்கிரகித்ததும்,

கணபதிவிநாயகர் திருவவதாரஞ்செய்து தேவர்களை வருத்திய கய முகாசுரனைக்கொன்று விண்டுவின் சாபந்தீர்த்ததும்,

மகோற்கடவிநாயகர் திருவவதாரஞ்செய்து நராந்தகனையுந்தேவாந் தகனையு நாசஞ்செய்து காசிராசனுக்கு முத்தியளித்ததும்,

துண்டிவிநாயகர் திருவவதாரஞ் செய்து துராசதனைத் திவோதா தன் மனத்தைத்திரித்து விசுவநாதமூர்த்திக்குக் காசிநகரை யளித்ததும்,

வல்லபை கணேசர் திருவவதாரஞ் செய்து மரீசி யிருடி புத்திரியா கிய வல்லபையையும் விட்டுணுமூர்த்தியின் புத்திரிகள் பன் னிருவரையுந் திருமணஞ்செய்து அவ்விட்டுணுவுக்கு யோக ஞான தத்துவப்பொருள்களைப் போதிக்குங் கணேச கீதை யை உபதேசித்ததும்,

ஆகிய இத்திருவிளையாடல்களையெல்லாம் விவரமாகச்சொல்லிப் பின்னரும் மனமிகமகிழ்ந்து முகமலர் உற்றுச் சொல்லுகின்றார்.

வியாசமுனியே! வேதசாஸ்திரங்களாலும், மற்றெவ்வகைத்தா கிய பிரமாணங்களாலும் அறிதற்கரிய கர்த்தாவாகிய கணேசமூர் த்தியினுடைய இச்சரித்திரமானது தேவர்கள் முனிவர்கள் முதலி யோரால் பாராயணஞ்செய்யத் தக்கதாயும், பாசபந்தமுதலியவை களை விலக்கத்தக்கதாயும் இருக்கின்றது யாவரேனுந் தங்களிஷ்ட சித்திபெற விரும்புவோர்கள் இப்புராணத்தை இடைவிடாதுபாரா யணஞ்செய்து அதனைத்தடையின்றி யடையக்கடவர்க ளென்ற னர். இவையனைத்தையும் வியாசமுனிவர்செவிக் கமுதாகப்பூரித்து மீளவும் பிரமதேவனைப் பணிந்தெழுந்து சுவாமீ! விண்டுவுக்கு வல்

லைபகணேசர் யோகஞானதத்துவத்தை யுபதேசித்தாரென்றுபொ துப்படச்சொற்றீரே. அதனைவிவரமாக அடியேற் கருள்செய்யவே ண்டுமென்று பிரார்த்தித்தனர். அவ்வாறே அதனைமிகவுந் தெளிவு றக்கேட்ட வியாசமுனிவர் இக்கணேசகீதையை விநாயகமூர்த்தி யால் உபதேசிக்கப்பெற்று மரீசிமுனிவருக்குச் சொல்ல, அவர்மநு வுக்குப்போதிக்க, அம்மநுவி னிடத்திலிருந்து பலமுனிவர்கள்கே ட்டு அவ்வவர்கள்பரம்பரையினால் விளங்கவைத்தார்கள்.

இக்கணேசகீதையைத் துன்மார்க்க நடையினோர் கேட்பாரா யின் அவர்கள்தீவினையாவு மொழிந்துபோய்ச் சன்மார்க்க நெறியி னையடைவார்கள். சன்மார்க்கநடையினோர் கேட்பாராயின் கணேச மூர்த்தியினுடைய பாதாரவிந்தத்தைச் சேர்ந்து பிரமானந்த சாக ரத்தின் மூழ்கியிருப்பார்கள் அன்றியும் இனிவருகின்ற கலியுகத் தில் யாவரும் வருணாச்சிரம தருமங்களிற் றப்பிப் பிறர்செய்தநன் றியைமறத்தல், எல்லாவுயிர்க்கும் இன்னாதனசெய்தல், கல்வியையு ம் ஒப்புரவையுங் கடத்தல், யாகம் தவம் தருமம் தானம் என்பவை களைச்செய்யாதொழிதல் குருதக்ஷிணையைக்கொடாதிருத்தல்* முப் பாலொழுக்கங்களை முனிதல் ‡ இணைவிழைச்சு, வாயில்விழைச்சு, மலம், மூத்திரமென்னு நால்வகைஎச்சிலையுங்கருதாதிருத்தல், வண ங்கப்படுந்தேவரை வழிபடுமிடத்தும், தூய்மையின்மையுண்டாயின விடத்தும், மயிர்குலைந்தவிடத்தும், இணைவிழைச் சுண்டானவிடத் தும், கீழ்மக்களுடம்பு தீண்டியவிடத்தும் நீராடாதிருத்தல், நில முதலிய ஐம்பூதங்களையும், பார்ப்பார், பசுக்கள், திங்கள், ஞாயிறு என்னுமிவைகளையுந் தம்முடம்புபோலக்கருதிப் போற்றாதிருத்தல் அரசன், உபாத்தியாயர் தாய் தந்தை மூததோன் என்னும் ஐங்கு ரவர்களையுங் கருதிப் பேணா திருத்தல், உண்ணும் உணவைத்தொ ழாதுண்ணல், விருந்தினர், மூத்தோர், பசுக்கள், அடிமைகள் பிள் ளைகள் என்று சொல்லப்பட்ட இவர்கட்கு உணவு கொடாதிருத் தல், தம்மிற் பெரியார்தம் பந்தியிலிருந் துண்ணுமிடத்து அவரு ண்பதற்கு முன்னே தாமுண்டு முந்தற வெழுந்திருத்தல், குரவர் கொடுப்பனவற்றை ஒரு கையால் வாங்கல், அவர்க்குத் தாமொரு கையாற் கொடுத்தல், எவரையுஞ்சீறுதல் அந்திப்பொழுதில் விளக் கினைத் தொழாதிருத்தல். இருதேவர்நடுவும், பார்ப்பவர் பலர் நடு

* அதாவது அறநூல்விதி, பொருணூல்விதி. இன்பநூல்விதி என்னும் இம்மூன்றுமாம் ‡ இணைவிழைச்சு—புணர்ச்சி. வாயில்விழைச்சு—எச்சில்.

வும் ஊடறுத்துச்செல்லல், புலவிளைநிலம் * ஆப்பி சுடலைவழிதீர்த்தம் தேவர் கோட்டம் நீழல் ஆனிரை நிற்குமிடம் சாம்பல்என்னும் இப்பத்தின் கண்ணும் உமிழ்நீரையும் மூத்திர † புரீடங்களையுஞ் சொரிதல்; பரஸ்திரீ ‡ கமனம் மதுபானம் களவுசூதுகொலைஎன்னு மிவ்வைந்தினையுஞ்செய்யக் கருதல், பொய்குறளை பிறர்பொருளை வெளவவேண்டுங்காதல், பிறர் ஆக்கத்தின் கட்பொறாமை என்னு மிப்பெற்றியினை விழைதல், தமக்கென்று உலையேற்றல், தெய்வப் பொருட்டன்றித் தங்காரணத்தாற் கொன்றானையருந்தல், அட்டிலின்கண் எச்சிற்படுத்தல், வனையுறை தெய்வங்கட்குப் பலியூட்டாதுண்ணல், நெருப்பைக்கடத்தல், சிரசில்வார்த்து வழிந்தஎண்ணெயையுடம்பிற்றேய்த்தல், தம்முடைய குற்றத்தைப்பிறர்க்குச்சொல்லுதல், தம்மனைவியர்குணத்தைச் சொல்லுதல, தொடையில்வைத்து அன்னமருந்துதல், தம்முயிரை வாட்டுதல், நகத்தினாற் பூமியைக் கீறுதல், தரித்தவஸ்திரமில்லாமல் தடாகத்தில் இறங்குதல், புலால்புசித்தவரோடிணங்குதல், அவர்வீட்டிற்புசித்தல்,பாம்பாட்டுதல், மந்திரங்களைத் தகாதவர்களுக்கு உபதேசித்தல், மெய்ஞ்ஞானவுபதேசங்களைக் கேளாதிருத்தல், பெரியோர்கள் இருந்த ஆசனத்தைக் காலினால் உதைத்தல், யாதோர்காரணமில்லாமற் சிரித்தல் நகங்களையும் உரோமங்களையும் பல்லினாற்கடித்தல், நீர்விளையாடல், பெரியோர் நித்திரை செய்யுங் காலத்தில அவரை யெழுப்புதல், பொய்சொல்லுதல், அக்கினியில் இருகால்களையும் காச்சுதல், நல்லவர்களைப்படுபாவியென்றுகூறுதல், காலோடுகாலைத்தேய்த்துக் கழுவுதல் இடக்கையால்தலையினைத்தொடுதல், உண்ணும்பாத்திரத்தில் உமிழ்தல், பாழ்வீட்டில் நித்திரைசெய்தல், சுடுகாட்டுப்புகையினிடத்தில் நிற்றல், வடுப்படாத மரங்களை வெட்டுதல், மயிர் கரி எலும்பு சாம்பல் முள் முதலியனவற்றை நீரிற்போடுதல், அக்கினியை உந்திக்குக்கீழேபிடித்தல், அக்கினியில் எச்சிலுமிழ்தல், ஓரிடத்து அக்கினியோடு வேறோரிடத்து அக்கினியைச் சேர்த்தல், நீர்வார்த்து அவித்தல், வஸ்திரத்தினாலும் முறத்தினாலும்வீசி மூட்டுதல், நின்றுகொண்டும் நடந்துகொண்டும் கிடந்தும் நகைத்தும் உண்ணுதல் சுரிசாம்பர் செங்கல் விதிக்கப்படாத மரக்கொம்புகள் என்னுமிவைகளைக்கொண்டு பல்விளக்குதல், வெள்ளுள்ளிமுதலூட்சமைத்த அன்னம் பழங்கறி முட்டை சுரைக்காயருந்தல், கள்ளை விற்றல், கள்ளுண்ணுதற்கு சம்மதித்தல், கள்ளுண்டவரோடு இணை

* ஆப்பீ—சாணம். † புரீடம்—மலம். ‡ கமனம்—செல்லுதல்.

ங்குதல் சிவனையும் சிவனடியாரையும் வேதம்சிவாகமம்மிருதிபுராண முதலிய சுத்தவித்தைகளையும் விபூதி ருத்திராக்ஷங்களையும்தூஷித்தல், விடியஐந்துநாழிகைக்குமுன்னர் நித்திரைவிட்டெழும்பாதிருத்தல், வழிநடக்கும்போது பெரியவரோடு நேராக நடந்துசெல்லல் தம் மனைவியர்க்கு பூப்பு நிகழ்ந்தால் மெய்யுற லாகாத * நாட்களினும்,மற்றையவிலக்கப்பட்ட நாட்களினும் அவரைநோக்கல், புணர்தல், விதிக்கப்பட்ட நாட்களிற் புணராதுவிடுதல், தம்மனைவியரோடுடனுறைதல்,கலியாணநாளினும்,தேவர்க்குச்சிறப்புநாளினும்,பிதிரருக்குச் சிரார்த்த முதலியன செய்யும் நாளினும், திருவிழாநாளினும், யாகஞ்செய்யுநாளினும், அறஞ்செய்யாதிருத்தல், அந்நாட்களில் விருந்தினர்க்குச் சோறிடாதருந்தல், உடை நடை சொற்சோர்வு வைதல் என இந்நான்கும் தம்மாண்மைக்குங் கல்விக்குங்

* புணர்ச்சிக்கு விதிக்கப்பட்ட தினங்களிலே தன் மனையாளோடு கூடுவோன் இல்வாழ்வா னெனினும், வானப்பிரத்தன் சந்நியாசி பிரமசாரி யென்னு மூவர்களினின்றும் மேலாய பிரமசாரி யெனப்படுவான். புணர்ச்சிக்கு விலக்கப்பட்ட ஐந்து பருவமாவது - நட்சத்திரங்களுள் மூலம், மகம், திருவாதிரை, திருவோணம், சென்மநட்சத்திரம் என்னும் ஐந்தும், திதிகளுள் அட்டமி, ஏகாதசி, சதுர்த்தசி, அமாவாசி, பௌர்ணிமையென்னும் ஐந்துமாம். இவையன்றி சஷ்டி, திரயோதசி, விதிபாதயோகம், மாசப்பிறப்பு விரததினம், சிரார்த்ததினம், சந்தியா காலங்கள், அர்த்த ராத்திரி, பகற்காலம் என்பவைகளும், வீட்டுக்கு விலக்கானவள், முதலாநாட் சண்டாளிக்கும், இரண்டாநாட் பிரமக்கொலைசெய்தவளுக்கும், மூன்றாநாள் வண்ணாத்திக்கும் ஒப்பாளாதலின் அந்நாட்களும் விலக்கப்பட்டன இக்காலங்களில் ஒருவன் புணர்வானாயின் அவன் பாவம் வறுமைநோய் அற்பாயுள் என்பவற்றையடைதலின்றி, கருச்சிதைத்தபாவத்தையும் அடைவான். அவன்செய்யுஞ் சந்தியாவந்தனம் பூசைமுதலிய சற்கருமங்களும் பலனைக் கொடுக்காவாம். இறப்பினும் நரகத்திற் சேர்வன். பிள்ளை பிறக்கினுங் க்ஷயரோக முதலிய நோய்களையடைந்து வருந்தும். வீட்டுக்கு விலக்கான நாலா நாள் முதற் பன்னிரண்டு நாள் வரைக்கும் உள்ள காலமே விதிக்கப்பட்ட காலமாம். அவற்றுள்ளும் முற்கூறிய காலங்களை நீக்கிச் சேரக்கடவன் அதனை, " பூத்தகாலைப் புனையிழை மனைவியை-நீராடியபின் னீராறுநாளும் - கருவயிற் றுறூஉங் காலமாதலிற்-பிரியப் பெறா அன்பரத்தையிற் பிரிவோன். ,, என நாற்கவிராச நம்பி யகப்பொருளினும், நீண்டாநாண் முந்நாளு நோக்கார் நீராடியபின் - னீராறு நாளு மிகவற்கமென்பதே - பேரறி வாளர் துணிபு. ,, என ஆசாரக்கோவையினுங் கூறுமாற்றா னறிக. அவ்வாறு சேர்வானாயின் சரீரசுகம், செல்வம், சற்புத்திரப்பேறு, தருமவிருத்தி முதலிய புண்ணியங்களை யடைவான். பிறக்கும் பிள்ளையும் பலமும், அழகும், அறிவும், நோயின்மையும் தீர்க்காயுளுமுடைத்தாகப் பிறக்கும் என்க. இது கூர்ம புராணம் பதவுரையிற் கண்டது.

குடிப்பிறப்பிற்குந் தகுதியில்லாது செய்தல், பலர் நடுவணிருந்து பிறரைப் பழித்துரைத்தல், அவரைக் காணாதவழி இழித்துரைத்தல், பலர்நடுவணுறங்கல், தமக்குச் செய்யப்பொருந்தாதவற்றைப் பிறர்க்குச் செய்யவுடன்படல், வறியாரையிகழ்ந்து முறைமைகடந்துரைத்தல், வஞ்சனையுரையும் பயன்படாதவுரையும் வாய்காவாது வேண்டியவுரைக்கு முரையும் பிறரைப் பழியுரைக்கு முரையுஞ் சொல்லல், ஒருவன் செய்கை சொன்முதலானவற்றைத் தானும் அவ்வகையிகழ்ந்து செய்துகாட்டல், பிறர்க்குவெளிப்படக் கண்ணிடுதல், தம்மிடத்தைநோக்கி வந்தார்க்கு முறுவலோடு கூடிய வின் சொல்லும் கால் கழுவ நீரும் இருக்கமணையும் கிடக்கப்பாயும் உண்ண வுணவுங்கொடாதிருத்தல், தங்குடியொழுக்கத்தைநீங்கிய தொழில்களைச்செய்தல், பிறரெழுந்து போகத்தொடங்கினபோது அவரைப்பின்னேநின்றழைத்தல், அப்பொழுது தும்முதல், அவரை யெங்கே போகின்றீ ரென்றுகேட்டல், பிறரைப்பார்த்து உடம்பு நன்றாயிருக்கின்றதென்று சொல்லல், விளக்கினை வாயாலூதி யவித்தல், அருந்தவரைப் பாதுகாவாது வைதல், பழிநாணாதிருத்தல், தாங்கற்றவற்றைக் குரவர்முன் கூறல், தாய்-மகள்-உடன்பிறந்தாள் பிறன் மனை என்னு மிவர்களோடு தனித்துறைதல், பெரியராயுள்ளார் உவந்தனவற்றைத்தாமுவத்தல், தம்மில்லத்தினிடத்துந்தேவராலயத்தினிடத்தும் பெரியார்சபையினிடத்தும் கீழ்மக்களைக்கொண்டு புகழல், சிறிப்பு-கொட்டாவி-காறியுமிழ்தல்-தும்மல் - என்னு மிவைகளைத்தம்மிற்பெரியாரிடத்துந்தேவர் கோட்டத்தினிடத்துஞ் செய்தல், கணவனது வடிவத்தையன்றி ஏனைய ஆடவரது வடிவத்தைப் பார்த்தல், கைந்நொடித்தன் முதலியவற்றைச் செய்து ஆடவரை மயக்குதல், தங்குரவர் பெயரைச்சொல்லல், தம்மிற்பெரியாரைமுறைப்பெயர் கொண்டழைத்தல், பிறர்மனையின்கட் புழைக்கடை வாயிலாற் புகல், ஒருவர்*பக்கத்தில் வரிசைபடப்போதல், ஒருவருடைய நிழலைமிதித்தல், முன்னர் ஆராயாமல்பேசும்போதாராய்ந்துபேசல், ஊரிலுள்ளோர் வெறுக்கத்தக்கவைகளைச் செய்தல், அரசரது படையளவைப்பகைவர்க்குரைத்தல், தாமொருவருக்குச் செய்த நன்றியின் பயனைச்சொல்லல்; தமக்கொருவரிட்டவுணவை யிகழ்ந்துரைத்தல், தாஞ்செய்த அறத்தையும் விரதத்தையுந்தாமே புகழ்தல், தமக்குக்கிடைத்தற் கரியவற்றைவிரும்பல், தம்மாலிழக்கப் பட்டனவற்றிற்கு வருந்தல், புலையருக்கெச்சிலைக் கொடுத்தல், மேலான நற்கருமஞ்செய்யப் போமிடத்துப் புலைய ரிடத்து நாட்

கேட்டுச் செய்தல், சான்றோர் அவைக்களத்து அங்கச் சேட்டை புரிதல், இருவராயிருந்துபேசுமிடத்துப்போகுதல், குரவர்கொடுப் பதை உட்கார்ந்தேற்றல், தம்மிடத்தில் அடைக்கலமாக வைத்த பொருளை அபகரித்தல் முதலான அளவற்ற தீமைகளைச் செய்து வியாதி தரித்திர முதலான துன்பங்களை யடைந்து வாழ்ந்திருப் பார்கள்.

அப்போது வேதாகம விதிகள் ஊழ்கிப்போகும் நீதிநெறிகள் தவறிப்போகும் அதனாற் றேவர்களெல்லாந் துன்பமடைந்து அக் கலியுகமுடிவில் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித் து மிகுந்தபத்தியினுலுபசரித்துப் பலமுறை தோத்திரஞ்செய்வார் கள். அதற்குவிநாயகமூர்த்தி அருள்கூர்ந்து தூமிரவர்ணராய்மகோ ற்கட விநாயகர் திருவவதாரங்கொண்டு இரண்டு திருக்கரங்களு டனே ஒரு திருக்கரத்திற் றாமரைமலரும் மற்றொரு திருக்கரத்தில் வாளாயுதமு மேந்திக் கறுத்தக் குதிரையின்மே லாரோகணித்து அளவற்ற படைக்கலங்களோடு நால்வகைச் சேனைகளும்புடைசூழ ந்துவரப் பூவுலகத்திலுள்ள மிலேச்சர்கள் முதலாயினோர்கள் ஒரு வரையும் விடாமற் சங்கரிப்பார். அப்பால் தருமஸ்வரூபமான கிரே தாயுகம்வரும். இந்தயுகத்தில் தருமதேவதை நான்குபாதங்களோ டும் உலாவலால் யாதோர்குறையுமின்றாம் இத்தன்மையைராகிய வி நாயகமூர்த்தி செய்தருளுந திருவிளையாட்டுக்கு ஓரளவைகூற நம தாயுள்வரையிற் சொன்னுலுமுடிவனவன்று. ஆதலால் இதுகாறும் உமக் குரைத்து வந்த மான்மியங்களைக்கொண்டே திருப்தியடை யக் கடவீர் அன்றியும் இப்புராணத்திற்றானே ஓரிடத்தில் விநாய கப்பெருமா னனவர் உருத்திரர் முதலிய எங்கள் மூவரைச் சிருட் டித்தாரென்றும், ஓரிடத்தில் உருத்திரமூர்த்தியினுடைய முகத்தி னின்றும் அவர்வெளிக்கொண்டன ரென்றும், ஓரிடத்திற் சிவபெரு மானை அவர்பணிந்தனரென்றும்; ஓரிடத்தில் உமாதேவியார் வயிற் றிலுற்பவித்தனரென்றும், ஓரிடத்தில் அவ்வுமாதேவியார்முகத்திற் றோன்றினரென்றும், ஓரிடத்திலுமாதேவியார் அவரைப்பணிந்தன ரென்றும், ஓரிடத்தில் அவ்வுமாதேவியை அவர் பணிந்தன ரென் றும், இவ்வாறுநானுவிதங்களாகக்கூறியிருக்கினும்அவையனைத்தும் அந்தந்த யுகபேதங்களினுலும் அந்தந்தத் தேவர்கள் வல்லபவிகற் பத்தினுலும் அடியார்களுடைய பரிபாக வேற்றுமையினுலும் உண் டாயினவேயன்றி விநாயகமூர்த்தி சகல தேவர்கட்கும் முதன்மை யாயிருக்கின்ற அவரது சுபாவவியற்கை எக்காலத்து மாறுவதில்லை.

இத் தன்மையராகி விநாயக மூர்த்தியினுடைய சரித்திர வியல்பையறியு மிடத்து மத்திம குணத்தை யுடையவர்கள் இவை யனைத்தும் உண்மையோ அல்லவோவென்று மலைப்பார்கள். உத்தம குணத்தை யுடையவர்கள் உண்மை யென்றே தெரிந்து கொள்ளு வார்கள். உண்மை யென் றெண்ணாதவர்கள் மிகவுங் கொடிய இரு பத்தெட்டுக்கோடி நரகங்களில் வீழ்ந்து வீழ்ந்து பலமுறை வருந் துவார்கள். விநாயகக்கடவுளைத் தேவர்கள் முதலாயினோருபாசித்த சரித்திரங்களும் அக்கடவுள் பற்பல அவதாரங்களைக்கொண்டு செ ய்தருளிய திருவிளையாடல்களும் விவரமாக வுமக்குச்சொன்னோம். இனி நீவிரு மவ்விநாயக மூர்த்தியை உபாசிக்கக் கடவீரென்று வி யாசமுனிவருக்குப் பிரமதேவர் சொன்னதாகப் பிருகு முனிவர் சோமகாந்த ராசனுக்குத தொகையாகத் தெரிவித்துப் பின்னர் அவைகளையெல்லாம் விரிவாகவுங் கூறினர்.

உபதேசம்பெற்ற படலம் முற்றிற்று.

## வியாசர்
## வரம்பெற்றபடலம்.



இப்பால் பிருகு முனிவரை அவ்வரசன் மீளவும் பணிந்தெ ழுந்து கிருபாமூர்த்தியே! சுவாமிகளுடையகருணாகடாட்சத்தினாற் றேவர்களாலும் அறிந்துணர்தற்கரிய விநாயகமகத்துவத்தையெளி திற்கேட்டேன். யோகஞான தத்துவத்தையு முணர்ந்தேன் இனி அடியேற்கென்னகுறையிருக்கின்றது. இனி அவ்வேதவியாசர் விநா யக மூர்த்தியை உபாசித்ததும், விநாயகமூர்த்தியால் அவரடைந்த பேறும், அடியேற்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்னப் பிருகுமுனிவர் அதற்கிசைந்து அரசனே! வியாசர் மீளவும் பிரம தேவனைத் தொழு தெழுந்து சுவாமி! பரப்பிரம்ம சொரூபியாகிய விநாயக மூர்த்தி மகிமையை எல்லாம் யான் தெளிவுற்றறியுமாறு திருவாய் மலர்ந்தருளிய தேவரீர்க்கு யானென்ன கைம்மாறு செய் யத் தக்கவனென்று பலமுறை துதிசெய்து, அவருடைய உத்தரவு பெற்றுவிநாயகக்கடவுள் திருமந்திரத்தைச் செபித்துத்தவஞ்செய் வதாகச்சென்று கந்தமூலபலாதிகளுஞ்சமித்துக்களும் நல்லநீழலும் எவ்விடத்துள்ளனவென்று தேடிச் சிறிதும் இடையூறுக ளில்லாம

னும் இதர சஞ்சாரமில்லாமல் இருக்கின்றவொரு வனத்திலிருந்து கணேச மூர்த்தியினுடைய ஏகாக்ஷர மந்திரத்தைச் செபித்துக் கொண்டு தவத்தி லிருந்தனர் அவ்வாறு பன்னிரண்டுவருடஞ்சென்றபின்னர் அத்தவத்திற்குக் கணேச மூர்த்தி கிருபைசுரந்து கோடிசூரியர்கள் ஒன்றாயுதயமானதுபோல மிகுந்தவொளியை வீசுகின்ற சிவந்த திருமேனியும், சிவந்தவஸ்திரமும், சிவந்தபூமாலையும், சிவந்த ஆபரணங்களும், செஞ்சாந்து முடையவராய் மதம் பொழிகின்ற யானை முகத்தோடு வியாச முனிவருக் கெதிரே தரிசனமாயினர்.

வியாச முனிவர் அத் திருமேனியின் உக்கிரத்தைப் பார்க்கக் கூடாமற் பயந்து ஏகாக்ஷர மந்திரத்தை மனதிற் றியானித்து இரண்டு விழிகளையுமூடிக்கொண்டனர். அதனைக்கணேசமூர்த்திகண்டு பராசரன்மைந்தனே! நீ அஞ்சற்க. நின்மனதில் யாவர்வேண்டு மென்று பரிபூரணமாக நினைத்தனையோ அவரேயாமாகும் உனக்குவேண்டிய வரங்களைக்கேள் தருகின்றோ மென்று திருவாய்மலர்ந் தருளினர் அதைக்கேட்ட வியாசமுனிவர் விரைவி லெழுந்து வணங்கித் துதித்துக் கர்த்தருடைய திவ்வியசொரூபத்தைக் கண்குளிரப்பார்த்துப் பலமுறைபிரதக்ஷிணம் வந்து, இருகரங்களையுஞ்சிரமேற்குவித்து எதிர்நின்றுவாய்குளறி, விழிகளிலானந்தவாரிபெருக்கி, உடல் முழுவதும் உரோமாஞ்சிதங்கொண்டு, உள்ளமுருகிக்கணேசமூர்த்தியினுடைய பெருமைகளைப்பாடி அளவற்ற வேதாகமங்களாற்றோத்திரஞ்செய்து காரணகாரணமான கடவுளே! சச்சிதானந்தப்பொருளே! அகண்டபரிபூரணரே! ஆதிமத்தியாந்த ரகிதரே இத்தினந் தேவரீருடைய பாதகமலசேவை தந்தருளி யதனாலே அடியேன்பவித்திரனாயினேன். அடியேன் தவமுஞ் சுத்தமாயிற்று. இத்தேசம், இவ்வனம், இங்கிருக்குஞ் சராசரங்களெல்லாமும் மகத்தானபேறுகளையடைந்தன. இனி அடியேன் குறைதீரும்படியாக எனதறிவிற் செழித்திருக்கின்ற மயக்கத்தைநீக்கி, மலபாசத்தையு மொழித்துச் சுவாமிகளுடைய பாதாரவிந்தத்திற் செலுத்தும்படியானபத்தியை நிரப்பி, மெய்ஞ்ஞானசுகத்தையுங்கொடுத்து எக்காலத்தும் அடியேனுள்ளத்திற் றேவரீர்வாசமாயிருத்தல்வேண்டும். அன்றியும்பதினெண்புராணங்களை இடையூறின்றி நிறைவேற்றத்தக்க வல்லபத்தையும் அடியேற்கு அளித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

கணேசமூர்த்தி அதற்கிசைந்து மகாதவசிலனே! நீகேட்டவரங்கள் முழுவதும் உனக்குண்டாகும். நீயுன்பெயருக்குத் தக்கபரி

சுத்த வுத்தமனாகி மிக்கமேன்மைகளைப் பெற்று எல்லாக் குறைகளு மொழிந்து யாவர்க்குங் குரவனாகி மெய்ஞ்ஞானம் பெருகிச் சுகமா யிருப்பாய் பதினெண்புராணங்கட்கு நீ அதிகாரியானதுபோல உப புராணங்களுஞ் சொல்லத்தக்க வல்லபத்தையுடையவனானாய் முன்னர் அகங்காரத்தினாலே நம்மைத் தியானித்துத் துதிசெய்யாது புராணங்களைச் சொல்லத்தொடங்கினை ஆதலால் நீ புன்னினைவினை யிழந்தாய் அதனோடு வாக்கையும் இழக்கப்பெற்றாய் பின்னர் நமது மான்மியத்தைப் பத்தியோடுங் கேட்டு நம்மையு மருட்டித்தனை. ஆதலால் முன்னர் விளைந்திருந்த பாவங்களனைத்தையும் போக்கினாய். இனி உன் மனத்துள் யாமிருந்து எல்லாவற்றையுஞ் சொல்லி நிறைவேற்றுகின்றோமென்று அனுக்கிரகித்து அம்முனிவருடைய இதயகமலத்தில் வாசமாயினர். அப்பால் வியாசமுனிவர் மிக்க தேஜசுடையவராய் உலகத்தாரெல்லாங் கண்டு அதிசயிக்கும்படியாக அவ்வனத்தின் கண்ணே யிருந்து கணேசமூர்த்தி தனக்குக் காக்ஷிகொடுத் தருளியவிடத்தில் ஓராலயமுண்டாக்கி அதில்விநாயகக்கடவுளைப் பிரதிட்டைசெய்து, வேதாகமவிதிப்படி பூசனைபுரிந்து யாவருங் கொண்டாடத்தக்க பதினெண்புராணங்களையும்வழுவின்றி நிறைவேற்றினார் என்று பிருகுமுனிவர் சோமகாந்தராசனுக்குச் சொற்றனர்.



வரம்பெற்றபடலம் - முற்றிற்று

## யடைந்த படலம்

முற்றத்துறக்கு முனிவர்களே! பின்னும் பிருகுமுனிவர் அவ்வரசனைநோக்கிச் சொல்லுவார், வேந்தனே இவ்வாறு வியாசமுனிவர் கணேசமூர்த்தியினுடைய பெருங்கருணையைக்கொண்டு நிறைவேற்றிய பதினெண்புராணங்களையும், தாம்பிரமதேவனால் உபதேசிக்கப்பெற்ற விநாயகமகத்துவத்தையும், வைசம்பாயனர் முதலாகிய எங்கட்கு உபதேசித்து அவைகளை யாவர்க்கும் வரன்முறையாகப்போதிக்கக் கட்டளை யிட்டனர். யாங்களும் அவ்வாறே பரிபக்குவர்களுக் குணர்த்தினம். அவற்றுள் விநாயகமகத்துவத்தை உனக்குப் பாந்தமாகஉபதேசித்தோம். ஆதலால் இனி நீயும் அக்கணேசமூர்த்

தியையநுஷ்டித்து உனது இட்டகாமியார்த்தங்களை நிறைவேற்றிக் கொள்ளுகவென்று சொல்லினர் பின்னர் அவ்வரசன் அவ்வாசிர மத்திற்றனே யிருந்து தான்கேட்ட கணேசமான்மியத்தையும் பிர தினம் பாராயணஞ்செய்து பிருகுமாமுனிவருடையபாதங்களைத் தினந்தோறும் பூசனைபுரிந்துகொண் டிருந்தனன். இவ்வாறு ஒருவ ருடஞ்சென்ற பின்னர் அவ்வரசன் செய்து வருகின்ற அநுட்டிப் புக்குக்கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து தேவகணங்களைக்கூவி நமது திருவடிக் கன்பனுகிய சோமகாந்தராசனை இங்ஙனம் அழைத்துவ ருவீர்களாகவென்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாறே தேவக ணங்களிசைந்து அஷ்டதிசைகளினுநிறைந்துபிரகாசிக்கும்படியான சோதியை வீசுகின்ற ஒரு தெய்வவிமானத்தைக் கொண்டு வந்து பிருகுமுனிவருடைய ஆசிரமத்தி லிறக்கினுர்கள். அதனை யம்முனி வர்கண்டு சோமகாந்த ராசனைநோக்கி. 'அரசனே! கணேசமூர்த்தி உனதன்புக்கிரங்கி விமானமனுப்பினர். அதில் நீயாரோகணித்து அவ ருலகத்திற்சென்று நித்தியானந்தசுகத்தில் வாழ்ந்திருமென்று சொல்லினர் அதையவ்வரசன்செவிக் கமுதமாகக்கேட்டுப் பிருகுமு னிவரைப்பணிந் தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்குவித்துத் தபோதன சிரேட்டரே! நித்தசுத்தநிர்மல நிராகார நிருபத்திரவ நிர்ச்சங்க நிர்விகார நிருவிகற்ப நிராலம்ப அகண்டானந்த சொரூபி யாகிய கணேசமூர்த்தியானவர் நாயினுங்கடையாய் நீயேனிடத்து வைத்த நிறைந்தகிருபைக்கு அற்பனேன் செய்யத்தக்க கைம்மாறு இவ்வுலகத்தி லென்ன விருக்கின்றது? தேவரீருடைய கருணையி னுலே அக்கர்த்தருடைய அநுக்கிரகத்தை யெளிதிற் பெற்றேன். என்னிற் படர்ந்திருந்த வியாதி முன்னமே தீர்ந்தன. அடியேன் தேவரீர்வசத்தனல்லாமல் இப்பிரபஞ்சத்தில்எனக்குண்டாகியபற்று வேறென்ன விருக்கின்றது சுவாமிகளுடைய கட்டளையாதோ அவ் வாறே அடியேன் நடந்துகொளளுவனென்று பணிந்துதோத்திரஞ் செய்து அளவளாவிய அன்போடும் ஆனந்தக்கண்ணீர் சொரிந்து நின்றனன். அவனை யத்தேவகணங்கள்நோக்கி அரசனே! நீகணேச புராணங்கேட்டமகத்துவத்தினுலேவிநாயகக்கடவுள்கிருபைகூர்ந்து மகா யோக்கியர்கள்செய்யும் அநுட்டிப்பினுக்குங் கிடைத்தற்கரிய தமது உலகத்திற்கு உன்னை யழைத்து வருமாறு கட்டளையிட் டருளினார்.

பாக்கியமுடையவர்க்குள்ளும் பெரும்பாக்கியமுடையவனீயே யாகும் ஆகலால் நீயுனது மனைவியோடும் இரண்டுமந்திரிகளோடும்

இவ்விமானத்தில் ஆரோகணித்து வரக்கடவாயென்று சொல்லினர். அதை அரசன்கேட்டு மீளவும் பிருகுமுனிவரைப் பணிந்தெழுந்து பலமுறைதுதித்து அம்முனி புங்கவருடைய சீடர்கட்கெல்லாம்வந் தனைசெய்து, விமானத்தைத்தொழுது அவ் விமானத்தைக்கொண ர்ந்துவந்த தேவகணங்களையும் நமஸ்காரஞ்செய்து தனது பத்தினி யோடும் இரண் டமைச்சர்களோடும் அவ் விமானத்தி லேறினான். உடனே அவ்விமானமானது ஆகாயமார்க்கத்தி லெழுந்து சென றது அவ்வாறு செல்லுகையில் அவ்வரசனுடைய தேவநகரமானது சுதன்மைக்குத் தோன்ற அச்சுதன்மை தன் கொழுநனை நோக்கி, சுவாமி! ஏமகண்டன் நமதுவரவுக்கு எதிர்பார்த்திருப்பா னாதலால் அவனைக்காணாமற் செல்வோமாயின அவன் மிக்கதுபரத்திலழுந்தி வாடுவான். நா மவனைக்கண்டுகொண்டு பின்னர் நம தெண்ணத்தின் படிசெல்வது உத்தமமா யிருக்கின்றதென்று சொல்லினள். அதை யத் தேவகணங்கள் கேட்டு மனதிரங்கிச் சோமகாந்த ராசனையுஞ் சுதன்மையையும் பார்த்துச் சர்வசன மனோதராகிய சத்திய சிலர் களே! உங்கள் குமாரனாகிய ஏமகண்டராசன் விநாயகமூர்த்தியைத் தினந்தோறும் வேதாகமவிதிப்படிமிகுந்த அன்புடன் பூசைசெய்து பரிபக்குவனாகி யிருக்கின்றா னாதலாலும், நீங்களும் அவனைக் காணா துசெல்லக் கருத்தாறாமையினாலும் உங்களெண்ணப்படி இவ்விமா னத்தை அந்நகரின்புறத்து நிறுத்துகின்றோம். நீங்கள் அவனைக் கூவி அவன்மனதைத் திருப்திசெய்யுங்களென்று சொல்லி, அந்நக ரத்தின் வடதிசைப் புறத்தில் விமானத்தைச் செலுத்திக் கொண்டு போய் நிறுத்தினார்கள். அரசன் அளவற்ற ஆனந்தங் கொண்டு தன்னுடன் வந்திருக்கின்ற அவ்வமைச்சர் இருவரையும் ஏமகண்ட ராசனிடத் தனுப்பினான். பின்னர் அவ்வமைச்சர்கள்சென்று, இரா சகுமாரனைக்கண்டு பணிந்துநின்றனர் அவனுந் தனது கரங்களைக் கூப்பிப் பிரதிவந்தனஞ் செய்து, அவர்களைத் தனதருகி லிருக்க வைத்து, இவர்கள் தனித்துவந்தமையால், நமது தாய்தந்தையர் இறந்தனரோ பிழைத்திருக்கின்றனரோ வென்னுங் கவலைகொண்ட மனத்தோடு, அமைச்சர்களே! என்னையீன்ற அருங்குரவர்கள் எவ் வாறாகி யிருக்கின்றனரென்று வினாவினான். அதற்கு அவ்வமைச்சர் கள் முகமலர்ந்து, நரேந்திரசிகாமணியே! உமதுமனத்திற் கிலேசங் கொள்ளவேண்டாம். உமது தாய்தந்தையர் இதுகாறும் வனத்திற் சுகசீவியராயிருந்து, இப்போது தேவரூபம் பெற்றிருக்கின்றார்கள். அஃதெவ்வாறெனில், யாங்கள் இந்நகரத்தைவிட்டுநீங்கி, மிக்கதுய

ரத்தோடும் வனத்திற்சென்று, அவ்விடத்திற் சின்னாட்களைக் கழிவு செய்திருக்கையில், உமது தந்தை தவசிரேட்டராகிய பிருகுமுனிவராலே தொழுநோய் முழுதும் நீங்கப்பெற்று, அம் மகாநுபாவரிடத்தில் விநாயகபுராணங்கேட்டனர் அதனைக்கேட்ட மகத்துவத்தால் அவ் விநாயகமூர்த்திக்குக் கிருபைசுரந்து, சகலதேவகணங்களோடும் ஒருதெய்வவிமானம் அனுப்பினார். அவ்விமானத்தில் யாங்கள் நால்வரும் ஆரோகணித்து ஆகாயமார்க்கமாகச் செல்லுகையில், உமதுகுரவர் உம்மைக் காணவேண்டுமென்கின்ற ஆவலைக்கொண்டு, அவ்விமானத்தோடும் இந்நகரின் புறத்துவந் திருக்கின்றார்கள் ஆதலால், நீரங்ஙனம்வந்து, அவர்களுடைய மனக்கவலையையொழிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, உடனே ஏமகண்டராசன் பெருமகிழ்ச்சிகொண்டு, வந்தமந்திரிகளோடுந் தன்னிடத்திலிருந்த மந்திரிகளும் புடைசூழ வெளிக்கொண்டனன். அந்நகரத்துள்ளவர்களும் அவனோடுபுடைசூழ்ந்து, யானைக்கூட்டங்கள்போல நெருங்கிவந்தனர். அதனை யவ் விமானத்தலைவர்கள்நோக்கிச் சோமகாந்தராசனைப் பார்த்து, அரசனே! உன தருமைப் புத்திரன் வருகின்றான் நீ அவனைக்கண்டு அளவளாவிச் சொல்லத்தக்க விடயங்களைச் சொல்லக்கடவை யென்றனர். அரசன் அவ்வுத்தரவைச் சிரசில்வகித்து தான் தனது பத்தினியோடும் அவ்விமானத்தினின்று மிறங்கினன்.

உடனே, அப்புத்திரன் விரைந்துவந்து, இருவர்பாதங்களையும் அட்டாங்கமாகப் பணிந்தனன், அவனைச் சோமகாந்தராசன் தழுவியெடுத்து, தனதுமார்பில் அணைத்துக் கொண்டு, அப்பா குழந்தாய்? சாதுசற்சன சம்மத சற்கர்ம சற்புருஷாகார பூசுரோத்தமராகியபிருகுமகாமுனிவருடையகிருபாகடாக்ஷத்தினால், யான்முன்னர் அடைந்திருந்த தொழுநோய்முதலிய துன்பங்களை நீக்கி, இத்தன்மைத்தாகிய மேலான செல்வத்தைப்பெற்றேன். உனக்குத் தரிசனந்தந்து செல்லுவோமென்னு மாவலைக்கொண்டு, யாங்களெல்லாம் இத்திருக்கோலத்தோடும் இங்குவந்தனம் . இப்போதுகணேசமூர்த்தியினுடைய உலகத்திற்குச்செல்லுகின்றோம் இனியெங்களைக்குறித்து யாதொரு கவலையுங் கொள்ளாமல், நீதிசாத்திர முறைமைப்படி இராச்சியபரிபாலனஞ் செய்துவரக் கடவை என்றனன். அதைக்கேட்ட ஏமகண்டராசன் மிக்கதுயரங் கொண்டு, எனதருமைத்தந்தையே? இதுகாறுந் தங்கள்வரவுக் கெதிர்நோக்கிக்,கணேசமூர்த்தியை இடைவிடாதுபூசித்துவந்தேன். இப்போதுஎனதெண்

ணத்தின்படியே தாங்கள் சகலவியாதிகளையு மொழித்து இந்தன்மைத்தாகிய தெய்வசரீரத்துடனே காணப்பெற்றேன், இனிஅரைக்கணமேனுந் தங்களை விட்டுப்பிரிந்திரேன், அடியேனையுந் தாங்கள் செல்கின்றகதியிற் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்றுமிகுந்த உருக்கத்துடன் விண்ணப்பஞ் செய்தனன். அதனை அவனோடு அந்நகரத்தினின்றும் வந்த அமைச்சர் முதலாயினோர் கேட்டு, மிக்ககிலேசத்தை யடைந்து, சோமகாந்த ராசனைப் பணிந்தெழுந்து, சார்வபௌமா? யாங்களுங் கணேசமூர்த்தி யுலகத்திற்கு வருகின்றோம். இப்பிரபஞ்ச வாழ்க்கையால் வருவது துக்கமேயன்றி என்ன சுகமிருக்கின்றது தேவரீர் எம்மையும் அழைத்துக் கொண்டு செல்லாமல் இங்கு நிறுத்திவிட்டால், ஓர் இமையளவும் யாங்களுயிரை வைத்திரோம். துன்பத்திற்கேதுவான பிரபஞ்ச வாழ்க்கையில் எமக்கு யாதொரு பற்றுமில்லையென்று வருந்தி முறையிட்டார்கள்.

இவ்வாறு புத்திரனும் அந்நகரத் துள்ளவர்களுஞ்செய்துகொண்ட பிரார்த்தனைகளைச் சோமகாந்த ராசன் கேட்டு அன்பிற் சிறந்த நண்பர்களே? உங்களையுங் கணேசலோகத்திற் கழைத்துக்கொண்டு செல்ல எனக்கோராதி பத்தியமில்லை. அவ்வவர்கள் செய்த தவப்பயன் கூட்டி முடிக்கின்றபோது, அக்கர்த்தாவின் கிருபையால் அந்தமேலான கதியையடையவேண்டுவதேயல்லாமல், அஃது நினைத்தமாத்திரத்திற் கூடுவதான காரியமுமன்று இதற்கு நம்மாற் செய்யக்கூடுமானது ஒன்றுமில்லையென்று சொல்லினன். இவ்வாறு ஒருவர்க்கொருவர் கிலேசங்கொண்டிருக்கின்ற காரணத்தைத்தேவகணங்கள் பார்த்து, அரசனே? உனது குமாரனாகிய ஏமகண்டராசன் விநாயகமூர்த்தியைப் பூசைசெய்து மகாயோக்கியனாகிப் பரிபக்குவப்பட்டிருக்கின்றான். அவன் இவ்விமானத்தி லேறத்தக்கவனென்பதற்குச் சந்தேகமில்லை, இந்நகரத்தார்களோவெனில், தேவதேவராகிய விநாயகக்கடவுள் மகத்துவங்களைச் சிறிதுங்கேட்டவரல்லர். அவைகளைக் குறைவில்லாமற் சொல்லவுங்காலமில்லை. ஆயினும், அவ்விநாயகமூர்த்தி மகத்துவங்களை முழுவதுங் கேட்ட மேலாகிய பயனைத் தானே கொடுக்கத்தக்கதாகியும், தீவினையனைத்து நீக்கிச் சுகத்தைத் தரவல்லதாகியும் ஒரு சூட்சும மிருக்கின்றது. அஃதியாதெனில், காசித்தலத்திற் சத்தாவரணத்தில், ஐம்பத்தாறு விநாயக மூர்த்தங்களைப் பிரதிட்டை செய்யப்பட் டிருக்கின்றதே. அந்தந்த மூர்த்திகளினுடைய திருநாமங்களைச்சொல்லுகின்றோம். அவைகளை இந்நகரத்தார் கேட்பார்களாயின், உடனே சுத்தபவி

த்திரத்தை யடைந்து, அந்த மேலான கதிக்குப் பாத்திரராவார்கள் என்று அவைகளைச் சொல்வாராயினர்.

அதாவது, சற்சனர்களே, முதலாம் ஆவரணத்தில், துண்டிவி நாயகர், துர்க்கைவிநாயகர், அர்க்கவிநாயகர், பிரசன்ன விநாயகர், வீம விநாயகர், சந்திர விநாயகர் என்று ஆறு மூர்த்தங்கள். இரண்டாம் ஆவரணத்தில், சித்தரூப விநாயகர், இலம்போதர விநாயகர், கூபதந்தவிநாயகர், சலாடகவிநாயகர், குலப்பிரியவிநாயகர்,சதுர்த்திவிநாயகர்; பஞ்சமிவிநாயகர், முண்டவிநாயகர், சமுசிகவிநாயகர். விடங்கவிநாயகர், நிசவிநாயகர், இராசபுத்திர விநாயகர், பிரணவ விநாயகர், உபதாபவிநாயகர் என்று பதின்முன்றுமூர்த்தங்கள். மூன்றும்ஆவரணத்தில், வக்கிரதுண்ட விநாயகர், ஏகதந்தவிநாயகர்,திரிமுகவிநாயகர், பஞ்சமுக விநாயகர், ஏரம்ப விநாயகர், விக்கினராச விநாயகர், வரதவிநாயகர், மோதகப்பிரிய விநாயகர் என்று எட்டு மூர்த்தங்கள். நான்காம் ஆவரணத்தில், ஏகோபயப்பிரதவிநாயகர், சிங்கமுக விநாயகர், கூர்மிதாக்ஷ விநாயகர், ிப்பிரப்பிரசாதவிநாயகர், சிந்தாமணி விநாயகர், தந்தவக்கிர விநாயகர், அபிசண்டி விநாயகர், ஊர்த்துவாண்டமுண்ட விநாயகர் என்று எட்டுமூர்த்தங்கள் ஐந்தாம் ஆவரணத்தில், மணிகன்ன விநாயகர், ஆசரசிருட்டி விநாயகர், கசகன்ன விநாயகர், கண்டா விநாயகர், சுமங்கள விநாயகர், மந்திர விநாயகர் என்று ஆறு மூர்த்தங்கள் ஆறும் ஆவரணத்தில் மோதக விநாயகர், சுமுக விநாயகர், துன்முக விநாயகர், கணப விநாயகர், அபர விநாயகர், ஆக்கினை விநாயகர், துவார விநாயகர், அவிமுத்த விநாயகர், என்று எட்டு மூர்த்தங்கள் ஏழாம் ஆவரணத்தில் ஆமோத விநாயகர், பாகீரத விநாயகர், அரிச்சந்திர விநாயகர், கபர்த்தி விநாயகர், பந்து விநாயகர் கனகவிநாயகர்என்று ஆறுமூர்த்தங்கள். இவ்வாறு ஐம்பத்தாறு மூர்த்தங்களென்று தேவகணங்கள் சொல்ல, இத்திருநாமங்களைக் கேட்டமாத்திரத்தில் ஏமகண்டராசன் முதலிய யாவர்க்குந் தெய்வசரீர முண்டாகிச் சோமகாந்த ராசனுடனே விமானத்திலேறி, விநாய லோகத்தைச் சேர்ந்து, கணேசமூர்த்தியினுடைய சாமீபபதவியைப் பெற்று வாழ்ந்திருந்தார்கள்.

சோமகாந்தராசன் அகண்டாகார பரிபூரண சோதிமயமாகிய விநாயகக் கடவுளுடைய சாரூப பதவியைப் பெற்றுப் பரமானந்த சாகரத்தின்மூழ்கியிருந்தனன். ஆதலால் இந்த மேலான புராணத்தை யாவராயினுஞ்சிரத்தையோடும்பத்தியோடுங்கேட்பாராயின்,

அவர்கட்குச் சனனம். மரணம் இடர், வறுமை, வியாதி, துக்கம், சோகம், மோகம், பாவம், அவரிட்டம், பகை, பயம், இடையூறு, மதம், பசி, கோபம், ஊக்கம், நரை, திரைமுதலிய துன்பங்களில் ஒன்றேனு நெருங்காது அன்றியும், சூரியகிரணமுஞ் சந்திரகிரகண முமாகின்றகாலத்தில், உருத்திரபூமியிற் சென்று, ஆயிரம் பாரம் பொன்னைக் கிரமப்படி சற்பாத்திர மறிந்து தானஞ்செய்த பயனும் போர்முகத்தி னின்றுஞ் சயம்பெற்று வெற்றிமாலை சூடிவந்தவர்கள் பெறத்தக்கபயனு மடைவார்கள். வேள்விமுன்னிலையில் யானைமுத லிய சகல பொருள்களையுந் தக்ஷிணையோடு தானங்கொடுத்தவர்கள் அடையும்பயன், இப்புராணத்தை ஒருதரம் வாசிக்கின்றவர்கள் அடையும்பயனுக்குச் சரியாகாது. மேலும் இப்புராணத்தைத் தன் கரத்தா லெழுதினவனும், ஒருவனுக்குத் திரவியந் தந்து எழுது வித்தவனும், கோடி கன்னிகாதானங்களையுங் கோடி கோதானங்க ளையும் நல்ல நியமத்தோடு செய்தவன் அடையும் பயன் யாதோ, அதனைத் தடையின்றி யடைவன். இப்புராணத்தை யெழுதிவைத் திருக்கின்றவீட்டில் அஷ்டபாக்கியமும் வந்து குடிகொள்ளும் அன் றியும், பூதங்கள் பிரேதங்கள் பாலகிரகங்கள் முதலானவைநெருங் காவண்ணங் கணேசமூர்த்தியானவர் சதாகாலமுங் குடியாயிருந்து அவ்வீட்டிலுள்ளோர்கட் கெல்லாம் எத்துன்பமும் அணுகவொட் டாமற் பாதுகாத்துவருவார் இப்புராணத்தைப் பூசிக்கின்றவர்களை யும், புந்தியிற் சிந்திக்கின்றவர்களையுங்கண்டு தரிசித்தபேர்கள், தங் கள் குலாசார வொழுக்கங்களிற் றவறிய அசுத்தர்களாயினும், உட னேசுத்தபவித்திரராகி நற்கதியிற் சேருவா ரென்றால், அதைநேரிற் பூசிப்பவர் முதலாயினோர் அடையும் பயனை எவ்வளவிற்றென் றுரைக்கப்படும்.

அந்தப் புண்ணிய சீலர்களை பிரமனாதி தேவர்களாலும் அகத் தியாதி முனிவர்களாலுந் தொழுதற் குரியவர்கள். அவர்கட்கே, * அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்து

---

* அணிமா மிகவுஞ் சிறிய வுயிர்தோறும் பரமகாஷ்டையாயச் சென்றிருத்தல் மகிமா மிகவுமுயர்ந்த மகமேருவைப்போலாக வேண்டுமெனிலாதல். இலகிமா மேருபாரத்தையொத்த யோகியையெடுத்தால் இலேசாயிருத்தல். கரிமா அணுப்போலிருக்குமியோகியையெடுத்தால் மேருபாரம்போலிருத்தல். பிராப்தி எவ்வுலகத்திலுந் தடையறச் சஞ்சரித்தல். பிராகாமியம் பரகாயப் பிரவேசம்பண்ணுதல், அந்தரசஞ்சாரஞ்செய்தல், பிராயச்சித்தபோகமனுபவித்

தல், மண்ணில் விண்ணில் உள்ளபொருள்கள், மூக்காலங்களையுந் தனது தேச காந்தியாலறிதல். ஈசத்துவம் சிவபெருமானைப்போலத் தன்னிச்சைவழியில் முத்தொழிலுஞ்செய்து சூரியன்முதலிய கோள்கள் தன் னேவல்கேட்க விள ங்குதல். வசித்துவம் தேவர்முதலிய உயிர்களையும் எல்லாவுலகங்களையுந் தன்வ சமாகக் கொள்ளுதல்.

வம், வசித்துவம் என்கின்ற அட்டமா சித்திகளுங கைகூடும். அவர் கட்கே, கற்பகவிருக்ஷம், காமதேனு, சங்கநிதி, பதுமநிதி, சிந்தா மணி முதலானவைகள் எதிர்நின் றேவல்புரியும் அவர்களே, அக்க ரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதபுராணம், வியாகரணம், நீதிசாத்திரம், சோதிடசாத்திரம், தர்க்கசாத்திரம்,யோகசாத்திரம் மந்திரசாத்திரம், சகுனசாத்திரம், சிற்பசாத்திரம், வைத்திய சாத் திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம் மதுரபா டனம், நாடகம், நிருத்தம், சததப்பிரமம், வீணை, வேணு, மிருதங் கம், தாளம், அத்திரபரீக்ஷை, கனகபரீக்ஷை, இரதபரீக்ஷை, கஜப ரீக்ஷை,அசுவபரீக்ஷை, இரத்தினபரீக்ஷை, சங்கிராம விலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடனம், வித்துவேடனம், மதன சாத்திரம், மோகனம், வசிகரணம், இரசவாதம், காந்தருவவாதம், பைபீலாவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப்பிரவேசம், ஆகாயகமனம், பரகாயப் பிரவேசம், அதிரிசியம், இந்திரஜாலம், மகேந்திரசாலம், அக்கினித் தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கி லத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம் என்கின்ற அறுபத்துநான்கு கலைஞானங்களினும், மநுஸ்மிருதி, அத் திரிஸ்மிருதி, விட்டுணுஸ்மிருதி, வாசிட்டஸ்மிருதி, யமஸ்மிருதி, ஆபத்தம்ப ஸ்மிருதி, யாஞ்ஞவற்கியஸ்மிருதி, பராசரஸ்மிருதி, ஆங்கிரசஸ்மிருதி, உசனஸ்மிருதி, காத்தியாயனஸ்மிருதி, சமவர்த் தஸ்மிருதி, வியாசஸ்மிருதி, பிரகற்பதிஸ்மிருதி, சங்கலிதஸ்மிருதி, சாதான்மஸ்மிருதி, கௌதமஸ்மிருதி, தக்கஸ்மிருதி, என்னும் பதி னெண்மிருதிகளினும், தத்துவப்பிரகாசிகை,தத்துவசங்கிரகம், தத் துவத்திரய நிர்ணயம் போககாரிகை மோக்ஷகாரிகை, நாதகாரிகை, பரமோக்ஷ நிராசகாரிகை, இரத்தினத்திரயம் என்னும் அட்டப்பிர காணங்களையும், லௌகிகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க் கம், மந்திரம் என்னும் ஞானநூல்களினும், வல்லவ ராவார்கள். அவ ர்கள் ஒருகாலத்தில் கோபிப்பார்களாயின், சுவர்க்கமுதலாகிய சக லபுவனங்களும்வெந்து நீறாய்விடும். அன்றியும், இப்புராணத்தைக்

கணபதிமூர்த்தி சந்நிதியின் முன்னரிருந்து அன்புடன் கேட்பார்களாயின், அவர்கள், கொலை களவு கள் குருநிந்தை பொய் ஆகிய பஞ்சமாபாதகங்களும், ஸ்திரீஹத்தி, கோஹத்தி, சிசுஹத்திமுதலாகிய அளவற்ற தீவினைகளு நீங்கப்பெற்று, அழகு, குணம், ஆயுள் குலம், சம்பத்து, வித்தை, விவேகம், தனம் என்கின்ற அட்டபாக்கியங்களையும், புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல் நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் எனனும் பதினறும்பேற்றினையும் அடைந்து கிடைத்தற்கரிய இந்திரபதவியைப்பெற்று வாழ்வார்கள்.

மேலும் இப்புராணத்தை இம்மையிற் சூத்திரர்கேட்டால் மறுமையில் வைசியராவார்கள் வைசியர் கேட்பாராயின் க்ஷத்திரியராவார்கள் க்ஷத்திரியர் கேட்பாராயின் பிராமண ராவார்கள். பிராமணர்கேட்பாராயின் தேவராவார்கள் தேவர்கேட்பாராயின் கணேசமூர்த்தியி னுடைய சாரூபத்தை யடைவார்கள் ஆசாரவீனர்களாயினும் இப்புராணத்தை ஆவலோடுங் கேட்பார்களாயின் பின்னர் தமக்கொருவர் நிகரில்லாத ஆசார பூசிதராவார்கள். கணேசமூர்த்திக்குரிய சதுர்த்தியிற் கேட்டவர்கள் இம்மையிற் சகல காமியார்த்தங்களையும்பெற்று மறுமையில் மோட்சார்த்தத்தை யடைவார்கள் இப்புராணத்தில் ஆங்காங் கறையப்பட்டிருக்கின்ற தோத்திரங்களெவ்வளவோ அவ்வளவுந் தினந்தோறும் பாராயணஞ்செய்து வருகின்றவர்கள் ஆணவம் மாயை கன்மம் என்கின்ற * மும்மலங்களினின்று நீங்கிக் கணேசமூர்த்தியினுடைய மெய்ஞ்ஞான சொரூபத்தையடைவார்கள். மேலும் இவ்வுலகத்தில் அவர்களால் வெல்லக்கூடாத காரியமென்ன விருக்கின்றது இப்புராணத்தை ஆதிதொட்டு அந்தம்வரையில் அன்போடுபடித்து அல்லது ஒருவர் படிக்கக்கேட்டுத் தானாதிகளைச்செய்து யாகாதிகளை முடித்து, புராணத் திருமுறையை யலங்கரித்து அருக்கியம், பாத்தியம், ஆசமனீயம், கந்தம் புட்பம், நைவேத்தியம், தூபம், தீபம், ஆலத்தி, கண்ணடி, குடை, சாமரம், ஆலவட்டம், நிருத்தம், கீதம், வாத்தியம் என்கிற சோட

* அவை செம்பிற் களிதம்போலவும், தண்டுலத்தைப் பற்றிய தவிடு, உமி, முளை, போலவும், ஆன்மாவைப் பந்தித்து நின்று வினைகளை யூட்டுவிக்கும். இவற்றுள் தண்டுலம் (அரிசி) ஆன்மா, தவிடு ஆணவமலம், உமி மாயாமலம், முளை கன்ம மலமாம்.

சவுபசாரங்களோடு பூப்பிரதக்ஷிணமாகத் திருவிழாவைச் செய்தவர்கள் விண்டுமுதலாயினோர் வணங்கத்தக்க கணேசமூர்த்தியினுடைய சாரூப்பியத்தையடைவார்கள் இப்புராணத்தைக் கன்னிகை கேட்பாளாயின் நல்ல கணவனைச் சேருவள் மலடி கேட்பாளாயின் அழகிய மக்களைப்பெறுவள். தரித்திரன கேட்பானாயின் மிக்க பாக்கியமுடையவனாவன். வித்தையில்லாதவன் கேட்பானாயின் சிறந்த வித்துவானாவன் அன்றியும் எவனெவன் எந்தெந்தப் பொருள்களையடைய விச்சைகொண்டிருக்கின்றானோ அவனவன் அந்தந்தப்பொருளையடைந்து கணேசமூர்த்தியினுடைய கிருபையைப்பெற்று வாழ்ந்திருப்பன். இப்புராணங்கேள்வி மகத்துவத்தினாலே குறள், கூன், ஊமை, செவிடு, குருடு, முடம், உறுப்பு மயக்கம், உறுப்பில் பிண்டம் ஆகிய எண்வகையுடற் குறைகளும் நீங்கும். பதினெண் புராணங்களை முழுவதுங்கேட்ட பயனும், சகலதீர்த்தங்களில் அன்போடாடியபயனும், இவ்வொருபுராணத்தைக் கேட்பதினாலுண்டாகும் பதினாயிரம்வருடம் அகக்னிநடுவில் ஒற்றைக்கால் அங்குட்டவிரலையூன்றித் தவஞ்செய்வதினா லடையும்பேறு இப்புராணத்திற் பத்தத்தியாயத்தைப் பயபக்தியோடுங் கேட்பதினால் அடையும். அந்தியகாலவரையில் இப்புராணத்தைக்கேட்டுப் பல தானங்களைச்செய்வாராயின், மறுமையிற் சக்ரவர்த்திகளா யிருப்ப தன்றிப் பிறந்தநாட்டொடங்கி மரணகாலம்வரையிற் காசிநகரில் வாசஞ் செய்தவர்கட்குண்டான பயனையு மடைவார்கள்.

இப்புராணத்தைப்படித்தல், அதன்பயனைக்கேட்டல், அதைப்பூசித்தல், தங்கள்கையாலெழுதல், எழுதி யேற்போருக்குக் கொடுத்தல், ஒருவரைப்படிப்பித்தல், ஒருவரைக்கேட்பித்தல், ஒருவரைப்பூசிப்பித்தல், ஒருவரைக்கொண் டெழுதுவித்தல் என்கின்ற புண்ணியங்களில் ஒருபுண்ணியத்தைக் கைவிடாது காக்கின்றவனெவனோ அவனைக்கண்டவுடன் தவிசளித்தல், கைகழுவ நீர்தரல், கால்கழுவநீர்தரல், ஆசமனநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தரல், தேய்வைபூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசிதூவல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுதேந்தல், அடைகாய்தரல், மந்திரமலரா லருச்சித்தல் என்கின்ற சோடசவுபசாரங்களுள் ஒன்றைச்செய்தாலும் அவர்கள் சிவபெருமானுடைய சூலாயுதத்திற்கும், விண்டுவினுடைய சக்கராயுதத்திற்கும், இயமனுடைய பாசத்திற்கும், மற்றொருவனுடைய தண்டத்திற்கு மஞ்சார்கள். சகல புவன கர்த்தராகிய கணேசமூர்த்திக் கொப்பான மற்

றொருமூர்த்தியும், அவர்மகிமையைக்காட்டுகின்ற இப்புராணத்தை ப்போல மற்றொருபுராணமும், அதைவாசித்தவர்கள் அடையும்பய ப்போல மற்றொருபயனும் சுவர்க்கமத்தியபாதலமென்கின்ற திரி லோகங்களினுமில்லை இதுசத்தியமேயென்று சகலசுருதிகளுங்கூறு மாயின் இதன்மகத்துவம் என்போலிகளால் அளவிட் டுரைக்கும் பான்மையையுடையதோ? பொற்கொன்றை சூடிய சடாமகுடத்தி னையுடைய கணேசமூர்த்தியின் மகத்துவத்தை யோதுகின்ற இப்பு ராணமானது தன்மார்த்த காமமோக்ஷமென்கின்ற நான்குபுருஷார் த்தங்களையுஞ் சேமித்துவைத்திருக்கின்ற பொக்கிஷமென் றெண் ணக்கடவீர்கள் என்று சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக் குக் கூறினர்

சோமகாந்தன் முத்தியடைந்தபடல முற்றிற்று.

——:O:——

## மூவர் உபாசித்த படலம்.



கொற்ற வெண் குடையி னீழற் குவலய முழுதுங் காத்த
வெற்றி வேன் மன்ன வேதன் வியாதனுங் குபாசித்த
திற்றென லாகு மூவ ரினிதுபா சித்த வாறு
தெற்றெனத் தெளிக வென்று செப்புவன் பிருகு மேலோன்.

ஐம்புலங்களை நிக்கிரகித்து அரிய தவங்களைச் செய்து சிறப் பெய்திய சௌநகாதி முனிவர்களே? விநாயக மூர்த்தியினுடைய புராணகேள்விமகத்துவததால்வேதவியாசமுனிவரும், சோமகாந்த ராசனுமடைந்த பேற்றினைச்சொன்னேம், இப்பால் அத்தன்மைத் தாகிய மேலானபுராணத்தைப் பிருகுமகாமுனிவர் திருவாய்மலர்ந் தருளி யிருக்கின்ற முறைமைப்படி மூவருபாசித்த வரலாற்றினைச் சொல்வோங்கேட்பீராக பூர்வத்தில் ஒருபிரமப்பிரளய முண்டான போது * பன்னிரண்டுசூரியர்களும் உதயமாய் நூறுவருடம் மழை யில்லாமல் எரித்துப் பஞ்சபூத பௌதிகாத்மகமா யுள்ள சகங்களை யெல்லாம் பஸ்மஞ்செய்து பூமியைத் தாங்கிக்கொண் டிருக்கின்ற ஆதிசேடனுடைய பணமகுடங்களைத்தகிக்க, அவனுடைய முகங்க

---

* பன்னிருசூரியர்களாவன-தாததுரு, சக்கரன், அரியமன், மித்திரன், விட்டுணு, அஞ்சுமான், இரணியன், பகவான், விவச்சுவான், பூடா, சவித்திரு துவட்டன் என்பவராம்.

ளினின்றுங் காளகூடவிஷாக்கினிபிறந்தது. அந்த விஷாக்கினியுஞ் சூரியாக்கினியும் ஒன்றாகக்கூடி ஆதிசேடன்முதற் றுவாதசாதித்தர்களையும் எரித்து நீருக்கும், அவ்வாறுநீருக்கிய அக்கினிகளினின்றுஞ் சத்தமேகங்கள்பிறந்து நூறுவருடபரியந்தம் யானைத் துதிக்கை போல நீர்த்தாரைகளைவருஷிக்க, அது எங்குநிறையும். அவ்வருஷஜலமும் பஸ்பமும் ஒன்றாகக்கலந்து வாயுவினால்ஸ்தம்பிக்கப்பட்டுநிற்க அதினின்றும் வடவாமுகாக்கினிபிறந்து ஜலத்தையெல்லாங் கிரகித்துப் பின்னர் அவ்வடவாக்கினி பிரசண்டவாயுவிலொடுங்கும் அவ்வாயு ஆகாயத்திலொடுங்க, ஆகாயம் ஆன்மாவிலொடுங்க, ஆன்மாப்பிரமாவிலொடுங்க, பிரமா விண்டுவிலொடுங்க விண்டு உருத்திரனிலொடுங்க, உருத்திரன் மகேச்சுரனி லொடுங்குவர் மகேச்சுரன் சதாசிவனிலொடுங்க சதாசிவன் விந்துவிலொடுங்க, விந்து நாதத்திலொடுங்கும், நாதஞ்சத்தியிலொடுங்க, சத்திசிவத்திலொடுங்க, சிவம்பரத்திலொடுங்கும் பரம் பராபரத்தி லொடுங்காநிற்கும், அப்பராபரமொன்றுமே எல்லாங்கடந்த தத்துவமுடிவிலே பரப்பிரமசொரூபமாகி விளங்காநிற்கும் அப்பிரம சொரூபியாகிய பரமான்மா வானவர் நால்வகைத்தோற்றம் எழுவகைப் பிறப்பு எண்பத்துநான்குநூறாயிரம்யோனி பேதங்களாயுள்ள * ஆன்மாக்களை யெல்லாம கன்மங்கட்கீடான சரீரங்களை யெடுத்து ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆதியாத்மிகம் என்கின்ற ‡ தாபத்திரயாக்கினிகளாற் றகிக்கப்படுந் துயரங்களைநீக்கிச் சிறிது இளைப்பாறும்படியாகத் தம்மிடத்திலொடுக்கி வைத்துக்கொண்டிருந்து பிரளயம் நீங்கியவுடன் முன்போ

* நால்வகைத்தோற்றமாவன:—பை-முட்டை-வித்து-வியர்வையாம். எழுவகைப்பிறவியாவன: தேவர்-மக்கள்-விலங்கு-புள்-ஊர்வன-நீர்வாழ்வன-தாவரமாம். எண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதங்களாவன: தேவர்பதினுன்குநூறாயிரம், மக்கள் ஒன்பதுநூறாயிரம், விலங்கு பத்துநூறாயிரம், புள் பத்துநூறாயிரம், ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பத்துநூறாயிரம் தாவரம் இருபதுநூறாயிரமாம். ‡ ஆதி தைவிகமாவது மாதாவின் கருப்பத்திலிருக்கும்போது உண்டாகின்ற விசனமும், சனன மரணத்திலுண்டாகின்ற விசனமும், இயமதண்டனையினாலும், நரகத்தினாலும் வருகின்றவிசனமுமாம், ஆதி பௌதிகமாவது குளிர், வெப்பம், மழை, காற்று, மின்னல், இடி சுவர்விழுதல், கல்விழுதல் முதலியவற்றால் வருந்துன்பமாம் ஆதியாத்மிகமாவது சரீரத்தினாலும் மனதினாலும் வருந் துக்கமாம். அதனை "ஆதிதைவிக மாதிபௌதிக-மாதியத்தி யான்மிக மென்ன-வோதிய-துக்கமூன்றில தியான்மிக-மெய்யின் மனத்திலையயி லிரண்டே-வளியிற்பித்தில் விளையும்விளையி லூனுறுதொழிநோயி லுதிப்பிற் கொட்பில்-வெப்பிற் சூலையின்மக்களில் விலங்கி-லவு

கையிற் கள்வரிற் பறவையி னிருதரின்-மைந்தரின் மகளிரின் மனத்திடைத் தணப்பிற்-பேரறம்வளப்பிற் பெருந்திரு நுகர்விற்-சிரியயாக்கை மாதுயர்மாக மனத்துறு தாகினைப்பருகுசோக-மறிவுருவாக்க மடைவனல்பொறாமை-மான மாக்கலம் பூணது மறுத்தல்-இச்சையைநினைத விருஞ்சினமிகுத-லினையவை முதலாநினைவருந் திறத்த-வாதிபௌதிகஞ் சீதமாமழை-யுருப்பமிர் வெனிலு ட்குவரு கடுங்கா-லிருள் கிழிமின்பெருவிறலசனி மன்னுயிர்க்குறுகண் டுன் னிய வருந்த-லாதியாய வீவருந்திறத்த-வாதிதைவிகம் பேதையாள்வயின்-கரு க்குழியழுங்கல் பிறப்புறும்போது-இளையருந் தீயமவாயில் பேதைமை-மட ங்கலாருயிர்தொடங்கின வவ்வழி-யாவருர் விழைபாக்கோள்வாய் நிரயத்து-வீ ழ்ந்தனவெழா அவான்கழிதுன்ப-மினையமாலைய" என்னும் ஞானமிர்தச்செய் யுளானறிக,

லவே அவைகட்குத் * தனுகரண புவனபோகங்களைத் தந்து கன்மங்களைப் புசிப்பித்து அக்கன்மவொப்பில் மலசம்பந்தமா யிராநின்ற பாசபந்தங்களைப்போக்கி முத்தியிற் சேர்க்கு நிமித்தம் மீளவுஞ் சிருட்டி-திதி-சங்காரம் என்கிறமுத்தொழில்களை நடப்பிப்பதற்குத் திருவுளங்கொண்டு வக்கிரதுண்ட விநாயகராகச்சகளீகரித்து இராசதம் சாத்துவிகம்-தாமதம் என்கின்ற தமது முக்குணங்களி னின்றும் பிரமன்-விண்டு உருத்திரன் என்று மூவர்களுதித்து வருமாறு அவர்கட்கு உருவையும் அறிவையுமுண்டாக்கியருளினார் அவ்வாறவர்க ளுற்பத்தியாகிய பின்னர்த் தங்களைப் படைத்தருளிப் பரப்பிரம சொரூப மின்னதென் றறியவேண்டுமென்று வெறுவெளிகளெங்குந்தேடிக்காணாமல் ‡ ஆயிரந் தேவவருடந் தவஞ் செய்தார்கள். அத்தவத்திற்குப் பரப்பிரம சொரூபியாகிய வக்கிரதுண்ட மூர்த்திக்குக் கிருபைசுரந்து கோடிசூரியப் பிரகாசத்தினும அதிகசோதியைவீசுகின்ற திருவுருவமும் நவரத்நகிரீடம், குண்டலம், புஜகவசம், சரப்பளி, பதக்கம், பாதச்சிலம்புமுதலாகிய ஆபரணங்களும், துதிக்கையும், நீண்டு வளர்ந்திருக்கின்ற தந்தங்களும், மதத்தைப் பொழிகின்ற யானைமுகமும்; சத்தி, கேடகம், வேல், வில் என்னுமாயுதங்களைத் தரிக்கின்ற நான்கு திருக்கரங்களும், தாமரைமலர் போன்ற இரண்டு திருவடிகளும், சந்திர ஆரத்தினையுங் கொன்றை மாலையினையுந் தரித்திருக்கின்ற அழகிய மார்பும் சகல லோகங்களையும் ஓர் நொடிப்போதிற் பஸ்மபடலமாக்கவல்ல நுதல்விழியுங்கொ

* தனு - உடம்பு. கரணம் - மன. முதலியகருவி. புவனம் – இடம். போகம் – அனுபவிக்கப் படும்பொருள். ‡ மானுடவருடம் ஒன்று கழிந்தால் தேவர்கட்கு ஒருநாளாகும். இப்படி மூந்நூற் றறுபத்தைந்து தினங்கொண்டது ஒருவருடம்.

ண்டு அவர்களெதிரிற் பிரத்தியக்ஷமாக உடனே அம்மூவருக்கும் அச்சமும் அன்புமுண்டாகிச் சரீரந்தடுமாற நெக்குவிட்டு நெஞ்சமுருகிக் கரங்களைச் சிரமேற்குவித்தவண்ணஞ் சயசயவென்றெழுந்து அவர்களிச்சையிற் றோன்றியபடி யெல்லாம் ஆடிப்பாடி அநந்தமுறைவலம்வந்து பூமியில்வீழ்ந்து அட்டாங்கமாக நமஸ்கரித்து ஆனந்தபரவசங் கொண்டு தோத்திரஞ்செய்வ ராயினர்.

கற்பமாய் நிறைந்தவா நந்தபூ ரணமாய்
நிருவி காரமாய் நிர்க்குண மாயத்து விதமாய்
நிருவி சேடமாய் நிரஞ்சன மாகியொன் றாகு
நிருமி தப்படாக் கணேசனின் னீள்கழ றொழுதாம். (க)

பிரம மாயொளி யாய்நிரா காரமாய்ப் பெரிதாய்த்
தரணி யாதிதத் துவமெலாங் கடந்ததத் துவமாய்
வரமெ லாந்தரும் வள்ளலா யேகமாய் வதியும்
பரம னாகிய கணேசனின் பதமலர் தொழுதாம் (உ)

என்று நீங்குறாத் திருவுரு வுடையதா யெங்கு
மொன்றி நின்றுணர்ந் திடுமறி வானந்த வுருவாய்த்
துன்றும் யோகியர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக் கணேசனின் றிருவடி தொழுதாம். (ங)

உலக கார ண கார ண மாயுயிர்க் குயிரா
யிலகு ஞானியர் தமையிழந் தெய்துநற் பேறாய்ப்
பலவு மாய்ப்பரப் பிரமமாய்ப் பரேசமாய்ப் பரமாய்த்
திலக மாகிய கணேசனின் சேவடி தொழுதாம். (ச)

சகல லோகமும் படைத்தளித் தழிக்குந்தற் பரமா
யகில லோகத்தும் புகலிடந் தனக்கிலா வமைவாய்ப்
புகலு லோகங்க ளனைத்திற்கும் புகலிடந் தானும்
பகவ னாகிய கணேசனின் பதவிணை தொழுதாம். (ரு)

உகத்துக் காதியாய்த் தேவருக் காதியா யுலவாச்
சுகத்துக் காதியாய்ச் சுரர்களுக் கீசராய்ச் சுடரும்
மகத்துக் கீசராய்க் கணங்களுக் கீசராய் மகிப்போ
ரகத்துக் கூடிய கணேசனின் னடியிணை தொழுதாம். (சா)

இராச தத்தொழி லாகிய சிருட்டியை யியற்ற
விராவி ராசதத் துருக்கொடு பிரமனுய் மேலாய்ப்

பராவு வித்தைக ளனைத்திற்கும் பயில்பிறப் பிடமா
யொரா து நின்றருள் கணேசநின் னொளிர்பதந்தொழுதாம்.

சோர்வி லாதசாத் துவிதநற் றொழிலெனுந் திதிக்குச்
சார்வ தான்தா மதந்தனி லுருவுகொண் டரியாய்த்
தீர்வி லாப்பகை யசுரரைச் செகுத்திடுந் தேவர்க்
கார்வமே யருள் கணேசநின் னருட்பதந் தொழுதாம். (௮)

தாம தத்தொழி லானசங்காரமாற் றுதற்குத்
தோம கற்றுசாத் துவிகத்திற் றோன்றுருத் திரனு
யேம முற்றிமை யோர்முனி வோரெலா மிசைஞ்சச்
சேம வைப்பதாங் கணேசநின் சீரடி தொழுதாம். (௯)

கிரண பந்தியாற் பயிரையுங் கிளர்சுவைப பெருக்காற்
பரவு தேவர்க டம்மையு மகிழ்விததுப் பார்ப்பார்க்
கரச னுயுல கத்துவெப் பறுந்திடுந் திங்கட்
சொருவ மாகிய கணேசநின் றுணையடி தொழுதாம். (௰)

ஒளிப்பி ழம்பதா யோகவா யுவினுரு வாகி
விளிப்பில் காலங்க டெரிப்பதாய்த் தொழிலெல்லாம் விளைத்துக்
களிப்ப தாய்ப்பல சத்திய தானசெங் கதிராய்த்
தெளிப்ப நின்றருள் கணேசநின் றேசடி தொழுதாம், (௧௧)

நிரப்பி றன்மமாய்த் துறக்கமாய் நிறைந்ததத் துவமாய்த்
தரைச்சொ ரூபமாய்ச் சமுத்திர மாய்த்திசைச் சுரராய்க்
கரப்பி லாவுலக னைத்துமாய்க் கலந்துநின் றருளும்
பரப்பி ரமமாங் கணேசநின் பாதங்க டொழுதாம். (௧௨)

இவ்வாறு தோத்திரங்கள் செய்து சகலபுவனாதார கர்த்தனே! தேவரீருடைய பாதாரவிந்தங்களைத் தரிசித்தபேர்களெல்லாஞ்சகல துன்பங்களும் நீங்கிப் பேரின்ப சுகத்தை யடையத் தக்கவர்களா

(௪) தமை—பசுபோதங்களை, உற்பேறு—முத்தி. (௫) தற்பரம் - தன்—ஆன்மாவுக்கு, பரம்—மேலானவன், புகலிடம்—பற்றுக்கோடு, ஆதாரம். பகவன்—ஐசுவரியம், வீரியம், புகழ்-திரு-ஞானம் - வைராக்கியம் - என்னும் அறுகுணங்களையு முடையவன் (௬) மகத்து—மகத்துவம். ஈசர்-மகேசுரர். கணங்கள்—பதினெண் கணங்கள், (௮) சாத்துவிகத்தில் தாமதகுண வுருவினர் விட்டுணு வென்க. (௯) தாமதத்திற் சத்துவ குணவடிவர் உருத்திரர் என்க ண்டுக் கூறிய உருத்திரர் சிகண்டருத்திரராம். தோம்—முக்குற்றங்கள்.

வார்கள். அடியேங்களுந் தேவரீரைச் சரணுகவடைந்தோம் யாங்கள் கிருதார்த்தர்களாகும்படி இரக்ஷிக்க வேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள்,

மூவருபாசித்தபடல முற்றிற்று.

---

# மூவர் வரம்பெறு படலம்.

என்று மூவ ருபாசித்த வியல்பிது வாமென்
றன்று நான்முகன் வியாதனுக் கருளிய தாக
நன்று தேர்ந்தனை யினியவர் பெற்றநல் வரமு
நின்று கேளென நிகழ்த்துவன் பிருகுமா தவனே.

கணேசபாத சேவிதராய முனிவர்களே! மூவர்கள்மீது சர்வாநுக்கிரகராய், அநாதிமலமுத்தராய், சர்வவியாபகராய் நித்தியராய் நித்தியாநந்தராய், சுவதந்திரராய்-சர்வஞ்ஞராய்-சர்வகர்த்தாவாய் அசலராய், சின்மாத்திரமூர்த்தியாய், அதுலராய், அதிசூக்குமராய், அதிமகானுய், சாந்தராய், சர்வதோமுகராய், நிருபாதிகராய் சுவபாவப்பிரகாசராய் அதிபரமாப்தசதியாயுள்ள விநாயகக்கடவுள் கிருபை வைத்து திருநோக்கஞ் செய்தருளித் திருவாய் மலர்ந்தருளுகின்றார். அன்பர்களே! நீங்கள் செய்த தோத்திரங்கட்கு மகிழ் புற்றேம். நீங்கள் கருதிய வரங்களைக் கேட்பீராகவென்று திருவாய் மலர்ந்தருளலும், பரப்பிரமசொரூபியே! தேவரீருடைய திவ்யசரணுரவிந்தங்களில் அடியேங்களுக்குத் திரமான பத்தி யுண்டாகும்படி வரங்கொடுத்து, யாங்கள் நடந்துகொள்ளவேண்டிய பணியினையும் அருள்செய்தால், அதை அடியோங்கள் நஞ்முடிக்குப் பொன்முடியாக வணிந்து, நடாத்திவரக் கடவோமென்றார்கள். அதற்கு விநாயகக்கடவுள் சந்தோஷித்து நமதுமுக்குணங்களினின்று மூண்டானவர்களே, நம்மிடத் துங்கட்கு அளவற்ற பத்திகள் பெருக்கத் தக்கதான வரத்தைத் தந்தோம் நீங்கள் நடந்துகொள்ளவேண்டிய பணியுஞ் சொல்லுகின்றோம். அதாவது இராசத வடிவிற்றோன்றிய பிரமனே! நீ இராசத தாமத நீழலிலிருந்து சகல சீவராசிகளையுஞ்

---

(கக) கிரணபங்தி—சூரியகிரணவரிசை. ஊதை…(சந்திரனது) அமிர்தகிரணம் சொருவம் ஸ்வரூபம் என்னும் வடமொழித் திரிபு வடிவம் என்பது பொருள். (கஉ) தத்துவம்—உண்மைப்பொருள் திசைச்சுரர்—திக்குப் பாலகர் தரை—பூமி.

சிருட்டிசெய்யக்கடவை தாமதவழியிற்றோன்றிய விண்டுவே! நீசாத்மீகத் தொழிலிலிருந்து யாவையுமிரட்சித்து வரக்கடவை. சாத்விக வடிவிற்றோன்றிய உருத்திரனே! நீ தாமதத்தொழிலிலிருந்து யாவையுஞ் சங்காரஞ்செய்து 'வரக்கடவை யென்றருளிச்செய்து, வேதாகமபுராண கலைகளைக்கொண்டு யாவையுஞ் சிருட்டி செய்யத்தக்க சத்தியைப் பிரமனுக்கும் யோகத்தினால் வேண்டிய வடிவங்களைக்கொண்டு யாவையும் இரக்ஷிக்கத்தக்க சத்தியை விண்டுவுக்கும், ஏகாக்ஷர சடாக்ஷர மந்திரங்களைக்கொண்டு எங்குந தானாகவிருந்து யாவையுஞ் சங்காரஞ்செய்யத்தக்கசத்தியை உருத்திரருக்குங் கொடுத்தருளினார்.

மூவர் வரம்பெறுபடல முற்றிற்று.

## விசுவரூபங் காட்டியபடலம்.

இன்ன வாவர மூவரும் பெற்றதென் றறிவேன்
மன்னர் மன்னவன் மகிழ்கொள வுரைத்தருள் வரதன்
றன்னுளேயுல கனைத்தையுங் காட்டுதென் மையயு
முன்னி யோதுத றொடங்கினன் முதிர்புகழ்ப் பிருகு.

சௌனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தியைப் பிரமன்முதலியமூவரும் அநுட்டித்து வரம்பெற்றவரலாற்றினைச்சொன்னோம். இப்பால் அம்மூவருக்குந் தமது விசுவரூபங்காட்டி யருளிய திருவிளையாடலைச் சொல்லுவோங் கேட்பீராக இவ்வாறு கணேசமூர்த்தியானவர் அம்மூவருக்கும் வரங்களை யளித்த பின்னர், பிரமதேவன் மீளவும் வணங்கித்துதித்து தேவோத்தமராகிய கிருபாகரமூர்த்தியே! உலகங்களையெல்லாம் அடியேனைச் சிருட்டிசெய்யும்படியாகத் தேவரீர் கிருபைசெய்தலால். அவைகளை யெவ்வாறு சிருட்டிசெய்வதோ அதனையுங் கடாக்ஷித்தருளவேண்டுமென்று இரந்தனன். அதற்குக் கருணாகரமூர்த்தியாகிய வக்கிரதுண்ட சுவாமிகள் அவன்மீது கடைக்கண்புரிந்து, பிரமனே! நீ நமது உதரத்துள்ளே புகுந்து, அங்கிருக்கின்ற சகலலோகங்களையும் பார்த்து, அவ்வாறே சிருட்டிசெய்யக்கடவையென்று திருவாய்மலர்ந்து, தமது துதிக்கையிலிருக்கின்ற புழையின்வழியாக அப்பிரமனையெடுத்துவிழுங்கினர். அதைப்பார்த்துக்கொண்டிருந்த விண்டுவும் உருத்திரரும் அவ்விரா

யகக்கடவுளைத் தீர்க்கதண்டன் செய்து கைகூப்பிநிற்க, அவர்களை யும் அப்புழையின் வழியாகவேயெடுத்து விழுங்கினர் பின்னர் அம் மூவரும் அவர் வயற்றினுளிருந்து பார்க்குமளவில், அதில் அளவிற ந்த அண்டங்கள் அடங்கியிருப்பக் கண்டார்கள்.

அகட்டையே யளவிறந்த வண்டங்க ளூறக்கிடந்த
பகட்டெழில்சே ரவற்றொன்ற னுட்புகுந்து பார்ப்பளவிற்
றகட்டுவரா னுகளகடல் சூழ் தரைநடுவு மதன்கீழ்மேன்
முகட்டளவும் பலவுலகு முதிர்வளத்தி னிரந்தனவால். (க)

நாதங்க ளோரிடண்டாய் நலமருளுஞ் சதாசிவமாய்ப்
பாதங்க ளொருநான்கும் பதநான்கும் பயில்வித்த
வேதங்க ளறியாத விநாயகர்தந் திருவருளாற்
பூதங்க ளோரைந்தும் புரையின்றி யெதிர்கண்டாம். (உ)

பண்டையூ ழிகடோறும் படைத்தவரும் பரித்தவரு
மண்டுபே ருலகனைத்தும் வருத்தமறத் துடைத்தவருங்
கொண்டபே ரதிகாரங் கொள்ளாது விடுத்தருளே
கண்டுபே ரானந்தக் கடன்முழுக வெதிர்கண்டாம். (௩)

அதிகாரம் புரிகின்ற வலரவனு மாயவனு
நதிபாயுஞ் சடைமவுலி நாயகனு மெண்டிசையின்
வதிவோரு மருக்கருருத் திரர்வசுக்கண் மருத்துவருங்
கதிசேரு நவகோளுங் காதலிப்ப வெதிர்கண்டாம். (ச)

கின்னரர்கந் திருவர்கரு டர்களியக் கர்கிம்புருடர்
தந்நிகர்விஞ் ஞையர்சித்தர் சாத்தியர்பன் னகருரகர்
துன்னியமற் றமரரையுந் தொகுமசுர ராக்கரையு
மன்னியவன் னவர்க்குரிய மாதரையு மெதிர்கண்டாம். (ரு)

ஓவிலருட் சனகாதி யோகியர்நா ரதராதி
தேவர்முனி வரர்வசிட்டர் முதலாகச் செப்பலுறும்
பாவுபுகழ் பிரமமுனி வரர்பயின்மா னிடர்தமையுந்
தாவின்மலை கடலாறு தடமிவையு மெதிர்கண்டாம். (சு)

சிங்கமுதன் மிருகங்க டிகழ்கலுழன் முதற்பறவை
தங்கியகற் பகமாதி தருகாம வல்லிமுதற்
கொங்கிணர்ப்பூங் பசுங்கொடியம் புயமாதி பலமலரும்
பங்கமறு சராசரமாம் பரப்பனைத்து மெதிர்கண்டாம். (எ)

அவ்வண்டங்களாகிய எண்ணிறந்தன. ஒவ்வொரு அண்டங்களிலும் எண்ணில்பேதமான விசித்திர சிருட்டிகள் காணப்பட்டன, அவையாவன.—

மேலுலகங்களாகிய—பூலோகம்-புவலோகம்-சுவலோகம்-சனலோகம்-தபோலோகம்-மகாலோகம் சத்தியலோகம்-என்பவற்றையும்,

கீழுலகங்களாகிய - அதலம்-விதலம் சுதலம்-தராதலம்-இரசாதலம் மகாதலம்-பாதலம்-என்பவற்றையும்,

நவ வடிவங்களாகிய—சிவம்-சத்தி-நாதம-விந்து-சதாசிவன்-மகேசுரன்-உருத்திரன்-விஷ்ணு-பிரமன் எனபவற்றையும்,

நான்கு பாதங்களாகிய—சரியை-கிரியை- யோகம்-ஞானம்என்பவற்றையும்,

நான்குமுத்திகளாகிய—சாலோகம் - சாமீபம் சாரூபம் - சாயுச்சியம் என்பவற்றையும்,

பூதங்களாகிய—பிருதிவு-அப்பு-தேயு-வாயு- ஆகாயம் என்பவற்றையும்,

நிலங்களாகிய—குறிஞ்சி பாலை-முல்லை - மருதம் நெய்தல் என்பவற்றையும்,

உலோகங்களாகிய—பொன்-வெள்ளி-செம்பு-இரும்பு - ஈயம் என்பவற்றையும்,

மணிகளாகிய—கோமேதகம்- நீலம் பவளம்-புஷ்பராகம் - மரகதம் மாணிக்கம் முத்து-வைடூரியம் வைரம் என்பவற்றையும,

தீவுகளாகிய—நாவல்-இறலி-குசை-கிரௌஞ்சம் புஷ்கரம்- தெங்கு-கமுகு என்பவற்றையும்,

வேதங்களாகிய—இருக்கு-யசுர் - சாமம் அதர்வணம் என்பவற்றையும்,

உப வேதங்களாகிய—ஆயுள்வேதம்-அருத்தவேதம்-தநுவேதம் காந்தருவவேதம் என்பவற்றையும்,

வேதாங்கங்களாகிய—மந்திரம்-வியாகரணம்- நிகண்டு-சந்தோவிசிதி-நிருத்தம்-சோதிடம் என்பவற்றையும்,

சாத்திரங்களாகிய—வேதாந்தம்- வைசேஷிகம்-பாட்டம்-பிரபாகரம் பூர்வமீமாஞ்சை-உத்தரமீமாஞ்சை என்பவற்றையும்,

சாதிகளாகிய—பிராமணசாதி-க்ஷத்திரிய சாதி-வைசியசாதி-சூத்திர சாதி என்பவற்றையும்,

ஆச்சிரமங்களாகிய—பிரமசரியம்-கிருகத்தம்-வானப்பிரத்தம் - சந்நியாசம் என்பவற்றையும்,

திக்குப்பாலகர்களாகிய—இந்திரன்-அக்கினி-யமன்-நிருதி-வருணன் வாயு-குபேரன்-ஈசானன் என்பவர்களையும்,

சூரியர்களாகிய—தாதரு- சக்ரன்-யமன் - மித்திரன் - வருணன்-அஞ்சுமான்-இரணியன்-பகவான்-விவச்சுவான்-பூடணன்-சவித்துரு-துவஷ்டா என்பவர்களையும்,

உருத்திரர்களாகிய—மகாதேவன்-அரன்- உருத்திரன் - சங்கரன்-நீலலோகிதன்-ஈசானன்-விசயன்-வீமன்-பவன் கபாலி-சௌமியன் என்பவர்களையும,

வசுக்களாகிய— அனலன்-அனிலன்-ஆபற்சைவன்-சோமன்-தரன்-துருவன்-பிரதியூசன்-பிரபாசன் என்பவர்களையும்,

வாயுக்களாகிய—பிராணன்-அபானன்-சமானன்-உதானன்- வியானன்-நாகன்-கூர்மன-கிருகரன்-தேவதத்தன்-தனஞ்சயன் என்பவர்களையும்,

கிரகங்களாகிய—சூரியன்-சந்திரன்- அங்காரகன் புதன் - பிருகற்பதி சுக்கிரன்-சனி-இராகு-கேது என்பனவற்றையும்,

புறப்புறச்சமயங்களாகிய—உலகோயதம் - நால்வகைப் பௌத்தமம்-ஆருகதம் என்பவற்றையும், அவற்றுள் - சௌத்திராந்திகம், யோகாசாரம, மாத்மீகம், வைபாஷிகம் என்பன பௌத்தமதப் பிரிவாம்,

புறச்சமயங்களாகிய—தார்க்கீகம்- மீமாஞ்சை-மாயாவாதம் - சாங்கியம்-யோகம்-பாஞ்சராத்திரம் என்பவற்றையும்,

அகப்புறச்சமயங்களாகிய—சைவம் - பாசுபதசைவம்-மகாவிரத சைவம்-காளாமுகசைவம்-வாமசைவம்-பைரவசைவம் என்பவற்றையும்,

அகச்சமயங்களாகிய—பாஷாணவாதசைவம் - சங்கிராந்த வாதசைவம்-அவிகாரவாதசைவம்-பரிணாமவாதசைவம் - சுத்தசைவம்-பேதவாதசைவம் என்பவற்றையும்,

கணங்களாகிய—தேவர்-சித்தர்-அசுரர்-தைத்தியர்-கருடர் - கின்னரர்-கிருதர்-கிம்புருடர்-காந்தருவர்-இயக்கர்-விஞ்சையர்-பூதர் பைசாசர்-அந்தரர் முனிவர்-உரகர்-ஆகாயவாசிகள்-போகபூமியர் என்பவர்களையும்

குலமலைகளாகிய—கயிலை-இமயம்-மந்தரம் விந்தம்-நிடதம் - ஏமகூடம் நீலம் என்பவற்றையும்.

மேகங்களாகிய—சம்வர்த்தம்- ஆவர்த்தம் புஷ்கலாவர்த்தம் - சங்காரித்தம்-துரோணம்-காளமுகி-நீலவருணம் என்பவற்றையும்,

சமுத்திரங்களாகிய—உப்புச் சமுத்திரம்-சுத்தோதக சமுத்திரம்-பாற்சமுத்திரம் தயிர்ச்சமுத்திரம் - நெய்ச்சமுத்திரம் - கருப்பஞ்சாற்றுச்சமுத்திரம் தேன்சமுத்திரம் என்பவற்றையும்,

நதிகளாகிய—கங்கை - யமுனை-சரசுவதி- நருமதை-காவேரி-குமரி-கோதாவரி என்பவற்றையும்,

அந்தந்த அண்டங்கள்தோறும் சென்று அளவிறந்த யோனிகளில் அநந்தம்பேர்களாக விளங்கியிருக்கின்ற சகல சீவராசிகளையும் கண்டார்கள். கடற்கரையின்கணுள்ள நுண்ணிய மணல்களையெண்ணி அளவிட்டாலும் அவ்வக்கிரதுண்டமூர்த்தி வயிற்றினுள்ளிருந்து அம்மூவர்கள்கண்ட சராசரப் பிரபஞ்சங்களையெல்லாம் என்போலிகளால் அளவிட்டுரைக்கற் பாலவோ? இவ்வாறு அளவற்றகாலமங்ஙனேயிருந்து சகலகாரியங்களையும்பார்த்து மீளவும் வெளியில் வரவேண்டுமென்று யத்தனித்தார்கள். அதற்கு அவர்களாலாகாமல் அவருதரத்திலிருந்த வண்ணமே அவர் திருவடிகளைச் சிந்தித்து வேதாகமங்களாற் பலவாறு துதித்தார்கள். அத்துதிகளைக் கேட்டவுடன் வக்கிரதுண்ட சுவாமிகளுக்குக் கிருபைசுரந்து பிரமனைத்துதிக்கரத்தினின்றும், விண்டுவையும் உருத்திரரையும் இரண்டு செவிகளினின்றும் வெளியில் வரவிடுத்துத் தமது திருவுருவைக் கரந்தருளினர்.

விசுவரூபங்காட்டிய படலம் முற்றிற்று.

# பிரமசிருட்டிப் படலம்.



புகுந்தவழி யேயென்னைப் புறத்துப் போக்கிப்
பொலங்குழைசே ரிருகாதின் வழியே பைந்தேன்
றெகிழுந் தொழுகு மலர்த்துளவ விதழி மாலைத்
தேவரையும் புறம்விடுத்தா னென்றுவேத
னெகிழ்ந்தவுள மியாதனுக்குப் புகன்றானென்று
நெடியதவப் பிருகுமுனி சோமகாந்த
னகந்தழைய வுரைத்தயனு ருகமீளா
வருந்தவஞ்செய் தாக்கியுது மறையைப் புக்கான்.

சிவஞான சாதனச் செல்வர்களே ! விநாயக மூர்த்தியானவர் பிரமன்முதலிய மூவர்கட்கும் தமது விசுவரூபங்காட்டியருளிய திருவிளையாடலைச் சொன்னேம் இப்பால் பிரமனுலகங்களைச் சிருட்டித்த முறைமையைச் சொல்வோங் கேட்பீராக, இவ்வாறு கணேசமூர்த்தியானவர் தமது விசுவரூபத்தைக் கரந்தருளியபின்னர்ப்பிரமன் உலகங்களைச் சிருட்டிசெய்வதற்காரம்பித்தான், அப்போதுநான்கு வேதங்களாலும் அளவிட் டுரைத்தற்கரிய அவ்வக்கிரதுண்டமூர்த்தியினுடைய சொரூபத்தை மனதிற் றியானித்து, சுவாமி!யானெடுத்த காரியத்தை விக்கினமின்றி நிறைவேற்றவேண்டுமென்று பிரார்த்தித்துத் தொடங்கவேண்டுமென்பது சற்றுந் தோற்றாமல் நாமே செய்யலாமென்று மமதைகொண்டு செய்வதாயினன். அக்காரணத்தால் அவன் நினைத்த ரூபங்களுண்டாகாமல் ஒருதலையும் இரண்டுமுகங்களும் மூன்றுகண்களும் நான்கு சிகைகளும் ஐந்துகாதுகளும் ஆறுகால்களும் ஏழு கைகளுமாக உயர்ந்தசரீரங்களைக்கண்டு அப்பிரமன் பயந்து நடுங்கத்தக்கதான அளவற்ற விகார உருவங்களுண்டாயின பின்னர் இவ்வுருவங்களெல்லாம் அவனைக்கண்டு சில ஆர்ப்பரிக்கின்றனவும், சிலபெருநகைசெய்கின்றனவும், சிலஅடிப்பதற்கு எழுந்திருக்கின்றனவும், சிலபேசுகின்றனவும் சிலகண்களையுருட்டிப்பார்க்கின்றனவும், சில அலைந்துவிழுந் தள்ளுகின்றனவும், சில பிடிக்கின்றனவும், சில நடிக்கின்றனவுமான பற்பல துன்பங்களைச்செய்தன இக்காரணத்தால் அப்பிரமனுனவன் புந்திகலங்கிஇவ்வாறான விக்கினங்கள் வருவதற்கென்னவேது? என்று ஒன்றுந் தோன்றாமல் மனத்தளர்ச்சி யடைந்திருக்கையில் திரிநேத்திரங்களோடும் பிரகாசிக்கின்ற யானைமுகத்தினையுடையவக்கிரதுண்டமூர்த்தி நமக்கு அங்கைநெல்லிக்கனிபோல விருந்து ஆட்கொண்டருளியிருக்க அவரைக்கருதாது நமது சுயாதிகாரத்தாற் சிருட்டி செய்யத்தொடங்கிய காரணத்தாலல்லவா இவ்வித விக்கினங்கள் வரலாயிற்றென்னுமோரெண்ணம் அக்கடவுள் அநுக்கிரகத்தால் அவனுக்குண்டாகலும், இனி அவ்விக்கின கர்த்தரைப்பணியாது இவ்விடையூறுகள் நீங்காவென்று மனந்தெளிந்து உடனே ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறு தரித்துக் கிருபாமூர்த்தியாகிய விநாயகக் கடவுள் ஸ்வரூபத்தை மனதிற் றியானித்து யோகத்திலிருந்தான்.

அவ் வியோகத்திற் சத்தசாகரங்களும் ஒன்றாய்க்கலந்து போகின்ற சலப்பிரவாகத்தில் ஓர் ஆலிலையும், அவ்வாலிலையில் ஓர்குழந்

தைசயனித்து நித்திரை செய்வதாகவும், அக்குழந்தையருகில்தான் சென்று கையோச்சி அந்நித்திரையைத் தெளிவித்த தாகவும், அப்போ தக்குழந்தை யானைவதனத்தையுடைய விநாயக ஸ்வரூபமாகி தரிசனங் கொடுத்ததாகவுங் கண்டு, உடனே அக்கடவுள் திருவடிகளைப் பணிந்து தேவரீர் அடியேனைச் சிருட்டிசெய்ய ஆக்கியாபித்த வண்ணம் யான் செய்யத் தொடங்குகையில் அனேக விடையூறுகளுந் துன்பங்களும் உண்டாயின. இனி அவைகளின்றிச் சிருட்டிசெய்யுமாறு அநுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்ததாகவும், அதற்கவ்விநாயகமூர்த்தி பிரமனே ! நமது கிருபையின்றிச் சகலமாகவேண்டுவதென்றெண்ணுமல் உன்னுடைய நிருவாகங்கொண்டே செய்துமுடிக்கலாமென்றெண்ணி யாரம்பித்ததனை ஆதலால் இத்தனை இடையூறுகளுனக்குண்டாயின இனியிடையூறின்றிச்சிருட்டிசெய்வதற்கு நமது ஏகாக்ஷரமந்திரத்தைப் பத்துலக்ஷமுருச்செபித்தால் அச்செபமுடிவில் யாம்வந்து மற்றவிபரங்களையும் அநுக்கிரகிக்கின்றோமென்று திருவாய்மலர்ந்தருளி, அவ்வேகாக்ஷர மந்திரத்தைத் தனக்குபதேசித்ததாகவுங் கண்டான் பின்னர் யோகத்தைவிட்டு மனவுறுதிபெற்றுத் தாமரைமலரிலொருகாலையூன்றி அவ்வேகாக்ஷரமந்திரத்தைப் பன்னிரண்டு வருடஞ் செபஞ்செய்தான். அச்செபமுடிவில் தமக்கொருவ ரொப்பில்லாதவராகியும் நான்குவேதங்கட்குமெட்டாத பரிபூரணராகியும், அரையிற் சர்ப்பக்கச்சினை வீக்கியிருக்கின்ற விநாயகமூர்த்தியானவர் ஒருகரத்தில் மழுவாயுதமும் ஒருகரத்திற் கமண்டலமும் மற்றவிரண்டுகரங்களாகிய அபயவிரதமுங்கொண்டு அவனெதிரிற் பிரத்தியக்ஷமாகித் தரிசனங் கொடுத்தருளினர். உடனே அப்பிரமன் நமஸ்காரஞ்செய்து அளவற்ற ஆனந்தத்தோடுந் தோத்திரஞ்செய்வானாயினன்.

தோற்றுமே யுலகனைத்துந் தோற்றியளி யாதளித்துப்
பாற்றுமே பாற்றியிடும் பண்ணவநின் பதம்போற்றி
தேற்றுமே யுயிரனைத்துந் தேற்றிமல மாயைகன்ம
நீற்றுமே நீற்றியரு ளின்மலநின் பதம்போற்றி.

உரையானு முணர்வானு முடலானு மறிவரியாய்
வரைமார்புந் திணிதோளிமதிமுடியு மலர்ப்பதமும்
விரையார் குங்குமக் கலவை மெய்யணிந்த கோலமுமாய்க்
கரையா நெஞ்சமுங் கரையக் கண்ணெதிர்நின் றனைபோற்றி.

இவ்வாறு செய்ததோத்திரங்கட்கு விநாயகக்கடவுள் கிருபை புரிந்து நீ கருதிய வரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்தருளினர் அதற்குப்பிரமதேவன் மீளவுஞ் சேவித்தெழுந்து தேவதேவே! தேவரீருடைய பாதாரவிந்தங்களை எக்காலத்து மறவாதிருக்கத் தக்க வரமும், இவ்வுலகத்தை விக்கினமில்லாமற் சிருட்டி செய்யத்தக்க சத்தியும், அடியேனுக் கநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான், அவ்வாறே யநுக்கிரகஞ்செய்து பிரமனே! நம்மிடத்திருக்கின்ற அநந்தசத்திகளிற் கிரியாசத்தி ஞானசத்தியென்றிரண்டு சத்திகளுண்டு அந்தச்சத்திகளை நீ தியானித்துஉன்சிருட்டித்தொழிலை நடத்தக்கடவையென்று கிருபைசெய்து தமது திருவுருவத்தைக் கரந்தருளினர் இவ்வாறவ் விநாயகக்கடவுள் கொடுத்தருளிய வரங்களைப் பிரமன் சிரமேற்கொண்டு அவ்விரண்டு சத்திகளும் வரவேண்டித் தியானித்தவுடன் அவர்கள் தங்கட்கு வேறொருவர் நிகரில்லாத பேரழகை வாய்ந்து சித்திபுத்தியென்னும் பெயரோடும் அவனெதிரிற் றோன்றினார்கள். அவ்விருவரகளையும் பிரமன் றீர்க்கதண்டஞ்செய்து, என்றவக்கொழுந்தாகிவந்த அன்னையர்களே! அடியேனுக்கு எக்காலத்துமிடையூறு வராமற் காத்துக் கிருபை புரிந்தருளுநிமித்தம் நீங்களிருவரும் அடியேன் அருமைப் புத்திரிகளாகவிருக்கும்படியான வரங் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவ்வாறே அவ்விரண்டு சத்திகளுமிசைந்து வரங்கொடுத்தார்கள். பின்னரெளிதின் முத்தியடைந்தவர்கட் கொப்பாகப் பிரமன் முகமலர்ந்து ஆநந்தித்து விநாயகக்கடவுள் இச்சித்திபுத்திகளோடும் வீற்றிருப்பதாகப் பாவித்துத் தியானஞ்செய்து மீளவுஞ் சிருட்டிசெய்வதற் காரம்பித்தான்.

அப்போது ஓரிடையூறுமில்லாமல் தன்மனத்தினல் ஏழுபுத்திரர்களைச் சிருட்டிசெய்து அவர்களை நோக்கி நீங்கள் இவ்வுலகத்தை பழுதில்லாமற் படைக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டான் அதற்கவர்களொவ்வாமல் துறவிகளாய்ச்சென்று தவத்தினைச்செய்து முத்தியடைந்தார்கள். மீளவும் ஏழுபுத்திரர்களைச் சிருட்டிசெய்தனுப்பினன். அவர்களும் அவ்வாறேசென்று முத்தியடைந்தார்கள். அதன்பின்னர் சனகர்-சனந்தனர்-சனாதனர் - சனற்குமாரர் என்கின்ற நால்வரோடு நாரதரையும் சிருட்டித்துப் பிராமணர்களையும், அக்கினியையுந் தனது முகத்தினின்றும் க்ஷத்திரியர்களைப் புயத்தினின்றும், வைசியர்களைத் தொடையினின்றும், சூத்திரர்களைப் பாதத்தினின்றும், சந்திரனைச் சித்தத்தினின்றும், சூரியனை விழியினி

ன்றும், இந்திரனை வதனத்தினின்றும், பிராணன்முதலாகிய மருத்துக்களைச் செவியினின்றும், ஆகாயத்தை உந்தியினின்றும் தேவலோகமுதலான மேலுலகங்களைமுடியினின்றும், பாதலம்முதலான கீழுலகங்களைத் திருவடியினின்றும், கிழக்காதிதிசைகளைக் காத்தினின்றும் இவ்வாறே பருவதங்கண் முதலான சகலசராசரங்களையுஞ் சிருட்டிசெய்தான். அதுமுதல் இவ்வுலகமானது உருத்திரன் விண்டு-பிரமன்-அக்கினி சலம் பூமி-ஆகாயம்-வாயு-திக்குப் பாலகர்-மருக்கள் முனிவர்கள்-வசுக்கள்-இயக்கர்கள் மிருகங்கள் மற்றஉயிர் வர்க்கங்கள் என்னும் இருபத்தொரு வகுப்புடனே பொருந்தியிருக்கின்றது.

பிரமசிருட்டிப் படலம் முற்றிற்று.

# திருமணப்படலம்.

தொழுகுல மாகிமுன்னர்த் தோன்றிய மகளிர் பின்னர்
பழுதறு தேவயாங்குப் படர்ந்தனர் தெரிக்க வென்ன
விழுமிய வியாதன் கேட்ப வேதனுண் மகிழ்ந்தன்னோர்தஞ்
செழுவிய திருக்கல்யாணத் திறத்தினைச் செப்பலுற்றான்.

முனிவர்களே! கணேசமூர்த்தியினுடைய கிருபையாற் பிரமனுலகங்களைச் சிருட்டித்த வரலாற்றைச் சொன்னோம். இப்பால் அப்பிரமன் புத்திரிகளாகிய சித்திபுத்திகளைக் கணேசமூர்த்தி திருமணஞ்செய்துகொண்ட வைபவங்களைச் சொல்வோங் கேட்பீராக. பிரமதேவன் மேற்கூறிய முறைமைப்படி சகல வண்டங்களையும் படைத்தவுடன் ஆன்மகோடிகள் பலவுமோங்கி நிலைபெற்று வாழ்ந்தன. பின்னர் ஒரு காரணமாக விநாயகமூர்த்தியானவர் கைலாயகிரியிலே சிவபெருமானுக்குப் புத்திரராக அவதரித்திருந்தார், அக்காலத்தில் மகாதவசிரேஷ்டராகிய நாரதமுனிவர் அந்நிர்மலசொரூபியாகிய கணேசமூர்த்தியின் பாதபதுமங்களைப் போற்றுதற்குக் கைலாயபர்வதத்தை நோக்கி மிக்க ஆவலோடுசென்று அப்பர்வதத்தின்கண் பொன்மயமாக விளங்குஞ் சபாமண்டபத்தின் முகப்பில் இரத்தினமயமா யோங்கிய சிங்காதனத்தின்மீது தேவகணங்கள் புடைசூழ்ந்து போற்றுதல்செய்ய வீற்றிருக்கின்ற விநாயகமூர்த்தியைக்கண்டு, அவரது திருவடிக்கமலங்களிற் பணிந்து களிப்புடன் துதித்து வீணையிற் கட்டுண்டிருக்கின்ற நரம்புகளைத்தடவி இசை

யாகிய புதியவமுதத்தை நிறைத்துக் கர்த்தன் புகழைப்பாடிஅவர் திருவருளைப்பெற்று இதனைவிண்ணப்பஞ் செய்வாராயினர்

சர்வபரிபூரண கருணாசாகரமூர்த்தியே! தேவரீரிடத்தில் அடியேன் தெரிந்துக்கொள்ளவேண்டுவதொன் றிருக்கின்றது. அதனை விண்ணப்பஞ்செய்யச் செவிகொடுத் தருளவேண்டும். அதாவது தாமரைமலரை யாசனமாகக்கொண்ட பிரமதேவர் முன்னர்தமது தியான சிந்தையினின்றும் உதித்தவர்களாகிய இரண்டு கன்னியரைத் தேவரீர்க்குத் திருக்கல்யாணஞ்செய்வதான வேரெண்ணத்தையுடையவராயிருக்கின்றார். அன்றியும் அப்பிரமதேவரே * இலக்கணம் அமைந்த மைந்தர்களை இனிமையாகப் படைக்குங்காலத்தில் மும்மலக்குறும்புகளை நீக்கவல்ல தேவரீர் திருவுருவங்களையெண்ணுவார் மாட்சிமைபெற்ற மங்கையரைப்படைக்குங் காலத்தில் யாவருந் துதித்தற்குரிய அம்மாதர்கள் வடிவங்களை முற்றுங்கருதுவராயின், சுவாமிகள் வனப்பினுக்கேற்ற அவர்கள் பேரழகின் பெருமைகள் இவ்வளவினவென்று அடியேனுலளவிட்டுரைக்கற்பாலவோ ஆயினும் எனதறிவிற் புலப்பட்டவாறு அவர்கள் பாதாதிகேசமுதலிய அவயவ விலக்கணங்களைச் சிறிது கேட்டருளவேண்டுமென்று பிரார்த்தித்துச் சொன்னதாவது —

பருத்திடலுஞ் சுருங்குதலுமில்லாது மிருதுவாகி அனிச்சமலரின்மேல்வைத்தாலுங் குழைந்து வெப்பமடைந்து, கொடிரேகை, மச்சரேகை கவிரேகை, சங்கரேகை, சக்கரரேகை முதலான பலரேகைகளைப்பொருந்தி, அழகியசெந்தாமரை மலரைவென்று சிவந்திருக்கின்ற உள்ளங்கால்களையும், நீளல் குறுகல் நேர்தல் முதலியகுற்றங்களின்றிச் சகலவிலக்கணங்களையும் வாய்ந்தனவாகி, மிக்கவொளிபொருந்திய பவளத்துண்டங்களைச் சிறுமையுற்றழியச் செய்துவிளங்கியிருக்கின்ற பாதவிரல்களையும், செங்கழுநீர்மலரைக் கோபித்

* இலக்கணமமைந்த மைந்தராவார்-வயிறு-தோள்-நெற்றி - நாசி - மார்பு கையடி இவ்வாறும் உயர்ந்து செல்வத்தைப்பெற்றோரும், கணை- கை - கன்னம் மூக்கு-மார்பு-இவையைந்தும்-நீண்டுநன்மையை யுற்றோரும், உரோமம்- உடல்-விரற்கண்-நகம் - பல் - இவ்வைந்துஞ் சிறந்து ஆயுள்விருத்தியை யடைந்தோரும், கோசம்-கை - நா - முதுகு இந்நான்குங் குறுகிப் பாக்கியமுடையோரும், தலை-நெற்றி-இவ்விரண்டும் அகலமுற்று நன்மையையுடையோரும், உள்ளங்கால் - உள்ளங்கை - கண்கடை - உதடு- மேல்வாய்-நகம் இவ்வேழுஞ் சிவந்து இன்பமுடையோரும், வலி - ஓசை - நாபி இம்மூன்றும் ஆழ்ந்து யாவர்க்குமேலாயினோரும் எனவறிக.

து தானத்தைப் பங்கப்படுத்திச் சந்திரனைப் பயமுறப்பணித்துச்
சிறிது சிவந்தநிறமுடையனவாய் வெளுத்து வட்டமாகிக்குற்றமற
மிக்க வொளிவீசுகின்ற பாதவிரல்களினது நகக்கூட்டங்களையுங்கவி
ப்பையுற்ற கூர்மமானது தன்னுறுப்புக்களை யடக்கிக்கொள்ளவும்
புலவர்கள் தங்கள் புத்தகங்களைச் சேமத்தின் மறைத்து வைக்க
வுஞ்செய்து இலக்கணவளவின் மேற்பட்டு மிருதுவாகி நரம்புகள்
உரோமங்கள் இல்லாமற்கோல்போல் வளர்தல் மிக்குயர்தல் கோ
ணல் என்கின்ற குற்றங்களகன்று பிரகாசிக்கின்ற புறவடிகளையும்,
கைப்பந்துக்கொப்பாகி மிகப்பருத்திடலும் உயர்தலும் இல்லாது
விளங்குகின்ற குதிக்கால்களையும், நரம்பு தோற்றலும் உயர்ந்திருத்
தலும் இல்லாது அழகுபொருந்தத் தசைந்து செம்பொனிறுக்குஞ்
சிறுதராசின் றட்டையொத்து வட்டமாயிருக்கின்ற பாடுகளையும்,
கன்னிக்கதலியை யொத்து நரம்புமுழுரோமமுந் தோற்றாது சிறந்
திருக்கின்ற தொடைகளையும், வருந்திச்செய்த அம்புபெய்தூணியை
யொத்துநரம்பு முரோமமுங் கலவாதுவிளங்குகின்ற கணைக்கால்க
ளையும், வற்றுதலில்லாமல் வட்டமாகியதாளத்தையொத்துத் தசை
யைப்பொருந்தி ஞெண்டினைமுழுதுஞ் சினந்து மிக்க அழகுவாய்ந்தி
ருக்கின்ற முழந்தாட்களையும் மெல்லியதொடையைச்சேர்த்துதுணை
யாக நெருங்கி மதம்பொழிகின்ற யானையினது பிடரியையும் ஆமை
யையும் வென்று இருபத்துநான்கு அங்குலவளவுவாய்ந்திருக்கின்ற
நிதம்பத்தையும், தாமரை மலர்வாய்ந்த குளப்படிகளை மருட்டிச்சிற்
றெலியுரோமம்போன்ற நெருங்கிய மிருதுவான மயிர்கள் உள்ளோ
ங்கிய நெடுமையற்று இடப்பக்கத்திற் பவளமான சுழிகளில்லாது
எழில்வாய்ந்திருக்கின்ற செவ்விதாகிய வயிற்றுமடிப்புக்களையும்,பரு
த்து உயர்ந்து மிக்கமேன்மை பொருந்தியிருக்கின்ற சகனத்தையும்,
கொங்கைகளால்வருத்தமெய்தி மெலிவுற்றிருக்கின்ற மருங்கினையும்,
தக்கவடிவத்தோடும அகன்றுதாழ்ந்து வலஞ்சுழித்துநரம்புமுரோ
மங்களும் நீங்கி மிக்கவொளி பெற்றிருக்கின்ற உந்தியையும் பலவ
கைப்பட்ட சுழிகளும் உரோமங்களும் நீண்டமடிப்புகளும் இல்லா
மல் மூன்று நல்லரேகைகளைப் பொருந்திச் சிறந்தவாலிலைபோலவா
ய்ந்து சொல்லுக்கடங்காத வனப்பில் விளங்கும் வயிற்றுமயிரொழு
ங்கினையும், என்பு நரம்பு உரோமம் ஆகிய இவைகள்தோற்றாமல்நடு
வுமாழாமல் மிருதுவாகி இன்புறத்தக்க தசையைப்பொருந்திய பதி
னெட்டங் குலவளவையுடைய தாய்ச்சீர்கொண்டிருப்பனவாகிய வி
லாப்புறங்களையும், புடைபரந்து மேலெழுந்து நீலமணிசேர்த்ததற்

கொப்பான சிலீமுகம்வாய்ந்து இடைதோன்றாமல் நெருங்கிப்பெருமை பொருந்திய மார்பினிடமுழுவது நிறைந்துதடையில்லாமற்பருத்துப்பூரித்துத் தம்முளிரண்டுமொத்து இடையினைவருத்தி நிமிர்ந்திருக்கின்றஸ்தனங்களையும், பருத்தல் நீளல் நுதியாழ்தல் உருசோதல் நீங்குதல் நலமறல் ஒவ்வாதிருத்தல் கடினமுறல் ஆகியவிக்குற்றங்கள் பொருந்தாமல் வன்மையாகிய சக்கரம்போலப் பிரகாசித்து அடிகனத்துத் தனக்குத்தானே யொப்பாகியிருக்கின்ற சூசுகங்களையும், நீளுதலும் குறுகுதலும் என்பு தோன்றுதலும் இல்லாத கழுத்தடியினையும், என்பு நரம்பு ரோமம் ஆகிய இவைகள் தோன்றாமல் பெருக்காமல் அழகுநிறைந்து திரண்டிருக்கின்றவேய்போற் பிரகாசிக்குந் தோள்களையும், தசைதோன்றுதனவாகிய மூட்டுக்களையும், நீண்டநரம்புகளும் உரோமங்களுந் தோன்றாது வன்மை பொருந்திய மகரவீணையையொத்த முன்னங்கைகளையும், வரிசையாகிய பலரேகைகள் தம்முணெருங்குதலும், மிகவுநீங்குதலும், பரந்துதோன்றுகிற நரம்புகள் மிகுதலும் உரோமங்கள் பொருந்துதலும், ஒட்டகம் தவளை செந்நாய் பாம்பு தேள் கழுகு பூனை கர்த்தபம் நரி ஈட்டி இவைகளைப் போலிருக்கின்ற வெறுக்கப்பட்ட இரேகைகளுமில்லாமற் கவிகை கூர்மம் வலம்புரிச் சங்கு மச்சம் பதுமம் நவக்கிரகசக்கரம் நுகத்தடி துலாக்கோல் வண்டி இடபம் யானை குதிரை தோட்டி சாமரம் வச்சிராயுதம் நேமி என்னும் இவ்வகை ரேகைகளைப்பொருந்தி வனத்திற் றிரிகின்ற முயல்வயிற்றினு மிருதுவாகிச் செவ்வாம்பல் மலரைப்போலப் பிரகாசிக்கின்ற உள்ளங்கைகளையும், சிவத்தலின்றி வளைந்திருத்தலும் இடைவிட்டு நீங்குதலும் நரம்புமுரோமமும் பொருந்துதலும் சேர்ந்திருத்தலும் மிருதுவில்லாமல் மிக்கவன்மையாதலும் இன்றி நீலோற்பலமுகையைவென்று சிவந்த நல்லரேகைகள் வாய்ந்த கைவிரல்களையும், பள்ளமாதலும் வெண்மையாதலும் குணமில்லாமல் சரசரத்திருத்தலும் புள்ளியாகிய வெண்மை தோன்றலும் பொன்னிறமாதலுமில்லாதுகிளியின் வாயினையொத்துச் சிவந்து பிரகாசிக்கின்ற கைவிரல்களினது நகக்கூட்டங்களையும், என்பு தோன்றல் நரம்புமுரோமமு மருவல் உயர்தல் கூனியிருத்தல் முதலியன வகன்று மிருதுவாகிய தசையினுல் மறையப்பட்டு எழுந்தருளிய வனப்பின் மிகுந்திருக்கின்றமுதுகினையும், கோணுதல் நரம்பு தோற்றல் மயிர்கிளைத்தல் நீளல் வற்றல் என்னுமிக்குற்றங்களின் எழில் வாய்ந்திருக்கின்ற பிடரியினையும், குறுகலும் நீளலும் பருத்தலும் உரோமங்களை யுடைத்

தாதலும் கோர்ந்திருத்தலும் மடிப்புறலும் இல்லாமற் கமுக மாத்தி னை நாணச்செய்து நான்கு அங்குலத்தோடு மூன்றுரேகைகள் பொருந்தி அழகு நிறைந்திருக்கின்ற கண்டத்தையும் இருபகுப்பாதலும் பள்ளமிசைதலும் நரம்பு முரோமமும் மருவுதலும் குறுகுதலும் நீண்டிருத்தலும் வளைந்திருத்தலும் வற்றியிருத்தலும் இல்லாமல் இருவிரலளவில் வட்டமாய்த் தசையையுடைத்தாய் எழில்கொண்டு இன்பந்தருவனவாகிய மோவாயினையும் சிறந்தபவளத் துண்டு போற்றிரண்டு இருபக்கமும் குவிந்து அழகிய ரேகையொன்றுபொருந்திப்பிரகாசிக்கின்ற கீழதரமும், அதற்குமேற் சம்முயர்ந்து வனப்பு வாய்ந்திருக்கின்ற மேலதரமும், மத்தியில் இரேகை யாழ்ந்திருத்தல் வீங்கல் மதசறக்கருகியிருத்தல் வெளுத்திருத்தல் மருவுறல் தொங்கல் உரோமமுறல் மேலும் கீழும் ஒவ்வாது இடைவிட்டிருத்தல் முதலியனவகன்று பவளத்தையொத்துச் சிறந்திருக்கின்றவாயினையும், பரவியும் உயர்ந்தும் அகன்றும் நீண்டும் பசுமையுற்றும் பொன்னிறமாகியும் கறுத்துந் துன்புறுத்துகின்ற குறறங்களில்லாமல் மயிலிறகினடிகளையும், வெளுத்த தாளங்களையும் முல்லையரும்புகளையுமொத்து வெண்மையாகவுந் திருத்தமாகவுமிருக்கின்ற முப்பத்திரண்டு பற்களையும் கடினமும் வெண்ணிறமும் கருமையும் நீட்சியும் பருத்தலும் விலகிலும் இல்லாமற் சிவந்த வண்ணமாய் மிருதுவாயிருக்கின்ற நாவினையும், வெண்மையும் கருமையும் உயர்வும் நீட்சியும் பொருந்தியிருத்தலாகிய குற்றங்களின்றி வெண்ணெயென்று சொல்லும்படி மிருதுவெய்திச் சாதிலிங்கத்தினுஞ்சிவந்து செழுமைபொருந்தியிருக்கின்ற உண்ணாவினையும், கண்கள் இடுகாமலும் கபோலஞ்சுழியாமலும், பற்க டோன்றாமலும் வறிது நகைபுரியாமலும் மிகு நகைசெய்யாமலும் விளங்குகின்ற முறுவலையும், வளைதல் கறுத்தல் சிவத்தல் நுனியினும் இடையினும் பள்ளமுறல் இலக்கணவளவிற் குறுகுதல் முதலான குற்றங்களின்றித் துளைகள் சிறுத்து இருபக்கங்களுஞ் சற்றுணர்ந்து எள்ளின் மலரையொத்து இரண்டுமூன்றுதரம் அதிசயமுறமெல்லெனத் தும்மலின்றிக்கல்லெனப் பலகால் தும்முதலில்லாத நாசியினையும், வன்மையுறலும் பள்ளமாதலும் உரோமம் பொருந்துதலும் இல்லாமல், கண்ணாடியொன்றேயன்றி மற்றவைகட் கொப்பாகாது வட்டமாய்த் தசையையுடைத்தாயமைந்திருக்கின்ற கபோலங்களையும், யானை ஆடு எருமை இவைகளினுடைய கண்ணைப்போலிருத்தலும் வட்டமாதலும் குற்றமுறவலஞ்சுழலுதலும் உயர்ந்திருத்தலும் மாறுதலையுடைத் தாதலும்

புறவினது கண்ணிறமொத்தலும் இல்லாமல் தெளிந்த நீலமணி போலச் சிறப்புறக் கறுத்து வெண்மையொளிகொண்டு கடையிற் செவ்வரி பரந்து நெருங்கிய கருமைவாய்ந்த மெல்லிய வுரோமங்களைப் பொருந்தி விளங்குகின்ற நீண்ட விழிகளையும், உரோமம் இடைவிட்டிருத்தலும் பொன்னிறமெய்தலும், பருத்தலும் நீளலும் இல்லாத கண்ணிமைகளையும். உரோமம் பருத்திருத்தலும், நீண்டிருத்தலும், பொன்னிறமுற்றிருத்தலும் வண்மையின்றி வனப்பகன்று இடைவிட்டிருததலும் இலலாமமல், ஒன்றோடொன்றுநெருங்காமல் போர்செய்யும் வில்லைப்போன்று விளங்குகின்ற புருவங்களையும். இகழத்தக்க நரம்பும் உரோமமுமுண்டாகிமேல்வளைந்து உயர்ந்திருக்கின்ற குற்றங்களில்லாமல், வள்ளைத்தண்டினைப் போல நீட்சியுற்று, மலரிதழை யொத்து, நற்சுழிகளையுடையனவாய்விளங்கியிருக்கின்ற செவிகளையும், நரம்புமுரோமங்களுமில்லாமல் நவக்கிரக சக்கரரேகையைப் பொருந்தி மூவிரலகமாய் அர்த்தசந்திர வடிவங்கொண்டு பிரகாசிக்கின்ற நுதலினையும் பூரணசந்திரனைப் பழித்துக் குளிர்ச்சிபொருந்திய ஆகாயகங்கையிற்பூத்த தாமரை மலரை யொத்துச் சீமந்தரேகைகளை வாய்ந்து நீண்டுவிளங்குகின்ற முகத்தினையும், வீங்கலும் நீளலும் விரிதலுமுறாமல் இளம்பூவரும்போலச் சீமந்த ரேகைகளை வாய்ந்துமுட்டற உயர்ந்து, வட்டமாய் அழகுநிறைந்திருக்கின்ற பிடரி மத்தகம் சென்னி ஆகிய மூன்றினையும், இடையிடை வெளிடோற்றுதல் மிகக்குறுகுதல நீளல்நுனியிற்பிளப்புற்றிருத்தல் சிவந்த பொன்னிறமாதல் வண்மையணுகுதல் வாட்டமில்லாதிருத்தல் சடைபற்றி யிருத்தல் முதலிய குற்றங்களில்லாமல் வண்டினந் தொடர்ந்ததுபோன்றும்கருமைகொண்டிழைத்தது போன்றும் மேகங்கள் கண்படுத் திருப்பனபோன்றும் கூந்தற்பனைப்போன்றுமிருந்து கண்டவர்கள் வியப்பெய்த நீண்டு பரிமளித்து நெய்த்து இரண்டு தாழ்ந்து பூங்கொத்துகளைப்பொருந்தி இதனின் மிக்ககறுப்பில்லையென்று சொல்லத்தக்கதாக விளங்குகின்ற கூந்தலினையும் உடையவர்களாயிருக்கின்றார்கள்.

இஃதன்றி புருவமத்தியிலும், நாசிநுனியிலும், நிதம்பப்புறத்திலும், கைகளினிடத்திலும், கழுத்தினிடத்திலும், செவிகளிடத்திலும், கபோலத்தினிடத்திலும், இடப்பக்கத்திலும் கொங்கைகள் வலப்பக்கத்திலும் சிவந்தமறுவைப்பெற்றிருக்கின்றோரும் திரண்டு அழகு பொருந்திய நெற்றியிலே வடித்தெடுத்த முத்தலைச் சூல

விரேகையைப் பெற்றோரும், கைகளிலும் மார்பிலுங் கொப்பூழிலும் நாசியிலும் முதுகு வலப்புறத்திலும் அல்குலடிப்புறத்திலும் வல சுழியைப் பொருந்தியிருக்கின்றோரும், பிடரிவலப்புறத்தில்இரண்டு வலசுழியைப் பெற்றோரும், அல்குலடிப்புறத்தில் வண்டியைப்போ லு நற்சுழிகளையுற்றோரும், பிரமதேவனால் வளர்க்கலுற்ற அவ்விரண்டு மங்கையரது பாதபதுமங்களை முன்னர் வணங்கி யருள்பெற் றோராவர் நாசிநுனியிற் கறுத்தமறுவையுடையோரும், புறங்காலி லும் அல்குலந்தத்திலும் சிறுமச்சங்களைப்போன்ற வடுவைப்பெற் றோரும், நிதம்பந்தொடங்கி யல்குல்வரையில் ஒருசுழியை நிறைந் திருக்கப்படைத்தோரும். அல்குன்முதல்வயிறளவும் ஒருசுழியைப் பொருந்தினோரும் நிதம்பமுதல் வயிறளவும் இருசுழிகளை யடைந் தோரும் விழிகளிற்சுழிமருவினோரும் நீண்டநெற்றியில் வலச்சுழி யுடையோரும் கூந்தலில் வலமும் இடமுமானசுழிகளை வாய்ந்தோ ரும், அரையின் மத்தியிலும் செவிகளிலுங் கண்டத்திலும் குழல்வ ளர்ச்சியினுச்சியிலும் சுழிகளைப்பெற்றோரும், நித்திரைபுரியுங் கால த்திற் பற்களைக்கடிக்கின்றோரும், பகருமித்தன்மைத்தாகியகுற்றங் களையுடையோரெல்லாம் பிரமதேவனுடையநற்றவப்பயனாய்த்தோ ன்றிச் சிறந்த அவயவங்களை வாய்ந்திருக்கின்ற அம்மங்கையரது வடிவங்களைக்கண்டு தரிசனஞ்செய்தோரல்லர். மனவாக்குக் காயங் களளவுபடாத பரிபூரணசொரூபராகிய கணேசமூர்த்தியே! ஒப் பற்ற அம்மங்கையருடைய வழகின்சாயல்கள் இத்தன்மையவென் றுரைத்தேனன்றி உள்ளவிதத்தை யாவர் சொல்லவல்லவர்களென் றுநாரதமுனிவர் சொன்ன மாத்திரத்தில் கொன்றைமாலை யணிந்த பரமேஸ்வரர் புத்திரராகிய கணேசமூர்த்தி அங்கீகாரங் கொண்டு அம்முனிவருக்கு அருள்வழங்கினர். அவ்வருளைப்பெற்ற நாரதமு னிவர் பின்னுந்திருவடிகளில் வணங்கித்துதித்து விடைகொண்டு அ ம்மங்கையரிடத்திற்சென்று பலமுறைதுதித்து அவர்கள் இன்புறத் தக்கதாகவும் இவ்வையக முய்யத் தக்கதாகவும் இதனைச் சொல்வ ராயினர்.

புண்ணியபூமியில் முளைத்து அறமுதலியநாற்பொருள்களையும் பூத்து யாவர்க்கும் இம்மை மறுமைப்பயனை விளைவிக்கவல்லகொடி போன்றுவிளங்கிய அன்னைமீரே! யான்விநாயகக்கடவுளுடைய திரு வடிகளை அன்போடுபணிந்து அவரதுசமுகத்தின் முன்னர் உங்கள் வனப்புக்களனைத்தையு மெடுத்துரைத்தேன். அவைகளையக்கடவுள்

அங்கீகரித்து உம்மைத்திருக்கலியாணஞ்செய்துகொள்ளத் திருவுளங்கொண்டிருக்கின்றனர் இதுநடந்ததிதந் தாங்களறிய வேண்டியதென்ன, அக்கன்னியரும் மனமகிழ்ந்து கணேசமூர்த்தியை விவாகஞ்செய்துகொள்ள மிக்க ஆவல்கொண்டிருந்தார்கள். அப்பால் நாரதமுனிவர் பிரமதேவனிடத்திற்சென்று தாம் நடத்திவந்த காரியங்களனைத்தையுமறிவிக்க பிரமன் மனக்களிப்படைந்து இனி நமது புத்திரிகட்குவிரைவில் விவாகத்தினைச் செய்து முடிக்கவேண்டுமென்று தன்னுள்ளத்தின் மதித்தெழுந்தவனாய், உடனே கைலாயவரையிற்சென்று சோமன் சூரியன் அக்கினி என்கின்றமூன்றுவிழிகளையுடையவராயும், ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதம் என்கின்ற * ஐந்து முகங்களையுடையவராயும், மூவர்க்கு முதல்வராயும் வீற்றிருக்கின்ற சிவபெருமானைப்பணிந்து பலமுறை துதித்துநின்றான் உமாபதியாகிய பரமேஸ்வரர் பிரமனைநோக்கி நீ இங்குவந்தகாரணமென்னவென்று வினவியருள, அதற்குப் பிரமன் சொல்லுவான் எந்தையே! பிரமன் விண்டு உருத்திரராகியஎங்கண் மூவரையும் ஈன்று ஆக்கல்முதலிய முத்தொழில்களைத் தந்து ஆட்கொண்டருளிய கணேசமூர்த்திக்கு இலக்குமியுங்கண்டு நாணத்தக்க வனப்பினைவாய்ந்த எனது புத்திரிகளை மணஞ்செய்துகொடுக்கஆவலுற்றிருக்கின்றேன், அதற்குத் தேவரீரநுமதியைப்பெறுமாறுவந்தே னென்றான். அதனைச் சந்திரசேகரமூர்த்தியாகியசிவபெருமான் செவியுற்றுக் கிருபையோடும் உமாபரமேசுவரியினுடைய திருமுகத்தைநோக்க, அவர் பிரமன் முகத்தைப்பார்த்து விநாயகமூர்த்திக்குத் திருக்கலியாணஞ்செய்வதால் யாவர்க்கு நன்மையுண்டாகுமாதலின் அதனைவிரைவின் முடிக்கக்கடவையென்றருள்சுரந்தார்.

இவ்வாறு தாய்தந்தைய ரிசைதலும் பிரமன் மனமகிழ்ந்துவிடைபெற்றுவந்து கருணைமதத்தைப் பொழிகின்றயானைமுகத்தையுடைய கணேசமூர்த்தியையடைந்து நமஸ்காரஞ்செய்து சமானரகித நிகிலசககாரண கர்த்தராகிய விநாயகமூர்த்தியே! அடியேனிவ்வுலகங்களைச் சிருட்டிக்குமாறு தேவரீர்முன்னர் இரண்டுசத்திகளையளித்தருளினர். அச்சத்திகளைத் தேவரீர் திருமணஞ்செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டான் பூதபௌஷிய வர்த்தமானாத்மகமாகிய காலத்திரயத்திலும் பிருதிவியாதி பஞ்சபூதாத்மக

* அவற்றுள் ஈசானன் அனைத்தும் ஆளுதல். தற்புருடம்காத்தல். அகோரம் அழித்தல். வாமதேவம் விளக்கல்-சத்தியோசாதம் தோற்றுவித்தல்.

மாகிய காரணத்திரயத்திலும், உள்ளும் புறம்பும் வியாபித்து, அந்தரியாமியாகிய பரமாத்மாவாகியும், சர்வசாக்ஷியாகியுமிருக்கின்றசுவாமிகள் எவ்வாறு நடாத்திக் காட்டுகின்றீரோ அவ்வாறன்றி இப்பிரபஞ்சங்களிற் சுகங்காணமாட்டாது. அஃதன்றியும், ஆண்களோடு பெண்கள் மனங்கலந்து கூடினாலல்லது சுவாமிகளடியேற்குக் கற்பித்தருளிய சிருட்டித்தொழில் பிரகாசமுறாதாதலாற் சுவாமிகள்தயவுசெய்தருளி அடியேனை முற்றினுமாட்கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதற்கு நிலம்-நீர்-தீ-கால்-வெளி-சூரியன் - சந்திரன் - இயமானன் என்கின்ற அஷ்டமூர்த்தவடிவாகிய விநாயகக்கடவுளிசைந்து பிரமனே! நீ யுரைத்த கலியாணத்திற்கு வேண்டிய முயற்சிகளை நடாத்திக்கொண்டிரு, யாம் அவ்விடத்திற்கு யாவர்களோடும் இட்டமாக வருகின்றோமென்று விடைகொடுத்தருளப் பின்னரப் பிரமதேவன் கருணைநாயகராகிய விநாயகமூர்த்தியினது கிருபாநோக்கம் பெற்றுக்கொண்டுபோய் வைகுந்தத்தை யடைந்து திருமகள்கணவராகிய திருமாலைவணங்கித் தன்புத்திரிகளது திருக்கல்யாணத்தையுரைத்து அவ்விடத்தினின்றும் நீங்கித் தனது சத்தியலோகத்தைசேர்ந்து தேவதூதுவரைக்கூவி, அவர்களிடத்தில் சகல ரிஷிகளும் சகலவேந்தர்களும் சகல தேவர்களும் அத் தேவர்கட் கரசனாகிய வி[illegible]ரனும் மற்றுமுள்ள யாவருந்தங்கடங்கள் குடும்பசமேதர்களாகவிரைந்து வரவேண்டுமென்று திருமணப்பத்திரிகையை வரைந்தனுப்பிப் பின்னர் விசுவகர்மாவை யழைப்பித்து, எமதுகர்த்தராகிய கணேசமூர்த்தியினது திருக்கல்யாண மஹோற்சவத்தைத் தரிசிக்க வருகின்ற விண்ணுலகினர் பூமண்டலவாசிகள் பாதலத்தினர் முதலானவர்கள் வீற்றிருப்பதற்கு யோக்கியகரமான கோயில்கண் முதலியவைகளையும் கல்யாணமண்டபத்தையும் சாத்திர விதிப்படிக்குத் தீவிரமாமுடிக்கக் கடவையென்று ஆக்கியாபித்தான். அதற்கவ்விசுவகர்மா அதிகமகிழ்ச்சியையுடையவனாய், இப்பணிவிடைசெய்வதற்கு யானென்னதவஞ் செய்தனனோவென்று ஆனந்தமுற்று, இந்நிமிடத்திற்றானே தமதிட்டப்படி செய்வேனென்றுவிடைபெற்றுச்சென்று ஒருநகரமுண்டாக்கி அதனைச்சூழப் பருத்தோங்கி யிருக்கின்ற மதில்களெழுப்பி, நாற்புறங்களினும் விசித்திரமுற்று விளங்குகின்ற கோபுரங்களைத் தூக்கி, அதனுட்புறத்தில் கல்யாண மகோற்சவத்தில் வசிக்கவருபவர்கள் மனவெழுச்சியுடன் வாசஞ்செய்யத்தக்ககூடங்களும் உப்பரிகைகளு மேற்படுத்தி விலாசமுற்றிருக்கும் வீதிகளை

யும், இடைஇடையிற் சித்திரகூடங்கள்-பளிங்குமண்டபங்கள்-சாந்தத்திண்ணைகள் முதலியவைகளை வரிசை வரிசையாக வகுத்துக் கல்யாணத்திற்குரிய பண்டங்களை வைக்கத்தக்க பண்டார வறைகளை முடித்துத் தாமரை அல்லி முதலிய புட்பங்கள் மலிந்திருக்கின்ற தடாகங்கள்-ஓடைகள்-கேணிகள்-முதலியவைகளைத் தக்கவிடங்களிற்றொட்டு, வானையளாவத் தழைத்தோங்கிக் குளிர்ந்த நிழலைப்பரப்பிக் கனிவருக்கங்களைக் கொண்டிருக்குஞ் சோலைகளும் தோப்புகளுமுண்டாக்கிப் பரிமளமிகுந்த பலபுஷ்பஜாதிகள் மலிந்திருக்கின்ற நந்தனவனங்களையும் பூங்காவுகளையுஞ் சிருட்டித்து முடித்தவுடன் அந்நகரத்தின்முடிவில் மணச்சடங்குகள் முடித்தற்கோர் கல்யாண மண்டபத்தை விசாலமாகப்படைத்து, அதன் மத்தியில் நவரத்னமயமான சிங்காதனமொன்றைப் பலவிச்சித்திரங்களோடு அமைத்து அதைச்சூழ்வரத் திருமாலாகிய தேவர்களும் முனிவர்களும் களித்திருக்கத்தக்க பீடங்களை அணிஅணியாக வகுத்துப் பலநிறப்பட்டுகளாற் ஜோடித்திருக்கின்ற விதானங்களினுஞ் சொர்ணமயமாய்த் தோற்றுகின்ற மண்டபத்தின் மேற்பரப்புகளினும் முத்துமாலைகள் புட்பச்சரங்கள்-மயிற்பிஞ்சங்கள் முதலியவைகளைத்தொட்டு தொங்கவிட்டு நவரத்னங்களிழைத்திருக்குஞ் சுவர்ப்புறங்களினும் பருத்தோங்கிநிற்கும் பலவிதத்தூண்களினும், பொற்பாவைகள்-சித்திரப்பிரதமைகள் - நிலைக்கண்ணாடிகள் முதலியவைகளைப்பதித்து, ஓமகுண்டத்தையும் விசாலமாகப் படைத்தும் பிரமதேவனைக்கண்டு அறிக்கையிட்டான்.

உடனே பிரமதேவன் விரைந்து வந்து அவ்வவற்றின் சிறப்புகளைக்கண்டு, அதிக சந்தோஷங் கொண்டவனாய், மேருவுங்கண்டுநாணத்தக்க பிரகாசத்தோடுமிருக்கின்ற இந்நகரத்தினழகைக் காண்பதற்குத் தேவேந்திரனைப்போல ஆயிரங்கண்களைப் பெற்றிலேனேயென்று ஆசையோடு வருத்தமுற்றானாயின் அத்தேவதச்சனால் நிருமித்த நகரத்தின் சிறப்புகள் எனபோலிகளால் அளவிட்டுரைக்கப்படுவனவோ? பின்னர்ப் பிரமனானவன் சிலகாரியகாரரைத் தூண்டி, ஆகாயகங்கையைத் தருவித்து, தருப்பை மாவிலை-சமித்து-முதலிய ஓமதிரவியங்களைச்சேகரித்து, வாழை கமுகு-தெங்கின்குலைமுதலிய சிறப்புகளை வேண்டுமிடங்களில் அணிபெறநாட்டி வீதிகடோறும் பனிநீரையிறைத்துப், புழுதியையடக்கி, முற்றமெங்குஞ்சந்தனக் குழம்பினால் மெழுகிப் பல்விசித்திரங்களான கோலங்களையுமிடுவித்து பாலிகை கரகமாதிய பல மங்கல வரிசைகளையும், வருவித்து,

திருவிளக்கு, பலவிளக்கு, குடதீபமுதலியசோதிகளையமைத்து இன்னும் இத்தன்மையவாகிய எல்லாச் சிறப்புகளையுஞ்சர்வை ஜாக்கிரதையோடு நிறைவேற்றிக் கொண்டிருந்தான்

அச்சமயத்தில்தான் முன்னர்வரைந்தனுப்பிய திருமணப் பத்திரிகையைக்கொண்டுபோன தேவதூதர்கள் வாயுவேகமு மனோவேகமுந் தங்கட்குப் பிறபடத்தக்கதாகவோடி அவ்வவர்கட்கறிவிக்க உடனே அம்மணவோலையைவாங்கி யாவருநிமிர்ந்து வாசித்துச் சந்திரர், சூரியர் முதலிய நவக்கிரகங்கள் முப்பத்துமுக்கோடிதேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், கருடர் கந்தருவர், சித்தர், வித்தியாதரர், போகபூமியர், ஆகாய வாசிகள், பாதலவாசிகள், சேடனாதிய நாகராஜர்கள்முதல் மற்றைத் தீவாந்திரங்களிலிருப்பவர்களுந் தங்கடங்கண் மனைமக்கள் சுற்றத்தினர்முதலிய கூட்டங்களோடு ஏகமாகத்திரண்டு கடையுகத்திற் சத்தசாகரங்களுங்கரைபுரண்டு மேருவைச்சூழ்வதுபோலத் தேவதேவோத்தமராகிய கணேசமூர்த்தியினுடைய திருக்கல்யாண சம்பிரமத்தைத் தரிசித்து ஈடேறுங்களிப்பினராய்ச் சயவுற்சாகங்களுடன் ஓவென்னுஞ்சத்தமெழ நாற்புறங்களினுமிருந்து தேவதச்சனால் நிருமித்திருக்கின்ற நகரமெங்கணும் வந்து நெருங்கினார்கள். பின்னர்ப் பிரமதேவனானவன் வந்த பரிசனங்கட்கெல்லாஞ் சகல வாபரணம் உணவு முதலியவைகளை அவ்வவர்கட்குவேண்டுமட்டும் அளித்துவரும்படி * சங்கநிதி, பதுமநிதி சிந்தாமணி பஞ்சதரு, காமதேனுமுதலானவைகட்காக்ஞாபித்துத் தான் பின்னர்நடததவேண்டிய முயற்சிகளிற் பிரவேசித்தான். இப்பால் அக்காமதேனுமுதலியவைகள பிரமனிட்ட கட்டளையின்படி சகல செல்வங்களையும் வந்தவர்க்கெல்லாந் தந்துவர, அவைகளை இந்திரன் முதலிய தேவர்கள் பெற்றுக்கொண்டு மனக்களிப்படைந்து வேறொரு தெய்வலோகத்திலடைந்தவர்களைப் போல அளவில்லாத ஆனந்த கடலுண்டு மூழ்கினார்கள். அந்நகரத்துள்ளோர்களும் எந்தையாகிய கணேசமூர்த்தியினது திருக்கல்யாணத்திற்குச்செய்துவைத்த நூதன வலங்காரங்களைக் கண்டு முன்னர் காணக்கூடாத வுயர்ந்த பரகதியைப் பின்னரடைந்தவரையொத்துக் களிப்படைந்தார்கள்,

அந்நகரத்தின்கண் பன்னிரண்டுகோடி சூரியர்களுஞ் சந்திரர்களும் உடுக்கூட்டங்களும் ஒருமித்து கூடியிருக்கின்றமையால் அங்கு இராப்பகலென்னுங் காலவேற்றுமைகள் இல்லாது ஒரேதன்மை

யாகியிருந்தது காமதேனுகொடுக்கா நின்றவுண்டிகளையுங் கற்பகத்தருவளிக்கின்ற ஆபரணங்களையும் அங்கீகரித்து வந்திருக்கின்ற ஆடவர்களும் மங்கையர்களும் பெற்றுக்கொள்வதனால் அவர்கள் தங்கள்பெயரின்மாத்திரம் வேறுபட்டிருந்தார்களேயன்றி உருவத்தில் ஒருவரையொருவர் ஒத்தவராகியிருந்தார்கள். பஞ்சதருக்கள் நெருங்கிய சோலைகளானவை தம்முட் பலவதிசயங்களை யுண்டாக்கச் சிலர் அவ்வற்புதங்களைப்பார்த்து அவ்விடங்களைவிட்டு நீங்காதவர்களாயிருந்தார்கள். இளமைப்பருவத்தையுடைய மங்கையரும் பெருமைபொருந்திய மைந்தர்களும் தாங்களிச்சித்தவண்ணம் கற்பகமுதலியவைகளாற் றரப்பெற்று மலர்பொதுளிய சோலைகளிற்சென்று விளையாடல் செய்தார்கள். இரத்தினாபரணங்களை யணிந்த † குயாரவிந்தங்களையுடைய மங்கையர் கூட்டங்களிற் சிலர் அம்மானையாடுவோர்களும், சிலர் பந்தாடுவார்களும், சிலர் புனல்விளை யாடுவார்களும், சிலர் ஊசலாடுவார்களும் சிலர் தங்கடங்க ளன்பினரையுவந்து தேடுவார்களும், சிலர் அவ்வன்பினரைக் கலந்து களிப்படைவார்களும், சிலர் கிளிப்பிள்ளைகளினுடைய மெல்லிய சொற்களால் நாகணவாய்ப்புட்களினுடைய மொழிகளைக்கீழ்ப்படுத்துவார்களும், சிலர் இந்நாகணவாய்ப்புட்களினுடைய சொற்களால் அக்கிளிப்பிள்ளைகளின் மொழிகளைத் தாழ்வுசெய்வார்களுமாகிச் சோலைகளெங்கு மனங்களித் துலாவியிருந்தார்கள்,

கரும்புவில்லை யேந்திய மதனுங்கண்டு நாணத்தக்க வனப்பினைவாய்ந்த ஆடவர்களிற்சிலர் யானைகளோடுயானைகளையும், குதிரைகளோடு குதிரைகளையும், ஆடுகளோடு ஆடுகளையும், கவுதாரிகளோடு கவுதாரிகளையும், காடைகளோடு காடைகளையும், கோழிகளோடு கோழிகளையும் பொருவித்துச் சயங்கூறிக் களிப்படைந்தார்கள். வேதாகமமுதலியவைகளைத் துரிசற வாராய்ந்துணர்ந்து இருவினைகளினின்று நீங்கிய மகாதவத்தையுடைய வசிட்டர் முதலான ரிஷிபுங்கவர்களிற் சிலர் தருமவாதஞ் செய்கின்றவர்களும் சிலர் அருத்தவாதஞ் செய்கின்றவர்களும், சிலர் காமவாதஞ் செய்கின்றவர்களும், சிலர் மோக்ஷவாதஞ் செய்கின்றவர்களுமாகி யிருந்தார்கள். சனகர் முதலிய யோகீஸ்வரர்கள் பரதத்துவ சொரூபி யாகிய

---

* சங்கநிதி—சங்குபோன்ற வடிவுடையது. பதுமநிதி—தாமரைபோன்ற வடிவுடையது. பஞ்சதருக்களாவன:—சந்தானம் அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பனவாம். † குயாரவிந்தம்—குயம்—தனம், அரவிந்தம்—தாமரைமொக்கு. தாமரை யரும்புபோன்ற தனங்களாம்.

சிவபெருமானது ஆகமம் பிரமாணத்தினாலும் காட்சிப்பிரமாணத்தினாலும் சிரேஷ்டமாகிய பதிபசு பாசங்களின் தன்மைகளைப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அணிமாவாதி யட்டமாசித்திகளினும் வல்லசித்தர்கள் தம்மை வணங்காரை யெல்லாம் வணங்குவித்துப் பலவற்புத விளையாடல்களை நடாத்திக்கொண்டிருந்தார்கள். தேவர்கள் தங்களினத்தினருடன் பற்பலதர்க்கங்களைப்பேசி அவ்வவர்கள் ஆண்மைகளையாதரித்துக்கொண்டிருந்தார்கள். இந்நகர வாடம்பரங்கள் இவ்வாறிருக்கப் பதுமநிதி-சங்கநிதி-கற்பகதரு முதலியவைகளாற்றந்த ஆடையாபரணாதிகள் அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற கல்யாண மண்டபத்திற் பொன்னாற்செய்து நவரத்தினங்கள் பதித்திருக்கின்ற தூண்களோடு நாட்டியிருக்கும் மரகத வாழைகளும், கமுகமரங்களும் கன்னற்றண்டுகளும் கண்டவர்களதிசயிக்கும்படி பொன்னாபரணங்கள் பட்டாடைகள் அமுதுகள் சிற்றுண்டிகள் முதலானவைகளை யளவில்லாமற் கொடுத்துவந்தன, சுவர்த்தலங்களின் முறைமையாகத்தீட்டியிருக்கின்ற சித்திரங்களெல்லாஞ் சுவர்க்கமத்தியபாதல முதற்சகல உலகங்களிலுள்ள வேறுவேறான பொருள்களை வந்தவர்கட்கெல்லாம் வரையாது கொடுத்து ஏவல் செய்துக்கொண்டிருந்தன. அம்மண்டபத்தைப் புடைசூழ்ந்த சோலைகளி லமைந்திருக்கின்ற பல விசித்திரங்களான பிரதமைகளெல்லாங் கற்பகாதிகளைப்போல அவ்வவர்க்கு வேண்டுவனவற்றை ஆவல்தீர வளிப்பதன்றி அக்கற்பகாதிகளையுங்கண்டு ஆலசியஞ்செய்து அளவற்றஅற்புதங்களைநடாத்திவந்தன. சாயைத்தோற்றுத்தன்மையராகிய தேவர்கள் வடிவங்களை அம்மண்டபத்திற் பதித்திருக்கின்ற இரத்தினங்கள் காட்டுவதனால் அத்தேவர்கள் அச்சாயைகளைப் பார்த்து ஈதென்ன காரணமெனச் சந்தேகித்தார்கள். இவ்வாறு அளவற்ற பெருமிதங்களோடுந் தேவதச்சனால் நிருமித்த அம்மண்டபத்தின் சிறப்புக்கள் யாவராலனவிட்டுறைக்கற்பாலன.

இப்பால் நாரதமகாமுனிவர் சகல சம்பிரமங்களையுங் குறைவின்றி நிறைவேற்றி யிருப்பதைப்பார்த்து மனங்களித்து விரைந்தெழுந்து வெள்ளியங்கிரியைச் சேர்ந்து சிவபெருமான் சந்நிதானத்தை யடைந்து மும்முறை வலம்வந்து வணங்கித் தயாநிதியே! விநாயகப்பெருமான் திருக்கல்யாண மகோற்சவத்திற்குரிய சகல வலங்காரங்களுஞ் செய்து நிறைவேறின. அரசர்கள் தேவர்கள் முனிவர்கள் முதலாயினோர் வந்து நெருங்கியிருக்கின்றனர். தேவ

நீர் அடியேங்கண்மீது கிருபைபுரிந்து யெழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துக்கொள்ளலுஞ் சிவபெருமான்கிருபைகூர்ந்து விநாயகமூர்த்தியை யழைத்து, ஐயனே ! பிரமனால் வளர்க்கலுற்ற சித்திபுத்திகளைத் திருமணஞ் செய்வதற்கான கோலத்தைக் கொள்ளுகவென்று திருவாய்மலர்ந்தனர். அதுகேட்டசுத்தசத்துவமூர்த்தியாகிய விநாயகக் கடவுளானவர் தெய்வகங்கையிலாடித் தேவர்களுடைய இமையாவிழிகளை யிடைவிடாது இமைக்கச்செய்யும் வனப்பினைவாய்ந்த தமது திருமேனி யொளியைச் சிறிது தணியச்செய்பவர்போலப் பீதாம்பரத்தை யெடுத்து அறையிற் சாத்தி வாசனை வீசுகின்ற கூட்டு வருக்கச் சந்தனத்தை மார்பினிடத்துந் தோள்களிடத்தும் பூசிக்கொண்டார்.

சந்திரனை முடியிலணிந்ததைத் தெரிந்துகொண்ட மற்றைய கோள்களானவை தாமும் அம்முடிமேலேறியிருப்பதற் கெண்ணி அரிய தவங்களைச் செய்ய அவைகளையுந் தமது நன்முடியிற் சூட்டிக்கொண்டதற் கொப்பாக மிக்க வொளிபொருந்திய நவமணிகளை வரிசையாகப் பதித்த பொன்முடியினைச் சூட்டிக்கொண்டார், சடைமீதிருக்கின்ற சந்திரன் அச்சடையை மறைந்திருக்கின்ற முடிமீதிருந்து திருமணச்சேவைசெய்யானாயின் அவனுள்ளம் வருந்துமென்றெண்ணினர்போல அச்சந்திரனை அப்பொன்முடியின்மீது பொருந்தவமைத்து அதனைச் சூழ்வரக் கொன்றைமாலிகையினையணிந்து கொண்டார். பல்லாயிரங்கோடி யண்டங்களிலுள்ள ஆன்மகோடிகளனைத்தையும் அரைநொடியிற் றகித்து நீறுக்கவல்ல தமது நுதல் விழியின் வெப்பத்தை அக்கல்யாண சபையிற் காட்டாதவண்ணம் அதனைத் தணிவிப்பவர்போல அதன் முன்னர்க் கண்டவர் வியப்படையத்தக்க பிரகாசத்தினையுடைய இரத்தினப் பட்டத்தையணிந்தருளினர். பொன்முடியிலணிந்த மூன்றாம் பிறையினது நிலவென்று சொல்லும்படி ஒப்பற்ற நெற்றியில் வெண்டிருநீற்றை யணிந்து அதனடுவின் மிக்க வாசனை கலந்திழைத்திருக்கின்ற சிவந்த திலகமிட்டுக்கொண்டார். திருக்கரத்திலிருக்கின்ற கொடியாகிய மீனும் ஆகாயத்திலிருக்கின்ற அருந்ததியாகிய மீனுந் தமது திருமுகமாகிய கருணைக்கடலில் இன்புற்றிருக்க வெண்ணிப் பக்கங்களில் வந்து பொருந்தியிருப்பனபோல அழகு நிறைந்த மணிகளாற் செய்யப்பட்ட மகரகுண்டலங்களைக் காதிலழகுற வணிந்தனர். முகமாகிய பதுமநிதியைத் தாங்குகின்ற சங்கநிதியாகிய கண்டத்திற் சிந்தாமணியைப் போலத் தரள மாலைகளையும் பொன்னுபரணங்களையும்

களையும் அணிந்து, இடையில் உதரபந்தனந் தரித்துக்கைகளிற்கட கங்களைப்பூண்டு, விரல்களின் மோதிரங்களையணிந்து, திருவடிகளிற் சிலம்புகளை யார்த்து, இன்னும் அளவற்ற ஆபரணங்களைச்சிறப்பெய்த வணிந்தருளினர்.

இவ்வாறு விநாயகக்கடவுள் திருமணக்கோலங்கொண்ட சிறப்பைச் சிவபெருமான் கண்களிக்கப்பார்த்து ஈராயிர மருப்பினோடு மலைபோன்று பாரித்திருக்கின்ற அயிராவணத்தை அவருக்குத் தந்துதாமும் உமாபரமேஸ்வரியும் இடபவாகனத்தி லெழுந்தருளினர் வேலாயுதத்தையேந்திய முருகக்கடவுள் மயில்வாகனத்திலேறியருளினர். துவாதசாதித்தர், ஏகாதசருத்திரர் * அட்ட வித்தியேஸ்வரர் அஷ்டவசுக்கள், அஷ்டதிக்குப்பாலகர்முதலிய எல்லாத்தேவர்களுஞ் சர்வாலங்கார சோபிதராய் அவ்வவர் வாகனங்களிலேறிப் புடைசூழ்ந்தார்கள். நிகும்பன், கும்பன், சங்கபாலன், குமுதன், பானு, தனஞ்சயன், தசமுகன், காலபாசன், விசயன் முதலிய பூதகணத் தலைவர்களோடு நந்தியீசுவரரும் மற்றுமுள்ள கணநாதர்களும் நெருங்கினர்கள். யாவருந் துதித்தற்குரிய முதன்மைபெற்றிருக்கின்ற பிரணவமந்திரம், வேதங்கள், கலைகள், காலங்கள், இராசிகள், சத்தகோடி மகாமந்திரங்கள் முதலியவைகளோடு, காமிகம் யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம் சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விஜயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம் வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தமம் பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுளம் என்கின்ற இருபத்தெட்டாகமங்களும் ஒவ்வொரு தேவவடிவங்களாகித் திரண்டுவந்தன.

இவ்வாறு சகலசம்பிரமத்தோடு யாவரும் புடைசூழ்ந்துநெருங்கிய சமையத்தில் விநாயக மூர்த்தியானவர் அயிராவணத்தி லாரோகணித்துப் பூதகணங்கள் புகழ்பாடிவரவும் மாதவர் வேதமோதிவரவும் சந்திரவட்டக் குடைகள் ஆகாயவெளியை மறைக்கவும்,

* அட்டவித்தியேசுராவார் புத்தியட்டகர் எனப்படுஞ் சூக்குமபுவனமெட்டின் அதிபதிகளாம் அவர்கள்-அனந்தர், சூட்சுமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி எனப் பெயர் பெறுவர். சூக்கும புவன மெட்டாவன—பைசாசம், இராக்ஷசம், யாக்ஷம், காந்தர்வம், மகேந்திரம், சௌமியம், பிராசேசுவரம், பிரமம் என்பனவாம்,

பலவித பட்டுக்கொடிகள் இருமருங்கினு நெருங்கவும், சிலர் ஆலவட்டங்கள் வீசவும், சிலர் சாமரைகளிரட்டவும், * தோற்கருவி மிடற்றுக்கருவி என்கின்ற பஞ்சவாத்தியங்கள் நாற்றிசைகளினு முழங்கவும், இன்னும் அளவற்ற ஆடம்பரங்களோடு கடல்பெருகு மாறுபோல எள்ளிடவிடமில்லாமல் ஒருவரோடொருவர் அடர்ந்து கிரீடங்கள், புயங்களுடன் புயங்கள் ஊடுதாக்க ஆகாயமார்க்கமாகச் செல்லுமளவில் அஷ்டபுயா சலங்களையுடைய சிவபெருமானோடு கணேசமூர்த்தி திருமணக்கோலங் கொண்டெழுந்தருளிவருவதைப் பிரமன் விண்டுமுதலிய தேவகணங்களாதியர்கண்டு அளவளாவிய வாஞ்சையோடும் எதிர்கொண்டு சென்று கற்பகமலர்களைத் தூவியருச்சித்து அட்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து அந்நகரத்துள்ள இராசவீதியில் வலமாக வழைத்துக்கொண்டு போய்த் திருக்கல்யாண மண்டபத்தி லெழுந்தருளச் செய்தார்கள்.

உடனே சரசுவதியானவள் பொன் கரகத்திற் றெய்வகங்கையை யேந்திவந்து கணேசமூர்த்தியினுடையதிருவடிகளில் அபிஷேகிக்க, பிரமதேவன் மிகுந்த வணக்கத்தோடும்அத்திருவடிகளை விளக்கி மெல்லிய ஆடைகொண்டொற்றினான், பின்னர்ச் சிவபிரானும் உமாதேவியும் ஓராதனத்திலிருந்தனர். சுப்பிரமணியர் முதலியமற்றைத் தேவர்களெல்லாம் வெவ்வே றாதனங்களில் அமைந்தனர். விநாயகக்கடவுள் அம்மண்டபத்தினடுவில் அமைத்திருக்கின்றமணிக்கச் சிங்காதனத்தில் ஆரோகணித்துத் தேவமாதர்கள் நடிக்கின்ற ஆடலினும் பாடலினும் தமது திருக்கண்ணோக்கினைச் சாத்தியிருந்தனர். அளவற்ற தேவப்பெண்கள் வெள்ளடை, பாகு, வாழைக்கனி, தெங்கின்கனி, மற்றுமுள்ள பலாதிகள், இரத்தினாபரணங்கள் பூமாலைகள், சித்திரப்பட்டுகள் முதலான மங்கலவரிசைகளைத்தனித்தனி பொற்றும்பாளங்களில் நிரப்பித் தங்கடங்கள் கைகளிலேந்திக்கொண்டு, சாமரை பூரணகும்பம், கண்ணாடி, தோட்டிமுரசு, மணிவிளக்கு, கொடி, இணைக்கயல் என்கின்ற அட்டமங்கலத்துடன் பலவாத்தியங்களுமுழங்க அந்நகரவீதியை வலமாகவந்து விநாயகப்பெருமான் வீற்றிருக்கின்ற திருக்கல்யாணமண்டபத்திற் றெருகுப்பாக வைத்து வணங்கினார்கள், இப்பால் அந்தப்புரத்திலிருக்கின்ற சித்திபுத்தியென்னுங் கன்னியர்களைச் சரசுவதி, இந்திராணி, இலக்குமி

* தோற்கருவி - பேரிகை முதலியன. துளைக்கருவி-வேய்ங்குழல் முதலியன, நரப்புக்கருவி-வீணை முதலியன. கஞ்சக்கருவி-தாளம் முதலியன. மிடற்றுக் கருவி-கண்டத்தாற்பாடும் இசைகள்.

அதிதி, அனசூயை, அருந்ததி யென்கிற மாதர்களறுவரும் வணங்கி வாழ்த்துதல் செய்து சிரோரத்தினங்களால் இழைத்திருக்கின்ற ஆதனத்தி லெழுந்தருளப்பண்ணி அங்குவந்திருக்கின்ற தேவமாதர்கட்கெல்லாம் வேறுவேறு கனிவர்க்கங்களையும், வெள்ளடைப் பாக்குகளையும் தங்கள்கை மிதப்பத்தந்து பின்னர் யாவரும்புடைசூழ்ந்து பற்பல ஏவல்களை இயற்றிவர அக்கன்னியர்க்குத் திருமஞ்சன மாட்டுவாராயினர்.

புனுகு சட்டம்-கோட்டம்-நாகப்பூ-முத்தக்காசு-சயிலேகம்-இலாமிச்சம்-இருவேரி-ஆரியக்கோட்டம்-மாஞ்சில்- மலையிருவேரி பச்சிலை கச்சோலம்-அதிமதுரம்-தக்கோலம்-வாழைப் பூ-நன்னாரிப்பூ-கண்டில்வெண்ணெய்-மகிழம்பூ-தாவரிசி-ஏலம் சாதிக்காய்-வெண் குங்கிலியம்-இலவங்கம்-நாகணம்-மஞ்சட்டி-சண்பகமொக்கு-அரத்தை சாம்பிராணி-தகரம்-கருங்குங்கிலியம்-வெட்டிவேர்-மாவிலை என்கின்ற முப்பத்திரண்டு பொருள்களோடு, கத்தூரி, குங்குமம், கர்ப்பூரம்அகில், சந்தனம்என்கின்ற ஐவகைவாசனைத்திரவியங்களும் நாவல்-கடுக்காய்-நெல்லிக்காய்-தான்றிக்காய்-ஆல் அரசு-அத்தி- இத்தி-கோரைக்கிழங்கு மாந்தளிர் என்கிற பத்துவகை துவர்ப்புஞ்சேர்த்து வெள்ளி லோத்திரப் பட்டையையும் அரைத்தசந்தனவண்டலை, யுங் கலந்து மிக்க பக்குவத்தோடு காய்ச்சப்பட்டிருக்கின்ற பரிமளமிகுந்த தயிலத்தை அம்மங்கையர் கூந்தலிற் றிமிர்ந்து மிக்க அன்பும் உவகையும் அதிகரிக்கப் பலமாதர்கள் மங்கல வாழ்த்துகளைச் சொல்ல நலங்கிட்டு யானையின் பிடரியிற் கொணர்ந்துவந்த கங்காசலத்தினாற் றிருமஞ்சனமாட்டிப் பனியைப்போன்ற மெல்லிய ஒற்றாடைகளினால் இருவர் திருமேனிகளிலும் ஈரம்புலர்த்திப் பிறந்தபோதே பெண்ணென்று சொல்லுதற்கு ஓரடையாளமாகவந்த உறுப்பினுக்குப் பலஉபசாரத்தோடு முன்னதாகசிறப்புச்செய்வதுபோலப் பட்டாடையினைச் சாத்தி அதன்பின்னருண்டான மற்றோரடையாளமாகிய தனங்கட்கு உபசரிக்கத்தக்கதென்று இயற்கையிற் குளிர்ச்சியும் வெம்மையும் பொருந்திய அவைகட்குச் செய்கையிற் றண்மையுங் கடுமையுஞ் செய்பவர்கள்போல மணமிகுந்த சந்தனச்சேற்றை யருவருப்புண்டாகவப்பி மேருமலையிற்படர்ந்த மேகக்கூட்டங்கட் கொப்ப அகிற்புகை முதலிய வாசனைப்புகைகளையூட்டினார்கள் பற்பல மலர்கள் நெருங்கிப் பூத்திருக்கின்ற கானகத்தைபோலவும், ஆகாயமுழுவதினும் உடுக்கூட்டங்களை நிரப்பிவருகின்ற இருளைநிகர்ப்பவும், சீப்பினால் வாரிப் பரவியிருக்கின்ற கூந்தலிற் பலவிதத்

ணமாலைகளையொத்த பன்னிறமலர் மாலிகைகளைச் சேர்த்து எருத்தின் * முரிப்பினையொப்பக் கொண்டையிட்டார்கள்.

மதம்பொழிகின்ற யானையானது தன் மருப்பிற் றுதிக்கையைச்சுற்றிக் கொண்டாற்போலக் கஸ்தூரிமணங் கமழ்கின்ற உச்சிக்கொண்டையில முல்லைமாலைகளைச் சூழவணிந்துமேகமானதுவெள்ளிய நீர்த்தாரைகளைச் சொரிவதுபோல அவ்வுச்சிக்கொண்டையிற் பிரகாசிக்கின்ற முத்துமாலைகளைத் தொங்கவிட்டார்கள் இந்திரன் தனதுவில்லைத் தன்வாகனமாகிய மேகத்தில்வைத்ததுபோலக்கரிய கூந்தன் மருங்கடர்ந்திருக்கின்ற நுதலின்மீது அவ்விந்திரதனுசிலம்பு தொடுத்ததையொப்பநுதலணிமாலையினையணிந்தார்கள், விநாயகப்பெருமான் திருமுடியின்மீது விளங்கியிருக்கின்ற இளந்திங்களையுந் திருக்கரத்தி லேந்தியிருக்கின்ற மயிற் கொடியையும், அவர்காதலியராகிய சித்திபுத்திகளும் அணிந்துகொள்வது முறைமையென்று சந்திரப்பிறையையும் மயிலணியையும் முடியின்மீ தணிந்தார்கள். இராகு என்னும் கோளானது இக்கூந்தல்முகிலன்று * சைவலமென்றும், முகம் பூரண சந்திரனன்று தாமரைமலரென்றும், கருதிய கலுமாறு மகரத்தினது பேழ்வாயையொத்த சிவந்த நிறத்தையுடைய மணிகளை யழகுண்டாக நெற்றியி லணிந்தார்கள் நாணின்றி வளைத்து அம்புதொடுத்திருக்கின்ற அழகிய விற்போன்ற நெற்றியில் † அத்திரஞ் சத்திரமுதலிய எவ்வித ஆயுதங்களாலும் வெல்லப்படாத விநாயகக்கடவுளுடைய பிரதாபத்தைப்பொதிந்துவைத்ததுபோலச் சிவந்த திலதப்பொட்டினையிட்டார்கள் அமுதபானராகிய தேவர்கள் விழிகளைப் பாற்கடலென்றுங் கொங்கைகளை மந்தரகிரியென்றுங் கருதி யேக்கமுறாத வண்ணம் அவ்விழிகளைக் காத்தற் கோரடையாளமாக அஞ்சனந் தீட்டினார்கள்,

இம்மங்கையர் கண்கள் ஆலத்தையும் அமுதத்தையும், அளிப்பனவன்று சுத்தமாகிய திருப்பாற்கடலேயென்றும், அவைகளிற் றீட்டப்பட்டது அஞ்சனமன்று அதனையுண்பான வந்த மேகமென்றுங்கருதி மயங்குதற் கேற்பனவாக அக்கடலினிடத் துண்டாகிய சங்கநிதியாலீன்ற நீண்ட தரளமணியினை நாசியின்மீ தணிந்தார்

* முரிப்பு இது இக்காலத்து கும்பம் எனவும், முசப்பு எனவும் வழங்கப்படுகின்றது.

* சைவலம்—பாசி. † அத்திரம்—கைவிடுபடை, சத்திரம்—கைவிடாப்படை.

கள். அம்மங்கையர் முகாரவிந்தமாகிய சகோரப்பக்ஷியானது நெற்றியைச் சந்திரவிம்பமெனக்கருதி அமுதுண்ணவந்திருப்பதைப்போல அம்முகாரவிந்தத்தில் விளங்கி யிருக்கின்ற கண்ணிணைகளாகிய நீலோற்பல மலர்களின் அழகை மற்றைய நீலோற்பலமலர்கள் கிரகித்துக்கொள்ளுமாறு இடந்தேடிக்கொள்கின்றன வென்று சொல்லும்படி மிக்க வொளிவிளங்குஞ் செவிகளின்மேல் அன்றலர்ந்த நீலோற்பல மலர்களை யணிந்தார்கள். தாய் தந்தையரைப் போல அம்மங்கையர்கள் வளர்த்த அன்னப் புட்களானவை அவர்கட்கு இரகசியஞ்சொல்லச் செவிகளி னடுத்திருப்பனபோல ஒளிமிகுந்த மணிகளை வரிசையுறச்சேர்த்துப்பதித்த அன்னக்கொப்புகளை யணிந்தார்கள். உரோகணிமாது இம்மங்கையருடைய வொளிமிகுந்த வனப்பினைத் தன்காதலனாகிய சந்திரனென்றுகருதி விருப்புற்றடுத்திருப்பதுபோலக் குளிர்ச்சியு மழகும்வாய்ந்த தரளத்திறற்செய்த கன்னப்பூவென்னும் ஆபரணத்தினை யணிந்தார்கள்

இம்மங்கையர் முகமானது தேனை யுமிழ்கின்ற தாமரை மலர்போல மலர்ந்து, அமிர்தமொழுகுகின்ற சந்திரனைப்போலக் குளிர்ந்து நம்மைப்போலவுங் கிரணங்களைவீசிப் பிரகாசிக்கின்ற தெனக் கருதிச் சூரியனானவன் வணங்க வந்திருப்பதுபோலப் பதுமராகத்திற் செய்த பசியகுண்டலத்தினை யணிந்தார்கள் கன்னிக் கமுகினையொத்த கண்டத்திற் கண்டோர்களது கண்ணெச்சி லடையாதிருக்கக் காப்புச்செய்தாற்போலக் கிரணங்களையுடைய பல மணிகளாற் செய்த கட்டுவடத்தினை அக்கண்டத்தின்மீ தணிந்தார்கள் கல்யாண மகிழ்ச்சியினால் அம்மங்கையர்க்குக் கொங்கைகள் பூரிப்பதனாலுந் தோள்கள் பெருத்திடலாலும் இப்பூமியின்கண் இடமில்லாமற்போமென்று கருதி அவைகள் பருத்தலைத்தடைசெய்வர்போல ஒளிமிகுந்த தனங்கட்குக் கச்சினையுந் தோள்கட்கு வாகுவலயத்தினையுங் கைகட்கு வளையினையும் விரல்கட்கு மோதிரத்தினையுமணிந்தார்கள் மிக்க மதர்ப்பினையுடைய கொங்கைகட்குப் பலவரிசைகளை யளிப்பவர்போல அக்கொங்கைகளின் மருங்கெல்லாங் கிரணங்களை வீசுகின்ற மாணிக்கமாலை, பவளமாலை, முத்துமாலை, வச்சிரமாலை, கோமேதகமாலை முதலியவைகளோடு அணிபெறக்கோத்த பூமாலைகளையுமணிந்தார்கள், கொங்கைகளினின்றும் பலமணிவடங்களாகிய நதிகள் ஒளிவிட்டு வீழ்கின்ற நிதம்பமென்னுங் கடலுக்கு நாணைநிருமிப்பவர்போலப் பற்பல மணிகளாற்செறிந்துகோத்த முப்பத்திரண்டு கோவையாகிய மணிவடத்தினையும் அரைப்பட்டிகைமுதலான ஆப

ரணங்களையு மணிந்தார்கள். அளவற்ற நாள்தேடியுங் காண்டற் கருமையனவாயிருந்த திருவடிகளை இன்று கண்டோமென்று நான்கு வேதங்களு மனங்களித்து விடாமற் பற்றிக்கொண்டதுபோல அம்மங்கையருடைய பாதபதுமங்களிற் பாடகஞ் சதங்கை தண்டை நூபுரம் பாதசாலம் பொன்மோதிரம் என்னும் ஆபரணங்களையணிந்து செம்பஞ்சுக்குழம்புந் தீட்டினார்கள் அம்மங்கையர் ஆபரணமுதலியவைகளாற் செயற்கை யழகுவாய்ந்திருக்கும் ஏனைய மாதர்கள்போலுருக்கொண்டிருப்பினும் இயற்கையிற்றானே யளவற்றவனப்புக்களைவாய்ந்தவர்களென்று இதுகாறுஞ்செய்தசெயற்கையழகை மறைத்துக் காட்டுவார்கள்போல அரைதொடுத்துத் தோள்வரையில் மெல்லிய ஆடையினை யணிந்தார்கள்.

இவ்வாறு சித்தி என்னுந் தேவியார்க்கு இலக்குமி அதிதி இந்திராணி என்னுமூவர்களும், புத்தி என்னுந் தேவியார்க்கு அநசூயை அருந்ததி இரதிதேவி என்னுமூவர்களுமாக மணக்கோலத்திற்குரிய வலங்காரங்களை யெல்லாஞ் சிறக்கச்செய்து முடித்து அவ்விடத்தினின்று நீங்கிச் சிவபிரான் இடப்பாகத்தமர்ந்த பார்வதிதேவியாருடைய கடைக்கணோக்கின் நேராகநின்று, அன்னையே! முன்னம் அடியேங்கள் செய்த தவப்பயனாகத் தேவரீர் ஆக்கியாபித்த பணிவிடைகளைக்குறைவின்றி நடாத்திவந்தனமென்றறிவித்து வணங்கி அத்தேவியாருடைய வாஞ்ஞைபெற்று பின்னரவ்விருவகையினரும் அம்மங்கையரை நவரத்தினச் சிவிகைகளிலேற்றிப் பலவிண்ணின் மாதர்களுந் தோழியர்களும் புடைசூழ்ந்துவரவும் வெண்பட்டுக்குடைகள் மயிற்பிஞ்சங்கள் முதலிய வலங்காரங்களோடு பலவகைக் கொடிசின்னங்கள் விளங்கவும், குடமுழா முதலியபலவாத்தியங்கண் முழங்கவுமாக அளவற்ற வைபவங்களோடு வீதியிலெழுந்தருளச்செய்தமாத்திரத்தில் முளை முதலியவெல்லாம் முறைமையாகச் சேர்த்துவைத்திருக்கின்ற கல்யாண மண்டபத்திற் சனக மகாமுனிவர் ஆசிரியராகவந்து தருப்பை வெண்பொரி முதலிய பலவகைப்பொருள்களையுஞ் சேகரித்து முகூர்த்தகாலம் பார்த்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் ஒருவர்க்கொருவ ரொப்பாவதன்றி மற்றொருவரொப்பில்லாத அம்மணப்பெண்களிருவரும் வீதியை வலமாகவந்து திருக்கல்யாண மண்டபத்தி லிறங்கிக் கற்பகதருவின் இருமருங்கிலும் படர்ந்திருக்கின்ற காமவல்லிக்கொடிபோலக் கணேசமூர்த்தியினுடைய பக்கத்திற் கலந்திருந்தார்கள்.

உடனே மண்ணில் வழுக்கி வீழ்ந்த தேவர்கள் மீட்டும் விண்ணிற்புக்கி மகிழ்வை யடைந்ததுபோல; இதுகாறுங் கணேச மூர்த்

தியை நீங்கியிருந்த அம்மங்கையர் மீட்டும் அவர் சமீபத்திற் சலத்தலும், முன்னற்வேறுபட்டுவிளர்த்திருந்தநிறத்தினைப்போக்கித்தங்கள் சுபாவவடிவத்தினை யடைந்தார்கள் இப்பால் சகலகலைவல்லவராகிய சனகமகாமுனிவர் சங்கற்பஞ்செய்து புண்ணியாவசனம் புரிந்து அம்மணப்பந்தரிலுள்ள பொருள்களையெல்லாந் தூய்மையாக்கிக் கணேசமூர்த்தியை வேதாகமங்களாற் றுதித்துத் தேன்கலந்த பாலும்பழமுமளித்து அருக்கியம் பாத்தியம் ஆசமனம் என்கின்ற மூன்று மந்திரசலங்களையுந்தந்து மணப்பெண்களுக்குக் கூறைமுதலியவைகளை யணிவித்துப் பிரமதேவனைக்கூவினர். உடனே அப்பிரமதேவன் விரைந்துவந்து தம்பதிசமேதரா எழுந்தருளியிருக்கின்ற விநாயகக்கடவுளுடைய மணவணிக்கோலத்தைமனங்களிக்கக்கண்டு கரங்களைச் சிரமேற்கூப்பித்தொழுது துதித்துத் தன்னருகில் நின்கின்ற சரசுவதியைப்பார்க்க அவள் பலதெய்வப்பெண்களுடன் துரிதமாகச்சென்று திருமஞ்சனங் கற்பகமலர் தூபதீப முதலாகியபொருள்களைப் பொற்பள்ளயங்களிலேந்தித் தன்கணவன் சமீபத்தில் வந்து நின்றனன்.

அக்காலத்திற் சனகமகாமுனிவர் பணித்தருளியபடிக்குப் பிரமனைவன் வேதாகம விதிப்படி பாதபூசைசெய்யத்தனித்தவனைப் பொற்றட்டினிடத்தில் விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளைச் சேர்த்துத் தன்தேவியானவள் தங்கக்குடத்தில் நிரப்பி வைத்திருக்கின்ற கங்காசலத்தை யெடுத்து மெல்லமெல்ல வார்த்துவரத்தான் சுத்திசெய்து திருவொற்றுடையால் ஈரத்தைப்புலர்த்திக் களபகஸ்தூரி முதலியவைகளைச் சேர்ந்திருக்கின்ற சந்தனக்குழம்பை யப்பிப் பஞ்ச தருக்களினது புதிய மலர்களைக் கொண்டருச்சித்துச் சாம்பிராணித் தூபத்தைக் காட்டி கர்ப்பூராஞ்சனங் கொடுத்து, சோடசவுபசாரங்களோடும் பூசனைகளை நிறைவேற்றியவுடன் உடல் பொருள் ஆவி என்கிற மூன்றையும் அநாதியிற்றனே தயக்கு அடிமையாகவுடைய கடவுளுக்குப் பரிபக்குவராயினோர் தங்கள் போதவொழிவினிமித்தமீட்டுமவைகளைச் * சமர்ப்பிக்கு முறைமைபோல விநாயகமூர்த்தியை அநாதிதொட்டு நீங்காத அச்சத்திகளைப் பிரமதேவனைவன் மீட்டும் பழமை பாராட்டி யளிப்பவனுய்க் கணேசமூர்த்தியினுடைய திருக்கரங்களிற்றனது புத்திரிகளாகிய சித்தி

* உடல் பொருள் ஆவி மூன்றனையுஞ் சமர்ப்பித்தலாவது உடலைத்தன்னதென் றபிமானித்தலின்றி யிருத்தல், பொருள்களின்மேல் பற்றுதலின்றி யிருத்தல் ஆவி யறுவையன்றி வேறொன்றைச் சுட்டுதலின்றி யிருத்தல்,

புத்திகளின் திருக்கரங்களைச்சேர்த்துச் சுவாமீ! அடியேன்அருமை யாக வளர்த்தெடுத்த இம்மங்கையரைத் தேவரீர் அங்கீகரித்து, என்னை யாட்கொள்ளவேண்டுமென்று சரசுவதிவிட்ட தெய்வதீர்த் தத்தால் தாராதத்தஞ்செய்து வணங்கினன் அவ்வாறே அத்திருக் கலியாணமகோற்சவத்தில்வந்திருந்த நவக்கோள்கள்முதலிய சகல வுயிர்களுந் தாமாக விருந்தும் அக்கன்னியரை ஏற்றுக்கொள்ளு நிமித்தம் அவைகளினின்றும்வேறாகிவீற்றிருக்கின்ற கணேசமூர்த் தியானவர் அவ்விண்ணப்பத்திற்கு அருள்சுரந்து ஓர் தந்தை தன் கையிலிருக்கின்ற வெள்ளடையைச் சிறியமதலை கையிற்றந்து மீட் டும் அதைத்தன்வாயாற் கிரகித்துக் கொள்ளுமாறுபோலமுன்னர் அப்பிரமன் கடைத்தேறுமாறு கடாட்சித் தருளிய அம்மங்கைய ரைமீட்டு மவனிடத்தினின்றுந் தாம் ஏற்றுக்கொண்டனர்.

இப்பாற் பிரமதேவன் தன்னிஷ்டசித்தியைப் பெற்றுக் களித் தவனாய்ச் சில காரியகாரரைத்தூதாக்கி, வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனிமுதலிய கனிவர்க்கங்களையும், மதுர மிகுந்த கருப்பஞ் சாறு, ஆவின்பால், தேன், சற்கண்டு முதலிய சிறந்த வஸ்துக்களை யும், பொலிவாகத்தருவித்துத் தங்கப்பள்ளயங்களினும் கிண்ணங்க ளினு நிரப்பிக்கொண்டுவந்து கர்த்தனே! தேவரீர் இவற்றினைப்புசி த்தருளி அடியேனை இரட்சிக்க வேண்டுமென்று நிவேதித்தனன். பின்னர் மங்களபேரி, முரசம், மத்தளம், டமா, குடமுழா, தக் கை, வலம்புரிச்சங்கம், வேய்ங்குழல், திருச்சின்னம், பூரி, எக்காள ம், துத்தாரி, சயகண்டை முதலிய பல மங்களவாத்தியங்கள் அண் டங்களதிர்ந்து திசைகள் செவிடுபடத்தக்கதாகத் தாம் தாமென்று முழங்கவும் தேவர்கள் முனிவர்கள் கின்னரர் கிம்புருடர் சித்தர் வித்தியாதரர் கருடர் கார்தருவர் முதலிய சகலசனங்களும் மன வெழுச்சியுடன் தங்க டங்கள் கரங்களைக் கொட்டிச் சயசயவென்று போற்றவும் ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர்-அஷ்டதிக்குப்பால கர் முதலிய யாவருஞ் சந்தோஷசாகரத்தின் மூழ்கி இத்தினஞ்சன் மசாபல்லியராய் முத்திக்களாயினோமென்று பலவிதங்களிற் றுதி த்து மங்களவாழ்த்துக்கூறவும் அத்திரி ஆங்கிரசர் கௌதமர் சமத க்கினி, பாரத்துவாசர்முதலிய ரிஷிபுங்கவர்கள் வேதாகமங்களாற் றுதித்து வாழ்த்தவும், சமுத்திரகோஷமும் அஞ்சும்படியாக ஆகா யத்தினின்று தேவதுந்துபிகள் கணகணவென்று சத்திக்கவுமான இவ்விதவாடம்பரங்களோடு சனகமகாமுனிவர் ஓமகுண்டத்தைச் சேர்ந்து சுற்றிலும் அந்தணர்களை யிருத்தித்தருப்பைகளைப்பரப்பி,

ளையிறைத்து, மந்திரமலர்களாற் பிரணவமுதலிய பிரதம தேவதைகளை வழிபட்டு, பூரணகும்பம் குடவிளக்கு முதலியவைகளை யாங்காங்குவிதிப்படி தாபித்துவைத்து முத்தீக்களையு மந்திரபூர்வகமாக வோமகுண்டத்திலெழுப்பி, விநாயகக்கடவுளையுஞ் சித்திபுத்திகளையும் அதனருகில் எழுந்தருளச்செய்து இருடிபுங்கவர்களும் அந்தணர் குழூஉக்களும் வேதசாகைகளைச் சொல்லிச் சமித்துக்களைக்கிரமப்படி ஓமகுண்டத்திற் போட்டுவர பசுநெய்யை யூற்றி இடையிடையிற் பொரியையும் பாலையுமிறைத்து நவக்கிரக வோம முதலிய கருமங்களை வேதாகமவிதிப்படி விநாயகப்பெருமான் முன்னிலையில் நிறைவேற்றிப் பூரணாகுதியுங் கொடுத்தவுடன் அத்தீயினிடத்தெடுத்தமைக்குழம்பை மாப்பிள்ளையினுடைய திருநுதலிலிட்டுப்பின்னர் அவரைக்கொண்டு கலியாணப் பெண்களுக் கிடுவித்து நாரதமுனிவர் மும்முறை பொரியிட அவைகளை ஓமாக்கினிக் காகுதிசெய்து மற்றைச் சடங்குகளையும் வரன்முறையாக முடித்தனர். பின்னர்க் கல்யாணப் பிள்ளைக்கு மகாவிஷ்ணு தோழராக விருந்து கைலாகு கொடுத்துப் பீடத்திலிருந் தெழுப்பலும், இலக்குமிமுதலிய அறுவர்களுந் தங்கள் நாயகியராகிய சித்திபுத்திகளைத் தழுவியெடுத்து அவர்கள் கனிட்ட விரல்களை எமது கர்த்தராகிய விநாயகப்பெருமானுடைய கனிட்டவிரல்களாற் பற்றச்செய்தார்கள். உடனே சகலரும் புடைசூழ்ந்துபோற்றி வரும்படியாகக் கணேசமூர்த்தியானவர் அத்தீக்குண்டத்தை மும்முறை வலம்வந்து வடபாரிசத்திற் சேர்ந்து கல்யாணப்பெண்களின் றிருவடிகளைத் தமது திருக்கரத்தாற் றூக்கித்தூக்கி நிலத்திலிட்டு முடிவில் அம்மியின்மீது வைத்துப் பதிவிரதாசிரோன்மணியாகிய வதிஷ்டமுனிவர் பத்தினியை எதிரிலழைத்து அவள்மீது தமது திருக்கண் சாத்தினர்,

இவ்விதமாக அக்கினிதேவன், தவத்தர், தேவர் வேதப்பிராமணர் முதலிய யாவர் முன்னிலையினுஞ் சாட்சியாகத் திருக்கல்யாண சம்பிரமங்களனைத்தும் கிரமமாக முடிந்தவுடன்விநாயகக்கடவுள் தமது தேவியரோடுந் தாய்தந்தையர் திருவடிகளில் வணங்க அத்தாய் தந்தையர் ஆசீர்வதித்து மனப்பூரிப்படைந்து நவரத்தினமயமாயிருக்கின்ற ஆதனத்திலிருத்தித் திருமாலைநோக்க, அத்திருமால் சிவபிரானை வணங்கித் தேவேந்திரனெடுத்து நீட்டுகின்ற தாம்பூலாதிகளை அநந்தர்முதல் உருத்திரகண மீறாயுள்ள எல்லாத்தேவர்கட்கும் வரன்முறையாகக் கொடுத்து வந்தனர். அவ்வாறே

கற்பக விருட்சமும் முனிவர் முதலாயுள்ள பரிசனங்கட்கு வேண்டு வனவற்றைவரையாது கொடுத்துவந்தது. இவையன்றி அவ்வவர்கள்குறித்துக்கேட்ட வரங்களையுஞ் சிவபெருமான் தமது பூரண கடாக்ஷத்தால் அநுக்கிரகித்துப் பார்வதி தேவியோடுஞ் சென்று மற்றோரிடத்திற் றனியாக வீற்றிருந்தனர் இப்பாற் சித்திபுத்திகளிருவரும் அழகிய மணிகளிழைத்த சிவிகைகளிலேறிவர எம்மையடிமையாகவுடைய விநாயகமூர்த்தியானவர் ஈராயிர மருப்பினையேந்திய அயிராவணமென்னும் பொருப்பில் ஆரோகணித்துஅடைத்த கடலையுடைத்ததுபோல அளவற்ற வாத்தியங்கள் முழங்கவும்மடைதிறந்து விடுத்ததுபோல மங்கலவாழ்த்துக்கள் சத்திக்கவும், தேவர்கள் புட்பவருடம் பொழியவும், சந்திரவட்டக் குடைகள் ஆகாயத்தைக் கவிக்கவும், பலவிருதுக்கொடிகள் அண்டமுகட்டை நெருக்கவும், இருமருங்கினும் வரிசை வரிசையாகக் கவரிகளிரட்டவும் ஒப்பற்ற ஆலவட்டங்களை நாற்புறங்களினு மசைக்கவும், கின்னரர் இசைபாடவும் அரம்பையர் நடமாடவும், மற்றும் இவைமுதலிய சகலவாடம்பரங்களோடும் நந்திதேவர் தமது வெள்ளி வேத்திரத்தால் நெருங்கியிருக்கின்ற சனங்களைவிலக்கி வரும்படியாகப் பைய பைய அயிராவணத்தை நடாத்திக்கொண்டு வீதியில் பவனிவருகின்ற சமயத்தில சில மாதர்கள் நீராஞ்சனம்-பூரணகும்பம் - மணிவிளக்கு-முளைப்பாலிகை முதலிய மங்கலப்பொருள்களையேந்தியும்சில மாதர்கள் கன்னற்றுண்டு-கதலிக்கனி-மாங்கனி-பலாக்கனி முதலிய வர்க்கங்களைவீசியும் சில மாதர்கள் புட்பம்-சந்தனம்-கதம்பம்-பனிநீர் முதலிய பரிமளத்திரவியங்களைச் சொரிந்தும், சிலமாதர்கள் வச்சிரம் வைடூரியம்-கோமேதகம்-புட்பராகம் முதலிய ரத்தினங்களை எறிந்தும் இவ்வாறு யாவரும் மிகுந்த பத்தி விசுவாசத்துடன் பற்பல சம்பிரமங்களைச் செய்து கரங்களைக் கூப்பித்தொழுது வாயார வாழ்த்தினவர்களாயிருந்தார்கள்.

அவருட் சிலதருணமங்கையர் தேவதேவோத்தமராகிய விநாயகக்கடவுளது அற்புதமாகிய ரூபலாவண்ணியங்களைநேத்திரோற்சவமாகக்கண்டு தங்கடங்கள்சரீரமெல்லாம் பூமியிற்பொருந்தச் சேவித்தமாத்திரத்தில் வேறொரு செயல்களுமற்றவர்களாய் அளவற்ற ஆசைப்பெருக் கென்னுஞ் சமுத்திரத்தின் மூழ்கியிருந்தார்கள். அவருள் ஒருத்தி தன்மையலைச் சற்றேதணித்தெழுந்து இவ்வாடவரையொப்பவர் யாவரிருக்கின்றார்களென்று தென்றற் காற்றினு லசைகின்ற இளங்கொடியைப்போலத் துவண்டுரைப்ப, அதனைக்கேட்ட

யான்தழுவ நினைத்திருக்கின்ற ஆடவர்க்கு நீ துன்பமுற நோக்கினையோவென்று கோபித்தனள். ஒருத்தி சகல ஆபரணங்களும் இந்நாயகர் திருமேனியிலணிந்ததனு லல்லவா அவைகட்கழகுண்டாகியதென்று வியக்க அதனைக்கேட்ட மற்றொருத்தி அவளையெதிர்த்துச்சீறி நீ உயிர்வாழ்தல் விரும்புவையாயின் இந்தவொப்பற்ற அழகருடைய நினைப்பையொழித்து விடக்கடவை. முன்னரே அவரிடத்து என்மனந் தூதுபோயிருக்கின்றதென்றனள். ஒருத்தி தன்முகத்தைநோக்கி நிமிர்ந்திருக்கின்ற கொங்கைகளைப் பார்த்து ஓ தனங்களே! இச்சித்திபுத்திகள் தங்கள் முகத்தைநோக்கியிருக்கின்ற கொங்கைகளைவிநாயகமூர்த்தியாற் றழுவும்படி அரியதவத்தைச்செய்தார்கள். அத்தனங்களைப்போல நீங்களும் என்முகத்தை நோக்குவதிலென்னபயன்? முற்பிறப்பில் அவரைக் கூடுமாறு நற்றவஞ் செய்திலோமேயென்று ஏக்கமுற்றுரைத்தனள். ஒருத்தி விநாயகக் கடவுண்மீதுகொண்ட பெருங்காதலால் தானோக்குமிடமெல்லாம் அவரைப்போல உருவெளித்தோற்றமுண்டாகக்கண்டு இவ்வயிராவணத்தில் வருகின்ற கட்டழகர் ஒருவரோ பலரோவென்று ஐயமுற்றுத் தன்கலைசோர்வதையு மதியாதவளாகி நின்றனள்.

இவ்வாறு ஆங்காங்கு காமுற்று வருந்துகின்ற மங்கையர் டத்துள் விநாயகமூர்த்தியைக் கைகுவித்துத் தொழுகின்றவருடைய கரங்களுங்கொழுகொம்பற்ற கொடிபோலத் தாழ்ந்து வணங்கிமீளவும் எழுத வில்லாதவர்களுடைய நிதம்பங்களுமே தத்தம்வளைகளோடு கலைகளோடு நிறைந்து விளங்கியிருந்தன. அன்றி, மற்றையர் கரங்களும், நிதம்பங்களும், அவ்வளைகள் சேர்ந்தனவாகவும், கலைகள் வீழ்ந்தனவாகவுமிருந்தன. சிலமங்கையர் கைகளி லணிந்திருக்கின்ற வளைகளெல்லாம் விநாயகப் பெருமானுடைய மார்பைப் புல்லாதகைகளில் நாமிருப்பதனாலென்னபலன் என்னபயனென்று நழுவிவீழ்ந்தன. சில நங்கையர் முடித்திருக்கின்ற கூந்தல்களெல்லாம் அவர்கள் உள்ளநெகிழ்ச்சியை அக்கணேசமூர்த்திக் கறிவிப்பது போல அவிழ்ந்து சோர்ந்தன. சில கோதையர் ஆனந்தக்கூத்தாடினார்கள் சிலபேதையர் நயந்தெரிந்து பாடினார்கள். சில அரிவையர் குறிஞ்சிமுதலிய பண்களைப்பாடினார்கள். சில தெரிவையர் பாவனையிற்கலந்தாடினார்கள். இவ்வாறுபேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம், பெண் என்னும் எழுவகைப்பரு

வங்களைப் பெற்றிருக்கின்ற * ஸ்திரீசாதிகளெல்லாந் தெருக்களில் நிறைந்து நின்று காதல் கொள்ளத்தக்கதாக என்னையாட்கொள்பவராகிய விநாயகமூர்த்தியானவர் அலங்கரித்திருக்கிற வீதிகளை வலமாகவந்து, மீட்டும் அரண்மனையிற் பிரவேசித்தனர். அத்தருணத்திற் காமதேனு, சிந்தாமணி, பஞ்சதரு, சங்கநிதி, பதுமநிதி என்னும் இவைகள் வேறுவேறுருவங்கொண்டு வந்தவர்கட் கெல்லாம் பெருமைபெற்ற பலதிரவியங்களை அவ்வவர்கள்வெறுக்கும்படியாக மழைபோற் சொரிந்தன.

இவ்வண்ணந் திருக்கல்யாண சம்பிரமங்கண்முழுவதும் நிறைவேறிப் பின்னர்த் தேவர்கள்-முனிவர்கள்-திக்குப்பாலகர் - கணநாதர்கள்-பூமண்டலவாசிகள்-பாதலவாசிகள் முதலிய மற்றைய தீபாந்தரங்களிலிருந்து வந்தவர்கள் யாவருஞ் சிவபெருமான் பார்வதி தேவியாரோடும் வீற்றிருக்கின்ற சபையைச்சேர்ந்து தீர்க்கதண்டஞ் செய்து விடைபெற்று தம்பதி சமேதரா யெழுந்தருளி யிருக்கின்ற விநாயகமூர்த்தியைக்கண்டு பலமுறை துதித்து அடியற்றமரம்போலவீழ்ந்து நமஸ்காரஞ்செய்து அவரது திருவருளைப்பெற்றுத் தங்கடங்கள் பதவிகளிற் சேர்ந்தனர். இப்பாற் சிவபெருமான் தம்மோடு வந்த கந்தவேள்முதலிய காரணர்களெல்லாம் புடைசூழ்ந்து வரும்படியாகச் சித்திபுத்தி மணாளராகிய கணேசமூர்த்தியை யழைத்துக் கொண்டு பார்வதி தேவியாரோடுங் கைலைக்கெழுந்தருளித் தமது பஞ்சகிருத்தியங்களை நடாத்தியிருந்தனர். விநாயகக் கடவுளுந் தமது உலகத்திற்சென்று எமதன்னையராகிய சித்திபுத்திகளோடுங் கலந்து சகலபோகங்களையும் அநுபவித்திருந்தனர்.

திருமணப்படலம் முற்றிற்று

---

* அவர்க்கு முறையே வயதெல்லையாவது ஐந்துமுதல் ஏழளவும்பேதை. எட்டுமுதற் பதினொன்றளவும் பெதும்பை, பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும் மங்கை, பதினான்குமுதல் பத்தொன்பதளவும் மடந்தை. இருபதுமுதல் இருபத்தைந்தளவும் அரிவை. இருபத்தாறுமுதல் முப்பத்தொன்றளவும் தெரிவை. முப்பத்திரண்டுமுதல் நாற்பதளவும் பேரிளம், பெண்.

## விண்டு சடாக்கரம்

# அநுட்டித்த படலம்.

சித்தி புத்திக டிருமணஞ் செப்பினும் வியதா
வைத்த பன்னகப் பள்ளியான் கணேசனைப் பரவி
மெத்து வண்டிறன் மதுகயி டவருயிர் வீதத
வத்திறத் தினைக்கேளென வறைகுவன்மலரோன்.

சௌநகாதி முனிவர்களே! எமதுசற்குரு மூர்த்திகளாகிய வியாதர்க்குப் பிரமதேவர் கூறியபடி விநாயகமூர்த்தி சித்திபுத்திகளைத் திருமணஞ்செய்த சிறப்புகளைச் சொன்னோம். இப்பால் அவ் விநாயகமூர்த்தியை விண்டு உபாசித்தவரலாற்றினையுஞ்சொல்வோ ங்கேட்பீராக முன்னொருகாலத்தில் மகாவிஷ்ணு வானவர் திருப் பாற்கடலிற் சேஷசயனத்தின்மீது நித்திரை செய்துக்கொண்டிருக் கையில் அவர் செவிகளினின்றும் மிக்க வலிமைபொருந்திய மது கைடவர் என்னும் இரண்டசுரர்கள் நெருப்பைசசொரிகின்ற விழி களும், இடியையொத்துச் சத்திக்கின்ற குரல்களும், யாவருங்கண் டஞ்சத்தக்க உருவங்களும், பிறைபோலவளைந்திருக்கின்ற கோரப் பற்களும், சுருட்டிவிட்டிருக்கின்ற முகமயிரும், சிவந்திருக்கின்ற முடிமயிரும் உடையவர்களாய்த் தேவர்களெல்லாரு துன்புறும்படி யாக உற்பவித்து, அம் மகா விஷ்ணுவையு மதியாது அரியதவங்க ளைச் செய்திருக்கின்றமுனிவர்கள் பெரியோர்கள் முதலானவர்களை நிந்தித்து வேதாகமவொழுக்கங்கள் சிறிதுமின்றிப் பூலோகத்துள் ளோரையெல்லாம் வதைசெய்து பின்னர்த் தெய்வலோகத்தையும் அதஞ்செய்யக்கருதிப் பிரமதேவனைப் பிடிக்கச்சென்றார்கள். அதற் கப் பிரமதேவன் அஞ்சித்தன்னுருவத்தை அவ்வசுரர்க்குத்தோற்ற வொட்டாமல் மறைத்துக் கொண்டு கணேசமூர்த்தியை மனதிற் றியானித்து அவர் திருவருளையே துணையாகப்பெற்று இதனை யோசிக்கலாயினன்.

கறுத்த கடல்போன்ற நிறத்தினை யுடைய இவ்வசுரரை மேக வண்ணராகிய மகாவிஷ்ணு அழிக்கவேண்டுவதே யன்றி மற்றொ ருவரால் ஆகாதென்று நிச்சயித்து உடனே விரைந்து சென்று திருப்பாற்கடலையடைந்தனன். அங்கு அத்திருமாலானவர் சேஷசய

* விண்டு—வியாபக முடையவர்—விஷ்ணு என்னும் வடமொழித்திரிபு விட்டுணு எனவும் வரும். சடாக்கரம்—ஆறெழுத்து. சடாக்ஷரம் என்னும் வடமொழித்திரிபு.

ணத்தின்மீது கண்படுத்திருப்பக் கண்டு யாவராயினும் நித்திரை செய்யுங்காலத்தில் அந்நித்திரையைப் பங்கப்படுத்துதல் தகாதகாரியமாக வேதாகமங்கள் சொல்லுகின்றமையால் நாமிவரை யெழுப்புதல் கூடாதென்று யோசித்து அவர்கண்படுவதற்குக் காரணமாக விருக்கின்ற நித்திராதேவியைக் கூவி, அம்மையே!

சாவித் திரியாய்ச் சந்தியாய்த் தக்கசுவா காசுவ தாவாய்ப்
பாவித்திடு முத்தொழி லாகிப் பண்ணுவோராய்ப்பார்ப்பதியாய்
மேவுற் றிடுநற் கலையாதி வெவ்வேறான காலமா
யாவித் தயரும் பசிதாக மாகிப் பரையா மாமாயி.

இருளு மிருளு மிரவாதி யிருக்கா திகளா மறையாதி
மருவு மலகி லுயிர்கட்டோ டுமம வளர்சத்திகளும் பலவாதி
பருகு மமுத மயமாதி யாவாய் நின்றீர் பகர்வாரியார்
பொருவிலா தாய்க்கினி யடியேன் புகலப்படுவதொன் றுளதால்.

என்றநந்தமுறைதோத்திரஞ்செய்து தேவியே! உனக்கடியேன் செய்துகொள்வதாவன விண்ணப்பமொன்றுண்டு. அதாவது அரக்கர் அவுணர்முதலாயினோருடைய முடிகளனைத்தையும் போர்செய்துருட்டித் தேவர்களையெல்லாங் காக்கின்றவராகியும், அன்பினர் கலியையகற்றவல்லவராகியு மிருக்கின்ற இம்மகா விஷ்ணுவானவர் நெடுநாள் உனது வயத்தராகித் துயிலுற் றிருக்கின்றனராதலால், அவர் விழித்தருளுமாறு அடியேன்மீது கிருபைவைத்து நீயப்பாற் செல்லவேண்டும். ஏனெனில் மதுகைடப வென்னும் இரண்டசுரர்கள் பூர்வசன்மத்தில் அரியதவங்களைச் செய்து என்னிடத்தி னின்றுங் கொடாதவரங்களைப்பெற்று இச்சனனத்தில் இம்மகாவிஷ்ணுவினுடைய செவிகளினுற்பவித்து மனிதர்களையுந்தேவர்களையும் நடுங்கி யொடுங்கத்தக்கதாக வாட்டி, பின்னர் என்னையும் பிடிக்க வந்தார்கள் அதற்கஞ்சியான் இங்குவரலாயினேன். அப்பொல்லாப்பாவியர் இம்மாயனாலொழியவேண்டுவதேயன்றி மற்றையரால் ஒழிபவரன்று. ஆதலால் இவ்விண்டு எழுந்தருளவும், அவ்வசுரர் மடிக்தருளவும் நீயநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுதலும், அந்நித்திராதேவி விண்டுவை விட்டு நீங்கினள். உடனே அவரும் எழுந்தருளினர். அத்தருணத்தில் அவ்வசுரர்களாற் றுன்பப்படுகின்ற தேவர்கண்முதலாயினோர் ஒருமிக்கத் துதித்துத் தங்களிடும்பைகளைக்கூறி முறையிட்டார்கள். அவை யனைத்தையும் விண்டுவானவர்கேட்டுப் பிரமனைப்பார்த்து, பிரமனே! நீங்கள் இங்

குவந்தகாரிய மெற்றினுக்கென்று வினவப்பிரமன் சொல்லுவான். அனந்தசயனா! வஞ்சகத்திற் சிறந்த மதுகைடவரென்னு மிரண்டசுரர்கள் தேவரீர் செவியழுக்கினின்றுந் தோன்றி யாவரையும் அதஞ்செய்கின்றார்கள். அப்பாதகர்கட்குத் தாய்தந்தைதேவரீரென்றுபிறர்கள் பேசாதவண்ணம் அவர்களை மடித்து எங்களைக் காத்தருளவேண்டி இங்குவந்தோமென்றுவிண்ணப்பஞ்செய்துகொண்டனன்.

இப்பால் அத்திருமாலானவர் விடதத்திற்கொப்பாகிய அவ்வசுரர்கள்செய்யு மாயைகளனைத்தையுங்கேட்டு யோசித்துப் பிரமனாதியரைப்பார்த்து அஞ்சவேண்டாமென்றுதிடஞ்சொல்லித் துண்ணென்றெழுந்து, பற்பல ஆயுதங்களை யேந்தி ஊழிக்காலத்திற் சலப்பிரளயத்தினால் எழுகின்ற பேரொலியைப்போலச் சங்கநாதஞ்செய்தார் அவ்வோசையை மதுகைடவர்கள் கேட்டு உடனே சீறிவந்து ஒருமலைக்கெதிரில் இரண்டு மலைகள்வந்து நிற்பதுபோல ஆர்ப்பரித்துநின்று, விண்டுவே! எங்கள் தோள்களிற் றினவெடுக்கின்றதால் விரைவில்வந்து யுத்தஞ்செய்யக்கடவையென்று அறைகூவினார்கள். அதற்குத் திருமாலானவர் மிகவுங் கோபங்கொண்டு அசுரர்களே! உங்கள் தோட்டினவை நாமே யடக்குகின்றோம் பயப்படவேண்டாமென்று சொன்னார். பின்னர் இருதிறத்தாரு மொருங்கிப் பூதகணங்கள் வந்து குதிகொள்ளத்தக்கதாகப் பல பாணங்களை ஒருவர்மேலொருவர் பிரயோகித்தார்கள். மீட்டுந் திரும்பி வச்சிராயுதங்களை விட்டெறிந்தார்கள். இராசதண்டமரவத்தை யொப்பவார்ப்பரித்து எதிருக்கெதிர் வேலாயுதங்களையெடுத்துவிடுத்தார்கள் பூமியிற்றுக ளெழும்பும்படியாக வொருவரையொருவர் வலமிடமாகச் சுற்றி வாளாயுதங்களைக்கொண்டுவீசினார்கள். அண்டங்களெல்லாம் வாய்விட்டு வெடிக்கும்படியாகவும், மேகங்கள் தமது கர்ப்பங்கலங்கிவிழும்படியாகவும், கடலானது கரைபுரண்டு பெருகும்படியாகவுங்கர்ச்சித்து எதிருக்கெதிர் தண்டாயுதங்களைக்கொண்டு மோதினார்கள் ஒருவர்க்கொருவர் பாசங்களை யெடுத்து வீசினார்கள். கண்களிலிருந்து வடவாக்கினிக் கொப்பான தீப்பொறிகள் சிதறும்படி நோக்கிக் கோபித்து முடியை முடியினாலுந் தோளைத் தோளினாலும், மார்பை மார்பினாலுந் தொடையைத் தொடையினாலும் அடியை அடியினாலும் கையைக் கையினாலுந்தாக்கி, ஒருவர்க்கொருவர் வெற்றி தோல்வியின்றி அளவற்ற மல்யுத்தங்களைச் செய்தார்கள்.

இவ்வாறு நெடுநாள் யுத்தஞ்செய்தும்விஷ்ணுவானவர் அவ்வசுரர்களை வெல்வதற்குச் சக்தியில்லாமற் றளர்ச்சி யடைந்து கந்

தர்வ வடிவங்கொண்டு மறைந்து, கைலாய பர்வதத்திற்சென்றேறி த்துக்கொண்டு அவ்வரையில் ஓர் பூங்காவனத்திலிருந்து * சிறந்த யாழினையேந்தித் தண்டு-பத்தர்-நரம்பு-முறுக்காணி கொழுவாணி என்னும் உறுப்புகளைத் திருத்தி, ' பண்ணல்-பரிவட்டணை-ஆராய்த ல்-தைவரல்-செலவு-கையூழ்-விளையாட்டு-குறும்போக்கு என்னும் † எண்வகைக் கலைத்தொழில்களையுஞ்செய்து, வார்தல்-வடித்தல்-உந்தல்-உறழ்தல்-உருட்டல்-தெருட்டல் - எள்ளல்-பட்டடை என் னும் எண்வகை இசைக்கரணங்களைக் கொண்டு, கண்ணிமைத்தல் கண்டங்குடித்தல்-கொடிரசைத்தல்-வாயங்காத்தல்-எயிறுகாட்டல்-வயிறுகுழியவாங்கல்-அழுமுகங்காட்டல்-தலைநடுக்கல்முதலியஉடற் குற்றங்களும், வெடிகுரல்-பிழோசை-காகுளி முதலிய யாழ்க்குற்ற ங்களும், துள்ளல்-பெருமூச்சுவிடல் முதலிய பாடற் குற்றங்களும், இல்லாது எழுதப்பட்ட சித்திரம்போலவிருந்து பைரவி-தேவக்கிரி யை-மேகவிரஞ்சி-குறிஞ்சி-பூபாளம்-வேளாவளி-மலகரி-பௌளி-சீ ராகம்-இந்தோளம்-பல்லதி-சாவேரி-படமஞ்சரி-தேசி - இலலிதை-தோடி-வசந்தம்-இராமக்கிரியை-வராளி-கைசிகம்-மாளவி - நாராய ணி-குண்டக்கிரியை-கூர்ச்சரி - பங்காளம் - தந்நியாசி - காம்போதி கௌளி-நாட்டை-தேசாக்ஷரி-காந்தாரி-சாரங்கம் என்கின்றமுப்பத் திரண்டு இராகங்களால் இசையோசை, செய்யுளோசை வழுவாமல் வாசித்துக் கொண்டிருந்தார். அவ்வோசையானது சாமவேதப்

* சிறந்த யாழென்றது பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட் டியாழென்னும இந்நான்கிற்பேரியாழெனப்பெற்றும். இவற்றுள் பேரியாழிற்கு நரம்பு இருபத்தொன்று, மகரயாழிற்கு நரம்பு பதினேழு சகோடயாழிற்கு நரம்பு பதினறு, செங்கோட்டியாழிற்கு நரம்பு ஏழு அதனை "ஒன்று மிருபது மோரேழ் மேற்பத்துடனே நின்ற பதினறேழு சேரெங்காற்குன்றாத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே-மேல்வகை நூலோர்விதி" என்றார் இசைநூலாற் கூறியதனுணர்க.

† பண்ணலென்பது பாடநினைத்த பண்ணுக்கு இணை கிளை, பகை நட் பாண நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரைகள் அறிந்தகட்டுதல், பரிவட்ட ணை யென்பது அக்கட்டப்பட்ட நரமபை அகவிரலாலும் புறவிரலாலும் அனு கரணஞ்செய்து தடவிப்பார்த்தல், ஆராய்தலென்பது ஆரோகண அவரோ கண வகையால் இசையத்தெரிதல் தைவரலென்பது அது சுருதி ஏற்றுதல், செலவென்பது ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல், கையூழென்பது பாட நினைக்க ப்பட்டவண்ணத்திலே சந்தத்தைவிடுதல், விளையாட்டென்பது வண்ணத்திற் செய்யப்பட்ட பாடலெல்லாம் இன்பம் பிறக்கப்பாடுதல், குறும்போக்கென்பது குடகச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல்.

பிரியராகிய சிவபெருமான் திருச்செவிகளிலேறலும் பிருட்டதந்தன் நிகம்பனென்கின்ற பூதகணத் தலைவனைக்கூவி, நமது பர்வதச்சாரலில் யாழ்வாசிக்கின்றவன் திருமாலாகும், நீங்களவனிடத்திற்சென்று இங்ஙன மழைத்துவரக் கடவீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாறே அவர்கள்சென்று விண்டுவைக்கண்டு திரிபுராந்தகனாகிய சிவபிரான் உம்மை யழைத்துவரக் கட்டளையிட்டனரென்று சொல்ல, அதனைப் பெருமகிழ்ச்சியுடன் கேட்டு முதல்வாயிலிற்ற மதாணையைச் செலுத்தி வீற்றிருக்கின்ற நந்திதேவரைப் பணிந்து விடைபெற்றுக் கர்த்தன் சந்நிதானத்தை யடைந்து, பரமகருணாநிதியாகிய உமாபதி சமுகத்தில் நின்று தீர்க்கதண்டன்செய்து, அவர் கடைக்கண்ணோக்கம் பெற்றவராய் ஒரு பாரிசத்திலிருந்து தமது கையிலிருக்கின்ற யாழினையெடுத்து அதிற் கட்டுண்ட நரம்புகளைத் தடவி இசையாகிய வமுதத்தை நிறைத்து எல்லா உயிர்களும்மூழ்ந்தவாரியிற் றிளைத்து உய்யும்படியாக மீளவும் வாசிப்பாராயினர்.

பிள்ளை மதியணிந்த பெம்மான் றிருவடியை
யுள்ளு மவர்கட் குறுத பொருளுண்டே
மெள்ள நறுநெய் விழைந்து விளக்குந் தூங்
கள்ள வெலியுங் கடலுலகங் காத்ததே. (௧)

சூத்தி யணிந்த வமலன் றிருவடியை
யேத்து பவர்கட் கிசையாப் பொருளுண்டே
சாத்திய வில்வந் தனக்குத்தளர்மூசுவு
மூத்த வறிவின்முசு குந்தனுயதே. (௨)

(௧) பெம்மான்-பெருமான் என்பதன் மரூஉ. உண்டே—உண்டோ (இல்லையென்றபடி) விளக்குந்தும்—தீபத்தைத் தூண்டும். கள்ளவெலி கடலுலகங் காத்ததைப் பதினெண் புராணங்களுளொன்றாய கூர்ம மகாபுராணத்தில்மாவலி மூவடி மண்ணளித்த வத்தியாயத்திற் காண்க.

(௨) முசு—வண்டு. அதுமுசுகுந்தனுய் அரசாண்டதாவது, திருக்கைலாசமலையின்கணுள்ள சோலையிலே, சிவபிரானும் தேவியுமாக வீற்றிருந்தருளும்போது, வண்டுக்கூட்டங்கள் வில்வமரங்களிற் சேர்ந்திசை பாடியிருக்க, அவற்றுள் ஓர் வண்டு வில்வவிலைகள் பலவற்றை, அன்புடனருச்சிப்பார்போல அவர்கள் திருமேனியிற் றூர்த்தது அதுகண்ட சுந்தரியாகிய பிராட்டியார் பொருராய்ச்சிறிது முனிவுசெய்ய வுன்னும்போது, பெருமானுர் அறிந்துநங்காய்? அந்தவண்டு நம்மை வழிபடச்செய்ததன்றி வேறொன்றன்று. ஆகலிற் சினமுறற்கனைத் திருவாய்மலர்ந்தருளலும், அம்பிகையது தணிந்தாராய் அருள்புரிதலும்

பேயினத் தோடாடும் பெருமான் றிருவடியைக்
காயமுறத் தாழ்வோர்கள் காணுப் பொருளுண்டே
வாயிழையாற் கோயில் வருத்த சிலம்பியு மோர்
தூயகுலச் சோழனுய்த் தொல்லுலகம் காத்ததே. (௩)

இவ்வாறு கர்த்தன் பெருமைகளைப்பாடி யாழ் வாசித்தலுஞ் சிவபெருமான் அவ்விண்டுவைநோக்கி, நீ இங்கு வந்த காரியம் யாதென்று வினவத் திருமாலானவர் மனமகிழ்ந்து இதனைச் சொல்லுவார். சர்வபரிபூரணராகிய கர்த்தவ்வியரே! அடியேன் செவிகளினின்றும் இரண்டு தானவர்களுற்பவித்து என்னைத் தந்தையென்று சற்றுங் கருதாது யுத்தஞ்செய்வாராயினுர் அவர்களோடுஅளவற்ற காலம் யுத்தஞ்செய்தும் யானவர்களை வெல்லமாட்டாது இளைத்து என்னுருவைக் கரந்து இங்ஙனமோடிவந்து தேவரீரது சரணாரவிந்தங்களை யடுத்தேன். இனி அவர்களைச் சங்கரிக்கும்படியான வழியினைத்தந்து அடியேனை யாதரிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார். சிவபெருமான் அவ்விண்டுவை நோக்கிக் கருடகேதனனே! அவ்வவுணர்களுடனே நீ யுத்தத்திற்குச் சென்றபோது விக்கினேசுவரனைப் பூசனை செய்யாமற் சென்றனை யாதலால் உனக்கபசயம்

---

ஐயனும் அம்முசுவின் அகவிருளகற்றி மெய்யுணர் வுதவ வண்டுவந்து இவர்களைத்தாழ்ந்து அம்மையேயப்பா! பொய்யடியனேன் பிழையை பொறுத்தருளவேண்டுமென்று குறையிரக்க வவர் திருநோக்கஞ்செய்து, நீ வில்வவிலையால் அர்ச்சித்தமையால் மநு குலத்திற்பிறந்து உலகமுழுதையும் ஒரு குடையிலாளுகவென்றனர். அதற்கு வண்டு எம் ஐயரே? அரசசெல்வமாயினும் பொய்ப்பிரபஞ்ச வாழ்க்கையிற் புகுந்து வருந்தல் அடியேற்கு நன்றன்றே செல்வ வலையிற்பட்டுத் தேவரீரை மறந்து சிறுமையுற்றலேனே யென்ன, நீ பின் நம்மிடம் வருதியென்று அருள்புரிந்து விடைகொடுத்தனர். வண்டு கருவூரிலே அரிச்சந்திரமகாராஜன், வழித்தோன்றலாய்ப் பிறந்து முசுகுந்தனென்னும் பெயருடன் புவனமுழுவதையும் பொதுவறப் புரந்து, வேண்டிய போகமூற்றிப் பின்னர்ப் பொருவிலின்பமுத்தியிற் புக்கது என்க. அதனை "ஆரணுர்மூழ்கியு மாக்கம்பிழந்தும்- வாரிசுருங்கியும் வாய்மைசிறுத்தித் - தாரணி யாளரிச் சந்திர னென்போனோர்மரு மானென வேயுதித்தன்றே மாமுகமேமுசு மற்றவனெல்லாம் - காமரிலேர்தரு காட்சியதாகிக் கோமுறை சேர்முசு குந்த னெனுமொர் - நாமவியற்பெயர் நண்ணிய தன்றே. ஆய வழிப்படு மம்முசுகுந்தன் - தூய பொலன்முடி தொன்முறைசூடி - மாயிருஞால வளாகம துன்ன தேயமெலாமொர் செங்கோல் காத்தான்., எனவருங் கந்தபுராணத் திருச்செய்யுளா னுணர்க.

(௩) சிலந்தி சோழனு யதனைச் சீகாளத்திப் புராணத்தாற் றெளிக.

வரலாயிற்று. இனியேனும் அவ்விநாயக மூர்த்தியைவழிபட்டுப்பின்னர்ச் சத்துருக்களைக்கொன்று வெற்றியுடன் வாழக்கடவை, அன்றியும் அவ்விநாயகக் கடவுளை யனுட்டிக்கும்படியான மந்திரங்கள் பலவாக விருக்கின்றன அவைகளில் உனக்கேற்ற மந்திரமொன்றுண்டு. அஃது சடாக்கர மந்திரமாகும். அம்மந்திரத்தை யுனக்கு உபதேசிக்கின்றோம். நீ ஸ்நானஞ்செய்து விரைவில் வருதியென்று கட்டளையிட்டு அவ்வாறே ஸ்நானஞ்செய்து வந்தவுடன் ஆகமவிதியோடு தீட்சைசெய்து வக்கிரதுண்ட மூர்த்திக்கு உவப்புண்டத்தக்கசடாக்கர மந்திரத்தை உபதேசித்து, அதை யனுட்டிக்கு முறைமையினையுந் திருவாய் மலர்ந்தருளினார் அப்பால் விண்டுவானவர் அவ்வருளைச் சிரமேற்கொண்டு அட்டாங்க நமஸ்காரஞ்செய்து, விடைபெற்றுப் பூவுலகத்தின்கண் வந்து ஓர் தடாகத்தில் ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறு தரித்து மந்திரசலம் புரோட்சித்துப் பூமியைச் சுத்திசெய்து புலித்தோ லாசனத்தின்மீது வெள்ளை வஸ்திரமிட்டு வடகிழக்காகிய ஈசான்னிய முகமாயிருந்து யானையை நிலமறிந்து செலுத்து * ஆதோரணன்போல இந்திரியங்களை அறிவின்வழிச் செலுத்தி, சிரசாதிபாதம் வரையில் அம்முதல் க்ஷம் ஈறாயுள்ள ஐம்பத்தோரக் கரங்களை விதிப்படி பகர்நியாசஞ்செய்து அவ்வக்கரங்களில் வம்முதலாயுள்ள நான் கக்கரங்களை மூலாதாரத்திலும், பம்முதலாயுள்ள ஆறக்கரங்களைச் சுவாதிட்டானத்திலும், டம்முதலாயுள்ள பத்தக்கரங்களை மணிபூரகத்திலும், கம்முதலாயுள்ள பன்னிரண்டக்கரங்களை அநாகதத்திலும், அம்முதலாயுள்ள பதினாறுயிர் அக்கரங்களை விசுத்தியிலும் ஹ-ள-க்ஷ-வென்னும் இம்மூன்றக்கரங்களை ஆக்கினையிலுமாக ஆறுதாரத்திலும் அந்தர் நியாசஞ்செய்து ஆத்மசத்தி-பூதசுத்தி-திரவியசுத்தி-மந்திரசுத்தி-இலிங்கசுத்தி என்கின்ற பஞ்சசுத்திகளையும் செய்து மூலமந்திரத்தைச்செபித்து பிராணாயாமத்திலிருந்து ஆவாகனம், ஆஸ்தானம், சந்நிதானம், சந்நிரோதனம், சகளீகரணம், பரிமீகரணம், அவகுண்டனம், தேனு, யோனி, முக்திகரணம் என்கின்ற திக்குபந்தனாதி மந்திரகிரியா பாவனைகளைக்கொண்டு விநாயகமூர்த்தியைக் குறைவில்லாமற் பூசித்து சடாக்ஷரமந்திரத்தை முறைப்படி நூறுவருடம் வரையிற் றியானித்து வந்தார். அப்பால் வக்கிரதுண்ட மூர்த்திக்கு அருள்சுரந்து அத்திருமாலுக் கெதிரிற் பிரத்தியட்சமாகித் தரிசனந் தந்தார்.

* ஆதோரணன்—யானைப்பாகன், அவற்றிற்குமுறையே இடம்-குதம்-குய்யம்-நாபி-மார்பு-அடிநா-நெற்றி-நடு-என்பனவாம்.

உடனே விஷ்ணுவானவரெழுந்து தாழ்ந்து இருகரங்களையுஞ் சிரமேற் குவித்துப் பலமுறை வேதாகமங்களாற் றுதித்துத் தொழுது நிற்க, விநாயகக்கடவுளாரை நோக்கிக் கேசவனே! நிர்மல மூர்த்தியாகிய சிவபெருமானவர் நம்மைப்பூசைசெய்ய உனக்கநுக்கிரகிக்கு முன்னரே நீ சுதாவிற்செய்து அப்போர்முகத்திற் சென்றிருப்பையாயின், இவ்வாறு சத்துருக்களாற் றோல்வி யடையமாட்டாயல்லவா? ஆயினும் இப்போதுனக்கு என்னவேண்டுவது கேள். அதனைத் தருகிறோமென்று திருவாய்மலர்ந்தருளினர். அதைக்கேட்ட திருமாலானவர் மிக்க ஆனந்தக்களிப்பின் மூழ்கினவராய் மீளவும்பணிந்தெழுந்து கைகட்டி வாய்புதைத்துக் கிருபாமூர்த்தியே! கற்பகவிருட்சத்தை யடைந்தோரை வறுமைவந் தணுகவல்லதோ? என்றந்தையாகிய தேவரீரை என் திருவிழிகளுங் குளிரக்கண்டு தரிசிக்கப் பெற்றபின்பும் ஓர்குறை யுண்டாகுமோ? அடியேன் செய்துக்கொள்ளத்தக்க ஒரு விண்ணப்பமிருக்கின்றது. அதாவது யான் நித்திரையிலிருக்குமளவில் என் செவிகளினின்றும் இரண்டசுரர்கள் சகலபுவனங்களுங் கலங்கி நடுங்கத்தக்கதாக வுற்பவித்தனர். அவர்களைக் கொல்லும்படியான வலியை அடியேற்குத் தந்தருளவேண்டும் அப்பாதகர்களே யன்றி மற்றெவ்வகைப்பட்ட துஷ்டர்களாயினும் அவர்களெல்லாம் என்கையி லழியத்தக்க வரமுங்கொடுத்தருளவேண்டும் தேவரீர் திருவடிகளை யெக்காலத்துங் கைவிடாது பத்தியையு மளிக்கவேண்டும். அடியேன் தெரியாமற் செய்யுங் குற்றங்களையெல்லாங் குணமாகக்கொண்டு பொறுத்திரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தவுடன் அவ்வாறே விநாயகக் கடவுளனுக்கிரகஞ்செய்து நாரணனே! சத்துருக்களை வெல்லும்படியான வலியும் யாவராலு மதிக்கத்தக்க புகழும், நினைத்த வண்ணம் நிறைவேற்றத்தக்க சத்தியும், உனக்குக் குறைவில்லாமற் கொடுத்தோம், உன்னை முன்னரெதிர்த்த அவ்வசுரர்கள் இப்போது வஞ்சங்கொண்டு மறைந்திருக்கின்றனர். ஆதலால் நீ நமது சடாக்ஷர மந்திரத்தைத் தியானஞ்செய்துகொண்டு யுத்தத்திற்குச் செல்வையாயின் அவர்களுன்விழிக்கு வெளிப்படுவரென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவத்தைக் கரந்தருளினர்.

இப்பால் விஷ்ணுவானவர் பேரானந்தமடைந்து பகைவரைச் சயித்துவிட்டோ மென்னுங் களிப்பினையுடையவராய்த் தன்னையாட்கொண்டருளிய பெருங்கருணையை நினைந்து நினைந்து பலவாறு

வந்தித்துத் தரிசனந்தந்து இரட்சித்தவிடத்தில் ஒளிவீசுகின்ற பளிங்குக்கற்களினால் நான்கு கோபுரவாயில்களுள்ள ஓராலயமெழுப்பி அவ்வாலயத்திற் கண்டதியினாலாகிய விநாயகக்கடவுளைப் பிரதிட்டைசெய்து, சந்தனம்-புட்பம்-தூபம்-தீபம்-நைவேதியம்-கோசலம்-கோமயம்-பால்-தயிர்-நெய்-தேன்-வாழைப்பழம்- எலுமிச்சம்பழம்-நாரத்தம்பழம், நெல்லிப்பருப்பு செவ்விளநீர்முதலிய திரவியங்களைச் சேகரித்துச் சிறந்தபூசனைகளை நடாத்தித் தாம்கொண்ட இஷ்டத்தைச் சித்தியாக்கியபடியால், அம்மூர்த்திக்குச் சித்திகணபதியென்று திருநாமமிட்டு வந்தித்து வழிபாடுசெய்து ஆனந்தக்கடலின் மூழ்கியிருந்தார். அதுமுதல் அத்தலமானது சித்திக்ஷேத்திரமென்று வழங்கிவருகின்றது. பின்னர் மகாவிஷ்ணுவானவர் அச்சித்திகணபதிமூர்த்தியை மனதிற் றியானித்துக்கொண்டு அவ்விடத்தினின்று நீங்கி உருவைமறைத்து ஒளித்திருக்கின்ற மதுகைடவர்களைக் கணேச ரனுக்கிரகத்தாற் கண்டுபிடித்தனர். அவ்வசுரர்கள் இவரைப்பார்த்து எதிரில்வந்து நின்று உடல்குலுங்க நகைத்து மாயவனே! முன்னமெங்களை யெதிர்த்து யுத்தஞ்செய்தபோது யாங்களொரு சிறியமுட்டியை யுதவப்பெற்று ஓடிப்போயினை மீளவும் நாணமில்லாமற் றிரும்பிவந்தனை இப்போது பெரியமுட்டியைத் தருகின்றோம் வாங்கிக்கொள்ளென்று பரிகாசஞ்செய்தார்கள். அதைக்கேட்ட விண்டுவானவர் கோபித்து மடமூடர்களே! பின்னேபோய் முன்னே பாய்கின்ற ஆட்டுக்கடாவைப்போலென்று சற்றுந் தெளியீர்களோ? புலிபதுங்குவதெல்லாம் பாய்ச்சலுக்கிடமென்று நம்பக்கடவீர்களெனச் சொல்லலும், அவ்வசுரர்கள் அதனைக்கேட்டு அக்கினியைப்போல ஆக்கிரமித்தெழுந்து கோபாவேசங்கொண்டு மாயனே! நீ ஒருவர் துணையின்றித் தனியாயிருக்கின்றனையேயென்றும், இரண்டுபேர்கள் ஒருவனுடன் போர்செய்யத்தகாதென்ற நீதியைக்கொண்டும் முன்னர் இலகுவாய் ஓடிப்போம்படிவிடுத்தோம். மீளவும் நீயே அகங்கரித்து எம்மோடெதிர்க்கவந்திருக்கின்றமையாலும், உன்னொருவனுக்கே எம்மிருவருக்குமுள்ள நான்கு தோள்களிருக்கின்றமையாலும் யாவருந்தோடஞ்சொல்வதற்கிடமில்லை. ஆதலால் விரைவிற் சண்டைசெய்யக் கடவையென்றெதிர்த்தார்கள். விண்டுவும் அதிக வுக்கிரங்கொண்டு எதிர்த்தார்.

பின்னர் இருதிறத்தாரும் ஒன்றாகக்கலந்து ஒருவர்க்கொருவர் ஆயுதங்களைக் கொண்டு புடைத்தார்கள். வேலாயுதங்களைக்

கொண்டெதிர்ந்தார்கள். வாளாயுதங்களை யெடுத்து வீசினார்கள். நேருக்குநேர் பாசங்களை யேவிப்பிடித்தார்கள். சர்ப்பங்களைப்போன்ற அளவற்ற அம்புமாரிகளைப் எதிருக்கெதிராகநின்றுசொரிந்தார்கள். ஒருவரையொருவர் வளைத்துக் கீழேதள்ளிப் புரட்டிப் பலவகைப் பட்ட மல்யுத்தங்களைச்செய்து வீரகர்ச்சனை யிட்டார்கள். இவ்விதமாக அளவற்ற யுததங்களைச் செய்து வருகின்ற தருணத்தில் விஷ்ணுவானவர் அதிக கோபங்கொண்டு, நாம் இந்த அற்பர்களோடு நீடித்து யுத்தஞ்செய்வது மிகவுநன்று ! நன்று!! என்று மானம்வாதிக்கப்பட்டவராய்க் கடலுடைந்ததுபோலத் தமது பஞ்சசன்னியத்தை யெடுத்து முழக்கஞ்செய்து சாரங்கமென்கிற வில்லினைவளைத்து, அளவற்ற திவ்வியாசர மாரிகளைத்தூவி அப்பாதகர் விடுக்கின்ற பாணவருஷங்களைச் சின்னபின்னப்படுத்திச் சிவபிரானநுக்கிரகத்தாற் பெற்ற சக்கராயுதத்தை யெடுத்து விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித்து, அப்பாதகர் நிற்கின்றகுறிபார்த்துப் பிரயோகித்த மாத்திரத்திற் செங்கரும்பைத் துண்டித்தது போலப் பல துண்டங்களாக விழுந்திறந்தார்கள் * இவ்வாறு விண்டுவானவர் அவ்வசுரர்களாவியை யுண்ட காட்சியைத் தேவர்களெல்லாங் கண்டு மனமகிழ்ச்சியடைந்து, ஆகாயத்தினின்றும் புஷ்பவருஷங்களைப்பொழிந்தார்கள். முன்னர் அந்த வசுரர்கட்காகப் பயந்து உருவத்தை மறைத்துக்கொண்டிருந்த பிரமதேவன் அதிக சந்தோஷங்கொண்டு விண்டுவைக்கண்டு சாஷ்டாங்கமாகிப் பணிந்து அவர்பெருமைகளைப் புகழ்ந்து கொண்டாடிநிற்கையில், அவ்விண்டுவானவர் பிரமனை நோக்கிச் சொல்லுவார் அரவிந்த வாசனே ! யான்முன்னர் அவ்வசுரர்களோடு நெடுநாள் யுத்தஞ்செய்தும்அவர்களை வெல்லமாட்டாது பங்கப்பட்டு, என துருவத்தை மறைத்தோடிப்போய் வெள்ளியங்கிரிச் சாரலையடைந்து யாழ்வாசித்தமுனிவிலையிற் சிவபிரான் அநுக்கிரகத்தால் விநாயகக் கடவுளுடைய சடாக்ஷர மந்திரத்தைப் பெற்று, பூலோகத்திற்சென்று சித்திக்ஷேத்திரமென்னுந் தலத்திலிருந்து அம்மந்திரத்தை வேதாகம விதிப்படி யநுட்டித்துக் கணேசமூர்த்தியினுடைய திருவருளைப்பெற்று, மீளவும் அவ்வசுரரோ டெதிர்த்து வெற்றியடைந்தேன். ஆதலால்நீயும்

* திருமாலானவர் விட்டுணுவென்றுஞ் சிட்டுணுவென்றும் பெயருள்ள இரண்டு வீரர்களை யுண்டாக்கியேவ, அவர்கள் கொன்றனர் என்று கூர்மபுராணத்திற் கூறப்பட்டது.

அத்தலத்தை யடைந்து பூசிக்கக் கடவையெனப் பிரமதேவன் அவ்வாறேசென்று விநாயகக்கடவுளைப் பேரன்போடு பூசித்துப் பலவரங்களைப் பெற்றனன். அவனேயன்றிச் சிவபெருமான்உமாதேவிசிவகணங்கள் தேவர்கள் முதலாயினோரும் ஒவ்வொருகாலத்திற் பூசித்துப் பலவரங்களைப் பெற்றார்கள். என்று வியாசருக்குப் பிரமதேவர் சொற்றதாகச் சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்க்குக்கூறினார்.

விண்டுரடாக்கர மநுட்டித்த படலம்-முற்றிற்று.

விசுவாமித்திரனை

# விமனைடுத்தபடலம்.

ஆறெழுத் தாழி யேந்தி யநுட்டித்த வாறு தேர்ந்தே
னீறிலி காதை யின்னு மியம்பென வியாதன் வேண்ட
வீறுயர் விச்சு வாமித் திரனைவேல் விமன் சார்ந்து
பேறுபெற் றதனை முற்றப் பேசுவன் வாசக் கஞ்சன்.

பசுபாசஞானத்தைவிட்டுத் தத்துவஞானமாகிய பதிஞானத்தைப் பற்றும் முனிவர்களே! விண்டு விநாயகமூர்த்தியை யநுட்டித்துமதுகைடவரைவென்ற வரலாற்றைச் சொன்னேன். இப்பால் தக்கனுபாசித்த திறத்தினைச் சொல்வோங் கேட்பீராக. சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திற் சகலராலும் புகழத்தக்கதான வயற்செழுமையுங் குடிவளப்பமுஞ் சிறந்தோங்கிய விதர்ப்பநாட்டிலே தேவருலகை யளாவிய மாடமாளிகைகள் கூடகோபுரங்கள்முதலிய வலங்காரங்களோடு விளங்கியிருக்கின்ற கவுண்டியமென்னும் ஓர் நகரமுண்டு அந்நகரத்தில் தவசீலனும், வேதமொழுக்கங்களிற்றவறுதவனும், தான்மாரி சொரிகின்ற கரத்தையுடையவனாகியும்வலிமிகுந்த புயங்களையுடையவனாகியும், எக்காலத்து மாறாத தருமசிந்தையுடையவனாகியும், சிவபெருமானுடைய நுதல்விழித் தீயாலெரிந்த மன்மதனுக்குப் பதிலாகவந்த மன்மதனென்று சொல்லத்தக்க பேரழகினனாகியும், ஆயிரம் பிராமணர்களும் பத்துக்கோடிசேனைகளும் புடைசூழ்ந்துவரும்படி எங்கணுந்தனது பராக்கிரமத்தைச் செலுத்தி யுலாவுகின்ற சூரனாகியும், தாயத்தார்களும் பலதேயங்களையாள்கின்ற வேற்றரசர்களுங் கண்டவுடன் பயந்து வணங்கத்தக்கபாதங்களை யுடையவனாகியும், தன்னை வணங்காத சத்துருக்கள்

வலியை வேரோடும் அகழ வல்ல கோபாக்கினியை யுடையவனாகி யும் வீமனென்னும் இயற்பெயரினை யுடையவனாயும் ஓராசனிருந்த னன். அவனுக்குக் கற்பி லருந்ததியை நிகர்த்துஇல்லறவொழுக்கங் களிற் றவறின்றி நடந்துவருகின்ற,சாருகாசினி என்னும்ஓர்மனைவி யிருந்தனள். அம்மனைவியோடு சகல செல்வங்களையு மனுபவித்துக் கொண்டு பெரியோர் சொல்கின்ற நெறிகளிற் பிழையாமற் பெரு மைபொருந்திய மண்டலத்தைப் புயத்திற்சுமந்து நீதிமுறைமைப் படி அரசாட்சிசெய்து வருகின்ற காலத்தில், நெடுநாள் ஒரு புத்தி ரப்பேறில்லாமல் மிருந்த பத்தியினாற் பலதெய்வங்களை வழிபட்டும் வேதாகவிதியோடு பலதானங்களைச் செய்தும் அளவற்ற தருமங் களை அன்போடியற்றியும், மாற்ற வேள்விகளை மனந்தளராமல் முடித்தும், இன்னும் இததன்மையான பல நல்லொழுக்கங்களைப் பூண்டுந் தனது கவலை யொழியாதவனாகி மனமெலிந்து தன்மனைவி யை யழைத்து, என் மனதுகினிய காதலியே! புத்திரப் பேறில் லாதார் இவ்வுலகத்தை யரசாளினும் இம்மை மறுமைப் பயனை யடையார்களாயின் நாம் வாழ்கின்ற இல்வாழ்க்கையையும் நமக் கொரு பயனைத் தரவல்லதோ? புத்திரப் பேறில்லார்க்கு நற்கதி கிடைக்குமென்ற சாத்திரங்களு முண்டோ? ஐயோ! நமது கட்டழகு ம் நாமடைந்திருக்கின்ற பெருஞ்சிறப்பும், நாம் நடாத்துகின்ற அர சாட்சியும், நாம் செலுத்துகின்ற பராக்கிரமமும், நாம் செய்திருக்கி ன்ற நாற்பயிற்சிகளும், ஒரு புத்திரப்பேறில்லாமல் வீணிற்போகின் றதே இனியாயினுமவனத்திற்சென்று பெரியோர்களை யடுத்துத் தவஞ்செய்வோமாயின் பின்னர்ப் புத்திரப்பேறு தவறாமற் கிடைக் கும் அஃதில்லாவிடினும் அப்பெரியோர்கள் அநுக்கிரகத்தாற்சுவ ர்க்காதி போகங்களை யனுபவிக்கும்படியான பேறேனுங்கிடைக்கும் இவையிரண்டினுள் ஒன்றேனுங் கிடைக்காமற் போவதில்லை இது வே நாமினி நடந்துகொள்ளவேண்டிய முடிவென்று சொல்லித் தீர் மானித்து, சுகந்து, மநோரஞ்சிதனென்கிற தன்னுடைய இரண்ட மைச்சர்களைப் பார்த்து, அமைச்சர்களே! யான் பூர்வத்திற் செய் திருக்கின்ற ஊழின் பயனோ? என் மனையாள்செய்த தீவினையின்பய னோ? மற்றியாது கொண்டோ இதுகாறும் ஒருபுத்திரப் பேறில்லா மல் சகலவளங்களுங்குன்றி யிருக்கின்றோம் இனியேனும் ஓர் புதல் வனைப்பெற்று யாங்கள் கடைத்தேறுமாறு வனத்திற்குச் செல்ல நினைத்தோம் எனக்குள்ள பூமிமுதலியபொருள்களனைத்தையும் நீங் களிருவருமாகப் பகுத்து யான்வருமளவுங் காத்துவரக் கடவீர்கள்

மீட்டும் வராமற்போவேனாயின் நீங்களே சுதந்தரராக ஆண்டுகொள்ளலாமென்று சொல்லித் தன்மனைவியுடன் எழுந்து பிரயாணமானான். அதனையவ்வமைச்சர்கள் கண்டு கவலையுற்றுக் கண்களில்நீர்த்தாரைகளைச் சொரிந்து மனமெலிந்து அரசன்சொல்லியஆணையைத் தடுக்கக்கூடாதவர்களாகி யிருந்தார்கள். பின்னர் அவ்வரசன் தன் மனைவியோடு வனத்திற்சென்றுவசித்திருக்குங் காலையிற்பூர்வத்திற் செய்த நல்வினைப்பயனானது அவர்களை விசுவாமித்திரமுனிவர் ஆசிரமத்தினருகிற் கொண்டுபோய்விட்டது

அவ்விடத்தில் வண்டுகள் இசைபாடி மொய்க்கின்ற தாமரை முதலிய பல புட்பங்களை வாய்ந்து கண்டவர் உள்ளத்தைக்கவர்ந்து கொள்ளத்தக்க வனப்பினோடு மிகக்குளிர்ச்சிபொருந்தி யிருக்கின்ற ஒரு தடாகத்தைக் கண்டார்கள். அதில் அடுத்தவர்களைஅன்போடு தழுவி என்னைக்கேட்கினும் இளையாது தந்து பல இன் சொற்களோடு நல்ல பயன்களை விளைவிக்கின்ற சான்றோரைப்போலத் தன்னையடைந்தவர்க்கு மனமுங்குளிர்ச்சியும் இளங்காற்றுந்தந்து சகல துன்பங்களையுமொழிக்க வல்ல நிரம்பிய சலத்தைக் கண்டார்கள். சகலமுந்தெளிந்து மனங்குளிர்ந்து இனிய வாய்மை பெற்று நல்ல பயனைவிளைத்து அளத்தற்கரிய நன்னெறிகளையுடைய அறிஞர்களிடத்தில் யாவரும் பல வுபசாரங்களை யேற்றுச்செல்வரென்னு முதுரையின்படி தெளிந்துங்குளிர்ந்தும் இனிமையுற்றும் நல்ல பயன்களைவிளைவித்தும் அளத்தற்கரிய ஆழத்தோடிருக்கின்ற அத்தடாகத்திற் சகலபட்சிகளும் நீரருந்திச் செல்வதைக்கண்டார்கள் சிலமுனிவர்கள் அதிலுள்ள தாமரைகளைப்பிடுங்கிஅவைகளின்கிழங்குகளைத் தங்கள் பசிதீர உண்டு மற்றமலர் முதலியவைகளைக் கரையிலெறிந்துசெல்ல "நிலையற்றேரெல்லாம் உலைவுற்றோராவார்" என்னும்பழமொழியின்படி அம்மலர்கள் சூரியவெப்பத்தால் வாடியிருப்பதைக் கண்டார்கள். சேற்கூட்டங்கள் திரண்டு அதன்கரையில் வருகின்ற வரையில் தாமுமுயிரற்றதுபோலிருந்து, பின்னர்க்கண்டவுடன்மூக்கினுற் கொத்தி மேலெழுகின்ற கொக்குகளும், சமயம்பார்த்து நீரின்மூழ்கி மேற்கொண்டு வருகின்ற நீர்க்காக்கைகள் பாவபுண்ணியமறியாத பாதகர்ளாயினேர் தங்களுக்குக்கிடைத்த பொருளைப்பிறர்க்குதவி புண்ணுரென்னும் பழமொழியின்படி அவைகளைத் தம்மினங்கட்குச் சிறிதும் உதவாதுண்ணுவதைக் கண்டார்கள். அவ்

றியும் அதிலுள்ள சிறுமீன்களையெல்லாம் பெருமீன்கள் வயிறுநிர ம்பவுண்டு நீந்தச்சத்தியின்றிக் கரையிலொதுங்க "எளியாரை வலி யார் வருத்தின் வலியாரைத் தெய்வம் வருத்து" மென்னும் வாக் கியத்தின்படி அவைகளைப் பறவைகள் கொத்திமேலெழும்புவதைக் கண்டார்கள். அன்னம், சக்கரவாகம், குருகு தாரா, சிச்சிலி, வா னம்பாடி, நாரை, பெருநாரை முதலான சகலபட்சிகட்கும் அடுத்த வர்களை யாதரிக்கின்ற பரமசிவத்தைப்போலத்தான் இடைவிடாது இரைகொடுத்து வரவுங்கண்டார்கள் இவ்வாறளவற்ற அற்புதங்க ளை யத்தடாகத்தினிடத்திற் கண்டு அப்பாற்செல்லுகையில் அதன் சமீபத்தில் ஓர் பொழிலைக்கண்டார்கள். அப்பொழிலின்கண் பகலி லே சூரியனைக் கண்டு வாட்ட முறுகின்ற குமுத மலர்போலவும் இரவிற் சந்திரனைக்கண்டு வாட்டமுறுகின்றதாமரைமலர்போலவும் இல்லாமல், யாவரிடத்தும் உறவுபகையில்லாதமுனிவர்களைப்போல அச்சூரிய சந்திரர்களுடைய உறவுபகையில்லாமல் எக்காலத்தும் ஒரேசீராய் மலர்ந்திருக்கின்ற அனிச்சமலர்களைக் கண்டார்கள் கா தல்முதிர்ந்த காமுகர்களைப்போல ஆணன்றிலும் பெட்டையன்றி லும் ஒன்றோடொன்று பிரியாது சிறகோடுசிறகினைச் சேர்த்துக் கொண்டு அவ்வாறே யிரைகளையுந் தேடியுண்டு பல பூங்கிளைகளிற் புணர்ந்திருப்பதைக் கண்டார்கள். கட்டவிழ்ந்த மலர்களினின்றுந் துளிக்கின்ற தேனைச் சாதகப்புள்ளானது மழைத்துளியெனக் கரு தித் தன் வாயைத்திறந்து பருக அதனைமற்ற மலர்களின் மொய்க் கின்ற வண்டினங்கண்டு பாரியைவிட்டுப் பரத்தையை விழைகின்ற காமுகரைப்போல அவைகளை விடுத்து அப்புள்ளினது இரண்டு க டைவாய்களினு மொழுகுகின்ற தேனைச்சூழ்ந்து பருகுவதைக்கண் டார்கள் அப்பொழிலானதுவெளுத்த மண்மேட்டின்மீது வெள்ளங் கொழிக்கின்ற துறுகளைப்போலத் தேனையும் மலர்களையும் பூந்தாது க்களையுந் தளிர்களையுஞ் சொரிவதனால் அவைகள் தாழ்ந்த புட்பச் செடிகளையுடைய நந்தவனத்தை யொத்திருப்பக் கண்டார்கள்

இவ்வாறு அளவற்ற மாட்சிமைகளை யப்பொழிலினிடத்திற்க ண்டு அப்பாற்செல்லுகையில் முனிபுங்கவர்கள் வசிக்கின்றபலஆசிர மங்களைக் கண்டார்கள். அவ்வாச்சிரமங்களானவை திருமால்அயன் தேவேந்திரன் முதலிய தேவர்கள் வசிக்கப் பெற்றிருக்கின்றமை யால் மகாமேருவுக் கொப்பாகி இருக்கவும் அங்கு வசிக்கின்ற முனி வர்கள் அணிந்திருப்பது சடைமுடி, மரவுரி, திருநீறு, உருத்திராக் கங்களாயினும் அவைகள் இரத்தினகிரீடந் தரித்த தேவர்கள்வணங்

கத் தக்கனவாகவும். கற்பகமுங்கண்டு சூழத்தக்கனவாகவும் சகல வினைகளும் நீக்கத்தக்கனவாகவும், அருட்கண்களென்று சொல்லத்தக்கனவாகவு மிருப்பக் கண்டார்கள். மேலும் அம்முனிவர்கள் சதாகாலமும் வேள்வித் தீயைவளர்த்து அதன்முன்னிலையிற்றேவர்கட்கெல்லாம் அவிப்பாகந்தந்து வருவதையும், மேகமானது மாதமும்மாரிசொரிந்து இப்பூவுலகத்துள்ள உயிர்களை யாதரிக்கச்செய்கின்ற முறைமையையுங்கண்டு, இதனாலல்லவா திருமாலானவர் தமது காத்தற்றொழிலைக் கைவிட்டவராய்ப் பகலெல்லாம் இரவுபோலக் கருதித் திருப்பாற்கடலிற் இடைவிடாது கண்டுயில்வதானொன்றும், சிவபெருமான் பலதிருவிளையாட்களை நடாத்திவருவதும், திருமால் கண்ணுறங்குவதும், பிரமன் வேதங்களை யோதுவதும், இந்திரன் அவுணருயிரைத்தாக்கப் போர்க்குச்செல்வதும், சந்திராதித்தர்கள் ஆகாயமார்க்கத்திற் றிரிவதும், இம்முனிவர்கள் தருகின்ற அவிப்பாகங்களை நாடோறும் மேற்றுவரும் ஆதரவைக்கொண்டல்லவாவென்று அதிசயித்தார்கள். பின்னும் அம்முனிவர்கள் வசிக்கு மிடங்கடோறும் ஒருபக்கம் யாகத்திற்குரிய பசுக்களும், ஒருபுடைபால் கறந்துவிடுகின்ற பசுக்களும், ஒருபால் யாகம்முடிந்தவுடன் தானஞ்செய்ய விட்டிருக்கின்ற பசுக்களும் ஒருபுறங் கன்னியர் வதுவைக்குங்கட்டிவைத்திருக்கின்ற பசுக்களுமாகச் சூழ்ந்திருப்பக் கண்டார்கள். அங்கிருக்கின்ற தடாகங்களிலுள்ள நீலோற்பலமலரும், சகத்திர தளத்தோடுங்கூடி விரிந்திருக்கிற தாமரைமலரும், யாம்முன்னர்க்காமன் கைக்குக் கணையாக விருந்தனாலல்லவா அக்காமன் பரமசிவத்தினது நெற்றிக்கண்ணினா லெரிந்தபோது அவனோடு யாமும் அவ்வெரிக்கிரையாயினோம். இனிஅவ்வாறுசொல்லாமல் அடுத்தோர்க்கிதமே செய்பவராகிய இம்முனிவரிடத்திருந்தால்நம்மை யப்பரமசிவத்திற் குவப்புண்டாக, அவர்திருவடிகளில் அருச்சிப்பார்களென்றடைந்து தவஞ்செய்வதுபோலிருக்கக் கண்டார்கள், அங்கிருக்கின்ற கொடி-செடி விருட்ச முதலியவைகளெல்லாம் முனிவர்களுக்குக் கிழங்கு கனி-காய்-மது-மலர்-தளிர் - இலை சமித்து என்கின்ற பொருள்களை நாடோறும் வழங்கி அவர்கட்கு உவப்பைத் தருகின்ற குற்றமற்றபெருந்தவத்தினால் அவைகளைச்சிறிது மெலிவின்றிச் சதாகாலமுந் தங்கிளைகளொடு நிறைந்துதழைத்திருப்பதைக்கண்டார்கள். முன்னர்ப்பாற்கடலிலுண்டாகிய அமுதத்தையுஞ் சிவபெருமானார் புசித்திருக்கின்ற தேவர்கட்கும் அம்முனிவராற்றருகின்ற அவியமுதத்தையும் அவரே கொடுப்பி னல்லா

மல் யாவற்கொடுப்பார்கள். ஆனால் அவர்வடிவாயிருக்கின்ற அக்கினியானது அம்முனிவர்கள் கொடுக்க வாங்கித் தானும்புசித்து அத்தேவர்கட்கும் வழங்கி வருவதையுங்கண்டார்கள், மேலுந் தங்களுடல் வருந்தச்செய்கின்ற தவத்தினாலும், வேள்வியினாலும், சகலவுலகங்களுமழியாமற் காத்துவந்த அம்முனிவர்கள்மலபாகங்களையொழித்து முத்தியிற் சேர்ந்து வாழ்வதையன்றி ஒன்றுக்கொன்றுதொந்தப்பட்டு மயங்குகின்றதேவர்கதியையடையச் சற்றுங்கருதாதவர்களாயிருப்பதையுங் கண்டார்கள்.

இத்தன்மையாகிய மேலான சிறப்புகள் வாய்ந்த முனிவர்களையும், அம்முனிவர்கள் வசித்திருக்கின்ற ஆசிரமங்களையும் வீமராசனும் அவன் மனைவியாகிய சாருகாசினியுங் கண்டு நமதுஅரண்மனையும் இவ்வாசிரமங்கட்கு நிகரல்லவென்று சந்தோஷித்து அப்பாற் செல்லுகையில், சகலமுனிபுங்கவர்களும் புடைசூழ்ந்து வணங்கும்படியாகப் பிரமதேவனே தடாகத்திலிருக்கின்ற புண்டரீக வாதனத்தை விடுத்துவனத்திலிருக்கின்ற புலியாதனத்திற் றங்கியிருப்பது போல வேங்கைத் தோலாசனத்தின்மீது வீற்றிருந்து வேதாகமப் பொருளைவிரித்துரைக்கின்ற விசுவாமித்திர முனிவரைக்கண்டுஅட்டாங்கமாக வணங்கினார்கள் அவர்களை யம்முனிவர் தழுவி உங்கட்குப் புத்திரனுண்டாகக் கடவதென் றாசீர்வதித்துத் தமது கரங்களைக் கொண்டெழுப்ப உடனே இருவருமெழுந்து கைகூப்பிநின்றார்கள் பின்னர் அவ் விசுவாமித்திர முனிவர் வீமராசனைப் பார்த்து அரசனே! நீ யார்? நம் மாசிரமத்தை நோக்கி வந்தவர்கள் யாதேனும் ஓர் பயனை யடையாமற் போவதில்லை, ஆதலால் உனது கோரிக்கையைச் சொல்வையாயின் அதனைத்தடையின்றி யாந்தருவோமென்று சொல்லலும், அதனை யவ்வரசன் செவிக் கமுதாகக் கொண்டு அப்போதே புத்திரப்பேறுண்டானதுபோலமுகமலர்ந்து சுவாமி! யான் கவுண்டினிய தேயத்திற்கரசன். என்பெயர் வீமன் இவள் சாருகாசினி யென்னும் பெயரினையுடைய எனது மனையாள் யாங்களிருவோரும் அளவற்ற தருமாதிகளைச் செய்தும் ஒரு புத்திரப்பேறில்லாமையால் மனமெலிந்து அவமானத்துடன் வாழ்கின்ற இல்லறத்தைத்துறந்து இவ்வனத்திற்கு வந்தோம் இதுகாறும் இயற்றிவந்த தவமுதிர்ச்சியோ அல்லது பூர்வசன்மத்திற் செய்த நல்வினைப்பயனோ சகலரும் போற்றத்தக்க இவ்வாசிரமத்தில் வந்து தேவரீரைத் தரிசிக்கப் பெற்றோம், மகமேருவை யெடுத்தவர்களுங் கற்

பக விருட்சத்தைச் சார்ந்தவர்களும் அவ்வவர்கள் கொண்ட விழைவை யடையாமற் போவதுமுண்டோ கிருபாமூர்த்தியே! தேவரீரைக் கண்டபோதே இனிப்புத்திரப் பேறுண்டாகுமென்று துணிவுற்றேன், அஃதன்றித் தேவரீர் செய்தருளிய ஆசிர்வாதத்தால் அத்தினமே அப்புத்திரப்பே றடைந்தவனுயினேன்.

மேலான தவத்திலும், வேதசாத்திர விசாரணையிலும், சிறந்த கருணையிலும், சீலமான விரதத்திலும், மகத்தான வேள்வியிலும் பெருமையுற்ற கலைஞானங்களிலும், பொறுமை பொருந்திய தருமதானத்திலும், தேவரீருக்கொப்பாக யாவரிருக்கின்றார்கள். தேவரீர் செய்தருளிய ஆசிர்வாதம் வீணிற்போகுமா? சுவாமி? பூர்வத்திலடியேன் செய்திருக்கின்ற தீவினைகள் இன்னவையென் றுணர்த்தி மீளவும் அவைகளைத் தீர்த்து யான் பவித்திரனுகும்படியான உபாயமு மருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான் உடனே விசுவாமித்திரமுனிவர் மனதிரங்கி அவ்வரசன் செய்திருக்கின்ற பூர்வவினைகளையெல்லாந் தமது ஞானநோக்கினு லறிந்து, நராதிபனே! உனது வம்சத்திலிருந்த முன்னோர்கள் நித்தமும் விநாயகபூசைசெய்து மிகுந்த நன்மைகளைப் பெற்று வாழ்ந்திருந்தார்கள். நீயுன்மனைவிமீது வைத்திருக்கின்ற விழைவினுல் அப்பூசையைச் செய்யாமற் கைவிட்டாய் அதனுற் புத்திரப்பேறடையாமற் போயினை, இனியாயினும் அவ்விநாயகமூர்த்தியை நீங்களிருவோரும் பத்தியோடுபூசனைசெய்து வருவீர்களாயின் உங்களுக்குப் புத்திரசம்பத் துண்டாகுமென்றார்.

விசுவாமித்திரனை வீமனடுத்தபடலமுற்றிற்று.

---

# தக்கன்பிணிநீங்கு படலம்.

விதர்ப்பமெனு நாடாளும் வீமவினி விநாயகரை
மதர்ப்பின்விழி மாதோடு மகிழ்விமக வெனுமணியைக்
கதிர்ப்பவுயிர்ப் பாய் நமக்குக்கணேசர்குல தெய்வமதா
யதிர்ப்புளத்திற் றுயரகற்றியாண்டதுங்கேளெனமொழிவான்.

சரியைமுதலிய மெய்த்தவங்கொண்ட முனிவீர்! இவ்வாறு விசுவாமித்திரர் சொல்லிப் பின்னுஞ்சொல்லுவார் பார்த்திபனே! விநாயகமூர்த்தி உனது குடிக்குக் குலதெய்வமாயிருந்து சகலதுன்பங்களை நீக்கி யிரட்சித்தருளிய கதைகளையுஞ் சொல்வோங் கேட்

பாயாக. பூர்வத்தில் உனது பெரியோர்கள் கருநாடதேயத்திற் கர சாகிப் பானுவென்கின்ற பட்டணத்திலிருந்து இராச்சியபாரஞ்செய்து வருங்காலத்தில் உனக்கேழாவது தலைமுறைச் சந்ததியாரில் வல்லவனென்னும் ஓர் அரசனிருந்தான். அவனுக்கும் அவன் மனைவியாகிய கமலையென்பவட்கும் ஒரு புதல்வன் பிறந்தான். அப்புதல்வன் பிறந்தபோதே குருடாகியும், செவிடாகியும் ஊமையாகியும், சரீரமெங்குந் தொழுநோய்கொண்டு சீயுஞ்செந்நீரு மொழுகும்படியான விரணத்துடனே யிருந்தான் இத்தன்மையவாகிய துன்பத்துடன் பிறந்த பிள்ளையைத் தாய்பார்த்து மிகுந்த துயரங்கொண்டு கண்கள் நீர் சொரியப் புலம்பித் தெய்வமே ! மறுதேயத்து மன்னர்கள் பழிக்கும்படியான இத்தொழுநோய்கண்ட பிள்ளையைவருந்திப் பெற்றதைவிடப் பிள்ளையிலலாமையா யிருப்பது மிகவு நலமாயிற்றே. ஐயோ ! இத்துன்ப முடையபிள்ளையைப் பார்க்கும்படியாகப் பிரமதேவரெனக் கேன்விதித்தார். இப்பிள்ளை பிழைத்திருப்பதைவிட இறந்துபோனாலுஞ் சுகுணமாச்சுதேயென்று பலவாறுதுயரப்பட்டிருப்பதை அரசனறிந்து மனைவியிடத்தில் வந்து குமாரனைப் பார்த்துத் தானும் மிக்க கிலேசத்தை யடைந்து ஆ ஆ நாம்செய்த தவப்பயன் நன்றாயிருக்கின்றதென்றாத்தி ஊழ்வினையால்வந்து உற்பவிக்குங் காரியத்திற்கு நாம் துன்பப்படுவதால் ஆவதென்னென்று தன்மனதைத் தானேதேற்றித் தனது மனைவிபடுகின்ற துன்பத்தினையுமாற்றவேண்டி அவள் சரீரத்தைத் தனது கரத்தால் வருடிக்கொடுத்துகாதலியே ! நீ துயரப்படவேண்டாம் இப்பிரபஞ்சத்துள் ஓர் காலத்திற் துன்பமனுபவிக்கின்றவர்களே மற்றொரு காலத்தில் இன்பத்தையு மெளிதி லனுபவிக்கின்றார்கள்.

பொறியிழந்திருக்கின்ற விப்புதல்வனே நாளைச் சகல மாட்சிமையினுஞ்சிறந்த மன்னவனுவன். ஆதலால் மணிமந்திர ஔஷாதிகளாற் பரிகாரஞ்செய்வோம். அவைகளாலுங் குணமாகா விட்டால் தவம், தானம், விரத முதலானவைகளைச் செய்து எல்லாத் துன்பங்களையு மொழித்துக்கொள்வோம். சின்னாள் மாத்திரம் மனம்பொருத்திருவென்றுசொன்னான். அதனாலவன் மனைவியானவள் தன்துயரத்தைத் தன்னாலடக்கக்கூடும் வரையிலடக்கி, அப்பொறியிழந்த புதல்வனைத் தனது கண்ணீருடன் தண்ணீரும் விட்டுக்குளிப்பாட்டினாள். பின்னர், அரசன் தன்புத்திரனுக்குச் சாத கருமாதிகளைச் சாத்திரவிதிப்படி சிறப்பாக நடப்பித்துச் சோதிடர்களைக் கூவி அவர்கள் சொற்படியே தக்கதென்று நாமதேயம் வைத்து

அப் புத்திரன் பிறந்தநாட் டொடுத்துப் பன்னிரண்டு வயதுவரை யிற் பிணியொழிய வேண்டிச்சகல விதத்திலும் அளவற்ற திரவியங் களைச் செலவுசெய்து எண்ணிறந்த பரிகாரங்களையும் பண்ணுவித்த னன். பின்னர் எவ்விதகாரியங்களாலும் பிணிநீங்காமையால் அர சன் மனவெறுப் படைந்து ஓர் தினம் தன் மனையாளை யழைத்துப் பெண்ணே! இதுகாறு மிப்புதல்வற்காக அளவிறந்ததிரவியங்களைச் செலவுசெய்தும் இரவும் பகலுமாகப் பலதவங்களை முயன்றும் அவைகளால் நமது சரீரம் வாடியும் பிணி நீங்குவ தில்லாமையால் இனி இவனிங்கிருக்கலாகாது. இருக்கின் மற்று முள்ள திரவியங்க ளும் வீணிற் செலவழிந்துபோகும் ஆதலால் சற்றுந்தாமதஞ்செய் யாமல் உன்மகனைக்கொண்டு இந்நிமிஷத்தில் வெளியிற் செல்லக் கடவையென்று அழைத்து ஆஞ்ஞாபித்தான்.

அவ்வார்த்தையைக் கமலையானவள்கேட்டு நடுநடுங்கிப் பதை பதைத்துப் பயந்து, அப்புதல்வனைப்பெற்றகாலத்திலுண்டான து யரத்தைப்பார்க்கினும் அதிக துயரங்கொண்டு, ஐயையோ வென்று துக்கித்து அரசன் மனதிற் கொதிப்புண்டாகி என்மீதிற்கோபஞ் செய்தால் இனி என்னசெய்வேனென்று மனம் நொந்து, கொடுமை யான பிணி கொண்டிருக்கின்ற மைந்தனை உடனே யெடுத்துக் கொண்டு வெளிவந்து புலம்புவாள்.

அன்றோ வன்றோ மன்னவ னெஞ்சத் தழலாகி
யென்றோ வானே லென்னினிச் செய்வே னெனநொந்து
கொன்றேய் கொண்ட மைந்தனை வல்லே கொண்டோவா
மின்னே யன்ன நுண்ணிடைவாட வெளிக்கொண்டாள்

பற்றார் யாரே பண்டுசெய் நல்லூழ் படர்காலை
யுற்றார் யாரே யோங்கிய தீயூ ழுறுங்காலை
யெற்றோ வென்ன வீரங்கவி னென்னு மிடமாதைப்
பெற்றோ னல்லாற் காப்பிலை யென்றே பெயர்குற்றாள்.

ஐயகோவிதியே என்செய்வோம். நல்லகாலத்திற்குப் பகையில் லை, பொல்லாதகாலத்திற் குறவில்லை, யென்றுபெரியோர்கள் சொல் லுகின்றாராதலால் இனி என்னசெய்யப் போகின்றோமென்று இடுக் கண்ணுற்றிருப்பதில் ஆகத்தக்க பயன்யாது மில்லையென்று தன் னுள்ளத்தைத் தானேதேற்றிக்கொண்டு, இனி நமக்குப் பரமசிவத் தைவிடவேறொருதுணையில்லையென்கின்ற உறுதியுடன் வழிநடந்து வனத்திற் சஞ்சரித்திருந்தனள். அக்காலத்தில் ஒருநாள் கள்ளர்கள்

அவளைப் புடைசூழ்ந்து பூண்டிருக்கிற ஆபரணங்க ளனைத்தையுங் கொள்ளையிட்டுத் துரத்திவிட அதனால்மிகவும் வாட்டமுற்றுப் பய ந்து ஒரூரினுட்சென்று எக்காலத்தும் பசிதாகத்தால் வருத்தமுறு திருந்தவள் அப்பசியாலும் தாகத்தாலு மிளைப்புற்று இத்துன்பங்க ளிற்பட்டு வருந்துவதைவிட உயிர்விட்டிறக்கலாமென்று நினைத்து, மீளவும் புத்திரனிமித்தஞ் சகலசெல்வங்களையுங் கைவிட்டு வந்து இ ங்கு நம்முயிரை விடுத்தால் இவனைப் பாதுகாப்பவரின்றி இறப்பா னேயென்று நிதானித்து, அப்புத்திரனை யோர்கோயிலுள் இருக்க வைத்து அக்கோயிலுக் கடுத்த கிராமங்களில் ஐயமெடுத்து வந்து தன்புதல்வனுக்கூட்டியும் பின்னர்த் தானும் புசித்து இவ்வாறுகா லங்கழித்து வருகையில் தான் நாடோறும் பிச்சையெடுத்தற்குச்செ ல்கின்ற குண்டினபுரத்திற்கு ஒருநாள் நல்வினைப் பயனானுதன்னை நெருங்கிவருந் தன்மையளாய்த் தன் புத்திரனையு மழைத்துக்கொ ண்டு வீதியிற்சென்றனள் அப்போது அக்குண்டினபுரத்திற்குச்சமீ பமான ஓர்வனத்திற் சகலசீவராசிகளும் பகையின்றி யுலவுகின்ற ஆச்சிரமத்திலுள்ள முற்கலமுனிவர் எதிரேவந்தார். கணேசமூர்த் திக்கன்பராகிய அம்முற்கலமுனிவர் மீது படிந்துவந்த காற்றானது அத்தக்கனுடைய சரீரத்திற் பட்டமாத்திரத்தில் அவனுக்குண்டாயி ருந்த பிணிமுழுவதும் நீங்கி. வாய் பேசிச் செவிகேட்டுக் கண்தெரி ந்து புதிதுபவித்திரனாகி நடந்தனன்.

பின்னர் அத்தக்கனுடைய வடிவத்தைப் பார்க்கின்றவர்கள் இவன் மன்மதனோ ? முருகக்கடவுளோ ? அல்லதுமகாவிஷ்ணுதா னோவென்று நினைக்கத்தக்க பேரழகும் பிரகாசமும் வாய்ந்து விள ங்கினான். இப்படி விளங்கியிருக்கின்ற புத்திரனைத் தாய்பார்த்துஅக மகிழ்ச்சி பொங்கிக் கையிலெடுத் தணைத்துக்கொண்டு உச்சிமோந்து உள்ளம்பூரித்து முத்தமிட்டு ஆனந்தக்கண்ணீர் சொரிந்து நமது காதலன் கோபித்த தன்மையாலல்லவா நாமிங்கு வரப்பெற்றுப்பெ ரியோர்கள்மீதிற் படிந்து வந்த காற்றினால் நமது புத்திரன்பிணிநீங் கிப் பிரகாசமாயினானென்று சந்தோஷித்து இதற்குமுன் தன்தலை வன்மீது வைத்திருந்த வெறுப்பை விடுத்துவிருப்புற்றவளாயினாள் இவ்வற்புதத்தை அந்நகரத்துள்ளோர்கள் அறிந்து இவ்விருவர்மீ துங் கிருபையுண்டாகி நல்லபோனகமும் ஆடைகளுந்தந்துபாதுகா த்துவர, அதையவர்களேற்றுச் சீவித்திருக்குங் காலத்தில் அரவக் கச்சினைவீக்கி அஷ்டபுயாசலங்களையும் பெற்றுத் திருநேத்திரதாரி யாய் வீற்றிருக்கின்ற சிவபிரானைச் சதாகாலமும் பூசிக்கும் பேற்

றிஃன வாய்ந்த ஓர் ஆதிசைவப் பிராமணர் தங்களெதிரில் வரக்க ண்டு அவரைத்தானுந்தன்புத்திரனுமாக நமஸ்காரஞ்செய்தார்கள். அவ்வேதியர் அவர்கண்மீது கிருபைவைத்து இருவருக்குந்தீட்சை செய்து கணேசமூர்த்தியினுடைய சடாட்சர மந்திரத்தை யுபதேசி த்து அதைச்செபிக்கின்ற முறைமையுங் கூறினார். அவ்வாறேயவர் களிருவருஞ் செபஞ்செய்து வருகையில் கணேசமூர்த்திக்குக் கிரு பைசுரந்து அவர்கள் வேண்டிய வரங்களை அநுக்கிரகிக்கும்படியாக வெழுந்தருளி முன்னர்க் கமலைக்குத் தரிசனந்தந்து அவள் கோரிய வரங்களை யளித்து, பின்னர்த் தக்கனுக்கெதிரில் வந்து ஒரு முழந் தாண்மீது மற்றொரு திருவடியைவைத்துக்கொண்டு ஒருகொம்பும் இரண்டுசெவிகளும் மூன்று விழிகளும் நான்கு தோள்களுமாகப் பொன்னுடையுடுத்திப் பலவிரத்தினாபரணங்களைத் தரித்த திருக் கோலத்துடன் தரிசனமானார். இவ்வாறு தரிசனந் தந்தருளிய கர் த்தனைத் தக்கனானவன்கண்டு மனதில் அச்சமும் அன்புமுண்டாகி வணக்கஞ்செய்து பலமுறைவலம்வந்து கரங்களைச் சிரமீது கூப்பி இருவிழிகளினும் ஆனந்தபாஷ்பஞ் சொரிந்து விஸ்வரூபங் கொண் டெழுந்தருளியிருக்கின்ற விநாயகமூர்த்தியைத் தோத்திரஞ் செய் வானாயினான்.

அச்சமு மன்புந்தோன்ற வடியிணை பணிந்து சூழ்போந்
துச்சியிற் கரங்களேற வொளிவிழி யருவிதாழ
விச்சுவ ரூபனான விநாயகப் பெருமான் றன்னை
முச்சக முழுதும் போற்று முதல்வனைத் துதிக்கின்றானால்.

வேதகா ரணமுநீ வேதமோர் நான்குநீ
பாதமோர் நான்குநீ பதங்களோர் நான்குநீ
போதலை மலையமார் புவனகா ரணருநீ
நாதநின் பெருமையை நவிலவல் லாரெவர். (உ)

(உ) போதலைமலையமார் புவனகா ரணருநீ—போது—தாம ரைப் பூவிலும், அலை—திருப்பாற் கடலினிடத்தும், அம்மலை—அழ கிய கயிலாய மலையினிடத்தும், ஆர்—இருக்கின்ற, புவனகாரணரு ம் நீ—உலக காரணராகிய மும்மூர்த்திகளும் நீயே இவரை முறை யே பிரமன், திருமால் உருத்திரன் எனக் கொள்க.

புராதனப் பொருளுநீ புறம்பினு முள்ளினும்
விராவுமெய்க் கரியுநீ மிகுமுப நிடதநீ

சராசர குருவுநீ தத்துவ முழுதுநீ
பராபர நினதியல் பகரவல் லாரெவர்.

(௩) புராதனப் பொருள்—பழம்பொருள், விராவும் மெய்க்க ரியும்நீ—கலந்திருக்கின்ற தத்துவசாட்சியும் நீயே, குரு—அஞ்ஞானவிருளைப்போக்குவோன், தத்துவ முழுதும்நீ—அகம்புறமென்னுங் கருவிகளாகிய தொண்ணூற்றாறும் நீயே இவை தத்துவதாத்துவிக மெனப்படும்

மூவர்கா ரணருநீ மூன்றுகா ரணமுநீ
மூவகை யுலகுநீ மொழியுமுச் சுடருநீ
மூவகை யுயிருநீ மூவகை யுருவுநீ
தேவனே நினதரு டெளியவல் லாரெவர். (௪)

(௪) மூன்றுகாரணம்—உலகத்திற்கு முதல்காரணராகிய சுத்தமாயை அசுத்தமாயை பிரகுருதி மாயைகளும், துணைக்காரணமாகிய சிவசத்தியும், நிமித்தகாரணமாகிய சிவமும் என்க. மூவகையுலகு—சுவர்க்க மத்தி பாதலம். மூவகையுயிர்—விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பவராம் விஞ்ஞானகலர்—விஞ்ஞானத்தாற் கலையற்றவர். பிரளயகலர்—பிரளயத்திற்கலையற்றவர். சகலர்—கலையோடு கூடினவர் மூவகை உரு—அருவுருவம் உருவும் என்பனவாம். இவை நிட்களம், சகளநிட்களம், சகளம் என வடநூலாராற் கூறப்படும்.

இந்திரி யங்களி னிசையதி தெய்வநீ
யிந்திரன் முதலிய வெண்டிசைத் தேவர்நீ
யந்திரன் பகலுநீ யறுவகைப் பருவநீ
யெந்தைநின் னுருவினை யியம்பவல் லாரெவர்.

ஏகனீ யநேகனீ யிருளுநீ யொளியுநீ
போகிநீ யோகிநீ புலவரெல் லாருநீ
சாகர மேழுநீ தடவரைக் குலமுநீ
மாகநின் னடிமலர் மருவவல் லாரெவர்.

(௬) போகி—போகத்தையுடையவன், இல்லறத்தான்,யோகி யோகத்தையுடையவன், துறவறத்தான், சாகரம்—கடல், சகரர்களால் தோண்டப்பட்டதனால் இப்பெயர் பெற்றது. மாக—சிதாகாயசொரூபியே, வியோகரூபியே.

அறைபிர மேயநீ யப்பிர மேயநீ
மறையும்பா வனையுநீ பாவனு திதநீ

நிறைபரப் பிரமமு நிலமுத லைந்துமி
யிறைவநின் னருளினை யெய்தவல் லாரெவர்.

(எ) பிரமேயம்—அளவிடப்படுவது, அறியப்படுவது, அப்பிரமேயம்—அளவிடப்படாதது, அறியப்படாதது, மறையும் பாவனை சொல்லப்பட்ட பாவனைகளும், பாவனை—தியானம், நிலமுதலைந்து பஞ்சபூதம்.

மிருதிநீ புராணநீ வேறுபல் கலையுநீ
வருணமோர் நான்குநீ வனமுப வனமுநீ
தருவொரு கொடியுநீ சகலசெந் துக்கணீ
யொருவநின் றன்னிய லுணரவல் லாரெவர்.

(அ) வருணமோர் நான்கு—பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரசாதிகள் வனம்—காடு, உபவனம்—பூங்கா, ஒருவ—ஒப்புயர்வில்லாதவனே ! நின்றன் இயல்—தேவரீருடையசொரூபதடத்தலக் கணங்களை.

காமமா திகளுநீ கடும்பசி தாகநீ
நாமநித் திரையு நகுவினோ தங்கணீ
யேமமார் பொறையுநீ யின்பநீ துன்பநீ
வாமனே நின்கழன் மதிக்கவல் லாரெவர்.

அருளுநீ மறமுநீ யன்புநீ வன்புநீ
தெருளுநீ மருளுநீ செல்வநீ வறுமைநீ
வெருளுநீ தேற்றநீ வேறுநீ யொன்றுநீ
குருவநின் குணங்களைக் குறிக்கவல் லாரெவர்.

(ம) அருள்—திருவருட்சத்தி, மறம்—கொலை முதலிய தீமை இவற்றால் வள்ளலாகிய விநாயகப் பெருமானது அறக்கருணை மறக்கருணையாகிய தொழில்கள் அறையப்பட்டன. அன்பு—பற்று, வன்பு—பற்று, வன்பு—பற்றின்மை. தெருள்—ஞானபேதம். மருள்—அஞ்ஞான மயக்கம். வெருள்—பயம். தேற்றம்—அபயம்,

புண்ணிய தலங்கணீ பொருவிறீர்த் தங்கணீ
வண்ணமூர்த் திகளுநீ வரந்தரும் வள்ளனீ
பண்ணியம் பலவுநீ பரமதப் பொருளுநீ
யண்ணலே நின்செய லறியவல் லாரெவர்.

செய்வினை முதலுநீ செயப்படு பொருளுநீ
செய்வினைத் தொழிலுநீ செய்கரு மப்பய
னுய்வகை யவரவர்க் குதவவல் லவனுநீ
மெய்வலாய் நினதியல் விளக்கவல் லாரெவர்.

(கஉ) செய்வினை முதல்—கருத்தாப்பொருள். செயப்படுபொருள்—கருமப்பொருள். செய்வினைத் தொழில்—கிரியைப்பொருள் இது எழுவாய் செயப்படுபொருள் பயனிலையெனத் திராவிடத்தில் வழங்கும்.

குணமொடு குறிபல கொள்கைகொள் ளாயெனி
னணிமலர் மணமென வாக்கையி னுயிரெனப்
பணியுயி ரறிவெனப் பயிலுமத் துவிதமாங்
கணபதி நினதியல் காணவல் லாரெவர்.

(கங) குணம்—சத்துவ ராசத தாமதமென்னு முக்குணங்கள் மலர்மணம்போலவும், உடலுயிர் போலவும், ஆன்மபோதமுங் கண்ணறிவும் போலவும், பதியத்துவிதமாய் நிற்குநிலை பகரப்பட்டது. அத்துவிதம்—இரண்டன்மை இரண்டின்மையெனப் பொருள்கூறுவர் மாயாவாதிகள்.

இவ்வாறு தோத்திரங்கள் செய்து நிற்கின்ற தக்கனுக்கெதிரில் யானைமுகத்தோடுங் கூடியிருந்த விநாயகமூர்த்தியானவர் அவ்வுருவத்தைமாற்றி முற்கலமுனிவருடையவுருவத்தைத் தரித்துத் தக்கனைப்பார்த்து அன்பனே! நீ செய்த தோத்திரங் கட்கு மனமுவந்தோம் உனக்கு வேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய் மலர்ந்தனர். தக்கன் மீளவும் நமஸ்காரஞ்செய்து தேவாதிதேவனே! அடியேன் மனையில் அஷ்டபாக்கியங்களுண்டாகவும், மிக்க புகழுடனே அடியேன் வாழ்ந்திருக்கவும், அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்குக் கர்த்தன் கிருபைகூர்ந்து தக்கனே! முன்பு நம்மால் முற்கலனென்னும் பெயரைப் பெற்றிருக்கின்ற ஓர் தவச் சிரேஷ்டனுடைய உருவத்தையே இப்போது யாம் பெற்றிருக்கின்றோம். அவனே நமது பாததாமரைக்கன்பன். அவனுயிரே நமதுருவமானதால் அவனுருவே நமதுருவமென்பதையுனக் கறிவிக்குமாறு அவன்போலவே யிருந்து உனக்குத் தரிசனந்தந்தோம். அவனுருவத்திற்படிந்து வந்த காற்றினால் உன்னரிட்டத்தை முன்புநிவிர்த்தி செய்வித்தோம். இனி நீ அவனைச் சரணடைவையாயின் உன்கோரிக்கையெல்லாம் அவனே நிறைவேற்றிவைப்பான். பின்னர் நீ தேவேந்திரனைப்போலச் சகல போகங்களையும் பெற்று வாழ்ந்திருப்பாயென்று திருவாய் மலர்ந்து தமது திருவுருவத்தைக் கரந்தருளினார்.

தக்கன்பிணிநீங்குபடலம் முற்றிற்று,

முற்கலர்

# தக்கனுக்குபதேசித்தபடலம்.

*கற்றைச் சடிலத் தோம்பன் காட்சி கொடுத்து மறைதலொடும்*
*பெற்றம் பிரிந்த கன்றெனவும் பெருந்தாய் பிரிந்த மகவெனவும்*
*பற்றும் பொருள்கைப் பெற்றிழந்த படர்கூர் வறுமையாளனெனவும்*
*சற்றுந் தரியா துளங்கரையத் தக்க னிலமேல் விழ்ந்தெழுந்தான்.*

ஒன்றாகி இரண்டுருவாகியும், ஒரைந்தாய் ஐயைந்தாகியும், நிற்கும் விநாயகக்கடவுளது திருவடிக்கன்புள்ளமுனிவீர்! சந்திரசடாதர மூர்த்தியாகிய விநாயகக்கடவுள் இவ்வாறு கரந்தருளலுந் தக்கனானவன் பசுவைப் பிரிந்த கன்றுபோலவும். தாயைப் பிரிந்த சேய்போலவும். கைப்பொரு ளிழந்த வறுமையாளன்போலவும் எவ்வளவேனு மனஞ் சகிக்க மாட்டாமல் தரையில் விழ்ந்தெழுந்து கர்த்தன் கரந்தருளிய திசையை நோக்கி அநந்தமுறை வணங்கிப் பல திக்குக ளனைத்துந் தேடித்திரிந்து மீட்டுந் தனக்குக் காட்சிகொடுத்தருளிய நிலத்தில்வந்து விழ்ந்து விழ்ந்து புரண்டு புரண்டு அலறியலறிச் சரக்கொன்றை மரத்திற் பூத்திருக்கின்ற மலர்ச் சரங்களை நோக்கி, சுவாமிகள் திருமுடியி லணிந்திருந்த மாலையென்றெண்ணி அம் மரத்தைத் தழுவி முகந்து வணங்கிய தன்றி தடாகங்களே ! பறவைகளே ! கயங்களே ! மாளிகைகளே ! யானைகளே ! கமுகமரங்களே! பனைமரங்களே ! அன்றில்களே ! என்னை யாட்கொண்டருளிய கிருபா மூர்த்தியைக் கண்டீர்களோ வென்று புலம்புவான். யானைகளைப் பார்த்து என தாண்டவருடைய திருமுகத்திற் கொப்பாகவிருக்கின்றீர்களேயென்று நமஸ்காரஞ்செய்து, அழலிற்பட்ட மெழுகினைப்போலச் சரீரமிளகி உருமாறி ஆனந்தக்கூத்தாடி யற்புதங்கொண்டு, முற்கல முனிவருடைய ஆசிரமத்தை யடைந்தான். அவ்வாசிரமத்தில் அருளென்னுங் கடலைக்கடந்து ஆனந்த வமுதுண்டு பூரித்திருக்கின்ற மாணாக்கர்கள் தம்மைப் புடைசூழ்ந்து போற்றத் தக்கதாக வேதாகம முதலிய சகல பொருள்களையுந் தெளிந் துணர்த்தி. தேவ தேவராகிய விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளைச் சதாகாலமுஞ் சிந்தித்திருக்கின்ற அருந்தவத்தினுலும் யோகவலியினாலும்வேண்டிய வண்ணம் வேறுவேறு வடிவங்களைக்கொள்ளத்தக்க சத்தியையுடைவராய், ஞானசூரியனைப்போல விளங்கியிருக்கின்ற முற்கல முனிவரையும் அவர் கருணை பொழிகின்ற திரிநேத்திரங்கள் சதுர்ப்புயங்கள் முதலிய உறுப்புக்களோடு சிற்பசாஸ்திரவிதிப்படி பொன்னினாலும் மணியினாலுங் கணேசமூர்

த்தியினுடைய திருவுருவங்களைச்சமைத்துச் சதாகாலமுந்தரிசித்து வருகின்ற பெருமையுங் கண்டு பணிந்து நெடுநேரம் அவ்வண்ணமே யிருந்து பின்னரெழுந்து, மேகத்தைப்போல ஆனந்தக்கண்ணீர் சொரிந்து பெருமூச்செறிந்து பரவசனாகிக் கரங்களைச்சிரமேற் கூப்பி அளவற்ற தோத்திரங்களைச் செய்துநிற்றலும், அத்தக்கனைமுற்கல முனிவர் கிருபையோடும் பார்த்து, அவன் பேரன்புக் கதிசயங்கொண்டு, அன்பனே ! உன் பெயரென்ன? நீ வசித்திருக்கும் ஊர் யாது? உன்மனதிற் கருதி வந்த விருப்பங்கள் எவை? சொல்லென்று திருவாய் மலர்ந்தனர்.

உடனே தக்கன் தேவாமிர்த முண்டவனை யொத்துக் களித்தவனாய்க் கரங்களைக்கூப்பித்தொழுது இதனைவிண்ணப்பஞ் செய்வானாயினன். சுவாமீ! என்தந்தை கருநாடதேயத்திலே பாறுவென்கின்ற புரத்தில் அரசாட்சி செய்கின்ற வல்லவராசன் என்தாய் கமலையென்பவள். என்பெயர் தக்கன். மேற்சொன்ன அவ்விருவருக்கும் யான்புதல்வனாய் உற்பவித்தபோதே என்சரீரமானது தொழுநோய் முதலிய பிணிகளோடு மிருந்ததனால் அவர்கள் மன வருத்தமுற்றுப் பன்னிரண்டு வயதுவரையிற் பற்பலமுயற்சிகளைச்செய்து வந்தார்கள். பின்னர் எவ்வாற்றாலும் என்பிணி நீங்காமை கண்டு தந்தை மனவெறுப்படைந்து தாயையும் என்னையுங்கோபித்து விலக்க யாங்கள் அவ்வாணையைத்தடுக்கக் கூடாமல் வெளிக்கொண்டு இந்நகரத்தை யடைந்து பிச்சையெடுத்துச் சீவிக்கின்ற காலையில் ஒருநாள் சுவாமிகள் திருமேனியிற் றுதைந்து வந்தகாற்றினால்என் பிணியனைத்து நீங்கப் பெற்றதுமன்றி ஓர்மறையவ ருபதேசித்தமந்திரத்தை யநுட்டித்து அதன் முன்னிலையிற் கணேசமூர்த்தியினுடைய தரிசனங்கண்டு அவரிட்டருளிய கட்டளையின்படித் தேவரீரைச் சரணடைந்தேன். இஃதன்றியும் யானைமுகத்தோடும் என்னெதிர்வந்து காட்சிதந்த கணேசமூர்த்தி யானவர் பின்னர் இவ்வுருவத்தைமாற்றித் தேவரீர் திருவுருவத்தினைக் கொண்டு தரிசனந்தந்தருளியதால் சுவாமிகட்குந் தேவரீர்க்குந் திருவுருவ மொன்றாகவிருக்கின்றது. தேவரீர்அநுக்கிரகத்தால் அடியேற்கு இப்பிரபஞ்ச வாழ்க்கை மிகுதியுண்டாக வேண்டு மென்று கோரியிருக்கின்றேன் அவ்வண்ணமே தேவரீர் கருணைகடாட்சம் வைத்து நிரந்தபத்தியும் அடியேற் கருளவேண்டு மென்றுபணிந்து பிரார்த்தித்தான் இவையனைத்து முற்கல முனிவர் கேட்டு அதிக ஆச்சரியங்கொண்டு மைந்தனே ! நீபெரிய பாக்கியமுடையவன் நீயே இவ்வுடம்பின் பயனைப்

பெற்றவன். நீயே நினைத்தகாரியத்தை நிறைவேற்றிக் கொள்ளத்தக்க மகாதவத்தையுடையவன். நீயே விநாயகக் கடவுளுடைய திருவடிகளில் நிறைந்த பத்தியுடையவன், நீயே முற்றந்துறந்தவன் நீயே சீவன் முத்தன்யான் தேவவருடத்தில் ஆயிரம்வருடம் அருமையான தவங்கள் செய்தும், அவ்வாறே அளவற்றகாலந் தியானித்திருந்தும் பலதருமங்களில் முயன்றும், எண்ணிறந்ததானங்களை நடாத்தியும் அதுகாறும் எனக்குக் கணேசமூர்த்தியானவர் தரிசனந்தந்தருளியதேயில்லை, பிரமன் விண்டு உருத்திரனென்ற மூவருள்ளத்தினின்று சிருட்டி-திதி-சங்காரமென்கிற முத் தொழில்களை நடாத்தி அம்முத்தொழில்களை அம்மூவர் முன்னிலையில் இம்மூவகையுலகத்தினு மியற்றுதல்செய்து அம்மூவர்க்கும் முதல்வனாகவிருக்கின்ற ஓர் முதல்வனுக்குத் தாமே முதல்வராயிருக்கின்றவர். அக்கணேசமூர்த்தியே ! அவரையுன் * மூவகைக்காரணத்தாலு முயங்கியிருக்கின்றனையாயின், இப்புவியிலுனக் கொப்பாகயாவரிருக்கின்றார்கள். அந்தணர் கழல்வண்ணமாகவும் யோகியர்க்கு மந்திர சொரூபமாகவுமிருந்து அவ்வவர்களுக்குத் தரிசனந்தந்து ஆட்கொள்ளத்தக்க அக்கணேசமூர்த்தியானவர் என்னெதிரிற் காட்சிதந்த தெவ்வாறோ அவ்வாறே நீயுங் கண்டதாக மொழிந்தனை, யானுனக்குதரத்தக்க கைம்மாறு என்னவிருக்கின்றதென்று சொல்லி ஆலிங்கனஞ்செய்து தமது கரத்தாற் சரீரத்தை † தைவந்துஅளவில்லாத அற்புதங்களைக்கொண்டு பற்பல சந்தோஷவார்த்தைகளாடிச் சகல பாக்கியங்களையுந் தரத்தக்க விநாயகமூர்த்தியினுடைய ஏகாட்சரமந்திரத்தை யுபதேசித்து அதைத்தியானிக்கு முறைமையும் அருளிச்செய்தார். இப்பால் அத்தக்கனுடைய தாயாகிய கமலையானவளொருநேரந் தன்புத்திரனைக் காணமற் றேடினவளாய்ப் பின்னர் ஞானசொரூபியாய் வீற்றிருக்கின்றமுற்கலமுனிவரிடத்திலிருக்கக்கண்டுதானும் அவரைத் தீர்க்கதெண்டன் செய்து நின்றனள், அவளையம்முனிபுங்கவர் பார்த்து மகா வுத்தமியே ! நீயும் உன் புத்திரனும் வேதங்களாலு மறியக்கூடாத குணங்குறிகடந்தகொள்கையராகிய கணேசமூர்த்தியினுடைய கிருபைக்குப் பாத்திரராவீர்கள். சகலவினைகளையும் வென்றீர்கள். இன்னுமிங்கள் பெறத்தக்க தென்னவிருக்கின்றது உன்குமாரனுக்கு அவ்விநாயகக்கடவுளுடைய ‡ ஏகாட்சரமந்திரத்தை யுபதேசித்திருக்கின்றேன் 0 அம்மனுவைச் செபஞ்

* மூவகைக் காரணம்—மனம், வாக்கு காயம் என்பனவாம். † தைவந்து—தடவி. ‡ ஏகாட்சரம்—பிரணவம், 0 அம்மனு—அந்த மந்திரம்.

செய்து சித்திபெற்ற முடிவிலே இவ்வுலகத்தில் அவன் சக்கிராதிப தியாயிருந்து தேவேந்திரன் முதலாயினோர் கண்டு மதிக்கத்தக்க அரசாட்சியைப் பெற்றுவாழ்ந்திருப்பான். இனியொன்றற்கும் அஞ்சலையென்று சொல்லி விடைகொடுத்தனர் என்று விசுவாமித்திரர் வீமராசனை நோக்கிச் சொன்னார்.

தக்கனுக் குபதேசித்த படலமுற்றிற்று.

## வல்லாளன் வேதவனை நீங்குபடலம்.

என்றுரை யாடும்வேலை யிலங்குவேல் வீமன் றாழ்ந்து
கன்றுநோய் முனிவன் மெய்யிற் காற்றினான் முழுதுந்தீர
வன்றுவல் விரைந்தே ரம்ப னவனெதிர் தோன்ற வன்னான்
றென்றுசெய் தவம்யா தென்னச் சொல்லுவான் காதிமைந்தன்.

சிவசத்திபாதம் வாய்ந்த முனிவர்களே விநாயக மூர்த்தியைத் தக்கனுபாசித்துப் பிணிநீங்கிய சரித்திரத்தைச் சொன்னோம். இப்பால் வல்லாளனுபாசித்த திறத்தைச் சொல்வோங்கேட்பீராக.வீமராசன் விசுவாமித்திரமுனிவரை மீளவும் பணிந்தெழுந்து சுவாமி! முக்கல முனிவர்மீது படிந்துவந்த காற்றானது தக்கன் சரீரத்தில் பட்டவுடன் அக்கொடிய வியாதி அவனைவிட்டு நீங்கவும் உடனே கணேசமூர்த்தி தரிசனமாகவும், பூர்வத்தில் அவன் என்ன தவத்தினைச் செய்திருக்கின்றான், இதனையும் அருளல்வேண்டுமென்றுபிரார்த்தித்தான். அதற்கு விசுவாமித்திரமுனிவர் கிருபைசுரந்து அரசனே! சகலவளமுஞ் சிறந்த சிந்து தேயத்திலே பல்லியென்னின்றபட்டணத்திலே, வைசிய குலத்திலே, கலியாணனென்பவனுக்குங் கற்பிற்சிறந்த அவன் மனைவியாகிய இந்துமதி யென்பவட்கும் முன்செய்து விட்ட தவக்குறையை நிறைவேற்ற வந்தவனென்று சொல்லும்படி ஒரு புத்திரன் அவதரித்தான். அதனாற் கலியாணன் மனமகிழ்ச்சிகொண்டு சகல சடங்குகளையுஞ் சிறக்கச்செய்துஅநேக தான தருமங்களியற்றிப் புத்திரன்பிறந்த பன்னிரண்டா நாள் வீட்டை அலங்கரிக்கச்செய்து சோதிடர்களைக் கூவி, அவர்களால் அப்புத்திரனுடைய திதி நிலை முதலிய எல்லா நிலைகளையு நன்குணர்ந்து அவர்கள் சொற்படியே வல்லாளனென்கின்ற நாமகரணஞ் செய்து அன்போடு வளர்த்து வர, அவ் வல்லாளனென்னும் புத்திரன் நாளுக்கு நாள் இருந்தும் தவழ்ந்தும் நடந்தும் அறிவு தெரிந்

துந் தினமொரு மேனிகொண்டு வளர்பிறைபோல வளர்ந்து விளையாடிக்கொண்டிருக்குநாளையில், தன்வீட்டைவிட்டுச் சிறுபிள்ளைகளுடன்கூடித் தோப்புகளிற் சென்றுவிளையாடிக்கொண்டிருப்பான். அவ்வாறு நாடோறும் விளையாடல் செய்யுங் காலத்தில் ஒருநாள் அவனுக்கும் பூர்வ நல்வினைப் பயனுனது நெருங்கி வரவும்அத்தோப்பி லொருகல்லை யெடுத்துவைத்து அக்கல்லை விநாயக மூர்த்தியாகப்பாவனைசெய்து சலத்தால் அபிடேகித்துப் புட்பத்தா லருச்சித்துப் பத்தியுடன் பூசித்து மீட்டுந் தன் வீட்டிற்கு அச்சிறுபிள்ளைகளோடுகூடிச் செல்வான் மறுதினம் அவ்வாறே சென்றுதான் பாவனையாலருச்சித்த அவ்விநாயக மூர்த்தியைக்கண்டுதரிசித்து முன்னைநாளிலுமிருந்த சிறப்புகளை நடாத்தி ஆராதித்துவருவான்.

இவ்வாறு நாளுக்குநாள் தனது பூசனைகளை விருத்திசெய்து விளையாடிவருங் காலத்தில் ஒருநாள பிராதகாலையிலெழுந்து அச்சிறுபிள்ளைகளை யழைத்துக்கொண்டு தோப்பின்கட் சென்று மிகுந்தவிசுவாசத்துடன் தான் பூசைசெய்யுங் கணேசமூர்த்திக்குச் சில பிள்ளைகள் உயரமாகப் பூப்பந்தரிடவும் சிலபிள்ளைகள் பலவாத்தியங்களிசைக்கவும், சில பிள்ளைகள் கனிவர்க்கங்களைச் சேகரித்து வரவும், சிலபிள்ளைகள் பூச்சரங்கள் கட்டித் தொங்கவிடவும், சிலபிள்ளைகள் திருமஞ்சனங்கொண்டுவந்துவைக்கவும், சிலபிள்ளைகள் பஞ்சாமிர்தங்கூட்டவும், சிலபிள்ளைகள் சந்தனமிழைக்கவும், இவ்வாறு எல்லாப்பிள்ளைகளும் ஒவ்வொரு திருப்பணிகளை நடாத்திவரக்கட்டளையிட்டு வல்லாளன் ஸ்நானஞ்செய்துஅநுட்டானமுடித்துப்புட்பங்களாலலங்கரித்திருக்கின்ற ஆலயததில நுழைந்து மிகுந்தபக்தியுடனேவிநாயகமூர்த்திக் கபிடேகஞ்செய்து, பூச்சரங்களைச்சாத்திப்பற்பலநைவேத்தியங்களைக் குறைவில்லாமற் கொடுத்து நமஸ்காரஞ்செய்து இருகரங்களையுஞ்சிரமேற்குவித்துப் பலமுறை வந்தனைசெய்துகொண்டிருந்தான். அக்காரணத்தால் தன்னோடுவந்த எல்லாப்பிள்ளைகளுங் காலைப்போசனம் மத்தியான போஜனமில்லாமலும் அத்தமிக்கின்றவரையில்தங்கள்வீட்டிற்சென்றுசேராமலுமிருந்தார்கள்.

இப்பால் அப்பிள்ளைகளை யீன்றோர்கள்வல்லாளன்மீதுகோபங்கொண்டு அவன்தந்தையாகிய கலியாணனிடத்திற்சென்று உன்பிள்ளை எங்கள்சிறுவர்களை ஆதிகாலையில் அழைத்துக்கொண்டுபோய்

இன்னும் அவர்களை வீட்டிற்கு அனுப்பாமல் விளையாடிக்கொண்டிருக்கிறான். அவனை நீ தண்டித்து அடக்காவிட்டால் யாங்களிக்கொடுமை அரசனுக்கு அறிவித்து உன்னை இந்நகரத்தினின்றுந் துரத்திவிடச் செய்வோம். இதனை யுண்மையாக நம்பக்கடவையென்று சொல்லி அவன் மனத்தைக் கலைத்தார்கள். இவ்வாறு யாவருந் தனக்கு மனவருத்தமுண்டாகும்படிக் கூச்சலிட்டுரைத்தலுங் கலியாணனுக்கு மிகுந்த கோபமுண்டாகித் தடியையெடுத்துக்கொண்டுபோய்த் தன்குமாரன் விநாயக பூசைசெய்து விளையாடிக்கொண்டிருக்கின்ற தோப்பையடைந்து பூவாற் சமைத்துவைத்திருக்கின்ற பூப்பந்தரைப் பிரித்துத்தள்ளி அதிற் கணேசனை ஆவாகணஞ்செய்து வைத்திருக்கின்ற மூர்த்தியை யெடித்தெறிந்துவல்லாளனையும் உதிரமொழுகவடித்துப் பின்னுங் கோபம்ஆறாமையால் அவனை மரத்துடனே சேர்த்து இறுகக்கட்டினான். அப்போது அக்குற்றமற்ற குமாரன் பயந்து தந்தையே ! என்று கும்பிட்டுக் கட்டையவிழ்த்துவிடும்படியாகப் பலமுறை பிரார்த்துக்கொள்ள, அதற்குஅப்பாவி சற்றுமனதிரங்காமல் உதட்டினை மடித்துக்கடித்துக்கொடிய வார்த்தைகளாற் பேசி, நீ விநாயகரைக் குறைவில்லாமற் பூசைசெய்திருப்பையாயின் அவரேவந்து யான் கட்டிய கட்டை அவிழ்த்து விடுவார். அன்னபானதிகளை உன்கையிற்றந்து நீ வேண்டியபடி அநுக்கிரகித்து உன்னுயிரைப் பாதுகாப்பார். நீ வீட்டிற்கு வாராதிருந்தால் பிழைத்தாய். வருவையாயின் மாண்டுபோவாயென்றுபகைவரைப்போலப் பேசித் தன்னிருக்கையை யடைந்தனன்.

இப்பால் வல்லாளனுக்கு வேறொரு துணையில்லாமல்மிக்கதுயரத்தை யடைந்து துதிக்கின்றான்,

முக்கண் யானைமுகத்த வாநினை முற்று நம்பிய நாயினேன்
றுக்க மாந்திடின் விக்கினங்க டொக்குநாத னெனும் பெயர்
தக்க தோசுடர் கால மாறினுஞ் சார்ந்த வன்பர் தமக்கெலாந்
தொக்க பேரருண் மாறி லாயெனச் சொல்லிமைந்தனிதோதுவான்

திரிநேத்திர தாரியாயிருக்கின்ற கணேசமூர்த்தியே ! யான்படுந்துன்பங்களைத் தேவரீர் பார்க்கவில்லையோ ! எல்லாவற்றிற்குந் தேவரீரையே நம்பியிருக்கின்ற அடியேற்கு இத்தன்மைத்தாகிய துன்பம் வரலாமா ? இது தகுதியா ? தேவரீர்திருவடித்தாமரைகளை ஆராதிக்கின்ற வெனக்கும் இவ்விடர் நேர்ந்ததே. தேவதேவே! அஃது தேவரீரது கிருபா சமுகத்திற்கு எதிர்ப்பட வில்லையாவென்று

முறையிட்டு ஐயனே ! யானுனக்கடிமையென்ப துண்மையாயின் யான்சமைத்துவைத்த ஆலயத்தை எவன்பிரித்துத் தள்ளினுனே யான்பிரதிட்டைசெய்த மூர்த்தியை எவனெடுத் தெறிந்தானே, எனதுசரீரத்தில் உதிரமுண்டாகும்படி எவனடித்து இம்மரத்திற் கட்டினுனே, தேவரீரை எவ்வளவேனு மறியாமல் எவன்நிந்தித்தானே அப்பாதகன் இந்நிமிடத்திற் குருடாகியும் ஊமையாகியும் செவிடாகியும் அழுகிய தொழுநோய்கொண்டு அதில் ஈயுஞ் செந்நீரு மொழுகத்தக்கதாய்ச் சரீரமாதியந்தமும் விரணங்களுண்டாகித் துன்பப்படக் கடவனென்று சபித்துத் திடசித்தங்கொண்டு நமது உடல்மாத்திரமே கயிற்ருல் கட்டுண்டதன்றி உள்ளத்திற்கு என்ன குறையிருக்கின்றதென்று தன்மனதிலுள்ள விநாயகக்கடவுளை யிறுகப்பிடித்துத் தியானித்து உயிரைவிடுவதற்குத் துணிந்தான். உடனே விநாயகமூர்த்திக்கு மனந்தளர்ந்து பிராமணச்சிறுவன் போல மாறுவடிவங்கொண்டு அவ்வல்லாளனுக் கெதிராகவந்தார். சூரியோதயத்திற்கு முன்னர் இருளும் பனியும் எவ்வாறு நீங்குமோ அவ்வாறு விநாயகமூர்த்தி பிராமணச் சிறுவனுகிவரவும், அவ்வல்லாளனை இறுகக்கட்டியிருந்தகட்டும், அடிகளாலுண்டான விரணங்களும், ஒரு நொடிப்போதில் விலகிப்போய்விட்டன. பின்னர் வல்லாளன் அற்புதங்கொண்டு இவரே நம்மையாட்கொள்ளவந்த விநாயகப்பெருமானென்று நிச்சயித்து நமஸ்காரஞ்செய்து உலகரட்சகனே எளியேற்குத் தந்தைதாய் சுற்றமுதலிய யாவருஞ் சுவாமிகளேயன்றி இப்பிரபஞ்சத்தில் வேறொருவரில்லை யென்பது இத்தினத்திற் கண்டுணர்ந்தேனென்று பலவாறு தோத்திரஞ் செய்தனன்.

தந்தைதாய் சுற்றமுற்றுந் தமியனேற் கடிகளன்றி
யிந்தவை யகத்தில்வேறே யில்லையென்ப தின்று கண்டேன்
முந்நூல கனைத்துந் தோற்றி முடித்தருண் முதல்வமூவா
வந்தணவென்றுன் மைந்த னந்தணன் றழுவிச் சொல்வான்.

அதற்கு அப்பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டு வந்த கணேசமூர்த்தியானவர் வல்லாளனைத் தழுவிக்கொண்டு அன்பிற் சிறந்த குழந்தாய் ! நமக் கபராதஞ்செய்த பாவிகளும் நமதுபத்தருக்கு இடுக்கண்செய்த சண்டாளர்களும் அந்நிமிடத்திற் கொடியநரகவேதனைகளிலழுந்தி இம்மை மறுமையினும் முடிவுகாணுத பொல்லாத வியாதிகளாற் றுன்பப்படுவார்களாதலால், இப்போது நம்மிருவரிடத்துங் குற்றஞ்செய்த கலியாணனுக்கு நீ யிட்ட சாபத்தின்பயனை

அநுபவிக்கச் செய்தோம். நீயுன்றுயரத்தை நீங்கி உனக்குவேண்டிய வரங்களைக் கேள் தருகின்றோமென் றருளிச்செய்தார். வல்லாளன் அம்மொழியை யமுதாகக் கேட்டு ஆனந்தபரவசனாகி அடியேற்குத் தேவரீருடைய திருவடிகளில் நீங்காத பத்தியைத் தந்து இவ்விடத்தில் எக்காலமும் சுவாமிகள் வாசமாயிருந்து அவ்வவர்கள் இச்சித்த வரங்களை அனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்கு அக்கணேசமூர்த்தியிசைந்து மைந்தனே! உனக்கெமது திருவடிகளி லென்றைக்கும் அழியாத பேரின்பினைத் தந்தோம் அன்றியும் உனது பெயரை நமது பெயர்க்குமுன்னர் வைத்து வல்லாளகணபதியென்று உலகத்தாரெல்லாந் துதிசெய்யும்படியாக அவ்வவர்களிச் சித்த வரங்களைத் தந்து இங்ஙனே வசித்திருப்போம். சுவர்க்க மத்திய பாதலமென்கிற மூவுலகத்தாரும் இங்கு வந்தெம்மைப் பூசனைசெய்யக்கடவர். இங்குண்டாயிருக்கின்ற நமதுசொரூபத்தை யாவர் தரிசித்தாலும் அவ்வவர்கள் பெறக்கருதிய அரியபொருள்களையெல்லாம் எளிதிலடையக்கடவர்கள். இனித் தினவுற்சவம், மாதவுற்சவம், வருடவுற்சவம் முதலான வைபவங்கள் இங்குச் சிறப்பாக நடக்கும், இதனை நீ யுண்மையாக நம்பக்கடவையென்று திருவாய்மலர்ந்து, பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டிருந்த கணேசமூர்த்தியானவர் சகல வுலகத்தாரும் பூசிக்கத்தக்க விக்கிரக வடிவங் கொண்டிருந்தனர்.

வேதிய னுருக்கொண்ட விநாயகர் மூர்த்தியாகி
மூதுல கனைத்தும் போற்ற முகிழ்பெருங் கருணையோடு
மேதக விருந்தா ரங்கு விளம்புவிக் காதை கேட்டோர்
கோதறப் படித்தோ ரெல்லாங் குறைவில்செல்வத்த ராவார்.

வல்லாளன் வேதனை நீங்குபடல முற்றிற்று.

# வல்லாளன் முத்தியடைந்த படலம்.

வெற்றிவேன் வீமதக்கன் மேவுமூற் பிறவிசொற்று
முற்றவப் பிறப்பின் மைந்த னெங்ஙனம்வல் லாளனென்போன்
முற்றிய கணேசர் தம்மான் முத்திசேர்ந் ததுவுங் கேளென்
றற்றமில் விச்சுவாமித் திரனவற் கறையலுற்றான்,

இவ்வாறு சொல்லினும் பொருளினுந் தொடர்ந் தறிதற்கரிய கணேசமூர்த்தியானவர் விக்கிரக வடிவங்கொண்டு வீற்றிருப்பதை

வல்லாளன் பார்த்து மிகுந்த பத்தியுடனே பணிந்தெழுந்துமுன்போலவே பூப்பந்தர்புகுந்து ஸ்நானஞ்செய்து பூசைமுடித்தற்கு வேண்டிய திரவியங்களையும், வாசனையூட்டிய திருமஞ்சனத்தையும் பரிமளமிகுந்த புட்பவகைகளையும், இனிமையாகிய காய்கனி வர்க்கங்களையுஞ் சேர்த்து அளவற்ற உவகையோடும் ஆராதித்துக்கொண்டிருந்தான். இங்கிவ்வாறிருக்க இவனைமுன்னர் வருத்திச்சென்ற கலியாணன் தன்வீட்டை யடைவதன்முன் இவனோடும் விளையாடிக்கொண்டிருந்த பிள்ளைகள் விரைவிலோடி இவன் தாயாகிய இந்துமதியிடத்திற்சென்று கலியாணன் றன்புத்திரனை யலையக்கண்டதும் சரீரமெங்கும் உதிரப்பிரவாகமுண்டாகும்படி எவ்வளவுமிரக்கமின்றியடித்து மரத்திற்கட்டித் தனியேவிட்டு வந்ததும் விபரமாகச் சொன்னார்கள் அதனை இந்துமதிகேட்டு மிகுந்த துயரப்பட்டுமனவாட்டமுற்றிருக்கையில், வீட்டை நோக்கி வருகின்ற கலியாணனானவன் தன்குமாரனிட்ட சாபத்தினாற் கண்தெரியாமலும், வாய்பேசாமலும், செவிகேளாமலும், சரீரமெங்குந் தொழுநோய்கொண்டுதிகைத்து மதிமயங்கிய நிலையுடன் தன்வீட்டில் வந்து வீழ்ந்தான் அவனை இந்துமதிகண்டு ஈதென்ன பாவமென்று திடுக்கிட்டு நடுநடுங்கி உளம் வருந்தி ஐயையோ! நமது நாயகனுக்கு இவ்விதவிடுக்கண் வந்தகாரணம் யாதினாலென்று நினைந்து மனமுருகிக் கண்ணீர்சொரிந்து நெருப்பின்மீது மற்றோர் நெருப்பு;விழுந்ததுபோலவும்நோயின்மீது வேறோர் நோயுண்டானது போலவும் புருடனாற் படுகின்ற துன்பத்தையு மேற்றவளாய் மனஞ் சகிக்கமாட்டாது, தெய்வமே! சிறந்த செல்வத்தோடு நல்ல இளமைப் பருவத்தைச் சேர்ந்திருந்த காலத்திலும் ஒருவனுக்கும் தீங்கென்பதை நினையாமல் தருமத்தையே நடாத்தி வந்த இவருக்கும் இவ்வினைவருமாயின் இதுமுற்சனனத்திற்செய்த தீவினைப்பயனோ புத்திரனைத் துன்பப்படுத்திவந்தகொடுமையோவென்று துக்கித்து வீட்டிலிருக்கின்ற மற்றைய மாதர்களோடுங்கூடித் தன்புத்திரனிருக்கு மிடத்திற்சென்று அவன்மிகுந்த பத்தியோடு விநாயக பூசைசெய்துகொண்டிருப்பதைக் கண்டு சந்தோஷங்கொண்டு இவனை மரத்திற்கட்டியிருக்கின்றதென்றுங் கேள்வியானோமே. அவ்வாறொன்றினையுங் காணோமே? ஈதென்ன ஆச்சரியமென்று தன்னுடனேவந்த மாதர்களோடுஞ் சொல்ல, அவர்களும் வல்லாளனைமகிழ்ச்சியுடனேபார்த்து இச்சிறுவன் கணேசமூர்

த்தியை அன்போடும் ஆராதித்து வருகின்ற மகிமையினாலேஇவ ன் சரீரத்திலெவ்வளவேனுந் துன்பமணுகவில்லையென்று நிச்சயித்து அவன் தாயாகிய இந்து மதியைப்பார்த்துவிநாயகமூர்த்தியைப் பக் தியோடு பூசைசெய்பவரில் உன் மகனுக் கொப்பானவர்கள் இப்பிர பஞ்சத்திலெங்கனுமில்லை, ஆதலால், அவன் சரீரத்தில் யாதொரு துன்பமும் நெருங்காமலிருக்கின்றதென்று சொன்னார்கள்.

அதை இந்துமதிகேட்டு அக்குமாரனருகிற்சென்று தன்னுள்ள த்துண்டான அன்பின் பெருக்கினாற் குயங்களினின்றும் அமுதம் பெருகத் தழுவி முகத்தோடு முகத்தையணைத்து முத்தமிட்டு,அப் பா என்னருமைச் செல்வனே! நீ இப்பிள்ளைமைப்பருவத்திற்றானே விநாயகமூர்த்தியை யன்போடு அருச்சித்து அவரைவிட்டு மாறாதி ருக்கின்ற அற்புதத்தாலே யானும் உன்தந்தையுஞ் சன்பசாபல்லிய ரானோம் ஆயினும் நீ கணேச மூர்த்தியைப் பூசைசெய்யுங் காலம் போக மற்றைக் காலங்களில உலகநடைக் குரித்தாக மீளவும்வீட்டி ல்வந்து சேரலாகாதா? அல்லவெனில் வீட்டிற்றானே அக்கடவுளை வைத்துப் பூசிக்கலாகாதா ? ஏதுமின்றி எங்களைமுழுதுமறந்துவிட் டுப் பட்டணத்திற்கு வெளியிற்றானே ஒருவர் துணையின்றித் தனி யே வாசமாயிருப்பது உனக்குத் தகுமா ? இப்போதுன்தந்தையா னவர் யாதோர் காரணமுமின்றி யாவரும் அதிசயிக்கும்படி சரீர மெங்கனும் புண்கள்கொண்டு. ஊமையாகியுங் குருடாகியுஞ் செவி டாகியுமிருந்து மதிமயங்கித் தடுமாறி வீட்டில்வந்து வீழ்ந்தார். அ தையான் கண்டவுடன் முடிவற்ற துயரத்தை யடைந்து உனக்குத் தெரிவிக்கலாமென் றிங்குவந்தேன், தப்புவழியிற் செல்கின்ற பிள் ளைகளைத் தாய்தந்தைய ராயினோர் கோபித்தும் அடித்தும் அவர்க ளை நல்வழிக்குக் கொண்டு வரவேண்டுமென்று வேதசாஸ்திரங் கூற ப்பட்டிருக்கின்ற முறையின்படி யல்லவா உன்தந்தை யுன்னைத்தண் டித்தார். அதுநீதிதானே, தந்தை யாதுசெய்யினும் புத்திரர்கள் பொறுக்கவேண்டுவது சுபாவமல்லவோ ! அப்பா! இனியேனும்புத் திரனாவோர்கட்குரிய தருமத்தை நன்றாயோசித்து உன் கோபத் தை தணித்து உன் தந்தை படுகின்ற கொடியவியாதிகளைப் போ க்குவதற்கான உபாயமும் மந்திரங்களினாலோ மற்றெவ்வகை யா லோ அதனை நீயே யறிந்து தீர்க்கவேண்டும். விவேகத்திற் சிறந்த பிள்ளைகளாயினோர் தங்கள் தாய் தந்தையர் சொல்லுகின்ற வார்த்

தையைக் கீழ்ப்படுத்தாமல் மேன்மையாகக் கொள்வரென்றுசகல நூல்களையும் ஆராய்ந்துணர்ந்த பெரியோர்கள் சொல்லுகின்றார்கள் "அன்னையும்பிதாவும் முன்னறிதெய்வம், தந்தை சொன்மிக்க மந்திரமில்லை, தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை" என்னு முதுமொழிகளைத்தான் நீ கேட்டதின்றோ? ஆதலால் எனது துயரந்தீரும்படியாகயான் சொல்லுகின்ற புத்தியைக்கேளென்று பலவாறு துக்கித்துக் குறையிரந்து நின்றனள்.

அவளை வல்லாளன்பார்த்து அம்மையே! கருபத்திற் கருவாகிவளர்கின்ற காலத்திலும், அதினின்றும்வெளிக்கொண்டு உருவாகிவளர்கின்ற காலத்திலும், சகல வான்மகோடிகட்கும் உயிர்க்குயிராகி இருவினையின்படி அவ்வவர்கட்குள்ள போகங்களை யூட்டித் தந்தையுந்தாயுமாயிருந்து பாதுகாக்கவல்லகர்த்தரெவரோ அவரே இவ்வுலகத்தில் எனக்குரிய தாய்தந்தையன்றி மற்றைய நீங்களா என்பொருட்டு இரக்கங்கொண் டாளத்தக்கவர்கள் ஒருவர்க்கொருவர் இடையூறுநீக்குவதும் ஒருவர்க்கொருவர் நன்மை செய்வதும் அக்கடவுள் கிருபையைக் கொண்டன்றித் தங்கள்தங்கள் வல்லபத்தாலு மாவதுண்டோ? அவ் வவர்கள்செய்த பாவபுண்ணியங்களை அவ்வவர்களே அனுபவிக்கவேண்டுவதன்றி மற்றையராற் போக்கவுங் காக்கவுங் கூடுமோ? புத்திரர்கள் தங்கள் தாய்தந்தையர் அநுமதியின்றித் தரையாளும் அரசனுக் கேவல்புரிவராயின் அவர்கள் அத் தாய்தந்தையர் ஒறுக்கவல்லரோ? அவ்வா றொறுத்துத் தாங்களுயிர்பெற்று வாழினும் அரசன்பணிக்கு மெலிவுசெய்தமையால் அவனாணையிற் றப்பிப்பிழைப்பதுண்டோ? சிவபெருமானே கடைக்கண்பார்வை கிடைக்கப்போகின்றதாவென்று சமயம்பார்த்திருக்கத்தக்க பேரருளையுடைய விநாயகமூர்த்தி யாலயத்தைத்தள்ளி என்னையுந் துன்பப்படுத்தி, என்சுவாமியினுடையதிருவுருவத்தையுந் தன்கையாலெடுத் தெறிந்ததனாலே அவனுக்கு நீங்காத் தொழுநோய்வந்து சேர்ந்தது, இவ்வியாதியை இச்சன்மத்தி லநுபவிப்பதல்லாமல் மறுசன்மத்தினுஞ்சிறிதுநாள் அநுபவித்திருப்பான்.

அஃதெவ்வாறெனில்' நீ மறுசன்மத்தில் வல்லவ ராஜனுடைய மனைவியாகிக் கமலையென்னும் பெயரை வகித்திருப்பாய் அப்போது உன்புருடனுகிய கல்யாணன் இவ்வியாதியோடும் உன் புத்திரனுக அவதரித்துத் தக்கனென்னும் பெயர்பெற்றுத் துன்பப்படுவான், அக்காலத்துஅவன் தந்தையாகிய வல்லவராசன் மனவருத்தங்கொண்டு பன்னிரண்டு வயதுவரையில் அவ்வியாதி தீரத்தக்க பரிகாரங்கள் அளவற்றதாகச் செய்வான்' அவ்வாறுசெய்தும் அது

தீராமையை நோக்கிப் பின்னர் அவ்வரசனுக்குக் கோபமுண்டாகும், அப்போது உன்னையு மவனையுந் துரத்திவிடுவான். பின்னர் நீங்கள் முற்கல முனிவராலே நன்மைப் பெறுவீர்கள் போவென்று சொல்லி யனுப்பிவிட்டான் இந்துமதி இவ்வார்த்தைகளைக்கேட்டு, அவன் மனோதிடங்கொண்டு பேசுவதைத் தடுக்கக்கூடாமல் தன்வீட்டிற்சென்று சேர்ந்தனள் இப்பால் வல்லாளனும் மீளவும் குறைவற்ற அன்போடு விநாயக மூர்த்தியைப் பூசைசெய்து கொண்டிருந்தான். அவனுறுதிக்கு விநாயகக்கடவுள் சந்தோஷங்கொண்டுதேவகணங்களைக் கூவி நமதன்பனாகிய வல்லாளனை இங்ஙன மழைத்துவரக் கடவீர்களென்ன, அவ்வாறே தேவகணங்கள் விமானத்தைக் கொண்டுபோய் வல்லாள னிருக்குமிடத்தில் நிறுத்தினார்கள் அவ்விமானத்தை அவன்பார்த்துக் கணேசமூர்த்தியினுடைய திருவருட்குயான் பாத்திரனாவனோவென்று துதித்துச் சாஷ்டாங்கமாகச் சேவித்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி நின்றான் தேவகணங்கள் அவ்வல்லாளனைப் பார்த்துச் சர்வவல்லமையுள்ள மகாதவசிரேஷ்டனே ! விநாயகக் கடவுளுடைய கட்டளையின்படி விமானங்கொண்டுவந்தோம். நீ இதன்மேல ஆரோகணஞ்செய்யவேண்டுமென்று சொல்ல, அவ்வாறே வல்லாளன ஆனந்த பரவசனாகியேறினான். தேவகணங்கள் அந்தரத்துந்துபி முழங்கினார்கள், சித்தர்கள் சந்திரவட்டக்குடை பிடித்தார்கள் கருடர்கள் வெண்சாமரை வீசினார்கள் கின்னரர் ஆலவட்டமெடுத்தார்கள் தேவர்கள் புட்பவருடம் பொழிந்தார்கள். அரம்பையர் நாட்டிய மாடினார்கள் கந்தருவர் சங்கீதம் பாடினார்கள். முனிவர்கள் இருபக்கங்களிலும் நெருங்கினார்கள். அந்தணர்கள் வேதாகமங்களாற் றுதித்தார்கள்.

இவ்வாறு வரிசைவரிசையாகப பலபரிசனங்கள் புடைசூழ்ந்துவரச் சகல சம்பிரமத்துடன் வல்லாளன் ஆகாய மார்க்கமாகச் சென்று விநாயக லோகத்திற்சென்று, இகலோக பரலோக விச்சைகளை வெறுத்து, இந்திரன் முதலிய தேவர்கட்குங் கிடைத்தற்கருமையதாகி எக்காலத்தும் இராப்பகலென்பதின்றி ஆதியந்த மத்தியம் அளவிடப் படாதோங்கிய நிரந்தர போகத்தைப் புசித்து, போத வாதனையை யொழித்து கணேச மூர்த்தியினுடைய திவ்வியசரணாரவிந்தங்களில் இரண்டறக் கலந்து வாழ்ந்தனன். இவ்வற்புதங்களனைத்தையும் அந் நகரத்துள்ளோர்கள் கண் கண்டு மனங்களித்து அங்கு மூர்த்திகரித்திருக்கின்ற விநாயகக்கடவுளுக்குச் சிறந்த சிற்பியைக்கொண்டு ஆலயங்கட்டுவித்து அந்தணர்களைக் கொண்டு

காலங்க டவருமல் பூசனைசெய்வித்து, திருவிழாக்கள் முதலியவை களுஞ் சிறக்கச்செய்தார்கள். விநாயகசதுர்த்திதோறுஞ்சகலசனங் களும் வந்து பூசனைசெய்து வேண்டிய வரங்களைப்பெற்று வாழ்ந் திருந்தார்கள். வல்லாளனுக்கு எல்லா வேதனைகளும்நீக்கி அத்தி னமே முத்திகொடுத்தருளிய விநாகமூர்த்திக்குச் சகலமான பெரி யோர்களும் வல்லாள கணேசரென்று திருநாமந்தரித்துத் துதித் தார்கள். பின்னர்த் தொழுநோய்கொண்டு துன்பப்படுகின்ற கல் யாணன் அச்சனனமுழுவது மிக்க துன்பத்தை யடைந்து சிலநாட் சென்றபின்பு அவன் மனைவியாகிய இந்துமதியாளவள் அவனுக்கு முன்னமே மற்றொருசனனமெடுத்துக் கமலையென்னும் பெயரைவகி த்துவல்லவராசனுக்கு மனைவியாயிருக்க, அவளிடத்தில் அந்நோயு டன்புத்திரனயவதரித்துத் தக்கனென்னும் பெயர்பெற்றுத் துன்புற் றிருக்குங்காலையில் தன்தாயாகிய கமலை முற்சனனத்தில்மனைவியாக விருந்து அளவற்ற தருமாதிகளைச்செய்தபலத்தினலும், அப்போது தன்குமாரனயிருந்த வல்லாளன் விநாயகபூசைசெய்து முத்தியடை ந்தமகிமையினலும் முற்கலமுனிவர்மீது படிந்துவந்த காற்றினல் அவன் தொழுநோய் முதலியனவுந்தீர்ந்து, ஒரு பிராமணனல் விநா யகமூர்த்தியினுடைய அட்டாக்ஷர மந்திரத்தை உபதேசிக்கப் பெ ற்றுக் கணேசமூர்த்தியைத் தரிசித்து அவர் பெருங்கருணையாற் பின்னர் முற்கலமுனிவருடைய திருவடிகளை யடைந்து அவரால் ஏகாக்ஷரமந்திரத்தையு முபதேசிக்கப்பெற்றுச் சுகமுற்றிருந்தானெ ன்று விசுவாமித்திரமுனிவர் வீமராசனுக்குத் திருவாய்மலர்ந்தரு ளினர்.

வல்லாளன் முத்தியடைந்தபடலம் முற்றிற்று.

# தக்கனரசாட்சிபெற்ற படலம்.

அவர்பெருங் கருணைப் பேற்று லத்தகு தக்கனென்பான்
றவநிறை முனிவன் பாதஞ் சார்ந்துபல் பவமுந் தீர்க்குஞ்
சிவமலி மனுவும் பெற்றுன் றெவ்வடு வேலோ யன்னோ
னவனிகாவலனய் வாழ்ந்த வடைவுமீங் குரைத்துங் கேண்மோ.

அழகிய தண்ணளியையுடைய குணக்குன்றீர்! விநாயக மூர்த் தியை வல்லாளனுபாசித்து முத்தியடைந்த வரலாற்றைச் சொன்

ணும். இப்பால் வீமராசனுபாசித்த சிறத்தையுஞ் சொல்லுவோங் கேட்பீராக, அவ்வீமராசன் விசுவாமித்திர முனிவரைப் பணிந்தெழுந்து சுவாமீ! தககன் முற்கலமுனிவரால் உபதேசம் பெற்றபின்னர் எவ்வாறாயினன், அதனையுந் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க விசுவாமித்திரர் சொல்லுவார் அரசனே! எல்லாப் பாக்கியங்களையுந் தரத்தக்க ஏகாக்ஷரமந்திரத்தை யுபதேசிக்க முற்கலமுனிவரைத் தக்கன் மிக்க அன்புடனே பூசைசெய்துவிடைபெற்றுத் தானும் தனது தாயும் அவ்விடத்தினின்று நீங்கிக்கவுண்டிய நகரத்தின் சமீபமான ஓர் குளிர்ந்த நந்தவனத்தின்கணுள்ள தடாகக்கரையில் திவ்வியமாகியும் புராதனமாகியும் ஓர் விநாயகராலய மிருக்கக்கண்டு அவ்வாலயத்தை யடைந்து கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானித்து முற்கலமுனிவரா லுபதேசிக்கப்பெற்ற ஏகாக்ஷர மந்திரத்தைப் பன்னிரண்டு வருடம் வரையிற் செபித்து, பின்னர்த் திருமஞ்சனம், புட்பம், சந்தனம், தூபதீபநைவேத்திய முதலிய திரவியங்களைச் சேகரித்து, அவ்வாலயத்திலெழுந்தருளி யிருக்கின்ற விநாயக மூர்த்தியை இருபத்தொருநாள் பூசித்தான், இருபத்தோராநா ளிரவில் நாலாஞ் சாமத்தில், அத்தக்கனுடைய சொர்ப்பனத்தில் ஒருமதயானையானது அதன்றுதிக்கையாற் பூமாலை கொண்டுவந்து தன்கழுத்திலிட்டு, மீளவுந்தன்னையெடுத்துத் தன்முதுகில்வைத்துக்கொண்டு, ஒருபட்டணத்திற்குக் கொண்டுபோவதாகக் கண்டு நித்திரைவிட்டுநீங்கி, மறுநாளுதயத்திற் றனது நித்தியநியமங்களை நிறைவேற்றிக்கொண்டு, தன்தாயாகிய கமலையைச் சேவித்துத் தான்கண்ட சொர்ப்பனத்தைச் சொன்னான், அவளதைக்கேட்டுச் சந்தோஷித்து அப்பா நமது சிறுமையாவும் இன்றொழிந்தது, நீ இப்போதே அவனியாளத்தக்க அரசனாவையென்று சொல்லி, இருவருமனமகிழ்ச்சியடைந்து முனபோலவே விநாயக மந்திரத்தைத் தியானித்துக்கொண் டிருந்தார்கள். இவர்களிவ்வாறிருக்க அக்கவுண்டினியு நகரை அரசாக்ஷிசெய்துவந்த சந்திரசேனமகாராசன் அற்றைத்தினம் ஓர் காரணமுமின்றி இறந்து போயினன்.

என்னுருயி ரனையாயொளி ரிருகண்மணி யனையாய்
மன்னுபுவி தாங்கும்பொறை மாற்றிச் சுரருலகம்
பொன்னுர் திணிதோள்வெஃகிய புக்காயெனை நீத்தா
யன்னுவிது தகுமோவிது தகுமோவமிழ் தனையாய்.

கொழுகொம்பறு கொடிபோன்மிகு குளிர்நீரறு கயல்போ
விழுதங்கறு சுடர்போலொளி யெல்லேயறு நாள்போன்
முழுதுந்துயர் பெருகுங்கடன் முழுகும்படி யெனைநீத்
தொழுகுங்குழ லரமாதரை யுற்றுயிது தகுமோ.

வேள்வித்தழ லெதிரோம்படை மெய்யோயிது காறும்
வாழ்வித்தனை யிப்போதுநல் வழிபாட்டி னுள் யாது
தாழ்வித்தனெ னடியேனது தகவுண்டெனி னுரையாய்
சூழ்வித்தக வென்பாலிடர் சூழ்வித்தனை தகுமோ.

அந்நாளுறு மன்போடலர் மனதோவகல் வுற்ற
இந்நாளது போலேயய லேகுற்றிலே நின்று
யென்னேதுயர் வேனென்னுட லின்பார்தர வருடா
யொன்றிடை யுறுபாவனை யுற்றுயுரு காமே

ஆவாவினி யென்செய்குது மந்தோவென லிவ்வா
றோவாதுரை மொழிவாள்விழி யுதைசிந்திட வுருகித்
தீவாய்விழு தளிர்போலெனி நீரத்தனு வேறுய்க்
காவாதுள மானம்படு கணவன்மிசை விழுவாள்.

முகமெற்றுவ டலேயெற்றுவண் முருகார்கர மலராற்
றகவெற்றுவள் கனிவாயிரு தனமுங்குழை வெய்த
மிகவெற்றுவள் வயிறெற்றுவண் மின்னேப்பொதி முகிலி
னுகுமைக்குழல் பொதியத்தளி ருருவந்துவ ளுற்றுள்.

உடனே அவன் மனைவியாகிய சுலபையென்பவள் மிகுந்ததுய ரங்கொண்டுபுலம்புவாள். என்னுயிருக் கொப்பானவரே ! என்கண் மணிகட் கிணையானவரே ! அரசர்க்கரசரே ! இப்பூவுலகத்தையாள் வதைவிட்டுச் சுவர்க்கவுலகத்தை யாளுநிமித்தம் என்னைக் கைவிட் டீரோ ? தேவாமிர்தத்தினுஞ் சிறந்த என் பிராணநாயகா ! இது உமக்குத் தருமமா? கொழு கொம்பற்ற கொடிபோலவும், குளிர் ந்த சலத்தினின்று நீங்கியகயல்போலவும், தைலமில்லாத தீபம்போ லவும், சூரியவொளியில்லாத நாள் போலவும் என்னை முழுமையுந் துக்கசாகரத்தின் மூழ்கும்படி விடுத்து நீர் தெய்வ மகளிரோடுஞ் சேர்ந்தீரோ, இது நீதிதானோ நானும்மை வேள்வித் தீயின் முன் னர் மாலையிட்டநாள்முதல் இதுகாறும் எனக்கொரு குறைவு வரா மற் காத்துவந்த உமக்கு யான்செய்துவந்த வழிபாடுகளில் இப்போ தென்ன தாழ்ச்சியினைச் செய்தேன், அப்படி யேதேனு முண்

யின் அதனை வாய்விட்டுப் பேசாமல் என்னைப் பலவிடர்கள் சூழும்படி விடுத்தீரே, இஃது உமக்குத் தக்கதா? ஐயையோ! இனியென்ன செய்யப்போகின்றேன். தெய்வமேயென்று தீயில் விழுந்தசெந்தளிர் போல வேற்றுருவாகி விழிகளினின்றும் நீர்த்தாரைகள் பெருகத் தக்கதாய்ப் புலம்பிப் புருடன்மேல் விழுந்துமுகத்தை மோதிக்கொண்டும், தலையை யிடித்துக்கொண்டும், வாயி லறைந்துகொண்டும், தனங்கள் குழையும்படி மார்பிலறைந்துகொண்டும், கைகளை நெரித்துக்கொண்டும், வயிற்றைப் பிசைந்துகொண்டும், இவ்வாறு பதைபதைத்துப் பூமியில் வீழ்ந்து புரண்டு புரண்டு அலறி யலறி, என்புருஷசிகாமணியே! அருவமாயாவது தோற்றிவிசனப்படவேண்டா மென்று ஒராறுதல் சொல்லீரோ. என்னுடைக் கணவரே! என் பிராணவல்லபா வென்று கதறிக்கொண் டிருந்தாள். அவளோடு அமைச்சர் முதலான சகல சனங்களும் மிகுந்த துயரத்துடன் நெடுநேரம் அழுதுக்கொண்டிருக்கையில், புரோகிதன் அவர்களையெல்லாங் கையமர்த்திப் புத்தி கூறுகின்றனன்.

கலங்கவிழ்த்த நாயகன்போற் கையற்று மிகத்தளர்ந்து
புலம்புநரை யெதிர்நோக்கிப் புரோகிதன்மற் றிதுசொன்னான்
புலம்புவதெல் லாநுமக்குப் புணர்சுகத்தைக் குறித்தன்றே
யுலந்தவனுக் குறுசுகத்தை யுன்னலீர் புலம்பொழிமின்.

காவலனுக் கினிச்செய்யுங் காரியத்தைப் புரிமின்கள்
பூவுலகிற் பிறந்தவருட் பொன்றுதா ருளரேயோ
வாவியிறந் தவருடனே யாவியிறந் தவர்யாரே
மேவியவா றுலப்பின் விண்ணவரும் வீடுரே,

செய்தக்க காரியத்தைச் செய்துதனு விறந்தவரை
யுய்தக்க நற்கதியி லுறுத்துநரே யவர்க் காத்தார்
பொய்தக்க பொருட்கிரங்கிப் புலம்புநர்க ளொன்றான்று
மெய்தக்க பொருளறியார் வீணரென விளம்புதலும்.

உங்கள்சுகத்தைக்குறித்து அழுகின்றீர்களேயன்றி, இறந்தவனடையவேண்டிய சுகத்தையாவரும் நினையாதிருக்கின்றீர்களே, ஏன் வீணிற் புலம்புகின்றீர்கள், இனி நமதரசனுக்குச் செய்யவேண்டிய கருமாதிகளைச்செய்து முடியுங்கள், இப்பூமியிற்பிறந்தவர்களில் யாவரிறவா திருந்தவர்கள். அப்படி இறந்தவர்களோடு கூட இறப்பவ ரொருவரு மில்லையே, வாழ்நாள் முடிவானால் வானுடரு

மிறப்பதை யறியீர்களோ ? இறந்தவர்களுக்குச் செய்யத்தக்க கருமங்களைச் செய்து அவர்களை நற்கதியிற் சேர்க்கின்றவர்களே நல்ல அன்பினராவார். அதைநடத்தாமற் பொய்ப்பொருளை யிச்சித்துப் புலம்புகின்றவர்கள் மெய்ப்பொருளை யறியாதவீணர்களே யாகும், விரைவில் காரியத்தை நடத்துவதைப் பாருங்கள், நீங்கள் விசனப்படுவதினால் ஆகத்தக்க தொன்றுமில்லையென்று சொல்லித் தேற்ற, அதனாற் சிறிது துயரத்தையாற்றி யிருந்தார்கள்.

இப்பால் இறந்திருக்கின்ற வரசனுக்குப் புத்திரனில்லாமையால் வுன்னமைச்சர்களாகிய மனோரஞ்சனன் சுமந்து வென்னுமிருவருள், சுமந்தென்பவன் உங்கள் குலமாயிருத்தலினாலே அக்காதலன் சந்ததியிலிருந்த ஒருவனைக் கொண்டுசகல கருமங்களையும் நடப்பித்துத் தகனஞ் செய்தார்கள். பின்னர்ச்சுலபைஸ்நானஞ் செய்து வேப்பிலையருந்தி அரண்மனைக்குட் சென்று, தர்ப்பணாதிகளை முடித்துத் தினக்கிரியைகளைப் பதின்மூன்று நாள் வரையிற்செய்துசகல காரியங்களையு முடித்து பின்பு அமைச்சர், புரோகிதர், சோதிடர், பிராமணர்மற்று மந்நகருத்துள்ள காரியகாரர் முதலியோரை ஒற்றரைவிட்டு வரவழைத்து, நம்மைச் சத்துருக்கள் நெருங்காத வண்ணம் இனி இப்பூமியைத் தாங்கும் புயபல பராக்கிரமத்தையுடைய ஓரரசனை ஏற்படுத்தக் கடவீர்களென் றுக்கியாபித்தாள். அதை யவ்வமைச்சர் முதலாயினோர் கேட்டு ஆலோசித்திருக்கின்ற சமயத்தில் முற்கல முனிவர் அவ்விடத்தில் வந்து அச்சபையிலிருக்கின்றவர்களை நோக்கிப் பட்டத்துயானையை அலங்கரித்து அதன்றுதிக் கரத்திற் பூமாலை தந்து தளையவிழ்த்தனுப்புங்கள் அஃது எவனை மாலையிட்டெடுத்துக்கொண்டுவருகின்றதோ அவனையே இவ்வுலகாள்வதற்கான அரசராக்கிக் கொள்வோமென்று கிருபையோடுந் திருவாய்மலர்ந் தெழுந்தருளினர் அதனைச் செவியுற்ற யாவரும் வியப்படைந்து சுகனமென்கின்ற பட்டத்துயானையை அலங்கரித்து சுலபைக் கெதிராக நடத்திவந்து நிறுத்த, அவள் தன் கணவன் மார்பிற் றரித்திருந்த பொற்றாமரை மாலையை யெடுத்துவந்து அத்யானையின் றுதிக்கரத்திற் றந்து இவ்விராச்சியத்தை யாளத்தக்க ஓரரசனைகொண்டு வருவையென் றுக்கியாபித்தனள். அதனை யம் மதயானை செவியுற்று மலைநடப்பதுபோலத் தான் முன்னதாக நடப்ப, அதன்பின்னர் அமைச்சர் முதலான சகல சனங்களும் முன்னர்த் தவஞ்செய்தற்குரியதானமொன்றைக் காணுமாறு பிரமதே

வனால் விட்ட தருப்பைச் சக்கரத்தின் பின் சென்ற முனிவர் டம் போலத் தம்மையாளற்குரிய வேராரசனைக் காணுமாறு அதிக விரைவோடுந் தொடர்ந்து சென்றார்கள்.

அந்த யானையுந் தங்கள் கணவனேயன்றி மற்றையரெவ்வகைப்பட்ட பேரழகுள்ளோராய் எதிர்வந்திருக்கினும் அவர்கள் மேற் சிறிதேனுங் கண்ணோக்கஞ் செலுத்தாத கற்பின் மாதர்களைப்போல அரசாள்வதை விழைந்து, பற்பலர் தன்னெதிரில் வந்து நிற்கினும் அவர்களை யெல்லாஞ் சர்ப்பத்தையொத்துச் சீறிவிலக்கிக்கொண்டு நடந்தது, அவ்வற்புதத்தை யாவருங்கண்டதிசயித்து இந்த யானை மஹாபராக்கிரமசாலியாகிய மன்னவனையே தேடிக்கொண்டு வருமென்று நிச்சயித்துச் சந்தோஷங்கொண்டு வீதிகடோறுந் தண்ணீர் தெளித்துத் துகளடக்கிப் பரிமளமிருந்த புட்பச்சரங்களாற் றோரண முதலிவைகளைக்கட்டி அலங்கரித்தார்கள். இப்பாலந்த யானையானது கோட்டைவாயிலி னின்று நீங்கி வீதியெல்லாங் கடந்து, பட்டணத்திற்கு வெளியில் சென்று வனத்திற்புகுந்து முற்கல முனிவருடைய ஆசிரமத்திற்குச் சமீபமாகவசித்திருக்கின்ற தக்கனருகிற் சென்று, அவன் கழுத்திற் பொற்றாமரை மாலையைத் தரித்தது.

மூவர் பெருமா னெனையாண்ட முக்கட் பெருமா னரியாதி
தேவர் பெருமா னொருகோட்டுச் செல்வப் பெருமா னடியார்கட்
கியாவை யரிய விருந்தாங்கே யிருந்து தக்க னரசுரிமை
மேவு மெனின்வேல் கரத்தேந்தும் வீமமேலும் விளம்புதுங்கேள்.

வீமராசனே! இத்தக்கன் தானிருந்த விடத்தே யிருந்து இத்தன்மைத்தாகிய அரசுரிமையைப் பெற்றானாயின், மூவர்பெருமானாகியும், என்னையாட்கொண்ட முக்கட்பெருமானாகியும், திருமான் முதலிய தேவர்பெருமானாகியும், ஒற்றைக்கொம்பேந்தியசெல்வப் பெருமானாகியு மிருக்கின்ற விநாயகபெருமானைப் பூசைசெய்கின்ற அடியார்க்குக் கிடைத்தற்கரிய பாக்கியங்க ளெவ்வுலகத்திலிருக்கின்றன. இப்பால் அத்தக்கனுக்கு மாலையிட்டவுடனே தேவர்கள் அந்த ரதுந்துபி முழங்கினார்கள் ஆகாயத்தில் புட்பவருஷம் வருஷித்தது யானையின் பின்னர் வந்த சகல பரிசனங்களும் அவ்வவர் கண்மனத்திருந்த கவலைகளையொழித்து ஆனந்தங்கொண்டார்கள். அமைச்சர் முதலாயினோர் இராசயோக்கியமான ஆடையாபரணாதி

களை யெடுத்தணிந்தார்கள். அந்தணர்களெல்லாம் ஆசீர்வாதஞ் செய்து இருபுறத்திலுமிருந்தார்கள். சேனுபதிகள் தூதர், சாரணர்முதலாயினோர் வீரகண்டாமணியைத் தரித்திருக்கின்ற பாதங்களில் வணங்கி யேவலுக் கெதிர்ப்பார்த்தார்கள். இவ்வித சம்பிரமங்களோடும் தக்கனெழுந்து அங்குத் திருக்கோயில்கொண்டு வீற்றிருக்கின்றகணேசமூர்த்தியை அட்டாங்கமாகச்சேவித்து, அருகிலிருக்கின்ற அந்தணர்கட் கெல்லாம் பற்பல திரவியங்களைத் தானஞ்செய்துதன்னருமைத் தாயை நவரத்தின கசிதமாயுள்ள சொன்னச் சிவிகையிலேற்றித் தான்பட்டத்துயானையின்மேல் உதயகால சூரியன்போல ஆரோகணித்து, அமைச்சர்க ளிருமருங்கிலும் அசுவங்களிலேறிவரவும், தாசிகள் நாட்டியஞ்செய்து நடக்கவும் சமுத்திர கோஷம்போலப் பேரிகை முதலான வாத்தியங்கள் முழங்கவும், இன்னுமிவைமுதலான சகல ஆடம்பரங்களோடு மலையினுச்சியி லுதயமாகின்ற பூரணசந்திரனைப்போல யானைமே லோங்கியிருக்கின்றவெண்குடை நீழலிலிருந்து அதனை மெல்லமெல்ல நடாத்தப் பட்டணத்துள் நுழைந்து பவனிவந்து, அரண்மனையிற் சென்று சொர்ன்னத்திறைற்செய்து சிரோரத்தினங்களா லிழைத்திருக்கின்ற சிங்காதனத்தின்மீதிருந்து, மந்திரத்தலைவர்களை நோக்கிக் குளிர்ந்த சொற்களால் அருகிலழைத்து, என்னையாட் கொண்டருளிய முற்கலமுனிவரைச் சகல சிறப்போடும் இங்ஙனமழைத்துவரக் கடவீர்களென்று கட்டளையிட்டான்.

அவர்கள் அவ்வாறே விரைந்துசென்று தவசிரேஷ்டராகிய முற்கல முனிவரைத் தேரிலேற்றி, ஆடல் பாடல் வாத்திய முதலிய பலமுழக்கங்களுடனே அந்நகரத்துள்ளயாவரும் ஆனந்தங்கொள்ளத்தக்கதாக அரண்மனைக்குள்ளாக யெழுந்தருளச் செய்தார்கள் உடனே தக்கனெதிர்சென்றழைத்து அளவளாவிய அன்போடுஞ்சிறந்த ஆசனத்தின்மீதிருத்தித் தேய்வைபூசி, அக்ஷதை சாத்தி, மந்திரமலரா ரருச்சித்துத் தூபதீப நைவேத்திய சோடசவுபசாரங்களைச்செய்து, நவரத்தினங்களிழைத்த பொற்றட்டில் ஆடையாபரணங்களை நிறைத்து கனிவர்க்கங்களைப் பரப்பி, முனிபுங்கவர்க் கெதிரில் வைத்து அஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, பலபரிசனங்கள் தன்னைப் புடைசூழ்ந்திருக்க நின்று முற்கலமுனிவரைப்பார்த்து, அருட்கடலே! தேவரீருடைய கருணைகடாட்சத்தினுல் அடியேன் இராஜரீகத்தினைப்பெற்றேன், சுவாமிகளுடைய அத்தத்தை அடியேன் முடிமீ

துவைத்து ஆசீர்வதிக்க வேண்டுமென்று மிகுந்த அன்போடு இரு கரங்களையுங் கூப்பிச் சிரங்கவிழ்த்து நின்றனன், அதற்குக் கிருபாகரமூர்த்தியாகிய முற்கலமுனிவர்சந்தோஷித்து, அவ்வாறேதமது கரங்களை அவன்முடிமீதுவைத்து, உனது நற்குணத்திற்கு யாவரும் பகையாக மாட்டார்களென்று திருவாய்மலர்ந்து சகல திரவியங்களும்உன்வசத்தாகி,நீ அளவற்ற சந்தோஷத்தோடுவாழ்ந்திருக்கக்கடவையென்று ஆசீர்வதித்து ஓராதனத்தி லிருக்கச்செய்து மிக்க பேருவகையோடும் இதனைப்போதிப்பாராயினர். அன்பனே! இக்கடல்சூழ்ந்த உலகத்துள்ள மன்னுயிர்களுக்குணர்த்தியிருக்கின்ற வருணாச்சிர தருமங்கள் பலவாக விருக்கின்றன. அவைகளுள் உனக்கு முக்கியமாக உணர்த்த வேண்டுவனவாகிய அரசநீதிகளைச் சொல்வோங் கேட்பாயாக, அருணோதயமாக ஐந்துநாழிகைக்குமுதலாகத் துயிலொழித்து, அமளியைவிட்டு நீங்கி, மற்றோரிடத்திலிருந்து சரீரத்தைச் சுத்திசெய்து, கொடிதாகிய வல்வினைக்கூட்டங்களைப் பொடி படுத்தவல்ல அழகிய திருவெண்ணீறு தரிக்கக்கடவை.

எண்ணிலாகம மறைக்கெலா முடிவெனி விருந்திடு மிறைதன்னைக்
கண்ணனுதிவின் னவர்களா யிருந்திடு கணேசனை மனமாதி
நண்ணொணாதநா யகனைநாற் பொருளை நண்ணுநர்க் கருள்வானை
யண்ண லாகிய வநாதியை யனந்தரு பியையருட் கடலானை.

சகல லோகமு மளித்திடுங் காரணமான தத்துவன் றன்னை
யகலுறுதவிக் கிணங்களே யாயினு மடுத்தவர்க் கறுப்பானைப்
புகல்விநாயகக் கடவுளைப் புலரியின் வணங்குகின்றே னென்று
மிகல்செய் காதலின் வழுத்திமற் றமரரை வேறுவே றுறநோக்கி.

உரக மாலையான் சந்திர சேகர னுழுவையி னுரிசூழ்ந்த
பரமன் பேரழ கினன்பெருங் கருணையன் பண்ணவ ரனைவோர்க்கும்
வரமெலாங்கொடுத் தருள்பவன் பார்ப்பதி மணாளனல் வழிவாராப்
புரநி லாவகை யழித்தபுண் ணியன்றனைப் புலரியிற்றொழுகின்றேன்

பெற்ற முத்தியும் பரப்புபெண் ணரசியைப் பிறழுமுக் கண்ணோனைத்
தத்துவத்தினுக் காதிகா ரணியைத் தத்துவங் கடந்தானைச்
சித்தர் தேவர்க ளெதிகொளு மிறைவியைத் திகழ்சமு சாரத்தின்
புத்தி நீங்குமா றருளும்பார்ப் பதிதனைப் புலரியிற் றொழுகின்றேன்

தொக்கபாவத்தைச் சத்துருக் குழாத்தினைத் தொடர்ந்துசென் றிறுப்பானைத்
தக்க பூமகன் மணாளனைப் பாற்கடற் றனித்துயி லமர்வானை .

மிக்க வீரனுய் வேதிய ரிடர்தப வெறுவே றுருக்கொண்டு
புக்க மாயனை யிந்திர னிளவலைப் புலரியிற் றொழுகின்றேன்

பெருமை தங்குமெண் ணத்தினை யுடையவன் பேணரி வொடுகன்ம
மருவு தற்குறு காரண மானவன் மறையுரு வினனித்த
மிருளுந் தானவர் மாயையுந் துரப்பவ னியாவருந் தொழுதேத்தும்
பொருவி லாதபே ரொளிவளர் பரிதியைப் புலரியிற் றொழுகின்றேன்

முறையினிவ்வகை வழுத்தியேயேனைய முடிகொள்வா னவர்தம்மைக்
குறையி லாமுனி வோர்களை யன்பினுற் கருத்துறத் தொழுதேத்தி
யறையு நாட்கடன் விதிப்படி முடித்தபி னறங்களின் வழுவாமே
நிறையும் வேதிய ரமைச்சரா தியரொடு நிலம்புரப் பதுமாண்பால்.

அதன் பின்னர்க் குருசுவாமியையும், வழிபடுகடவுளையும் மன திற்றியானித்துப் பூமிதேவியைப்பார்த்து, என்தாயே! யானுலாவுகின்றபோதெல்லாம உனது திருமேனியி லெனது பாதம் படுகின்ற பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமென்று இரந்து துதிசெய்து, பின்னர், விநாயக மூர்த்தியைத் தியானித்து அளவற்ற வேதாகமங்கட்கெல்லா முடிவா யிருக்கின்ற கணேசனே! மனோவாக்குக் காயங்கட் கெட்டாதவனே! உனது திருவடித் தாமரைகட்கு உதயகால வந்தனஞ்செய்கின்றே னென்றும், அரவாபரணனே! சந்திரசேகரனே! திரிபுர தகனனே! உமாபரமேஸ்வரிமணாளனே! உனது பாதாம்புயங்கட்கு உதயகால வந்தனஞ் செய்கின்றேனென்றும், திரிநேத்திரதாரியே சகல தத்துவங்கட்கும் அதிகாரணியே! பந்த முத்தியாகிய விரண்டினையும் விளங்க வைத்திருக்கின்ற பார்வதி தேவியே! உனது சாரர விந்தங்கட்கு உதயகால வந்தனஞ் செய்கின்றேனென்றும், இலக்குமி மணாளனே! திருப்பாற் கடலின்கண் அறிதுயில் செய்பவனே! தேவேந்திரனுக்குச் சகோதரனாகிய உபேந்திரனே! உனது சரோருகத் தாள்களுக்கு உதயகால வந்தனஞ் செய்கின்றே னெனறும், சகல கருமங்களையும் வழுவின்றி முடிப்பதற்குக் காரணமாகி யிருக்கின்றவனே! உலகவிருளினையுந் தானவர்செய்கின்ற மாயையினையும் நாசஞ்செய்ய வல்லவனே! யாவருங் கண்டு தொழும்படியான சூரிய பகவானே! உனது உபயபாத மலர்களுக்கு உதயகால வந்தனஞ் செய்கின்றேனென்றும், இவ்வாறு கிரமமாக மற்றைத் தேவர்களையும் முனிவர்களையும மிகுந்த அன்போடு துதித்துப் பின்னர் நாடோறுஞ் செய்துவருகின்ற நித்திய கருமங்களை விதிப்படி முடித்து, அமைச்சர், வேதியர் முதலானவர்களோடு

பிருந்து அரசாட்சி செய்வதே மாட்சிமையாகும் இன்னும் நீயறிந்து கொள் வேண்டியவற்றைப் போதிக்கின்றோம் மைந்தனே! இந்திரன் முதலிய இறையவர் பதங்களும் அந்தமில் இன்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து எய்துதற்குரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந் தோரால் எடுக்கப்பட்ட பொருள் நான்கு அவை, அறம் பொருள்-இன்பம்-வீடு என்பனவாம்.

அவற்றுள் ஒருகாலத்து ஒருபொருளால் ஐம்புல னுகர்தற் சிறப்புடைத்தாகிய இன்பத்தினையும், சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய வீட்டினையுந் தருவது அறமும் பொருளுமாகும். அவற்றுள் அறத்துப்பால் மநுமுதலிய நூல்களில் கடவுள்வாழ்த்து வான்சிறப்பு-நீத்தார்பெருமை-அறன்வலி யுறுத்தல் இல்வாழ்க்கை-வாழ்க்கைத் துணைநலம்- புதல்வரைப்பெறுதல், அன்புடைமை-விருந்தோம்பல்-செய்ந் நன்றியறிதல்-நடுவுநிலைமை-அடக்கமுடைமை-ஒழுக்கமுடைமை-பிறனில்விழையாமை, பொறையுடைமை- அழுக் காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில்சொல்லாமை தீவினை யச்சம் ஒப்புரவறிதல்-ஈகை-புகழ் என்னும் இருபத்துமூன்று வகுப் பினவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது பொருட்பால் இறைமாட்சி-கல்வி-கல்லாமைகேள்வி அறவுடைமை-குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை தெரிந்து செயல்வகை வலியறி தல்-காலமறிதல் இடனறிதல்-தெரிந்து தெளிதல் தெரிந்து வினையா டல்-சுற்றந்தழால்-பொச்சாவாமை செங்கோன்மை - கொடுங்கோன் மை-மடியின்மை- ஆள்வினையுடைமை- இடுக்கணழியாமை-அமைச்சு-சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை தூதுமன்னரைச் சேர்ந்தொழுதல் - குறிப்பறிதல் - அவையறிதல்-அவையஞ்சாமை-நாடு அரண்பொருள் செயல்வகை - படைமாட்சி படைச்செருக்கு நட்பு-நட்பாராய்தல் பழமை-தீநட்பு கூடாநட்பு-பேதமை-புல்லறிவாண்மை-இகல், பகைமாட்சி பகைத்திறந்தெரிதல் உட்பகை பெரியாரைப் பிழையாமை-பெண்வழிச்சேறல் - வரைவின் மகளிர்-கள்ளுண்ணாமை-சூது-மருந்து குடிமை-மானம் பெருமை-சான் றாண்மை - பண்புடைமை - நன்றியில்செல்வம் - நாணுடைமை - குடி-செயல்வகை - உழவு - நல்குரவு - இரவு - இரவச்சம் - கயமை என் னும் எழுபது வகுப்பினவாகச் சொல்லப் பட்டிருக்கின்றது.

இவற்றுள், கடவுள் வாழ்த்து என்பது "ஒருப்படு மறத்தினாலே யொண்பொரு ளின்பஞ் செமபொற்-பருப்பதம் கடல்போல் வந்து



பயப்படு மதனைக்கேண்மோ-விருப்பொடு வெறுப்பிலாத மிக்கவெண் குணத்தோ டொன்று-மிருப்பவன்யாவனன்னோ னிணையடிவணங்கல் வேண்டும்'' என்றருளியபடி, மூவர்க்கு முதலாயுள்ள மூர்த்தியை வாழ்த்துதல் அஃதாவது, விருப்பு வெறுப்பு அகன்று, தன் வயத் தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை என்னும் எண் குணத்தோடு தனக் கொப்புயர்வற் றிருக்கின்ற கடவுள் யாவரோ அதன் திருவடிகளை வணங்குவதாம். இத்தலையாய வறத்தினால் மற் றைப் பொருளும் இன்பமும் மலைபோலவும், கடல்போலவும் பெருகி வளரும்.

வான் சிறப்பு என்பது ''அறமுதற் பொருளுலகமனைத்தையா - னிறுவுதற் கேதுவாய் நிகழு மாமழை - வறுமை யெய்தாவகை வயங்கு வேள்வியை யுறுதரு மங்களை யுஞற்றல வேண்டுமால்'' என் றருளியபடி, அக்கடவுளது ஆணையால் உலகமும் அதற் குறுதியா கிய அறம் பொரு ளின்பங்களும் நடத்தற் கேதுவாகிய மழையி னது சிறப்பு அஃதாவது, வானம் வழங்காதாயின் அறநெறியால் வந்த பொருள்களைத் தக்கார்க்கு உவகையோடு தானங் கொடுத்த லாகிய இல்லறமும் மனம் பொறிவழிப் போகாது நிற்றற்பொருட் டுத் தவஞ் செய்தலாகிய துறவறமுங் கெடுமாதலால், அவ்வானம்வறு மையெய்தாத வண்ணம் வேள்விகளையுந் தருமங்களையுஞ் செய்து வரல் வேண்டும்.

நீத்தார் பெருமை என்பது ''விழுப்பொருளனைத்தையும் விளங் கத்தெள்ளுபு- மூழுப்பகைவும் பொறியையு முனிந்து நீத்தவர்-வழுப் படாமறையவர் மற்றைக் கல்வியோர் - குழுப் புறத்தாதரங் கூர்தல் வேண்டுமால்—நீத்தவராகியோர் நெருப் புயிர்த்திடிற் - காத்திடுங் கடவுளுங் கலங்கு மாதலா - லேத்துவதே கடனென்று மைந்தனே - யார்த்தர்கள் பொறுப்பரென றவமதித்திடேல்.—குரவரைப் பெரிய ரைக் கூறு மாகம - விரவுறு மறைகளைமேதகும்படி - பரவுதலலதவர் பாங்கர் நிந்தனை - காவுறவுளத்தினுங்கருதொணாததே'' என்றருளிய படி, முற்றத்துறந்த முனிவரது பெருமை அஃதாவது, அறமாதி நான்குபொருள்களையுந் தெரிந்து பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்த முனிவர்கள் வேதியர் புலமையோர் என்னும் இக் கூட்டத்தினரி டத்து அன்புகூர்ந்திருத்தல் வேண்டும். இவர்கள் ஒருகாற்கோபித்து

தாழ்ப்பொறி யுதிர்ப்பாராயின் காத்தருளுகின்ற கடவுளுங் கலக்க மெய்தும். ஆதலால், அப்பெரியோர்களை ஏத்துவதேகடன். அவர்கள் பொறுப்பரென்று அவமதிக்கத்தகாது. குரவர்களையும், பெரியோர்களையு, வேதாகமங்களையும் மேலாகவெண்ணிப் பரவத்தக்கதேயன்றி ஒளிதேனும் ஓர் நிந்தனையைக் கருதலாகாது.

அறன் வலியுறுத்தல் என்பது "தேங்குமின் போகமுஞ் சிறந்த முத்தியு-மீங்குறு மாக்கமு மினிதுநல்கலா - லோங்கிய வறத்தினையுள முன் மூன்றினும் - பாங்குற நித்தலும் பரிந்து செய்தியால்.—வழுக்கறு மறத்தினை மற்றுச்செய்து மென் - றொழுக்கிடா தொல்லுறும் வகையின் லச்சொல்லு-மழுக்கெனு முளத்தழுக்காற் வாமுத - விழுக்கொடு வெகுளியு மின்றிற செய்கவே—அன்புறு மறத்தினு லடுக்கும் பின்பதே-யின்மைமனத் தக்கதா லேனையின்பெலாந் துன்பமும் பழியையுந் தோற்று மாதலால்-வனபுறுமறத்தினை மறப்பிற்கேடுறும்." என்றருளியபடி, அம்மேலோரால் உணர்த்தப்பட்ட உறுதிப்பொருள் நான்கனுள் அறமானது பொருள் இன்பமவீடு என்னு மூன்றனையுந் தருவதற் கேதுவாதலால் அவனை வலியுறுத்திக் கூறுதல். அஃதாவது, செல்வப்பொருளும் சுவர்க்கலோக வின்பமும் முத்திவீடும் ஆகிய மூன்றினையுந் தருவதான அதத்தினை மனம வாக்குக் காயமெனகிற முக்கரணத்தானும ஒன்றுபட்டு நாடோறும் பரிந்து நடாத்திவரவேண்டும். அதனை நேர்ந்தபோது செய்யாது பின்றுற் செய்து மெனக் கருதி நழுவ விடலாகாது. அவ்வாறு விடாமல் உனக்கியன்றமட்டுஞ் செய்து வருகின்ற காலத்திலும், பிறராக்கம் பொறாமையும் புலன்கள்மேற் செல்லுகின்ற அவாவும், அவையேதுவாகப் பிறர்பால் வரும வெகுளியும அது பற்றிவருங் கடுஞ்சொல்லும ஆகிய நான்கனையுங்கடிந்து செய்தல் வேண்டும். அறத்தாலடுக்கும இன்பமே இன்பமன்றி, மற்றை யின்பங்களெல்லாந் துன்பத்தினையும பழியையுந் தோற்றுவிக்கும். அதனை மறந்தோர்க்கு உடனே எல்லாக் கேடும வந்து உற்பவிக்கும்.

இல் வாழ்க்கை என்பது "பிரமசாரி வனத்து றைவோன் பொறுநு துறவி தென்புலத்தார் - குரவர் தேவர் விருந்தொக்கல் கோக்கனை மறையோ ரிறந்தோர்க-ளிரவலாள ருறுப்பிலர்களெய்தும் பிணியாளர்கள் முதியோர்-விரவு பாலர் சிசுதமது மிசையாரிவரையோம் புகவோ—வருவாய்க் கியையவாழ்தலுறு மறுவில் கற்பின் மனையாள் போறு-பொருள்யா வுளவா மதுவன்றிப் புகழும் பயனு மிகவுள

டாங் - கருதாதெதிரே யிமிலேற்றுச்சாமர்கடையு மூறுமதனு-லொரு வரதவளோ வெப்புறவே யுற்று வாழ்த லறனுகும்,'' என்றருளிய படி, இல் வாழ்க்கை இல்லறத்தோடுங் கூடிவாழ்தல் அஃதாவது, பிரமசாரி - வானப்பிரத்தன் - சந்நியாசி * பிதிரர் -- குரவர் - தேவர் - விருபது - ஒக்கல் - பெரியோர் - மறையோர் - இறந்தோர் - ஏற்போர் - உறுப்பில்லார் - பிணியாளர் - விருத்தர் - பாலர் - சிசுகள் - மூத்தோர் என்று மிவர்களை யோம்பி இல்லற நெறியை வழுவாமற் செய்வதாம்.

வாழ்க்கைத்துணை நலம் என்பது, அவ் வில்வாழ்க்கைக்குத் துணையாகிய இல்லாளது நன்மை அஃதாவது, ஒருவன் ! எய்தும் பொருள்களுள் மனையறத்திற்குத்தக்க நற்குண நற்செய்கைகளை † உடையவளாயும், தன்னைக்கொண்டவனது வருவாய்க்குத்தக்கவாழ்க்கையை யுடையவளாயு மிருக்கின்ற இல்லாளின்மேம்பட்ட பொருள்கள் யாவையுள. அவளால் மேலான பிரயோசனமும் புகழும் உண்டாவதன்றிப் பகைவரெதிரில் இடபத்தைப்போல மனக்கோட்டமின்றி நடக்கத்தக்க பெருமித நடையும் உண்டாகும் ஆதலால், அத்தன்மைத்தாகிய மனைவியோடு உவப்புற்று வாழ்வதாம்.

புதல்வரைப் பெறுதல் எனபது “எழுமைப் பிறப்புந் தீவினை வஃதெய்தாச் சிறப்புந் தென்புலத்தார் - முழுது முலக்கும் கடன் சால முடிக்கு மாண்பும் பெறுதலினுற் பழுதி றவங்கண் மிகப்புரிந் தும் பயந்து மைந்தர் தமையவர்க்குக் - குழூஉ மவையின் முந்திருப் வறிவுகொளுத்தல் வேண்டுமால்.'' என றருளியபடி, அந்தணர் முதலிய மூவராலும் இயல்பாக இறுக்கப்படுங் கடன் மூன்றனுள் முனிவர் கடனைக்கேள்வியானும், தேவர்கடனை வேள்வியானும், தென்புலத்தார் கடனைப்புதல்வரைப் பெறுதலானு ந் அல்லது இறுக்கப் படாமையின், அககடன் இறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல். அஃதாவது, புதல்வரானவர் பிறப்பேழின் கண்ணும் பெற்றோர்க்குத் தீவினைவளராது தேய்ததற்குக் காரணமாகிய நல்

* பிதிரராவார் படைப்புக்காலத்து அ'ஞற் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதியார். அவர்க்கிடந் தென்றிசையாகலின் தென்புலத்தா ரென்றுங் கூறுப. † நற்குணங்களாவன துறந்தார்ப் பேணலும், விருந்தயர்தலும் வறியார் மாட்டருளுடைமையு முதலாயின. நற்செய்கைகளாவன வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் அறிந்து கடைப்பிடித்தலும், அட்டிற் றொழில் வன்மையும், ஒப்புரவு செய்தலு முதலாயின.



வினைகளையுந் தென்புலத்தார்க் குரிய கடன்களைச் சாலமுடிக்குமாண் பினையும் உடையோ ராதலால் குற்றமற்ற தவங்களைச் செய்தேனும் புதல்வரைப பெறவேண்டும். பின்னர், அப் புதல்வரைப் பெற்றோர் அவையத்தின்கண் அவரினுமிக்கிருக்குமாறு கல்வியுடைய ராக்கல் வேண்டும்.

அன்புடைமை என்பது "இடனும்பொருளு மேவலரு மிருந் தும் பயனென்னேவந்த - வுடலின் பயனாகிய வன்மையுறாதவிடத்து நொதுமலரும் - படர்செய் பகையு முறவாக்கும் பற்று மளிக்குமனை மைந்தர் - தொடர்பின் வளர்க்குமனபதனற் சோர்ந்து மன்பின் வழு வற்க" என்றருளியபடி. இல்லறம் இனிது நடாத்தலும் பிறவுயிர் கண்மேல் அருள்பிறத்தலுமாம். அஃதாவது, யாக்கையகத்தின்க ணின்று இல்லறத்திற் குறுப்பாகிய அன்புடைய ரல்லாதார்க்குப் புறத்தின்கண் இடமும் பொருளும் ஏவல்செய்வாருமான உறுப் புக்களெல்லாம் அவவறஞ்செய்வதற்கண் என்ன உதவியைச் செய் யும். ஒருவன் சோர்வுற்ற காலத்தும் அவ் வன்பின் வழுவாதிருத் தல் வேண்டும் அவ்வா றிருந்ததினால் நொதுமலுங் பகையும் உற வாகும். அளவிறந்த சிறப்பெய்தும். மேற்கூறிய வாழ்க்கைத்துணை யையும் மைந்தரையுந் தொடர்பின் வளாத்து வரும்.

விருந்தோம்பல் என்பது "வந்த விருந்துமலராத வதனநோக்கு. முன்குழையு - மந்தவனடைவா லகத் தன்மை யலர்ந்த முகத்தில் வெளிப்படுத்திச் - சநத மணிவாயினிநதோன்றச் சற்றும்வஞ்சங் கல வாமே யுந்துஞ் சுவையி மொழியென்று முரைத்தல்வேண்டும் பயன் வேண்டின்." என்றருளியபடி, இருவகை * விருநதினரையும் பேணி அவர்க்குபசாரஞ் செய்தல் அஃதாவது, பயன்வேண்டினோர் விருந்தி னரைச் சேய்மையிற்கண்டுழி, இன்முகமும் அவர் பற்றிநண்ணியவழி இன்சொல்லும், பின்னர் உடன்பட்டவழி வஞ்சங்கலவாத நன்றாற் றலும், இன்றி யமையாத இம் மூன்றனுள், முதற்கண் இன்முகம் வேண்டும் அஃது இல்லாவிடின் மோந்துழியலலது வாடாத அனி ச்சம் பூவினும்விருந்தினா மெலியராதலால் அவர் சேய்மைக் கண்ணே வாடி நீங்குவார்.

செய்ந்நன்றி யறிதல் என்பது "பயன்கா ரணத்தைக் குறியா மற் பறிந்து காலத்தாற்செய்த - நயஞ்சேர்நன்றி திறிதேனு நாடின்

* விருந்தினர் என்பது புதியராய்வந்தவர். அவர் பண்டறிவுண்மையிற் குறித்துவந்தாரும் அஃதின்மையிற்குறியாது வந்தவரும் என இருவகையர்.

தற்கோ ரளவில்லைப் - பயன்காரணந்தைக் குறித்தினையும் பதத்திற் புரிந்த நன்றியையும் - வியன்பூதலத்திற் பெரிதாக விரும்பி மதித்தல் வேண்டுமால்.—நன்றிபுரிந்தோர் மறவொருநகானவைகள் புரிந்தாராயிடினு - மொன்று முதலியே மதிக்கிட் டோம்பா நவையை மறந்தவரை - யென்று மறவா திருந்திடுக விகப்பிற் கருவான்மறையோரைக் - கொன்று திரிவோர் பிழைபூசிறுசக்குறைமொனவே பிழைபெருகும்'' என்றருளியபடி, தனக்குப் பிறர்செய்த நன்றியை மறவாமை அஃதாவது, இவர்க்கு இது செய்பின் இன்னது பயக்குமென்று ஆராய்தலில்லாமல் ஒருவனுக்கு இறுதிவந்த எல்லேக்கண் செய்த உபகாரந் தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தைநோக்க அதற்கோரளவில்லை. அல்லது பயனாலேனும் காரணத்தாலேனும் வருந்தும் மகச்திாசெய்த உதவியாயின், அதனை உலகத்திலும் பெரிதாகவிருப்பி மதிக்சல் ஏற்போராதுகடமையாம், மேலும் தமக்கு முன்னொரு நன்மை செய்தவர் பின் கொன்றாலொத்த இன்னாதவற்றைச செய்தாராயினும், அவர்முன் செய்த நன்மையை மதித்துப் பின்செய்த தீமையைச் செய்தபொழுதே மறத்தல்வேண்டு இல்லையாயின், அந்தணரைக் கொன்றபிழையினும் மேலானபிழை மலைபோலப் பெருகும்.

நடுவு நிலைமை என்பது "ஆக்க மொடுமைந் தரையளிக்கு மவற்றை மருமான்வழிக்குநில - யாக்குமனைய நடுநிலையை யடுத்தோர் முதன்மூவரினொப்ப - ஞெக்குமதுசெய் யாதிாபிறுவரித்துக் கருவினமைத்தபயன்-போக்கிபிடையே பயன்வேறு பொருநகா பொருந்தும் பெருமபிழையே." என்றருளியபடி, அறத்தின் வழுவாது ஒப்பநிற்கு நிலைமை, அஃதாவது, பகை நொதுமல நண்பு என்னுமிம் மூன்று பகுதியினுஞ் சமனாக நின்று நோக்கு நிலைமை யுடையார்க்குச் செல்வப்பேறும் மக்கட்பேறும் உண்டாகும். இவ்விரண்டுபேறும் அம்மக்கள் வழியுள்ளார்க்கும் அழிவின்றி நிலைத்திருக்கும். அந்நிலைமையினை யடையாராயின், அஃது அவர்க்குத் தீவினையாற் கேடும், நல்வினையாற் பெருக்கமுமாக முன்னர் அமைத்திருக்கின்ற பயன்களைப் போக்கி இடையில் வேறுவேறான பெரும் பிழைகள் வந்து பொருந்தும்.

அடக்க முடைமை என்பது "இல்லினிருந்தே யைம்பொறியுமெல்ல துகரும் காலத்துஞ் - செல்லும் வழிமெய் மொழிமனைதைச் செல்லா தடக்கி னெழுபிறப்பு - நல்லபயனே யாமேனைநல்ல வினை

தந்தை தானே மகனுகிச் சாரு மென்னு முறையானு
மெந்தை பெருமா னருள்செய்த வியல்பி னுனுங் கிருச்சமதன்
மைந்தன் றனக்குக் கணுனுந்து வாவென் மனுவை யுபதேசித் [ன்.
தந்தண்மறை நால்விதியானையனுட்டிப்பனைத்தும் புகன்றெழுத்தா

மைந்தனே! ஆதிமத்தியாந்தரகிதமாகியும், அகண்டாகாரவஸ்துவாயுமிருந்து எங்குந்தானாக விளங்குகின்ற சோதி சொரூபராகிய விநாயக மூர்த்தியினுடைய மந்திரத்தை யுனக்குபதேசிக்கின்றேம் அந்தப் புராதன மந்திரத்தைச் செபித்து வருவையாயின் உனக்குச் சகல சித்திகளுங் கைகூடுமென்றுசொல்லி, கணுனுந்துவாவென்னு மந்திரத்தை ஆகம விதிப்படி உபதேசித்து அதை யநுட்டிக்கு முறைமையையுஞ் சொன்னூர்.

இப்பால் பலியெனபவன் பேருவகையில்மூழ்கினவனுய்க் கிருச்சமத முனிவருடைய திருவடிகளைப் பணிந்து துதிசெய்து, அவ்வனத்திற்றனே மற்றெருபுறத்திலிருந்து அவரைப்போலவே தானுமொருகாலைநிலத்திலூன்றிப் பஞ்சேந்திரியங்களையுமொருவழிப்படுத்திச் சுழுமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி *என்னுந் தசநாடிகட்கும் உற்பத்திஸ்தானமாகிய மூலாதாரத்தினின்றுந் தேகமத்தியமாகிய இதய கமலத்தில் பிருதிவி தத்துவமுதல் நாததத்துவ மீறுக ஓராதனங்கற்பித்து, அவ்வாதனத்தில் சோதிமயமான கணேச சொரூபத்தைப் பிரதிட்டைசெய்து, அந்தச சொரூபத்தில் விநாயக மூர்த்தியை ஆவாகனஞ்செய்து, அம்மூர்த்திக்கு அருளென்னுந் திருமஞ்சனத்தையாட்டி, சாந்தமென்னுஞ் சந்தனத்தைச்சாத்தி, ஞானம், மோனம் தவம்-தருமம, மனவு, ககம-கல்வி, கேளவி எனவென்ற அட்டபுட்பங்களைக் கொண்டருச்சித்து, அன்னமயம் பிராணமயம் மனேமயம் விஞ்ஞானமயம் † ஆனந்தமயம் என்கின்ற பஞ்சவிதான்னங்

* அவையாவன சுழுமுனை-ஆதாரமாறினு மூடுருவி நிற்பது இடைபிங்கலை இரண்டுங் கத்திரிக் கால்போற் பின்னி நிற்பன. காந்தாரி - நாபியிற்றேன்றிச் சத்த மேழுக்கு மேழு நாடியாய்க் கண்டத்துறுவது. அத்தி சிங்குவை - இரண்டும் பத்துநாடியுற்றுக் கண்ணினிற்பன அலம்பனை புருடன்-இரண்டுஞ் செவியினூற்றிருபது நரம்புற்றிருப்பன. குரு-நாபியுறைந்து குய்யம்பற்றி நிற்பது சங்கினி உபத்தத்தைப் பற்றியிருப்பது.

† அவையாவன:—உடல் அன்னமயம். கருமேந்திரியமும் பிராணனும் பிராணமயம் கருமேந்திரியமும் மனமும் மனேமயம். ஞானேந்திரியமும், புத்தியும அஞ்ஞானமயம். அவித்தை யானந்தமயம். இவையே பஞ்சகோசம்.

யுள்ள தன்மையை யுடையாளைக் காதலித் தொழுகுகின்ற அறிவி னர்களும், வரைவின் மகளிரோடும் இழிகுல மகளிரோடுங் கூடி இன்பத்தினை நுகர்வாரும், அறமும் பொருளும் இழத்தலேயன்றி அச்சத்தாற்றுங் கருதிய இன்பத்தையும் இழக்கின்றாராதலால், பிறனில்லாளைக் காதலிக்குந் தீங்கினைக் கடைவிடல்வேண்டும். இல் லாளிடின் பகை-பாவம்-அச்சம்-குடிப்பழி-என்னு நான்கு குற்றமும் ஒருக்காலு நீங்காவாம். எல்லாப் பெருமைகளுமழியும். அத்தீமை யினை யொழிந்தோர்கள் அறம் பொருள் இன்பம் என்னு மூன்றி னோடுங் கூடிவாழ்வார். ஓர் விளையாட்டால் அதனைக் கனவின்கண் கருதுவாராயினும் எல்லாத் தீங்கும் வந்தெய்தும்.

பொறை யுடைமை உன்பது "வெறுப்ப வொருவன் காரணத் தான் மிக்க மடத்தாற் புரிபிழையைப் - பொறுப்பினதுவே பேரற மாம்புகழு நிறையு மிகவளருங் - கருப்பொன் றறியா வறிவினர்கள் கருத்தின் மகிழ்ச்சி யுளவாகு, மொறுப்பின் வருவ தொன்றில்லை யதனாற்பொறுமை யுயிர்த்துணையாம்." என்றருளியபடி, ஒருவன் தமக்கு மிகை செய்யின் அதனைத் தாமும் அவன்கட் செய்யாது பொறுத்தலை யுடையராதல். அஃதாவது, ஒருவன் காரணத்தாலே னும் மடைமையாலேனுந் தாம் வெறுக்கும்படியாகச் செய்த பிழை யைப் பொறுப்பதே பேறமாம் தமக்குத் தீங்கு செய்தவனை யொறுத்தார்க்கு உண்டாவது கருதியது முடிந்தே மெனத்தருக்கி யிருக்கும் பொய்யின்பமாகிய அவ்வொரு நாளை யின்பமே யன்றி, அதனைப் பொறுத்தார்க்கு உலக மழியுமளவும் உண்டாகும் புகழு நிறைவும் அவருக்கில்லை அறிவுடையாரும் மகிழ்ச்சிகொண்டு பொ றையுடையாரைப் பொன்போலப் பொதிந்துகொள்வர். மிகைசெய் தவனைப் பகைசெய்வதால் வருவ தொன்றுமில்லை. ஆதலால், பொறு மையை உயிர்த்துணையாக எண்ணல் வேண்டும்.

* அழுக்காறுமை என்பது "ஒழுக்கா றொழிக்கும் பொருள னைத்து மொழிசெகு மிம்மை மறுமையினுங்-வழுக்காறனைத்து முறு விக்கு மருங்குளார்க்குங் கேடுறக்கு - மிருக்காருடைய வெரிநிரயத் தேய்க்கு மிதனாலே மகண்டா - வழுக்காறுய பெரும்பகையை யம ரிடத்தும் புரியறக." என்றருளியபடி, பொறாமை செய்யாமை,

* அழுக்காறு என்ப தொரு சொல் அச்சொல் பின்னழுக்காற்றைச் செய்யாமை யென்னும் பொருள்பட எதிர்மறை யாகார இடைநிலையும், மக ரவைகார விகுதிகளும் பெற்று அழுக்காறாமை யென நின்றது.

அஃதாவது, ஒருவன் தனது நெஞ்சத்தின்கண் அழுக்கா றென்னும் பெரும்பிழையை யுடையானாயின், அது அவனுக்குரியவொழுக்க நெறிகளைக் கெடுக்கும். எல்லாப் பொருள்களையும் ஒழிக்கும். இம்மைக்கட் செல்வத்தைக் கெடுப்பதன்றி அவன் சுற்றத்தினர்க்கும் உண்ணப்படுவன வின்றிக் கெடுத்து, மறுமைக்கண் நரகத்திற் செலுத்திவிடும். ஆதலால், அவ்வழுக்காறென்னும் பெரும் பகையைத் தேவர்களிடத்துஞ் செலுத்தாதிருத்தல் வேண்டும்.

வெஃகாமை என்பது, "படுமுன் பொருட்குப் புதுவெள்ளம் பழைய நீரை யுடைப்பதுபோற் - கெடுதி பயக்குங் குடிகெடுக்குங் கெடாத பெருந்துன்பமும் விளைக்கும் - வடுமிக் கியன்ற பழியென்றும் வளர்க்கு மதனுன் மறுமையினு-நடுவு நிலையிற் றிரிந்தொருவர் நன்பொன் கவரக் கருத்தெண்ணேல்." என்றருளியபடி, பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை, அஃதாவது, பிறர்க்குரியன கோடல் நமக்கு அறன் அன்றென்று நடுவுநிலைமையின்றி அவர் நன்பொருளை ஒருவன் கவரக் கருக்துறுவனாயின், அக்கருத்து அப்பொழுதே அவனுக்குப் பலகுற்றங்களைக் கொடுத்து அவன் குடியையுங் கெடச்செய்யும். என்றும் அழியாத பெருந் துன்பத்தினை விளைக்கும். வசையுற்ற பழிசொற்களையும் வளர்க்கும் பழமையாயுள்ள நீரைப் புதிய வெள்ளங் கொண்டுபோவதுபோல அவனுக்கு முன்னுள்ள பொருள்களும் அழிந்துபோம்.

புறங் கூறாமை என்பது "கேளிர் பிரிவர் நட்பினராய்க் கெழுமுவாரு மிலராவர்-மூளும் வடுச்சொ னோராக மொழிவ ரெவருமாதலினு, ஞளுமறத்தைக் கொன்றனந்த நவைகள் செயினு மெதிர்நின்று-மாள வுரைசெய்யினுஞ் செய்யேன் மைந்தா மறந்தும் புறங்கூறல்." என்றருளியபடி, காணுதவழிப்பிறரை இகழ்ந்துரையாமை, அஃதாவது, ஒருவன் எந்நாளும் அறமென்பதைக்கொன்று பாவங்களைச் செய்வானாயினுந் தம்மெதிர் நின்று மாள வுரைத்தானாயினும் அவனைக்காணுதவழி இகழ்ந்துரைப்பதை மறந்துஞ் செய்வாராயின், சுற்றத்தினர் பிரிவார். நட்பினர் நாடார். யாவரும் நேர்நின்று வசைகூறுவர்.

பயனில சொல்லாமை என்பது "தகைமையுடைய வறிவினர்கள் சாலவெறுப்பச் செயுமன்றி - நகையும் விளைக்கும் வெளிற்றறிவைநவிற்று நன்கு மதிப்பொழிக்கு - மிகைசெய் விழுப்பந் தபுமதனால் விடையுமறமாதிகள் பயவாவகையினுரைக்கும் பயனிலசொல்

மைந்தா வுரையே யுரையேலே.'' என்றருளியபடி, தமக்கும் பிறர்க்கும் அறம்பொரு ளின்பங்களாகிய பயன்களுள் ஒன்றும் பயவா தவசாற்களைச் சொல்லாமை அஃதாவது. பயனிலவாகிய பொருள்களை ஒருவன் விரித் துரைப்பா னாயின், அஃது அறிவுடையார்க்கு வெறுப்பைச் செய்வதன்றி எல்லாராலும் இகழ்ந்து நகைக்கப்படும். வெளிற் றறிவன் என்னும் பெயரை யுண்டாக்கும். விழுப்பத்தினையும் மதிப்பினையு நீக்கிவிடும். அறமுதலிய நான்கு உறுதிப் பொருள்களும் பயக்காது. ஆதலால் யாவரிடத்தும பயனில சொல்லாமை வேண்டும்.

யச்சம் என்பது ''பாயபல் பகைக்குந் தப்பிப் பாரிடை யுய்யலாகு - மேயவக் கதிசென்றாலும் விளிதரா துடங்கு சென்றே-யாயநன்றனைத்துங் கொன்றங் கருந்துயர் பலவு நல்குந - தீயவல்வினையின் யாதுஞ் செய்யற்க வேமகண்டா.'' என்றருளியபடி, பாவங்களாயின செய்வதற்கு அஞ்சுதல், அஃதாவது, இப்பூவுலகத்தின்கண் பலபகைகட்குந தப்பிய பிழைத்தல எளிதாகுந் தீவினைப் பகையானது, எக்கதியிற் சல்லினும் பின்றொடர்ந்து நன்றென்பன வனைத்தையுங் கொன்று அருந்துயரைப பலவாறளிக்கும். ஆதலால், கொடிய தீவினையில் யாதொன்றுஞ் செய்யா திருத்தல் வேண்டும்,

ஒப்புர வறிதல் என்பது ''ஊருணி நடுவூர் நின்ற வொண்பழத் தருவும்போலப் பேருறு முயற்சி தன்னாற் பெருக்கிய பொருள்களெல்லாஞ்-சீருற யாவர்மாட்டுஞ் செலுத்தியொப் புரவினிற்றி-யாரு மொப்புரவாற் கேடுண்டாயினு மதுவுநன்றே.'' என் றருளியபடி, உலக நடையினை யறிந்துசெய்தல். அஃதாவது, ஒருவன் தனது முயற்சியாற் பெருக்கிய பொருள்களையெல்லாம் ஊரின் வாழ்வார் தண்ணீ ருண்ணுங் குளம் நீர் நிறைந்தாற்போலும் பயன்படுத்துவதாம் ஊர்நடுவே யுள்ள மரம்பழுத்தாற் போலும் யாவர் மாட்டுஞ் செலுத்தி ஒப்புரவினிற்றல் வேண்டும் அவ்வொப்புரவு செய்தலால் அவனுக்குப் பொருட்கேடு வருமாயினும் அக்கேடு தன்னை விற்று யினுங்கொள்ளுந் தகுதியை யுடையது,

ஈகை என்பது ''இரப்பவன் வாளாதேக விலனென மெய்யங் கூறு-திரப்பினை யிரப்ப னன்று மிதனினன் றுவதாகு மிரப்பவ னிலனென் றுரவியம்பிய வெவ்வஞ் செல்லென் - றிரப்பினும் பிறர்பாற் கூறு திரக்க மொருதன் மைந்தா.—அருத்தியு னிலனென்று

ணளித்தலு மிலரென் றப்பா - லுரைத்தில ரூகச்சாலவுதவலு மேற் கின்றூனும் - வருத் துறவிலனென்றூமை வழங்கிட வரையில் செல்வம் பொருத்தலு மொன்றி ஞென்று புகழ்மிக விளங்கி நிற்கும்— நலமிகு செல்வம் பேறு நல்குரவினரைக் காத்த - லிலனற மாதி சீர்த்தி யிலனெனப் பிறர்சொ லெவ்வ-வலனுரைக் கஞ்சி யேனும் வறியனே யிலனென் றெள்ளா - தலர்புகழ பயனும் வேண்டி ஞக்கையு மளிக்க மைந்தா.'' என்றருளியபடி, வறியாரா யேற்றார்க்குமாற்றாது கொடுத்தல். அஃதாவது, ஒருவன் தனனிடத்தில் இரக்க வந்தானுயின் அவன் வீணிற்செல்ல, யான் இதுபொழுது பொருளுடையேனல்லேன் எனக் கரப்பாற் சொல்லுஞ் சொல்லை யுரையாது அவன் இரப்பினை நிரப்புதலும், யான்வறியேனென்று சொல்லும் இழிவரையைப் பிறர்பாற் கூறுகவென்று இரம்பினும் அதனையவ்வாறு கூறாது இரக்கமோ டிதலும், இரப்பான் இவனெனறு சொல்வதன்முன் குறிப்பறிந் தீதலும், அது போதாமை பற்றிப் பின்னும பிறனொருவன்பாற் சென்று அவனுரையாவகை கொடுத்தலும், எக்காலத்தும் வறிய னென்னுவகை அளவின்றி யளித்தலும் ஆகிய இவ்வகை ஈகையும் ஒன்றுக்கொன்று மேலான புகழோடு விளங்கி நிற்கும். அன்றியும் இவன் நலமிகுந்த செல்வத்தைப் பெற்றுந் தரித்திரரைக்காக்குந் தன்மையிலன்; அறமாதி புருஷார்த்தங்களு மிலனென்று பிறர்கூறும் பழியுரைக் கஞ்சியேனும் புகழும் பிரயோசனமும் வேண்டினோன் இரப்பானை வறியனென்று அவமதிக்காது தனது யாக்கையையு மளித்தல் வேண்டும்.

புகழ் என்பது "சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாதலின்றிப் பூதல மிறங்கும் காறும் புகழுடம் பிருக்கு மந்தக்-கோதறு புகழின் யாக்கை கொடையினுற் செல்வங் கூர-வாழ்தலை யுடையா ரன்றே வானமும் வணங்கு நீரார.' என்றருளியபடி, இல்வாழ்க்கை முதல் ஈகையீராகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனுகி இவ்வுலகததின்கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி அஃதாவது, பூதவுடம் பிறக்கினும் பூதலமழியுங் காறும் புகழுடம் பிருக்கு மாதலால அம்புகழுடமபோடு வறியார்க்குவரையாது கொடுக்குங் கொடையால் உண்டாகின்ற செல்வத்தைப் பெற்றுவாழும் பேற்றினையுடையவரே வான் செல்வத்தையுந் தமக்குக் கீழாக்கு நீர்மையை யுடையார் என்பதாம்.

இறைமாட்சி என்பது "உரைசெயு மறத்தினூற்றலொருகுடை நிகழுற்ற முந்நீர்த் - தாரைமுழுதாளவேண்டிற் றகைபெறு மமைச்சு

நாடு-புடையறு மரணே மிக்க பொருள்படை நட்பென்றாறும்-வரை செயப் படாத யாக்கை யுறுப்பெனமதிக்துக் கோடி.—வினையினஞ் சாமை நிற்றல் வினைஞருக்களித்தல் செய்யும்-வினையிடை மனமேற் சேறல் விளங்கிய வறிவுவல்லே-வினையினை முடித்த லாண்மை வெங் கொலை யாதி நீக்கல் - வினைவளர் மானமற்றும் வேந்தருக் கியல்பு மைந்தா.—குடிதளர்வுற்ற காலைக் கொள்பொரு ளாறிலொன்றும் - விடுவது செய்து தங்கள் விழுக்குறை முறைசொல் வார்க்குத் தடையறக்காட்சி நல்கித் தண்ணிய வினைசொல்காட்டி - வடுவற வித்துச் சொல்வார் வன்மொழி பொறுத்தல் வேண்டுமே.—செருவினெட் டலரைக் கொன்று திறைகொண்டு நாடு காத்துப - பொருளினை யீட்டிக் கள்வர் புல்லவர் சுற்றமாதி - பருகுத லிலாமைக் காத்துப் பயிலற மாதிமூன்றின் - மருவுற விடுத்துச் செங்கோல் வளர்ப்பது மாட்சியாமே." என்றருளியபடி, அரசனது நற்குண நற்செய்கைகள். அஃதாவது, மேற்கூரிய அறத்தின் வழியால தனது வொரு குடையின்கண் கடல்சூழ்ந்த உலகமுழுவதும் ஆளவேண்டிய அரசன் அமைச்சு நாடு - அரண்-பொருள்-படை-நட்பு என்னும் இவ்வாறங்கங்களையும் அவன் யாக்கைக்குற்ற உறுப்புக்களை யொப்ப மதிக்கக்கடவன். அன்றியும் ஓர் வினையின்கண் அஞ்சாமை நிற்றல். அவ்வினை செய்வோர்க் களித்தல், அவ்வினைசெய்தற்கண் மனவெழுச்சியுறல், அவ்வினையினை விரைவின் முடித்தல், ஆண்மையுறல், கொலையாதிகளை நீக்கல், வீரத்தின் வழுவாத மான முடைமை முதலிய குணங்களெல்லால் அவ்வரசனுக்கு இயல்பா யிருததல வேண்டும், குடிகள் தளர்வுற்ற காலத்தில் அவர்க ளிடத்தி லிருந்து தான்கொள்கின்ற ஆறிலொன்றாகிய பொருளைக் கொள்ளாது விடுத்து, முறை சொல்வார்க்கு * குறைசொல்வார்க்குந் தடையற்ற தனது காட்சியையளித்து, யாவரிடத்துங் குளிர்ந்த இன்சொற்களைக்காட்டி, தீயனகண்டால் நெருங்கி இடித்துச் சொல்லுந் துணையாக தன்மையையுடையார் கூறும் வன்சொற்களையும் பொறுத்துத் தனக்கோதிய * அறத்தின்கண் வழுவா தொழுகி நிற்றல் வேண்டும், மேலும் அவ்வரசன் போர்முகத்திற் பகைவரைவென்று திறைகொண்டு தன்னாட்

* முறைசொல்வார் வலியரான் மெலிவெய்தினோர். குறை சொல்வார் வறுமையுற் றிரப்பவர் எனக்கொள்க.

* அவ்வறமாவது:—ஓதல்-வேட்டல்-ஈதல் என்னும் பொதுத் தொழிலினும், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறந் தெரிதல் என்னுஞ் சிறப்புத் தொழிலினும் வழுவாது நிற்றலாம்,

டிலை யளித்து மணி - பொன் - நெல் முதலிய பொருள்களை யீட்டி அப்பொருளைப் பகைவர் - கள்ளர் - சுற்றத்தார் - வினைசெய்வார் முதலாயினோர் கொள்ளாமற் காத்து † அறமாதி மூன்றின் பொருட்டாக விடுத்துத் தனது செங்கோலை வளர்ப்பது மாட்சிமையாகும்.

கல்வி என்பது "ஐயமே திரிவே யென்னு மவையறவறநூனீதி வையமால் யானை பாய்மா வன்படைத் தொழினூலாதி-யையவே கற்றுக் கற்றபண்பினை ரோடு நாளு-மைய்யவே யளவ ளாவி யுரைத்தவா நிற்றல் வேண்டும்.,, என்றருளியபடி. அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல், அஃதாவது, அறநூலையும் - தேர் கரி பரி படைக்கலம் என்னு மிவற்றினூல்களையும், ஐயந் திரிவறக் கற்று அவைகளைக் கற் றிருக்கின்ற பண்பினரோடு நாளும் அளவளாவி சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்றல்வேண்டும்.

கல்லாமை என்பது "உடல்வயத் தாகுஞ் சாதி யுயர்ந்தவர் சாதி தாழ்ந்தோர்-திடமுற வுயிரினோடு செல்லுறுங் கல்வி தம்மா - லடர்தரும் பெருமையெய்தா ராதலா லகக்கண் ணாகித் - தொடற்புறுங் கல்விகல்லாத் தொழிலினை விடவே வேண்டும் ,, என்றருளிய படி, கற்றலைச் செய்யாமை. அஃதாவது உடலோ டொழியுஞ் சாதியின்கண் உயர்ந்தா ராயினுந் தாழ்ந்தா ராயினும் ‡ உயிரோ டொழியுங் கல்வி யுயர்ச்சியாற் சிறப்பினை யடையார் மற்றெவ்வகைக் கல்வியாற் சிறப்படைவாரெனில், தமக்கோரகக் கண்ணாகித் தாமிபுகும் எக்கதியின் கண்ணுந் தொடருந் தன்மையன வாகிய கல்வியினாற் சிறப்படைவாராதலால் இத்தன்மைத்தாகிய பெருங்கல்வியைக் கல்லாமை யென்னுந் தொழிலினை ஒருவன் பற்றற விடல் வேண்டும்.

கேள்வி என்பது "வறுமையான் மடமை தன்னால் வருந்தி நெஞ்சழியுங்காலை-யுறுதிசெய் துணையாங் கற்றவுணர்வினை வளர்க்

---

† கடவுளர் அந்தணர் வறியோர் என்னு மிவர்க்கும் புகழிற்குங்கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை குதிரை படைஅரண் அரண் என்னுமிவற்றிற்கும்,பகையோடு கூடலிற் பிரிக்கப் படுவோர்க்குங் கொடுத்தலைப்பொருட் பொருட்டாகவும், மண்டபம்-வாவி-செய்குன்று-இளமரக்கா முதலிய செய்தற்கும், ஐம்புலன்களா னுகர்வனவற்றிற்குங் கொடுத்தலை இன்பப் பொருட்டாகவுங் கொள்க.

‡ உயிரோடொழியுங் கல்வியாவது, அறமுதலாயுள்ள உறுதிப் பொருள்களை யுணர்த்தாது பிறபொருள்களை யுணர்த்துவதாம். உயிரோ டொழியாக் கல்வியாவது, அவ்வுறுதிப் பொருள்களை யுணர்த்திப் பிறபொருள்களை யொழிப்பதாம்.

குமென்று - மிறுதியில்லாத வின்ப மீட்டுதாதலினுற்கற்று - ம்றுவறு மொழுக்கமுள்ளார் வாய்மொழி கேட்டல் வேண்டும் ,, என்றருளிய படி, கேட்கப்படு நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல். அஃதாவது, கசடறக் கற்ற கல்வியோடுங் குற்ற மற்ற * ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்லானது ஒருவன் வறுமையாலேனுந் தளர் வெய்தி நெஞ்சழியுங்காலத்து உறுதிபயத்தற்கு உற்ற துணையாயும் எக்காலத்துங் கற்றவுணர்வினை வளர்ப்பதாயும இறுதியற்ற இன்பத் தை யீட்டுவதாயு மிருக்கின்றதால் அதனைக்கேட்டல் வேண்டும்,

அறிவுவுடைமை என்பது " இழிந்தவ னுயர்ந்த தொன்மை யியம்பினு முயர்ந்தோர்-வாயி-னிழிந்ததொன் றறினுமுள்ள வியல் பறிந் தோம்பிநீக்கிப் பொழிந்தெனப் பிறர்தாங்கூறு புலப்படாப் பொருளுந்தெள்ளி-வழிந்தெனத் தெளியக் கேட்போர் மனங்கொளப் புகறல்வேண்டும்—எவ்வகை யுலகத் துள்ளா ரியல்புட னொழுகினி ன்று-ரவ்வகை யொழுக்கி னினறேயழிவனவருமுன் காத்துத் - தல் வெனும் பழிபாவங்கட புதியெய்தாமையஞ்சித் - செல்விய நெறியினு லுஞ் செலுத்துகபொறிகளைந்தும்—நலமிகவுயர்ந்தோர் தம்மை நண் புறத் தழுவிக்கொள்க - நிலவிய கயத்துபயிலைவ நிகர்தரா துயர்ந்த கோட்டி-னலரெனவவர்பானிற்க வாக்கமிக்கடுத்த காலை மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலு மொழிகை மைந்தர் ,, என்றருளுயபடி கல்வி கேள்விகளினுய அறிவோடு உண்மை யறிவுடைய னுதல். அஃ தாவது, யாவர்க்குங் † குணங்கள் மூன்றும் மாறிமாறி வருதல் உண் மையாதலின் இழிந்தவன் உயர்ந்த பொருளை விரும்பினுனயினும், உயர்ந்தவன் இழிந்த பொருளை உரைததா னுயினும், அப்பொரு ளின் கணுள்ள பயனை ஆராய்ந்து கொளள வேண்டுவனவற்றைக் கண்டு ஒழிக்க வேண்டுவனவற்றை யொழிததல் வேண்டும். பிறராற் கூறப்படுஞ் சொற்கள் வழுவுள்ளன வாயினும், இனிது விளங்காத

* கல்வியுடையா ரேனும் ஒழுக்க மில்லாதார் அறிவில ராகலின், அவர் வாய்ச்சொற் கேட்கப்படா தென்பது தோன்ற ஒழுக்க முடையார் வாய்ச் சொல்லென்றூர்.

‡ குணங்கள் சாத்துவிகம்-இராசதம்-தாமதம்என மூன்றும். அவற்றுள் ஞானம்-அருள்-தவம்-பொறை-வாய்மை-மேன்மை-மோனம் ஐம்பொறியடக் கல் என வெட்டுஞ் சாத்துவிகம். மனவூக்கம்-ஞானம்-வீரம்-தவம்-தருமம்-தானம்-கல்வி-கேள்வி என வெட்டும் இராசதம், பேருண்டி-நெடுந்துயில் சோம்பு-நீதி வழு-ஒழுக்க வழு-வஞ்சம்-மறதி-பொய்-கோபம்-காமம்-கொலை இவைகள் தாமதம்.

னவாயினும். உள்ளபயனைக்கொண் டொழித்துத் தான்சொல்லுஞ் சொற்கள் அரிய பொருளின வாயினுங் கேட்போர்க்கு எளிதாய் விளங்குமாறு அவர் மனங்கொளச் சொல்லல் வேண்டும்! அன்றி யும உலகத்தை யெல்லாப யான் நியமித்தலால் என்னை நியமிப்பார் இல்லையெனக்கருதித் தானினைத்தவாறே யொழுகிற் பாவமும் பழிவு மாதலால் உலகம் யாதொரு வகையால் ஒழுகுகின்றதோ அவ்வுல கத்தோடு மேவித்தானு மவ்வாறொழுகிப் பின்னர் வரத்தக்கதாகிய அழிவினை முன்னரறிந்து காத்துப் பழிபாவ முதலானவைகட் கஞ் சிக்குதிரையை நிலமறிந்து செலுத்தும்வாது வன்போல, மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவாதலின், அவ்வறிவால் மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது அப்புலத்தினது நன்மை தீமைகளை ஆராய்ந்து தீயதனினின்று நீக்கி நல்லதன்கட் செலுத்தல் வேண்டும். உலகத்துள் உயர்ந்தவ ராயினாரைத் தழுவிக்கொள்ளுங் காலத்து அவரோடு ஒரு நிலைமையாயிருக்கின்ற கோட்டுப் பூவைப் போல விருப்பதன்றி முன்னா மலர்தலும், பின்னர்க்கூம்புதலுமான வேறுபாட்டினை யுடைய கயப்பூப் போலச் செல்வ மிகுந்த காலத்து மலர்தலும் வறுமை யெய்திய காலத்துக் கூம்புதலுமான அறிவன் மையை யொழித்தல் வேண்டும்.

குற்றங் கடிதல் என்பது, "அருந்தவர் குரவர் மன்னோ ரந்தண ருயர்ந்தோர் தம்பாக் கிருந்தியவணக்க மின்மை செருக்கவேண்டிய பக்கத்தும் - பொருந்திய பொருள் கொடாமை பொங்கிய வெகுளி காமம் - விருந்துசெய் கருகண்ணோட்ட மிவையெலாம் விடுகமைந் தா.—குற்றம் பிரியாதிருந்து பிறர்குற்றங்களைச் சிறிதேனுங்-குற்றம் புரியிற சிற்றெறிவைக் குவையை யழிக்குமாறேபோற்-பற்றும் பெரு வாழ் வினையழிக்கும் பகைவர்க் காக்காகப்பெருக்கு - முற்றுயபெ ருநோ யுழப்பிக்கு முனியாரா லு முனிவிக்கும்.—கன்றுமினிய பொ ருள்பலவுங் காதல் பகைவ ரறியாமே - நன்று நுகர்க தனையென்று நன்குமதித்து வியவற்ற - நன்றி பயவா வினையினையு நண்ணு மதத் தான் முடியற்க-வென்றிவிளங்கப் புகழ்விளங்க விழுப்பீம் விழுங்க வேண்டிடினே." என்றருளியபடி, எல்லாக் குற்றங்களையும் அர சன் தன்க ணிகழாமற்கடிதல் அஃதாவது, அருந்தவர்-தாய்-தந்தை- முன்னோர் - அந்தணர் - சான்றோர் என்னுமிவர்களிடத்தில் வணக்க மின்மையும், செருக்கும, வேண்டும் வழிப்பொருள் கொடாமையும், வெகுளியும் - காமமும் - கடும்பற்றுள்ளமும் ஆகிய இக் குணங்களை யெல்லாங் கடிதல் வேண்டும். ஒருவன்தன் குற்றங் கடியாதவழிப்

பிறர் குற்றங்கடிதல் பெருங்குற்றமாதலால் முன்னர்த் தன் குற்றத்தினைக்கண்டு கடிந்து பின்னர்ப்பிறர் குற்றங்களைக் களைதல் வேண்டும். சிறிதேனுங்குற்றம் பிரிவானாயின் அதனால் அவன் பெரியசெல்வமானது எரிமுகத்து நின்ற வைக்குவைபோல அழிந்து விடுவதன்றி அது பகைவர்க்கு இலாபத்தை யுண்டாக்கும் முனியாதவராயினு முனிவிக்கும் முற்றும் பெருநோயை யுழப்பிக்கும் அன்றியும் ஒருவன் தான காதலித்த பொருள்களை யநுபவிக்கும் அக்காதல் பகைவரறியாத வண்ணம் அநுபவித்து எஞ்ஞான்றுந் தன்னை நன்குமதித்து வியவாதுதனக்கு நன்மை பயவாத வினைகளை மதக் தான் முடிக்காதிருக்கின் * அவனுக்கு வென்றியும் புகழும் விழுப்பமும் உண்டாகும்.

பெரியாரைத் துணைக்கோடல் என்பது "நுண்மை யறனு மிகத் தெளிந்து நூலி னியல்புமுலகியல்பும்-வன்மையுறச் தேற்றிடுமாற்றல் வல்லராகி வளர்சீலந் - திண்மை யறிவா யுளிமுதிர்ந்தோர் சேரநன்கு மதித்திடுக - வெண்மைபுரியா துயர்த்திடுகவி யம்பும் வழியே நின்றிடுக.—மழையின் மிகுநி மழையின்மை வளிதீப் பிணியால் வந்துயர் - குழைவி லமரர் தக்கோரைக் குறித்துச் சாந்தி யாற்கடியா - விழைவில பகைவர் கள்வர்வினைசெய்வார் சுற்றமிவர்களினும்-பிழையை யுபாய நான்கானும் பெயர்க்கும் பெரியரேனுந் துணையே.—நற் பான்மையினுற் றேவர்களா னண்ணலாகு மெதிர்வினையை - யுற்பாதங்க ளானறிந்தேயொழிப்பவர் மனிதரால் வருவ - பொற்பாரவரிங் கிதங் குணமாசாரஞ் செயலாற்புக்கறிந்து - பிற்பாலுறச்செய் குவராதனுற் பெரியோர்துணையே துணையாகும்.,, என்றருளியபடி, அரசன் தீநெறி விலக்கி நன்னெறி செலுத்தும் பேரறி வுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல அஃதாவது, அறத்தினது நுண்மையையறிந்து நூலினியல்பும் உலகினியல்புமாகிய விரண்டனையுந்தெரிவிக்க வல்லாராகி, சீலம்-உறுதி-ஆயுள் என்னு மிவைகளின் முதிர்ந்தோரை அரசன் தனக்குத் துணையாகக்கொண்டு, அவரைத் தன்னி

* அறிந்தவழி அவைவாயிலாகப் புகுந்து வஞ்சிப்பார்களின் அறியாத வண்ணம் அநுபவித்தென்றும், தன்னைவியந்துழி இடமுங்காலமும் வலியும் அறியப்படாமை யானும், அறனும் பொருளும் இகழப் படுதலானும், எஞ்ஞான்றும் வியவற்க வென்றும், கருதியது முடித்தே விடுவலென்று அறம் பொருளின்பங்கள் பயவாவினைகளை நயப்பின், அவற்றாற் பாவமும் பழியுங் கேடும் வருமாகலின், அவற்றைமதத்தான் முடியற்கவென்றுங் கூறினார்.

னுஞ் சிறந்தவரர்க வெண்ணி அவர் இயப்பு நெறியே நிற்றல்வேண்டும். மழையின்மிகுதி மழையின்மை காற்று தீ பிணி யென்னுந் தெய்வத்தால் வருந்துன்பங்களை உற்பாதங்களால் அறிந்து கடவுளரையுந் தக்கோரையுநோக்கிச் செய்யுஞ் சாந்திகளால் நீக்கிவைப்பாரும், பகைவர்-கள்வர்-சுற்றத்தார்-வினை செய்வாரென்னு மக்களால் வருந் துன்பங்களை, குணம்-இங்கிதம்- † ஆகாரம்-செயல் என்பனவற்றா லறிந்து சாம பேத தான தண்டங்களாகிய நால்வகை யுபாயத்தால் விலக்கிவைப்பாரும, அப்பெரியோராதலால் அவரதுதுணையேசிறந்த துணையாகும.

சிற்றினஞ் சேராமை என்பது "நல்வினைக்கு நற்பயனுந் தீயவினைக்குத தீப்பயனு-மிகலை யெனும வல்லிருளையரு மெள்ளுநல்விடருந தூர்த்தர்களுஞ்-சொல்லுநடரு முதலாகத் தொக்க குழுவைச் சேர்ந்தொழுகின்-புல்லுமறிவைத் திரித்திருமைப் பொருளுங்கெடுக்கும் புகழோடே,, எனறருளியபடி, சிறிய இனத்தைப் பொருந்தாமை. அஃதாவது, ஒருவன் நல்வினைக்கு நற்பயனுந் தீவினைக்குத் தீப்பயனும் இல்லையென்கிற அறிவிலார்களையும், விடர் - தூர்த்தர் நடர் - முதலிய குழுவினரையுஞ் சேர்ந் தொழுகுவனுயின், இம்மை மறுமைப்பயனோடு புகழையு மிழப்பனுதலால், எஞ்ஞான்றுஞ் சிற்றினத்தைச் சேராதிருத்தல் வேண்டும் என்பதாம்.

தெரிந்து செயல்வகை என்பது "செய்யும்பொழுதே யழிபொருளிற் சிறப்ப தொப்ப திரண்டினுமொளான்-றுய்யவுதவி வழிபயக்குமொண்மை வினையைத் தேர்ந்துளத்தி - லையு மகன்ற வினத்தோடு மாய்ந்துதெளித்தும் புரிந்திடுக - வெய்ய வாக்கங் கருதிமுதல் விளிக்கும் வினையைப்புரியற்க.—வலியே காலம் வினையி வற்றன் மாற்றன் றனக்குமுனக்குமுள-பலவாயிலையும் வினைதொடங்கும் பண்புமதற்காமிடையூறும் - விலகா ததனைவிலக்குவதும் வெல்லுமாறும் வென்றதனு - லுலவாப் பயனு முத லனைத்து மோர்ந்து தெளிந்தே வினை செய்க.—பெரியமுயற்சி வினைபயனைப் பேணுவினையேயபயன்சிறிதா - மரிய வினையே பின்றுயர மாக்குவினையே புரிந்தாலும்-பெரியமுயற்சிமுதலாகபேசும்வினைக்கு மறுதலையா-முரிய வினையை விடுத்தாலு முலவாப்பெருமை யொழியுமே—கொடுத்தல் பொருள் வேட்கைய

† இங்கிதம் குறிப்பால் நிகழும் உறுப்பின் றொழில். ஆகாரம் குறிப்பின்றி நிகழும் வேறுபாடு.



ளிடத்துங் குளிர்சொற் செல்வியான் மடிய னடுத்துப் பிறரோ டமரா் றயர்ந்தா னிவர்பாங் கினும்வேறு-படுத்த றுணையாம் படையின்னின பகுதியொடுசேர னிவர்க-ளிடத்து மொறுத்த லிவற்றின் வரா விவர்கீழ் மக்க ளிடத்தினுமாம்.,, என் றருளியபடி அரசன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந் திறமாம். அஃதாவது, ஓர் வினையைச் செய்யும் பொழுதே அவ்வினைக்கு அழிக்கும் பொருளுக்குப் பின்வரும் ஆக்கம் மேலாதலும், அவ்வழி பொருளுக்கு அவ்வாக்கம் ஒத்திருத்தலும ஆகிய இரண்டிலொன்று உறுவதாயின், அவ்வினையைத் தெரிந்த வினத்தோடும் ஆராய்ந்து பின்னர்த் தானுந் தனித்தெண்ணிச் செய்தலவேண்டும். வலியுங்காலமும் இடனு மறியாது பிறர்மண்கொள்வானா சென்று தன்மண்ணுமிழத்தல்போ லெய்தக்கடவ வூதியத்தினை நோக்கி முன்னெய்தி நின்றமுதலையும் இழத்தற் கேதுவாய வினையைச் செய்யா திருத்தல் வேண்டும். அன்றியும், பகைவர்மேற் செல்லுங்கால் வலி காலம் இடம் என்னு மிவைகளால் தனக்கும் அப் பகைவர்க்கும் உள்ள நிலைமைகளும், வினைதொடங்கும் பண்பும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை விலக்குவதும், பின்னர் வெல்லுவதும். அதனாற் பெறும் பயனும் ஆகிய இவை யனைத்தையுந் தேர்ந்துணர்ந்து ஓர் வினையைச் செய்தல் வேண்டும், தன் வினைகளுட் செய்பத்தகாதனவாகிய பெரிய முயற்சி யானவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிபதாயினவும், ஐயமாயினவும், பின்னர்த் துயர் விளைப்பனவும் ஆகிய இவைகளைச் செய்தாலும் செய்பத்தகுந்தனவாகிய அவற்றின் மறுதலை யாயினவைகளைச் செய்யா தொழிந்தாலும் எல்லாப் பெருமைகளுங் கெடும். இவ்வாறு தேர்ந்து செய்யத்தக்க கருமமுடிக்கு முபாயத்தை யெண்ணி முயறல வேண்டும். அவ் வுபாயம் தானம் சாமம் பேதம் தண்டம் என நால்வகைப்படும் அவற்றுள் தானமாகிய கொடுத்தலைப் பொருள் நசைபாளன்கண்ணும், சாமமாகிய இன்சொல்லைச் செப்ப முடையான் மடியாளன் முன்னே பிறரோடு பொருது அயர்ந்தவன் என்னும் இவர்கண்ணும், பேதமாகிய வேறுபடுத்தலைத் துணைப்படையாளன் தன் பகுதியோடு பொருந்தாதான் என்னும் இவர் கண்ணும, தண்டமாகிய ஒறுத்தலை இம்மூவிதவுபாயத்தினும் வராதவர் - கீழ்மக்கள் என இவர்கண்ணுஞ்செய்து வெல்லுமாற்றல் முயறல் வேண்டும், மேலும் தான் வலியனு யுள்ள காலத்துத் தான சாம பேத மாகிய மூன்றினை மெலியாரிடத்திற் செய்தாலும் நலிவினை யுண்டாக்கு மாதலால். எக்காலத்து எவ்வெ

வரிடத்தில் எவ்வாறு செய்ய வேண்டுவதோ அக்காலத்து அவ்வவரிடத்தில் அவ்வாறு செய்தல் வேண்டும்.

வலியறிதல் என்பது "வலியாரான காலத்து வழங்கலாதி மூன்றனையு மெலியா ரிடத்துச் செய்திடனு மெலியாரான காலத்து-வலியாரிடத்தினொறுத்தலையும் வகுக்கின வேந்தர்க் கவைமைந்தா-நலிவாமதனு லவரவர்பானடத்து முறைதேர்ந் தியற்றிடுக.—வினையின் வலியா திகனுன்கும் வேறுவேறு சீர்தூக்கி-நினது வலிமிக் குழிவினையை நிகழ்த்து நிகர்த்த காலத்துப் புனையும் வென்றி யுறுவிழுக்கும் பொருந்து மதனு லவ்விடத்து - வினையுந் தோல்வி யுறுங்குறைந்த விடத்தும் வினையை யெண்ணற்க—குறைந்த வலியராயினுங் கொற்ற மைந்தர் பலர்கூடி-னிறைந்த வலியென்னுமதனுனேரா தொழிக பலரொடுளத்-துறைந்த வூக்கந் தனைக்கொண்டே யுற்றநினது வலியளவி-னிறந்தும் வினைமேனடவற்கவிகவா வென்றி வேண்டினனே.—வந்த பொருளிற் காற்கூறு வருமே லிடர் நீக்குதற் கமைத்து-மைந்த விருகானினக்காக்கி மற்றைக் காலே வழங்கிடுக-சிந்து நெறிக ளகலாமற் சேரு நெறிகள் சுருங்கிடினு - நந்த லிலதா மொப்பினுமா நாடினதிகச் செலவிழுக்காம்." என்றருளியபடி அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந் தறிதல். அஃதாவது தான்செய்யக்கருதிய வினைவலியும்-அதனைச்செய்து முடிக்குந் தன்வலியும், அதனைவிலக்கலுறும் மாற்றான் வலியும், இருவர்க்குந் துணையாவார் வலியும், ஆகிய இந்நான்கு வலியினையும் அறிந்து சீர்தூக்கித் தன்வலி மிகுமாயின் அவ்வினையைச் செய்தல்வேண்டுமன்றி, இருவர்வலியு மொப்பா யிருத்தலின் கண்ணும் தன்வலிகுறைந்தவிடத்தின் கண்ணும் ஓர்வினையை எண்ணத்தகாது. அதனாற் மேற்றலவியும் இழுக்கும் உண்டாகும் நிறைந்த வலியினன் ஒருவனுக் கிணையாகக் குறைந்த வலியார் பலர்கூடினும் அது என்னபயனைத் தரும். ஆதலால், அத்தன்மைத்தாகிய வலியினரைத் துணைகொள்ளுதலும் பலர் கூடினரென்றும் மனவெழுச்சியாற் றம்மின் வலியாரோடு வினைசெய்யத் தொடங்குதலும் வெற்றியைத் தரமாட்டாது. ஈயு நெறியின்கண் தனக்குள்ள பொருளின் எல்லையை யறிந்து அவ்வெல்லையை நான்குகூறாக்கி அதில்ஒருபாகத்தைமேல்வரும் இடர்களை நீக்குதற்கும், இரண்டு பாகத்தைத் தன் செலவிற்கும் வைப்பாக்கிநின்றவொன்றினை யீதல்வேண்டும். அவ்வாறீயுமிடத்து அதனிற் சுருங்கக் கூடாதாயின் சிறிது நெறிகளிற்செலவிடாமல் முதலுஞ்செலவுந் தம்முள் ஒப்பினுங் கேடில்லை.

காலமறிதல் என்பது "ஆற்றன் மூன்று முபாயங்க ணான்கு மிடத்தோ டமைந்திடினும்-பொற்றினைக்கு வென்றிபுறும்பொழுது தேர்ந்தே வினைபுரிக - வேற்ற காலம்வருமளவு மெண்ணியிருக்கவது மைந்தா - விற்றுச் சமர்க்குப்பின் வாங்கும் வெற்றித்தகரே யாகு மால்—மிகைமிக் கியற்றித்திடினும் வெலலுங் காலம் வருமளவும் - பகைமைபுறத்திற் றோறமற் பகைவர்தம்மைப் பண்போடு - நகை செய் தமர்போற் கமந்திடுக நாடுங் காலம் வந்துவிடின் - றகைசெய் வினையை யவ்வளவிற் றப்பாவண்ணமுடிந்திடுக." என்றருளியபடி, வலியான் மிகுதி யுடையனுய்ப் பகைவர்மேற் சேறலுற்ற அரசன் அச்செலவிற்கேற்ற காலமறிதலாம். அஃதாவது, தூங்காமை-கல்வி-துணிவுடைமைஎன்று மூன்றாற்றலும், சாமம-பேதம்-தானம்-தண்டம் என்னு நான்குபாயங்களும், நலல இடனும ஆகிய கருவிகளை யடைந்திருந்தானாயினும் பகைவரை வெல்லுங் காலமறிந்து அக்காலத்தை-எதிர்ப்பார்த்திருத்தல் வேண்டும் அவ்வாறிருத்தல் பொருகின்ற தகர் தன் பகைகெடப் பாய்தற் பொருட்டுப்பின்னே கால் வாங்குந் தன்மைத்து. அன்றியும் பகைவர் தன்பால் மிக்ககுற்றங்களைச்செய்து திரியினுந் தானவரை வெல்லத்தக்க காலம் வருமளவுந் தன் பகையை அவர் புறத்திற காட்டாது அவரைக் கண்டவுடன் பண்போடு உபசரித்துத்தனது உறவினரைப்போலப்பழகுதல்வேண்டும். பின்னர் அப்பகைவரை வெல்லுங்காலம் வந்து கூடியவுடன் அது கழிவதன் முன்னர்ச்செய்யவேண்டிய வினைகளைத் தான் கருதிய வழியே தப்பாமே செய்து முடித்தல் வேண்டும்.

இடனறிதல் என்பது "வாயி னூழில் வழக்கமற மதிலே வளைத் தொனறற்கொன்று-மேய துணையாய்ப்பலபடையு மெலிவற்றிருப்ப மதிலகழி - யேயவியற்றி யரசிருக்க லேற்ற கிடக்கை நிலத்தோடு - பாய புனலுமுடையதுவே பகையை யழிக்கு மிடனாகும்.—ஊக்கமி லனுயினுமிடத்தோ டுற்ற வினைசெய்குவனுயி னூக்க முடையார்க் கிடனின்று யொழியு மூக்க மிலாதவனுக்-கூக்கமுடையா னுயிடினு மூற்றபடையும் பலவேனு முக்கமழிவனிடந்தோடு முற்றுவினைசெய் யாவிடினே." என்றருளியபடி, வலியுங்காலமுமறிந்து பகைவர்மேற் செல்லும் அரசன் தான் வெல்லுவதற்கேற்ற நிலத்தினை யறியலாம். அஃதாவது, பகைவராயினோர் வாயிலகளானும் நுழைகளானும்புகலோடுபோக்கொழியும் வகை அரணை வளைத்து, ஒன்றற்கொன்று துணையாகப் பலபடைகளு மெலிவற்றிருபபதற்கு மதில் அகழிமுதலியவைகளைச்செய்து அரசிருப்பிற் கேற்ற நிலக்கிடக்கையும் நீரை

யும் உடையதுவே அவரைவெல்லக் கருதுவோனுக்கு இடமாகும் ஊக்க மில்லாதா னாயினும் அத்தன்மைத்தாகிய இடமறிந்து வினை செய்குவானாயின், அவனை வெல்வதாக எண்ணி யிருந்த பகைவர் அவ் வெண்ணத்தினை யிழப்பார். ஊக்கமில்லாத பகைவரை வெல்லு வதற்கு அவ்வூக்கமும் படைகளும் உள்ளானேனும் இட மறிந்து வினைசெய்யானாயின் அவ்விரண்டும் பயனின்றி விளங்கும்.

தெரிந்து தெளிதல் என்பது “பிறப்புங் குணமு மறிவுமெனப் பேணுமிவையுஞ் செயல்களையுஞ் - சிறக்குவ காட்சியொடு கருத்தே செய்யரி னூலென் றிவைதம்மா-னிறுக்கு மமைச்சர் முதலோரை நின் றாராய்ந்து தெளிந்திடுக-வறுக்கும் வினையாற்றுதற்பொருட்டு மறை போகாமைப் பொருட்டுமே—அறவோர் புரோகி தரைவிடுத்திட் டவராலிந்த வரசன்று-னறவோனல்ல னிவற்போக்கி யறனோடுரிமை யுடையானை - யுறவே வைத்தற் கெண்ணினமீதெத்த தெவர்க்கு நின்கருத்தென - வுறவோ தெய்வச்சு னுறவோடு மோர்ந்தேயொரு வன்றனைத் தெளிக—சேனைத்தலைவனொடு மவனைச் சேர்ந்தாரையும் விட்டிவ்வரச - னினைப் பொருளா சையனிவனை யிழுக்கிக் கொடை யோடுரிமையுடை-யானைப் புரந்தற் கெண்ணினமீ தமைந்தவெர்க்கு நின் கருத்தென்-னுனப்பாடாமை யுரைத்தி யெனச் சூளொடுரைப் பித்தேதெளிக.—தொனறு தொட்ட வுரிமையொடு சூழ்ந்த தவறு தாட்டியைவிட் - டொன்றுயரிமைதனி லிரகா னுனைக்கல் லியங்கி யெனவிடுத்தாள் - சென்றங் கவனைக் கூடுதியேற் சிறந்த பொருளுங் கூடுமெனக் - கென்று தெளியச் சூளுற வாடிசைபபித்திதனானுந் தெ ளிக.—ஒரு நிமித்த மேலிட்டே பேரமைச்சா லவன் மனையி லேனை யோரை யொருமையுற வழைப்பித்திங் கிவர்பிழைப்பக்குழீஇ யின ரென் றுறுத்திக் காவ-லொருபளிவ் வரசனமை யொறுக்க மூபன் றனிவனை யொறுத்துவேறே யொருவனைப் பதற்கிசைந்தே முன் கருத்தென் னெனச்சூளை டுரைப்பித்தோர்க.—நல்ல குடியிற் பிறந் தாறு நவையுமறப்பு மடிபிழைப்பெண்-றல்லனுறுக்கு மிவைமுதலா மனைத்துநீங்கிப்பழிக்கஞ்சி-யொல்லலுறுநாணுடையானே யோர்ந்து தெளியப் படுமைந்தா-வல்ல கலைதேர்ந் தாசற்றார் மாட்டும்வெளிறு மருவிடுமே.—சுற்ற மிலரா னவர்தம்மைச் சூழல் பழிபா வமுநா ணார்-பற்றுமிலரா குவர்விடுக பண்பார் தருநற்குணங்களே - முற்று முடையாரிலதனுன முனியுங் குற்றங் :குணமிவற்றைத் - தென்றென் றுணர்ந்து குணமிகுந்த செம்மை யுடையார்தமைத் தெளிக—பெரு மைசிறுமை யளந்துகொளப் பேணுங் கருவி தத்தமது கருமமது

போற் பிறக்கருவிகழியச்சிறந்த வலவரிக - மருவ காதலாலறியார் மாட்டுவினையை வையற்க-வொருவர் தமையுந்தேராமேயொருகாலத் துந் தெளியற்க.—தேர்ந்து தெளியப்பட்டவன்பாற்றேர்ந்தேவினையுந் தகவிடுக-தேர்ந்து தெளியப்பட்டவனைத் தீதாகாறுகயாற்க - தேர்ந் துதெளியப்பட்டவனைன் றீறவினையை விடுமதன்னைந் தேர்ந்து பகைவர் பிரித்திடுவர் தேரான் றெளிவே போற்கோடல்” என்றருளியபடி, அரசன் தன் குழுவினரை யாராய்ந்து தெளிதல் ஆவதாவது, பகை மேற்செல்லும அரசன தனவினை செயதற்பொருட்டும் அறைபோகா மற்பொருட்டும், அமைச்சர் முதலாயினோரது குடிப்பிறப்பு குணம்-அறி வுஎன்னு மிவைகளையுஞ் செயல்களையும, காட்சி கருத்து-ஆகமம் என் னுமளவைகளால் ஆராய்ந்தபின்னர் அறவுபதை-பொருளுபதை-இன் பவுபதை-அச்சவுபதை என்னு நான்கின் மறக்கால் அவர் மனவியல் பையோர்ந்து தெளிதல்வேண்டும அவ்வுபாயங்களில்:—

முதலாவது—புரோகிதனையும அறவோனையும் விட்டு அவரால் இவ்வரசன் அறவோ னல்லாமையின் இவனைப் போக்கி யறனும் உரிமையு முடையா னொருவனை வைத்தற கெண்ணினம். இதுதான் யாவர்க்கும இயைந்தது. நினகருத் தென்னையெனச் சூளுறவோடு சொலலுவித்தல் வேண்டும.

இரண்டாவது—சேனைத் தலைவனையும் அவனோ டியைந்தாரை யும் விட்டு அவரால் இவ்வரசன் பொருளாசை யுள்ளவனாகலின், இவனைப் போக்கிக் கொடையும் உரிமையு முடையவன் ஒருவனை வைத்தற் கெண்ணினம். இதுதான் யாவர்க்கு மியைந்தது நின கருத் தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல வேண்டும்.

மூன்றாவது—தொன்று தொட்டு உரிமை யோடும பயின்றவ ளாகிய ஓர் தலைமூதாட்டியை விட்டு அவளால் உரிமையுள இன் னாள் நின்னைக் கண்டு வருத்த முற்றாக் கூடுவிக்க வேண்டு மென்று என்னை விடுத்தாள். அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்ப மேயன்றிப் பெரும்பொருளுங் கைகூடுமெனச் சூளுறவோடு சொல் லுவித்தல் வேண்டும்.

நான்காவது—ஒருநிமித்தத்தின் மேலிட்டு ஓரமைச்சனால் ஏனை யோரை யவனில்லின்கண் அழைப்பித்து இவர் அறைபோவா னெண் ணற்குக் குழீயினாரென்று தான்காவல்செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்மை கொல்லச்சூழ்கின்றமையால் அதனை நாம்முற்படச் செய்து நமக்கினிய அரசனொருவனை வைத்தால் யாவர்க்கு மியைந்தது. நின் கருத் தென்னையெனக் சூளுறவோடும் விறுவித்தல் வேண்டும்.

இந்நான்கு உபதைகளினுந் திரிபிலராயின், அவர் எதிர்காலத்துந் திரிபிலரென்று தெளியப்படும். மேலும் நல்ல குடியிற்பிறந்து காமமுதலிய அறுவகைக் குற்றங்களோடு மடிமறப்பு முதலியவை களையுநீக்கி, நமக்கு வடுவருஞ்சொல் என்றஞ்சா நிற்கு நாணுடைய வனையே ஓர்ந்தறிதல் வேண்டும். கற்றற்குரிய நூல்களைக்கற்று மேற்சொல்லிய குற்றங்களைக் களைந்தாரிடத்தும் அறிவின்மை விளங்கி நிற்கு மாதலால், அதனை நுண்ணியதாக ஆராய்தல் வேண்டும். இவ்வாறு ஆராய்ந்து தெளியப்பட்டவருஞ் சுற்றமில்லாதாராயின் அவர் களித்துப் பழிப்பன ஒழிதற்கும், புகழ்வன செய்தற்கும், ஏதுவாகிய உலக நடையியல்பு இன்மையின், அவர்கள் பழியாவதற் கஞ்சார்கள். ஆதலால் சுற்றமாயினாரைச் சூழ்தல்வேண்டும். குணங் குற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகத்தின்மையின் பின்னர் அச் சுற்றத்தினரிடத்தில் அவ்விரு பகுதிகளையும் ஆராய்ந்து குற்றமின்றிக் குணமேமிக்கதாயின அவரை வினைக் குரியவராக்கிக்கொள்ளல் வேண்டும்.

ஒருவனது பெருமையுஞ் சிறுமையுந் தப்பாமல் அறியவேண்டில் அவனவன் செய்யுங் கருமமே உரைகல்லாவதன்றிப் பிறிதொன்றின்மையால், அதனால் அவனைத் தேர்ந்தறிதல் வேண்டும். அன்புடைமையே பற்றுக்கோடாகத் தமக்கறியவேண்டுவன அறியாதாரிடத்தில் ஓர் வினையளித்தலை யொழித்தல் வேண்டும் தன்னோடுமை புடைய நல்லாதாரைப் பிறப்பு முதலிய வற்றானுஞ் செயலானும் ஆராய்ந் தறிதல் வேண்டும் அவ்வாறு ஆராய்ந்து தெளியப்பட்ட பின்னர் அவரை அவர் ஆற்றலுக் கேற்ற வினைகளில் விடுத்தல்வேண்டும். அவ்வாறு விடுத்த பின்னர் அவரிடத்து ஒருதீது காணாது அரசன் ஐயுறுவனாயின் அதனை அவரறிந்து இனி இது நில்லாதென்னுங் கருததால் அவ்வினையினின்று நீக்குவர் அதனைப் பகைவ ரறிந்தால் எளிதிற் பிரித்து விடுவர். பின்னாத் தேரான் தெளிவினைப்போலக் கேடுவருமாதலால் வினைசெய்வார்பால் தீது கண்டவழி ஐயுறல் வேண்டும்.

தெரிந்து வினையாடல் என்பது "முன்னர்ப் பொதுவாகிய வினையின் முளைவிடுத்துத்-தீதகற்றி-நன்மைபுரிந்து வருமாயினுடி யவனைச் சிறந்தவினை-தன்னில் விடுக்க சிறந்தவினை சார்ந்துபுரிவா னிடைதிரியின்-பின்ன ரவனைப் பொதுவினையிற் பெயாத்துத் தழுவவிட்டிடுக ஆளுமரசன் பாலன்பு மவனுக் காவ தறியறிவு-நாளு மவற்றைக் தல

ங்காம னன்று முடிக்கு மூளத்துணிவு மூன்றும் வினைக்குத் தன்கரத்தின் மொய்த்த பொருளின் விழையாத-கோளுமுடையான் புரிவினையிற் குற்றமுறாது குணமேயாய்." என் றருளியபடி, அத்தெளியப் பட்டாரை அரசன் அவர் செய்ய வல்ல வினைகளையறிந்து அவற்றின் கண்ணே யாளுந்திறம. அஃதாவது, மேற்கூறிய எல்லாவகையானும் ஆராய்ந்து தன்னால் தெளியப்பட்டவரை 'முன்னர்ப் பொதுவாகிய வினையில் விடுத்தல் வேண்டும். அவர் அவ்வினையின்கண் ஆவனவும், ஆகாதனவு மாய செயல்களை யாராய்ந்தறிந்து, அவற்றுள் ஆவனவற்றையே விரும்பி நடாத்தி வருவாராயின், பின்னர் அவரைச் சிறந்த வினையின்கண் விடுத்தல் வேண்டும். இவ்வாறு விடுத்தபின்னர் வேறுபடுவாராயின் மீட்டும் மேற்கூறிய பொதுவினையின் கண் விடுத்து ஒழித்துவிட வேண்டும். அன்றியும் அரசன் மாட்டன்பும், அவனுக்கு ஆவனவற்றை யறியும் அறிவும், அவை செய்தலின்கண் கலக்கமின்றி இனிது முடிக்கத்தக்க மனத்துணிவும், அவ்வினையாற் பொருள் தமது கையுற்றவழி அதன்மேல் அவாவின்மையும் ஆகிய செய்கைகளை யுடையாரே தம்மரசனது வினையைக் குற்றமற முடிக்குங் குணத்தை யுள்ளவர். இவ்வாறு செய்பவரது இலக்கணத்தை முன்னர் ஆராய்ந்து, பின்னர்ச் செய்யப்படும் வினையினது இயல்பை யாராய்ந்து இக்காலத்து இவ்விலக்கண முடையான செய்யின் இவ்வியல்பிற்றாய வினைமுடிவுமென்று அறிந்து விடுத்தல் வேண்டும். ஒருவன் தன்னினத்தின மிக்க வுரிமைபருகிய சுற்றத்தினனானும் செய்யு முபாயங்களை யறிந்து சொல்லானும் இடையூறுகளானும் வருந் துன்பங்களைப் பொறுத்து முடிவு செய்ய வல்ல அறிவும் ஆற்றலும் இலனாயின், இவ்வினையை இப்பொருளாலும் இத்துணைவராலும் இவன முடிக்கவல்லனெனக் கூறுபடுத்து ஆராய்ந்து மூன்றுந் தனனுளியைந்தவழி அவ்வினையை யவன்கண்ணே விடுத்துப் பின்னர் அதனைத்தானே செய்துமுடிக்கும் ஆற்றலுடையான் ஆக்கல்வேண்டும். ஒருவன் எப்பொழுதுந்தன் வினையின்கண்ணே முயற்சி தவறாது பிறனுயு நில்லாது கேளிர் செய்யும் உரிமையெல்லாஞ் செய்தொழுக அதுபொறாதார் கூறுஞ்சொற்களை அரசன்கேட்டு அவனை அவமதிப்பாகக்கொண்டு பகைப்பனாயின், அவன் அவ்வினையினின் றுநீங்குவன், பின்னொருவரும் அவ்வினைக்கு உட்பட்டு முடல்வாரில்லையாம். ஆகவே தன் செல்வத்திற்குக் கேடுறும் வினைசெய்வாரைக் கோடாதிருப்பாராயின் உலகங் கோடாதிருக்குமாதலால், அரசன் அவர்செயலை நாடோறும் ஆராய்தல்வேண்டும்.

சுற்றந்தழால் என்பது, "பற்றும் வெறுக்கை யொழிந்தழியும் பழமையெடுத்துப் பாராட்டுஞ்-சுற்றமதனைப் பெருங் கொடையாற் றூயமொழியாற்றழுவலுறி-னற்றமவனுக் கொருகாலுமணுகாதாக்க மிகப்பெருகு முற்றநினைக்கும் பகைவர்தொழின் முற்றுமேதம கண்டேனே." என்றருளியபடி அரசன் தன்கிளைஞரைத் தன்னினீங்காமல் அணைத்தல். அஃதாவது, ஒருவன் செல்வந்தொலைந்து வறியனாயகாலத்தும் பிறரைப் போலவிடாது தம்மோடு அவனிடைப்பழமை யெடுத்துப் பாராட்டு மியல்புள சுற்றத்தாரிடத் துளவாகலால் அவரைப் பெருங்கொடையாலும் இன்சொற்களாலும் அரசன் தழுவுவனாயின், அவனுக்கு எக்காலத்துஞ் சோர்வணுகாது. செல்வம் மேலுமேலும் விர்த்தியாகும். தன்னை வெல்ல நினைக்கும் பகைவர் தொழிலும் பயனபெறாது.

பொச்சாவாமை என்பது, "பொருமிதம் பெரிய செல்வம் பேரெழில் பெரியவின்பந் - தருமிதுகளிப்பின மூழ்கித் தங்குறி னேமகண்டா வருமிகு பொச்சாப பந்தமறிவியா னினைக்காத்துப் - பொருமிகு பகையைவெல்லும் பொருளெலா மிழப்பதாகும்.—உற்றிடு மாற்றன் மூன்று முபாயங்க ளான்கு நன்மை - பற்றிய தொழில்களைந்தும் பண்புறு குணங்களாறு-மற்றையவனைத்துங்கேடாம் வளர் பிறப்பேழன்காறும்-பற்றிடு நன்மை யின்றாம் பாழ்த்த பொச்சாப்புச் சாரின்.—நெகிழ்ச்சியொன் றின்றிச்செய்ய நினைந்த காரியத் - திற்சென்று - புகழ்ச்சிசெய் முயற்சி செய்யிற் பொருள் பயவாமை யில்லை-யிகழ்ச்சியிற் கெட்டார் தம்மை யெண்ணுதல் செவ்வையாயின்-மகிழ்ச்சியின் மைந்துறுத வன்மைவர் தடுக்குமைந்தா." என்றருளியபடி, உருவுந் திருவும் ஆற்றலுமுதலியவைகளினுஞ் சோர்தலைச்செய்யாமை. அஃதாவது, அரசனாயினான் பெருமிதல்-பெருஞ்செல்வம்-பேரெழில்-பேரின்பம் என்னுமிவைகளால் வருங்களிப்பின் மூழ்கினனாயின் உடனே பொச்சாப்பு உண்டாகும். அதனால் அவன் பகைவரைவென்று பாதுகாக்கவல்ல எல்லாப் பொருளும் அழிவெய்தும் தூங்காமை முதலிய மூவகையாற்றலும், தானமுதலிய நால்வகையுபாயங்களும், ஈட்டல் முதலிய ஐவகைத் தொழில்களும், நட்பாக்கல் முதலிய அறுவகைக்குணங்களும், மற்றுமுள்ள யாவுங் கெடுவதன்றித் தேவர் முதலிய எழுவகைப் பிறவிகட்கும் நன்மையுறாது ஆதலால் தான் செய்யக்கருதிய காரியத்தின்கண் நெகிழ்ச்சியுறாமற் சென்று முயற்சி செய்வானாயின், அவனுக்குக் கிடைக்காத பொருள் ஒன்றுமில்லை. முற்காலத்தில் அந்நெகிழ்ச்சியினாற் கெட்டவர்களை

நினைத்து நாளும் அவ்வா றிருக்கின் நம்மைக் கேடுறுமென்று கருதி அதனைக் கைவிடல் வேண்டும்.

செங்கோன்மை என்பது "எய்திய குற்றத்தோர்கள் யாவராயி னுங்கண்ணோடா-தைதெனை நாடி நீதியறந்தலைப்பிழையாத்தண்டஞ்-செய்தலே செங்கோ லாகுஞ் செய்யகோலின்றே லென்னு - முய்தி செய் மறையான் மக்களூறு பயனுற்றபோதும்—மழைவளஞ் சுரக்கு மாறும் வயனிலம் விளையு மாறும்-விளைபயறம் வளரு மாறும் வேத நூல் விளங்கு மாறுந்-தழைபொரு வீட்டுமாறுஞ் சமரிடைவெல்லு மாறும் - பிழைதப வாழுமாறும் பிறழகராக் கோலினுகும்—கருவி நஞ் சாதிதம்மாற் காமராருயிரைக் கொல்வோர் - வெருவரச்சூறை கொள்வோர் மேவியா றலைப்போர் கள்வ-ருருவளர் பிறனில் வேட் போருவர் முதலோரைக்கோறல் - பருவரு பாவமன்று பயிர்க்களைக் களைதல் போலாம—பரிசனம் பகைவர் கள்வர் படைதரு முயிர்க டாமென்-றுரைசெயைந் திடத்தினு மூலகிடை யிடையூறெய்தா-வரிசையிற் காத்துநீதி வழுக்கினூர்தம்மை மொதுதிக்-கரிசறப்பொரு ளுங்கோடல் காவலர் தருமமைநதா." என் றருளியபடி, அரசனாற் செய்யப்படு * முறையினது தன்மை யஃதாவது, மழைவளத்தாற் குடிகட்கு உணவு முதலிய உளவாயினுந் தம்மை யாளு மரசன் † ஒழுக்கம் வழக்கு-தண்டம என்னு மூவகை அறத்தினவழித் தனது செங்கோலைச் செலுத்திலனாயின அவைகளால் அக் குடிகட்கு என்ன பயன் ஆதலால் செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந் தஇதியார் மாட்டுமூவகை யொறுப்பும் உடையனாதல் வேண்டும். அம்மூவகை யொறுப்பு தான்பஞ் செய்தலும், பொருட் கோடலும்

* அம்முறை ஒருபாற் கோடாது செவ்வியகோல் போறலிற் செங்கோ லெனப்பட்டது.

† ஒழுக்கம்-என்பது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக் கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங் களில் வழுவாதொழுகல். வழக்கென்பது ஒரு பொருளைத் தனித்தனியேஎன தென தென்றிருப்பார் அது காரணமாகத் தம்முண் மாறுபட்டு அப்பொருள் மேற்செல்வது. அது கடன் கோடல், உபநிதி, கூடிமேம்படல் நல்கியதை நல்காமை; ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையானல்லான்விற் றல், விற்றுக் கொடாமை கொண்டுள்ள மொப்பாமை, கட்டுப்பாடு கடத் தல், நிலவழக்கு, மாதராவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற் கொ டுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு எனப் பதினெட்டாம். தண்டமென் பது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு ஒப்ப நாடி அதற்குத் தக வொறுத்தல்.

கோறலும் ஆம். அவற்றுள் துன்பஞ் செய்தலாவது குற்றஞ் செய் தவர்கள் உயிரினுஞ் சிறந்தவராயினும் அவர்பாற் கண்ணோடாது, அக் குற்றத்தையே நாடி நடுவு நிலைமையைப் பொருந்தி அக்குற்றத்திற் குச்சொல்லிய தண்டத்தை நூலோரோடும் ஆராய்ந்து அவ்வளவிற் றாகச் செய்வதாம் பொருள்கோடலென்பது சுற்றத்தாராலும் பகை வராலுங்கள்ளவராலும் உயிர்வர்க்கங்களாலுந் தன்னாலுங் குடிகட்கு ஓரிடையூறெய்தாவண்ணங் காத்து, நீதியின்கண் வழுக்கினோர்களைப் புடைத்துப்பொருள் சம்பாதித்தலாம். கோறலென்பது தீக்கொளு, வுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார். சூறைகொள்வார், பிறனில்விழைவார் என்னுமிவர் முதலாயினாரை உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காப்பது போலக் கொலை யானொறுத்துத் தக்கோரைக் காத்தலாம். மழைவளஞ் சுரப்பதும், வயனிலம் விளைவதும், அறபவளர்வதும், வேதநூல் விளங்குவதும் பொருளீட்டுவதும், சமரில் வெல்வதும், குற்றமறவாழ்வதும், அரச னாற் செலுத்தப்படுகின்ற செங்கோலினாலும். ஆதலால், இத்தன் மைத்தாகிய செங்கோலைத் தனக்குமுட்டு வந்தவழியும்முட்டாமற் செலுத்துவனாயின் அவனை அச்செங்கோலே காக்கும். முறைவேண் டினோர்க்கு எளிய செவ்வியையுடையவனாய் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடும் ஆராய்ந்து நின்ற உண்மைக்கொப்ப முறை செய்யானாயின் தனக்குப பகையின்றாமேனும் பழியும் பாவமுந் தேய்த்துவிடும்.

கோடுங்கோன்மை என்பது 'முறைமைமுட்டாது செய்துமுழு நிலங்காப்பினந்த-விறைவனைச் செங்கோல் காக்குமெளியசெவ் விய னுமாகான் - குறைவளர் குற்றம்மோராமை குணத்தொடு முறைசெய் யானை-நிறைதரு பாவநதேய்க்கு நெடும்பகையின்று மேனும்.—அறு தொழிலாளர் நூல்க ளயர்ப்பரான் பயனின்றாகு முறைபெய லொழி யுங் கூழுங் குடிகளு மொருங்கு நீங்கும் - பெறுபய னாட்டிற் குன் றும் பிறங்கொளி நிலைபெறாது - கறையின்மேற் பொருள் கைக் கொண்டு காவலை விடுப்பின்மைநதா. என் றருளியபடி, அம்முறை யினது கோடுற்ற தன்மை. அஃதாவது அரசன் பொருளை வெஃ கிக் குடிகளை அலைத்தற் றொழிலைத்தன்மேற்கொண்டு முறையல்ல வற்றைச்செய்தொழுகுவனாயின அந்தணர் நூல்களை மறந்து விடு வர், அவனாட்டுப் பசுக்களும் பால்குன்றும், பருவமழையின் றாம் வகைமேகமும் பொழிதலைச் செய்யாது முன்னிட்டிய பொருளும் புண்ணிட்டுதற்கேதுவாகிய குடிகளும் ஒழுங்கு நீங்கும், அவனாட் டினைகளுள்ள பெரும்பயனுங் குன்றும் அவன் புகழுநிலைபெறாது,

வெருவந்த செய்யாமை என்பது, "கடுமொழி கண்ணோடாமை கையிகந்திட்ட தண்ட - கடுநிலையின்மை செவ்வியின்மைநன் முகமுறாமை-யுடனுறச்சூழ்ந்து செய்யாதுறுபிழை யமைச்சர்க் கேற்றல்-படுசமர்ச் சிறைசெய்யாமை பலவுந் தீங்காக்கு மைந்தா." என்றருளியபடி, குடிகளஞ்சுவதும் பகுதியஞ்சுவதுந் தானஞ்சுவது மாய தொழில்களைச் செய்யாமை. அஃதாவது, அரசனாயின் கடியசொல்லுங் கண்ணோட்ட மின்மையுங் குற்றத்தின் மிக்க தண்டமும் நடுவுநிலையின்மையும், தன்னை காண வேண்டுவார்க்குச் செவ்வியின்மையுங் கண்டால் இன்னா முகத்தினையுடைமையும், காரியத்தைபற்றி வந்த எண்ணத்தை அமைச்சர்மேல்வைத்து அவரோடு தானும் எண்ணிச் செய்யாமையும், அப்பிழையாற் றன்காரியந் தப்பிய வழி சினந்து அவ் வமைச்சரை வெகுளுதலுஞ், செருவருதற்கு முன்னே தனக்கும் புகலாவதோர் அரண் செய்துகொள்ளாமையும் ஆகிய இவைகளெல்லாந் தீங்காக எண்ணிவிடல்வேண்டும்.

கண்ணோட்டம் என்பது, "பயின்றவர் தம்மாற்கூறப் பட்டன மறுக்கமாட்டா-வியன்ற நற்குணங்கண்ணோட்ட மித்தகுகண்ணோட்டந்தா - முயன்றுசெய் முறைக்குக்கேடு முன்னுனர்மாட்டுக்கூடா - நயந்தபனைக்குத் தீங்கு நாட்டினார் தம்பா னோட்டல்." என்றருளிய படி, பட்சம். அஃதாவது, அரசன் தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறின மறுக்கப்படாமையாகிய கண்ணோட்டத்தைத் தான்முயன்று செய்யுமுறைக்குக் கேடுநினைப்பார் மாட்டும, தனக்கு நன்மை கெடத் தீங்கு நாட்டினார் மாட்டும், கொள்ளா திருத்தல் வேண்டும்.

ஒற்றாடல் என்பது "உளக்கநீதி நூலாக வொற்றே வெளிக் கண்ணெனவிடுத்து - விளக்குஞ் செயலான் மொழிதனாலும் வேண்டாசுற்றம் வினைஞரையு - மளக்கமைந்த வொற்றுவதையுறத வுருவோடு-துளக்க மின்றியென் செயினுஞ்சோர்விலாத தெனவறிக.— ஒருவ ரொருவர் தமையறியா தொருமை வினைக்கண் மூவர்தமை-மருவவிடுக்க மூவர்களும் வந்து மொழிவதோர்ந்துவிடிற்-கருமமதனை மிகத்தெளிக கருமமறைப்பவேண்டுதியேற் பொருவிலவிர் தம் பாற் சிறப்புப்புறந் தோன்றமற் செய்திடுக" என் றருளியபடி, பகைநொதுமல் நட்பு என்னுமூன்று திறந்தார் மாட்டுநிகழ்ந்தன வறிதற்கு ஒற்றரையாளுதல். அஃதாவது, அரசன் நீதிநூலைத் தனது உளக்

கண்ணாகவும், ஒற்றை வெளிக்கண்ணாகவும் * விடுத்துத் தன் காரி யஞ் செய்வார் சுற்றத்தார் பகைவர் என்று சொல்லப்பட்ட அனை வரையும் சொல்லானுஞ் செயலானும் ஆராய்தல் வேண்டும். அவ் வாறு ஆராயத்தக்க ஒற்றன் எவ்வாறிருக்க வேண்டுமெனில், ஏனை யோர் கண்டால் ஐயுறாதவடிவோடுபொருந்தி அஞ்சாது நின்று யாவ ரேனும் ஐயுற்றுப் பிடித்து என் செய்து கேட்டாலுந் தன்னை வெளிப்படுத்தாதவனா யிருத்தல் வேண்டும். அத்தன்மையாகிய ஒற் றையாளுமிடத்து ஒருவனை யொருவனறியாத வண்ணம் ஆளல் வேண்டும். அங்ஙனமாண்ட ஒற்றர் மூவரை ஒரு பொருண்மேல் வேறுவேறு விடுத்தல்வேண்டும். அந்தருமத்தைப் பின்பு மறைக்க வேண்டுமாயின், அவ்வொற்றர்கட்குச்செய்யுஞ் சிறப்பினைப் பிறரறி யாமற் செய்தல் வேண்டும்.

ஊக்கமுடைமை என்பது "ஊக்கமுடையார் கைப்பொருளை யொழித்தாரேது மொழிவில்லா-வாக்கமுடையரே யாவராக்கமிருந்து மசைவில்லா - வூக்க மிலரே லேதுமில ருளுற்று முயற்சி பொருள் கொடைக-டேக்கும்புகழ் நற செருக்கினைவயின் சேரா வேம கண் டனே." என் றருளியபடி, மன மெலிதலின்றி வினை செய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல், அஃதாவது, ஊக்க முடையவர்கள் கைப் பொருளை யிழந்தார்களேனும் அவர்கள் அழிவில்லாத ஆக்கத்தை யுடையவரே யாவார். அவ்வாக்கமிருந்தும் அசைவற்ற ஊக்கமிலராக யின் ஏதுமில ராவார். அவர்கள் முயல்கின்ற முயற்சியும்பொருளுங் கொடையுஞ் செருக்கும் முறையைச் சேராது.

மடியின்மை என்பது "மடியொன் றுளதேல் வல்விரைந்து வருக்குந்தொழிலை நீட்டிக்குங் கடியு மறவி துயில்விளக்குங் கலதி தனைச் சேர்த்திடும் பகைவாக்-கடிமைபுகுத்துங் குடிகெடுக்கு மதனை விடுப்பி னுண்மையினுங் - குடிமை யிடத்தும் வேறுளவாங்குற்றம் பலவு மொழிக்குமே" என்றருளியபடி கருதியன செய்யுங்காற் சோம்புத லில்லாமை. அஃதாவது, ஒருவரிடத்தில் மடியென்ப

* ஒற்றனாவது தன் கண்செல்லமாட்டாத பரப்பெல்லாஞ் சென்று கண்டு ஆண்டுநிகழ்ந்தன வெல்லா முணர்த்தலானும், நூலானது அங்நிகழ்ந்தவற்றிற் குத்தன் னுணர்வுசெல்லாமாட்டாதவினைகளையெல்லாஞ்சொல்லியுணர்த்தலா னும், இவ்விரண்டனையுமே தனக்கு ஊனக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் துணிந்து கொண்டு ஒழுகவேண்டு மென்பதாம்.

தொன்றிருக்குமாயின், அவன்விரைந்துசெய்யுந் தொழிலை நீட்டிக்கும். ஐயமறதி துயில் இவைகளை விளைவிக்கும். கலதியைச் சேர்ப்பிக்கும். பகைவர்க்கு அடிமை புகச்செய்யும். தான்பிறந்தகுடியைக் கெடுக்கும். ஆதலால் அதனைவிடுக்கின் அவனகுடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள் ஒழியும்.

ஆள்வினை யுடைமை என்பது "விடாதுதனிற்செயு முயற்சி மெண்மேற் பொருளை மிகவளாக்கு-கொடாது கற்ற நற்பினர்தங்கிளையுந் தாங்கும் யாவர்க்கு - தடாத வுபகாரமும் புரியுந் தடந்தாமரையாளையுஞ் சேர்க்கும் - படாதவூழ்வரு இடுக்கணும் பயனைவிளைக்கும்பழியின்றும்." என்றருளியபடி, இடைவிடாத மெய்ம்முயற்சியுடையனாதல். அஃதாவது, ஒருவனது வலியாலே விடாது செய்கின்ற முயற்சியானது பொருளை மேலுமேலும் வளர்க்கும். சுற்றம் நட்பு கிளை என்று இவைகளைக் கெடாதவண்ணங் காக்கும். யாவர்க்குந் தடையிலாத உபகாரத்தைச் செய்விக்கும் இலக்குமி விவாசமுண்டாக்கும். பயனை விலக்குவதாய் ஊழ்வந்த காலத்தும் அப்பயனையே கெடாதவண்ணம் விர்த்தியாக்கும். பழிகளை நீக்கும்.

இடுக்க ணழியாமை என்பது, "எடுத்த கரும முடிவதன்முனெய்துந் தெய்வத் தாலுகக்-தொடுத்த முயற்சியாலுடலிற் றோன்றும் வருத்தத்தாலுக - மடுத்த பொருளின்மையினுக மைந்தாவடுக்கி வந்திடினு-மிடுக்கண் ணடக்கு எழியற்க வின்ப மதுவே யெனத் தெளிக.,, என்றருளியபடி, வினையின்கண் முயல்வான் இடுக்கண் வந்துழி அதற்கு மனங்கலங்காமை. அஃதாவது, ஒருவனுக்குத் தெய்வத்தாலேனும் பொருளின்மையாலேனும் மெய்வருத்தத்தாலேனும் இடுக்கண் வருவாயின் அதற்கழிவுறாது தேவகதி, மக்கட்கதி விலங்கின்கதி நரககதி என்னு நாற்கதியினுமுள்ள உடம்புகள் இடும்பை யென்னும் வாளுக்கு இலக்காவது சுபாவமென்று தெளிந்து தன்மேல் வந்த இடும்பையை இன்பமாகக் கொள்ளுதலாம்.

அமைச்சு என்பது, "கனிபயன் பயப்பச் சிறுமுயற்சியினுலைத்தருவினையு மறறவைய-வினையினைத் தொடங்குங் காலது தனக்கு வேண்டிய பொருள்களும் படையு - மினிதுறு பொழுது முபாயமுஞ் செயலு மிடைப்படு மூறுகணிக்கித் - துனிவற முடிவு போக்கிடு மாறுஞ் சூழ்தர வல்லவ னமைச்சன்—மிகைவினை வரினுமதை வுறு வன்கண்விழுக்குடிகாத்தலான் வினைநூல்-வகையுறச் சூழ்ந்து விடுவென விடுத்து வகுப்பன வகுத்திடல் வேண்டிற் - பகைவர்தக்

துணையைப் பிரித்தறம் மிடத்துப் பயின்றவர் பகைவர்பாற்புகாமற் றகையுறச் செய்தல் பிரிந்தவர் தம்மைத்தம்மொடு பொருத்தலு மமைச்சாம்—அறிவாதன் செயலுமொழிவது மரசர்க் காக்கமே குறித்தன வாகுந் - திறனுநன்றறியா வரசருக் குறுதி செப்பலுஞ்செய்வன வேனு - முறுமுல கியற்கைக் கொத்திடிற் செயலு மொருவினைக் கியைந்தபல் செயலு நிறுவுவதொன்றால் வாய்ப்பவெஞ் ஞான்றுமிகழ்த்தலு மமைச்சருக் கியல்பாம்.,, எனறருளியபடி, அமைச்சனது தன்மை அஃதாவது, சிறிய முயற்சியினாற் பெரிய பயனைத் தருவதான வினையும், அவ்வினை செய்யுங்கால் அதற்கு வேண்டிய பொருளும், அதற்கியைந்த படையும், அதற்கேற்ற காலமும், அது தொடங்கும் உபாயமும், அது செய்யுமாறும், அதை இடையூறு நீக்கி முடிவு போகுமாறும ஆகிய இவைகளோடு தமக்குத் துன்ப நேரிட்ட காலத்தும் வினைசெய்தற்கண் அசைவின்மையும், குடிகளைக் காத்தலும், முயற்சியும், நீதி நூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும, வினைவந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும், தன்பாலாரை அவர் பிரியாமற்கொடை இன்சொற்களாற் பேணிக்கொள்ளுதலும், முன்னே தம்மினுந் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்தவேண்டிற் பொருத்தலும் என ஒரு காரியச் செய்கை பலவாற்றோன்றின. அவற்றுள அமைச்சு ஆவது ஆராய்ந்தறிதலும் அது செய்யுங்கால் வாய்க்குந் திறநாடிச் செய்தலும, சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும் வகை சொல்லுதலும், அரசனுக்கு ஆக்கமேகுறித்தனவாகுந் திறலும், அறிந்து சொல்லியாது அறிவையும் அழித்து அரசன் தானும அறியானை யாயினும் அக் குற்றம் நோக்கி யொழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதலும், தூநெறியான் வினைசெய்யுந் திறங்களை யறிந்த விடத்தும அப்பொழுது நடக்கின்ற உலக வியற்கையை யறிந்து அதனோடு பொருந்தச்செய்தலும், தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெரிகிய காலத்தும் இடை நிகராய காலத்தும் அவன் செய்யப்படும் அறங்களை யறிந்து தனக்கேற்ற கல்வியால் நிறைந்தசொல்லை யுடையவனாய் வினைசெய்யுந் திறங்களை யறிவதும் ஆகிய இவ்வியல்புகளையுமுடையவனே அமைச்சனாவான். செய்யப்படும் வினைகளை முன்னர் அளவுபட எண்ணல்மாத்திர மன்றிச் செய்யுங்கால் அவைகளை முடிக்கமாட்டாத அமைச்சனுந் தன்னரசனுக்கு அகிதமெண்ணும் அமைச்சனும் எழுதப்பட்ட சித்திரங்களினு மாகா.

சொல்வன்மை என்பது, "சுருக்கிமெய் விளக்கி யினிமையும் பயனுந் தொகுக்கய லார்மொழிக்கிடையாத் - திருக்கிளர்மொழியைச் சோர்வறவைக்கட் செல்லுமா றஞ்சுத லின்றி - யுரைக்க வல்லவரே யமைச்சர்களாவ ரூறுமுறை பிறழ்தரப் பலவாய் விரிக்கவல்லவருங் கற்றது விளங்க விரிக்கமாட்டாருமெல் லியரே.,, என்றருளியபடி, தான் கருதியவினை முடிக்குமாற்றால் அமைச்சியல்நடத்துதற் கேதுவாய சொற்களைச் சொல்லவல்லவனாதல். அஃதாவது தன்னிற்பிரிக்கப்பட்டவரும் பகைவருமாகிய இவர்கள் பின்னர்க்கூடி வேறுபடாமலிருக்கும் அப்பகைமை யொழிந்து நட்பினை விரும்புமாறும், அவருள்ளத்தைப் பிரிக்கத்தக்க சொற்களைத் தன்காரிய முடிவெய்தும் வண்ணங்குடிப் பிறப்பிலுங் கல்வியிலும் ஒழுக்கத்திலும் உருவத்திலும் பருவத்திலுந் தனக்கும் அவர்க்கும் உளவாய ஏற்றத்தாழ்வுகளை யறிந்து சொல்லல்வேண்டும் அவ்வாறு சொல்லுமிடத்துச் சுருக்கி மெய்விளக்கி இனிமையையும் பயனையுந் தொகுத்து அயலார் கூறுமொழிக்கு இடையாத மொழியாக வழுவின்றி அவை சொல்லுமா றஞ்சுதலின்றி யுரைக்க வல்லவனே அமைச்சனாவன். அவ்வாறின்றி மேற்கூறிய சுருக்கன் முதலிய குணங்கட்கு மாறுதலையாகப் பலவாய வார்த்தைகளை வீணே விரித்துரைக்க வல்லவனுங் கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்கமாட்டாதவனும் மெல்லியனே யாவன்.

வினைத்தூய்மை என்பது, "பொருள் பயக்கிடினு மறப்புகழ் பயவாப்புரைபடு வினையென்றும் புரியார் - மருளின்மற் றொருகாற் புரியினு மிரங்கார் வையகத் தேனையோர்போல - விருமுது குரவர் கற்புடை மகளி ரிளமகவியர் பசித் திடினும் - பெருமிதப் படாத வினைசெய்யாரு லகுபேணு நகர்கடிகமஞ்செ யமைச்சர்.,, என்றருளியபடி, செய்யப்படும் வினைகள் நல்லவாதல். அஃதாவது தன்னரசனுக்கு ஆக்கத்தை யுண்டாக்க வல்ல அமைச்சன்பொருளையன்றி அறமும் இன்பமுமே பயவாத வினையை எஞ்ஞான்றும் புரியான் ஒருகால் மயங்கி அவற்றைச் செய்தானாயினும் அது செய்தற்குப் * பின்னிருந்திரங்கான் தாய்தந்தையர் கற்புடைய மனைவியர் இள

* பின்னிருந் திரங்குவனாயின், அது தீரும் வாயிலறிந்தில னெனவுந் திட்பமிலனெனவும் பயனில்லனசெய்கின்றானெனவும் தன்பழியைத்தானே ஆற்றுகின்றானெனவும், எல்லாருமிகழ்தலிற்பின்னிரங்காமை நன்றென்றார்.

மக்கள் என்னு மிவர்கள் பசியால் வருந்தினும் உலகத்தின்கண் ஏனையோர்போல அறிவுடையார் பழிக்கும் வினைகளைச் செய்வான்.

வினைத்திட்பம் என்பது, "ஊறுசேர் வினையைப் புரிதரா ரூழா லூறுவந் தடுப்பினுங் கலங்கார்-கேறுகாரியத்தை முடிப்புழியன்றிச் செயன்மொழியாதியா லிடைபே-வேறுபோ மாறு விளங்குரார்துணி ந்த வினைதுளங்காது வல் விரைவார் - வீறுசே ரிவரை யுருவுகண் டெள்ளா வேந்தனே வேந்தனு மைந்தா.,, என்றருளி யாங்கு அத் தூயவினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மையாம். அஃதாவது, பழுதுபடும் தீவினைகளைச் செய்யானும், ஊழால் ஊறுவந் தடுப்பினுங் கலங்கானும், செய்யப்படும் வினையை முடிவின்கண்ணன்றி யிடையில் தனது இங்கிதம் வடிவுசெயல்மொழி என்னு மிவைகளால் வேறுபடுமாறு செய்யானும் மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்ன ரசைவின்றி முடிக்க விரைவானுமே அமைச்சனுவன். இத்தன்மையனாகிய அமைச்சனை அவனது வடிவின் சிறுமை நோக்கி இகழ்தலைச் செய்யாத அரசனே அரசனெனப்படுவான்.

வினைசெயல்வகை என்பது, துணிவுறு மளவுஞ் சூழ்ந்துபினிராது சூழ்வினை பொருந்தும்வா யெல்லாந-தணிவற முடித்த லது தகாதாயிற் றருபொருள்வினையிடங்கால - மணிபுறு கருவியைந்துமாய்ந்திகலே யடர்ந்த லொட்டார்க்கழி வுறுங்காற் - பணிவுசெய்தேனுங்காத்தன் முத்தொழிலும் பண்புடை யமைசசர்தந் தொழிலே.,, என்றருளியபடி, அத்திட்பமுடைய அமைச்சன் பகையிற்றன் வலியனாய காலத்தும், ஒப்பனாய காலத்தும், மெலியனாய காலத்தும், அவ்வினையைச் செய்யுந்திறம் அஃதாவது, தான் வலியனாய காலத்து இனி இவ்வினை தப்பாதென்னுந் துணிவினைப் பெறுமளவும் விசாரித்தும், அங்ஙனம் விசாரித்துத் துணிவுபெற்ற வினையின்கண் நீடித்தலை யொழித்துத் தன் பகையோடு நேரிற் செய்தலும் அப் பகையிற்றனொப்பானாயகாலத்து அழி பொருளும், ஆகு பொருளும் தன்றானையும், மாற்றான்றானையும், தனக் காங்காலமும் அவற் காங்காலமும், தான் வல் வினையுங், அவன் வல் வினையும், தான் வெல்லு மிடமும் அவன் வெல்லு மிடமும் ஆகிய இவ் வைந்தையு மாராய்ந்து தான் வென்றி யெய்துந் திறத்திற் பிழையாமல் எண்ணிப் படர்தலும், தானாளுகின்ற நாடும் அரணும் அற்பமாகித் தன்னின் வலியனு யெதிர்வழித்தன் பகுதி நடுங்கலுக் கஞ்சி மெலியா

னுய காலத்து அந்நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை யுறுச் கொள்ளலும் ஆகிய இம் மூவகைத் தொழிலும் பண்பின் மிக்க அவ்வமைச்சர் தொழிலாகும்.

தூது என்பது, "குடிப்பிறந் திருநூல் கற்றறிந்தமைச்சர் குணங் களு முடையனாய்ச் சுற்றந் - தட்பட்டு மரச ரிடத்தனாய் மணபுரி கருதுவேற் றரசரைப் பண்பும் - விடப்படா வினைசொல வன்மையு முருவும் வெருவுறாத் திண்மையு மருவி - யிடனொடு செவ்வியறிந்து காலத்துக் கேற்றவு முரைப்பவன் றூதனெ,—உறுபொருள் காமம் விரும்புறாத் தூய்மை யுயிர்க்குறி வுறினு மஞ்சாமை - மறுபுலத்தமைச்சர் துணைமையாத் தன்மை வாய்மைசொற் சோர்வுறாத் துணிவு- மறுவற வுடைய னுய்வழியுரைப்பானை மத்திமத்தூதனு முடங்கல- குறுகுபுகொடுப்பான் கடைப்படுந்தூதன கூறிய விவரையுந் தழீஇக் கொள.,, என்றருளியபடி, * சந்தி விக்கிரகங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மையாம. அஃதாவது, தூதருள் தலை இடை கடை என மூவகையாருளர். அவருள் அமைச்சு பூணாற்கமைந்த குடிபின்கட் பிறந்து நீதிநூலை யுணர்ந்த அமைச்சரிடைத்தான் அந்நூலைக் கற்றறிந்து அவ் வமைச்சரது குணங்களையு முடையனாய்த் தான் சுற்றத்தார் மாட்டுந் தன்னரசன மாட்டும் அன்புடைமையும, அவர்மாட்டாராய்ந்து கூறுஞ்சொல வன்மையும, கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும, இயற்கை யறிவும ஆகிய இவையனைத்தையு மருவி வேற் றரசரிடத்துச் செலலுங்கால் அவரிடத்துத் தானசெய்யு முறைமை யறிந்து பின்சென்ற கருமஞ் சொல்லுதற் கேற்ற இடமறிந்து அவர்செவ்விபார்த்துக் காலத்தோடு பொருந்த அதை முடிக்கத்தக்க உபாயத்தை யறிந்து சொல்ல வல்லவன தலையாயதூதனும. பொருள் காமங்களைப்பற்றி வேற்றரசரிடத்து வேறுபடக்கூறாத தூய்மையும், அவ்வார்த்தை தனனுயிருக்கு இறுதிதருமாயினும அதற்கஞ் சிமொழியாமையுந் தனக்கு அவ் வமைச்சர் துணையாந் தன்மையும ஆகிய இம மூன்றோடு கூடிய மெய்மையுந் தனக்குவரும ஏதத்திற்கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய் சோர்ந்துஞ் சொல்லாத திண்மையு முடையவன் இடையாய தூதனும. வேற்றரசரைக் குறுகி ஓலைகொடுத்து நிற்பான் கடையாய தூதனும.

* இவற்றுள் பொருத்தலுக்குச் சந்தியென்றும, பிரித்தலுக்கு விக்கிரகமென்றும் பெயர்.

மன்னரைச் சேர்ந்தொழுகல் என்பது "இறைசிறப்பாக வணி வன நுகர்வ வினிது று மேனமையா திகடா - முறலறை போத வுரி மையின் மருவலொண்பொருள் வெளவன்மன்னவன் முன் பிறர் செவி மொழிதல் பிறரொடு நகைத்தல் பேணுரூப் பண்புவேங் திள மை-முறைமதித் திகழ்தல் விரும்புரு வினையை முடித்தலுஞ்சேர்ந் தவர்க் காகா,—குறிப்பொடு கால மறிந்திறை விருமபக் கோதறு பயன்மிகப்பயக்கும்-வெறுப்பில வினையைவிளமபி வெண்டாதவினை யினைக்கேட்பினுமவிளம்பார் - சிறப்புறவோர்வதாயினு மவைதான் செப்பிடிற் கேட்பினல் லாது-மறப்பினுங் கொடரா ரோர்தரா ரனு கர் மருங்கக லார்வினை வலித்தார்." என்றருளியபடி, அமைச்சர் அரசனைப் பொருந்தி யொழுகுமாறு, அஃதாவது, அமைச்சனுயின் தன்னுற் சேரப்பட்ட அரசன் அணியப் படுவன நுகரப்படுவன மேன்மைப்படுவன முதலானவைகளைத் தான் விரும்புதலும், அத ணுற் பொருத்தற்கரிய அறைபோதலும், உரிமையோடு மருவலும், அரும்பொருள் வெளவலும் அரசன் அருகிருந்த காலத்து அவன் காண ஒருவன் செவிகட் சொல்லுதலும, ஒருவன் முகநோக்கி நகுதலும், அரசனுக்கு யாம் பழையமெனக் கருதித் தனக் கியல் பல்லாதவற்றைச் செய்தலும், அரசனை எனக்கிளையவ னென்றும் எனக்கின்ன முறையினையுடையனென்றுங் கருதி அவமதித்தலும், அரசனல் யாம் நனகு மதிக்கப்பட்டே மெனக்கருதி அவன் விரும் பாதவற்றைச் செய்தலும் ஆகிய தீக்கொடுஞ் செய்கைகளைக் கூடா திருத்தல் வேண்டும் அன்றியும் தன்னரசனுக்குக் காரியஞ் சொல் லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினை யறிந்து சொல்லுதற்கேற்ற காலத்தையும் நோக்கி அவன் மனம் விரும்பும் வகை வெறுப்பிலவுமாய் வேண்டுவனவு மாய காரியங்களை விளம்பு தல்வேண்டும். எஞ்ஞான்றும் பயனிலவாயவற்றை அவனே கேட் டாலும் விளம்பாதிருத்தல் வேண்டும். தன்னரசனுக்குப் பிறரோடு மறை நிகழ் வுழித்தான் ஓர்தற்கேற்கும் பொருளாயினும் அம்மறை ப்பொருளை அவன்றனே யடக்காது சொல்லியக்காற் கேட்பதல் லாது அவனை முந்தி வினவுவதும் செவி கொடுத்துக் கேட்பதும், அவனிடத்தை விட்டகல்வதும் ஒழித்தல் வேண்டும்.

குறிப்பறிதல் என்பது "அகத்திடைக் குறித்த காரியமதனை யையுருதவரவர் விழியான முகத்தினு லறிய வல்லவனுகி முகம்விழி யிரண்டினு மன்றி-யகத்திடைத் தனக்கு நிகழ்ந்திடுங் குறிப்பா லவ ரவ ரகக்குறிப் பறிந்து - மிகத் தெளிபவனைக் கரிமுக துறுப்புள்

விழைவன கொடுத்துக்கொண் மைந்தா.'' என்றருளியபடி, அரசன் கருதியவதனை அவன் கூறாமலறிதல் அஃதாவது அரசன் தன் மனத்தின்கண் குறித்த கருமத்தைத் தன்னுடன் கூறவேண்டா வகை ஐயப்படாது அவன் முகத்தானுங் கண்ணானு நோக்கி ஒருதலையாக வுணர வல்ல தன்மையையும், முகம் விழி இரண்டினுமன்றித் தன்குறிப்பு நிகழுமாறறிந்து அதனாற் பிறர்குறிப்பறியுந் தன்மையையும் உடையானை அரசன் தனது கரி பரி-பொருள்-நாடுமுதலிய புறத்துறுப்புக்களில் அவன் விழைவன வற்றைக் கொடுத்தாயினுந் தனக்குத் துணையாகக் கொள்ளல் வேண்டும்.

அவையறிதல் என்பது "தொகைபடு செஞ்சொ லிலக்கணச் சொல்லேசூழ்ந்திடுங் குறிப்புச்சொன் மூன்றின்-வகையறிந் துயர்ந் தோரொத்தவர் தாழ்ந்தோர் மருவுமூன் றவையி மராய்ந்து தகையுற வுயர்ந்தோ ரவையின் முந்துரையார் சமத்திளெவ் வாற்றினுங் கிளப்பார் நகைபடுதாழ்வி னென்னையு மொழியார் நவைபடாச் சொற்பொரு ளாய்ந்தோர்.'' என் றருளியபடி, அரசனோ டிருந்த அவையின தியல்பை யறிதல் அஃதாவது, அமைச்ச னாயினான் செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல் என்னு மூவகைச் சொற்களையும் செம்பொருள் இலக்கணப் பொருள் குறிப்புப் பொருள் என்னு மூவகைப்பொருள்களோடு விளங்கச் சொல்ல வல்லவனாய், உயர்ந்தோர் ஒத்தோர் தாழ்ந்தோர் என்னு மூவகைத்தாகிய அவைகளையு மாராய்ந்து உயர்ந்தோ ரவையின்கண் ஒன்றனை முற்படச்சொல்லாமையும், ஒத்தோ ரவையின்கண் எவ்வழியுஞ் சொல்லுதலும், தாழ்ந்தோ ரவையின்கண் ஒருவழியுஞ் சொல்லாமையும் ஆன நற்குணங்களை யுடையனாதல் வேண்டும்.

அவையஞ்சாமை என்பது "வல்லவ ரவையுட்கற்றதுஞ் சாது வகுத்துரைத் தவருண்மிக்கான நல்லவைகேட்பார் கற்றவர் தம்முணன்குற மதித்திடப் படுவார் சொல்லவை யஞ்சிக்கற்றன செலுத்தாச் சோர்வினர் கற்றுங் கல்லாத புல்லியரிருந்தும் பொன்றின ரதனாற் போற்றிக வவையஞ்சாதவரை.'' என்றருளியபடி, சொல்லுதற்குரிய அவையினை யறிந்து சொல்லுங்கால் அதற்கஞ்சாமை அஃதாவது, கற்றா ரெல்லாரினும் இவன் நன்கு கற்றானென்று உலகத்தாரால் சொல்லப்படும் அமைச்சன் பலநூல்களையுங் கற்றாரவைக்கண் தான் கற்றவற்றை யஞ்சாது அவர் மனங்கொள்ளு மாற்றாற் சொல்லி அவற்றின் மிக்க பொருள்களை மிக்க கற்றாரிடத் தறிந்து கொள்ளு நூல்களைக் கற்றுவைத்தும், அவற்றாற் பயனறிந்து வைத்

தும், நல்லாரிருந்த அவைக்கண் நல்ல சொற்பொருள்களைத் தன் னச்சத்தால் அவர்க் கேற்பச்சொல்ல மாட்டாதான் கற்றுங் கல் லாத புல்லியனுவன். அவன் உயிர்வாழ்கின்ற னாயினும் உலகத்தா ரால் எண்ணப்படாமையின் இறந்தாேனா டொப்பன்.

நாடு என்பது "இருபுனல் வாய்ந்த மலைவரு புனலுமிடைவிய நகர்களு முடைத்தாய்ப் பெருகவெப் பொருளு மொழிவற விளைக் கும் பெருங்குடிகளுங் கலங்காலாற் பொருள்பலவீட்டுஞ் செல்வரு மறையோர் புரையறுதவத்தினர் துறவோர் மருளறு கலைஞராதி யோர் பலருமனளிவாழுந திருப்பதுநாடு—பழுதுசேர் நாட்டுக் கம ரர்கள் சாதிபற்று சங்கேதத்தி னீண்டுங் குழுவுமா றலைக்குங் கள் வர்பொய் குறளை கூறுவோர் பன்றி மான் முதலாய்க் கெழுவுமுட் பகையு மளவுபார்த் தரசைக் கெடுக்குங் கொல் குறும்பரு மிக்க மழைமழை யின்மை யெலிகிளி விட்டின் மன்னராங் கோளுமா மைந்தா.—ஆதலிற் குடிகளாதியோர் தொகவு மழிவுசெய் குழு முத லகன்று போதவுங் காவல் புரிபிணியின்மை புகழ்திரு விளை வின்ப மனைத்துங் கோதற நாளு மிக வுளதாகுங் குலைநயனுடைக ளுறினு மேதகத் தாங்கும் வருந்துறுதெவையும் வேண்டுழி யளித் திடு மைந்தா.'' என்றருளியபடி, அவ்வரசனுலும் அமைச்சனுலுங் கொண் டுய்க்கப்படுவதாய் விளங்குவது. அஃதாவது, கீழ்நீர்மேனீர் எனப்பட்ட இருவகைநீரும், மலையினின்றும் வருவதாய நீரும் நகர் களுமுடையதாய், எல்லாப் பொருள்களையும் ஒழிவற விளைவு செய் யும் பெருங்குடிகளும், கலத்தானுங் காலானும அறம்பொருளீட் டும் வணிகச்செல்வரும், அந்தணர் தவத்தர் துறந்தோர் கலைஞர் என்னு மிவர்களும் பிறவுமுள்ள பலரும் வாழ்ந்திருக்கத் தக்கதே நாடாரும் இத்தன்மைத்தாகிய நாட்டுக் குற்றமாவது கடவுள் பற் றியும், சாதிபற்றியும மாறுபட்டுக்கூடும் பலகூட்டமும். ஆறலைப் பார் கள்வர் குறளைகூறுவார் முதலிய மக்களோடு, பன்றி மான் கரடி புலிமுதலிய விலங்களுமான உட்பகைகளும், பொருளினது அளவுபார்த்து அதனைக் கெடுங்கவருங் குறும்பரும், மிக்க பெயல் பெயலின்மை எலி கிளி விட்டில் அரசன்மை என்னு மிவைகளு மாம். ஆதலால் முற்கூறிய குடிகள் முதலாயினோர் கூடவும் சங்கே தர் முதலாயினோர் ஒழியவும் அந்நாட்டை அரசன் காவல்புரிபவ னையின், அது பிணியின்மை புகழ செல்வம் விளைவி இன்பம் முத லியவனைத்தும் எஞ்ஞான்றும் உளவாகும் பிறதேயங்களி னுள்ளார் குலைந்தவரினும் அவர்களைத்தாங்கும் தங்கண்வாழ்வார் தேடிவருந் தாமல் அவர்கள் வேண்டுழியாவையு மளிக்கும்.

அரண் என்பது "மருங்குநீர்க் கிடங்கு வெள்ளிடைகான மலை யுறவகன் றுயர்ந் தரங்கொண் டொருங்குபல் பொறியு மணிந்துபே ரிடத்தாயுறு சிறுகாப்பினல் வீரர் நெருங்குபல் பொருளுந் தழுவி யெத்திறத்து நேரலர் கொளப்படாதாகிச் சுருங்கையாதிகளும் பொதிந்தகத் துறைவோர் தொழிலினி தாற்றுவதரணே." என்றருளிய படி, அந்நாட்டிற் குறுப்பா யடங்கியது அஃதாவது, நீர்க்கிடங்கு வெள்ளிடை நிலம் கானம் மலை என்னு மிவைகளைக்கொண்டு, புறத் தோர்க்கு அகழலாகாத அடி அகலமும், ஏணியெய்தாத வுயரவும், கல் இட்டிகைகளாற் குத்தப்படாததிண்மையும் உடையதாய்ப் பல வகை எந்திரப்பாவைகளையும் அணிந்து அகன்றவிடத்தை யுடைத் தாய், நல்லபடைவீரர்களோடு பல பொருள்களையுந் தழுவிக் காக்க வேண்டுமிடஞ் சிறிதாய் எத்திறத்தினும் புறத்தாற் கோடற்கரிதாய் சுருங்கையாதிகளு மமைந்து அகத்தார்விட்ட ஆயுதமுதலியன புறத் தாரின் மேல் எளிதிற் சேரலும் அவர் விட்டன அகத்தார்மேற் செல்லாமையுமான போர்நிலைக் கெளிதாய நீர்மையை யுடையதே அரணெனப்படும்.

பொருள் செயல்வகை என்பது, "அருள்கொடு புரக்கம் படுங் குடியன்போடளித்திடு மாறினி லொன்று மிருநிலத்தெடுத்த பழம் பொரு ளுரிமையின்றியே யிறந்தவர் பொருளுமருவிய சுங்கப்பொ ருளு மொட்டலரை மாட்டியபொருளுமீட் டுகவிப் பொருளறமின் பம்புகழ் தரும் பகையைப் புரட்டு மெவ் வினைகளு முடிக்கும்." என்றருளியபடி, பெரும் பான்மையும் நாட்டாலும் அரணாலும் ஆக்கவும் காக்கவும் படுவதாய், பொருளைச் செய்தலின் திறம். அஃதாவது, அரசன் - தன் குடிகண் மாட்டுச்செய்யும் அருளோடும் அவர் தன்மாட்டுச் செய்யும் அன்போடுங் கூடி வருகின்ற ஆறிலொன்றாகிய பொருளும், வைத்தார் இறந்துபோக நெடுங் காலம் நிலத்தின்கட் கிடந்து பின்னர்க் கண்டெடுத்த பொருளும் உடையாரின்மையிற் றானே வந்துற்றபொருளும், கலத்தினுங் காலினுமவரும் பண்டங்க ட்கு இறையாய பொருளும், தன்பகைவரைத் திறையாகக் கொள் ளும் பொருளும் ஆகிய இவ்வகைப்பொருள்களை ஈட்டல் வேண்டும், இவ்வாறு ஈட்டிய பொருளானது அவனுக்கு அறத்தையும் இன் பத்தையும் புகழையுங் கொடுக்கும், மேலும் பெரும் படையையும் நட்பையும் உண்டாக்கும், ஆகவே பகைவருந்தருக்கொழிந்து தாமே யடங்குவர், எல்லாவினைகளையும் அவனுக் கச்சமில்லாதபடி வல்லா ரையேவித் தானினி திருந்துமுடிக்கும்.

படைமாட்சி என்பது "கரிபரி யிரதந்தானையு மமைந்து கரு தழூறஞ்சுறு திகல்வேந் - திரிதரப் பொருது வெல்வதே படைதா னெய்து கூலிப்படைநாட்டுப பரிபடைகாட்டுப் பகைடதுணைப்படை கைப்படை மூலப்படையெனவாறுத் - தெரிபடை யிவற்றுட் சிறந் தது மூலப்படையிதிற் சிறந்தவர் வீரர்.—விரையவன் பகையை வெல்லும் வன்கண்மை வேந்துதா ழாவகை காக்கும் புரையறுமா னம்போரினஞ் சினரைப் பொருகடா வொளியறைபோகா - வரை யறுதேற்ற முடையாரேனும் வறுமையுஞ் சிறுமையுமு வெறுப்பு - நிரைதன் வெல்லார்தலைவரில் வழியுநேர்ந்திரும பகைவரை வெல் லார்.,, என்றருளியபடி, அப்பொருளினுல் ஆவதாய் வெல்வதாய் படையினதுதன்மை அஃதாவது யானைமுதலிய நான்குறுப்பாலும் நிறைந்து போரின்கண் ஊறுபடுதற் கஞ்சாது நின்று பகையிற் செல்வதாகிய படையே படையாகும, அப்படை கூலிப்படை - நாட் டுப்படை காட்டுப்படை துணைப்படை கைப்படை மூலப்படை என அறுவகைப்படும. இவற்றுட் சிறந்தது, மூலப்படையாகும், இதிற் சிறந்தரே வீரரெனப் படுவர் இத்தன்மைத்தாகிய படை வீரராயினேர் பகைவரைக் கடிதிற்கொன்றுநீங்குந் தறுகண்மையும் அரசனுக்குத் தாழ்வு வராமற் காக்கும் மானமும், போரின்கண் அஞ்சினரை எதிர்த்துக்கொல்லும் ஆண்மையும், பகைவராற் கீழ றுக்கப்படாத தோற்றமும் ஆகிய இக்குணங்களை யுடையரே யாயி னும், அரசன் பொருள் கொடாமையால் வறுமையுஞ் சிறுமையும் வெறுப்பும உளராயின பகைவரை வெல்லார். அப்பொருளைக் கொ டுத்தகாலத்தும அவர் வினை செய்தற்கண் தமக்குத் தலைவரில்லாத வழியும் வெல்வார்.

படைச்செருக்கு என்பது "வேலெதிர் வரினும் விழித்தகண்ணிமை யா வீறுமெய் யூறுகளுமே-யாவிய சினத்தி னூழிலாட் டயரு மாண்மையு மழியினல்லாது - சீலவஞ்சினஞ்செய்யா தமைய்த தீர மும் வேந்துசீறினுஞ் செல் - வாவியமறமு மண்கணீருகுப்ப மடித லும் படைச்செருக்காகும்,, என்றருளியபடி. அப படையினது தருகியாம். அஃதாவது, தமக்கெதிரில் வேல்வருங்காலத்தும் விழித் தகண்ணை இமையாதிருக்கின்ற வீறுப்பும், தமது மெய்யின்கண் ஊறுபடாத நாள்களையெல்லாம் பயன்படாது கழிந்த நாளாகச் சினந்து * நூழிலாட்டயர்கின்ற . ஆண்மையும் அவரைக் கொல்லே னுயின் யான் இன்னு னுருவனென்று கூறிய † ஓா வஞ்சினத்தைத்

* நூழிலாட்டென்பது தன்மெய்யைப் புதைக்கும் மாற்றார்படையைப் பறித்து அவர்மீதெறிந்து ஒடச்செய்வது. † வஞ்சினம்—சபதமொழி.

தப்பாது முடிக்கவல்ல திறமும் தம்மிறைவன் அது வேண்டாமெ ன்று முனியினும் தமது வீரமிகுதியிற் குன்றாத மறமும், தம்மை யாண்ட அரசன் தனக்குச் செய்தநன்றிகளை நினைந்து கண்களில் நீர்மல்கும் வகைபோரிடை மடியப்பெறும் பெருமையும் ஆகிய இவையனைத்தும் மேற்கூறிய படையினது செருக்காகும்.

நட்பாராய்தல் என்பது, "நன்மதி யுடைமை குடிகுணங்குற்ற நல்வினத்தாறு மெத்திறத்தும் - பன்முறை யாய்ந்து நட்பினைக் கொள்க பாம்பொடும் பழகினும் பிரித - லின்மையா மதனுலாய்ந் தலா லொருவரிடத்து நட்புறலுறி னவர்செய்-புன்மையும் பழியும் புணர்ந்திருபயனும் போக்குவதுண்மை புத்திரனே." என்றருளிய படி, மேற்சொல்லிய விலக்கணத்தாரை ஆராய்ந் தறிந்தே நடக்க வேண்டுதலின் அவரை ஆராயுந்திறம். அஃதாவது, ஒருவன் மற் றொருவனது மதியுடைமையையும குடிப்பிறப்பினையும் குணத்தினை யும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையும் எல்லாத் திறத்தி னும் பலவாற்று னாராய்ந்து நட்புசெய்வானாயின் அந்நட்பு பின்பாம் பொடுபழகிய காலத்தும் பிரிபடாத நிலைமைத்தாம். அவ்வாறு ஆரா யாதுகொள்ளும் நட்புபுன்மையையும் பழியையுந் தந்து இருமைப் பயனையும் போக்கும்.

பழமை என்பது, "கெடுதியி னுதவ வல்லவர் நட்பாற் கிளைஞ் ரிடாதோன்றனைச் செயினுங்-கெடும்வகை செய்தல் வேண்டினதா மேகெழுவுதல் பணிவச்சமின்மை-படுதரு மூழிற்புரியினுமவற்றைப் பழமையென்றறிந்துள முவப்பி - னெடுநில முழுதுங் கேண்மையா மைந்தா சேரலார்தாமுங் கேளாவார்." என்றருளியபடி, நட்டா ரது பழையராந்தன்மைபற்றி அவர்பிழைத்தன பொறுத்தல். அஃ தாவது, நெடுங்காலத்து உரிமையோடும் உதவ வல்லவராகிய நட்பி னர் தானஞ்செய்யு முதவியைச் கேளாது செய்யினுங் கெடும்வகை செய்தல் தமக்கு வேண்டினதாமே கோடல்பணிவின்மை அச்ச மின்மை என்றிவை முதலாயின ஊழ்வகையாற் புரியினும் அவற் றைப் பழையதாய்வந்த நட்பென் றறிந்து அவர் பிழையைநோக்கி விடுதல் செய்யாது விழைந்திருப்பாரைநம்மாட்டும் இவரித்தன்மை யாவரென்று யாவரும் தாமேவந்து நட்பாவர். அன்றியும அத்திரி பின்மைநோக்கிப் பகைவரும் நட்டாராவர்.

தீநட்பு என்பது, "காதலரேனும் விடுவிலமாதர் கள்வரிற் றமக் குறல் குறிப்போர்-பேதையர் கெடுதி யுற்றுழி யுதவார் பெரும்பொ

ருணைகுவித்துப் பறிப்பா-ராதருகரும் தம்பினுகாத தாகவே நடிப் பவ ருளமே-மோதலுமொவ்வார் மனக்கெழீஇ மன்றினுறப்பழிப் பாரிவர் தமையே." என்றருளியபடி, நீக்குணத்தாரோடு உளதாய நட்பு. அஃதாவது, கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள் ளும் பொதுமகளிரைப்போலவும், பிறர்கேடு நோக்காது அவர்சோர் வுநோக்கும் கள்வரைப்போலவும், நட்பளவுபாராது அதனால்வரும் பயனளவு பார்ப்போரும், எல்லாத் தீங்கினையும் பயப்பவராகிய பேதையரும், அமர்வாராத போதெல்லாந் தாங்குவது போன்று அதுவந் துழிவிட்டு நீங்குவோரும், விடர்-தூர்த்தர்-வேழம்பர் என் னுமிவர்களைப்போன்று பலவகையால் நகுவித்துத் தாம் பயன்கொ ண்டொழிவாரும், தம்மான் முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரும உள்ளமுஞ்சொல்லு மொவ்வாது வேறுவேறு யிருப் பாரும், தனியேமனைக்க ணிருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்க ணிருந்துழிப் பழிகூறுவாரும், ஆகிய விவர்கள் காதன்மிகுதியாற் பருகுவர் போன்றூராயினும் அவரைச் சிறிதாயினும் நணுகுதலைப் பறிக்கவேண்டும்.

கூடாநட்பு என்பது, "நல்லனபலநூல் கற்பினுங் கூடாநப்பி னர்மன நலனெய்தார் - சொல்லின்முன் வணங்கும் வணக்கமுந் தொழுதுஞ்சொரிந்த கண்ணீருந்தப்பாது - கொல்லும்வன் படையா மாதலிற் பகையுட்கொண்டவர்க் கவரென நீயு-மொல்லுக வதுவு நீக்குறாக் காலமுற்றிழி யல்லது வேண்டா." என்றருளியபடி, பகை மையால் அகத்தாற் கூடாதிருந்தே தமக்குவாய்க்கும் இடம்பெருந் துணையும் புறத்தாற்கூடி யொழுகுவார்நட்பு அஃதாவது, நல்லன வாகிய பலநூல்களைக் கற்றவிடத்தும் அதனால் மனந்திருந்தி நட் பாதலில்லாது கண்டபொழுது முகத்தாலினியவாகச் சிரித்து, எப் பொழுதும் மனத்தால் இன்னாதன செய்யும் பகைவரது சொல்வ ணக்கமும், அவரது தொழுகையும், அவரழுத கண்ணீரும் சொல் லானுங் கையானும் கண்ணானுந் தேற்றிப் பின்னர்த் தப்பாதுகொல் கின்றவன் படையாகும், ஆதலால் பகைமைதோன்றமற் புறத்தின் கண் நட்பினை மிகச்செய்து அகத்தின்கட் டன்னையிகழும் பகைவ ரைத்தானும் அந்நட்பின் கண்ணே யிருந்து, புறத்தின்கண் அவர் மகிழும்வண்ணஞ் செய்து, * அகத்தின்கண் அதுசாம் வண்ணம்

---

* உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவருக்குத் தகாதாயினும் பகைவ ரிடத்தானால் தகுமென்பது நீதிநூலது துணிவென்பதற்கு அதன்மேல்வைத் துச் சொல்லினர்.

பொருந்திநிற்றல் வேண்டும். அப்பகைவர் தனக்கு நட்டாராயபொழுதுங்காலம் வந்தால் தானும் அவரோடு முகத்தால் நட்பு செய்து அகத்தால் அதனைவிட்டுப் பின்னதுவுந் தவிர்தல் வேண்டும்,

பேதைமை என்பது, "பழிமுதனானார் செய்வனதவிர்வ பார்த்திடார் குடிப்பிறப் பொழுக்க-மெழில்வளர் கல்வியாதிகள் பேணாரெவரையு முறிக்குஞ் சொற்செயலார் கழிமகிழவுடையார் கெடுதிகொண் டாக்கங் கைவிடுவார்செல்வ முறினுங்-கொழிபய னெய்தார் பிறர்க்கலாற் றமக்குக் கொடாரிவர் பேதையரொழிக.,, என்றருளியபடி, யாதுமறியாமை. அஃதாவது, பழிபாவம் வறுமை யென்பவற்றிற்கு நாணாமையும், செய்வன தவிர்வன அறியாமையும், குடிப்பிறப்பு ஒழுக்கங் கல்வி முதலானவைகளைப் பேணாமையும், யாவர் மாட்டும்முறிநதசொல்லாடுஞ் செயலுடைமையும், ஆகாத வொழுக்கத்தின்கட் காதன்மையும், கேடு பயப்பனவற்றைக் கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுக்குந் தன்மையும், பெரிய செல்வத்தைத் தெய்வத்தாலெய்திய வழியும் பயனெய்தாமையும், மனமொழிமெய்கள் அடங்குதற் கேதுவாய நூல்களையோதியும் - அவ்வடக்கத்தான் வரும்பயன்களை யுணர்ந்தும் - அதனையறிய லுறப்பிறர்க்குரைத்தும் - தானவையடங்கி யொழுகாமையும் ஆகிய இப்பெற்றிகளையுடையோரைப் பேதைய ரென்று சொல்லுப.

புல்லறிவாண்மை என்பது, "தன்னை யெப்பொருளு மறிந்தவனாகத் தான்மிகமதிக்கும் புல்லறிவின்-வன்மையை யுடையானுறுதிச் சொற்கேளான் வல்லவல் லாதுங்கொண் டுரைத்துய - புன்மையைத் தெரிப்பா னவைபுரிந் துலகோர்போனடிப் பான்றனையுணர்த்து-நன் மதியினரை யறிவிலராக நாட்டுவனிவனையுநண்ணேல்.,, என்றருளியவாறு, புல்லியவறிவினை யாடற்றன்மை அஃதாவது, தாஞ் சிற்றறிவினராக விருந்தேதமமைப் பேரறிவினராக மதிக்கும் புல்லறிவினையுடையார் தமக்குறுதியாயவற்றை அறிவுடையார் கூறினுங்கேளார்: தாங்கல்லாத நூல்களையுங் கற்றாராக வுரைத்துத் தம் புன்மையை வெளிப்படுத்துவர். தங்கணிகழுங் குற்றங்களை யறிந்து கடியாது மறைத்து அவ்வளவாற்றும் உலகத்தினரைப்போல நடிப்பர், தமக்கு நல்லுணர்ச்சியை யறிவிக்கப் புகும் ஆன்றோரை யறிவிலாராக நாட்டுவர். ஆகலால் இத்தன்மையரோடு நண்ணாதிருத்தல்வேண்டும்.

இகல் என்பது "இகலைமதித் தின்னாமைபிழையியற்றினார்க்கும் புரியாபெற்-பகையுமுறவாம் பெருஞ்செல்வம் பலிக்குங்கெடாதபுக

ழுண்டா-மிகலின் மிகுந்தின் னாகியற்றினினியதருமமே திலராய்ப்-பகைமைவளரும் வலிதொலையும் பாழ்க்கும்பாழாவாழ்க்கையுமே." என்றருளியபடி, இருவர் தம்முட் பொருதுவலி தொலைத்தற் கேதுவாய மாறுபாடு. அஃதாவது, ஒருவன் தனக்கு வெறுப்பன செய்தானாயினும் அவனோடு மாறுபடுதலைக் குறித்துத் தான் அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாதிருப்பனாயின், அவனுக்குப் பகைவரும் உறவாவர். எல்லாச்செல்வமும் பலிக்கும். கொடை முதலிய காரணங்களாற் புகழும்பெறுவன். பிறரோடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று இன்னாதன செய்வனாயின் உடனே தமரும் ஏதிலராவர். பகைமை வளரும். வலி தொலையும். பொருட் கேடும் உயிர்க் கேடும் அப்பொழுதே யுண்டாகும்.

பகைமாட்சி என்பது "வலியார் பகைகொள்ளேல் சுற்றம் வலிகள் பொருணட்பே படையின்-மெலியாரச்ச மறியாமைமேவாத்தன்மை கொடையின்மை-நலியா வெகுளிமறையின்மை நனியாங்காமங்கல்லாமை-யொலியார்பழிநோக்காமை மறவுடையாரிவர்மேற் பகையுறுக." என்றாங்கு அறிவின்மை முதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப் படுத்தல். அஃதாவது, படை பொருள் முதலிய ஒற்றுமைத்துணையும் ஆகிய இருவகைத்துணையுமுள்ள வலியார்மேற் பகையா யெதிர்த்தலை யொழித்தல்வேண்டும். அவ்விருவகைத்துணையினும் சுற்றம்பொருள் நட்பு படை என்னு மிவைகளினும் மெலியராயுள்ளார், அஞ்சவேண்டாதவற்றிற் கஞ்சுவோர், அறியவேண்டுமவற்றை அறியாதார், பிறரோடு பொருத்தமில்லாதார், யாவட்மாட்டும் ஈகையில்லாதார், நலியாத வெகுளியை யுடையார், நிறையின்மையை யுடையார், மிக்கதாமதத்தையுடையார், நீதிநூலைக் கல்லாதார், தமக்குவரும் பழியை யாராயாதார், பண்பில்லாதார் என்னு மிவர்களோடு பகையாதலை யொழியாது விரும்பல் வேண்டும்.

பகைத்திறந்தெரிதல் என்பது "பாரம்பரிக்கவேண்டினும் பகைநட்பாகக் கொண்டொழுகல் - வீரந்தணியாரொடு பொரினும் வீதிநாவினரோடிகலாமை-சாருந்துணையிற் பினும்பலரைப் பகையாக்காமைத் தனிமையுறி - னேருந்துணையா விருவகையு ணீக்கியொன்றையுறவாக்கல்.—மெலிய தெனவேள வியபகையே மிகுந்துகெடுக்குமிகுத்திடும்-னலிகவினை தாழவுறிற் றெளிர்தல்லா ரெனவுந் தெளியாத - பலினரெனவு னொதுமலரே மருவலொழுதல்புரியற்க - வலிசெய்படையா திகள்பெருக்க வகையாய்ந் திருக்க பகைமையற." என்றருளியபடி பகையதுதிறமும் பகையிடத்தார்க்குந் திறமுமாராய

தல். அஃதாவது, தனக்குவேண்டிய வழிப்பகையை வேறுபடுத்து நட்பாகச் செய்து கொண் டொழுகலும், வீரமே யுடையாரோடு பகை கொள்ளாமையும், சுற்றம்-நட்பு-படைமுதலிய துணையில்லா தவழியும் இருந்தவழியும்பலரோடு பகைகொள்ளாமையும், தனக்குதவிசெய்யுந் துணையில்லாத காலத்தும் பகையிரண்டாயின் அதி லொன்றை வெல்லுமாறு மற்றொன்றை யுறவாக்கிக் கொள்ளுதலும் ஆகியவித்திறக்களை அரசன் இயல்பாக வுடைய னுதல்வேண்டும், அன்றியும் தான்மெலியதென்று இகழ்ந்தபகையே பின்னர் வலிய தாய்த்தன்னைக் களையலுறுமாதலால் அவ்வாறுகாமுன்னம் அது மெலியதாய காலத்தே களைதல் வேண்டும். தனக்குப் புறத்தொரு வினையாற் றாழவுவந்துழித்தன் பகைவனை முன் தெளிந்தானாயினும் தெளிந்திலனாயினும் அவனை நொதுமலாக்கி அவனோடு கூடுதலையும் பிரிதலையும் ஒழித்தல்வேண்டும். * பின்னர் அப்பகையைக் களைய வேண்டின் பொருள் படையாதிகளைப் பெருக்கித் தான் அப்பகைக் கெதிரே பொருதாற்றினை யாராய்ந்து, தான்வலியனாய வளவிற்களை தல் வேண்டும்.

உட்பகை என்பது "தமரா யிருந்து புறப்பகையைச் சார்பாங் காலம்வருமளவு - மமரா நிற்கு முட்பகையை யஞ்சிக் காக்க வுழிற் கடிக-தமரா மெனவே கண்ணோடி னல்லவமைச்சா தியைத்தேய்க் கு-றுமுறா மினத்தைத்தணப்பிக்கு நன்னைக் குடியோ டெளிதழிக் கும்." என்றருளியபடி புறப்பகைக்கு இடனாக்கிக்கொடுத்து அது வெல்லுந் துணையும் உள்ளாய் நிற்கும்பகை. அஃதாவது, புறத்து உறவுமுறைத் தன்மையோடுங்கூடி அமைச்சர் முதலிய உறுப்புக ளைத் தேய்ப்பாரும் சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்து வாரும், தன்குடிக்குத் தீங்காற்றி யழிப்பாரும், உட்பகையாராத லால் அவரையஞ்சி அவரணையாமலும் அவர்க்குடம்படாமலும் தன் னைக் காத்துக்கொண்டொழுகல் வேண்டும். ஒருகாற் கூடுவராயின் உடனே அவரைக் கடிதல் வேண்டும்.

பெரியாரைப் பிழையாமை என்பது "ஆற்றன் மிகுந்த வேந்த ரையு மரியதவத்து முனிவரையும் - போற்றியொழுகி னெப்பொரு ளும் போற்றலாகு மவமதிப்பிற் - றேற்ற மிகுஞ்சார்பினரேனுஞ்

* முன் தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிகவென்றது உள் வாய்நின்று கெடுத்தலோங்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது பிரியா தொழிகவென்றது அவ்வழுவிற்குத் துணையாதனோக்கி ஒழித்தல் வேண்டு மென்றார்.

சினைவர் திகழ்முப்புரச்சூரன்-சாற்றிற் றிரன்மா லாதியருந் தளர்ந்தா ரெனிற்சாற்றுவதென்னே." என்றருளியபடி, பெரியாரயினாரை அவமதித்தொழுகாமை, அஃதாவது, பெருமை அறிவு முயற்சியென்னு மூவகை யாற்றல்களுமுடைய வேந்தரையும் தவத்திற்சிறந்த முனிவரையும்போற்றி யொழுக வல்லார்க்கு அவரீட்டிவைத்த வெல்லாப் பொருள்களும் விருத்தியடையும். அவமதிப்பார்க்கு அரண்-படை-பொருள் - நட்பு என்னும் இச்சார்புகளிருந்தும் அழிந்து விடுவர். இப்பிழையொன்றனால் திரிபுரன்சூரபன்மன் முதலிய அசுரர்களும், இந்திரன் திருமான் முதலிய தேவர்களுந் தளர்ந்தன ரென்னில் இன்னு மெவ்வாறுரைக்கற்பாலது.

பெண்வழிச் சேறல் என்பது "தன்னு லாளப்படுமனைவி தன்னு லாளப்படுவானே-லன்னாற் கறனும் பொருளு முள வாகா தொல்லைப் பொருளானு-மன்னு பயன்கள் விளைமுடியா மறுமை யனுகா தெப் பிழையு-முன்னும்பின்னும் பெருநாணு மூவாப்பழியு மறிமைந்தா." என்றருளியபடி, தன்வழியொழுகற் பாலளாய இல்லாள் வழியே தானொழுகல். அஃதாவது, ஒருவன் இன்பங்காரணமாகத் தன்மனையாளை விழைந்து அவள் தன்மையனா யொழுகுவானெனில் தனக் கின்றுணையாய அறம்பொருளையெய்தான். செல்வமிகுந்த காலத்தும் ஈதல் துய்த்தல் முதலிய பயன்களைக் கொள்ளான். மறுமைப் பயனையும் அணுகப்படான் எல்லாப் பிழையும் அவனுக்குமுன்னிற்கும். பின்னர் அஃது பெரியனாயினும் அழியாப்பழியும் அவனுக் குண்டாக்கும்.

விரைவின்மகளிர் என்பது "எழிலாற்பாட லாடலினு லிச்சை பெருக்கி யுளமொவ்வா - மொழியிற் செயலால் வயமாக்கி முற்றும் பொருளைப்பறித்துவிடும் பழிநாணுத பரத்தையரைம் பற்றாய்ந்த பண்புடையா - ரொழியாரவரைப் பேதைமையிலொழியாரே மகண் டனே.,, என்றருளியபடி, தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவில்லாத மகளிரது இயல்பு அஃதாவது, ஆடல் பாடல் அழகு என்பனவற்றால் ஆடவர்க்கு இச்சையைப் பெருக்கி உளமொவ்வாத சொற்செயல்களாற் றம்வசமாக்கி முற்றினும் பொருளைப் பறித்துவிடுகின்ற பழிநாணுத பரத்தையர் முயக்கத்தை யொழியாதவரை ஆய்ந்து செய்யும் அறிவினையுடையார் நீண்டார்.

கள்ளுண்ணாமை என்பது "அறிவையழிக்குஞ் செயலையழிக்கு மழியாமானந் தனையழிக்குஞ்-செறிவு மறினூர் மதியாத செருக்கை



விளக்கு மீன்றுறு - முறியும் வெறுப்புமிகவிளைக்கு முனிவுவிளைக்கும்பகையஞ்சாக் - குறிகள் விளைக்கு ககைவிளைக்குங் கொள்ளேல் கள்ளுண்டலைமைந்தா.,, என்றருளியபடி கள்ளினையுண்ணுமையினது சிறப்பு. அஃதாவது, ஒருவன் கள்ளின்மேற் காதல் செய்தொழுகுவனுயின், அது அவனது அறிவையுஞ்செயலையும் மானத்தையும் அழிப்பதன்றிச் சான்றூரால் மதிக்கப்படாத செருக்கினை விளைக்கும். யாதுசெய்யினும் உவக்க வல்ல ஈன்றுளும் மனமுறிவள். யாவர்க்கும் வெறுப்பையுங் கோபத்தையும் உண்டாக்கும். பொருள் படை முதலியவற்றுற் பெரியனுய காலத்தும் அறிவின்மையாற் பகைவர் அஞ்சார். உள்ளூர் வாழ்பவரால் எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவதென்க.

சூது என்பது "வென்றிவறினு மதனைன்முன் மேவுமொன்றற் காயிரம்பின் - மன்ற விழக்கு மதுவன்றி வைத்த பொருளும் வருவாயு - மன்றி யனைத்தும் பகைகொள்ளுமமைச்ச ராதியுறுப்பொழியு - மொன்று மொளிகல்விகண் மறுமையுறுதி யிலையாஞ் சூதாடேல்.,, என்றருளியபடி, அக் கள்ளுண்ணல போல அறம்பொருளின்பங்கட்கு இடையீடாகிய சூதினையாடல். அஃதாவது, சூதினையாடுவான் தான் வெல்லுமாற்ற லுடையானுயினும் அவ்வென்றபொருள் ஒன்றுக்கும்பின் தானெய்திய பொருள் ஆயிரமாக அழியும். அதுவன்றித் தானீட்டிய பொருளுந் தன் பொருள் வருவாயுங் கெடும். அதுகண்டு யாவரும் பகையாவார். அமைச்சர் முதலிய உறுப்புக்களும் ஒழியும், ஒளி-கல்வி-செல்வம்-ஊண்-உடை என்னுமிவைகளோடு மறுமைப்பயனு முண்டாகாது.

* மருந்து என்பது "மனமெய்ம் மொழிகள் வருந்தாமல் வருத்துத் தொழிலை மாறுபடா - வினிய வுணவை மிகப்பசித்த விடத்தி

* நத்தாவது பிணியுற்றவன், அதனைத் தீர்க்கு மருத்துவன், அவனுக்குக் கருவியாகிய மருந்து, அதனைப் பிழையாமையியற்றுவான் என நான்கு பகுதியை யுடைய நான்கு திறத்ததாம். அவற்றுள் உற்றவன் வகை நான்காவன:—பொருளுடைமை, மருத்துவன் வழி நிற்றல், நோய் நிலை யுரைத்தல் வன்மை, வருத்துன்பம் பொருத்தல் என விவை. தீர்ப்பான் வகை நான்காவன:—பல நோய் காண்டற் கஞ்சாமை, ஆசிரியனைவழிபட்டோதிய கல்வியுநுண்ணறிவு முடைமை, பலகாலுந் தீர்த்து வருதல், மனமொழி மெய்கள் தூயவாதல் என விவை. மருந்தின் வகை நான்காவன:—பல பிணிகட்கு மேற்றல், சுவை-வீரியம்-விளை வாற்றல்களான் மேம்படுதல். எளிதினெய்தப் படுதல், பகுதியோடு பொருந்துதல் என விவை. இயற்றுவான் வகைநான்கா

னுடற்குப் பொருந்தவுணுண்-முனிசெய் பிணிகட்கிடனின்றி முறைகள் பிறழ்ந்துவந்துவிடிற் - புனிதமுடைய வயித்தியரால் வழி நின்றவற்றைப் போக்குகவே.,, என்றருளியபடி, பழவினையாலுங் காரணங்களாலும் மக்கட்கு வாதமுதலிய பிணிகள் வரும் அவற்றுள் பழவினையால் வருவன அதன் கழிவின்கணல்லது தீராமையின் அவையொழித்து ஏனைக்காரணங்களால் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் நால்வகைத்திறம். அஃதாவது, † உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்த அளவினவன்றி அதனின் மிகுமாயினுங் குறையுமாயினும் ஆயுள்வேத முடையோரால் வாதநோய் பித்தநோய் ஐயநோய்என்று சொல்லப்பட்ட மூன்றுநோயும் அவனுக்குத் துன்பஞ்செய்யுமாதலால் மனமொழி மெய்களாலாய தொழில்களைச் செய்யுங்கால், அவைகள் வருந்தாமல் முன்னுண்டது அற்றபின்னுண்பதனை அறுமளவறிந்து ‡ மாறுகொள்ளாத இனியவுணவை மிகப் பசித்தவிடத்துத் தன்னுள்ளம்வேண்டிய வளவினனன்றிப் பிணிவாரா வளவினால் உண்ணல்வேண்டும். அவ்வாறுண்ணிற் பிணிகளாற்றுன்பம் விளைதலுண்டாகாது. ஒருகால் அம்முறைகள் பிறழப் பிணிநேருமாயின் * ஆதுல னளவினையும், அவன்பால் நிகழ்

---

வன:—ஆதுலன் மாட்டன் புடைமை, மனமொழிமெய்க ளேவலாதல், சொல்லியன அவ்வாறேசெய்தல் வன்மை, அறிவுடைமைஎன்னிவை. இவையெல்லாங் கூடிய வழி யல்லதுபிணி தீராமையின் இத்தொகுதியையும் மருந்தென்றார்.

† அவைகட்கு உணவொத்தலாவது:—சுவை-வீரியங்களானும், அளவானும் பொருந்துதல். செயல்களொத்தலாவது:—மனமொழி மெய்களாற்செய்யுந் தொழில்களை அதை வருந்துவதற்கு முன்னே யொழிதல்.

‡ மாறுகொள்ளாமை யாவது:—உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களாற் றம்முண் மாறுகொள்ளாமையுமாம். அவையாவன:—முறையே வாதபித்த ஐயங்களினுடைய பகுதிக்கு அடாதவற்றைச் செய்வன வாதலும், பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவனபிறிதொன்றற் காகாமையும், தேனு நெய்யுந் தம்மு ளொத்து நஞ்சாதல் போல்வனவுமாம்.

* ஆதுலன் அளவாவது-பகுதி, பருவம், வேதனை, வலிகளினளவாம். பிணியளவாவது சாத்தியம், அசாத்தியம், யாப்பியம் என்னுஞ் சாதிவேறுபாடும், தொடக்கம்-நடு-ஈறு என்னும் அதன்பருவ வேறுபாடும், வன்மை-மென்மைகளு முதலாயின வாம். இவற்றுள் சாத்தியம்-தீர்க்கத் தக்கது. அசாத்தியம்-தீர்க்கத்தகாதது, யாப்பியம் பெரும் பான்மை தீர்க்கத் தக்கதும் சிறு பான்மை தீர்க்கத் தகாததூ மெனக் கொள்ளத்தக்கது, காலவளவாவது, மேற் சொல்லியனவாம்.

கின்ற நோயினளவினையும், தன் செயற்கேற்றகாலத்தினளவினையும் முனெறியாலும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்ய வல்ல வைத்தியன் வழிநின்று அப்பிணியை யொழிக்க வேண்டும்.

குடிமை என்பது "உன்னன் மொழிதல் செயன் மூன்றுந் தொடக்கம் வாய்மை நாணிழுக்கார் மன்னு மனையிற் பிறந்தார்கண் மலர்கவிகை யிகழாமை - நன்னர் மொழிபு மவர்க்கேயா நன்மை பயவா வினைவறுமை யின்னவிடத்தும் புரியார்களேம கண்டாவினி யறிமோ. ,, என்றருளியபடி, உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை. அஃதாவது, எக்காலத்துந் திரிபிலலாத குடியின்கட் பிறந்தார் கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முண்மாறுகாது ஒத்திருக்கின்ற வொழுக்கம், மெய்ம்மொழி, நாண் எனப்பட்ட இம்மூன்றன்கண்ணும் கல்வியா னன்றித் தாமாகவே வழுவார். அவரே தம்மை வறியா ரடைந்தவழி முக மலர்தலும், உள்ளன கொடுத்தலும், இகழாமையும், இன்சொற்சொல்லுதலும் ஆகிய இந்நான்கு முடையார். அவர்கள்வறுமையுற்றவழியுந் தம மொழுக்கங் குன்றுந் தொழில்களை செய்யார்.

மானம் என்பது "பெருக்கத் தயர்வாம் பணிவொழியல்பே றுப்பணிவு சுருக்கத்திற்-செருக்கலின்றி யமையாத சிறப்பிற்றேனு முயர்மான - முருக்கும் வினைபைச் செயவினையன் மொய்ம்பார் மானங் கெடவூழவர் - துருக்குமெனிற்சாமரைமானையுன்னலேமகண்டனே.,, என்றருளியபடி, எஞ்ஞான்றுந் தன்னிலைமையிற் றாழாமையுந் தெய்வத்தாற் றாழவு வந்துழியுயிர்வாழாமையுமாம். அஃதாவது, குடியிற் பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாயவழியாவர் மாட்டும் பணிவு வேண்டும். குறைந்த நல்குரவு உளதாய வழிப் பணியாமை வேண்டும். தங் குடிப் பிறப்புத் தாழவருஞ் செயகைகளைச் செய்யாதவழி அவைதாம் அமையாத சிறப்பினை யுடையவே யெனினுந் தமதுமானத்தை முருக்கவல்ல அச்செயல்களை யொழித்தல்வேண்டும். தமதுவலியாகிய அம்மானம் ஊழின வலியால் அழியுமெனில் தன்மயிர்த்திரளின் ஒருமயிர்நீங்கினும் உயிர்வாழாத கவரிமானை யொத்திருத்தல் வேண்டும்.

பெருமை என்பது "ஐது குடியிற் பிறந்தருறா லாய்ந்துசெலவத் துயர்ந்ததனு - லெய்த லரிதுபெருமையஃதெய்துங் கொடையொப்புரவாதி - செய்தற்கரிய செய்துபிறர் செயிற்கூறுமற் றருக்கா ம-ஓய்ந்து நெறியிற் பிறழாம லொழுகுவார்க்குள் ளதினைமாக-

என்றருளியபடி, பெரியாராந்தன்மை அஃதாவது, ஒருவன் உயர்ந்த குடியினகட் பிறந்து அருநூல்களையாராய்ந்து செல்வத்திற் சிறந்தானேனும் அளவிறந்த ஈகை ஒப்புரவு முதலியவைகளாற் பிறராற் செயற்கரிய செய்து, பிறர் குற்றங்கூறுமலுங் தருக்காமலு மிருந்து தனது நெறியிற் பிறழாமல் தன்னைத்தான்காத்துக்கொண் டொழுகானெனில் அவனுக்குப் பெருமை யில்லையாம்.

சான்றாண்மை என்பது "அன்பொப்புரவு கண்ணோட்டமழியா வாய்மை நாணுதி-யின்பம் பெருக்கு நற்குணங்களெல்லா நிறைந்த சான்றோர்க-ளெனபுற் றவர்க்கு மினியனவேசூழ்வர்துணையின் வினை முடிப்பர்·வன்பிற றளரார் நட்டார்க்குமடங்கித்தோற்ற றானே.,, என்றருளியபடி, பலகுணங்களாலு நிறைந்து அவற்றை யாளற் றன்மை, அஃதாவது, சுற்றத்தார் மேலேயன்றிப் பிறர் மேலுமுள தாய அன்பு, யாவர் மாட்டும் ஒப்புரவு செய்தல், பழையார் மேற் கண்ணோடல், பழிபாவங்களி னாணல் முதலிய நற்குணங்களால் நிறைந்த சான்றோர்கள் தமக் கின்னாதனவற்றைச் செய்தார்க்கும் இனியவற்றையேசெய்வர். ஒருகருமத்தைச் செய்துமுடிக்கப்புகின் அதற்குத்துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுவர். கடலுங் கரையு ணில்லாமற்காலந்திரிந்தாலுந் தாந்திரியார், தம்மினுயர்ந்தார் மாட்டுக் கொள்ளுந் தோல்வியை இழிந்தார மாட்டுக் கொள்ளுவர்,

பண்புடைமை என்பது "ஆன்ற குடியன் பெண்பதகல் லறநீ திகளின் வழுவாமை-சான்ற மக்கட் பண்பாகுந் தன்னை யுடையார் நகையாலு-மான்று மிகழார் பகையிடித்து மதியா ரவர்த நற்குண மே-யேன்ற வுலகம் பாராட்டு மெல்லாப் பயனு மவர்மாட்டாம்.,, என்றருளியபடி, பெருமை சான்றாண்மைகளிற் றாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளு மறிந்து ஒதொழுகல். அஃதாவது உலகத்தோ டமைந்த குடியினகண் பிறத்தலும், பிறர்மே லன்புடைய ராதலும், யாவர்மாட்டும எளிய செவ்விய ராதலும், அறத்தினும் நீதியினும் வழுவாதிருத்தலும் ஆகிய இப்பண்புகள் சான்றமக்களது பண்பாகும், இதனையுடையவர் ஒருவரை விளையாட்டின் கண்ணு மிகழார். பகையிடத்தும் அதனைப் புரியார், அத்தன்மையராது நற்குணத்தையே உலகத்தார் கொண்டாடா நிற்பர்.

நன்றியில் செல்வம் என்பது "வைத்துப் பொருளைத் தானுக ரான் வழங்கா னிருந்துஞ் செத்தானே - செத்தபின்ன றென்செய் வான் றீயார்கொள்வ நீட்டுதலான் - மெத்தும் வருத்தமேயன்றி

வேறொன்றில்லையாதலினாற்-பொத்தும் வெறுக்கை நன்றியுறல் புசித்துவழங்கலேயாகும்.,, என்றருளியபடி, ஈட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத * செல்வத்தினியல்பு அஃதாவது, தன்மனையெல்லாம்நிறைதற்கேதுவாயபெரும்பொருளை ஈட்டிவைத்தும்உலோபத்தால் அதனை யுண்ணாதவனும் பிறர்க்கீயாதவனும, உயிரோடிருந்தானாயினும் இறந்தவனோடொப்பான். அன்றியும் அவன் செத்தபின்பு அதனைத் தீயார் கொண்டுபோய்ப் பயனபெறுவரல்லது அக்காலத்து அவனென்செய்ய வல்லன. ஆதலால் அறனும் இன்பமுஞ் செய்துகொள்ளானுக்குப் பொருளினை ஈட்டலுந் துன்பமேயாம்.

நாணுடைமை என்பது "இழிந்த தொழிலி னாணுவதே யெய்தற்கரிய நாணென்ப - மொழிந்த மனவாக் குடலொடுக்க மொளிவா ணுதலார் நாணேயாங்-கழிந்து விடநாண் மானங்கோடல் கருதார் நலமெல்லாம்வளர்ப்பா - ரழிந்துநாண்மற் றுயிர்வாழா ராவி யழிந்து நாணுள்வார்.,, என்றருளியபடி, மேற்சொல்லிய சார்பு பண்பு முதலிய குணங்களா னுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையாராந்தன்மை. அஃதாவது, இழிந்தகருமங் காரணமாக நாணுவதே எய்தற்கரிய நாணென்று சொல்லப்படும், அஃதன்றி மனமொழிமெய்கள் ஒடுக்கத் தான் வருவனவெல்லாம் அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண்களாம், ஆதலால் நன்மக்களாயினோர் தமக்கேமமாக நாணினைக் கொள்வதன்றி, அகன்ற ஞாலத்தைக கொள்ளவும் விரும்பார். அந்நாணொன்றினால் தமது பிறப்பு கல்வி-குணம்-செயல்-இனம்-என்பவைகளை வளர்ப்பார். மேலும், அவர்நாண்சிதையாமற்பொருட்டு உயிரைநீப்பரேயன்றி உயிர்சிதையாமற்பொருட்டு நாணினை நீக்கார்.

குடிசெயல்வகை என்பது "எடுத்த கரும முற்றுமை யெய்தின் முடித்தே விடுவலெனத் தொடுத்த முயற்சி யறிவி ரண்டிற் றோலா துயர்வார் குடிசெய்வா-ரடுத்த பருவங் குறித்துமடியாக்கி மானங் கருதுவார் - கெடுத்தல்புரிந்தா லாதலினாற் கிளரக் குடியூன்றலின் மைந்தா.,, என்றருளியபடி, ஒருவன தான்பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம். அஃதாவது, தன்குடிசெழித்தற் பொருட்டுத் தொடங்கிய கரும முற்றாதாயின, யானெண்ணியகருத்தை முடித்தேவிடுவேனென்று முயற்சியும், அறிவும்என்று சொல்லப்பட்ட

செல்வக்காலை அஃதுயர்ச்சி செய்யத் தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வுசெய்யத் தாழுயர்தலும் வேண்டு மென்பதாம்.

இரண்டினுள்ளும் கெடாது உயர்ந்தவனே தன்குடியினை உயரச் செய்வானவன். அச்செயலை நோக்காது † காலத்தை நோக்கி மடியினைச் செய்துகொண்டு மானத்தையுங் கருதுவனாயின் அதனைக் கெடுத்தோனாவன். ஆதலால், தன்குடி ஒருபற்றின்றி வீழாநிற்குங் காலத்துப் பற்றுவன கொடுத்து அதைத் தாங்கவல்லவனே நல்ல ஆண்மகனாகும்.

உழவு என்பது "உழுவித்திருவ ரிருவருழுவித்து முழுதுமுண லாகு முழுதுண்பவரே தமக்குரிய ருபகாரியரென் பாவரே - தொழுதுண் பவரே பிறர்க்குரியார் றொழின்முற்றூழ்ந்து முழவினர்பான் - முழுது மடுப்ப வேண்டுதலின் முதன்மைத்துழவென்றறிமைந்தா,, என்றருளியபடி, சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதற்றொழில், அஃதாவது, அந்தணர் - அரசர்-வணிகர்-வேளாளர் - என்னுநால்வகைவருணத்தாருள் முன்னிருவரும் உழுவித் துண்ணலாகும், பின்னிருவர் உழுவித்தும் உழுதும் உண்ணலாகும். ஆதலால், யாவரும் உண்ணும்வகை உழுதலை செய்து அதனாற்றாமும்உண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர். அவரே தம்மை இரப்பார்க்கு அவர்வேண்டிய தொன்றனைக் கரவாது கொடுப்பவர். மற்றையரெல்லாம் தாமும் மக்கட்பிறப்பினரா யிருந்தும் பிறரைத்தொழுது அவர் சில கொடுப்பத் தமு யிரோம்பி அவர் பின்சொல்லற் குரியர் அன்றியும உழுதலாகவரும் மெய்வருத்தநோக்கிப் பிறதொழில்களைச்செய்து திரிந்து பொருளெய்தினும் முடிவில் தம்முணவின் பொருட்டு உழுவார்கட் சொல்லவேண்டுதலின் எத்தொழிலினும் முதற் றன்மைத்தாயது உழவேயாம்.

நல்குரவு என்பது " வறுமை போல வின்னாது வறுமை யன்றி வேறில்லை -மறுவின் மொழிகள் சோர்வுபடும் வாய்த்த குடிநற்செயன் மொழிக-ளிறுதிபடுமற் றிரப்பாதி யெல்லாத் துயரு முடனாகும்-பிறவினோக்கு மீன்றாருமபிள்ளா யதுவாக திடினிறத்தில்,, என்றருளிய படி, நுகரப் படுவன யாவுமில்லாமை, அஃதாவது ஒருவனுக்கு வறுமைபோல இன்னாதது வறுமையே யன்றிப் பிறிதில்லை. அவ்வறுமையானது இழிந்த சொல் பிரவாத குடிப்பிறந்தார் மாட்டேயும்

† காலத்தை நோக்கி மடிசெய்தலாவது-வெயில்-மழை-பனி என்பன உடைமை நோக்கிப்பின்னர்ச்செய்துமென்றொழிந்திருத்தல்.மானங் கருதுதலாவது - இக்குடியிலுள்ளார் யாவரு மின்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானோவென்று உட்கோடல்.

அதுபிறத்தற்கேதுவாகிய சோர்வினை யுண்டாக்கும், தன்னாற்பற்றப் பட்டாருடையபழையகுடி வரவினையுஞ் செயலினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கேகெடுக்கும், இரத்தல் முதலிய எல்லாத் துன் பங்களையும் * விளைவிக்கும், அதனாற்றன்னை யீன்ற தாயாலும் பிற னொக்கருதுமாறு போலக்கருதி நோக்கப்படும், ஆதலால் அது வந்த வழி இறத்தலே நன்றாம்.

இரவு என்பது "குறிப்பி னுணர்ந்து மொழியாமுன் கொடுப் பார்முன்னின் றிரந்துயிரைத் - துறப்பதின்றிச் சிலர்வாழ்வர் துய் மைமானங் கெடாமையினு - சிறப்ப வுயர்ந்த கொடையுமையிரேயெ னினுமிரப்பா ரில்லாக்காற் - சிறப்பென் பெறுவ ரவராலே சிறப்பர் கரவா தவர்மைந்தா,, என்றருளியபடி, மேற்கூறிய இரத்தலை விலக் குவதாய மானந்தீரா விரவு, அஃதாவது, இவ்வுலகத்துள் இரத்தற் கேற்புடையராய சிலர்தம்மைக் குறிப்பினுணர்ந்து மொழியா முன் னங் கொடுக்க வல்ல ஈவார் மாட்டிரத்தலால் தங்கள் ஒருக்கமும் மா னமுங் குன்றுதலைகை தங்களுயிரைத் துறத்தலின்றி வாழ்ந்திருக் கின்றனர், மேலும் ஒருவன் தானியற்றுங் கொடையின்கண் அளவிற் சிறந்தானாயினும் அவன்பாற் சென்று ஒன்றனையிரந்து கோடலை விரும்புவாரில் வழி அவன்மாட்டு என்னபுகழுண்டாம், ஆதலால் ஈவா ருக்கு இரப்பா ரில்லாது புகழில்லை,

இரவச்சம் என்பது "கண்ணிற்சிறந்தார் தம்மிடத்துங்காழ்த்த மானக்கெடாவாற் - பண்ணற்குறிய வறங்குறித்தும் படர்ந்தொன் றிரவார் பெருமையினு-லெண்ணிச் சிறந்தார் முயற்சியினு லேவாவுப் பில் வறும்புற்கை - யுண்ணற்கமைந்த தமைத்ததெனை வுவப்பரேம கண்டனே.,, என்றருளியபடி, மானந்தீர வருமிரவிற்கஞ்சுதல், அஃ தாவது, தமக்குள்ளதுகரவாது இவர் வரப்பெற்றேமென்று உண்ம கிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தாரேனும் அவர்மாட்டு ஒரு வன் மானங்கெடத் தன்னாலிலை அறத்தைக்குறித்தேனு மிரவாது நிற்றல் அவ்வறந்தான் பயனெய்தலிற் கோடிமடங்குநன்றாம், ஆத லால் நுகரவேண்டுவன வின்றி நல்கூர்ந்த வழியும்பிறர்பாற் சென்றி ரத்தலை யுடம்படாத அமைதி எல்லாவுலகும் ஒருங்கியைந்தாலுங்

* எல்லாத் துன்பங்களையு மென்றதுசெல்வர்களைநொக்கிச் சோற்றுன் பமும் அவரைக்கண்டாற் றுன்பமும், கண்டான் மறுத்துழி நிகழுந் துன்ப மும் மறுதவழிஅவர் கொடுத்தது வாங்கற்றுன்பமும் அது கொண்டுவந்து நுகர் வன கூட்டற் றுன்பமு முதலாயின.

கொள்ளாத பெருமையுடைத்தென்பர் அறிந்தவர்கள் தமது நெறியாய முயற்சி கொடுவந்து தந்தது சேறின்றித் தெளிந்த நீர்போலும் அடுபுற்கை யாயினும் அதனை அமிழ்தத்தோடொக்க நினைத்து மனமுவப்பர்,

கயமை என்பது "அழுக்கற் றெவர்க்கும் வடுக்கண்பா ரச்சமாசையாலன்றி - யொழுக்கப் புரியார்மறைபிறர்பா லுய்த்துமொழிவார் தம்போல - விழுக்குக் கேடுங் கவலார்மு னேற்றமாகிச் செம்மாப்பார்-மழுக்கு ளார்க்கே பயனபடுவார் வறிதும் வறியார்க்கிடார் கயவர்,, என்றருளியபடி, அறமபொரு ளிரண்டனுள்ளும் இதுகாறுங் கூறப்பட்ட குணங்களுள் யாதுமிலராய்க்கீழாரது தன்மை. அஃதாவது, ஒருவன் தனது செல்வத்தாற்பட்டுத் துகிலு முடுத்தலையும் பாலோடடிசி லுண்டலையுங்கண்டு அவற்றைப்பொறாது அவன்மாட்டுவடுவில்லையாகவும் உண்டாக்கவல்லவன் கயவனும் அவன் அரசனால் ஏதம்வருமென் றஞ்சு மச்சத்தானும் தன்னால் அவாவப்படும் பொருளதனானுண்டாகு மென்னு மாசையானுமே யன்றித் தன்னியல்பின் ஓர் ஆசாரம் புரியான். ஒருவனுற்றான் கேட்டமறைச்சொற்களை இடந்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுவான். தன்னிற் சுருங்கிப் பட்டியா யொழுகுவாரைக் கண்டானாயின் அவ்வொழுக்கத்தின்கண் அவரிற்றான் மேற்பட்டு அதனாற் றன்மிகுதி காட்டி இறுமாப்பன் தானுண்டு பூசிக் கையைத் தெளித்தல்வேண்டுமென்று மெலியராயுள்ளார் இரந்தாலுந் தெளியான். இவ்வுலகத்துள் அவன் எற்றிற்குரியனென்னில் உணவின்மை முதலிய எவற்றாலேனுந்தன்னை யொருதுன்பமுற்றக்கால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தன்னைப்பிறர்க்கு விற்றற்குரியனே யன்றி வேறெத்தொழிற்கும் உரியானல்லன்.

இவ்வாறு அரசநீதியை அறத்தாற்றினாற்செய்து அகிலத்தைக் - காத்துப் பொருளீட்டவல்ல திறத்தினை யெல்லாம் தக்கனுக்கு முற்கலமுனிவர் உபதேசித்தபின்னர், அத்தக்கன் அவையனைத்தையுஞ் செவிக்கமுதாகக் கேட்டு வாசனையூட்டியதாம் பூலாதிகளை வைத்து அஷ்டாங்கமாக நமஸ்கரித் தெழுந்து பிராமணர் முதலான பெரியோர்கட்கு அளவற்றதானங்களை நடாத்தி ஆதுலர்க்குச்சாலை-ஓதுவார்க்குணவு - அறுசமயத்தார்க்குண்டி - பசுவுக்குவாயுறை - சிறைச்சோறு - ஐயம் தின்பண்ட நல்கல் - அறவைச்சோறு-மகப்பெறுவித்தல்-மகவுவளர்த்தல்-மகப்பால் வார்த்தல் - அறவைப்பிணஞ்சுடுதல் - அறவைத் தூரியம் சுண்ணம்-நோய் - மருந்து - வண்ணார் - நாவிதர் -

கண்ணாடி-காதோலை-கன்மாநந்து-தலைக்கொண்ணெய்- பெண்போகம் பிறர் துயர் காத்தல்-தண்ணீர்ப்பந்தல்-மடம் தடம்-சோலை - ஆவுரிஞ் சுதறி-விலங்கிற்குணவு-ஏறு விடுத்தல் - விலைகொடுத்துயிர் காத்தல் - கன்னிகாதானம் என்கின்றமுப்பா னிரண்டறங்களையுமியற்றி அள வற்ற தேவாலயங்கட்குத் திருப்பணிமுதலியவைகளை நடப்பித்து, உமாதேவி சரஸ்வதி இலக்குமி முதலிய சத்தியாலயங்கட்கு மங்கி லியம் ஆடையாபரணாதிகளை வரிசைதந்து, அதிதைவா பிராமணர் கட்கெல்லாம் ஆகமவிதிப்படி பூசனைபுரிந்து, அமைச்சர் முதலாயி னோர்க்குத்தேர்கரிபதாதி நிலம் முதலியவைகளை வெகுமதிசெய்து சிவாலயங்கட்கெல்லாந் திருவிழாக்கள் நடப்பித்து, ஆகாயமுகட்டை யளாவத்தக்க கோபுரங்களோடும் ஓராலயமெழுப்பி, அதில்கணேச மூர்த்தியைப் பிரதிட்டைசெய்து முற்கலமுனிவரால் விதித்த விதி யின்படி தினந்தோறும்பூசனைகளை நடாத்தி, வயிற்றிற்சுமக்காது பெற்றதாயாகிய சுலையையின் பாதத்தையுஞ்சுமந்து பெற்றதாயா கிய கமலையின் பாதத்தையும் இடைவிடாதுபணிந்து, எத்திக்கினுஞ் சத்துருக்களில்லாதபடி இவ்வுலகத்தை யெல்லாந் தனதொருகுடை நீழலி விருத்தி, நீதிநெறி தவறாமல் தேவேந்திரனைப்போலச் சகல போகங்களையு மனுபவித்து, அரசாட்சிசெய்து எல்லா வுயிர்களையு மாதரித்து வந்தான். அக்காலத்தில் அத்தக்கனுடைய தந்தையாகி யுங்கருநாட தேயத்திற்கரசனாகியு மிருக்கின்ற வல்லவராசனானவன் தனதுகுமாரன் சகலவியாதிகளு நீங்கப் பெற்று நல்ல கீர்த்தியோ டும் விதர்ப்ப தேயத்தை யாண்டுகொண் டிருக்கிறானென்று கேள்வி யுற்றுத்தனது சேனாசமுகத்தோடும் அங்குவந்துபுதல்வனைக்கண்டு, அளவளாவி மிகுந்த மகிழ்ச்சியோடுங் கலந்திருந்தான். மற்றைய ருஞ் சந்தோஷமாகச் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள்.

பின்னர் வீரசேனனென்னும் ஓரரசன் சொர்ப்பனத்தில் விநா யகக்கடவுளெழுந்தருளி, அன்பனே! உனதுகுமாரத்தி முற்சனனத் திற் செய்திருக்கின்ற பூஜாபலத்தினால் அவளைத்தக்கன் விவாகஞ் செய்து கொள்ளுவான் அவ்வாறே நீ நடந்துக்கொள்ளக் கடவ தென்று திருவாய் மலர்ந்தருள, அவ்வரசன் கண்விழித்து ஆனந்த மடைந்து, கணேசமூர்த்தியினுடைய உத்தரவின்படி தன்குமா ரத்தியை அத் தக்கனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். அதன் பின்னர் விநாயகமூர்த்தியினுடைய திருவருளினால் அவனுக்குப் பிர சுற்பானு பிறந்தான். அவனுக்குக் கட்கதரன் பிறந்தான். அவனுக் குச் சுபாலன்பிறந்தான். அவனுக்கு எதாகரன் பிறந்தான். அவ

னுக்கு வபுத்திரன் பிறந்தான் அவனுக்குச் சித்திரசேனன் பிறந்தான், அவனுக்கு வீமனாகிய நீ பிறந்தாய். தக்கன்முதலாக உன்றந்தைவரையி லிருந்த யாவர்களும் விநாயகக் கடவுளுடைய பாதாரவிந்தங்களிற் குறைவற்ற அன்போடும் பூசைசெய்து வந்தார்களாதலால், இனி நீயும் அவ்வாறே பூசைசெய்து வந்தால் உனதிட்டமெல்லாம் உடனே சித்தியாருமென்று சொல்லினர்

தக்கனரசாட்சி பெற்ற படல முற்றிற்று.



## வீமனுபதேசம் பெற்ற படலம்

விச்சுவா மித்திரன் வீமனை நோக்கிநின்
றிச்சையா னுரைசெய்வா னெரிந்திலங் கெஃகினாய்
மச்சமா னொடு மலரயன் காண்கிலா
வச்சனுண் மலரடிக் கன்புசெய் மரபுகேள்.

பிரமனாதியராலுங் காண்டற்கரிய அவ் விநாயக மூர்த்தியைப் பூசனை செய்யவேண்டிய விதியையுங் கேளென்று விசுவாமித்திர முனிவர் சொல்வராயினார். அரசனே! விநாயக மூர்த்தியினுடைய கருணை யுண்டாகத்தக்க ஏகாட்சர மந்திரமே பாவங்களனைத்தை யும விலக்கி அவ்வவர்கள் கருதிய வரங்களை இம்மையிற்றானே தந்து காக்கத்தக்கது. அம்மேலான மனுவை யுனக்குபதேசிக்கின்றோம. நீ ஸ்நானஞ்செய்து விரைவில் வரக்கடவையென்ன, அவ்வாறே வீமராசன் ஸ்நாஞ்செய்துவர விசுவாமித்திரமுனிவர் ஓமாதிகிரியைகளைச் செய்து கணேச மூர்த்தியினுடைய ஏகாக்ஷரமந்திரத்தை யுபதேசித்து, அதை யநுட்டிக்கு முறைமையையுஞ்சொல்லி உனது பட்டணத்தைச் சேர்ந்து முன்னர்த் தக்கனாற் பிரதிட்டை செய்துவைத்த விநாயகராலயத்தி லிருந்து தினந்தோறுஞ் செபஞ் செய்துவருவாயென்று மிகுந்த கருணையோடுஞ் சொல்ல வீமராசன் அவ்விசுவாமித்திர முனிவரிடத்தில் 1விடைபெற்றுக்கொண்டு தன்மனைவியோடும அவ்வனத்தைப் பிரிந்து நகரத் தெல்லையைச் சார்ந்றான்.

இப்பால் மீளவும் அரசன் வருகின்றதை அவன் அமைச்சர்களறிந்து, பட்டத்து யானையையுஞ் சொன்னச் சிவிகையினையு மலங்கரித்துச் சகல பரிசனங்களும் புடைசூழ்ந்து வரும்படி எதிர்கொ

ண்டு சென்று அரசனைக் கண்டு நீர்க்கதண்டன் செய்து பிரிந்திருந்த தாய்தந்தையரைக் கண்ட இளம்பிள்ளைகள்போல அதிக மகிழ்ச்சிபொங்க விருந்தார்கள். பின்னர் அரசன் தனதுபட்டத்து யானைமீது ஆரோகணித்துத் தன் மனைவியைச் சிவிகையி லிருக்கச் செய்து, சகல வாத்தியங்களும் கோஷிக்கும்படியாகப் பற்பலவரிசைகளோடும் பட்டணத்துள் வந்து, அரண்மனைக்குட் பிரவேசித்து, அந்தணர்முதலாயினோர்க்கு அளவற்றதிரவியங்களைத் தானஞ்செய்து, தன்னைத் தரிசிக்கவந்த சகல சனங்கட்குந் தனது கிருபையைவழங்கி அமைச்சர்களை நோக்கி, மந்திரிகாள்! நீங்கள் முன்போலவே அரசுரிமையை நடாத்தி வாருங்களென்று கட்டளையிட்டுத் தக்கனாற் பிரதிட்டை செய்திருக்கின்ற ஆலயத்திற் சென்று, அங்கு மூர்த்தீ கரித்திருக்கின்ற விநாயகக் கடவுளைத் தியானித்து வேதாகம விதிப்படி பூசனைசெய்து, சகலமும் விநாயக ஸ்வரூபமாக மனதிலெண்ணி விசுவாமித்திர முனிவரா னுபதேசிக்கப்பெற்ற ஏகாக்ஷரமந்திரத்தை இடைவிடாமற் செபித்து வருகின்ற நாளையில் விநாயகமூர்த்திக்குக் கருணைசுரந்து வீமராசன் கண்டு தரிசிக்கும்படியாக அவனெதிரிற் பிரத்தியக்ஷமாகத் தோன்றியருளினர்.

விநாயகர் தமையும் பூசை விதியுளி யியற்றி யெல்லாம்
விநாயக ருருவ மென்றே மெய்யுறக் கண்டோ வாமை
விநாயகர் மனுவை யெண்ணி வீமனோற் றிருக்கு நாளில்
விநாயகர் கருணை கூர்ந்து விழியெதி தோன்றி நின்றார்.

அப்பொழுது வீமராசன் சுவாமியைக் கண்டு அஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, கர்த்தனே! தேவரீருடைய பாதாரவிந்தங்களில் இடைவிடாத பத்தியும், ஒருசிறந்த புத்திரனும், முடிவில்முத்தியும், அடியேற் கருளவேண்டுமென்று தோத்திரஞ் செய்தனன்.

பூரண ரவனை நோக்கிப் பொருவினம் பாதத் தன்பு
மேரணி கனக மேனி யெச்சமு நினக்குத் தந்தாஞ்
சீரணி முத்தி பின்னர்ச் சேர்த்துது மில்லிற் செல்லென்
றூரண முரைத்த வாயா லறைந்தனர் மறைந்து போந்தார்.

விநாயக மூர்த்தி வீமராசனைப் பார்த்து, அன்பனே! நீ கருதியவாறே உனக்கு நம்மிடத்தன்பையும், சொன்னரூபம் பெற்றிருக்கின்ற புத்திரனையுந் தந்தோம். இனி உனது அந்தியகாளில் முத்தியினையுங் கொடுப்போமென்று திருவாய் மலர்ந்து, நீ உன்னரண்

மனைக்குச் செல்லக்கடவையென்று விடைகொடுத்துத் தமது திரு வுருவத்தைக் கரந்தருளினார்.

இப்பால் வீமராசன் அரண்மனைக்கு வந்து சிவபிரானையும் விநாயக மூர்த்தியையும் இடைவிடாமற் பூசனை புரிந்து, அந்தணர் முதலாயினோர்க்கு ஆடையாபரணாதிகளைத் தானஞ்செய்து ஆனந் தசாகரத்தின் மூழ்கியிருந்தான். உடனே கணேசமூர்த்தியினுடைய பெருங்கருணையால் அவ்வரசன் மனைவியாகிய சாருகாசினி வயிற் றிற் கருப்ப முண்டாகிச் சொர்ணமலையே ஓருருவங் கொண்டுவந்த துபோலச் சகலரும் அற்புதங் கொள்ளத்தக்க புத்திரன் உற்பவித் தான். அதனால் வீமராசன் அகமகிழ்ச்சிகொண்டு புத்திரனுண்டா னதற்கு நடத்தவேண்டிய சடங்குகளைக் கிரமப்படி நடப்பித்து அப்புத்திரன் உருக்குமம் போன்ற ஒளியுள்ள சரீரத்தினனாதலால் பெரியோர்கள் வாக்கியத்தின்படி உருக்குமாங்கதனென்று நாமகர ணந் தரித்து, அவனுக்குப் பிள்ளைமைப் பருவஞ்சென்ற பின்னர், அவனைக் கபிலமுனிவர் சமுகத்திற் கொண்டுபோய் விட்டான். அது முதல் உருக்குமாங்கதனானவன் கபிலமுனிவருடைய திருவடிகளுக் குப் பத்திசெய்துவந்தான். அதனால் சகலவித்தைகளும் அவனுக்கு விருத்தியாகிவரத் தந்தை ஆனந்தங்கொண்டு விநாயகமூர்த்தியினு டைய ஏகாக்ஷர மந்திரத்தை உபதேசஞ் செய்து அதை யநுட்டி க்கு முறைமையையுஞ் சொன்னான். பின்னர் அவ்வுருக்குமாங்கதன் அதைச் செபஞ்செய்து கணேசமூர்த்தியிடத்தில் தனது தந்தையி னும் மிக்க அன்புடையவனாகிச் சதாகாலமும் அவரை ஆராதித்துக் கொண்டிருந்தான்.

வீமனுபதேசம் பெற்ற படல முற்றிற்று.

---

உருக்குமாங்கதன்

## பட்டாபிடேகப் படலம்.

(*)

கருக்குவந் திடும்பை பூண்டு கலங்குறு முயிர்க்குப் பந்தங்
கருக்குவந் தருள்க ணேசப் பெருமனின் னருட்கா லன்பிற்
றருக்குள வுருக்கு மாங்கன் றனிமுடி யபிடே கத்தைச்
சுருக்கியா முரைக்க வெங்க ளேயனைத் துதித்து வாழ்வாம்.

அதை வீமராசன் தெரிந்து தனது அரசுரிமையை அவன் பால் ஒப்புவித்தற்கு எண்ணமுற்று, கொலுச்சபையில் வந்து சிங்

காதனத்தி லிருந்து கணிதசாஸ்திரிகளைக்கூவி நமது குமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யத்தக்கநாளை ஆராய்ந்துரைப்பீர்களென்ன, அவர்கள் அவ்வரசகுமாரனுக்கேற்ற திதிவார நட்சத்திரயோக கரணகிரக ஓரை முதலான நிலைகளை நன்றாகச் சோதித்துணர்ந்து ஓர் சுபதினத்தை நியமித்து அதுவே நன்முகூர்த்தமென் றறிக்கையிட்டார்கள் பின்னர் அரசன் அமைச்சர்களை நோக்கிப் பட்டாபிஷேகத்திற்குரிய பதார்த்தங்களையெல்லாம் இமைக்குமுன் சேகரிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டுத் தனது குலகுருவை யடைந்து, இருகரங்களையுங் கூப்பி, சுவாமீ நமது குமாரனுக்கு மகுடாபிஷேகஞ் செய்யத் தனித்திருக்கின்றே னாதலால் அதற்குரிய பொருள்களை அடியேற்கு உணர்த்தியருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான். அவ்வாசிரியர் மனமகிழ்ந்து அதற்குரிய எல்லாப்பொருள்களையும் ஓர் நறுக்கோலையிற் பொறித்தளித்து இதனையுஞ் சொல்லுவார், அரசனே! மகுடாபிஷேகஞ் செய்யத்தக்க தானம் புண்ணியபூமி-சிவசந்நிதானம்-நதி-தீரம் நந்தவனம்-தன்னில் எனனும் இவ்வைந்தில் ஒன்றாகியிருத்தல்வேண்டும் அதிலுங் கீழ்த்திசை - வடதிசை-ஈசானதிசை என்னும் இம்முத்திசைகளில் ஒன்றாகி யிருத்தல்வேண்டும். அவ்விடத்தில் ஐந்துமுதல் ஐம்பத்தைந்து முழம்அகன்றியுள்ளதாய் முப்பத்தாறு தூண்களோடு ஓர் பூசாமண்டபமும் ஓர் அலங்கார மண்டபமுஞ் சமைத்தல்வேண்டும், அன்றியும மணி-பொன்-வெள்ளி தாமபிரம்-தருப்பை-யாகத்திற்குரிய மரங்கள் - பாலுள்ள மரங்கள் என்னுமிவைகளின் ஒன்றால அரசு வீற்றிருத்தற் கோர்பீடமும் அபிஷேகஞ் செய்தற் கோர்பீடமும் அமைத்தல் வேண்டும். அப்பீடங்கள் ஒருமுழம் உயர்ந்து ஒன்றரை முழம் அகன்று. முன்னும் பின்னும் இரண்டுபடிகளைக்கொண்டு நான்கு பாதங்களோடும் இருத்தல்வேண்டும். மேற்கூறிய அலங்காரமண்டபத்தில் ஆறுமுழம் அகன்று, இரண்டுமுழம் உயர்ந்திருக்கின்ற இரண்டு வேதிகைகள் செய்தல் வேண்டும. ஆதலால் இந்தக். கிராமத்தின்படி மேற்கூறிய மண்டபங்களைத் தகுதியான நிலத்திலுந் திக்கிலும் பொருந்த முடிப்பித்து, இரண்டு பீடங்களையும் வேதிகைகளையும் விரைவில் நிறைவேற்றக் கடவையென்றார்.

இவ்வாறு ஆசிரியர் கூறிய மொழிகளை வீமராசன் கேட்டுக் கம்மியர்களைக் கூவி, அவர்கட்கு நவரத்தினங்களையும் பொன்களையுந் தந்து இரண்டு பீடங்கள் செய்துகொண்டு வரக்கடவீர்களென்றுகட்டளையிட்டு, அவற்றைச் செய்யத்தக்க முறைமையையுங்

கூறிப் பின்னுஞ் சொல்லுவான். நமது நகரத்தினது மதிலுக் குட்பட்ட நிலத்தில் கிழக்குத் திக்கில் ஐம்பத்தைந்து முழம் எல்லையுள்ளதாய் முப்பத்தாறு தூண்களோடு ஓர் பூசாமண்டபமும் அலங்காரமண்டபமுஞ் சமைத்து, அவ்வலங்கார மண்டபத்தில் இரண்டு வேதிகைகளைச் செய்து முடிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டான். உடனே அக்கம்மியர்கள் நல்லதென்று விடைபெற்றுச் செம்பொன்னையுருக்கி, இரண்டு பீடங்கள் வார்த்து அவைகளில் இரத்தினங்களைப் பதித்துப் படிகளைச் சேர்த்து வெள்ளியாற் சிங்கக் கற்களை யியற்றிப் பின்னர், அரசன் கட்டளையிட்ட விடத்திற் சென்று நிலத்தோண்டி, அதில் இடிவுகொள்ளாதபடி மணல்சொரிந்து, அடியில் நீலக் கற்களைப் பரப்பி, இடையிற் பவளங்களைச் சேர்த்து அதன்மேல் மரகத ரத்தினங்களைப் பதித்துக் குறடுகளாக்கி, அக்குறடுகளின்மேல் கோமேதகத்தாலாகிய போதிகைக் கட்டைகளைத் தாங்கும் பதுமராகத் தூண்களை நிறுத்தி, புட்பராகத்தால் உத்திரமிட்டு, அதன்மேல் வச்சிரப் பலகைகளைப் பரப்பி, வைடூரியத்தினாற் கொடுங்கைகளை யிருத்தி அதிற் சந்திரகாந்தத்தினால் யாளிமுகங்கள் சமைத்து முத்துமாலைகளைத் தொங்கவிட்டு, பளிங்குக் கற்களினாற் சுவரெழுப்பி, நாற்றிசைகளினும் நான்குவாயில்களை விடுத்து ஆகாயத்தை யளாவியிருக்கத் தக்கதான மண்டபங்களாகித் தூண்கடோறுங் குலைவாழை மரங்களையும் கமுகுமரங்களையும் நிறுத்தி, கன்னற்சோலைகளை நட்டு, விதானங்களைத்தூக்கி இடை இடையிற் றூண்டாவிளக்குகளைத் தொங்கவிட்டு, அரும்பு மாலைகளையும் மலர் மாலைகளையுங் கட்டி ஒளிமிகுந்த கண்ணாடி வகைகளைப்பூட்டி, நாரத்தை முதலிய கனிவர்க்கங்களைக் கோத்து, நாட்டிப் பற்பல விசித்திரங்களான ஓவியங்களைத் தீட்டி, நவரத்தினமயமாயிராநின்ற தோரணங்களைச் சூட்டி, அம்மண்டபங்களைச் சூழச் சந்திரமண்டலத்தை யளாவத்தக்க பந்தர்களைச் சமைத்து, இரண்டு வேதிகைகளையும் முடித்தவுடன் முன் னியற்றப்பட் டிருக்கின்ற பீடங்களைக்கொண்டு அரசன் சமுகத்தில் வைத்து தேவரீர் அடியேங்கட் காக்கியாபித்த வண்ணஞ் சிவபிரானுங் கண்டுகளிக்கத் தக்க இரண்டு மண்டபங்களைக் குறைவற முடித்திருக்கின்றனமென்று அறிக்கையிட்டார்கள்.

அதனை யரசன்கேட்டு மனமகிழ்ந்து சொன்னம் வஸ்திராபரணமுதலிய திரவியங்களை அவர்கள் வேண்டுமட்டும் வெகுமானஞ் செய்து விடைகொடுத்தவுடன் அச்செய்தியை ஆசாரியர்தெரிந்து

பூசாமண்டபத்தை படைந்து, அதிற் பதின்மூன்றுவீதிக ளுண்டா கும்படி குறுக்கினும் நெடுக்கினும் பதினுன்கு நூல்களை விடுத்து, நூற்றறுபத்தொன்பது வீடுகளாக்கி அவைகளினடுவே இருக்கின்ற வீட்டிற் சிவபிரானை உமாதேவியாரோடும் எழுந்தருளத் தக்கதாக நான்கு முழமுள்ள ஓரி இரத்தின வேதிகையை யிருத்தி அதைச் சூழவிருக்கின்ற எட்டுவீதிகளில் அந்தணர்-சூக்ஷமர்-சிவோத்தமர் - ஏகநேத்திரர் - ஏகருத்திரர் - திரிமூர்த்தி - ஸ்ரீகண்டர்-சிகண்டி - என் கின்ற-அஷ்ட வித்தியேஸ்வரர்க்கும், அதைத்சூழ விருக்கின்ற பதினு றுவீடுகளில், நந்தி-மாகாளர்-பிருங்கி-விநாயகர்-விருபர் - ஸ்கந்தர் - தேவி-சண்டேஸ்வரர்-இந்திரன் - அக்கினி-யமன் - நிருதி - வருணன்- வாயு - குபேரன் - ஈசானன் என்கிற சோடச தாறுக்களு மாகத் தனித்தனி வேதிகைகளை யமைத்து அதை யடுத்திருக்கின்ற இருபத் துநான்கு வீடுகளை யாவரும் உலாவும்படியான வீதியாக விடுத்து- நாற்புறங்களினும் நடுவேயிருக்கின்ற மும்மூன்று வீடுகளை வாயில்க ளாக்கி, மற்ற நூற்றெட்டு வீடுகளில் சம்புருத்திரர் விபூதிருத்திரர், கணருத்திரர் - ஆத்தியாட்சருத்திரர் - தரியாட்சருத்திரர் திரிதிசவந் திருத்திரர்-பிரபஞ்சருத்திரர் - விட்சணருத்திரர் - அனந்தருத்திரர் - பாலருத்திரர்-வீரருத்திரர்-பாதாள ருத்திரர் - விருஷபத்துவசருத்தி ரர்-சௌந்தரிய ருத்திரர்-கிராசன ருத்திரர்-சர்வருத்திரர் - ஸ்மயான ருத்திரர்-நீலலோகிதருத்திரர்-வைலோகித ருத்திரர்-கபாலீசருத்திரர் அஜருத்திரர்-ஈசான ருத்திரர்-விஜய ருத்திரர்-புத்திர ருத்திரர்-பவோ ற்பவ ருத்திரர்-வச்சிரதேக ருத்திரர்-பரமார்த்தன ருத்திரர்-தன ருத் திரர்-விபுவு ருத்திரர்-சஹஸ்ர ருத்திரர்-பினுக ருத்திரர்-திரிதசாதிப ருத்திரர்-அக்கினி ருத்திரர் உதாதிசிருத்திரர்-பிங்கல ருத்திரர்-கண் டருத்திரர்-ஆதிருத்திரர்-ஹர ருத்திரர்-சுவாலருத்திரர்-தஹன ருத்தி ரர்-ஹவ்விய ருத்திரர்-பப்ரு ருத்திரர்-பஸ்மாந்தக ருத்திரர்-க்ஷயாந்த கருத்திரர்-விதாத்ருருத்திரர்-தாதரு ருத்திரர்-கர்த்ரு ருத்திரர்-ஸ்ரித காமருத்திரர்-சர்வவியோக்தி ருத்திரர்-வியோம ருத்திரர்-தர்மருத்தி ரர்-விசால ருத்திரர்-சமயுத்தருத்திரர்-நைருதி ருத்திரர்-வருண ருத்தி ரர்-ஹத ருத்திரர்-த்ரவத்திருஷ்ட ருத்திரர்-மயான ருத்திரர்-ஊர்த் துவசேஷ ருத்திரர்-விரூபாக்ஷருத்திரர்-தூமரருத்திரர் - லோகிதருத் திரர்-தௌஷ்டராக ருத்திரர்-பாலருத்திரர்-அதிபால ருத்திரர்-பாச ஹஸ்த ருத்திரர்-ஜயபதர ருத்திரர்-தீர்க்கபாகு ருத்திரர்-த்யாணுத்ம கருத்திரர்-சணுமுக ருத்திரர்-அப்தவருத்திரர் சீக்ர ருத்திரர்-இலயரு த்திரர்-வரயோகருத்திரர்-சூக்ஷமருத்திரர் - தீட்சணிய ருத்திரர்-பயா

ந்தகருத்திரர்-பஞ்சசிகாருத்திரர் - கபர்த்தருத்திரர் - கிரீசருத்திரர் - உருபவாந்திய ருத்திரர் - தானய ருத்திரர் - சௌமிய ருத்திரர் - சத ருத்திரர் - சடாதர ருத்திரர் - காம ருத்திரர் - பரசாக ருத்திரர் இலக்ஷுமீசருத்திரர் - பிரகாச ருத்திரர் - வீரியேச ருத்திரர் - எக்கி யேச ருத்திரர் - ஜேஷ்ட ருத்திரர், வேதாப ருத்திரர், வித்தியாதச ருத்திரர், பூதாவேச ருத்திரர், உலோகருத்திரர், பார்வதீ ருத்திரர், பரமேஸ்வர ருத்திரர், உமாபதி ருத்திரர், ஈஸ்வர ருத்திரர், சதா சிவ ருத்திரர், மஹாவீர ருத்திரர், கிராத ருத்திரர், அர்த்தநாரீஸ்வ ரருத்திரர், ஜலவிகருண ருத்திரர், சாஸ்வத ருத்திரர், மஹேஸ்வர ருத்திர், மஹாருத்திரர் என்கின்ற அஷ்டாதச ருத்திரர்கட்கும் வெவ்வேறு வேதிகைகளை நிறுத்தி, மேல்விடுக்கப்பட்ட விதிமுற்றி னும்முறையே நவகண்டங்களையு மமைத்தனர்.

அச்சமயத்தில் வீமராசன் அவரையடைந்து சுவாமீ! தேவரீர் முன்னர்ப்பொறித்தருளிய பத்திரிகையின்படி எல்லாப் பொருள்க ளையும் இங்ஙனம் அழைப்பித்திருக்கின்றேனென்று அறிக்கையிட அவர் அப்பொருள்களையெல்லாம் பார்வையிட்டு, அங்கிருக்கின்ற வர்களை நோக்கிச் சிவபிரான் கும்பத்திற்கு மூன்றிழையும், உமா தேவி கும்பத்திற்கு இரண்டிழையுங், ஏனையோர் கும்பங்கட்கெல் லாம் ஒவ்வோர் இழையுமாக நூல்சுற்றிச் சமிதை முதலானவை களை வேறுவேறு ஆராய்ந்துவைக்கக் கட்டளையிட்டு, தாமுந் தரு ப்பை முதலானவைகளை ஆராய்ந்து பாலிகைகளில் மணல்சொரிந்து முளைவிதைத்து, மற்றுமுள்ள கருமங்களை முடித்துக்கொண்டிருந்த னர். அவர் அவ்வாறிருக்க முன்னர் அரசனு லேவப்பட்ட அமைச் சர்கள் மற்றப்பரிசனங்களை நோக்கி அவ்வவர்கட்குரிய பணிகளைக் கட்டளையிட அவ்வாறே யவர்களெல்லாந் தங்கடங்கள் தொழில் களை நிறைவேற்றுவா ரானார்கள். உடனே வள்ளுவனுனவன் உண் ணல் உடுத்தலாதிகளை முடித்துத் தனது முரசினோடு யானைமீதேறி எங்கும் நீக்கமற்று நிறைந்திருக்கின்ற தேவதேவோத்தமர் வாழ்க; சகல வேதாகமங்களும் வாழ்க; வீமராசரும் அவர்கிளைகளும் வா ழ்க; அவரதுநீதிதவறாத செங்கோல் வாழ்க; எல்லாவுலகங்களும் குறைவின்றி வாழ்க; இந்நகர முழுவதுமாதழைத்தோங்கி வாழ்க என்று முரசறைந்து பின்னுஞ் சொல்லுவான். இந்நகரத்துள்ள எல் லாச்சனங்கட்கும் அறிவிப்பது யாதெனில்:—கலைமகள் சயமகள் என்னு மிரண்டு மங்கையர் முன்னரே காணியாட்சியாக் கொண்டி ருக்கின்ற உருக்குமாங்கத ராசருடைய புயங்களின்மீது நிலமகள்

திருமகள் என்று மிவ்விருவர்களையும் நாளையதினத்திற் புணர்த்தப் போகின்றனர். ஆதலால்யாவரும் நகரத்தை அலங்கரிக்க வேண்டியது முன்னையைப்பார்க்கிலும் விசேடமான தருமங்களை யாவரும் நடாத்த வேண்டியது.

பொருளில்லாதவர்கட் கெல்லாம் மகாராசாவினுடைய நிதிப் பொக்கிசத்தைத் திறந்து விட்டிருக்கின்றது, அதில் அவ்வவர்கட்கு வேண்டுமட்டு மெடுத்துக்கொண்டு நிறைவேற்ற வேண்டியது. பொருளுள்ளவர்களாயின் அதனைத் தங்களால் வெருக்கப்பட்ட தெய்வத்தினை யொப்பமதித்து ஒழித்துவிடவேண்டியது. யாவரும் இனிய போசனாதிகளை நுகர்ந்து, குளிர்ந்த சந்தனாதிகளைப்பூசி, ஆடையாபரணாதிகளைத் தரித்து, ஒருவரோ டொருவர் இனிய வார்த்தைகளோடு அளவளாவி எல்லாத் தேவர்கட்கும் பூசனைகளைச் செய்ய வேண்டும். என்றிவ்வாறுசொல்லித் தன்னிருக்கைச் சேர்ந்தனன் அவையனைத்தையும் அந்நகரத்தார் மிக்க அன்போடு கேட்டு அளவற்ற தருமங்களைச செய்து நகர முழுவதும் அலங்கரித்துத் தங்கடங்கள் குமாரர்கட்கே அரசுரிமை வந்ததுபோல உள்ளமும் உடலும் பூரித்திருந்தார்கள் இப்பால் சேனைத் தலைவனுடைய ஏவலினால் யானைப்பாகர்கட் கெல்லாம் இறைவனான ஆதோரணனானவன் அரசனுடைய பட்டத்துயானையைக்குளிப்பாட்டித் திருமுக மெழுதிநெற்றிப்பட்ட மணிந்து அளவற்ற ஒப்பனைகளைச்செய்து முடித்தனன். இரதசாரதிகட் கெல்லாந் தலைவனான வல்லவனானவன் அரசனுடைய இரதத்திற கொடிகளை யுயர்த்தி ஆடையா பரணாதிகளையணிந்து, பலலக்ஷணங்கள்வாய்ந்த அசுவங்களைப்பூட்டி, வாளாயுதங் கொடுமரம்பகழி முதலானபலவாயுதங்களையும் நிரப்பினன், குதிரைப்பாகர்கட்கெல்லாம் முதன்மையான வாதுவனானவன் எல்லாக் குற்றங்களு மகன்று பலநற்குணங்களைவாய்ந்து, பகைவரது உள்ளங்களைப் பேதிக்க வல்ல அரசனது பட்டத்துக் குதிரையைக்குளிப்பாட்டி ஒளிமிகுந்த ஆபரணங்களைப் பூட்டிக் காதடியிலிருக்கின்ற கேசங்களைப் பின்னிப் பலவித சிங்காரங்களைச் செய்து நிறைவேற்றினன்.

சாரணர் கொண்டு சென்ற திருமுகத்தைப்பிறதேயங்களினுள்ள அரசர்முதலாயினோர் வாங்கி வாசித்து அளவற்ற அலங்காரங்களோடு தங்கடங்கள் மனைமக்கள் சுற்றத்தினருடன் வந்து சேர்ந்தனர், தோரணங்களாற் புனைதல் செய்யப்பட் டிருக்கின்ற மாடவீதிகளில் ஓர்பால் வாரண முழக்கமும், ஓர்பால்தேரணி முழக்கமும்.

---

ஓர்பால் சேனைகள் முழக்கமும், ஓர்பால் ஆரணமுழக்கமும், ஓர்பால் ஆடலின் முழக்கமுமாகி யிருந்தன. சிலர் புனலிற் குளித்து விளையாடுவார்களும், சிலர் மதுவுண்டு களிப்பார்களும், சிலர்வாதாடிக்கெலிப்பார்களும், சிலர்வீதியழகை நோக்குவார்களும், சிலர் வேறுபணிகளாக்குவார்களுமாகி யிருந்தார்கள். இவ்வாறு அந்நகரத் துள்ளோரும் பிறநகரிலிருந்து வந்திருக்கின்றவர்களும், அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கினவர்களாயிருக்க முன்னர்க் கணிதர்களால் ஏற்படுத்தி யிருக்கின்ற நாள் சமீபித்தலும் ஆசிரியர் பூசாமண்டபத்திற்கெழுந்து, சந்தனம் புஷ்பம்-அக்ஷதை பால்-தயிர் - முதலியவைகளாற் சகல தேவர்களையும்பூசித்து, அவர்கட்குப்பலிபிண்ட முதலியவைகளைக் கொடுத்து யாவரும் இப்பூசாமுகத்தில் எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து, முன்பு பாகரால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற கரி பரி தேர் படைக்கலம் என்னு மிவைகட்கு முறைமைப்படி பூசனைசெய்து, அந்தணர் முனிவர் இரவலர் முதலாயினோர்க்கு அன்னமளித்து, அன்றிரவில் உருக்குமாங்கதனை யழைத்து, அவன் கரத்திற் பொற்கங்கணம் புனைந்து நூதனமாக இயற்றப்பட்டிருக்கின்ற வஸ்திராபரணங்களை யணிவித்து, பூசைசெய்ய யத்தனித்தவராய் பலவகை வாத்தியங்கள் முழங்க, பாவையர்கள் நிர்த்தஞ்செய்ய, முனிவர்கள் மந்திரங் கணிக்க, அந்தணர் வேதங்களையோத, கேட்டபொருள்களைச் சிலர் எடுத்து நீட்ட, இவ்வித ஆடம்பரங்களோடு முன்னர்ச் சுவர்த்தலத்திற் சிற்பியர்களாற் சமைக்கப்பட்டிருக்கின்ற சித்திரவுருவாகிய விநாயகமூர்த்தியைப் பத்தியோடுபூசனைசெய்து, பலவித உணவுகளை நிவேதித்து, பரமகருணாநிதியாகிய கணேசமூர்த்தியே! யானியற்றப்போகின்ற வினைகளை இடையூறின்றி நிறைவேற்ற வேண்டுமென்று பிரார்த்தித்து, முன்சிவபிரானுக்கமைத்திருக்கின்ற வேதிகையின்மீது ஆறுமரக்கால் நெல்பறப்பி, அதிற்பாதியளவு அரிசியும், அதிற்பாதியளவு எள்ளும், அதிற்காற்கூறு கலந்திருக்கின்ற நவதானியங்களும் பெய்து, அதன்மீதுசிவகும்பத்தைத் தாபித்துச் சகலமங்கலவாத்தியங்களோடு பொற்குடங்களில் யானையின்மீது கொண்டுவந்த தீர்த்தங்களை ஆடையில் வடித்து, அதில் முப்பத்திரண்டுபடி ஜலத்தைக் கும்பத்திற்பூரித்து சொர்ண-நவரத்தினம்-கோட்டம் - கற்பூரம்- அகில்-சந்தனம் - பஞ்சகௌவியம்-வெட்டிவேர்-விரைகள் - மலர்-கனிகள் - கொடிகள் என்னும் இவைகளை உள்ளே சொரிந்து, அதன்மீது மாவிலை - நாரிகேளம் - தருப்பைமுடி முதலானவைகளை வைத்து, மேற்கூறிய நெல்

முதலிய அடிப்பரப் பளவிலும் நீளவிலும் பாதிபாதியளவு அதம்
குவாமபாகத்தி லிருக்கின்ற சத்திகும்பத்திற்கும், அவைகளிற் பாதி
யளவுமற்றைக் கும்பங்கட்கு மமைத்தெல்லாக் கும்பங்களையும்
அவ்வவ் விடங்களிற் றாபித்து மேற்கூறிய பொன்முதலிய வஸ்துக்
களைச் சொரிந்து, மாவிலை முதலியவைகளையும் வைத்து, கும்பங்கட்
கெல்லாம் இரண்டிரண்டு கலைகளைவெவ்வேறாக உடுத்திவித்தியேஸ்வ
ரர்கும்பங்கனெட்டினுள்பொன்-வெள்ளி-செம்பு - இரும்பு - காரீயம்
வெள்ளீயம்பித்தளை - வெண்கலம் என்கின்ற இவ்வெண்வகைப் பொ
ருள்களையும் ஒவ்வொன்றாகச் சேர்த்து, அவற்றைச் சூழவிருக்கின்ற
பதினாறுகும்பங்களும் அகில்-கந்தம்- அதாரம்- மாட்சிதம் - மனசிலை
இரதம்-வெள்ளை அப்பிரகமஞ்சள்- அப்பிரகம்- கௌரி- காஞ்சனம்-
சாதிலிங்கம்-சிந்தூரம்-துத்தம் - பொன் விமலை - வெள்ளிவிமலை-காந்
தம்என்னும்இப்பதினாறுபொருள்களோடு, சோதிமரம்-சோதிக்கொ
டிசோதித்திரணம்-பாரசிதை-பயை- சீவை- விஷச்சுரி - சமங்கை-விச
யை-சபை-சகதேவை-பூரணை-கேசை அஷ்டை-சதாவரி - சிவபத்திரி
என்னும் இப்பதினாறையுமிட்டு, இந்திரதிசைத்துவாரத்தின் இரு
மங்கினுக்கடுத்தபன்னிரண்டுகும்பங்களுள் பலாசு-கருங்காலி- ஆப்பி
ரம்-கல்லால்ஆல்-அவிளம்-வன்னி-வாகை-பிப்பிலம்-அத்தி-நாரத்தை
மாதுளை என்னும் இப்பன்னிரண்டுபொருள்களின் பட்டைகளைச்
சொரிந்து அக்கினிதிசையிலிருக்கின்ற ஒன்பதுகும்பக்களுள் ஆற்
றுமண், ஆனிலைமண்-புற்றுமண்-இபக்கோடு பட்டமண்- கடல்மண்
மடுமண்-புண்ணிய தலத்துமண்-மலைமண்-அரசடிமண் என்னும் இவ்
வொன்பதினையுந் தனித்தனி ஆராய்ந்து பெய்து, யமதிசைத் துவா
ரத்தின் இருமருங்கினு மடுத்தபன்னிரண்டுகும்பங்களுள் கழுநீர்
நீலம் வெண்டாமரை-செந்தாமரை-மகிழ்-அலரி-பாதிரி - குரவம்
மல்லிகை-பலாசு- நந்தியாவர்த்தம்-சண்பகம் - என்னும் இப்பன்னி
ரண்டுமலர்களையுமிட்டு. நிருதிதிசையி லிருக்கின்ற ஒன்பது கும
பங்களுள் அரைத்தசந்தனம- வெட்டிவேர் புனுகு-குங்குமம - கஸ்
தூரி-தக்கோலம்- அகில்-சாபத்திரி இலவங்கம் என்னும் இவ்வொன்
பது விரைப் பொருள்களையும் பெய்து, வருணதிசைத் துவாரத்தின்
இருமருங்கினுமுள்ள பன்னிரண்டுகும்பங்களுள் மூங்கிலரிசி- கோது
மையரிசி - யவையரிசி. நாயுருவியரிசி, தினையரிசி, சாமையரிசி, வரக
ரிசி, உளுந்து குளநெல்-எள-பயறு - கடுகு என்னும் இப்பன்னிரண்
டையுஞ் சுத்தி செய்திட்டு, வாயுதிசையி லிருக்கின்ற ஒன்பது கும

இப்பால் முதலாசிரியரானவர் வலஞ்சுழித்தெழுகின்ற தீயினையுடைய தமது குண்டத்திலிருந்து மூலமந்திரத்தால் நூறும் ஏனைய மந்திரங்களால் பப்பத்துமாகக் கணித்து, அடிக்கடி அவிசொரிந்து முடிவில் அனைத்தையுமெடுத்து ஆகுதிகொடுத்து உருக்குமாங்கதனை நோக்கி-நீ-அரண்மனையிற் சென்று சித்த சுத்தியோடும் உறங்குவாயென்று கட்டளையிட் டனுப்பி, விடிந்தபின்னர் நித்திய நியமாதிகளை முடித்துப் பூசாமண்டபத்திற் சென்று, இராசகுமாரனை யழைப்பித்து அவனது நற்கனவினைக் கேட்டு மனமகிழ்ந்து இப்பால் முடிக்கவேண்டிய தீக்ஷையைக் குறித்து எல்லாக் குண்டங்கட்கும் நூறு நூறு ஆகுதிகள் கொடுத்துசகல வாத்தியங்களையு முழக்குவித்து அவன் செவியில் மந்திர உபதேசஞ்செய்து கரத்திற் புட்பங்களைத் தந்து, கும்பங்கட்குங் கிரமமாக அருச்சனை புரிவித்து வலம் வரச்சொல்லி, சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்வித்து, அலங்கார மண்டபத்தி லழைத்துக் கொண்டுசென்று, முன் [illegible] கம்மியர்களா லியற்றப்பட் டிருக்கின்ற பீடங்கட்கும் வேதிகைகட்கும் மிருத்தஞ்சய மந்திரத்தால் அருச்சனை புரிந்து, அம்மண் மண்டபத்தினடுவே ஓர் வேதிகையை யிருத்தி அதன்மேற் செந்நெல் முதலானவைகளைப் பரப்பி, அதன்மேல்வெள்ளைறுசிங்கப்புலி கலை என்னும் இவற்றின் தோல்களை விரித்து அதன்மேல் ஓர்பீடத்தை வைத்து, அதன்மேல் சகஸ்திர தளத்தோடுங் கூடி விரிந்திருக்கின்ற சொர்ண கமலத்தை பிணிக்கி, அதன்மேல் வத்திரம்விரித்து மற்றொருபீடத்தை அதற்கு வலப்புறத்தி லிருத்தி. அதனை மந்திரபூர்வமாகச் சுத்திசெய்து சில மங்கையர் மகுடம்-ஆரம்-வஸ்திரம் முதலிய அரச வுறுப்புகளைப் பட்டிகையிலேந்திவர, அவைகளை அப்பீடத்தின்மேல்வைத்து கும்ப சலத்தினாற் புரோக்ஷித்து, எதிரிற் றிரையிட்டு அத்திரைக் கப்பால் மற்றொரு வேதிகையைவைத்து அதன்மீது கனகமுதலிய பொருள்களை நிறைத்து வைத்திருக்கின்ற சுவர்ணகும்பங்களையும் சகலதானியங்களையும் அளவற்ற ஆபரணங்களையும் நிரப்பி அதர்வணம் உருத்திரமென்று சொல்லப்பட்ட வேறு வேறுயுள்ள பலமந்திரங்களை [illegible] மகாரோகிணி குபேரவிருதயம் இரணியவருணம் சூர்மாண்டம் முதலிய மந்திரங்களை முன்னதாகக்கணித்து முடிவில் மூலமாகிய மிருத்தஞ்சய மந்திரத்தையோதி இப்பால் அபிஷேகஞ் செய்ய வெழுந்து, உருக்குமாங்கதனைக் கீழ்த்திசைமுகமாகப் பீடத்தி லிருத்தி பலவகைவாத்தியங்கள் சத்திக்க வேதவோசைமுழங்க [illegible] [illegible], அவர்காட்டிய கும்பங்களைச் [illegible]

வீமராசனுக்கும் சாருகாசினிக்கும் அளவற்ற மகிழ்ச்சி பொங்க, சகலதேயத்து மன்னர்களுங் களிப்பெய்தி யார்பரிக்க, இவ்விதஆடம்பரங்களோடு சகத்திர தாரைகள் விட்டிருக்கின்ற பொன்வட்டிலைக்கரத்திலேந்தி, எண்ணிறந்த தேவர்களையும் முனிவர்களையும் அவ்வவர்கட்குரிய மாதர்களையும் மனதிற்றியானித்து, அவர்களே நேரில்வந்து அபிடேகஞ்செய்வதாகப் பாவித்து எல்லாக் கும்பங்களையும மந்திர பூர்வமாக வெடுத்து மகுடாபிஷேகஞ் செய்தனர்.

தேவர்கள் முதலாயினோர்வந்து அபஷேகித்ததாகமனதிற் பாவித்தபடியால் திரிமூர்த்திகள்-அச்சுவினி தேவர்-மருத்துவர்-வசுக்கள் உருத்திரர் முதலிய :தேவர்களும் உமாதேவி திருமகள்-சரஸ்வதி-அதிதி-சுவாகாதேவி முதலிய இவர்களோடு கணமுதல் ஆண்டீறுகச் சொல்லப்பட்ட தெய்வ மாதர்களும், தடாகம்-நதி-சமுத்திரம் முதலிய உருவங்களாயிருக்கின்றஸ்திரீகளும், துருவாசன்-புலன்; புகலத்தியன்-சாபாலி-மார்க்கண்டன் - கண்ணுவன் - கவுதமன்-பிருகு - பரத்துவாசன்-கபிலன் முதலாயுள்ள முனிவர்களும், அருந்ததி முதலாயுள்ள இருடியர் பத்தினிகளும் அவ்வரசகுமாரனுக்கு அபிஷேகஞ்செய்தவராகியிருந்தார்கள். பின்னர் உருக்குமாங்கதன் ஈரம் புலர்த்தி இடையிற்கிழிபடாது இரண்டிரண்டாகி யிருக்கின்ற ஆடையினையுடுத்தி மகுடமுதலிய கலன்களை யணிந்து சந்தனக்கலவை பூசி, மாலை முதலியவணிகளைத்தரித்து, சிங்காதனத்தின்மீ தாரோகணித்தனன். உடனே சிலர் ஆலவட்டமசைத்தார்கள்: சிலர்கீதங்களிசைத்தார்கள்; சிலர்சந்திர வட்டக்குடை பிடித்தார்கள்; சிலர் விருதுகள் பிடித்தார்கள்; சிலர்மங்கல வாழ்த்துப் பேசினார்கள்; சிலர் கவரிகளொடுத்துவீசினார்கள்: அச்சமயத்தில் அங்கிருந்தவர்கள் ஜெயரெலென்று திரையை நீக்க உருக்குமாங்கதனனவன் தனக்கெதிரிலுள்ள வேதிகையின்மீது பரப்பி யிருக்கின்ற எல்லாப் பொருள்களையுங் கன்றோடிருக்கின்ற பசுவினையும் வெள்ளேற்றினையும் இரத முதலிய மங்கல வஸ்துக்களையுங் கண்டு தரிசித்தனன். தமர்களாயினோர் பொன்னூழி முதலிய ஆபரணங்களைக் கையுறை தந்தார்கள். பிற தேயத்தரசர்களெல்லாந் திறைதந்து வணங்கி நின்றார்கள்.

இப்பால் உருக்குமாங்கதன் ஆசிரியரிடத்தில் விடைபெற்று அவ்விடத்தி னின்றுமெழுந்து ஆதோரணன் கொண்டுவந்த ஆனையின்மீ தாரோகணித்து ஓர் பாற்கவிகை-கவரி-கொடி முதலிய சின்னங்கள் நெருங்கிவர, ஓர்பால் குடமுழா பேரிகைமுதலிய வாத்திங்கள் அண்டங்கனதிர முழங்க, ஓர்பால் இரதகஜதுரக பதாதிக



ளாகிய நால்வகைச் சேனைகளு மார்ப்பரிக்க, இவ்வித சம்பிரமங் களோடு தேவேந்திரனைப் போல உலாப் போந்தனைது அரண்மனை வாயிலுக்கெதிரில் இறங்கி அங்கமைத்திருக்கின்ற பொற்பலகையின் மீது நின்றனன் உடனே அங்கிருந்த மாதர்கள் அவன் பாதத்திற் பாலைச்சொரிந்து நீராற்கழுவிமெல்லிய ஆடையாற்றுடைத்து, பூரண கும்பம்-நீராஞ்சனம் - மணிவிளக்கு மூளைப்பாலிகை முதலிய மங் கலப் பொருள்களைக் கரத்திலேந்தி நீர்த்தாரை யொழுக்கி, மும் முறை வலம்வந்து பல ரத்தினங்களால் இழைத்திருக்கின்ற பாது கையை எதிரில்வைத்தார்கள், அதனை உருக்குமாங்கதன் பாதத்திற் சூடி அரண்மனை புகுந்தனன், பின்பு ஆசிரியர் அவனைப் பூசாமண் டபத்திற்கு அழைத்துக்கொண்டு சென்று முடிவிற் செய்யத்தக்க சாந்திகளையுஞ் செய்து எல்லாத்தேவர்களையும் மனதிற்றியானித்து எதிரே பயபத்தியோடும் நின்று புட்பாஞ்சலிகொண்டு தூவி மகுடா பிஷேகஞ்செய்ய வந்திருந்த தேவர்கள் முதலிய யாவர்க்கும் விடை கொடுத்தனர். இப்பால் உருக்குமாங்கத னெழுந்து அரண்மனை புகுந்து ஓமாதிகளைச்செய்த அவ்வாசிரியரைப் பூசித்து அவரவர்க்கு நிரம்பத்தக்க தட்சிணை கொடுத்து, முனிவர்கள் அந்தணர்வறியோர் முதலியவர்க்கும் பலதானங்களைச் செய்து, ஞாதியர்-குரவர் - வேற் றரசர் - அமைச்சர் - பாவலர்-நாவலர் - படைவீரர் முதலாயினோர்க் குத்-துகில்-பூண்-துரகம்-வேழம்-இரதம் முதலானவைகளை மேகங் களுங்கீண்டு நாணத்தக்கதாகப் பொழிந்து, உலகமுழுவதுந் திங் கள் மும்மாரிபெய்து தழைக்கும்படியாகத் தனதரசாட்சியை நடா த்தி வந்தனன், பின்னர் வீமராசன் தனது புயச்சுமையொழிந்ததெ ன்று மனமகிழ்ந்து சதாகாலமுங் கணேச மூர்த்தியை ஆராதித்துக் கொண்டிருந்தான்.

உருக்குமாங்கதன் பட்டாபிடேகப்படல முற்றிற்று.

உருக்குமாங்கதன்

# சாபம் பெற்ற படலம்.



அருக்கன்வேறு மண்ணிருந்தெனவவிரொளியாதனத்திலேறி
யுருக்குமாங்கதனுலகுயிர்க்குளத்திருளுறுவகைமுறைசெய்தங்
கிருக்குநாளையின்மிருக்ங்கள்வனத்திடையீண்டிவண்பயிராதி
முருக்குகின்றனவெனச்சிலரடுத்தெதிர்முடிபணிந்துரைசெய்தார்.

முனிவர்களே! இங்ஙனம் மகுடாபிஷேகஞ் செய்துகொண்ட உருக்குமாங்கத ராசனானவன் தன்தந்தை யுபதேசித்த ஏகாக்ஷர மந்திரத்தை இடைவிடாது செபஞ்செய்து வருந்தோறுங் கணேச மூர்த்தியினுடைய பாத திருவடிகளில் மிக்க பேரன்புடையவனாகிச் சதா காலமும் அவரைப் பூசை செய்து கொண்டு சத்துருக்களை யெல்லாஞ் செயஞ்செய்து, இலக்குமி - சரஸ்வதி - பூமிதேவி என்னு மிவர்கள் களிக்கும்படியாகத் தனதாணையைப் பல திக்குகளினுஞ் செலுத்திப் பழமையாயுள்ள வேதப்பிராமணர்கள் உயர்ந்த ராசர்கள் நீதியையுடைய அநேக நிருபர்கள் சகல கலைஞானங்களினும் வல்லவர்கள் ஆகிய இவர்களெல்லாம் இருமருங்கினுஞ் சூழ்ந்திருக்கப் பூமியை யாளுகின்ற சிற்றரசர்களெல்லாந் திறைகொணர்ந்து நிற்க, அதிதிகள் முனிவர்கள் தபோதனர்கள் பெரியோர்கள் முதலாயினோர் ஆசீர்வதிக்க, மந்திரிமார்-புரோகிதர்-சேனாதிபர்-தூதர்-சாரணர்முதலான தலைவர்கள்பக்கங்களில் நெருங்க, குற்றமற்ற சேனைகள் கூட்டங் கூட்டமாய் வளைதடி - வாள - உடைவாள் முதலிய படைகளைக் கொண்டு தலைவாயிலின் உலாவ, சிலமகளிர் வெள்ளிய சாமரைகள் வீச, சிலமகளிர் கட்டியங்கூற இத்தன்மையாகிய வலங்காரத்தோடு சிறந்த சிங்காதனத்தில் வீற்றிருந்து செங்கோல்முறை வழுவாமல் சகல சீவராசிகட்கும் இன்பமுண்டாகத் தக்கதாய் இராச்சிய பரிபாலனஞ்செய்து வருகின்றகாலத்தில், சில ஜனங்கள் அவ்வுருக்குமாங்கத ராசன்சமுகத்தில் வந்து பணிந்து ஓ சர்வஜனோபகாரா! சக்கிரேஸ்வரரே! காட்டு மிருகங்கள் கூட்டமாய் வந்து நாட்டுப் பயிர்களை வீட்டி யழிக்கின்றதென்று முறையிட்டார்கள். அதை யவ்வரசன்கேட்டு மனதிரங்கி வேட்டையாடிவருவோமென் றெழுந்து, பலபடைக் கூட்டங்களையும் வலைஞர்களையு மழைத்துக்கொண்டுசகல பரிசனங்களோடுங் காட்டிற்சென்று சிங்கம் புலி யானை கரடி முதலிய மிருகங்களைக் கொன்று, பின்னர்த் தான் தனியேசென்று, தனக்கெதிர்ப்பட்டு வருகின்றசெந்நாய் கலைமான் புள்ளிமான் முதலியவைகளை அதஞ்செய்து வருகையில் அதிகதாகங் கொண்டவனாகி இளைப்புற்று, ஓர் கானகத்துள் நுழைந்து அங்கு கவி மகாமுனிவர் வாசஞ்செய்கின்ற ஆச்சிரமத்தை யடைந்து அவ்விடத்தில் அவர் பத்தினியாகிய முகுந்தை யென்பவள் உல்லாசமாய்த் தனியே உலாவல் செய்திருக்கக்கண்டு அவளருகிற் சென்று அன்னையே! அடியேன் தாகந்தீருமாறு நீர்தரல் வேண்டுமென்று மிகுந்த வணக்கத்தோடும் பிரார்த்தித்தான். இவ்வாறு பிரார்த்தித்த அர

சனை முருக்கைதகண்டவுடன் அவனது பேரழகினுக் காதலுற்று அதிக விரகதாபங்கொண்டு மிக்க விளைப்போடு நீர் தேடிவந்த மோகினியை யுங் கருதாது தன்மனதி லுண்டான விரகத்தினை யவ்வரசனுக்கு அறிவிப்பவளாகி இதனைச் சொல்லுவ ளாயினள்.

சர்வாலங்கார சோபிதனாகிய மகாராசனே! உன்னைப்போல வழகின் மிகுந்தவர்களைத் தேவர் கூட்டத்திலுங் கண்டதில்லை, உன்திருமேனியிற் சகல லட்சணங்களு நிறைந்திருக்கின்றமையால் உன்னைக் கண்ட பாவையர்களில் யாவர் மோகமுறா தொழிவார்கள். ஓர் காரிகையானவள் மற்றொருவனைப் புருடனைச்சாடு ஆவல் கொள்ளுவளாயின் உடனே யவனோடு கூடுவாளன்றி அவள் விரக மொழியுமோ? முன்னாள் யாவரையும் வதைத்தபடி ஆலகால விடத்தைத் தனதிடத் துண்டாகிய திருப்பாற் கடலானது பீட்டு நல்ல வமுதத்தை யீன்று யாவரையும் பிழைப்பித்ததுபோல உனது பேரழகினுலுண்டாகிய விரகத்தீயானது எனது தனங்களை குழையும்படி உன்றோள்களைக் கூடிச் சயித்தாலன்றித் தணிவதில்லையென்று சொல்லித் தனது துகில் சோரவும், கூந்தல் விழவும், முத்தாரங்கள் பொறியவும், கைவளைகள் கழலவுமான அலங்கோலத்தோடு அவ்வரசனுக் கெதிரில் நின்றாள். இவ்வாறு இந்திரியங்களோடு மயங்கத்தக்க மிக்க அழகினையுடைய அம்முருக்கைதயானவள் தானே வலாற்காரமாய்க் கூடவேண்டுமென் றிருந்தும், உருக்குமாங்கதராசன் மனங்கலங்காதவனாகி அம் முருக்கையை நோக்கித் தாயே! நீ அந்தணர் குலத்திற் பிறந்து ஓர் அந்தணனுக்கு வாழ்க்கைப் பட்டவள், யானோ அரசகுலத்திற் பிறந்து இவ்வுலகத்தை யரசாட்சி செய்திருப்பவன். அன்றியும் யான் விநாயகமூர்த்தியைத் தொழுகின்ற அன்பனுங் கூட, என்மனது ஏககாலத்தும் பரஸ்திரீகமனஞ் செய்வதில்லை பெண்களாயினோர் தங்கள் கணவரோடு சற்று நேரங் கூடியிருக்கினும் அதுவே மேலான பெருஞ்சுகத்தைக் கொடுக்கும். அவ்வாறின்றி அந்நியபுருடரோடு கூடுவாராயின் அஃது உடனே அநர்த்தத்தை யுண்டாக்குவதினால் அவர்கட்கென்ன சுகமுண்டாகும். மேலும் இம்மையிற் சொல்லுக்கடங்காத துயரங்களைப் பெற்று மறுமையில் அளவற்ற நரகவேதனையி லழுந்தி வருந்துவார்கள்.

இறந்தபின்பல்லவோ நரகவேதனை காணப்போகின்றோமெனக் கருதுவாயின் நீகொண்ட நெறி தப்பிய காரியத்தால் இப்போதே எங்கும் அவதூறுஞ் சொற்களுண்டாவதன்றி, உன் கணவனுக்குரிய பெருமிதத்திற்குங் குறைவுவரு மாதலால் இனி யுன் மனதை

யடக்கி உனக்குண்டாயிருக்கின்ற விரகதாபத்தை யொழித்து விடு வையென்று பரிவாகச் சொல்லினன். அவைகளனைத்தையும் அம்முருந்தைகேட்டு இவ்வரசன் மனமானது எவ்வளவேனுங் கலங்குதலில்லாமற் கல்லுக் கொப்பாக விருப்பதன்றி, உறுதியான சொற்களையும் பேசுகின்றானென்று மனம் வருந்திச் சரேலென்று அவ்வரசனது முன்கையை நெருங்கிப்பிடித்து அன்பனே! ஸ்திரீகளாயினோர்க்கு இக் கிரேதா யுகத்திலுந் திரேதா யுகத்திலுந் தாங்களே வலுவிற் சென்று புருடர்களைக் கூடுவதாய் சுதந்தரத்தைப் பிரமதேவனளித்திருக்கின்றானாதலால் ஓர் கணவனைப் பெற்றிருக்கின்ற மங்கையர் மற்றொரு கணவனையுங் கூடவேண்டுமென்று உடன் படுவாராயின், அவர்கட்கென்ன பாவமிருக்கின்றது. மேற்கூறிய யுகதர்மத்திற்கு விலக்காக நீயே வலுவி லென்னைக்கூட வருமாயின் இவ்வித பழி பாதகங்களை நினைக்க வேண்டுவதேயன்றிக் கிரமப்படி யானே யுன்னைக்கூட வேண்டுமென் றிச்சையுற்றால் அதனாலுனக்கென்ன பழிபாதகங்கள் நேரும், இனிமேலுந் தடைசொல்லி யென்னைக் கூடாமற் போவையாயின், நீறாகும்படி யுன்னை யெரித்து விடுவேன் அல்லது உன்னழகனைத்துங் குலைந்து நகரத்தைவிட்டுக் காட்டிற் றிரியும்படிச் சபித்துவிடுவேன். இதனைத் தீர்க்காலோசனை செய்யக்கடவையென்று சொல்லி, அவ்வரசன் மேலேவிழுந்து மார்பைத் தழுவினாள். உடனே அவ்வரசன் பயந்து, இம்மாதின் செயல் நன்று நன்றென்று நகைத்துத் தனது புயங்களால் அவளை நிலத்தில் விழவுதறி துன்மார்க்கியே! பெருகி வருகின்ற வெள்ளமும் ஓரணைக்கடங்கி நிற்கும் அக்கினி சர்ப்ப முதலிய தீய செந்துக்களும் ஓர் தடைக்கஞ்சியிருக்கும். அறிவில்லார்க்குண்டான காமமானது அவருளடங்காது. பள்ளங்கண்டு பாய்கின்ற புனலுக் கொப்பாமென்று சான்றோர்கள் சொல்லுவர். அதுபோலவே நீயும் இத் துர்க்கியத்திற்கு அஞ்சாது உடன் பட்டனை. உன்செய்கை இத் தன்மையதென்று முன்னறிந்திருப்பேனாயின் யானிங்கொருபோதும் வரத்துணியேன். நீமகா தவசிரேட்டருடைய பத்தினியென்று என் தாகந் தணியுமாறு தண்ணீர் கேட்ட வெனக்கு நரகத்தில் வீழத்த வல்ல * மகா பாதகமான காரியங்களை நடாத்தினை உன்னை யிப்போதே யென்து வாளுக்கிரை யாக்கிவிடுவேன். ஆனால் இருடி பத்தினியென் றஞ்சி விட்டு விட்டேனென்று சொல்லி அவ்விடத்தை விட்டுத் திரும்பினான். பின்னர் அம்முகுந்தை யானவள் கோபங் கொண்டு அரசனே! என் கற்புக்குலையும்படி யிங்கு வந்தனை, வந்த நீ எனக்கொரு சுகமுங்

கொடுத்தாயில்லை யாதலால் உன் சரீரத்திற் குட்டரோக முண்டாகக் கடவதென்று சபித்தனள். அதனை யவ்வுருக்குமாங்கத ராசன் கேட்டு இவளிசசித்தது கிடையாமற் கோபங்கொண் டிருக்கிறாள். இவளிட்ட சாபத்திற்குத் தீர்வு கேட்கிறேனென்றெண்ணி அவரையும் நிலைகெட்ட மனத்தையுடைய அப்பாதகி முகத்தை மீளவும் பார்க்கலாகாதென்று திரும்பாமற் போய்விட்டனன். உடனே அவளிட்ட சாபத்தினாற் சரீரமெங்கும் வெண்குட்ட ரோக முண்டாக அதனை யவ்வரசன் கண்டு மிகுந்த துயரமடைந்து சொல்வான்

பெண்ணிருங் கொலையே போலப் பெண்ணினிஞ் சாபந் தானு
மண்ணினிடைக் கொடிது போலு மாதவ ளிடுசாபத்தால்
வெண்ணிறக் குட்ட மெய்யில விரவிய தரச னேக்கிக்
கண்ணிய கருத்துண் மாழ்கிக் கணேசரை நினைந்துச் சொல்லுவான்.

அறிந்துநின் னொழும்பிற் சற்று மடியனேன் பழைத்ததில்லைச்
சிறந்தவன் புடையார் மாட்டுன் றிருவரு ளூர்வதில்லை
சிறந்தநின் னருளுண்டாயிற் றீதெனை யடர்வ தில்லை
யறிந்திடாப் பிழையுண் டாயி னதுபொறுத் தருளல் வேண்டும்.

சிட்டரைக் காப்பா யென்றுந் துட்டரைத் தெறுப்பாயென்று
முட்டறு வேத மெல்லா மொழிவது மெய்யே யானற்
பெட்டுயும் முகுந்தை மாழகப் பிரிந்ததுந் தரும மாக
விட்டவன் சாபத் தாலே யெனக்குநோ யடுப்பதாமே.

துயவிஞ் சையரு நாணுஞ் சுடரொளி வகைப்பு நீங்கித்
தாயரு மிகழக் குட்டஞ் சார்ந்தவென் றுடலை யிந்தக்
காயழற் கட்சதின மாய்ப்ப தல்லது கைக்கொண் டேற்
போயர சாட்சி செய்யேன் புரிதனே யென்று நைந்தான்.

விநாயக மூர்த்தியை மனதில் நினைத்து கர்த்தனே! தேவரீர் பணிவிடைகளில் அடியேன் மனதறிந்து யாதொரு குற்றமுஞ் செய்ததில்லையே தேவரீர் பாதபதுமங்களை யடைந்த அடியார்களிடத்திற் கணப்போதேனுந் திருவருள் நீங்குவதுண்டோ? தேவரீர்கிருபையடியேனிடத்தும உண்டாயிருக்குமாயின் இவ்வித பொல்லாத நீங்கும் என்னைச் சேரவல்லதோ? அடியே னறியாமற் செய்த வினைகள் யாதாயினுமிருந்தால் அவைகளைத் தேவரீர்பொறுத்தருளல் கடமையன்றோ? துஷ்டஜன பரிபாலகரென்று வேதங்களெல்லாந் தேவரீரைத் துதிப்பது மெய்ம்மையல்லவோ? யான் முகுந்தை கொண்ட

மோகத்தை நிராகரித்து வந்தது தருமமாயிருக்க, அப்பாதகியிட்ட கொடுஞ் சாபத்தால் அடியேற்கு இத்தன்மைத்தான வியாதி யுண்டாகலாமா? தேவர்களுங் கண்டு நாணத்தக்க பேரொளி வாய்ந்த எனது சரீரமானது பெற்றவரு மிகழத்தக்க வெண்குட்ட நோய் கொண்டதே. இனி இவ்வுடலை இக்காட்டிற்றானே மாய்த்துவிடுவ தல்லது இவ்வியாதியோடு மெனது நகரத்திற் சென்று எவ்வாறு அரசாட்சி செய்ய வல்லவன்? ஐயோ! என்னென்ன கொடுமை யென்று துயரப்பட்டு இளைப்பாகி, அவ்வனத்திற்றானே ஓராலமரத்து நீழலி லிருந்தான். இவ்வரசனோடு வேட்டைக்கு வந்த பரிசனங்களெல்லார் தங்க ளரசனைத் தேடி யெங்குங் காணாதவர்களாகி மதிமயங்கி மீளவு நகரத்திற்போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் உருக்குமாங்கதராசனடைந்த வெண்குட்ட ரோகத்தைப் பார்க்கச் சகியாதவனைப் போலச் சூரியனானவன் தன் தேரைச் செலுத்தி மேற்றிசைக் கடலில் மறைந்துபோயினான். உடனே அவ்வரசனை நகரத்துள்ளோர் வந்து காண்பாராயின் மிக்க நாணமுற்று வருந்துவனென்ன இரங்கியதுபோல எங்கும் இருட்கூட்டங்கள் பரந்து செறிந்தன. இதுகாறும் நம்மை வெளியோரிடத்தும் வாசனு செய்யாதபடி வஞ்சித்துவந்த இவ்வரசனை இன்று நமது பகைதீர வெல்வோமென்கை கருதினாற் போலப் பசிதாகம் இளைப்பு என்கிற மூன்று துன்பங்களும் அவனை நெருக்கி வருந்தச் செய்தன.

உருக்குமாங்கதன் சாபம்பெற்ற படலம் முற்றிற்று.



நாரதர்

## சாப நிவாரண முரைத்த படலம்.

உண்டி யின்றி யுறங்குத லின்றிமுன்
கொண்டி டாததுயர் கொண்டிடு மன்னவன்
மண்டு மின்னலை மாற்றவந் தானெனத்
தெண்டி ரைக்கடற் செங்கதிர் புக்கதே
காலை முற்றுங் கடன்முடித் துள்ளமென்
றாலை யத்தி னருட்கண நாதனை
மாலை யன்பின் மதித்து வழிபடும்
வேலை விண்ணிடை நாரதன் மேயினான்.

அருக்கன் வேறகன் வாரியங் குற்றெனப்
பெருக்கெ னச்செல்புத தேளிர் முனிவனை
யுருக்கு மாங்கத னெய்யென நோககினு
ளுருக்க மோடுமங் கோலிடு வானரோ.

இவ்வாறு உண்டி யில்லாமலும் உறக்க மில்லாமலும் என்றுமுடையாத துயரங்களை யடைந்திருக்கின்ற அவ்வரசன் துன்பத்தை இன்று யாம் நீக்கி யிரக்ஷிப்போ மென்று வந்தவன்போல முன்னர் மேற்றிசைக் கடலில் வருந்தி மறைந்த சூரியனானவன் மீளவுங் கீழ்த் திசைக் கடலி லுதயமாகினன். பின்னர் அவ்வுருக்குமாங்கத ராசன் காலைக்கடனை முடித்துத் தன்னிதய தலத்திற் கணேசமூர்த்தியைத் தியானித்துப் பூசை செய்துகொண் டிருந்தான். அச் சமயத்தில் ஆகாயமார்க்கமாக நாரத முனிவர் செலக்கண்டு துதிக்கின்றனன்.

அடிகளே யோல மோல மமரர்கண் முனிவா வோலம்
வடியிசை யமுதந் தேக்கு மகதியாழ்த் தலைவ வோல
நெடியவன் முதலோர் துன்ப நீக்குவா யோல மோலம்
படிமிசை யடியேன் றுன்பம் பாற்றுவா யோல மோலம்.

அருட்பெருங் கடலே யுன்ற னடைக்கல நாயேன் கண்டாய்
மருட்கடல் கடந்தோய் வீமன் மகனடி யேனென் றும
முருக்குமாங் கதனீங் கெய்தி யுன்னருள் வழங்கு கென்று
நெருக்கொளு மம்மர் நீங்கி விளித்தெதிர் தொழுது நின்றான்.

தெய்வமுனியே! * மகதியாழ்த் தலைவரே! திருமான் முதலாயினோர் துன்பத்தை நீக்குகின்றவரே! தேவரீர் திருவடிகட் கடியேன்

* மகதி என்றது 'பேரியாழ்' எனக்கொள்க. அருங்கலம், பெருங்கல மென்பவுமது. அஃதாவது கோட்டினதளவு பன்னிரு சாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிரு சாணும், இப்பெற்றிக்கேற்ற ஆணிகளும், இவவும், உந்தியும் பெற்று ஆயிர நரம்பு தொடுத்து நடப்பது. அது? " ஆயிர நரம்பிற் றியா ழாகு-மேனை யுறுப்ப மொப்பன கொளலே-பத்தர தளவுங் கோட்டினதளவு-மொத்த வென்ப விருமூன் றிரட்டி-வணர்சாணொளித்தென வைத்தனர் புலவர்" என்ற நாடகத் தமிழ்நூற் சூத்திரத்தாற்கண்டது, இசையிற் பெரியோன் நாரதமுனி யாகலானும், " தலைமுதலூழியிற்றானவர்தருக் கறம்-புலமகளாளர் புரிநரப் பாயிரம்-வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரி யாழ்ச்-செலவு முறையெல்லாஞ் செல்கையிற்றெறிந்து- நாரத கீதங் கேள்வி நுனித்து" எனப் பெருங் கதையென்னும் உதயணகாவியத் துரைத்துளா ராகலானும், பேரியாழ்முனிவனார்க்கே பொருந்தியதா மென்க, இது கூர்ம புராண விருத்தி யுரையிற் கண்டது.

அடைக்கல மடைக்கலம். கிருபா மூர்த்தியே! அடியேன் வீமராச னுடைய புத்திரன். என்பெயர் உருக்குமாங்கதன். சுவாமிகள் இங் ஙனமெழுந்தருளி அடியேன் படுகிறதுன்பங்களை நீக்கி யிரக்ஷிக்க வேண்டுமென்று மிக்க வுருக்கத்தோடும் பலமுறை துதித்து ஓலமி டலுந் தமது ஞானநோக்கினுற் சகல மறியவல்ல நாரதமுனிவரான வர் தாம் கருதிச் செய்கின்ற காரியத்தை விடுத்துக் கனைக்கின்ற கன்றை நோக்கிக் கதறி வருகின்ற பசுவைபபோல ஒருநொடியில் நிலத்தில் அரச னெதிரில் வந்தருளினுர்.

அவ்வரச னவரை அஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, சுவாமீ! அடியேன் இக்கானகத்தை நோக்கி வேட்டையாட வந்த விடத்தில் மிக்க தாகமுண்டாயது, அதனுல் இளைப்பாகி நீரிருக்குமிடத்தைத் தேடிச் செல்லுகையில் அங்கோ ராச்சிரமத்தில் இருடி பத்தினியா கிய முகுந்தை யென்பவள் எனக் கெதிர்ப்பட, தண்ணீர் தருமாறு கேட்டேன, உடனே அவள் விரகநோய் கொண்டு என்னை வலுவிற் பற்ற யானதற்கிணங்காமையால் என்னைச்சபித்து இக் கொடிய நோ யையானடையச செய்தனள் இபபா விந்நோயுடன் எனது நகரத்திற் குச் செல்ல மனமில்லாமல் உயுரை விடவும் நினைத்தேன் அரிய தவங்களைச் செய்து அடியேனைப் பெற்ற தாய் தந்தையர் நிமித்தம் எனதுயிரைக் காத்து வைத்திருக்கின்றேன. அடியேன் தினந்தோ றும் ஆராதித்துவந்த கணேச மூர்த்தியினது கிருபையினுலே இத் தருணத்தில் தேவரீரெனது கணனெதிரில் வரப்பெற்றேன். அன் றியும் என்னைத் துன்பப் படுத்துகின்ற இந் நோயைச் சுவாமிகளால் நீக்கிக் கொள்ளத்தக்க பாக்கியத்தையு மடைந்தேனுதலால், இததின மே வீமராசனுக்கும் புத்திரசந்தான முண்டான தினமாயது. இனி யடியேற்கு இவ்வியாதி நீங்கும்படியான மார்க்கத்தை யருளி இரட் சிக்க வேண்டுமென்று பிரார்த்திந்தலும அவ்வரசனை நாரதமுனிவர் கிருபையோடும பார்த்து, அன்பனே! உனது குடைநீழலிற்றங்கியிரு க்கின்ற விதர்ப்ப தேயத்தில் யான வரும்போது கந்தர்பபமென்னு நகரத்தில் ஓரற்புதத்தைக்கண்டேன், அஃது யாதெனில் அந்நகரத் தில் விநாயகமூர்த்தி ஆலயமொன் றிருக்கின்றது. அவ்வாலயத்தெதி ரில் கணேசகுண்டமென்னும் ஒரு தீர்த்தம் விளங்கும், அதன் மகிமை யைத் தெய்வலோகத்தாரும் அறிந்திருக்கின்றனர், அன்றியும் ஒரு சூத்திரன் குஷ்ட நோயினுற் றுன்புற்றுத் தீர்த்தயாத்திரை யாகச் செல்லுகையில் அத்தடாகத்தை யடைந்து ஸ்நானஞ் செய்தெழுந் தான் உடனே அவனுடைய குஷ்ட நோய் நீங்கியதன்றிச் சகல

வினைகளும் நீங்கப்பெற்று விநாயக மூர்த்தியினுடைய சாரூபத்தை யடைந்து அவரருளாற் றேவகணங்கள் கொண்டுவந்த விமானத்தி லேறிக் கணேசலோகத்திற் போய்ச் சேர்ந்தான். ஆதலால் நீயு மவ் விடத்திற்சென்று அநககணேச குண்டத்தில் ஸ்நானஞ்செய்து அங் கெழுந்தருளி யிருக்கின்ற விநாயக மூர்த்தியைப் பூசித்துத் தான தருமங்களை இயற்றுவை யாயின் இக் குஷ்டவியாதி யுன்னைவிட் டொழிந்து போகும். இவ்வியாதி அவ் விநாயகமூர்த்தியாற் றீரவேண் டுவ தல்லது இப் பிரபஞ்சத்துள்ள ஔடதங்க ளெல்லாம் புசித்தா லும், யானை-குதிரை தேர் முதலிய பல தானங்களைச் செய்தாலுந் தீராததில்லை யென்றனர்.

நாரதர் சாபநிவாரண முரைத்த படல முற்றிற்று.

# இந்திரன் சாபம் பெற்ற படலம்

மாடக முறுக்கிப்பிசை பாடுமுனி நீடுபிணி மாற்று முறைமை
நாடியுரை செய்தலு மகிழ்ந்துகமுன் மன்னவ னயாது பணியாக்
கூடிநல் லன்பினிது கூறுவ னருந்தவ கதம்ப நகரிற்
பீடுற விருந்தபொரு மானையெவர் பூசனைகள் பேணினர்களோ.

வீறுமழை வெய்யசுடர் வீசுவளி யென்றிவை தமக்குதவுகை
மாறுமுள தோபுவியின் மன்னுயிர்க ளுய்யவரு மாதவனினைக்
கேறிடுகை மாறுமடி யேன்புரிவ தென்னுகா திரங்கியருள்க
சீறியரு ளேலென விரந்திட மகிழ்ந்துமுனி செப்ப லுறுவான்.

இவ்வாறு நாரதமுனிவர் சொல்லியவற்றை யெல்லாம் உருக்கு மாங்கதராசன் செவிகுளிரக்கேட்டு, ஆனந்தங் கொண்டு மீளவும் பணிந்தெழுந்து சுவாமீ! பெய்கின்ற மழைக்கும், காய்கின்ற சுடர்க் கும், வீசுகின்ற காற்றுக்குங், கைம்மாறு செய்ய வல்லவர்கள் யாவ ரிருக்கின்றார்கள், அதுபோல இப்பிரபஞ்சத்துள்ள உயிர்களை யெல் லாம் பிழைக்கும்படி யெழுந்தருளிய தேவரீர்க்கு யான் செய்யத் தக்க கைம்மாறென்ன விருக்கின்றது.

என்று கூறிப் பின்னருங் கூறுவான்; முனிவரே! கதம்பவனத் தில் எழுந்தருளி யிருக்கின்ற விநாயக மூர்த்தியை யாவர் பிரதிட்டை செய்து பூசித்தவர்கள். அந்த விவரத்தையும் அடியேன்மீது இரு

பைபுரிந்து கோபஞ் செய்யாமற் றிருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று இரத்தலும் நாரத முனிவர் மனதிரங்கி இதனைச் சொல்லுவாராயினர்,

அரசனே! முன் னொரு காலத்தில் இந்திரனானவன் தேவர்க ளெல்லாந் தொழும்படியாக இரத்தின சிங்காதனத்திலிருந்து அரசுசெய்து வருகின்ற சமயத்தில் நாமங்குச் சென்றேம். நம்மை யவ் விந்திரன் எதிர்கொண்டு பணிந்து ஓராசனத்தி லிருத்திப் பற்பல உபசாரங்களைச் செய்து சுவாமீ! தேவரீர் சகல புவனங்களிலுஞ் சஞ்சரிக்கின்றமையால் யாதாயினும் ஓரதிசய முண்டாயின் அதனைக் கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்டான்.

அதற்கு யாம் சொன்னதாவது, இந்திரனே! யாம் பூவுலகத் திற்குப் போயிருந்தேன். அங்குக் கௌதமமுனிவர் பத்தினியாகிய அகலிகையைக் கண்டேன், அவளழகிலுக் கொப்பாக இவ்வுலகத் தில் யாவரையுங் காணேன், இலக்குமி, இந்திராணி, இரதி, அருந்ததி, திதி, திலோத்தமை, அதிதி-என்கின்ற இம் மாதர்களுடைய அழகும் அவ ளழகுக்கு எதிர்நிற்க மாட்டாது, திரிபுர சங்கார மூர்த்தியாகிய சிவபெருமானுடைய திவ்விய சரணார விந்தங்களையே இடைவிடாது தியானிக்கின்ற என்மனமும் அவளைக் கண்டவுடன் விருப்பங் கொள்ளுமாயின், இப் பிரபஞ்சத்தில் அவளைக் கண்டு விரும்பாதவர்கள் ஒருவரு மிருக்க மாட்டார்க ளென்று சொல்லி அவ்விடத்தினின்றும் நீங்கினேம் பின்னர் அவ் விந்திரனுக்கு அக லிகையின்மீது விரகமுண்டாகி அழலிற்பட்ட மெழுகுபோல மன முருகி, உடனே அவர் கணவராகிய கௌதம முனிவர் வடிவங் கொண்டு அவர் ஆதிகாலையில் ஸ்நானஞ்செய்யச் செல்கின்ற சமயம் பார்த்து அகலிகை யிடத்திற்குவந்து என் பிராணநாயகியே! விரை விற் கலவிசெய்ய அமளியிடக் கடவையென்று சொன்னான், அதை யவ் வகலிகைகேட்டுச் சுவாமீ! எக்காலத்துந் தவறாத வொழுக்கத் தினை யுடைய மகா தவசிரேட்டராகிய தேவரீர் இத்தினம் இவ்வ கைத்தான அற்பகாரியத்திற்கு உடன்பட்டதென்னகாரணம்? ஸ்நா னஞ்செய்து நித்திய நியமங்களை முடித்து முறைமைப்படி சிவபூ சைசெய்யுங்காலத்தில் மிக்க பழுதான காமப்பொருளை யிச்சிப்ப துந் தக்கதுதானோ? அப்படித் தகாதகாரியத்தைத் தக்கதாக இத் தினந் தேவரீர் கொண்டு இவ்விடம் வந்தது எந்தக் காரணத்தால் அதை அடியாட்கு விளம்பியருள வேண்டு மென்னலும், முனிவர் வடிவங் கொண்டுவந்த தேவேந்திரன் சொல்லுவான். என்தன்பிற்

குரிய வனிதாரத்தினமே! யான்காலையில் நீராடச்செல்லுகையில் அந்தோர்மாது வஸ்திரமில்லாமல் ஸ்நானஞ்செய்து கொண்டிருந்தனள் யானவளழகைக் கண்டவுடனே எனது மனம் பேதித்தது, உடனேயிருந்த விரகதாபங்கொண்டு செய்யவேண்டிய நியமங்களில் மனத்தைச் செலுத்தச் சத்தியில்லாமல் வந்துவிட்டேன், இனி எனது உயிர் வாழ்வதும் அரிதாக இருக்கின்றது, விரைவில் என்னுடன் கலவிசெய்து சுகந்தருவாயாக, இதைத் தடுத்திடுவையாயின் உனது உயிரழியுமாறு சபித்துவிடுவே னென்றனர், இவையனைத்தையு மகலிகைகேட்டு மாறுவடிவங்கொண்டு வந்திருக்கின்ற மகாபாதகனைத் தன் கணவனென்றே நினைத்து, அக்கிரியாட்சிபாநத் தங்கள் கரத்தைப்பற்றிய காதலன்கருத் தெவ்வாறோ அவ்வாறே நடந்துகொள்வது பெண்களுக்குரிய கடமையாதலால் அத் தருமத்தின்படி யவனிசைந்து அமளியைச் சமீபித்தனள்.

இப்பால் இந்திரன் மனமகிழ்ந்து பெண்ணரசியே! உனது கடைக்கண் பார்வையால் என்னுயிர் பிழைக்கநிச்சய பெற்றேனென்றுகுலாவி அருகிற்சென்று மெய்யானதகாரஞ்செய்து நவரத்தினங்கள் பதித்திருக்கின்ற சப்பிரகூட மஞ்சத்தின்மீதேறிப் பூங்கொத்தினையொத்த அம்மெல்லியலைத் தனது கரத்தாற்பற்றிச் சமீபத்திலிருக்கவைத்து, அவள் முகாரவிந்தத்திற் புன்னகை யரும்பவும், மேகலாபரணங்கள் பிரகாசிக்கவும், பவளத் துண்டத்தை யொத்த கனிவாயிதழ் துடிக்கவும், தேமல் நிரம்பிய தனங்கள் வளர்ந்தோங்கி விம்மவும், மேலணிந்திருக்கின்ற கச்சானது நெகிழ்ந்து கிழியவும், இடைதுவண்டு வருந்தவுமாகப் பலவித சரசசல்லாபங்களைச் செய்து தனது கரங்களால் இரண்டுபயோதரங்களையும்வருடி, ஆடையை நெகிழ்த்தெறிந்து, பொலிவுற் றிருக்கின்ற நிதம்பத்தைத் தடவிப் பூமாலைக ளணிந்திருக்கின்ற கூந்தலானது அவிழ்ந்து சோரும்படியாக லதாவேஷ்டிதம் - விருக்ஷாதிருடம் - திலதண்டுலம் க்ஷீரநீரம் - ஊருப்பிரகூடம் சகனோபசிலேஷய - ஆதனம் லலாடிகம் எனகின்ற * எண்வகை யாலிங்கனங்களை நடாத்தி நுதலே நீவி, முகத்தின் முத்தமிட்டு, உச்சி-கொங்கைகளின் நடு - சகனம்-முதுகு-கனனம்-பிடர் நெற்றி-தொடை-என்னும் இவ்வெட்டிடத்திலும் - சங்கோசம் - பக்

* இவை முறையே கொடிபோலச் சுற்றித் தழுவுதல், மரத்தைப்போலேறித் தழுவுதல், எள்ளும் அரிசியும்போலக் கலந்து தழுவுதல், பாலுநீரும்போல ஒன்றுபடத் தழுவுதல், தொடையால் நெருக்கித் தழுவுதல், குறிகள் சேரத் தழுவுதல் எனக் கொள்க.

கர்த்தம் பிரசரிதகம்-முஷ்டி-கீலம்-கத்திரிகை-சந்தம்சம்-வித்தை என்கின்ற † எண்வகைத் தாடனங்களையுஞ்செய்து, கண்-கபோலம்-கொங்கை-நெற்றி-கைமூலம்-நிதம்பம்-வாயிதழ்-உந்தி என்கின்ற எட்டிடத்தினுஞ் சும்பனம்பற்றி, அர்த்தசந்திரன்-மண்டலம் புலிநகம் மயூரபதம்-முயலடி-உற்பலம் என்கின்ற அறுவகை * நகக்குறிகளையுமிட்டு மூஷகம்-அநுசூநகம்-பிரவாளமணி-பிந்துமணி-பிந்துமாலை-கோலசாலிகம் என்கின்ற அறுவகைத் தந்தக் † குறிகளையமைத்து பெருவிரல்-புறந்தாள்-பரடு முழந்தாள்-அல்குல்-நாபி-மார்பு-முலை-கைமூலம்-கழுத்து-கபோலம்-வாய்-கண்-நெற்றி-உச்சியென்னும் பதினைந்திடங்களினும்-அமுதநிலையாராய்ந்து தேகபரவசனுகிக் கிரீடிக்கு முன்னரிலையில அவயவங்களையுஞ் சிரம்புளகாங்கிதமுற்றவளாய், அவனிரண்டு தோள்களினுந் தனது கொங்கைகளழுந்தத் தழுவி மனமுருகி இதழமுதத்தினைத் தருவதுபோல அடிக்கடி தனது கொவ்வைக்கனியையொத்த செவ்விதழுறலைத் தந்து சங்கவளையல்கள் நெறியவும், பாதசாலங்கள் கலீர் கலீரென்று சத்திக்கவும், கண்கள் சிவப்பேறவும், அதரம் வெளுப்புறவும், நெற்றியில் வியர்வையரும்பவும், கண்டத்தில் மயில்-புறா-அன்னம்-காடை-வண்டு-குயில்-கோழி-செம்போத்து என்கின்ற எண்வகைப் புட்குரல்களையுங் காட்டி, கற்பகதருவைப் பின்னிக்கொண் டிருக்

† இவை முறையே கைவிரலகுவித்துத் தட்டல், குட்டுதல், அகங்கையாற் றட்டல், பையக்குத்துதல், தர்ச்சனியாலூன்றல், தர்ச்சனியாலும் மத்திமையாலும் நெருக்கல், மேற்படி விரல்களைமடக்கிப் பற்றுகுறடுபோலப் பிடித்தல், தர்ச்சனியாற் றுருவுதல் எனக்கொள்க.

* இவைமுறையே கழுத்தினிடத்துங் கொங்கையினிடத்தும் வளைவாகப் பதித்தல், கடிதடத்தில் எதிரெதிராகச் சேர்த்துப் பதித்தல், மேற்கூறிய மூன்றிடத்தும் நுனிவளைவாகப் பதித்தல், கொங்கையினடிப்புறத்திலொன்றும் மேற்புறத்தில் மற்றைய நாலுமாக ரேகைகள் பொருந்தப் பதித்தல், கொங்கைகளின் முகட்டிடத்து ஐந்தும் விளங்கும்படி பதித்தல், கொங்கையின்மீதும் அல்குலினும் பின்புறத்திலும் மூங்கிலிலையைப்போலப் பதித்தல் எனக்கொள்க.

† இவைமுறையே அதரத்திற் சிவப்புறப்பதித்தல், கபோலத்தினிடத்தும் அதரத்தினிடத்தும் வடுப்படாமற் பதித்தல், கபோலத்தினிடத்துப் பல்லுமிதழும் பொருந்தப்பதித்தல், அதரத்தில் பல்தைக்கும்படி பதித்தல், கைம்மூலம்-நெற்றி-மார்பு-தொண்டை இவ்விடங்களில் அழுந்தும்படி பதித்தல், தனங்களின்மேல் மன்மதன் வெற்றியை யெழுதி வைத்ததுபோல ஒழுங்காகப் பதித்தல் எனக்கொள்க.

கின்ற காமவல்லிக்கொடிபோல அவ்விந்திரனைச் சரீரத்தோடு சரீர மாகவணைத்துக் காமநீ ரூற்றெடுக்கத் தக்கதாகப் பலசாதகலைகளை நடாத்திவந்தனள்

உடனே இந்திரன் பேரானந்தக்களிப்பின்மூழ்கி உத்தானியம் திரியக்கு ஆசிதகம் ஸ்திதம் ஆனதுதம என்கின்ற *ஐவகைக்கரணங்களோடு கந்துகநிலை பன்னகநிலை குக்குடநிலை வெருகுநிலை-வியாக்கிரநிலை † முதலிய பலநிலைகளையும் மற்றையகலவித் தொழில்களையும் ‡ புரிந்து சிந்தையோடு சிந்தையும், அகத்தோடு அகமும், ஆவியோடு ஆவியும் ஒன்றுபடக்கலந்து எக்காலத்து மறியாத பெரும் போகவாரிதியின்மூழ்கித் தனது எண்ணத்தின்படி நிறைவேற்றினனாய், அளவளாவிய மனக்களிப்பினோடும் அவ்வகலிகையைப் பார்த்து,

கடலிற் பிறவாச் சுவையமிழ்தே கரும்பிற் பிறவாக் கொழும்பாகே
மடன்மென் மலரிற் பிறவாத வாசங் கமழுஞ் செந்தேனே
யுடல மிரண்டே யலதெனது முனது முயிரொன் றேயன்றே
யடர்மெய்த் தவத்தா லுனைப்பெற்றேற் காவதினியென் னெனப்புகழ்ந்தான்.

கடலிற் றோன்றாதுள்ள அமிர்தமே! கரும்பிற் பிறவா துதித்த சர்க்கரையே! புட்பத்திற் பிறவாதெழுந்த செந்தேனே! உனக்கும் எனக்கும் உடலமொன்றன்றி உயிரொன்றாய்விட்டது மகா தபோபலங்களால் உன்னைக் கிடைக்கப்பெற்ற வெனக்கு இனிமேற் பெறத்தக்கதென்ன விருக்கின்றதென்று புகழ்தலும், அவ்விந்திரனொடு முறுவலரும்பவும் விழிகள் முகுளிப்பவுந் தேகபரவசங்கொண்டு பற்பல லீலாவிநோதங்களை நடாத்திய விளைப்போடு சப்பிரகூடமஞ்சத்திற் சிறிது தலைசாய்ந்திருந்த அகலிகையானவள் அவ்வசனங்களைக்கேட்டு மின்னற்கொடிபோல நுடங்கி இடைதளர்ந்து மெல்லெனவெழுந்து, துகிலையுடுத்து மஞ்சத்தினின்று மிறங்கி மிகவுமச்சங்கொண்டு இவனது வடிவமாத்திரம் தம்முனிவரைப்போ

---

* இவைமுறையே மல்லாத்தல், குறுக்கு அல்லது ஒருக்கணித்தல், உட்காரவைத்தல், நிற்றல், குனிதல் எனக்கொள்க

† இவைமுறையே குதிரை-பாம்பு-கோழி-பூனை-புலி-எனப்படும், இவற்றைச் சித்திரகரணமென்றுங் கூறுவர் ‡ கலவித்தொழில்களை 'ஆலிங்கனமைந்தும் இதழ்ப்பானம் பதினொன்றும் மயிர்தம் பதினாறும் முகிழெழுதுங் குறியெட்டுங்-கோலம்புனைதந்தக் குறியெட்டுங் குரலெட்டுங் குவிதாடன மிருநான்கொடு கூடுங்கலவிக்கே' என்னுஞ்செய்யுளா லறிக.

விருப்பதன்றி, இவன் சரீரத்துண்டான வாசனையும், இவன்செய்த கலவித் தொழில்களும் இவன்பேசுகின்ற வார்த்தைகளும் வேறுபட்டிருக்கின்ற வாதலால், இவன் நம்மோடு கலவிசெய்யும்பொருட்டுக் கள்ளவேடங்கொண்டுவந்த தேவேந்திரனேயென்று நிச்சயித்துப் புருவத்தைநெரித்துக் கோபித்து எனது முனிபுங்கவனைப்போல மாறுவேடங்கொண்டுவந்த நீயார் உண்மையைப் பேசாவிடிற் சபித்துவிடுவேனென்று சொன்னாள். அதனைத் தேவேந்திரன்கேட்டு, நாமின்னவனென்று அறிவிப்போமாயின் இவள் மிகவுஞ் சந்தோஷங்கொண்டு நமக் கிச்சையுண்டாகுங்காலத் தெல்லாந் தடையின்றிக் கூடுவளெனக்கருதிப் பின்னர் நேர்ந்திடுந் துன்பத்தையெண்ணாமல் மிக்க அன்போடு தனது நிசவடிவைக்கொண்டு அவளெதிராக நின்று பெண்ணரசியே! யான் உம்பருலகத்திற் கதிபதியாகிய தேவேந்திரன், யான் உனதழகின் வளமைகளைக்கேட்டு அத்தெய்வலோகவரசிகளையும் இந்திராணி போகத்தினையும் வெறுத்து, இலக்குமி சரசுவதி முதலாயினோர் வனப்பினையு மதியாமல் உன்னையே யிச்சித்து வந்தேன். எனதெண்ணத்தின்படியே நீயுமிசைந்தனை யாதலால், இத்தினம் நாமிருவரும் புணர்ந்து போகசாகரத்தின் மூழ்கினோம். நம்முயிருமுடலும் இரண்டறக் கலந்துவிட்டன. இனிமேலென்னை வேறாக நினைப்பையேற் குற்றமாகும் இத்தினத்தில் * பஞ்சபுட்ப பாணங்களை யென்மீது பிரயோகித்த மன்மதனானவன் இன்னும்பிரயோகிக்கின்ற போதெல்லாம் உனது கிருபாநோக்கம் பாலித்தருளி என்னைமுற்றினும் பாதுகாக்கவேண்டுமென்று இரந்தான்.

இவையனைத்தையும் அகலிகைகேட்டுக் கோபங்கொண்டு எனதுபிராணநாயகனைப்போல வஞ்சவடிவங்கொண்டு இந்தப்பாவி சந்திரனுக்குற்ற களங்கத்தினைப்போல என்மரபுக்கு எக்காலமும் மாறாக்களங்கத்தையுண்டாக்கி, எனது கற்பையு மழித்து, என்கணவருடைய உள்ளத்தையுங் கொதிக்கச்செய்து, என்னைப் பலவிதத்திலுங்கெடுத்தானே, இதற் கென்னசெய்வேனென்றுசொல்லிப் பயந்து பரிதாபித்திருக்கின்றசமயத்தில் சூரியோதயத்திற்கு முன்னதாகவெழுந்து ஸ்நானஞ்செய்யப்போயிருந்த கௌதமமுனிவரானவர் சகல நியமாதிகளையு முடித்துக் கொண்டு மீளவுந் தமதாச்சிரமத்

* 'நினைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ-வளைத்துணைவு நீக்கு மசோகு-வனத்திலுறு, முல்லைக் கிடைகாட்டு மாதே முழுநீலங்-கொல்லு மதனம்பின்குணம்' என்ற செய்யுளா னறிக.

தில்வந்து தலைவாய்தலி னின்றும் மனைவியைக்கூவித் தண்ணீர்கொண்டுவரும்படியாகக் கட்டளையிட்டனர் உடனே அகலிகையானவள் நடுநடுங்கிப் பழையவொடுக்கங்க ளில்லாமலுஞ் சுசிகரமில்லாமலுந் தண்ணீர்கொண்டுவந்துகொடுத்தலும் கௌதமமுனிவர் அவளிருக்கும் அசுத்தகோலங்களைப்பார்த்துப் பெண்ணே! உன்வதனம் வேறுபட்டிருக்கின்ற காரணமென்ன! இத்தினத்தில் வழக்கம்போல ஆதனமிடவில்லை விரைவிற் சலங்கொண்டுவரவில்லை இனியவசனங்களைபேசவில்லை உன்சரீரஞ் சுசியிலலை நீ முன்னிருந்த மாதாகவுந்தோற்றவில்லை ஆதலால்; நடந்த விசேடங்களை உண்மையாகச் சொல்லக்கடவையென்றார் அதற் கவ்வகலிகை உள்ளங்கலங்கிஉடலம்நடுங்கித் தன்காதலரைப் பஞ்சாங்கமாகப் பணிந்தெழுந்து, நாணங்கொண்டு தலைகுனிந்து முகங்கோட்டி, நிலங்கீறி, மதிமயங்கி, உரைகுழறி, சுவாமி! தேவேந்திரன் தேவரீருடைய வடிவங்கொண்டுவந்து மாறுபாடுபேசி என்னைக் கலவிசெய்ய வழைத்தலும் அடியேன் தேவரீர் என்றுநினைத்துக் கலந்துவிட்டே னென்றனள்

இப்பாற் கௌதமமுனிவர் வந்ததுமுதல் நடந்த காரியங்களனைத்தையும் மறைவிலிருந்துகேட்ட தேவேந்திரனானவன் மனங்கலங்கி முட்டையிற் கட்டுண்டிருக்கின்ற கருவைப்போலப் போக்கிடங்காணாமல் ஐயோ? கடலின்மூழ்கினாலும் மலையிலொளித்தாலுங் காமத்தீயானது உடலைப் பற்றியிருக்கின்ற உயிரை அங்கும்வந்து சுடுவதுபோல நாமெங்கோடி யொளித்தாலும் இந்த முனிபுங்கவருடையகோபம் நீறுக்கிவிடுமே. ஆ? ஆ? என்னகாரியத்தினைச்செய்தோம் இனி என்னபழி சம்பவிக்கின்றதோ வென்று பயந்து, ஈனவுடலங்கொண்ட பூனைவடிவங்கொண்டு வெளியிற் செல்லப் புறப்பட்டலும், மதிமயங்கிச் செல்கின்ற அப்பூனையைக் கௌதமமுனிவர் கண்டு இவ்வுருவங்கொண்டவன் தேவேந்திரனேயென்று நிச்சயித்து, இற்புலியே? நீயார் போகாதேயென்று தடுத்தனர், உடனேதேவேந்திரன் தனது நிசவுருவத்தைக்காட்டி மேலான தன்பராக்கிரமமெல்லாம் இழந்துநின்றான் அவ்வாறுநிற்பவனைக் கௌதமமுனிவர் கண்டு, அடாதூர்த்தனே! உன்னை இப்போதே நீறுக்கிவிடுவேன், நீ தேவர்கட்கெல்லாம் அரசனகையாலே அத்தேவர்முகத்தைப்பார்த்து உன்னைவிட்டுவிட்டேன்; ஆயினும் ஒருபெண்குறியை இச்சித்தவந்தவுனக்கு உடல்முழுவதும் பெண்குறியாகக்கடவதென்றுசபித்தனர். உடனே அழிந்தகனியிற்பட்ட கடுங்காறைப்போலக் கௌதமமுனிவரிட்ட சாபமானது தேவேந்திரனைநெருங்கலும், செத்தச

வத்திற் கொப்பானவனுகிக் கீழேவிழுந்து தனக்குநேரிட்ட ஆபத்தைநினைக்குந்தோறு மனந் துவண்டு தாங்கற்கரிய துயரத்தையடைந்து, ஐயையோ! இதுவரையிற் கற்றகல்வியும், அரக்கர்குலங்களைச் சயித்தடைந்தசெல்வமுந், தேவலோகத்தை யாள்கின்ற அரசாட்சியும், மற்றுமுண்டான சகல சம்பத்துக்களுங் காமமென்னுங் கடுந்தீயிற்பட்டு எரிந்துவிட்டனபோ லாயினவேயென்று மனம்வருந்தி, உடலுருகிக் கதறிக்கதறி ஓவென்றழுது, தெய்வமே! பெண்களாயினோர் தங்கட்கிருக்கின்ற ஒருகுறியை மறைக்கு நிமித்தம் மிகவுநீட்சியுள்ள ஆடையினை யுடுத்திருந்தும் ஓர்காலத்து ஆடவர்கூட்டத்துள் வருவதற் கிலச்சையுறுவார்களே; அத்தன்மைத்தான பெண்குறிகள் என்னுடல்முழுவதும் அளவற்றனவாக நிறைந்துவிட்டனவே; அவற்றையெல்லாம் எவ்வாறுமறைத்து ஒருவரெதிரில் உலாவப்போகின்றேனென்றுகலங்கி அவ்விடத்தினின்று நீங்கி ஓர்மடுவிற் புகுந்து அதிலிருக்கின்ற தாமரைநாளத்தி லொளித்துக் கொண்டனன்

அளவில் பாதகத் தாலொரு பெண்ணுரு வாமே
லளவில் பெண்ணுரு வாவதற காக்குபா தகமே
யளவில் காதலிற் பிறன்மனை யணிநல நுகர்த
லளவில் யோனிமெய் யமரர்கோ னெய்தலி னம்மா.

உருக்குமாங்கதராசனே! இதற்தேவேந்திரன் செய்த குற்றத்தாற் றன்சரீரமுழுவதும் அளவற்றயோனிகளை யடைந்திருப்பதைப்பார்க்கின், இப்பூவுலகத்தில் அனந்த பாதகங்களைச்செய்து ஒருபெண் சனனமெடுப்ப தென்றும், அளவற்ற பெண்சனன மெடுப்பது ஒருபிறன்மனையை யிச்சித்த பாதகத்தாலென்றும் பெரியோர்கள்சொல்லுவார்கள் அஃதுண்மையாகவே நம்பத்தக்கதா யிருக்கின்றது. எழில்வாய்ந்த இந்திராணிமுதலிய தேவஸ்திரீகள் அனந்தம் பெயர்கள் இருக்கவும், இவ்வோர் இருடிபத்தினியா லல்லவா அவ்விந்திரன் தன்மாட்சிமையனைத்து மழியப்பெற்று, ஒளித்துக்கொள்ளநேர்ந்தது, பெற்றதைச் சிறிதாகவெறுத்துப் பெறாததைப் பெரிதாகவெண்ணி விரும்புகின்ற ஆணவத்தின்வலியை யாவர்சொல்ல வல்லவர்கள்.

இன்ப மாதரார் போகமென் றியம்புவ ரறியார்
துன்ப மாக்குமோ வின்பமுஞ் சுரர்பிரா னொருமா

தன்பி றுலழி யாதுய ருழந்தனன் கணேசன்
றன்ப தாய்புய மலதுவே றின்பெனத் தகுமோ.

மங்கையரைக் கூடுவதா லுண்டாகிய போகத்தையுஞ்சிலஅறி வீனர்கள் இன்பமெனச் சொல்லுகின்றார்கள். அஃதின்பமேயாயின் தேவர்கட்கெல்லாந் தலைமைபெற்ற இந்திரனுக்கும் ஒருபெண்ணிச் சையால் இத்தன்மைத்தான துன்பத்தினைக் கொடுக்குமோ! கணே சமூர்த்தியினுடைய சரணாரவிந்தங்களைத் தியானிக்கின்ற இன்பமே யின்பமல்லது வேறொன்றையு மின்பமெனக் கருதப்படுவதோ என் றுசொல்லி முடித்தனர்.

இந்திரன் சாபம் பெற்ற படல முற்றிற்று

## அகலிகை
## சாப நிவாரண முரைத்த படலம்.



கங்கையும்பிறையுங் கடுக்கையும்புனைந்த கண்ணுத லண்ணலாரீன்ற
வைங்கரக் களிற்றி னடியிணைபரவி யவனருள் பெறீஇயிராமன்
பங்கமீ றவைத்துக் கவுதமன் சூளிற் பாறையிற் கிடந்திடு மகல்யை
துங்கநல்வடிவமடைத்த தங்கவனுற்சொற்றிடுமுறைப்படிகிளப்பாம்.

மனத்தை ஒருமைப்படுத்தி, இருவினை கடிந்து, முப்போது நான்கு யதார்த்த புருடார்த்தங்களுள் மேலாய வீட்டின்பத்தை அடைவான் ஐங்கரக் கடவுளது அடிமலர்பரவு மந்தணர்களே! கௌதமர் கூறியபடி யாமுங் கூறுகின்றோம் கௌதமர் அகலிகை யைப் பார்த்து மாதே! நீ கலவித்தொழில் முதலியவற்றால் நாமல் லவென்று தெரிந்தும் மதிமயக்கத்தாலிணைந்து கூடினமையால் கரு ங்கல்லாகக் கிடக்கக்கடவாய் என்று சபிக்க, அவள்கேட்டு வருந்தி யதையவர் வரையறுத்துக் கூறுவார். சங்கணிந்தகையும், சரம்போ ன்ற விழியும், குதலைமொழியும், கோங்கமுகைபோன்ற கொங்கை களையுமுடைய அகலிகை யானவள் குறை இரந்து வேண்ட, கௌ தம முனிவர்கூறுகின்றார். பாவாய்! சாபநிவாரணங் கூறுகின்றோம். மாதேவி பாகராகிய சிவபெருமா னெழுந்தருளி யிருக்கின்ற திருக் கைலாய மலையின்கண் விளரி யிராகத்தைப் பாடி யருள்பெறும் இலங்கை மன்னனாகிய இராவணன் செய்கின்ற துன்பத்தைச்சகிக் காத இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் ஒருங்குகூடித் திருமா

விடஞ் சென்று தங்குறைகளை முறையிடுவர். அப்போது திருமால் அவர்களைநோக்கி இந்திராதி தேவர்களே! எம்முடைய வடிவத்தில் நான்குகூறாகத் தசரதச் சக்கிரவர்த்தியின் புத்திரராய்ப் பூமியின் கணவதரிப்போம்; நீவிர் வனங்களினும் மலைகளினும் வசிக்கின்ற குரங்குகளாயும் பிறக்கக்கடவீர் என்று பணிப்பர் அவ்வாறாகத் தசரத ராஜன் புதல்வரின்றி வருந்தமுற்றுக் கலைக்கோட்டு மகா முனிவரைக் கொண்டு புத்திர காமேட்டியாகஞ் செய்விப்பான். அவ்வியாகாக்கினியினின்றும் ஓர் தெய்வபுருடன் தோன்றி அவிர்ப் பாகத்தைக் கொடுக்க, அதனை நான்கு கூறாக்கித் தன்மனைவியர்க் குக் கொடுப்பான். அவர்கள் உண்டு கருப்பந்தரிக்கப் பெறுவர்கள். அவர்களுட் கௌசலை இராமனையும், கைகேயி இலக்குவனாகிய கு ணசாகரத்தையும், சுமித்திரை பரத சத்துருக்கரையும் பெறுவர். இவர்கட்குச் சாதகரும முதலாகிய கிரியைகளையெல்லாஞ் செய்து வேத முதலிய கலைகளையும் பயிற்றுவிப்பான் அவர்கள் அங்ஙனம் வளர்ந்துவருங் காலத்தில் காதிராஜனின் புத்திரராகிய விசுவாமித் திர முனிவர் தசரதன் சபைக்குப் போவார் அப்போது அரசன் எதிர்கொண்டு வணங்கி ஆசனத்தி லிருத்தி அடிகளே! தேவரீர்இவ் விடத்திற்கு எழுந்தருளியதைத் தெரிவிக்க வேண்டுமென்று பிரார் த்திக்கக் கேட்க விசுவாமித்திரர் சொல்லுவார்: அரசனே! நானோர் யாகஞ் செய்யத் தொடங்கி யிருக்கின்றேன் அதற்குப் பல இரா க்ஷதர்களாலும் வருமிடையூறுகளைத் தவிர்த்துக்காப்பதற்கு உனது குமாரனாகிய இராமனை என்னுட னனுப்பக்கடவா யென்பார். அத னைக் கேட்ட அரசன் இடிகேட்ட சாப்பம்போலவும், கருமுகில் கண்ட கோகிலம் போலவும் வருத்த முற்று முனிவர் பெருமானே! என்குமாரனோ மிகவும் பான்மணமறாச்சிறு குழவியாயிருக்கின்றான், இராக்ஷதர்களோ மாயையில் வல்லவர்கள். அவர்களை யிவன் வெல் லுதல் கூடுமோ: ஆதலால் அவனை யனுப்பும்படி கேட்குதல் தேவ ரீர்க்குத் தருமமாகுமோ? என்று பலவாறு வேண்டவும் விசுவாமித் திரர் ஒப்பாதவராய் அனுப்பும்படியாகவே வற்புறுத்திக் கூறுவர்; அப்போது தசரதச் சக்கிரவர்த்தி உடலைவிட்டுப் பிரியும் உயிர் போல வருந்தமுற்று ஒன்றுந் தெரியாதவனாய் மூர்ச்சையாகுவன் அதனைக்கண்ட இராமச்சந்திரன் தந்தையைத்தேற்றிக் கூறுவான்.

எந்தையே! இராக்ஷதர்களால் எனக்குத் தீங்குநேரிடுமென்று வருந்துகின்றாய்: சர்வதோமுகராய், அநலராய், அசலராய், சின் மாத்திர மூர்த்தியாய் சர்வானுக்கிரகராய், என்னுக்கு ளெஞ்ஞெய்

போலவும், மணியினொளிபோலவும், மலரின் மணம்போலவும் உலகமெங்கணும் வியாபித்து விளங்காநின்ற பரப்பிரம பரஞ்சோதிப் பிழம்பாய், அடைந்தார்க்கு வேண்டியவருளுரு மண்ணலாய் இலங்கும் விநாயகப் பெருமானது கிருபையினாலும், இம்முனிவரது பலத்தினாலும், அவ்வசுரர்மாயங்க ளெல்லாவற்றையுங் கடந்து நன்மையுடன் வந்து சேருவேன். தேவரீர் ஒன்றற்கும் பயப்படவேண்டா மென் றிவ்வாறு தேற்றி, வசிட்ட முனிவரது உபதேசத்தால் விநாயகரைப் பூசிக்கத் தொடங்குவன் அவ்வாறு அன்புடன வழிபடுவதைக் கண்ட விநாயகப்பெருமான் தோன்றி என்ன வரம் வேண்டுமென்று வினவியருள இராமபிரான் சொல்வான்: எங்குலதெய்வமே! இராக்ஷதர்களால் வரும் மாயங்களையெல்லாங்கடந்து அவர்களையுங்கொன்று விசுவாமித்திரருடையயாகத்திற்கு மொரு இடையூறு வாராதபடி வரந் தந்தருளவேண்டு மென்பான். அதற்கு விநாயகப்பெருமான் இராமபிரானைப் பார்த்து, இராம! நீ வேண்டிய வரங்களை யாதரித்தோம். நீ நம்மை யன்புடன் பூசித்தமையால் நின்னைக் கண்டார்கள் எண்ணியவற்றை யடையக்கடவார்கள். உன்னுடைய திருநீறு பரவப்பூசிய சரீரத்தின் பரிசம்பட்ட காலத்தும் அவர்கள் தீவினைகளெல்லாம் நீங்கப்பெற்று நற்கதி யடைவராக வென்று திருவாய் மலர்ந்தருளி அந்தர்த்தான மாகுவர். அவ்வாறு வரம் பெற்ற இராமன் நீபாறையாய்க் கிடக்கின்ற இடத்தில் வரும்போது ஐங்கரக்கடவுளுக் கடியவனாய் அவ்விராமனது பாததூளி பட்டமாத்திரத்தில் நின் சாபம் நிவாரணமாகும்; அதனால் நீ முந்தியவடிவங்கொண்டு நம்மைச்சேர்ந்து வாழ்ந்திருப்பாயென்று சாபத்தீர்வு கூறினர். அகலிகையுஞ் சந்தோஷத்துடன் கேட்டுச் சிலையுருவேற்றிருந்தாள்.

அகலிகை சாப நிவாரண முரைத்த படலம்
முற்றிற்று

---

# கௌதம ருபதேசித்த படலம்.

இந்திர னெய்திய செயலிது
வந்தா ரவனடி வழிபட
முந்தையி னரசவை முற்றினா
சந்தனை கரியனைக் கண்டிலார்.

பிறருக்குபகாரஞ் செய்கின்றதே தேவரீர்க்குச் சுபாவகுணமாக விருக்கின்றதாதலால் தேவரீரையடுத்தவர்கள் யாவராயினும் அவர்களைத் தடையின்றிப்பாதுகாப்பீரெனக்கருதி எங்களரசன்பொருட்டுத் தேவரீர் திருவடிகளில் அடைக்கலம் புகுந்தோம். அடியேங்கட்குத் தேவரீரையன்றி வேறொரு கதியில்லையென்று அம்முனிவருக்கு இரக்கமுண்டாகத்தக்க இன்சொற்களா லிரந்து துதித்தார்கள்.

இவ்வாறு விண்ணப்பஞ்செய்துகொண்ட தேவர்களைக் கௌதமமுனிவர்பார்த்து, ஞானநோக்கினாற் சகல காரியங்களையும் அறியவல்ல தேவசமூகங்களே? நீங்கள் மிக்க மனவாட்டத்துடனே இங்குவந்த காரண மென்னை? உங்கட்கு நம்மா லாகத்தக்க காரியங்கள் ஏதேனுமுண்டா யிருக்குமாயிற் சொல்லுங்களென்று கிருபைசெய்தலுந்தேவர்களெல்லாமனக்களிப்படைந்து, நம்முடையதுயரங்கள் முழுவது நீங்கப் பெற்றோமென்று ஆனந்தித்து, ஓ? சர்வவல்லமையுள்ள புண்ணியமூர்த்தியே? பூரண சந்திரனைக்கண்டகடல்போலத் தேவரீர் திருமுக விலாசத்தைக்கண்டு களிப்புற்ற அடியேங்கட்கு இனியொரு குறைவுண்டாமோ? முன்னொருபோது மாதேவர் மன்மதனை எரித்தவாறுபோலத்தேவரீர்க்குத் தீங்கினைச்செய்ததேவேந்திரனை யமனுக்கிரையாகும்படி சாம்பராக்காதுவிட்டது அடியேங்கள் பொருட்டாலல்லவா? ஆதலால் சுவாமிகளெவ்வாறு நினைத்ததோ அவ்வாறே அடியேங்கண்மீது இன்னுங்கிருபைவைத்து இந்திரன்தேவலோகத்திலிருந்து குறும்பினையடக்கி அரசாளும்படியாக அவன் ஏற்றிருக்கின்ற சாபத்தை நீக்கியருளவேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள். அவையனைத்தையுங் கௌதமுனிவர்கேட்டு விபுதர்களே? அறிவில்லாதவன், வஞ்சகன், துஷ்டன, ஆசாரவீனன், தன்னுயிரைப்போல மன்னுயிர்களையு நினைத் தாதரிக்காதவன், கொடிய நெஞ்சையுடையவன் இவர் முதலாய் மகாபாவிகளை வாக்கால் வசனித்தலு மாகாது; மனததால் நினைத்தலுங்கூடாது; ஆயினும் ஒரு காதகன்மீது பலபேர்கூடித் தயவுவைத்தாராயின் அவன் உடனே புனிதனாகுவன் அதுபோல நீங்களெல்லோரும் பெரும்பாதகனாகிய தேவேந்திரன்மீது கிருபைவைத்திருப்பதினாலே அவனும் இனிப்புனிதனே யாகுவனென்று சொல்லிப் பிரகஸ்பதிதேவரைப்பார்த்து, தெய்வ மந்திரியே? சிருட்டி முதலிய முத்தொழில்களையும் பிரமன முதலிய முத்தேவர்களாயிருந்து நடாத்துகின்ற விநாயகமூர்த்தியினுடைய சடாக்ஷர மந்திரத்தை உமது வல்வினைகளை வாட்டுமாறு

உபதேசிக்கின்றோம் நீர் அம்மனுவைத் தேவேந்திரனுக்கு உபதேசஞ் செய்யும். அதனால் அவன் சரீரத்திலுண்டாயிருக்கின்ற குறிகள்மாறிக் கண்களாகும் பின்னும் அவன் செய்திருக்கின்ற பாதகங்கள் அனைத்தும் நீங்குமென்று அச்சடாக்ஷரமந்திரத்தைத் தீட்சைமுடியோடும் உபதேசித்து, அதையநுட்டிக்கு முறைமையையு மருளிச்செய்தார் பின்னர்ப் பிரகஸ்பதிதேவ ரானந்தங்கொண்டு கௌதமமுனிவரை மற்றைய தேவர்களோடும் அஷ்டாங்கமாகப் பணிந்து விடைபெற்று அவ்விடத்தினின்றும் நீங்கினார்.

கௌதம ருபதேசித்த படல முற்றிற்று.

---

## இந்திரன் உபதேசம் பெற்ற படலம்.

கவுதம னருள்பெறுங் கடவு ளார்களுஞ்
சவலையின் மதியிகு தமனி யப்பெய
ரவனுமென் மொழிப்படி யடைந்து மேருவைத்
தவழ்திரை மாமடுச் சார்ந்து கூவுவார்

வாராய் உருக்குமாங்கதராசனே! தன்னை விழைந்தோர்க்கெல்லாம் பலவரங்களைத் தந்து பாதுகாக்கவல்ல தேவேந்திரன் செய்த ஒருதீமையை இவ்வாறளவற்ற தேவர்க ளொருமித்துப் பலமுயற்சிகளைக்கொண்டு வாடுவார்களாயின் இப்பூவுலகத்துள்ளவர்களால் நாடோறு மிடைவிடாது செய்துவருகின்ற பாவங்கள் எழுவகைப் பிறவிகளினும் விடாது வருத்துமேயன்றி எவ்வாறு நீங்கப்போகின்றது. இப்பால் கௌதம முனிவருடைய அருள்பெற்ற பிரகஸ்பதி தேவரும் மற்றைத் தேவர்களும் முன்னாயான் அறிவித்திருக்கின்ற வண்ணமே தேவேந்திரன் ஒளித்திருக்கின்ற விடத்தைக் காணுங் கருத்துடையவர்களாய் மகமேருச் சாரலை யடுத்த மடுக்கரையிற் சென்று கூவுகின்றார்.

ஓவோ சதக்கிருது வேயும்பர் வேந்தனே
யோவோ வயிராணி யின்னுயிர்க்குத் தோழனே
யோவோ தயித்தியர் குலமொறுக்கும் வீரனே
யோவோ மகவான் வெளியுறுதல் வேண்டுமே.

தைத்தியகுலகாலரே! மருதநிலத்தலைவரே! வெளியில்வாரும்; வெளியில்வாரும்; உம்மைச்சபித்த முனிபுங்கவரிடத்து யாங்

கள் அனைவருஞ் சென்று பணிந்து உமக்கவர் கருணையைப்பெற்று வந்தோம். நாரதமகா முனிவரும் எம்மோடு வந்திருக்கின்றனர். அவ்வவர்கள்செய்த குற்றங்களை உள்ளத்திலொளிக்காமல் வெளியிட்டால், அவைகளால் வருகின்ற துன்பங்களைப் பெரியோர்கள் விலக்கி வைப்பார்கள்; அவைகளை வெளிவிடாமல் மறைத்தால் மாறுத துன்பத்தினை யடைவார்கள்; ஓ மேகவாகனரே! இங்குவந்திருப்பவருள் நாரதமுனிவர் மகாபெரியவர்; நீர்செய்த குற்றத்தை யவரிடத்தில் விண்ணப்பஞ் செய்வீராயின் அது தீரத்தக்க மார்க்கத்தை அவரே சொல்லுவார் முன்னர்ச் சிவபிரானுடைய திருக்கல்யாண மஹோற்சவத்தில் உமாதேவியினுடைய காற்பெருவிரன்மீதிச்சைவைத்துப பாவத்தையும நாணத்தையும் பரித்துழன்ற பிரமனுவன் மீட்டுமவைகள் நீங்குமாறு அச்சிவபிரானுடைய திருவருளையே பெற்று நீக்கிக்கொண்டது உமக்குத் தெரியாததா? ஆதலால் நீர் உமது மனக்கவலையை விட்டு வெளியில் வருவீரென்று கூவினார்கள் இவையனைத்தையுந் தேவேந்திரன் கேட்டுத் தாமரை நாளத்தினின்றும் வெளிப்பட்டான். உடனே தேவர்கள் அவன் சரீரத்தி லிருக்கின்ற பெண் குறிகளைப் பார்த்துச்சிலர் இவைகளை யாம் பார்ப்பது மகா பாவமென்று நினைத்துக் கண்களை மூடிக்கொண்டார்கள். சிலர் தலைகளைக் கவிழ்த்துககொண்டார்கள். சிலர் நாசியைப் பிடித்துககொண்டார்கள பின்னர்த் தேவேந்திரனுனவன் தான் செய்த குற்றங்களையெல்லாம் வெளிவிட்டும் பிரகஸ்பதி தேவராற் சடாக்ஷர மந்திரத்தை முறைமையோடும் உபதேசிக்கப் பெற்றுஞ் சந்திரனைக்கண்ட செவ்வாம்பன் மலரைப்போல முகமலர்ந்து ஆனந்தமாயினன் அச் சடாக்ஷர மந்திரந் தன் செவியிலேறியவுடன் முன்னர்க் கௌதமமுனியிட்ட சாபமானது உடனே எவ்வாறு பற்றிக்கொண்டதோ அவ்வாறே மகா தீவிரத்தோடும் அப்பெண்குறிகளெல்லாங் கண்களாய்விட்டன யாமும் மற்றமுனிவ்வரர்களும் பல ஆசீர்வசனங்களைச் சொன்னோம். தேவர்கள் புட்பவருஷம் பொழிந்தார்கள். அரம்பையர் நிருத்தஞ் செய்தார்கள். கின்னரர் கீதம் பாடினார்கள். ஆகாயத்தில் அந்தர துந்துபி முழங்கியது

இப்பால் அவ்விந்திரனை மற்றைத் தேவர்களெல்லாந் தீர்க்கதண்டன் செய்து இதுகாறும் உம்மைப்பிரிந்ததனாற் சந்திரனில்லாத இரவு போலவும் தாயில்லாத சேய்போலவு மானோமென்று துதித்தார்கள். பின்னர்த் தேவேந்திரன் மிக்க மனக்களிப்போடு வந்தி

ருக்கின்ற முனிவர்களையெல்லாம்பார்த்து ஓ தவசிரேஷ்டர்களே! உங்கள் மகத்துவங்களைச் சுத்தபவித்திரர்கள் அறியவேண்டுவ தல்லது மற்றென்போலிகளால் அறியப்படுவனவோ? அளவற்றதேவர்களொன்றாய்க்கூடினும் உங்களில், ஒருவருக கொப்பாவார்களோ? சகலபெருமைகளும் வாய்ந்திருக்கின்ற மகான்கள் நீங்களேயென்று துதித்து அஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து, பின்பு தேவர்களைப் பார்த்து அன்பிற்சிறந்த மித்திரர்களே? மகாமகத்துவமுள்ள கௌதமமுனியிட்ட சாபம் என்னைவிட்டுநீங்கும்படியாக ஏதேதுமுயற்சி செய்தீர்களோ மூன்றுந்தீர்ந்திலேன் முன்னா எனக்கியல்பாகவிருந்த இரண்டுகண்களும் இருளடையும்படியாக மிக்க வொளிபொருந்திய ஆயிரங்கண்களைத் தந்தீர்கள் உங்களாற் சகல நன்மைகளையும் பெற்றேன். நீங்களென்பொருட்டாகச்செய்த வுதவிக்கு யான் செய்யத்தக்க கைம்மாறென்ன விருக்கின்றது. இனி விநாயகமூர்த்தியை யருட்டித்து அவர் கிருபைபெற்று உய்யுமாறு ஓர் திவ்விய க்ஷேத்திரத்திலிருந்து சிறந்த தவங்களைச்செய்து பின்னர் இச்சைப்பிரகாரம் எனது சுவர்க்கலோகத்தையடைந்து அரசாக்ஷி செய்வதேயன்றி யானிப்போது வருவதில்லை நீங்கள்யாவரும் அங்குச்சென்று வாசம்செய்திருங்கள். சிலர்மாத்திரங் கற்பகவிருக்ஷத்தினிடத்திருந்து நமது தவத்திற்கு வேண்டிய திரவியங்களையெல்லாங் கொண்டுவந்து கொடுக்கக்கடவீர்களென்று கட்டளையிட்டு யாவர்க்கும் விடைகொடுத்து அனுப்பினான்.

இந்திரன் உபதேசம்பெற்றபடல

முற்றிற்று.

---

# இந்திரன் உபாசித்த படலம்.

இதம்புரியுந் தேவர்களு மிருடியரு நீங்கியபின்
கதம்பவனத் திடையேகிக் காவல்புரி விண்ணவர்கோ
னதம்பலவுந் தீபலவு மொன்றுறைற் போனவையின்
சிதம்புதெறு மொருதீர்த்தந் திகழ்தரக்கண் டதையடுத்தான்.

அவ்வாறே யாவருஞ்சென்றபின்னர்த் தேவேந்திரமகாராசன் வனத்திற்சென்று அங்கோர் தடாகக்கரையி லிருந்து அதிற்

றேவர்களாற் கொணர்ந்துதருகின்ற ஆகாயகங்கையைக் கலந்து அதன் கரையின்மீது மிக்க வொளிபொருந்திய பளிங்குக் கற்களினால் ஓராலயமெழுப்பி அவ்வாலயத்தில் வேதாகமவிதிப்படி விநாயகமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து, சகலபதார்த்தங்களுடன் பிரதிதினம் பூசனைபுரிந்து ஐம்புலாதிகளையும் அடக்கி ஓராதனத்தி லிருந்து, இருவிழிகளையும் நாசிநுனியினிறுத்திக் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைச் சிந்தித்துப் பத்தியோடு சடாக்ஷரமந்திரத்தைத் தியானித்துச் சுத்த பவித்திரமான உள்ளத்தையுடையவனாய் ஆகாரமில்லாமல் ஆயிரம்வருடந் தவஞ்செய்தான். இவ்வாறு செய்துவருகின்றதவத்திற்கு விநாயகமூர்த்தி அருள்சுரந்து வெள்ளியதிருமேனியும், திசைமுழுவதும் விழுங்கத்தக்க பிரகாசமும், யானைவதனமும் உருத்திராக்க மாலைகையேந்தியிருக்கின்ற துதிக்கரமும், நான்குபுயங்களும், தண்டை சதங்கை சிலம்புமுதலியவை யணிந்திருக்கின்ற இரண்டுபாத பதுமங்களும், அரைஞாணும், புயகவசமும், மார்பில் முப்புரிநூலும், முத்துமாலை, இரத்தினமாலை, குண்டலம், கிரீடமுதலான அளவற்ற அலங்காரத்துடன் சிங்கவாகனமூர்ந்து தேவேந்திரனெதிரிற் பிரத்தியக்ஷமாயினார்.

உடனே இந்திரனானவன் அன்புமச்சமுங்கொண்டு இருகரங்களையுஞ் சிரமேற் குவித்துத் துண்ணென்று ஆசனம்விட்டெழுந்து இரண்டுகால் இரண்டுகை, இரண்டுதோள், நெற்றிமார்பு என்கின்ற அட்டாங்கங்களும் பூமியிற்பொருந்தவீழ்ந்து, மீட்டுமெழுந்து சரீரமுழுவதும் புளகாங்கிதங் கொண்டு கூத்தாடி வலம்வந்து ஆனந்தக்கண்ணீர்சொரிந்து துதிப்பானாயினான்.

அறிவாய் விளங்கு மொளியாகி யெங்கு மசைவற்று நின்ற நிறைவாய்க், குறியாதி யின்ப முதலீறிலாத குறைவற்ற வின்ப மயமாய்ச், செறிவான நீரி னிழல்போல நின்ற திறலோனை யானும் வலேவேன், வெறுஞான மான திருமேனிகொண்டென் விழிகாண முன்னர் வரலால. (௧)

இருண்மூழ்கு கண்ணின் மலகேவலத்தி னிதமின்றி நின்றவுயிர்கட், குருவாதி மூன்று முனமுய்த் தவற்றி னுளதாம் விகாரவகையா, லிருவேறு கன்ம மிசைவித் தருத்து மிறையோனை யானுமொழிவேன், வெருண்மாயை நீத்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னர் வரலால் (௨)

வாதங்கடந்து பலமாயைகன்ம வகையுங் கடந்து வகைசெய்,
யேதங்கடந்து பொருளொன்று மின்றி யெழுகின்ற மம்மருயிரின்,
போதங்கடந்து துரியங் கடந்த பொருளோயை யாவருமுணர்வேன்,
வேதங்கடந்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னர் வரலால். (௩)

வெங்கட்களிற்றின் மகவான் றுதித்து விழிநீ ருகுத்துள் ளுருகச்,
சிங்கஞ் செலுத்தி யெதிர்வந்து நின்ற திகழ்முக்கண் வேழ முகவ,
னிங்குற்று நீசெய் செபமா தியான மிதயங் களித்த னமினிப்,பொ
ங்குற்றகாதல் வரம்வேட்டதின்று புகலென்ன வோதுமவனே. (௪)

யோகத்தினாலு முணரப் படாமை யுயர்ஞான யோகநிலையோர்
பாகத்தி னொன்று படுகின்ற பாத பதுமங் கெடாது புரியும்
யாகத்தினை பயனுந் துறக்க மெளியேற் களித்தி யதுவும்
போகத்தின் மல்க விடரின்ப நின்று புகழோடு மாளும் வகையில் ()

முன்னேயெனக்கு மறையோனுரைந்த மொழியாறெழுத்து மனுவைத்
தன்னு தரத்தி னுரைசெய்து நீயித் தனிமந் திரத்தை யொழியின்
மன்னுது விண்ணி னரசாட்சி யென்று வழிவற் புறுத்து மதனைப்
பின்னே மறந்து பிழையிற் படர்ந்து பெரிதான துன்ப மவினேன்.

பொன்னே னுரைப்ப விடர்முற் றகன்று புகழா யிரங்க ளுடையே
னின்னு றெழுதகை யுரைசெய்து பூசை நெடிதாற் றிவந்த பரிசா
துன்னுத தாகி யுரையாத தாகி யுடலிற் படாத பொருணீ
முன்னாகி நின்ற வருளா லெனக்கு முடியாமை யாவ துளதோ. (எ)

கேடாமெ வைக்கு முறுகா ரணங்கள் கிழவோய் பதத்தி னிறையன்
பாடாமை யாரு மதனு லெனகரு னடிவா ரிசத்தி லுழுவல்
வீடாமை வேண்டு மதுவன்றி யுள்ள விழைவுய்க்கு மிங்குன் வடிவுக்
கேடாத சிநதா மணியென்னு நாம முறல்வேண்டு மூர்க்கு முறுக.
தீர்த்தந் தனக்கு மிடுபேர் சிறக்க திகழூர்க் கதன்றி யெவரு

மோர்க்குங் கதம்ப நகரென்ற பேரு முறுகிற்க வூரில் வதிவோ
ரார்க்குந் தடத்தி னறலாடு வோருன் னடியிங் கிறைஞ்ச லுறுவோர்
புார்க்கட் சிறந்த பயனுன்கு மார்க பகவா வெனப்ப கர்தலும். (௯)

இறைவன் புகன்ற வரமுந் துறக்க மிடரின்றி யாளும் வரமு
நிறையக் கொடுத்து மறையக் கதிர்க்கு நெடுவச் சிரக்கைம்மகவான்
குறையற் றுமீட்டு முயர்பூசை யாதி குலவிப் புரிந்து விடைபெற்
றறையுந் துறக்க நகரெய்தி யன்பொ டரசாட்சி செய்த ருளினுன்.

இவ்வாறு தோத்திரங்களைச் செய்து கனமுருகி நிற்கின்ற தேவேந்திரனை விநாயகக் கடவுள் கிருபையோடு பார்த்து, ஓ சுராதிபனே! நீ இங்கிருந்துசெய்த செபதப முதலானவைகட்கு யாஞ்சந்தோஷித்தோம். உனக்குவேண்டிய வரங்களைக் கேளென்று திருவாய் மலர்ந்தருளலும், தேவேந்திரனனவன் ஆனந்த பரவசங்கொண்டு ஓ சகலபுவனுதார கர்த்தனே உயர்ந்த ஞானயோகத்தை யநுட்டிக்கத் தக்க பரிபக்குவ ரெவர்களோ அவர்கள் இருதயத்திலொன்றுபட் டிருப்பது தேவரீருடைய பாதபங்கயம் அதனை அடியேற்கருளாது வேள்விப்பயனுகிய சுவர்க்கலோக வரசாட்சியை யருள்செய்தீர். அந்தச் சுவர்க்கலோக வரசாட்சியையும் ஓரிடையூறில்லாமற் சகல போகங்களோடும் புகழ்பெற் றுள்வதற்கு முன்னொருகாலத்திற் பிரமதேவன சடாக்ஷரமந்திரத்தை யுபதேசித்து அதையநுட்டிக்கு முறைமையுங்கூறி இதை மறைப்பையாயின் உனது சுவர்க்கலோகவரசாட்சி நில்லெபெற்றிராதென்று வற்புறுத்திக் கூறினன். பின்னரதனைமறந்து அளவற்ற பிழைகளைச்செய்த காரணத்தால் மிக்க துன்பங்களை யெல்லா மநுபவித்தேன். மீளவு மதைப் பிரகஸ்பதி தேவராலும் உபதேசிகப்பெற்று அத்துன்பங்க ளனைத்தினும் நீங்கி ஆயிரங்கண்களை யுடையவனுயினேன். அன்றியும் அம்மந்திரத்தை இடைவிடாதநுட்டித்த பேற்றினல் மனவாக்குக் காயமென்று முக்கரணததாலும் அறிதற்கரிய தேவரீரை அடியேன் முன்பு பிரதத்யக்ஷமாக வரப்பெற்றேன், இனி முடியாத காரியம் அடியேற கென்ன விருக்கின்றது தேவரீர் திருவடிகளுக்கன்பிலற்றிருப்பதே சகல காரியங்கட்கும் இடையூறு வருவதற்குக் காரணமாதலால் தேவரீர் திருவடிகளில் அடியேற் குமாறுத பத்தியை யருளல்வேண்டும். இத்தலத்தில் அடியேன் பூசித்த தேவரீர் திருவுருவத்திற்குச் சிந்தாமணி விநாயகரென்றும், இத்தலத்திற்குச் சகரமென்றும், இத்தடாகத்திற்குச சிந்தாமணி தீர்த்தமென்றுந் திருநாமமிருக்கவேண்டும். மேலும் இவ் வூரைக் கதம்ப நகர மென்றும் வழங்க வேண்டும் இக் கதம்பநகரத்தில் வசிக்கின்ற யாவருஞ் சிந்தாமணி தீர்த்தத்தில ஸ்நானஞ்செய்து தேவரீர் திருவுருவமாகிய சிந்தாமணி விநாயகரைத் தரிசிப்பார்களாயின் அவர்கட்குக்கிடைத்தற்கரிய நான்குபுருஷார்த்தங்களுங் கிடைத்தல் வேண்டு மென்று பிரார்த்திக்க, கணேசமூர்த்தியு மவ்வாறே அநுக்கிரகஞ் செய்து, தமது திருவுருவத்தைக்கரந்தருளினர். தேவேந்திரனுந் தன்மனக் குறைவுகளற்றிச் சிந்தாமணி விநாயகரை மீளவும் பூசித்துச் சடா

க்ஷர மந்திரத்தை விடைபெற்றுத்தனது சுவர்க்க லோகத்திற் சென்று ஓரிடையூறுமின்றி அரசாக்ஷியை நடாத்தி வந்தனன். நீயும் அவ் விநாயகமூர்த்தியைச் சரணடைந்து பூசிப்பையயாயின் இப்பிணி யொன்றுமே நீங்குவதன்றிப் பல வரங்களையும் பெறுவாய்போ வென்று நாரதமுனிவா உருக்குமாங்கத ராசனுக்குச் சொன்னார்.

இந்திரன் உபாசித்த படல முற்றிற்று

## உருக்கு மாங்கதன்

## முத்தியடைந்த படலம்.



திருக்கி லாமுனி செல்லுமுன்
றருக்கி வாழ்தம ராயினோர்
துருக்கமாதி துரீ இத் துரீ இ
யுருக்கு மாங்கனை யுற்றனர்

சவுனகர்முதலியமுனிவர்களே! விநாயகமூர்த்தியைத்தேவேந்திரன் பூசித்துப் பலவரங்களைப பெற்ற சரித்திரத்தைச் சொன்னோம். இப்பால் உருக்குமாங்கத ராசன் அநுட்டித்த திறத்தைச் சொல்லுவோங் கேட்பீராக. இவ்வாறு நாரதமுனிவர்சொல்லி அங்கிருந்து நீங்குவதற்கு முன்னமே முன்னா ˮருக்குமாங்கத ராசனைக் காணாமல் நகரத்திற்குச சென்ற பரிசனஙகளெல்லாம் மலை-காடு முதலியவிடங்கள்தோறுந் தேடிக காணாதவர்களாகி அவன் நாரதமுனிவரோடுரு சம்பாஷித்திருநத வனததிற்குவந்து, தங்களரசன் குட்டநோயுடனிருக்கக்கண்டு மனமெலிந்து, சார்வபௌமா! மானேடு வேட்டையாடிச் சென்ற வுமக்கு இநநோய்வந்த காரணமென்னவென்று கேட்டார்கள். அவர்கட்கு அவ்வரசன் நடந்த காரியங்களனைத்தையும் விவரமாகச்சொல்லி அவ்விடத்தினின்று நீங்கிக் கதம்பநகரஞ்சேர்ந்து, சிநதாமணி விநாயகரைத்தரிசித்துச் சகலவினைகளையுமொழிக்கத்தக்க சிந்தாமணிதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தான். உடனே அவன் சரீரத்தைப் பற்றியகுட்டநோய் நீங்கி முன்னிருந்த உருக்குமரூபம் உண்டாயது பின்னரவ்வரசன் அளவற்ற ஆனந்தங்கொண்டு மீளவுஞ் சிந்தாமணிவிநாயகரையடைந்து பூசித்து, அந்தணர்களைக்கூவி அளவற்ற திரவியங்களைத் தானஞ்

செய்து கொண்டிருக்கையில், சிலதேவகணங்கள் அந்தரமார்க்கமாக வொருதெய்வ விமானங்கொண்டுவந்து அவ்வரசனுக்கெதிரில் நிறுத்தி, புண்ணிய சீலனே! நீ இக்கணேசகுண்டமாகியசிந்தாமணி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிந்தாமணி விநாயகரைப் பூசனை செய்த பேற்றினால் உனக்குண்டாகிய மேன்மையை யாவராலுரைக்கப்படும். நீ இவ் விமானத்தின்மி தாரோகணித்து எம்மோடுங் கணேச லோகத்திற்கு வருவையென்று சொன்னார்கள்.

சின்மயசிற்குணவகண்டாகாரசச்சிதானந்தன்சேர்ந்தோர்தம்மைத்
தன்மயமாக்கிடுமுதல்வன் காரணாதீதனவன் றலைமை சான்ற
நன்மைதரு மருளெங்கே நானெங்கே நான்புரிந்த தவங்க ளெங்கே
யென்மனமெங் கேயெனது பிறப்பெங்கே யென்னுடைய பத்தியெங்கே.

பண்டுபுரி தவத்தானு மித்தடத்தி னீராடும் பலத்தினாலும், மண்டர்தொழும் பெருங்கணநாதனங்கடரிசன மடியேற் காயிற்றென்னை, மண்டுபெருந் தவமாற்றிச் சாருகா சினியோடு மருவி வீம, னெண்டரையி னுயிர்தந்தனன்வே நிலையவரை யொழித்தெவ்வா றுறுவேனென்றான்

அதை யவ்வரசன் கேட்டு அத்தேவகணத்தலைவரை அஷ்டாங்கமாக வணங்கி, சின்மய சிற்குண அகண்டாகார சச்சிதானந்தராகியும், தம்மையடைந்தோர்களைத் தன்மயமாக்குகின்ற முதல்வராகியும், காரணாதீதராகியு மிருக்கின்ற விநாயகக் கடவுளுடைய பெருங்கருணைக்கு யானெவ்வளவுபாத்திரன். யானென்ன தவங்களைச்செய்தேன் என்மன மெவ்வளவு பக்குவமாயிற்று என்பிறவி எவ்வளவு யோக்கியம் என்பத்தியெவ்வளவு? அச்சோ? யான் முன்பு செய்திருக்கின்ற தபோபலத்தினாலும் இத்திவ்விய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்த மகிமையினாலும் அடியேன் உம்முடையதரிசனத்தை யெளிதிற் கிடைக்கப்பெற்றேன். ஆயினும் வீமராசனுஞ் சாருகாசினியும் அளவற்ற தவங்களைச்செய்து என்னை யீன்றார்களாதலால் அவர்களைவிடுத்து யான்மாத்திரமெவ்வாறு வருவதென்றுசொன்னான். அவையனைத்தையுந் தேவகணத்தலைவர்கேட்டு மிக்க சந்தோஷங்கொண்டு சுசனபரிபாலகனே! நீயுனது தாய்தந்தையரை நினைத்து இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தர்ப்பணம் புரிவையாயின் அவர்களுமுன்னுடன் வருவார்களென்றுசொல்ல, அதையுருக்குமாங்கதராசன்கேட்டு மனக்களிப்படைந்தொர் தருப்பையைமுடிந்து அம்முடிந்ததருப்பையைத் தாய்தந்தைமுதலாயினோரை நினைத்

து ஸ்நானஞ்செய்வித்துத் தானு மடுக்கரைமீதேறிவந்து, தனக்கு வழிகாட்டியாட்கொண்டருளிய நாரதமுனிவரைப் பணிந்து, தன்னோயைப் போக்கியருள அத் தீர்த்தத்தையுந் துதித்து, நின்மல சொரூபத்தையடைந்தான் அவ்வரசனுடனிருந்த மற்றையர்களும் ஸ்நானஞ்செய்து தெய்வரூபம் பெற்றார்கள் அரசன் மீளவுஞ் சிந்தாமணி விநாயகரைப் பூசித்துத் தன்சேனைகளோடும் விமானத்திலேறித்தனது கவுண்டின்னிய நகரிற்சென்று தான் ஸ்நானஞ்செய்தபலனைத் தாய்தந்தைமுதலாயினோர்க்குத் தத்தஞ்செய்தான். மற்றையசேனைகளும் அவ்வாறே தங்கடங்கள் சுற்றத்தினர்கட்குத் தத்தஞ்செய்தார்கள் விநாயகமூர்த்தியினுடைய திருவருளால்உடனே அவர்கட்கு வெவ்வேறு விமானங்கள்வந்தன பின்னர் வீமராசன் முதலாயினோர் அவ் விமானங்களைப் பணிந்து, அவைகளி லேறிக் கொண்டு உருக்குமாங்கத ராசனோடும் விநாயகலோகத்திற்போய்ச்

உருக்குமாங்கதன் முத்தியடைந்த படல முற்றிற்று

# கிருச்சமத ருபதேசம்பெற்ற படலம்.



அருந்தவத்து வச்சுவா மித்திரனை வியனுற லாதி யாகத்,
திருந்துமக னோடுமுத்தி சேர்ந்திடுத வீ ரகத திகழாநின்ற, பொருந்
துபல சரிதமுங்கேட் டனைசோம காந்தவினிய புலக்கேளாய்,
பெருந்தவத்துக் கிருச்சமத னுபாசனையென் றுரைசெய்வான்
பிருகு மேலோன்

சவுனகர் முதலிய முனிவர்களே? விநாயகமூர்த்தியை உருக்குமாங்கதராசன் பூசித்துமுத்தியடைந்த திறத்தினைச்சொன்னோம். இப்பால் கிருச்சமதமுனிவர் உபாசித்த வரலாற்றினைச சொல்லுவோம் கேட்பீராக முன்னர் முகுந்தையிட்டசாபத்தோடு உருக்குமாங்கதராசன் அவ்விடம் விட்டு நீங்கியபின்னர் அம்முகுந்தைக்கு விரகதாபமேலிட்டு அவ்வரசனையே நினைந்து நினைந்து அனலிற்பட்ட மெழுகையொத்தவளாகிஉள்ளங்கரைந்து, உடல்நெகிழ்ந்து, காமாக்கினியைச் சகிக்கமாட்டாது நந்தவனங்களிற்சென்று உலாவுவாள்; குளிர்ந்த தடாகங்கள் செய்கின்ற மான்கூட்டங்களைக்கண்டு வாடுவாள், வேய்ங்குழலோசையைக்கேட்டு ஊடுவாள்; மந்தமா

ருதம்வீச நடுநடுங்கித் தென்றலே! நீ தீயோடு கலந்துவந்த காரண மென்னவென்று கோபிப்பாள்; பசுவின்கழுத்தி லசைகின்ற மணி யோசையைக்கேட்டு ஐயோ! என்னுயிர் சிந்துகின்றதே ஈதென்ன காலன்வருகின்ற ஓசைதானோவென்று கலங்குவாள்; கடலோசை யைக்கேட்டு, பயோததியே! பிறர்க்குத்தீமை செய்கின்ற சிறியர்க ளைப்போல என்னைவருத்துகின்ற ஆபக்குழலோசையோடு நீயுமெ னக்குப் பெருந்துன்பத்தை மூட்டுகின்றனையே இஃதுனக்குமுறை தானோ? உன்னுண்மையை யறிக்கவல்ல குறுமுனிவர் குன்றிலிருப் பதை யறிந்திலேயோவென்று குழறுவாள்; ஓர்வட்டமாகிய பலகை யின்மீது உருக்குமாங்கதராசன் உருவத்தையெல்லாம் வரைந்து தன்கரங்களைக்கொண்டணைவாள்; இரண்டுதனங்களையு மதன்மீது பொருந்தமுயங்குவாள்; முகநந்தோடு முகத்தை வைத்து முத்தமி டுவாள்; மீளவும் வருந்தி மாலையைப்போலத் துவளுவாள்; இனி யென்ன செய்வேனென்று மெலிந்து பெருமூச்சு விடுவாள்; பூஞ் சோலையிலுள்ள தளிர்களெல்லாந் தன் சரீர வெம்மையாற் றீய்ந்து மேல் விழுவதினால் அவைகள்பட்ட விடமெங்கும் கொப்புளங்கொ ண்டு தன்னிருவிழிகளி னின்றும், நீரைச் சொரிவாள்; சரீரவெம் மையைச் சகிக்கமாட்டாது விழுந்ததுபோல் மேகலை யொதுங்கும் படியாகவீழ்வாள்; இவ்வித அலங்கோலத்துடன் முகுந்தை யான வள் தன்னுலொரு சொல்லுதற்கரிய பெருந்துன்பத்தின் மூழ்கி வலி குறைந்து அறிவிழந்து நிலத்தின் முடியைச் சாய்த்துச் சோர்வுற் றுத் தன்வசமற்றவளாகி இருந்தனள் இவையனைத்தையுந் தேவே ந்திரன் அறிந்து தானவளைச்சேர வெண்ணினவனாகி அடியிற்பாத க்காப்பும், கணைக்காலில் வீரகண்டாமணியும், விரலிற் கடைசமும், கரத்தில் நாணேற்றி யிருக்கின்ற விலலும், மார்பில் மலர்மாலையும், தோளில்அம்புபெய் தூணியுமுடையவனாய்ப் பொற்சரடாற் கட்ட ப்பட்டிருக்கின்ற மயிர்முடியோடு மன்மதசரங்களான மருண்டிருக் கின்ற குமுந்தையினது கொங்கையி லணியப்பட்ட கச்சும் அவள து நெஞ்சமுங் கழலும்படியாக உருக்குமாங்கத ராசனேயென்று சொல்லும்படி அவன்சரீரத்துள்ள கோலத்தையெல்லாங்கொண்டு பொருக்கென்றெழுந்து அவளருகிற் சென்றான். அவனைக்கண்டவு டனே முகுந்தையானவள் மனமகிழ்ந்து முன்னர்த் தடுத்துச்சென் ற உருக்குமாங்கதனே மீட்டும் வந்தானென்று கருதித்தானும் பொ ருக்கென்றெழுந்தாள். உடனே வஞ்சவடிவனாகிய தேவேந்திரன் மனங்களித்து அவளோடு நயவார்த்தைகளைப்பேசித் தனது மார்பி

லணிந்திருக்கின்ற சந்தனமெல்லாம் அவளிரண்டு தனங்களாற் கலையும்படியாகத்தழுவி அடிக்கடியவளது செவ்விதழூறலை யுண்டு பலவித சரதங்களை நடாத்திவருகின்றசமயத்தில் முகுந்தையென்பவள் தன்னறிவுமயங்கி அவன்மாட்டுற்றனது கொங்கைச் சுவடுபொருந்தும்படியாக வணைந்துதந்தேகபரவசங்கொண்டு காமவாரியைக் கரைகாணமாட்டாதவளாய் யானுனக்கு என்ன கைம்மாறுசெய்ய வல்லேனென்று பலமுறையவனைப் புகழ்ந்து சரசசல்லாபமாய்க் கலந்தனள் தேவேந்திரன் அவளன்பிற்கு மனப்பூரிப்படைந்து நகக்குறி பற்குறி தம்பனம் சும்பனம் முதலிய பலலீலைகளை மாறிமாறி நடாத்தி, அவர்மிடற்றினின்றெழும் புட்குரலோசைகளையுமுண்டாக்கி, மன்மதனபொழிகின்ற பாணவருஷங்களை யடக்கி, அவன் கருப்பு விலையுமொடித்து, இனி மாரனொடு போர்செய்யாதவண்ணம் அவனைத் துரத்திவிட்டான. பின்னா முகுந்தையானவள் தனதெண்ணத்தின்படி நிறைவேறிய கலவிக்கு மனமகிழ்ந்து கணவராகிய கவிமுனிவருக்குப் பணிவிடை ஏவல்செய்யச் சென்றனள். இந்திரனுந் தனது பொய்வேடத்தைப்போக்கிச் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தனன்

உடனே முகுந்தைவயிற்றிற் கருவுண்டாகிக் கருங்கடலுச்சியி லுதயமாகின்ற சூரியனைப்போல அண்டங்களெல்லாம் நடுங்கும்படியானபோரொலியோடும் ஒருபுத்திரன் பிறந்தனன். அப்புத்திரனைக் கவிமுனிவர்கண்டு மனமகிழ்ச்சியடைந்து இந்திரனுக்குப்பிறந்த புத்திரனென்றறியாமல் தமதுகரத்திலேந்தித் தேவர்கட்கெல்லாம் அவிர்ப்பாகமுதலியவைகளைக்கொடுத்துச் சாதகருமாதிகளையுஞ் சிறப்பெய்த நடாத்தினர். இப்பால் அப்புதல்வனுக்குத்தயிலாதிகளைத் தீமிர்ந்து, பரிமளமிகுந்த கஸ்தூரிமஞ்சள் முதலியவைகளாற் புனலாட்டி, அகிலசந்தனப்புகைகளையூட்டி, இரத்தினாபரணங்களைப்பூட்டி, நுதலிற் றிலதந்தீட்டி, முலைப்பாலூட்டிப் பெண்கள் கிரீடியான முகுந்தையானவள் சகல செல்வத்துடன் போற்றி வருகின்ற நாளையில் கவிமுனிவர் அப்புதல்வன்பிறந்த பன்னிரண்டாநாள் கிருச்சமதரென்னு நாமகரணந்தரித்து, ஆறுவதுவயதில் உபநயனச் சடங்கினை முடித்து, வேதாகமாதிகளையுங்கற்பித்தனர். அவ்வாறே கிருச்சமதர் சகல வித்தைகளையுந்தந்தைபாற்றெளிந்து ஒருகாற் சொன்னவுடன் ஒருங்குணரு முத்திரியினராகி, வினையென்னும விருக்ஷத்தைவேருடன் கெல்லவல்ல வெற்றிப்படைக்கொப்பாகி யிருந்தனர். பின்னர்க் கவிமுனிவரானவர் அப்புதல்வன் ஒழு

க்கமுதலிய நன்னெறிகளிற் பிறழாதிருக்கின்ற பெற்றியினைக்கண்டு மிக்கமனமகிழ்ச்சி யடைந்து, கஜாநநாயவென்னு மந்திரத்தை யுபதேசித்துக் குழந்தாய்! இம்மனுவை யனுட்டிப்போடு செபித்து வருவையாயின் உனக்குக் கணேசமூர்த்தியினுடைய திருவருளுண் டாகுமென்றுசொன்னார் கிருச்சமதரும் மனமகிழ்ந்து பிரதிதினம் நித்திய நியமாதிகளைமுடித்து விநாயகக்கடவுளை மனதிற்றியானித்து அம்மந்திரத்தை யன்போடு செபித்துச் சாபாநுக்கிரகசாமார்த்தியராகிச் சகப்பிரசித்தியாய் விளங்கி யிருக்கின்ற நாளையில், மகத நாட்டிற் சகலருக்குந் தாய்க்கொப்பானவனாகியும், கொடையிற் கொண்டலை வென்றவனாகியு மிருக்கின்ற சூரனென்னும் பெயரினை யுடைய ஓர் அரசனிருந்தான் அவ்வரசனானவன் தனக்கு உடலு முயிரும்போலிருந்து வழிபடத்தக்க அம்பிகையென்னுமனைவியோ டும் பிரகற்பதி தேவனுநசுக்கிர பகவானுங் கண்டு நாணத்தக்க யுத்தியினையுடைய அமைச்சர்களோடு மிருந்து அரசாட்சி செய்து வருங்காலத்தில் அவ்வரசனுடைய பிதாவுக்குச் சிராத்ததினம்வர, அதைக்குறித்துவசிட்டர் அத்திரிமுதலான முனிவர்களைவரவழைத்தான். அம்முனிவர்களோடு கிருச்சமத முனிவருஞ்சென்றார்

பின்னர் அம்முனிவர் கூட்டத்துள் அத்திரி முனிவருக்குங் கிருச்சமதமுனிவருக்குங் கலைஞானப் பிரசங்கங்களில் ஒருவர்க் கொருவர் விவாதம் நேரிட்டுப போர்செய்வாராயினர், அவருள்கிருச்சமதமுனிவரை அத்திரிமுனிவர் வெல்லமாட்டாதிளைத்துக்கொல்லத்தக்க கோபத்தோடு நெருப்பெழுந்து பறக்கும்படியாகக்கண்களை நெரித்துக் கிருச்சமத முனிவரைப் பார்த்து, நீ மகாயோக்கியனைப்போற் பேசுகின்றாய் உன் பிறப்பையும் பெருமையையும் நெருப்பிற் கொண்டுபோய்ச்சுடு. எங்களைப்போல நீயுமோர் முனி புத்திரனாகி வாதாடவந்தாய் நீ உருக்குமாங்கத ராசனுக்குப்பிறந்ததை யொருவருக்குந் தெரியாததோ? நீ இச்சபையி லிருக்கத் தகாது. உனக்கு எங்களோடு சேர்த்துச் சரியானமரியாதையுநடக்கக்கூடாது. இந்நியிடத்தெழுந்து வெளியிற் செல்லக்கடவையென்று கையால் மறித்து மறித்துச் சொல்லுகின்றதைக் கிருச்சமதமுனிவர் கேட்டு மிகுந்த கோபங்கொண்டு, கண்சிவந்து, இதழ்துடித்துப் புருவநெறித்து, அங்கிருப்போரெல்லாம் அஞ்சி நடுங்கும்படியாகத் திரிலோகத்தையு மெரிப்பார்போலக் கொதித்தெழுந்து, வசிட்டர் முதலான முனிவர் கூட்டங்களுக் கெதிராக நின்று என்னோடு சரியாகப் பிரசங்கித்து வெல்வதற்குச் சத்தியற்ற அவமான

த்தால் என்னை உருக்குமாங்கதராசன் புத்திரனென்று அவமதிப்
பாகப் பேசினீர்கள். யான் தவசிரேஷ்டராகிய கவிமுனிவருடைய
புத்திரனே யானால் இச்சபையிற் கூடியிருக்கின்ற உங்களையெல்
லாம் இமைப்பொழுதிற் சாம்பராக்கித் தேவர்களெல்லாங் கொண்
டாடத்தக்க புகழை யடையக்கடவேனென்று சொல்லி, அவ்விடத்
தினின்றுந் தனிச்சென்றகன்று, அதிக வேகத்துடன் சென்று தணி
யாத கோபத்தோடுந் தன் தாயாகிய முகுந்தையை யடுத்து, ஏ
மங்காய்? என்முன்னர்வா; என் தந்தையார்? நடந்தகாரியத்தை
எனக்குள்ளபடி சொல்லக்கடவையென்றார் உடனே முகுந்தையா
னவள் நடுநடுங்கி, மகனே? யானுன்னிட்டப்படி நடந்த உண்மை
யைச் சொல்லுகிறேன் நீ அவசியப்படாமற்கேள் ஓர்நாள் உருக்கு
மாங்கதராசன் மிருகவேட்டையாடி வருகையில் மிக்கதாகத்தோ
டும் இங்குவந் தென்னைத் தண்ணீர் கேட்டான் இவ்வுலக மெங்க
ணும் காணற்கரிய அவன்பேரழகை யான்கண்டவுடன் என்மனமு
ருகியது பெண்பிள்ளைகட்கு விரகமுண்டானபோது தங்களிச்சை
யின் வண்ணம் நடந்துகொள்ளும்படி சாஸ்திரங்களில் விதித்திருக்
கின்றமையால் அவனுடன் கூடி யுன்னைப் பெற்றேன் இதுவே நட
ந்த உண்மையென்று சொல்லலும், தவத்திலே மலைக்கொப்பானவ
ராகிய கிருச்சமத முனிவர் முன்னரடைந்த கோபாக்கினியின்மீது
மற்றொரு கோபாக்கினியைச சொரிந்ததுபோல மனம்வெந்து நீ
வனத்திலே பறவைகளுண்ணாத இலந்தை மரமாகக் கடவையென்
று சபித்தனர். பின்ன ரொடுங்கிநின்ற முகுந்தையானவள் தன்னை
ச் சபித்த புத்திரனைப் பார்த்து, நீ சகல சாஸ்திரங்களினும் வல்ல
வனாகியிருந்தும் பெற்ற தாயென்று சற்றுங் கருதாமல் என்னை நடு
ங்கச்செய்தாய். ஆதலால் இனி உனதுமனமும நடுங்கும்படியாகக்
கொடிய குணத்தோடும் ஓர் புத்திரன் உனக்குண்டாகக் கடவதெ
ன்று சபித்து, உடனே காட்டினிடத்தே யிலந்தைமரமாய்நின்றாள்.

இப்பால் கிருச்சமத முனிவர் இராசபுத்திரனென்பதைக்குறி
த்து மனம்வெட்கி இவ்வித அவமானத்துடன் உயிரை வைத்தி
ருப்பதைவிட இச்சரீரத்தை யொடுக்கி மாய்வதே நன்மையென்
றெண்ணமுற் றிருக்கையில், அவர் மனங் குளிரும்படியாக "நீ
தேவேந்திரனுடைய புத்திரன்" என்று ஒரு அசரீரி வாக்கு ஆகா
யத்தி லுண்டாயது அவ்வாக்கினைக் கிருச்சமத முனிவர் கேட்டுச்
சிந்தையைச் சிறிது தேற்றஞ்செய்து, முன்னர் நம்மை யவ

மானஞ்செய்த முனிவராதியர் இப்போது நம்மை வணங்கத்தக்க வரங்களைப் பெற்று வருவோமென் றெண்ணமுற்று, அவ்வனத்தை விட்டு நீங்கி மற்றொரு வனத்தை யடைந்தனர்.

கிருச்சமத ருபதேசம் பெற்ற படல முற்றிற்று.

---

# கிருச்சமதர் வரம்பெறு படலம்.

எந்தை யைங்கரற் கினியமந் திரவுப தேசந்
தந்தை தந்திட முகுந்தைதன் மகன்பெற்ற துரைத்தா
மந்த மெய்த்தவன் வரம்பெற லறிகெனப் பிருகு
சுந்த ரம்பெறு சோமகாந் தனுக்குரை தொகுப்பான்.

சோமகாந்தனே! அதில் மல்லிகை, முல்லை முதலிய பலபுட்பக் கொடிகளாற் பந்தலிடப்பட்டிருக்கின்ற பொழிலையும், தாமரை அல்லி நீலோற்பல முதலிய பலபுட்ப வருக்கங்களணிந்த தடாகங்களையுங்கண்டு, வேதவோசைகளோடு பல வேள்விகளை நடாத்துகின்ற முனிவர் கூட்டங்களையும் கிரீடாதிபதிகளாகிய தேவர் சமூகங்களையு மடைந்து தீர்க்கதண்டன் செய்தனர் அவர்கள் இக்கிருச்சமத முனிவருடைய நல்வரவை பெற்று இங்ஙன மிருமென்று கட்டளையிட, அதற்கவர் மனமகிழ்ந்து அவ்வனத்தில் ஓர்பக்கத்திலிருந்து வலத்தாட் பெருவிரலை நிலத்திலூன்றி ஐம்புலனங்களையு மடக்கிக் கணேசமூர்த்தியினுடைய திருவுருவத்தை மனதிற் றியானித்துத் தமது தந்தை யுபதேசித்த மந்திரத்தைச்செபித்து, தேவ வருடத்தில ஆயிரம்வருடத்திற் கொருகால் கண்களைவிழித்து மீள வுமூடிக்கொள்ளுவார் இவ்வாறு பதினாயிரம் வருடம் வரையிற் றவஞ்செய்தலும் அந்தத தவாக்கினியானது திரிலோகத்திலுஞ் சென்று சகலரையுந் தீய்த்துவருத்தியது. பின்னர் மனவாக்குக் காயங்களா லெட்டுதற்கரிய பேரொளியாகியும் பரிபூரணமாகியும் யானெனதென்னும் போதத்தை யொழித்த மெய்ஞ்ஞானிய ருள்ளத்தில் எக்காலத்தும் பிரியாவிடையாயிருக்கின்ற விநாயகமூர்த்தியானவர் கோடி சூரியோதயத்திற் கொப்பான காந்தியுடைய திருமேனியும், தாமரைப்பூ மாலிகையைத் தரித்திருக்கின்ற மார்பும் பரிமளமிகுந்த குங்குமம் கர்ப்பூர முதலியவைகளைச் சேர்த்துப் பனிநீர்விட்டரைத்த சந்தனம் பூசியிருக்கின்ற பத்துப்புயங்களும், இடைவிடாது அசைகின்ற செவிகளும், மதம்பொழிகின்ற யானை

வதனமும், இளம் பிறையையொத்த ஒற்றைக்கோடும்விளங்க இருமருங்கினுஞ் சித்திபுத்திகள் வாசஞ்செய்யுந் திருக்கோலத்தோடு வெள்ளைநிறமுள்ள சிங்கவாகன மூர்ந்து, சந்திரனொளியெல்லாஞ் சூரியனொளியில் மாய்வதுபோலக் கிருச்சமதருடைய தவாக்கினியொளியெல்லாந் தமது திருமேனியொளியின் மழுங்கும் படியாக அவரெதிரிற் பிரத்தியட்ச மாயினர். உடனே கிருச்சமத முனிவர் கண்டு மிரண்டு சுவாமியினுடைய பேரொளியாற் குருமேனியெழில் தோற்றுமற் கண்கூசி, மதிமயங்கி,நமது தவத்திறகு ஈதேதோ ஒரு விக்கினம் வந்ததென்றெண்ணி விநாயக மூர்த்தியை மனதிற் றியானித்து சுவாமி? இவ்விக்கினத்தை விலக்கி அடியேன்றவ மீடேறும்படி யனுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார் முக்கண் கூடும்படி எழுந்தருளிய கணேசமூர்த்தியானவர் அதற்குக் கருணைகூர்ந்து ஞானமென்னும் அகக்கண்ணை யளித்தருளினர். பின்னர்க் கவலையுற்றிருந்த கிருச்சமத முனிவர் மனமகிழ்நது மிக்கபயபத்தியோடுமெழுந்து சுவாமியைக் கண்குளிரப் பார்ததுச் சாஷ்டாங்கமாக வணங்கி, விநாயகக்கடவுளை நம்மீது கிருபைசுரந்து வேதங்களுங் காணுதற்கரிய தமது திருமேனியோடு மெழுந்தருளின ரென்று தேர்ந்து உள்ளமுருகி, ஆனந்தக் கண்ணீர் சொரிந்து துதிப்பாராயினர்.

நித்தியமாய் நின்மலமாய் நிர்க்குணமாய் நீடொளியாய்த்
தத்துவமாய்த் தத்துவத்துக் கப்பாலா யப்பாலு
மத்துவித மான வரும்பொருளை நீயடியேன்
சித்த முவப்பத் திருக்காட்சி தந்தனையே.

தண்ணார் மதியந் தயங்குஞ் சடாதாரி
யுண்ணா ரமுதே யுலவாச் சுகக்கடலே
விண்ணோ ரறியாத வித்தகா நீயடியேன்
கண்ணாரக் காணுமா காட்சி கொடுத்தனையே.

ஆக்காமே யாக்கி யளியா தளித்தெவையும்
போக்காமே போக்கிமலம் பொன்றுவித்து மென்றூனுந்
தாக்காது நின்ற தனிமுதலே நீயடியேன்
வாக்காரக் கூறுமா வந்தெதிரே நின்றனையே.

இவ்வாறு தோத்திரஞ்செய்த கிருச்சமதமுனிவர்மீது கணேசமூர்த்தி கிருபாநோக்கம் பாலித்துச் சிரக்கம்பஞ் செய்து, அன்

பனே! உன் தவத்தை மெச்சினோம் உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக. அவைகளைத் தருகின்றோமென்று திருவாய் மலர்ந் தருளினர்.

காண்டல் கருத லுரைவற்றாற் காணாமைக்
காண்டல் கருத லுரையாலுங் கண்டேற்கு
வேண்டும் பொருளின்னு முண்டே விமலாநீ
வேண்டுகே னும்மருளைத் தள்ளாது வேண்டுகேன்.

எண்பத்து நான்குநூ றாயிரமா மியல்பிறப்பிற்
பண்புற்ற மானுடமாம் பவமரிது மானுடத்து
மெண்பெற்ற நால்வருணத் தினையைந்திடு லரிதவற்று
ணண்புற்ற வந்தணராய் நண்ணுவது மரிதாமால்.

அந்தணரு ளறிவுடைய ராதலரி தறிவருளுஞ்
சிந்தைமகி ழநுட்டானஞ் செய்குநரா குவதரிது
சிந்தைமகி ழநுட்டானஞ் செய்பவருட் டிரிவிதமாம்
பந்தமறச் சிவஞானப் பற்றுடையா ரரியர்களே.

அத்தகைய சிவஞான மடிகடிரு வடியினுறும்
பத்தியினா லதையன்றிப் பயில்வேள்வி தவந்தான
மெத்திரத்து முயற்சியினா மெய்துவதில் லாமையினால்
வித்தகநின் மலர்ப்பதத்தில் வீடாத வன்பருள்க.

எம்பெருமா னித்தலத்தி லெழுந்தருளி யெஞ்ஞான்று
மும்பர்முத லனைவோர்க்கு முவப்பவரம் வழங்கிடுக
நம்பியபுட் பகவனமும் புட்பகமா னகருமென
விம்பரினில் வனந்தனக்கு மிந்நகர்க்கும் பெயருறுக.

___னே கிருச்சமத முனிவர் இருகரங்கூப்பி, சுவாமி! யாவர்க்குங் காண்டல் கருதல் உரை என்னு இம்மூன்றளவைக்கும் அரிதாயிருக்கின்ற தேவரீரை அடியேன் காணவுங் கருதவுந் துதிக்கவும் எளிதில் கிடைக்கப்பெற்றேன் இன்னு மிதைவிட வேண்டத்தக்க தென்னவிருக்கின்றது. ஆயினும், சுவாமிகளே? அடியேனைக் கொள்ளுமாறு அருளிச்செய்தலால் இனி அடியேன் வேண்டத்தக்க தியாதெனில் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களாயுள்ள பிறவிகளுள் மானுடப் பிறவி யரிது; அம்மானுடத்துள்ள நால்வகை வருணங்களிற் பிறந்திடுவ தரிது; அந்நால்வகை வருணங்களுள் அந்தணராயுதித்தல் அரிது; அவ்வந்தணருள் அறிவுடையவ

ராகி யிருத்தலரிது; அவ்வறிவுடையோரினுஞ் சித்தி சக்தி பெற்றிருத்தலரிது; அச் சித்தசுத்தி யுடையோரில் பொன், மண், பெண் என்கின்ற மூவாசைகளையு மொழித்துச் சிவஞானசித்தியைப் பெற்றிருப்பதரிது; அத்தன்மைத்தான சித்தியானது தேவரீர் திருவடிகளிற் செய்கின்ற நிரந்தர பத்தியால் வரவேண்டுவதல்லது வேள்வி, தவம், தானமாதிய எவ்வகைத் திறத்தினாலும் மற்றெவ்வகை முயற்சியாலும் வருவதன்று ஆதலால் தேவரீர் திருவடிகளில் அடியேற்குமாறாத பத்தியை யருளல்வேண்டும் இத்தலத்தில் எக்காலத்துந் தேவரீ ரெழுந்தருளியது தேவர்கள்முதலிய யாவர்கட்கும் அவ்வவர்கள் கருதிய வரங்களை யளித்தருளவேண்டும் இவ்வனத்திற்கும் புட்பக வனமென்றும், இந்நகரத்திற்கும் புட்பக நகரமென்றும் பெயருண்டாகவேண்டும்

இவைகளன்றியும் அடியேனைத் தேவர்கள் - முனிவர்கள்-சித்தர்கள் - தைத்தியர்கள் - அரக்கர்கள் முதலான யாவர்களும் வழிபட்டு அடியேனுணையைக் கடவாமல் நடந்து கொள்ளும்படியான வரமுங் கொடுத்தருளவேண்டுமென்றார் அதற்குக் கணேசமூர்த்தி கருணைபுரிந்து அன்பனே? இந்நகரமானது இக்கிரேதயுகத்திற்புட்பக நகரமென்றும், திரேதயுகத்தில் மணிபூரக நகரமென்றும், துவாபரயுகத்தில் பானக நகரமென்றும், கலியுகத்தில் பத்திரீக நகரமென்றும், பெயர்பெற்றிருக்கும் நீ கருதிய மற்ற வரங்களு முனக்களித்தோம் இனி நமதநுக்கிரகத்தால் நினக்கொருவர் நிகரில்லாத பராக்கிரம சாலியாகிச் சிவபிரான் தவிர மற்ற யாவராலு மழியாத வரதனையுடையவனுகியும் நமது திருவடிகட்கன்பனுகியு மிராநின்ற ஒருபுத்திரனுனக்குண்டாவான். உனக்கு மூவுலகத்தாரும் புகழத்தக்க கீர்த்தியுண்டாகும். இன்னுமுனக்கு வேண்டுங் காரியங்கள் கைகூடவேண்டி நம்மை முன்னராகப் பூசித்து அவைகளைப் பெறக் ...ருகாரியத்தைச் சித்தி பெறக் கருதுகின்றவர்கள் முதலில் நம்மைக் கருதிப் பூசிப்பார்களாயின் உடனே அவர்கள் தீவினைகளினின்று நீங்கி அதனையெளிதில் அடைவார்கள். நம்மைத் தொழாதபேர்கட்கு எல்லாவிடையூறுகளும் பொல்லாவினைகளுமுண்டாகுமென் றருளிச்செய்து தமது திருவுருவைக் கரந்தருளினார்.

இப்பால் கிருச்சமத முனிவர் அவ்விடத்திலோ ராலயஞ்சமைத்து அதில் விநாயக மூர்த்தியைப் பிரதிட்டைசெய்து அம்மூர்த்திக்கு வரதகணபதியென்னுந் திருநாமம் தரித்து ஓர் தீர்த்த முண்

டாக்கி, அத்தீர்த்தத்தால் அவ்வரதகணபதிக்குத்திருமஞ்சனமாட்டிச் சதாகாலமும் பூசனைசெய்துகொண்டிருந்தார். கணேசமூர்த்திக்கு அபிடேகித்ததினால் அத்தீர்த்தத்திற்குக் கணேச தீர்த்தமென்னும் பெயருண்டாயது அந்நகரங் கணேசமூர்த்தியினுடைய கிருபையை விளங்கியதாற் கணேச நகரமென்றும், யாவர்க்கும் பல சித்திகளை தருவதால் சித்திநகரமென்றும் பெயர் பெற்றது. இஃதன்றியும் அளவற்ற சித்தர்கள் முனிவர்கள் தேவர்கள் முதலாயினோர் அச்சித்திநகரத்தை யடைந்து அங்கெழுந்தருளியிருக்கின்ற சித்தி விநாயகரைத் தரிசித்து அவ்வவர்கள் இஷ்ட காமியார்த்தங்களைப் பெற்றிருக்கின்றார்கள் என்று பிருகு முனிவர் சோமகாந்தனுக்கு சொற்றனரெனச் சூதர் கூறினர்

கிருச்சமதர் வரம்பெறு படல முற்றிற்று

---

# திரிபுரன் வரம்பெறு படலம்.

சோம காந்தனே தூத்தகு கவிமகன் பெற்ற
சேம வான்வர மறிந்தனை யினியவன் சிறுவன்
வாம மாரொரு மருப்பினன் மந்திரங் கணித்த
தேம மார்தர வறிதியென் றியம்புவன் பிருகு.

பிருகுமுனிவர் அதிக மகிழ்வுடன் விநாயகரைத் சொல்கின்றார் சோமகாந்தனே! விநாயக மூர்த்தியைக் கிருச்சமத முனிவருபாசித்துப் பல வரங்களைப் பெற்ற பேற்றினைச் சொன்னோம். இப்பால் திரிபுரனுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பாயாக. கணேசமூர்த்தி கொடுத்தருளிய வரத்தினாற் கிருச்சமத முனிவர் சகல முனிவர்களுந் தேவர்களுந் தம்மைத் தொழுதெழுந்து ஏவல் செய்யத்தக்க மாட்சிமையோடு யாகாதிகட்கெல்லாம் உபாத்தியாயராகித் தினந்தோறும் வரத கணபதியைப் பூசனைசெய்து தமது தந்தையா ருபதேசிக்கப்பெற்ற மந்திரத்தை இடைவிடாது செபித்துப் பஞ்சேந்திரியங்களையு மடக்கித் தவஞ் செய்து வருகின்ற நாளையில், ஒருநாள் நெடுநேரம் யோகத்திலிருந்து கண்களை விழித்துப்பார்த்தனர். அந்த வேகமுள்ள பார்வையினின்றுஞ் சுவர்க்கமத்திய பாதல முதலிய சகலலோகங்களு நடுங்கும்படியாகப் பிரளயகாலத்தி லுண்டாகின்ற இடியைப்போல வார்ப்பரித்து

பராக்கிரமத்தோடு முன்னர் விநாயகமூர்த்தி தந்தருளியிருக்கின்ற வரத்தின்படி பலியென்னும் பெயரினையுடைய ஓரவுண னுதித்தனன். அவன் சிவந்த நிறமும் மிகுந்த அழகும், ஒளிவீசுகின்ற கிரீடமும், நவரத்தின குண்டலமும், புயகவசமும், அரைநாணும் இன்னுமிவை முதலான அளவற்ற அலங்காரங்களோடு சூரியகாந்தியுமழுங்கத்தக்க பிரகாசத்தினையுடையவனுயிருப்பதைத் தவசிரேட்டராகிய கிருச்சமத முனிவர் கண்டு நடுநடுங்கிப் பயந்து, இவன் யாவனென்று மயங்கி மீளவுங் கணேச மூர்த்தியினுடைய பெருங் கருணையால் நமக்குப் புதல்வனாக வந்தவனென்று தெளிந்து அவனைப்பார்த்து அப்பா? நீயார் எங்கிருந்து வந்தனையென்று வினவினார்.

பாவ னிவனென் றலமந்தே யிறைவ னருளால் வருமைந்த
னுவ னெனப்பின் றெளிந்துமுனி யார்நீ யென்னப் பலிசொல்வான்
மேவு தவத்தே யறியாமை வியப்பிற் றேறின் விழிபார்த்த
வோவில் பார்வை யிடையுதித்தே னுனக்கு மகனே னெனப்பா.

அன்னை நீயே பிதாநீயே யனைத்து நீயே யெனைச்சிலநாண்
மன்ன வளர்ப்பின் யான்மும்மை வையமொருங்கு நாட்படுப்பேன்
பின்ன ரறிதி யென்வலியை யென்றுபேசப் பெருமுனிவன்
றன்னு ணடுங்கி யதுமறைத்துத் தனயற் கிதனைச் சாற்றுவான்

அதற்கு அப்பலி யென்பவன் சொல்லுவான். அண்ணலே? தாங்களென்னை இன்னவனென் றறியாதிருப்பது மிகவும் ஆச்சரியமாக விருக்கின்றது. தேவரீர் விழித்தருளிய பார்வையின் மகிமையாலல்லவா யானுண்டாயினேன் யான் தேவரீர் புத்திரன். எனக்குத் தாய்தந்தை முதலிய யாவருந் தேவரீரேயாதும் என்னைச் சில நாள் வளர்ப்பிற் பாதுகாத்துவிடல்வேண்டும் பின்னர் இம்மூவுலகங்களையும் வென்று சயங்கொள்ளுவேன். அப்போ தெனது பராக்கிரமங்களை யெல்லாந் தேவரீரே அறியப்போகிறீரென்று சொன்னான். அவைகளனைத்தையுங் கிருச்சமத முனிவர் கேட்டு நடுக்கமுற்று இதனை வெளியிடலாகாதென்று தம்முள் மறைத்துக்கொண்டு அவனைப் பார்த்துச் சொல்லுவார்.

ஆதி யந்த நடுவின்றி யகண்டா கார மாயொன்றுஞ்
சோதி யான விநாயகர்தந் தொன்மை மனுநா னெஞ்ஞான்று
நீதி யாகக் கணித் துவரு நிகரி லதனை யுரைசெய்கேன்
றீதி லாது கணியுனக்குச் சித்தி யனைத்தும் வருமென்று.

தந்தை தானே மகனாகிச் சாரு மென்னு முறையானு
மெந்தை பெருமா னருள்செய்த வியல்பி னானுங் கிருச்சமதன்
மைந்தன் றனக்குக் கணநாதன் வாவென் மனுவை யுபதேசித் [ன்.
தந்தண்மறை நூல் விதியானே யனுட்டிப்பனைத்தும் புகன்றெழித்தா

மைந்தனே! ஆதிமத்தியாந்தரகிதமாகியும், அகண்டாகாரவஸ்துவாயுமிருந்து எங்குந்தானாக விளங்குகின்ற சோதி சொரூபராகிய விநாயக மூர்த்தியினுடைய மந்திரத்தை யுனக்குபதேசிக்கின்றோம் அந்தப் புராதன மந்திரத்தைச் செபித்து வருவையாயின் உனக்குச் சகல சித்திகளுங் கைகூடுமென்று சொல்லி, கணநாதவா வென்னு மந்திரத்தை ஆகம விதிப்படி உபதேசித்து அதை யநுட்டிக்கு முறைமையையுஞ் சொன்னார்.

இப்பால் பலியெனபவன் பேருவகையில்மூழ்கினவனாய்க் கிருச்சமத முனிவருடைய திருவடிகளைப் பணிந்து துதிசெய்து, அவ்வனத்திற்றானே மற்றொருபுறத்திலிருந்து அவரைப்போலவே தானுமொருகாலை நிலத்திலூன்றிப் பஞ்சேந்திரியங்களையுமொருவழிப்படுத்திச் சுழுமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், குரு, சங்கினி * என்னுந் தசநாடிகட்கும் உற்பத்திஸ்தானமாகிய மூலாதாரத்தினின்றுந் தேகமத்தியமாகிய இதய கமலத்தில் பிருதிவி தத்துவமுதல் நாதத்துவ மீறாக ஓராதனங்கற்பித்து, அவ்வாதனத்தில் சோதிமயமான கணேச சொரூபத்தைப் பிரதிட்டைசெய்து, அந்தச சொரூபத்தில் விநாயக மூர்த்தியை ஆவாகனஞ்செய்து, அம்மூர்த்திக்கு அருளென்னுந் திருமஞ்சனத்தையாட்டி, சாந்தமென்னுஞ் சந்தனத்தைச்சாத்தி, ஞானம், மோனம் தவம்-தருமம, மனவொடுக்கம்-கல்வி, கேள்வி எனகின்ற அட்டபுட்பங்களைக் கொண்டருச்சித்து, அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் † ஆனந்தமயம் என்கின்ற பஞ்சவிதான்னங்

* அவையாவன சுழுமுனை-ஆதாரமாறினு மூடுருவி நிற்பது இடைபிங்கலை இரண்டுங் கத்திரிக் கால்போற் பின்னி நிற்பன. காந்தாரி - நாபியிற்றோன்றிச் சத்த மெழுக்கு மெழு நாடியாய்க் கண்டத்துறுவது. அத்தி சிங்குவை - இரண்டும் பத்துநாடியுற்றுக் கண்ணினிற்பன அலம்புடை புருடன்- இரண்டுஞ் செவியினூற்றிருபது நரம்புற்றிருப்பன. குரு-நாபியுறைந்து குய்யம்பற்றி நிற்பது சங்கினி உபத்தத்தைப் பற்றியிருப்பது.

† அவையாவன:—உடல் அன்னமயம். கருமேந்திரியமும் பிராணனும் பிராணமயம் கருமேந்திரியமும் மனமும் மனோமயம். ஞானேந்திரியமும், புத்தியும அஞ்ஞானமயம். அவித்தை யானந்தமயம். இவையே பஞ்சகோசம்.

களையும் நிவேதித்து, அகங்கார மென்கின்ற தூபங்கொடுத்து, அபிமானமென்கின்ற தீபங்காட்டி, †சிற்சத்தி-பராசத்தி - இச்சாசத்தி-ஞானசத்தி-கிரியாசத்தி யென்னும் பஞ்சாலாத்திதீபங்காட்டி, ஆன்மசொரூபமாகிய ஒப்பில்லா மாலையைச் சாத்தி, ஆன்மாவானது விநாயகப் பெருமானுடைய மேலானபரிபூரணஞானப்பிரகாசத்தை விநாயகப் பிரசாதமாகிய திருவருளால் அறிந்து அந்நிலையில் அழுந்துவதாகிய ‡ ஆவாகனத்தையு மேனையவற்றையுஞ்செய்து விநாயக வியாபகம் ஆன்மாவில் விளங்குதல் காரணமாகச் செய்யப்படும் பிரதக்ஷிணத்தையும், தற்போதமென்னும் அதிகாரத்தை நடாத்தும் பிரமவிட்டுணுக்களாலே சூக்குமஞான கிரியைகளை நீங்கிப் பரமபதியாகிய விநாயகக்கடவுளது அடிமையாய்நின்று அவருடன் அத்துவிதமுற்று நிற்றலைக் குறிப்பதாகிய நமஸ்காரத்தையும் அந்தர்முகத்திற்செய்து, கேவல சகலாவத்தைகளினும், ஆணவநீங்க விளங்கும் அகம்பிரம ஞானத்தினால் பொருந்தாமல் பரமஞானசாரிய மூர்த்திகளது அநுக்கிரக ஞானத்திலே தற்பூரணமெல்லாம் அடங்கப்பெற்று, தற்செய்தி யெல்லாம் அவரது அநுக்கிரக ஞானசத்தியின் செய்தியாய் அறிதற்கரிய பரமானந்தத்தை யெவ்விடத்துங் கண்டநுபவிப்பதாய விநாயக தரிசனஞ்செய்து தவத்தையியற்றினான். இங்ஙனம்பலியென்பவன பதினாயிரவருடந் தவஞ்செய்ததைக் கண்ணுற்ற விநாயகப்பெருமான் மிககிருபைகூர்ந்து, அவனுக்கருள்செய்யுமாறு உதயகாலசூரியர் கோடிகணக்காக ஒருங்குகூடியுதயஞ்செய்தாற்போலத் தோன்றியருளினர் சூரியசந்திரர்களொளியு மழுங்க வீரக்கழலை யணிந்த அழகிய திருவடிக்கமலத்தையுடைய விநாயகக்கடவுளது ஒளிமைக்காறுகின்ற திருமேனியினின்றுந் தோன்றிப் பரக்கின்ற சோதிக்குப் பயப்படாதவனுப், அக்கினியிருத்துக் காலுங்கொடிய தவத்தையுடைய பலியென்பவன் பார்த்தான். வலியஅழகிய நான்கு திருப்புயங்களும், செந்தாமரையும், சூலாயுதமும், மழுப்படையும், மோதகமுங் கொண்டநான்கு திருக்கைகளுமுள்ள கணேசமூர்த்தியின் திருவுருவங்கள் முழுவதையுந் தரிசித்து, எழுதப்பட்டசித்திரம்போலநின்று. அடியற்றமரம்போல

---

† அவையாவன:— உயிர்க்கொளியாக நிற்பது சிற்சத்தி பிராணன்முதலிய வாயுவாக நிற்பது ஞானசத்தி மற்றை வினைத்துணையாக நிற்பது கிரியாசத்தி ‡ தாபனம், சந்நிதானம் முதலிய சோடசோபசாரங்களின்தத்துவார்த்தங்களை யெல்லாம் சிவக்ஷேத்திராலய மகோற்சவ உண்மைவிளக்க மென்னு நூலிற் கண்டு தெளிக.

எதிரேவீழ்ந்து, தேவாதிதேவனே! சர்ப்பாபரணனே! அங்குசபாச மேந்தும் அருணமூர்த்தியே! முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே! பின்னைப்புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே! உன்னைப் பிராணுகப்போற்றிய அடியேறகு வேண்டுவன அளித்தி யென்றுபலவாறு துதித்து நின்றனன்.

அவைகளை யெல்லாந் திருச் செவிக்க ணேற்று நின்ற ஏரம்ப மூர்த்தியருட் கடைக்கணேக்கஞ் செய்தருளி, பலியே? நின்றவத் திற்கு மெச்சினேம், இலங்கா புரிக்கண் தென்றிசையில் விளங்குவ தாய், அடைந்தார்க்கு வேண்டுவனவற்றை யருள்வதாய் விளங்கும் கதிரை நகர் எனப்பேர்பெற்ற கதிர்காமப்பதியில் அகத்தியன் நங் துணைவனை வேண்டிச் சொல்லுதற்கரிய கடுந்தவத்தைச் செய்தாற் போல நீயுஞ்செய்தனை நீவேண்டிய வரங்களைக்கேள் தருகி என்றுதிருவாய் மலர்ந்தருளுதலும், பலிசொல்கின்ருன் அண்டபகி ரண்டங்களை யெல்லாம ஒரிமைப்பொழுதினில் உண்டாக்கிக் காத் துச்சங்கரிக்கவல்ல பெருமானே, அடியார் வேண்டு வன வற்றை யெல்லாம்குறையாதளிக்க வல்லகிருபா மூர்த்தியே, அமரர் துன்ப மெல்லாம் ஒடும்படியாகப் படையுட னடந்து கதிரையம்பதியெ னும் ஏமகூடத்தில் பாடி வீடுகொண்டு, சமர்புரிந்து சூரபன்மன் முதலிய அசுரர்களது வலிதொலைத்து, விண்குடியேற்றிய வெற்றி வேலாயுதத்தையேந்தியருளியகுமரக்கடவுளை துணைவனுக்கொண்ட குரிசிலே, சித்திபுத்தி எனனுஞ்சத்திகளைக் கொண்டருளிய அநாதி மலமுத்த நித்தபதியே, தேவரீரைக்குறித்து அடியேன் அன்புடன் தவம்புரிந்தது மெய்யேயானல் மூவுலகங்களு மடியேன் வசமாக வேண்டும். இந்திரன் முதலியதேவர்கள் கைகட்டி வாய்புதைத்து, அடியேன் வாயிலிற் காத்திருந்து யானிடுகின்ற ஏவல்களைத் தட் டாமல் நடத்திவருகின்ற அரசாட்சிவேண்டும். எந்தப் பொருளை எந்தெந்த வேளையில் நினைத்தாலும் அந்தப்பொருள்கள் அந்தந்த வேளையில் அடியேற்கு எளிதிற்கிடைக்கவேண்டும். தேவரீர்திருவடி களில் அடியேற்கு மாருத பத்திவேண்டும். என்சரீர வந்தத்தில்அடி யேற்கு முத்தியுண்டாக வேண்டுமென்று பிரார்த்தித்தான். இவை யனைத்தையுங் கணேசமூர்த்திகேட்டுச் சிறியவனே நீகருதியவரங்க ளனைத்தையுங் கொடுத்தோம். மூவுலகத்தாரு முன்னேவல் புரிந்து சேவிப்பார்கள். இவைகளன்றியும் கரும்பொன், வெண் பொன், பசும்பொன் என்கின்றமூன்று லோகத்தாலாகிய மூவிதக்கோட்டை

களையும் உனக்களித்தோம். அவைகட்குப்பெயர் திரிபுரமென்று சொல்லப்படும் உன்னையுலகத்தாரெல்லாந் திரிபுரனென்றழைக்கக் கடவர்கள். காம தகனராகிய கங்கா சடாதர மூர்த்தியின் கணையாலன்றி மற்றையாவராலும் உனக்குமுடிவில்லை நீநினைத்தவிடத்துனக்கு முன்னதாகவே அத்திரிபுரங்கள் கூடநடக்கும் பின்னர்ச்சகலமுஞ் சிவபெருமான் விடுகின்ற கணையாலழிந்து விடும் உடனே உனக்குமுத்தி யுண்டாகுமென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக்கரந்தருளினார் இவ்வாறு விநாயகக்கடவுள் அவனுக்குக் கொடுத்தருளிய வரங்களையெல்லாந் தேவர்கள்கேட்டு நடுநடுங்கித்துக்கசாகரத்தின் மூழ்கினார்கள். இப்பாற் பலியென்பவன் தன்தந்தையாகிய கிருச்சமத முனிவரைக்கண்டு பணிந்து தான் பெற்றுவந்த வரங்களனைத்தையுஞ்சொல்லி மூவுலகத்திலுஞ் சென்று போர்செய்வதான எண்ணத்தோடு அப்புட்பகவனத்தில் வாசஞ் செய்திருந்தான். சோமகாந்தனை அவன்றிரிபுரனென்னும் பெயருடன் விளங்கினன் அவன்றவமியற்றிய விடத்தைப் பெரியோர்கள் வங்காளமென்பர் மற்றைச்சரிதங் கூறுகின்றோங் கேண்மின்கள்

திரிபுரன் வரம்பெறு படல முற்றிற்று.

---

# திரிபுர னரசாட்சிப் படலம்.

அரியுகைத் தருளுநால்வா யைங்கையா னனைய தானைக்
கரிமுகன் கருணைபெற்றுக் களித்தபி னாற்றல் சான்ற
திரிபுரன் யாதுசெய்தான் செப்பென வியாதனைக் கேட்பப்
பெரியகுண் டிகைசே ரங்கைப் பிரமன்மே லுரைக்கப் புக்கான்.

சவுனகாதி முனிவர்களே! பின்னர் எமது ஆசிரியராகிய வியாதர் பிரமனைநோக்கி, அண்ணலே, திரிபுரன் பின்னர் யாது செய்தனன். அதனைக் கூறுகவென்று கேட்க கூறுவார். பின்னர் அப்பலியென்பவன் புட்பகவனத்திலிருக்கின்ற கணேச புரத்தில் யாவரும் அதிசயிக்கத்தக்கதாகக் கண்டகற்சிலைகளினால் ஓராலயஞ்சமைத்து, அவ்வாலயத்தை யலங்கரித்துத்தானெவ்வாறு கணேசமூர்த்தியைத் தரிசித்தானோ அவ்வாறே அக்கண்டகச்சிலையினால் ஒருதிருவுருவமுங்கண்டு அத்திருவுருவத்தை யவ்வாலயத்திற்பிரதிட்டைசெய்து

தினந்தோறு மாராதித்துக் கொண்டிருந்தான். இவ்வாறு சிலநாட் கழிந்தபின்னர் பூலோகத்துள்ளவரசர்களையெல்லாம் வெல்வதற்கு வெளிக்கொண்டுசென்று அளவற்ற யுத்தங்களை நடத்திச்சகலவேந்தர்களையும் வென்று, அவர்கட்கெல்லாந் தன்னைக் கீழ்ப்புணிந்து ஏவல்செய்து வரும்படியாகக் கட்டளையிட்டு, தன்னை வணங்காரையெல்லாம்விண்குடியேற்றி, பாதாளலோகத்திற்சென்று அங்காசாள்கின்ற நாகேந்திரன் முதலான சகலவீரர்களையுஞ்செயித்து அவ்விடத்துள்ள மாணிக்க முதலிய செல்வங்களையெல்லாங் கைக்கொண்டுமீட்டும் பூலோகத்திற்கு வந்தான. உடனே அந்தத்தீபாந்தரங்களிலுள்ள அவுணர்க ளெல்லாம் வந்து தீர்க்க தண்டனுஞ்செய்து துதிக்க, அவர்கட்கெல்லாங் கிருபைபுரிந்து அவரவர்க்கு வேண்டிய செல்வங்களையுங் கொடுத்துப் பின்னர் அவர்களோடு பூலோகத்தினின்றும் பாதலலோகத்தினின்றும் வந்திருக்கின்ற சேனைகளையு மழைத்துக்கொண்டு செப்பரியபுரங் குவிந்து. வலை-மழு வாள்-கேடயமுதலான அளவற்ற யுத்தங்களை நேசாஞ்செய்து, அவுணசேனைகளெல்லாம் அம்மாமாகை யிருளைப்போலத் தன்னைப் புடைசூழ்ந்துவர ஒருநாளன்று சுவர்க்கலோகத்திற்சென்று கற்பகச்சோலையிற்புகுந்து அங்கிருக்கின்ற தேவர்களை யெல்லா மொடுக்கி அச்சோலையினையு நாசஞ்செய்ததான. இப்பால இவன் வரவைத் தேவதூதர்க ளறிந்து இந்திரனுக்கறிக்கைவிட்டார்கள்.

உடனே அப்பால் யெப்பவுந் தனதுவாவை இந்திரனுக்கறிவிக்குமாறு தூதர்களையனுப்ப அவர்களவ்வாறே சென்று இந்திரனைக்கண்டு, சுராதிபா! மகாசௌரசராகிய பலி யென்பவர் இங்கு வந்திருக்கின்றனர். நீரவ்விடத்திற்கு விரைந்து வந்து அவரைப் பத்தியோடும் பணிதல் செய்யக்கடவீர் அப்படி வராதிருப்பீராயின் உம்மை இப்பொழுதுன்கை அரசாட்சியினின்றுநீக்கி யமலோகத்திற்சேர்ப்பதாக யோசித்திருக்கின்றார் உமக்கவரோடு யுத்தஞ்செய்ய வலியிருக்குமாயின் இந்நிமிடத்திலுமக்குள்ள சேனைகளோடுவெளிக்கொண்டு வாரும் இல்லாவிட்டால் யாங்கள் முற்கூறியபடி அவரிடத்தில்வந்து சரணடையும். இதற்கென்ன உத்தரவு சொல்கின்றீரென்று கேட்டார்கள். இதனைக் கேட்டலுந் தேவேந்திரன் அதிக கோபாவேசங்கொண்டு தனது கரத்தைத் தூணிற்றாக்கி நீங்கள் சொன்ன வார்த்தை நன்று யிருக்கின்றதென்று நகைத்துத் தாமரை மலர்பூத்த காடுபோலக் கண்களெல்லாஞ் சிவப்புற்று இனி முடிவெய்துங் காரணமறியாதவனாகி, இதோவந்து யுத்தஞ்செய்து

யாவரையும் அதப்படுத்துகிறேனென்றெழுந்து, வந்தவர்கட்குவிடைகொடுத்துத்தனது சேனைகளெல்லாம் யுத்தத்திற்கு ஆயத்தமாகிவர, நகரமுழுவதுமுரசறைவித்தான் முன்னர்ப்பலிவிடுத்ததூதர்கண்மீட்டுந் திருப்பிவந்து தங்களரசனைப் பணிந்து ஓ சக்கிரேஸ்வரா! யாங்கள் தேவேந்திரனிடத்திற்சென்று அவன்கருத்தையாராயுமளவில் அவன்யுத்தத்திற்கெதிர்ப் பார்த்திருக்கின்றனனென்றலும் அழலில் நெய் சொரிந்ததுபோலப் பலியானவன் கோபங்கொண்டு இந்திரன் வரவை எதிர்ப்பார்த்திருந்தனன் இப்பால்தேவேந்திரனானவன் முடி-குடை-கவரி-நாட்டு-முரசு-சக்கரம்-யானை-கொடி-மதில்-தோரணம்-நீர்க்குடம்-பூமாலை-சங்கு-கடல்-மகரம்-ஆமை-இணைக்கயல்-சிங்கம்-தீபம்-இடபம்-ஆசனம் என்கின்ற இருபத்தொரு சின்னங்களோடு * பதாதி-சேனாமுகம், குமுதம், கணகம் வாகினி பிரளயம், சமுத்திரம், சங்கம், அநீகம், அக்குரோணி, ஏகம், கோடி, சங்கம், விந்தம், குமுதம், பதுமம், நாடு சமுத்திரம், வெள்ளம் என்கின்ற பத்தொன்பதுவகைச் சேனைத்தொகைகளுங் கிரமப்படி விளங்க, மந்திரிமார், கருமாதிகாரர், சுற்றத்தார், கடைகாப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், இவுளிமறவர்யானைவீரர் என்கின்ற எண்வகைத் துணைவாசகமும், அவ்வவர்களாயுதங்களோடும் புடைசூழ்ந்துவரவும், சத்தசாகரங்களுமுடைந்துநெருங்கியது போன்ற பேரொலியோடு அரண்மனைவாயிலைவிட்டு நீங்கித் தனது ஐராவதத்தி லாரோகணித்து ஒளிவீசுகின்ற வச்சிராயுதத்தைத் தாங்கி அளவற்ற தேவர்கூட்டங்களாசிகூறி வரவும், செயபேரிகை

பதாதி யென்பது—ஓரியானையும், ஓர்தேரும், மூன்றுபரியும், ஐந்து காலாளுங் கொண்டது. சேனாமுகமென்பது—பதாதி மூன்றுபங்கு கொண்டது. குமுதமென்பது—சேனாமுக மூன்றுபங்கு கொண்டது கணகமென்பது—குமுதமூன்றுபங்குகொண்டதுவாகினியென்பது—கணக மூன்றுபங்கு கொண்டது. பிரளயமென்பது—வாகினிமூன்றுபங்குகொண்டது, சமுத்திரமென்பது—பிரளய மூன்றுபங்கு கொண்டது. சங்கமென்பது—சமுத்திர மூன்றுபங்குகொண்டது அநீக மென்பது—சங்க மூன்றுபங்குகொண்டது அக்குரோணி யென்பது—அநீக மூன்றுபங்குகொண்டது. அக்குரோணி எட்டுப்பங்குகொண்டது—ஏகம் ஏகம் எட்டுப்பங்குகொண்டது—கோடி கோடி எட்டுப்பங்குகொண்டது—சங்கம், சங்கம், எட்டுப்பங்குகொண்டது—விந்தம் விந்தம் எட்டுப்பங்கு கொண்டது—குமுதம். குமுதம் எட்டுப்பங்கு கொண்டது—பதுமம். பதுமம் எட்டுப்பங்கு கொண்டது—நாடு. நாடு எட்டுப்பங்கு கொண்டது—சமுத்திரம். சமுத்திரம் எட்டுப்பங்கு கொண்டது—வெள்ளம்.

முதலிய வாத்தியங்கள் முழங்கி வரவும், பகைவனாகிய பலியென்பவனைத் தேடிச் சென்றனன். பலியானவன் தேவேந்திரன் வரவைப் பார்த்து அவனை யோர்திரணமாக மதித்துத் தானுந் தன்சேனைகளோடு அவனெதிரிற் சென்றான். பின்னர்ப் புண்ணியமும் பாவமும் ஒன்றாய்க் கலந்தது போலத் தேவசேனைகளோடு அவுணசேனைகளொன்றாய்க் கலந்து போர் செய்யும்போது அவுண சேனைகட்குச் சிறிதுவலிகுன்றியது அதனைப்பலியென்பவன்பார்த்துப் புண்ணில் வேல் பாய்ந்தது போலப் பொங்கி மனம்பொறாதவனாகி விழிகளில் அனற்பொறிக ளெழும்பத் தக்கதாகக் கொதித்துப் புகையுண்டாகும்படி பெருமூச்செறிந்து திசைகளெல்லா மதிர நகைத்து, புருவ நெற்றியிலேறக் கோபித்து வடவா முகாக்கினி போலச் சீறிக் குதிரைமீதேறித் தேவர்களுடைய படைக்கூட்டங்களிற் புகுந்து யாவரையுஞ் சின்னாபின்னமாக வெட்டுவனாயினான். உடனே தேவர் சேனைகளெல்லாந் திகைத்துப் பலநாயகங்களோடு வருந்தி மனந் தாபரிக்க மாட்டாது, நாற்றிசைகளினு மோடிப் பதுங்கினார்கள். சிலர் ஆயுதத்தோடு கையறபட்டவர்களும், சிலர் மாலையோடுமார்புபிளக்கப் பட்டவர்களும், சிலர் கழலோடு கால முறியப் பட்டவர்களும், சிலர்மகுடத்தோடு சிரமுருளப் பட்டவர்களும், சிலர்குடரோடுஈரல் சரியப்பட்டவர்களும்: சிலர் வலியோடு வாகழியப் பட்டவர்களுமானார்கள். இவ்வாறுதேவசேனைகளெல்லாம்அவுணராசனால்மடிந்து போவதை இந்திரன்பார்த்து மனம்பொறாமல் அழற் பொறி பறக்கும் படியாக விழித்து, ஆலகாலவிடத்தைப்போலச் சீறிமதம்பொழிகின்ற தனது அயிராவதத்தைச சண்டமாருதத்தினும் அதிகவேகமாகச் செலுத்தி அவுண சேனைகளையெல்லாங் கண்டதுண்டமாக வெட்டி எறிவானாயினான். அதனைப் பலியென்பவன்கண்டு அண்ட கடாகங்க ளெல்லாம் நடுங்கும்படியாக நெற நெறென்று பற்களைக் கடித்து விட நாகத்தினைப்போற் சீறி வீரா வேசங்கொண்டு கரத்திலிருக்கின்ற வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து குரூரமாகிய பாண வருஷங்களைப்பொழிந்துதோமரம்-குந்தம்-நேமி-பாசம்-வாள் முசலம்-தண்டம் முதலான ஆயுதங்களை நேருக்கு நேராக விடுத்து ஆகாயத்திலிருக்கின்ற உடுக்கூட்டங்களெல்லா முதிரும்படியாகச் சந்தித்துத் தேவசேனைகளை யெல்லாம் அதப்படுத்திக்கொண்டிருக்கின்றசமயத்தில், இந்திரனானவன் தனது அயிராவதத்தை அதிக வேகத்துடன் நடாத்திவந்து அதன்மத்தகத்தைப் பலியென்பவன் ஏறிநடத்துகின்ற குதிரையின் முன்னங் காலானது மடிந்தொடியும்படியாகத் தாக்கினான்.

டனே பலியானவன் தன் வாளாயுதத்தை வீசி இந்திரனை யவ்வயிராவதத்தினின்றுங் கீழே யுழும்படியாகத் தள்ளி, தன் குதிரையைத் தாழ்த்தி அவன் வச்சிராயுதத்தைக் கைக்கொண்டு, அதனால் அயிராவதத்தினுடைய மத்தகத்தில் மோதி அதன் வீரத்தை யெல்லாங் குன்றச்செய்தனன் பின்னர்த் தேவேந்திர னிமைக்குமுன்னரெழுந்து நெடுமூச் செறிந்து மிகுந்த கோபாவேசத்துடன் அப்பலியின்மேற் பாய்ந்து அவன் தலை பிளவுபடும்படியாகத் தன் கையால் பலங்கொண்டமட்டும் மோதுதலும் பலியானவன் மூர்ச்சையாக வீழ்ந்து மீளவுந் தெளிந்தெழுந்து இந்திரனுடைய மார்பிற் பாய்ந்து மோதினன் உடனே இந்திரனு மூர்ச்சித்தவனாகிச் சிறிது தெளிவுற் றெழுந்து பலியைப் பார்த்து உன்னாயுதங்களை விடுத்து என்னோடு மல்லயுத்தஞ்செய்து பிழைக்கவல்லையோ வென்றுசொல்ல, அதற்கு அவ்வவுணராசன் சொல்லுவான் இந்திரனே! விட்டிற்பூச்சியினுடைய சிறகின் காற்றினாலேயா வடவாமுகாக்கினியும், மதயானையைப்போன்ற வெனக்கு நீ தோற்றனை, ஆயினும் அஞ்சவேண்டாம் உனது பெருமை கெடாது இன்னுஞ் சிறிதுகாலம் வாழவேண்டுவையாயின் உனக்குப் பூலோக வரசாட்சியைத் தந்தேன். அங்ஙனஞ் சென்று உன்னகங்காரத்தை யெல்லா மொடுக்கி உன் கிளைஞர்களோடிருந்து வாழக்கடவை யென்றனன். அதனை இந்திரன் கேட்டுச் சரீரங் குலுங்க நகைத்து, பலியே! இன்னும் யுத்தஞ்செய்ய அழைக்கின்றேனென்று பயந்து நீ இவ்வார்த்தையைப் பேசித் தப்பித்துக் கொள்கின்றாய் இந்நிமிடத்தி லுன்சரீரத்தைச் சின்னபின்னமாக்கிப் பருந்துகட் கிரையாக்குகின்றேனென்று தன் புயங்களைத் தட்டினான் அதனைக் கேட்ட பலியானவன் அதிக உருத்திராவேசங்கொண்டு தன் குதிரையைவிட்டிறங்கி உதிரவெள்ளம் ஓடும்படியாக அவ்விந்திரனோடு அளவற்றமல்லயுத்தங்களைச் செய்து, இமைப்போதில் அவன் கால்களைப் பிடித்து ஆகாயத்திற் றூக்கிக் கிறுகிறென்று சுழற்றி வீசினான் அவ்வேகத்தோடு இந்திரனானவன் மெலிந்து இமயவரைச் சாரலில் வீழ்ந்து மூர்ச்சித்து, உயிர்போனவனை யொப்பக் கிடந்தனன். இக்காரணத்தை இந்திராணிகேள்வியுற்று நிலத்தில் வீழ்ந்து புரண்டு, அம்மாவோ: என்றழுது சோர்வுற்று மற்றைத் தேவர்களோடுங் கூடித் தன் காதலன் மூர்ச்சையாய் வீழ்ந்து கிடக்கின்ற பர்வதச்சாரலையடைந்து பற்பல சைத்தியோபசாரங்களால் அவன்மூர்ச்சையைத்

தெளிவித்து, சஞ்சிதம்-பிராரத்துவம்-ஆகாமியம் * என்னுமிம்மூன்றினால் வருகின்ற காரியங்களை யார்தடுக்க வல்லவரென்று பலபேதநூல்களைச் சொல்லி அவ்விமயகிரியினுடைய குகைகளிலே அத்தேவேந்திரனோடு தானும் ஒளித்துக்கொண்டிருந்தாள்.

இப்பால் பலியென்பவன் யுத்தகளத்தை விடுத்து இந்திரனுடைய ஐயிராவதத்திலேறிச் சயபேரிகை முழக்குவித்து அவனரண்மனையிற் சென்றுமிகுந்த ஆனந்தத்தோடு சிங்காதனத்தி லிருந்து சுவர்க்கலோகத்தி லிருக்கின்ற சுடிகளெல்லாந் தனதாணைக்கடங்கி நடந்துகொள்ளக் கடவரென்று எங்கு முரசறைவித்து, அரம்பை மாதரை நாட்டியஞ் செய்வித்துக், கின்னரர்களை வீணைவாசிப்பித்துச் சகல போகங்களையுந் தனது பஞ்சேந்திரியங்கட்கு விருந்தூட்டி அரசாட்சி செய்துகொண்டிருந்தான் இவ்வாறு சின்னாட் கழிந்தபின்னர்த் திரிபுரனென்பான் பிரமன் வாழ்கின்ற சத்தியலோகத்திற்செல்ல பிரமன் அவன் வரவை யறிந்து பயந்து அவ்வுலகத்தை விடுத்து வைகுண்டத்திற்குச் சென்றான். அவ்வைகுண்டத்தில் வாழ்கின்றவிண்டுவும் அவ்வவுணன் கொடுமைகளைக்கேட்டு நடுநடுங்கி அப்பிரமனைத் தன்னுடனழைத்துக்கொண்டு இந்திரன் முதலாயினோ ரொளித்திருக்கின்ற இமயபர்வதச் சாரலை யடைந்தார் பின்னர்ச் சத்தியலோகத்திற் சென்ற பலியானவன் அங்கு பிரமனில்லாததைக் கண்டு அவ்வுலகத்தைத் தன்வசமாக்கி அவ்விடத்தினின்று நீங்கி வைகுந்தத்திற் சென்று, அங்கு விண்டுவில்லாததைக் கண்டு அதனையுந் தன் வயப்படுத்தி, மீளவும் பூவுலகத்திற் குவந்து தனக்கு அளவற்ற வரங்களைத் தந்தருளிய விநாயக மூர்த்தியைப் பூசித்து, சுவாமீ முன்னரடியேற்குத் தேவரீர் வரமாகத் தந்த மூன்றுகோட்டைகளாகிய திரிபுரங்களை இப்போ தனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். உடனே கரும்பொன்வெண்பொன் பசும்பொன் என்னும் இம்மூன்றினாலாகிய திரிபுரங்கள் ஒவ்வொன்று நூறுயோசனை யுயரமும் நூறுயோசனைவிசாலமுமாக அளவற்ற செல்வங்களோடும ஆகாயத்திற் றோன்றின.

அத்திரிபுரங்களில் கற்பகவிருக்ஷம் காமதேனு-சங்கநிதி-பதுமநிதி முதலாகிய பொருள்களோடு அளவற்ற அற்புத சம்பத்து

* அவையாவன:—முன்சனனத்தி லனுபவித்து மிகுந்த வினைக்குறை சஞ்சிதம். அதனை இந்தச் சனனத்தி லனுபவிப்பது பிராரத்துவம் இந்தச் சனனத்தி லேறுகின்ற வினைகள் ஆகாமியம்.

களும் நிரம்பியிருந்தன சுவர்க்கம் சத்தியம் வைகுண்டம் என்னும் இம்மூன்றுலகங்கள் அப்பலியின் வசமாயினபோது அவைகட்குத் தாழ்ந்த மற்ற லோகங்களெல்லாம் அவன்வசமாய் விட்டன. அப்பலியானவன் சிவபெருமானால் முத்தியடையுங் காலத்தன்றி மற்றெக்காலத்திலு மழிவின்மையா யிருக்கின்ற மூன்றெயில்களும் அவன் செல்லுமிடங்களுக்கெல்லாம் அவன் செல்லுதலால் நடைசெய்யும்படியான சிவசேதங்கட் கொப்பாயிருந்தன. அத்திரிபுரங்களானவை யாவரும் விரும்பிய போகங்களை வரையாது கொடுத்து வருவதினால் காமதேனு கற்பகம் சிந்தாமணியென்னும் இம்மூன்று நிதிகளை யொத்திருந்தன. இப்பாற் பலியென்பவன் திரிபுரனென்னு நாமம் பெற்றவனாய், அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கித் தானடைந்த அத்திரிபுரங்களில் இரும்பாலாகிய புரத்திற்குச் சுக்கிலமென்றும், வெள்ளியாலாகிய புரத்திற்குச் சுரிலமென்றும், பொன்னாலாகிய புரத்திற்குச் சுவர்ணதிலமென்றும் நாமங்களிட்டுச் சுக்கிலம் பாதலலோகமாகவும், சுரிலம் அந்தரிக்ஷ லோகமாகவும், சுவர்ணதில சுவர்க்கலோகமாகவும் ஏற்படுத்தி விநாயகக்கடவுளை அன்புடன் தியானித்துத் தன்மனத்தால் மூன்று புத்திரர்களை யுண்டாக்கி அம்மூவருக்கு வச்சிரதமிட்டிரன், விமகாயன், காளகூடன் என்று நாமகரணஞ்செய்து, சுக்கிலமென்னு மிரும்புக் கோட்டையை வச்சிரதமிட்டிர னென்பவனுக்கும், சுரிலமென்னும் வெள்ளிக் கோட்டையை விமகாயனென்பவனுக்கும், சுவர்ணதிலமென்னும் பொன்கோட்டையைக் காளகூட னென்பவனுக்குங் கொடுத்து, இம்மூவர்கட்குந் தானதிகாரியாயிருந்து தன்னாணையின்படி யவர்களை நடாத்திவந்தான். மேற்கூறிய முப்புரங்களானவை ஆயிரம் வருடத்திற் கொருகால் அவ்விடம் விட்டு மற்றோரிடத்திற் பெயர்வதும், தனக்குள்ளிருந்து அரசுசெய்கின்றவர்கள் எதேது வேண்டினும் அவைகளையெல்லாந் தடையில்லாமற் கொடுத்து வருவதும், அவர்களெவ்வெவ் விடங்களிற் செல்ல நினைக்கினும் அவ்வவ் விடங்களிற் சென்றிறங்குவதும், தம்மடியி லகப்பட்ட உலகங்களை யெல்லா மழித்து வெற்றிகொள்வதுமாகி யிருந்தன. இப்பால் திரிபுரன் வங்காளமென்னு நகரைச்சேர்ந்து தன் மனத்தால் மீளவும் இரண்டு புத்திரர்களை யுண்டாக்கி அவர்கட்குச் சண்டனென்றும் பிரசண்டனென்றும் நாமகரணந் தரித்து, சண்ட னென்பவனைச் சத்தியலோகத்தையும், பிரசண்ட னென்பவனை வைகுண்டத்தையும் அரசாட்சிசெய்ய விடுத்துப் பின்னர் ஒரு மனைவியைக்கூடி அவளால் மத

னென்னும் பெயரினையுடைய ஒரு புத்திரனைப் பெற்றுச் சகல லோகங்களினுந் தனதாணையைச் செலுத்தி அளவற்ற போகபாக்கி யங்களை யநுபவித்துத் தனது கீர்த்தியானது அட்டதிசைகளிலும் பரவத்தக்கதாக நல்ல நீதியைச் செலுத்தி, இடைவிடாமல் விநா யகபூசையுஞ் சிவபூசையுஞ்செய்துகொண்டு அநேககாலம் அரசாட் சிசெய்து வந்தான்.

திரிபுர னரசாட்சிப படல முற்றிற்று.

# தேவர்கள் வரம்பெறு படலம்.

தேக்குபுகழ்த் திரிபுரன்முன் னரசாட்சி புரிந்ததிது தெளிக நீயென், றாக்குமிகு வியாதமுனிக் குரைத்தனனுன் முகனதனை யுனக்குச் சொன்னேம், வீக்கியபூங் கழற்சோம காந்தவினி விண் ணோர்கள் விமலர் போற்றிப், பாக்கியஞ்சேர் வரம்பெற்ற தறிகவெ னப் பிருகுமுனி பகர லுற்றான்

சோமகாந்தனே! விநாயக மூர்த்தியைத் திரிபுரன் பூசித்துவர ங்களைப் பெற்ற வரலாற்றினைச் சொன்னேம் இப்பால் அத்திரிபுர னழியுமாறு தேவர்களெல்லாம் பூசித்து வரம்பெற்ற சரித்திரத் தைச் சொல்லுவோங் கேட்பீராக இவ்வாறு திரிபுரனென்பவன் சகல லோகங்களினுந் தனதாணையைச் செலுத்தி அரசுசெய்துவருகின்ற காலத்தில் இமயகிரியின் குகைகளி லொளித்து வேறொரு புகலிட மில்லாமல் துயரமுற்றிருக்கின்றதேவர்களிடத்தில் ஒருநாள் நாரத மகாமுனிவர் சென்றார், அவரைத் தேவர்களெல்லாங்கண்டு சேவித் துப் போற்றி விண்ணப்பஞ் செய்ததாவது—சுவாமி! கொடியவனா கிய திரிபுரன் சகல வெற்றிகளையு மடைந்து மூவுலகங்களையுந் தன் வசமாக்கிக்கொண்டான் அவனால் யாங்க ளனைவரும் அலைப்புண்டு மனமொந்து நாளுக்குநாள் மெலிவினை யடைந்தோம். அவன் யாவ ரால் வரம்பெற்றனன் இப்பால் அவன் யாவரால் அழிவான். இனி அடியேங்கள் செய்யவேண்டிய கடப்பாடியாது? அதனைத் தேவரீர் கிருபைபுரிந்து திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித் தார்கள். அதற்குச் சகல காரியங்களையுந் தமது ஞானநோக்கினால் அறியத்தக்க நாரதமகாமுனிவர் சொல்லுவார். தேவர்களே! அத்தி ரிபுரன் விநாயகக்கடவுளைப்பூசனை செய்து அவரால்அளவற்றவரங்

களைப் பெற்றுச் சகல மகிமைகளையும் அடைந்திருக்கிறான். அவ னும், அவனரசு செய்கின்ற திரிபுரங்களும், சிவபெருமானுடைய பாணத்தாலழியவேண்டும் அப்படி யாவரால் அழிவதற்கும் விநாய கக் கடவுளுடைய அநுக்கிரகம் வேண்டும். ஆதலால் நீங்கள் யாவரும் விநாயகக் கடவுளைப் பூசை செய்யக் கடவீர்களென்று சொல்ல அதற்கு அத்தேவர்கள் மனமகிழ்ந்து மீளவும் பணி ந்தெழுந்து சுவாமி! கணேசமூர்த்தியை யாராதிக்கத்தக்க முறை மை இவ்வாறென்று அடியேங்க ளறிந்திலேம் அதனையுந் தேவ ரீரே யநுக்கிரகிக்க வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். நாரத முனிவர் அதனைக் கேட்டுக் கிருபை சுரந்து நீங்கள் கருதிய வண் ணமே செய்கின்றோம். யாவரும் ஸ்நானஞ் செய்து அநுட்டான முதலியவைகளை முடித்து வரக் கடவீர்க ளென்று கட்டளை யிட் டார். அவ்வாறே அவ்வவர்கள் முடித்துக் கொண்டு வந்த பின்னர் விநாயகக்கடவுளுடைய ஏகாக்கரத்தை யுபதேசித்து அதையனுட் டிக்கு முறைமையையுஞ் சொல்லி அவர்களை விட்டுப் பிரிந்தனர். இப்பால் தேவர்களனைவரும் ஒருதாளை நிலத்தி லூன்றி விநாயகமூர் த்தியினுடைய திருவுருவத்தை மனதிற் றியானித்து ஏகாக்ஷர மந் திரத்தைச் செபித்து, அளவற்றநாள் தவஞ் செய்து கொண்டிருக் கையில் ஒருநாள் தமமை யடைந்த அன்பினரை அவரினுஞ் சிறந்த அன்போடு ஆதரிக்கின்றவராயும் யான் செய்யுங் குற்றங்களையெல் லாங் குணமாகக் கொண்டு காப்பவராயும், வன்மையான நெஞ்சினர் முன்பு ஒருகாலத்தும் வராத உத்தமராகியுமிராநின்ற கணேசமூர்த் தியானவர் கிருபை சுரந்து சொர்ணகிரீடமும் அதில்மூன்றும்பிறை யும் நவரத்தின குண்டலமும் புயகவசமும், அரைநாணும் மருப்பிற் சுற்றி யிருக்கின்ற துதிக்கரமும், பாசமும அங்குசமு மழுவுந் தாம ரைப் பூவென்னுமிவைகளைத்தரித்திருக்கின்ற நான்கு திருக்கரமும், அளவற்ற பேரொளியோடு நிறைந்த திருமேனியு மான கோலத்து டன் அவர்களெதிரிற் பிரத்தியக்ஷமாயினர், உடனே அத்தேவர்க ளெல்லாம் எதிரிற் காக்ஷி தந்தருளிய சுவாமிகளைக்கண்டு சூரியனை யெதிர்வரக்கண்ட தாமரை மலர்போல முகமலர்ந்து அன்பும் அச்ச முங்கொண்டு அஷ்டாங்க மாகச் சேவித் தெழுந்து இருகரங்களை யுஞ் சிரமேற்கூப்பி விழிகளி லானந்த நீர்த்தாரைகளைச் சொரிந்து தோத்திரஞ்செய்வா ராயினர்.

தத்துவா தீத போற்றி தத்துவப் பொருளே போற்றி
தத்துவ முதலே போற்றி தத்துவ சொரூப போற்றி
தத்துவத் தியன்ற தாத்து விகங்களு மானாய் போற்றி
தத்துவ வறிவுக் கெட்டாத் தயங்குபே ரறிவே போற்றி.

உடலினுக குயிரே போல வுயிர்க்குயி ரானாய் போற்றி
யுடலுயிர்க் கறிவு நல்கி யுடலினை கழிப்பாய் போற்றி
யுடலுயி ரெனைப்பி னிங்கா வொற்றுமைப் பொருளே போற்றி
யுடலுறை யுயிரகஞ் மெட்டா வொளிபெருஞ் சோதி போற்றி

விரவுதத் துவந்தி னீங்கி மேமென நின்ற வாவி
வரமுற வுருவு கொண்டு வந்தருள் குரவ போற்றி
பரவுமைந் தொழிலை நீக்கி யுயிர்னைப் பணிப்பாய் போற்றி
துரியத்தி னுயிரை வாங்குரு டர்பெருங் கடலே போற்றி.

பத்தர்கள் வழங்கா நின்ற பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகந் தார்க்குப் புணர்ந்தருள் போகி போற்றி
முத்தியை யோகந் தார்க்கு முழுதருள் யோகி போற்றி
யெத்தொழி லவர்க்கு மந்த பயனரு ளிறைவ போற்றி.

வேண்டிய வடியார்க் கெல்லாம் விக்கினங் கெடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெய யார்க்கு விக்கினங் கொடுப்பாய போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் விரைத்தருள் விமல போற்றி
மாண்டதுட் டாசுரர்க் கொன்று மறமிகு மள்ள போற்றி

செவி கொடுத்தருளிய அந்தேவர்களைக் கிருபையோடும்பார்த்
து நீங்கள் கருதிய வரங்களைக் கேளுங்க ளென்று திருவாய் மலர்ந்
தருளலும் தேவர்கள் மீட்டும் பணிந்தெழுந்து சகலபுவனாதாரஸ்வ
ரூபியே! அடியேங்கள் படுகிற துயரங்களனைத்துந் தேவரீர்க்குத்தெ
ரியாதனவல்லவே திரிபுரனுக்குத் தேவரீர் கொடுத்தருளிய வரத்
தால் திரிலோகங்களையுந் தன்வயப்படுத்தி எங்களை யெல்லாம் பல
துன்பங்களில் மூழ்கச் செய்தனன் ஆதலால் அத்திரிபுரனை யழித்
து அடியேங்களை யெல்லாங்காத்து ரட்சிக்க வேண்டுமென்று பிரா
ர்த்தித்தார்கள் அதற்குக் கணேச மூர்த்தி கிருபை கூர்ந்து அமரர்
களே! உங்கள் சிறுமைகளையுந் திரிபுரன் பெருமைகளையும் அழிப்ப
தற்கு ஒருபாயஞ்செய்கின்றோம். அதுகாறும் நீங்களனைவரும் விரை
ந்துசென்று சிவபெருமானை யடையக் கடவீர்க ளென்று திருவாய்
மலர்ந்து அத்தேவர்கட் கெல்லாம் விடை கொடுத்து, பின்னர்ப்

பிராமண வடிவங் கொண்டு தமது தேவியோடும் பலமுனி புங்கவர்கள் புடை சூழ்ந்து வரும்படியாகத் திரிபுரன் வாழ்கின்ற வங்காளமென்னு நகரத்தினை யடைந்து அவனரண்மனையிற் சென்றார், திரிபுரன் அவ்வேதியரைக் கண்டவுடனே சிங்காதனத்தை விட்டிறங்கி எதிர் சென்று அட்டாங்கமாகச் சேவித்து மிக்க அன்புடனழைத்துக்கொண்டு வந்து, ஓர் சிறந்த ஆதனத்தி லிருக்கச்செய்து, சுவாமி! தேவரீர் யாவர் அடியேனால் தேவரீர்க் காகவேண்டிய காரியம் யாது? அதனைத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும் திரிலோகங்களும் என தாணையிற் கட்டுண்டிருக்கின்றமையால் எனக்கெய்தாத காரியம் ஒன்றுமில்லை தேவரீர்க்கு யாதுவேண்டினும் இந்நிமிடத்திற் றருவேனென்று சொன்னான் அதற்கு அந்தணனாகி வந்த கணேசமூர்த்திசொல்லுவார் திரிபுரனே! நம்மையாவருங் கலாதரரென்றுசொல்லுவார்கள் நாமோ விண்டுலோக முதலிய சகலலோகங்களின் அலங்காரங்களையெல்லாம் பார்த்துக்கொண்டு திரிகின்ற சித்தராகும். நீ தியாகம்-புகழ் செல்வம் அழகு ஆயுதவல்லபம்-பராக்கிரமம்-தேசசு முதலிய சிறப்புகளினாலும் விநாயகக் கடவுளைத் தினந்தோறும் ஆராதித்து வருகின்ற பக்தியினாலும் சகல தேவர்களாயினோர்கண்டு நடுங்கி வணக்கங் கொள்ளத் தக்க வீரத் தன்மையையுடையவனாதலால் உன்னைக் காணவேண்டி இங்ஙன மெழுந்தருளினோம், நீ மூவருலகங்களை யளிக்கினும் வேண்டேம் உனதரசாட்சியையளிக்கினும்வேண்டேம் நீ ஒருவர் கருதி வந்த பொருளைக் கரவாதளிக்குங் கடப்பாட்டினையுடையை உன்னிலையத்திலொருவிநாயகமூர்த்தியிருக்கின்றது. அம்மூர்த்திக்குரிய திருநாமஞ் சிந்தாமணி விநாயகரென்பர் அவ்விநாயகரை உமாபரமேசுவரி மணாளராகிய சிவபெருமானவர் நாடோறும் ஆகமவிதிப்படி யாராதித்து வருகின்றனர் அத்தன்மைத் தானமேலான மூர்த்தியை நமக்கெவ்விதத்தேனும் வருவித்துத்தரல் வேண்டுமென்றார் அதற்குத் திரிபுரன் மனமகிழ்ந்து வேதபாரகரே! தேவரீர் இச்சித்த மூர்த்தி கைலாசபதியிடத்தி லிருப்பதாகமனந்தளரவேண்டாம் அக்கைலாசபதியே விண்டு முதலிய சகல தேவர்களுந் தம்மைப் புடை சூழ்ந்து வரும்படியாக அம்மூர்த்தியை இந்நிமிடத்திற் கொண்டு வந்து தேவரீர் முன்பு வைக்கும்படி செய்கிறேன் அடியேன் பராக்கிரமத்தைத் தேவரீர் பார்த்தருளுமென்று சொல்லி ஆடையாபரண முதலான திரவியங்களைக்கொடுத்து, அஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, சுவாமி அச்சிந்தாமணி விநாயகமூர்த்தியையானழைப்பித்துத் தருகிறபடி

யந்தம் தேவரீ ரிங்ஙனந்தயைகூர்ந்து வசித்தருள வேண்டு மென்று பிரார்த்தித்தான். இவை யனைத்தையுங் கணேச மூர்த்தி கேட்டரு ளிப் புன்னகைகொண்டு திரிபுரனே! நீ அம்மூர்த்தியை வரவழைக் கின்ற பரியந்தம் இந் நகரத்தின் சமீபத்தில் வாசஞ் செய்கின்றோம் நீயதற்குரிய முயற்சிகளை விரைவில் நடத்தக்கடவையென்று திரு வாய் மலர்ந்து ஆசீர் வாதஞ்செய்து எழுந்தருளினர்.

இப்பால் திரிபுர னனவன் ஒற்றர்களை வரவழைத்து, நீங்கள் கைலாயத்திற்சென்று பரமசிவனைப் பணிந்து எங்களரசனாகிய திரி புரன் தேவரீர்பூசிக்கின்ற, சிந்தாமணி விநாயகரை வாங்கி வருவதா கக்கட்டளையிட்டான் அதனை யெம்மிடத்திற் றரல்வேண்டும். தரா மற்றடைசெய்வீராயின் அவனே நேரில்வந்து வலாற்காரமாய் வாங் கிக்கொண்டு போவான். அக்காலத்தில் நீர் துயரப்பட நேருமென்று உறுதியாகச் சொல்லி அம்மூர்த்தியை விரவில்வாங்கி வரக்கடவீர் களென்று கட்டளை யிட்டான் அவ் வொற்றர்களும் அவ்வாறே சென்றார்கள்

தேவர்கள் வரம்பெறு படல முற்றிற்று-

---

## விமலன் வரம்பெறு படலம்.

கருங்கழல் புனைந்த சோம காந்தனை வரங்கள் விண்ணோ
ரொருங்கருட் கணேசர் பாங்க ருற்றமை யுணர்ந்தா யன்னோர்
மருங்குசென் றிரப்பச் சூல வள்ளலும் வரங்கள் பெற்ற
பெருங்கதை யினிக்கே ளென்று பேசுவன் பிருகு வென்பான்.

முனிவர்களே! திரிபுரனையழிக்குமாறு தேவர்கள் கணேசமூர்த் தியைப் பூசித்து வரம்பெற்றவரலாற்றினைச் சொன்னோம். இப்பால் அத் திரிபுரனழிவின் பொருட்டுச் சிவபெருமா னுபாசித்து வரம் பெற்ற திறத்தினைச்சொல்லுவோங் கேட்பீராக முன்னர் விநாயக மூர்த்தியால் வரம்பெற்றகன்ற தேவர்களெல்லாம் பின்னர்ச்சிவபெ ருமானுடைய திருவருளைப பெறவேண்டினவர்களாய் நாம் அவரை ச்சரணடைந்தவுடன் நம்மீ திரக்க முண்டாக்கத் தக்க வது எதனெ லென் றாலோசித்துச் சூரியசந்திரர்களைத் திகிரிகளாகவும் இருதுக் களை உட்பரப்புக்களாகவும், சமயங்களை உள்ளிடமாகவும், பிரதி

ருதியென்கின்ற மாயையை ரூகப்பாகவும், காஷ்டைமுகூர்த்த முதலியகாலங்களை மச்சாகவும், பூவுலகத்தைத் தட்டாகவும், சுவர்க்கலோகத்தை ஆதனமாகவும், கலைகளை முளைகளாகவும். மந்திர கிரியைகளை மேல்வட்டமாகவும், இமயகிரியைக்கொடிஞ்சியாகவும், உதயகிரியைக் கூம்புகளாகவும், மற்றைய பர்வதங்களையெல்லாம் தூண்களாகவும், தத்துவங்களைக்குடமாகவும், மேகங்களைச் சுற்றுமரங்களாகவும், கன்மேந்திரிய ஞானேந்திரியங்களை ஆபரணங்களாகவும், அண்டங்களை மாலைகளாகவும், புராண சாத்திரங்களை மணிவடங்களாகவும் நட்சத்திரங்களை விதானங்களாகவும், சமுத்திரங்களையலங்கார வஸ்திரங்களாகவும், மருதத்துவர்களைப்படிகளாகவும், கங்கைமுதலியதெய்வநதிகளைச் சாமரைகளாகவும், மற்றைய நதிகளையெல்லாம் பதாகைகளாகவும், திதிவார முதலிய நாட்களை நடக்கின்ற வேகமாகவுஞ் சோடித்த சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபெருமானுள்ளங் களிக்கத்தக்க ஓரிரதத்தை யுண்டாக்கி, அந்தவிரதத்திற்கு வேதங்களைக் குதிரைகளாக்கி, வரங்களை யக்குதிரைகட்கு வடிகயிறுகளாகத் தொடுத்து, கன்மகாண்டம் ஞானகாண்டமென்னும் இரண்டு வேத மார்க்கங்களையும் நுகத்தடியாகப் பூட்டி, உபநிடதங்களை யெல்லாங் குதிரைகட்கு ஆபரணமாகத் தரித்து, பிரணவமென்னும் மத்திகையைக் கொண்டு, பிரமனைச் சாரத்தியஞ் செய்வித்து, மகமேருவை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், விண்டுவைப் பாணமாகவும், யமனை அலகாகவும், வாயுவை இறகாகவும், வடவாமுகாக்கினியைக் கூராகவும் புரிந்து, முன்னர்த் தாங்கள் செய்திருக்கின்ற இரதத்தோடு இவ்வில முதலிய வாயுங்களைக் கொண்டு கைலாயபர்வதத்தைச் சேர்ந்து இரதத்தை வெளியில்நிறுத்தித் தாங்களனைவருஞ் சிவபிரான் சந்நிதானத்திற்சென்று, அவர் திருவடிகளிற் பலபுட்பங்களா லருச்சித்து அஷ்டாங்கநமஸ்காரஞ் செய்து பலமுறைதுதித்து இதனை விண்ணப்பஞ்செய்வாராயினர்.

ஊரு மூர்த்தியு மூவர்களே யாகிய வொருத்தற்
காரு மாழ்கினே மடிகளா ரவனுயி ரடர்ப்பச்
சேரும் வையமே வையமாத் திணிசிலை சிலையாச்
சாரு மாறுசெய் தாமவை தழுவுக வென்றார்.

ஆணவமலத்திற் கட்டுண்டிருந்த சகல ஆன்ம கோடிகட்குந் தநுகரண புவன போகங்களைத் தந்து முடிவில் முத்தியிற் சேர்க்கவல்ல தயாபர மூர்த்தியே, திரிபுர னென்பவனால் யாங்க ளெல்

லோரு மிக்க துன்பத்தினை யநுபவிக்கின்றோம். சுவாமிகளவனை யழிக்கவேண்டி நிமித்தமெழுந் தருளுவதற்கு ஓரிரதஞ் செய்து கொண்டுவந்தோம் அதன்மீது தேவரீர் கிருபாநோக்கஞ் சாதித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தலும், அதற்குச் சிவபெருமான் செவி கொடுத்துப் பார்வதி தேவியாரோடு மெழுந்தருளிக் கோபுர வாயிலுக்கு வெளியில் வந்து, அந்த ரதத்தைத் தமது கண்களிக்க நோக்கி, அதிகசந்தோஷங்கொண்டு அதேவர்களைப்பார்த்து இனி யுங்கள் துயரத்தினை நீக்கி ஆனந்த முற்றிருங்கள். உங்கட்குத் தீமை விளைவிக்கின்ற திரிபுரனை அரைக்கணப்போதிலெரித்து யாவர்க்குஞ் சுகத்தினைத் தருவோமென்று திருவாய்மலர்ந்து மீளவுங் கோயிலுட் புகந்தருளினர் அச்சமயத்தில் முன்னர்த் திரிபுரனேவிய தூதர்கள் வந்து தீர்க்கதண்டன் செய்து அவன் சொல்ல வாக்கியாபித்த வண்ணஞ் சொன்னார்கள் அவை யனைத்தையுஞ் சிவபெருமான் கேட்டுப் புன்னகை கொண்டு உங்களரசனை யுத்தத் திற்கு வரச்சொல்லுங்களென்று விடைகொடுத்தனுப்பி, பின்னர்த் தனித்திருந்து திரிபுரனை நாசஞ்செய்யு முபாயத்தினைக்கருதி விழிகளை மூடிக்கொண்டு விநாயக மூர்த்தியை மனதிற் றியானித்து, ஏகாக்ஷர மந்திரத்தைச் செபித்துத் தவத்திலிருந்து இதனைத் தேப்பாராயினர்

சயசர் வேசனே சகலமு மறியுந் தத்துவனே
யயர்விலாப் படைப்பளிப் பழிப்பருளுங் காரணனே
மயரிலாதவ வானவ ரனைவர்க்கு மிறைவ
வுயரளுதநீ யாதலா லுன்னையா னிரக்கேன் (௧)

எம்பிரானுன தியற்கை யாகிய வெழிலுருவ
நம்பி னேற்கெதிர் காட்டுக நாரணன் முதலா
வும்ப ரார்த்திரி புரன்றனக் குடைந்துபோய்க் கரந்து
செம்பொன் மேருவிற் றெருமந்தா ரிற்றைநாள் காறும். (௨)

தெளிக்கத் தக்கவர்க் கருள்செயுந் தேவநின் னருளா
லளிக்கத் தக்கவ ரவரிட ரகன்றுபோய்த் தத்தங்
களிக்கத் தக்கவாழ் பதவிகள் கைக்கொளப் புரத்தை
விளிக்கத் தக்கசூழ்ச் சியுமெனக் கருளுதல் வேண்டும். (௩)

ஐந்து பூதமு மடிகளா ணையி னசைகின்ற
விந்த வையக மிலங்குகின் றதுநின திடத்திற்

சிந்தை யாதிபி னகிலமுஞ் செய்வினைக் கெல்லா
மைந்து வேவுமுட் சாட்சியாய் வயங்குகின் றனையால் (௪)

மாயை யாகிய படலத்தி னுன்மறைப் புண்டு
தீய தாஞ்சமு சாரமா கியசெறி வனத்து
மேயி னுரெலாந் தனித்தொறு மிகுதவம் விளைத்துத்
தூயஞா னத்தி னுனைத் தொடர்ந்துவக் கின்றார். (௫)

உரிய மாதவம் புரிந்திடே யாகுழப் பவர்க் குளத்தின்
விரியும் வாலொளி யேயகம் வெளியினை விலக்கித்
தெரியு ஞானியர்க் கெங்குமாய்ச் செறிந்தபே ரொளியே
யரிய வான்பொரு ளேயெனப் பராயகத் திரந்தார் (௬)

சர்வேஸ்வரராகியும் சராசரமறியவல்ல கர்த்தாவராகியும் மகா தவத்தினையுடைய தேவர்கட்கெல்லாம் அநுக்கிரகஞ் செய்யவல்ல இறைவராகியும், எக்காலத்தும் ஆதாரமாகியு மிருக்கின்ற கருணாகர மூர்த்தியே, உம்மைநம்பி யிருக்கின்றோ மெனக்கு உமது சுயரூபத்தைக்காட்டி யருளல்வேண்டுமென் றின்னுமுதலிய தேவர்களெல்லாந் திரிபுரனுக்குப் பயந்து இமயவரையிற் பல குன்றங்களோடு மகமேருச் சாரலிலுள்ள பலகுகைகளி லொளிந்துகொண்டிருந்தார்கள். அடைந்தோரை யாதரிக்கவல்ல சங்கரகடவுளே, உமது திருவருளாற் சகலத்தையு மளிக்கத் தக்கவராகிய அத்தேவர்க ளெல்லாந் தங்கடங்கள் பதவிகளையடையுமாறு யாம் திரிபுரங்களை யழிக்கத் தக்க உபாயத்தினை யருளல்வேண்டும். பஞ்சபூதங்களு முமதாணையால் அசைகின்றன சகல லோகங்களும் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றன. மேலும் இவ்வுலகத்தார் தங்கள் தங்கள் கன்மாதிகளாற் செய்கின்ற வெல்லாக் காரியங்கட்கும் அகச்சாக்ஷியா யிருந்து பிரகாசிக்கின்ற கர்த்தர் நீரேயாதலால், மாயை யென்னும்படலத்தால் மறைப்புண்டு சம்சார மென்னுங் காட்டிற் சிக்கி யிருக்கின்ற வான்மாக்களெல்லாஞ் சரீரங்கள் தோறு மிருந்து தவங்கள் செய்து பரிசுத்த ஞானத்தால் உம்மைத் தியானித்து ஆனந்தமடைகின்றார்கள். மகா தவங்களைச் செய்து யோகத்தி லிருப்பவர்களுடைய வுள்ளத்திற் பிரகாசிக்கின்ற சோதியும், அகப்பற்று புறப்பற்றென்னு மிரண்டினையும் விலக்கி உம்மைச் சதாகாலமுந் தியானித்துத் தரிசனஞ்செய்யவல்ல ஞானிகட்கு எங்கும் பரிபூரணமாகி யிருக்கின்ற பேரொளியும் நீரேயன்றி மற்றை யாவரிருக்கின்றார்களென்று துதித்துப் பிரார்த்தித்தனர்.

உடனே விநாயகமூர்த்திக்குக் கிருபை சுரந்து அச்சிவபிரான் முகத்தினின்று ஐந்து முகங்களுந் தரித்த திருமேனியோடு தோன்றி எதிராக நின்றனர். உடனே சிவபிரான் அவரைப் பார்த்து மனங்களித்து ஐயனே நீரெங்ஙனமிருந் தெழுந்தளினீர். உமது திருநாமம் யாது? அதனைத் திருவாய் மலரவேண்டு மென்று கேட்டருளினர். அதற் கவ்விநாயகர் கிருபை சுரந்து நீலகண்ட மூர்த்தியே இரவும் பகலு முக்குணங்களோடும் விளையாடுகின்ற என்னை நீரன்புடன் கருதி அளவற்றநாள் தவஞ்செய்தீ ராதலால் மூவுலகத்துள்ள உயிர்களையெல்லாங் காத்தற் பொருட்டு உமது முகாரவிந்தத்தினின்றுந தோன்றி வந்தனம். நமது நாமங் கணேசராகும் உமக்கு வேண்டிய வரங்களைக் கேட்பீராயின் அவைகளை இங்ஙிடத்திற் றருகின்றோமென்று திருவாய் மலர்ந்தருளினர். பின்னர்ச் சிவபெருமான் மனக்களிப்படைந்து கணேச மூர்த்தியே, தேவர்களெல்லாந திரிபுரனுடைய ஆக்கினைகட் கஞ்சி வருகின்றார்க ளாதலால் அவர்கள் வருத்தங்களை நீக்குமாறு யான் அத்திரிபுரனைச் சங்கரிக்கவேண்டும் அதற்கேற்றசத்தி யெனக்குண்டாகும்படி நான்கு வேதங்கட்கு முதன்மையாயிருக்கின்ற உமது மந்திரத்தைப் பீஜாக்ஷரத்துடன் உபதேசித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார். அதற்குக் கணேசமூர்த்தியானவர் கிருபைசுரந்து தமது மந்திரத்தையும் அதன் பீஜாக்ஷரத்தையும் விவரமாக உபதேசித்து, காலகாலரே. நீர் அத்திரிபுரனை யழிக்கும் படியாகக் கணை விடுக்கின்றபோது யானுரைத்த மந்திரத்தை நூறுருச் செபிக்கவேண்டும் மீளவும் அக்கணையை ஆக்கிரஷிக்கும்போது மூன்றுருச் செபிக்கவேண்டுமென்று திருவாய் மலர்ந்தனர். இவை யனைத்தையுஞ் சிவபெருமான் செவிகுளிரக்கேட்டு ஆனந்தமாகிப் பலவாறு துதித்துக் கிருபாமூர்த்தியே, இம்மகா மந்திரத்தையுடையவ ராதலால் சகலதேவ கணங்கட்கும் முதல்வராயினீர் உமக்குக் கணேச மூர்த்தியென்னுந் திருநாமமுண்டாயது,யாவரும் வேதாகமபுராணங்களை யோதுதற் காரம்பிக்கின்றபோது முதலி லும்மைத் துதிசெய்யக்கடவர்கள். வைதிகநெறி சைவநெறியென்னும் இவைகளி லுள்ளோர்க்கும் உம்மையே முதலில் அநுட்டிக்கக் கடவர்கள். விண்டு முதல் மனிதரீறாகவுள்ள சகல சீவர்களும் உம்மையே முதலில் அநுட்டித்து வசிய முதலிய சகல காரியங்களையும் அடையக்கடவர்கள் உம்மைக் கருதாது ஆரம்பிக்கின்ற காரிய மற்ப மாயினும் அஃது சற்றுங் கைகூடாமற் போகக்கடவது. சைவர்களாயினும்

வைணவர்களாயினும் உம்மைப் பணியார்களாயின் அவர்கள் மகா பாவிகளாகக் கடவரென்றுசொல்லி அங்கு வந்திருக்கின்ற தேவர்களை யழைப்பித்து, விண்ணுலகவாசிகளே! பாவனைக் கெட்டாதபரிபூரணராகிய கணேசமூர்த்தியானவர் நமது பாவனைக் கருள்சுரந்து இதோ எழுந்தருளியிருக்கின்றனர். அவரை நீங்க ளனைவரும்பூசித்துப் பரிமளமிகுந்த புட்பமாலைகளைச் சாத்திச் சகஸ்திர நாமங்களா லருச்சிப்பீர்களாயின் உங்கள் துயரங்களை யெல்லாம் ஒரு நொடிப்போதிற் பொடிப்படுத்தி ரட்சிப்பாரென்று திருவாய் மலர்ந்தனர். அதை விண்டுமுதலிய சகலதேவர்களுஞ் செவிக் கமுதாகக் கேட்டு அவ்வாறே கணேச மூர்த்தியை யாகம விதிப்படி பூசித்து சகஸ்திர நாமங்களா லருச்சித்தார்கள் அவர்கட்கு விநாயகக்கடவுளனுக்கிரகஞ் செய்து தமது திரு வுருவத்தைக் கரந்தருளினர்.

விமலன் வரம்பெறு படல முற்றுற்று.

---

# திரிபுர தகனப் படலம்.

படையெ லாம்பணிப் பவர்க்கருள் பரனுமையங் கரன்பாற்
படைகொள் வான்கதை கேட்டனை பாதபு விமிலமே
லடைய லார்ப்புர மவ்வர னழித்ததுங் கேளென்
றிடைய றுத்துரைப் டானெறி மாதவப் பிருகு.

இப்பால் சிவபெருமானிடத்தில் விடைபெற்றகன்ற தூதர்கள் திரிபுரனிடத்திற்சென்று தீர்க்கதெண்டஞ்செய்து. இராஜராஜேஸ்வரா! தேவரீரிட்ட கட்டளையின்படி யாங்கள் கைலாசபதியினிடத்திற்சென்று சிந்தாமணிவிநாயகரைக் கேட்டோம். அதற்கவர் சிம்புள்போலக் கோபித்துத் தேவரீரை யுத்தத்திற்கு வரச்சொல்லி விடைகொடுத்தன ரென்றார்கள்.

அதனைத் திரிபுரன்கேட்டு நகைசெய்து, தன்றவப்பயனுக்கு முடிவெய்துங்கால நேரிட்டவனாகிச் சிவபிரானோடு யுத்தஞ்செய்யக் கருதிச் சண்டன் பிரசண்டன் முதலிய அவுணவீரர்களையுந் திரிபுராதிகளையும் வருவதாகவுத்திரவுசெய்தான். அவ்வாறே அவர்கள் வருதலும் நீங்க ளனைவரும் விரைவில் யுத்தத்திற்கு ஆயத்தமாயிருங்களென்றுசொல்லி, அவ்வவர்கட்குச் செய்யத்தக்கசிறப்புகளையு

மேலும் இத்தன்மைத்தாகிய அளவற்ற சேனைகளெல்லாஞ் சத்தசாகரங்களையொத்தும், இச்சேனைகள் செய்கின்ற வாத்திய முழக்கமெல்லாம் அக்கடலி லுண்டாகின்ற ஓசையையொத்தும், இச்சேனைகளில்விளங்குகின்ற குடைகளும்பீலிக்குஞ்சங்களும் அக்கடல்களி லுண்டாகின்ற நுரைகளையும் பாசடையையுமொத்தும், இச்சேனைகளேந்தியிருக்கின்ற வாளாயுதங்களும் வேலாயுதங்களும் அக்கடல்களில் மேய்கின்றமீன்களையொத்தும், இச்சேனைகள்பிடித்திருக்கின்ற கேடகங்களெல்லாம் அக்கடல்களிலுலாவுகின்ற ஆமைகளையொத்தும், இச்சேனைகளினடுவே விளங்குகின்ற பதாகைகளெல்லாம் அக்கடல்களி லெழுகின்ற அலைகளையொத்தும், இச்சேனைகளா லெழுகின்ற தூளிபடலங்களெல்லாம அக்கடல்களையுண்ணவந்த மேகங்களை யொத்தும், தேவர்கள் சொரிகின்ற புட்பவருஷங்களெல்லாம் அம்மேகங்கள் சொரிகின்ற சகல வருஷங்களை யொத்துமிருந்தன. அன்றியும் சிவபெருமா னாரோகணித் திருக்கின்ற ரதமானது கடலிற்செல்கின்ற மரக்கலத்தைப் போலவும், அந்தரதத்தின் கொடிஞ்சிகளி லுயர்த்தி யிருக்கின்ற கொடிகளிலுள்ள இடபமுத்திரைகளெல்லாம் அம்மரக்கலத்தை யோட்டுகின்ற மாலுமிகளைப்போலவும், பக்கங்களிற் புடைசூழ்ந்திருக்கின்ற சிறு இரதங்களெல்லாம் அம்மரக்கலத்தை நெருங்கி யிருக்கின்ற தெப்பங்களைப்போலவு மிருந்தன. இவ்வாறு சகல சேனைகளும் புடைசூழ்ந்து நெருங்கியபின்னர்ப் பிரமதேவனானவன் அத்தேரிற்கட்டியிருக்கின்ற வேதப்பரிகளைத் தூண்டி இமய மலையானது மற்றை மலைகளெல்லாந் தன்னைப்புடைசூழவெழுந்து செல்வதுபோல மற்ற வீரர்களுடைய பரிகளும் இரதங்களும் பின்னிடத்தக்கதாக மனோவேகத்தினும் அதிகவேகமாகச்செலுத்தித் திரிபுரனுடைய சேனைகட்கெதிரே கொண்டுவந்து நிறுத்தினான் திரிபுரன் அச்சேனைகளினுடம்பரங்களைக்கண்டு சற்று நடுங்காதவனாகி மேகத்தைப்போலக் கர்ச்சித்துத் தனது அவுணசேனைகளையெல்லா மழைத்துக்கொண்டு குமாரர்கட்குந் திரிபுராதிகட்குந் தங்கள் தங்கள் படைகளோடு தனித்தனியே யுத்தஞ்செய்யக் கட்டளையிட்டுத் தானுந் தேரிலேறி அதனைவாயுவேகத்தினும் விரைவாக நடத்திச் சிவபிரானுடைய இரதத்திற்கெதிராகக்கொண்டுவந்து நிறுத்தினான். அதைக் கர்த்தன் பார்த்துத் தம்மிடத்திருக்கின்ற சுத்த வீரர்களுடைய கர்வத்தை யழிக்கு நிமித்தமோ மற்றை யாதுகாரணமோ ஓர் நிமைப்போதிற் றிரிபுரன் முதலிய சகலரையு நீறுக்கத்தக்க தெய்வப்படைகள் தம்

யிடத்திலிருக்கும் அவனோடு யுத்தஞ் செய்யுங் கருத்தினராய்க் கணேசமூர்த்தியை மனதிற்றியானித்து மேருவில்லைத் தமது திருக்கரத்திற் பிடித்தருளினார். அவுணர்பெருமானாகிய திரிபுரனும் அக்கணேச மூர்த்தியைத் தியானித்துத் தனது வில்லைக் கையிலேந்தினான். பின்னரிருவருந் தம்பைமாலை சூடிநகொண்டு விற்களில் நாணேற்றி உடல் குழைய வளைத்து விரலாற்றெறிந்துத் தொனிசெய்தார்கள். தொனிசெய்த மாத்திரத்தில் அஷ்டகுலாசலங்களுநடுங்கின சத்தசாகரங்களுந் தளம்பின பூமிகளெல்லாம் பிளந்தன. அண்டங்களெல்லாங் கிழிந்தன விருக்ஷங்களெல்லாமடிந்தன சர்ப்பங்களெல்லாங் கலங்கின. உடுக்களெல்லாமுதிர்ந்தன அஷ்டதிசைகளுமழிந்தன தெய்வ லோக மனைத்துந திடுக்குற்றன நாகலோகமனைத்து நடுக்குற்றன.

இவ்வாறு மாறிமாறி நாணைததெறித்துத் தொனிசெய்து இருவர் கைகளு மோயாமல் அளவற்ற அம்புமாரிகளை ஒருவர்மீதொருவர் சொரிந்தார்கள். சுப்பிரமணியரோடு பிரசண்டனெதிர்த்தான், நந்திதேவரோடு சண்டனெதிர்ததான் இந்திரனோடு திரிபுரன் மந்திரி யெதிர்த்தான்; சயந்தனோடு மதனென்பவ னெதிர்த்தான். புட்பதந்தனோடு காலகூடனென்பவன் தனது பொன்கோட்டையைச் செலுத்திக்கொண்டு வந்தெதிர்ததான் வீரபத்திருடனே வச்சிரதம்ஷ்டிர னென்பவன் தனது இருபபுக்கோட்டையைச்செலுத்திக் கொண்டு வந்தெதிர்த்தான். இலககருடனே பீமகாப னென்பவன் தனது வெள்ளிக் கோட்டையைச் செலுத்திக் கொண்டு வந்து எதிர்த்தான். புருசுண்டி யுடனே மற்ற வீரர்களெல்லா மெதிர்த்தார்கள், கண்டன் முதலிய படைத் தலைவர்களோடு திரிபுரன் படைத்தலைவர்க ளெதிர்த்தார்கள் இவ்வாறு ஒருவரோ டொருவர் கைகலந்து போர்செய்யுஞ் சமயத்தில் பூதவீரர்களெல்லாம் அவுணவீரர்களோ டெதிர்த்து வாள்களை வீசுவார்களும், கணைகளை விடுவார்களும், வேலாயுதங்களை யெறிவார்களும், யானைக்கூட்டங்களையெல்லாம் அவைகளை நடத்துகின்ற பாகரோடு விழும்படியாக வெதிர்ப்பார்களும், இரதங்களையெல்லா முரிப்பார்களும், குதிரைகளையெல்லாமடிப்பார்களும், பதாதிகளை யெல்லாங் கண்ட துண்டமாகச் சிதைப்பார்களும் ஆகியிருந்தார்கள். அவுண வீரர்களும் அப் பூதவீரர்கள் செய்யும் போரினைப் பார்தது விழிகளில் தீப்பொறிகள் சிதறத் தக்கதாகக் கோபித்து அளவற்ற தேர்ப்பாகர்களையுஞ் சின்னபின்னமாக்கிச் சயவுச்சாகத்துடன் ஆர்ப்பரித்துக்

கொடிதூக்குவார்களும், பலபாண வருஷங்களைப் பிரயோகித்து அவ்வவர்கள் விற்களை ஒடிகததாக நன்றுவார்களும், தங்களைத் தாங்கள் புகழ்ந்து வெஞ்சினத்தோடு பேசுவார்களுமாகி யிருந்தார்கள் இவ்வண்ணமாக இருதிற படைஞரும் ஒருவரோடொருவர் கலந்து போர்புரியுங் காலையில் சிலர் தலையறுந்தவரானார்கள்; சிலர் இடையொடிந்தவரானார்கள்; சிலர் குடல்சரிந்தவரானார்கள்; சிலர் வலியற்றவரானார்கள்; சிலர் கையற்றவரானார்கள்; சிலர் கைகுறைந்தவரானார்கள்; சிலர் தோள் முறிந்தவரானார்கள்; சிலர் முடிவிழுந்தவரானார்கள்; சிலர் மொழியிழந்தவரானார்கள்; சிலருக்கு நிணங்கள் சொரிந்தன; சிலருக்குத் தசைகள் சரிந்தன; சிலருக்குக் கண்டமொழிந்தன; சிலருக்குச் செவிகளறுந்தன; சிலருக்கு விழிகள் பிதுங்கின; சிலருக்குக் காலொடிந்தன; சிலருக்கு ஈரலொழிந்தன? அளவற்றகவந்தங்களாடலெடுத்தன; அளவற்ற பேய்கள் பாடல்செய்தன; அளவற்றபருந்துகள் கூட்டங்கூடின; அளவற்ற நாய்நரிகள் ஓட்டஞ்செய்தன; இப்படியே சமுத்திர வெள்ளத்தோடு நிறைந்திருக்கின்ற யுத்தகளமானது இரத்தவாறிருந்தமையினால் பூமிதேவியானவள் அளவற்ற பிணங்களை ஏந்திக்கொண்டு நிருத்தமாடுவதைப் போலிருந்தது

இவ்வண்ணமாகப் பூதப்படைகள் அசுரப் படைகளையெல்லாம் அதப்படுத்துகையில் தாருகன சிங்கமுகன சூரபன்மனென்னு மூவருமே ஒருருவாகத் திரண்டு வந்தாற்போன்ற மகா பராக்கிரமசாலியாகிய பிரசண்டனென்பவன் தன படைவீரர்களையெல்லாம்கூட்டிக்கொண்டு சுப்பிரமணியக்கடவுளை எதிர்த்தான், உடனே சுப்பிரமணியக்கடவுளானவர் தமது மயில்வாகனத்தை வட்டமாயோட்டி வில்லில் நாணேற்றி வளைத்துக் கடையுகத்திற் பெய்கின்ற மேகம்போல அளவற்ற பாணவருஷங்களைப் பொழிந்து அரைக்கணப்போதில் அப் பாதகனுடைய சேனைகளையெல்லாம் மடித்து, அவன் விடுகின்ற கணைகளையெல்லாம் நிலத்துகளாக்கி, அவன் வில் முதலிய படைகளையுந் தேரையும் பொடியாகச்செய்து, தேவர்களெல்லாரும் நடுங்கச்செய்கின்ற அவன் மாயைக் ளணைத்தையு நாசஞ் செய்து, தமது ஐந்துபாணங்களால அவனுயிரை நாசமாக்கினர். பிரளய காலத்தி லுண்டாகின்ற பிரசண்டமாருதத்திற் கொப்பான சண்டனென்பவனை நந்திதேவரெதிர்த்து, அவன்படைகளையெல்லாங் கண்டதுண்டமாக்கி, ஓர் நொடிப்போதில் அவன் செய்கின்ற போரையெல்லாங் குன்றச்செய்து தமது மூன்றுபாணங்களைவிட்டு அவனு

மிரைக்கொண்டார். பறவையைப் போலத் தனது பொன் கோட்டையோடு மெழுந்து ஆகாய மார்க்கமாய்ப் பறந்து போர் செய்கின்ற காலகூடனைப் புட்பதந்த னெதிர்ந்து அவன் விடுகின்ற பாணங்களை யெல்லாம் விலக்கித் தமது தேரையும் அந்தர மார்க்கமாகச்செலுத்தி ஐந்து பாணத்தால் அவனுயிரையும் பொடிபடுத்தினர், வெள்ளிக் கோட்டையோடு விரைந்து வந்து போர் செய்கின்ற வீமகாயனை இலக்கவீரர் எதிர்த்து அவன் செய்த அளவற்ற யுத்தங்களைச்செய்து அவன் படைகளையெல்லாம் அறுபடுத்தியபின்னர் அவனுடலினின்றும் உதிரவெள்ளம் பெருகும்படியாகத் தமது நாலு பாணங்களை விட்டு நாசமாக்கினர். இரும்புக்கோட்டையோடு செலுத்திப் போர் செய்யவந்த வச்சிரதம்ஷ்டிரனை வீரபத்திர கடவுளெதிர்த்து இனி நமது யுத்தமில்லையென்று அவுணர்களனைவரும் கலங்கும்படி யாகத் தமது தேரை அவனுடைய தேர்மேற் செலுத்தி நாலு பாணங் களை விடுத்து அவனுயிரைப் பானஞ்செய்தனர். இந்திரனானவன் திரிபுரன் மந்திரியோடெதிர்த்து அளவற்ற போர்களைச் செய்து, அவன் படைகளையெல்லாஞ் சிதைத்துத் தனது வச்சிராயுதத்தால் அவனது சிரத்தையறுத்தெறிந்து வெற்றிமாலை சூடிக்கொண்டனர். சயந்தனானவன் மதனனைப்பவனை யெதிர்த்து அவன் விடுகின்ற படை களையெல்லாமுரித்து மேலும் அவனைத் தமைதயும் சின்னாபின்னப்படுத் தித் தனது வாளினாலவன் சிரமுருளும்படி வெட்டினன். புருசண்டி யென்பவர் மற்றைய வீரர்களையும், கண்டனமுதலிய சேனைத்தலை வர்கள் திரிபுரன்சேனைத் தலைவர்களையு மெதிர்த்துப் போர்செய்து அவர்சரீரங்களையெல்லாம் கழுகு பருந்துமுதலானவைகட்கு விருந் தாட்டினார்கள்.

இப்பால் மந்தரமேருவை வில்லாகவுடைய எமது கர்த்தரானவர் திரிபுரனேந்தியிருக்கின்ற வில்லைக் கண்டதுண்டமாக்கி, அவனைப் புடைசூழ்ந்திருந்த அவுணவீரர்களையெல்லாம் அரைக்கணத்தில் நாசஞ்செய்தனர். உடனே திரிபுரன் மற்றொரு வில்லையெடுத்து வளைத்து அண்டகடாகங்களு மதிரும்படியாகச் சத்தித்துத் திருமாலை இடபமாக வூர்ந்தருளிய சிவபெருமானுடைய ரதத்தின்மீது ஒரு நொடிப்போதில் நூறு ஆயிரம்-பதினுயிரம்-கோடி யென்னுங் கணக்கினு மளவுபடாத அளவற்ற பாணங்களைப் பொழிந்தனன். அவைகளையெல்லா மெமது கடவுளானவர் இமைப்போதில் விலக்கித் தமது மேருவில்லி லளவற்ற கணைகளைத்தொடுத்து அப்பாதகனுடைய கிரீடம்-கவசம் - வில்-தூணி-தேர்-உதவித்தேர் முதலான

எல்லாச செருக்கையும பொடியாக்கித் தும்சப் படுத்தினர். பின்னர்த் திரிபுரனைவன் வேணிறகாலத்து ஒதிய மரம்போல ஆயுதமுதலான சகல வாதரவுகளுமற்று மிக்க நாணத்தோடு நின்றான். இப்படி நிற்கின்றவனை எம்மை யடிமையாகவுடைய சிவபெருமான் பார்த்து திரிபுரனே! இனனும் எம்மோடு செய்யத்தக்க யுத்தங்கள் யாதேனு மிருககுமாயின, அதனை அப்பாற் சென்று யோசித்து விரைவில் வநது செய்யககடவையென்று திருவாய்மலர்ந்தனர். அச்சமயத்தில திரிபுரனைவன் தனது மைந்தா முதலிய அளவற்ற சேனைகள் மடிநதாாகளென்று கேள்விப்பட்டு ஊழிககாலத்திலுண்டாகின்ற வடவானலதததைப்போலக கொதிததுப் பெருமூச்செறிந்து தனது கிலேசஙகளெலலாம் போககி, வீராவேசங்கொண்டு மூப்புரஙகளையும் வரும்படி நினைத்தனன். அப்படி நினைக்கு முன்னமே அவைகள் விரைநதுவர அம்மூன்றினு மூன்றுவடிவெடுத்துப் புகுந்து, சிவபெருமானுககெதிராகசசெலுததிககொண்டுபோவான்; மீட்டும அவைகளோடெழுநது ஆகாயததிற் பறப்பான்; அங்கிருந்து சமுத்திரஙகளிற குதிப்பான, அவவிடம் விட்டு அட்டதிசைகள்தோறும் பாய்வான்; அவைகளினின்று பூமியிற் பாய்வான்; பூமியிலிருந்து பாதலததிற் பாய்வான்; மீளவு மெழுந்துவந்து மற்றுருடைய மனததிலுங் கண்ணிலும் பாய்வான்; இவ்வாறு எங்கும் பாய்நது வருகின்ற கொடுமையினலே பதினுலுலோகங்களும் பயந்தன. அண்டகடாகஙகளெல்லாங கலங்கின. சுவர்க்கலோக நாகலோக முதலிய அளவற்ற லோகஙகளெல்லா மதிர்ந்தன. சிவபெருமானுந தமது தேரை நடாததிககொண்டு அவன் பாய்கின்ற விடங்கள்தோறும் தாமும் பாய்நது அவன் செய்கின்ற மாயைகளையெல்லாமாய்த்து அளவற்றநாள் யுததஞ்செய்து கொண்டிருந்தனர்.

இவ்வண்ணம நெடுநாள்வரையி லெமது கர்த்தன் போர்புரிந்திருப்பதைத் தேவர்களெல்லாம பாாதது மனந் துவண்டு யாவருமொன்ருகக்கூடி, ஐயோ! நமது சிவபெருமான் தம்மை வணங்கிப் பிரார்த்தித்தவர்கட்கு இமைப போதிற் றமது திருமேனியைக் கேட்கினுங் கொடுததருளுகின்றவராதலால் ஒருவேளை இத்திரிபுரன் பணிந்து இன்னும் பலவரங்களைக கேட்பானுயின். அவைகளைக் கொடுத்தாலுங் கொடுப்பாரேயென்று பயந்து, யாவரும் [illegible] டத்தில் வந்து அஷ்டாங்கமாகச் சேவித்து நிலையரானவே! [illegible] க்குமுன்னே சகலலோகங்களையு நீறுசெய்யத்தக்க சுவாமிகள் இத்திரிபுரனுடனே நெடுநாள் தமதருமைத் திருக்கரத்தி லாயுதங்க

ளைச் சமர்ந்து யுத்தஞ்செய்யத் திருவுளங்கொண்டிருப்பதைப் பார்க்கின் ஈதொரு விளையாட்டேயன்றி வேறில்லை. சுவாமிகள் திருமேனியை யிடைவிடாது தரிசிப்பதனாலே அவனும் மகா தவத்தினையுடையவனாயினான் சுவாமிக ளவனோடு நீடித்து யுத்தஞ் செய்வதைப் பார்த்து யாங்கள் சகிக்கிலோம தேவரீர் அடியேங்கண்மீது கிருபை வைத்து விரைவில் அவனைச் சங்கரித்து யாங்களெல்லாங் கண்டு தரிசிக்கும்படியாகத் தமது திருமேனியில் வாகைமாலை தரித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் இடப்பாகந் தமர்ந்திருக்கின்ற உமாதேவியாரும் அவ்வாறே விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அதற்குச் சிவபிரான ஈஸ்வரியைப் பார்த்து பெண்ணே! முன்னொரு காலத்தில் நீ காணும்படியாகத் தாளிலேபாடு வாதுக்காடினதுபோல இத்திரிபுரனுடைய பராக்கிரமத்தினை நீ காணும்பொருட்டு இதுகாறுமவனோடு யுத்தஞ்செய்தனம் இனியவனையும் அவன் திரிபுரங்களையும் யாமழிக்கின்றதைப் பார்க்கக் கடவையென்று திருவாய்மலர்ந்து கணைச மந்திரத்தை உச்சரித்து தமது திருக்கரத்தில் முத்தலைச் சூலத்தைப் பெருக்கனாய் விட்டனர் யாவரும் திரிபுரமும் பலியும் வெந்து நீறானதைக் கண்டார்களேயல்ல அது சூலமிவ்வாறு சென்றதென்று ஒருவருங் கண்டதில்லை

இப்பால் சிவபிரான் செய்த யுத்தவல்லபத்தைப் பார்த்தது அந்தரவாசிகளாயிருந்து தரிசித்த முனிவர்கள் முதலாயினோர் அளவற்றகளிப்படைந்து இத்திரிபுரன் தேவர்களைவென்று வெற்றி கொள்ள வல்ல பராக்கிரமசாலியாயினும் தன்னின் மிக்காரோடு மெதிர்க்கச் செல்வது முறைமைதானோ? ஆயினும் போகியர்க்கு யோகியாகியும், போகியர்க்குப் போகியாகியுமிருந்து சகல சீவராசிகளையு நடப்பிக்கவல்ல ஏகனாகிய நமது சிவ பெருமானை இத்தன்மைத்தான போரினைச் செய்துகாட்டாராயின் போர்முகத்திலின்று யூகமாதிகளைக் கிரமப்படி வகுத்து விதியோடு யுத்தஞ் செய்வதற்கு யாவர்க்கும் விளங்காதாகையால் அவற்றினை நமது கர்த்தனால் விளக்கிக் காட்டுமாறு இத்திரிபுர னொருமுன்னிலைபாக விருந்தனனென்று துதித்தார்கள். சிவகணங்களெல்லா மாரவாரித்துச் சந்தோஷித்தார்கள். தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள் பிரமன்விண்டு முதலாயினோர் நமது துன்பமின்று நீங்கியதென்று ஆனந்த சாகரத்தின் மூழ்கினார்கள். சிவபெருமான் விட்ட சூலமானது மீட்டுந் திரும்புவதன் முன்னர்த் திரிபுரன் கர்த்தன் திருவடிகளில் வந்து ஐக்கியமாயினான். அன்று

முதல் எமது கர்த்தனைத் திரிபுராரி யென்னு நாமத்தால் யாவருந் துதிப்பாராயினார். அமர்க்களத்தில் மடிந்த பூதகணங்கள்மீது சிவபிரான் கடைக்கண் பார்வை செய்தலும் அவைகளனைத்து மெழுந்துவந்து கர்த்தன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினபின்னர்க் கர்த்தன் மீட்டுங் கைலாயவரையைச் சேர்ந்து தம்மைத் தொழுகின்ற அடியவர்கட்கெல்லாந் திருவருள் சுரந்து கொண்டிருந்தனர். திரிபுரனைத் தகனஞ்செய்த தினத்தில் விண்டு முதலிய தேவர்களெல்லாஞ் சிவபெருமானுக்குத் திருவிழா நடத்தித் தங்கள் தங்கள் பதவிகளைச் சேர்ந்தார்கள். திரிபுரன் முத்திபடைந்தது புரட்டாதி மாதம் பூரணை யாதலால் அதனைத்தமது யாவரும் பாகுளியென்று வழங்குகின்றார்கள். வருடந்தோறு மத்தினத்தில் யாவரேனுஞ் சிவபிரானுக்குத் திருவிழாச் செய்தாலும் அவ்வவர்கள் சத்திக்கேற்ற வண்ணம் அருச்சனை முதலானவைகளை நடாத்தினாலும் நெய்யாலாயினுந் தைலத்தாலாயினுந் திருவிளக் கேற்றிவைத்தாலும் அவர்களை எக்காலத்தினுந் தீவினையணுகாது, இவ்வாறு ஒரு சிவபுண்ணியமேனுஞ் செய்யாராயின் திரிபுரனால் தேவர்களெவ்வளவு துன்பமடைந்தார்களோ அவ்வளவு துன்பத்தை யடைவார்கள் இதனைச் சத்தியமாக எண்ணக்கடவீர்கள் அன்றியும் அத்தினத்திற் பிராதக்காலையிலெழுந்து நித்தியநியமங்களை முடித்துச் சிவபெருமானை யன்போடு பூசிப்பார்களாயின் அவர்கட்கு முற்பிறப்பிற்செய்த பாவங்களெல்லாமொழியும் உச்சிக்காலத்தி லாராதிப்பார்களாயின் அம்முற்பிறவியினோடு இம்மையிற்செய்த பாவங்களெல்லா மொழியும். மாலைக்காலத்தில் வந்திப்பார்களாயின் எழுபிறவிகள்தோறுஞ்செய்து முற்றிய பாவங்களெல்லா மொழிவதன்றி அவ்வவர்க ளிச்சித்த சகல பொருள்களும் வந்து கைகூடும்.

திரிபுர தகனப் படல முற்றிற்று.

## விநாயக விரதங்கேட்ட படலம்.



அமைவன் முப்புரம் பலியொடு மழித்தவா றிதுவாங்
குமை யயிற்படைச் சோமகாந் தப்பெயர்க் கோவே
யுமை விநாயகர் சதுர்த்தியின் விரதங்கேட் டுணர
விமைய மன்னவ னிசைத்ததோ ரெனச்சொலும் பிருகு.

காதலின் விநாயகர் கதைக ளின்றுநீ
யோதுதல் வேண்டுமென் றுயர் வியாதனு
மாதவ னிரத்தனு மகிழ்ந்து தாமரைப்
போதமர் நான்முகப் புனித னோதுவான்.

முனிவர்களே! சிவபெருமான் விநாயகமூர்த்தியை வந்தித்துத் திரிபுர தகனஞ் செய்த வரலாற்றினைச் சொன்னோம். இப்பால் உமையம்மையுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. முன்னொருகாலத்திற் பிரமன்குமாரர்களிலொருவனாகிய தக்கனென்பவன் அரிய தவங்களைச் செய்து சகல லோக நாயகியாகிய உமாதேவி தனக்குப் புத்திரியாகி வரவும், தேவர்கள் முதலாயினோர் தனதாணையைக் கடவாமல் நடந்துகொள்ளவும், இன்னு மிவை முதலிய அளவற்ற வரங்களைப் பெற்றுச் சகல செல்வங்களையும் அநுபவித்து மிகவும் பிரசித்தனாகி வாழ்கின்ற நாளையில், உமாதேவி தனக்குப் * புத்திரியாகிவர அவ்வம்மையைச் சிவபிரானுக்குத் திருக்கல்யாணஞ் செய்துகொடுத்துப் பின்னரொருநாள் கைலாயத்திற் சென்று கர்த்தன் சந்நிதானத்தை யடைந்தபோது மருமகனாகிய சிவபெருமான் தன்னைக் கண்டவுடனெழுந்து மரியாதை செய்யவில்லையென்னுங் கோபத்தோடு அவ்விடத்தினின்று நீங்கித் தன்னரண்மனையைச் சேர்ந்து கர்த்தனை நிந்தித்து அவரினுந் தானுயர் வடையவேண்டுமென்னுங் கருத்தினோடு விண்டுவாதி சகலதேவர்களையும் வரவழைத்து அவர்கள் முன்னிலையில் ஒரு யாகத்தை நடத்துவானாயினன். அதனை யெமதன்னையாகிய பார்வதி தேவியார் கேட்டுச் சிவபெருமானிடத்தில் விடை பெற்றுச் சென்று தம்குரவர்களாகிய தக்கனையும் வேதவல்லியையுங் கண்டு வந்திக்க அதற்கவர்கள் சற்றும் போற்றுதல் செய்யாது நிந்தனை செய்தார்கள். உடனே உமாதேவிக்கு அதிக கோப முண்டாகி இந்த யாகசாலை பேய் விளையாடுஞ் சுடலையாகக் கடவதென்று சபித்து மீட்டும் கைலாயவரையைச் சேர்ந்து, தக்கன் செய்துவருங் கொடுமை யிவ்வாறென்று சிவபிரானுக் கறிவித்தலும் அவருக்குக் கோப மூண்டாகி அக்கோபாக்கினியினின்றும் வீரபத்திரக் கடவுள் தோன்ற அவரைக் கர்த்தன் பார்த்தருளி நீரிந்நிமிடத்திற் சென்று, தக்கன் யாகத்தை யழித்து வருவீரென்று கட்டளையிட அவர் அவ்வாறே சென்று

---

* தக்கனுக்கு புத்திரியாய்த் தாக்ஷாயணி யென்னும் பெயர் பெற்றனர் என்று கந்தபுராணமும், சதி யென்னும் பெயருற்றனர் என்று கூர்ம புராணமுங் கூறுமென்க.

அங்குவந்திருக்கின்ற சகலரையு நாசஞ் செய்து மீட்டுந் திரும்பிய மாத்திரத்தில் சிவபிரானுக்குக் கிருபைசுரந்து யாகத்தி லிறந்தவர் களையெல்லாம் பிழைப்பித்து, இனி துர்க்கிருத்தியங்கட் குடன் படாதீர்களென்று கட்டளையிட்டு அவ்வவர்கள் பதவிகளிற் செல்ல விடைகொடுத்துப் பின்னர்த் தக்கனருகில் வந்து அவன் தம்மை நிந்தைசெய்தவனாதலால் அதற்கோர் அபராத அடையாளமாக ஆட்டுத் தலையை யவனுடலிற் பொருத்தி யெழுந்திருக்கும்படிச் செய்தார் இப்பால் பார்வதி தேவியார் அவையனைத்தையும் பார்த்துச் சிறிது கோபந்தணிந்து நமது நாயகரை நிந்தித்த தக்கனுக்கு நாம் புத்திரியானோமென்று உலகம்பழிக்குமாதலால் அப்பாதகனால் வளர்க்கலுற்ற சரீரத்தை வைத்திருந்த லாகாதென்று மனவருத்த முற்று, தமது யோகாக்கினியினாற் றேகத்தைவிடுத்துப் பர்வத ராச னுடைய தபோபலத்தினாலும், மேனை செய்த தரும விருத்தியினா லும் அவர்கட்குக் குமாரியாகத் திருவவதாரஞ் செய்து நாளுக்கு நாள் வளர்பிறைபோல வளர்ந்து, பந்து கழங்கு ஊஞ்சல் முதலிய திருவிளையாடல்களைச் செய்து பற்பல வேதாகம சாஸ்திரங்களைப் பயின்று வருங்காலத்திற் சிவபெருமான் கங்கையைக் கல்யாணஞ் செய்துகொள்வதன் முன்னர்த் தம்மைச் செய்து கொள்ளவேண்டு மென்னுங் கருத்தினோடு தந்தையாகிய பர்வதராசனை யடைந்து, தமதெண்ணத்தை யறிவித்து இது நிறைவேறத்தக்க ஓர்விரதத்தை யுணர்த்தவேண்டுமென்று வினவ, அதனை யம்மலையரசன்கேட்டனு மனமகிழ்ந்து அதற்குத் தக்கபடி ஓர் விரதத்தை யாராய்ந் துணர்ந்து இதனைச் சொல்லுவானாயினன்.

தன்மக ளிரத்தலுந் தயங்கு பேரொளிப்
பொன்மலை மன்னவன் புந்தி நாடியே
யின்மையென் றொருவரு மியம்பு மைங்கர
னன்மைகொள் விரதத்தை நயந்து கூறுவான்.

மந்தண மாவது வல்லை நாற்பயன்
றந்திட வல்லது சாபந் தீர்தர
விந்திர னாற்றிய திறைமை மூவரு
மைந்துற வாற்றியே மருவு

அரும்பிய விடரெலா மறுக்கத் தக்கது
பெரும்பிணி முழுவதும் பெயர்க்கத் தக்கது
பொரும்பகை வலிகளும் போக்கத் தக்கது
விரும்பிய பொருளெலாம்

தேவர்க டேவன் சிந்துர முகத்தவன்
மூவர்கண் முதல்வன் முத்தொழிற்குங் காரணன்
மேவர மகிழ்வது விளம்பு நாமமுந்
தாவறு விநாயக சதுர்த்தி யென்பரால்

தாயே! மிகச்சிறப்பை யுடையதும் விரைவில் நற்பயன்களை யளிப்பதும், இந்திரன் சாபத்தை நீக்கியதும், பிரமனாதியர்க்குஞ் சிருட்டியாதி தொழில்களைத் தந்ததும், சகல விடர்களையு நீக்கத் தக்கதும், சகல பொருள்களையு மளிக்கத்தக்கதும், இன்னு மிவை முதலான அளவற்ற மகிமைகளையுடைய ஒரு விரதமிருக்கின்றது. அவ்விரதம் தேவதேவாததமாகியும், மூவர் முதல்வராகியும், முத்தொழிற்குக் காரணராகியு மிருக்கின்ற யானைமுகக் கடவுளுடைய சதுர்த்தி விரதமாகும் இத்தன்மைத்தாகிய மேலான விரதத்தை யனுட்டிப்பீராயின் நீர் கருதிய வண்ணம் உடனே சித்திக்கு மாதலால் அதனை யனுட்டிக்கு முறைமையையுஞ் சொல்லுவேன்கேட்பீராக.

ஆவணிமாதம் பூர்வபக்கத்தில் வருகின்ற சதுர்த்தி தினத்தில் அவ்விரதத்தை யாரம்பிக்கவேண்டும் அவ்வண்ண மாரம்பிப்பவர்கள் அத்தினம் ஆதிகாலையி லெழுந்து, ஸ்நானஞ்செய்து நித்திய வனுட்டானங்களை நிறைவேற்றி, அபிஷேகத்திற்குரியதிரவியங்களையும் அருச்சித்தற்கேற்ற மலர்களையும் நிவேதனத்திற்குத்தக்க பதார்த்தங்களையும் தூபதீபங்கட்கு வேண்டும் பொருள்களையுஞ் சேகரித்து, ஓர் பூசாமண்டபத்தை யழகுபொருந்தச் சமைத்து, பரிசுத்தமான விடத்தில் மிருத்திகையெடுத்து வந்து அதில் வேர்கள், செல்லுமுதலிய செந்துக்கள், கல்லுகள் என்னு மிக்குற்றங்களில்லாமற் சோதித்து, அதனைப் பிசைந்து சிற்பசாத்திரத்திற் கூறியிருக்கின்ற முறைமைப்படி விநாயக மூர்த்தியினுடைய திருவுருவுஞ் சமைக்க வேண்டும் இதுவன்றியும் பொன்னிலொரு திருவுருவமுஞ் சமைக்க வேண்டும். செய்யச் சத்தியில்லாதவர்களாயின் ஒரு பலம் அரைப் பலம் காற்பலம் என்னு மிவ்வித அளவிலேனுஞ் சமைத்தல் வேண்டும். பின்னர் ஆசிரிய ருத்தரவின்படி சுத்த கங்கையில் ஸ்நானஞ் செய்து திருவெண்ணீரணிந்து சிரம், கண்டம், கரம், செவி என்னு மிவ்விடங்களில் உருத்திராக்ஷ கண்டிகை தரித்து, மேற்சொன்ன பூசாமண்டபத்திற்கு வந்து தண்டுலம் பரப்பி அதன்மேல் இழை சுற்றி நீர் நிரப்பி யிருக்கின்ற பொற்கும்பத்தைவைத்து, முன்னர்ச்

சமைத்திருக்கின்ற மிருத்திகை மூர்த்தியையும், பொன்மூர்த்தியை யும் அதனருகி லெழுந்தருளச் செய்து, ஆகமவிதிப்படி பூசித்து ஒன்று இரண்டு - நான்கு ஐந்து - ஆறு-எட்டு-பத்து-பன்னிரண்டு- இருபத்தெட்டென்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களுள் ஒரு மந்திரத்தைச் செபிக்கவேண்டும் இவற்றுள் ஒன்று - இரண்டு - நான்கு என்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களை இலக்க உருச் செபிக்கவேண்டும். அதற்குக் கூடாமையின் அவ்வெண்ணிற் பாதி யுருவேனுஞ் செபிக்கவேண்டும் ஐந்து - ஆறு-எட்டு பத்து-பன்னி ரண்டு என்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களை நூறாயிர முருச் செபிக்கவேண்டும்: அதற்குக் கூடாமையின பதினாயிரமுருவேனுஞ் செபிக்கவேண்டும் இருபத்தெட் டெழுத்துள்ள மந்திரத்தைக் குறைவில்லாமற் பதினாயிரம உருச் செபிக்கவேண்டும் இவ்வாறு செபித்துங்காலையில் பத்துக்கொருகால் தருப்பணஞ் செய்யவேண் டும் பத்துத் தருப்பணத்திற் கொருகால ஒரு ஓமஞ் செய்யவேண் டும் பத்து ஓமத்திற் கொருகால் அறுசுவை பதார்த்தங்களோடு அன்னதானஞ் செய்யவேண்டும் இந்தக் கிரமமாகப் பூசைசெய்து நிறைவேற்றுங்காலத்தில பொன் பூமி முதலானவைகளைத் தானஞ் செய்யவேண்டும் அடுத்த மாதஞ் சுக்கிலபக்ஷ சதுர்த்தி வரையில் நாள்தோறு மேற்சொல்லிய முறைமைப்படி பூசைசெய்து மிருத்தி கையினல் செய்யப்பட்ட விநாயக மூர்த்தியை நிருத்த கீதவாத்தி யங்களோடு மெழுந்தருளச்செய்து மடுவிலாவது தடாகத்திலாவது நதியிலாவது வைத்துவிடவேணும்

இவ்வாறு பூசைசெய்கின்ற முப்பதுநாளும் ஆகாரநித்திரை யில்லாமல் சத்தாதி விஷயங்களை நிக்கிரகித்து முப்பத்தோராநாள் விருந்து, ஒக்கல், அதிதிகள், பரதேசிகள் முதலானவர்களோடு போசனஞ் செய்யவேண்டும் முப்பதுநாளும் ஆகாரமின்றி யிருக் கச் சத்தியில்லாதவர்கள் இவ்விரதத்தை யாரம்பிக்கு முதல்நாளி லாவது அவ்வாறிருந்து மறுநாள் தொட்டு அவிசு, பழம், பால் இவைகளி லொன்றைப் புசித்துக்கொண்டு விரதமனுட்டிக்கவேண் டும். முப்பதுநாள் அநுட்டிக்க மாட்டாதவர்கள் ஆரம்பித்த ஒரு நாள் மாத்திரமாவது ஆகார முதலியவைகளை நிக்கிரகித்து மேற் சொன்ன முறைப்படி யநுட்டிக்கவேண்டும் தானஞ்செய்யுமுறை மையில் அவ்வவர்கள் செல்வத்திற்குத் தக்கபடி செய்யவேண்டும். எவ்விதத்தேனும் இருபத்தொருபேருக்கு அன்னதானஞ் செய்து வரல்வேண்டும். அன்றியும் ஒருருவத்திற்பூசிப்பவர்கள் தனதானிய

புத்திரசம்பத்துண்டாகி அநேக பந்துவர்க்கங்களோடும் வாழ்ந்திருப்பார்கள். இரண் டுருவங்களிற் பூசிப்பவர்கள் தங்கள் கருத்தின் படி அளவற்ற காரியங்களெல்லாஞ் சித்தியாகப் பெறுவார்கள். மூன்றுருவங்களிற் பூசிப்பவர்கள் நவரத்தினங்களு மலைபோலக் குவித்திருக்கப் பெறுவார்கள். நான்குருவங்களிற் பூசிப்பவர்கள் தரும முதலிய நான்கு புருஷார்த்தங்களுங் கிடைக்கப்பெறுவார்கள். ஐந்துருவங்களிற் பூசிப்பவர்கள் சார்வ பௌமராக வாழ்வார்கள். ஆறுருவங்களிற் பூசிப்பவர்கள் சிருட்டியாதி முத்தொழில் கட்குந் தலைவராவார்கள். எழு எட்டு ஒன்பது என்னு மிவ்வுருவங்களிற் பூசிப்பவர்கள் சர்வஞ்ஞத்துவ முடையவ ராவார்கள். பத்து வடிவங்களிற் பூசிப்பவர்கள் நிகழ்காலம் இறந்தகாலம் எதிர்காலம் என்னுந் திரிகால ஞானத்தை யுடையவராவார்கள்.* இந்தப் பத்துருவங்களிற் செய்யும் பூசாபலத்தினால் சனகாதி முனிவர்களும் விண்டுவாதி தேவர்களும் அளவற்ற அதிகாரங்களைப் பெற்றார்கள். பதினொருருவங்களிற் பூசிப்பவர்கள் சகல துன்பங்களுந்தொலையப் பெறுவார்கள். பன்னிரண்டு முதல நூற்றெட்டுருவங்கள் வரையிற் பூசிப்பவர்கள் ஒன்றுக்கொன்று மேலான பயன்களையெல்லாங் கிடைக்கப்பெறுவார்கள். ஆயிர வுருவங்களிற் பூசிப்பவர்கள் இம்மையில் மலவிருளினின்று நீங்கி மெய்ஞ்ஞான சுகத்தைப்பெற்று வாழ்வதன்றி மறுமையில் மோக்ஷ சாம்பிராச்சியத்தை யடைந்து தங்களிருபத்தொரு தலைமுறைகளிலுள்ளவர்களையு முத்தியிற்சேர்ப்பார்கள்.

மேலும் எழுமூர்த்திகளை மூன்றுநாள் பூசைசெய்தால் சகல பிணிகளும் இடர்களுந் தொலையும்; ஒன்பதுநாள் பூசைசெய்தால் அனந்தசித்திகளுமுண்டாகும்; ஐந்துவருடம் வரையிற் பூசித்தால் எல்லாப் பாதகங்களுந் தீரும். இடைவிடாது அந்தியகாலம் வரையில் பூசித்தால் விநாயக மூர்த்தியினுடைய சாயுச்சிய பதவியை யடைவார்கள். இவ்வாறு அவ்வவர்கள் சக்திக்கேற்றபடி எத்தனை மூர்த்திகளிற் பூசித்தாலும் அப்பூசனையில் மூலமந்திரம், ஏகாட்சர மந்திரம், சடாக்கரமந்திரம் என்னும் இம்மூன்றிலொன்றைச் செபித்து முடிவில் தருப்பணாதிகளை முடித்துத் தம்பதி பூசையுஞ்செய்ய வேண்டுமென்றுஞ் சொல்ல, அவையனைத்தையும் பார்வதி தேவியார் கேட்டு மனமகிழ்ந்து இவ்விரதத்தை முன்னர் யாவரனுட்டித்திருக்கின்றார்களென்று கேட்கப் பர்வதராசன் சொல்லுவான்.

தாயே! முன்னொருநாள்சகலதேவர்களும்புடைசூழ்ந்துவணங் கத்தக்கதாகச் சிவபெருமான் கைலாயத்தி லெழுந்தருளியிருக்கின் றபோது சுப்பிரமண்ணியக் கடவுள் அச்சந்நிதானத்திற்கு வந்து கர்த்தனைப் பலமுறைவந்தித்து விண்ணப்பஞ் செய்ததாவது:—சுவாமீ! அளவற்ற விரதங்களுள் மேலான விரதமாகவும், விரைவில் சகலபயன்களையு மளிக்க வல்லதாகவும்,மிகவுஞ் செவ்வையானதாகவு மிருக்கின்ற ஓர்விரதத்தை அடியேற்குத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்ன. அதற்குக் கர்த்தன் கிருபைகூர்ந்து மைந்தனே! சகலவிரதங்கட்கு மேலானது விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தி விரதமாகும் அதுவேநினைத்த காரியங்களை விரைவில் முடிக்கத்தக்கது. அதுவே யாதினும் செவ்வையா யிருப்பதென்று சொற்றருளினர்.

முதல்வ லாமுத லாகிய முதலவ னினது
பதம்வி ராவுறும் விரதங்கள் பலவுள வவற்று
ளிதமெ லாந்தரும் விரதமொன் றனைவியம் பாது
மதம்வி ராவிய முகத்தவன் விரதத்தை வகுத்தாய். (௧)

எனக்கு முன்னவ னாயினு மிறைவவெம் பெருமான்
றனக்கு மைந்தனே தானவன் றம்பிரானுனை
நினக்கு மேலென நிற்பினன் றேயவன் விரதந்
தனக்கு மேன்மைமெய் துறும்பல விரதங்க டம்முள். (௨)

அமரநாயக வடியனே னகத்துறு மல்லற்
றிமிரந் தீர்தரச் செய்யவாய் மலர்த்துக வென்று
குமர வேள்பணிந் திரத்தலுங் குழகனு ருரைப்பார்
சமரவேலவ சரதமே நினக்குரைத் தனமால். (௩)

அதனைச் சண்முகக்கடவுள் கேட்டு, சுவாமீ! ஒன்றிருக்க மற்றொன்றைத்தேவரீர்திருவாய்மலர்ந்தருளியது அடியேன்சிறுபிள்ளையென்று நினைத்தோ? அல்லது அதுவே சத்தியந்தானோ? ஆதிமத்தியாந்த ரகிதமாயிருக்கின்றதேவரீரது விரதங்கள் அளவற்றதாகவிருக்கின்றன. அவற்று ளொன்றனை யநுக்கிரகஞ்செய்யாமல் விநாயக மூர்த்தியினுடைய விரதத்தையே மேலானதாகத் தெரிவித்தீர். அவ்விநாயகமூர்த்தி அடியேனுக்கு மூத்தவராயினும் தேவரீர்க்கவர் புத்திர ரல்லரோ? சகலபுவனகார சொரூபியாகிய தேவரீரினும் அவர் மேலானவரா யிருக்கின் சுவாமிக ளனுக்கிரகித்தவாறு அவர் விரதமும் மேலானதாகவேயிருக்கும், ஆதலால் அடியேன் மனதிற்

கொண்ட சந்தேகத்தை நிவிர்த்திசெய்தருளுமென்று பணிந்து பிரார்த்தித்துக்கொண்டார். அதற்குச் சிவபெருமான் சந்தோஷித்துக் குழந்தாய்! யாம்சொன்னது சத்தியமேயாகும். அஃதெவ்வாறெனிற் சொல்லுதுங்கேள்

ஒன்ற தாய்ப்பல வாயரு வாயுரு வாகி
நின்ற லாவுல கத்தினு நீக்கமி லாத
துன்று சோதியே கணபதி யெனச்சொலு நாம
நன்று தாங்கிய தற்பதி நாமெலா முய்ய (௧)

பிரண வத்தினின் றுகமொடு பிரவஞ்சந் தனது
சரண பங்கயந் தொழுவந் தந்திமா முகத்தோ
னரண மட்டநா ணமகத்துமந் திரமறைந் தனன்முன் [தான்
முரணுமுத்தொழிலின் முகிழ்த்தெனம்மா டுருவாகக்கொடுத்

கலதி செய்திடுங் காமுக மனத்தவர் தம்மைக்
குலனொ டுங்கெடுத் தடியவர்க் கருள்செயக் குறித்தே
யுலக மீதுபல் வேறவ தாரங்கொண் டுற்றான்
புலவு வேலவ னமக்குமோர் மகனெனப் புகுந்தான். (௨)

உருவு முள்ளுறு முயிருமே யெனவிரு வேமு
மருவி நிற்றலின் மற்றிரு வெங்களை வேறுயச்
சுருதி யாகம புராணங்கள் சொலாதொன் றென்னுங்
கருதும் யோகியர் தாங்களு மனனமே கரைவார். (௩)

ஆதலாலவ னனைவர்க்கு மேலவ னவன்மெய்ப்
பாதநாடிய விரதமு மேலெனப் படுமா
லோத லாகுமவ் விரதமே யன்றியு மொன்றுண்
டேத நீத்திடுஞ் சங்கட சதுர்த்தியென் றிளையோய். (௪)

எந்த நன்மையு மிணக்குவ விரதங்க ளாலு
மந்த நம்பனைக் காக்கர மந்திர மாதி
மந்திரங்களி னாலும்வந் தருளவ தாரச்
சந்திரந்திகழ் மூர்த்திபூ சனைத்தொழி லாலும் (௫)

வணக்கஞ் செய்தலி னாலுமற் றவனுரு மனத்தி
னிணக்கஞ் செய்தலி னாலுமேத் தெடுத்தலி னாலும்
பிணக்கஞ் செய்தபல் லிடரெலாம் பெயர்த்திருண் மலமு
முணக்கஞ் செய்துநாற் பயனையு முற்றவர் பலரே. (௬)

என்று முத்தலை வேலவ னிலைகொள் வேலவனுக்
கன்று ரைத்தன னைங்கரன் விரதமா திகளை
யின்று னக்கவை யிபம்பின மெனவரை யரையன்
மன்ற லங்குழற் குமரிக்கு வகுத்துரைத் திட்டான்.

ஒன்றாகியும், பலவாகியும், அருவாகியும், உருவாகியும், எல்லாவுலகத்திலும் நீக்கமற்று நிறைந்திருக்கின்ற சுயஞ்சோதி சுவரூபமே உலகமெலாம் உய்யும்படியாகவும், சகலபுவனங்களுந் தமது சரண பங்கயங்களைத் தொழுதுமுத்தியடையும்படியாகவும், பிரணவத்தினின்றுஞ் சகளீகரித்துக் கணபதியென்னுந் திருநாமத்தை வகித்திருக்கின்றது. மேலும் அக்கணபதி மூர்த்தியே முன்னாள் யாம் திரிபுரத்தை யெரிக்கத்தக்க மந்திரத்தை யெமக்குபதேசித்தவர். அவரே சிருட்டிதிதி சங்காரமென்கிற முத்தொழில்களைப் பிரமன் விண்டு உருத்திரனாகிய எங்கண் மூவருக்குதும் அருளிச்செய்தவர். இவ்வுலகத்தில் துஷ்டசன நிக்கிரகமு சிஷ்டசன பரிபாலனஞ் செய்யும் பொருட்டு அனந்த முறைவேறு வேறு திருவவதாரங்களைக்கொண்டிருக்கின்றனர். மற்றோரவதாரத்தில்நமக்குப்புத்திரராக அவதரித்திருக்கின்றனர். யாங்களிருவருமுடலுமுயிரும்போலமருவியிருத்தலினால் சகல வேதாகம புராணங்கள் எங்களிருவோரையும் ஒன்றாகச்சொல்லுமேயன்றி வேறுபடுத்தாது எங்களைத்தியானிக்கின்ற பெரியோர்களும் அவ்வாறே தியானிப்பார்கள். ஆதலால் அவ்விநாயகமூர்த்தியே மேலானமூர்த்தி; அவரது சதுர்த்திவிரதமே மேலானவிரதம்; அவ்விரதத்தையனுட்டிப்பவர்கள் யாவரேயாயினும் அவர்கட்குமாயாசம்பிரதம் தத்துவசம்பிரதம்-யோகினிசாலம் மாலினிவித்தை-மகாசம்மோகனம் மனோபேதம் தந்திரபேதம் குய்யதந்திரம்-கலாவாதம்கலாசாரம்-குண்டிகாமதம்-அஞ்சனவித்தை பாதுகைவானபாத்திரம்-பரகாயப்பிரவேசம்-இரசவாதம்-பைபீலவாதம்-சங்கிராம விலக்கணம் * முதலிய எல்லாவித்தைகளுங் கைகூடிவரும்.

* மாயா சம்பிரதம் - ஓரிடத்தில் ஊர்போலவும், வனம் போலவும், மலைபோலவும், நதிபோலவும் தோற்றுவித்தல் - தத்துவ சம்பிரதம் - ஒருபூதத்தில் ஒருபூதத்தைத் தோற்றுவித்தல். யோகினி சாலம் — மயானத்தில் உபாசித்து யோகினிகளைக் காண்பித்தல். மாலினிவித்தை - சமுத்திரங்கடக்கச் செய்தல் மகா சம்மோகனம்-விழித் திருக்கின்றவர்களை மெய்மறந்து நித்திரைகொள்ளச் செய்தல். மனோ பேதம்-மனத்தைப் பேதிக்கச் செய்தல் தந்திரபேதம்-ஓரிடத்தும் வெளிப் படாத மந்திரத்தை வெளிப்படச் செய்தல். குய்ய தந்திரம்-வெளிப் பட்டதை மறைப்பித்தல். கலாவாதம் - மன்மத வித்தை. கலா

சாரம்-வருணத்தை அதிகரிக்கப் படுத்துதல். குண்டிகாமதம்-நுனிகையிருலே இளமை அடைதல் அஞ்சனசித்தை-மறைபட்ட பொருளைக் காண்பித்தல். பாதுகை-செருப்பை நமதொட்டு நினைக்கில் நினைத்த இடத்தில் விடுத்தல் பானபாத்திரம்-ஒரு பாத்திரத்தில் நினைத்த பான மெல்லாந்தருதல். பரகாயப் பிரவேசம்-பிராண னில்லாத உடம்பிலே புகுதல். இரசவாதம் - உலோகத்தைப் பேதிக்கச் செய்தல் வைபில வாதம் மிருகங்களின் பேச்சறிதல். சங்கிராமவிலக்கணம்-போர்வித்தை என வறிக

---

அச்சதுர்த்தி விரதமின்றிச் சங்கட சதுர்த்தி யென்று மற்றொரு விரதமுண்டு. அஃதெல்லா நன்மைகளையும் அளித்திறரவல்லதாகும். மைந்தனே! விநாயகக்கடவுளுடைய மகத்துவம் இத்தன்மைத்தாகும் மேலும் அவருடைய சிறந்த விரதங்களை யனுட்டிப்பதினாலும், அவருடைய திருவவதார மூர்த்திகளைப் பூசிப்பதினாலும், அவரது திருவுருவங்களை மனதிற் றியானிப்பதினாலும், அவர் திருவடிகளைத் துதிசெய்வதினாலும், அளவற்ற பேர்கள் இருவினைகளினின்று நீங்கி மும்மலங்களையு மொழித்து நான்கு பயன்களையு மடைந்திருக்கின்றார்கள். என்று சிவபிரான் சுப்பிரமணியருக் குபதேசித்ததாக உமாதேவிக்குப் பர்வத ராசன் சொன்னான்

விநாயக விரதங் கேட்ட படல முற்றிற்று

---

## விநாயக சதுர்த்தி

# அநுட்டித்த படலம்.

விரதங் கேட்ட விளங்கிழை யென்செய்தாள்
குரவ வோதெனக கோதில் வியாதனுக்
குரவுத் தேன்கம ழோள்ளிய கஞ்சமேல
வரதன் கூற வலித்தன னென்பவே

இப்பால் உமா பரமேஸ்வரியார் அவை யனைத்தையுஞ் செவிகுளிரக்கேட்டுத் தந்தையாகிய பர்வத ராசனைப் பார்த்து, யானிவ் விரதத்தை அநுட்டிக்கு[illegible] வேண்டிய திரவியங்களை யெல்லாஞ் சேகரிக்க வேண்டுமென்று திருவாய் மலர்ந்தருள, அதனைப் பர்வத ராசன் கேட்டு மனமகிழ்ந்து ஏவலாளர்களைக் கூவி அவ்வவர்கட்கு, வேறு வேறு பணிகளை யிட்டனன். உடனே அப்பணிகளைச் சிர

மேற் கொண்டு சிலர் தெய்வலோகத்திற் சென்று கற்பக மலர்களும் பலவிதத் தளிர்களும் உண்டிகளுங் கொண்டு வந்தார்கள். சிலர் பற்பல தீபங்களிற் சென்று ஆங்காங் கிருக்கின்ற அளவற்ற அற்புதப் பொருள்களைக் கொண்டு வந்தார்கள்

சிலர் பூவுலகத்திற் சென்று அனந்த புதுமையான வஸ்துக் களைக் கொண்டு வந்தார்கள்; சிலர் பாதலத்திற் சென்று அங்கிருக் கின்ற மாணிக்கமுதலிய திரவியங்களைக்கொண்டு வந்தார்கள், சிலர் உவர்க்கடல் நீரொன்று தவிர மற்ற எல்லாக் கடல் நீரோடு சக்கிர வாளகிரிக்கு அப்பாலிருக்கின்ற பெரும்புறக் கடல்நீரையும் பரிசுத் தத்தோடு கொண்டு வந்தார்கள்; சிலர் கங்கை காவிரிமுதலிய அள வற்ற தீர்த்தங்களை மங்கல வாத்தியங்களோடும் கொண்டு வந்தார் கள்; சிலர் பரிமளம் வீசுகின்ற மலர் மொக்குகளும் இளந் தளிர் களும் அறுகுகளும் வன்னிமுதலிய பத்திரங்களும் கொண்டு வந்து ஆராய்ந்து வைத்தார்கள்; சிலர் கோத்தமாலை, கொத்துமாலை, தொ டுத்த மாலை, சுருக்கு மாலை, கட்டு மாலை, அரும்புமாலை முதலாகிய மாலைகளைச் செய்து பூக்குடலைகளில் நிரப்பினார்கள்; சிலர்சொர்ணத் தினால் ஓர் மண்டபஞ் சமைத்து அதில் நவரத்தினங்களை யிழைத்த பற்பல மணிமாலைகளாலும் மலர் மாலைகளாலும் அலங்கரித்தார் கள்; சிலர் தூண்கள் தோறும் தாழை கமுகு கன்னல் இவைகளை நாட்டி அவைகளினுச்சியிலேதாழை நாரத்தை தாதுமாதுளை என்னு மிவற்றின் குலைகளோடு பற்பல பழ வருக்கங்களையு மாலையாகக் கோத்துத் தொங்க விட்டார்கள்; சிலர் விதானங்களை உயர்த்தூக்கி அழகிய தூண்கடோறும் நவரத்னங்கள் நிறைத் திருப்பன போல கொடிகளைக் கட்டினார்கள்; சிலர் அக்கினிதேவனுக் குறைவிடமா கிய ஓம குண்டத்தை யமைத்தார்கள்; சிலர் புழுகு சந்தனம் பனி நீராதிகளைக் கலந்து மெழுகிப் பரிமளப் புகைகளை யூட்டினார்கள்; சிலர் சுவர்கள் தோறும் எண்ணிறந்த சித்திரங்களையெழுதினார்கள்; சிலர் அறுகு முதலியவைகளை நிரப்பினார்கள்; சிலர் முத்து, நீலம், பச்சை, பொன் முதலியவைகளைப் பொடி செய் தெடுத்துக் கோ லங்க ளிட்டார்கள்; சிலர் சொர்ணதிபாத்திரங்களைச் சுத்திசெய்து பரிசுத்தப் படுத்தி யிருக்கின்ற இடங்கள் தோறும் விதிப்படி வைத் தார்கள்.

இவ்வாறு எவர்களும் பணி செய்திருக்கச் சகலபுவனேஸ்வரி யாகிய பார்வதி தெய்வ கன்னிகையி லாடிப் பூசா மண்டபத்தில்வந்து திருவெண்ணீறு உருத்திராக்க முதலியவைகளை பணிந்துச்சிரசாதி

பாதம் வரையில் நியாசஞ் செய்து ஆசமனம் புரிந்து பிராணாயாமத்தி லிருந்து பூதசுத்தி முதலானவைகளை நடாத்தி.

ஏவங்குண விசேஷண வசிஷ்டாயாம் சுபதிதௌ அஸ்மாகம்ஸ குடும்பானாம் க்ஷேமஸ் தைர்ய விஜயா யுராரோக்கி யைஸ்வர்யா ணாமுத்த ரோத்தரா பிவ்ருத்யர்த்தம தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த ஸித்பாத்தம் ஸ்ரீசித்தி விநாயக தேவதா முத்திஸ்ய ஸ்ரீசித்தி விநாயகப் ரீத்யார்த்தம் கல்போக்த ப்ரகாரே ணத்யாநா வாஹநாதி ஷோட சோபசார பூஜாங்கரிஷ்யே

என்று சங்கற்பங் கூறி சந்தன மாந்தா லாகிய ஓர் வேதிகை வைத்து அதன் மீது தண்டுலம் பரப்பி சொர்ணவஸ்திர மொன்றை விரித்து அதன்மீது இழைசுற்றி நீர் நிரப்பி யிருக்கின்ற பொற் கும்பத்தை ஸ்தாபித்து அதில் அததிநதளிர், ஆலந்தளிர், அரசந்தளிர், மாந்தளிர், நாவற்றளிர் என்னும் ஐவகைத் தளிர்களோடு சுகந்தி-பொன்-மரகதம்-மாணிக்கம முத்து என்னும் பஞ்ச ரத்தினங்களையும் பெய்து அதற்குச் சந்தனம் புஷ்பம் அக்ஷதை முதலானவைகளைத் தரித்து

கலசஸ்யமுகே விஷ்ணு கண்டே ருத்ரஸமாஸ்ரத மூலே தத்ர ஸ்திதோப்ரம்ஹ மத்யே மாத்ரு கணாஸ் ம்ருதா குக்ஷௌது சாகராஸர்வே ஸப்தத்வீபாவ சுந்தரா ருக்வேதோ யசுர்வேத சாமவேத அதர்வண அங்கைஸ்ஸச இதாசாவே கலசாம்புஸமாஸ்ரித ஆயேந்து கணேச பூஜார்த்தம துரிதக்ஷயகாரக, கங்கேசய முனைசைவ கோதாவரி ஸரஸ்வதி - நாமதே சிந்துகாவேரி - சலேஸ்மின் ஸந்நிதிங்குரு.

என்று கும்பபூசை செய்து அக்கும்பத்திற்கு மேற்றிசையில் யந்திரமிட்டு அதன்மீது தெய்வ கம்மியர்களால் சொர்ணத்தினாலும் பிருதிவியினாலும் செய்துவைத்திருக்கின்ற இரண்டு மூர்த்திகளிற் சொர்ன மூர்த்தியை யெழுந்தருளச் செய்து நவரத்தினங்களாகிய மற்றொரு வேதிகையின்மீது பிருதுவி மூர்த்தியையெழுந்தருளச் செய்து, சங்கு முதலிய பூசா கருவிகளைச் சுத்தி செய்து கங்கை முதலிய தீர்த்தங்களை வைத்திருக்கின்ற பாத்திரங்களில் குங்குமம்- பச்சைகர்ப்பூரம் புட்பம்-அறுகு முதலிய வைகளோடு பற்பல பரிமளத் திரவியங்களையும் பெய்து, மணிவட்டிகைகளைப்பரப்பி, அவைகளில் ஜலம்-அரிசி-பால்-தருப்பை நுனி-மலர் - வெண்கடுகு-நெல்-எள் முதலிய திரவியங்களை விதிப்படி யமைத்து, அரு

க்கியம் பாத்தியம் ஆசமனம் என்னும் மூவகை நீர்களையும் மந்திர பூர்வகமாக உண்டாக்கி, கரத்திற்புஷ்பமும் அக்ஷதையுங்கொண்டு,

த்யாயேத்கஜானனம் வேதம் தப்தகாஞ்சன ஸந்நிபம்-சதுர்ப் புஜம் மஹாகாயம் ஸர்வாபரண பூஷிதம் தண்டாக்ஷ மாலாபரசு பூர்ணமோதக தாரிணம் பாசாங்குசதரம் தேவம்-த்யாயேத் ஸித்தி விநாயகம், ஸ்ரீஸித்தி விநாயகாய நம த்யானம் ஸமர்ப்பயாமி.

என்று சிந்தித்து.

விநாயக நமஸ்தேஸ்து கௌரீபல ஸமுத்பவ - இமாம் க்ருதாம்மயாம் பூஜாம க்ருஹாண கணநாயக, ஸ்ரீகணநாயகாயநம-ஆவாஹனம் ஸமாபயாமி

என்று ஆவாகனத்துடனே ஸ்தாபனஞ் செய்து.

மௌக்திகை புஷ்பராகஸ்ப நாநாரத்ன விராசிதம் திவ்ய ஸிம்ஹாசனம் சாரு ப்ரீதியர்த்தம் ப்ரதிக்ருஹ்ய ஹ்ருதாம், ஸ்ரீவிநாயகாய நம:-ஆஸனம் ஸமர்ப்பயாமி

என்று பீடமிட்டு

அர்க்யம் க்ருஹாணதேவேச - கஞ்ஜ பகஜானன-கந்ததூர்வா க்ஷதையர் யுக்தம-கங்காஜல மிதம்சுபம் ஸ்ரீகஜானனாயநம அர்க்யம் ஸமர்ப்பயாமி, கௌரி புத்ரநமஸ்தேஸ்து-சங்கரப்ரியநந்தன-பக்த்யாபாத்தியம் மயாதத்தம் க்ருஹாணசுரசத்தம்,ஸ்ரீகௌரீ புத்ராய நம-பாத்யம் சமர்ப்பயாமி அநாதநாத சர்வேச-கீர்வாண வராபூஜித நிர்மலம் கந்தஸம்யுக்தம்-க்ருஹாண சமனம் விபோ ஸ்ரீஸர்வேஸ்ராயநம-ஆசமனீயம் சமர்ப்பயாமி

என்று அருக்கியம் பாத்தியம் ஆசமனங் கொடுத்து

ததிக்ஷீரஸ்யுக்தம்-மத்வாஜ்யேனஸமந்விதம் மதுவர்க்கம் க்ருஹாணேதம் - கஜவக்த்ர நமோஸ்துதே, ஸ்ரீகஜவக்த்ராயநம - மதுவர்க்க நைவேத்தியம் ஸமர்ப்பயாமி

என்று தேன்கலந்த பால்பழ முதலியவைகளைக் கொடுத்து.

ஸ்நானம் பஞ்சாமருதேர் திவ்ய குருஷ்வசுர ஸத்தம பக்த்யா துய்யம் மயாதத்தம், விக்நராஜ நமோஸ்துதே, ஸ்ரீவிக்நராஜாயநம-பஞ்சாம்ருத ஸ்நானம் ஸமர்ப்பயாமி, கங்காதி ஸர்வதீர்த்தேப்யஸ்து-ஆனீத்யைர்நிர்மலைஸ் சுபை - வாசிதைருத கைர்தேவ ஸ்நபயாமிக ஜானன, ஸ்ரீகஜானனாய நமசுத்தோதகஸ்நானம் ஸமர்ப்பயாமி.

என்று ஐந்தமிர்தத்தையும் கங்கைமுதலிய திவ்விய தீர்த்தங்களையும் ஸ்நானஞ் செய்வித்து

ரக்தவஸ்த்ரத் வயம்தேவ கௌரீபவபவப்ரபோ க்ருஹாணேதம் மயமாதத்தம்-விக்னராஜ நமோஸ்துதே ஸ்ரீவிக்ன ராஜாயநம-வஸ்திரயுக்மம் ஸமர்ப்ப யாமி.

என்று இரண்டு பீதாம்பரங்களை யுடுத்தி.

உபவீதம் ப்ரம்ம ஸூத்திரம்பிரம்ஹணா நிர்மிதம்புரா - நாகயக்ஞோப வீதேதம்-க்ருஹாண கணநாயகம், ஸ்ரீ கணநாய நாயகம் யக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி

என்று பூணூல் தரித்து,

சந்தனு கருகற்பூரம் குங்கும ஸமன்விதம்-கநதம் தாஸ்யாமி விக்னேஸ ஸர்வாபீஷ்டப்ரதாயக ஸ்ரீவிக்னேஸாயநமகந்தாந்தாரையாமி(என்று திருமேனி முழுவதுஞ்சந்தனத்தையப்பி) அக்ஷதான் தவளாம் சுப்ரான் ஹரிதரா மிஸ்ரிதா ஸாமிமஸானமர்ப்பிதான் தேவ க்ருஹாணத் விரதானன ஸ்ரீஸர்வாபீஷ்டப்ர தாயகாயநம அட்சதாம் ஸமர்ப்பயாமி

என்று மஞ்ளரிசி-பொற்சுண்ணம் பூந்தாது முதலியவைகளை அதன்மீதுதட்டி,

சுகந்தினி - சபுஷ்பாணிஜாசீகுநத முகர்னிஸ ஏகவிம்சதிபுஷ்பாணிக்குஹாணத்வம்விநாயகஸ்ரீ விநாயகாயநமபுஷ்பாணிபூஜையாமி.

என்று மலர்களைச சாத்தி.

| | |
|---|---|
| ஓம் கணேசாயநம | பாதௌ பூஜையாமி |
| ஓம் விக்னராஜாயநம | ஜாநுநீபூஜையாமி |
| ஓம் ஆகுவாஹனுயநம | ஊரும் பூஜையாமி |
| ஓம் ஏரம்பாயநம | கடிம் பூஜையாமி |
| ஓம் தேவதேவாயநம | நாபிம் பூஜையாமி |
| ஓம் லம்போதராயநம | உதரம் பூஜையாமி |
| ஓம் கணநாயகாயநம | ஹிர்தயம் பூஜையாமி |
| ஓம் ஸ்தூலகண்டாயநம | கண்டம் பூஜையாமி |
| ஓம் ஸ்கந்தாக்ரஜாயநம | ஸ்கந்தௌ பூஜையாமி |
| ஓம் சதுர்ப்புஜாயநம | புஜௌ பூஜையாமி |
| ஓம் பாசஹஸ்தாயநம | அஸ்தான் பூஜையாமி |
| ஓம் கஜவக்திராயநம | வக்த்ரம் பூஜையாமி |
| ஓம் விக்ன அந்திரேநம | நேத்திரே பூஜையாமி |

ஓம் சூர்ப்பகர்ணாயநம கர்ணௌ பூஜயாமி.
ஓம் ஏகதந்தாயநம தந்தம் பூஜயாமி.
ஓம் குமாரகுருவேநம சிரம்பூஜயாமி
ஓம் சர்வேஸ்வராயநம சர்வாங்காநி பூஜயாமி.

என்று பாதம், முழந்தாள், தொடை, நிதம்பம், நாபி, வயிர், இதயம், கண்டம், கழுத்தடி, தோள், உள்ளங்கை, நாசி, கண், காது, நுதம், சிரம், சர்வாங்கம் - என்னு மிப்பதினொறிடங்களினும் அங்க பூஜை செய்து

ஓம் சுமுகாயநம மாசிபத்ரம்பூஜயாமி
ஓம் கணாதிபதயேநம பிருங்கராஜபத்ரம்பூஜயாமி
ஓம் உமாபுத்ராயநம வில்வபத்ரம்பூஜயாமி
ஓம் கஜானனாயநம தூர்வபத்ரம்பூஜயாமி
ஓம் லம்போதராயநம பத்ரீபத்ரம்பூஜயாமி
ஓம் அரசூனவேநம தத்தூரபத்ரம்பூஜயாமி
ஓம் கஜகர்ணாயநம துளசிபத்ரம்பூஜயாமி
ஓம் குகாக்கிரசாயநம கரமஞ்சரிபத்ரம்பூஜயாமி
ஓம் ஏகதந்தாயநம புரஹூதிபத்ரம்பூஜயாமி
ஓம் கஜவத்திராயநம சமிபத்ரம்பூஜயாமி
ஓம் சுராக்ரகண்யாயநம தேவாதாரபத்ரம்பூஜயாமி
ஓம் பாலசந்த்ராயநம மருவபத்ரம்பூஜயாமி
ஓம் விகடாயநம கரவீரபத்ரம்பூஜயாமி
ஓம் விநாயகாயநம தருமோற்பலபத்ரம்பூஜயாமி
ஓம் கபிலாயநம அர்க்கபத்ரம்பூஜயாமி
ஓம் பின்னதந்தாயநம அர்ச்சுனபத்ரம்பூஜயாமி
ஓம் பத்நிஹிதாயநம விஷ்ணுகிராந்திபத்ரம்பூஜயாமி
ஓம் வடவேநம தாடிமபத்ரம்பூஜயாமி
ஓம் சூர்ப்பகர்ணாயநம ஜாசிபத்ரம்பூஜயாமி
ஓம் மூஷிகவாகனாயநம கண்டலேபத்ரம்பூஜயாமி
ஓம் சர்வசித்திப்ரதாயகாயநம ஏகவிம்சதிபத்ராணிபூஜயாமி

என்று மாசிப்பத்திரம், கரசாங்கனி, வில்வம், அறுகு, இலந்தை, ஊமத்தை, துளசி, நாயுருவி, சிறுவழுதலை, வன்னி, மந்தாரை, மருவு, அலரி, கோங்கு, வெள்ளெருக்கு, மருதம், விஷ்ணுகிராந்தி, மாதுளை, சாதிமல்லி, தாழை, என்னு மிவ்விருபத்தொருபத்திரங்களால் அருச்சித்து.

ஓம் விநாயகாய நம
ஓம் விக்னராஜாய நம
ஓம் கணநாதாய நம
ஓம் கஜானனாய நம
ஓம் மகோதராய நம
ஓம் மகாதேவாய நம
ஓம் ஸ்தனித்காஞ்சன ஸமத்துயே நம
ஓம் ஏசதமஷ்டோத்கடாய நம
ஓம் தேவாய நம
ஓம் கஜவக்த்ராய நம (௧0)
ஓம் மகாபலாய நம
ஓம் நாகயக்ஞோபவீதினே நம
ஓம் நாகாபரணபூஷிதாய நம
ஓம் ஸர்வார்த்த ஸம்பதாதாராய
ஓம் கணாத்யக்ஷாய நம
ஓம் வரப்ரதாய நம
ஓம் ருத்ரஸ்யதன்யாய நம
ஓம் உதாராய நம
ஓம் நாயகாய நம
ஓம் ப்ரமதாதிபாய நம (௨0)
ஓம் பத்மராகத்வதயே நம
ஓம் ஸோமாய நம
ஓம் ரக்தமால்யா ய நம
ஓம் அபலாய நம
ஓம் பா[illegible]ரூபிணே நம
ஓம் சுமுகாய நம
ஓம் சுப்ரயாய நம
ஓம் ப்ரபவே நம
ஓம் புண்யாய நம
ஓம் பூர்ணாய நம (௩0)
ஓம் பூர்ணோதராய நம
ஓம் புண்ணியகீர்த்தியே நம
ஓம் புராதனாய நம
ஓம் பர்த்ரே நம
ஓம் சிவாய நம
ஓம் சாந்தாய நம
ஓம் ஜகந்நாதாய நம
ஓம் சாஸ்வதாய நம
ஓம் ஸ்வேதபரிதானாய நம
ஓம் த்ரயக்ஷாய நம (௪0)

ஓம் கனகசுப்ரபாய நம
ஓம் சிவஸாம்யாய நம
ஓம் மகாதேஜஸே நம
ஓம் மகாபலபராக்ரமாய நம
ஓம் ஸர்வக்ஞாய நம
ஓம் க்ஞானசம்பன்னாய நம
ஓம் ஸாவாபரணபூஷிதாய நம
ஓம் பாபாபமேனுதனாய நம
ஓம் சண்டவிகரமாயநம
ஓம் அலக்ஷ்மீமலநாசனாயநம (௫0)
ஓம் குமாராய நம
ஓம் காரணாய நம
ஓம் காரிதாய நம
ஓம் ஸர்வசிதிப்ரதாயகாய நம
ஓம் விபவே நம
ஓம் ஈசாய நம
ஓம் ஈசபுத்ராய நம
ஓம் ஈப்ஸிதார்த்தப்ரதாபகாயநம
ஓம் ஸ்ரீதாய நம
ஓம் சுபாய நம (௬0)
ஓம் ஏகதந்தாய நம
ஓம ஏகவீராய நம
ஓம் அநேகதாய நம
ஓம் ஏகஸ்மை நம
ஓம் ஏகப்ரதே நம
ஓம் விஸ்வப்ரதே நம
ஓம் விஸ்வபூஜேநம
ஓம் விஸ்வஸ்மை நம
ஓம் விஸ்வக்ஞாய நம
ஓம் ஸர்வபாதனாய நம (௭0)
ஓம் பாக்யதாய நம
ஓம் பவதாய நம
ஓம் பாகினே நம
ஓம் போக்தாய நம
ஓம் போகபாவினாய நம
ஓம் கவயே நம
ஓம் கார்யாய நம
ஓம் கனீனாய நம
ஓம் கர்த்தரேய நம
ஓம் க்ரதவே நம (௮0

ஓம் க்ருதினே நம
ஓம் க்ருத்யவிதேய நம
ஓம் அத்யுக்ராய நம
ஓம் காந்ததர்சிநே நம
ஓம் க்ருதாந்தகாய நம
ஓம் ஸ்துத்யாய நம
ஓம் ஸ்தோத்ரே நம
ஓம் ஸ்தோகாய நம
ஓம் ஸ்தோத்ராய நம
ஓம் த்ரயீமயாய நம
ஓம் வேதாய நம
ஓம் வேதாந்தக்ருதே நம
ஓம் வேத்யாய நம
ஓம் வித்யாம்புத்திதாயநம
ஓம் புதாய நம
ஓம் ஓங்காராயா நம
ஓம் ப்ரம்ஹவிதே நம
ஓம் ப்ராமஹணுப நம
ஓம் ப்ரம்ஹணே நம
ஓம் ப்ரம்ஹபராய நம (ங)
ஓம் பராய நம
ஓம் ஸர்வக்ஞாய நம
ஓம் ஸக்த்தயே நம
(௯0)ஓம் ஸர்வலோகவேத்யாய நம
ஓம் ஸர்வதாய நம
ஓம் சுபகாயநம
ஓம் அவ்யயாய நம
ஓம் சித்திவிநாயகாய நம (க0அ)

என்று அஷ்டோத்தர சததிவ்ய நாமபூசை செய்து,

தசாங்கம் குங்குளம் தூபமுத்தமம் கணநாயக, க்ருஹாணகண ராஜேந்த்ர விக்ன ஹாரின்னமோஸ்துதே, ஸ்ரீகணநாயகாயநம: தூபமாக்ராபயாமி - ஸர்வக்ஞசர்வலோகேச ஸர்வபூத ஹிதோரதா-க்ருஹாண மங்களம்தீபம் ருத்ரப்ரிய நமோஸ்துதே, ஸ்ரீ சர்வக்ஞாய நம: தீபம்தர்சயாமி நைவேத்யம் ஸட்ரஸோபேதம் பலலட்டுகசம்யுதம்-மோதகம்பரமான்யம்ச நமஸ்தே விக்னநாசனு-ஸ்ரீவிக்னநாசனுயநம: நைவேத்யம ஸமர்ப்பயாமி, தாம்பூலமுத்தமந் தேவக்ருஹாண சுரபூஜித கர்ப்பூர சூரணசம்ரக்தம் மயாதத்தமி தம்விபோ-ஸ்ரீ ருத்ரப்ரபாயநம: தாம்பூலம் சமர்ப்பயாமி, ஸதாந்தனவிக்னேசபுஷ்டலானிதனுநிச - பூம்யாஸ்திதானிபசவன், ஸ்வீகுருஷ்வ விநாயக ஸ்ரீவிக்னேசாயநம: ஸ்வர்ண புஷ்பம் சமர்ப்பயாமி.

என்றுதூபங் கொடுத்துத் தீபங்காட்டி நைவேத்தியஞ் செய்து, தாம்பூலமும்ஸ்வர்ண புட்பமுங் கொடுத்து.

விக்னராஜ நமஸ்துப்யம் - பாபக்ஞானபஞ்சன, புனக்யம் ப்ரதாஸ்யாமிக்ருஹாண சுரசத்தம் ஸ்ரீவிக்ன ராஜாயநம. புனர்க்யம் ஸமர்ப்பயாமி,

என்று அர்க்கியங்கொடுத்து,

ஓம் கணுதிபாய நம ... தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி.
ஓம் உமாபுத்ராய நம ... ,,
ஓம் அகநாசாய நம ... ,,

ஓம் விநாயகாய நம ... தூர்வாயுக்மம்ஸமர்ப்பயாமி.
ஓம் ஈஸ்வரபுத்ராய நம ... ,,
ஓம் விக்னராஜாய நம ... ,,
ஓம் ஏகதந்தாய நம ... ,,
ஓம் இபவக்திராய நம ... ,,
ஓம் ஆகுவாகனாய நம ... ,,
ஓம் குமாரகுருவே நம . ,,
ஓம் சுமுகாய நம .. ,,
ஓம் சுராக்கிரகண்யாய நம . . ,,
ஓம் ஸ்தூலகண்டாய நம ... ,,
ஓம் குகாக்ரசாய நம ... ,,
ஓம் லம்போதராய நம . ,,
ஓம் பின்னதந்தாய நம . ,,
ஓம் விசாலாக்ஷினே நம ... ,,
ஓம் காமரூபியே நம ... ,,
ஓம் பாலசந்த்ராய நம ... ,,
ஓம்சர்சித்திப்ரதாயகாயநம. . ஏகவிம்சதிதூர்வாயுக்மம்ஸமர்ப்பயா

என்று சந்தனத்திற் றோய்த்த இரண்டிரண்டு அறுகினால் இந்த இருபத்தொரு திருநாமங்களையுஞ் சொல்லி அருச்சித்து,

நமஸ்தே தேவதேவேச நமஸ்தே கணநாயக, நீராஞ்சனம் ப்ரயச்சாமி-ப்ரஸன்னோபவ மேப்ரபோ, ஸ்ரீ தேவ தேவாய நம:-நீராஞ்சனம் ஸமர்ப்பயாமி.

என்று ஆலத்தி சுத்தி

ஆகுவாகன தேவேச விஸ்வவ்யாபின்கஜானன-ப்ரதக்ஷிணாம் கரோமித்வாம்-மமத்வம் ஸந்நிதம்குரு ஸ்ரீ ஆகுவாஹனாய நம: ப்ரதக்ஷணம் சமர்ப்பயாமி.

என்று வலம் வந்து,

நமஸ்தே கஜவக்த்ராய நமஸ்தே கணநாயக-நமஸ்தேதேவதேவேசகௌரீபுத்ர நமோஸ்துதே, ஸ்ரீ கௌரீபுத்ராய நம: நமஸ்காரம் ஸமர்ப்பயாமி.

என்று தீர்க்கதண்டன் செய்து.

தேவதான வகோடீர-மணிரஞ்சித பாதக-க்ஷமஸ்வதேவதேவேசபுத்ராக்னீர்த்திஞ்சதேஹிமெ,ஸ்ரீகஜவக்த்ராயநம-ப்ராத்தனாம் ஸமர்ப்பயாமி.

என்று ப்ரார்த்தித்து.

க்ருதவர்த்தி ஸஹஸ்ரேஸ்ச-கர்ப்பூர சகலஸ்ததா - நீராஞ் சனம் மயாதத்தம் - க்ருஹாண வரதோபவ ॥ ஸ்ரீ கணபதயேநம - நீராஞ்சனம் ஸமர்ப்பயாமி.

என்றுஆலத்தி சுத்தி,

தேவதேவகணாத்யக்ஷ-சுராசுரவரார்சிதா - அவிக்னம் குருமே தேவ - ஸர்வகார்யேஸ்து ஸர்வதா-விநாயக நமஸ்தேஸ்து ஸத்தம மோது கப்ரிய-அவிக்னம்குருமேதேவ-ஸர்வகார்யேஸ்து ஸர்வதா.

என்று க்ஷமாபந்தனஞ்செய்து.

ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம்-சுபதிதௌ-ஸ்திரீ சித்தி விநாயகமுத்திஸ்ய-ஸ்திரீ சித்திவிநாயக ப்ரீத்யர்த்தம், ஸ்திரீசித்தி விநாயக பூஜாங்கோபா யனதானங் கரிஷ்யே.

என்று சங்கற்பங்கூறி, சந்தனபுஷ்பாக்ஷதைகளைக் கொண்டு ப்ராமணபூசைசெய்து,

கணேசா பரதிக் ருண்ஹாத் கணேசாவைத தானிகம்-கணே சஸ்தாரகோபாப்யாம்-கணேசாய நமோநம.

என்று வாயன தானஞ்செய்து, இவ்வாறுஎல்லாப் பூசனைகளை யுங் குறைவற நடாத்திய பின்னர் ஒருபக்கத்திலிருந்து விதிப்படி நியாயஞ்செய்து தியானதிகளைமுடித்துக்கொண்டு ஓர் மாதமளவும் ஊணுறக்கங்களை நீத்து, அநுட்டிப்பி னிற்றுநாளில் முன்போலவே எல்லாப்பூசனைகளையுநிறைவேற்றித் தருப்பண ஓமாதிகளைக் கிரமப் படி நடாத்தின.

சில சேடியர்கள் முத்து மாலைகளால் அலங்கரித் திருக்கின்ற பந்தலின்கீழ் கவரி-குடைமுதலியசின்னங்கள்விளங்கப்பலவிதவாத் தியவொலியோடு நெய்ப்பொங்கல்-சுத்தப் பொங்கல்-தயிர்ச்சோறு-பாற்சோறு-மிளகோதனம்-கடுகோதனம் - இலவங்கோதனம் - எள் ளோதனம்-சர்க்கரைப் பொங்கல்-முதலாகிய சித்திரான்னங்களும் உழுந்து, சீரகம், பெருங்காய முதலியவைகளைக் கூட்டிப் பாகப்ப டுத்தி யிருக்கின்ற பூசினிக்காய் குழம்பு, மற்றையகாய்கனி, பூண்டு, இலை, கிழங்கு இவைகளினால் வெவ்வேறாகச்செய்திருக்கின்ற குழம் புகளும், பலவித பொரிக்கறிகளும், பலவித துவட்டுக் கறிகளும், பலவித ஊறுகாய்களும், பலவித துவையல்களும், பலவிதவறையல் களும், பருப்பு-பிட்டு-மா-பொரி முதலாகிய பண்டங்களும், பலவித

சுண்டல்களும், வெல்லப் பச்சரியும், வறுத்த பருப்பும், சர்க்கரை, பயறு, எள்ளு, தேங்காய் முதலியவைகளோடு ஏலமுதலியவாசனை வஸ்துக்களையுங் கலந்து செய்திருக்கின்ற உண்டைகளும், வெவ்வேறு மோதகங்களும், அடை, முறுக்கு, பணிகாரம், அப்பம், தேன்குழல், பிட்டு, வடை, இலட்டுகம், தோசைமுதலிய சிற்றுண்டிகளும், மற்ற வுணவுகளும், வெள்ளரிக்காய் முதலிய காய்வருக்கங்களும், தெங்கின்கனி-பலாக்கனி-மாங்கனி வாழைக்கனிமுதலியகனிவர்க்கங்களும் தேன்-நெய்-பால்-தயிர்-மோர்-நீர்மோர்-முதலிய அமுதங்களும், இளநீர்-வெந்நீர்-தண்ணீர்-சர்க்கரைநீர்-கரும்புநீர்-பழநீர் முதலிய நீர் வகைகளும் ஆகிய இவைகளை யெல்லாம் வேறு வேறு தட்டுகள்-தாம்பாளங்கள்-கிண்ணங்கள் கரகங்கள்முதலியபலவகைப்பாத்திரங்களில் அமைத்துக் கொண்டுவர, அவைகளை யெல்லாம் மந்திர பூர்வகமாக நிவேதனஞ் செய்து நீர்விளாவிப் பாத்திய நீராதிகளையுந் தந்து, வாசனை திரவியங்கள் சேர்ந்த பாகடை நுகர்வித்து, அகில்-சந்தனம்-கருங்காலி-வில்வம்-அரிச்சுனம் என்கின்ற பஞ்ச தூபங்களைக் கொடுத்து, நட்சத்திரதீபம் குடதீப முதலிய பலதீபங்களைக்காட்டி, கண்ணாடி-குடை-சாமரை-கொடி - ஆலவட்டம்-விசிறிமுதலிய சின்னங்களை வழங்கி, கணநாதவா வென்னும் மனுவைச் சொல்லி மந்திர புட்பஞ்சாத்தி, ரியசாத மந்திரத்தால் கர்ப்பூர நீராஞ்சனஞ் சுழற்றி, வலம்வந்து, திருவடிகளில் வணங்கி, அன்னதானம்-வஸ்திரதானம் - கன்னிகாதானம்-கோதானம் - பூதானம்-இரணியதானம்-உபயமுகிதானம்-மகிஷதானம் அஸ்வதானம்-சுவேதஸ்வதானம்-காலதானம் - காளாமுகிதானம்-மகமேருதானம்-கற்பகவிருட்சதானம்-வித்தியாதானம்-மகாதானம் என்கின்ற சோடசதானங்களையும்வழங்கி, கணேச மூர்த்தியைத் தமது இதயகமலத்தி லிருத்தி பொன்னாற்செய்த மூர்த்தியையுங் கும்பத்தையும் பல திரவியங்களோடு புரோகிதருக்களித்து, பிருதிவி மூர்த்தியைப் பல மங்கலவாத்தியங்களோடு மெழுந்தருளச்செய்து, நதியிற் சலவாசமாக வைத்து, மீட்டுந்தமது அரண்மனையைச்சேர்ந்து, சுற்றத்தினரோடு மிருந்து போசனஞ்செய்து, விநாயக மூர்த்தியினுடைய பேரருளைக் கொண்டு சிவபெருமான் கங்கைக்கு முன்னர்த் தம்மை விவாகஞ்செய்து கொள்ளப் பெற்று தமது மனக் கவலைகளை யொழித்திருந்தனர். குறைவற்ற கிருபாநிதியாகிய விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தி விரத மகத்துவத்தை ஆன்மாக்கள் கேட்டுய்வாராக.

இச்சரித்திரத்தைச் சகலருங் கேட்டு மனமகிழும்படி பிரசங்கித்த புண்ணியசீலர்களும், இச்சரித்திர முழுவதும் ஆராய்ந்து ஆனந்த பரவசத்தராய்க் களித்த குண சம்பன்னரும், இதனைவழுவின்றி வாசித்து இதன்பயன்களைத் தெரிந்து மனப்பூரிப்புடனிருக்கின்ற மேன்மக்களும், இப்பூவுலகின் கணிருக்கின்ற பரியந்தம்இலக்குமியை யொத்த வனப்பும், அருந்ததியை நிகர்த்தகற்பும், பூமிதேவியை எதிர்த்த பொறுமையும் வாய்ந்த கன்னிகையை மணந்தின்புற்று நன்னெறிகளை யநுசரித்து, அரும் புதல்வர்களையும் பயந்து தனதானிய முதலிய செல்வங்களை யடைந்து, அந்திய காலத்தில் மோட்சமுங் கிடைக்கப்பெற்று, நீடூழி காலம் விநாயகமூர்த்தியினுடைய திருவடிநீழலிற் குடிகொண்டிருப்பார்கள்.

விநாயக சதுர்த்தி யநுட்டித்த படலமுற்றிற்று.

---

## கர்த்தமன்

## விநாயகசதுர்த்தி யநுட்டித்த படலம்.

துன்னலருங் குருமணியே சோம காந்தா விமய
மன்னவனார் மகளுற்ற மரபறிந்தா யவ்விரதந்
தன்னையா தரித்தோர்கள் தம்முளோ சிலர்தம்மைப்
பன்னுவாங் கேளென்று பகர்தருமாற் பிருகுமுனி. ௧

சோமகாந்தனே ! உமையம்மை விநாயக மூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தை யநுட்டித்துச் சிவபிரானைத் திருமணஞ்செய்தருளிய முறைமையைச்சொன்னோம் இப்பால்கர்த்தமராசன் அநுட்டித்ததிறத்தையுஞ் சொல்லுவோங்கேட்பாயாக. இப்பூவுலகமுழுவதும்ஒரே குடைநீழலிலிருத்தித் தனது ஆஞ்ஞாசக்கரத்தைத்திசையெங்கணு முருட்டிச் சத்துருக்களையெல்லாஞ் செயிக்கத்தக்க புசபல பராக்கிரமத்தோடு சகல சீவராசிகளுக்கும் ஒரு துன்பமும் நேராத வண்ணம் அரசாட்சியை நடாத்திவருகின்ற கர்த்தமனென்னும் ஓரரசனிருந்தான். அவ்வரசனிடத்தில் ஒருநாள் தவத்தின்மிகுத்த பிருகு மகாமுனிவ ரெழுந்தருளிவர அவரை யவ்வரசன் பெருமகிழ்ச்சியோ டெதிர் கொண்டு வரவழைத்து, ஆதனத்திருத்தி, அன்புடன் பூசித்து, கையுறைதந்து, விசிறிகொண்டுவியர்வையைமாற்றி, குளிர்ந்தவுபசார வார்த்தைகளைப்பேசி, இளைப்பாற்

றி, பின்னர் மிக்க முகமலர்ச்சியோடும் இதனைப்பேசுவானாயினான். எல்லாத் தேவர்களும் ஏவலுக் கெதிர் பார்த்திருக்கத் தக்க மகா பெருமையினையுடைய தவசிரேஷ்டரே! அடியேன் யாதொருவருத் தமுமின்றி இவ்வுலகமுழுமையும் எனதொரு குடையில் நிறுத்திப் பகைவர்கள் எல்லாரும் பகுதிதர வென்று அளவற்ற செல்வத்தை அனுபவிக்கின்றேனாதலால், இத்தன்மைத்தாகிய செல்வம் அடி யேற் குண்டானது எந்த எதுவினாலே? அதனைத்தெரியச்சொல்ல வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டான் அதனை அந்த வராஜ சிகாமணியாகிய பிருகுமுனிவர் கேட்டு அரசனே? நீ முற்ச னனத்தில் வைசியகுலத்திற்பிறந்திருந்தனை ஆயினும் அக்காலத்து நீ அதிகசெல்வத்தை யுடையவனாயிராததால உனது குலதருமங் களைக்கைவிட்டனை. அதனால் உனது சுற்றத்தாரெல்லாம் உன்னை வெறுத்துப் பலவாறு தூஷித்தார்கள். அந்தூஷண வார்த்தைகளை நீகேட்டமாத்திரத்தில் உனது இரு செவிகளுங் கைத்துக்கொடிய காட்டிலேனுஞ் சென்று உயிரை நீக்கிக்கொள்ளுவோமென் றெண் ணி மனம் வெறுத்து வீட்டைத் துறந்து காட்டிற் செல்கின்ற போது, அங்கோராச்சிரமத்தினைக் கண்டனை. அவ்வாச்சிரமத்தில் வேதாகம புராணங்களை வாசிக்கின்றவர்களும அவைகளைக் கேட் கின்றவர்களும், பலதவமாதிகளைச்செய்து முடிக்கின்றவர்களுமான அளவற்ற முனிபுங்கவர்கள் புடைசூழச் சவுபரிமகாமுனிவரெழுந் தருளி யிருப்பதைக்கண்டு அவரருகிற் சென்று அஷ்டாங்கமாகப் பணிந் தெழுந்து நின்றனை அக்கால் அம்முனிவர் உன்வதனத்தை நோக்கி நீமிக்க மனவருத்தத்துடன் இங்கு வந்த காரிய மென்ன வென்று வினவ, அதற்கு நீ சொன்னதாவது, சுவாமி? அடியேற்கு வறுமைநேர்ந்த காரணத்தால் சுற்றத்தின ரெல்லாம் வெறுத்தனர். அதற்கு மனஞ் சகியாதவனாகி, நமது உயிரைக் காட்டிற் சென்று கைவிடுவதே உத்தமமென் றெண்ணி வெளிக்கொண்டு வந்தேன். அவ்வாறு வந்த என்னை முற்பிறவியிற் செய்திருக்கின்றனது தவப் பயனானது தேவரீருடைய திவ்விய சமுகத்திற் கொண்டு வந்து விட்டது. இனிஅடியேற் கென்னகுறை யிருக்கின்றதென்று சொல் லலும், அவையனைத்தையுஞ் சவுபரிமுனிவர் கேட்டு மிகவு மிரக்க முற்று, உனக்குத் தீட்சைசெய்து விநாயகக் கடவுளுடைய மந்தி ரத்தை யுபதேசித்து, அதை அநுட்டிக்கும் முறைமையினையுஞ் சொன்னார். அதை நீ அவ்வாறே அநுட்டித்து வருங்காலத்தில், விநாயகசதுர்த்தி வந்தது. அத்தினத்தில் சதுர்த்தி விரதத்தை

உன்னுடன் கூடவிருந்து ஆகம விதிப்படி முடிப்பித்தார் பின்னர் அவ்விரதமநுட்டித்த மகிமையினாலே விநாயகக்கடவுளுக்குக் கிருபைசுரந்து உனதுவீடுமுழுவதும் பொன்மணிமுதலான சகலபொருள்களும் அளவற்ற செல்வங்களும் நிறையும்படியாகச்செய்தார்.

அதனைத்தவசிரேஷ்டராகியசவுபரிமுனிவர் தெரிந்துகொண்டு உனக்கறிவித்து நீ வீட்டிற்குச் செல்லும்படியாகக் கட்டளையிட்டனர் உடனே அவருடைய திருவடிகளை வணங்கிவந்தித்து விடைபெற்றுக்கொண்டு உனதுநகரத்திற்சேர்ந்து அளவற்ற பாக்கியங்களோடு நிறைந்துள்ள வீட்டினை யடைந்து முன்னர் வெறுத்த சுற்றத்தினரெல்லாம் எதிர்கொள்ளப் பெருமகிழ்ச்சியை யுடையவனாகி யளவளாவிய போகங்களை யனுபவித்திறந்தனை இச்சனனத்திலும் அவ்வாறே அனுபவிக்கின்றாய் இத்தனை ஐசுவரியமும் நினக்கு முன்னமே சகல சித்திகளையு மளித்தவை சதுர்த்தி விரதத்தின் மகிமையாதலால் அதனை எக்காலத்துங் கைவிடாது அநுட்டித்து வரக்கடவையென்று திருவாய் மலர்ந்து விடைபெற்றுத் தமது ஆச்சிரமத்தை யடைந்தனர் பின்னர் கர்த்தமராசன் அளவற்ற ஆனந்தத்தில் மூழ்கி வருடந்தோறும் அவ்விநாயக சதுர்த்தி விரதத்தை இடைவிடா தநுட்டித்துத் தனது புத்திரன் புயத்திற் பூபாரத்தைச்சுமத்திக் கணேசமூர்த்தியினுடைய கருணையால்எவர்க்குங் கிடைத்தற்கரிய பேரின்பமுத்தியை யடைந்தான்.

கர்த்தமன் விநாயக சதுர்த்தி யநுட்டித்த படலம்

முற்றிற்று.

---

## நளன்

# விநாயகசதுர்த்தியனுட்டித்தபடலம்.

அளிபரந் திசைகள் பாட வகமெகிழ்ந் தலர்க ளெல்லாங்
களிமதுப் பழையர் போலக் காலங்க டோறும் வாக்குந்
தளிரியல் சோலை சூழ்ந்து தங்கிய நிடத நாட்டில்
வளியதா மாட மேடை மாவிந்த நகராண் மன்னன்.

சோமகாந்தனே! விநாயகக்கடவுளுடையசதுர்த்திவிரதத்தைக் கர்த்தமராச னநுஷ்டித்து இம்மையிற் செல்வத்தையும் மறுமையில் முத்தியையுமடைந்த பேற்றினைச் சொன்னோம். இப்பால் நளராச

னுஷ்டித்த திறத்தை சொல்லுவோம் கேட்பாயாகவண்டினங்கள்
இசைபாடிமொய்க்கின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்த நிடதநாட்டில் நவ
ரத்தின சொர்னமயமா யிருக்கின்ற மாடமாளிகைகள் நிறைந்த
மாவிந்தநகரமென்னும் ஒருபட்டணமுண்டு. அப்பட்டணத்தில்தன்
னைக்கண்ட மாதர்களையெல்லாம் உடனே மன்மதபாணங்கட் கிரை
யாக்கத்தக்க பேரழகுடையவனாகியும், இரந்தோர்க் கிலையாத
ளிக்கின்ற * வள்ளலாகியும். அளகேசனை மருட்டும்படியானஐசுவரி
யத்தையுடையவனாகியும் எதிர்த்துவருகின்ற சத்துருக்களுக்கு இடி
யே றொத்தவனாகியும், தருமசாத்திரங்களில் ஆங்கிரசமுனிக் கொப்
பானவனாகியும், நளனென்னு மியற்பெயரையுடைய ஓரரசனிருந்
தான். அவ்வரசன் () பதுமவத்தனென்கின்ற அமைச்சனோடிருபு
யனைத்திலும் தனது செங்கோலைச் செலுத்திச் சகல உயிர்களையும்
பாதுகாத்துத் தமயந்தியென்னும மனைவியுடன் வாழ்ந்திருக்கின்ற
நாளையில் அவனிடத்தில வச்சிராயுதத்தை யேந்திய இந்திரனுக்கு
இமைப்போதில் ஆயிரங்கண்களைத்தந்த கௌதம முனிவ ரெழுந்த
ருளினர். அம்முனிவரை அவ்வரசன், எதிர்கொண்டழைத்துவந்து
ஓராதனத்திலிருத்தி பலவித உபசாரங்களுடன்பூசித்து அஷ்டாங்க
வந்தனஞ்செய்து, இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பிநின்று சுவாமீ
அடியேனுய்யுமாறு ஓர்விரதத்தைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருள
வேண்டுமென்று பிரார்த்தித்தலும், அம்முனிவர் கிருபை கூர்ந்து இ
தனைச்சொல்லுவா ராயினர்.

அரசனே நீ முற்சனனத்தில் கற்றவர்களால் புகழத்தக்க கவு
டதேசத்திற்கரசனாகிப்பலவின்பங்களையுங் குறைவின்றியனுபவித்து
அரசியற்றி வருங்காலத்திற் சத்துருக்களை யெல்லாஞ் செயித்து
அவர்கள்தேசங்களைக் கைவசமாக்கிக்கொள்ளு நிமித்தம்சகலசேனை
களோடும் வெளிக்கொண்டு செல்கின்றபோதுஓர்வனத்தின்வழியா
யிருக்கின்ற கௌசிப முனிவரையடைந்து தேவர்களெல்லாம்வண
ங்கத்தக்க அவரது திருவடிகளைப் பணிந்தெழுந்து பலவாறு துதித்
துநின்றனை. அம்முனிவர் கன்றைக்கண்ட பசுவைப்போல உன்மீது
கிருபாநோக்கஞ்செய்து தமது ஞானதிருஷ்டியினால் உனதுவரவை

* இவ்வரசன் முதல்வள்ள லெழுவருள் ஒருவன். அதனை, "மிக்கசெம்
பியனேகாரி விராடனே நிருதிதானுந், தக்கதுங் குமாரி தானுஞ்சகரனென்
றுந்தாமுன்,, 'என்றநிகண்டுச் செய்யுளானு மறிக.

() பதுமவத்தன்-தாமரை மலர்போன்ற கையையுடையவன்.

யறிந்துகொண்டு விரைவில் முத்தியளிக்கவல்ல விநாயகக் கடவுளுடைய சதுர்த்திவிரதத்தை உனக்குபதேசித்து, அதை ஆகம விதிப்படி அநுட்டிப்பித்தார், பின்னரம் முனிவரிடத்தில் விடைபெற்று உனதுநகரத்தையடைந்து சத்துருக்களை யெல்லாம் வென்று சகல தேசங்களையும் கைவசமாக்கி அளவற்ற சிறப்போடும் வாழ்ந்திருந்தனை. அந்தப்புண்ணிய பலத்தினல் இரசனைத்திலும் அளவற்ற போகங்களை யனுபவிக்கின்ருய். ஆதலால் பொற்கொன்றை சூடிய விநாயகக்கடவுளுடைய சதுர்ததிவிரதமே எல்லாவிரதத்தினுமேலான விரதமாகும். அவ்விரதத்தையே சதாகாலமு மநுட்டித்துவருவையென்றுசொல்லித தெய்வலோகத்திற் கொப்பான தமதாச்சிரமத்துக் கெழுந்தருளினர். பின்னர் நளமகாராசன் வருடந்தோறும் அவ்விரதத்தை யநுட்டித்து மெய்ஞ்ஞான சுகத்தை யடைந்து பரமானந்த வெள்ளத்தில் மூழ்கினன்.

நளன் விநாயக சதுர்த்தி யநுட்டித்த படலம்
முற்றிற்று.

---

சந்திராங்கதன்.

## விநாயகசதுர்த்தி யநுட்டித்தபடலம்.

மகரநீ ரோடை சூழ்ந்த மாளவ தேயர்தன்னி
னகரினுட் சிறந்தகன்ன நகரெனும் பட்டினத்து
ளிகல்கடந் திலகுவைவே லிறையவன் சந்திராங்க
னகமகிழ் சிறப்பவிந்து மதியொடு மமர்ந்து வாழ்நாள்.

அகங்கார மமகாரங்களாலாய பிறவிவேரை யறவெரியு முனிவர்களே, விநாயக மூர்த்தியினுடைய சதுர்த்தி விரதத்தை நளராசனநுட்டித்துச் சகலவேநதர்கட்குஞ் சகஸ்ரேஸ்வரனை திறத்தைச் சொன்னேம். இப்பால் சந்திராங்கதராசன் அநுட்டித்த திறத்தினைச்சொல்லுவோம் கேட்பீராக சகலவளப்பமும் பொருந்திய மாளவதேசத்தில் எல்லா நகரத்திலுஞ் சிறந்த கன்னநகரத்திற் சத்துருக்களை நாசஞ்செய்யத்தக்க வேலாயுதத்தைத் தாங்கிச் சகல வுயிர்கட்கும் இதயஞ்செய்து வருகின்ற சந்திராங்கத னென்னும் ஓரரசனிருந்தான் அவ்வரசனவன் இந்துமதி யென்கின்ற தனது மனைவியொடு அளவற்ற போகபாக்கியங்களை குறைவின்றியனுபவித்துவரு

நின்றநாளையில், ஒருநாள் அவ்வரசனை மந்திரித்தலைவர்கள் வணங்கி மண்டலேஸ்வரா காட்டில் மிருகங்கள் மிருத்திருக்கின்றதால்வேட் டைபாடுவதற் கெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய் தார்கள். வேந்தர்க்கு வேட்டையாட விதித்திருக்கின்ற வேதமுறை மைப்படி தானதற்கிசைந்தெழுந்து, மள்ளர்கள் முதலான சேனைக ளோடுமலைச்சாரலகளிலுள்ள வனங்களிற் புகுந்து, புலி-மான்-காட் டெருமை-கரடி-பன்றி-காட்டானை-முட்பன்றிமுதலான மிரு கங்களையெல்லாம் கொலைமுகத்தி னிராநின்ற யமனைப்போலச் சா டிக்கொண் டிருக்கின்ற சமயத்தில சில இராக்கதர்கள் வந்து அவனை யெதிர்க்க, அவர்களுடைய தாள்களையுந் தோள்களை யுங் கண்டதுண்டமாகச் சேதித்து நிலத்தி லுதிர வெள்ளமோ டும்படியாகச் செய்தான். இவ்வாறு அரசன் அரக்கராவியை யுண்ட செய்தியை ஓரரக்கிகேள்விப்பட்டு வந்து அரசனை யெதிர்த் துப் போர்செய்து அவன்கரத்தைப் பற்றுமாறு நெருங்கி வரு தலும், அரசன் வலியிழந்து அவ்வனத்தி லிருக்கின்ற ஓர் மடுவிற் பாய்ந்தான். அம்மடுவில் ஸ்நானஞ்செய்ய வந்திருந்த நாகலோக ஸ்திரீகள் அவ்வரசனைக் கண்டவுடன் இன்று நமக்குப் பெருஞ் செல்வம வந்ததென்று மனங்களித்து அவனை யழைத்துக்கொண்டு தங்க ளுலகத்தைச் சேர்ந்து ஆடையாபரண முதலான வைகளைக் கொடுத்து இனிய அமுதங்களை யூட்டித் தம்மைப் புணர்ந்து இன் புற்றிருக்குமாறு அவனை வேண்டினார்கள். அதற்கவன்சம்மதியாது நான் ஏமகந்தராசனுடைய புத்திரன் எனது சுயஸ்திரீயையன்றிப் பரஸ்திரீகளை யான் கவனிக்கின்ற தில்லையெனறு மறுத்து விட் டான். இவ்வாறு அரசன் மறுத்துரைத்தும் அந் நாகலோகஸதிரீ கள் அவன் மீது வைத்த ஆசையை வெறுக்காதவர்களாய் அவனை எவ்விதத்தேனுந் தங்கள் வசமாக்கத்தக்க இனிமைகளைப் பலவாறு காட்டிச் சற்றுங் கோபியாமல் அவ்விடத்திற்றானே நிறுத்தி, அள வற்ற வுபசாரங்களைச் செய்து கொண்டிருந்தார்கள். இப்பால் அவ் வரசனோடு வேட்டைக்குவந்த பரிசனங்களெல்லாந் தங்கள் நாய கனை எங்குந் தேடிக் காணாமல் மடுவில் வீழ்ந் திறந்தானென்றுநிச் சயித்து அவன்மனைவியாகிய இந்துமதிக்குச் சொல்ல, அவளது னைக்கேட்டலும் விடந் தலைக்கேறின வளைப்போல மிகுந்ததுயர முற்று, மார்பி லணிந்திருக்கின்ற முத்தாரங்க ளெல்லாஞ் சிதறும் படியாகச் சோர்ந்து வீழ்ந்து வேறொரு தேறுதல் காணாமல் கரை யில்லாத துக்கக்கடலில் மூழ்கிமங்கிலிய விர்ச்சனஞ் செய்து.

ய்யத்தக்க கருமாதிகளையுஞ் செய்து முடித்துமிக்க கவலையுற்றிருக்கின்ற நாளையில், பன்னிரண்டு வருடஞ் சென்றபின்பு திரிலோகசஞ்சரியாகிய நாரதமுனிவ ரங்கெழுந்தருள அவரை அவ்விந்துமதி கண்டு சாஷ்டாங்க வந்தனஞ் செய்து எதிர் நின்றனள்.

நாரத முனிவர் அவளைப்பார்த்து வனிதாரத்தினமே உன்னை வருத்துகின்ற மனக்கிலேசத்தை யொழித்துவிடு. மன்மதனை வெல்லத்தக்க பேரழகினை வாய்ந்த உன்கணவன் நாகலோகத்தி லிருக்கின்றான். அவனவ்விடத்தையகன்று விரைவில் இங்ஙனம் வருவதற்கு ஒருபாயமுண்டு. அஃது சந்திரசடாதர மூர்த்தியாகிய விநாயகக்கடவுளின் சதுர்த்தி விரதமேயாம். அவ் விரதத்தை யன்போடு நடாத்தக்கடவை யென்றுசொல்லி அதனையநுட்டிக்கு முறைமையுந் தெரிவித்து ஏகாக்ஷர மந்திரத்தை யுபதேசஞ்செய்து எழுந்தருளினர். அத்தினமே தன்துணைவன் புயங்களைச்சேரப் பெற்றவள்போல மனங்களித்து ஆனந்தமாகிச சதுர்த்திவரவை எதிர்நோக்கியிருந்தனள். பின்னர் அதுவருதவுடன் அவ்விரதத்தை ஆகம விதிப்படி அநுஷ்டித்தாள். உடனே கணேச மூர்த்திக்குக் கிருபையுண்டாக, அக்கிருபையினால் நாகலோகவ நிரீகளுக்கு மனமிரங்கிக் கற்பின் மகளிரை யொத்தூர சற்றேனு மனங்கலையா திருந்த சந்திராங்கத ராசனைக் குதிரையின்மீதேற்றி ஆபரணமுதலிய அளவற்ற திரவியங்களைத் தந்துமுன்னர்த் தாங்க ளண்டழைத்துவந்த மடுக்கரையிற் கொண்டுவந்து விடுத்துத் தாங்களா அவன்மீது வைத்திருந்த பல நாள் இச்சையை களையும் ஒருநாளி லொழித்து, மீட்டுந் தங்களுலகத்திற்குச் சென்றார்கள் இப்பால்அரசன் குதிரைமீதேறி வருகின்ற சேதியை நகரததாறறிந்து அமைச்சர்களுக கறிவிக்க, அவ்வமைச்சர்கள் பொருக்கென் றெழுந்து எதிர் கொண்டோடித் தங்க ளரசனைக்கண்டு முத்தியின்பத்தை யடைந்தவர் களைப்போல ஆனந்தமாகி அலங்காரஞ் செய்த பட்டத்து யானையைக் கொண்டுவந்து நிறுத்தினார்கள் பின்னர் அரசனவன் மேகவாகனனாகிய தேவேந்திரனைப்போல் அளவற்ற மகிழ்ச்சி யடைந்துஅந்தயானைமீதாரோகணித்து நகரத்தை வலமாகவந்து தனது அரண்மனையைச் சேர்ந்து நவரத்தின மயமாயிராநின்ற சிங்காதனத்தில் வீற்றிருந்து புரோகிதர் முதலியபெரியோர்கள் கூவித் தலைவனைப்பிரிந்த ஸ்திரீகளும்,ஸ்திரீகளைப்பிரிந்ததலைவனும் பின்னரொன்று படுங்காலத்தில் நடத்தவேண்டிய விதிக ளென்னென்று வினவ, அவ் வேதியர் வேதாகமங்களையாராய்ந் துணர்ந்து அறிவிக்க, அவ்வாறே சகல சட

ங்குகளையு நிறைவேற்றி, ஆடையா பரணாதிகளைத் தானஞ் செய்து தன் மனைவியோடும் இன்புற்று வாழ்ந்திருந்தான். பின்னர் இந்துமதியானவள் மணவறையிற் றன்பு நடனோடு கலந்திருக்கின்ற சமயத்தில்முன்னர் தன்னிடத்தில் நாரதமுனிவரெழுந்தருளி அரசன் க்ஷேமத்தையரிவித்ததும், அவனை மீட்டுமடையுமாறு கணேசமூர்த்தியி னுடைய சதுர்த்தி விரதத்தை யுபதேசித்ததும், அவ்வாறே அவ்விரதத்தைத் தானனுட்டித்ததும் விவரமாகச்சொல்ல அவைகளனைத்தையுஞ் சந்திராங்கதராசன் கேட்டு மிக்க மனக்களிப் படைந்து விநாயக மூர்த்தியைப் பலவாறு துதித்து அவரது சதுர்த்தி விரதத்தைத் தன் மனைவியோடும் இடைவிடாது அநுட்டித்து அந்தத்தில் பேரின்பவீடடைந்து ஆனந்தசாகரத்தில் மூழ்கினான்.

சந்திராங்கதன் விநாயக சதுர்த்திய நுட்டித்த படலம்.

முற்றிற்று.

## சண்முகரனுட்டித்தபடலம்.

நீருக ளுங்கய லோவெனும் வாட்கண் ணெடுங் கூந்தல்
வாருக வீங்கு தனத்துமை மாதும ணாளபாற்
சேருக நூற்றிரெ ணெட்டர சாளுந் திறனுற்றான்
றாருக னென்றொரு தானவன் முன்பு தழைத்துள்ளான்

முனிவர்களே விநாயக மூர்த்தியினுடைய சதுர்த்தி விரதத்தால் சந்திராங்கத ராசன் தானிழந்த நகரத்தினை மீட்டும் அடையப் பெற்று முடிவில் முத்தியடைந்த வரலாற்றினைச் சொன்னோம். இப்பால்சண்முகதேவர் அநுட்டித்ததிறத்தினைச் சொல்லுவோங்கேட்பீராக. முன்னொருகாலத்தில் உமா பரமேஸ்வரி மணாளராகியசிவபெருமானிடத்தில் நூற்றெட்டு யுகம்வரையில் அரசாளுந்திறத்தைப்பெற்ற தாருகாசுரனென்னும் ஒர்அசுரனிருந்தான். அவ்வசுரனானவன் தேவேந்திரன் ஆயிரத்தெட் டண்டங்களையும் ஆண்டு வருவதை நோக்கிமனஞ்சகியாது அவைக ளனைத்தையுந் தன்னொரு குடைநீழலின்கீழிருத்தித்தேவர்களையெல்லாம்வெளிவிடாமற்சிறையில்வைத்து துன்பப்படுத்தினான். அச்சிறையி லகப்படாமல் இந்திரன், பிரமன், விண்டுமுதலிய சிலதேவர்கள மாத்திரம் அப்பாதகன் விழிக்குத் தப்பி மகமேருகிரியைச் சார்ந்துவெல்லை

யானையுரி போர்த்தருளிய சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித் திருந்தார்கள். அப்போது அக்கடவுளுடையகிருபையினால், விண்டு வாதியரே நீங்கள் தேவர்கட்குவந்த இடுக்கண்களை நீக்கக் கருது வீராயின் சிவபெருமான் சுப்பிரமணிய தேவரைத் தருவதான ஏதுக்கள் யாதோ அதனை யறிந்து, விரைவில் முயலக் கடவீர்கள். என்று ஆகாயத்தில் ஒரு தெய்வ வாக்குண்டாயது அத்திருவாக் கை யவர்கள் செவிகுளிரக் கேட்டு ஆனந்தங்கொண்டு வெள்ளியங் கிரியையடைந்து சிவபெருமானைத்தரிசிக்கச் செல்லுகையில் சிவ பெருமான் சந்நிதானத்தி லிராததை நோக்கி மிக்க ஏக்கங்கொண்டு துன்புற்று வாடினார்கள். அச்சமயத்தில் அவர்கள் மனத்தளர்ச்சி நீங்குமாறு பார்வதி தேவியார் எதிரே வர உடனே அத்தேவர்க ளெல்லாம் ஆனந்தக் களிப்படைந்து சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, துதிப்பாராயினர்.

ஆரணி காரணி பூரணி நாரணியரனார்தஞ்
சீரணி தாரணி நாயகி தீயோன் சிலர்தம்மை
யோரணு வுங்கழ லாதசி றைக்க ணுறுவித்தான்
றூரணி மீதுறும் யாங்கள் கரந்தே தளர்கின்றேம்.
எங்க ளிடும்பையை முற்று மகற்றி யெமைவிண்மேற்
றங்கவி ருத்துத லின்கட னுருந் தளர்சேய்க்குப்
பொங்கரு டாயே யல்லது வேறும் புகலுண்டோ
நங்கையி ரங்கா யென்றுப ணிந்து நவின்றேமால்.

சகலபுவனேஸ்வரியே தத்துவகாரணியே சதுர்வேதநாயகியே அவுணபாதகனாகிய தாருகனனவன் தேவர்களை யெல்லாம்பிடித்து அணுவளவேனும் அப்பால் அகலக்கூடாத சிறையில் வைத்து வரு த்துகின்றனன். அடியேங்கள் மாத்திரம் அக்கொடியவன் விழிக ளில் அகப்படாதவண்ணம் இப்பூலோகத்தி லொளித்துக் காலங் கழிக்கின்றேம். தாயே யாங்கள் படுகின்ற துன்பங்களை நீக்கிவிண் குடியேற்றுவித்தல்உமது கடமையாகும். தளர்வுற்றபிள்ளைகட்குத் தாயையன்றிவேறென்ன கதியிருக்கின்றது. என்றுபலமுறைபிரார் த்தித்தார்கள்.இவையனைத்தையும்உமாதேவிகேட்டுக்கிருபைசுரந்து தேவர்களே இக்கைலாய பர்வதத்தைச்சூழ்ந்த நான்குபர்வதத்தில் மதகிரியினிடத்தில் விஷ்ணுவுக்கும் புடபகிரியினிடத்தில் பிரமனுக் கும், சந்தானகிரியினிடத்தில் தேவர்களுக்கும் முற்காலத்திற் சிவ பெருமான் யோகத்திலிருந்து தத்துவஞானத்தையுபதேசஞ் செய்

திருளியதுபோலவே இக்காலத்திற் கோளகிரியி லெழுந்தருளி முனிவர்களுக்கு உபதேசிக்கின்றனர். ஆதலால் நீங்களனைவரும் அவ்விடத்திற்சென்று உங்கள் கவலைகளை யொழிக்கக் கடவீர்க ளென்று திருவாய்மலர்ந்து சென்றனள். அவ்வாறே விண்டுவாதி தேவர்கள் அக்கோளகிரி யருகிற்சென்று சிவபெருமான் யோகத்தை நீங்குமாறு ஓ ராலோசனைசெய்து மன்மதனையழைத்து இதனைச் சொல்லுவாராயினர். அனங்கனே உனது பெருமைகளைப் பேசுவதற்கு யாவராலாகும். கருப்பு வில்லைக் கொண்டு திரிலோகங்களையும் வென்று உனது கீர்த்தியை எங்கும் நாட்டி யிருக்கின்றனை. ஆதலால் எங்களுக்குநேர்ந்த மனவருத்தங்களைப் போக்குவது உனக்குப்பெரிதல்ல யாங்கள் தாருகாசுரனால் மிகவுங்கலக்கப் படுகின்றனம் அதை நீக்கும்பொருட்டு நீதயைசெய்து அக்கோளகிரியில் மோனத்திலிருக்கின்ற பரமசிவத்தின்மீது உன் பாணங்களைச் செலுத்தி விரகமுண்டாக்கி அவர் உமாதேவியோடுங் கூடச் செய்வையாயின் யாங்களனைவருஞ் சிலகாலஞ் சவுக்கியத்தி லிருப்போ மென்று சொல்லலும், இவையனைத்தையும் மன்மதன்கேட்டு நடுநடுங்கி ஒருகாலத்திலுந் தீரவரிதாய பாதகங்களுக் கேதுவாகிய வார்த்தைகளைக்கேட்கவுமாச்சுதே ஈதென்ன அநியாய மென் றேசித்து அத்தேவர்களாணையைக் கடக்கக்கூடாமல் தன்படை வீடாகிய வனசம் சூதம், அசோகு, முல்லை, நீலம், என்கின்ற பஞ்சபுட்பச்சோலையினிற் புகுந்து உன்மத்தம், மதனம், சம்மோகம், சந்தாபம், வசிகரணம்என்கின்ற () பஞ்ச பாணங்களையும் அம்புபெய் குதையினிரப்பி முதுகிலிறுக்கி நீங்காரத் தொனிகளை விளைக்கும் வண்டுகளை நாரியாகவுடைய கருப்புவில்லைச் சேவித்தெடுத்து புயத்தில்மாட்டிக் கொண்டு தங்கத் தகட்டினைப்போலப் பிரகாசிக்கின்ற தாழம்பூவாகியவாளினை இடையிற்சொருகி மகிழம்பூமாலையைத்தரித்து கிரீடம், குண்டலம் வாகுவலயம், மதாணிப் பதக்கமுதலான ஆபரணங்களை யணிந்து, கிளிப் பரிபூண்ட தென்றற்றேரின்மீது ஆரோகணித்து, சமுத்திரமாகிய செயபேரிகைமுழங்கவும். குயின்முழக்காகிய காளமூதவும் கழுகம்பாளைகளாகிய வெண்சாமரைகள் வீசவும், கங்குலாகிய யா

() அவை செய்யு மவத்தை; சுப்பிரயோகம், விப்பிர யோகம், சோகம், மோகம் மரணம், அவையாவன; சுப்பிரயோகம்-சொல்லும் நினைவும், விப்பிரயோகம்-வெய்துயிர்த் திரங்கலும, சோகம்-வெதுப்புந் துய்ப்பன தெவிட்டலும், மோகம் - அழுங்கலும் மொழிபல பிதற்றலும், மரணம் - அயர்ப்பும் மயக்கமும்;

னைக்கூட்டங்கள் நெருங்கவும் மங்கையராகிய சேனைகள் புடைசூழவும். மீன கேதனம் படபடென்றசையவும் வெண்மதியாகியகுடை நிழற்றவும் இவ்வித ஆடம்பரங்களுடன் கோளகிரியை யடைந்துப் புலியினையெழுப்பச்சொல்லும் மானைப்போல சிவபெருமான் யெதிரிற்சென்று தனது கரத்தில் வில்லையெடுத்து நாணேறிட்டுப் பஞ்ச புட்பபாணங்களையும், அதிற்பூட்டிக் கர்த்தன் இதய கமலத்திற்கு நேராகக் குறிபார்த்துப் பிரயோகித்தான். அவைகள அதிகவேகமாகச்சென்று சிவபெருமான் திருமேனியிற் றுக்கிய மாத்திரத்தில் தமது அனல் விழியினைச் சிறிது திறந்து மன்மதனைப் பார்த்தனர். உடனே அவ்வழியினின்றும் பெருகிய ஈவாலையால் மன்மதன் உடலங்கரிந்து எரிந்து சாம்பராயிற்று.

இவ்வற்புதத்தை உமாதேவி நோக்கிக் கர்த்தன் அருகில்வந்து அஷ்டாங்க வந்தனமுஞ்செய்து அவர் கோபந் தணியும் படியாகக் குளிர்ந்த வசனங்களைக்கொண்டு ஈவாமீ சற்றேனு மிரக்க மில்லாத தாருகனனவன் யெமனும் அஞ்சத்தக்கதாக வியற்றுங்கொடுமைக்குத் தேவர்களெல்லாம் அஞ்சித் தங்கடங்கள் பதவிகளைத் துறந்து இதுகாறும் மேருவரைச் சாரலி லொளித்திருந்து, இப்போது சகலசிவராசிகளுடைய அகங்காரங்களையழிக்கவல்ல தேவரீர் திவ்விய சரணாரவிந்தங்களையே தஞ்சமாக இங்குவந்தடைந் திருக்கின்றனர். அவர்கள் ஈவாமிகளுடைய ஞானத்தைப் பெறுதமடமைத் தன்மையினல் தேவரீரையும் எங்களைப்போலக் கருதி புட்பபாணங்களைப் பிரயோகிக்கும்படியாக மன்மதனை யேவினூர்கள். அவனுந்தேவரீர் நுதல்விழிக்கு இரையாயினன். இனித் தேவரீர் அத்தணலைத்தணித்து இங்ஙனஞ்சரண்புகுந் திருக்கின்ற தேவர்கட்குத் திருவருள்பாலிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, கர்த்தன்கருணைகூர்ந்து தமது நுதற்கட்டீயைத் தணிவித்து யோகத்தை யொழித்துக்கோளகிரியையகன்று கைலாய வரையைச் சேர்ந்து உமாதேவியோடும் அந்தப்புரத்திற் சென்று [] தேவவருடத்தில் அறுபதினயிரவருடங் கலவியிலிருந்தனர். இப்பால் விண்டுவாதிதேவர்கள் மனம் வருந்திச் சிவபெருமான் எக்காலத்து சுப்பிரமணியக்கடவுளைத்தந்து நமது துன்பங்களை யொழித்தருளுவரோவென்று கலங்கிமீட்டும் அக்கினி தேவர்களை யேவினூர்கள். அவன்துறவியைப்போலவேடங்கொண்டு

---

[] தக்ஷணாயனமே தேவர்களுக்கு இரவும், உத்தராயணமே பகலும், இத்தினாராத்திரி கூடியது ஒருதினமுமாம். அத்தினம் முந்நூற்றறுபது கூடினது ஒரு தேவவருஷமாம்.

கைலாயவரையிற்சென்று கர்த்தனெழுந்தருளி யிருக்கின்ற சந்நிதானத்தின் புறம்பினின்று சகல சீவராசிகளையும் படைத்தளித்து அழிக்கவல்ல ஜகதீஸ்வரியே அடியேற்குப் பிச்சைதந்தருளவேண்டுமென்று மூன்றுதரங்கூவினன். அதனை எனது அப்பனும் அன்னையுங்கேட்டுவந்தவன் அக்கினிதேவனென்றறிந்துக்கொண்டுகல்வியை விட்டுநீங்கினார்கள். உடனே உமாதேவி சிவபிரானைப்பார்த்து சுவாமீ தேவர்கள் துன்பத்தினின்று நீங்குமாறு கிருபைபுரிய வேண்டுமென்றுபிரார்த்தித்தலும் கர்த்தன் தமதுவீரியத்தைப் பரமேஸ்வரி கரத்திற்பெய்ய அதனை உமைதன்னை கையேற்று அக்கினிதேவனருகில் வந்து உங்கட்குக் கிடைத்தபாக்கிய மிதுவாகும். இதனை உனதுவயிற்றிற்பூரிக்கக்கடவை. சிறிதேனும் நிலத்திற் சிந்துமாயின் திரிபுவனங்களையும் பொடியாக்கி விடுமென்று திருவாய் மலர்ந்து அவன் கரத்திற்கொடுக்க அவனும் அவ்வாறே சாக்கிரதையோடும்வாங்கிப் புசித்துவிட்டனன். இப்பால் ஒப்பற்ற பரமேஸ்வரருடைய வீரியமானது அக்கினிதேவனுடைய வயிற்றிற் றங்கியமாத்திரத்தில்பொல்லாத வெப்பமுண்டாக அவ் வெப்பத்தை அவனாற்ற மாட்டாது இமயகிரிச் சாரலுக்கோடி அங்கிருக்கின்றகங்கையாற்றில் சரவணப்புற்கள் வளர்ந்து மூடப்பட்டிருக்கின்ற ஒருபொய்கையில் அவ்வீரியத்தை விடுத்தனன். பின்னர் அவ்வீரியமானதுகுழந்தையாக அதற்கு நட்சத்திர ஸ்திரீகள் பால்கொடுத்து வளர்த்து வந்தனர்.

இவ்வாறு கர்த்தன் வீரியமானது சரவணப்பொய்கையில் குழந்தையாகி வளர்ந்துவருவதை மகாவிஷ்ணுகண்டுகைலாயவரையிறசென்று சிவபெருமான் சந்நிதானத்தை யடைந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து சுவாமீ தேவரீர் கிருபை கூர்ந்தருளிய குமாரதேவர் சரவணப் பொய்கையி லெழுந்தருளி யிருக்கக்கண்டேன் என்றுசொல்லலும் அதனைக் கேட்ட பார்வதியார் கர்த்தன் திருவடிகளைப் பணிந்து விடைபெற்று விண்டு பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் அதிதீவிரமாக வந்து பாரிசாதபுட்பங்களை வாரிவாரி இறைத்துச் சுபங்களைக் கொண்டாடிக்கொண்டு பின்பற்றிவாவும்.ஜயபேரி வெற்றிமுரசமுதலிய மங்கல வாத்தியங்களைப் பூதவீரர்கள் அதிகவோசையெழ முழக்கிக்கொண்டு போகவும் இவ்விதமான ஆடம்பரங்களோடு அச் சரவணப்பொய்கைக்குச் சென்று குமாரதேவரைத் தமதுகரங்களாற் றழுவி யெடுத்துவந்து கொங்கைகளிற் சுரந்தபாலையூட்டிச் சிவபெருமானது திருக்கரத்திற் கொடுக்க உட

னே சிவபெருமான் மனங்களித்துவெட்கிப் பூநிறத்தையொத்தசிறந்த திருமேனியையுடைய அக்குமாரதேவரை அன்போடுவாங்கி உச்சிமோந்து உள்ளம்பூரித்து அளவளாவிய அன்போடும் ஆதரித்து வந்தனர். இப்பால் பாலசுப்பிரமணிய மூர்த்தியானவர் தந்தையாகிய சிவபெருமானால் கார்த்திகைத் திங்களினுற்பவித்ததினால்கார்த்திகேயனென்றும் நக்ஷத்திரஸ்திரீகள்பால்கொடுத்துவளர்த்ததினால் அறுமீன் காதலன் என்றும், விசாக நக்ஷத்திரத்திற் பிறந்தமையால் விசாகனென்றும், அக்கினிதேவனுதரத்திற் றங்கியிருந்தமையால் பாவகியென்றும், சங்கரியினது கரத்திலும் அக்கினிதேவன்வயிற்றினுங் கங்கையினுங் தங்கியிருந்ததன்றி, அக்கங்கையையுமிஞ்சி மீளவும் விட்டமையால் கந்தனென்றும ஆறுமுகத்தை யுடையவர் ஆதலால் சண்முகனென்றும, சகல நக்ஷத்திர சுவாமியா யிருக்கின்ற சிவபெருமானுக்கு நாதரா யிருந்தமையால் சுவாமிநாதனென்றும், தேவர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றுதற்குச் சேனாதிபதியா யிருத்தலினாற் றேவசேனாதிபதியென்றும மாசேனனென்றும், ஞானசத்தியாகிய வேலாயுதத்தைத் தாங்கியிருக்கின்றமையால் ஞானசத்திதரனென்றும், அசுரர்குலத்தை வேரோடுங் களைய வல்லராதலால் அசுரர்குல காலனென்றும,மயில்வாகன முடையவராதலால் மயூரேசனென்றும், சேவற்கொடியை யுடையவராதலால் சேவற்கொடியோனென்றும், சகல ஆன்மாக்களின் உள்ளத்திலும், மலைமுழைகளினும், வாசஞ்செய்கின்றதாலகுகனென்றும். கட்டிளமைமாறாதிருத்தலினால். முருகனென்றும், தமக்கு அருமைப்புத்திரராதலாற் குமரனென்றும், சேயென்றும், நாமகரணஞ் செய்யப்பெற்றுத் திரிலோகங்களும் உய்யும்படித் திருவிளையாடல் செய்திருந்தனர்.

இக்காரணத்தை திருமான்முதலிய தேவர்களறிந்து விரைவில் சண்முகக்கடவுளை யடைந்து, தங்கள் மகுடங்களெல்லாம் அவரது திருவடிகளிற் பொருந்தும்படியாகப் பணிந்தெழுந்து ஐயனே அவுணபாதகனாகிய தாருகனுடைய வலிமையையும் அடியேங்களடைந்திருக்கின்ற எளிமையையும்நீக்கி வையகமுழுதும் உய்யும்படியாகக் கிருபைபுரிய வேண்டுமென்று இரந்து பிரார்த்தித்து அபிஷேகமுதலிய ஆராதனைகளை நடத்தினார்கள். இவ்வாறு பிரார்த்தித்த விண்ணோராதி தேவர்களை எமது சண்முகப்பெருமான் நோக்கி இனியகிருபாவசனங்களால் அவ்வவர்கட்குத் தக்க ஆதரவுகளைச் சொல்லிப் பலதிருவிளையாடல்களைச் செய்துவருங்காலத்தில் கிருஷ்ணா நதிக்கு

வடபாரிசத்திலிருக்கின்ற ஓர்வனத்திற்சென்று கணேசமூர்த்தியை மனதிற்றியானித்து அவரது சடாக்ஷரமந்திரத்தைச் செபஞ்செய்துகொண்டிருந்தனர். அவ்வாறு சிலநாள் கழிந்தபின்னர், அண்ணலாராகிய விநாயகமூர்த்திக்கு அருள்சுரந்து, அவரெதிரிற் பிரத்தியட்சமாகத்தோன்றிப் பலவரங்களோடு, தாமேறி நடாத்துகின்ற மயில்வாகனத்தையுந்தந்து உனக்கு மயூரேசனென்னும் பெயருண்டாகுகவென்று திருவாய்மலர்ந்து, தமதுதேவகணங்களோடு மாகாயவெளியிற்கரந்தருளினர். பின்னர், முருகக்கடவுளானவர் தமக்கெதிரிற் றரிசனந்தந்தவிடத்தில் விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தைப் பிரதிட்டைசெய்து இலட்சம் அறுகுகளையும், புட்பங்களையுங் கொண்டர்ச்சித்து மோதக முதலியவைகளை நிவேதனஞ்செய்து, சகலவிலக்கினங்களோடும் பூசித்து அவ்விநாயகமூர்த்திக்கு இலக்க விநாயகரென்று திருநாமந்தரித்து, மீட்டுங்கைலாயவரையைச்சேர்ந்து தமது தந்தையாகிய சிவபெருமானைப்பணிந்து, அவர்பேரருளைப்பெற்று, வேலாயுதமுதலிய ஆயுதங்களையேந்தி தேவர்களெல்லாம் புடைசூழும்படியாக மயில்வாகனத்தின்மீதாரோகணித்து எதிர்த்துவந்த தாருகாசுரனுடைய ஆவியை யெளிதிலுண்டு சகலலோகங்கட்கும் ஓரிடையூறும் நெருங்காதவண்ணம் பாதுகாத்தருளினர், சண்முகதேவரால் பிரதிட்டைசெய்த இலக்க விநாயகரை ஆராதிக்கின்றவர்களுக்குச் சகலவிடர்களுந் துன்பங்களும்பகைகளு நீங்கி, அவ்வவர்கள் இட்டசித்திகளெல்லாம் ஒன்று இலட்சமாகிவளரும். இலக்கவிநாயக ரெழுந்தருளிய அந்தத்தலமானது மயூரேசமென்னும் பெயரினை வழங்கி வருகின்றது

சண்முக ரனுட்டித்தபடல முற்றிற்று.

# மன்மத னுருவம்பெற்ற படலம்.

அரத்தக மணிந்த பாதத் தணங்குமை பாகா கண
சரத்தினிற் சிறந்தமாரன் றவளநீறான பின்னர்ப்
பரத்தினிற் றணந்த வாவிப் பண்பென விரதிமாழ்கி
வரத்தினிற் சிறந்த வெண்டோள் வள்ளலைச் சரணஞ் சார்ந்தாள்

முனிவர்களே விநாயகமூர்த்தியை சண்முகக்கடவுளுபாசித்துத் தாருகாசுரனைவென்ற திறத்தினைச் சொன்னோம். இப்பால் மன்ம

தன் உருவம்பெற்ற வரலாற்றினைச் சொல்லுகின்றோம் கேட்பீர்களாக, பார்ப்பதிபாகராகிய சிவபெருமானது நெற்றிவிழியினால்முன்னர் மன்மதன் நீறாகிவிடவும், இரதிதேவியானவள் உடலினின்று நீங்கிய உயிர்போன்றவளாய்ப் பதைபதைத்து, தேகமாதியந்தமும் வெயர்த்து பூமியில் விழுந்து புரண்டு, புரண்டு, அலறியலறி தாமரைவாசியாகிய மகாலட்சுமியினது மனதுக்கினிய மகனே அடியாள் பிராணனுக்குப் பிராணனைப்போன்ற இறைவனே பசியகரும்பினை வில்லாகக்கொண்டு, திரிலோகங்களையும் வென்று செயங்கொண்ட தீரனே என்று அளவற்ற துக்கசாகரத்துள்மூழ்கி, தனக்குப் புகலிடம் பிறிதின்றி வாதகிற் சிறந்த வள்ளலாராகிய கைலாசபதியைச் சரணகவடைந்து, பலமுறையும் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, விழிகளில நீர்த்தாரைகளைச்சொரிந்து உடலையொடுக்கியொருபுறமாகநின்று தீனரட்சண்ணியரே சர்வபரிபூரணரே ஏழைபங்காளரே காளகண்ட மூர்த்தியே பக்தவச்சலரே எனது காதலர், பிரமன் முதலியோரா செய்த வஞ்சகத்தினால் தேவரீருடைய நுதல் விழி அனலுக் கிரையாகி மாண்டனர் இக்காரியம்அவாசுதந்தர புத்தியினால் நேர்ந்ததன்று ஆதலால் அவர்செய்த அபராதத்தினைப் பொறுத்தருளிப் பழையபடியே உயிர்தந்தெழுப்பி, சுமங்கலிகளாயிருக்கும மற்றைய மாதர்கள் முன்னிலையில் யான்மாத்திரம் கைம்மையாகிவருந்தாதபடி மாங்கல்யபிச்சை தந்தருளவேண்டுமென்று கையேந்திநின்றனள். உடனேபூமியைத் தேராகவூர்ந்துத், திரிபுரங்களை யெரித்தருளிய தேவதேவோத்தமருக்குக் கிருபைசுரந்து ஏ சிறுமியே நம்மாலிறந்த மன்மதனானவன் உனக்குமாத்திரம் எக்காலத்தும்உருவமாகத்தோற்றியிருப்பன், மற்றையர்க்கெல்லாம் அருவமாகியிருப்பன். நீ ஒன்றுக்கும் அஞ்சாதேயென்று திருவாய் மலர்ந்து, அம்மன்மதன் உயிர்பெற்றெழுந்துவருமாறு தமதுதிருவுளத்தில் நினைத்தனர், உடனே அவனெழுந்து கர்த்தன் திருவடிகளில் வீழ்ந்து, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து அளவளாவிய பேரன்பினோடும் ஆனந்தக்கண்ணீர்சொரிந்து, உள்ளம் நெகிழ்ந்து உரோமமாஞ்சிதமுற்று தோத்திரஞ் செய்வதாயினன்.

ஆறுடியவே ணியனே சரணம் அரவா டியவா பரனேசரணம்
ஏறுடியவார் கொடியாய் சரணம்எரியா டியபா ணியினாய் சரணம்
கூறுடியமா தடையாய் சரணங் குறையா டியபூங் கழலாய் சரணம்
நீறுடியமே னியனே சரணம் நிகரா றுமிலா தவனே சரணம்.

கன்றல் விளவீழ் கணையாய் சரணங் கதழ்வா சுகிரா ரியினாய் சரணம், குன்றா கியவார் சிலையாய் சரணங் குரைமா றுறைவா கினை ஞய் சரணம், ஒன்றார் புரநீறுசெய்தாய் சரணம் உற்றார்தமைவீறு செய்தாய் சரணம், நின்றே பொன்மன் றுடையாய் சரணம் நிகரா ருமிலா தவனே சரணம்.

வடிவார் தலைமாலையனே சரணம் வானோர்களென் பணிவாய் சரணம், கடியேன்வெண்கோ டுடையாய் சரணங் கடலாமையின் ஓடுடையாய் சரணம், தடிமீன் விழியா ழியினாய் சரணஞ் சுடர் சேசரியீ ருரியாய் சரணம், நெடியோன் விழிசே ரடியாய் சரணம் நிகரா ருமிலா தவனே சரணம்.

இவ்வாறு தோத்திரஞ்செய்துகொண்டுவான், சுவாமி தேவரீருல கமாதாவாகிய விமலையை சேரும்வண்ணம் தேவர்களெல்லாம் என் னைத்தூண்டிப்புட்ப பாணங்களைப் பிரையோகிக்கும் படியாக ஆக் கியாபித்தனர். அவ்வாறே அவர்கள் ஆணையைத் தடுப்பதற்கு அஞ் சினவனாய் தேவரீர்கிருபாசமுகத்தின் முன்னர் இத்தன்மைத்தான பொல்லாத்தீங்கினைச், செய்வதற்கு உடன்பட்டாயினேன், இவ்வப ராதத்தை தேவரீர் பொறுத்தருளி பழையபடி கருப்பு வில்லினால் சகலரையும் வெல்லும்படியான அதிகாரத்தை எனக்குக்கொடுத்து இரட்சிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொள்ளவும், சிவ பெருமான் அவனைப்பார்த்து அனங்கனே சகல தேவர்கட்குந் தலைவராகியும், ஐந்து திருக்கரங்களை யுடையவராகியு மிருக்கின்ற கணேச மூர்த்தியானவர், உனக்கவ்வதிகாரத்தைக் கொடுத்தருளு வர். நீ அக்கடவுளை வந்திக்கக்கடவை யென்று திருவாய் மலர்ந்து ஏகாட்சர * மனுவை அவனுக் குபதேசித்து, அதை அனுட்டிக் கும்முறைமையையுங் கிருபை சுரந்து, விடை கொடுத்தனர். பின் னர் மன்மதன் பேரானந்தக் கடலின் மூழ்கி கர்த்தன் திருவடிக ளிற் பணிந்தெழுந்து, விடைபெற்று இரதிதேவியோடுஞ் சென்று முன்னர் சண்முகப்பெருமா னனுட்டித்த மயூரேசமென்னுக் தலத் தையடைந்து, அத்தலத்தில் ஆயிரவருடமிருந்து கணேசமூர்த்தியி னுடைய பாத பதுமங்களைப் பேரன்பினோடுந் தியானித்து ஏகாட் சர மந்திரத்தை இடைவிடா தனுட்டித்து வந்தான் இவ்வாறு மன் மதன் செய்து வருகின்ற அனுட்டிப்பினுக்கு விநாயக மூர்த்தி கிரு பைசுரந்து, அவனெதிரிற் பிரத்தியட்சமாகி, அங்கசனே உனதன்

* மனு-மந்திரம்.

புக்குவியந்தோம். நீ இச்சித்தவை யெல்லாங் கேள் தருகின்றோம் என்று திருவாய் மலர்தலும், சர்வ சங்காரகாலத்தில் அண்டகடாகங்களை யெல்லாம் ஆகாரமாகக் கொள்கின்ற சிவபெருமானுடைய நுதல் விழிக்குத் தனதுடலையு முணவாகக் கொடுத்து இளைப்பாற்றிய மன்மதனானவன், அளவற்ற மகிழ்ச்சியை யடைந்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து பலமுறை தோத்திரஞ்செய்து, தேவர்களுயகமே அரசர்களும் படையெடுத்தற் கஞ்சும்படியான ஸ்திரீகள் மீது யான்படை யெடுத்துவென்று உடனே இன்பந் தருவதான எனததிகாரத்தை முன்போலச் செலுத்தவும், நல்ல வுருவத்தையடையவும் தேவரீர் கிருபைபாலித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன். அதற்கு விநாயகக் கடவுள் மனதிரங்கி அன்பனே இனி நெடுமால் கண்ணனாக அவதாரஞ் செய்யப்போகின்றனன். அக்காலத்து நீ அவன் மகவாகுவை. உடனே உனக்குநல்ல உருவமு முண்டாகுமென்று திருவாய் மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினர். பின்னர் அம்மன்மதன், தனக்குக் காட்சிதந்தருளிய விடத்தில் ஓ ராலயஞ் சமைத்து, அதிற் கணேச மூர்த்தியைப் பிரதிட்டை செய்து, அம்மூர்த்திககு மகோற்கட விநாயகரென்று திருநாமமிட்டு காலையினும் மாலையினுந் திருமஞ்சனத்தாலாட்டிப் பரிமள மிகுந்த புட்பவகைகளா லருச்சித்துதினமா அப்பவருக்க முதலியவைகளால் நைவேத்தியங்கள் செய்து, அளவற்ற பேரானந்தத்தில் மூழ்கி யிருந்தான். இவ்வாறு இடைவிடாது பூசித்து வருகின்ற நாளையில் மகோற்கட விநாயக ருடைய பெருங் கருணையினால் முன்போலவே தனது கருப்புவில்லையும் பஞ்சபாணங்களையும் பெற்று, சத்தலோகங்களினுந் தன் ஆக்ஞா சக்கரத்தையுருட்டி இரதி தேவியோடும் கூடி சுகமாக வாழ்ந்திருந்தான்.

இப்பால் விண்டுவானவர், கண்ணராகத் திருவவதாரஞ் செய்ய அவருக்கு அம்மன்மதனானவன் புதல்வனாகப் பிறந்து பிரத்தியும்னனென்கிற பெயரை வகித்து நல்ல வுருவத்தைத் தாங்கிச் சகலசாஸதிரங்களையும் ஆராய்ந்துணர்ந்து மகா பராக்கிரமத்தோடு யாவரும் புகழும்படியாக வாழ்ந்திருந்தான்.

அக்காலையில் வலிவிற்சிறந்த சம்பனென்கின்ற ஓர்தானவன், இவ்வுலகத்தில் இரதி மன்மதனை நீங்கி யிருப்பதைக் கண்டு தெய்வலோகத்திற் சென்று அவ்விரதியை நடுங்கும்படியாகக் கைக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்றான். அவ்வாறு செல்லுகையில் அப்பாதகனுடைய கரத்தினின்றும் இரதி தேவியானவள் நழுவிக்

கடலில் வீழ அக்கடலில் ஓர் பெரிய மச்சமானது அவனை விழுங்கியது. பின்னர் தான்கடலிலிறங்கித் தன் திறத்தினாலானமட்டும் அதனைக் கலக்கிச் சோதித்து எவ்விடத்துங் காணுதவனாகித் தன்பதியைச்சேர்ந்தனன். சிலநாள் கழித்தபின்னர் இரதிதேவியைக் கருவாகக்கொண்டிருக்கின்ற மீனானது ஓர் வலையிலகப் பட்டது அம்மீனைச்செம்படவன் சம்பாசுரனுக்கு முன்னர் கொண்டுவந்து வைத்தான். அதனை அத்தானவன் பிளக்குமளவில் அதன் கருப்பத்தில் ஓர் பெண்ணிருப்பதைக்கண்டு மிக்கசந்தோஷங்கொண்டு தனக்கவளைப்புத்திரியாக வளர்த்துவந்தனன். இவ்வாறு அத்தானவனிடத்தில் இரதிதேவி வளர்ந்துவருகின்ற வரலாற்றினையெல்லாம் நாரதமகாமுனிவரறிந்து கண்ணன்புதல்வனாகிய பிரத்தியும்னனிடத்தில் சொல்ல, அதனை அவன்கேட்டுத் தன்தேவியைக் கொண்டுவரவேணுமென்னுங் களிப்போடு சம்பாசுரனிடத்திற் சென்று அவனைப் போர்செய்யக்கூவி அளவற்றநாள் அவனோடு யுத்தஞ்செய்துக் கொண்டிருந்தனன். பின்னர் அப்பிரத்தியும்னன் தாயாகிய உருக்குமணியானவள் இதுகாறும் நமதுபுத்திரன் வரவில்லையே ஈதென்ன காரணமென்று மனங்கலங்கியிருந்த அன்போடு விநாயக சதுர்த்தி விரதத்தை அனுட்டித்து வந்தனள். அவ்வாறு அனுட்டித்துவந்த ஆறுநாள் பிரத்தியும்னனென்பவன் சம்பாசுரனுடைய உயிரைக்குடித்துத் தன்தேவியைக் கரதலாமலகம் போலக் கைக்கொண்டு அவ்விடத்தினின்று நீங்கித் தன்பதியைச் சேர்ந்தனன். உடனே அவன்தாயாகிய உருக்குமணியானவள் தன் மகன் வரவை நோக்கிப் பெருமகிழ்ச்சியை யடைந்து தனது விழைவை நிறைவேறச்செய்த சதுர்த்தி விரதத்தை முற்றினுஞ் செய்துமுடித்து சொர்ணதானம் முதலாகிய அளவற்ற தானங்களை வழங்கினாள்.

இப்பால் மன்மதனானவன் இரதியோடுங்கூடி வாழ்வுற்றிருக்கும் நாளையில் அநிருத்தன் என்கின்ற ஒருபுதல்வனைப் பெற்றான், அவ்வநிருத்தன் காளைப்பருவத்தை யுற்றகாலையில் சகல தேசத்து அரசர்களுந் தன்னைப் பணியும்படி அக்கினி மதிலைக் கொண்டு அரசியற்றுகின்ற வாணன்யென்னும் ஓர் அரசனிருந்தான். அவ் வசுரன் அன்பினாற் பெற்றெடுத்த உஷையென்னும் பெயரினையுடைய ஒருவனிதையானவள் ஒருநாள் அநிருத்தனுடைய பேரழகைத் தன் கனவிற்கண்டு அதனைத்தனது தோழியாகிய சித்திர ரேகைக்குச்சொல்ல அவள் உடனே இரக்கங் கொண்டு சென்று அநிருத் தன் நித்திரைசெய்யுஞ் சமயத்தை நோக்கி அந்நித்திரையோடு

னைக் கொண்டுவந்து தனது நாயகியிடத்திற் சேர்ந்தனள். அவள வனைக் கண்டவுடன் அதிக மகிழ்ச்சி பொங்கித் துயிலைக்கலைத்துத் தன தெண்ணப்படி அவனை இரகசியமாகத் தன்னிருப்பிடத்தில் வைத்துக்கொண்டு கலவிசெய்து வந்தாள். இவ்வாறு சிலநாள் கழிந்த பின்னர் அவ்வுஷை என்பவள் வயிற்றிற்கருப்பமுண்டாக அச்செய்தியை வாணனறிந்து அனுருத்தனைப்பிடித்து அகலக் கூடாத அருஞ்சிறையில் வைத்தனன். பின்னர் அவ்வனுருத்தனுடைய தந்தையாகிய பிரத்தியும்னன் தன் புதல்வனைக்காணாமல் எங்குந்தேடித் தேடி அளவற்ற துக்கசாகரத்தில் மூழ்கி வருந்தினான். அதனை அவன் தாயாகிய உருக்குமணிதேவி கண்டு என்னருமைப் புத்திரனே நீமுன்னர் சம்பராசுரனோடு யுத்தஞ்செய்யச் சென்றபோது நெடுநாள் வாராமற்றாழ்ந்ததி னிமித்தம்யான் மிக்க வருத்தத்தை யடைந்து நீவிரைவில் வந்துசேருமாறு கணேச மூர்த்தியினுடைய சதுர்த்திவிரதத்தை யநுட்டித்தேன். அநுட்டித்த ஆறாநாளுன்னை வரப்பெற்றேன், ஆதலால் நீயும் அம்மேலானவிரதத்தைநோற்பையாயின் நின்மகன் எவ்வளவு தூரத்தேயத்தி லிருக்கினும்விரைவில் வந்து சேருவனென்று சொன்னாள். உடனேபிரத்தியும்னன் அதிக மகிழ்ச்சி யடைந்து அவ்விரதத்தை ஆகமவிதிப்படி மிக்கபத்தியோடனுட்டித்து வருகின்ற விரதநாள் முடியு முன்னம் இவன் தந்தையாகிய கிருஷ்ணனிடத்தில் நாரதமுனிவரெழுந்தருளி அனுருத்தன் செய்தியைத் தெரிவிக்க உடனே அவருக்குக்கோபமுண்டாகி அவ்விடத்தி னின்றுநீங்கி வாணனிடத்திற்சென்று அவனோடுஅளவற்ற நாள் யுத்தங்களைச் செய்து அவனை வென்று, அவன் பெண்ணையுந் தனது பௌத்திரனையு மழைத்துக்கொண்டு எதாப்பிரகாரந் தன் பதியைச் சேர்ந்து வாழ்ந்திருந்தனன்.

மன்மதனுருவம் பெற்றபடலமுற்றிற்று.

---

# ஆதிசேடனநுட்டித்த படலம்.

தென்மதி கீற்றுப் போலத் திகழுமோர் மருப்பி னானை
தன்மதி யிருத்தி நோன்பு தகச்செய்து வடிவி லாத
மன்மத னுருவும் பெற்று வாழ்ந்திடுங் கதையீ தாகு
நன்மையெய் திடமா சேட னியற்றிய வாறுங்கேளாய்.

முனிவர்களே! விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தி விரதத்தை மன்மதனனுட்டித்து உருவம்பெற்ற வரலாற்றினைச் சொன்னேம். இப்பால் ஆதிசேடனனுட்டித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. முன்னொருகாலத்தில் பிரமனாதிய தேவர்களாலும் * இருக்காதி வேதங்களாலு மறிதற்கரிய சாம்பவமூர்த்தியானவர் வெள்ளியங்கிரியின் நவரத்னமயமாயிராநின்ற சிம்மாசனத்தின்மேல் உமாபரமேஸ்வரி சமேதராய் வீற்றிருக்கின்ற நாளையில், அளவற்ற தேவர்களும் முனீஸ்வரர்களும் வந்து அஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து பலவரங்களையும் பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். அத்தருணத்தில், சிவபெருமான் சடாமகுடத்தி லிருக்கின்ற ஆதிசேடனானவன் நாம் இத்தனைபேரும் வணங்கும்படியாக சுவாமியினது திருமுடியி லிருக்கின்றோமல்லவா வென்று கர்வங்கொண்டனன். அக்கர்வத்தைக் கர்த்தனறிந்து தமது கரத்தாற்றுண்ணென் றிழுத்து நிலத்தின்மீது மோதினர். உடனே ஆதிசேடன் வெள்ளியங்கிரியில் வீழ்ந்தனன், அவன் சிரமானது ஆயிரம் பிளவாகப் பிளந்துபோயிற்று. அவனுக்கு உலகத்தைத் தாங்குகின்ற வலியும், அளவற்ற தவங்களாற் கிடைத்த மகத்துவங்களு மிழந்துபோன பின்னர், ஆதிசேடன் மிக்க துன்பமுற்று நம்மை முன்போலவே சிவபிரான் சார்பிலிருக்கச் செய்யும் உபாயம் யாதென்று கருதி ஒன்றுந்தோற்றாது சுவாசமற்று உயிர் உண்டோ வில்லையோ வென்று சொல்லத்தக்கதாக இறந்தவனைப்போலக் கிடந்தான். அத்தருணத்தில் கைலாசபதியைத் தரிசிக்கவந்த நாரதமுனிவர் அவனைப்பார்த்து, ஆ ஆ! ஈதென்னபாவம். உனக்கடுத்ததுன்பம் யாதென்றுகேட்டார். அதற்குஅற்பஉயிரோடும் வீழ்ந்துகிடக்கின்ற ஆதிசேடன் நாணமுற்று ஒன்றும் பேசாமலிருந்தான், நாரத முனிவர் மீளவு மவனைப்பார்த்து ஆதிசேடனே! நீகர்வங்கொண்ட படியினாலே சிவபிரான் சார்பையற்று, இத்தன்மைத்தான துன்பத்தில் வாடுகின்றாய், இப்பிழை நீங்குமாறு ஒருபாயஞ் சொல்லுகிறேன் அதனை அன்புடன் கேட்பாயாக. தம்மை வேண்டினர்க்கு வேண்டியவண்ணம் * பலபேறுகளைத்தந்து ரக்ஷிக்கும்படியான விநாயகக்கடவுளுடைய சடாட்சர மந்திரத்தை யனுட்டிக்கக்கடவையென்று சொல்லி, அம்மந்திரத்தை அவனுக் குபதேசித்தனர். உடனே

---

* இருக்காதி வேதங்களாவன.—இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. அன்றிஉபவேதம் மாதியவு மெனக் கொளினுமாம்.

அதனை உபதேசிக்கப்பெற்ற மாட்சிமையால். ஆதிசேடனுக்குத் தேகதிடமுண்டாகி, அவ்விடத்தினின்று நீங்கிப், பிரவாள நகரத்தைச் சேர்ந்து மிக்க பத்தியோடுஞ் சடாட்சரமந்திரத்தைச் செபித்து, சதுர்த்தி விரதத்தை யனுட்டித்தனன். அவ்வனுட்டிப்புக்கு விநாயகக்கடவுள் மனதிரங்கி ஆனைமுகத்தை யுடையவராய்ப் பத்துத் திருக்கரங்களினும் பத்து ஆயுதங்களை யேந்திக்கொண்டு சித்தி புத்தி சமேதராக, சிங்கவாகனமூர்ந்து அவனெதிரிற் பிரத்தியட்சமாயினார். உடனே ஆதிசேடன் அஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்து, அளவற்ற தோத்திரங்களைச் செய்து நின்றான். அத்தோத்திரங்கட்குக் கர்த்தன் மனதிரங்கி, அன்பனே! ஆயிரம் பிளவாகப் பிளந்திருக்கின்ற உனது ஒரு சிரமானது அவ்வாறே ஆயிரஞ் சிரங்களாகி யிருக்கக்கடவது. நீ அவ்வாயிரஞ் சிரங்களோடு முன்போலவே பூமியைத் தாங்கியிருக்கக்கடவை, அன்றியும் ஐந்துசிரங்களோடு எந்தையாகியும் எம்பெருமானாகியு மிராநின்ற சிவபெருமானுடைய சடாபாரத்தில் அமர்ந்திருக்கக்கடவை. இப்போதிருக்கின்ற இவ்வுருவத்தோடு நமக்கு உதரபந்தனமாகக்கடவையென்று திருவாய்மலர்ந்து அண்டகோடிகளையுந் தாண்டி அப்பாற் சென்ற பேருருவத்தோடு விசுவரூபங்கொண்டு அவ்வாதிசேடனை யெடுத்து வயிற்றிற் சுற்றிக்கொண்டனர். உடனே தேவர்களெல்லாம் புஷ்பவருஷம் பெய்தார்கள். பின்னர் ஆதிசேடனானவன் தனது ஒரு அமிசத்தில் உதரபந்தனமாக விருந்து, மற்ற அம்சங்களோடு தனக்கு நற்கதி கிடைக்கச்செய்த அந்தப் பிரவாளநகரத்தில் சாஸ்திர விதிப்படி ஒராலயஞ் சமைத்து, அதில் விநாயக மூர்த்தியைப் பிரதிட்டை செய்து, அளவற்ற திரவியங்களைக்கொண் டபிஷேகித்துப் பரிமள மிகுந்த பல புட்பங்களா லருச்சனைசெய்து ஆராதித்துக்கொண்டிருந்தான். உடனே கணேசமூர்த்தி தந்தருளிய வரத்

* பலபேறு.—புகழ், கல்வி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்சசி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் என்பன இதனை,

" பொன்வலிநல் லூழறிவுப் பொற்பிளமைக் கல்விபுகழ்
நன்மக்க ளோடுவலி வாணாட்டுணிவு—நென் னுகர்ச்சி
வெற்றிப் பெருமையே மேவுமீ றெண்பேறும்
பற்றினார்க் கன்றேபயன்." என்னும்எதார்த்தபோதத்தானறிக.

பத்து ஆயுதம், இன்னதென வல்லபைவிநாயகர் திருவவதாரப் படலத்திற் காண்க.

தினால் சிவபெருமானுடைய சடாபாரத்தில் வசிக்கப்பெற்றும், இவுலகமுழுவதுந் தாங்கப்பெற்றவனாய் அளவற்ற களிப்பில் ஆழ்ந்திருந்தனன்,

ஆதிசேடனநுட்டித்த படலம்

முற்றிற்று.

# இந்திரன் விமான மண்ணிழி படலம்.

விநாயகனுக் குரியவிநாயகசதுர்த்தி யநுட்டித்தோர் விழுப்பங் கேட்டாய், கனைவிரதத் தோரொனவே யுலகமெலாங் கண்டுகழித்தவர்கட் கெல்லாந், தனைதருநாத் தருந்தந்தி முகற்குரிய சங்கட்ட சதுர்த்தி மேன்மை, நினைதாவிற் கேளென்று பிநகுமுனி மதிக்காந்தி நிருபற்கோதும்,

ஐம்புலப் பகையை வென்று சிவஞானச் செல்வத்தை யநுபவிக்கும் முனிசிரோட்டர்களே ஆதிசேடன் விநாயக மூர்த்தியினுடைய சதுர்த்தி விரதத்தை யநுட்டித்துத் தனக்குநேர்ந்த விபத்தை நீக்கிக்கொண்ட பேற்றினைச் சொன்னோம் இப்பால் இந்திர விமானம் மண்ணிலிழிந்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக அழகு பொருந்திய சோலைகள் சூழ்ந்த மத்தியதேயத்தில் [] மகநட்சத்திரத்தில் சனிகோள்கூடி எவ்வித சுகங்களையும் போன்றச்செய்யுங் காலத்திலும், சான்றோர்கள் இரவாவண்ணம் வேண்டிய வளங்களை யளிக்க வல்ல சகத்திரபுரியென்னும் பட்டணத்தில் தூங்காமை முதலிய மூவகையாற்றல்களையும் ஓதன்முதலிய () அறுவகைக் குணங்களையும், மனோதிடம் முதலிய மூவகைச் சித்திகளையும் * பதிஞான முதலிய

* மகத்தோடு சனிக்கோள்கூடின் எவ்வகைப் பெற்றியுமற்றின்னலுறுவரென்ப சோதிடாங்கம். இதனை "மகத்திற் புக்கதோர் சனியெனக் கானுமைந்தனே மணியேமணவாளா, ஆகத்திற்பெண்டுகள் நானொன்றுசொன்னாலழையேற்போ குருடாயெனத் தரியேன், முகத்திற் கண்ணிழந்தெங்ஙனம் வாழ்கேன்முக்கணாமுறையோ மறையோதி, புகைக்குந் தண்டகடலோதம்வந்துலவுமொற்றியூரொனு மூருறைவானே" எனனும் ஆளுடைய நம்பிகள் திருவாக்கானும், "மகத்திரவியின் வாரத்துக் கேழெனும் வாரப்புத்தேள், புகத்திரவியமு மற்றுப் பொன்றும்" * என்னுங் கசியப்ப முனிவர் கூற்றானுமறிக.

* அறுவகைக் குணங்களாவன.—ஓதல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், உலகோம்பல் என்ப.

மூவகை ஞானங்களையும் [] சரிதைமுதலிய நான்கு பாதங்களையும், () தரும முதலிய நால்வகைப் பொருள்களையும் எக்காலத்திலும் நீங்காது, பகைவரை வெல்லத்தக்க வேலாயுதத்தை யேந்திப் பொருதீங்கி உலகமுழுவதுங் காத்து, அந்தணர் தேவர் முதலியோரை ஆதரித்துக் காமனையொத்த கட்டழகினை வாய்ந்து 0 சுற்றத்தினர் முதலியோரை இன்னல் நெருங்கா வண்ணஞ் சூழ்ந்து. தவம் தூய்மை முதலிய விரதங்களை வாய்ந்து, விண்ணுட்டினுந்தனக்கொருவர் நிகரில்லாத பெருங்கீர்த்தியைப் பெற்று கற்பிற் சிறந்த புண்ணிய சீலையென்னும் மனைவியைப் பொருந்தி குளிர்ச்சி பொருந்திய செங்கோலினுல் திசையனைத்தினுந் தனது ஆக்ஞா சக்கரத்தினை யுருட்டி அரசாட்சிசெய்கின்ற சூரசேன மகாராசனென்னுமொரரசன் இருந்தான். அவ்வரசன் ஒருநாள் மந்திரியர், புரோகிதர், சேனுபதியர், ஒற்றர், சாரணர், என்கின்ற ஐவகைத் துணைவர்களும், மற்றுமுள்ள [] பரிசனங்களும் புடைசூழம்படியாகச் சிங்காதனத்தின்மீது கொலுவு வீற்றிருந்து குறைகள சொல்வோர்க்கும், முறைகள் சொல்வோர்க்கும அவ்வவர்கள் கருத்தின் வண்ணங் கிருபை செய்துக்கொண்டிருக்கின்ற சமயத்தில் அளவற்ற ரியர்கள் அவனியிற் றங்கினற்போல ஒருவிமான மானது அந்தரமார்க்கமாய்த் தனது கதியிற்றப்பி நிலத்தில் வந்திறங்கியது.

* மூவகை ஞானம் —உலகம் யாவை, ஆன்மா யாவை, பரம் யாவை என உணர்தல்.

* சரிதை முதலிய நான்காவன·—சரிதை. கிரியை. யோகம், ஞானம் என்பன. இந்து வைதிகராயினோர் முறையே அனுட்டித்து வீட்டின் புறுவ தென்ப இதனை "விரும்புஞ் சரிதை முதன் மெய்ஞ் ஞான நான்கும் அரும்பு மலர் காய்கனிபோ லன்றோ பராபரமே" என்னும் தாயுமானுர் திருவாக்கா னுணர்க.

() தரும முதலிய நால்வகைப் பொருள்களாவன .—அறம்,பொருள், இன்பம், வீடு என்ப இதனை "ஈதலறந் தீவினைவிட் டீட்டல் பொருளெஞ் ஞான்றுங், காதலிருவர்-கருத்துறவைத் தாதரவு, பட்டதே யின்பம் பரனை நினைந் திம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு" என்னும் ஒளவையார் திருவெண்பாவானறிக.

*அரசசுற்றத்தினர்.—நட்பாளர், அந்தணர், படைத்தொழிலர், மருத்துவக்கலைஞர், நிமித்திகப்புலவர் என்ப.

* அரசருக்குப் பரிசனங்களாவார்.—கருமாதிகாரர் சுற்றம், கடைகாப்பாளர் - நகரமாகாள் - படைத்தலைவர் - இவுளிமறவர் - யானைவீரரென்ப.

அதனை அவ்வரசன்கேட்டு உடனே ஒற்றர்களைக் கூவி ஏதோ
ஒரு தெய்வவிமானம் பூமியிலிறங்கியது நீங்கள்விரைவிலோடி அஃ
து வந்த வரலாற்றைத் தெரிந்துகொண்டு வரக் கடவீர்களென்று
ஏவித் தானும் அதிகவிரைவோடு மெழுந்து அமைச்சர் முதலாயி
னோர் புடைசூழ வெளிக்கொண்டு தனது ஆட்டக்குதிரைமீதாரோ
கணித்து, அதனை விரைவில்நடத்தி அவ்விமானத்தி னருகில் இறங்
கிச் சிலதூரம் முன்னதாக நடந்து சென்று அதன் மத்தியில்
தேவேந்திரன் வீற்றிருப்பதைக்கண்டு மிகுந்தபேரன்பினால் அவனை
வணங்கி இதனைச் சொல்லுவதாயினான், ஓ சுரலோக சக்ரேஸ்வரா,
வேள்வியினாலும், வீரத்தினாலும, தவத்தினாலும், தானத்தி னாலும்,
வாள்வித்தைமுதலிய திறங்களினாலும், ஒப்பாருமில்லாததேவரீரை
யான் பூர்வத்திற செய்த நல்வினைப் பேற்றினாற் காணலாயினேன்.
அடியேனுடைய கல்வியுங் கேள்வியும் பெறத்தக்க பயன்களை
யடைந்தன. தேவரீர் பொன்னுலகத்தைநீங்கி இம் மண்ணுலகத்
தில் வந்த வரலாற்றைத் திருவாய் மலர வேண்டுமென்று பிரார்த்
திக்க அதற்குத் தேவேந்திரன் இசைந்து தன்வரவை அவ்வரசனுக்
குத் தெரிவிப்பவனாகி, நரேந்திரனே யான்சகலதேவர்களும் புடை
சூழும்படியாகச் சிம்மாசனத்திலிருந்து அரசியற்றி வருகின்ற தரு
ணத்தில், யாழ்வல்லவராகிய நாரதமகாமுனிவர்வந்து பூலோகத்தி
ல் ஒருவர் விநாயகமூர்த்தியினுடைய அனுக்கிரகத்தைப்பெற்றுதெ
ய்வத்தன்மையுண்டாகி அந்தச் சரீரத்தினுடனே கணேச மூர்த்தியி
னுடைய சாரூபத்தைப்பெற்றுச சகலருந் தொழும்படியாக வீற்றி
ருக்கின்றார். அவர் பெயரைப் புருசுண்டி யென்று சொல்லுவார்
கள். அவரை யாமுங் கண்டு தரிசித்து வந்தோமென்று சொன்
னார். அதனையான் கேட்ட மாத்திரத்தில் அம்மகத்துவைக் காண
வேண்டுமென்கிற ஆசையானது எனதுபிடரியைப்பிடித்துத் தள்ள
உடனே அவ்விடத்து நின்று நீங்கி இம்மண் ணுலகத்தில் இழிந்து
அவரெழுந்தருளி யிருக்கின்ற விடத்திற் சென்று அவரது பாத
பதுமங்களைச் சேவித்து விடைபெற்று மீட்டுஞ் சொர்க்கலோகத்
திற் சேரவெண்ணி ஆகாய மார்க்க மாகச் சென்று இவ்விடத்திற்கு
நேராக வரும்போது இந்நகரத்தில் மிகவுங் குட்டநோய் கொண்ட
பெரும்பாவியாகிய ஒருவைசிய குமாரனுடைய பார்வையால் இவ்
விமானமானது * கதி தப்பிப் பூமியி லிறங்கியது. இனி இந்நகரத்

* கதி - மார்க்கம் வழி

திற்றானே ஒருவன்சங்கட சதுர்த்திவிரதம் அனுட்டிக்கின்றான். அவனாலே இவ்விமானம் பூமியை விட்டெழும்பி ஆகாயத்திற் செல்லும் என்று சொன்னான். இவையனைத்தையுஞ் சூரசேன மகாராசன்கேட்டு ஓ தானவர் குலகாலரே! தேவரீருஞ் சென்று பணியத்தக்கஅப்புருசுண்டி யென்பவர் என்ன குலத்தார், அவர் செய்த தவங்கள் யாவை, அவைகளையும் எனக்குணர்த்தி யாளவேண்டுமென்றுபிரார்த்தித்தான்.

அதற்கு தேவேந்திரன் சொல்லுவான், அரசனே! தண்டகவனத்திலே, இலக்குமி விலாசம்பொருந்திய பழமையான நந்துரமென்னும் ஒரு நகரமிருக்கின்றது, அந்த நகரத்தின் சமீபத்தில் ஒரு வேடச்சேரியுண்டு, அச்சேரியில் ஆலகாலவிடத்திற் கொப்பான கொடுஞ்செய்கைகளையுடைய விப்பிரதனென்னும் ஒருவேடனிருந்தான், அவ்வேடன் எக்காலத்திலும் எவ்விடங்களினுஞ் சென்று வழிப்போக்கர்களை யெல்லாம் ஒருவரையுந் தப்பவிடாமல் மறித்துப் பொருள்பறிக்கப்பட்டவன். அவனவ்வா றிருக்கின்றகாலத்தில் ஒருநாள் அவன் சஞ்சரிக்கின்ற மார்க்கமாக ஓரந்தணனானவன் விரைந்துசெல்ல அவனை யவ்வேடன்கண்டு நமக்கு இத்தினம் மிக்கலாப முண்டாயதென்று மனங்களித்து, அதிக வேகத்துடனோடி, அவ்வந்தணன் பின்றொடர்ந்தான். உடனே அவ்வந்தணன் அவனைக்கண்டு இன்று நமகிறுதிகாலம் வந்துவிட்டதென்று பயந்து ஓட, அவ்வேடனும் அவன்பின்னதாக நெடுந்தூரமோடி அவனைப் பிடிக்கக்கூடாமல மனம்வருந்தி மீட்டுந் திரும்பி வருகையில் அவ்வனத்தின்கண். விநாயக மூர்த்தியினுடைய கோயிலுந் தீர்த்தமும் எதிரே தோற்றக்கண்டு அவ்விடத்திற்போய்த் தாளினைப்பாறும்படி யத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தாகந் தணியுமாறுஜலபானமுஞ் செய்து அதன் கரையில் இருக்கின்ற ஓர்மரத்தினீழலிற் றங்கி, இரையிழந் தேக்குற்ற வேங்கைபோல் மனக்குறைகொண்டிருந்தான். இவ்வாறிருக்கையில்தவசிரேஷ்டராகிய முக்கலமுனிவர் அவ்வழியாகச்செல்ல அவரைக் கண்டவுடனேவேடனானவன் விரைந்தெழுந்து வாளையுருவிக்கொண்டோடி அம்மகானு பாவருடைய உயிரை வாங்கும்படியாக ஓங்கினான். உடனே முக்கலமுனிவர் திரும்பி அவனைத் தமது விழிகளினா லுற்றுப்பார்க்க, அப்பார்வையின் மகிமையால் அவ்வேடனுடைய வாளும், அவன் அறியாமையும், அவன் செய்து வந்த மலைபோன்ற பாதகங்களும்: அவனைவிட்டுநீங்கி மெய்யறிவு வுதித்தன.

உடனே அவன் முக்கல முனிவரைப் பார்த்து அடியேன்செய்துகொள்ளும் விண்ணப்பத்திற்குச் செவிகொடுத் தருளவேண்டுமென்று பிரார்த்தித்து இதனைச்சொல்லுவதாயினன் சுவாமீ! இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தபலத்தினாலும், தேவரீருடைய தரிசனவிசேடத்தாலும், அடியேன்செய்த பாதகங்களனைத்தும் பறந்தன. நற்கதியையடையவேண்டுமென்னும், நல்லறிவும் உதித்தது. மேலும்பெரியோர்கள் துஷ்டர்களை விசுவாசிக்கின்றதில்லையாயினும், அவர்கள் கிருபாநோக்கத்தால் அத்துஷ்டர்கள் பயன் பெறுமற்போகின்றதில்லை, இனிசுவாமிகள் அடியேன்மீது கடாக்ஷம்வைத்துஎவ்விதத்தேனுங் கைவிடாது காத்தருளவேண்டும். அடியேற் கிவ்வுலக வாழ்வில் யாதொரு பற்றுமில்லையென்று அனந்தமுறை துதித்து, மனமுருகி அவர்திருவடிகளிற் றனதுசென்னியைப் பொருந்தவைத்து, இரண்டுகரங்களாலும் அத்திருவடிகளை உடும்புபோலவிடாமற்பற்றி மீட்டுமெழாதபடி அவ்வாறே நிலத்திற் கிடந்தனன். பின்னர் முக்கலமுனிவர், அவ்விப்பிரதனுடைய அன்பையறிந்து, துஷ்டர்களாயினுஞ் சரணடைவராயின் அவர்களைக் கைவிடுதல்தருமமல்லவாதலால், மிக்கஉள்ளன்போடுநம்மைச்சரணமடைந்த இவனுக்குஎவ்விதத்தேனும் ஓர் நன்மையைச் செய்யவேண்டுமென்றுயோசித்து, அவன்வேடனாகையால் விதியுளிபுபதேசித்தல் கூடாதென்று கணேசமூர்த்தியினது திருநாமத்தை மாத்திரம் உபதேசிக்கத்தக்கதென் றெண்ணி நீ விரைவில் ஸ்நானஞ்செய்து வருவையென்று அவனுக்கு ஆக்கியாபித்தார்.

அவ்வார்த்தையை விப்பிரதன், செவிக்கமுதாகக் கேட்டு, உடனே ஸ்நானஞ்செய்து வந்தான். பின்னர்முக்கல முனிவர் அவன் சிரத்தின்மீது தமது திருக்கரத்தை வைத்து, ஓம்கணேசாயநம:வென்னும் மந்திரத்தை யவன்செவியிலுபதேசித்து, அவனெதிரில்ஒருலர்ந்ததடியைநட்டு அன்பனே! இத்தடிக்குத் தினந்தோறுங்காலந்தவறாமல் நீர் விட்டுக்கொண்டு அது தளிர்க்கின்ற பரியந்தம்அதன்சமீபத்திற்றானேயிருந்து, விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை மனதிற்றியானித்து, யானுபதேசித்த மகாமந்திரத்தைச் செபித்துவருவையாயின் உனக்கு சகலசித்திகளும் கைகூடும் நாமுஞ்சில நாளில் இங்கு வருவோமென்று சொல்லித் தமது ஆசிரமத்திற்கு எழுந்தருளினர். பின்னர் விப்பிரதன் அளவற்ற மகிழ்ச்சிகொண்டு முக்கல முனிவருபதேசித்தவண்ணம் அத்தடிக்கு முக்காலத்தும் நீர்பெய்து அதனருகிலிருந்து விநாயகமூர்த்தியை மனதிற் றியானித்துத்

தானுபதேசம்பெற்ற மந்திரத்தைச் செபித்துவந்தான். இவ்வாறு ஆயிரவருடபரியந்தம் இடைவிடாது செபித்துவருகையில் அத்தண்டானது தளிர்த்துப்பூத்தது. அச்சமயத்தில் முக்கலமுனிவரும் அங்கெழுந்தருளி, விப்பிரதனுடைய மனவுறுதியைக்கண்டு மிகுந்தசந்தோஷங்கொண்டு முற்றத்துறந்த முனிவர்கட்கும் இவ்வுறுதிவருவது அரிதென்று நினைத்து பலமுறையும்வியந்து பொருக்கென்று தமதுகமண்டலத்துள்ள நீரைமந்திரித்து விப்பிரதன்மீது தூவினர். உடனேகல்லெறியக் கண்டபறவைக்கூட்டங்கள் மரத்தைவிட்டெழுந்தோடுவதுபோல் அவன் பலபிறவிகள்தோறுஞ்செய்து வந்தபாதங்களெல்லாம் பறந்தோடி விட்டன. தளிர்த்துப் பூத்திருக்கின்ற தண்டினைப்போல முக்கலமுனிவர் தூவியமந்திர சலமகிமையினால் அவன்புருவமத்தியிற் றுதிக்கையுண்டாகி விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தை யடைந்தனன்பின்னர் முக்கல முனிவரானவர் அந்தச்சற்சீடனைத்தழுவிக்கொண்டு கணேசமூர்த்தியினுடைய ஏகாக்ஷர மந்திரத்தை யுபதேசித்து என்னருமைமைந்தனே. நீஇப்போதடைந்திருக்கின்ற வுருவத்தோடு ஒருகற்பகாலம் வரையில் வாழக்கடவாய்: நீசெய்துவந்தசலத்தினாற்றளிர்த்துப் பூத்திருக்கின்ற இம்மரமானது கற்பகவிருட்சமாகக்கடவதென்று சொல்லி அவ்விடத்தினின்றுமெழுந்தருளினர் உடனே அம்மரமுங்கற்பகவிருட்சமாகி அவ்வவர்கள் வேண்டுவனவற்றையெல்லாம் வரையாது கொடுத்துவந்தன. விப்பிரதன் அன்பேஒருருவமாகிக் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளைத்தியானித்துதனது புருவத்தினடுவிற் றண்டந் தாங்கியிருக்குந் தன்மையால்யாவரும் புருசுண்டியென அழைக்கப்பெற்று முக்கலமுனிவருபதேசித்த ஏகாட்சர மந்திரத்தை முன்போலவே ஆயிரவருடம்வரையிற செபித்துக்கொண்டு வந்தனர் அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அப்புருசுண்டிக்கெதிரில் ஆகாயமார்க்கமாய்த் தரிசனந்தந்தருளினர்.

டனே அத்தரிசனத்தைப் புருசுண்டிமுனிவர்கண்டு ஆடிப்பாடி, ஆனந்த பரவசங் கொண்டு, கரங்களைச் சிரமேற்கூப்பி, ஓ? விண்டுபிரமனாதியரால் அறிதற் கரிய கர்த்தனே? நமஸ்காரம். தேவர்களெல்லாந் தொழும்படியாக முதன்மை பெற்றிருக்கின்ற கடவுளே? நமஸ்காரம். மகாவீரத் தன்மையையுடைய அங்குச பாசங்களை யேந்துங் கரத்தினைப்படைத்த கணேசமூர்த்தியே; நமஸ்காரம். பொய்யார்க்குப் பொய்யாகியும் மெய்யர்க்கு மெய்யாகியும்

விளங்குந்தினதயாபரமூர்த்தியே நமஸ்காரம். ஞானசத்தியும், கிரியாசத்தியுமா யிருக்கின்ற சித்திபுத்திகள் மணாளரே நமஸ்காரம், என்றுஅனந்தமுறை தோத்திரஞ்செய்தலும், அத்தோத்திரங்கட்குவிநாயகமூர்த்தி சந்தோஷங்கொண்டு அன்பனே நீகருதிய வரங்களைக்கேள் தருகின்றோமென்று. திருவாய் மலர்ந்தனர். புருசுண்டியானவர் மீளவும் பணிந்தெழுந்து கர்த்தனே அடியேன் தேவரீருடைய கிருபையினால் தேவர்களாலு மடைதற் கருமையனவாகிய செல்வத்தையும், பேரின்பத்தையும் எளிதிற்பெற்றேன் அன்றியுந் தேவரீருடைய திருவுருவத்தையு மடைந்தேன். இனி அடியேன் பெறத்தக்கபேறு தேவரீர்திருவடியேயன்றி, வேறென்னவிருக்கின்றது சுவாமீ அத்திருவடிப் பேறதையே அடியேனுக்கருளவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டனர்.

அதற்கு விநாயகக்கடவுள் மனதிரங்கி, அவனருகி லெழுந்தருளி அன்பனே நீ கருதிய திருவடிப்பேற்றினை யடைவதற்கு, வேதாகம புராணாதிகளில் நான்குபாயங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவ்வுபாயங்கள் சரிதை, கிரியை, யோகம், ஞானம் என்று சொல்லப்படும்.

சரிதை.

அவற்றுள் சரிதையாவது. பிராதகாலையிற் றேவாலயங்களிற் சென்று பயபத்தியுடனே திருவலகிடுதல் திருமெழுகிடுதல் திருவிளக்கிடுதல், நந்தவனம் வைத்தல், பூமாலைதொடுத்தல், சாத்தல் பூசனைபுரிதல், பெரியோர்களைக்காண்டல், கடவுளை வழிபடுதல்போல அவர்களையும் வழிபட்டு வசித்தல் தேவாலயம்-சத்திரம்-சாவடி-முதலியவைகளை நூதனமாகச் செய்வித்தல், அவைகள் சீரணித்திருக்கிற் பழுதுபார்த்தல், தினந்தோறுங் கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களில், ஸ்நானஞ்செய்தல், ஆலயங்களில் அங்கப்பிரதக்ஷணாதிகளைச் செய்தல், அடியளந்து நடத்தல், நூற்றெட்டு ஆயிரத்தெட்டென்னுந் தொகைப்படி பிரதக்ஷணஞ் செய்தல், தருமத்தின் வழிநின்று பொருள் சம்பாதித்தல், பிரமசாரி வானப்பிரத்தன் சன்னியாசியென்னும் இம்மூவருக்கும் பசிபிணி முதலிய இடையூறுகளுருவண்ணந் தக்கமுயற்சி செய்தல், பிதிர்தேவதைகளுக்கு யாகாதிகருமங்கள், நீர்க்கடன் முதலிய வற்றால் திருப்தி செய்தல், வந்த விருந்தினரைப் பாதுகாத்து, இனிவரும் விருந்தினருக்கெதிர்பார்த்தல், உறவினர்கள் உள்ளமகிழவேண்டிய வற்றை யுதவல், தா

தன் மனைவியும் ஒருவழிப்பட்டு நடுவு நிலைமையை யனுசரித்திருத்தல், அன்புடைமை, அடக்கமுடைமை, ஒழுக்க முடைமை, பொறையுடைமை, யென்னும் நன்னெறிகளை யுற்றிருத்தல், பிறர்பொருள் கவர்தல், புறங்கூறுதல், பயனிலாவற்றை யநுசரித்தல், என்னுந் தீநெறிகளை விலக்குதல். முதலியனவாம் * இவற்றையநுட்டித்தவர்கள் சாலோக பதவியையடைவார்கள்-அதாவதுநமதுலோகத்தில் வந்திருப்பதாம்.

கிரியை.

கிரியையாவது. சந்தனம், புட்பம், தூபம், தீபம், நைவேத்தியம், கோசலம், கோமயம், பால், தயிர், நெய், தேன், வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி, நாரத்தங்கனி, இளநீர், பனிநீர், சந்தனமுதலிய பூசாதிரவியங்களைக்கொண்டு வேதாகம விதிப்படி திருமஞ்சனாதிகளைச் செய்தல், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னுமிவற்றின் வழியாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்கின்ற ஐந்தாசைகளையும், நாளுக்குநாள் அடக்கல், விரதம், தேவதாபூசை, மந்திரம், எந்திரம், செபம், யாகம் என்னுமிவைகளை யனுசரித்தல், ஒருயிர்க்கும் இடையூறு வராமற்காத்தல், தவங்களினிற்றல், மனதை யடக்கி, அறிவோடுகலந்து, தற்பதத்தை யுணருகின்ற வரையில் ஆசிரியன் கட்டுரையையுஞ் சாத்திரவிதியையுங் கடைப்பிடித்திருத்தல், கோபமாதிகளைநீக்கல் முதலியனவாம். இவற்றை யனுட்டித்தவர்கள் சாமீப பதவியைப் பெறுவார்கள், அதாவது. நமது சமீபத்திலிருப்பதாம்.

யோகம்.

யோகமாவது, இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எண்வகைப்படும். இவற்றுள்.

௧. இயமமென்பது. கொல்லாமை, மெய்ம்மை கூறல், கள்ளாமை; பிறர்பொருளிச்சியாமை, இந்திரிய மடக்கல்முதலியனவாம்.

௨. நியமமென்பது தவம், தூய்மை, தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல். தெய்வம் வழிப்படல் முதலியனவாம்.

* இச்சரிதாவிலக்கணமேற்கப்பட்ட பிரமசாரியரும், இழிகுலத்தினரும், மாதரும், விருத்தரும், நோயினரும், மற்றுரும் ஆசாரியாபிஷேகமுடையராய் தருமநெறியே லௌகிகாங்கமுற்று, குருபத்தி, சிவபத்தி, சாத்திரபத்தி அடியார் பத்திமுதலியன வுடையராய், பொய், களவு, காமம், கள், சூதுமுதலிய அவநெறிகளைநீங்கி, சிவசிந்தனை யுடையவராயிருத்தல் வேண்டுமென்ப

ஆதனமென்பது, சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம் கேசரி, மயூரம், பத்திரம், முத்தம், சுகம், என்றொன்பதுவகைப்படும் இவற்றுள்-தொடைக்கும் முழங்காற்குநடுவே இரண்டுஉள்ளங்காலை யுஞ்செலுத்தி யிறுமாந்திருத்தலை சுவத்திகமென்றும் சகனபக்கத்தில் இருகாற்பரட்டையு மாறவைத்து அவ்விருகாற் பெருவிரலைக்கைப்பிடித்திருத்தலைக் கோமுகமென்றும். இருதொடைமேலும் இரண்டுள்ளங் காலையுமாறிதோன்ற வைத்தலை பதுமமென்றும், வலத்தொடையில் இடக்காற் பரட்டை சேர்த்து நிமிர்ந்திருத்தலை வீரமென்றும, பீசத்தின்கீழ் * சீவனியிடத்துப் பரட்டைவைத்து இடது முழங்கையை முழந்தாளில் வைத்து † அங்குலிவிரித்து, நாசியைப் பார்த்திருத்தலை கேசரி யென்றும், பீசத்தின் கீழ்ச்சீவனி யிடத்து இருகாற் பரட்டையும் வைத்து அவ்விரு பாதத்தையும் இருகையா லிறுகப்பிடித்து அசையா திருத்தலைப் பத்திரமென்றும், இடக்காற் பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின்மீ தூன்றவிருத்தலை முத்தமென்றும முழங்கை யிரண்டும் மூந்திப்புறத்தி லழுந்தப புவியிற் கையூன்றிக் காலீட்டித்தலைநிமிர்ந்திருத்தலை மயூரமென்றும், சுகமுநிட்டும மவ்வாறிருக்கினெய்துமோ அவ்வாறிருத்தலைச் சுகமென் றுங் கூறப்படும்!

௪. பிராணாயாமமென்பது பிராணவாயுவை (‡) ரேசக, பூரக கும்பகஞ் செய்தலாம்.

௫. பிரத்தியாகாரமென்பது புறத்தியைநீக்கி உள்நோக்கலாம்.

௬. தாரணையென்பது கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி இவற்றிலொன்றிற் சந்ததமு சிந்தையைத் திருத்தலாம்.

௭. தியான மென்பது, ஐம்புல மடக்கிச் சிவயோகஞ் செய்லாம்.

௮. சமாதியென்பது, இந்திரிய முதலிய தத்துவ சேட்டைகட் கேதுவாய் யாக்கையுணின்று அவற்றோடு கூடினும் அவற்றிற் பற்றின்றி (ஆன்மாவாகிய) தன்னைத்தான் காண்டலாம. இதற்றையடைட்டித்தவர்கள் சாரூபப்பதவியைப் பெறுவார்கள். அதாவது நம்மைப்போன்று உருவம்பெற்று வாழ்தலாம்.

---

* சீவனி-பீஜத்திற்கும், பெருவதொடைக்கு மிடைத்தானம்.

† அங்குலி-விரல்

‡ ரேசகம்-மூச்சு விடுதல், பூரகம் - மூச்சையிழுத்து உள்ளே வாங்கல் கும்பகம் - வாங்கிய மூச்சை உள்ளே ஸ்தம்பித்தல்.

## ஞானம்.

ஞானமாவது ஞானசாரியாருடைய * தீட்சாக்கிரமத்தினால் 0 வஸ்துத்திரயம் () தத்துவத்திரயம் 0 தசகாரியம் என்னும் மூன்று ஞானங்களையுமறிந்து அஞ்ஞானத்தினின்று நீங்குதலாம், இந்தமேலான ஞானத்தை யனுட்டித்தவர்கள் சாயுச்சிய பதவியையடைவார்கள். அதாவது நம்மோ டிரண்டறக் கலந்திருப்பதாம்.

தீட்சை என்பன. சமயதீட்சை, விசேடதீட்சை, நிருவாணதீட்சை என்பன. இகுது ஆசாரியனால் பக்குவாதரமாகச் செய்யும் வைதிகர்ந்மமென்க.

0 வஸ்துத்திரயமாவன. பதி, பசு, பாசம் என்பன. இவற்றின் பதியாவன. ஆதியந்தமின்மை, ரூபமின்மை, குணங் குறியின்மை, அவா வெறுப்பின்மை, ஒப்புயர் வின்மை, எங்கும் பூரணமாயிருக்கை, மனுதி தத்துவாதீதமாயுண்மை. ஆத்மாத்மகமாயிருத்தல். என்னும் அஷ்டமங்கள குணத்தினை வாய்ந்த நிட்களப்பொருளாயிருப்பன. பசுவாவன. அளவிடற்கரியதும், நித்தியத்துவமுள்ளதும், மலவிருளிலழுந்தியிருப்பதும், இறைவன் றிருவருளால் இருவினைக்கிடான சரீரமெடுத்துப் பலவாகிய புவனபோகங்களை அனுபவித்து இதனாற் புண்ணிய பாவங்களைச் செய்து பிறப்பிறப்புள்ளதும், புண்ணியமேலீட்டால் இருவினையொப்பு, மலபரிபாக முண்டாகுங் காலத்தில் குருவருளால் முத்தியின்பத்தைச் சேர்வதுமாம் பாசமாவது. ஏகத்துவமும் நித்தியத்துவமும், அளவிறந்த வல்லமையுமுள்ளதும், செம்பிற் களிம்புபோலச் சீவனைப்பற்றி அறிவு முழுவதையும்மறைப்பதும், புண்ணியமேலீட்டால் பக்குவப்படுவதும், இரவின் இருளினும் அதிக இருளாயிருப்பதுமாம்.

() (திரயம்-மூன்று) தத்துவத்திரயமாவன. ஆத்துமதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம்என்பன. இவற்றுள். ஆத்துமதத்துவமாவன.—பிரிதிவு-அப்பு, தேயு, வாயு ஆகாயம் என்னும் பூதம் ஐந்தும், சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை. ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரியம் ஐந்தும், சத்தம், பரிசம். ரூபம், ரசம் கந்தம் என்னும் தன்மாத்திரை ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னுங் கன்மேந்திரியம் ஐந்தும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும். ஆகிய இவ்விருபத்துநான்குமாம். இவற்றில் பிரிதிவு - உரத்துத்தரிக்கும், அப்பு-குளிர்ந்து பதஞ்செய்யும், தேயு-சுட்டொன்றுவிக்கும். வாயு - சலித் தொவையுந் திரட்டும், ஆகாயம். நிரந்தரமா யிடங்கொடுக்கும்,—சோத்திரம் - சத்தத்தை யறியும்' தொக்கு பரிசத்தை யறியும், சட்சு-ரூபத்தையறியும், சிங்குவை ரசத்தையறியும், ஆக்கிராணம்-கந்தத்தையறியும்.—வாக்கு-வசனிக்கும், பாதம்-கமனம்பண்ணும், பாணி - இடுதலும் ஏற்றலும் செய்யும், பாயுரு-மலசர்க்கத்தை விடும், உபத்தம்-ஆனந்தத்தைவிடும்.—மனம்-பற்றும், புத்தி-யிக்கும்' சித்தம்-சிந்திக்கும், அகங்காரம்-கொண்டெழுப்பும்.

வித்தியா தத்துவமாவன. காலம், நியதி, கலை வித்தை, இராகம், புருடன், மாயை என்னும். எழுமாம்—இவற்றுள் காலம். நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் என்னும் முக்காலத்தையுங் குறிக்கும்.—நியதி-கன்மத்தை நிச்சயத்து அநேகசாதி நாமத்துவங்களை யுண்டாக்கும்,—கலை-ஆணவத்தைச் சிறிதே நீக்கி அந்தந்த [illegible]திகளுக்கேற்ற கருமங்களைப் பற்றுவிக்கும்,—வித்தை அறிவையெழுப்பிக் கிரியையோடு ஞானத்தை ஓர்விக்கும்,—இராகம்-பெற்றதைச சிறிதாககிப் பெறாதகில் இசசையுண்டாக்கும்.—புருடன் பஞ்சேந்திரிகளின் வழியாகவிடயத்திலே யழுத்திவிக்கும்—மாயை - தமப் மாயை, மோகம், அவித்தை அசிர்தம் என ஐவகையாயிருந்து மயக்கும் இவற்றில் தமம், சீவசைதன்னியத்தை மறைத்தலும், மாயை-சகத்ரூபமான அன்னிதாத்தோற்றத்திற்குக் காரணமாயிறத்தலும, மோகம்-விபரீதஞான முண்டாக்கலும், அவித்தை-உணர்வழித்தலும். அசிர்தம் சகத்ரூபத்துக் கன்னியமாதலுமாம்.

சிவதத்துவமாவன. சுத்தவித்தை, ஈசுரம், சாதாகயம். சத்தி சிவம் என்னும் ஐந்துமாம்.—இவற்றிற் சுத்தவிதலை முதலிய சிவதத்துவங்களுள் ஞானமேறிக் கிரியை குறைந்திருக்கும், ஈசுரம்-ஞானங்குறைந்து கிரியையேறியிருக்கும். சதாக்கியம்-ஞானமுங்கிரியையும் ஒத்திருக்கும் சத்தி-கிரியையா யிருக்கும், சிவம்-ஞானமா யிருக்குமெனவறிக.இவற்றுளசிவம்-சிவனுக்கிடம். நாதமென்றுபெயர். சத்தி-காருண்ணியத்திறகிடம் விந்து வென்றும் பெயர். சாதாக்கியம்-அநுக்கிரகத்துக்கிடம் சதாசிவமென்றும் பெயர். ஈசுரம்-திரோ பவத்துக்கிடம். மகேஸ்வரனென்றும பெயர் சுத்த வித்தை, சங்காரத்துக்கிடம். உருத்திரனென்றும் பெயர்

0 தசகாரியமாவன, சத்துவரூபம், தததுவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆத்மரூபம் ஆத்மதரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம, சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம், என்பனவாம்—இவற்றுள். தத்துவரூபமாவது அவற்றின் குணங்களைக் காண்கை, தத்துவதரிசனமாவது. அவை தன்னிடத்திலே நின்று சிவித்த முறைமையைக் காண்கை, தத்துவ சுதகியாவது. அவை தனக்கு வேறென் றறிந்து நீங்குகை, ஆத்ம ரூபமாவது. ஆத்ம ஞானம் அறிவேவடிவெனவறிகை. ஆத்ம தரிசனமாவது, தத்துவஙகளையறிந்து நீங்கி நீங்கின வறிவுதானென வறிகை ஆத்மசுத்தியாவது; பந்த முத்தியிரண்டிலும் சிவனுபகரிக் கின்றானென்று தன்னுடைய சுதந்தர ஹானியை யறிகை, சிவரூபமாவது. தத்துவ முப்பத்தாறிற்கும் அப்பாலாய். வாக்கு மனாதீதகோசரமாய், ஞானமே வடிவமாயிருப்பதென வறிகை- சிவதரிசனமாவது. தத்துவ முப்பத்தாரையும் நீங்கிநிற்கும் ஆத்மாவையுந் தரித்து நிற்கின்ற ஞானமென்வறிகை, சிவயோக மாவது, இந்த ஞானந் தன்னைவிட்டு நீங்காதென் றறிந்து தான் அதுவாய் நிற்கை, சிவயோகமாவது; தான் அந்த ஞேயத்திலே நின்றழுந்திச் சிவத்தைப் பெறுகை யென வறிக.

அன்பனே? மேற்கூறியசரிதாதி நான்குபாயங்களையுங் கடைப்பிடித்து மனதில் ஆசிரியருடைய உருவத்தைப்போல தியானஞ்செய்து, சோடச வுபசாரங்களையும் நடத்துவதாகிய குருபாவனையையும், ஆலயங்களில் பூசித்துவரும் வடிவங்களைப்போல மனதிற்றியானித்து அபிடேக முதலியவைகளை நடத்துவதாகிய சொரூபபாவனையும், ஆசிரியர் சொல்லிய குறியைப் பார்த்து மனதைப்பஞ்சேந்திரிய வழியிற் செலுத்தாம லிருத்தலாகிய பூரண பாவனையையும், ஒன்றையுஞ் சுற்றிப்பாராமல் மனதைத் தற்போதத்திற்சேர்ப்பதாகிய அதீத பாவனையையும் அனுசரித்திருப்பதே நமதுதிருவடிகளை யடையத்தக்க உபாயமென்று சகல வேதாகமங்களினுட்பொருள்களையெல்லாம அங்கை நெல்லிக்கனிபோலத் தெரிவித்துத் தமது பரிபூரண கடாட்சமும் பாலித்து எழுந்தருளினர்.

பின்னர் புருசுண்டி அவையனைத்தையும் அன்போடு கேட்டு மகத்துவத்தால், இப்போதுசீவன்முத்தராகி யிருக்கின்றனரென்று சொல்ல, மீட்டுஞ் சூரசேனமகாராசன் தேவேந்திரனைப் பணிந்தெழுந்து இவ்விடத்தில் சங்கட சதுர்த்தி விரதத்தை யநுட்டிக்கின்ற ஒருவனால் இவ்விமானம் மீட்டுமெழும்பி தேவலோகஞ் செல்லுமென்று தேவரீர் சொன்னபடியால், அவ்விரதத்தின் மகிமையையும் அடியேற்குத தெருட்டவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குத் தேவேந்திரன் சொல்லுவான். அரசனே இப்புருசுண்டியென்பவர் இத்தன்மைத்தான மகத்துவத்தோடு மிருந்தனர்.

இந்திரவிமானம் மண்ணிழி படலம் முற்றிற்று.

---

புருசுண்டி சங்கட்ட.

## சதுர்த்தியனுட்டித்த படலம்.

---

கவையடிக் கயவாய்ப் பணிவகிர்ந் தனையகருமருப் பெருமையூர்ந்துலகி, னவைபுரிந் தவரை யிறுகுறப் பிணித்து நாதரவேழுகோ டியினு, மிவையிவைபுரிந்தா யெனக்கொடும் பாவமியம்பிவன் றுயர்செயுந் தரும, னவ்வினை யன்று னவ்வெழிலேனைக்க வடுத்தன னாரத முனிவன்.

ஐகஜீவ பரார்த்த விலக்கணங்களைத் தேறத்தெளிந்து, பசுபேர்த்தை முற்றுமகன் றுசர்வசித்திப், பிரதாயமுற்ற முனிபுங்கவர்

க்கேளீர்? இந்த்ர விமானம் மண்ணி னிழிந்ததையும், புருசுண்டி முனிவர் ஜீவன்முத்தரான பேற்றையும் முன்னர்சொன்னோம். இப்பால் அப்புருசுண்டி முனிவர் சங்கட்ட சதுர்த்தி யனுட்டித்தமையைச் சொல்லத் தொடங்குகின்றோம் சித்தசாந்தமாகக் கேட்பீர்களாக, பாவஞ் செய்தோரையெல்லாம பலவகை நாகங்களிற செலுத்தி வதைசெய்யவும், புண்ணியஞ் செய்தோரை போகபூமிகளில் விட்டு உபசரிக்கவுஞ் செய்து தனது நடுவுநிலைமை தவறாது நீதிசெலுத்தி வருகின்ற யமதருமராச னுலகத்தின் பெருமையைக் காணும்படியாக ஒருநாள் நாரதமகாமுனிவா சென்றனா அச்சால் அவரைக் கண்டவுடன் யமதருமராசன் விரைந்தெழுந்து, எதிர்கொண்டு வந்து, சோடச வுபசாரங்களும பூசித்து, சுவாமீ! தேவரீர் இங்கெழுந்தருளிய காரியத்தை அடியேற்குணர்த்தி யருளவேண்டுமென்று பிரார்த்தித்தான், அதற்கு நாரதமுனிவர். உனது உலகத்தின் வளங்களைக்காணவேண்டி இங்கு வந்தனமென்றுசொல்லலும், அவ்வெமதருமராசன் மகாபாக்கியமென்று ஆனந்தித்து அம்முனிவரை யழைத்துக்கொண்டு அந்நகரத்தில நவரத்னசொர்ணமயமா யிராநின்ற அளவற்ற விநோதங்களைக்காட்டி, நரகபூமியிலழைத்துக்கொண்டு சென்று அங்கு அளவற்றபேர்கள * இருபத்தெண்கோடி நரகங்களிலும வீழ்ந்து வருந்துவதைக் காண்பித்தனன், அவை யனைத்தையும நாரதமுனிவர்கண்டு அப்பாற் செல்லுகையில் கும்பிபாகமெனனும ஒர் நரகத்துள தேவர்களும் புகழ்ந்து வணங்கத்தக்க தவசிரேஷ்டராகிய புருசுண்டியினுடையசுற்றத்தினரெல்லாங் கிடந்துவருந்துகின்றதைப் பார்த்து, பரமசிவத்தினது திருவடிகளை மனதிற் றியானித்து, யமதருமராசனிடத்தில விடைபெற்று அவ்விடத்தினின்று நீங்கி, மிகுந்த கிருபையோடும் விரைவாக புருசுண்டி யிடத்திற்கு வந்து ஓ சாவ சித்திப பிரதாபரே! நீர் விநாயகக் கடவுளுடைய பெருங்கருணையினாலே அவர் சாரூபத்

* இருபத்தெண்கோடி நரகமாவன; கோரம அசகோரம அதிகோரம் அகோரம், குரோதம், தாளதாரம், பயானகம், காலாத்திரம், பயோத்தகம், சண்டம், மகாசண்டம, சண்டகோலாகலம், பிரசண்டம, பத்மம், மகாபத்மம், விரசீவிமம், வீமவீஷணம், காலாந்தகராளம், விகராளம், வசிரம் திரிகோணம், பஞ்சகோணம், தீர்க்கம், வர்த்துளம், சப்தபௌமம், அஷ்டபௌமம், திப்திமம், மாயாக்கியம் என்பன. முக்கிய நரகம் ௨௮ ல் இருது இராச நரகங்களெனக. இவை ஒவ்வொன்றும் ஐந்தைந்து மந்திரி நரகங்களோடு கூடி ௧௬௮-வகையினையுடையதாயிருக்கும் தனித்த வகை ஒன்றுக்கு கோடியாகி இருபத்தெண்கோடியென வழங்குவதென்ப.

தைப்பெற்று இங்ஙனமிருக்க, உம்முடைய சுற்றத்தின ரெல்லாம் யமலோகத்தில் கும்பிபாக மென்னும் நரகத்தில் வீழ்ந்து வருந்து கின்றார்க ளாதலால் அவர்களை நற்கதியிற் சேர்ப்பிக்கவேண்டிய முயற்சிகளை நடத்தக் கடவீரென்று சொல்லி ஆகாயமார்க்கமாகச் சென்றனர்.

அப்பால் புருசுண்டி யென்பவர் மனம் வருந்தி இதுகாறும் இக் காரணத்தை யாமறியோமே, இதற்கினி யென்செய்யத் தக்க தென்றுயோசித்து சிறிதுநேரந் தியானித்திருந்து தமதுமனத்துள் ஒரு நிச்சயத்தையுணர்ந்து சகல பொருள்களையுஞ் சேகரித்து நர கத்தில் வீழ்ந்து வருந்துகின்ற சுற்றத்தினரைக் குறித்துவேதாகம விதிப்படி சங்கட்டசதுர்த்தி விரதத்தை யனுட்டித்து அவ்விரதப் பலனை முன்னர் தம்மை யாட்கொண்டு பதிபசுபாசவிளக்கத்தினை யுபதேசித்தருளிய கணேசமூர்த்தியினுடைய திருக்கரத்தில் தத் தஞ்செய்தனர். இவ்வாறுதத்தஞ்செய்வதன் முன்னமே * கும்பி பாகமென்னுநரகத்தில் வீழ்ந்து வருந்தியிருந்தவர்களெல்லாம் வி மானங்களிலேறித் தெய்வலோகம்போய்ச் சேர்ந்தார்கள் ஆதலால் ஒரு தினத்திற்செய்த அவ்விரதத்தின் பயன் இத்தன்மையதாயின் எக்காலத்தும்அதனையனுட்டித்துவருமவர்களடையும்பயன்யாவரா லளவிட்டுரைக்கற்பால தென்று தேவேந்திரன் சூரசேன மகாராச னுக்குச் சொன்னான்.

புருசுண்டி சங்கட்ட சதுர்த்தி யனுட்டித்த படலம் முற்றிற்று.

---

# கிருதவீரியன் றவம்புரி படலம்.

வயப்போர் மன்னர்க் கேறனையான் வழங்குகிருத வீரியனென்
றியற்பேருடையான்சுகந்தையெனு வியம்பப்படுந்தன் மனைவியொடு
நயப்போ டமர்ந்து வாழ்நாளி னவைதீர் கதியுற் றிடுமக்கட்
பயப்பா றின்றிமனங்கவன்று படர்ந்து வனத்திற் றவம்புரிந்தான்.

யான் எனதென்னுஞ் செருக்கினையொழித்து சித்தஞ்சிவசொ ரூபமாகித் திகழும் முனீந்திரர்களே ? விநாயகக் கடவுளுடைய சங்

* கும்பிபாகமாவன. மகாநரகம் நான்கில், பத்துவகைப்பட்ட இராஜ ராஜேசுவர நரகத்துள் இருநோர் நரகமென்ப.

கட்டுசதுர்த்திவிரதத்தைப் புருசுண்டி முனிவர் அனுட்டித்துத் தம் மினத்தினரை யெல்லாம் விண்குடியேற்றுவித்த மகத்துவத்தைச் சொன்னோம். இப்பால் கிருதவீரியன் றவம்புரிந்து பெற்ற திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீராக. மீட்டுந் தேவேந்திரன் சூரசேன மகாராசனை நோக்கிச்சொல்லுவான் அரசனே உலகமுழுதுந்தொழுதேத்தும்படியாகக் காலந் தவறாமல் நீரைச்சுரந்தளிக்கின்ற காவிரி நதிக்கு ஒருறைவிடமாகிய சையவரைச் சாரலில் சகல வளங்களு நிறைந்த ஓர்பட்டணத்தில் எல்லா வேந்தர்கட்கும் இராச கண்டீரவத்திற் கொப்பானவனாய் வையகமுழுதும் வணங்கும்படி அரசாட்சிசெய்துவந்த கிருத வீரியனென்னும் இயற்பெயரையுடைய ஓரரசனிருந்தான். அவன் சுகந்தையென்கின்ற மனைவியோடுவாழ்வுற்றிருக்குநாளையில் தன்னை நற்கதியிற்சேர்ப்பிக்கவல்ல புத்திரப்பேறின்றி மனவருந்தத முற்றுந் தானுந்தன் மனைவியுமாக வனத்திற் சென்று காற்றையுஞ் சருகையும் புசித்து உடல் வருந்தத் தவஞ் செய்து கொண்டிருந்தான். அதை நாரதமுனிவர் அறிந்து பிதிருலகத்திற் சென்று அக்கிருதவீரிய மகாராசனுடைய தந்தையைக் கண்டு பிதிர் தேவனே! வேதவொழுக்கங்களில் நின்று தனதுசெவ்விய கோலைத் திசை யனைத்தினுஞ் செலுத்தி நீதியோடும் அரசாட்சிசெய்து வருகின்ற உனது குமாரனாகிய கிருதவீரிய மகாராசனனவன் இதுகாறும் ஓர் புத்திரப் பேறில்லாத துக்கத்தினல் தன் நகரத்தை விடுத்து வனத்திற் சென்று உடல், உயிர்உள்ளம் என்னு மிவைகள் வருந்தும்படியாக அரிய தவத்தினைச் செய்கின்றான். அவன்மனைவியும் அவ்வாறே இருக்கின்றனள். இனியவர்கட்குப் புத்திர னுதித்தா லன்றி உயிர்வைத் திருக்கமாட்டார்கள் பின்னர் உனது வமிசமும் விருத்தியில்லாமற் போய்விடும், ஆதலால் உனது புத்திரனுக்கு மக்கட்பே றுண்டாகத் தக்க முயற்சியை விரைவில் நடாத்தக் கடவையென்று சொல்லித் தமதிருக்கையை யடைந்தனர்.

இப்பால் அவை யனைத்தையும் பிதிர்தேவன் கேட்டமாத்திரத்தில் மனம் வருந்தி அந்நிமிடத்திற் சத்தியலோகத்திற் சென்று பிரமதேவனைக்கண்டு சாஷ்டாங்கமாக வணங்கி சுவாமி! மறத்தாறு கடந்தீட்டிய பொருள்களை அறத்தாற்றிற் செலவுசெய்து எல்லாப் புகழையும் எளிதிற் சம்பாதிக்கவல்ல எனது செல்வக்குமாரனுக்கு இதுகாறும் ஒருபுத்திரப்பேறில்லாத காரணம் யாதினாலோ அதனை

அடியேற்கு விளம்பி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டான். அதற்குப் பிரமதேவன் சொல்லுவார் ஓபிதிர்தேவனே! உன்மைந்தனாகிய கிருதவீரியன் முற்சனனத்தில் இப்போது வசித்திருக்கின்றவூரில் அரசவமிசத்திற்றானே பிறந்து சாம்பனென்னும் இயற்பெயரைவகித்துக் கணேச னென்னும் புத்திரனைப் பெற்றுவாழ்ந்திருக்குங்காலத்தில், ( பாம்பின்வெவ்வாய்ப்பட்டு வெதும்புவானைப்போல நிகரற்ற துன்பத்தை நெடுநாளனுபவித்து இரண்டுதினம்மூன்று தினமாகப் பட்டினிகளிருந்து இடையிற்கிடைத்ததைப் புசித்துக்கொண்டு தனது வாழ்நாளைக்கழித்து வருகையில் ஓர் நாள் ஏதுங்கிடையாதவனாய் வருந்திப் பசியின் கொடுமையையாற்றமாட்டாது விதிதப்பிவழிபறித்தன்னை நினைத்து, நெருங்கிய கானகத்திற் புகுந்து, அதில் பன்னிரண்டு பிராமணர்கள் வழிச்செல்வதைநோக்கி, அவர்களெதிரில் யமனையொப்பச்சென்றுஇருப்புத்தடி கொண்டு மோதி யுயிரைவிசும்பிலேற்றி, உடல்களைக்குகைகளிற்போட்டு அவர்கள் வைத்திருந்த வஸ்திராபரணமுதலியபொருள்களைக் கவர்ந்துகொண்டு, இராக்காலத்தில் வீட்டிற் சென்று தாளிட்டிருந்த கதவைப் பலமுறைத் தட்டித்தன் குமாரனைக் கணேசா, கணேசா, வென்று மூன்றுதரங் கூவினான் அதற்குஅக்கணேசன் அன்று முழுவதும் அன்னபானங் கிடையாமல், மிக்க சோர்வினை யடைந்து, உயிரிழந்து, தனியாய்வீழ்ந்து கிடந்தமையால்,தனக்குக்கதவந்திறப்பாரொருவருமின்றி மற்றொருவழியாகச் சென்று, வீடேறிக்குதித்து, தன்புதல்வன் இறந்து கிடக்கின்றதை பார்த்து, மிக்க துயரங்கொண்டு, தனக்கிருந்த பசியின் கொடுமையினாலும், புத்திரனிறந்தானென்னுந் துக்கத்தினாலும், பிரமஹத்தி சூழ்ந்துகொண்டதினாலும், அன்றிரவெல்லாந் தூங்காதிருந்த தன்மையினாலும், மறுநாள் உதயத்திற் காலனாணையாற் காயத்தை நீங்கினான். அத்தினம் சங்கட்ட சதுர்த்தியாக விருந்ததன்றி, அதற்கு முன்னாள் தனது புதல்வனாகிய கணேசன் அன்ன பானாதிகளின்றி யிறந்தமையால், உடனே தெய்வ விமானம்வர, அதில் அக்கணேசனென்பவனேறி விநாயக லோகத்திற் போய்ச் சேர்ந்தான். மேற்கூறிய சாம்பனோவெனில்: அத்தினந் தன்புதல்வனைக் கணேசாவென்று மூன்றுதரங் கூவியநன்மையால் இச்சனனத்தில் உனக்கு புதல்வனா யவதரித்து காமனுங்கண்டு நாணத்தக்க கட்டழகினையுடையவனாகி உலகமெல்லாம் வணங்கத்தக்க அரசுரிமையையடைந்தனன். ஆயினும் அந்தணரைக்கொன்ற பிரமஹத்தி பாவத்தினால்

# கிருதவீரியன் றவம்புரி படலம்.

இதுகாறும் புத்திரப்பே றில்லாதவனாயினன். ஆதலால் உன்குமாரனாகிய கிருதவீரியனுக்குப் புத்திரப்பேறுண்டாக வேண்டுமென்று கருத்திருக்குமாயின் மேற்சொன்ன கொலைபாதகச் சேடமொழியுமாறு யானைமுகக் கடவுளாகிய கணேசமூர்த்தியினது சங்கட்டசதுர்த்தி விரதத்தை யநுட்டிக்க வேண்டும். அவ்விரதத்தை யநுட்டிக்கு முறைமையைச் சொல்லுவோங் கேட்பாயாக.

மாசிமாதத்தில் அமாபட்சத்தில் செவ்வாய்க் கிழமை கூடிய சதுர்த்தியில் அவ்விரதத்தைத் தொடக்கி அன்று உதயத்திலெழுந்து ஸ்நானமுதலிய கடன்களைமுடித்து திருவெண்ணீறணிந்து உருத்திராக்கம் பூண்டு சுத்தபூமியி லிருந்து சிரசாதி பாதம்வரையில் விதிப்படி நியாசஞ்செய்து காமாக்கினியாதிகளைத் தணித்து கணேசமூர்த்தியினுடைய பாதபதுமங்களை மனதிலிருத்தி ஏகாக்கரமந்திரம் சடாக்கரமந்திரம் திருநாமமந்திரம் என்னும் இம்மூன்றினையுந் தியானித்து அன்ன பானாதிகளை நீத்து சந்திரோதய மானவுடனே விநாயகமூர்த்தியை யெழுந்தருளச் செய்து சகல பூசாதிரவியங்களோடும் பூசனைமுடித்து சந்திரனுக்கும் அருச்சனையாதிகளை நடத்தி வேதியர்களை வரவழைத்து அவர்கட்கு அறுசுவையோடுங் கூடிய உண்டியை அன்போடளித்து அன்றிரவு முழுவதும் நித்திரையின்றி யிருந்து விநாயகப் பெருமானுடைய திவ்விய சரித்திரங்களைக் கேட்டுக் கொண்டிருப்பது விதியாகும். பெறுதற்கரிய இவ்விரதத்தைச் சதுர்த்திதோறும் ஒருவருடம்வரையிற் செய்கின் றவர்களுக்குப் புத்திரப்பேறு முதலான பாக்கியங்களுண்டாகும், மேலும் அதனை வன்னிவிருக்கத் தடியிலிருந்து அநுட்டிப்பார்களாயின் கூன் குருடு முதலிய எச்சங்க ளொழியப்பெற்று எல்லாப் பொருள்களையும் வேண்டுமட்டும் பெறுவார்கள். ஆதலால் இத்தன்மைத்தாகிய மேலானவிரதமே நீ கருதிய கோரலைமுடிக்கத் தக்கதென்று பிரமதேவன் சொல்ல அவையனைத்தையும் பிதிர்தேவன் அமுதாகக்கேட்டு மனமகிழ்ச்சி கொண்டு மீட்டுந் தொழுதெழுந்து சுவாமீ விநாயகப் பெருமானுக்குச் செவ்வாய்க்கிழமையில் வருகின்ற சதுர்த்தி முக்கியமா யிருக்கின்ற காரணம் யாதுகொண்டோ அதனையும் அடியேற்குத் தெரிவித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனன், அதற்குப் பிரமதேவன்

முன்னொரு காலத்தில் நருமதை நதிதீரத்தில் அரையிற் சர்ப்பக்கச்சினை வீக்கியவிநாயகக் கடவுளுக்கு அன்பராகிய பரத்துவாச

றென்னும் ஒரு முனிபுங்கவ ரிருந்தார் அவர் ஒருநாள் அந் நரு
மதையில் ஸ்நானஞ் செய்யப் புக்கபோது யாவருந் தெய்வ ரம்பை
யோவென் றெண்ணத்தக்க வனப்பினைவாய்ந்த ஒரு ஸ்திரீயானவள்
சில கூட்டத்துடன் அந்நதியில் ஸ்நானஞ்செய்யவந்து அதன்கரை
யின்க ணின்றனள். அவளை அப்பரத்துவாச முனிவர் பார்த்தமாத்
திரத்தில் அவர் நெஞ்சமானது, கூற்றமோ, கொடும்பகழியோ
வென்றுசொல்லத்தக்க அவளது கண்வலையிற் சிக்கி அலமற, அதை
யம்முனிவர் சிறிது மாற்றுவதாயினர். அவ்வாறு மாற்றுவதற்கு
முன்னமே அவருடைய வீரியம வெளிப்பட்டுப் பூமியில்வீழ்ந்தது.
அதற்கம் முனிவர்மனங் குன்றிப் பின்னரொருவாறு தேறித் தமதி
ருக்கையைச்சேர்ந்து தவஞ்செய்து கொண்டிருந்தனர். இப்பால்
அவ்வீரியமானது விழுந்த, விடத்திற்றனே ஒரிள மகவாகியிருக்க
அதைப்பூமிதேவி யெடுத்து நமக்கு நற்பேறு கிடைத்ததென்று
அன்போடுவளர்த்து வந்தனள். பின்னர் அக்குழந்தையானதுதன
துமேனி செவ்வானம்போலச் சிவந்து, அழல்போல ஒளிவிட்டிருந்
தமையால் அங்காரகனென்றும், வீரியமாய் பூமியில் வீழ்ந்து பிள்
ளையானதால் பூமகனென்னும், பெயரை வகித்துத் தெருக்களில்
விளையாடிக் கொண்டிருக்குங் காலத்தில், ஓர்நாள் தனதன்னையாகிய
பூமிதேவியிடத்தில் வந்து சாஷ்டாங்கமாகவணங்கியெழுந்து அம்
மா! அடியேனைப்பெற்று வளர்த்ததாய்நீ யாயினை என் தந்தையாவ
ரோ? அறிகின்றிலேன, அதனை இப்போது எனக்குத் தெரிவித்தரு
ளவேண்டுமென்று வினவ, அதற்கபபூமிதேவி, இசைந்து உனது
தந்தை பரத்துவாச முனிவரென்று அறிவித்து, உடனே அப்பிள்
ளையையழைத்துக்கொண்டு அம்முனிவரது ஆசிரமத்திற் சென்று
அவர் திருவடிகளில் வணங்கி சுவாமி இச்சிறுவன் தேவரீர்வீரியத்
தினின்றும் உதித்தவன் இனித்தேவரீரே அவனைகைக்கொள்ள
வேண்டுமென்று சொல்லி அவனை யவரிடத்தில் விடுத்துச்சென்ற
னள். அதற்கம் முனிவர் மனமகிழ்ந்து தமது இரண்டு கரங்களா
லும் அக்குழந்தையைத்தழுவியெடுத்து உச்சிமோந்து உபநயனாதி
களைச்செய்து, வேதமோதுவித்து கலையாதிகளையுங்கற்பித்து கணே
சமூர்த்தியுடைய திருமந்திரத்தை உபதேசித்து அதனைத் தியா
னிக்கு முறைமையினையுந்தெருட்டி நீதக்கவிடத்திற்சென்று தவஞ்
செய்து கொண்டிருக்கக்கடவை யென்றேவினர் உடனே அங்கார
கன் அவ்வாசிரமத்தி னின்று நீங்கிமற்றொரு வனத்தின்கட்சென்று
ஒப்புயர்வற்ற மகாகணபதியினுடைய திருவடித்துணைகளையே சார்

பாகப்பற்றி, நாடோறும் அவர் மந்திரத்தைக் கணித்து, ஆயிரம்
வருடம் வரையிற் றவஞ்செய்துகொண் டிருந்தனன். பின்னர் அத்
தவத்திற்கு விநாயகமூர்த்தி அருள்சுரந்து, மதம்பொழிகின்ற யானை
வதனமும், அருட்பார்வையும, துதிக்கரமும், பத்துபுயங்களும்,
ஒளி வீசுகின்ற திருமேனியும் உடையவராய், அவனெதிரிற்பிரத்தி
யட்சமாக, உடனே அங்காரகன் விரைந்தெழுந்து சாஷ்டாங்கமாக
நமஸ்காரஞ்செய்து ஆனந்தக் கூத்தாடி வேதாகமங்களாற் றுதித்து
கரைந்து கண்ணீர்பெருகவுடன் முழுவதும் புளகாங்கிதங்கொண்டு
நின்றனன். அதற்குக்கங்கையும், கொன்றையும், அணிந்த சடாபா
ரத்தினையுடைய கணேசமூர்த்தியானவர் சந்தோஷித்து, அப்பனே!
நீசெய்ததவத்திற்கு மெச்சினேம். உனக்குவேண்டியவரங்களைக் கே
ட்பாயாகவென்று திருவாய் மலர்ந்தனர். அங்காரகன் மீட்டுந்தொ
ழுதெழுந்து அரிய தவத்தர்கட் கானந்தவீடளிக்குங் கர்த்தனே
தேவரீர் திருவடிகளில் இடைவிடாதபத்தியும், தேவர்களோடுகூடி
அமுதுண்ணத் தக்கஉறவும், கோள்களோடொன்றாகவதியும்பெறும்
அடியேற்குக் கிருபைசெய்வதன்றி யான் தேவரீர் தரிசனங்கிடைக்
கப்பெற்ற இத்தினஞ்சதுர்த்தியாதலால், இச்சதுர்த்தி திதியில்
எனது வாரமாகிய அங்காரக வாரஞ்சேர்ந்து வருகின்ற தினத்தில்
சுவாமிகளைத் தொழுகின்ற பேர்களுக்கு வினைப்பற்றுகளையொழித்
தருளவேண்டுமென்று பிரார்த்திததனன். அவ்வாறே கணேசமூர்த்
தி யநுக்கிரகித்துஅன்பனே யாம்சகல மங்களத்தோடும்உனக்குக்
காட்சிதந்தமையால், அதைத்தெரித்த வுனக்கு மங்களனென்று
பெயருண்டாகக்கடவது. நீஇன்னுஞ் சிலநாள்வரையில் இவ்விடத்
திலிருந்து நம்மைப்பூசித்து வரக்கடவையென்று திருவாய்மலர்ந்து
தமது திருவுருவைக் கரந்தருளினார். பின்னரவ் வங்காரகன் அவ்
விடத்திற்றனே யிருந்து, பரம் பொனறைல் ஓராலயஞ்சமைத்து,
அதிற்றனக்குக்காட்சி கொடுததருளிய கணேச மூர்த்தியினது திரு
வுருவத்தை தாபித்துப் பூசனைசெய்துவந்தான்: இவ்வாறு சிலகா
லம் பூசித்துக் கொண்டிருக்கையில் விநாயகப் பெருமானுடையபே
ரருளால், ஒரு தெய்வவிமானம் வர அதில் அவ்வங்காரகன் ஆரோ
கணித்துத் தேவலோகத்தைச் சேர்ந்து தேவர்களோடுங்கூடி, யமு
துண்டு, நவக்கிரகங்களில் ஒருவனாய்க் கலந்தனன். ஆதலால் அவ்
வங்காரகனது தினத்தில் வந்த சதுர்த்தியானது ஏனைய சதுர்த்தி
களைவிட விநாயகமூர்த்திக்கு மிக்கசந்தோஷத்தை யளிப்பதாயிருப்
பதன்றி அநுட்டித்தவர்கட்கு எல்லாச் சங்கட்டங்களையும் போக்,

கத்தக்கதாயு மிருக்கின்றமையால், அதைச்சங்கட்டசதுர்த்தியென்று சொல்லப்படும், அவ்வங்காரகனாற் பிரதிட்டைசெய்த விநாயகமூர்த்தியானவர் நினைத்தவரங்களை நிகரின்றியளிப்பவராதலால்,எல்லாத் தேவர்களும் அவரைப்பூசித்து சிந்தாமணி விநாயகரென்று திருநாமஞ் சாத்தினார்கள். மேலும்அவ்வங்காரகன் அம்மூர்த்தியை அவந்திமாநகரத்திற்கு மேற்புறத்திற் பிரதிட்டைசெய்து பூசித்ததால் அத்தலத்திற்குக் சாமதமென்று வேறொருபெயர் வழங்குகின்றது. அவ்விடத்தில் யோகிகள் சித்தர்கள் முதலாயினோரும் வந்து வணங்குகின்றார்கள் என்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச்சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொன்னான்.

கிருதவீரியன் றவம்புரி படலம் முற்றிற்று.

---

## சந்திர னனுட்டித்த படலம்.

போற்று கின்றவங் காரக சதுர்த்தியின் போலிவைச்
சாற்றி நிற்றலும் பிதிரனா னவன்றகத் தொழுது
தோற்று சந்திர வுதையத்திற் பூசிக்கச் சொன்ன
மாற்ற மென்னெனத் துரையென மலரவன் கிளப்பான்.

உலக வியல்பு, பந்தவியல்பு, மோக்ஷவியல்பு, நரகவியல்பு என்னும் பந்தாதிகாரங்க ளனைத்து முள்ளாந வுணர்ந்து தேகாதி தத்துவங்களை யெல்லாஞ் சிவசொரூப மாகக்கருதி சிவயோகத்தானந்திக்கும் தேவேந்திரர்களே! விநாயக மூர்த்தியைஅங்காரகனனுட்டித்ததையும், சதுர்த்தி அங்காரக சதுர்த்தியான வரலாற்றினையுஞ் சொன்னோம், இப்பால் சந்திரனுபாசித்த மான்மியத்தைச் சொல்லுவோங் கேட்பீராக. மீட்டுந் தேவேந்திரன் சூரசேன மகாராசனுக்குச் சொல்லுவான்; அரசனே கிருதவீரிய மகாராசனுடைய பிதிர்தேவன், பின்னும் பிரம தேவனைப் பணிந்தெழுந்து, சுவாமி மேற்கூறிய அங்காரகசதுர்த்தியைச் சந்திரவுதயத்திற்பூசிக்கச் சொன்ன வரலாற்றை திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று விண்ணப்பஞ் செய்து கொள்ள அதற்குப் பிரமதேவன் சொன்னதாவது பிதிர்தேவனே முன்னொருகாலத்தில் அண்டர் நாயகராகிய சிவபிரானைத் தரிசிக்குமாறு யான்கைலாயகிரிக்குச் சென்றேன். அப்போது சிவபெருமான் விநாயக மூர்த்தியோடுஞ் சுப்பிரமணியக் கடவுளோடுந்

திருவோலக்கத்தி லெழுந்தருளி யிருந்தனர். அச்சமயத்தில் நாரத முனிவர்வந்து தமது கையுறையாகக் கொண்டுவந்த ஓர் கனியைக் கர்த்த னெதிரில் வைத்து திருவடிகளில் அஷ்டாங்கமாகத் தொழு தெழுந்து தமது யாழினைமீட்டி தேனுண்டு பெய்யும் மேகம்போல இசையாகி அமுதத்தைப் பொழிவதாயினர். அவ்விசை யமுதத் தைச் சிவபெருமான் செவிமடுத்து அம்முனிவ ருள்ளத்தை மகிழ்ச்சி பெறச்செய்து, அவர் கையுறையாகத் தந்தக் கனியையெடுத்து எனதுமுகத்தை நோக்கிப் பிரமனே நம்மிருபக்கலும் விநாயகமூர்த்தியுஞ் சுப்பிரமணியனு மிருக்கின்றதால் இவர்கடகுள் இக்கனியை யாவர்க்குத் தரத்தக்க தென்று வினவியருள அதற்கு முருகக் கடவுள் இளையவ ராதலால் அவருக்கே கொடுக்கத் தக்கதென்று சொன்னேன். அவ்வாறேயதனை அவர்க்களித்தனர். அதைக்கணே சமூர்த்தியறிந்து விழிகளிற் றீப்பொறிகள் சிதறும்படியாகக்கோபித்து என்னை நோக்கலும் முன்னஞ் சிவபிரானால் எனது சிரமறுப் பட்டபோது கொண்டபயத்தினும் அதிகபயத்தை யடைந்துஎன் னுடனிருந்த கணங்களோடும் அவர் சமுகத்திற் சென்று திருவடிகளிற் றீர்க்கதெண்டஞ் செய்து, பலமுறையும் வேதாகமங்களிற் றுதித்து, சுவாமீ அடியேன் செய்த குற்றத்தை மன்னித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துக் கொண்டேன் அதற்கு அக்கணேசமூர்த்தி மனதிரங்கி யான்கேட்டுக் கொண்டவாறே கிருபை புரியுஞ்சமயத்தில் அதைப் பார்த்துக் கொண்டிருந்த சந்திரன் தன்னுள்ளத்தின்கண் அவமதிப்பு கொண்டவனாய்ச் சிறிது பல்லைக் காட்டி நகைத்தனன். அதைக் கணேசமூர்த்தி நோக்கி மிக்ககோபங் கொண்டு பெரியோர்க ளிருக்கின்ற சபையில சிறிதேனுமடக்கமில்லாமல் நகைத்தனை யாதலால் இனி நீ உலகத்தில் பிரகாசமின்றி மறைந்துபோகக் கடவது உன்னுருவத்தைக் கண்டவர்களும் இடருழக்கக் கடவதொன்று சபித்தனர்.

இச்சாபங்களைப் பெற்றவுடனே சந்திரன் ஆகாய மார்க்கமாய் திரிதலற்றுத் தன்னொளியும் மறைப்பட்டவனாய் மிக்க மனவருத்தத்தோடு தன் திருக்கையிற்றுனே யிருந்து விட்டனன் பிதிர் தேவனே ஏளனமான நிலைகளையெவரிடத்திற் செய்தாலும் அதனாற் பின்னர் துன்பம் வருமென்று பெரியோர்கள் கூறியிருக்க, அப்பெரியோர்களிடத்தில் அதனைச் செய்து யாவர் பிழைக்க வல்லவர்கள் அவ்வறியாமையால் தெள்ளிய திங்களுந் தீதுற்றதல்லவாஇவ்வாறு.

சந்திரன் ஒளிமழுங்கி மறைந்துப் போகலும் தேவர்கட்கு அமுத பானங்கிடையாமல் வருந்தி அவர்கள் இந்திரனிடத்திற் சென்று முறையிட அவ்விந்திரன் அதிக துயரங்கொண்டு இவ்விபரத்தைக் கணேசமூர்த்தியே தீர்க்கத்தக்கதென்று நிச்சயித்து எல்லாத் தேவர்களோடும் அவர் சமுகத்திற்சென்று அவரது பாத பதுமங்களைத்தொழுதெழுந்து தீனசரண்ணிய மூர்த்தியே விண்ணுலகத் தார்க்குஅமுதஞ்சுரத்தலும் மண்ணுலகத்தார்க்குப் பயிரை வளர்த்தலுஞ்சந்திரனுக்குரிய கடமையானது தேவரீரது கட்டளையே யன்றி வேறன்று. அச்சந்திரன் இப்போ தில்லாமையால் இவ்விரண்டு உலகமுமாழ்கி யிருக்கின்றன. சிறியோர் செய்த பிழையைப் பெரியோர்பொறுப்பது கடனாதலால் அறிவீனனாகிய சந்திரன் செய்த குற்றத்தைத் தேவரீரே பொறுத்தருளா விட்டால் மற்றை யாவரிடத்தில் பொறுமை நிற்கமாட்டும ஆக்கவும் அழிக்கவும்வல்லபரம் பொருளே: மிக்க துயரத்தில மூழ்கி யிருக்கின்ற சந்திரன் சாபத்தைத்தேவரீர் கிருபைகூர்ந்து நிவிர்த்திசெய்தருள வேண்டுமென்று பலமுறைதுதித்து இருந்தனன். இவ்வாறு மனத்துயர்கொண்ட எல்லாத்தேவர்களோடுந் தேவேந்திரன் செய்துகொண்ட விண்ணப்பத்திற்கு விநாயகக்கடவுள் செவிகொடுத்து இந்திரனே; நெருப்பு சுடாமற் குளிர்ந்தாலும், இருள் சூரியனை விழுங்கப் பட்டாலும், பூமிக்குப்பொறுமையற்றாலும் நமதுவாக்கியம் எக்காலத்தும் மாறுந் திறமன்று, நம்மை நன்மையோடு வந்து நயந்துபோற்றின பேர்க்குஇன்மையென்னுந் துன்பமெய்தலுமில்லை, இதுவே நமது தன்மையென் றறியக்கடவை ஒரு சந்திரனுக்களித்த சாபத்தி னிமித்தம் நீங்கள்யாவரும் பரிந்து கேட்டுக் கொள்வதால் அவனைச் சிறுமை செய்கின்ற சாபத்தை நிவர்த்தி செய்கின்றோம் அஃதெவ்வாறெனில், ஆவணிமாதம் பூர்வபட்சத்தில் வருகின்ற சதுர்த்தியில் மாத்திரம் அதனை யாவரும் பார்க்காதிருக்கக் கடவர்கள. மறந்தேனும் பார்ப்பார்களாயின் அவர்கள் பலவகைப் பாதகங்கட்கும் பாத்திரர்களாகி இடும்பைக்கடலினின்று மெழுந்திரார்கள் மற்றைநாள்களி லெல்லாம் முன்போலவே அவனுருவினை யாவரும் ஆகாயத்தின்கண் காணலாம். இதனையறிந்து நடந்துகொள்ளக் கடவீர்களென்று திருவாய் மலர்ந்தருளினர் அத்திருவாக்கினைக் கேட்டலுந்:தேவர்களெல்லாம் உயர்ந்தோம் உயர்ந்தோமென்றுதுள்ளிஆனந்தக் கூத்தாடினார்கள். இப்பால்இந்திரன் அவ்விடத்தினின்றும்விடைபெற்றுச் சந்திரனிடத்திற் சென்றுவிநாயகக்கடவுளருக்

கிரகித்த முறைமையைக்கூறி அக்கடவுளது ஏகாக்ஷர மந்திரத்தை உபதேசித்து, ஓகுமுதநண்பனே! நீ உன்மனதிற் கணேச மூர்த்தியை யிருத்தி, அவர் மனுவாகிய இவ்வேகாக்ஷரமந்திரத்தை இடைவிடாது தியானித்து, அவர் பெருங் கருணையைப் பெற்றுக் கொள்ளக்கடவையென்று சொல்லி, யெல்லாத் தேவர்களோடுந் தனது சொர்க்கலோகத்திற்குப் போய்விட்டான். பின்னர் சந்திரன் அவ்விடத்தினின்றுநீங்கி. கங்காசர்வசித்தி நகரமென்று சொல்லத்தக்க ஓரிடத்திலிருந்து மனோதிடங்கொண்டு ஏகாட்சர மந்திரத்தைஇருபத்திரண்டு வருடங்கணித்தான். அதறகுக் கணேசமூர்த்தி மனதிரங்கி, ஒற்றைக்கோட்டினையுடையயானை முகத்தோடும் அவனுக்கெதிரிற்பிரத்தியட்சமாயினார். உடனேசந்திரன் விரைந்தெழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்து, விழிகளில் ஆனந்த நீர்த்தாரைகளைச்சொரிந்து, சுவாமி! அறிவிலியாகிய அடியேன் அறியாமற் செய்த பிழையை முழுதும் பொறுத்து என்னைக குழுமியரிக்கின்ற கொடுந் துன்பநோயை வீழச்செய்து, தேவரீரது மெய்யருளைத் தந்து ரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்கு விநாயகக்கடவுள் கிருபைகூர்ந்து சந்திரனே! உனக்கு வேண்டியவரமெல்லாம் முன்னமே கொடுத்திருக்கின்றோம், இன்னுமோர் வரமுந்தருவோங் கொள்ளக்கடவையாக. அஃதாவது, சங்கடங்களை நீக்கிக்கொள்ள வேண்டினோர் அங்காரக சதுர்த்திதோறும் நீ உதயமாகின்றசமயத்தில் நம்மைப் பூசைசெய்து, உன்னையும் அருச்சித்து, துதிசெய்யக் கடவர். உன்னையாவருந் தொழும்படியாக, உனது கலைகளுள் ஓர் கலைமாத்திரம் நமது முடியின் மீதிருக்கக்கடவது, என்றிவ்வாறு அருள்கூர்ந்து அவனை ஆகாயத்திற் செல்ல விடைகொடுத்து, தமதுதிருவுருவைக்கரந்தருளினர். இப்பால் சந்திரன் தனது பகிர்முகத்துள்ள மலினமெல்லாம் ஒழிந்தமையால், அகமுகத்துள்ள இருளுங்கடந்தவனாய், உடனே எண்ணற்ற கிரணங்களைக்கொண்டு, முன்னிருந்ததிலும் அதிகப் பிரகாசத்தினை யடைந்து, அழகுபொருந்திய ஓர் கோயிலைச்சமைத்து, அதில் ஐங்கரக் கடவுளாகிய கணேச மூர்த்தியைப் பிரதிட்டை செய்து, பாலசந்திர விநாயகரென்று திருநாமங்கூறி, சிறந்த பூசனைகளை யியற்றி, பழையபடி ஆகாயமார்க்கத்திற்சென்றனன். பின்னர்கணேசமூர்த்தியினுடையதிருமுடிக்கு ஓரணியாக விருக்கப்பெற்றசந்திரனாற்றாபித்திருக்கும், அப்பாலசந்திர மூர்த்தியை அன்றுதொட்டு தேவர் முனிவர் முதலாயினோர் வந்து பூசைசெய்கின்றனர். மேலும் கின்றோர்கள் உடனே சகல சித்திகளும் பெறுந் தன்மை

அந்தலம் சகலசித்தித்தலமென்னும் பெயரையடைந்து எல்லாத் தலங்கட்குந்தலைமை பெற்றிருக்கின்றது. ஆதலால் சங்கட்ட சதுர்த்தி தினத்திலே சந்திரோதய காலத்தை முக்கியமாகச் சொல்லப்பட்டது மேலும், விநாயக மூர்த்திக்குச்செய்த அபராதத்தினால் பலவகைப்பட்ட இடர்களில் சந்திரனே மூழ்கிவருந்தினனாயினன், அவரதுமேன்மையை என்போலிகளால் எவ்வாறறிந்து சொல்லக்கூடும். சுகம்பெற வேண்டினோர்கள் கணேச மூர்த்தியினிடத்தில் மறந்தேனும், வாய் சோர்ந்தேனும், மெய் வழுக்கியேனும், தருமத்திற் கடாதன வற்றைச் செய்வாராயின் மிக்கதுன்பங்களை யநுபவித்து நரகத்தில் அழுந்தி வருந்துவார்கள், ஈதல்லாமல் விநாயக மூர்த்தியைக் குறை வில்லாமற் பூசிக்கின்ற பேர்கள் அவசியம் அறுகுகொண் டருச்சிக்கவேண்டும், என்று பிரமதேவன் பிதிர் தேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேன மகாராசனுக்குச் சொன்னான்

சந்திர னனுட்டித்த படலம் முற்றிற்று.

---

# விடைகரம் புலைச்சிவீடுறு படலம்.

## தூர்வை மகத்துவம்.

---

மொழிந்திட பிதிரனு முகமலர்ந் துதேன்
பிழிந்தபன் மலரினும் பெருமை யென்கொலாங்
கழிந்திடு மறுகினுக் கெனகக டாவினன்
வழிந்துகு தேமலர் வள்ளல் செப்புவான்.

சிவானந்தக் கடலிற்படிந்து, திருவருள்விலாசமாயிலங்கும் ஓ! ஓ! முனிவர்களே விநாயக மூர்த்தியினுடைய திருமுடிக்குச் சந்திரன் ஓரணியாகிய வறலாற்றையும், அங்காரக சதுர்த்தியிற் சந்திரனைப் பூசிக்கவேண்டிய காரணத்தையுஞ் சொன்னோம். இப்பால் தூர்வை மகத்துவத்தைச் சொல்லுவோங் கேட்பீராக. தேவேந்திரனைமீட்டுஞ் சூரசேனமகாராசனை நோக்கிச்சொல்லுவான், அரசனே: பிதிர்தேவன் பின்னும் பிரமனை வணங்கி சுவாமீ, பரிமளமிகு ... ங்கள் பலவாகவிருக்க அவைகளைப் பார்க்கினும் தாழ்ந்த

அதற்கு அவ்வளவு விசேடம் வந்த காரணம் என்னென்று வினாவினன். அதற்குப் பிரமன்சொன்னதாவது. ஓபிதிர்தேவனே! அழகுவாய்ந்த அவந்தியென்கின்ற பட்டணத்தில் சுலபனென்னுமியற்பெயரையுடைய ஓரரசனிருந்தான். அவனுக்குச் சுபத்திரை யென்னும் ஓர் மனைவியிருந்தனள். அவ்வரசன் அவளோடுகூடி நீதிவழுவாது அரசியற்றி வருகின்ற நாளையில் ஒருநாள் வறுமைக்கடலுண்மூழ்கி வருந்துகின்றவனும் கங்காசடாதராராத்தியாகிய சிவபெருமானது பாதபதுமங்களிற் சிறந்த பத்தியுடையவனுகியும் நீற்றுவைத்து வெளுத்தெடுக்க வழியற்ற கிழிந்த வஸ்திரத்தை யுடையவனுகியும் காத்திற் கரமுங் கோலுங்கொண்டுமனைகடோறும் பிச்சையேற்பனுகியு மிராநின்ற மதுசூதன னென்னும் ஓர் வேதியன் அவனிடத்து வந்து யாசித்தான். அப்போது அவ்வரசன் ஏற்றார்க்கு மாற்றது கொடுக்குந் தன்மையினனுயினும் பழைய ஊழின் வலியால் அவனைக்கண்டு நகைத்தனன். அதை அவ்வேதியன் கண்டு மனம்வருந்தி கண்களில் அனற்பொறி சிதறும்படியாகத் தானும் ஊழ்வசத்தனுய்க் கோபித்து அரசனே! நீ சிறிதேனுங் கல்வித்துறை கண்டவனலலை, கனவினுமியாதத ன்செல்வச் செருக்காலன்றோ என்னை நோக்கி நகைத்தனை. அது என்னுள்ளத்தையும் என் குலத்தையுஞ் சுட்டுவிட்டது, பசுவின் பின்புற மோந்து பல்லைக்காட்டும் இடத்தைப்போல என்னைக்கண்டு பல்லைக் காட்டினையாதலால் நீ எறிபூட்டும் எருதினவடிவாகிய புல்லே யுணவாய்ப் புசிக்கக் கடவையென்று சபித்தனன். அச்சாபத்தை அவ்வரசனது மனைவியாகிய சுபத்திரை கேட்டு மிக்க துன்பமடைந்து, ஓ வேதியனே! உனது மெய்ம்மை முழுதும் புண்ணியநீற்றைப் பொலிவுறப் பூசினையாயினும் அதற்கேற்ற இரக்கத்தினை யுன்னிடத்திற் காண்கிலேன், யாவரேனுந் தெரிந்துந் தெரியாமலும் ஓர் குற்ற மிழைத்தார்களாயின் விவேகிகள் அதனைப்பொறுப்பார்களே யன்றிக் கோபியார்கள். நீ சிறிதேனுந் தாரதம்மியம் பாராமல் உலகத்தையாளும் இராசனென்றும் யோசியாமல் அறிவற்ற கழுதையைப்போலச் சபித்தனையாதலால் நீ கழுதையாகி ஆடையொலிக்கும் வண்ணான்மனையிற் சிக்கி முதுகுநெளிய வத்திர மூட்டைகளைச் சுமந்து வருந்தக்கடவையென்று சபித்தனள். அதை வேதியன் கேட்டு மனங்கலங்கி பெண்ணே குற்றம் உங்கள்மீதிருக்க அதைக் குறையிரந்து நிவர்த்தி செய்துகொள்ள எண்ணுமுறு நீச்சஸ்திரீகளைப்போல எனக்குமறுசாபமிட்டனை. யாதலால்;

ச்சியாகி, உண்ணப்படுவனவும், உடுக்கப் படுவனவுமின்றி துன்பமுறக் கடவையென்று சபித்தனன.

ஓ பிதிர்தேவனே பாவங்களென்னும் எல்லாக் கொடிகளும் படர்வதற்குக் கொழுகொம்பாயிருப்பது * வெகுளியாகும். அவ்வெகுளி ஒருவனிடத்திருக்குமாயின் அவனுக்குச் சங்கடமும் வறுமையும் இல்லாமற் போவதுண்டோ? இப்பால் அம்மூவருந் தங்களுக்குத் தாங்களே முடித்துக்கொண்ட சாபங்கள் மேலிடலும், சுலபமகாராசன் இடபமாகி அந்நகரத்திலிருக்கின்ற ஒருழவனிடத்திற் சென்று துன்பமுற் றிருந்தனன். மதுசூதனென்னும் வேதியன் கழுதையாகி வண்ணான்கரத்திற்சிக்கி வருத்தமுற்றிருந்தனன். சுபத்திரையென்பவள் புலைச்சியாகி அந்நகரத்தின் புறத்திலிருக்கும் புலைச்சேரியிற் சென்று வறுமையினால் அடக்கக்கூடாத பசியையுடையவளாகி யாவரேனும் இடித்தளிக்கும் பிச்சையை யேற்றுண்டிருந்தனள். இவ்வாறு நெடுநாள் செல்ல, ஒருநாள் எருதானது உழவனுடைய ஏறிற் பிணிப்புண்டு, அவனது நெல்வயலை வளைந்து வளைந்து உழுதுகொண்டிருந்தது. கழுதை தன் முதுகெலும்பு நோக மூட்டையைச் சுமந்துகொண்டுபோய் வண்ணான் துறையிற் போட்டுவிட்டுப் புல்லை மேய்ந்துகொண்டிருந்தது, புலைச்சியானவள் குளிர்காய வேண்டி மரப்பட்டைகளையும் புற்களையுஞ் சேர்க்கச் சென்றனள் இவ்வாறு மூன்றும் ஓரிடத்திற் சேர்ந்தபோது மேகமானது ஆகாயத்தில் இருளைப் பரப்பி மின்னலைவீசி வில்லைவளைத்து, இடியிடித்து மழையைச்சொரிய அதனால் உழவன் எருதினது பூட்டைத் தரித்துவிட்டுச்செல்ல, அது அவ்விடத்தினின்று போய் அங்கிருக்கின்ற விநாயகமூர்த்தி ஆலயத்திற் புகுந்தது. அக்கோயிலின் மருங்கு மேய்ந்திருந்த கழுதையும், அவ்வாறே சென்றது. புலைச்சியானவள் தான்சேதித்த புற்களைக் கட்டியெடுத்துக் கொண்டு அக்கோயிலின் வெளிப்பிரகாரத்தி லொதுங்கினள், உடனே இராக்கால நெருங்கலும் அக்கழுதையும் எருதும் பையப்பையச் சென்று புலைச்சி சுமந்திருக்கின்ற புல்லைப் பிடுங்கிக் கடித்து வாயிற் குதட்டிக்கொண்டிருந்தன. அதை அவள் கண்டு அப்புற்சுமையை நிலத்திலிட்டுக் கோலையெடுத்துக் கழுதையை மொத்தினள். அது தனது காலால் எருதை உதைத்தது. அவ்வெருதானது கொம்பினால் அக்கழுதையை முட்டியது. இப்படி மூன்றும் ஏககாலத்தில் ஒன்றுக்கொன்று பிணங்கிப் பேரொலி செய்து

கொண்டிருந்தன. அவ்வேளையை அத்தினம் விநாயக சதுர்த்தியானதால் அவ்விநாயக மூர்த்திக்குச் சந்தியாகால பூசையை நிறைவேற்றி அவரது மந்திரத்தைச் செபித்துக்கொண்டிருந்த முனிவர்கள் கேட்டு, உடனே தடி ஏந்திவந்து அவைகளை அடித்துத்துரத்தினார்கள். அதற்கு அவைகளஞ்சிக் குளிர்ந்த வாடைக்காற்றினாலும், இடி மின்னலோடுகூடிய பெருமழையினாலும் வெளிக்கொண்டுபோவதற்கிடமில்லாமல் அவ்வாலயத்தைப் பலமுறை சுற்றிவர அம்முனிவர்கள் அவைகளை மேலுமேலுந்துரத்திப் புறம்பிலோட்டிவிட்டனர். அவைகளவ்வாலயத்தைச் சுற்றிச்சுற்றி ஓடுகையின் மிருகங்கள் வாயில் மென்றுக்கொண்டிருந்த புல்லும் புலைச்சி கையிற் கொண்டிருந்த புல்லும் சந்நிதிக்கு முன்பாகவிழ அவைகளில் மூன்று புல்லைமாத்திரங் காற்றானது எழுப்ப அவைகள் கணேசமூர்த்தியினுடைய திருமேனியைச் சார்ந்தன.

அஃதெவ்வாறெனில், புலைச்சி கையினின்று வீழ்ந்த புல்லானது முடியின்மீதும், எருதின் வாயினின்று வீழ்ந்த புல்லானது தும்பிக்கைமீதும், கழுதைவாயினின்று வீழ்ந்த புல்லானது திருவடியின்மீதுஞ் சார்ந்தன. இவ்வாறு அப்புற்களானவை கணேசமூர்த்தியினுடைய திருமேனியிற் றலைமயக்குற்றிருக்கின்றகாரணத்தினால், ஆலயத்திற்கு விழுப்பு வந்துவிட்டதென்று முனிவர்களெல்லாம் ஸ்நானஞ் செய்துவந்து ஆலயமுழுவதுஞ் சுத்திசெய்து கும்பமாதிகளை வைத்து திருமஞ்சனந் தூபதீப முதலிய எல்லாப்பொருளையுஞ் சேகரித்து முதிர்ந்த மெய்யன்பினோடும் பூசித்து, தங்கள் தங்கள் கவலைகளை யொழித்துக்கொண்டனர். இப்பால் அம்முனிவர்களால் அடித்துத் துறத்தப்பட்ட எருது முதலிய மூன்றும் அடியுண்ட வருத்தத்தினாலும், காற்றுமழையி லலைப்புண்டதனாலும், உணவில்லாக் குறையினாலும், எங்கும் போக்கிடங்காணாம லுயிர் பிரிந்திறந்தன. பின்னர் அம்முன்றின் பாலதாய்வந்து வீழ்ந்தபுற்கள் தமக்கருச்சனை செய்ததாகவும், அவைகள் அடியுண்ணமாட்டாது ஆலயத்தைச்சுற்றி சுற்றி வந்தது வலமவந்ததாகவும் முனிவர்கள் விழுப்புநேர்ந்ததெனக் கருதி இயற்றிய அபிடேகம் அவைகள்செய்த அபிடேகமாகவுங் கொண்டு கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அவைகளை யழைத்துவருமாறு தேவகணங்களை ஏவினர். அத்தேவகணங்கள் உடனே ஒரு விமானத்தைக்கொண்டு வந்து அம்மூன்றுக்குந் தேவவுருவந் தந்து அரம்பையர் புடைசூழ்ந்து ஆடல்பாடல்களைச் செய்தல்முதலிய உபசாரங்களோடு

விமானத்தின்மீ தாரோகணிக்கச்செய்தனர். என்று பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொன்னதாகத்தேவேந்திரன் சூரசேனமகாராஜனுக்குச் சொன்னான்.

விடைகரம்புலைச்சி வீடுறு படலம் (தூர்வைமகத்துவம்) முற்றிற்று.

---

பாலசந்திராவதாரம்.

## தூர்வை யருச்சனைப் படலம்.

மிக்கிழி பவத்தினின்றூர் மிக்குய ருலகஞ் சேரத்
தக்கபுண் ணியத்தைத் தந்த தோரறு கென்றூற் றன்னைத்
தொக்கருச் சிக்கு மேன்மை சொல்லுக வென்றூர்தூயோர்
நக்குள மகிழ்ந்து தேவ நற்கண மவர்க்குக் கூறும்.

மகாமகத்வமிக்க முனீந்திரர்களே * விடைகரம் புலைச்சியாகிய மூவரையும், வீடுபுகச்செய்த தூர்வை மகத்துவத்தைச் சொன்னோம். இப்பால் அத்தூர்வை யருச்சனையைச் சொல்லுவோங் கேட்பீர்களாக. பின்னும் இந்திரன் சூரசேனமகாராசனை நோக்கிச் சொல்லுவான். அரசனே! பிரமனைப் பிதிர்தேவன் மீட்டும் பணிந்தெழுந்து சுவாமீ புலைச்சிமுதலிய மூவருந் தெய்வசரீரம் பெற்று விமானத்தி லேறியபின்பு அங்குநடந்த காரண மென்னென்று வினவ, அதற்குப் பிரமன்சொன்னதாவது பிதிர்தேவனே. அவ்வா றம்மூவரும் விமானத்திலேறலும் அங்கிருந்த தவசிரேஷ்டர்களெல்லாம் அதிசயமுற்று அவ் விமானங் கொணர்ந்து வந்த தேவகணங்களை வணங்கித் துதிசெய்து, விதியென்பதைச் சிறிதேனுமறியாத இவர்கள் எந்தகாரணத்தால் இவ்விமானத்திலேறத்தக்கவர்களானர்களென்றுகேட்க, அதற்ககணங்கள், சற்றுநின்று, தவசிரேஷ்டர்களே, இவர்கள் கணேசமூர்த்தியை அறுகினுலே பூசனைசெய்து அவர்களுடைய பாபசரீரங்களைவிட்டுத் தெய்வசரீரங்கொண்டு இவ்விமான மேறப்பெற்றூர்க ளென்றுகூற அதை யம்முனிவர்கள்கேட்டு, கணநாதர்களே? இழிந்த சென்மத்தை யுடையவர்கட்கு உயர்ந்தலோகத்திற் சேரத்தக்க புண்ணியத்தை ஓரறுகுகொ

---

* விடை - எருது. கரம்-கழுதை. புலைச்சி - நீச்சஸ்திரீ.
* தூர்வை - அறுகு.

டுத்ததாயின், அவ்வறுகைக்கொண்டு விநாயகக்கடவுளை யருச்சிக்கு மேன்மையைச் சொல்லியருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள். அதற்கத்தேவகணங்களிசைந்து ஓ, முனிவர்களே நிறைந்தசோலைகளாற் சூழப்பட்டிருக்கின்றதாபரமென்கின்றநகரத்திலே, தென்றிசையிலே, ஓர்பனந்தோப்பிலுள்ள ஓடைக்கரையைத் தமக்காசிரமமாகவுடைய கவுண்டின்னியரென்னுமொருமுனிவரிருந்தார் அவர் தமது இல்லறப்பணிவிடையை இடையூறெய்தாவகை நடத்திவருபவளாகிய ஆசிரியையென்னும் பத்தினியோடு தவஞ்செய்து வருகின்றநாளையில் ஆதியந்தமில்லாதவராகியும். மனவாக்குக்காயங்கட்கெட்டாதவராகியு மிராநின்ற விநாயகமூர்த்தியை, அவ்வாசிரமத்தில் ஆகமவிதியோடும் பிரதிட்டைசெய்து, * சத்தசாகரங்களையும் இணையிடக்கூடாததமதுநிறைந்த பத்தியினாற் பிரதிதினமும்பதினாயிரம் அறுகுகொண்டுவந்து, அவைகளைக் குற்றமறவாராய்ந்து, அருச்சனைசெய்துவருவார். இவ்வாறுநடத்திவருகின்ற நாளையில், ஒருநாள் அவர்பத்தினியாகிய ஆசிரியையென்பவள் தவசிரேஷ்டராகிய அக்கவுண்டின்னியமுனிவரைப்பணிந்து சுவாமீபரிமளமிகுந்தபுட்பங்கள்பலவகையிருக்க அவைகளைப்பறித்து அருச்சனைசெய்யாது பிரதிதினமும் அளவற்ற அறுகுகளைக்கொண்டுவந்து அருச்சிக்கின்றீரே, அதுவென்ன காரணத்தினால் அதனை யடியாட்குத் தெரிவித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனள். அதற்கம்முனிவர் சந்தோஷித்து, பெண்ணே அவ்வறுகின் பெருமை மகாரகசியமுள்ளது, ஆயினும்நீமிக்கபத்தியோடுங் கேட்கின்றமையால்சொல்லுவோங் கேட்பாயாக.முன்னொருகாலத்திலொருவிசேடதினத்தில்சித்தர், கின்னரர்,கருடர்- விஞ்சையர்- சாரணர்-முனிவர் முதலிய யாவரும்பணிந்து புடைசூழ்ந் திருக்கத்தக்கதாகிய யமதருமராசனானவன்- தனதுகொலுச்சபையிலிருக்கின்ற நவரத்தின சிம்மாதனத்தின்கண் மிக்கவலங்காரத்தோடு வீற்றிருக் கின்றபோது அரம்பாஸ்திரீகள், தங்களுள்ளங் கண்ணின்வழிநடப்பதும், அக்கண் கையின்வழிச் செல்வதுமான அபிநயத்தைக் கொண்டு நாட்டியஞ் செய்தார்கள்.

அப்போது அவ்வரம்பாஸ்திரீகளுள் மிக்க அழகினை வாய்ந்த திலோத்தமையென்பவளது மேல்வத்திரம் நழுவிப்போக- அவள்

* சத்தசாகரமாவன. உவர்க்கடல், நன்னீர்கடல், பாற்கடல், தயிர்க்கடல் நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக் கடல், தேன்கடல் என்ப. சாகரம்-சகரர்களாற் றோண்டப்பட்டது.

மிகவும்- நாணமுற்றுத் தலைகுனிந்து- அருகிலிருப்பவர்க ளறியா வண்ணம் அவ்விடத்தைவிட்டு அப்பாற் சென்றனள். யமதரும ராசன் அவளது தனங்க ளிரண்டையும் நன்றாய் கண்டதனால்- உடனே அவன் மனது காமத்தாலுருகி விரகமென்கின்ற அனலாற் கொளுத்தப்பட்டு- அக்கொலுச் சபையினின்று நீங்கி அந்தப்புரத் திற்குச்செல்வதாயினன். அவ்வாறு செல்வதன்முன்- அவன் வீரியமானது வெளிக்கொண்டு நிலத்தில்வீழ- அதினின்றுங் கொதித் தெழுகின்ற வனலுக்கொப்பான கொடுமையோடு கலப்பையைப் போன்ற வெளுத்த கோரைப்பற்களும்- நீண்டு முறுகிச் சிவந்திருக்கின்ற முகமயிர்களும்- பெருகியோங்கிய அழற்கொழுந்தினையொத்து சிலிர்ந்திருக்கின்ற புறமயிர்களும்சிவந்த கண்களும்- தேவர்களுங் கண்டஞ்சத்தக்க அவயவங்களு முடையவனாய்- ஒப்பற்ற பெருவலியினையுடைய அனலாசுரனென்னும் ஒரவுணன் உதித்தெழுந்தனன் உடனே அங்கிருந்தவர்க ளெல்லாம் அவனைக் கண்டு பயந்து- அப்பால் ஓடிப்போயினர். இப்பால்- திரிலோகமுந் துயருறும்படியாக முன்னர் திருப்பாற் கடலின்கணுதித்த ஆலகாலத்தை யொத்த அப்புதல்வனது கொடிய வுருவத்தை தனதுகாமந்தணியுமாறு அந்தப் புரத்திற் சென்ற யமதரும ராசன் கண்டு பயந்து- அவ்விடத்தில் அவன் நுழையாத வண்ணங் கதவைத் தாளிட்டுக் கொண்டனன் அவர் றை அவ்வனலாசுரனறிந்து, யமதருமராசனை தந்தையென்கின்ற மதிப்போடுவிட்டு நீங்கிப் பூவுலகத்தி லுண்டான சகலசீவராசிகளையும் புசித்து, இனி இந்திரன் முதலிய எல்லாத்தேவர்களையும் புசித்திடுவோமென்று கருதி விண்ணுலகத்திற் கெழுந்தனன். அதை அவ்விந்திரன் முதலியோ ரறிந்து பயந்து இலக்குமியை மார்பினிடமாகவுடைய மகாவிஷ்ணுவைச் சரணடைந்து, தங்களிடும்பையைக்கூறி முறையிட்டார்கள். அவை யனைத்தையும் மகாவிஷ்ணு கேட்டு அபபாதகனுடைய பராக்கிரமத்தை யோசித்து இருள் விநாயகமூர்த்தியினுடைய திருக்கரத்தாலழியத்தக்கவனே யன்றி மற்றையரால் அழிபவ னல்லவென்று தெளிந்து எல்லாத் தேவர்களையும் அழைத்துக்கொண்டு ஒரு பரிசத்திற் கூட்டமாக விருந்து விநாயக மூர்த்தியினுடைய திருவுருவை மனதிற்றியானித்து, வேதாகமங்களாற் பலமுறை தோத்திரஞ் செய்து தங்கள் தங்கள் குறையினைச் சொல்லி முறையிட்டார்கள், அதற்கு ஆன்றோர்க ளறிவுக்கும் அகப்படாதவராகிய விநாயகமூர்த்தியானவர் மனதிரங்கி, மான்றோல் முடிந்த பூணூல் மார்பின்கண் பிரகா

சிக்கும் படியாகப்பிராமணர் குலத்திற் பிறந்தபிரமசாரியைப்போல வடிவெடுத்து அத்தேவர்கள் முன்னதாகச் சென்றனர்.

உடனே எடுத்ததேகத்தா லடையத்தக்க பயனைஎளிதிலடைந்தவர்களை யொத்துக் களித்து இவரே ஓங்காரத்தி னின்று மெழுந்தருளிய விநாயக மூர்த்தியென்று நிச்சயித்து. விண்டு முதலிய எல்லாத் தேவர்களுஞ் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து ஓ தீனதயாநிதியே! அடியேங்கள் படுகின்ற துன்பப்பாட்டினை யொழித்து, அனலாசுரனை யழித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள். அதற்குப் பிரமசாரியாய் வந்த விநாயக மூர்த்தியானவ ரிசைந்து அருள் வழங்கினர். அச்சமயத்தில் சொர்க்க லோகத்திற்சென்ற அனலாசுரன் அங்கு தேவர்களைக் காணாத வனாய்ப் பற்பல விடங்களேடோறுந் தேடிப் பின்னர் அவர்கள் ஒன்றாகக் கூடியிருக்கு மிடத்தினைக் கண்டுபிடித்து எதிர்நோக்கிச் சென்றனன். அப் பாதகன் வரவைப் பார்த்த முனிவர்க ளெல்லாம்உடனே ஓட்ட மெடுத்தார்கள் தேவர்களெல்லாம் நடுநடுங்கி உமாபரமேஸ்வரியார்புத்திரராகியும், மூவர்முதல்வராகியும் வீற்றிருக்கின்ற கணேசமூர்த்திக்குப் பின்பக்கத்தி லடுத்து, உயிரற்ற உடல்போல விருந்தார்கள். இவ்வாறு அசுரன் வருவதையும், அவனுக் கஞ்சித் தேவர்கள் படுங்கலக்கத்தினையும் விநாயகப் பெருமான் கண்டு அவர்கள் உய்ந்தோம் உய்ந்தோமென்று களிப்படையும்படியாக, அஞ்ச வேண்டாமென்று அபயாஸ்தந்தந்து, தமது திருவுருவங் கொண்டு, அனலாசுர னருகிற் சென்று அகத்திய முனிவர் ஆழி யுண்டது போன்றும் சிவபிரான் விடத்தை யுண்டது போன்றும் அவனைத் தமது கரதலத்திலடங்கும்படியா வெடுத்து, அசுரனே! நீ இவ்வுலகத்தை மிகவும் வருத்தினை, இதுவன்றி இன்னும் பழமையான அளவற்ற வுலகங்கள நமதகட்டினுளிருக்கின்றன அவைகளையும் ஒருகை பார்க்ககடவை யென்று ஒருகவள மாய்விழுங்கி விட்டனர். அவ்வற்புதத்தைக் கண்டவர்க ளெல்லாம் அதிசய மடைந்தார்கள் இப்பால் கணேச மூர்த்தியினுடைய உதரத்தில அனலாசுரனடங்கலும், சகல சராசரங்களினுடைய உதரங்களி லெல்லாம் அனல் பற்றிக்கொண்டது போல வெப்ப முண்டாயது. தேவர்கட்கும் அவ்வாறேஆயது பின்னர் யாவரும் மிக்க துயரத்தையடைந்து விநாயகப் பெருமான் வயிறு குளிர்ந்தால் யாவர்வயிறுங் குளிருமென்று நிச்சயித்து இந்திரனுடைய ஏவலினால் சந்திரனானவன்

சுவாமியினது திருமுடியின்மீ திருந்து தனது அமுத தாரைகளை முற்றுஞ் சொரிந்துகொண் டிருந்தனன். அதனாலும் அவ்வெப்பு நீங்காமல் பின்னர் பிரமதேவனுடைய அன்புகூர்ந்தவிண்ணப்பத்தினால் சித்திபுத்திகள் சுவாமியினருகி லிருந்து தமது குளிர்ந்த அவயவங்களை அவர்திருமேனியில் ஒற்றிக் கொண்டிருந்தனர். அதனாலும் அவ்வெப்பு நீங்காமல் மகாவிஷ்ணுவானவர் அளவற்ற தாமரைமலர்களைக் கொண்டுவந்து சுவாமிமுன்னிலையில் நீட்ட அவைகளைத் தாமேவாங்கி வாங்கி ஒற்றிக்கொண்டனர். அதனாலும் அவ்வெப்பு நீங்காமல் வருணன் சீதளநீரைக் கொணர்ந்து அபிஷேகித்தனன். அதனாலும் அவ்வெப்பு நீங்காமல் சிவபிரான்மிக்க உரிமையோடுந் தமது திருமேனியிலணிந்திருக்கின்ற ஆதிசேடனைக் கொண்டுவந்து தரித்தனர். இவவாறு அவ்வவர்கள் ஒவ்வொரு விதத்தாற்குளிர்ச்சி செய்தும் அவ்வெப்பு நீங்காதிருக்கப் பின்னர் எண்பத்தெண்ணாயிர முனிவர்கள் வந்து ஒவ்வொருவரும் தனித்தனியே இருபத்தொன்று அறுகுகளைக்கொண்டு சுவாமியினுடைய சிரமுதல் பாதமளவுஞ் சொரிந்தார்கள். உடனே அனல் வெப்பம் நீங்கியது. விநாயகப் பெருமானுடைய திருமேனியில் வெப்பங்களும் நீங்கின. பின்னர் யாவரும் வேதாகமங்களால் ஆயிர மாயிரமாகத் துதித்து ஆனந்தக் கூத்தாடினார்கள். தேவர்களெல்லாம் புட்பவருடஞ் சொரிந்தார்கள். சொர்க்க மத்திய பாதலமென்னு மூவுலகங்களுந் தழைத்து மகிழ்ச்சி யடைந்தன. இப்பால் விநாயகமூர்த்தி, அம்முனிவர்களைப் பார்த்து, அன்பர்களே! நமது திருமேனியிலிருந்த வெப்பமானது தேவர்களெல்லாஞ்செய்த உபசாரங்களால் நீங்காமல் நீங்களருச்சித்த அறுகினால் அவ்வெப்பஞ் சிறிதுமின்றி நீங்கியபடியால் எமக்குப் பற்பல உபசாரங்கள் செய்து அறுகு ஒன்று மாத்திர மில்லாவிட்டால் அப்பூசனைக்கு யாம்பயனைத் தருவதில்லை உபசாரம் ஒன்று மின்றி அறுகு ஒன்று மாத்திர மிருக்குமாயின் அப்பூசனைக்கு அதிசீக்கிரத்திற் பயனைத்தருவோம். அவ்வறுகை மிகுதியாகச் சேகரித்துப் பூசைசெய்யக்கூடாதவர்கள் இருபத்தோராறுகாயினுங் கொண்டு அருச்சித்தல் வேண்டும். அதற்குஞ் சத்தியில்லாதவர்கள் ஓராறுகாயினுங் கொண்டு பூசித்தல்வேண்டுமென்று திருவாய்மலர்ந்து அவ்வவர்கள் விழைந்த வரங்களைத் தந்துதமது திருவுருவத்தைக் கரந்தருளினார் பின்னர் தேவர்களெல்லாம் அவ்விடத்தில் ஓராலயஞ் சமைத்து அதிற்கணேச மூர்த்தியைப்பிரதிட்டைசெய்து பால்-தயிர்-தேன் முதலிய பூசாதிர வியங்களைக்

கொண்டு பூசித்து, சிறந்த அறுகினு லருச்சனைசெய்து, காலனது
வீரியத்தாலுண்டான அனலாசுரனை விழுங்கியகாரணத்தால் கா
லானலப்பிரசமனென்றும், பாலவயதுடன்வந்து அக்கினியும்ஆலமு
மஞ்சத்தக்க அனலுருவோடுங் கூடிய அசுரனை விழுங்கிஎல்லா
வுயர்கட்குஞ் சந்திரனைப்போலக் குளிர்ச்சி தந்தமையால் பாலசந்
திரனென்றுந் திருநாம மிட்டுதங்கள் தங்கள் பதவிகளைச்சேர்ந்தார்
கள், அன்றுமுதல் விநாயகமூர்த்தியினது பூசனைக்குரிய அனந்தம்
வஸ்துக்களில், அறுகு சிறந்ததாயது. என்று கவுண்டின்னிய முனி
வர் தனது பத்தினிக்குரைத்ததாக தேவகணங்கள் முனிவர்கட்குச்
சொன்னபடி பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொன்னான். அத
னைத் தேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொல்லினான்.

தூர்வை யருச்சனைப் படலம் முற்றிற்று.

# தூர்வை யாசகப் படலம்.

மன்றலந் துளவன் முதலனை வருந்தம் வைப்பினை யடுத்து
வாழ்ந் திருந்தா, ரன்றுதொட் டறுகு விநாயகர் பூசைக்கனைத்துள
பொருளினுஞ் சிறந்த, தென்றுதன் மனையா சிரியைநன்கறியவிருங்
கவுண்டின்னிய னிசைத்தா. னென்றிய முனிவீ ரொருகதையின்னு
முணர்வினென் றுரைப்பரக் கணத்தோர்.

சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தி அனலா சுரனை
விழுங்கித் தேவர்களைக் காத்ததும், அவனை விழுங்கிய வெப்பம் நீங்
குமாறு முனிவர்கள் தூர்வை யருச்சனை புரிந்ததுஞ் சொன்னோம்;
இப்பால் அவ் விநாயகமூர்த்தி தூர்வையாசகஞ்செய்த வரலாற்றி
னைச் சொல்லுவோங் கேட்பீர்களாக. பின்னுந் தேவேந்திரன் சூர
சேனமகாராசனைநோக்கி அரசனே! தேவகணங்கள் முனிவர்களுக்கு
மற்றொரு கதையுஞ் சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப் பிரமன்
சொன்னதாவது முனிவர்களே! அருட்செல்வத்தினராகிய துற
வறத்தோர்களையும், பொருட்செல்வத்தினராகிய இல்லறத்தோர்
களையும் தன்னகம் வசிக்கப்பெற்று, அளவற்றவளமையோங்கு
கின்ற மிதுலாபுரி யென்கின்ற பட்டணத்தில், அன்பு, சாந்தி
ணர்ச்சி, ஈகை, வலி, வெற்றி, ஒழுக்கம், இல்லறநடை, முதலிய
லாநன்மைகளையுந்தனக் கேவலாகக்கொண்டசனக மகாராசன்—

னும் ஓரரசனிருந்தான். அவ்வரசன் திசையனைத்தினுந் தனதுசெங்கோலைச்செலுத்தி அரசியற்றி வருகின்ற நாளையில், தமக்கொருவர் ஒப்பில்லாதவராகியும், எல்லாவுலகத்தினுஞ் சஞ்சரிப்பவராகியும். சடாமகுடத்தைத் தரித்தவராகியும், மகதியாழ்த்தலைவராகியு மிராநின்ற நாரதமகாமுனிவர் ஒருநாளவனிடத்திற்கு வந்தனர் அக்காலத்து அவன் பரதத்துவ வுண்மையை யறியாதவனாய்த் தனதுபுலன்கள் சென்றவழியே மனஞ்செலுத்தி, ஒருவினைகளையும் விடாமற்புசித்துத், தானேபரத்துவமென்று நிச்சயங் கொண்டிருக்கின்ற மதியின்மையினால் அந்நாரத முனிவருக்கு வழிபாடு செய்யாதவனாகி யிருந்தனன். அதைஅம்முனிவர்கண்டு அவனறிவின்மையைத் தமதுமனதில் மறைந்துக்கொண்டு, அரசனே? பகவானுடையகிருபையினாலே சகலபாக்கியங்களும் பெற்றனை, அப்பாக்கியங்களைவறியாரிடத்திற் செலுத்திவாழ்கின்றனை, எல்லா நன்னடைகளையுங் கடைப்பிடித்தனை ஆதலால் இன்னம் அச்செல்வத்தை உனக்கு வேண்டுமட்டும் அப்பகவா னளித்தருளக்கடவரென்று ஆசீர்வதித்தனர். அதை அச்சனகராசன் கேட்டு முனிவ ! வேறே பகவானிருக்கின்றனரென்றும் அவர் வேண்டிய பாக்கியங்களை யளிப்பரென்றும் பேதப்படுத்திச் சொல்வது அறிவில்லாதவர்களுடைய தன்மையேயன்றி அபேதிகளாயிருக்கின்றவர்களுடைய தன்மையவ்வாறன்று. யாவையுங் கொடுக்கின்ற பகவானும அவைகளைஏற்றுக்கொள்கின்ற யாசகனும் யவையும் அநுபவிக்கின்ற போகியும், அவைகளைக்குற்றமாகவெறுக்கின்றயோகியும் நானேயன்றிவேறில்லையென்று அவமதித்துரைத்தனன். அதையம் முனிவர் மறுத்து, அறிவற்றசனகராசனே? பகவான் வேறில்லையென்று பேதைமையாற் பேசினை, அப்பவானுண் டென்பதை நீ நாணங் கொள்ளும்படி உன்னெதிரிற்றானே காட்டுகின்றோம்அப்போதேனும் அறிந்துகொள்ளக் கடவையென் றுரைத்து அவ்விடத்நினின்று நீங்கிக்கவுண்டின்னிய முனிவரிடத்திற் சென்றனர் அக்கவுண்டின்னியமுனிவர் நாரதமுனிவரை யெதிர்கொண்டு சென்று தீர்க்கதண்டஞ்செய்து அழைத்துவந்து ஓராதனத்தி லிருக்கவைத்துச் [] சோடசோ

* சோடசோபசாரமாவன. தவிசளித்தல். கைக்கழுநீர்தரல். கால்கழுநீர்தரல். முக்குடிநீர்தரல். நீராட்டல். ஆடைசாத்தல். முப்புரிநூல்தரல். தேய்வைபூசல். மலர்சாத்தல். மஞ்சளரிசிதூவல். நறும்புகைகாட்டல் விளக்கிடல் கருப்பூரமேற்றல். அமுதமேந்தல். அடைக்காய்தரல், மந்திரமலரா லருச்சித்தல் என்ப.

பசாரங்களோடு பூசனைசெய்து, அளவளாவிய சந்தோஷத்துடன் இனியவார்த்தையாடி இளைப்பாறினர். பின்பு நாரதமுனிவரெழுந்து அக்கவுண்டின்னிய முனிவர் பூசிக்கின்ற விநாயகமூர்த்தி சந்நிதானத்திற் சென்று சாஷ்டாங்க மாகப்பணிந்தெழுந்து கரத்தில் யாழினையேந்தி நரம்புகளைத் தடவி பற்பல விசைகளோடும் அவர் பேரருளைப் பாடித்துதித்து, சுவாமி தேவரீர்கிருபையால் சனகராசனுக்குப் பூலோகவாசாட்சியும், போக்கற்கரிய செல்வமும் உண்டாயிருக்கின்றன அவைகள் தேவரீர்கிருபையாற்கிடைத்தனவென்று சற்றுங்கருதிலன், தேவரீரைப் பரத்துவமென்றும் எண்ணிலன், முத்தியிற்கா முற்றவனைப்போல விருக்கின்றான். பெரியோர்களைக் கண்டால்வந்தனை வழிபாடுகள் செய்யாது தானேபரத்துவமாக மதித்து அகங்கரித்திருக்கின்றான். அவைகளைத்தேவரீர்திருமுன்பு விண்ணப்பஞ் செய்துக்கொள்ளுமாறு அடியேன் இங்ஙனம் வந்தனனென்றுசொல்லி மீட்டுஞ் சாஷ்டாகமாகச் சேவித்து ஆகாய மார்க்கமாகச் சென்றனர்.

பின்னர் விநாயகக்கடவுள், அரசனகாசனது மையலைநீக்கி ஆட்கொள்ளுமாறு திருவுளங்கொண்டு, தொழு நோய்கொண்ட சரீரத்துடன் ஒரந்தணராகவெளிக்கொண்டு, அவ்வரசனுடைய அரண்மனை வாயிலுக் கெதிர்சென்று, அங்கு காவல்கொண்டிருக்கும் ஏவலாளரைப் பார்த்து யாம் வந்திருக்கின்ற செய்தியை அரசனுக் கறிவிப்பீர்களென்று திருவாய்மலர்ந்தனர், அவர்கள் அவ்வாறேசென்று சேவித்து, ஓ சார்வபௌமா தேவரீர் அரண்மனை வாயிலை நோக்கி நேற்றை யவரையில் வாதலாக்குள் ஒருவராகிலும், தரித்திரத்தால் வருத்தமுறுகின்ற பேர்களைக் கண்டதில்லை. இத்தினமே ஒருவரைக் கண்டோம் அவர் மகாயோக்கி யமுள்ள அந்தணராயும். தொழுநோய் கொண்ட சரீரத்துடன் மிக்க துன்பத்தையும், பசியையு முடைத்தானவராயிருக்கிறாரென்று சொல்ல, அதை அரசன்கேட்டு அவ்வேதியரை இங்ஙனங் கொண்டு வரக்கடவீரென்று கட்டளையிட்டான். அவ்வாறே அக்காவலாளர், அவரை யழைத்துக் கொண்டுவந்து அரசனெதிரில் விட்டார்கள். யாவரும் அருவருப்புக் கொள்ளத்தக்கசரீரத்தோடிருக்கின்ற அந்தணரை யரசன்பார்த்து உமக்குயாது வேண்டி வந்தீரென்று வினவ, அதற்கவ் (விநாயகமூர்த்தியாகிய) வேதியர். அரசனே முன்னர்எனது பசிநோய் நீங்குமாறமுதூட்டவேண்டுமென்றார். உடனே அரசன் தன்குமாரனையழைத்து இ

தியர் பசிதணியும்படியாக*அறுசுவைபதார்த்தங்களோடும்போசனஞ் செய்விக்கக் கடவையென்றுகட்டளையிட்டனன். அப்புதல்வனதற்கிசைந்து அந்தணரையுள்ளே யழைத்துக்கொண்டு சென்று வாசனை யூட்டிய சலத்தினால்அவரது திருவடிகளை விளக்கியாசனத்தி லெழுந்தருளச் செய்து சாஷ்டாங்கமாக வணங்கி நீண்டிருக்கின்ற இரண்டு தலைவாழையிலைகளை யொன்றாகச்சேர்த்து அவைகளில்அன்னங்கறி முதலானஎல்லா வுணவுகளையுங்குறைவறநிறப்பி, சுவாமி இனித்தேவரீ ரமுதெடுத்தருள வேண்டுமென்று இரந்து, அருகில் விசிறிகொண்டு மெல்லவிசிறி உபசரித்தனன் பின்னர்அவ்வேதியர் எல்லா வுண்டிகளையும்நீர்விளாவிதமது திருக்கரத்தாற்றொட்டருளிய மாத்திரத்தில் அருகிருந்தவர்கள் அவ்விலைகளிலிட்ட பதார்த்தங்களில்ஒன்றேனுங்கண்டிலராகி ஆச்சரியமடைந்தார்கள் அரசகுமாரன் உடனே சமையற்காரரைக்கூவி நீங்கள்சமைத்திருக்கின்ற பற்பலவுணவுகளையுங் கொண்டுவந்து இடுவீர்களென்ன, அவ்வாறே அவர்கள் அளவற்ற பொற்பள்ளயங்களில் பாகமுழுவதும் நிறைவேறியிருக்கின்ற பற்பலவுணவுகளையுங் கொண்டுவந்துபடைத்தனர் படைக்குந்தோறும் அவர்கள் நாணும்படி உடனுக்குடனே வேதியரும் உண்டருளினர்அதைச் சமையற்காரர்கள்நோக்கிக்குறுநகைகொண்டு மீளவுஞ்சென்று பாகமானதும் ஆகாததுமாய் மட்கலத்தோடு வைத்திருக்கின்ற உண்டிகளையெல்லாங் கொண்டுவந்து படைத்தார்கள். அவைகளையும் அவ்வாறே உண்டருளினர், பின்னரவர்கள் அரசகுமாரனை நோக்கி யாங்கள் சமைத்து வைத்திருந்த எல்லாவுணவுகளையும் இவ்வொருவருக்கே படைத்து ஆய்விட்டன. இன்னும் அரைக்கணப்போது பொறுத்திருந்தால் அளவற்றவுண்டிகளைச் சமைத்துக்கொண்டு வருகிறோமென்றுசொன்னார்கள், அதை அந்தணராய் வந்தஎமதுகர்த்தன் செவியுற்றுத்தமது திருமுடியைத் துளக்கிஇனிவெந்த பின்பு என்பசியைவிலக்கும்போதுவிலக்குங்கள், இப்போது வேகாதிருக்கின்றவைகள் யாதாயினும் இருந்தால் அவைகளைக் கொண்டுவந்து விரைவிற்படையுங்களென்று திருவாய்மலர்ந்தனர். அதற்கவ் வரசகுமாரனதிசயித்துஇவர்க்குஅப்பண்டங்களை அடிக்கடி எடுத்துவந்து படைப்பது அரிதென்று நினைத்து. அந்தந்தப் பதார்த்தங்களையடைத்திருக்கின்றஎல்லாக் ாஞ்சியங்களையுந் திறந்து, சுவாமி இவைகளிற் புகுந்து உமக்கு

* அறுசுவையான. கைப்பு, தித்திப்பு. புளிப்பு, உவர்ப்பு. துவர்ப்பு, கார்ப்பு என்பன.

வேண்டுவன புசித்தருளுவீர் என்றுசொன்னான். அவ்வாறே அக்களஞ்சியங்க ளனைத்திலும் வடவாக்கினியைப்போலப் புகுந்து யாவையும்புசித்தருளினார். இவ்வற்புதத்தைச் சனகராசன்கேள்வியுற்று ஞெரேலென் றெழுந்துவந்துகர்த்தன் திருவிளையாடல்களைப் பார்த்து, இஃது கனவேயன்றி நனவாகக் காணப்படவில்லை. அஃதில்லாவிடில் ஓர் மாயையென்றெண்ணத் தக்கதேயன்றி மற்றொன்றல்லவென்று மதித்து அந்நகரத்திலுள்ளனவும் அந்நகரத்தைப் புடைசூழ்ந்தநாடுகளிலுள்ளவுமான பதார்த்தங்களையெல்லாம்மனோவேகமாய்ச்சென்று கொண்டுவரும்படி தூதர்களுக் காக்கியாபித்தனன். அத்தூதர்கள் அக்கட்டளையை ஆங்காங்கிருக்கின்றவெல்லாச் சனங்களுக்கும் அறிவிக்க, அவ்வவர்கள் வெந்ததும் வேகாததுமாயுள்ள அளவற்றபதார்த்தங்களைக் கொண்டுவந்துமலைபோலக்குவித்தார்கள். உடனேசர்வ சங்காரகாலத்தில் சகலலோகங்களையும் அவ்வுலகங்களிலுள்ள எல்லாப் பொருள்களையும், எண்ணிறந்த சீவராசிகளையும் இமைப்போதிற்றமது உதரத்துள் ஒளிக்கச் செய்யவல்ல வேதியரானவர் அப்பதார்த்தங்களையெல்லாம் அரசன் காணும்படியாக முன்போலவே உண்டருளினார்.

இவ்வாறு யாவையும் உண்டருளிய அதிசயத்தைக்கண்டவர்களெல்லாம் பயந்து, இன்னும் இக்குட்டநோயுற்ற வேதியன்பசித்தீராமையால் இனிநம்மையுமெடுத்து விழுங்கிவிடுவனென்று நாற்றிசையிலும் ஓடிப்போனார்கள். அமைச்சர்களெல்லாம்நடுநடுங்கி, இம்மறையவன் தேவனோ? பூதனோ? அசுரனோ? மற்றெவ்வகைத்தானவனோ அறிகிலோம்; இவன் மனிதனாயின் இவ்வாறுண்ணத் தக்கவனன் றென்று சந்தேகித்தனர். அரசனும்அதிக அச்சங்கொண்டு வடவாமுகாக்கினியே ஓர் வடிவங்கொண்டு வந்ததோ? அல்லது சிவபெருமானுடைய நுதல்விழித் தீயோவென்றுமனங்கலங்கினவனாய் நமது நகரத்தினையும், நாடுகளையும் யானையுண்ட விளாங்கனிபோலவும், உயிர் நீங்கியவுடல் போலவுஞ்செய்து, எல்லாப்பொருள்களையும் இவர் எதிரிற்கொண்டுவந்து படைத்தும்இன்னும்இவர் பசிக்கிறுதி கண்டதில்லையாதலால் இவர்க்குஅமுதளிப்பவர் மனிதருக்குளில்லை யோசிக்குமிடத்தில் தேவர் கூட்டத்திலு மிரார்கள் இனியாம் செய்யத்தக்கது ஒன்றையுங் காணோம். இவரை நல்லவார்த்தையால் வெளிப்படுத்துவது எவ்வுபாயத்தினாலென்று; யோசித்து விநாயக மூர்த்தி சமீபத்தில் வந்து, சுவாமி தேவரீர் அத்தனைராதவாறும் இவ்வுலகில் தரித்திரத்தால் மிகவும் வருத்தமுற்றிருக்கின்

ரனும் விரோசனையுந் திகைத்துமீட்டுந் தெளிவுற்றுத் தங்களையடைந்திருந்த வறுமைக்கு விடைகொடுத்தனுப்பினார்கள். மிதிலாபுரியினும், அதைச்சேர்ந்த நாடுகளினுமிருந்து அவ்வவர்கள் முன்னர்கொண்டுவந்திழந்த பண்டங்களெல்லாமொன்று நூறாகவுண்டாயின. அவ்வற்புதத்தைக் கண்டவர்களெல்லாம் அதிசயமடைந்தார்கள்.

இப்பால் திரிசிரனும் விரோசனையும் வறுமையாற் றளர்ச்சியடைந்தாராயினும், அன்பிற் றளர்ச்சியடைதலில்லாத சத்தியசீலர்களாதலால் அவர்கள் முழுவதுமடைத்தேறுமாறு தொழுநோய் கொண்டு அருகிருந்து நின்ற அந்தணரான விநாயகக் கடவுளானவர், அவ்வுநிலைக்காந்து தமது தெய்வரூபத்தைக்கொண்டு, அறுகையுஞ், சந்திரனையுந் தரித்த சடாமகுடமும், மழுப்படை, தாமரைமலர், படிகமாலை, ஒற்றைக்கோடு என்னுமிவைகளைத்தாங்கிய நான்கு திருக்கரங்களும், முப்புரிநூலணிந்தமார்பும், வேதத்தை இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக்கின்றசிலம்பணிந்த திருவடிகளும், மணிமுடி, குண்டலம், புயகவசமுதலிய ஆபரணங்களுந் தோன்றும்படியாக அவர்களெதிரே பிரத்தியட்சமாகி நின்றனர். உடனே அவ்விருவர்களுந் திகைத்து அன்பும் அச்சமுங் கொண்டு அளவற்ற புட்பங்களாலருச்சனைசெய்து, அவர் திருவடிகளில் சாஷ்டாங்கமாக வணங்கி, அளவிறந்த தோத்திரங்களைச் செய்து, ஆனந்தக் கூத்தாடி, எண்ணற்ற பிறவிகடோறுஞ் செய்து முற்றிய தவத்தினுங் கிடைத்தற்கரிய கிருபாமூர்த்தியே தேவரீர் திருவடிகளை எளிதிற் பெற்றனமாதலால் இனி அடியேங்கள் இப்பிரபஞ்சவாழ்க்கையை வேண்டேம். தேவரீர் திருவடிநீழலி லிருக்கத்தக்க பேற்றினை யளித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். அதற்கு விநாயகக்கடவுள் அருள்சுரந்து, அன்பர்களே உங்களுக்கு அந்திய காலத்தில் அவ்வாறே அளிப்போமென்று திருவாய்மலர்ந்தனர். இவ்வாறு அப் * பத்தர்களுடைய வறுமையைநீக்கிப்

---

* பத்தர் சிவனடியாரை வணங்குதல், சிவபூசைத்தொழிலிற் சந்தோஷித்தல், இறைவனையும் அவனடியாரையும் விதிப்படி அருச்சித்தல், தங்களாற் செய்யப்படும் புண்ணியங்களனைத்தையும் இறைவன் றிருவடிக்கே கொடுத்தல். சிவசரித்திரங்களையே அன்போடு கேட்டல், இறைவனையே வணங்கி மனம் நெக்குருகி தேகம் நடுக்குற்று உரோமம் புளகிதமாகி ஆனந்தபாஷ்பம் பொழிந்து நாத்தழும்ப பரவசமாதல் எச்செயலினுஞ் சிவசிந்தை மாறாதிருத்தல். பொய்வேட முறாமை, ஆகிய இவ் வெட்டிலக்கணங்களையுமுடையாரே பத்தரென்ப.

நும் பாக்கியத்தினை யளித்துத் தமது திருவருளையுங் கடாட்சித் கொண்டிருக்கின்ற சமயத்தில், சனகராசனானவன் தனது அரண்மனையிலும், தனதாணையி லடங்கியிருக்கின்ற நகரிகர முதலாயுள்ள எல்லாவிடங்களிலும் அளவற்ற செல்வங்கள் அமைந்திருப்பதைநோக்கி ஆச்சரிய மடைந்து, நம்மையாசித்துவந்த அந்தணன் ஈச்சுரனே யாகுமென்று நிச்சயித்து உடனே விரைந்தெழுந்து திரிசிரனுடைய மனைக்குட் சென்று, இருக்கு முதலாயுள்ள சதுர்வேதங்களாலு மறியப்படாத சுரூபகாரியும் அன்பர்களுள்ளமே ஆலயமாக வீற்றிருக்கும் பெருமானாகிப் பிராகின்ற விநாயக மூர்த்தியை எதிர் கொண்டு * சாஷ்டாங்கமாகப் பணிந் தெழுந்து, விழிகளில் ஊற்றெடுத்ததுபோல் ஆனந்த பாஷ்பஞ் சொரிந்து, நெக்குவிட்டு நெஞ்சமுருகிக் கரங்களைச் சிரமேற் கூப்பி,

"அறிவுபோ லடர்ந்தெழுந்த வறியாமைப் பெருவலியாற்
சிறியனே னகம்பிரமஞ் சிந்தித்து மிகத்தருக்கி
மறியுமா பவக்கடலின் மறியாமைக் கரைசேர்க்கு
நெறியிதா மெனக்காட்டு நின்மலனின் னருள்போற்றி.

நாரதமா முனிவந்து நவைதீர வுரைத்திட்ட
சீர்தரும மறியாத சிறியேனுங் கரைசேர
வாரதனை யணிந்தபிரான் மதிக்கடப்ப வரங்கொடுத்த
[illegible]ரதய வாலிங்கு மேவியநின் னருள்போற்றி.

அடியனே னளவன்றி யடியனேன் பெருங்கிளையும்
படியிலா நெடும்பொருளும் பதியவரு மவர்பொருளும்
நெடியநீர்க் குளிர்நாடு நின்மலமாய் நினைந்திரு
முடிவிலாப் பதஞ்சேர முன்னினைநின் னருள்போற்றி.

நருவியுநா ரணனறியாச் சுடர்மலர்த்தா ளுந்தையிடத் போற்
திருகுமனத் தொடுமெதிர்ந்து தென்றிசைக்கோன் பெற்றது
பொருள்பிறழக் கொண்டுனது பூங்கழல்பெற் றேனினிநின்
னிருமலஞா னந்தெளிய நிகழ்த்துகென விரந்திட்டான்.

அறிவினைப் போன்று மறைத்துக் கொண்டிருந்த அறியாமையால் அகம்பிரமமென்று நினைத்துமிகவுங் கர்வப்பட்டு ஜன்மசாகரத்தில் மூழ்கிப் போம்படியிருந்த அடியேனை அவ்வாறு மூழ்கிப்

---

* சாஷ்டாங்கம் சிரம், ௧, கை-௨, முழந்தாள்-௨, மார்பு-௧ ஆக ௬ அங்கங்களும் பூமியிற் படும்படி வணங்குதலென்ப.

போக வொட்டாமல், கடைத்தேறு மார்க்கம் இதுவென்று காட்டியருளிய நின்மல மூர்த்தியே தேவரீருடைய கிருபைக்குச் சாஷ்டாங்கநமஸ்காரம், சிவபிரானுக்குத் திரிபுரதகனஞ் செய்யுமாறு கடாட்சித்தருளிய ஓ தேவதேவோத்தமரே தேவரீர் திருவடித் தாமரைகட்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் நாரதமுனிவர் கூறிய நன்மார்க்கங்களை சிறிதுமுணராதிருந்த சிறியேனைக் கரைசேர்க்கும் வண்ணமெழுந்தருளிய பரஞ்சோதியே தேவரீருடைய பெருங்கருணைக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் அடியேன் மாத்திர மன்றி அடியேன் சுற்றத்தார்களும் அடியே னாளுகின்ற நாடு நகரங்களும், அவைகளிலுள்ள பதார்த்தங்களும் சுவாமிகளது பாதார விந்தங்களிற்சேரும்படியாகத் திருவுளங்கொண் டெழுந்தருளிய நின்மலமூர்த்தியே தேவரீருடைய கிருபைக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்.

என்றிவ்வாறு அனந்த முறை தோத்திரஞ்செய்து கர்த்தனை பிரமனும், விண்டுவினுங் தேடிக் காணக் கூடாத சிவபெருமானுடைய திருவடிகளை முன்னொருகாலத்தில் எமதருமராசனெதிர்த்துப்பெற்றதுபோல அடியேன்பரப்பிரமத்தை யபராதபாடாகநினைத்துத்தேவரீருடைய திருவடிகளைப்பெற்றேன் இனித்தேவரீருடைய நின்மலஞானத்தை அடியேன் தெளியும்படியாக அநுக்கிரகஞ் செய்ய வேண்டுமென்று பிரார்த் தித்தனன், அதற்குக் கர்த்தன் கிருபைசுரந்து அச்சனக ராசனது சித்த பரிபாகத்தை யறிந்து, மீட்டும் அவன் சனனமெடுக்காத மார்க்கத்தினுக்குரிய ஆகம முறைப்படி தீட்சைசெய்து, தயிருளெழுந்த வெண்ணெய்போலத் தக்க முறையா லுபதேசிப்பதாயினர்.

## பதி பசு பாச விலக்கணம்.

அரசனே! பதி, பசு, பாசம் எனமூன்று பொருள்களுண்டு, அவற்றுள் ஏகமாகிய நம்மைப் பதியென்றும், அநேகமாகிய ஆன்மாவைப் பசுவென்றும், ஆணவம்-கன்மம்-அசுத்தமாயை-சுத்தமாயை-என்னு மிந்நான்கினையும் * பாசமென்றுங் கூறப்படும். அவற்றுள் பதிக்கு ஒருவருமறிவிக்காமலறிகின்றகுணமும், ஆன்மாவுக்கு அறிவிக்குங்குணமும், அநேகமாகிய பசுவுக்கு அறிவித்தாலறிகின்ற குணமும் பிறருக்கு அறிவிக்கமாட்டாதகுணமுமாம், ஆணவ மலத்திற்கு ஆன்மாவேண்டுங் காரியத்தை மறைத்தல், வேண்டாத்

* பாசம், மலம், மாயை, அவிர்தம், அவித்தை என்பன ஒரு பொருட்

காரியத்தில் விருப்பங்கொடுத்தல் புண்ணிய பாவமாகியகன்மமலத்திற்கும் அசுத்தாசுத்தமாகிய மாயா மலத்திற்கும் ஆன்மா ஆணவத்தைப்பொருந்தினல் ஆணவத்தி லழுத்து விக்கின்ற குணமும் பதியைப்பொருந்தினல் பதியில் அழுத்துவித்தல் முதலிய குணமாம். இவ்வாறு பொருளும் வியாபகம், வியாத்தி, வியாப்பியம் மெனமூவகையா யிருக்கும். இவற்றுள் வியாபகமாவது நிறைந்திருத்தல் வியாத்தியாவது சமநிறைவாய் இருத்தல், வியாப்பியமாவது அடங்கியிருத்தலாம். அதுதெவவாறெனில் சமுத்திரம வியாபகம் அதுபோலுநாம். அச்சமுத்திரத்தில தண்ணீர் வியாத்தி அதுபோலுநமிடத்தில் ஆன்மா. அத்தண்ணீரில் உப்பு வியாப்பியம் அதுபோலும் ஆன்மாவிடத்தில மலமுதலியவைகள்.

பதிபசுபாச மனுதித்தியம,

இப்படி இவ்வாறு பொருளும் ஒன்றிலொன்று கலந்தடங்கியிருப்பதாயினும் அவைகள அனுதி நித்தியமாகியு மிருப்பன வன்றி எங்கும் வியாபகமாயு மிருக்கின்றன. ஆனல பதிதான் அனுதி நித்தியம் மற்றைய பசுமுதலியவைகள் எவ்வாறு அனுதிநித்யமாமென்னில். சூரியனுள்ளபோதே கண்ணும் அக்கண்ணை மறைத்தஇருளும் அனுதி நித்யமேயாம். ஆனல் அவைகள் யெங்ஙும வியாபகமாயும் இருக்கின்றன வென்றதெவவாறெனில. எண்ணிறந்த கண்களுக்கு ஓராதித்தன் இருந்து அறிவித்தலபோல எலலாப புவனஙகளினும் இருக்கின்ற எண்ணிறந்த ஆன்மாக்க ளுககும நாம் ஒருவனிருந்து அறிவித்தலானும், கண்ணுனது சூரியமண்டல முதலிய யெல்லாமண்டலங்களினும் போக்குவரத் திலலாமல சகல காரியங்களையும் அறிவதுபோல ஆன்மவானது சகலபுவனங்களினும போக்குவரத்தில்லாமல் எல்லாக்காரியங்களையு மறிதலானும் இருவொன்றுயெண்ணிறந்த ஆன்மாக்களையு மறைததலானும் பல தானியஙகள் அந்தந்த ஊரில் இருககின்றோர்களுக்கு அங்கங்கே புசிப்பா யிருத்தல் போல பலகன்மங்கள் அந்தந்தப் புவனங்களி லிருக்கின்ற ஆன்மாக்களுக்கு அங்கங்கே புசிப்பாயிருத்தலானும், குயவனுனவன் பலபாண்டங்களை அந்தந்த ஊரிலிருக்கின்றோர்களுக்கு அங்கங்கே படைப்பதுபோல அசுத்தாசுத்தமாகிய மாயையானது பலதனு கரணுதிகளை அந்தந்த புவனங்களி லிருக்கின்ற ஆன்மாக்களுக்கு அங்கங்கே படைத்தலானும் அவ்வாறுபொருள்களும் வியாபகமென்றே சொல்லப்பட்டன. இப்படிவியாபகமாயிருக்கின்ற ஆறுபொருள்களும் ஒன்றுக்கொன்று யெவ்வாறு சம்பந்தப் பட்டன வெனில்

அநாதியிலே ஆன்மாக்கள் ஆணவ மலத்திற் கிடந்தார்கள். அவ்வாணவமலம் ஆன்மாக்களுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக்கொடுத்தது, இந்தச்செய்தியை நாமறிந்து இரக்கத்தினாலே ஆன்மாக்களது, விருப்பத்திற்கேற்ற மாயா கருவிகளைக் கொடுத்து அவைகளினிடமாகக் கன்மங்களைப் புசிப்பிப்போம். அநாதியிலே சகல லோகங்களும் உண்டாகின்ற முறைமை இவ்வாறாகும்.

மாயை யுறபவம்.

அநாதியில் ஆன்மாக்கள் ஆணவமலத்திற் கிடந்தன வென்றால், அவர்கட்கு அவ்வாணவமலத்தை நாம் கூட்டிவைத்ததோ, அதுதானே வந்து பொருந்திற்றோவெனில், நாம் நின்மலனாகிய சர்வாநுக்கிரக னாதலாலே நாம் கூட்டிவைத்ததன்று ஆணவ மலஞ் சடமாதலால் தானேவந்து பொருந்தமாட்டாது, ஆதலால் ஆன்மாக்களே ஆணவமலத்தைப் பிடித்தன வென்றறிக.

மாயை கற்பிதம்.

ஆனால் ஆன்மாக்களுக்கு ஆணவமலம் இயற்கையோ செயற்கையோ வெனில், இயற்கையானால் பாலுக்கு வெண்மையுங் கரிக்குக் கருமையும் ஒருக்காலும்விட்டு நீங்காததுபோல ஆன்மாக்களுக்கு ஆணவமலம் ஒருக்காலும்விட்டு நீங்காது. செயற்கையானால், வெள்ளை வத்திரத்தில் அழுக்கேறுவது போல முத்தியிலும் வந்துப் பொருந்தும், ஆதலால் இரண்டு மன்று. நெல்லுக் குமியும் செம்புக்குக் களிம்பும், கடல்நீருக்கு உப்பும்போல, ஆன்மாக்களுக்கு ஆணவமலம் அநாதி செயற்கையென்றும் அநாதி சையோக மென்றுஞ் சொல்லப்படும்.

ஆன்மாக்கள் சுதந்தர வீனர்களா யிருத்தலால் நமக்குண்டாகிய செய்தி அவர்கட் குண்டோவெனில வேதாகமங்களிலே விதிவிலக்கும, அவர்கட்கு நரகமோக்கமு முண்டா யிருத்தலினாலே செய்தியுண்டு, ஆனால் ஆன்மாக்களுக்குக் கன்மத்தில் உண்டாகிய விருப்பமோ, ஆன்மாக்களுக் குண்டாகிய விருப்பமோ வெனில் நாம் கொடுத்த விருப்பமானால் ஏன் பாவத்தைச் செய்தீ ரென்று நரகத்திலிட்டுத் தண்டிக்க வேண்டுவ தில்லை. ஆன்மாக்களுக் குண்டாகிய விருப்பமானால், புண்ணியங்க ளிருக்கப் பாவங்களைச் செய்யார்கள். ஆதலால் ஆணவமலமே ஆன்மாக்களுக்குக் கன்மத்திலே விருப்பத்தைக்கொடுத்தது. ஆணவமலமும் ஆன்மாக்களுக்குக் கன்மத்தை யறிந்தெடுத்துக் கொடுக்கமாட்டாது. விரும்பிய ஆன்மாக்

களும் கன்மத்தையறிந் தெடுத்துக்கொண்டு புசிக்க மாட்டார்கள். விரும்பப்பட்ட கன்மமும் ஆன்மாக்களை யறிந்துவந்து பொருந்த மாட்டாது. இந்தச் செய்தியை நாமறிந்து இரக்கத்தினாலே அவ் வான்மாக்கள் கன்மத்துக் கேற்ற * தனுவைக் கொடுத்து அத் தனுவினிடமாக அக்கன்மத்தைக் கூட்டிப்புசிப்பிப்போம் அஃதெவ் வாறெனில்.

௧-வது உபமானம்.

குழந்தைக்குப் பாலின்கணுண்டாகிய விருப்பம் தாய்கொடுத்த விருப்பமோ? குழந்தைக்குண்டாகிய விருப்பமோ வெனில்.—தாய் கொடுத்த விருப்பமானால் அவள்கொடுக்கின்ற போதெல்லாம்பாலை யருந்தல் வேண்டும். குழந்தைக்குண்டாகிய விருப்பமானால், மாந் தங்கொண்ட வேளையினுமாறு தருந்தல் வேண்டும். இவ்விரண்டு மின்மையால், பசியே குழந்தைக்குப் பாலின்கண் விருப்பத்தைக் கொடுத்தது. விருப்பத்தைக் கொடுத்த பசியும், பாலையறிந் தெடுத் துக்கொடுக்கமாட்டாது. விரும்பிய குழந்தையும் பாலையறிந்தெடுத் துக் குடிக்கமாட்டாது. விரும்பப்பட்டபாலுங் குழந்தை வாயில் வந்துபுகுதமாட்டாது. இந்தச்செய்தியைத் தாயானவள் அறிந்து, இரக்கத்தினாலே பாலையெடுத்துப் பாலடையிலேவிட்டுக் குழந்தைவா யிலே வைத்துப் புகட்டுவள். இவற்றுள், குழந்தையைப்போலும் ஆணவமலம், பாலைப்போலும் கன்ம மலம், தாயைப்போலு நாம், பாலடையைப்போலுந் தனு எனவறிக.

௨-வது உபமானம்.

அன்றியுங் குருடனுக்கு கோலின்க ணுண்டாகிய இச்சை, கோல் கொடுத்திருக்கின்றவ னிச்சையோ? குருடனுக்குண்டாகிய இச்சையோ எனில்,—கோல்கொடுத்து இருக்கின்றவன் இச்சை யானால் அவன்கொடுக்கின்ற நேரமெல்லாங் கோலைப் பிடித்தல் வே ண்டும், குருடனுக்கு உண்டாகிய இச்சையானால் எப்போதும் கோ லைப்பிடித்துக்கொண்டே யிருத்தல் வேண்டும், இரண்டு மின்மை யால், குருடே குருடனுக்குக் கோலின்கண் இச்சையைக் கொடுத் தது. இச்சையைக் கொடுத்த குருடுங்கோலை அறிந்து எடுத்துக் கொள்ளமாட்டாது; இச்சித்த குருடனுங்கோலை அறிந்து எடுத்துக் கொள்ளமாட்டான்; இச்சிக்கப்பட்ட கோலுங் குருடன் கையில் வந்து பொருந்தமாட்டாது; இந்தச்செய்தியைஅவனுக்குரிமையா

* தனு-தேகம்.

யுள்ளவனறிந்து இரக்கத்தினாலே கோலையெடுத்து அவன் கையிற் றந்து அவன் நினைத்த இடத்திற் கொண்டுபோய் விடுவன். இவற் றுள் குருடனைப்போலும் ஆன்மா; குருடைப்போலும் ஆணவமலம் கோலைப்போலும் சரீரம், கோல்கொடுத்திழுக்கின்றவனைப்போலும் நாம்; இடத்தைப்போலும் புவனமெனவறிக.

௩-வது உபமானம்

ஆணவமலஞ் சடமாயிருத்தலால் அதற்குச்செய்தி யுண்டோ வெனில்;—விஷம், பாஷாணம், தீ, நீர், காற்று முதலியசடங்கட்குச் செய்தி யுண்டானாற்போல, அதற்குச் செய்தியுண்டு. ஆனால் நாம் ஆன்மாக்களுக்குத் தனுக்களைப் படைக்குமிடத்து நமது நினைவின் படி படைப்போமோ? ஆன்மாக்கள் நினைவின்படி படைப்போமோ வெனில்; ஒரேவடிவன்றிப்பல வடிவங்களாகப் படைத்தலால், ஆன் மாக்களது நினைவின்படியே படைப்போம் அஃதெவ்வா றெனில் குலாலன் பாண்டங்களை வனையுமிடத்துத் தனது நினைவின்படிவனை வானோ பிறர் நினைவின்படி வனைவானோ வெனில்; தனது நினைவின் படி வனைவானாயின் ஒரேவடிவாக வனைதல் வேண்டும், அவ்வாறின் றிப் பலவடிவங்களாய் வனைதலால் பிறர் நினைவின்படியேவனைவான் இவற்றுள் குலாலனைப்போலும் நாம், மண்ணைப்போலும், மாயை பாண்டத்தைப் போலுந் தனு பிறரைப்போலும் ஆன்மாக்களென வறிக.

௪-வது உபமானம்.

ஆன்மாக்கள் எங்கும் வியாபகராயிருக்க, எவ்வாறு சரீரத் தைப் பற்றுவரெனில்; படிகமலையானது எந்தப்புறத்தில் வன்னத் தைக் கொடுத்தாலும் பற்றிக்கொள்வதுபோல, எல்லாப் புவனங் களிலும் வியாபகராயிருக்கின்ற ஆன்மாக்கள் நாமெந்தப்புவனத்தி லே சரீரத்தைக்கொடுத்தாலும் பற்றிக்கொள்ளுவர், அஃதெவ்வா றெனில்? படிகமலையொன்று, படிகமலைக் கொளியொன்று, படிக வொளிக்குப் பற்றுங்குணமொன்று, படிகவொளிக்குப் பற்றுந் தொழிலொன்று, வன்னமொன்று, வன்னத்தைப்பற்றுவிக்கின்ற வனொன்று, ஆக அறுவகைப்படும், இவற்றுள் படிகமலையைப்போ லும் ஆன்மா, படிகமலைக் கொளிபோலும் ஆன்மபோதம், படிக வொளிக்குப் பற்றுங் குணம்போலும் ஆன்மபோதத்திற்கறியுங் குணம், படிகவொளிக்குப் பற்றுந்தொழிலைப்போலும் ஆன்மபோ தத்திற்கறியுந்தொழில், வன்னத்தைப் போலும் மாயாகருவி வன்னத்தைப் பற்றுவிக்கின்றவனைப்போலும் நாம், எனவறிக.

### ஆன்மா மலமாதியால் மறைவுபடும் வகை.

ஆன்மாக்களுக்கு அறியுங்குண மிருந்தலினாலே அவர்களை மலம் எவ்வாறு மறைக்குமெனில் சந்திராதித்தர்களை இராகு கேதுக்கள் மறைப்பதுபோலும். நெருப்பை நீர்மறைப்பதுபோலும், ஆகாயத்தை மலைமறைப்பது போலும், ஆன்மாக்களை ஆணவவிருள் மறைக்கும். இம்மறைப்புத்தான் ஆன்மாக்களுக்கு வருவானேனெனில் அவர்கள் கன்மத்தால் வந்தது. ஆனால் ஆன்மாக்கள் அவயவமின்றி நிரவயவராயிருக்க அக்கன்மந்தான் எவ்வாறு வந்ததெனில், நாம் நிரவயவரென்பதை மறந்து அவயவர் நாமென்னுங்கருத்தால் அக்கன்மம்வந்தது. அக்கன்மத்தால் மாயையுண்டாயது. அம்மாயையால் தனுகரண புவனபோகங்கள் உண்டாயின.

### இறைவன் ஆன்மாக்களுக்கு கன்மங்களைப் புசிப்பிக்கு முறைமை

நாம் ஆன்மாக்களுக்கு அக்கன்மங்களைப் புசிப்பிக்குமிடத்து எவ்வண்ணமாயிருந்து புசிப்பிப்போமெனில் இச்சா ஞானக் கிரியா சொரூபனாயிருந்து புசிப்பிப்போம். அதுவெவ்வாறெனில், ஆன்மாக்களை முத்தியிற் சேர்க்க வேண்டுமென்பதே இச்சை. ஆன்மாக்கள் இச்சித்த கன்மங்களை யறிவதே ஞானம். ஆன்மாக்களுக்கு அக்கன்மங்களை யூட்டி யுறக்கித் தொலைப்பித்தலே கிரியை எனவறிக ஆனால் ஆன்மாக்கள் அக்கன்மங்களைப் புசிக்குமிடத்து எவ்வாறிருந்து புசிப்பரெனில், இச்சா ஞானக்கிரியா சொரூபராயிருந்து புசிப்பர். அதுவெவ்வாறெனில் பண்ட பதார்த்தங்களிற் சென்று பற்றுதலே இச்சை. அவைகளைப் பகுத்தாராய்தலே ஞானம் சர்வத்தையுந் தனதென் றழுந்துதலே கிரியை யெனவறிக.

### கன்மவகை.

ஆன்மாக்களுடைய கன்மமெத்தனை வகையாயிருக்குமெனில், தூலகன்மம், சூட்சுமகன்மம், அதிசூட்சுமகன்மம், எனமூவகையாயிருக்கும். இவற்றுள் வினைகளுக்கெல்லாந் தூலகன்மமென்றும், அவ்வினைகளுக்குப் பின்பலனாக வருகின்ற புண்ணிய பாவங்கட்கெல்லாஞ் சூக்குமகன்மமென்றும், இபபுண்ணிய பாவங்களுக்குப் பின்பலனாகவருகின்ற இன்ப துன்பங்களுக்கு அதிசூக்கும கன்மமென்றும்பெயர். இம்மூன்றும் ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவமென மூவகையாயிருக்கின்றன. அவை யெவ்வாறெனில் இரு வினை

### அவத்தை மூன்று.

ஆன்மாக்கள் எக்காலத்தினும் பிரபஞ்ச சையோகராதலால் அவ்வான் மாக்கட்கவத்தையேதேனு முண்டோவெனில். கேவலம் சகலம், சுத்தம் என மூன்று அவத்தை யுண்டு. இம்மூன்றும் காரணம், காரியம் என இருவகைப்படும். இவற்றுள் காரண கேவலமாவது. அநாதியிலே ஆன்மாக்கள் அறிவு கெடாமல் ஆணவமலத்தில் அழுந்திக்கிடத்தல்? அஃது எவ்வாறெனில், கண்ணானது இராக்காலத்து இருளிலே ஒளி கெடாமல் விழித்திருத்தல்போலும் காரிய கேவலமாவது, நெற்றி, கண்டம், இதயம், நாபி, மூலமென்னும் ஐந்திடத்தினும் சாக்கிரம,சொப்பனம், சுழுத்தி, துரியம்,துரியாதீதம் என்னும் கீழாலவத்தை ஐந்தையும் அடைதல் காரண சகலமாவது. அநாதிகேவலத்திலே அழுந்திக்கிடந்த ஆன்மாக்கள் மாயா கருவிகளினாலே அக்கேவலம் நீங்கிச் சுக துக்கங்களை அறிதல், அஃது எவ்வாறெனில். இராக்காலத்து இருளிலே அழுந்திக் கிடந்த கண்ணானது விளக்கினாலே இருள் நீங்கிப் பதார்த்தங்களைக் காணுதல் போலும் காரியசகலமாவது. இலாடத்தானத்திற்றானே துரியாதீத முதல் சாக்கிர மீறாயுள்ள மத்தியாலவத்தை ஐந்தையும் அடைதல். காரண சுத்தமாவது. அநாதி கேவலத்தினும், சகலத்தினும், அழுந்திக் கிடந்த ஆன்மாக்கள் அருட்டெரிசனத்தினால் அவைகளை விட்டுநீங்கிப் பிரமானந்தத்தை அநுபவித்தல், அஃதெவ்வாறெனில், இராக்காலத்திருளோடும் விளக்கொடும் கூடியிருந்த கண்ணானது ஆதித்த னுதயஞ்செய்தவிடத்து அவைகளை விட்டு நீங்கி அவ்வாதித்தனைக் கண்டுகொண்டிருத்தல் போலும். காரியசுத்தமாவது நின்மல சாக்கிர முதல் நின்மலதுரியாதீத மீறாயுள்ள மேலாலவத்தை ஐந்தையு மடைதல் எனவறிக.

### பஞ்சகிருத்திகமும் ஆன்மாவிற்கே.

நாம் செய்கின்ற பஞ்சகிருத்தியங்கள் இவ் வான்மாக்களுக்கோ? சரீரங்களுக்கோ வெனில், ஆன்மாக்கள் நித்தியராதலாற் சிருட்டி, திதி, சங்காரம்கூடாது. சரீரம் சடமாதலால் திரோபவமும் அனுக்கிரகமும் கூடாது இனிஅச்சரீரங்கள் முத்தொழிற்படுமிடத்து அதில்ஆன்மாக்கள் அழுந்துவதினாலும், ஆன்மாக்களினுடைய இரண்டுதொழில் சரீரங்கட்கில்லாமையினாலும், பஞ்சகிருத்தியமும் ஆன்மாக்களுக்கேயாம்.

தால் மேலைக்கு வராமல் நீங்கிப்போய் விடும். இவ்வாறே சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என்னும்மூவகைக் கன்மங்களு மொழியு முறைமை யெனவறிக.

கன்மங்களை ஆன்மாக்களது விருப்பத்திற் கேற்கபுசிப்பிக்கின்றவன் நாமாயிருக்க, ஆன்மாக்களுக்கு முதன்மை எவ்வாறுகற்பிக்கப்படுமெனில். ஆன்மாக்களுக்குக் கன்மத்தின்கண்விருப்பமிருக்க நாம்சொற்கத்திற்கு வாவென்றழைத்தால் வருவாரல்லர், ஆதலால் அவ்வான்மாக்கள் பெத்தகாலத்தில் ஆணவமலத்திலழுந்திக் கிடக்கும்போது தாஞ் சற்றுந் தோன்றாமல் அதன் மயமாயிருப்பது போல, முத்திகாலத்தில் நம்பிடத்திலழுந்தி நமதுமயமாய்க் கிடக்கையால் பெத்தத்தில் ஆன்மாக்களும முத்தியினாமு முதன்மை யெனவறிக.

ஆன்மாக்களிடத் திறைவ னிருக்கை.

பெத்தான்மாக் களிடத்திலும், முத்தான்மாக்க ளிடத்திலும் நாமெவ்வாறிருப்போமெனில். பெத்தான்மாக்க ளிடத்தில் பாலுக்குள் நெய்போலவும், முத்தான் மாக்களிடத்தில் தயிருள் வெண்ணெய்போலவும் இருப்போம்.

ஆன்மாக்கள் தனித்தவரல்லர்.

ஆன்மாக்கள் எக்காலத்துந் தனித்திருப்ப தில்லையோவெனில் கண்ணானது ஒருக்கால் இருளோடுங்கூடி யிருப்பதன்றி எக்காலத்திலுந் தனித்திராததுபோல், ஆன்மாக்க ளெல்லாம் ஒருக்கால் மலத்திலேயும் ஒருக்கால் நம்மிடத்திலேயுங் கூடியிருப்பதன்றி எக்காலத்திலுந் தனித்திரார்கள்.

ஒளியு மிருளும் ஓரிடத்திற் கூடியிராததுபோல அவ்வான்மாக்களிடத்தில் ஆணவ மலமும் யாமுங் கூடி யிருத்தல் கூடாதேயெனில். ஒருமரத்தில் அடிதொட்டு நுனிபரியந்தம் இரசமும் அக்கினியுங்கூடியிருத்தல்போலயாமும் அவான்மாக்களைக்கூடியிருப்போம்.

இறைவன் துக்கமற்றவர்.

ஆன்மாக்கள் நரகத்திற் றுன்பங்களை அனுபவிக்கு மிடத்து அவர்களை நீங்காதநமக்கும் துன்பம் உண்டோ வெனில், ஆதித்தனொளி படிக வொளியிற் கலந்து நின்றுவர்ணங்களைப் பற்றுவித்துந் தான்பற்றுதவாறுபோலவும், ஒருவனனுபவிக்கின்றதுன்பம்அவன் வயிற்றிற் கிடக்குங்கிருமிகட்கில்லாததுபோலவும் நமக் கொருக் காலு மில்லை.

அவத்தை மூன்று.

ஆன்மாக்கள் எக்காலத்தினும் பிரபஞ்ச சையோகராதலால் அவ்வான்மாக்கட்கவத்தையேதேனு முண்டோவெனில். கேவலம் சகலம், சுத்தம் என மூன்று அவத்தை யுண்டு. இம்மூன்றும் காரணம், காரியம் என இருவகைப்படும். இவற்றுள் காரண கேவலமாவது. அநாதியிலே ஆன்மாக்கள் அறிவு கெடாமல் ஆணவ மலத்தில் அழுந்திக்கிடத்தல்? அஃது எவ்வாறெனில், கண்ணானது இராக்காலத்து இருளிலே ஒளி கெடாமல் விழித்திருத்தல்போலும் காரிய கேவலமாவது, நெற்றி, கண்டம், இதயம், நாபி, மூலமென்னும் ஐந்திடத்தினும் சாக்கிரம,சொப்பனம், சுழுத்தி, துரியம்,துரியாதீதம் என்னும் கீழாலவத்தை ஐந்தையும் அடைதல் காரண சகலமாவது. அநாதிகேவலத்திலே அழுந்திக்கிடந்த ஆன்மாக்கள் மாயா கருவிகளினாலே அக்கேவலம் நீங்கிச் சுக துக்கங்களை அறிதல், அஃது எவ்வாறெனில். இராக்காலத்து இருளிலே அழுந்திக் கிடந்த கண்ணானது விளக்கினாலே இருள் நீங்கிப் பதார்த்தங்களைக் காணுதல் போலும் காரியசகலமாவது. இலாடத்தானத்தின்றுனே துரியாதீத முதல் சாக்கிர மீறாயுள்ள மத்தியாலவத்தை ஐந்தையும் அடைதல். காரண சுத்தமாவது. அநாதி கேவலத்தினும், சகலத்தினும், அழுந்திக் கிடந்த ஆன்மாக்கள் அருட்சத்தி சனத்தினால் அவைகளை விட்டுநீங்கிப் பிரமானந்தத்தை அநுபவித்தல், அஃதெவ்வாறெனில், இராக்காலத்துஇருளோடும் விளக்கோடும் கூடியிருந்த கண்ணானது ஆதித்த னுதயஞ்செய்தவிடத்து அவைகளை விட்டு நீங்கி அவ்வாதித்தனைக் கண்டுகொண்டிருத்தல் போலும். காரியசுத்தமாவது நின்மல சாக்கிரமுதல் நின்மலதுரியாதீத மீறாயுள்ள மேலாலவத்தை ஐந்தையு மடைதல் எனவறிக.

பஞ்சகிருத்திகமும் ஆன்மாவிற்கே.

நாம் செய்கின்ற பஞ்சகிருத்தியங்கள் இவ் வான்மாக்களுக்கோ? சரீரங்களுக்கோ வெனில், ஆன்மாக்கள் நித்தியராதலாற் சிருட்டி, திதி, சங்காரம்கூடாது. சரீரம் சடமாதலால் திரோபவமும் அனுக்கிரகமும் கூடாது இனிஅச்சரீரங்கள் முத்தொழிற்படுமிடத்து அதில்ஆன்மாக்கள் அழுந்துவதினாலும், ஆன்மாக்களினுடைய இரண்டுதொழில் சரீரங்கட்கில்லாமையினாலும், பஞ்சகிருத்தியமும் ஆன்மாக்களுக்கேயாம்.

இறைவனே ஆன்மாக்களிடத்து பஞ்சகிருத்தியத்தைநடத்துவன்.

நாம் பஞ்சகிருத்தியத்தை ஆன்மாக்களிடத்தில் நடத்துவது எவ்வாறெனில். இவர்கட்கு மாயா கருவிகளைப் படைத்து அறிவை உண்டாக்குவதே சிருஷ்டி. அவர்கட்கு மாயாகருவிகளை நிறுத்தி அறிவைநிலைபெறச் செய்வதே திதி. அவர்கட்கு மாயா கருவிகளை ஒடுக்கி அறிவைப் போக்குவதே சங்காரம், அவர்களுடையஅறியுந் தொழில்களை அருளைக்கொண்டுமலசத்திகளால் மறைப்பித்து அவ்வவர்கள் கன்மங்களைத் தக்கபடி நிறுத்தலே திரோபவம், அவர்களுக்கு இன்பதுன்பங்களைப் புசிப்பித்துப்புண்ணிய பாவங்களாகிய வினைகளை யறுத்தலே அநுக்கிரகம் என அறிக.

ஆன்மாக்கள்பஞ்சகிருத்தியப்படும்வகை.

ஆன்மாக்கள் அப் பஞ்சகிருத்தியப்படுத லெவ்வாறெனில் அவர்கள் அறியுந்தொழிலே சிருஷ்டி, அவர்கள் அறியுந்தொழிலில் நிலைநிற்றலே திதி, அவர்கள் அறியுந் தொழில் நீங்கலே சங்காரம் அவர்கட்கு அறியுந்தொழில் நீங்கு மிடத்துள்ள அறியாமையே திரோபவம், அவர்கள் இன்பதுன்பங்களைப் புசித்துப் புண்ணிய பாவங்களைக் கழித்தலே அநுக்கிரகம் என அறிக.

பிறப்பிறப்பும் மோக்கநரகமும்.

நமது பஞ்சகிருத்தியமும், அவற்றில் ஆன்மாக்கள் படுதலும் இவ்வாறாகி யிருக்க. அவர்கள் பிறந்தார், இறந்தார், நரகமுற்றார், மோக்க மடைந்தார் என்று வேத ஆகமங்களிற் கூறுகின்றதெவ்வாற்றா லெனில், ஆன்மாக்கள்மாயா கருவிகளைப்பற்றி யறிந்திருத்தலே பிறப்பு, அம்மாயாகருவிகளை நீங்கி அறியாதிருத்தலேஇறப்பு, ஆயாசமுற்றிருத்தலே நரகம், அநாயாச முற்றிருத்தலே மோக்கம் என அறிக.

ஆன்மபோதவொழிபே முத்தி.

ஆன்மாக்கள் மோக்க மடையுமிடத்துக் கெட்டுக் கூடுவரோ கெடாது கூடுவரோ வெனில் கெட்டால் கூடத்தக்கதே யில்லை கெடாதிருந்தாற் கூடவே மாட்டார்கள். ஆதலால், ஆன்மாகெடாமல் விடயத்திற்செல்லும். அவ்வான்மபோதம் நிகழ்ச்சி கெட்டுக் கூடுமென் றறிக.

மவகை ஆன்மாக்கள்.

அவ் வான்மாக்கள் அனந்தரா யிருப்பதனால் அவர்களுக்குள் பேதமுண்டோவெனில். விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகல

மூன்று பேதங்களாயிருக்கின்றனர். இவற்றுள். ஆணவமலம் ஒன்றுடன் கூடியிருக்கின்ற ஆன்மாக்களுக்கு விஞ்ஞானகலர் என்றும் ஆணவமலம், கன்மலம் என்னும் இவ்விரண்டோடுங் கூடியிருக்கின்ற ஆனமாக்களுக்குப் பிரளயாகலர்என்றும்; ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்னும் இம்மூன்றோடுங் கூடியிருக்கின்ற ஆன்மாக்களுக்குச் சகலரென்றுஞ் சொல்லப்படும்.

இறைவனான்மாக்களை யாட்கொள்ளும்வகை.

மூவகையான் மாக்களையும் நாமாட்கொள்வதெவ்வாறெனில் விஞ்ஞான் கலருக்கு ஒளியுருவாயும், பிரளயாகலருக்குத் தேவவுருவாயும், சகலருக்குமனிதவுருவாயுமிருந்தாட்கொள்வோம். ஆனால் ஆன்மாக்களுக்கு மலப்பிணியினால் சரீரங்கள் உண்டாயின நின்மலனாகிய நமக்குண்டாவதற்குக் காரணமென்னவெனில். பிள்ளைக்குப் பித்தமுண்டானால் அப்பித்தத்தைத் தீர்க்கவேண்டுமென்று பிதாவுக்கு ஆசைப்பிணியுண்டானாற்போல, ஆன்மாக்களுக்குள்ள மலப்பிணியை நீக்கவேண்டிநமக்கு ஆசைப்பிணி யுண்டாயது அதனால் சரீரங்கள் உண்டாயின.

ஆன்மாக்களுக்கு மலப்பிணியை எவ்வாறுநீக்குவோ மெனில் அவர்கட்கு இருவினையொப்பு வந்தகாலத்து வண்ணான் வத்திரத்திலுள்ள அழுக்கை உழமண்ணைக் கொண்டு நீக்குவதுபோல மாயாகருவிகளைக்கொண்டு நீக்குவோம்.

இருவினையொப்பு.

இருவினையொப்ப யாவதியாதெனில். ஒருவன்தான் * விரும்பப்பட்ட பாதார்த்தங்களையும், வெறுக்கப்பட்ட பதார்த்தங்களையுங் கண்டால்விருப்பும் வெறுப்புமற்றபதார்த்தங்களை கண்டாற்போல நல்வினைப்பயனுந் தீவினைப்பயனும்வந்தால் அவ்விரண்டினிடத்தும் விருப்பு வெறுப்பின்றிநிற்றல்; அதுவெவ்வாறெனில், ஒருவனைவைப்பாட்டியிடத்திற் சிறிதுநாளும்மனையாட்டி யிடத்திற், சிறிதுநாளாகக் காலங்கழித்து வருகையில் இல்லறநூல் கேட்டவிடத்து வைப்பாட்டியை விடுத்து மனையாட்டியோடு வாழ்வதே சரியென்றும். துறவறநூல் கேட்டவிடத்து அம்மனையாட்டியும் பாசபந்தத்திற்கேதுவாகலான் அவளையும்விடுத்துத் துறவுபூண்பதே சரியென்றுங்

* விரும்பப்பட்ட பதார்த்தங்கள்-பொன்-வெள்ளி-முதலாயின. வெறுக்கப்பட்ட பதார்த்தங்கள்-தரித்திரம்-வியாதி-முதலாயின. விருப்புவெறுப்பு பதார்த்தங்கள்.—திரணம், புதர்முதலியன.

கண்டு, பின்னர் அவ்விருவரிடத்தும்விருப்பு வெறுப்பற்றதுபோல், ஒருவன் பாவமும் புண்ணியமுஞ்செய்து வருகையில் அறநூல்கேட்டவிடத்துப் பாவத்தைநீக்கி புண்ணியஞ் செய்வதே சரியென்றும், ஞானநூல்கேட்ட விடத்து அப்புண்ணியமுஞ் சனனமரணத்திற் கேதுவாகலாய் அதனை விடுத்து ஞானத்தை யடைவதேசரியென்றுங்கண்டு, பின்னர்இரண்டினிடத்தும் விருப்புவெறுப்பின்றி நிற்றலே இருவினையொப்பென்றறிக.

மலநிவர்த்திக்குக்காரணம் சிவபுண்ணியம்.

இருவினையொப்பின்கணுண்டாகின்ற மலநிவர்த்திக்குக் காரணம்யாதெனில். அநாதிதொடுத்து மோட்சபரியந்தம் ஆன்மாக்களாலுண்டாகின்ற சிவபுண்ணியங்களாம்.

சிவபுண்ணியங்கள்.

அவைகள். புத்தி பூர்வ சிவபுண்ணியம், உபாயசரிதை, உபாயகிரியை உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரிதை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம், எனப்பத்து விதமாயிருக்கின்றன. இவற்றுள் முந்தின வொன்பதும் மலநீங்கா அவைகள் ஆன்மாக்களால் செய்யப்படுவன. பிந்தினஒன்று அருணிலை. அஃதுதத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி; ஆத்மரூபம், ஆத்மதரிசனம், த்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் எனப் பத்துவிதமாயிருக்கும.

வருவா.

இந்தப்பத்தையும் பரிபக்குவனனவனுக்கு நாம்ஞான சாரியராக எழுந்தருளி சுத்தாவத்தையின் காரியமாகிய நின்மலசாக்கிரமுதலாயுள்ள ஐந்தவத்தைகளிலடக்கி அந்த உண்மைஞானத்தையறிவிப்போம். இவ்வாறு அளவற்றகாலம் ஆணவமலத்தினல்மறைபட்டிருந்த ஆன்மாக்களை முத்தியில் விடவேண்டுமென்று கடல்போன்ற பெருங்கருணையினலே திருமேனிகொண்டு அவர்களைஅவ்வாணவவிருளினின்று மெடுத்து விஞ்ஞானகலர் முதலியமூன்று வகையாகத் தொகுத்துத்,தனுமுதலியமாயாகருவிகளைக்கொடுத்து அவைகளினிடமாக நல்வினை தீவினையென்னு மிருவகை வினைகளைக் கூட்டி, அவ்விருவினை யொப்பில்மலபரிபாகமுண்டாக்கி, முத்தியிற் சேர்ப்பவனகிய சர்வஞ்ஞன் நாமாயிருக்கின்றேம்.

ஏ ஜனகனே அறிவித்தாலன்றிச் சுதாவில் ஒன்றையுமறிவதற் கில்லாத கிஞ்சிஞ்ஞனகிய நீயோபிரமமாவாய்? பிரமம்நீயே வெ

ஞாயமாகில் சந்திரசூரியர் நட்சத்திரங்கள், மேகங்கள், சமுத்திரங்கள் மலைகள், காடுகள், பஞ்சபூதங்கள் முதலான யாவையும் உன்னால் ஏன் உண்டாக்கக்கூடாது? உனக்குப்புலன்களேதுக்கு? சாக்கிராதி அவத்தைகளேன்? நீவிரும்பியவண்ணம் வினைப்போகங்கள் சித்தியாத காரணமென்ன? உனக்குநினைப்பு மறப்புகள் எங்ஙனமிருந்தன? அவனன்றி ஓரணுவுமசையாது என்று சகலசாத்திரத்தாலும் உலகத்தாராலுஞ் சொல்லுகின்ற பழமொழியையேனுங் கேட்டதில்லையோ? மேலும், சந்திரசூரியர்முதலிய கிரகங்கள் தத்தமுறைப்படி ஆகாயத்திற் சுழன்று உலாவுதலினாலும், மேகமானது சமுத்திர நீரையுண்டு பூமியிற் பொழிதலினாலும், அக்கினியுங் காற்றும் அளவுமீறி யுண்டாகாமையினாலும், கார்முதலிய அறுவகைக் காலங்கள் முறைதவறாமல் வருகையினாலும், பாம்புமுதலிய துஷ்டஜெந்துக்கள் மந்திரத்தினால் வசமாதலினாலும், எல்லாவுயிர்களும் பரம்பரைமாறாமல்வருதலினாலும், சுக்கிலமும், சுரோணிதமுங்கூடி ஒருவருஞ்செய்யாமல் சிசுவாய்ப்பிறத்தலினாலும். ஆனைமுதலியசகலஜெந்துக்களும் ஆணும்பெண்ணுங் கூடினால் அந்தந்த ரூபங்கொண்டு உற்பத்தியாவதினாலும் சிலவுயிர்கள் ஆணும்பெண்ணுங்கூடாமலே உண்டாகையினாலும், வித்தினவருக்கப்படி விருட்சமுதலியவைகள்முளைப்பதினாலும், ஆன்மாக்களெல்லாம்ஒருபடித்தாயிராமல்சிலர் இந்திரியபங்கமுடையவர்களாயும், சிலர்அவயவபங்கமுடையவர்களாயும், சிலர் சுகமுற்றவர்களாயும்,சிலர்துக்கமுற்றவர்களாயும், சிலர் செல்வமடைந்தவர்களாயும், சிலர் வறுமையடைந்தவர்களாயும் சிலர் அறிவுள்ளவர்களாயும், சிலர் அறிவில்லாதவர்களாயும், சிலர் புண்ணியஞ்செய்தவர்களாயும். சிலர்பாவஞ்செய்தவர்களாயுமிருத்தலினாலும், நவவாயிலென்னும் ஒன்பதுவழியுடன்பின்னுமொருவழியுண்டாக்கிக்கொண்டு உடலில் உயிர்வாசஞ்செய்யக்கூடாமையினாலும், ஒருறுப்பு நீங்கினால் அதனை உடனே உயிர்கள் உண்டாக்கிக்கொள்ள மாட்டாமையினாலும், ஆண்குழவி வேண்டுநர்க்குப் பெண்குழவி பிறத்தலினாலும், பெண்குழவி வேண்டுநர்க்கு ஆண்குழவி பிறத்தலினாலும், இவ்விரண்டிலொன்று வேண்டுநர்க்கு அலிக்குழவி பிறத்தலினாலும், எதையும்வேண்டாதவர்க்கு எண்ணற்ற குழவிகளுண்டாதலினாலும், ஒருவனையொருவன் வெட்டும்போது மற்றொருவன்வந்து விடுவித்தலினாலும், சிலர்மாற்றாற்குப்பயந்து மறைந்திருத்தலினாலும் சிலர் அம்மாற்றார் கரத்திலகப்பட்டு மயங்குதலினாலும், நித்தியமாயிருக்கவேண்டுகின்ற சங்கமங்களெல்

ளாம் வினையில் இறத்தலினாலும் அதைவேண்டத்தக்க விவேகமில்லாத தாபரங்களெல்லாம் அழிவில்லாமல் நீடித்திருத்தலினாலும் உயிர்கள் தமது முற்சனனத்தையும் வருஞ் சனனத்தையும் அறிந்துக்கொள்ளக் கூடாமையினாலும் இவைகட்கெல்லாந் தற்சுதந்தரமாக யவனொரு கடவுளிருக்கின்றாரென்று உறுதியா யறிந்துக்கொள்ளக்கடவை, அன்றி நாமேதான் எவ்வளவேனுந் தற்சுதந்தரமில்லாமல் அளவற்ற பேதமாயுள்ள ஆன்மாக்கள் செய்த நல்வினை தீவினைகட்கீடாகக் கம்மாளன் ஆபரணங்களை யுண்டாக்குவதும், குயவன் குடங்களையுண்டாக்குவதுமாகிய காரணத்தைப்போலநிமித்தகாரணமாயிருந்து தனுவாதிகளைக்கொடுத்து அம்முறையே இரட்சித்துச் சங்கரிப்பதன்றி அவ்வான்மாக்களுக்குப் பக்குவம்வந்தகாலத்தில் அனுக்கிரகமுஞ் செய்வோம் ஆதலால் இனியேனும் யாமுபதேசித்த சித்தாந்தத்தைச் சிந்தித்து வேறுபாடற்று ஏகமாகியும் அபாவமாகியும் இருந்து முன்னர் ஆணவமலத்தில் எவ்வாறு சார்ந்து நின்றனையோ அவ்வாறு நம்மிடத்திற் சார்ந்து துவித பாவனையற்றுச் சுகமாயிருக்கக் கடவையென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினர்.

இப்பால் சனகராசன் அவை யனைத்தையுந் தெளிவுபெறக்கேட்டுச் சிந்தித்து நிருத்தியாசனஞ் செய்து நிஷ்டைகூடி இவ்வாழ்வு நாரதமுனிவரால் வந்ததல்லவாவென்று நினைந்து நினைந்து உருகியுருகி, யாவருமெஞ்ஞானியென்று சொல்லும்படியாக உலகத்தைக் காத்துச் சீவன்முத்தனாகி யிருந்தனன், அருந்தவர்களே ஒராறினால் திரிசிரனென்னும் அந்தணனுடைய வறுமையெல்லாம் நாசமாகிப் பெறுதற்கரிய பெருஞ்செல்வம் அவனுக்குண்டானதன்றி அளவற்ற அற்புதங்களும் விளங்கினவென்றால் அதை யெண்ணளவிற் கொண்டுவந்து ஆகமமுறைப்படி யருச்சிப்போர்களடையும் பயன் எம்போலிகளா லளவிட்டுரைக்கற்பாலதோ யென்று தேவகணங்கள் முனிவர்கணங்களுக்குச் சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப்பிரமதேவன் சொல்லியபடி தேவேந்திரன் சூரசேன மகா ராஜனுக்குச் சொன்னான்.

தூர்வையாசகப்படலம் முற்றிற்று.

# தூர்வை துலையேற்றுப் படலம்.

---

தூத்தவ முனிவீ ரொற்றைத் தூர்வையால் வறுமைநீங்கி
யேத்தருஞ் செல்வம் பெற்று னிருந்திரி சிரசுவென்பான்
சாத்துமவ் வறுகின் மேன்மை தனைபின்னுங் கேண்மினென்று
நாத்திகம் பயிலா நாவி னன்கணாத சர்கள் சொல்வார்.

மகா மகத்வ மிக்க யோகேந்திரர்களே விநாயகமூர்த்தி தூர்வை யாசகஞ்செய்து திரிசிர னென்னும் அந்தணனுக்கு அளவற்ற செல்வங்களை யளித்து சனகராஜனுக்குப் பாத்துவாசிரயத்தை யுணர்த்தியருளிய திருவிளை யாடல்களை சொன்னோம். இப்பால அத்தூர்வையைத் துலையேற்றிய வரலாற்றைச் சொல்லுவோங் கேட்பீராக பின்னும் தேவேந்திரன் நிஷேன மகாராஜனைநோக்கி அரசனே தேவகணங்கள் முனிவாசட்ட வேறு கதையுஞ் சொன்னதாகப் பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லுவதாயது.

முற்கூறிய கவுண்டின்னியமுனிவர் ஐங்கரக்கடவுளாகியகணேசமூர்த்தியை அனுதினமும் அன்போடு பூசித்துவருகின்றநாளையில் ஓர்நாள் அவர் பத்தினியாகிய ஆசிரியை யென்பவள் மிக்கமனமகிழ்ச்சியோடு தனது கணவனைநோக்கி ஒருகதை அடியாட்குச்சொல்லியருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துக்கொண்டனள். அதற்கு அம்முனிவர் சந்தோஷங்கொண்டு முன்னர் விநாயகமூர்த்தி மிதுலாபுரியில் இருக்கின்ற திரிசிர னிடத்தில் தூர்வை விருந்துக்கொண்டு அவனுக்கு அளவற்றபாக்கியங்களை அளித்தருளிய கதையைச்சொல்ல அதனை அவ்வாசிரியை கேட்டுச் சுவாமீ அம் மிதுலாபுரி அந்தணனைப் பார்க்கினும் நாம் அத்தூர்வையை வெகுவாய்க்கொண்டுவந்து கணேசமூர்த்திக்கு அர்ச்சிக்கின்றோம். அவர் நமக்கு மாத்திரம் பாக்கியந்தராமல் இருப்பதற்குக் காரணம் யென்னவென்று கேட்டனள். நினைத்தமாத்திரத்தில் எல்லாச் செல்வங்களையும் ஏவலாகக் கொள்ளத்தக்க கவண்டின்னிய முனிவர் அதற்குப் புன்னகைகொண்டு இப்பிரபஞ்சத் துள்ளோர்களும் அத்தூர்வையின் மகிமையையுணர்ந்து சுத்தபவித்திர ராகும்படித் தமது மனத்தின்கண் நினைத்தவராய்ப் பெண்ணே நாம் ஓர் அறுகு தருகின்றோம் அதனை நீஎடுத்துக்கொண்டு தேவேந்திர னிடஞ்சென்று அதனிடை யெவ்வளவோ அவ்வளவு பொன் தரும்படி கேட்டு வாங்கிக்கடவை யென்று சொல்லித்தாம அருச்சித்தஅறுகுகளி

லொன்றையெடுத்துக் கொடுத்தனர். அதற்கு அவ்வாசிரியை இசைந்து வாங்கி உடனே சுவர்க்க லோகத்திற்குச் சென்று இந்திரனைக் கண்டு தனது காதலர் ஆக்கியாபித்ததை அவனுக்குத் தெரிவித்தனள். அதை இந்திரன்கேட்டவுடன் மிகவும் அற்புதமாகக்கொண்டு அவ்விருடிபத்தினியைச் சாஷ்டாங்கமாக வணங்கிப்பூசித்துத் தாயே நீர் இவ்வறுகினைக் குபேரனிடத்திற் கொண்டுபோவீராயின் உமக்குவேண்டிய பொன்னைப் பெற்றுக்கொண்டுபோகலாமென்று சொல்லிச் சிலதூதுவரைத் துணையாகக் கூட்டியனுப்பினன். அவ்வாறே ஆசிரியை குபேரனிடத்திற்செல்ல அவன்கண்டவுடன் இருடிபத்தினியென்று அறிந்துகொண்டு அனந்தமுறை தீர்க்கதண்டஞ்செய்து பூசித்தனன். உடனே கூடவந்த தூதர்கள் அக்குபேரனைப்பார்த்து இந்த அம்மாள் கையிற்கொண்டுவந்திருக்கின்ற ஓர் அறுகம்புல்லினிடைக்குச் சரியான பொன்னைக் கொடுப்பிக்குமாறு இந்திரர் எங்களுக்கு ஆக்கியாபித்தனர். என்று அறிவிக்க அதனைக் குபேரன் கேட்டு இதற்காகவா நம்மிடத்திற்கு வந்தது என்று குறுநகை செய்து அளவற்றசொர்ணங்களை மலைபோலக்குவித்து அன்னையே? உமக்குவேண்டிய பொன்னைக் கொண்டுபோகலாமென்றுசொன்னான். அதை ஆசிரியைகேட்டுத் தன்னெதிரில் மலைபோலாகக் குவித்திருக்கின்ற பொற்குவியல்களைப் பாராது ஐயா ! எனது காதலர் இந்த அறுகினிடைக்குச் சரியான பொன்னையே வாங்கிக் கொண்டு வருமாறு உத்திரவு செய்தனர். ஆதலால் இவ்வறுகை ஓர் *துலையின்கண் இட்டு அதற்கிணையான பொன்னைத் தூக்கித் தரல்வேண்டும்" என்றனள். அதற்குக்குபேரன் இசைந்து உடனே துலாவை யெடுத்து மேலே தூக்கினன் அதில் ஆசிரியை தனது அறுகம் புல்லை ஓர் தட்டில் வைத்தனள். குபேரனுடைய ஏவலாளர்கள் ஓர் இம்மியளவு பொன்னைக்கொண்டுவந்து மற்றோர் தட்டில் இட்டனர். இப்பால் அறுகிட்ட தட்டானது நிலத்திலும், பொன்னிட்ட தட்டானது ஆகாயத்திலுமாகி நிற்க அவ்வற்புதத்தை அளகேசன் கண்டு தனது ஏவலாளர்களைநோக்கி, இவ்வறுகு மகாதெய்வீகமுள்ளதா யிருக்கின்றது. இதன் பெருமை எளிதாகக்காணவில்லை. இஃது நமது பொக்கிஷத்திருக்கின்ற பொன்னையுமேயன்றி நம்மையுங் கொள்ளும்போற் றோன்றுகின்றது, ஆதலால்எவ்வளவு பொன்னைக்கொண்டேனும் இரண்டு தட்டுகளையுஞ் சமன்செய்யுங்களென்று கட்டளையிட்டனன். அதைக்கேட்ட ஏவலாளர்கள் மீட்

* துலை-தராசு.

டும் ஓர் () தொடியளவு பொன்கொண்டுவந்து வைத்தார்கள். அதற்குஞ் சமனாகாமையால்பின்னர் ஓர் தூக்களவு பொன்கொண்டுவந்து வைத்தார்கள். அதற்குஞ் சமனாகாமையால் அதனோடு ஓர் * துலாப்பொன் கொண்டுவந்து வைத்தார்கள். இவ்வாறுஅளவற்ற பொன்னை வரிசை வரிசையாகக் கொண்டுவந்து மாறுமல்வைத்திருந்தார்களேயன்றி அறுகின்தட்டானது சிறிதேனு நிலத்தினின்றுமேலெழும்பக்கண்டவரல்லர். மற்றொரு தட்டு மாத்திரம் பொன்னைக்கொண்டுவந்து இடுந்தோறும் இடங்கொடுத்துக் கொண்டுவளர்ந்துவந்தது. இப்பால் அவ்வேவுகாரர்கள் குபேரனுடையஅரண்மனையிலடங்கியிருக்கின்ற அவன் சொந்த நிதிகளை யெல்லாங் கொண்டுவந்து நிரப்பினார்கள். அதனாலும் அத்தட்டு சமனாகாமலே யிருந்தமையால், அதைக் குபேரன்கேட்டு ஆச்சரியமடைந்து உடனே தனது நகரத்திலுள்ள பொருள்களையெல்லாம் வரவழைத்துக் குவித்தனன். அதனாலும் அத்தட்டு நிலத்திலிறங்கக்சண்டிலனாகிபின்னர் தனது மனைவியோடும்வந்து துலாவைவணங்கி யேறினன் அப்போதும் அவைகள்சமனாகாதிருந்தது அவ்வற்புதத்தைத் தேவேந்திரன் கேள்வியுற்றுத் தனதுநிதிகளையுந் தனது நகரத்துள்ள நிதிகளையுங் கொண்டுவந்து துலாத்தட்டின்கணிறப்பித்தானுமேறினன், அதற்கும் அருகுது சிறிது விறங்கா திருந்தமையால் பின்னரத் தேவேந்திரன் மும்மூர்த்திகளும் வருமாறு மனதில் தியானித்தான். அவ்வாறே அம்மூவர்களுந்தங்கள்தங்கள் பரிசனங்களோடும்வந்துஏறினார்கள். அப்போதும்அவ்வறுகின்தட்டு முன்னிருந்த வண்ணமே சற்றுமசையாதிருந்தது.

ஐயகாத்துமாக்களே! அற்பவரத்தினையுமுடைய பலபேர்கள் தங்கள் தங்கள் அளவற்றசெல்வததோடு வந்தாரானாலும்,பெருந்தவத்தினையுடையாரது ஓர்சிறியபொருளுக்கு மொப்பவரோ! இப்பால் இந்திரன்முதலிய சகலதேவர்களும் இவ்வாறு நவிநாயக மூர்த்தியினுடைய திருவடிகளில் அருச்சனைசெய்து மேன்மைபெற்றிருக்கின்றதெனத்தெரிந்து கொண்டு யாவரும் அத்தட்டினை விட்டிறங்கி முப்பத்துமுக்கோடி தேவர்களுமபுடைசூழ்ந்துவரும்படியாக அவ்வவர்களுடைய வாகனங்களிலேறி ஆகாயவெளியெங்கும்நிரம்பவென்கண் வசிக்கின்றகவுண்டின்னியமுனிவர்காணும்படி

() தொடி-ஒரு பலம். * தூக்கு-ஐம்பதுபலம் இடையுள்ளது.
* தொலா-ஒருபலத்தில் மூன்றிலொரு பாகமுள்ளது.

அவ்வாசிரியையோடு வந்திரங்கினார்கள் இவ்வாறுஎல்லாத் தேவர்களுந் திரண்டுவந்ததைக் கவுண்டின்னிய முனிவர்கண்டு, திடுக்கிட்டெழுந்து, சாஷ்டாங்கமாகவணங்கி. இருகரங்களையுஞ் சிரமேற்குவித்து, ஆடிப்பாடி, ஆனந்தக்கண்ணீர்சொரிந்து,பலமுறைவலம்வந்து அடியேனியற்றிய தவத்தின்பயன்களை இன்றல்லவோ எனது கையிற்கிடைக்கப்பெற்றேனென்று அளவற்ற வேதாகமங்களினாற்றுதிசெய்து, ஓ சர்வஞ்ஞ மூர்த்திகளே! அடியேனிடத்திற் குற்றங்கள் நேர்ந்தனவாயினும், அவைகளைத் தேவரீர்களது நிறைந்தகிருபையினாற் பொறுத்தருளல்வேண்டும். தொண்டர்க்குத்தொண்டனாகிய சிறியேன் இதுகாறும் அறுகின் பெருமையைக் கண்டவனல்லன். இப்போது சுவாமிகளெல்லாம் ஆகாய வெளியினின்றும்வரக் கண்ட மாத்திரத்தில் அதனதுமகிமை இவ்வகைத்தென அறிந்து கொண்டேனென்றுசொல்லினர். அதனைச் சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபிரான் செவியுற்று, அன்பனே! அறுகின்பெருமை இம்மாத்திரமேயன்று, அதையாவராலும் அளவிட்டுரைத்தலுமரிது, அத்தன்மைத்தாகிய அருகினைத தரித்திருக்கின்ற விநாயகமூர்த்திக்குப் பத்திசெய்பவருக்குள் உன்னையொப்பவரெவ்வுலகங்களினுமில்லையென்று திருவாய்மலர்ந்து, அனந்தவரங்களையு மளித்துச் சென்றனர். மற்றைத் தேவர்களும அவ்வாறே அம்முனி புங்கவரைப் புகழ்ந்து வெவ்வேறுவரங்களைக்கொடுத்து, அவ்வவர்கள் பதவிகளை யடைந்தனர். இப்பால் சிவபிரானது கட்டளையின்படி காமதேனு கற்பக விருக்ஷமுதலியவைகள் வந்து அம்முனிபுங்கவருக்கு ஏவல் செய்திருந்தன, இவையனைத்தையும் அவர்பத்தினியாகிய ஆசிரியை கண்டுஅவரை தீர்க்கதண்டஞ்செய்து சுவாமி! கணேசமூர்த்தி மகிமையையும். அவரதுஅறுகின் பெருமையையும் இப்போதறிந்து கொண்டனனென்றுதித்து, அன்றுமுதல் தானும் அவ்வறுகினாற் கணேசமூர்த்தியையருச்சித்து இகபர சாம்பிராச்சியத்திற்குரித்தானவளாகி வாழ்ந்திருந்தனள். ஆதலால் அறுகம்புல்லினதுபெருமையை அவ்விநாயகமூர்த்தி யேயன்றி இவ்வுலகத்தின்கண் யாவரால் கணிக்கக்கூடும், நீங்களும் அவ்வறுகைக்கொண்டு விநாயகக் கடவுளை யருச்சியுங்களென்றுசொல்லித் தேவகணங்கள் விமானத்தைச் செலுத்திக்கொண்டு கணேசலோகத்திற்போய்ச் சேர்ந்தார்கள் அவ்விமானத்தி லேறிச்சென்ற விடை, காம், புலைச்சியாகிய மூவரும் இப்பிரபஞ்சத்துள் பிறந்திறத்தலாகிய வாதனையை யொழித்து விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் அளவற்ற

நாள் சொர்க்காதிபோகங்களை யனுபவித்து, முடிவில் அவரது திருவடிகளிற் கலந்தார்கள். இப்பால் தேவகணங்களால் அவ்வறுகின் பெருமையைக்கேட்ட முனிவர்களெல்லாம் முருந்தோடுமூன்றிதழ் விட்டிருக்கின்ற அறுகுகளைக்கொண்டு விநாயகமூர்த்தியை யருச்சித்தார்கள். உடனே கணேசமூர்த்தியினுடைய கிருபையால் அவ்வவர்கட்கு வேறுவேறு தெய்வவிமானங்கள்வர அவைகளிலவர்கள் ஆரோகணித்து விநாயகருலகத்திற் சேர்ந்தார்கள். அதனை அந்நகரத்துள்ளோர்களறிந்து அவ்வாறே அத்தூர்வையைக்கொண்டு இடைவிடாம லருச்சித்துச்சொர்க்கலோகத்தை யடைந்து அளவற்ற போகங்களை யனுபவித்தார்கள். ஆதலால், உன்புத்திரனாகிய கிருதவீரியனையும் அவ்வறுகைக்கொண்டு சங்கட்ட சதுர்த்திவிரதத்தை நிறைவேற்றச்செய்யென்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொல்லியதாகத் தேவேந்திரன சூரசேன மகாராஜனுக்குச் சொன்னான்

தூர்வை தலையேற்றுபடலம் முற்றிற்று.

## வன்னிமகத்துவப் படலம்.

ஒராறு காபினு முதவு ருவிடிற்
பூரணன் பூசையைப் போற்று மாறெவன்
சீரண வுறவினித் தெரிக்க வென்றனு
மாரணன் பிதிரனுக் கறிவிப் பானரோ.

அறிவேசொரூபமாக ஆனந்தமுறும் மாதவர்களே! கவுண்டின்னியமுனிவர் விநாயகமூர்த்தியினுடைய தூர்வையைத் தலையின்கணேற்றி அதன் மகத்துவத்தைத் திரிலோகங்களினும் விளங்கச்செய்தவரலாற்றினைச் சொன்னோம். இப்பால் வன்னிமகத்துவத்தைச் சொல்லுவோம் கேட்பீர்களாக; தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனை நோக்கிச் சொல்லுவான். அரசனே! பிதிர்தேவன் மீளவும் பிரமதேவனைத் தொழுதெழுந்து சுவாமீ! ஒராறுகேனுங்கிடையாவிடின் அக்காலத்து விநாயகக்கடவுளை எவவாறு பூசிக்கவேண்டியதென்று வினவ, அதற்குப் பிரமதேவன், மனமகிழ்ந்து, விநாயகமூர்த்திக்குப் பல பூசாதிரவியங்களிருந்தகாலத்தும் அறுகைப்போல இன்றியமையாச்சிறப்பினதாக இருப்பது வன்னிபத்திரமும், மந்தாரமலருமாகும், இவற்றுள் வன்னியையன்றிப் பூசனைசெய்தோர்

க்கு அக்கணேசமூர்த்தி இரங்கிவரங்கொடுப்பதில்லை, எந்தத் திரவியங்களில்லாவிடினும் வன்னியொன்றினால் பூசனைசெய்தாலெத்தன்மைத்தாகிய பயனையும் எளிதிற் கொடுப்பர். அறுகு இல்லாமற் செய்கின்ற பூசைக்கு வன்னியொன்று கூடியிருந்தால் எல்லாப்பயனும் உண்டாகும். அவ்வன்னிக்குரிய பயனையளிக்கும் பொருள் வேறொன்றுமில்லை அதனைக்கொண்டு பூசித்தவர்களடைந்த பேறறினையுஞ் சொல்லுவோங்கேட்பாயாக.

எல்லாவுயிர்களுந் துன்பமற வாழ்கின்ற விதர்ப்ப தேயத்தில், சகல செல்வங்களும் நிறைந்து அஷ்டதிசைகளிலும் புகழ்பெற்று விளங்கி யிருக்கின்ற அதேயமெனுமோர் நகரமுண்டு. அந்நகரத்தில் வீமனென்னும் பெயரினையுடைய ஓர்வேடன் தீமையேயன்றி நன்மையென்பதைச்சிறிதும் அறியாதவனாகி எந்நாளும் வழிப்போக்கர்களையெல்லா மடக்கிப்பொருள்பறித்தும் நிநகங்களையறக்கொன்றும் அவைகளைவிலைக்குமாறியும் வாழ்ந்துவருகின்றநாளையில், அந்நகரத்திலுள்ளோர்கள் அங்கிருக்கின்ற ஓர் தேவாலயத்தில்திருவிழாவைச்செய்ய அதனைக் காணுமாறு அயலூரினகணிருக்கின்ற சில வேதியர்கள்வந்து தரிசித்துமீட்டுந் தமதுபதியினைநோக்கிச்சென்றனர். அவர்களை யவ்வேடன் வழிமடக்கி அவர்கள் வைத்திருந்த பொருள்கள் அனைத்தையுங் கொள்ளையிட்டுக கொன்றுபோட்டுத் திரும்பினன். உடனே அவ்வந்தணரைக்கொன்ற பிரமஹத்தி அவனைப் பிடித்ததுபோலக் கொலைசெய்வதிற றனனினுஞ் சிறந்தவனாகியும், வலியில் மதயானையை யொத்தவனாகியும், நிறததிற் பொன்மைகலந்த சிவப்பினனாகியுமிராநின்ற ஓரரக்கனானவன் மானைத் தொடர்ந்துசெல்லும் வேங்கையைப்போல அவ்வீமனைப்பின்றொடர்ந்து துரத்தினன். அதற்கவ் வேடனஞ்சி ஓட்டங்கொண்டு ஓர் வன்னிவிருக்கத்திலேறினன். அவனேறியவிசையினலவ்விருக்கத்தினின்றும் ஒரிலையானது அதனிலெழுந்தருளியிருக்கின்ற விநாயகமூர்த்தியினது திருவடிகளில் விழுந்தது. உடனே அரக்கனும் அவனைப்பின்றொடர்ந்தேறினன். அதனல் மற்றோரிலை அவரது திருமுடியில் வீழ்ந்தது இவ்வாறு ஏறிய இருவரும் ஒருவரை யொருவர் கைகளாலிறுகப் பிணித்துக்கொண்டு நிலத்தில் வீழ்ந்து தங்கள் பாவதேகத்தினின்று நீங்கித் தெய்வ வுருவம்பெற்றுக் கணேசமூர்த்தியினுடைய திருவருளினல் பொன்விமானம்வர, அதில் அவ்விருவர்களும் ஆரோகணித்து விநாயகலோகத்திற்போய்ச் சேர்ந்தார்கள்.

பிதிர்தேவனே! இவர்கள் பூர்வத்திற்செய்த வினையையுஞ் சொல்லுகின்றேன் கேட்பாயாக. மேற்கூறிய விதற்பதேசத்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்த புண்ணியகீர்த்தி யென்னும் பெயரை யுடையவோர் அரசன் வேதாகமங்களில் வல்லவனாகியும், புண்ணியகொடையை யுடையவனாகியும், அளவற்ற யாகங்களை முடித்தவனாகியும், சத்துருக்களை நாசஞ்செய்து நாட்டியவெற்றிக் கொடியை யுடையவனாகியும் இருந்தனன். அவன் தன் மனைவியாகிய மதனாவதி யென்பவளோடு மன்மதனும் இரதியும் போல மருவிச் சந்தோஷ சாகரத்தில் மூழ்கி வாழ்கின்றநாளையில், தனது வாழ்நாள் முடிவெய்தி இகலோக * அரசாட்சியையொழித்தனன். உடனே அவன் மனைவியாகிய மதனாவதியும் மரணமாயினள்.

இப்பால அவர்களுக்கு நற்கதியைச்சேர்ப்பிக்கவல்ல புத்திரப்பேறிலலாமையால் அவர்கட்காற்றவேண்டியகருமங்களையெல்லாம் அமைச்சர்கள் நிறைவேற்றி, ஒருமாதஞ் சென்றபின்னர் இந்நகரத்தை யாளத்தக்கவர்கள் யாவரென்று தமக்குள் ஆராய்ந்து, இறந்துபோன புண்ணியகீர்த்தி யென்னு மரசனுக்கு * ஞாதியாகிய அத்திரிடராசனுடைய குமாரனாகி மிக்க வலிமையுற்றிருந்த சாமனென்பவனை யோசித்து, யவனே பகைவரைக் களையவல்ல பராக்கிரமசாலியென நிச்சயித்து, அவன் பிறப்பை சிறிது முறையாக விதிப்படி மகுடாபிஷேக முதலியவைகளைச் செய்து, சிம்மாதனத்திலேற்றுவித்து மதித்தற்கரிய சிறப்புக ளனைத்தையும் நிறைவேற்றித் தங்கட்கு அரசனாக்கிக்கொண்டார்கள், பின்னர் அச்சாம்பனவன் நாடுநகரங்களிலுள்ள எல்லாச் சனங்களுந் தன்னருகில் நின்றேவல்செய்யக் குபேரனைப்போல அளவற்ற செல்வத்தோடு வாழ்ந்துவருகின்ற நாளையில், தனது செங்கோல் நிலைமையிற்றவறி, பிரதிதினமும் கள்ளை யருந்துவதும், உயிர்க்கொலை செய்து உண்பதும், பரஸ்திரீகளைப் புணர்வதும, பிறர்பொருளைக் கவர்வதுமாகி உலகத்தையெல்லாங் கனல்பற்றிய காட்டைப்போலச்செய்து, தனது நெறிதப்பிய நடைக்கு ஒத்துவராத மந்திரிகளைச் சிறையில் வைத்து, ஒத்துவருகின்ற துற்புத்தியென்னும் பெயரினையுடையவொருவனை மந்திரியாக்கி, அவனிஷ்டப்படி நடவாதவர்களைச் சுரத்தில் தண்டிக்குமாறு அவனுக் கதிகாரமு மீய்ந்து, தான் சதாகாலமும்

* அரசு ஆட்சி--அரசாட்சி. ஆட்சி-சுதந்திரம்

* ஞாதி-பங்காளி.

மேலும் அவ்விநாயக மூர்த்தியானவர் தம்மை விண்ணுலகர், மண்ணுலகர் முதலியயாவர்களும் இடைவிடாது பூசிக்க அவ்வவர்கட்கு வேண்டியபடி வரங்களை யளித்துவருகின்றமையால் அவருக்கு யாவரும் வரதகணபதியென்னுந் திருநாமஞ் சாற்றித் துதிப்பர். இத்தன்மைத்தாகிய கணேசமூர்த்தியினது திருக்கோயிலைக்கண்ட சாம்பனனவன், தன அமைச்சர் முதலிய பரிசனங்களோடும் அதற்குள்ளே நுழைந்து, அங்கு தரிசனஞ்செய்ய வந்திருந்த அளவற்ற சனங்களுள் சிலர் பொங்கலிடவும் சிலர் தேங்காயுடைக்கவும், சிலர் எண்ணெய் முதலிய திரவியங்களைக்கொண்டு அபிஷேகிக்கவும், சிலர் வேதாகம மாதிகளால் துதிசெய்யவும், சிலர் ஆனந்தக்கூத்தாடவும், சிலர் அற்புதமாகப் பாடவுங் கண்டு தானுந் தனது மந்திரியுங் காட்டிற் பறித்து மள்ளர்கள் தலைமிற கொணர்ந்துவந்த தேமாங்கனி முதலிய வருக்கங்களை ஓர் விளையாட்டினுலே கணேசமூர்த்திக்கெதிரே வைத்து, சுவாமீ! யாங்களும் உனக்கு அடிமையென்று சொல்லிக் கோயிலைப் பிரதட்சணஞ் செய்து போயினர்.

இப்பால் முன்போலவே தாங்கள் மலைபோலவும், கடல்போலவும் புவிபோலவும் நெடுநாள் அளவற்ற பெரும் பாதகங்களைச் செய்துவருகின்ற நாளையில், இவர்களுக்கு இறுதிநாள் சம்பவித்தன உடனே இயமதூதர்கள் வந்து நெருங்கிச் சிலர் கொடும்பாதகராகிய இவ்விருவர் கரங்களைப் பின்புறமாகப் பிடித்துக் கட்டியும், சிலர் நீண்ட முருக்கூசிகளைக் கொண்டு செவி, கண்ணம், நா, முன்கை, ஆண்குறி, அகங்கை, உதடு முதலிய விடங்களிற் குத்திச் சங்கிலிகளில் மாட்டியிழுத்தும், சிலர், நீண்டகதாயுதங்களைக்கொண்டு மாறிமாறிப் புடைத்தும், வழிநடக்கச் செய்தார்கள். இவ்வாறு அவர்களைக் கொடுமையென்று சொல்லும்படியான நடத்தைகளுள் ஒன்றினுள்ளுந் தப்பவிடாது எல்லாத் துன்பங்களையுஞ் செய்து கொண்டு செல்ல, ஆயுதம், அக்கினி, கல முதலியவைகளைச் சொரிகின்ற மழையினாலும், யாளி புலி கரடி முதலிய மிருகசாலங்கள் செய்கின்ற இம்சையினாலும், முட்களைப் பரப்பியிருக்கின்ற வழிதோறும் அடிக்கடி அடிபெயர்த்து நடத்தலினாலும், ஐயா! ஐயா! அவர்கள் பட்ட பாடுகள் யாவரால் வாய் விட்டுரைக்கற்பாலன. பின்னர் அந்த யமதூதர்கள் தமது அரசனுடைய சந்நிதானத்தில் அவர்களைக்கொண்டு போய்விட, அவர்கள், அந்த யமதருமராசனைப் பார்த்தவளவில் புலியைக்கண்ட மான்போலவும், கருடனைக் கண்ட பாம்புபோலவும், சிம்மத்தைக்கண்ட யானைபோலவும், பகைத

பந்தத்துச் சேர்ந்து வீழ்ந்தனர். இப்பால் யமதருமராசன் சித்திரகுப்தனைக் கூவி, இவர்கள் இதுகாறுஞ் செய்த புண்ணியபாவங்களைத் தெரிந்துசொல்லுக கடவையென்று கட்டளையிட, அவ்வாறே அவன் ஓர் கணப்போதில் அவைகளைத் தெரிந்துகொண்டு, ஓ தருமமூர்த்தியே! இவர்கள் சீவித்திருந்த நாள் முழுவதும் பாவங்களையே செய்துவந்தனர், ஓர் தினம் விளையாட்டால் கணேசமூர்த்திக்குச் சிறிது வந்தனை செய்திருக்கின்றார்கள். என்று சொல்லினன் அதனை யமதருமராசன் கேட்டு அவர்கள் செய்த அச்சிறுபுண்ணியமானது முன் வராமையும், பெரும்பாவங்களெல்லா முற்றி முன்வந்திருக்கின்றமையையுஞ் சீர் தூக்கிக்கண்டு, உடனே கண்களில் அனற்பொறி பறக்கும்படியான கோபத்தோடு இடியைப்போன்ற தனது பெருங்குரலினால் கிங்கரர்களைக் கூவி, இவர்களை எல்லா நரகங்களினும் போட்டு வதைசெய்யக் கடவீர்கள் என்று ஆக்கியாபித்தனன். அதனைத் தறுகணாளர்களாகிய அக்கிங்கரர்கள் கேட்டு வடவாமுகாக்கினியு மஞ்சத்தக்க கோபத்தோடு கையைப் பிறைபோல விரித்து அவ்விருவரையும் பிடரியைப் பிடித்து நிலத்தில் விழத்தள்ளிக் கரங்கொண்டமட்டும் மோதி அறைந்து, காலால் உதைத்து, உலகத்தவர்களை முறைமையோடு காவாது பாவச்செய்கையால் அலையச்செய்த மாகாபாவிகாள்! யாங்கள் செய்யும் முறைமையிற் படக்கடவீர்களென்று சொல்லிச் சிலர்கூரிய வேலாயுதங்களைப் பரப்பியிருக்கின்ற நிலத்தின்மீது மல்லாக்கத்தள்ளி முட்களையுடைய தண்டாயுதத்தினால் உடலானது பள்ளமாகும்படி யெறிவார்கள். சிலர் இரண்டு உள்ளங்கால்களினும ஊசிகளைக் கடாவுவார்கள். சிலர் வெளுத்த பொறியைப்போலத் துள்ளி விழும்படியாகச் சுடுநிலத்தி லிடுவார்கள். சிலர் நாறு பொத்துவதுபோல உதிரம், மூளை, தசை முதலியவைகள் சிதறும்படியாகத் தூணில்மோத்துவார்கள், சிலர் பருந்து, கழுகு, காக்கை, நரி, நாய் முதலியதைகள் தங்கள் பசிகெடக் கூறிட்டுப் புசிக்கும்படியாக அவைகட்கு முன் ஆகப்படுத்துவார்கள். சிலர் உச்சியிலிருந்து மலவாயில் வரையில் ஊடுருவும்படியாக வச்சிரத்தினாற்செய்த முள் முளைகளைச் சொருவுவார்கள். சிலர் தசைகளைத் துண்டந்துண்டமாக வரிந்து புசிக்கச் செய்வார்கள், சிலர் நுங்கை நோண்டுவதுபோலக் கண்களைத் தோண்டுவார்கள். சிலர் கைகள் துள்ளிவிழும்படியாக ஆயுதங்களைக் கொண்டு தறிப்பார்கள். சிலர் வில்லுகளில் அழலுக்கொப்பான அம்புகளையேத்தி உடலிற் றைக்கும்படி விடுவார்கள். சிலர் முட்க

கிருமபுகளை மேல்வாய்களில் ஊடுருவக்குத்தி வுயர்விற் றாக்கிற் சுற்றினும் நெருப்பை மூட்டித் துன்பப்படுத்துவார்கள். சிலர் மதம் பொழிகின்ற யானையினது கால்களில் தலையை யிடறவிடுவார்கள். சிலர் உதிரமொழுகுகின்ற இரும்புலக்கைகளைக்கொண்டு மோதுவார்கள். சிலர் கிருமிகள் கிண்டும்படியாக அவைகள் நிரம்பிய குடங்களிலிடுவார்கள் சிலர் சீயுஞ் செந்நீருங் குழம்பியிருக்கிற கிணறுகளில் எறிவார்கள் சிலர் உடலமானது இரண்டு பிளவாகும்படி இரண்டுபக்கத்திலும் இரண்டுபேரிருந்து ஈர்வாளைக்கொண்டு அரிவார்கள். சிலா உருககப்பட்டிருககின்ற செம்பை ஒன்பதுதுவாரங்களிலும் ஒழுக்குவாரகள். சிலர் கரும்பைப்போலத் தூக்கி நெருங்கிய ஆலைபிற சொருகுவார்கள். சிலர் முறுக்கியிருக்கின்ற செக்குகளில் வைத்து ஆட்டுவாரகள. சிலர் உடலிற் செதிலெழும்படி வாச்சியைக்கொண்டு சேதித்து நெருப்பிலிட்டுக் கோபிப்பார்கள். சிலர் உடலையும சயத்தையும ஒன்றாக அகலிற் சேர்த்து நெருப்பின்மீது வைத்து உருககுவார்கள. சிலர் கொதிக்கின்ற நெய்யில முழுதும்படியாக விடுத்து அனலை மூட்டுவார்கள். சிலர் ஊசிகளை யெடுத்து ஆண்குறிகளிலும, நகக்கண்களினுஞ் சொருகுவார்கள். சிலர் அழலிற் காய்சசப்படடிருககின்ற இருமபுகளை உள்ளங்கையில் வைப்பார்கள. சிலா உருகியிருக்கின்ற செமபொனனை யள்ளி உடல்முழுதும் பூசுவாரகள் இவவாறு யமகிங்கராகளெல்லாம் அவாகளை ஒவ்வொரு நரகங்களில ஆயிரம் வருடம, பதினாயிரம் வருடம் என்கின்ற கணக்கின்படி போட்டு வதைசெய்ய, அவ்விருவரும் பூனைவாய்ப்பட்ட புறாவுங் கிளியுமபோலவும், பாம்பின் வாய்ப்பட்ட தேரையுந் தவளையும போலவும. வருத்தமெய்தி எல்லா நரக வேதனைகளையும், அநுபவித்து வருகின்ற நாளையில அவர்கள் செய்த கொடும்பாதகங்களெல்லாம குறைந்துபோயின. இப்பால் நின்ற சேடத்தினை உலகத்திற சனனமெடுத்து அநுபவிக்கும்படி யாக அவ்விருவருங் காகமுங் கூகையுமாகவும், ஓந்தியும் வலூறுமாக வும், நாகமுந் தேளுமாகவும், நாயும பூனையுமாகவும், கீரியும் பன்றியுமாகவும், நரியும செந்நாயுமாகவும, குதிரையுங் கழுதையுமாகவும், ஒட்டகமும யானையுமாகவும், மச்சமும் முதலையுமாகவும், புலியும் மானுமாகவும, எருதும எருமையுமாகவும் பிறந்தனர்.

## அரக்க கிராதகர் முத்திப்பேறு.

இவ்வாறு இழிந்த யோனிகளெல்லாம் பலமுறை பிறந்து, பின்னர் அரக்கனாகவும் * கிராதனாகவும் உற்பவித்து, வன்னிமரத்திலேறிப் பாவங்களை யொழித்தனர். ஆதியில் இவனேவடன் சாம்ப னென்னு மரசனாயிருந்தபோது தானுந் தனது மந்திரியும் ஓர் விளையாட்டாக வரதகணபதிக் கெதிராக காய் கனி முதலியவைகளை வைத்து நாங்களும் உலகத்து அடிமையென்றுசொல்லிக் கோயிலைப் பிரதக்ஷணஞ் செய்து சென்ற புண்ணியத்தால் பிறவிகள்தோறும் பெரிய தீவினைகளைச் செய்திருந்தும் இச்சனனத்தில் அவர்கள் வன்னி விருட்சத்தி லேறவும், அதனிலை யுதிர்ந்து அதற் கடியில் வாமனரால் பூசை செய்யப்பட்டிருக்கின்ற வாமன கணேசர்மேல் விழவும், அதை அவர்கள் அபுத்திபூர்வமாகச் செய்த பூசனையென்று கணேசர் ஒப்புக்கொண்டு மோட்ச சாம்பிராச்சியத்தைக் கொடுத்தருளவுமாயது. என்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேன மகாராசனுக்குச் சொன்னான்.

வன்னி மகத்துவப் படலம்

அரக்க கிராதர் முத்திப்பேறு முற்றிற்று.

## வாமனர் வரம்பெறு படலம்.

தாமரைக் கிழவ னீது சாற்றலும் பிதிரன் றாழ்ந்து
வாமனர் யாவ ரந்த வன்னிமென் னிழலி லெங்கைச்
சாமியைப் பூசை யாற்றுந் தன்மையென் சாற்று கென்றான்
றேமறப் பிதிரன் கேட்கத் தொல்லைநான் முகவன் சொல்வான்.

ஓ, மகா தவவாய்மையுற்ற சவுனகாதி முனிவர்களே! வன்னி மகத்துவத்தால் ஓர் அரக்கனும் கிராதனும் முத்தியடைந்தவரலாற்றினைச் சொன்னோம். இனிமேல் அவ்வன்னி நீழலில் வீற்றிருக்கின்ற விநாயகரை வாமனர் வழிபட்டு வரம்பெறு பேற்றினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக

மீட்டும் தேவேந்திரன் சூரசேன மகாராசனை நோக்கிச் சொல்லுவான்.—சிவபத்தியே சித்த சொரூபமாகிய அரசனே! பிதிர்தேவன பிரமதேவனைத் தொழுதெழுந்து சுவாமீ! வாமனர் என்பவர் யார்? அவர் வன்னிமரத்தடியில் விநாயக மூர்த்தியைப் பூசைசெய்த காரணமென்ன? அதனையும் அடியேற்குச் சொல்லியருளல்வேண்டுமென்று பிரார்த்திக்கப் பிரமதேவன் சொல்லுவான்.

பிதிர்தேவனே! வாசியோக முடையோர்க்கு வரம்பில் ஆனந்தத்தை யளிக்கவல்ல தேசிகனும், தேவதேவனுமாகியும் நிகம்பரனாகியு மிருக்கின்ற சிவபெருமானது பஞ்சாட்சரத்தைச் சதாகாலமுந் தியானித்து திருவெண்ணீறு பூசி, உருத்திராட்ச கண்டிகை புனைந்து, அரியதவங்களைச் செய்கின்ற காசிபமுனிவரானவர் அதிதி திதி என்னுந் தமது இரண்டு பத்தினியரோடுங் கூடி வாழ்கின்ற நாளையில் அதிதியென்கின்ற பத்தினியானவள் தனது புத்திரர்களாகிய இந்திரன் முதலிய தேவர்கட்கு உதவியாக இலக்குமிமணாளராகிய விண்டு தனக்குப் புத்திரனாகி வரவேண்டுமென்னும் அவாவினால் பெரிய தவங்களைச் செய்துகொண்டிருந்தனள். அதனை யவட்கு மாற்றாளாகிய திதியென்பவளறிந்து தேவர்களினுஞ் சிறந்த மேன்மையையும் திரிலோகத்தினையுங் காக்கவல்ல திறத்தினையுமுடைய புத்திரர்களைப் பெறவேண்டி யோசித்து அந்திவேளையிற் றன்கணவராகிய காசிபரைத் தொழுதெழுந்து, சுவாமீ! யாது காரணத்தினாலோ காமநோயானது என்மனத்தைச் சுடுகின்றதால் தேவரீரடியாளைக் கூடிச் சுகந்தராவிடில் என்னுயிர் வாழ்வது அரிதாயிருக்கும் ஆதலால் இந்நிமிடமே தடைசொல்லாமற் கூடியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கம் முனிவரிசைந்து, விறகின்கணுண்டான தீ அவ்விறகினையே சுட்டெரிப்பதுபோல அவளகத்தின்கணுண்டாகிய விரகநோய் பின்னரவளையே வருத்துகின்றதை நோக்கிக்கூடினர். உடனே விண்ணுலக முதலிய யாவும் நடுங்கும்படியாகவும் தானவர் குலங்கள் தழைத்தோங்கவும் இரணிய கசிபன், இரணியாக்கனென்னும் இரண்டசுரர்கள் உற்பவித்தனர். அவருள் இரணிய கசிபனென்பவன் சிவபிரானை நோக்கி அரியதவங்களைச் செய்து * அத்திரம் சத்திரம்; உள்-புறம்; பூமி-

* அத்திரம்-கையினின்றும் விடும்படை, சத்திரம்-கையினின்றும் விடப்படாதபடை. இதனை அஸ்திரம் சஸ்திர மென்ப

ஆகாயம்; இரா-பகல்; † உயர்திணை-அஃறிணை; என்னும் இந்த இரண்டு பகுதிகளினுந் தனக்கு மரணமுண்டாகா திருக்கவுந் தனது உதிரம் பூமியில் வீழ்ந்தால் அதில் நின்று தன்னைப்போல உருவுண்டாகி வரவும் வரம்பெற்று, வேதவொழுக்கத்தினைக் கடந்து, திரிலோகங்களையும் ஆண்டு குறைவற்றிருக்கின்ற செல்வமென்னுங் குன்றிலேறித் தனக்கெவ்விதத்தினும் மரணமில்லையென்கின்ற உறுதியோடு இறுமாப்புற்றிருந்தான். அந்நாளையில் மகாவிஷ்ணுவானவர் அவ்விரணிய கசிபனைக் கொல்லுதற்கான ஓருபாயத்தினையுந் தேடவேண்டுமென்று மனத்திலெண்ணினைத்தவராய், ஒருநாள் பூமியின்கணெழுந்தருளி, ஓர் வன்னிவிருக்கத்தடியில் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து, ஆகமவிதிப்படி பூசனைபுரிந்து ஓராதனத்திலிருந்து ஐம்புலன்களையு மடக்கிச் சடாக்கர மந்திரத்தைச் செபித்துவந்தனர். இவ்வாறு தவஞ்செய்து வருகின்ற நாளையில் ஐங்கரக் கடவுளாகிய கணேசமூர்த்திக் கிருபைகூர்ந்து அவரெதிரிற் பிரத்தியக்ஷமாயினார். உடனே மகாவிஷ்ணுவானவர் தொழுதெழுந்து அனந்தமுறை தோத்திரஞ்செய்து, சுவாமீ! எல்லா வுலகங்களையும் ‡ அறுத்தாறு கடந்து அரசாட்சி செய்துவருகின்ற இரணிய கசிபனுடைய வுயிரை வாட்டுமாறு அடியேற்கு வரந்தர வேண்டுமென்று பிரார்த்திக்க அதற்கு விநாயகக் கடவுளிசைந்து, விண்டுவே, உயர்திணையும் அஃறிணையுமல்லாத வாய்தலிலிருந்து, பகலு மிரவுமல்லாத மாலைப்போதில, விண்ணு மண்ணுமல்லாத மடியிலவனை வைத்து, அத்திர சத்திர மல்லாத நகத்தினாலே கீறிப் பிளந்து அவனுதிரம் பூமியில் விழாதபடி வாயால உறிஞ்சக்கடவை யென்று திருவாய்மலர்ந்து, அதற்கேற்ற வலியுங் கிருபைசெய்து, தமது திருவுருவைக் கரந்தருளினார், இப்பால மகாவிஷ்ணு நரசிம்ம அவதாரங்கொண்டு, அவ்வுபாயத்தின்படி இரணியகசிபனைக் கொன்றார். அவனுக்குப் பின்னர் அந்த அரசாட்சி இரணியாக்கதன் ஆண்டுவந்தான். அவனையும் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் மகாவிஷ்ணு வராக அவதாரமெடுத்து ஒழித்தருளினர்.

கதிர்தேவனே! அண்டர் பெருமானாகிய கணேசமூர்த்தியான வ்விடத்தி லெழுந்தருளி விண்டுவுக்கு வேண்டிய வரங்களை

---

† உயர்திணை-தேவர், மனிதர், நரகர். அஃறிணை-பசுபிருகாதி சராசர

‡ ஆறு=அறம்-தருமம், ஆறு-மார்க்கம்.

யளித்தமையால் விண்டு விநாயகரென்னுந் திருநாமத்தினைக் கொண்டனர். பின்னொரு காலத்தில் விண்டு வாமனாவதாரங்கொண்டு விநாயகமூர்த்தியை வந்தித்து வரம்பெற்றிருக்கின்றனர். இதனால் வாமனகணேசரென்னும் மற்றொரு பெயர்விளங்கி நின்றது.

அதன் வரலாற்றையுஞ் சொல்லியருளவேண்டுமென்று பிகிர்தேவன் பிரார்த்திக்க, பிரமதேவர் கிருபைகூர்ந்து பிகிர்தேவனே! கேட்பாயாக முன்னர் விஷ்ணுவினுடைய வராக அவதாரத்தினாற் கொலைபட்ட இரணியாக்ஷனுடைய புத்திரனாகிய விரோசனனென்பவன் சூரியனைக் குறித்து அளவற்ற நாள் தவஞ்செய்துகொண்டிருக்க, அதற்குச் சூரியபகவான் மனமகிழ்ந்து அவனெதிரில் வந்து ஓர் சோனக் கிரீடத்தை யவனது கையிற் கொடுத்து, இக்கிரீடத்தை உனது முடியிற்சூடிக்கொண்டிருப்பாயாயின் மூன்றுலகமும் உனதாக்கினைக்குள்ளாகும் உனக்கு ஓராபத்துவருவதில்லை. இக்கிரீடத்தினைத்தரியாமல் உனது சிரத்தின்மேரில் மற்றொருவர் கைபடுமாயின், உடனே உனது சிரம் நூறு பிளவாய்ப் பிளக்கப்பட்டு உயிரும் ஒழிந்துபோகும் ஆதலால் இதை மறவாமல் சாக்கிரதையாயிருக்கக் கடவையென்று சொல்லிச் சூரியன் தனதுலகத்தை நோக்கிச் சென்றனன்.

இப்பால் விரோசனனும், அப்பொன் முடியைச் சூடித் திரிலோகங்களுந் தனதேவல்கேட்க அரசாட்சிசெய்து மாவலியென்னும் ஓர் புதல்வனைப் பெற்று வாழ்ந்து வருகின்ற நாளையில் இந்திரன் முதலிய தேவர்கள் வைகுந்தத்திற்குச் சென்று மகாவிஷ்ணுவைத் தொழுதெழுந்து சுவாமீ; மூவுலகங்களினும் அவுணராக்கினை யதிகரித்திருப்பதால் அதனைப்போக்கியருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குக் காயம்பூ நிறத்தினையுடைய மகாவிஷ்ணுவானவரிசைந்து, ஸ்திரீகளும் அன்புகொண்டிச்சிக்கத்தக்க அழகினோடு மோகினியவதாரங் கொண்டு விரோசனனெதிரிற் சென்றனர் உடனே அம்மோகினியினுடைய பார்வையாலும், புயத்திற் சுமந்திருக்கின்ற புட்ப வல்லியினாலும், மிருதுவாகிய வசனத்தினாலும், குழலசைத்தன்முதலிய நடைநொடி பாவனைகளினாலும், தன்மனதிற் பெண்ணென்றே நினைத்து மோகக்கடலில் மூழ்கினவனாய்ப் பின்சென்றனன். அதற்குப் பெண்வடிவங் கொண்டுவந்த விண்டுவானவர், அரசனே! நீகலவித்தொழிலிற் கைகண்டவனென்று கேள்வியுற்று உன்னைக் கூடவேண்டுமென்னு மிச்சையால் இவ்விடம் வந்தனன். எனது நீர்மையோ வெனில், தப்பிலமாட்டார்களது

தேரின் எஞ்ஞான்றும சார்வதில்லை ஆனதால் இப்போது நீதயில மரூடு வருவையாயின் என்கொங்கைகள் நினதங்கையவாகும், ஆதலால் விரைவில் தயிலததை வருவிப்பாயாகில், யானே அதனைத் தேய்க்கின்றேனென்று திருவாய் மலாநதனர் இவையனைத்தையும் விரோசனன்கேட்டுத் தானடைநதிருககினற மோகத்தினால் முன்பு சூரியன் சொலலிய சொறகளையுமறநது விரைவிற றயிலங்கொண்டு வருமாறு ஏவலாளர்களுக் காககியாபிகதுத தயிலமவநதவுடன் தனது கிரீடத்தைவாஙகி நிலத்திலவைததனன் பினனா விண்டுவானவர் நமக்கு நல்லசமயம வாய்த்ததெனறு சநதோஷித்து, அவனுக்கெதிரில்நின்று, ஒருகையா லவன சிரததைப பிடிதது மறறொருகையாற் றயிலத்தை யள்ளிவிட்டுத தேய்ததனா இவவாறு அவன்சிரத்திற் றமதுகரத்தைவைததமாத்திரததில சுண்ணமபுக்கலவின்மேல்சலத்தை விடுத்தாற்போல அவனசிரமானது நூறுபிளவுகளாய்ப்பிளந்து இறந்து போயினன

பின்னர் தேவாகளெலலாம வீறுகொணடு தமமைபபோற்றும் படியாக விண்டுவானவர் வைகுநததததையடைநதனா இபபால்மேற் கூறியவிரோசனனுடைய அரசாட்சியனைததையும அவன் புதல்வனாகிய மாவலியென்பவன கைபேறறு, பிரமகபாலமேநதி அனலாடும்பெருமானாகிய சிவபெருமானது திருவடிகளை இரவும் பகலும விட்டுபபிரியாத சிநதையோடு தனதுநேமியை நீதிமுறைப்படி (உலகமெங்கணுஞ்செலுத்தி வாழுநது வருகினற நாளையில, ஒருநாள் தனது குருவாகிய சுககிரனை வரவழைதது அவனுககு வநதனைமுதலிய வழிபாடுகளை நடததி, பினனா ஓராதனததினக ணிருக்கவைத்துப் பலவுபசாரங்களுடன பூசனைகளும்புரிநது, சுவாமீ! ஞாதியாகியதேவேந்திரன் மாததிரஞ சொாககலோகததிற கரசனாகி அனவற்றபோகங்களை ஆவலதீர வனுபவித்திருகக, அவைகள் எனக்கில்லாமல் போனதற்குக காரண மெனன அதனை யடியேற்குத் திருவாய் மலரவேண்டுமென்று விணணப்பஞ் செய்து கொண்டனன்.

அதற்குச் சுக்கிரன்சொல்லுவான்: அரசனே! தருமஞ்செய்தபேர் அவ் போகத்தை யனுபவிபபது இயற்கையாகும். அபபடி தருமஞ் செய்யாது தனது வலலமையினாலும், பிறவி மேம்பாட்டாலும் அடைகின்ற போகமெல்லாஞ்செயற்கையவாகும். அவைகள் நீடித்திருமாட்டா. சுரலோக சக்கிரேச்சரனாகிய இந்திரனேவ்வில் [illegible] செய்து சகலபோகங்களையுந் தடையின்றி யனுபவிக்

கின்றான். அவனைப்போல நூறுமகங்கள் சரியாகச்செய்யாது அனேவற்றபேர்கள் அவனோடு வந்தெதிர்த்து மாய்ந்து விட்டனர். உனக்கப் போகங்களை யனுபவிக்கக் கருத்திருக்குமாயின் விரைவி லவனைப்போல நூறு *மகத்தையு முடிக்கக்கடவை யென்றனன். இவ்வாறுசுக்கிரன்கூறிய உண்மைகளை மாவலிகேட்டு மனமகிழ்ந்து உடனே வசிட்டர் முதலிய பெரியோர்களைவரவழைத்து, தொண்ணூற்றொன்பது அஸ்வமேதயாகங்களைச் செய்துமுடித்து, இப்பால் நூறாவது யாகத்தையு முடிப்பதற்கு யத்தனங்கொண் டிருக்கின்ற நாளையில், அதைத் தேவேந்திரனறிந்து, ஐயோ! இனியென்செய்குவோம்! நமது அரசையும், அளவற்ற போகங்களையும் இன்றொழிந்தனமே நாம எவ்வாறு மாவலியை வாட்டவல்லோம்? ஆயினும்முன்னர் நமது பாக்கியங்களைக் கவர்ந்த பாதகர்களையெல்லாம் இமைப்போதிற் கண்ட துண்ட மாக்கியருளிய கமலக்கண்ண ரிருக்கின்றாரல்லவாவென்று தேறி, விரைவிற் சர்ப்பசயனத்திற் பள்ளிகொண்டிருக்கின்ற விஷ்ணுவைக்கண்டு, அவரது திருவடித்தாமரைகளைப்பலமுறைவணங்கி, அளவற்ற தோத்திரங்களசெய்து, அண்ணலே! இதுகாறும்என்னை யெதிர்த்துவந்த தானவர்களையெல்லாம் மண்ணுக்கிரையாக்கி அடியேனை விண்ணுக்கரசாக்கிவைத்தது தேவரீர் பெருங்கருணையல்லவோ? இப்போது அவுணனாகிய மாவலி யென்பவன் எனதுபதவியையிச்சித்து மகஞ்செய்துவருகின்றனன். அவனுயிரையுந் தேவரீர் குடிக்கருளி யான விண்ணுலகத்தி லிருக்குமாறு அருள்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு விஷ்ணுவானவர் புன்னகைகொண்டு, இந்திரனே! நீ கூறியது நன்றாயிருக்கின்றது. பலமுறை பொல்லாங்குகள் செய்தும், வேதவொழுக்கங்களிற் றவறியும், முனிவர்களையுந் தேவர்களையுந் துன்பப்படுத்தியுமிருந்தபேர்களை யெல்லாம் இதுகாறுஞ் சங்கரித்து உனதுபதவிக்குயாதொரு தீங்கும் நேரவொட்டாமற் காப்பாற்றி வந்தனம். இப்போது நீ கூறிய மாவலியோவெனில் வேதாகமமுறைப்படி யாகஞ்செய்து வருகின்றான். தனக்கெக்காலத்தும் அழிவு நேராதவண்ணஞ் சிவபெருமானிடத்திற் றீர்க்காயு ளடைந்திருக்கின்றான். மேலும் எல்லாவிதத்துங் குற்றமற்றகுணத்தை யுடைத்தாயிருக்கின்றான் இத்தன்மையவான மேம்பாட்டினையுடைய அவனை நாம் எவ்வாறு சங்கரிக்கக்கூடும்? ஆயினும் நீ நம்மிடத்துவந்து பிரார்த்தித்தனை யாதலால் உனது பதவிக்குக் குறைவுவராமற் காப்பாற்று

* மகம்-யாகம், வேள்வி.

வோம், இனியுனது மனக்கவலையொழித்திருவென்று திருவாய்மலர்ந்து, இந்திரனுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டு இதனை யோசிப்ப காசிபனர்

மாவலியானவன் நீதிநெறியினும் வேதவொழுக்கத்தினுந் தவறாது யாகஞ்செய்து வருகின்றானாதலால், அந்தயாகத்தை யழிப்பதற்கு அவன் ஞாதியாய்ப்போனால் வெற்றிபெற்று வாலாமையன்றி மற்றசதுர்வித வுபாயத்தினாலும் எனைய வெவ்வேறு எதுவினாலுங் கூடாது. இனிபாம் இதனையே செய்யத் தக்கதென்று யோசித்து, முன்னர் தம்மைப் புத்திரனாகி வருவதற்கு எண்ணங்கொண்டு அரிய தவத்தினைச் செய்திருந்த அதிதிகருப்ப பரிபாலிப்பவர்போல அவள் கருப்பத்தில் வாமனராய்த்தங்கி, நான்கு திருக்கரங்களுங் காயாம்பூ நிறத்தினையு முடையவராய் யாவரும் இலக்ஷியமானவர் இவரே யென்று சொல்லும்படியாக அவதாரஞ் செய்தனர். இவர் தந்தையாகிய காசிபர் அளவற்ற மகிழ்ச்சியையடைந்து தமது புதல்வருக்குச் சாதககன்மாதிகளைச்செய்து மூன்றாமாண்டிற் * சவுளசடங்கினை நடத்தி ஐந்தாமாண்டில் † உபநயனகலியாணத்தை முடித்து வேதாத்தியயனமுஞ் செய்வித்தனர்.

பின்பு வாமனரானவர் சகலவேதாகம புராணங்களிலுஞ் சாமர்த்தியராகித் தமது தந்தையாகிய காசிபரிடத்திலுவந்து மிக்க பேரன்பினோடும் அவரைப்பணிந்தெழுந்து, ஐயனே! இந்திரபோகத்தை யடையுமாறு மாவலிமகஞ்செய்து வருகின்றமையால் அவனைவென்று இந்திரனுக்குச் சுகத்தையுண்டாக்குமவகை யாதினாலென்று வினாவினார். அதற்குக்காசிபர் தமதுபுத்திரனைநோக்கி குழந்தாய்! நீகூறியது விநாயகக்கடவுளுடைய திருவருளில்லாமல் முடிவதன்று அவ்வருளைப்பெறுவதற்கு அவரது சடாக்கரமநுவைச் செபிக்கவேண்டுமென்று சொல்லி வேதாகமவிதிப்படி தீக்ஷைசெய்து, அந்தச்சடாக்கரத்தையு முபதேசித்தனர். இப்பால் வாமனர் அவ்விடத்தினின்று நீங்கி விதர்ப்பதேயத்தை யடைந்து, ஆதேயநகரத்தில் தென்புறத்தில் வன்னிவிருக்கத்தினீழலில் வீற்றிருக்கின்ற என்னை யடிமையாகவுடைய விண்டு விநாயகமூர்த்தியினது திருவடிகளைத் தொழுது தினந்தோறும் பூசனைசெய்து, ஒருவருடபரியந்தஞ் சடாக்கர மந்திரத்தை யனுட்டித்துவந்தனர். அவ்வனுட்டிப்பிற்த அடியவருள்ளத்தில் ஒளிக்கொளியாக விருக்கின்ற சோதி ஸ்வரூபராகிய

* சவுளசடங்கு-மயிர்வாங்கல். † உபநயனம்-பூணூலணிதல்.

விநாயமூர்த்தி கிருபைகூர்ந்து, நீலவெற்பின்மீது மாணிக்கக் குன்றிருந்தாற்போல மயில்வாகனத்தின்மீது பத்துத்திருக்கரங்களோடும் யானைமுகத்தோடுந்தோன்றி அளவற்றதேவகணங்கள் புடைசூழும்படியாக அவனெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே தம்மைப் பிழைப்பிக்கவல்ல தயாபர மூர்த்தியினுடைய உருவத்தைக்கண்டதும், வாமனர் நிலத்தில் வீழ்ந்து பணிந்து நன்மையடைந்து மேலேயெழுந்தனபோல மீளவுமெழுந்து ஆனந்தக் கூத்தாடி அளவற்றவேதாகமங்களினாற் றுதிசெய்து கொழுந்துவிட் டெழுந்த அன்பினால் சிரத்திற்குட்டிக்கொண்டு கர்த்தன் சந்நிதானத்திற் கெதிராகக் கைகூப்பி மெய்கொட்டிநின்றனர். அதற்கு எமது பெருங்கருணைப்பெருமானாகிய விநாயகமூர்த்திமனதிரங்கி, வாமனனே! நீ ஒரு வருட பரியந்தம் ஆகார முதலியவைகளைநீத்துமிக்க உள்ளன்பினோடும் நம்மை யனுட்டித்தனையாதலால் உனக்கு வேண்டிய வரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தனர். உடனே வாமனர் பணிந்தெழுந்து, சுவாமி! எளியேற்குத்தேவரீரது திவ்விய சரணாரவிந்தங்களில் இடைவிடாத பக்தியும், தேவேந்திரனுக்கு அழிவில்லாத அரசும், தேவரீருக்கு அடியேனுடைய நாமமும், அடியேன் நினைத்த தெல்லாம் எளிதிற்கைகூடி வருந்திறமும், அறிந்துமறியாமல் ஏதேனும் பிழைசெய்வேனாயின் அதனை யானடிமை யென்னுஞ் சுதந்தரத்தாற் றேவரீர் திருவுள்ளத்திற் பொறுக்கும் பொறுப்புங்கிருபை செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தனர். அதற்குத் தேவதேவராகிய கணேசமூர்த்தி அவ்வாறே அநுக்கிரகஞ் செய்து தமது திருவுருவைக் கரந்தருளினர்.

மீளவும் வாமனர் அவ்வன்னிவிநாயக மூர்த்தியை யருச்சனை செய்து அவ்விடத்தினின்று நீங்கித்தமது தந்தையிருப்பிடஞ்சேர்ந்து, அவரிடத்தினின்றுதாம்பெற்றுவந்த வரங்களனைத்தையுங்கூறி, முன்போலவேமிக்க மனங்களிப்போடு சடாக்கர யந்திரத்தைப் பிரதிதினமுஞ்செபஞ்செய்து வந்தனர் இப்பால் மாவலியானவன்மற்றொரு வேள்வியுஞ் செய்து வருகையில், வாமனர் அவ்விடத்திற்குச்செல்ல, அவனவரை எதிர்கொண்டழைத்துவந்து [illegible]டஞ்செய்து, ஓ மகாதவசிரேஷ்டரே! தேவரீர் யாவர்? தாமரைமலரையொத்த தமது திருவடி வருந்தும்படி இவ்விடத்திற்கு ரியமென்ன? அடியேற்குத் திருவாய் மலரவேண்டுமென்று கொண்டனன். அதற்கு வாமனர் மாவலியினுடைய அன்பைநோக்கி, அரசனே! யான் காசிப முனிவருடைய புத்திரன், நீ இறந்தவேள்

லியைச்செய்து வருகின்றனையாதலால் இச்சமயத்தில் யானிருந்து தவஞ் செய்வதற்கு மூன்றடி நிலந் தானஞ் செய்யுமாறு கேட்க வேண்டி நின்னிடத்திற்கு வந்தனன். அவ்வாறே யளிப்பது நினது கடமையாகு மென்றனர். அதனைக்கேட்ட மாவலி பெருமகிழ்ச்சி கொண்டு அவ்வாறே உமக்குக் கொடுத்தோமென்று சொல்ல அவ் வாசிரியனாகிய சுக்கிரன் அதனைத் தடுத்து, அரசனே! நின்பாற்றானம் வேண்டி வந்தவன் தவசியல்லன். மாலே இம்மாய வுருவங் கொண்டு உன்பால் இவ்வுலக மனைத்துங் கைக்கொள்ள வந்தானென்றனன். அதனை மாவலிமறுத்து, கொடுப்பதனால்வருங்கேடானது கொடாமையால் வருஞ் செல்வத்தினு மேலானதென்று கூறித் * தாராபாத்திரத்தையெடுத்துத் தத்தஞ்செய்யச் சென்றனன். அத்தருணத்தில் சுக்கிரனானவன் ஓர் சூக்குமவடிவங்கொண்டு அத்தாராபாத்திரத்தி னின்றுஞ்சலம் வரவொட்டாமல் அதன் மூக்கின்வழியை அடைத்துக்கொண்டனன். அவ்வஞ்சகத்தை வாமனர் அறிந்துகொண்டு, கொடுப்பதைத்தடைசெய்தலால் வருமபயன் இதுதான் என்று சொல்லும்படி ஓர் தருப்பையை உள்ளேவிட்டுக்குத்தினர். அதனால் அச்சுக்கிரன் தனது விழிகளில் ஒன்றை இழக்கப்பெற்று அதினின்றும் அப்பாற்செல்ல, உடனே வாமனர் மாவலி விட்டதத்த நீரைக் கையேற்றுக்கொண்டவராய்க் கொடை செய்தலால் உண்டாகும்பயன் இவ்வளவிற்றென்று சொல்லும்படி, அண்டகடாகங்களினும் ஊடுருவ ஓர் விசுவரூபங்கொண்டு தமது திருவடிகளினால் மூவுலகத்தினையும் ஈரடியாக வளந்து மூன்றாமடிக்கு அம்மாவலி சென்னியிற் றமதுபாதத்தைவைத்து அவனை பாதலலோகத்திற் செல்லும்படியழுத்தித் தமதுமனத்திற் கொண்ட வஞ்சகத்தை நிறைவேற்றிக்கொண்டு, இந்திரனுக்குச் சொர்க்கலோக அரசாட்சியை நிலைபெறச்செய்தனர். இப்பால் மாவலியானவன் முன்பு சிவபிரானை வழிபட்டிருந்த மகத்துவத்தினால தனது ஆக்கினையைச் சகலலோகங்களினும் அப்பாதலோகத்தினின்றுஞ் செலுத்தி, மநுநீதி முறைமைப்படி அரசாட்சிசெய்து தேவேந்திரனைப்போல அளவற்ற போகபாக்கியங்களை அனுபவித்துவந்தனன். இம்மாவலிபரமசிவனது கடாட்சத்தைப் பூரணமாகப்பெற்றிருந்தும் தனது உலகங்களையெல்லாம் கணேசமூர்த்திக் கன்பராகிய வாமனருக்குத் தத்தஞ்செய்துதான் அவரிட்ட சிறைக்கணிருக்கப் பெற்றனனாதலால், வன்னி விநாயகர், விண்டு விநாயகர், வாமனவிநாயகர், என்னும்

* தாரை என்பது தாராவென மருவியது. தாரை-நீர்

இம்மூன்று திருநாமங்களையும் யாவரேனு நினைத்தாலும், துதித்தாலும், பூசித்தாலும் அவர்கட்குத் தேவேந்திரனைப்போல அளவற்ற செல்வத்திலிருக்கும்படி வரங்கொடுத்து எல்லா விடர்களையும் இமைப்போதிற் கெடுத்தருளுவர் என்று பிரமன் பிதிர் தேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேன மகாராசனுக்குச் சொன்னான்.

வாமனர் வரம்பெறு படலம் முற்றிற்று.

---

## கீர்த்திமகப்பெறு படலம்.

வன்னி விநாயகர் விண்டு விநாயகர் வாமன விநாயகரென்றி யாவருன்னினுமேத் தினு பூசை புரிற்றினு மன்னவர்க்கந்த வும் பர்நாச, ரென்னபெரு வரமுமளித் தெவ்விடருங் கெடுத்தருள்வா ரென்று வேதன், வன்னிபதன் பெருமையினை மற்றுமுரைப் பான் பிதிர்வா னவனுக் கம்மா.

வேத வித்துக்களாயுள்ள சவுனகாதி முனிவர்களே! விநாயக மூர்த்தி வன்னிவிருக்கத்தி னடியில வீற்றிருக்கின்ற வரலாற்றினையும், அவ் வன்னி விநாயகருக்கு விண்டுவிநாயக ரென்றும் வாமன விநாயக ரென்றுந் திருநாம மூண்டானமையுஞ் சொன்னோம் இப்பால் அவ்வன்னியால கீர்த்தி மகப்பெறுபேற்றினையும், வாமனர் வரம்பெற்று தைத்தியர்களை வென்றடைந்த பேற்றினையுஞ் சொல்லுவோம் கேட்பீர்களாக

தேவேந்திரன் பின்னுஞ்சூரசேன மகாராஜனைநோக்கி அரசனே! பிரமதேவன் பிதிர்தேவனுக்கு மற்றொரு கதையுஞ்சொல்வதாயினன். அதாவது:-முன்னொருகாலத்தில சகலதேவர்களுங் கொண்டாடத்தக்க கைலையங்கிரியில் நவரத்ன மயமாயிருக்கின்ற திருவோலக்க மண்டபத்தில திரிசூலபாணியாகியும், கங்காதர மூர்த்தியாகியுமிராநின்ற சிவபெருமானனவர் கொலுவீற் றிருக்கின்றபோது பர்வதராசன் புத்திரியாகிய உமாதேவியார் அவரைத் தீர்க்கதண்டஞ்செய்து, சுவாமீ! கணேசமூர்த்திக்கு எல்லாப்பத்திரங்களினும் வன்னிப் பத்திரத்தில விழைவுண்டாகி யிருப்பதற்குக் காரணம் யாதோ அதனை அடியாட்குத் தேவரீர் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அதற்குப் பரமன் கிருபை சுரந்து, பெண்ணே! விண்ணுலகத்தின

ரும் மதிக்கத்தக்க மண்ணுலகத்தில் எண்ணற்ற தருமங்களை யுந் தானங்களையும் இடைவிடா தியற்றி வறியார்களுக்கெல்லாம் வரையாதுகொடுத்து பகையாயினாரையும் பணிப்பிக்க வல்லபராக் கிரமத்தோடு சகல நற்குணங்களினுஞ் சிறந்தவனாகிய பிரியவிரத னென்னும் ஓர் அரசனிருந்தான். அவனுக் கிரண்டு பனைவியரிருந்த னர். அவருள் முன்னர் விவாகஞ்செய்தவளை கீர்த்தியென்றும், பின்னர் விவாகஞ்செய்தவளைப் பிரபையென்றுஞ் சொல்லுவார்கள் இவருள் இளையாளாகிய பிரபையென்பவளிடத்தில் பிரியம்வைத்து அவளிடத்திற்றனே சகல இன்பங்களை யநுபவித்து அவளுக்கே எல்லாச் சிறப்புகளையுங் கொடுத்துவந்தனன். அவ னவ்வாறிருந்த போதிலும், மூத்தாளாகிய கீர்த்தியென்பவள் சிறிதேனும் மனவரு த்தங்கொள்ளாது கற்பையே கலனாகமதித்து தனது கணவனுக்கு ரிய பணிகளில் தினையளவும் குறைபா டில்லாதபடி நடாத்திவந்த னள். இப்பால் பிரியவிரதன் இளையாளோடு நாளுக்குநாள் நூதன விளையோடும புணர்ந்துவருநாளையில், அவள் கருப்பத்திற கரு வுண்டாகிப் பத்தாந்திங்களில் ஓர் ஆண்பிள்ளையைப் பயந்தனள். பின்னர் அப்பிள்ளை பதுமநாபனென்னும் பெயரைவகித்துப் பரு வமுற்றகாலத்தில் பாஞ்சாலனென்கின்ற ஓரசன் இலக்குமிபோன் றதனதுகுமாரத்தியைச் சகலவித சிறப்போடும் அவனுக்கு விவா கஞ்செய்து கொடுத்தனன். இத்தன்மைத்தான பெருமிதத்தினால் இளையாள் தனது மூத்தாளைக் கிருமியினுங் கீழ்ப்பட்டவளாகம தித்தொழுகி, ஓர்நாள் கற்புக்கயிற்றாற் கட்டுண்ட கீர்த்தியானவள் தனது காதலனுக்குப் பணிபுசெய்ய வேண்டினவளாய் அவன் இளை யாளோடுங் கூடியிருக்குமிடத்திற் சென்றனள். அதை இளையாள் நோக்கி, விரைவாக எழுந்து இங்கேன்வந்தனை யென்று எட்டியு தைத்தனள். அதனை அவ்வரசன்கண்டுங் காணாதவனைப்போலவி ருந்தனன். பின்னர் இளையாள் தன்னைக் காலாலுதைத்ததையும், அவ னவளிடத்துவைத்த மோகத்தினால் தனதுகாதலன் என்னகா ரணமென்று விசாரியாது சத்துருவைப்போல விருந்ததையும், கீர்த் தியென்பவள் நினைந்துநினைந்து, மனம் நொந்து, அவ்விடத்தனின் றுநீங்கி, இனி சரீரத்தை வாட்டியேனும், விடத்தை யுண்டேனும், * வரையிருண்டேனும், குளத்தில் வீழ்ந்தேனும் நமது உடலை ஒழி த்துக்கொள்வோமென்று யோசித்து, நினைக்குந்தோறும் உள்ளத்தி னின்று மெழுகின்ற வெப்பமானது சற்றும் நீங்காமையால் மனம்

* வரையுருளுதல்-மலைமீதேறி புருண்டு விழுதல.

புழுங்கி கண்களில் நீர்த்தாரைகளைச் சொரிந்து, சந்திர பிம்பம் போன்ற தனது முகாரவிந்தத்தினுடைய ஒளி மழுங்கும்படியான கவலையோடு வெளிப்படுவதாயினள். அத்தருணத்தில் அவளது நற்றவப்பயனென்று சொல்லும்படி மிக்கதெய்வத்தன்மையையுடைய ஓர் புரோகிதன் யாசிக்கவந்தனன். அப்போது அவள்கொண்ட மனக்கவலைகளை முகக்குறிப்பினா லறிந்து பின்னர் அவளால் யாவையுந் தெரிந்துகொண்டு, அம்மணீ! உனது மனக்கவலையை இன்றோடொழித்துவிடு, உனக்கு எல்லா நன்மைகளுங் கிடைக்குமாறு ஐந்தையனாகிய கணேசமூர்த்தியை விரைவில் மெய்ப்பத்தியோடும் பூசனைசெய்யக் கடவை, அதனால் நின்பதியாகிய பிரியவிரதன் நினது மாற்றுள்வசம எவ்வாறிருக்கின்றானோ அவ்வாறே நின்வசமாகுவானென்றுசொல்லி அவரை யருச்சிக்கு முறைமையையும் போதித்துச் சென்றனன்.

இப்பால் கீர்த்தியானவள் மனக்கவலைகளை யொழித்து விதிப்படி ஸ்நானஞ்செய்து தனது பூசனைக்குவேண்டிய திரவியங்களைக் கொண்டுவருமாறு பாங்கியருக்குக் கட்டளையிட்டு அவ்வாறே அவர்கள் கொணர்ந்துவந்த அறுகுதிருமஞ்சன முதலிய திரவியங்களைக் கொண்டு முன்னர் பிரமனாதியர்களாற் பூசிக்கப்பெற்று மந்தாரவிருக்க நீழலில் வீற்றிருக்கின்ற விநாயகமூர்த்தியைப் பிரதிதினமும் பூசித்துவருகையில், ஓர்நாள் அவ்வறுகு எங்கணு மகப்படாமற்போக அனைதற் பாங்கியர் இதற்கென்ன செய்வோமென்று திகைத்து தமக்கெதிரில் ஓர் வன்னிவிருக்க மிருப்பக்கண்டு காலதாமதமாகாதபடி அதனிலைப் பறித்துக்கொண்டுபோய் கீர்த்தியினிடத்திற்சென்று, எமதிறைவியே! இத்தினம் எங்கும் அறுகு அகப்படவில்லை அதற்குப்பதிலாக வன்னிபத்திரங் கொண்டுவந்தோம், அஃது அருச்சனைக்கு உதவும் உதவாதென்பதை யறிந்திலேம், ஆயினும் அதனைக்கொண்டே இத்தினத்தில் பூசனைசெய்து நிறைவேற்றவேண்டுமென்று சொல்லினர். அதனைக் கீர்த்திகேட்டலும் மனம்வருந்தி அறுக்கைக்கொண்டருச்சிக்கு முறைமை இன்றொழிந்ததேயென்று துயருற்று அவ்வன்னிப் பத்திரத்தைக்கொண்டே அத்தினங் கணேசமூர்த்திக்கு அருச்சனை புரிந்தனள். இவ்வாறு பூசனை நிறைவேறியும் அறுகாலருச்சனை செய்யாதகுறை நீங்குமாறுணர்வினை யொழித்திருந்தனள் அன்றைய விடியற்காலத்தில் அவள்கனவின்கண் ஒற்றைக் கோட்டினையுடைய யானைமுகக்கடவுளெழுந்தருளி தமது பொன்போன்ற சடாமகுடத்தில் அவளருச்சித்த

வன்னிப் பத்திரங்களெல்லாந் தோன்றும்படி எதிர்நின்று, பெண்ணே! நீ வன்னியாற்செய்த அருச்சனையை நாமேற்றுக் கொண்டனம், அஃது நமது சடைமீதிருக்கின்றதுபார், இனி அறுகு அகப்படாமையினா லுனக்குண்டான மனக்கவலையை யொழித்துவிடு, நாம் உனது பரிசுத்தமான பூசனைக்கு உவந்தோம் உனக்கு வேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தருள, கற்பிற்சிறந்த அக்கீர்த்தியானவள் அவரைக்கண்டவுடன் நாணமுற்று வாய்திறவாதிர்க்கத்தண்டஞ்செய்தெழுந்தொருதூணின்பக்கமாக ஒதுங்கி நின்றனள். அவ்வொழுக்கத்தினை விநாயகமூர்த்தி கண்டு அவள்கொண்ட எண்ணங்களெல்லாம் நிறைவேறுமாறு தாமேவரங் கொடுப்பதற் கிசைந்து, பெண்ணே! நினதுநாயகன் இந்நாள்முதல் நின்னிடத்தில் மிகுந்த அன்புவைத்திருப்பன். உனது மாற்றாட்கு நோய்கள்வந்து நோகச்செய்யும், ஓர்வருடத்திற்குள்ளாக நின்வயிற் றிற் புத்திரனுண்டாவன், அவனுக்குக் கிப்பிரப் பிரசாதனென்று பெயரிடக் கடவை. உனதுமாற்றாள் அவனுக்கு நான்காம்வயதில் போசனத்தில விடங்கடந்திடுவாள் அதனாலவன்மூர்ச்சையடைந்து உடனே கிருச்சமதருடைய சேவையினால் அதனை யொழிகுவன்: என்று இவ்வாறு திருவாய்மலர்ந்து தமது மெய்யடியாருடைய மனக்கோயிலிற்சென்று வாசமாயினர். உடனே கீர்த்தியானவள் கண்விழித்து தனது கனவின்கண் விளைந்தவைகளை நன்றாய்க் கவனித்து எல்லாக் கவலைகளையுமொழித்து மகிழ்ச்சிகொண்டு பொழுதுவிடிந்தவுடன் காலைக்கடன்களை முடித்துப் பாங்கியர் அன்போடு கொணர்ந்துவந்த சந்தனம் புட்பாதிகளால் விநாயகமூர்த்தியைப் பூசித்து, சிவம், சத்தி, விண்டு, கதிர், கணேசர், என்று வேதங்களாற் சொல்லப்பட்டிருக்கின்ற கடவுள்யாதோ அதுவே நமதுகனவின்கணெழுந்தருளியதென்று மதித்து, ஆராமை மீதூர,

அறுதியாம் பரனமலை மால்கதிர்
விநாயக னெனமறை விளம்பு மைவருங்
கனாவிடைத் தோற்றிய கடவு ளேயென
மனாவொளி ரல்குலாள் வருத்துப் பூசித்தாள்.

அகிலமுநீ யதன்கார ணங்கணீ
சகதத் துலமுநீ சாமி நீயெனக்
கிகலருந் தந்தைதா யெவரு நீயென
வுகலரும் பெருந்துதி யோதிப் போற்றினாள்.

ஓ சர்வபுவனுதார ஸ்வரூபியாகிய விநாயகமூர்த்தியே! அளவி டற்கரிய அகிலங்களுந் தேவரீரே, அதன் காரணங்களுந் தேவரீரே, சகலதத்துவங்களுந் தேவரீரே, அடியாரை யாட்கொள்ளவந்த சுவாமியுந் தேவரீரே, எனக்குத் தாய்தந்தைமுதலிய யாவருந் தேவரீரே என்றுமிக்க உள்ளன்பினோடும் அனந்தமுறை தோத்திரஞ்செய்து யதாப்பிரகாரந் தனதிருக்கையைச் சேர்ந்து வாழ்வுற்றிருக்குங்கா லையில் கணேசமூர்த்தியினுடைய திருவருளினால் அவள் மாற்றாளாகிய பிரபையென்பவளுக்கு வெப்பநோயுண்டாகி அதன்மூலமாய் அளவற்ற வியாதிகள்வந்து உபத்திரவஞ்செய்ய, அதனாலவள் தனதுடலைத்து மிறந்தவளாயினள். இடைவிடாது கணேசமூர்த்தியைப் பூசனைசெய்யு மகிமையால் கீர்த்தியென்பவள் பெருமகிழ்ச்சியோடு மிக்க பேரழகினையுடையவளாயினள்.

பின்னர் பிரியவிரதன் இளையாளிடத்தில் வெறுப்புற்று இலக்குமியையொத்த மூத்தாளிடத்தில் விருப்புற்றிருக்க, உடனே அவள்வயிற்றிற் கருவுண்டாகி அதுமுதல் ஓராண்டினுள் புத்திர னுற்பவித்தனன். அதனால் பிரியவிரதனுங் கீர்த்தியும பெருமகிழ்ச்சியடைந்து வேதபாரகராகிய பிராமணர்களைக்கூவி அவர்கட்கு ஆடையாபரணமுதலிய திரவியங்களைத் தானங்கொடுத்து அப்புதல்வனுக்குக் கிப்பிரப் பிரசாதனென்று நாமகரணஞ் செய்தனர். அவனும் நாளுக்குநாள் சந்திரனைப்போலத் தினமொரு மேனியாகவளர்ந்துவந்தனன். கீர்த்தியெனபவளும் பேருவகையோடும் சுகித்திருந்தனள். என்று சிவபிரான் உமையவட்குச் சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொல்லியபடி சசிமணாளனாகிய இந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொன்னான்.

கீர்த்தி மகப்பெறுபடலம்-முற்றிற்று.

---

# விடநீங்குபடலம்.

மதியென விளஞ்சிறான் வளரக் கீர்த்தியு
முதிர்பெறு மகிழ்ச்சியின் மூழ்கி வாழ்ந்தனள்
கதிருமிழ் பூணகைக் கவுரி யச்சிறான்
விதியினிக் கேளென விளம்பு மீசனே.

அருமறை யாகமமனைத்து மறிவரிதா யரற்று மற்புதானந்தப் பெருஞ்சோதிப் பெருங்கருணைப் பெருமானது திவ்வியலீலாவை,

பவங்களையே இடைவிடாது செவிவாய்த் தேக்கிச் சித்தஞ்சிவசொரூபமாகப்பெற்ற தபோநிதிகளே? கீர்த்தியென்பாள் மகப்பேறு பேற்றினையும், நாயகனோடு விழைவுற் றிருந்தமையையுஞ் சொன்னோம். இப்பால் விடநீங்குபேற்றினைச் சொல்லுவோம் கேட்பீர்களாக அமராபதிக் கிறைவனாகிய இந்திரன் சூரசேனமகாராசனை நோக்கி, அரசனே? எமது தயாவிமல சாக்ஷாத் சிவபெருமான், உலகமாதாவாகிய உமையம்மையாருக்குச் சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொன்னதாவது:

மேற்கூறிய கீர்த்தியென்பவள் கிப்பிரப் பிரசாதனென்னுந் தன் தவச்செல்வனைப் போற்றிப் புரக்குநாள் அச்சிறுவன் வளர்ந்து வருங் கீர்த்தியைப் பிரபையென்பவள் கண்டு மிகுந்த பொறாமை கொண்டு, இவன் சீவித்திருப்பானாகில் நமது குமாரனுக்குப் பட்டம் இல்லாமற்போமே யெனனும் நினைப்போடு அவனுக்கு நான்காவது வயதாகுங்காலத்தில் போசனத்தில் விடங்கலந்து கொடுத்தனள். உடனே விடமானது தலைக்கேறலும் அவ்விளமைப் புத்திரன் அதனைச் சகிக்கமாட்டாதவனாய்ப் பூமியில் வீழ்ந்து சோபமாயினன். அதனை அவன் றந்தையாகிய பிரியவிரதன்கண்டு நடுநடுங்கி மணிமந்திர அவுடாதிகளாலும் பலவித பரிகாரங்களைச் செய்து அது தீராமையை அவன் தாயாகிய கீர்த்தியென்பவள்கண்டு முன்னர் தனக்கு விநாயகமூர்த்தி கட்டளையிட்டிருப்பதை நினைந்து, நெஞ்சமே? நமதருச்சனையை அன்போடு மேற்றருளிய விநாயகமூர்த்தி யிருக்கின்றனர். அவர் திருவாய்மலர்ந்த கிருச்சமதமுனிவரு மிருக்கின்றார். நீயேன் வீணிற் கவலைபற் றழுகின்றனையென்று தனதுமனதைத் தானேதேற்றிக் கீழேசாய்ந்து வீழ்ந்திருக்கின்ற மைந்தனை யெடுத்துக்கொண்டு கிருச்சமத முனிவருடைய ஆசிரமத்தைநோக்கிச் செல்வதாயினள். அவ்வாறு செல்கின்றபோது சோபத்தோடு மிருந்தமைந்தன் சிறிதும் உயிர்ப்பின்றி நவெழுயிய இறந்துபோயிருக்கின்றமையைக் கண்டு மார்பு, நாபி, கை, காலமுதலிய விடங்களில் தனதுகரத்தைவைத்து முத்தனைப்போன்ற அவன்பற்கள்கரிந்து கிடக்கின்றமையையும், கண்கள் பஞ்சிட்டிருக்கின்றமையையும் பார்த்து, * ஒன்னார் நகையையும் உற்றார் நகையையும் ஒழிவித்தமகனே, அடா எனதுகண்மணியே! இளமைபொருந்திய ஆண்சிங்கத்தையொத்த குமாரனே? நின்னால் † மும்மைப்பய

* ஒன்னார்-பகைவர். † மும்மை-மூப்பிறப்பு. இதனை இம்மை, அம்மை, மறுமை, என்ப.

னும் பெறலாமென் றெண்ணியிருந்த என்னை ஆறாத்துயரிலழுந்த விட்டிறந்தனையே? மாற்றாந்தாயே கூற்றமென்கின்ற வாக்கியத்தைத் தெளிய வைத்தனையே? அடா எனது தபோபத்தினால்வந்த அருமருந்தே! பாவியாகிய என்னையும் எனது நெஞ்சத்தையும் நிலைகுலையச்செய்து நீற்றுகின்றனையே? உன்னையெவ்வாறு யான்கொண்டுபோய் இனி நீற்றவல்லேன்! ஐயோ! உன்னைவிட மிட்டுக்கொன்ற பாதகிநீ இரக்கக்கண்டு ஆனந்தக்கண்ணீர் விடவொட்டாமலா நீ இக்காட்டின்கண்வந்து மடிந்துபோயினை! அடா எனது அருமைச் செல்வமே? என்றிவ்வாறு அக்காட்டிலுள்ள மிருகங்கள் பறவைகள் விருட்சங்கள் முதலானவைகளுங் கண்ணீர்விட் டிரங்கும்படியாக நெஞ்சங்கலங்கிப் பிரலாபித்தனள்.

அதற்கு எனது உன்னைக் கொப்பானவராகிய கணேசமூர்த்திக்குத் திருவுளமிரங்கியதுபோல அவை யனைத்தையுங் கிருச்சமத முனிவர் தமது ஞானநோக்கினால் அறிந்துகொண்டு மனமிரங்கிப் ‡பொள்ளென்று தமதாசிரமத்தை விட்டெழுந்து அவள் வருந்துகின்ற இடத்தையடைந்து இறந்தமைந்தனை மடியின்மீது வைத்து எதிரில் வருவோருந் தெரியாமல் மதிமயங்கி யழுதுகொண்டிருக்கின்ற கீர்த்தியைக்கூவினர். உடனே தமது புதல்வனைப் பூமியில்வளர்த்தி மிக உருக்கத்தினோடும் அம்முனி புங்கவருடைய திருவடிகளைப் பணிந்தனள். அதற்கம் முனிவர் கிருபைகூர்ந்து அம்மணி! நீயார்? நீவிம்மிவிம்மி அழுது கொண்டிருக்கின்ற காரணமென்ன? அதனைச் சொல்லென்று வினவலும், கீர்த்தியானவள் சிறிது மனந்தேறி சுவாமி! அடியாள் பிரியவிரதனென்னு மரசன்மனைவி; இப்புத்திரனை அடியாட்கு அரியதவப் பேற்றினாலுண்டானவன்; இவன் எனது மாற்றாளூட்டிய விடத்தினால் உணர்வழிந்தனன். அடியாட்கு விநாயகமூர்த்தி புத்திரவரந் தந்தபோதே இவன் நான்காம் வயதில் விடமூட்டப் படுவனென்றும், அது கிருச்சமத முனிவராற் றீருமென்றுந் திருவாய்மலர்ந்திருக்கின்றனர் அத்திருவருளைத் தலைமேற்கொண்டு உணர்வழிந்திருக்கின்ற மைந்தனோடுந் தேவரீர் ஆசிரமத்தை நோக்கி இவ்வனத்தை வழிக்கொண்டு வரும்போது நடுவழியில உயிருமிழந்தனன். அதைக்காண்டலும் எனது மனமானது கவலைக்கடலின்றுங் கரையேற மாட்டாமையால் எமதாண்டவராகிய கணேசமூர்த்தியி னுடைய திவாக்கினையு மறந்து பிரலாபிப்பதாயினன். தேவர்களெல்லா மதிக்கத்தக்க பெருங் கீர்த்

‡ பொள்ளெனல்-விரைவுக்குறிப்பு

திவிமிஷைவாய்ந்த தேவரீரே அடியாட்கிரங்கி வந்தமையால் நஞ்சுண்டு நமன்கையிலகப்பட்ட எனது குமாரனையெழுப்பி எளியேனையும் ஆட்கொண் டருளவேண்டுமென்று பிரார்த்தித்து மீட்டுந் தீர்க்க தண்டஞ் செய்தனள். அதற்கு அக்கிருச்சமதமுனிவர் மனதிரங்கி நீ இனி ஒன்றிற்கும் அஞ்சலையென்று அபயாஸ்தந் தந்து இலக்குமியை யொத்தவளே! முன்னர் வன்னிப்பத்திரத்தால் கணேசமூர்த்தியைப் பூசைசெய்திருக்கிறனை யாதலால், அப்பூசையின் பயனை உனது புத்திரன்கையிற் றத்தஞ்செய்யக்கடவை யென்றனர். அதற்குக் கீர்த்தி இதுவோ எனக்கரிதென்று சந்தோஷித்து அவ்வாறே தான்செய்த பூசையின்பயனை அவன்கரத்தில் தத்தஞ்செய்தனள் உடனே அச்சிறுவன் உறங்கி விழித்தவன்போல எழுந்து கிருச்சமதமுனிவருடைய திருவடிகளைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து அவர்பேரருளைப் பூரணமாகப்பெற்று வாழ்ந்திருந்தனன். என்று சிவபிரான் உமையவட்குச் சொன்னதாகப் பிதிர்தேவனுக்குப் பிரமதேவன் சொல்லியபடி தேவேந்திரன் சூரசேன மகாராசனுக்குச் சொன்னான்.

விடநீங்குபடலம்-முற்றிற்று



# சமிமந்தார வுற்பத்திப் படலம்.



கடவுட் கொருநாள தன்பெருமை காணு தருச்சித் திடமைந் தன், விடவிட்டகல வெழுந்திருந்திருந்தான் மெய்மைத்தவத்தோ யத்தனைய, வடருமிலைவன்னியின்பெருமை யறையல் வேண்டுமென விரந்தா, ஞுடலம் வெறுத்த கிருச்சமத னுவந்து கீர்த்திக்குரை செய்வான்.

எல்லாந் திருவருட் செயலே யெனத் தேற்றித்தெளிந்த முனிவர்களே: கீர்த்தியென்பவள் விநாயகமூர்த்திக்குவன்னிப் பத்திரத்தா லருச்சனை செய்ததும், அவ்வருச்சனைப் பயனால் விடமுண்டிறந்துபோன அவள்புதல்வனுகிய கிப்பிரப்பிரசாதனுயிர்த்தெழுந்ததுஞ் சொன்னோம். இப்பால் அவ்வன்னியும் மந்தாரமும் உற்ப வித்தாரவலாற்றினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக.

தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனை நோக்கி, அரசனே! சிவபிரான் உமையவட்கு மற்றொரு கதையுஞ் சொன்னதாகப்

பிதிர் தேவனுக்கு பிரமன் சொன்னதாவது: முற்கூறியகீர்த்திவெண் பன் மீட்டுங்கிருச்சமதமுனிவரைப் பணிந்தெழுந்து, சுவாமீ! வன் னிப்பத்திரத்தினுடைய மகத்துவந்தெரியாமலேயொருநாள் அதனைக் கொண்டு விநாயகமூர்த்தியை யருச்சித்தேன், அதனால் விடமுண் டிறந்த எனதுமைந்த னெழுந்தான், ஆதலினால்; அதனது பெரு மையை யடியாட்கு விளம்பியருள வேண்டுமென்று பிரார்த்தித் தனன் அதற்கம் முனிபுங்கவரிசைந்து, வாய்மையிற்சிறந்த மாத வத்தோர்க்கும் எட்டுதற்கரிய கணேசமூர்த்தியினுடைய திருவடி களுக்கன்புவைத்திருக்கின்ற அரிவையே! யாவரேனும் ஒருகாலவன் னியென்று வாக்கினாற் கூறுவராயின் * அவ்வாக்கினால் அவர்கள் அனந்தம் பிறவிகள்தோறுஞ் செய்துமுற்றிய தீவினைகளெல்லாம் அழலிற்பட்டபஞ்சுபோலாகும். அதனைநினைப்பாராயின் † மனத்தா ற்செய்தபாவங்களெல்லா நிவிர்த்தியாகும். அதனைவலம் வந்தாலும் நேரிற்சென்று தரிசித்தாலும் கைகளைக்கூப்பித் தொழுதாலும் ‡ காயத்தாற்செய்த பாவங்களெல்லாம் மாறிவிடும். பஞ்சாக்கினிமத் தியினின்று தவஞ்செய்தவனுனுண்டாகின்ற பேறும், ஆடையாபர ணாதிகளைத் தானஞ்செய்தவனால் அடைகின்றபேறும், விரதம், யாகம் முதவானவைகளைத் தானஞ்செய்வதனால் வருகின்ற பேறும், ஒருவன்னிப் பத்திரத்தாற் செய்த அருச்சனையா லுண்டாகும் பய னுக்கொவ்வாது, அன்றியும், இம்மையில் அளவற்றபோகங்களை யோர்கணப்போதி லூட்டுவிக்கும். மறுமையில்விண்டு முதலாயினோ ருடைய பதவிகளிற் சேர்ப்பிக்கும். ¶ ஆணவமுதலிய மும்மலங் களையும் போக்கி மெய்ஞ்ஞான போகத்தையளித்து கணேச மூர்த் தியினுடைய உள்ளத்தில் மேவச் செய்யும் ஒருகோடி கற்பகாலம் வரையிற்சொன்னாலு முடிவுறாதசிறப்பினைவாய்ந்த அவ்வன்னிப்பத் திரத்தின் மான்மியத்தைத் தேவேந்திரனுக்குத் நாரதமுனிவர் உப தேசித் திருக்கின்றனர். அதனை உனக்குச் சொல்லுவோங் கேட்பா யாக. முன்னொரு காலத்தில் நந்திகோத்திர னென்னும் ஓர் முனி புங்

* வாக்கினாற் செய்யும் பாதகங்கள் பொய், புறங்கூறல், கடுஞ்சொல், வெட்டெனப் பேசல், பரிகாசஞ் செய்தல், நிந்தித்தல் முதலியன.

† மனதாற் செய்யும்பாதகங்கள், அழுக்காறு, அவா, வெகுளி, கோபம். சலஞ்சாதித்தல், மறதி, வீணினைவு, தூய்மையின்மை முதலியன.

‡ காயத்தாற் செய்யும்பாவங்கள்: அவத்தொழில், சோம்பல், தீயினஞ் சேர்தல், கொல்லல் முதலியன.

¶ மும்மலம்: ஆணவம், கன்மம், மாயை.

கவரிருந்தார் அவருக்கு வேதாகமமாதிகளை யோதியுணர்ந்தவரா கியும் எல்லாமேன்மைகளு மியல்பாயுள்ளவராகியு மிராநின்ற அவுர வரென்னும்ஒருபுத்திரரிருந்தனர். அவருக்குசுமேதையென்னும்பெ யரினையுடைய ஒருமனைவியிருந்தனள். அவுரவமுனிவருஞ் சுமேதை யுஞ்சுகித்து வாழ்வுற்றிருக்குங்காலையில் இவர்கட்குச்சமியென்னும் பெயரினையுடைய ஓர்பெண்குழந்தையுண்டாகி அதற்குமணப்பருவ முண்டாகலும், தாய்தந்தையர் அப்பெண்ணிற்கேற்றபுருடனை நாடி க்கொண்டிருந்தனர். அக்காலத்தில் தவுமியமுனிவர் புதிரனுகியும், மகா தவசிரேஷ்டர்களுக்குள் * மடங்கலே றுத்தவனுகியும், சவு னக முனிவரையடுத்து அவர்க்கேவல்செய்து கொண்டு தவம் புரிப வனுகியும் மந்தாரனென்னும இயற்பெயரையுடைய ஓர் முனிபுத்திர னிருந்தான். அவனை மேற்கூறிய அவுரமுனிவரும், அவர்பத்தினி யுங்கண்டு இவனே நமதுதவச்செல்விக்கேற்ற மணாளனென்றுயோ சித்து அதிக சந்தோஷத்தோடும் தீர்மானித்துப் பிரமம், பிரசாபத் தியம், ஆரிடம், தெய்வம், காநதருவம், அசுரம், இராக்கதம் பை சாசம் என்னும் † எண்வகை மணத்தினுட்சிறந்த ‡ தன்ம மணத் தினு அவனுக்கு விதிப்படி விவாகஞ்செய்து கொடுத்தார்கள்.

பின்னர் அம்மந்தார னென்பவன் அப்பெண்ணைத் தாய் வீட் டிற்றனே யிருத்தித் தான் முன்போலவே சவுனகமுனியையடைந் து, அவரிட்டயேவல்களைச்செய்துகொண்டு தவத்தி லிருந்தனன். இவ்வாறு சின்னுளாகலும் மந்தாரன் அம்முனிவரிடத்தில விடை பெற்று அவுரவராசிரமத்தை யடைய, அப்போது சமி யென்பவள் புட்பவதியா யிருந்தமையால் உடனே அவ்விருவருக்குஞ் § சாந்தி

* மடஙகலேறு: மடஙகல ஏறு-ஆணசிஙகம.

† பிரமசாரிக்குக் கன்னியைத நீரூன்னர்க் கொடுப்பது பிரமமணம். தலைமக னினத்தார் வேண்டத்தலைமக னினததா ருட்பட்டு அவளைத நீரூன் னர்கொடுப்பது பிரசாபததிய மணம. ஒன்றிரண்டு பசுவுமஅல்லது எருதும வாங்கிக் கொண்டு கன்னியைத் நீரூன்னர் கொடுப்பது ஆரிடமணம். வேள் வியால் வந்தகன்னியைத் நீரூன்னர்கொடுப்பது தெயவமணம. கொடுப்பாரும கேட்பாருமின்றி இருவருந் தனியிடத் தெதிர்பட்டுத் தாமே கூடுவது காந் தருவமணம் பெண்ணுக்குப்பொன்சூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன்வேண்டு வனகொடுத்துக் கொள்வது அசுரமணம். பெண்ணும, பெண்ணினத்தாரும் உடம்படாமல வலிதிற் கொள்வது இராக்கதமணம். துயின்றுளைச்சென்று கூடுவது பைசாசமணம.

‡ இங்கு தன்மமண மென்பது-பிரமம் என்னும் முதன் மணத்தினை.

§ சாந்தி முகூர்த்தமாவது; மாதர்கள் ருதுவாகிய மூன்று நாளும

முகூர்த்தஞ் செய்தார்கள் பின்னர் மந்தாரன் மனைவியை யழைத்துக்கொண்டுதனது தந்தையாகிய வாழ்கின்ற ஆசிரமத்தையடையுமாறு வனத்திற் செலனுமையில், கணேச மூர்த்தியினுடைய சாரூபத்தைப்பெற்றிருக்கின்ற புருசுண்டி முனிவரெதிரே வந்தனர். அப்போது இரண்டுபேருந்தமது தொலையாத் தொல்வினை தொடருங் காலம் நேரிட்டவர்களாய், அவரது துதிக்கரத்தையும், தொந்தியையும் பார்த்துநகைத்தனர். அதனை அப்புருசுண்டி முனிவர் கண்டு, அறிவீர்களே! என்னைப் பார்த்து ஏளனமாய் நகைத்தீ ராதலால் நீங்கள் இவ்வுலகத்திலே ஒருயிருக்கும் உதவி யற்ற மரங்களாகக் கடவீர்களென்று சபித்தனர். அதைக்கேட்ட சமியும் மந்தாரனும் நடுக்குற்று உடனே அவரது பாத பதுமங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து; சுவாமி! அடியேங்கள் சுத்த * சாட்குண்ணிய மூர்த்தியாகிய தேவரீர்மகத்துவம தெரியாமல் அறிவின்மையாற் செய்த பிழையினைப்பொறுததருளி, அடியேங்கள் அச்சாபத்தின்று நீங்கிக் கிருத்தார்த்தர்களாகும்படி தேவரீர் கிருபை செய்ய வேண்டுமென்று பலமுறை இரந்து † துதிசெய்தார்கள், அதற்கு அப்புருசுண்டி முனிவர்சிறிதிரங்கி, நீங்கள், எனது துதிக்கரத்தையுந் தொந்தியையும் பார்தது மெய்குலுங்க நகைததீராதலால் இத்துதிக்கரத்தையுந் தொந்தியையு முடைய விநாயகப்பெருமான் உம்மிடத்தில் எழுந்தருளுவர் அப்போது நீங்கள் சிறப்பெய்தி இம்மரவுருவம்நீங்காமலே அவருக் குரிமையாவீர்கள். அது முதல் உலகமுள்ளளவும் உங்களை யாவரும்பணிந்து போற்றுவார்கள். முடிவில் அந்தமில்லாத முத்தியையும் பெறுவீர்கள். ஆகலால் நீங்களிவ் வனத்திற் றூனே வசித்திருங்களென்று சொலலித் தமதாசிரமத்திற்குச் சென்றனர்.

---

ஞாயிறு செவ்வாய் சனி, பூரணை அட்டமி அமவாசியை, இருத்தை, ஜன்ம நக்ஷத்திர வாரம், பரணி திருவாதிரை ஆயிலியம மகம பூப்பூரம் சித்திரை சோதி விசாகம நீங்கிய சுபகால வோரையில் கேந்திர சுத்தமும், சுபக்கிரக பார்வையும கிராசியும லக்கின சுத்தமும கோக்கிமணுளனேயும, மணுட்டியையும் விதிப்படி சாந்தி செய்து புணர்ந்து விக்கும் ஓர் சடங்கு இதனைக் நிஷேகமூர்த்த மென்மர்.

* சட்குணம்-ஆறுகுணம். அக்தாவது: சர்வஞ் ஞத்துவம், சருவேச்சுரத்துவம், சருவ நியந்திருத்துவம், சருவாந்தரியா மித்துவம, சருவ கற்பிதத்துவம், சருவ சத்தித்துவம், அன்றியும் தன் வயத்தனாதல், முதலிலனாதல், உடம்பிலனாதல், எல்லாஞ் சலமுணனாதல், எங்கும் வியாபகனாதல், எவற்றிற்குங்காரணனாதல்.

† இரத்தலாவது-(அவரது கிருபையை) யாசித்தல்.

இப்பால் மந்தாரனென்பவன் மந்தாரமாகவும், சமியென்பவள் வன்னிமரமாகவு மிருக்கச் சிலநாள்சென்றபின்பு சவுனகமுனிவர் மந்தாரனை நினைத்துக்கொண்டுமனைவியை யழைத்துவருகின்றேனென்று சென்றனனே? இது காறும் வரக்காணேமே? அவனைப்போலகுணத்தில் விசேடப் பட்டவர்களும், நமது பணிவிடைகளிற் பெரிய வுரிமை வைத்திருப்பவர்களும் ஒருவரு மில்லையே? யாதோ ஓரிடையூறின்றி இத்தனை நாள் நமமைவிட்டிரானே? யென்றுமனம் வருந்தி எல்லவற்றையுந் தூதரா லறிந்து கொள்வோமென்று நினைத்து தூதர்களைவிடுத்தனர் அவர்களும் அவ்வாறே மனோவேகத்திலும் விரைவாகச் சென்று அவுரவ ராசிரமத்தை யடைந்து அவரது திருவடிகளைப் பணிந்தெழுந்து, சுவாமீ! இங்கு வந்த தங்கள் மருகராகிய மந்தாரமுனிவர் எங்கு [illegible] சென்றனரென்று வினவ, அதற்கு அவர் தமது மனைவியையழைத்துக் கொண்டு அப்போதே போய்விட்டாரே இற்றைநாள் வரையில் அவ்விடத்திற்கு வரவில்லையா? இன்னும் நன்றாய்த்தேடிப்பாருங்களென்று தமது பெண்ணின் மீது வைத்திருக்கின்ற பெருங்காதலால் தாமுஞ் சில தூதுவரைக்கூவி ஏவினர். அவர்களும் வணங்கி யெங்குந் தேடிச் சென்றுங் காணாதவர்க ளாயினர். அதனை மற்றைய தூதர்கள் அறிந்து கொண்டு, உடனே அவ்விடத்தினின்று நீங்கிச் சவுனகமுனிவரை யடைந்து யாவையு மவருக்கறிவித்தார்கள். அதனால் காருண்ணிய மூர்த்தியாகிய அம்முனிவர் மனம்வருந்தி சிறிதுநேரம் யோகத்திலிருந்து: அவர்கள் புருசுண்டி முனிவரையவமதித்ததும், அவர் சாபத்தால் அவர்கள் மரங்களானதும், பின்பு அம்முனிவர் அவர்கள் செய்தவநதனை வழிபாட்டிற் கிரங்கி உங்கட்குயானைமுகக்கடவுள் பிரத்தியட்ச மாகுங்காலத்தில் எல்லா நன்மைகளும், எல்லா போசபாக்கியங்களும் எலலாக்கிர்த்திகளுமுண்டாகுமென்று திருவாய் மலர்ந்ததுந்தெரிந்துகொண்டனர் அவுரவ முனிவரும் அவ்வாறே யறிந்துகொண்டனா. மந்தாரனுடைய தந்தையாகிய தவுமிய முனிவரும் அவ்வாறே யறிநது கொண்டு தமது புதல்வனுக்கு நேர்ந்தவருத்தத்தைச் சகிக்கமாட்டாது இறந்தனர். இப்பால் சவுனக முனிவர் தமது அய்யனாகிய மந்தாரனைக் குறித்தும், அவுரவ முனிவர் தமது குமாரத்தியாகியசமியைக் குறித்தும், கணேசமூர்த்தியை மனதிற் றியானித்து சடாட்சர மந்திரத்தைச் செபித்துக்கொண்டு பன்னிரண்டுவருடம் வரையிற் றவத்தி லிருந்தார்கள் பின்னர் கணேசமூர்த்திக்கு மனமிரங்கி, யானைமுகமும் பத்

துக்கைகளும் விளங்கும்படி. சிங்கவாகனமூர்த்தி சவுனகமுனிவருக்கெதிரில் பிரத்தியட்சமாயினர். உடனே சவுனக முனிவரெழுந்து கர்த்தன் திருவடித்தாமரைகளில் சாஷ்டாங்கமாகப் பணிந்து அனந்தமுறை தோத்திரஞ் செய்தனர்.

அதற்குக் கணேசமூர்த்தி கிருபை கூர்ந்து அம்முனிவரது நெகிழ்ந்த வுள்ளத்தையும், நீர் பெருகி வருகின்றகண்களையும் பார்த்துச் சந்தோஷித்து அன்பனே! உனக்குவேண்டிய வரங்களைக் கேள் தருகின்றோமென்று மிக்க அன்போடு திருவாய் மலர்தலும், முனிபுங்கவர் மீட்டுந் தொழு தெழுந்து ஐயனே! ஒழுக்கத்திற் சிறந்த மந்தார னென்பவனும், அவன் பத்தினியாகிய சமி யென்பவளும் புருசுண்டி முனிவருடைய சாபத்தினால் தங்கள் இயற்பெயராற்றானே மரங்களாகி யிருக்கின்றனர். அவர்கள் அவிவேகத்தாற் செய்த பிழைகளைப் பொறுத்தருளி அம்மரவுருவினின்று மீட்டும் மானிட வுருவில் வருமாறு தேவரீர் கிருபைபுரியவேண்டு மென்று பலவிதமாகத் தோத்திரஞ்செய்து விண்ணப்பஞ் செய்துகொண்டனர் அதற்கு விநாயகமூர்த்தி புன்னகை கொண்டு, தவசீலனே!

நமது சாபநம் மருளினாற் றீரினு மன்பர்.
தமது சாபந்தீ ராதுகாண் சவுனக முனியே
விமல மாகிய புருசுண்டி விளம்பிய சாப
மமரா யாவருங் கூடியு மகற்றிடப் படாதால்.

நமது சாபம் நம்மாற் றீரினும், நமது பத்தர்களிட்ட சாபம் நம்மாற் றீருவது அரிது. மேலும் அருந்தவத்திற் சிறந்த புருசுண்டியிட்டசாபம் ஆதலால் அதைஎல்லாத்தேவர்களும் ஒருமிக்கக்கூடி விலக்கினாலும் விலகாது.

ஆயினும் நீ நம்மிடத்தில்அன்பு செலுத்தினமையால் அவர்கள் அம்மரமாகவேயிருந்து எல்லாச்சிறப்புகளையு மெய்துமாறும், யாவரும்வணங்குமாறும் அவர்கள் நீழலில் வசித்திருக்கின்றோம், தருமம் முதலிய *நான்குபுருஷார்த்தங்களை அடையவேண்டுநரும், தீவினைவசத்தால்வருகின்ற இடையூறுமுதலிய துன்பங்களை நீக்கிக் கொள்ள வேண்டுநரும் அம்மரங்களினது நீழலில்வந்து நம்மைவழிபடக் கடவார்கள். பத்தியில்லாதவர்க ளாயினும், பாக்கியமில்லாதவர்களாயினும், உத்தம குலத்தி லுதியாதவர்களாயினும், ஊக்கமுத

* புருடார்த்தம நான்காவன: அறம், பொருள், இன்பம், வீடு என்ப. இதனை தர்மார்த்தகாமமோட்ச மென்பர் வடநூலார்

வீய குணமில்லாதவர்களாயினும், அவ்வன்னி விருக்கத்தினுடைய பத்திரத்தினாலும், மந்தார விருக்ஷத்தினுடைய புஷ்பத்தினாலும் நம்மை யருச்சிப்பார்களாயின் அவர்கள் வேண்டியவரங்களில் ஒன்றுங் கெடாமல் தருவோம் இதனை நீ அறிந்துகொள்ளக் கடவையென்று திருவாய்மலர்ந்து ஒருகொம்பும், இரண்டுசெவியும், மூன்றுகண்ணும், நான்குபுயமும், உடையவராய் அம்மரங்களின் நிழலிலெழுந்தருளினர். அதுமுதல் சௌனகர்முதலிய எல்லாமுனிவர்களும் அவ்விருக்கங்களையடுத்து அவைகளின் பத்திரத்தினாலும், புஷ்பத்தினாலும் விநாயகமூர்த்தியை யருச்சித்து வந்தனர். பிராமணசமியென்பவள் தாயாகிய சமிமதையானவள் வன்னி விருக்ஷத்தின் மேலெழுந்தருளிய கணேசமூர்த்தியைப் பூசித்து அநவரதமும் அவரோடு கலந்து, அவரதுலோகத்திற் சென்று வாழ்ந்திருந்தனள். அவள் தந்தையாகிய அவுரவ முனிவரானவர் அவள்மீது அதிக விழைவுள்ளவராதலால் உடனே தமது யோகத்தினால் † பிராண வாயுவைக் கும்பித்து, சூக்ஷும சரீரத்தால் அவ்வன்னியின் காஷ்டத்திற்குள்புகுந்து விண்ணுலகத்தார்க்கெல்லாம் ‡ அவியாகி யளிக்குந்தொழிலில் அகலா திருந்தனர். அதுமுதல் அவ்வன்னியைச் சமிதருவாம் என்று சான்றோர்கள் அழைத்து வந்தனர்.

ஆதலால் விநாயக மூர்த்திக்குரிய அறுகு மந்தாரை வன்னியென்னும் இவற்றின் பெருமைகளை எனைப் பொருள்களால் அளவிட்டுரைக்கற்பாலனவன்று. அறுகில்லாக் குறையை மந்தாரமலர் நிரப்புவதாலும், அறுகும் மந்தாரமும் இல்லாக் குறையை வன்னிப்பத்திரம் நிரப்புவதாலும், யாகாக்கினியானது எப்போதும் இவ்வன்னியில் வாசமா யிருத்தலாலும், உலகின்கணுள்ள எல்லாப்பத்திரங்களினும் வன்னிப்பத்திரம் விசேடமாயது. அன்றியும், அதனைச்சிவபிரானும் ஓர் கூறாகத் தமது சடாமகுடத்தில் அணிந்திருக்கின்றனர் என்று கீர்த்திக்குக்கிருச்சமத முனிவர் சொன்னதாகச் சிவபிரான் உமையவட்குக் கூறியபடி பிரமதேவன் பிதிர தேவனுக்குச் சொல்லினன். அதை இந்திரன் சூரசேன மகாராஜனுக்குச் சொன்னான்.

சமி மந்தார வுற்பத்திப் படலம் முற்றிற்று.

---

† பிராணவாயுவைக் கும்பித்தலாவது: வாசியோக முடையார் மூச்சை ரேசகபூரகஞ் செய்தபின்னர் தம்பித்திருப்பது. இது அட்டயோகத் தொன்றாகிய நிதித்தியாசனமாம். ‡ அவி - தேவருணவு.

# தேவர்கள் சாபந்தீர்த்த படலம்.

கொன்னு மாணவ மாயைகா மியங்களைக் குமைத்து
மன்னும் வீடருண் மழவிளங் களிற்றிறை முடியிற்
றுன்னு பாசடை வன்னியின் றுகளறு மேன்மை
யின்னுங் கேளென விபம்புவா னிருங்கிச் சமதன்.

கேட்டல், தெளிதல், நிட்டைகூடலென்னு மூவகைச்சுற்றத் தோடும், சாத்திர வுணர்ச்சி, சாதுசங்க மென்னுஞ் சீலத்தோடும் சிவபத்தியென்னும் பேருவகையோடும், கரணேந்திரியங்களெல்லாஞ் சிவவடிவாக விளங்கப்பெற்று சிவஞான மென்னும் பெரும்போகத் தைப் பரிபாலனஞ்செய்யும் ஓ சவுனகாதி முனிவர்களே! விநாயக மூர்த்திக்குரிய வன்னியும், மந்தாரமும் உற்பவித்த வரலாற்றினைச் சொன்னோம். இப்பால் அவ்வன்னியருச்சனையைச் சொல்லுவோம் கேட்பீர்களாக. தேவேந்திரன் பின்னுஞ் சூரசேன மகாராசனை நோக்கி, அரசனே! கிருச்சமத முனிவா கிர்த்தியென்பவட்கு மற் றொருகதையும் சொன்னதாகச் சிவபிரான் உமையவட்குத் திரு வாய் மலர்ந்தருளியபடி பிதிர் தேவனுக்குப் பிரமதேவன் சொல்லு வதாவது:

முன்னொரு காலத்தில் பிரமனென்னவன் தனது பத்தினிமார்கள் இரண்டுபேருள் சாவித்திரியை வீட்டிலிருத்திக் * காயத்திரியை யழைத்துக்கொண்டு கையவரைச் சாரலை யடுத்து, † அட்டபுயா சலங்களை வீசி ஆனந்த நிருத்தஞ் செய்கின்ற சதாசிவமூர்த்தியைப் பாவித்துத் தேவர்களெல்லாம புடைசூழும்படியாக ஓர் சிறந்தவேள் வியைச் செய்வதாயினன் அப்போது பிள்ளை மதியையும், வெள்ளை யறுகையும் புனைந்த சடா மகுடத்தினையுடைய கணேசமூர்த்தியை வழிபடாமல வேள்வியைச் செய்ய யத்தனித்த குறைவால் சாவித்தி ரியானவள் தன்னை மாத்திரம் வீட்டிலிருத்திக் காயத்திரியோடு சென்று வேள்வியைச்செய்து வருவதைக்கண்டு மனமழுங்கிச் சொ ல்வதற்கரிய வெகுளியோடும் யாகசாலையை யடுத்து திருமால் இந்தி ரன் முதலிய தேவர்களைக்கண்டு, எனது நாயகன் என்னையன்றி செய்து வருகின்ற யாகத்திற்கு நீங்கள் யாவரும் உடன் பட்டிருந் தீர்கள். ஆதலால் இந்நிமிடத்தில் நீங்கள் வெவ்வேறே சலவுருவாகக்

* காயத்திரி-சரஸ்வதி. † அட்டபுயாசலம் - எட்டு புயங்களாகிய மலை கள். இதனை "எண்டோள்வீசி நின்றாடும் பிரான்" என்பதனாலு மறிக.

கடவதென்று சபித்தனள். உடனே அவளது கோபசாபத்தினால் திருமான்முதலியயாவரும் வெவ்வேறே சலவடிவாகிச் சுழிசுழித்து அளவற்ற அலைகளைப் பரப்பி யாகசாலை முழுவதும் வெள்ளமாகிப் பரந்து அங்கு வைத்திருந்த எல்லாப் பொருள்களையுந் தழுவி யொழுகிக் கொண்டிருந்தார்கள். இவ்வாறு யாகத்திற்கு வந்த திருமான் முதலிய தலைவர்களெல்லாஞ் சலவடிவாய்ப்போனதைஅவ்வவர் மனைவியர்கள் கேட்டுமனங்கலங்கி, இலக்குமி முதலிய எல்லா மாதர்களுஞ் சையவரைச் சாரலையடுத்து பிரமனைக் கண்டு, ஆ! ஆ! நீர்செய்யுங்காரிய மிகநன்று. நீர் யாகத்திறகுத்தீயை வளர்ப்பவர்போல உமதுபத்தினிக்குக் கோபத்தீயை யுண்டாக்கி எங்கள் தலைவர்கட்கெல்லாந் தண்ணீர் வடிவைக் கொடுத்து எமதுவயிற்றினுள் தீயைவளர்த்துக் கொதிக்க விட்டீர். இனி அவர்கள் தண்ணீர வடிவம் மாறுதற்குயாது சொல்லுகின்றீ ரென்றார்கள்.

அதற்குப் பிரமன் ஒன்றுந் தோன்றாதவனாகி அவர்கட்குஇனியவார்த்தைகளைக் கூறி, நீங்கள் சிறிதுமாத்திரம் பொறுத்திருங்கள். விரைவில்அது மாறவேண்டிய முயற்சிகளைசசெய்து உங்கள்வருத்தத்தை யெல்லாம் ஒழித்துவிடுகின்றே மென்று திடஞ்சொல்லி உமாபர மேஸ்வரி மணாளராகிய சிவபிரானை மனதிலிருத்தி அரிய தவத்தி லிருந்தனன். அத்தவத்திற்குச் சதுர்வேதங்களாலுங் காண்டற் கருமைய ராகிய சிவ பெருமான் கிருபை சுரந்து அவனெவ்வாறு தம்மைப்பாவித்தானோ அவ்வாறே அவனெதிரிற்பார்பதி சமேதராயெழுந்தருளி இடபவாகன ரூடராய்க் காட்சி கொடுத்தனர். உடனே பிரமனெழுந்து யமனுயிரை வாட்டிய அவரது பாத பதுமங்களைப் பணிந்தெழுந்து கற்பக மலராதிகளா லருச்சனை செய்து சுவாமீ! தேவர்கள் முதலியோ ரடைந்திருக்கின்ற தண்ணீர் வடிவை மாற்றியருளவேண்டுமென்று பிரார்த்திக்க அதற்குக் கர்த்தன் புன்னகை கொண்டு, பிரமனே ! கணேச மூர்த்தியினுடைய கோபந் தணியும்படி அவரைப் பூசனைசெய்யக் கடவை. நீயாகஞ் செய்ய ஆரம்பித்தபோது முதலில் அவரைப் பூசனைசெய்திருப்பையாயின் இவ்விதசாபம் யாருக்கும் நேராது, உனது வேள்வியும் ஓரிடையூறுறாது. அவரைச் சிறிதும் மனத்தின்க ணினைத்தனை யில்லை. ஆதலால் இவ்வித ஆபத்துகள் வந்து நேர்ந்தன வென்று திருவாய் மலர்ந்துதமது திருவுருவைக் கரந்தருளினார்.

இப்பால் பிரமன் கர்த்த னெழுந்தருளிய திசையைப் புலமுற வணங்கித் தனது மனக்கோட்டத்தினையொழித்துத் திருமான்

முதலாயினோருடைய பத்தினிகளைக் கூவிஉங்கள் தலைவர்க்குண்டா
கிய சாபம் ஒழியுங்காலம் நேரிட்டது, நீங்கள் யாவரும்விரைந்து
கணேச மூர்த்தியை உள்ளன்போடும் பூசனைசெய்யக் கடவீர்கள்
என்று செப்பினள். அதனைக்கேட்ட மாதர்க ளெல்லாம் உய்ந்
தோம் உய்ந்தோமென்று மகிழ்ச்சியுற்று, கருடை தேயத்திலே மந்
தாரதருத்தி னிழலிலே முன்னொரு காலத்தில் அரக்கர் குறும்பினை
யடக்குமாறு மகாவிஷ்ணுவினாற் றாபித்துப் பூசிக்கப்பெற்றிருக்கின்
றவக்கிரதுண்டவிநாயகரையடுத்து, சிலபேர்,பால் தயிர் முதலியவை
களைக்கொண்டு அபிஷேகித்தார்கள். சிலபேர் பரிமளமிகுந்தபுட்பங்
களைக்கொண்டு அருச்சித்தார்கள். சிலபேர் ஏகாட்சர முதலியமந்
திரங்களைச் செபித்தார்கள். சிலபேர் வேததாகமமாதிகளாற் றுதித்
தார்கள். சிலபேர் அட்டாங்க பஞ்சாங்கமுதலிய வணக்கத்துடன்
பணிந்தார்கள். சிலபேர் ஆனந்த பரவசங்கொண்டு முறைமைப்படி
ஆலய பிரதக்ஷணஞ்செய்து நடித்தார்கள். அவ்வாறுயாவரும் ஒவ்
வொருசெயல்களைக் கொண்டு மந்தார நிழலில் வீற்றிருக்கின்ற க
ணேச மூர்த்திக்கு நெடுநாள்வரையில் அன்புசெய்துவந்தும் தங்க
ளெண்ணம் நிறைவேறுதவர்களாய்ப் பின்னர் யாவரும் ஒருமிக்கக்
கூடி, இதுகாறுங் கணேசமூர்த்தி நம்பாலெழுந்தருள வில்லை ஆக
லால் நாம் செய்து வருகின்ற தவங்களில யாதேனுங் குறைநேர்ந்த
தோவென்று மனங்கலங்கியிருக்கின்றசமயத்தில், விநாயகமூர்த்தி
யை வன்னிப் பத்திரத்தால பூசிக்கக்கடவீர்களென்று அசரீரியாக
ஒருவாக்கு ஆகாயத்தின்க ணுண்டாயது அதனை அம்மாதர்கள்
கேட்டு அவ்வாறே சிலநாள்வரையில் அருச்சனைசெய்தார்கள். அ
தற்கு எமது ஆணவக்குறும்பை நீக்கிஆட்கொள்ளவல்ல விநாயக
மூர்த்திக்குக் கிருபைசுரந்து மூஷிகவாகனத்தின்மீது அவர்களெதி
ரிற் பிரத்தியட்ச மாயினர் உடனே யாவரும் ஆனந்தசாகரத்தில்
மூழ்கி, அனந்தமுறை சாஷ்டாங்கமாக வந்தனஞ்செய்து துதித்

* அட்டாங்க பஞ்சாங்கமுதலிய வணக்க மெனவே, ஏகாங்கம். துவிதா
ங்கம், திரிவிதாங்கம, பஞ்சாங்கம, சாஷ்டாங்கம, அஷ்டாங்கம்எனும் வணக்
கங்களை எனக் கொளக. இவற்றுள்ஏகாங்கமாவது; சிரசால்மாத்திரம் வணங்
குவது; துவிதாங்கமாவது; சிரசின்மேல் வலக்கரத்தைக் குவித்து வணங்கு
வது. திரிவிதாங்கமாவது: இரண்டுகைகளையும சிரசின்மேற் குவித்துவணங
குவது. பஞ்சாக மாவது: சிரம்-க, கை-உ, முழந்தாள்-உ ஆக ஐந்து அங்க
மும் பூமியிற் படும்படி வணங்குவது. அஷ்டாங்கமாவது: சிரம்-க, கை-உ
முழந்தாள்-உ, காது-உ, நெற்றி-க ஆகஅட்டாங்கமும்பூமியிற்படும்படி வணங்
குவது என்ப.

தார்கள். பின்னர் விநாயகக்கடவுள் அம்மாதர்கட் கெல்லாஞ் சல வுருவினை மாற்றி அவ்வவர்களுள்ளமே ஆலயமாகக்கொண்டு வீற்றி ருந்தனர். இப்பால் தேவர்களெல்லாம் மற்றொரு மந்தாரமர நீழ லில் விநாயக மூர்த்தியைப் பிரதிட்டை செய்து குளிர்ச்சி பொருந் திய வன்னிப்பத்திரத்தால் அருச்சனைபுரிந்து அனந்தமுறை வேதா கமங்களாற் றுதிசெய்து, அம்மூர்த்திக்கு ஏரம்ப விநாயகரென்று திருநாமஞ்சாற்றித் தங்கடங்கள் பதிகளைச்சேர்ந்து வாழ்ந்திருந்த னர். தேவேந்திரன் தனது சோலையிலிருக்கின்ற மந்தாரமரத்தடியில் விநாயகமூர்த்தியை ஸ்தாபித்துப் பூசித்தனன். ஏனையோருந்தங்க டங்கள்மனையில் மந்தாரவிருட்சத்தைஉண்டாக்கி அதனடியிற்க ணேசமூர்த்தியைப் பிரதிட்டைசெய்து பூசித்தனர். பிரமதேவன் விநாயகமூர்த்தியை பன்னிரண்டு வருடமவரையில் வன்னிப் பத்தி ரத்தா லருச்சித்து அவர் பெருங்கருணையால் சாவித்திரியினுடைய மனக்குறையை நீக்கிப பின்ன ரவளையுங் கூட வைத்துக்கொண்டு முன் தொடங்கியயாகத்தை மீட்டுந்தொடங்கி நிறைவேற்றிச் சகல சந்தோஷத்துடன்தனது சத்தியலோகம் போய்ச்சேர்ந்தனன்.

பால்போலும் இனியசொல்லைவாய்ந்தபார்வதியே! வன்னிப்பத் திரத்தினுடையமகிமை இவ்வாறாகும். இன்னுமதன் பெருமையைப் பெரியோர்கள் சொல்லப்புகின் மேலுமேலும்வளரும். புலையர்களா யினுங் காலையிலெழுந்து அவ்வன்னி விருக்கத்தைத்தரிசிப்பார்களா யின் உடனேசகலபாபங்களு மொழிந்து பிராமண குலத்திற் பிறப் பார்கள். அவ்வாறு பிராமணர் தரிசிப்பார்களாயின வேதாந்த ரகசி யங்க ளனைத்தையு முணர்ந்து மெய்ஞ்ஞானியாவார்கள் * க்ஷத்திரி யர் தரிசித்தால் இவ்வுலகத்தைமுழுவதையுந் தமது ஆக்ஞாசக்கரத்து ளடக்குவார்கள். வைசியர் தரிசித்தால்நிறைந்த செல்வத்தைப் பெ றுவார்கள். சூத்திரர் தரிசித்தால மேலான கதியை யடைவார்கள். ஆதலால் கணேசமூர்த்தியை அவ்வன்னிப் பத்திரத்தால் இன்னும் அருச்சிப்பையெனில உனதுஇஷ்ட காமியார்த்தங்கள் உடனேசித் தியாகும் என்றுகூறினர்.

ஓ மலையரையன் புத்திரியே! கீர்த்தியென்பவள் கிருச்சமத மு னிவரைமீளவுந் தொழுதெழுந்து, சுவாமி! அடியாள் புதல்வனாகிய இக்கிப்பிரப் பிரசாதனுக்கு எக்காலத்தும் ஓரிடையூறும் நெருங்கா மல் எல்லாவுலகமும் இவனுக்கேவல் செய்யும்படியாக கணேசமூர்த்

* க்ஷத்திரியர்(க்ஷத்திரியர் உடையோர்) அரசர்.

தியினுடைய திருமந்திரங்களில் செபித்தற் கெளிதாகியும் விரைவிற் பயனைத் தருவதாகியு மிராநின்ற ஓர்மந்திரத்தை இவனுக் குபதேசித்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்துகொண்டனள் அதற்கு அக்கிருச்சமத முனிவரிசைந்து அவனைக் குளித்து வருமாறு கட்டளையிட்டு, அவ்வாறு குளித்து வந்தவுடன் விநாயக மூர்த்தியினுடைய நாலெழுத்துள்ள மந்திரத்தை யுபதேசித்து அதனையனுட்டிக்கு முறைமையினையுந் தெருட்டி, இமமந்திரததைக் காசித்தலத்திலெழுந்தருளியிருக்கின்ற துண்டி விநாயகர் சந்நிதியிற் சென்று செபிக்கக்கடவை யென்று சொல்லினர்.

என்று கீர்த்தி யென்பவட்குக் கிருச்சமதமுனிவர் சொன்னதாகச் சிவபிரான் உமையவட்குச சொலலியபடி பிரமதேவன்பிதிர்தேவனுக்குச் சொல்லினன் அதைததேவேந்திரன் சூரசேனமகாராசனுக்குச் சொன்னான்.

தேவாகள் சாபந் தீர்த்த படலம முற்றிற்று.

கிப்பிரப் பிரசாதன்

## வரம்பெறுபடலம்.

அருளுந் துண்டி விநாயகனு ரமாநத காசித் தனிநகரின், பெருமை யருள வேண்டுமெனப் பெயர்த்துங்கீர்த்தி வணங்கினு, ளொருவிப் பொறியைந் தையுந ரவமே யுளுற்றுங் கிருச்ச மதனவட்ப்கு, பொருவி லநத நகர்பபெருமை பொறபத் தொகுத்துத் தெருட்டுவான்.

ஓசவுனகாதி முனிவர்களே: தேவர்பத்தினிகள் வனனிப் பத்திரத்தால் விநாயகமூர்த்தியை யருச்சித்துத் தங்கள் தலைவர்களடைந்த சாபத்தை நிவிர்த்தி செய்துகொண்ட வரலாற்றினைச் சொன்னோம் இப்பால் கீர்த்தியின் புததிரனாகிய கிப்பிரப்பிரசாத னுபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக.

தேவேந்திரன் பின்னுஞ் சூரசேன மகாராசனைநோக்கி, அரசனே: சிவபிரானை உமையவள் மீளவுந் தொழுதெழுந்து, சுவாமி தேவரீரது கிருபையினுல் வன்னிப்பத்திரனுடைய மேன்மையையும் அஃது விநாயகமூர்த்திக்கு உவப்பாகியிருக்கின்றமையையுந் தெரிந்துகொண்டேன், இப்பால் அக்கீர்த்தியும் அவள்புத்திரனாகிய கிப்பி.

ரப் பிரசாதனும் எவ்வாறுயின ரென்றுகேட்க, அதற்குச் சிவபி ரான் விடைகொடுத்ததாகப் பிரமதேவன் பிதிர்தேவனுக்குச்சொல் லுவதாவது.

மேற்சொன்ன கீர்த்தியென்பாள் இருச்சமத முனிவர்பால் சடாக்கர வுபதேசம்பெற்று அதனை அனுட்டிக்குமாறு தம் ஆசி ரியரைப்பரவி சுவாமி! தேவரீர் உபதேசித்தருளிய மந்திரத்தைக் காசித்தலத்திற்சென்று துண்டிவிநாயகர் சந்நிதியிற் செபிக்கவேண் டுமென்று திருவாய்மலர்ந்தபடியால் இவ்வுலகிலுள்ள எல்லாத்தலங் களினுங் காசித்தலம் அவ்வளவு விசேடப்பட்டதென்ன? அதனை யும் அடியாட்குத் தெரிவித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்த னள். அதற்குப் பஞ்சேந்திரியங்களையும் நிக்கிரகித்த இருச்சமதமு னிவர் சொல்லுவார்: ஓ பெண்கள் சிகாமணியே! நால்வகைத்தோற் றம் எழுவகைப் பிறப்பு எண்பத்துநான்கு நூறாயிரம்யோனி பேதங் களினும் ஒருவன் மானுடயோனியிற் பிறக்கினும் அந்தணர் முத லிய நால்வகை வருணத்துள் பிறத்தலரிது, அந்நால்வகை வருணத் திற் பிறக்கினும் அறிவுடையோரா யிருத்தலரிது. அறிவுடையோ ராயிருக்கினும் பாசபந்தங்கள்நீங்கி பிரமஞானத்தையறிந்து எம தாண்டவருடைய திருவடிகளைச் சேர்தலரிது.

இன்ன வாறுதித் துபரியல பாளரே யன்றிச
சொன்ன யோனிக ளனைத்துநோ யாளர்துன மதியான்
மனனு நெறி நடப்பவ ருறுப்பிலா மறறு
நன்னர்வீடுற விச்சுவ நாதனா நாடி.

அனந்த மூர்த்தியாய்த் தீர்த்தமா யளவிலாத தலமா
யனந்த னேந்திய வுலகெலா மமாநதனா தாமே
யனந்த மாமறை மூவகை யுளுமரும் பயனென்
றனந்த மாகவோர் மூர்த்திதீர்த தந்தல மானர்.

இவ்வாறு எம தாண்டவருடைய திருவடிகளைச் சேரத்தக்க வர்களும் மேற்கூறிய யோனிபேதங்களிற் பிறப்பவர்களும் வியாதி யடைந்து வருத்தமுறுகின்றபேர்களும தற்புத்தியினாற் றன்மாரக் கடையிற் செல்லுகின்றவர்களும் அவயவபங்கமுற்றவர்களும எளி தில் முத்தியடையுமாறு மான், மழு, சதுர்ப்புஜ காளகண்ட, திரி சூல, பாலநேத்திர அவதாரியர் யெழுந்தருளி யிருக்கின்ற சிவபிரா

ருனவர் தாமே இவ்வுலக மெங்கணும் அனந்த மூர்த்திகளாகவும், அனந்த தலங்களாகவும், அனந்த தீர்த்தங்களாகவும், வதிந்திருக்கின்றனர்.

இவ்வாறு அனந்தமா யிருக்கின்ற மூர்த்தி, தலம், தீர்த்தம், என்னும் மூவகையுள்ளு முண்டாயிருக்கின்றபயனை ஒன்றனந்தமாகத் தருவதற்கு ஓரேமூர்த்தியும், ஓரேதலமும், ஓரே தீர்த்தமுமாக விருக்கின்றனர். அவை விசுவநாதரென்கிற மூர்த்தியும், அவிமுத்தமென்கிற தலமும், மணிகர்ணிகை என்கின்ற தீர்த்தமுமாம், அந்த அவிமுத்த மென்கின்ற காசிதலத்தி லெழுந்தருளிய விசுவநாதமூர்த்தியை ஒருகற்பத்தில் பிரமன்முதலிய மூவரும் வழிபட்டு சிருட்டிமுதலிய தொழில்களைப் பெற்றதன்றி மேலானவரங்களையும் பெற்றிருக்கின்றார்கள். இந்திரன்முதலிய திசைக்காவலரும் மற்றையதேவர், அசுரர், தானவர், உரகர்முதலிய யாவரும் ஒவ்வொரு காலங்களிற்பூசித்துத தங்கள் தங்கள் பதவிகளைநிலைபெறச் செய்து கொண்டாகள.

## மணி கர்ணிகையின் வரலாறு.

முன்னொருகாலத்தில் விண்டுவானவர் அத்தலத்திற் பூசை செய்துகொண் டிருக்கின்றபோது விசுவநாதமூர்த்திக்கு அபிஷேகிப் பதற்காகப பாதலலோகவரையில ஆழமுண்டாகும்படி ஓர்தடாகத்தைத தோண்டி அத்தடாகநீரைக் கொண்டு விசுவநாதமூர்த்திக் கபிஷேகித்து அதன கரையிற்றனே ஓரிடத்திலிருந்து அரியதவஞ்செய்து கொண்டிருநதனர். அதறகு விசுவநாதமூர்த்தி கிருபைசுரந்து உமையவள் சமேதராய் இடபவாகனத்தின்மீ தெழுந்தருளி அவரெதிரில் ஆகாயத்திற் பிரத்தியட்ச மாயினர். உடனே திருமாலானவர் விரைந்து அவரது திருவடிகளில் அனந்தமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து சோனைமழை பெய்ததுபோல அளவற்ற வேதாகமங்களாற் றுதித்துநின்றனர் அவரன்புக்கு விசுவநாதமூர்த்தி வியநது தமது திருமுடியைச் சிறிது அசைக்க, உடனே அவரதுசெவியி லணிந்திருநத உரகுண்டலத்தி னின்றும் ஒரு மணிபானதுசிதறி அத் தடாகத்திலவிழுந் தழுந்தியது. அதுமுதல் அத்தீர்த்தத்திற்கு மணிகர்ணிகை யெனனும் பெயருண்டாயது.

பின்னொரு காலத்தில் பகீரதன் ஆகாயகங்கையைக் கொண்டுவந்து அதில் விடுத்தனன். அதனால் பகீரதியென்கிறபெயரும் அத

ற்கு வழங்குகின்றது. ஆதலால் அத்தீர்த்தத்தில் வசித்திருக்கின்ற சீவசெந்துக்கள், அதிற்படர்ந்து வளர்கின்ற கொடிகள், மரங்கள், முதலியவைகளும் அதில்வீழ்ந்த எலும்பினையுடைய சீவராசிகளும் அதின்சலமானது மேலெறிக்கப்பட்ட மற்றெல்லா வுயிர்களும் முத்தியடையும் எந்தம் பரிபூரணமாய் நிறைந்திருக்கின்ற சிவபெருமான் அத்தலத்தில் எக்காலத்தும் நீங்காது வீற்றிருக்கின்றமையால், அங்கு சதாகாலமும் * தேவர்கள், முனிவர் முதலாயின கணங்களும் வசித்திருக்கின்றனர். மேலும் விசுவநாதருக் கிணையான மூர்த்தியும் மணிகர்ணிகைக் கிணையான தீர்த்தமும் காசிக்குக் கிணையாந்தலமும் மூவுலகங்களினுமில்லை. அக்காசி விசுவநாதர் சந்நிதியிலெழுந்தருளியிருக்கின்ற துண்டிவிநாயகமூர்த்தியை அளவற்ற தேவர்கள் வன்னி அறுகு மந்தாரை இவைகளினால் பூசித்துப் பெறுதற்கரிய மேலான வரங்களைப் பெற்றிருக்கின்றனர். கரம்பிறந்த கீர்த்தியோய்! முன்னொருகாலத்தில் இவ்விதிகாசத்தைச் சுப்பிரமணியக் கடவுள் அகத்தியமுனிவருக் குபதேசித்தனர். நீ மிகவுஞ் சித்தசுத்தியுடையவளாதலால் உனக்கு அதனை உபதேசித்தோம். இனிநீயும் உன்புதல்வனும் காசித்தலத்திற்குச் சென்று அங் கெழுந்தருளியிருக்கின்ற துண்டிவிநாயகருடைய திருவடிகளையடைந்து வன்னிப்பத்திரம், மந்தாரைமலர், அறுகம்புல் முதலியவைகளைக்கொண்டு அருச்சித்து, யாம்கூறிய நாலெழுத்துள்ள மந்திரத்தைச் செபித்து, நீங்கள் கருதியவரங்களைப் பெறக்கடவீர்க ளென்று விடைகொடுத்துத் தமதாசிரமத்தை நோக்கிச் சென்றனர். இப்பால் கீர்த்தியென்பவளும், அவள் புதல்வனும் பெருமகிழ்ச்சி கொண்டு உடனே இருவருங் காசித்தலத்தையடைந்து, மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து துண்டிவிநாயகருடைய திருவடிகளைப் பணிந்து, அதின்முழுவதும் ஆகாரத்தையும் நித்திரையையும் நீத்து, மாசிமாத அமரபட்ச சதுர்த்தசி வருகின்றவரையில் அத்தலத்திற்றானே வசித்திருந்து, பின்னர், அச்சதுர்த்தசி வந்ததும் அன்றுகாலையில் நித்திய நியமாதிகளை முடித்து நாலெழுத்துள்ள மந்திரத்தை வன்னிமரத்தடியி லிருந்து செபித்துச் சந்திரோதயமானவுடன் சகல திரவியங்களோடும் விநாயகமூர்த்தியை வழிப்பட்டு அறுகு வன்னி மந்தாரம் இவைகளினால் அருச்சனை புரிந்து அவரது திருவுருவங்களை மனதில் தியானஞ்செய்துகொண்டிருந்தனர். அதற்கு விநாயகமூர்த்தி கிருபை கூர்ந்து ஐந்து முகங்களும், பத்துக் கரங்களுமுடையவராய், சிங்கவாகனமூர்ந்து, அவர்களெதி

ரிற் பிரத்தியட்சமாயினர். உடனே கீர்த்தியானவள் தனது மைந்தனோடும் பணிந்தெழுந்து, ஓ தேவ தேவோத்தமராகிய துண்டிவிநாயகமூர்த்தியே! பிரமனாதிய மூவருக்கும் முத்தொழி லளித்தவரே! ஆதிமத்தியாந்த ரகிதமா யிராநின்ற கடவுளே! தேவரீரது பெருங்கருணையால் அடியேங்கள் மேலாகிய தவத்தினையுடையவர்களாயினோம். யாங்கள் பல பிறவிகடோறுஞ் செய்துவந்த பாவங்களனைத்துமப் போயின. எல்லாப் பயன்களையும் எளிதிற் பெற்றனம். தேவரீருடைய பேரருளால் நிலைபெற்றிருக்க வுதித்த எனது மைந்தனாகிய இவனுக்கு எனதுமாற்றா ளூட்டியவிடத்தைத் தேவரீர் பெருங்கருணையால் கிருச்சமதமுனிவர் தீர்த்துமீட்டும் உயிரையளித்தனர் இனி இப்புத்திரன எக்காலத்தும் ஓர் இடையூறுனும் வருந்தாமல் தீர்க்காயுள், கலவி, செல்வமுதலானவைகளைப்பெற்று, யாவருக்குந் தலைமையாயிருக்கத் தக்க மேன்மையும், பகையாயினரும் ஏவல்செய்யத்தக்க பரிசும், அடவற்ற போகங்களை பொருந்திவாழும்படியானவரமுந் தேவரீர் கடாட்சித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கு விநாயகப் பெருமான் கிருபைசுரந்து, அவள்கருதிய எல்லாவரங்களையுந் தந்து, அன்பிற்சிறந்த அரிவையே! உனது புதல்வனாகிய இவன் இவ்வுலகத்தில் ஆயிரம்வருடம்வரையி லுயிர்பெற்றிருந்து ஆயிரம் * மகங்கள்செய்து, அந்தியகாலத்தில தத்துவஞானத்தை யுணர்ந்து, நம்மைச்சேருவானென்று திருவாய்மலர்ந்து அப புதல்வன்கரத்தில் மூவுலத்தாரு மஞ்சத்தக்க வச்சிராயுதத்தினை யளித்து, அவனுக்குப் பரசுபாணியென்னும் ஓர் நாமமுந்தந்து யதாப்பிரகாரந் துண்டிவிநாயகமூர்த்தி தமதுருவைக் கரந்தருளினர்.

இப்பால் கீர்த்தியும் அவள்புத்திரனும் மறுநாள்காலையி லெழுந்து கங்கையில ஸ்நானஞ்செய்து துண்டிவிநாயக மூர்த்தியைப் பேரன்பினோடும் பூசித்து விடைபெற்று, அக் காசித்தலத்தைவிட்டுப் பிரிவதற்கு மனமில்லாமற் பிரிந்து வழிக்கொண்டு அனந்த அடவிகளைக் கடந்து தனதுநாயகன் அரசாட்சிசெய்திருக்கின்ற பலவகை வளப்பங்க ளமைந்த கன்னமாபுரிக்குச் சமீபமாயினர். அதை அவ்வரசனறிந்து உடனே அவர்களை யழைத்துவருமாறு மந்திரிகளை ஏவினன். அவர்களும் இப்பூதலத்துஞ்செய்த பாக்கியமே வந்ததென்று மனங்களித்துப் புஷ்பங்களாலும், மணிகளாலும்

* மகம் - யாகம்.

வீதிகளெல்லாம் அலங்கரித்து எண்ணற்ற வரிசைகளோடும் எதிர்கொண்டுசெல்லக் கீர்த்தி சிவிகையின்மீதும், க்ஷிப்பிரப்பிரசாதன் யானையின்மீதும், ஆரோகணித்து வீதிகள்யாவுங் கடந்து தமது அரண்மனையிற் பிரவேசித்து இருவரும் பிரியவிரதனுடைய பாதங்களிற் பணிந்தெழுந்தனர். உடனே அவ்வரசன் ஆனந்தவாரியின் மூழ்கினவனுய்த் தனது இரண்டுகரங்களாலும புத்திரனைத்தழுவியெடுத்து அவனைத் தன் மடிமீதிருத்தி அவர்கள் வெளியேசென்றது முதல் நடந்த செய்திகளையெல்லாங் கீர்த்தியாற் சொல்லிவரக் கேட்டு அம்மூவரும் அளவளாவிய அன்பினேடும் ஆனந்தசாகரத்திற் றிளைத்து வாழ்ந்து வந்தனர்.

அந்நாளையில் பிரியவிரதனனவன் தனது குமாரனுகிய பரசுபாணிக்குப் பட்டாபிஷேகஞ்செய்து தன தரசுரிமையை அவன் தோளிலிறக்கி மிக்க சித்தசுத்தியோடும் வனத்திற்சென்று தவஞ்செய்துகொண்டிருந்தனன். பின்னர் அதன்புதல்வன் ஒளிவீசுகின்றமணியினல் விநாயகமூர்த்தியினுடைய திருவுருவஞ் சமைத்து அதைத் தனது கண்டத்தி லணிந்துகொண்டு * சகஸ்திரயாகங்களைக் குறைவிலாமல்முடித்து, சகஸ்திரவருடபரியந்தந் தனதரசாட்சியைத் திசையனைத்திினுஞ்செலுத்தி, அந்தியகாலத்தில் எரம்பருடைய கிருபாகடாட்சத்தினுற் றெய்வ விமானம்வர அதில் ஆரோகணித்து விநாயகலோகத்திற்சென்று அனந்த கற்பகாலம்வரையில் அங்ஙனேயிருந்து, எல்லாப்போகங்களையும் இடையூறின்றி யனுபவித்து, முடிவில் பேரின்பமுத்தியினையு மடைந்தனன்.

ஏ பார்வதி! விநாயகமூர்த்திக்கு வன்னிப்பத்திரத்தில் விழைவுண்டான காரணத்தையும், அவ்வன்னி வரம்பெற்றிருக்கின்றமையுஞ் சொன்னேம. அவ் விநாயகமூர்த்தியையும, நன்மையும்வேருக நினையற்க. அவ்வன்னிப்பத்திரம் அவருக் கிஷ்டமாகியதால் யாமும் அதனை அணிந்துகொண்டனம் அப்பத்திரத்தால் எம்மைப் பிராமணர்க ளருச்சிப்பார்களாயின் சாயுச்சியபதவியை யடைவார்கள். க்ஷத்திரியரருச்சித்தால் சாரூபபதவியை யடைவார்கள். வைசியரருச்சித்தால் சாமீபபதவியை யடைவார்கள். சூத்திர ரருச்சித்தால் சாலோகபதவியை யடைவார்கள். என்று சிவபெருமான் உமாதேவிக்குத் திருவாய்மலர்ந்தருளி யிருக்கிறமையால், அறுகினை

* சகஸ்திரம் - ஆயிரம்.

விடில் வன்னிப்பத்திரத்தினாலாவது மந்தாரமலரினாலாவது விநாயக மூர்த்தியை யருச்சிக்கவேண்டும். என்று பிரமதேவன் பிதிர்தேவனுக்குச் சொன்னதாகத் தேவேந்திரன் சூரசேனமஹாராசனுக்குச் சொன்னான்.

கிப்பிரப்பிரசாதன் வரம்பெறு படலம்-முற்றிற்று



# கிருதவீரியன் மகப்பெறு படலம்.



மகிடவிழ்பங் கயத்தவிசின் வானவன்சங் கடசதுர்த்தித்
திடமுறுமேன்மைகளபலவுந் தெளியவுரைத் திடக்கேட்ட
கடவுளனு மொருபிதிரன் கைதொழுது விரதத்தை
நடவியபின் முடிக்குமவகை நவிற்றுகென வவனவில்வான்.

நித்யானந்தமே அறிவாகி மாதவசீலமுற்ற முனிவர்களே கிப்பிரப்பிரசாதன் விநாயகமூர்த்தியை வன்னி மந்தாரை அறுகு இவைகளாலருச்சித்து அளவற்ற வரங்களைப்பெற்ற வரலாற்றினைச் சொன்னோம் இப்பால் கிருதவீரியன உபாசித்த திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக.

தேவேந்திரன் பின்னுஞ் சூரசேனமகாராசனை நோக்கிச்சொல்லுவான் அரசனே? பிரமதேவனாற் சங்கட சதுர்த்திவிரதத்தின் பெருமைகளையெல்லாந் தெளிவுபெறக் கேட்ட பிதிர்தேவன் மீளவும் அவனைப் பணிந்தெழுந்து, சுவாமீ? அவ்விரதத்தை முடித்த பின்பு நடத்தவேண்டிய முறைமை யாதோ அதனையுந் தேவரீர்திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன், அதற்குப்பிரமனிசைந்து, அன்பனே? அவ்விரதத்தினைத் தொடங்கிய திங்களிலாவது, ஐந்தாந்திங்களிலாவது, ஏழாந்திங்களிலாவது, வருகின்ற சதுர்த்தியில் மேற்கூடியபடி ஓர்கலசம் ஸ்தாபித்து, அதன்மீது ஓர் தட்டையிருத்தி, அதன்மீது வஸ்திரத்தைவிரித்து, அதன்மீது யந்திரம்வைத்து, அதன்மீது சித்திபுத்தி சமேதராயிருக்கின்ற கணேசமூர்த்தியைப் பொன்னாற்செய்தமைத்து, வேதாகம முறைப்படி பூசித்து பதினாயிரம், ஐயாயிரம், ஓராயிரம், நூற்றெட்டு என்னுந் தொகையில தனக்கியன்றமட்டு ஆகுதிகொடுத்து, குருமணி என்னைத் தானஞ்செய்தல் வேண்டும், பொருளுடையோனாயின் கோதா

னமுதலியவைகளையுஞ் செய்தல்வேண்டும். அந்தணர் இருபத்தொருபேருக்கு அன்னதானஞ்செய்து, விநாயகமூர்த்தியை மனதிற் றியானித்து, அவர்களருந்தி மிகுந்த சேடத்தைத் தானருந்தல்வேண்டும். பின்னர் அவ்வியந்திரத்தையும், உருவத்தையும் ஆசிரியருக்குத் தானஞ்செய்தல்வேண்டும் இந்தக் கிரமத்தின்படிசெய்தால் அவ்விரதபலன் ஈடேறிவரும்.

இவ்விரதத்தை உமாதேவியார் ஆறுமாதமநுட்டித்துச் சர்வாநுக்கிரக சாக்ஷாத் சிவபிரானுடைய இடபாகத்தை யடைந்தனர். தமயந்தி யென்பவள் நாலுமாத மநுட்டித்து வனத்திற் சஞ்சரித்திருந்த தன்கணவனாகிய நளராசன்மீட்டுந் தன்னிடத்து வரப்பெற்றனள். அகத்தியமுனிவர் மூன்றுமாத மனுட்டித்துக் கடல்நீரையெல்லாந் தமதுகரத்திலடக்கி யுண்டனர். கிருஷ்ணமூர்த்தி ஓரோநாளனுட்டித்து வாணாசுரன் ஆவியையுண்டு வெற்றிகொண்டனர். இதுவன்றி இவ்விரதத்தை யானும் விண்டு இந்திரன்முதலிய எல்லாத்தேவர்களும் இடையூறுற்றகாலத்தி லெல்லாம் அனந்தமுறையனுட்டித்து வேண்டியவரங்களைப் பெற்றனம். கொன்றைப்பூமாலையைத்தரித்த யானைமுகக்கடவுள் விரதத்தினைப்போல மேலாகிய பயனைத்தரும் விரதம் ஒன்றுமில்லை, இதனை நன்றாய்க் கவனிக்கக்கடவையென்று பிரமன்சொல்ல, பிதிர்தேவன் பேரானந்தங்கொண்டு, அடியேனும் அடியேனுடைய வமசமும் ஈடேறினேமென்று பலமுறை துதித்து, மீட்டுந் தொழுதெழுந்து விடைபெற்று, தனக்குப் பிரமதேவனுரைத்த சங்கடசதுர்த்தி விரதமுதலான சகலமகத்துவங்களையும் ஓர் புத்தகத்திலெழுதி, யானைகள் திரியும்படியான காட்டில் மலமென்கின்ற யானையையடக்கித் தவஞ்செய்திருக்கின்ற தனது புதல்வனாகிய கிருதவீரியனுடைய கனவிற்சென்று அந்தப்புத்தகத்தை அவன்கையிற்றந்து, மைந்தனே? இப்புத்தகத்தில் விநாயகமூர்த்தியினுடைய மேலானவிரத மெழுதி யிருக்கின்றது, இதனை அந்தணர்களால் வாசிப்பித்தறிந்து அவ்வாறே விரதமநுட்டிப்பையாயின் உனக்குப் புத்திரசம்பத் துண்டாகுமென்று சொல்லித் தனதுலோகமபோய்ச் சேர்ந்தனன்.

உடனே கிருதவீரியன் விழித்துகனவிற்கண்ட தந்தையை கனவிற்காணாதவனாய் வருந்தித் தமது கையிலமர்ந்திருக்கின்ற புத்தகத்தைக் கண்டு அத்தியந்த சந்தோஷங் கொண்டு அதுகாறுந் தான் கொண்டிருந்த மனக்கவலையையும், சந்தானத்திற்கு தடையாயிருந்த பாவங்களையும், சத்துருக்களா லுண்டான பழியையும், சரீ

ரத்தா லடைந்திருந்த வருத்தத்தையும் ஒழிந்தவனாய் உடனே தனது சமீபத்திற் றவஞ்செய்திருந்த மனிவியைக்கூவி அவளுடன் மான்கண்ட கனவினைக்கூறிப் பின்னர் அவ்வனத்தைவிட்டு, நகரத்தினையடைந்து தனது மந்திரி முதலாயினோருக்கும் அதனைத் தெரிவித்து பிராமணர்களைக் கூவித் தெய்வீக முள்ள அப் புத்தகத்தை அவர்கள் கையிற் றந்து வாசிக்கச் சொல்லினன். அதை யவர்களேற்றுச் சோடச வுபசாரங்களோடும் பூசித்து அதன் காப்பை யவிழ்த்து வாசித்து, ஓ பூலோகசக்ரேஸ்வரா? இதில் விநாயக மூலர்த்தியினுடைய விரதத்தைப் பிரமதேவன் சொல்ல எழுதியாதாயிருக்கின்றது. யாங்கள் இதுகாறும எவ்விடத்திலும் இவ்விரதத்தினைக் கேட்டதில்லை. எப்போது உமது தபோமகிமையாயில் யாங்க ளறியலாயினோம்: என்று தங்கள் தங்கள் உள்ளன்பினோடும் அவனைக் கொண்டாடி அப் புத்தகத்தை அவன்கையிற் றந்து விடை கொண்டு போயினர்.

# விநாயகபூஜாரம்பம்.

இப்பால் கிருதவீரியன் விரதகாலஞ் சமீபித்ததலை யுணர்ந்து தனது குலக்குருவாகிய அத்திரி மகாமுனிவரை யழைத்து அபிடேகத்திற்குரிய திரவியங்களையும், அருச்சித்தற்கேற்ற மலர்களையும், நிவேதனத்திற்குத் தக்க பதார்த்தங்களையும் தூபதீபங்கட்கு வேண்டிய பொருள்களையும் தெரிந்து, ஏவலாளரைக் கூவி பூஜாதிரவியங்களைச் சேகரிக்குமாறு ஆக்ஞாபித்தனன். அவ்வாறே அவ்வேவலாளர்கள் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு பற்பல இடங்கட்குச் சென்று, அவ்வவ் விடங்களிற்கிடைத்தற் கரியதும், யாவராலும் மதித்தற்கரியதும், விரும்பற்பாலதும் விலைகொடுத்துக்கொள்ளற் கேலாததுமாயுள்ள, மிக அற்புதமான திரவியங்களைக் கொண்டு வந்து நிரப்பி, அவைகளைத் தனித்தனியாக வேறுபடுத்தி, ஆராய்ந்து, பழுதுபார்த்துச் சித்தப் படுத்திய பின்னர், ஓர்நவரத்தினமயமான மண்டபம் அலங்காரம் செய்து முற்று வித்தார்கள்.

பின்னர் கிருதவீரியன் தான் குறித்திருந்த மாசிமாதம் கிருஷ்ணபக்ஷ அங்காரக சதுர்த்தசி வருதலும் அன்றுதயத்தி லெழுந்து மிக்க மனக்களிப்புடன் ஸ்நானாதி, கிரமப்படி விபூதியணிந்து உருத்திராக்ஷம்பூண்டு நித்திய கரும முடித்து, நியமமுடையவராய் பரி

சுத்தமான இடத்திற் சென்று, மிருத்திகை=(மண்) எடுத்துவந்து அதில், வேர்கள், செல்முதலிய சென்துக்கள், கற்கள் முதலானவை இல்லா வண்ணம் சோதித்துப் பிசைந்து, பதப்படுத்திச் சிற்பசாத்திரத்திற் கூறியவாறு விநாயக மூர்த்தியின் * திருவுருவம் அமைத்து, பொன்னினாலும் அவ்வாறே ஓர்திருவுருவம் அமைத்துவைத்துக் கொண்டு, ஆதிசைவ வேதியர்களை வரவழைத்து வேதபாராயணம் செய்யச்செய்து, அவவாதி சைவர்கள் மத்தியில் இருந்துகொண்டு. சிவாகம முறைப்படி சிரசாதி பாதம்வரையில் † நியாசம்செய்து ஆசமனம், பிராணாயாமம், பூசுத்தி முதலானவைகளை நடாத்தி,

சங்கற்பம்.

ஏவங்குண விசேஷண, விசிஷ்டாயாம், சுபதிதௌ. அஸ்மாகம் சஹகுடும்பானாம், க்ஷேமஸ்தைர்ய,விஜய ஆயுராரோக்கிய, ஐஸ்வர்யாணாம், உத்தரோத்தராபி வ்ருத்யர்த்தம், தர்மார்த்த காமமோக்ஷ, சதுர்வித பலபுருஷார்த்தஸித்யர்த்தம், ஸ்ரீசங்கட ஹரணகணபதி ப்ரீதியார்த்தம் கல்போக்தப்பகாரேண, பூஜாங்கரிஷ்யே,

என்று சங்கற்பங் கூறி, சந்தன மரத்தாலாகிய ஓர் வேதிகையை வைத்து அதன்மீது தண்டுலம் பரப்பி, அதன் மீது சொர்ணவத்திரம் ஒன்றைவிரித்து, அதன்மீது இழைசுற்றி நீர்நிரப்பிஇருக்கின்ற பொற்கும்பத்தை ஸ்தாபித்து, அதில் இத்தி, ஆல, அரசு, மா, நாவல் என்னும் பஞ்சதளிர்களையும், சுகந்தி, பொன், மரகதம், மாணிக்கம், முத்து, என்னும் பஞ்சரத்தினங்களையும்பெய்து, அக்கும்பத்திற்குச் சந்தனம், புட்பம், அக்ஷதை முதலானவைகளைச் சாத்தி,

கலச பூஜை.

"கலசஸ்ய முகேவிஷ்ணு, கண்டேருத்ரஸ்மாஸ்ரத, மூலேதத்ரஸ்திதோப்பிரம்ஹா, மத்யேமாத்ர கணஸ்மிர்தா, குக்ஷோது சாகராஸ்ர்வே ஸப்தத்வீபாவசுந்கர, ருக்வேதோ யசுர்வேத சாமவேத அதர்வண, அங்கைஸ் ஸஹிதாசர்வே கலஸாம் புஸமாஸ்ரித. ஆயேந்து கணேச பூஜார்த்தம் துரிதக்ஷயகாரக, கங்கேச யமுனே சைவ, கோதாவரி ஸரஸ்வதி, நர்மதேசிந்து காவேரி, ஜலேஸ்மின் ஸன்னிதிங்குரு" என்று கும்பபூசைசெய்து,

* திருவுருவம் வெள்ளியினாலும, பசுவின்சாணம், பசுவெணணெய் திருவெண்ணீறு, சந்தனம், சருக்கரை, மஞ்சள் முதலியவைகளினாலும அமைத அப் பூசிப்பதும் உண்டு. † நியாசம்=தொடல்.

அக்கும்பத்திற்கு மேற்றிசையில் யந்திரமிட்டு, முன்செய்து வைத்திருக்கும் பிருதிவிமூர்த்தியை எழுந்தருளச்செய்து, மற்றொருவேதிகையில் சொர்ணமூர்த்தியை எழுந்தருளச் செய்து, முன்பு சேகரித்து வைத்திருக்கும் பூஜாதிரவியங்களிலுள்ள குங்குமம், பச்சைகற்பூரம், புடபம், அறுகு முதலியபற்பலசுகந்த வர்க்கங்களைக் கலந்து, முன்பு சுத்தப்படுத்தி வைத்தமணி வட்டகைகளில் நிரப்பி, மற்ற வட்டகைகளில் கங்கைமுதலிய சுத்ததீர்த்தம், அரிசி, பால், தருப்பை நுனி, மலர், வெண்கடுகு, நெல், எள்முதலிய திரவியங்களைவிதிப்படி அமைத்து, அருக்கியம், பாத்தியம் ஆசமனம்முதலியவைகளை மந்திரபூர்வகமாச் செய்துகரத்திற் புஷ்பமும் அக்ஷதையுங் கொண்டு,

## த்வாரபீடபூஜை.

| | |
|---|---|
| ஓம் பூர்வத்வாரேத்வாரஸ்ரீயைநம: | அதர்மாயநம: |
| தக்ஷிணத்வாரேத்வார ஸ்ரீயைநம: | நிப்ராயநம: |
| பச்சிமத்வாரேத்வாரஸ்ஶ்ரீயைநம: | மத்யேசந்த்ரோஸ்ஸிதசங்க |
| உத்தர த்வாரேத்வாரஸ்ரீயைநம: | ஹரணகணபதயேநம: |
| தேஹளியைநம: | ரஜஸேயநம: |
| த்வாரசோபாயைநம: | தமஸேயநம: |
| பீ மத்யேவாஸ்து புருஷாயநம. | அக்கினிமண்டலாயநம: [நம: |
| மஹாமண்டூகாயநம: | அக்கினிமண்டலாதிபதயே |
| காலாக்கினிருத்ராயநம | வஹ்னயேநம: |
| கூர்மாயநம: | அர்க்கமண்டலாயநம: |
| வராஹாயநம. | அர்க்கமண்டலாதிபதயே |
| அனந்தாயநம: | சூர்யாயநம: |
| ப்ருத்வியைநம: | ஸோமமண்டலாயநம: |
| அங்குசாயநம: | ஸோமமண்டலாதிபதயே |
| ஸப்தத்வீபேப்யோநம: | சந்த்ரமஸேநம: |
| ஸப்தஸமுத்ரேப்யோநம: | க்ரஹமண்டலேப்யோநம: |
| கந்தாயநம: | க்ரமண்டலாதிபதிப்ய ஆதி |
| நாளாயநம: | த்யாதிநவக்ரகேப்யோநம: |
| பத்ரேப்யோநம: | தன்மத்யேத்ருவமண்டலாயநம |
| கேஸரேப்யோநம: | த்ருவமண்டலாதிபத்யேத் |
| கர்ணிகாயைநம: | ருவாயநம: |

ரத்நஸிம்ஹாசநாயநம: மாயாதத்வாயநம:
இட்சுசமுத்ராயநம: ஆத்மதத்வாயநம:
ஸ்வர்ணத்வீபாயநம: வித்யாதத்வாயநம:
ரத்நமண்டபாயநம: சிவதத்வாயநம:
கல்பவ்ருக்ஷாயநம: ஆத்மனேநம:
காமதேனுவேநம: அந்தராத்மனேநம:
க்ஞாநாயநம: சிவாத்மனேநம:
வைராக்யாயநம: பரமாத்மனேநம:
ஐஸ்வர்யாயநம: மத்யேருத்ராயநம:
தர்மாயநம: பகவதேநம:
அக்ஞாநாயநம: தேஜோவதேநம:
அவைராக்யாயநம: மத்யேவிக்னநாசினேநம:
அநைஸ்வர்யாயநம: சர்வசங்கடநிவாரிணேநம:

என்று த்வாராபீட பூசைசெய்து,

"த்யாயேத் கஜானனம் தேவம், சப்தகாஞ்சன ஸந்நிபம், சதுர்ப்புஜம், மஹாகாயம், ஸர்வாபரண பூஷிதம், தண்டாக்ஷமலாபாச, பூர்ணமோதகதாரிணம், பசாங்குச தரம் தேவம், த்யாயேத் சித்திவி நாயகம்-ஸ்ரீ சித்திவிநாயகாயநம: தியானம் ஸமர்ப்பயாமி" என்று

ஸ்தாபனம்.

"விநாயக நமஸ்தேஸ்து கௌரீ மலஸமுத்பவ, இமாம் க்ருதாம் மயாம் பூஜாம், க்ருஹாண கணநாயக. ஸ்ரீ கணநாயகாய நம: ஆவாஹனம் ஸமர்ப்பயாமி" என்று ஸ்தாபனஞ் செய்து,

பீடம்

"மௌக்திகை புஷ்பராகஸ்ச, நாநாரத்ந விராஜிதம்,திவ்யஸிம்ஹாசனம் சாருப்ரீயர்த்தம் ப்ரதிக்ருய்ஹதாம், ஸ்ரீ விநாயகாயநம: ஆஸனம் ஸமர்ப்பயாமி" என்று பீடமிட்டு,

பாத்தியம்.

"கௌரீபுத்ர நமஸ்தேஸ்து, சங்கரப்ரிய நந்தன, பக்த்யாபத்யமயாதத்தம், க்ருஹாண சுரஸத்தம, ஸ்ரீ கௌரீபுத்ராயநமபாத்யம் ஸமர்ப்பயாமி" என்று பாத்யம கொடுத்து,

### அர்க்கியம்.

"அர்க்கியம் க்ருஹாண தேவேச, கணாதிபகஜானன, கந்தபுஷ்பாக்ஷதைர்யுக்தம, கங்காஜல மிதம் சுபம், ஸ்ரீகஜானனாயநம: அர்க்யம ஸமர்ப்பயாமி" என்று அர்க்யம் கொடுத்து,

### ஆசமனம்.

"அநாதநாத சர்வேச கீர்வாணைரபிபூஜித, நிர்மலம் கந்தஸம்யுக்தம், க்ருஹாண ஸமனம்விபோ, ஸ்ரீ சர்வேசாயநம: ஆசமனம் ஸமர்ப்பயாமி, என்று ஆசமனம் கொடுத்து,

### சாமாநய நிவேதனம்.

"ததி க்ஷீரஸமாயுக்தம, மத்வாஜ்யேன ஸமன்விதம், மதுபர்க்கம் க்ருஹாணேதம், கஜவக்த்ர நமோஸ்துதே, ஸ்ரீகஜவக்த்ராயநம: மதுபர்க்கநைவேத்யம் ஸமர்ப்பயாமி" என்று, தேன், பால், பழம் முதலியவைகளைச் சாமானியமாக நிவேதித்து,

—o0o—

## அபிஷேகம்.

### பஞ்சாமிர்தம்.

"ஸ்நானம் பஞ்சாமருதைர் தேவ, குருஷ்வசுரசத்தம, பக்த்யாத்துப்யம் மயாதத்தம், விக்னராஜ நமோஸ்துதே, ஸ்ரீ விக்னராஜாய நம: பஞ்சாமிர்த ஸ்நானம் ஸமர்ப்பயாமி" என்று * பஞ்சாமிர்த வபிஷேகஞ் செய்து,

### பால்.

"ஸவ்ரபேயம் மகாதிவ்யம், பவித்திரம் புஷ்டிவர்த்தனம், ஸ்நானாயதே மயாதத்தம், க்ருஹிஷ்வசுரசத்தமம் க்ஷீரஸ்நானம் ஸமர்ப்பயாமி" என்று பாலபிஷேகஞ் செய்து,

---

* பஞ்சாமிர்தம=தேன், பால, வாழைப்பழம், சருக்கரை, நெய் இவ்வைந்தும கலந்தது. "நலலதில நெய்யாடி யானிடத்தைந்தாடி நவையிலே யமுதமாடி, நல்குகாரணகாரிய முறையின்றியே நறுசெய்பாறயிராடியே, மெல்லமலர் மதுவாடி யின்கழைச்சாறுடி மென்பழச்சாரடியேவிழையுமிள நீராடி யாரக்குழம்பாடி விதியினமை தபனமாடி," என்றமுறைப்படி அபிடேகஞ் செய்து.

மஹஸ்வாது சமாயுக்தம், ப்ரஸித்தம் மகாற்புதம், ஸ்நாநாயதே மயாதத்தம், ததிதம் ப்ரதிக்ருய்ஹதாம், ததிஸ்நானம் ஸமர்ப்பயாமி. என்று தயிர் அபிஷேகஞ் செய்து,

நெய்.

தெவர்ஷீணும், ப்ரயம், புண்யம், பவித்ரம் புஷ்டிவர்த்தனம் ஸ்நாநாயதே மயாதத்தம், க்ருஹணஜ்யம் நமோஸ்துதே, க்ருதஸ்நானம் ஸமர்ப்பயாமி. என்று நெய் அபிஷேகஞ் செய்து,

தேன்

அனேக வ்ருக்ஷயநிசய, குசுமோற்பூதமற்புதம், ஸ்நாநாயுதோ மயாதத்தம், கணேசப் ரதிக்ருய்ஹதாம், மதுஸ்நானம் ஸமர்ப்பயாமி. என்று தேன் அபிஷேகஞ் செய்து,

சர்க்கரை.

இட்சிகண்ட ஸமுத்பூதா, பராஸ்வாத்ய தராசுபா, சர்க்கரேயம் மயாதத்தம், ஸ்நாநார்த்தம ப்ரதிக்ருய்ஹதாம், சர்க்கரா ஸ்நானம் ஸமர்ப்பயாமி. என்று சர்க்கரை அபிஷேகஞ் செய்து.

சுத்தோதகம்.

கங்காதி ஸர்வதீர்த்தேஸ்து, ஆனீத்யைர் நிர்மலைஸ்சுபை,வாஸிதைருதகைர்தேவ, ஸ்னபயாமி கஜானன, ஸ்ரீகஜானனயநம, சுத்தோதக ஸ்நானம் ஸமர்ப்பயாமி'' என்று கங்கைமுதலிய சுத்தசலத்தால் அபிடேகஞ்செய்து,



அலங்காரம்.



பீதாம்பரம்.

"ரக்தவஸ்த்ரம் த்வயம்தேவ, கௌரீபவ பவப்ரபோ, க்ருஹாணேதம் மயாதத்தம், விக்னராஜநமோஸ்துதே, ஸ்ரீ விக்னராஜாயநம வஸ்திரயுக்மம் ஸமர்ப்பயாமி. என்று நல்ல இரண்டுபீதாம்பரங்களை யுடுத்தி,

யக்ஞோபவீதம்

"உபவீதம் ப்ரம்மசூத்ரம், ப்ரம்ஹணா நிர்மிதம் புரா, நாகயக்ஞோபவீதம், க்ருஹாண கணநாயக-ஸ்ரீ கணநாயகாயநம யக்ஞோபவீதம்ஸமர்ப்பயாமி" என்று பூணூல் தரித்து,

சர்வாபரணம்.

கோடிசூரியப்ரகாதிச, ரக்தவர்ணசதுர்ப்புஜ, மயாஸமர்பிதானீஹார, பூஷணுநிக்ருஹாணபோ, ஸர்வாபரணுனி ஸமர்ப்பயாமி. என்றாபரணுலங்காரஞ்செய்து,

கந்தம்.

"சந்தனு கருகற்பூர, ம்ருகநாபி ஸமன்விதம், கந்தம் தர்ஸ்யாமி விக்னேச, ஸர்வாபீஷ்ட ப்ரதாயக - ஸ்ரீ விக்னேசாயநம கந்தம ஸமர்ப்பயாமி" என்று திருமேனி முழுவதும் சந்தனத்தை அப்பி,

அக்ஷதை.

"அக்ஷதான் த்வதிரம் சுப்ரான், ஹரிஸ்ரிதானபி, மயாஸ் மர்ப்பிதான்தேவ, க்ருஹாணத்விரதானன, ஸ்ரீஸர்வாபீஷ்டப்ரதாயகாயநம அக்ஷதாம் ஸமர்ப்பயாமி" என்று அக்ஷதை=(மஞ்சள்-அரிசி பொற்சுண்ணம், பூந்தாது முதலிய வற்றைச் சாத்தி,

புஷ்பம்.

"சுகந்தினி சபுஷ்பாணி, ஜாஜீகுந்த முகானிச, ஏகவிம்சதிபுஷ்பாணி, க்ருஹாணத்வம் விநாயக, ஸ்ரீ விநாயகாயநம புஷ்பாணி பூஜையாமி" என்று உக-மலர்களைச் சாத்தி,

மால்யம்.

சுகந்திநிச மால்யானி, க்ருஹாண கணநாயக, விநாயகநமஸ்துப்யம், சிவசூனோ நமஸ்துதே, மால்யானி சமர்ப்பயாமி." என்று மால்யம் தரித்து.

அருச்சனை. (அறுகு)

ஒவ்வோர் மந்திரத்தின் முடிவிலும் "தூர்வாயுக்மம் பூஜையாமி" என்று சொல்லி அருச்சிக்கவேண்டும்.

ஓம் கசானனாயநமஃ
விக்னராஜாயநமஃ
லம்போதராயநமஃ
சிவாத்மஜாயநமஃ
வக்ரதுண்டாயநமஃ
சூர்ப்பகர்ணாயநமஃ
குப்ஜாயநமஃ

ஓம் சர்வதேவாயநமஃ
சர்வார்த்திநாசினேநமஃ
விக்ன ஹர்த்ரேநமஃ
தூம்ராயநமஃ
உமாபுத்ராயநமஃ
க்ருஷ்ணபிங்களாயநமஃ
பாலசந்த்ராயநமஃ

கணேசாயநம:
விக்னநாசினேநம:
விகடாயநம:
வாமதேவாயநம:
சந்த்ரார்த்ததாரிணேநம:
கணாதிபாயநம:
சங்கரகௌரீஸுநவேநம:

என்று இரண்டிரண்டாக இருபத்தோ ரறுகையெடுத்து அருச்சித்து,

## அங்கபூஜை.

ஓம் கணேசாயநம=பாதௌபூஜையாமி=பாதம்.
விக்னராஜயநம=ஜானுநீபூஜையாமி=முதந்தாள்.
ஆகுவாஹனாயநம=ஊரூம்பூஜையாமி=தொடை.
ஏரம்பாயநம=கடிம்பூஜையாமி=நிதம்பம்.
தேவதேவாயநம=நாபிம்பூஜையாமி=நாபி.
லம்போதராயநம=உதரம்பூஜையாமி=வயிறு.
கணநாயகாயநம=ஹிருதயம்பூஜையாமி=இருதயம்:
ஸ்தூலகண்டாயநம=கண்டம்பூஜையாமி=கண்டம்.
ஸ்கந்தாக்ரஜாயநம=ஸ்கந்தௌபூஜையாமி=கழுத்தடி
சதுர்ப்புஜாயநம=புஜௌபூஜையாமி=தோள்.
பரசுஹஸ்தாயநம=ஹஸ்தான்பூஜையாமி=உள்ளங்கை.
கஜவக்திராயநம=வக்த்ரம்பூஜையாமி=நாசி அல்லது முகம்.
விக்னஹந்த்ரேநம=நேத்ரேபூஜையாமி=கண்.
சூர்ப்பகர்ணாயநம=கர்ணௌபூஜையாமி=காது.
ஏகதந்தாயநம=தந்தம்பூஜையாமி=தந்தம்.
குமாரகுருவேநம=சிரம்பூஜையாமி=சிரம்.
சர்வேஸ்வராயநம=சர்வாங்கானிபூஜையாமி=சர்வாங்கம்
என்று அங்கபூஜைசெய்து,

## ஆவரணபூஜை.

### ப்ரதமாவரணம்.

ஓம் கணாதிபாயநம:
உமாபுத்ராயநம:
அகணாசனாயநம:
ஏரப்பாயநம:
ஓம் தூமகேதவேநம:
பாலசந்த்ராயநம:
ஈசபுத்ராயநம:
இபவக்த்ராயநம:

லம்போதராயநம: குமாரகுரவேநம:
கஜவக்த்ராயநம: மூஷிகவாகனாயநம:
ஏகதந்தாயநம: சங்கடநாசனாயநம:

த்விதியாவரணம்.

ஓம் விக்னகணபதயேநம: ஓம் ஏகதந்தகணபதயேநம:
விநாயககணபதயேநம: சூரகணபதயேநம:
தீரகணபதயேநம: சூர்ப்பகர்ன்னகணபதியேநம:
வரதகணபதயேநம: க்ஷிப்ரப்ரசாதகணபதயேநம:
இரத்நகணபதயேநம: சித்திகணபதயேநம:
லம்போதரகணபதயேநம:

த்ரிதியாவரணம்

ஓம் ரமாயைநம: ஓம் புஷ்பபாணாயநம:
ரமேசாயைநம: மாயைநம:
உமாயைநம: வராஹாயநம:
வருஷாங்காயநம: ஸதாசிவாயநம:
ரத்யைநம:

சதுர்த்தாவரணம்.

ஓம் ஆதித்தாயநம: ஓம் சனேஸ்வராயநம:
ஸோமாயநம: ப்ரகஸ்பதயேநம:
அங்காரகாயநம: ராகுக்ரஹாயநம:
புதாயநம: கேதுக்ரகாயநம:
சுக்ராயநம:

பஞ்சமாவரணம்.

ஓம் த்ரத்தைய்நம: ஓம சுதாதாராயைநம:
சமர்த்தைய்நம: த்ராவிண்யைநம:
காந்தைய்நம: வசுமத்தைநம:
மதத்ரவாயைநம:

சஷ்டாவரணம்.

ஓம் இந்த்ராயநம: ஓம வருணாயநம:
அக்னயேநம: வாயவேநம:
யமாயநம: குபேராயநம:
நிருதயேநம: ஈசானாயநம:
என்று ஆவரண பூசைகளை செய்து முடித்துபின்னர்.

## பத்திரார்ச்சனை.

| | |
|---|---|
| ஓம் கஜாதிபாயநம: | மாலதீபத்ரம் ஸமர்ப்பயாமி |
| சுமுகாயநம: | ப்ருங்கராஜபத்ரம் ஸமர்ப்பயாமி |
| உமாபுத்ராயநம: | விலவபத்ரம் ஸமர்ப்பயாமி |
| கஜவக்த்ராயநம: | தூர்வாபத்ரம் ஸமர்ப்பயாமி |
| லம்போதராயநம; | பதரீபத்ரம் ஸமர்ப்பயாமி |
| ஹராஸூனவேநம: | துத்தூரபத்ரம் ஸமர்ப்பயாமி |
| குஹாக்ரஜாயநம: | துளசீபத்ரம் ஸமர்ப்பயாமி |
| கஜகர்ணகாயநம: | அபாமார்க்கபத்ரம ஸமர்ப்பயாமி |
| ஏகதந்தாயநம: | ப்ருஅதீபத்ரம ஸமர்ப்பயாமி |
| இபவக்த்ராயநம: | சமீபத்ரம ஸமர்ப்பயாமி |
| மூஷிகவாஹனாயநம: | கரவீரபத்ரம ஸமர்ப்பயாமி |
| விநாயகாயநம; | வேணுபத்ரம் ஸமர்ப்பயாமி |
| கபிலாயநம; | அர்க்கபத்ரம் ஸமர்ப்பயாமி |
| பின்னதந்தாயநம: | அர்ச்சுனபத்ரம் ஸமர்ப்பயாமி |
| பத்னீஹீனாயநம: | விஷ்ணுக்ராந்தபத்ரம் ஸமர்ப்பயாமி |
| விஷ்ணவேநம: | தாடிமபதரம் ஸமர்ப்பயாமி |
| பாலசந்த்ராயநம: | தேவதாரபத்ரம் ஸமர்ப்பயாமி |
| ஏரம்பாயநம: | மருகபத்ரம் ஸமர்ப்பயாமி |
| சுராக்ரகண்யாயநம: | ஜாஜீபத்ரம் ஸமர்ப்பயாமி |
| சித்திவிநாயகாயநம: | சிந்துவாரபத்ரம் ஸமர்ப்பயாமி |
| சங்கடநாசினேநம: | ஏகவிம்சதிபத்ராணி ஸமர்ப்பயாமி |

என்று-சிறுசண்பகம்-கரசாரங்காணி-வில்வம்-அறுகு-இலந்தை ஊமத்தை-துளசி-நாயுருவி-சிறுவழுதி-வன்னி-அலரி-மூங்கில்-வெள்ளெருக்கு மருதம் விஷ்ணுக்கிராந்தி மாதுளை மந்தாரை மருவு சாதிமல்லி - வெண்ணொச்சிலி - என்னு மிவற்றின் பத்திரங்களைக் கொண்டு அருச்சித்து,

## புஷ்பார்ச்சனை.

| | |
|---|---|
| ஓம் சுமுகாயநம: | ஜாதிபுட்பம் ஸமர்ப்பயாமி |
| ஏகதந்தாயநம: | சாமந்திபுட்பம் ஸமர்ப்பயாமி |
| கபிலாயநம: | மல்லிகாபுட்பம் ஸமர்ப்பயாமி |

## விநாயகபுராணம்.

| | |
|---|---|
| கஜகர்ணகாயநம | சம்பங்கிபுட்பம் ஸமர்ப்பயாமி |
| லம்போதராயநம: | கலாரபுட்பம் ஸமர்ப்பயாமி |
| விகடாயநம: | கேதகிபுட்பம் ஸமர்ப்பயாமி |
| ரசிம்ஹாயநம: | வகுளபுட்பம் ஸமர்ப்பயாமி |
| விநாயகாநம: | சதபத்ரபுட்பம் ஸமர்ப்பயாமி |
| தூமகேதுவேநம: | புந்நாகபுட்பம் ஸமர்ப்பயாமி |
| கணாத்யக்ஷாயநம: | துத்தாரபுட்பம் ஸமர்ப்பயாமி |
| பாலசந்த்ராயநம: | மாலதீபுட்பம் ஸமர்ப்பயாமி |
| பத்னிஹரீணயநம: | விஷ்ணுக்கிராந்தபுட்பம் ஸமர்ப்பயாமி |
| உமாபுத்ராயநம. | கிரிகர்ணிகாபுட்பம ஸமர்ப்பயாமி |
| கஜானனாயநம | நாகபுட்பம் ஸமர்ப்பயாமி |
| ஈசபுத்ராயநம: | மந்தாரபுட்பம் ஸமர்ப்பயாமி |
| சர்வஸித்திப்பிரதாயகாயநம | கோவிதாரபுட்பம் ஸமர்ப்பயாமி |
| மூஷிகவாகனாயநம: | துருமோற்பலபுட்பம் ஸமர்ப்பயாமி |
| குமாரகுரவேநம: | ரக்தபுட்பம் ஸமர்ப்பயாமி |
| தீர்க்கதுண்டாயநம: | தர்க்கபுட்பம் ஸமர்ப்பயாமி |
| இபவக்த்ராயநம: | முனிபுட்பம் ஸமர்ப்பயாமி |
| ஸங்கடநாசினேநம: | ஏகவிம்சதிபுட்பாணி ஸமர்ப்பயாமி |

என்று சிறுசண்பகம் - சாமந்தி மல்லிகை - சம்பங்கி - செங்குவளை - தாழை - மகிழம் - தாமரை - புன்னை - ஊமத்தை - முல்லை - விட்டுணுக்ராந்தி வெள்ளைக்காக்கணம் - நாகை - மந்தாரை - குரா - கோங்கு - செம்பிரத்தம வெள்ளெருக்கு - அகத்தி - என்னு மிவற்றின் புட்பங்களைக் கொண்டு அருச்சிக்க,

## துவாதசநாமபூஜை.

| | |
|---|---|
| ஓம் சுமுகாயநம: | ஓம் விக்னராஜாயநம: |
| ஏகதந்தாயநம: | கணாதிபாயநம: |
| கபிலாயநம: | தூமகேதவேநம: |
| கஜகாணிகாயநம: | கணாத்யக்ஷாயநம: |
| லம்போதராயநம: | பாலசந்த்ராயநம: |
| விகடாயநம: | கஜானனாயநம: |

## அஷ்டோத்தரசதநாமபூஜை.

| | |
|---|---|
| ஓம் விநாயகாயநம: | லம்போதராயநம: |
| விக்னராஜாயநம: | சூர்ப்பகர்ணாயநம: |
| கௌரிபுத்ராயநம: | ப்ரம்மவிக்ரமாயநம: |
| கணேஸ்வராயநம: | காலாயநம: |
| ஸ்கந்தாக்ரஜாயநம: | க்ரஸ்பத்யேநம: |
| அவ்யயாயநம: | காமினேநம: (௪0) |
| பூதாயநம: | சோமசூர்யாக்கினிலோசனாயநம: |
| தட்சாயநம | பாசாங்குசதராயநம: |
| அத்யக்ஷாயநம: | சண்டாயநம: |
| த்விஜப்பிரியாயநம: (௧0) | குணாதீதாயநம: |
| அக்கினிகர்பச்சிதேநம: | நிரஞ்சனாயநம: |
| இந்த்ரப்ரதாயநம: | அகல்மஷாயநம: |
| வாணிப்ரதாயநம: | ஸ்வயம்சித்தாயநம: |
| ஸர்வசித்திப்ரதாயநம: | சித்தார்ச்சிதபதாயநம: |
| ஸர்வதனயாயநம: | அவ்யயாயநம: |
| ஸர்வப்ரியாயநம: | பீஜபூரபலாஸக்தாயநம: (௫0) |
| ஸர்வாத்மகாயநம: | வரதாயநம: |
| சிருஷ்டிகர்த்ரேநம: | சாஸ்வதாயநம: |
| தேவாயநம: | க்ருதினேநம: |
| அநேகார்ச்சிதாயநம (௨0) | பராயநம: |
| சிவாயநம: | வீதபயாயநம: |
| சுத்தாயநம: | கதினேநம: |
| புத்திப்பிரியாயநம: | சக்ரிணேநம: |
| சாந்தாயநம: | இட்சுசாபத்ருதேநம: |
| ப்ரம்மசாரிணேநம: | அஜாயநம: |
| கஜாநநாயநம: | உத்பலதராயநம: (௬0) |
| த்வைமாத்ரேயாயநம: | ஸ்திரீதாயநம: |
| முனிஸ்துத்யாயநம: | ஸ்திரீபதயேநம: |
| பக்தவிக்னவிநாசாயநம: | ஸ்துதிஹர்ஷிதாயநம: |
| ஏகதந்தாயநம: (௩0) | குலாத்ரிபேத்ரேநம: |
| சதுர்ப்பாஹவேநம: | ஜடிலாயநம: |
| சதுராயநம: | சந்த்ரசூடாயநம: |
| சக்திஸம்புதாயநம: | காந்தாயநம: |

பரமஹம்ஸிணேநம: சாமகோஷப்ரியாயநம: (௯௦)
சமாஹிதாயநம: பரஸ்மைநம:
ஆஸ்ரிதாயநம: (௭௦) சௌம்யாயநம:
ஹகராயநம; ஸ்தூலகண்டாயநம:
ஹரயேநம: அக்ரகண்யைநம:
பக்தகர்மட்சிதாயநம: தீராயநம
ஓஷதிபதயேநம: வாகீசாயநம:
அம்யதாயநம: சித்திதாயகாயநம:
கைவல்யாயநம: தூர்வாபில்வப்ரியாயநம:
சச்சிதானந்தவிக்ரகாயநம: வியக்தமூர்த்தயேநம.
க்ஞானினேநம: அமூர்த்திமதேநம: (௱)
தயாயுதாயநம: பாலதத்தஸ்தங்கேவனேஸ்
தாந்தாயநம: (அ௦) தகமானசாயநம:
ப்ரம்மத்வேஷவிவர்சிதாயநம: சங்கரோஸ்தங்கேலனேஸ்து
பிரம்மதைத்யபயதாயநம: கமாண்ஸாயநம:
அமரேஸவராயநம: சம்ஸ்தஜகதாதாயநம:
நாகயக்ஞோபவீதனேநம ஹர்ஷாயநம:
ஸ்திரீகண்டாயநம: மூஷிகவாகனாயநம:
விதயேநம ஹருஷ்டாயநம:
ராமார்ச்சிதாயநம: துஷ்டாயநம:
ஸ்தூலகண்டாயநம: ப்ரஸன்னாத்மநேநம: (௧௦அ)
ஸ்வயங்கர்த்தேநம: சர்வசித்திப்ரதாயகாயநம:

என்று அஷ்டோத்தர சதநாமபூஜைசெய்து,

## திருவாராதனை.

### தூபம்.

வனஸ்பத்துப்யந்தளம் தூபம்-தசாங்காக்ருஹஸம் யுதம் - க்ருஹாண மங்களம்திவ்யம்-மயாதத்தம் விநாயக ஸ்ரீ உமாசுதாயநம; தூபம் சமர்ப்பயாமி என்று தூபாராதனை செய்து,

### தீபம்.

க்ருதாக்த வர்த்திசம்யுத்தம் - தீபம் சர்வப்ரகாசனும்-க்ருஹாணேசமயாதத்தம் - தேசோராசே ஜகத்பதே, ஸ்ரீ ருத்ரப்ரியாயநம: தீபம்சமர்ப்பயாமி என்று தீபாராதனை செய்து,

### நைவேத்தியம்.

அன்னௌஸ் சதுர்விதைஸ்வாது-ரஸைஷட்பிடி ஸ்மன்விதம் - பக்தியாநிவேதிதம் வேதா-நைவேத்யம் ப்ரதிக்ருய்ஹதாம். போஜைர் நாரீகாவிதைர்யுக்தோன் - மோதகான் க்ருதபாசிதரன் க்ருஹாண விக்னராசேந்த்ர சர்வகார்யார்த்த சித்தயே - ஸ்ரீ விக்னநாசினேநம: நைவேத்யம் சமர்ப்பயாமி. என்று நைவேத்தியஞ் செய்து,

### பூர்ணபலம்.

பலானீ மானிரபயானிஸ், காபிதர் நிதவாக்ரத-மேனமேசபலாவாப்தி, பவேசன்மவிசயன்மணி-ஸ்ரீ சங்கட நாசினே நம: பூர்ணபல சமர்ப்பணம் சமர்ப்பயாமி. என்று பூர்ணபலஞ்செய்து,

ஸ்தாக்தனவிக்னேச - புஷ்டலா நிதனுநிச, பூம்யாம்ஸ் திதாணிபகவன், ஸ்வீகுருஷ்வ விநாயக. ஸ்ரீவிக்னேசாயநம: ஸ்வர்ணபுஷ்பம் சமர்ப்பயாமி, என்று தக்ஷிணை வழங்கி,

### தாம்பூலம்.

பூகிபால சமாயுக்தம்-நாகவல்லி தளைர்யுதம்-கற்பூர சூர்ணசம்யுக்தம-தாம்பூலம் ப்ரதிக்ருய்ஹதாம் ஸ்ரீசித்திவிநாயகாயநம: தாம்பூலம் சமர்ப்பயாமி என்று தாம்பூலமிட்டு,

### புஷ்பம்.

பூசாபல சம்ருத்யர்த்தம், ஸ்வர்னபுஷ்பம் மயேஸ்வர- ஸ்தாபிதம் தேனமேப்ரீத்யை-பூர்ணுக் மருமனோரதான். ஸ்ரீவிக்கினேசாயநம: ஸ்வர்னபுஷ்பம் சமர்ப்பயாமி, என்று தாமபூலம ஸ்வர்னபுஷ்பம் என்னு மிவைகளைக் கொடுத்து,

விக்னராஜ நமஸ்துப்யம், பாபக்ஞானப் ரஞ்சன, புனரார்க்கியம்-பிரதாஸ்யாமி க்ருஹாணசுரசத்தம ஸ்ரீவர்னராஜாயநம புனரார்க்யம் ஸமர்ப்பயாமி, என்று அர்க்கியங் கொடுத்து,

---

### ஏகாதச நாமார்ச்சனை.

---

ஒவ்வொரு தியானத்தின் முடிவிலும் "தூர்வாயுக்மம் ஸமர்ப்பயாமி" என்று சொல்லவும்,

| | |
|---|---|
| ஓம் கணபதிபாயநம: | ஓம் விநாயகாயநம: |
| உமாபுத்ராயநம: | ஈசபுத்ராயநம: |
| அகநாசினேநம: | சர்வசித்திப்ரதாயககாயநம: |
| ஏகதந்தாயநம: | குமாரகுருவேநம: |
| இபவக்த்ராயநம: | ஸர்வசங்கடநாசனுயநம: |
| மூஷிகவாகனுயநம: | |

என்று ஏகாதச நாமங்களாற் றூர்வை யருச்சனைசெய்து,

தியானம்.

கணபதிப நமஸ்தேஸ்து - உமாபுத்ர கஜாணனு - ஏகதந்தே ப லக்ரேதி-ததா மூஷிகவாகன-விநாயககேஸ்வர புத்ரேதி - சர்வசித்தி ப்ரதாயக-குமாரகுருவே துப்யம்-சர்வசங்கட நாசன. இதயேகாதச தூர்வாயுக்ம பூஜாம ஸமர்ப்பயாமி, என்று தியானஞ்செய்து,

## தூர்வையருச்சனை.

ஒவ்வொரு தியானத்தின் முடிவிலும் தூர்வாயுக்மம் ஸமர்ப்ப யாமி என்று செபிக்கவேண்டியது.

| | |
|---|---|
| ஓம் கணேசாயநம: | ஓம் பீமாயநம: |
| வக்ரதுண்டாயநம: | பரசுதாரிணேநம: |
| உமாபுத்ராயநம: | கரிகும்பாயநம: |
| விக்னராஜாயநம: | விஸ்வமூர்த்தயேநம: |
| கௌரிமலசமுத்பாவாயநம: | சித்திகணேசாயநம: |
| ஏகதந்தயாயநம: | உக்ரதேஜசேலம்போதராயநம: |
| சுத்தகுணாயநம: | காமதாயநம: |
| மகாகாயாயநம: | விக்னேஸ்வராயநம; |
| சித்திதாயநம: | சிமுகாயநம. |
| மகோதராயநம: | சக்திசமயுக்தாயநம: |
| கஜவக்த்ராயநம: | |

என்று மீட்டும் இவ்விருபத்தொரு நாமங்களாற் றூர்வை யருச்சனை செய்து.

தியானம்.

கணேசோ வக்ரதுண்டஸ்க உமாபுத்ரஸ்த்தை வசவிக்னராஜா காமதஸ்ஸ விக்னேஸ்வரயிதிஸ்மூர்த்தா சிவமுதஸ்சக்தி சம்யுக்தோ கௌரீமலஸ் மத்பவா ஏகித்யேயஸ்த சுத்தகுணேமகாகாய யிதிஸ் மூர்தா ததிஸ்சசித்திதா ப்ரோகதோ மகாதாயி திஸ்மூர்தா கஜவக் த்ரஸ்த பீமஸ்ச ததாபரசுதார்யபி கரிகும்போவிஸ்வமூர்த்தி உக்ர தேஜாஸ்ததையெச லம்போதரஸ்தத்சித்திகணேசச் சைகவிம்சதி இத்யேவிம்சதி தூர்வாயுக்மம் பூஜாம்சமர்ப்பயாமி என்று தியானஞ் செய்து

நைவேத்தியம்.

நாமானிரம்ணீயாணி - ஜபேதபிஸ்சபூசயேத் கணேசாத்தஸ்ய வஸ்யந்தி சங்கடாணி மகாநத்யபி மகாசங்கட த்கோஹம் கணேச

சரணம் கதம் தஸ்மான் மனோரதம் பூர்ணம் குருவிஸ்வேஸ்ப்ரயா ததஸ்வர்ணமயம் புஷ்பம் விக்னேசாய நிவதயேத் ஸ்ரீகணேசாய நம: நைவேத்யம் சமர்ப்பயாமி. என்று நைவேத்தியஞ் செய்து,

ஆலாத்தி.

கணேதிவ நமஸ்தேஸ்து சத்ய ஞானப்ரகாசக நீராஞ்சனம் ப்ரதாஸ்யா தேஜோராஜேநமோஸ்துதே ஸ்ரீகணேதிபாயநம: உத்தர நீராஞ்சனம் சமர்ப்பயாமி. என்று ஆலத்தி சுத்தி,

பிரதக்ஷணம்.

யானிகானி சபாபாணி ஜன்மாந்தரக் குருதாஹனிச தானி தானி வினஸ்யந்திப்ர தட்சணேபதே பாபோஹம் பாபகர்மாஹம் பாபாத்மாப பகம்பவாதராஹிபாங்-க்ருபயாதேவ சரணக தவஸ்தல அன்யதா சரணம் நாஸ்திதவமே சரணமம்மா தஸ்மாத்காருண்ய பாவேன -ரட்சரட்சகணேதிப - ஸ்ரீகணேத்யட்சாயநம: ப்ரதக்ஷணம் ஸமர்ப்பயாமி. என்று ப்ரதட்சணஞ் செய்து.

நமஸ்காரம்

நமோஸ்து தேவதேவேச பக்தானும் பயப்பிரதா விக்னும் நாசகர்த்ரேதே. அராத்மஜநமோ நம: ஸ்ரீ விக்னநாசினேநம: நமஸ்காரம் சமர்ப்பயாமி. என்று நமஸ்காரஞ் செய்து,

பிரார்த்தனை.

வக்ரதுண்ட மகாகாய சூரியகோடி சமர்ப்பவ ஸத்ரீவிக்னம் குருவே தேவசர்வகார் யேஷுஸர்வேதா ஸ்ரீ வக்ரதுண்டாயநம: ப்ரார்த்தனும் சமர்ப்பயாமி. என்று பிராததனை செய்து,

அர்க்கியம்,

கணேஸ்வர நமஸதுப்யம சர்வசித்திப்ரதாயக சங்கஷ்டம்ஹர மேதேவ. க்ருகணர்க்யம் நமோஸ்துதே ஸ்ரீகணேசாயநம: இதமர்க்யம் ஸமர்ப்பயாமி,

க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தயாந்து பூஜிதோசி விதுதயே - க்ஷிப்ரப்ர சதாதமைதேயிகரு ஹரணர்க்கியம் நமோஸ்துதே ஸ்ரீவிக்ன நாசினேநம: இதமர்க்கியம் சமர்ப்பசாமி.

திதிணு முத்தமேதேவிகணேசப்ரய பல்லவே சங்கஷ்டம் ஹர மேதேவி க்ரஹணர்க்கியம் நமோஸ்துதே ஸ்ரீசதுர்த்தி தேவைநம: இதமர்க்யம் சமர்ப்பயாமி. என்று அர்க்கியங் கொடுத்து,

## சந்திரபூஜை.

### அர்க்கியம்.

க்ஷீரோதார்ண வசம்பூத-லட்சுமிபங்தோறி சாகர-க்ருஹாணார்க்யம் மயாதத்தம் ரோஹிண்ராசஸத்ரீ தஸ்கசின்ரோணீஹித சாத்ராயநம: இதமார்க்யம் சமர்ப்பயாமி.

போமாயத் விசவர்யாய தேவராசாய சிலினே - ரோஹிணீசஹீதாயர்பி க்ருஹார்க்ஞயம் நமோஸ்துதே ரோஹிணீ சஹித சந்த்ராயநம: ஹிதமர்க்யம் சமர்ப்பயாமி' என்று அர்க்கியங்கொடுத்து,

### நமஸ்காரம்.

ககநாம் கணசம்தீப க்ஷிராப்தி மதனேத்பவ பாபாசித்தி கந்தாத சோமராஜ நமோஸ்துதே ஸ்ரீசந்தராயநம: நமஸ்காரம்சமர்த்பயாமி. என்று சந்த்ர பூஜை செய்து.

## ஆசாரிய பூஜை.

மோதகாமஸ்த பலாம்ஸ்தஸ்யபரிபூர்த்தயே ஸ்ரீசற்குரவேநம: உபாயதானம் சமர்ப்பயாமி.

ப்ரதிமாங் குரவேதத்யா- தாசார்ய யசதட்சிணும் லஸ்ரம் கும்பசு மாயுக்தா மாதௌமக்ரமி மம்படேத் கணேஸ்வரப்ரசாதேனமமசம் தூமநோரதா துப்யம்சம பரதேவதேவ ப்ரதிமாம்து கஜானன இஷ்ட காமார்த்த சி யார்த்தம் புத்ரபௌத்ரப்ர வர்த்தனகணதிராசதேவேச விக்னராச விநாயக தவமூர்த்திப்ரதானே னப்ரசன்னே பவசர்வதா ஸ்ரீசற்குரவேநம: கலசப்ரதி மாதானம் சமர்ப்பயாமி. என்று ஆசிரிய பூசை செய்தனர்.

விநாயக பூஜை சம்பூரணம்.

அவருக்குத் தக்கபடி தானங்கொடுத்துப் பூசை செய்தகலச முதலிய வைகளையும் அவருக்களித்து வேதப் பிராமணர்கட்குப் பதினாயிரம் பசுக்களையும் அவைக்கேற்ற பொருள்களையுந் தானஞ்செய்து யாதாப்பிரகாரந் தனது மனைவியாகிய சுகன்னதையென்பவள் கருப்பமுற்றுப் பத்தாந் திங்களில் ஒரு புத்திரனை பெற்றனள்.

அப்புத்திரனுக்குக்காலுங் கையுமில்லாமல் ஏனைய அவயவங்களெல்லாம மிக்க அழகு வாழ்ந்திருப்பக் கண்டு சகந்தைமனங் கலங்கி ஐயோ! எனது பங்கிற்கு இப்பங்கமானபிள்ளை வரவேண்டுமென்று துக்கித் திருந்தனள். அதைஅரசன கேள்வியுற்றுத்தானும் அப்புதல்வனை வந்து பார்த்து அதிகதுயரங்கொண்டு கன்மனைதைத் தானே தேற்றி, பெண்ணே! அப்புத்திரன் விநாயகப் பெருமானுடைய விரதபலத்தினு லுண்டானவனாதலால் இவனுக் குண்டாகிய வுடற்குறையை அவ்விநாயகப பெருமானே விலக்கி யருளுவர் நீ யொன்றற்கும் அஞ்சலையென்று தனதுமனைவிக்குத்தேறுதல் சொல்லிப் பின்னர் அக்குழந்தைக்குச் சாதக கன்மாதிகளைச் செய்து, வேதப்பிராமணர்கட்கெல்லாம் இரத்தினங்களையும, பொன்களையும் மழைபோலச் சொரிந்து, கார்தத வீரியனுக்குப் பன்னிரண்டு வருடமானபோது தேத்தாத்திரிய முனிவர்தற்செயலாய்க் கிருதவீரியனிடத்தில் வர, அவரை யவ்வரசன் எதிர்கொண்டு பணிந்தொராதனத்தி லிருத்தி. சுவாமி! அடியேன் பலநாள் அரிய தவங்களைச செய்து ஓர்புதலவனைப் பெற்றேன் அவனை பகைவர்களெலலாங் கண்டு நகைக்கும் படியாகக்காலுங் கையுமில்லாதவனாய்த் தோன்றினன். யானியற்றிவந்த தவங்களில்குற்றம் யாதாயினு முண்டோ அறிந்திலேன் வெகுநாள் புத்திரனிலலாமல் வருந்தினேன். பின்னர் ஓர்புத்திரனைப் பயந்தும் என்மனக்கிலேசந் தீர்ந்தேனல்லேன். என்னசெய்குவேன்? அடியேன்மீது தேவரீர் கிருபைவைத்து அப்புதல்வனுக்கு முடமும் நீங்கு முபாயமொன்றை யனுக்கிரகித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

அதற்குத் தேத்தாத்திரிய முனிவர் மனதிரங்கி, அரசனே! யாம் எனது புதலவனைக் காணவேண்டியே இங்குவந்தோம். ஆதலால் அவனை விரைவிற் கொண்டுவரக் கடவை யென்று சொல்ல, அவ்வாறே அப்புதல்வனைக் கொணர்ந்து எதிர்விட, அவனை அம முனிபுங்கவர் பார்த்தருளி, அரசனே! நீ இப்புதலவனைக் குறித்து யாதொரு துயரமுங் கொள்ள வேண்டியதில்லை. இவன் இவ்வுலகத்திற்கெல்லாஞ் சக்கிரேஸ்வரனாயிருப்பனென்று சொல்லி, அப்புதல்வனுக்குத் தீக்ஷைசெய்து, விநாயக மூர்த்தியினுடைய ஏகாட்சர மந்திரத்தை யுபதேசித்துப்போயினர். பின்னர்கார்த்தவீரியன் தன் தந்தையாகிய கிருத வீரியனைப் பார்த்து, பிதாவே! யான் தேத்தாத்திரிய முனிவ ருபதேசித்த மந்திரத்தை யநுட்டித்து வரம்பெறுவ

தற்குளென்னை வனத்திற்கொண்டு போய்விடவேணு மென்று கேட்டனன் அவ்வாறே அரசன்சகல பரிசனங்களையுங்கூட்டி, அனுப்பத்தக்கவரிசையோடும் அவனை வனத்திலனுப்பினன். இப்பால் அப்புத்திரன் வனத்திலிருந்து அன்ன பானாதிகளை நீத்து, கணேசமூர்த்தியைக் கருத்திலிருத்தி, ஐம்பொறிகளையு நிக்கிரகித்து ஒப்பற்ற ஏகாட்சர மந்திரத்தை இடைவிடாது தியானித்து வந்தனன் இவ்வாறு பன்னிரண்டு வருடஞ்சென்ற பின்பு, அவன் செய்து வருகின்ற தவத்திற்குவிநாயக மூர்த்திகிருபை சுரந்து, அவ்விடத்திலுள்ள ஓர் தடாகத்தினிடமாக அளவற்ற தேவர்களோடுந்தோன்றி பிரத்தியக்ஷமாயினர். உடனே தானெழுந்து வணங்கக்கூடாமையால், தனது மனத்தாலனந்தமுறை வணங்கினன் அதற்கு விநாயகப்பெருமான் சந்தோஷித்து, அன்பனே! நீகருதிய வரங்களைக்கேளென்று திருவாய் மலர்தலும், சுவாமி! முடவனாகிய எனதுமுகத்தைநோக்கி முற்றினுங் காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன் உடனே விநாயகமூர்த்தி அவனுக்கு இரண்டுகால்களையும் ஆயிரங்கைகளையுந்தந்து, அதற்கேற்றவலியையுங்கொடுத்துத் தமதருக் கரந்தருளினர். பின்னர் அவ்விநாயகமூர்த்தியுடன் வந்திருந்த பிரமன்முதலிய எல்லாத்தேவர்களும் அக்கார்த்த வீரியனைப்பார்த்து, ஓ விரதசீலனே! நீ ஒரு கற்பகாலம்வரையில் ஆயுள் பெற்றிருந்து யாவர்க்கும் இதமே செய்து எதிர்த்து வருகின்ற சத்துருக்களையெல்லாம ஐந்நூறுபாணங்களினால்செயித்து வாழ்ந்திருக்கக்கடவையென்று அநுக்கிரகித்தார்கள்.

இப்பால் தனக்குக் கணேச மூர்த்தி வரங்கொடுத் தகலுமுன்னமே, இரண்டு கால்களும் ஆயிரங்கைகளு முண்டாகக்கண்டு கர்த்தனுடைய கிருபையை நினைத்துநினைந்து, மனமுருகி, ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, முடிவற்ற அன்பினால் அவர் கரந்தருளிய திசையைப் பலமுறை தணங்கி, சிறபசத்திர விதிப்படி பொன்னினாலும், மணியினாலும் ஓராலயஞ் சமைத்து சர்திர சடாதர மூர்த்தியாகிய விநாயகப் பெருமான் தனக்குப் பவள வொளியோடு மெழுந்தருளிக் காட்சி கொடுத்தமையால், பவளத்தினால் ஓர் மூர்த்தியைச் செய்து அம் மூர்த்தியை அவ்வாலயத்திற்றாபித்துப் பூசித்து வந்தனன். அம்மூர்த்தி பவளத்தினாற் செய்திருக்கின்றமையால் அதற்குப்பிரவாள விநாயகரென்றும், இவ்வனத்திற்குப் பிரவாளவனமென்றும் பெயர் வழங்குகின்றது' அப்பிரவாள விநாயகருடைய பெருமைகளை முழுவதும் யாவராற் பேசக்கூடும். பின்னொருகாலத்

தில் ஆதிசேடன் பூபாரம் பொறுக்கும்படி அவ் வனத்தின்கண் வந்து வந்தித்தனன் அதற்கவர் கிருபைகூர்ந்து அவன் பூபாரம் பொறுக்கும்படி வரங்கொடுத்தருளினர் பின்னர் ஆதிசேடன் அவ்வனத்தின்கண் ஓர் நகரமுண்டாகி அதற்குத தரணிதர நகரமென்று திருநாமமிட்டுத் தனனை யாட்கொண்ட பிரவாள விநாயக மூர்த்திக்குத் தரணிதர விநாயகரென்று மறறொரு திருநாமமுஞ் சாற்றினன். இராவணனும் அம்மூர்த்தியைப் பூசித்து இலங்காதி பத்தியம் பெற்றனன். பஞ்ச பாண்டவர்களும் அவரையே பூசித்துத்துரியோதனாதிகளைச் செயித்து அரசாட்சிபெற்றனர். அரசனே! இத்தன்மைத் தான சிறப்பினை வாய்ந்த சங்கட சதுர்த்தி விரதஞ்செய்தபலனிலே, ஒருநாள் விரதபலனை யாராகிலும் நமதுகையில்தத்தஞ்செய்தால் இவ்விமானம விண்ணிலெழும்பும் என்று தேவேந்திரன சூரசேன மகாராசனுக்குச் சொல்லினன.

கிருதவீரியன் மகப்பெறு படலம் முற்றிற்று.



# இந்திரவிமானம் விண்ணெழுபடலம்.



முள்ளரை முளரிவாழ்க்கை முன்னவன் பிதிரீ ராற்றல்
விள்ளரு மொருகோட் டெந்தை விரதசீ ரிசைத்தா மற்றை
விள்ளல ருடுத்த தாரு விண்ணர சகங்கொ ணீரான்
மள்ளல்வான் விமானமேய வகைசிறி தறைது மன்றே.

சுடர்மனக் குகையுளோமொழிப் பொருளை யடக்கி யானந்த முறுஞ் சவுனகாதிமுனிவர்களே! கிருதவீரியமகாராசன் விநாயக மூர்த்தியினுடைய சங்கடசதுர்த்தி விரதத்தை யனுட்டித்துக் கார்த்தவீரியனைப்பெற்ற காரணத்தைச் சொன்னோம், இப்பால்இந்திர விமானம் விண்ணெழு பேற்றினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக; அச் சூரசேன மகாராஜன் தேவேந்திரனைப் பணிந் தெழுந்து, ஓ! சுரலோக சக்கிரேஸ்வரரே! அங்காரக சதுர்த்திவிரதத்தின் மகிமையையும், அறுகு வன்னிமந்தாரை இவைகளின் பெருமையினையும் அடியேற்கு அங்கை நெல்லிக்கனிபோல அறிவித்தீர். அதனையெல்லாம் ஐயமில்லாமல் அறிந்து கொண்டேன் இத்தன்மைத்தான மேலாகிய விரதத்தை இம்மூவுலகின்கண் ஒருவருஞ்சொல்லயான்கேட்டதில்லை, அதற்கடியேன் புரியுங்கைம்மாறென்னவிருக்கின்றது,என்

றுபலமுறை உபசரித்து எவ்வாறேனும் அங்காரக சதுர்த்தியை
அட்டிக்கின்ற ஓர் விரதியைக் கண்டுபிடித்து இவ்விமானத்தையின்
னெழுப்பவேண்டுமென்று உத்தேசித்து அவ்விரதியைக் கண்டு
பிடிக்குமாறு நாற்றிசைகளினுந் தூதுவரை யேவினன், அத்தூதுவ
ரும் அவ்வாறே சென்று வீடுகள் தோறும் விசாரித்துக் கொண்டு
வருகின்றபோது மற்றொருவிமானம் ஆகாயத்தினின்று பூமியிலியங்
கக்கண்டு அதன் வரவை யறிவோமென்று அருகிற் சென்றனர்.
பின்னர் அவ்விமானத்தினிருந்த தேவகணங்கள் அங்காரத்தி
லிருந்த ஓர் புலைச்சிக்குத் தெய்வசரீரங்கொடுத்து அவளை ஆடல்பா
டல்முதலிய சிறப்புகளோடு அவ்விமானத்திலேற்றக்கண்டு இதென்
ன அற்புதமென்று ஆச்சரியங் கொண்டவர்களாய் உடனே அவர்
களைப் பணிந்தெழுந்து, ஓ கணநாயகர்களே! இவள் இப்பிறவியிற்
புலைச்சியாயிருந்தனள், இவளேதேனுந் தருமமென்றதைச் செய்த
தியாள் முற்பிறவியில யாதேனுஞ் செய்திருக்கின்றனளோ அதனை
யறிந்திலேம். அரிய தவத்தர்கட்குங் கிடைத்தற் கருமையதாகிய
இத்தெய்வ விமானத்தை இவளுக்குத் தந்தீர்களாதலால், இவளது
புண்ணியமெல்லை இன்னதென்று அடியேங்கட்குத் தெரிவித்தருள
வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கத் தேவகணங்களிசைந்
து சொல்லுவார் வங்காளதேயத்தில் அரசாட்சிசெய்து வந்த சா
ரங்கதரனென்னும் ஓரரசனிருந்தான். அவனுக்குச் சுந்தரியென்கின்
றவொருபுதல்வி யிருந்தனள். அவள் சித்தியனென்னும் அரசகுமார
னுக்கு மனையாட்டியா யிருந்தனள். ஆயினும், அவளது இசைக்கி
யானத்தினாலும் வெருண்ட பார்வையினாலும், உருவலட்சணத்தி
னாலும், தேவர்களாயினும் அவளுக்குக் கெடுப்படுவார்களாயின் உட
னே பயங்காமற் செல்காறகலே. இவளுங் கற்பென்பதைக் கன
வினுங் கண்ணுமறியாளாய் இல்லறவொழுக்கத்தை நீத்து, தன்னை வி
ழைந்தோரை யெல்லாந் தானும் விழைந்து, வருணாச்சிரம முதலிய
வைகளைத் துறந்து கலந்திருந்தனள். அதை அக்கினி சாட்சியாய் வி
வாகஞ் செய்த அவள் கணவன் அறிந்து, அறிவற்றவளே! எனது
குலத்தைக் கெடுப்பதற்காகவா எனக்கு வந்து நேர்ந்தனை? இனி
இல்லைவிடுத்து வெளியிற் செல்லுவையெனில், உன்றசையை உலக்
கேஇரையாக்குவனென்று கோபித்து அவளைக் காவலில்வைத்த
னன். அவ்வாறே சிலநாள் அடங்கி யிருப்பவள்போலிருந்து மன
திற் கபடங்கொண்டு தனது கணவன் நித்திரைசெய்யுஞ்சமயத்தில்
வாளைக்கொண்டு அவனுயிரைமாய்த்துப் பரபுருடனிடத்திற்போய்ச்

சித்திருந்தனள். அதைக்காவலாளர்க ளறிந்து சித்திராசனைக் கொலைசெய்தவள் இவளேயென்று நிர்மாணித்து, அவள் கைகளைக் கட்டி, பிடித்துக்கொண்டுசென்று, அரசனுத்தரவின்படி யவளைச் சேதித்தனர். உடனே அவளை யமதூதர்கொண்டுபோய் அளவற்ற காலங்கொடியநரகங்களிற்செலுத்தி, வதைசெய்து, பின்னர் இந்நகரத்திலுள்ளசேரியிலே புலைச்சியாய்ப் பிறக்கும்படி விடுத்தார்கள். இவள் முன்ஜனன முழுவதும் பாவமே செய்தவ ளல்லாமல் ஓர் தினையளவும் புண்ணியஞ்செய்ததில்லை. இச்சனனத்தில இதுகாறும் ஒரு புண்ணியமுஞ் செய்தறியாள். இவள் இத்தன்மைத்தான மகாபாதகியா யிருந்தபோதிலும், இன்றுதயகாலத்திற் கள்ளருந்திப் பகலெல்லாம அதிகவெறியினாற் றலையெடுக்கமாட்டாது கிடந்து பொழுதுபோனபின்பு சிறிதுவெறிநீங்கிப பசியதிகரிக்க, அதனால் இரைதேடி ஓர் வீட்டினருகிற்சென்றனள். அவ்வாறு செல்லுகை யில் இத்தினம விநாயக சதுர்த்தியாதலால் அச்சதுர்த்தி விரதத்தையவ் வீட்டிலுள்ளோர்கள் அநுட்டித்துக கணேசமூர்த்திக்கு நிவேதித்த பதார்த்தங்களிற் றுங்கள்புசித்தது மிகுந்தசேடத்தைத் தெருவிற் கொண்டுவந்தெறிந்தார்கள். உடனே இப்புலைச்சியானவள் அதனையெடுத்துத் தனது பசிதீரப்புசித்தனள். மேலுமவ் வீட்டிலுள்ளோர்கள் கணபதி! கணபதி! கணபதி! யென்று துதிசெய்தார்கள் அதனைக்கேட்ட தானுங் கணபதி! கணபதி! கணபதி! யென்று முக்காற்கூறினள. இவள் சங்கடசதுர்த்தியிற்றமதுதிருநாமத்தைச் சொன்னாளென்று விநாயகமூர்த்திக்குக் கிருபைகூர்ந்து இவளை அன்புடன் கொண்டுவருமாறு எங்களுக்காக்கியாபித்தனர். அவ்வாறே யாங்கள்வந்து இவளுக்குத தெய்வசரீரந்தந்து விமானத்திலேற்றினும இதுதான் புலைச்சியை விடுபுகச்செய்தகாரணமென்று தேவகணங்கள்கூற, அதைக்கேட்டதூதர்கள மீட்டும் அவர்களைத்தொழுதெழுந்து, ஓகணத்தலைவர்களே! இந்திரன ஆகாயத்திற்செல்கின்றபோது ஓர் நோயாளியினுடையபார்வையால அவனுடைய விமானங் கதிதப்பி இப் பட்டணத்தி லிறங்கியது, அஃதுமீட்டும் ஆகாயத்திலெழும்பும்படியாக நீங்கள் காட்டிக்கொடுத்தருளவேண்டுமென் றுபிரார்த்தித்தார்கள். அதற்குத் தேவகணங்களிசையாமல், எமது கர்த்தாவின்று கட்டளையாதோ அதனையாங்கள் செய்துவருவதேயன்றி எங்கள்சுதாவில் மற்றொரு காரியமுஞ் செய்யோமென்று சொல்லித் திடலென்றெழுந்து ஆகாயமார்க்கமாக விமானத்தைச் செலுத்திக்கொண்டு போனார்கள்.

இப்பால் சிறகுற்றெழுந்த மலைபோல் ஆகாயவீதியைக் கிழித்துச்செல்கின்ற அவ்விமானத்தில் புலைச்சரீரமொழிந்து, தெய்வசரீரம் பெற்றிருக்கின்றவளது பார்வையானது இந்திரனுடைய விமானத்தின்மீதுபட்டன உடனே ஆண்டவனுடைய திருக்கண்ணோக்கத்தால் ஆணவமலத்தினின்று மெழுந்தவர்கள்போல அவ்விமானமும் எழும்பி ஆகாயமார்க்கத்திற் சென்றது. பின்னர் அத்தூதர்கள் தங்களரசனிடத்திற்சென்று பணிந்தெழுந்து ஆகாயத்திலிருந்து மற்றொரு விமானம் வந்ததையும், அதுமீட்டுந் தனதுகதியிற்சென்றதையும், அதனால் இந்திரவிமானம் விண்ணிலெழுந்ததையும் விவரமாகச்சொல்ல, அவையனைத்தையும் சூரசேனமகாராசன்கேட்டு அவ்விரண்டு விமானத்தையுஞ் சாஷ்டாங்கமாகத் தொழுதெழுந்து, பிறவிந்தரித்திரனுக்குப் பெரும்பாக்கியங்கிடைத்ததுபோல ஆனந்தமுற்றுத்தனது அரண்மனையிற் சென்று விநாயகப்பெருமான் பெருங்கருணையை நினைந்து நினைந்தும், அவனடியாரது பெருமையை உள்ளூர்மகிழ்ந்து மிருந்தனன்.

இந்திரவிமானம் விண்ணெழு படலம் முற்றிற்று.

## சூரசேனன் முத்திப் படலம்.

என்றுமலர்த தவிசாளி யிறைஞ்சியசீர் வியாதமுனிக்
கன்றுபுவி விமானத்தோ டடுத்தமக வான்மீட்டு
மொன்றுவிசும் பெழுமளவு முற்றபல கதைமுழுதுந்
தொன்றுதொடு முறையாகச் சுவையமிழ்த மெனவிரித்தான்.

வேதாகமாந்தமாக விளங்கும் மகாவாக்கியார்த்தமாகிய தேனையுண்டு, சதாநிஷ்டானந்தமாகிய போகத்தையனுபவிக்கு மஹாத்துமாக்களே! முன்னர் சித்திமுத்தியாதிகளை விளைவித்துச்சகலமுந் தன்மயமாக விளங்கும்பிரணவசொரூபராகிய நமதுவிநாயகப்பெருமான் பரிபாகருடைய குறிப்பின்வழியே செல்லத்தக்காருண்மையாதலால், அங்ஙனமே இந்திரனுக் குவந்தமையையுஞ், சங்கடசதுர்த்தியினதுபேராற்றலையுங் கூறினோம். இப்பால் இந்திரனுற்றீ விரதனாய், கருணாமூர்த்தியினது திருவருட்பேறேதனது செயலெல்லாமெனத்தெளிந்தனுட்டித்துவந்த சூரசேனன் முத்தியைப்பெற்றதனைக்

கூறுவோம கேட்பீர்களாகவென பிதிர்தேவனுக்கு அடுக்கிதழ் முளரிவாழ்க்கைச் சதுமுகன் கூறுவதாயினன்:—

ஓ, பிதிர்தேவனே! சூரசேன மகாராசன் தமக்கு இந்திரனிடத்துச் சனித்த பேருணர்வினாலும், விநாயகவிரத மேன்மையைக் கேட்ட முன்னை வினைசம்பவத்தாலும், கணநாயகரைப் பூசித்தபுண்ணியத்தாலும், அன்பூற்றெடுக்க வூறியவுள்ளஞ் சிவசொரூபமேயாயினன். அக்கால்தங்குலக்குருபரனாகிய வசிட்டர் வந்தனர் வருதலும் சூரசேனன்பேவருவகையோடும் வழிபாடுசெய்து தங்குறைபாடனைத்து முறைகூறி யவரைப்பேராதவராகக் கொண்டு மாசிமாதம் அமரபட்சத்தில் வருகின்ற அங்காரக சதுர்த்தியில், கணேசமூர்த்தியை மனதிற் றியானித்து, வேதாகம முறைமைப்படி விரதமநுட்டித்து. மாதமாம் வருகின்ற சதுர்த்திதோறும் இடைவிடாது பூசித்து வாழ்கின்றநாளையில், விநாயக மூர்த்தியினுடைய பெருங் கருணையால் தேவகணங்கள் ஓர்விமானத்தைக் கொண்டுவந்து அவ்வரசனெதிரி லிறங்கினார்கள். உடனே அரசன் ஆனந்தங்கொண்டு ஒருரேலென்று அவ்விமானத் தருகில்வந்து மும்முறை வலஞ்செய்து சாஷ்டாங்கமாகப் பணிந்துநின்றனன். அவனைத் தேவகணங்கள் நோக்கி, அரசனே! உன்னை யழைத்துவருமாறு கணேசமூர்த்திகள் கட் டாக்கியாபித்திருக்கின்றா ராதாலால் விரைவில் இவ்விமாத்தின் மீதெழுந்தருள வேண்டுமென்று சொன்னார்கள். அதனையரசன் செவிக் கமுதாகக்கேட்டு, ஓ கணநாதர்களே! இவ்வூரிலுள்ளோர் யாவரும் ஒரு கணப்போதேனும் நம்மைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டார்கள் ஆதலால் அவர்கள் யாவத்திரானையும், என்னோடுகூடஅழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று இரந்தனன். அதற்கு உனதிட்டப்படியே செல்லலாமென்றுவிடைகொடுத்தனர். உடனே அந்நகரிலுள்ளவர்களெல்லாம் அவ்விமானத்தின்கணேறினர் சூரசேனமகாரசேன் தனதுசுற்றத்தினர் முதலியசகல பரிசனங்களோடுமேறினன். முன்னா நகரத்தார்ஏறியபோது தொழுநோய்கொண்டிருக்கின்ற ஓர் வணிகனுமேறினன். அவ்வணிகன் மகாபாவியாதலால் அவ்விமானம் பூமியை விட்டெழாமல் முன்னர் இந்திரவிமானம் எவ்வாறழுந்தி யிருந்ததோ அவ்வாறிருந்தது. அதன்காரணத்தைக் கணநாதர்களுணர்ந்து, அரசனே! இவ்விமானத்திலேறியிருக்கின்ற சனங்களிற் குட்டநோய் கொண்ட ஒருவணிகன் இருக்கின்றான் அதனால் இவ்விமானஞ் சற்றும் எழவில்லை. என்றுகூற சூரசேனன் கணநாதர்களை நோக்கியாது காரணம் விபரமாகச் சொல்லி

யாநுளவேண்டுமென்ன, கணநாதர் கூறுவதாயினர்: அரசனே அவ்வணிகன் முற்பிறப்பிற்பெரும் பாதகஞ் செய்தவனாதலால இப்பிறவியில் இக்குட்டநோய்க்கு இரையாயிருக்கின்றனன். அவனதுவரலாற்றைச் சொல்லுவோங்கேட்பாயாக.

கவுட தேயத்திலே வசில னென்றொரு வேதியரிருந்தார். அவருக்குச் சானகி யென்னுமொரு மனைவி யிருந்தனள். இவ்விவருஞ் சுகித்து வாழ்கின்றநாளையில் இவர்கட்கு ஓர் புத்திரனுண்டாயினன். அப் புத்திரனுக்குச்சாதகம் பார்த்துப் புதனென்னும் நாமமிட்டனர். அவனும் அப்பெயருக்கேற்றபடி வீரி வளர்ந்து வேதங்களையோதிக் கலைகளை யாராய்ந்து அறிஞர்களெல்லாம் புகழத்தக்க அறிஞனாயினன். இப்பாலவன் மணப்பருவமுற்றகாலையில் அவன் தாய் தந்தையர் தங்கள் வருணத்திற் கேற்ற குலங்கோத்திர முதலானவைகளை விசாரித்துக் கை-கால் உதடு-நா-தோள்-தனம - முதலிய எல்லா அவயவங்களினுந் தெய்வ ஸ்திரீகளையும ஒப்பிடக் கூடாத வனப்பினை வாய்ந்த சாவித்திரி யென்பவளை விவாகஞ்செய்துவைத்தார்கள். அவளோடு அப்புதனென்பவன் கூடிவாழ்கின்ற நாளையில், ஊழ்வினை வயத்தனாய்ப் பரத்தையிடஞ் சென்று பரிவுற்றிருந்துகள்வெறி கொண்டவன் போல மதிமயங்கி அவனிடத்திற்றானே புசித்தலையுஞ் செய்திருந்தனன் அவனிவவாறிருக்க அவன்தாய்தந்தையரவனைக் காணாதுவருந்தி வெளியிற்சென்று தேடுவதற்குந் தமது விருத்தாப்பிய நிலையினால கூடாதவர்களாகி, ஆகாரநித்திரையின்றி, ஏக்கமுற் றிருந்து, சின்னாள் சென்றபின்பு இன்னுநமது புதல்வன் வாக்காணோமே எங்கு எவ்வாறாயினனோவென்று திகைத்து, ஓர்நாள் அவன தந்தையாகிய தவசீலர் தடியூன்றிக் கொண்டு மெல்ல மெல்ல வீதியின் வழியாய்நடந்து தேடிக்கொண்டு செல்லுகையில் எதிரில் வீமனென்பவன்வரக்கண்டு அவனைத் தமதுகுமாரனைக் குறித்து விசாரித்தனர். அவர் உமது குமாரன் வேசையராசையால்மூழ்கி யிருக்கின்றனனென்சொல்ல அதுகேட்டவுடன் மனமழுங்கிப்பின்னும் புத்திரசோபம் விடாமையால் அவவேசை யிருப்பிடத்திற்குத் தள்ளாடிச் சென்று அவள்வீட்டின் தலைவாயிலில் நின்று தனதுபுதல்வனைக் கூவி, மைந்தனே! பொய்யை மெயயாகக்கொண்டிருக்கின்றவேசையர் மையலில் விழலுமா? நின்னைப்போன்ற அறிவினர்களும் இவ்வுலகின்கணுண்டா? நல்லொழுக்கங்களையெல்லாங் கைவிட்டனை, நான்மறைபோதுதலுங் தவிர்ந்தனை, அழகுவாய்ந்த குலஸ்திரீயை மறந்தனை, நமது வருணச்சிரமத்தினுக்கேற்ற

எல்லாச் சன்மார்க்கங்களையு மொழிந்தனை, ஆயினும் உன்னை அருமையா யீன்றெடுத்த எங்களையும் விட்டிருக்கலாமா? அப்பா!எனது மனம் மரமோ கலலோ இரும்போ? பேதைமனத்தையுடையவ்விரிகளும் வயதின் மூத்தவர்களை விடடுப்பிரிதல் தருமமல்ல வென்று அவர்கள் சமீபத்திற்றானே காத்திருப்பார்கள். சகல நூல்களையும் உணர்ந்த நீ இவ விருத்தாப்பிய காலத்தில எங்களை விட்டிருப்பது தருமமா? இனியேனும் வீட்டில்வந்திருவென்று இவ்வாறு அனந்த முறை மிகுந்த பரிவோடுங்கேட்டுக் கொண்டனர். அதற்கப் பாதகன் கொதித்தெழுந்து எனக்குப் புத்திகூறவா இங்குவந்தனை யென்று கோபித்துத் தனது உரங்கொணடமட்டும் அவர்தாடையிலறைந்தனன் உடனே அவர் சுபாவததிற்றானே விருத்தாப்பிய திசையை யுண்டாயிருந்த தன்றிப் புத்திரசோபத்தினாலும், கிரமமான புசிப்பில்லாமையினாலும், வாடியிருநதமையால் அவனறைந்ததைத் தாளமாட்டாது எருசார்புமின்றி இறந்தனர் பின்னர் அக்கொடும்பாவி இதுதானுனக்குச் சரியான தண்டனை என்றுகூறி யாவர்க்குந் தெரியாதபடி நிலத்தைக்கீறி அவரை யடக்கஞ் செய்தனன்.

இப்பால் அப்பாவி அவரது பொருளை யெல்லாங் கொண்டு வநது சேவைக்களிப்போ மென்று நினைத்து தனது வீட்டிற்குச் செல்ல, அவன் தாயானவள் அவனைக்கண்டு நல்லவரவென்று தழுவிக்கொண்டு, அப்பா! நீ இதுகாறும் எங்குபோயிருந்தனை?போகின்றபோது இங்குபோகின்றே னென்று சொல்லிவிட்டுப் போனால் உனது வாய்முத்தஞ் சிந்திப்போமோ? உன்தந்தை உன்னைக்காணாது ஆகாரநித்திரையற்று இரவும்பகலும் ஏக்கங்கொண்டு தனது தள்ளாமையோடும் உன்னைத் தேடிக்கொண்டு சென்றாரே. அவரெங்குற்றாரோ தெரியவில்லையே. நீயவரை விரைவிற்கண்டு பிடித்து அழைத்துவாவென்று சொல்லினள். அதனை அப்பாதகன் கேட்டு ஆ! ஆ! நன்றாயிருக்கின்றது போனவனை யழைத்துக் கொண்டு வருவதற்கா யானிங்கு வந்தனனென்று கோபித்து நமனைப்போல ஒரு தடிகொண்டு மொத்தினன் அதனால் அவ ளுயிரிழந்துவிழ அவ்விடத்திற்றானே ஓர் குப்பையைக்கீறி அவளைப் புதைததுவிட்டனன்.

அதனை யவன் மனைவிகண்டு ஆ! என்னகாரியஞ் செய்தனை; என்னகாரியஞ் செய்தனை! யென்றுகிலேசித்து, ஐயோ ஈன்றவர்க

னையுங் கொல்வாருண்டோ! பழிபாவமென்றும பார்த்திலையே! பரத்தையரின்பமே பெரிதாகப் பாவித்தனையே! இதனை அரசனறிந்தால் இப்போதே கழுத்தரியுந்தண்டனை செய்வானே! நீ அத்தண்டனையிற்பட்டு இறப்பையாயின் அப்பரத்தை யின்பத்தைத்தான் எவ்வாறு அநுபவிக்கவல்லை! யாவரும் அஞ்சத்தக்க கொடுங் காரியத்தையல்லவோ செய்தனை? ஐயையோ! இதற்கென்னசெய்வேன்! என்று துக்கித்துப் பின்னும் அவனைநோக்கிச் சொல்லுவாள். இனி நீகடைத்தேறிச் சுகத்தை யநுபவிக்குமபடியான மார்க்கத்தினைச் சொல்லுகிறேன். அதை இனிமேலாயினுங்கேள். உனக்கு வேசையர் மீதிருந்த ஆசையினாலே வீட்டிலுள்ள பாக்கியங்களெல்லா மழித்தனை? வயதுமுதிர்ந்த தாய்தந்தையரையு மிழந்தனை? இருக்கிறவீடு இன்றைக்கோ நாளைக்கோ நம்மைவிட்டு ஒழியப் போகின்றது, இனிமேல நாம காட்டிற்போயப் பிழைக்கநேருமோ அல்லது நாட்டிற்போயிரக்க நேருமோ, இவையனைத்தையும் நீ எவ்வளவுமயோசித்தனையில்லை, இவன வேசைபரத்தை கொண்டவனென்று அரசனறிவானாயின் உடனே தண்டனைவிதிப்பன் பின்னரத் தண்டனையைநீக்கிக் கொள்ளுமாறு பொருப்பினையொத்த பொருளிருந்தாலும் அவையனைத்தும பொய்யையுடையவர் புகழ்போன்று நாசமாகும், இவ்வாறு திரவியங்க ளழிந்தபின்பு அவ்வேசை அவனை நாயினுங் கடையாக நினைத்துத் தனது சுற்றேவலுக் காளாக்கி வைப்பளன்றி, முன்போல இன்பந்தருவளோ? வேசையரின்ப மநுபவித்தலினால சிலநாளைக்குள் உடலையும் உயிரையும் வாட்டும்படியான இராசநோய்வந்து சேரும். விவேகிகள் வெறுக்கத்தக்க குற்றங்களெல்லாம இப்போது வந்தடைந்தனவாகும். அகத் தன்பில்லாதவர்களைக் கூடும நின்போலவொருத்த அன்னைதான கிடைக்குமோ? இளமையினாலும், அழகினாலும், கற்பினாலும், கலப்பான உள்ளத்தினாலும், எனக்கொப்பான மதிநீசருமுண்டோ? நீ தளர்வுறவ வண்ணம் அளவற்றபோகங்களை அப் பரத்தையர்போல் வுனக்களிப்பேன் நீ என்னிடத்திற்றானே சதாகாலமும் இன்புற்றிருக்கலாம்; மேலும் சுபத்திற்கு விலக்காகச்சொல்லி யிருக்கின்ற ஆனிமுதலிய நான்குதிங்களினும், அட்டமிமுதலிய வஞ்சபருவங்களினும் நீபுணரவேண்டுமென் றிச்சைகொள்ளில உனதிச்சையின் வண்ணம்யானிசைவேனையன்றி அதை மறுக்கவல்லனோ! நீ என்னிடத்தி லெவ்வாறிருக்கினும் பழிபாவங்களில்லை, அதனால் கீர்த்தியுமுண்டு, மற்றொருவர் தலைவாயிலை மிதிக்கின் எல்லாப் பழிபாவங்களுமு உடனே

யுண்டு, ஆதலா லிவையனைத்தையுந் தீர்க்காலோசனை செய்து இனியேனுங் கடைத்தேறும் மார்க்கத்தைக் கடைப்பிடியாகக் கொள்ளுவையென்று சொல்லலும், அதுகாறும அப்பாதகன் உள்ளே அடங்காத கோபத்தினை யடக்கிவைத்துக் கொண்டு, மேலுக்கு உடன்பட்டுக் கேட்டவன் போலவிருந்து, பின்பு நமனைப்போலவெழுந்து, மெல்லமெல்ல எனக்கா புத்திசொல்லவந்தனை! யென்று பூமியில் விழும்படி அவனைத்தள்ளி உதைத்துக் கொன்றனன். பின்னர் அப்பாதகன் இக்காரணத்தை அரசனறியின் வருந்துவனென்று பயந்து வீட்டிலுள்ள ஆபரணமுதலிய எல்லாப் பொருள்களையு மெடுத்துக்கொண்டு அன்றிரவிற்றானே அந்நகரத்தை விட்டுநீங்கிப் பரத்தையை யழைத்துக்கொண்டு முனிவர்கள் வாசஞ்செய்கின்ற ஓர்வனத்தை நோக்கிச் சென்றனன்.

அவ்வனத்தில் தாலவனமுனிவர் வசிக்கின்ற ஆச்சிரமத்தின்வழியாகச் சென்று அம்முனிவர் ஸ்நானஞ் செய்யச்சென்ற சமயத்தில் உள்ளே நுழைந்து அவர்பத்தினியாகிய சுலபையென் பவளைக் கைப்பிடித்தனன். உடனே அவள் அதிக கோபங்கொண்டு அவன்கையை யுதறிப்பறித்து, விழிகளில் தீப்பொறி யெழும்படியாகச் சீறி, அடா துராத்தனே! உனது பெயரில் மாத்திரம் சுலபையேயன்றி உனக்கு யான் சுலபையா, உனது காளைப்பருவத்தினாலும், காயதிடத்தினாலும், வேளைபோதந பேராற்றினாலுமல்லவா மாதரின்பத்தை மறந்தாற்று லனுபவிக்கின்றனை? இனியவ் வின்பத்தை மறந்தும் அநுபவிக்காதவண்ணம் ஊனோநாறுகின்ற குட்டநோயுனக்குண்டாகக்கடவதென்று சபித்தனள் அவ்வாறு சபித்தலும அவன் அங்குவைத்த அடிவாங்குதற்குமுன்னமே அழுகவாய்ந்த மேனியெல்லாங் கருகநந்துக்கை, கண்முழுவதும் இரணமாகிச் சீயுஞ், செந்நீரும்பெருகி, முகம்வேறுபட்டு பார்த்தவர்கள் பயமுறும்படியான விகாரரூபத்துடனே அவ்வாசிரமத்தினின்றும் வெளிப்பட்டுப் பரத்தையிடத்தில் வந்தனன் அவள் அவனைக்கண்டவுடனும் அருவருப்புற்றவளாகி யொழிந்தனள் பின்னர் அப்பாதகன் பாதுகாப்பவரில்லாமல அக்காட்டிற்றானே அலைந்துதிரிந்து இறந்தனன்,

உடனே அவனை யமதூதர் கட்டியழைத்துக்கொண்டு சென்று தங்களரசன் சந்நிதியிலேவிட, அவன் இப்பாதகனை குற்றம்நோக்கி மனாவும் கொடிய நரகங்களிற்போட்டு வதைசெய்யக் கட்டளையொன்று ஆக்கியாபித்தனன் அக் கட்டளையின்படி அத்தூதர்கள் அவனைப்

படுத்தியபாட்டை ஹா! ஹா! யாவர்சொல்ல வல்லவர்கள். பின்னர் அவனை எல்லாநரகங்களினுந் தப்பவிடாமல் வதைசெய்து பூமியிற் பிறக்கும்படி விடுத்தார்கள் அதனை அவனனுபவித்து மிருந்தபாபச் சேடத்தினாலும் சுலபையிட்ட சாபவெச்சத்தினாலும், இப்பிறவியினுங் குட்டநோயினனு யுற்பவித்தனன். அரசனே பாவங்களென்பனவற்றிற் பயமில்லாது செல்பவனாகிய அவ்வணிகனைப் பிறரகைமிற்பாரைப் பேணுதொழிபபதுபோல ஒழித்துவருவையெனில் இவ்விமானம் விண்ணிலெழும்புமென்று தேவகணங்கள் கூற, சூரசேனமாராசன் ஈதனைத்தும் உண்மையேயென்று நிச்சயித்து, மீண்டு அவர்களைப் பணிந்தெழுந்து என்னை யாட்கொள்ள வந்த மகாநுபாவர்களே, அவ்வணிகன வரலாறிவ்வாறாயினும் அவனுக்குக் குட்டநோ யுண்டாவதற் கேதுவாயிருந்த பாவங்களைத் தீர்த்துச் சுத்தபவித்திரனாக்கி எம்மொடு அவனையுங் கூடவழைத்துக் கொண்டுபோகும்படியான உபாயத்தையே தேடவேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

அதற்குத் தேவகணங்க ளிசைந்து அக்குட்டவணிகனை அருகிலழைத்து, அவன்மீது தமதுகிருபாநோக்கத்தை பரப்பி, அவனது பாவங்களனைத்தும் பாறும்படியாகக் கணபதியென்னுந் திருமந்திரத்தை மூன்றுதரம் அவன்செவியில் உபதேசித்தனர். உடனே அவன்குட்ட சரீரத்தினின்று மகன்று தெய்வசரீரம் பெற்றுச் சுத்த பவித்திரனுகினன். பலாநடுவில வீழ்ந்தபாம்புஞ் சாகாதென் கின்ற மூதுரையின்படி பலபேருடன்கூடி யேறிய பாதகன் மீட்டும் பூமியிற் பிறந்து வருந்தாமல நற்கதியை யடைந்தனன்.

பின்னர் சூரசேனமகாராசன் தனதுநகரத்தினர் முதலாயினோர் புடைசூழும்படி விமானத்தோடு மெழுந்து ஆகாயவெளியெல்லாங் கடந்து, விநாயகலோகம்போய்ச் சேர்ந்து அனந்தகாலம் அளவற்ற போகபாக்கியங்களை நுபவித்து முடிவில் சகலதத்துவ காரணராகிய கணேசமூர்த்தியி னுடைய திவ்விய சரணாரவிந்த நிழலை யடைந்து அரிபிரமேந்திரர்களாலு மளவிடக்கூடாத பேரின்பசாகரத்தில் மூழ்கியிருந்தனன்.

○

சூரசேனன் முத்திப்படலம் - முற்றிற்று.

# பரசுராமன் வரம்பெறு படலம்.

தெவ்வரை வணக்குஞ் சூர்சேனனென் றரச னூற்றி
யவ்வுல கடைந்த வாய்மை யறைந்தனன் பரசு ராமன்
கவ்விய வன்பினூற்றுங் காதையுங் கேட்க வென்று
வவ்விய வியாதன் கேட்ப மலரணைக் கிழவன் சொல்வான்.

ஓ சவுனகாதி முனிவர்களே, விநாயக மூர்த்தியினுடைய சங்கடசதுர்த்தி விரதத்தைச் சூரசேன மகாராச னநுட்டித்து தன்னினத்தினருடன் முத்தியடைந்த வரலாற்றினைச் சொன்னோம். இப்பால் பரசுராமன் வரம்பெறு திறத்தினைச் சொல்லுவோங் கேட்பீர்களாக. முன்னர் பவளவனத்தில் பவளத்தினால் ஓர் விநாயகமூர்த்தியைப் பிரதிட்டை செய்து பூசித்துவந்த கார்த்தவீரியனானவன் பின்னர் தனது தந்தையாகிய கிருதவீரியனிடத்தில வந்து பணிந்தனன். அதற்குக் கிருதவீரியன் களிப்பெய்தி, பல ஆசீர் வசனங்களைக்கூறி, தனதுகுமாரன் விநாயக மூர்த்தியினுடைய பெருங்கருணையால் இரண்டுகால்களையும, ஆயிரங் கைகளையும், ஐந்நூறுபாணங்களையும்பெற்று வந்தமையை நினைந்து நினைந்து மனமகிழ்ந்து தனதரசுரிமையை யவன்பாலொப்பிவித்து விநாயக மூர்த்தியினுடைய திருவருளையே துணையாகக்கொண்டு அவரது திருவடித்தாமரைகளைச் சதாகாலமும இடைவிடாது தியானித்து வந்தனன், அதற்குத் தம்மைச் சரணமடைந்தோர்கள் ஆண்பாலராயினும். பெண்பாலராயினும் அவர்கட்கு இமைக்குமுன் எண்ணற்ற வரங்களை யளிக்கத்தக்க விநாயகப்பெருமான் கிருபைசுரந்து அவனைத் தம்மிடத்தி லழைத்துவருமாறு தேவகணங்களை யேவ, அவர்கள் ஆகாயமார்க்கமாக ஓர் தெய்வவிமானங் கொண்டுவர, உடனே கிருதவீரியன் தன் மனைவியாகிய சுகந்தை யென்பவளோடும் மற்றைப் பரிசனங்களோடுந் தெய்வரூபம்பெற்று அவ் விமானத்திலேறி அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபியாகிய கணேசலோகம்போய்ச்சேர்ந்து மனவாக்குக் காயங்கட்கு மெட்டுதற்கரிய பேரின்பசாகரத்தின் மூழ்கினன்.

இப்பால் கார்த்தவீரியன் அரசர்களெல்லாங் கொண்டாடத்தக்க பராக்கிரமத்தோடு உலகமுழுவதையுந் தனது ஆக்ஞா சக்கரத்து ளடக்கி அடங்காரையெல்லாம் ஐந்நூறு பாணங்களால் விசும்பேற்றி, இந்திரனுங்கண்டு நடுங்கும்படியாகவும், கவிவாணர்களெல்லாம் புகழும்படியாகவும், அளவற்ற போகங்களோடும் அரசாட்சிசெய்து தேவர்களெல்லாம் ஏவல்கேட்கும்படி வாழ்ந்திருந்தனன்

அவனிவ்வாறிருக்குங் காலையில், பொழில்களாலும் பொய்கைகளாலுஞ் சூழப்பட்டிருக்கின்ற சையவரைச்சாரலில் ஐம்பொறிகளையும் நிக்கிரகித்து அரிய தவங்களைச் செய்துகொண்டிருந்த சமதக்கினியென்னும் ஒருமுனிபுங்கவரிருந்தனர். அவருக்குக் கற்பில் தன்னையொப்பாருமிக்காருமில்லாத பெருமையினைவாய்ந்த ரேணுகையென்னும் ஓர் மனைவியிருந்தனள். இவர்கட்கு பிருகுமுனிவர் சாபத்தினால் மகாவிஷ்ணுவே பிள்ளையாகப்பிறந்து பரசுராமனென்னும் பெயரைவகித்துத் தனது தாய்தந்தையரிடத்தில் இவனின் மிக்காரொருவருமில்லையென்று சொல்லும்படி மெய்யன்புவைத்துச் சகல முனிவர்களுங் கொண்டாடத்தக்கதாக அவர்கட்குப் பணிசெய்து வாழ்கின்றநாளையில், அவன் ஓர்நாள் நைமிசாரண்ணியத்திற்குச் சென்றிருந்தனன். அச்சமயத்தில் கார்த்தவீரியனானவன் * பலபடைகளோடும் பரிசனங்களோடுமெழுந்து காட்டிற்சென்று வேட்டையாடுவான் கருதிச் சையவரைச்சாரலையடுத்து, அவ்வனங்களிற் சென்று அவ்விடங்களிலுள்ள துட்டமிருகங்களையெல்லாங் கொலைசெய்து திரும்பிவருகையில், தனக்கெதிராக வோர் தபோவனந் தோற்றக்கண்டு, அவ்வனம் யாவருடையதென்று விசாரித்து, சமதக்கினிமுனிவருடைய ஆசிர்மமென்று தெரிந்துகொண்டு ஆயுதபாணிகளோடுமிருக்கின்ற தனது சேனைகளையெல்லாம் அவ்விடத்திற்றானே நிறுத்தித் தனது மந்திரியர் நால்வரோடும் அவ்வாசிர்மத்தில் நுழைந்து சமதக்கினிமுனிவரைச் சாஷ்டாங்கமாகப்பணிந்தெழுந்து சுவாமீ! தேவரீரை இங்கு பரமசிவத்தைப்போலக் கண்டு தரிசிக்கப்பெற்ற பேற்றினால் அடியேன் சுத்த பவித்திரனாயினேன் எல்லாநன்மைகளும் அடியேற் குண்டாயினவென்று துதித்தனன் உடனே அம்முனிவர் அவனுக்காதனங்கொடுத்து, அரசனே! நீயார் இவ்விடத்திற்கு வந்தகாரணம் யாது என்றுவினவ, சுவாமீ! அடியேன் கார்த்தவீரியன், யான்வனத்தில் மிருகவேட்டையாடிவரும் போது முன்செய்த தபோபலத்தினால் எனக்கெதிரே தேவரீர் ஆசிர்மந் தோற்றக்கண்டதன்றி, இங்குவந்து தேவரீர் சினேகமுங் கிடைக்கப்பெற்றேன், இனி இதைவிட மேலானபாக்கியம் யாதென்றனன், அதற்கு முனிபுங்கவர் மனமகிழ்ந்து, அரசனே! இதுகாறும் நினது புகழுடம்பைப் பலகால் கேள்வியுற்றிருந்தனன். இப்போது நினது பூதவுடம்பையுங் காணப்பெற்றேன்: நின்வரவினால் என்மனமானது மதுபானஞ் செய்தவனை யொத்து மகிழ்ச்சியடைந்திருக்கின்றது. சூரியன் உச்சியில்வந்தனன் நீயும், வேட்டையாடி மிகவும்

* பலபடைகளாவன: மூலப்படை, கூலிப்படை, துணைப்படை, கைப்படை முதலியன.

இளைப்புற்றிருக்கின்றமையால் இவ்விடத்திற்றானே அமுதுகொண்டு சாவகாசமாய் நகரத்திற்குச் செல்லலாமென்று சொல்லினர்.

அதைக் கார்த்தவீரியன்கேட்டு,சுவாமி! தேவரீரை யொத்தவர்களிடத்தில் தண்ணீரேனும் அருந்திச் செல்லுவது தபோபலனாகும் யானோ ஒருவனாய்வந்தவனல்லன், என்னுடனே அளவற்றபேர் வந்திருக்கின்றனர். எனது நகரமும் இதற்கு நெடுந்தூரமென்று, ஆதலால் சுவாமிகள் கிருபையோடும் விடைகொடுத் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குப் பொன்னுலகத்தையும் இம்மண்ணுலகத்தில் வரவழைக்கத்தக்க வல்லபத்தையுடைய அம் முனி புங்கவர் புன்னகைகொண்டு, அரசனே, நினது சேனைகட்காகயாதொரு சிந்தனையுஞ் செய்யவேண்டுவதில்லை. உன்னோடுவந்தவர்கள் எத்தனை பேராயினும் அவர்கட்கெல்லாம் அமுதுபடைப்போம். இதனருகிற் காணுறென்னும ஓர்நதியிருக்கின்றது. நீங்கள் யாவரும் அந்த நதிக்கரையைச்சேர்ந்து சிறிதுநேரம், இளைப்பாறிக்கொண்டிருக்கலாமென்று சொல்லி விடைகொடுத்து, தமது பத்தினியாகிய ரேணுகையைக்கூவி, இத்தினம் அரசன் விருந்துண்ண வருகின்றானென்று அறிவித்து, காமதேனுவைத் தியானித்தனர். உடனே அந்தக் காமதேனுவும் வந்தது. அதனைச் சமதக்கினி முனிவரும், ரேணுகைதேவியும பணிந்து பூசைசெய்து, அதன்பால் தங்கள் விழைவை விண்ணப்பஞ் செய்துகொள்ள, அஃது உடனே அவ்விடத்தில் விண்ணுலகமுங்கண்டு நாணத்தக்க ஓர்நகரம் உண்டாக்கி அதில் நவரத்னமயமாயிராநின்ற மாடமாளிகைகள், கூடகோபுரங்கள் முதலான சிறப்புகளை நிருமித்து அறுசுவைகளோடுங் கூடிய * நால்வகை உண்டிகளையும், தாசர் தாசிகளையும், அறைகடோறும் அளவற்ற பொற்பாத்திரங்களையும அமைத்து அம்முனி புங்கவருக்கறிவித்தது. அவையனைத்தையும் அச் சமதக்கினி முனிவர்கண்டு சந்தோஷித்து அரசனை யழைத்து வருமாறு ஏவலாளர்களுக் காக்கியாபிக்க, அவர்களவ்வாறே சென்று அரசனை யழைத்தனர், உடனே அரசன் தனது பரிசனங்களோடு மெழுந்துவருகையில் நூதனமாக ஓர்நகர மிருப்பக்கண்டு, ஈதென்ன அற்புதமென்று ஆச்சரியங்கொண்டு, அந்நகரத்து வீதியின் வழியாகநடந்து, அவ் வீதிக

* நால்வகை உண்டிகளாவன: உண்ணல், தின்னல, நக்கல், பருகல என்பன. (உ-ம்) சோறுமுதலியவை உண்ணல், கறிமுதலியவை தின்னல், தேன் முதலியவை நக்கல் பாலமுதலியவை பருகல். இதனை முறையேவிழுங்கல், மெல்லல, நக்கல், குடித்தல, என்பர்.

ளெல்லாம் ஓர்பால் † பஞ்ச கருவிகள் முழக்கமும், ஓர்பால் ‡ பரத நாட்டியமுழக்கமும், ஓர்பால் சங்கீதப் பிரசங்க முழக்கமும், ஓர் பால் ¶ சத்த சுரங்களின் முழக்கமுமாக விருக்கக்கண்டு, முனிவர் ஆசிரமத்தி னருகில்வந்து, அவ்வாசிரமத்தில் இதுகாறும் தான் எவ் விடத்துங் கண்டிராத அளவற்ற விசித்திரங்களோடு நாவிற் சலமூ றும்படி உண்டாகின்ற அறுசுவைபதார்த்தங்களினுடைய பரிமளங் கள் நாற்றிசைகளினும வீசக்கண்டு ஈதென்ன விபரீதமென்று மதி மயங்கி, அவையனைத்தையும் தன்னாற் கண்டறியக் கூடாதவனாகி, உள்ளே நுழைந்து, சமதக்கினிமுனிவருடைய பாதங்களிற் சாஷ் டாங்கமாக வணங்கி, அவரது உத்தரவின்படி தனது பரிசனங்க ளோடு மிருந்து போஜனஞ்செய்து கையலம்பி, உண்ட இளைப்பா றியபின்னர் மீட்டுஞ் சமதக்கினிமுனிவரை யடைந்து, சுவாமீ! நான் முன்னர் வந்தபோது இவ்வாசிரமங் காடாக விருந்ததே! யான் ஆற் றிற் சென்று திரும்பி வருவதற்குமுன் அளவற்ற மாட்சிமையோடு நகரமாயிற்றே, அன்றியுந் தேடக்கிடையாத திரவியங்க ளெல்லாம் எங்கும் நிறைந்திருக்கின்றதே, ஒருவனுக் கொருத்தி நின்று உபச ரிப்பதுபோல அவ் வவர்களுக்கு அவ்வவ ரிச்சைப்படி அமுதூட் டத்தக்க பரிச ரகா அளவற்றபேர்க ளிருக்கின்றார்களே, இவைய னைத்தும் ஓர் * நிமைப்போதில் எவ்வாறு உண்டாயினவோ? மாயா விசித்திரமோ? அல்லது தேவரீருடை தவமகிமையோ? இவ் வற்பு தத்தை அடியேற்குணர்த்தி யருளவேண்டுமென்று கேட்டுக் கொ ண்டனன்.

அதற்கமமுனி புங்கவர் புன்னகைசெய்து அரசனே! இவைய னைத்தும் மாயாவிசித்திரமென் றெண்ணற்க. நமது தவமகிமையி

---

† பஞ்சகருவிகளாவன: தோறகருவி, துளைககருவி, நரம்புக்கருவி, கஞ் சக்கருவி என்பன.

‡ பரதநாட்டிய மாவன: ப-பதம, ர-ராகம, த-தாளம, நாட்டியம்-நட னம் என்பர்.

¶ சத்தசுரஙகளாவன: குரல, துத்தம, கைக்கிளை, உழை, இளி, விளரி தாரம என்பன இஃது மிடற்றற குரலும, நாவினுற் றுத்தமும், அண்ணத் தாற கைக்கிளையும, சிரத்தால உழையும, நெற்றியால்இளியும, நெஞ்சாலவிள ரியும, மூக்காற றாரமும பிறக்கும. இவையே எழ்சுர மெனவும, வீணையில் ஏழ்நரம் பெனவும் கூறும இசையிலக்கண வகையதென்ப.

* நிமைப்போது - இமைப்பொழுது இஃது ஓர் மாத்திரைகாலமென்ப. அன்றி கண்ணொடிப் பொழுது, அலலது கண்ணொடிப் பொழுது எனவுங் கூறுவர்.

னால் இவ்வளவு காமதேனுவைக் கொண்டு நடாத்தியிருக்கின்றனா மென் றறியக்கடவை யென்றனர். அதனை யரசன்கேட்டலும் †நெட்டுயிர்ப் பெறிந்து, மனத்திற் பொறாமைகொண்டு, எவ்விதத்தி லேனும் அக்காமதேனுவை நாம் கைக்கொள்ளவேண்டு மென்றுநி னைத்தவனாய், உடனே முனிவரைப்பார்த்து, பசிக்குக் காய், கனி மு தலியவைகளை யருந்திச் சரீரத்தை யொடுக்கி, ஞானத்திற்றவஞ்செய் துகொண்டிருக்கின்ற தேவரீருக்கு அக்காமதேனுவினால் யாதொரு பயனுமில்லை. எல்லா வுலகங்கட்கும் ஏகசக்கிரேஸ்வரனா யிருக்கின் றஎனக்கு அக்காமதேனுவைக் கொடுத்தீராகில் அஃது அநேககா ரியங்களுக்கு உபயோகமாகும். மேலும் அக்காமதேனு என்னிடத்தி லிருப்பது நியாயமாகவு மிருக்கின்றது. ஆதலால் எனக்கு நீர் அத னைத் தயவுசெய்து கொடுத்தருளல் வேண்டும். கொடாவிட்டால் பின்னர் பலாத்காரமாய்க் கொண்டு போவேனென்று சொன்னான். அதைக்கேட்ட முனிபுங்கவர் மிகுந்த கோபங்கொண்டு, வெகுண்டுச் செறிந்து, அரசனே! (பிச்சைக்கு வந்தவன் பெண்டுபிடித்ததுபோ ல) நீநினைத்த காரியம் மிகநன்று, ஆ! ஆ! எல்லாவுலகத்தையும், ஏக சக்கிரத்திலாளுகின்ற ‡ மன்னவர்களுக்குணர்த்திய நீதிநூல் களில் அன்னியருடைய பொருளை பலாத்கரிக்குமாறு கூறியிருக்கின்றன வோ? நின்னைக் கல்வியிற் சிறந்தவனென்றும் மநுநீதி தவறாதவ னென்றும், ஒழுக்க முதலியநன்னடைகளை யுடையவனென்றுங் கருதியிருந்தனன். நீ இராப்போதிலுற்ற நிழல்போல அற்பகு ணத்தையுடையவனாயினை? ஆயினும், எனது வசமாயிருக்கின்ற அக் காமதேனுவை நினது வசமாக்கிக் கொள்ள நெறியுண்டா யிருக்கு மாயின அதைக்குறித் தென்னைக் கேட்பதென்ன? தாமதமில்லா மல் நின்வசமாக்கிக் கொள்ளலா மென்று சொல்லினர். அதை அவ் வஞ்ச நினைவைக்கொண்ட அரசன் கேட்டு உடனே தனது பரிச னங்கட்குக் கண்சைகை காட்டினான். அதை அப்பரிசனங்கள் கண் டுகாமதேனுவி னருகிற் சென்றார்கள். அதனால் அரசன் சமதக்கினி முனிவருக்குப் பகையாயினனென்று காமதேனுவறிந்துகொண்டு, மிகுந்த கோபத்தினால் நெட்டுயிர்ப் பெறிந்தது. அந்தஉயிர்ப்பினால் அருகில்வந்த எல்லாச் சனங்களுஞ் சுருண்டு மாய்ந்து போயினர்.

---

† நெடு உயிர்ப்பு-பெருமூச்சு.

‡ மன்னர்க்குணர்த்திய நீதிநூல் மனுவாதி வசிட்டாந்தமாகிய தரும நூல் பதினெட்டு மென்ப

அதைக்கண்ட கார்த்தவீரியன் மிகுந்த கோபாவேசங்கொண்டு மீண்டும் நால்வகைச் சேனைகளை வரவழைத்து அதன்மேல் ஏவினன்.

அச்சேனைகளைக் காமதேனு கண்டு தனது மயிரைச் சிலிர்க்க, உடனே ஒவ்வொரு மயிரிலிருந்து அளவற்ற வீரர்கள் சர்வாயுத பாணிகளாய் யுத்தசன்னத்தர் இரதகஜதுரக பதாதிகளு முண்டாயினர். பின்னர், இரண்டு சேனைகளுங் கலந்து போர்செய்து ஒருகையிற் காமதேனுவின் சேனைகள் அரசனுடைய சேனைகளையெல்லாங் கொன்று எங்கும் உதிரவெள்ளம் ஓடும்படியாகச் செய்தன, அதில் எஞ்சிநின்ற சேனைகள் மீட்டும் பதிபாதம் அணுகியோட, அதனை அரசன் கண்டு நமக்குத் தோல்வி நேருமா வென்று அச்சேனைகட்குக் கையமர்த்தி, ஊழிக் காலத்தி லுண்டாகின்ற பேரொலியைப் போலச் சங்கநாதஞ்செய்தான். அதனாற் பல்லுலக சமுத்திரங்கள் முதலானவைகளெல்லாங் கலங்கிச் சகலமலைகளுந் தாழ்ந்திட்ட கம்போத்தகளானதன. இவ்வாறுலகமெல்லாந் தளர்ந்தும் காமதேனுவினுடைய சேனைகள் சிறிதுந் தளராதிருக்கின்றதை அரசன்பார்த்து தமது வெற்றி நன்றாயிருக்கின்றதென்று நினைத்து மிகுந்த கோபாவேசங்கொண்டு, கரத்தில் வில்லையெடுத்து, ஒவ்வொரு எல்லைக்கு ஐந்நூறு ஐந்நூறு பாணங்களைப் பிரயோகித்தான், அப்பாணங்கள் ஊழிக்காலத்தி லுண்டாகின்ற மேகங்களையெல்லாங் கலங்கச்செய்யவல்லவைகளாயிருந்தும், அவைகளை அக்காமதேனுவின் சேனைகள் ஒதுக்கி, அரசன்மீது அளவற்ற பாணங்களைப் பொழிந்தார்கள் இவ்வாறுதனது படைகளைநாசஞ்செய்ததன்றித் தன்மீதும் அளவற்ற பாணங்களை ஏவியதனால் கார்த்தவீரியனுக்குப் பட்டகோபமன்றி, இனி எவ்விதத்தினும் அம்முனிவரைக் கொல்லவேண்டுமென்று தன்மனத்தில் வயிராக்கியங்கொண்டு ஓடிப்போயினன் அக்காமதேனுவும் அரசன் இனித் திரும்பானென்று நிச்சயித்துக்கொண்டு, சமதக்கினி முனிவரிடத்தில் விடைபெற்றுத் தனது சேனைகளோடு சுவர்க்கலோகம்போயச்சேர்ந்தது பின்னர் சமதக்கினிமுனிவர் முன்போலவே பஞ்சாட்சரத்தைச் செபஞ்செய்துகொண்டு தவத்தி லிருந்தனர். இவ்வாறு சிலநாள் செல்ல, ஒருநாள் கார்த்தவீரியனானவன் அம்முனிபுங்கவர் தவத்தி லிருக்கின்ற சமயத்தில் அவரருகிற்சென்று ஓர் வாளினால் அவருயிரை மாய்த்துவிட்டனன்.

அதை யம்முனிவர் பத்தினியாகிய ரேணுகைகண்டு, அடா துரோகி! உண்டவீட்டிற்கு இரண்டகஞ்செய்வோருள் உனக்கொப்பான பாவி எவ்விடத்திலுமுண்டோ? உன் குலமெல்லாம் நாசமா

கும்படியான வகையைத் தேடிக்கொண்டனையே? இந்த அநியாயம் எந்த அரசர்கட்கேனு மடுக்குமோ? "தவஞ்செய்வோரைக் கொல்வதோ தரணிவேந்தர்களுடைய முறைமையென்றுசொல்ல, அவள்மீதும் இருபத்தோரம்புகளை யேவினன். பின்னர் அவள் அவைகளைச் சகிக்கமாட்டாது கண்களில் நீர்த்தாரைபெருகும்படியாகச் சோர்ந்துபூமியில்வீழ்ந்து தனது காதலரைத்தியானஞ்செய்துகொண்டு நைமிசவனத்திற்குச் சென்றதனது புத்திரனாகிய ராமன் வருமளவும் உயிர் வைத்திருந்தனள். அவனுந்தற்செயலாய் அவ்விடத்தைவிட்டு நீங்கித்தனது ஆசிரமத்திற்கு வந்தனன். அப்போ தவ் வாசிரமமானது அனையான மில்லாத ஊரைப்போலவும், மகாமேருவில்லாத உலகம்போலவும், இந்திரனில்லாத வசந்தமண்டபத்தைப்போலவுமிருந்ததன்றி, வேதகோஷ மில்லாமலும், வேள்விப்புகை யெழாமலும் தனது தந்தையைச் சதாகாலமுந்தொழுதுச் செல்கின்ற சீடர் கூட்டம் நெருங்காமலும், புல்லெனவிருக்கக்கண்டு, என்ன துன்பங்கள்நேர்ந்தனவோ வென்கின்றமனவருத்தத்தோடு உள்ளேநுழைந்து தந்தைவாளினால் உயிர் நீங்கியிருப்பதையும், தனது தாய் அம்புகள் பாயப்பட்டுச் சோர்ந்து வீழ்ந்திருப்பதையுங்கண்டு இவர்கள் இவ்வாறுக்கினவர் யாவரென்றுநினைந்துநினைந்து, அழுதழுது, புழுதிகள் உடலெங்கு மூடும்படியாகப் பூமியில்விழுந்து, புரண்டு, மூர்ச்சையாகி, எழுதப்பட்ட சித்திரம்போலச் சிறிதுநேர மசைவற்றிருந்து, பின்னர் தெளிந்தெழுந்து, அவர்கள் திருவடிகளைப் பலமுறை தொழுது, துக்கசாகரத்தில் மூழ்கி, ஐயோ! இந்திரன் முதலாயினோரும் இறைஞ்சி வழிபடத்தக்க உங்கள் தவமகிமையும், கற்பின பெருமையும் இவ்வாறு உங்களுயிர் பிரியுமாறு எவ்[illegible] மொளித்தனவோவென்று அலறிச் சிறிது உயிர் தாங்கிக் கண்களிலநீரைக் கவிழ்த்துக்கொண் டிருக்கின்ற தாயினருகில்வந்து அவள் சிரத்தைத்தனது துடையின்மீது வைத்து, என்னை யருமையாயீன்றெடுத்த அன்னையே! உங்கட்குயாதுகாரணத்தால் இவ்வாபத்து நேர்ந்ததோ? அதனை எனக்குச் சொல்லவேண்டு மென்று புலம்பித்தனது கையாற்றடவ, அதை அழகில் இலக்குமியை வென்றவளாகிய ரேணுகைகேட்டுச் சிறிதுதெளிவுற்று, மைந்தனே! இவ்வுலகத்திற்கரசனாகிய கார்த்தவீரியன் வேட்டையாடி வருகையில் நமதாசிரமத்தை நோக்கிவர அவனுக்குக் காமதேனுவினால் சகலசிறப்போடும் யாங்கள் விருந்தூட்டப் பின்னரவன் அக்காமதேனுவைக்கைக்கொள்ளுமாறு அதனோடுயுத்தஞ்செய்து தோல்வியுற்ற

னன். அதனால் எங்களை எவ்விதத்தேனும் கொல்லவேண்டுமென்
கின்ற வெஞ்சினத்தால் சமயம்பார்த்துக் கொன்றுவிட்டுச் சென்ற
னன் இக்காரணத்தையுனக் கறிவிக்கும் நிமித்தமே இதுகாறும்
எனது உயிரைத் தாங்கியிருந்தனன் அப் பாதகன் எனதுடலில்
இருபத்தோரம்புகளை யெய்தானாதலால் அவன் வம்சத்தில முடிசூடும்
மன்னர்களைமூவேழ் தலைமுறைவரையிற்சாடி, அவர் சரீரங்களைச்
சத்த பூமிகளினும் பரவும்படி வீசி எறிந்து, அந்தணர் குலத்தைத்
தெய்வகுலமென்று சொல்லுமாறுவிருத்திசெய்யக்கடவை. எங்கட்
குநிறைவேற்ற வேண்டியகிரியைகளைத் தேத்தாத்திரிய முனிவரால்
செய்து நிறைவேற்றக்கடவை. யானுன்னைக்காண்டலும், புத்திரமு
கங்கண்டவனாக கோப்பாயினேன் இனிமேனது காதலர்மாட்டுச்செ
லுகின்றேனென்று விடைகொடுத்து உயிர்பிரிந்தனன்.

இவ்வாறு ரேணுகை உள்ளமுடைந்து கூறியவசனங்கள் பரசி
ராமன் செவியிலேறலும், துள்ளியெழுந்த தழற்கொழுந்துக் கொப்
பாகிய கோபமானது தலைக்கேறி வெருத்த விழிகள் சிவக்கும்படியா
கினைந்து, எல்லாவுலகத்தையும் எடுத்து விழுங்கிவிடுவான்போலத்
துள்ளி அரசன் அந்தணரைக் கொன்றானென்று சொல்லுஞ் சிறு
மைமாறவும், அந்தணரே தவத்திற் சிறந்தவரென்று சொல்லும்
பெருமை மீறவும், இனி நமது தாய்தந்தையரை யமனைப்போலிருந்
துகொன்ற மகாபாதகனுடைய குலமாத்திரமேயன்றி, அரசர்களெ
ன்று சொல்லப்படுகின்றஎல்லாக குலங்களையும் வேருடன்கெல்லிக்
கொல்லுவேனென்று சபதஞ்செய்துகொண்டு, அடுத்தவனத்தில் அரியத
வஞ்செய்துகொண்டிருக்கின்ற தேத்தாத்திரிய முனிவரையடைந்
து நடந்த காரியங்களனைத்தையும் அவருக்கறிவித்து, பின்னர்
அவரைத் தமதாசிரமத்திலழைத்துவந்து அவரால் தனது தாய்தந்
தையர்களுக்கு நிறைவேற்றவேண்டிய நித்தியக் கிரியைகளைப் பரதி
தினம் வேதாகம முறைமைப்படி நிறைவேற்றி வருகையில், ஐந்தா
நாளிரவில தான நித்திரை செய்யுங்காலத்தில் தன்மீதோர் புலிவந்
து பாயச் சொப்பனங்கண்டு வாய்குழறி, தேகம்நடுக்குற்று, அம்மா
அம்மா! என்று கூவி விழித்துக் கொண்டனன். அக்கூக்குரலை
அவன் தாயாகிய ரேணுகைகேட்டுத்தன்னை யிடையிலழைத்த கார
ணத்தால் இருண்டு சுருண்டு தலைத்தாழ்ப்பசந்து தேனொழுகின்
றமலர்களை யணிந்திருக்கின்ற கூந்தலும், ஒள்ளிய நுதலும், சுடர்
விட்டெரிக்குங்குண்டலங்களை யணிந்த செவியும், வேலைநிகர்த்தவிழி
யும், குமிழம் புட்பத்தினை யொத்தநாசியும், பவளம்போன்ற வாயும்

தோன்றும்படியாக அவனெதிற் றனதுமுகத்தைமாத்திரம் ஆகாய வெளியிற் காட்டியிருந்தனள். அதனைத்தேத்தாத்திரிய முனிவருங் கண்டு, அன்பிற்சிறந்த இராமனே! உனது தாயைப் பதின்மூன்றுந் தினத்தி லழையாது மத்தியிலழைத்தனை யாதலால் தனது முகத்தைமாத்திரம் ஆகாயவெளியிற் காட்டினள். ஆயினுங் குற்றமில்லை இனி நடத்தவேண்டிய கருமங்களையுஞ் சிறப்பெய்த நடாத்துவையாயின்மற்ற அவையவங்களுஞ் சரியாகி இப்பூலைகில் மதசம்பந்தப்பட்ட எல்லாமனுதர்களுந தொழற்குறிய தேவதையாகவாழ்குவளென்றுகூற, அவ்வாறே இராமன் மற்றைய நாட்களின் கிரியைகளைக் குறைவில்லாமற் செய்து முடித்தனன். பின்னர் தனதுதந்தையாகிய ஜமதக்கினிமுனிவர் பிரமனுலகம்போய்ச் சேர்ந்தனர் இரேணுகையானவள் தனது வடிவ முழுவதும அடைந்து உலகமெல்லால் வணங்கும் படியாகத் தெய்வத்தன்மையை யடைந்தனள். தேத்தாத்திரியர் தம தாசிரமத்திற் கெழுந்தருளினர்

இப்பால அரசகுலங்களை அடியுடன் களையச் சபதங்கொண்டிருக்கின்ற இராமன் ஒருநாள் தனது அன்னையைவருமாறு தியானிக்க, அவ்வாவற அவள் வந்து. மைந்தனே! நீநினைத்தகாரியமறிந்து கொண்டனன். அதனைமுடிக்கும் வகையினைக் சொல்லக்கேள்: நீ இந்த நிமிடத்தில் கைலாயவரையையடுத்து அரவையுஞ் சந்திரனையுமிலைந்த சடாமகுடத்தினை யுடையசிவபெருமானைப்பணிந்து அவர்பேரருளைப்பெற்று உன்னிஷ்டகதை இடையூறின்றி நிறைவேற்றக் கடவையென்று சொல்லி யகன்றனள் அசசொல்லை இராமன் சிரமேற்கொண்டு உடனே கைலாயவடரயிற் சென்றுசிவபெருமானுடைய திருவடிகளைப் பலமுறை பணிந்து துதிசெய்ய, அதற்குக் கர்த்தன கிருபை கூர்ந்துஅவன்மீது தமதுகடைக்கண்சாத்திச் சடாக்கர மந்திரத்தை ஆமமமுறைமைப்படி அவனுக்குபதேசித்து, இராமனே தத்துவகாரணமாகியும, தத்துவசொரூபமாகியும், தத்துவமுதலாகியும், தத்துவமுடிவாகியும் இருநது பிரமன் முதலிய எங்கள் மூவருக்கும் முத்தொழி லளித்தவர் விநாயகப் பெருமானாகும். அவரை நின்மனதிற் றியானித்து அவருக்குரிய இம் மகாமந்திரத்தை இடைவிடாது செபித்துவருவையெனில், நீகருதிவந்த கோரிக்கைவிரைவில் நிறைவேறுமென்றுதிருவாய்மலர்ந்தனர். அதனை இராமன் செவிக்கமுதாகக கேட்டு, மீட்டுந தொழுதெழுந்து விடைபெற்று, இம்மையிற்றானே எல்லாநன்மைகளையுந தாத்தக்கமயூரமென்கிற தலத்தையடைந்து விநாயகமூர்த்தியினுடைய திருவடித்

தாமரைகளை பூசனைசெய்து பேரன்பினோடுஞ் சடாக்கரமந்திரத்தை முறைமைப்படி தியானித்து ஐம்புலாதிகளையும் அடக்கி அரியதவஞ் செய்துகொண்டிருந்தனன். அத் தவத்திற்கு விநாயகக் கடவுள் கிருபைகூர்ந்து பாசு, தாமரைமலர், ஒற்றைக்கோடு, மோதகம் என்னுமிவைகளை யேந்திய நான்கு திருக் கரங்களோடு, பூரணலீலை யேந்திய திக்கரமுமவிளங்க அனனைதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே தேவர்களெல்லாம ஜய ஜய வென்று போற்றி புட்பவருடம்பொழிந்தார்கள் பின்னர் இராமன் சுவாமியைக்கண்டவுடன் திடுக்கிட்டெழுந்து, விழிகளில் ஆனந்த பாஷ்ப முண்டாக, அன்பு அகத்தையுருக்க, உரைகள் தடுமாற்றங்கொள்ள, உடலெங்கும் உரோமாஞ்சிதம பூப்ப, ஆன்மாக்களை ஆணவ விருளினின்று மெடுத்து ஆட்கொள்ள வல்லகணேசரது திருவடித் தாமரைகளை வணங்கி அனந்தமுறை வலமவந்து தேன்மாரி பெய்தாலென்ன அளவற்ற வேதாகமங்களினுற றுதிசெய்து நின்றனன். அதற்கு விநாயகக்கடவுள் சந்தோஷித்து, அன்பனே! உனக்கு வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய் மலர்ந்தருள, இராமன்மீட்டுந் தொழுதெழுந்து, சுவாமீ! எனது குரவர்களைக் கொன்ற கார்த்தவீரியனுடையகுலமேயன்றி அரசர் குலமென்று சொல்லப் படுகின்ற யாவரையுங் களைந்துவெற்றிகொள்ளுமாறு அடியேற்குக் கிருபை புரிய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து கொணடனன். அவ்வாறே கணேசமூர்த்தி திருவருள்பாலிதது மாறுதவலியும, மழுவாயுதமுமுந்தந்து, என்றுஞ் சிரஞ்சீவியா யிருக்குமபடி வரங்கொடுத்து, அவனுக்குப் பரசுராமனென்னுந் திரு நாமமு மளித்து, அடியரா யிருக்கின்ற பேர்கள் மிக்கபிழைகள் செய்தாலும் அவைகளைப்பொறுத்து ஆட்கொள்ளுகவென்று திருவாய் மலர்ந்து கரந்தருளினர். இப்பால் பரசுராமன் கார்த்தவீரியன் முதலாயுள்ள அரசர்குலங்களையெல்லாம் அழிஞ்செய்து அவர்களாண்டு கொண்டிருந்த உலகங்களை அந்தணர்கட் களித்துத் தான்கொண்டிருந்தசபதத்தை நிறைவேற்றிச்சொல்லுதற்கரிய பெருந்தவங்களைச்செய்துகொண்டு என்றுஆ சிரஞ்சீவியாக உலகத்தின்கண் வசித்திருக்கின்றனன்.

பரசுராமன் வரம்பெறு படலம் முற்றிற்று.

# இராவணன் பூசித்தபடலம்.

அங்கா ரகநற் சதுர்த்தியொடு மறுகு சமிமந் தாரமுமெய்த்
தங்கா தரவி னனுட்டித்தோர் தமையும் விளங்கத் தெரித்தனையால்
கங்கா சுகவிற் படைச்சோம காந்தா வின்னுஞ் சிலகாதை
யிங்கா தரவிற் கேட்டியென வியம்பும் பிருகு மாதவனே.

திருவருட் செல்வராகிய முனிவர்களே! சமதக்கினி முனிவர புத்திரனாகிய பரசுராமன் விநாயக மூர்த்தியை யனுட்டித்து முடிவற்ற வரங்களைப்பெற்ற முறைமையைச் சொன்னோம். இப்பால் இராவணன் உபாசித்த திறத்தினைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

முன்னொரு காலத்தில இலங்கைக்கரசனாகிய இராவணனென்பவன் ஆகாயமுகட்டையளாவிய வெள்ளிபங்கிரியையடுத்து, அதனிலோர்சாரிருந்து அரியதவத்தினைச்செய்துகொண்டிருக்க,கொன்றையும், அறுகையும்புனைந்த சடாமகுடத்தினையுடைய சிவபெருமான் அதற்குக் கிருபைகூர்ந்து, அவனெதிற் பிரத்தியட்ச மாயினார். உடனே இராவணன் விரைந்தெழுந்து ஆடிப்பாடி அனந்தமுறை வலம்வந்து சயசயவென்று வேதாகமங்களாற் றுதிசெய்து. விழிகளில் ஊற்றெடுத்ததுபோல ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, உடலெலங்கும் புளகாங்கித முற்று, நெக்குவிட்டு, நெஞ்ச முருகி, கரங்களைச் சிரமீதுகூப்பிநின்றனன். அதனைக் கர்த்தர் கண்டு, உனக்கு வேண்டுவனகேள் தருகின்றோமென்று திருவாய்மலர்தலும், இராவணன் டுங் தொழுதெழுந்து, சுவாமி! சொர்க்க முதலிய எல்லாவுலகங்களுமழியுங்காலத்திலும் இலங்காபுரிமாத்திரம் அழியாதுநிலைபெற்றிருக்க வரந்தர வேண்டு மென்று பிரார்த்தித்தனன. அதற்குக் கர்த்தன் அவ்வாறே கிருபைகூர்ந்து ஓர் சிவலிங்கத்தையவன் கரத்திற் றந்து, இராவணனே! இவ்விலிங்கத்தை உனது இலங்கையபதியிற் பிரதிட்டைசெய்து பத்தியோடு பூசித்து வரக்கடவை. அன்றியுமதனை அப்பதிக்குக் கொண்டு செல்கின்றபோது சித்த சுத்தியோடு வாகனத்தின் மீதேறாது செல்லவேண்டும் ; அவ்வாறுசெல்லும்போது வழியிற்பூமியின்கண் வைப்பையெனில மீட்டும் உன்கையில அகப்படா தழுந்தும். இதனை நன்றாய்க் கவனிக்கக்கடவையென்று திருவாய் மலர்ந்துகரந்தருளினார். பின்னர் இராவணன்பெருமகிழ்ச்சிகொண்டு சிவபிரானளித்தருளிய சிவலிங்கத்தைப் பயபத்தியோடுங் கரத்திலேந்தி அளவற்ற காடுகளையும் மலைகளையுங் கடந்து

கடல்மத்தியிலிருக்கின்ற தனது இலங்காபுரியை நோக்கிச்செல்லு கையில இக்காரணத்தை தேவேந்திரனறிந்து, ஐயோ! இராவணன அச்சிவலிங்கத்தை இலங்கையில் வைத்துப் பூசிப்பானாயின் எக்காலத்திலும் அவன் அழியானே! இனி இதற்கெனனசெய்ப வலலோமென்று பயந்து முப்பத்து முக்கோடி தேவாகளுந்தன்னைப் புடைசூழும்படியாகக் கயிலையங்கிரியை யடைந்து அங்கெழுந்தருளியிருக்கின்ற விநாயகப பெருமானுடைய திருவடிகளைப் பணிந்தெழுந்து தெய்வகங்கைபாலவருக் கபிடேகமாட்டி கற்பகமலர்களைக்கொண்டருச்சித்து அமுதத்தை நிவேதனஞ்செய்து சோடசவுபசாரங்களோடும் பூசித்தனன். அதற்கு விநாயகப்பெருமான் கிருபைசுரந்து இந்திரனே! நீயாதுவேண்டிவந்தனை யென்றுவினவ. இந்திரனமீட்டுந் தொழுதெழுந்து, சுவாமி! இராவணன் சிவபெருமானிடத்திலிருந்து ஓர் லிங்கமபெற்று அதனைத்தனது இலங்கை நகரில்வைத்துப பூசிககச் செல்கின்றனன் அவ்வாறேவைத்துபபூசிப்பானாயின் அவனுக்கு எக்காலத்து மரணமில்லையாம் ஆகவே தேவர்குலங்களை விருத்தியெய்தவொட்டாது நாசமாக்குவான ஆதலால் அவன் அப்பதியைச்சேருமுன்னமே ஓரிடையூறவனுக் குண்டாக்கியாங்களோர் துன்பமடையாவண்ணந் தேவரீர் காத்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தனன.

அதற்குக் கணேசமூர்த்தி யிசைந்து உடனே வருணனைக்கூவி நீ இராவணன்வயிற்றில நீர்சுரபபிக்கக கடவையெனறு யேவினா. அவனும் அவ்வாறே அவனவயிற்றில் நீர் சுரப்பிகக கணேசமூர்த்தியானவர் ஓர் பிராமணபபிள்ளை வடிவங்கொண்டு, தமதுதிருவடிகளை நிலமகள் சூடும்படியாக நடந்து இராவணனெதிரில் வந்தனர். அச்சமயத்தில இராவணன சலபாதையெச்சகிக்கமாட்டாது சிவபிரானருளிய கட்டளையை யெண்ணி யெண்ணிதகன் னெதிரிலவருகின்ற பிராமணப்பிள்ளையைநோக்கிப் பின்னுருங்காரியத்தையறியாதவனாய் அப்பிள்ளையோடு இனியவார்த்தைகளாடி, அப்பா! எனக்குச் சலபாதை மேலிட்டிருக்கின்றது, ஊரோ நெடுந் தூரத்திலிருக்கின்றது, எதிரில யாவரையுங்காணேன் ஆதலால் உன்மீதுகிருபைசெய்து யான்ஜலஸ்பரிசனஞ்செய்துவருமளவும் இச்சிவலிங்கதனை உனதுகரத்திற்றாங்கியிருக்க வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு அந்தணச்சிறுவனை யொத்தெழுந்தருளிய கணேச மூர்த்தி சொலலுவார். ஐயா! யானோபிள்ளைமைப்பருவமுடையேன். எனக்கோ இச்சிவலிங்கத்தைத்தாங்கத்தக்கவலியிலலை, நீயோ அதனை என்னி

டத்திற் பலாத்காரமாய்த் தருகின்றனே, இவ்வித வாபத்தும்வேளை யில் அதனைத் தாங்கவேண்டுவதே ஒருவனுக்குத்தகைமையாயினும் நான் மிக்கவும் சிறியனாயிருத்தலால் உன்னை முன்காற் கப்பிடுவேன். அதற்குள் வந்து அதனைப் பெற்றுக்கொள்ளல்வேண்டும்; பெறுமாற் போவையெனில் உடனே நிலத்தில் வைத்துவிடுவேனென்று திருவாய்மலர்ந்தனர். அவையனைத்தையும் இராவணன் கேட்டு அப்படியே ஆகவென்று அவர்கரத்தில் அச்சிவலிங்கத்தைக்கொடுத்து ஜலஸ்பரிசத்திற்குச்செல்ல, அவன் வருவதற்கு முன்னமே மூன்றுதரங்கூவி அதனை நிலத்தில் வைத்துவிட்டனர்.

பின்னர் இராவணன் விரைவிலோடிவந்து தனது மலைபோன்ற இரு கரங்களினாலும் அதனைக் கெல்லியெடுக்க, அது முன்னொரு காலத்தில் திருமால் வராகரூபமாய்ச் சென்று தேடியுங் காணாக் கருமையனவா யிருந்த சிவபெருமானுடைய திருவடிகளைப்போல ஊடுருவி கற்பின்மகளிருள்ளத்தைப்போல அவன் கரங்களிற் சிக்காதிருந்தது. அதனைக் கெல்லுந்தோறும் அவன்கரங்கள் வாடும்படி நிலமும் நயப்பெய்தாதிருந்தது. அதனால் இராவணன் மனவருத்த முற்று மீட்டுந் தனது கரங்களை வலியுடன் பாய்ச்சி யிழுக்க அப்போதச் சிவலிங்கம் பசுவின் காதுபோற் குழைந்து பிரகாசித்தது. அக்காரணத்தால் விண்ணுலகோர் மண்ணுலகோர் முதலியயாவரும் அப்பதியைக் * கோகர்னமென்று சொல்லுவார்கள். பின்னர் இராவணன் தன்னுற் கூடியவரையில் முயன்றும் அச் சிவலிங்கந் தன்கரத்திற் சிக்காதிருந்தமையால். அம்மாம இப்பூதமகா பலமுள்ளதென்று வியந்தனன். அதனாற்சிவலிங்கம் மாபலலிங்கமென்னும் மற்றொருபெயர்பெற்றது. பின்பால் இராவணன் அச்சிவலிங்கத்தை நிலத்தில் வைத்த பிராமணப் பிள்ளையின்மீது கோபங்கொண்டு தனது கையால் அவர்சிரத்திலோங்கிக் குட்டினான்.

* கோகர்னம்—கோ-பசு, கர்னம்-காது, பசுவின் காதைப்போலக்குழைவுபட்ட சிவலிங்கமுள்ளதாகலின் அச்க்ஷேத்திரத்திற்கும் கோகர்னமெனப் பெயர்வழங்கப்பெற்றன. இஃது துளுவநாட்டிலுள்ள சிவக்ஷேத்திரங்களுள் தேவாரம்பெற்ற திருத்தலம். சுவாமிபெயர்-மகாபலேசுவரர், அம்மையார் பெயர்-பெரியநாயகி, இச்சிவலிங்கப்பிரதிட்டை விநாயகராற் செய்தமையால் விநாயக லிங்கமெனவும், மகாபல லிங்கமெனவும், கோகர்ன லிங்கமெனவுங் கூறுவ. அத் தலவிநாயகர்பெயர் விப்பிரவிநாயகர் என்ப.

உடனே கணேசமூர்த்தியானவர் அப் பிராமணப்பிள்ளை வடிவத்தைமாற்றித் தமது நிசரூபத்தைக்கொண்டு அவ் விராவணனைத் துதிக்கரத்தினு லெடுத்து அவன் சிரமானது அண்டமுகட்டில் முட்டும்படி மேலேயெறிந்தும் மீட்டுத் தமது திருவடிகளால் அவன் பாதாளலோகத்தி லழுந்தும்படி நிலத்தில்விழத் தள்ளியும், இவ்வாறு பந்தாடுவதுபோல அவன் சரீரந்துள்ள என்புகளெல்லாம் நெக்கு விடும்படி ஆடினார். அதனை இராவணன் சகிக்கமாட்டாது கூக்குர லிட்டு,

பொய்தவி ரடியார் செய்யும் புன்மையும் பொறுப்பாயோலங்
கைதவ மனத்தார் செய்யுங் கடப்பாடும் வெறுப்பா யோலஞ்
செய்தவென் பிழையுங் காத்துத் திருவருள் செறிப்பா யோலம்
வெய்தருள் புரியா யாகின் விளிகுவே னோல மென்றான்.

பொய்தவிர்ந்த அடியவர்கள்செய்யும் புன்மையினைப் பொறுப் பவனே! அபயம். கைதவமுடையோர்களசெய்யுங் கடப்பாடை யெல்லாம் வெறுப்பவனே! அபயம் வேண்டி வந்தித்தோர்கட்கு விக்கினங் கொடுப்பவனே! அபயம் வேண்டியாதவர்கட்கு விக்கி னங் கொடுப்பவனே! அபயம். என்று இவ்வாறு அனந்தமுறை ஓலமிட்டு சுவாமீ! அடியேன்செய்த பிழைகளை மன்னித்துக் காத் தருளவேண்டும் அடியேன்மீது சுவாமிகள் கிருபாநோக்கஞ் செலு த்தி யாளாவிட்டால் இனி யான் நாசமடைவேன். அப்படி யாகா முன்னம் அடியேனது உயிர்ப்பிச்சை தந்தருளவேண்டும். என்று துதிசெய்தனன். அதுகண்டு விநாயகக்கடவுள் மனதிரங்கி அவன் இரவாது பிழைத்திருக்கும் வண்ணந் தமது கடைக்கண் பார்வை யினை அவன்மீதுசெலுத்தி நிலத்தில்விட்டனர். பின்னர் இராவ ணன் பரிமளமிகுந்த புட்பங்களால் அவர் திருவடிகளை யருச்சித்து அனந்தமுறை வேதாகமங்களால் துதிசெய்து பூசித்தனன். அதற் குக் கணேசமூர்த்தி திருவுளமிரங்கி, இராவணனே! உனதுகையால் நமதுமுடியில் எவ்வாறு முன்னங் குட்டினையோ அவ்வாறு உன்மு டியில் குட்டிக்கொள்ளுகவெனக் கட்டளையிட, உடனே தனதுமு டியில் உதிரமொழுகும்படியாகக் குட்டிக்கொண்டனன். அதனைக் கணேசமூர்த்திகண்டு, யாவரேனும் இவ்வாறு நம்மைக்கண்டவுடன் குட்டிக்கொள்வார்களாயின் அவர்கட்கு எல்லாத் துன்பங்களையும் ஒழித்தருளுவோமென்று திருவாய்மலர்ந்து அவனுக்கு வேண்டிய பலவரங்களைத் தந்து தமது திருவுருவைக் கரந்தருளினர். பின்னர்

இராவணன் அவ்வரங்களைச் சிரமேற்கொண்டு தனது இலங்கைப் பதியையடைந்து இன்புற்றிருந்தனன்.

இராவணன் பூசித்தபடலம்-முற்றிற்று.

# அகத்தியர் பூசித்த படலம்.

அராவணி சடையெம் மண்ண லருளிய வரங்கள் கொண்டே
யிராவண னிலங்கை யெய்தி யின்புற வாழ்ந்தா னிப்பா
லிராவணக் கடலையுண்ட விருடி பூசித்த வாறும்
பராவண விரைப்பக கேட்டி யெனச்சொலும் பதுமச் செல்வன்.

வேதாகம மென்னுஞ் செம்பொருட் சிந்தனைச் சித்தாந்தமாகக்கொண்டு சைவமென்னுந் தவக்கொழுந்தையீற சரிப்பவராகிய ஓ! சவுனகாதிமுனிவர்களே! இராவணன் விநாயகமூர்த்தியை அனுட்டித்து வரம்பெற்ற வரலாற்றினைச் சொன்னோம். இப்பால் இந்திரன் வரம்பெற்ற பேற்றினையும், அகத்திய மகாமுனிவரர் வந்தித்த திறத்தினையுஞ் சொல்லுவோம் கேட்பீர்களாக என்று பிதிர்தேவனை நோக்கிய பிரமதேவன் அனந்த கருணையோடே, சிவானந்த சாகரத்துண் மூழ்கினவனாய் பூதாதித்துவப் பகுதிகளெல்லாம் பரவசமாகிக் கூறுவதாயினன்.

### இந்திரன் உபாசனை.

பிதிர்தேவனே! முன்னம் கைலாசபதியாகிய சிவபெருமானிடத்தில் அளவற்ற வரங்களைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களையுமாண்டுவந்த * சூரபதுமனால், தேவேந்திரன் தனது பத்தினியாகிய இந்திராணியோடும் விண்ணுலகத்தை விடுத்து, இம் மண்ணுலகத்தில் அளவற்ற மகிமையுற்றிருக்கின்ற † சீகாழிப் பதியையடைந்து, சிவபெருமானை யருச்சிப்பதற்காக ஓர் நந்தனவனமமைத்து, அதினின்றும் பிரதிதினம் பத்திர புட்பங்களைக் கொய்து, அருச்சித்து வாழ்ந்திருக்கின்ற நாளையில், அச் சூரபதுமனுடைய ஆஞ்ஞையினால் மேகங்கள் சிறிதும் மழைபெய்யாமல் மாற, அத

* சூரபதுமன்: சூரன்? பதுமன் என்னுமிருவரோருருவமாய ஓர் அசுரனென்ப, பிரதபபுராணம்.

† இஃது, சீ-சிலந்தியும், காழி-காளி யென்னும் ஓர் பாம்பும் பூசிக்கப் பட்டதாகலின் சீகாழியெனப்பெயர்பெற்றது. பின்னர் பலர் வழிபாட்டால் பிரமபுரம், வேணுபுரம், புகலி, பூந்தராய், வெங்குரு, தோணிபுரம், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலமென்னும் பன்னிருதிருநாமங்களையுமேற்றது. இத்தலம் சோழநாட்டிலுள்ள ௧௯௦ சிவத்தலங்களுள் காவிரியாற்றின் வடகரைப்பெற்ற சிவத்தலம் ௬௩-ல் ஒன்று. இதில் ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளும், கணநாதநாயனாரும் அவதாரம். மேற்படி சுவாமிகளுக்குச் சிவபெருமான் ஏவலால் உமையம்மையார் பொன்றாளத்தில் திருமுலைப்பால் கொடுத்தருளியது. அன்றிச் சமயகுரவர் மூவராலும் ௭௧-தேவாரத்திருப்பதிகங்களைப் பாடப்பெற்றன. சுவாமி பெயர் பிரமபுரீசுவரர், அம்மையார் பெயர் திருநிலைநாயகி.

---

னால அந்த நந்தனவனமானது வாடி யுத்தகளம்போ லாயது. பின்னர் இந்திரன் அதனைக் காணுந்தோறும் வருந்தி; இதற்கினி என்ன செய்ய வல்லேமென்று ஏங்கித் துயருற் றிருக்கின்ற சமயத்தில், சிவபிரானுடைய கிருபையினால் "இந்திரனே! வருந்தற்க, நினது நந்தவனத்திற்கு ஓர் நதிவந்துபாயும்; அஞ்சாது பூசைசெய்யக் கடவை" என்று அசரீரியாக ஆகாயத்தின்கண் ஓர் திருவாக்குண்டானது. அதனை இந்திரன்கேட்டு மனம் மகிழ்வுற் றிருக்கின்றபோது அவனிடத்திற்குத் தற்செயலாய் நாரதமுனிவர்வர, அவரை இந்திரன் பணிந்தெழுந்து, சுவாமி! சூரபதுமன்செய்யுங் கொடுமைக்கஞ்சி மிகவு மனக்கவலையோடு மிப்பதியிலவந் தொளித்திருக்கின்றமையால், அக்கவலை தீரும்வண்ணம் சாக்ஷாத் சிவபிரானுடைய திருவடிகளை யருச்சிப்பதற்கு ஓர் நந்தனவனம் வைத்தேன், அஃதுமழையில்லாமல் வாடிப்போனதன்றி, அதிலுள்ள மலர், தளிர், அரும்பு முதலானவைகள் கணவனைநீங்கிய கற்பின்மகளிரைப் போலாயின. ஆதலால் இனி அதற்குச் சலம்பாயத்தக்க உபாயத்தினை யுணர்த்தி யருளவேண்டுமென்று பிரார்த்திக்க, நாரதமுனிவர் மனமிரங்கி, இந்திரனே! கைலாசவரையிலிருந்த காவேரிநதியை, முன்னர் சிவபிரான் அகத்திய முனிவருக் களித்திருக்கின்றனர். அதனை யம்முனிவர் தமது கமண்டலத்தி லடைத்துச் சையவரைச் சாரலில் வந்திருக்கின்றனர். அந்நதி பெருகிவருமாயின் உமது நந்தனவனம் பிழைக்கும். அது பாயும்படிசெய்ய வல்லவர் சர்வகாரணராகிய விநாயகக் கடவுளேயாகும். ஆகலால் அவரை விரைவில் வழிபடக் கடவையென்று சொல்லிச் சென்றனர். இப்பால் இந்திரனுமவன், தாயினுஞ்சிறந்த தயாநிதியாகிய விநாயகமூர்த்தியைப் பூசித்து, அவரது திருவடித்தாமரைகளை அனந்தமுறை வேதாகமங்களாற்

றுதிசெய்துநிற்க, அதற்குக் கணேசமூர்த்தி கிருபை கூர்ந்து ஓ * வலாரியே! நீ யாது வேண்டிவந்தனையென்று திருவாய்மலர்தலும், இந்திரன் தொழுதெழுந்து சுவாமீ! அடியேன் சிவபிரானைப் பூசிக்குமாறு நந்தனவனம் வைத்தேன், அஃது மழையில்லாமல் வாடுகின்றது, அகத்தியமுனிவர் சையவரைச் சாரலில் வந்திருக்கின்றனர் அவர் தமது † கமண்டலத்தி லடைத்துவைத் திருக்கின்ற காவேரிநதியை உலகமெல்லாம் போற்றும்படியாக இங்கு பெருகிவரச் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன், அதற்குக் கணேசமூர்த்தி அவ்வாறே செய்வோமென்று திருவாய்மலர்ந்து, அவனுக்கு விடைகொடுத்து, உடனே காகவடிவங்கொண்டு சையவரைச் சாரலையடைந்து, அகத்தியமுனிவருடைய கமண்டலத்தின் மீதேறி யுட்கார்ந்தனர். அதை அம் முனிவர்கண்டு இனிவரும் விளைவு யோசியாது தமது கையாலோட்ட, உடனே அக்கமண்டலநீரைக் கவிழ்த்து அக்காகவடிவத்தினின்றும் மாறிப் பிராமணப் பிள்ளைவடிவங்கொண்டு நின்றனர். அவ்வாறு நிற்பவரை அகத்திய முனிவர்பார்த்து இவன் முன்னம் காகவடிங்கொண்டு நமது காக நீரைக்கவிழ்த்து இப்போது பிராமணபிள்ளை வடிவாகி நிற்கின்றனனாதலால் இவன் அசுரனோ? பிரமனோ! வென்று சந்தேகித்து இவன் திறத்தை முழுவதுமறிவோமென் றெண்ணி அவரைக் குட்டுமாறு தமது விரலகளை மடித்து ஓங்கிக்கொண்டு அவரருகிற் சென்றனர். அதற்கு விநாயகமூர்த்தி பயந்தவர்போலே யோட, அவரைப் பிடிப்பதற்கு அகத்தியர் பின்பற்றி யோடினர்.

இப்பால் விநாயகமூர்த்தி அம்முனிவருக்கு அகப்படுவார்போலக் கிட்டியும், பின்னர் அகப்படாமல அளவற்ற தூரத்திலே எட்டியும் இவ்வாறு அம்முனிவர் தம்மைத் தொடர்ந்து வருந்தோறும் விட்டுவிட் டகன்று உலகமெல்லாந் திரிந்து ஓட்டங்காட்ட, அதனால் அகத்தியமுனிவர் தமதுள்ளமுங் கால்களுந் தளர்வெய்தினர். அதனைக் கணேசமூர்த்தி யறிந்து பிராமணபிள்ளை வடிவத்தைமாற்றி யானைமுகத்தோடும் அவரெதிரிற் பிரத்தியட்சமாக நின்றனர். அவரைக் கண்டவுடன் அகத்தியமுனிவர் திகைத்து, அன்பும் அச்சமுங் கொண்டு சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து முன்

* வலாசுரன் என்னும்ஓர் அசுரனைவென்றமையால் இந்திரன்(வலன்-வலாசுரனை, அரி-சம்மரித்தோன்.)வலாரியெனப்பெயர் பெற்றனனென்ப

† கமண்டலம்-கரகம். இஃதோர் சிறிய பாத்திர மென்ப.

ணங் குட்டுதற்கு ஓங்கிய கரத்தினால் தமது சிரத்தில் உதிரம் குழம்பும் படியாகக் குட்டிக்கொண்டனர். அவ்வளவுக்கு விநாயக மூர்த்திக்கு கிருபைசுரந்து, ஓ தமிழ்முனியே! நீ செய்யுஞ் செய்கைக்கு மெச்சினோம். இனி யதனை நிறுத்தி உனக்குவேண்டிய வரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தனர். அகத்தியமுனிவர் தொழுதெழுந்து. சுவாமீ! சகளமாகியும், நிட்களமாகியும் சிருட்டி திதி சங்காரமென்னு முத்தொழிலினை நடாத்த மும்மூர்த்திகளாகியும், அம்மும்மூர்த்திகட்கு மூலகாரணராகியு மிருக்கின்ற தேவரீர் திருவிளையாடல்கள் என்னா லறியப்படுவனவோ? சிவபெருமானாற் பெற்று கமண்டலத்தி லடைத்துவைத்திருந்த காவிரிநீரைச் சிறிதுமில்லாதபடி தேவரீர் கவிழ்த்துவிட்டது யாது காரணங்கொண்டோ அறிகிலேன். அடியேன் சிவபிரானுத்தரவின்படி இப்போது பொதியமலைக்குச் செல்கின்றேன்; அங்கு அவரை யபிஷேகிக்குமாறு அக்காவிரிநதியைக் கடாட்சித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு விநாயகமூர்த்தி மனமிரங்கி, ஓ குறுமுனியே! இந்திரன் சிவபிரானுக்கு அருச்சனைசெய்யுமாறு ஓர் நந்தனவனம் வைத்தனன். அஃது மழையின்றி வாடிவதால் அதனைக் காப்பாற்றவேண்டி நினது கமண்டலநீரைக் கவிழ்த்தனம். இனி உனது கமண்டலத்தையும் நிரப்பித்தருகின்றோமென்று திருவாய்மலர்ந்து, மிக்கவிரைவோடுசென்று பாய்கின்ற அக்காவிரிஜலத்தைத் தமதுகரத்தினாலள்ளி அக் கமண்டலத்தில் வழியும்படியாக விடுத்துக் கொடுத்து, பின்னும் அளவற்ற வரங்களையுந் தந்து கரந்தருளினார். இப்பால் அகத்தியர் கணேசமூர்த்தி யளித்தருளிய தீர்த்தத்தைக் கையேற்றுப் பொதியமலைக் கெழுந்தருளினார். விநாயக மூர்த்தியினுடைய பெருங்கருணையால் அக் காவேரிநதியானது புறப்பட்டு தேவேந்திரனுடைய நந்தனவனத்திற் பாய்ந்து கடலிற்போய்ச்

இவ்வாறு விநாயகப்பெருமானாலுண்டான அக் காவிரிநதியானது இற்றைவரையில் அந்தந்தக் காலந்தோறும் முறைவழாது உண்டாகிவருமாயின், அவரது சரணாரவிந்தங்களை யடுத்த அடியார்களுக்கு எக்காலத்தும் அவர் திருவருள் குறையுமோ! குறையாது.

அகத்தியர் பூசித்தபடலம்-முற்றிற்று.



## காசிபர்முதலியோர்.

# அனுட்டித்தபடலம்.



கூறிய மாதவன் பூசித்த செயல்குறித் துரைத்தா
னெறியி னீடிய காசிப னிகழ்கர வுயிர்த்த
மறித ராதமெய் யன்புடை யாரெலாம் வழுத்தும்
செறிவு மோரென வியாதனுக் குரைக்குந்தே மலரோன்.

உத்தம வைதிக சைவம்போ லழகுற்று, செந்தமிழெனச் சிறந்து திருவைந் தெழுத்தேதிகழுஞ் சவுனகாதி முனிவர்களே! முன்னம் விநாயகமூர்த்தியை இந்திரன்பூசித்து காவிரி நதியினைப்பெற்ற பேற்றினையும், அகத்தியமுனிவர் வந்தித்து அளவற்ற வரங்களைப் பெற்ற வரலாற்றினையுஞ் சொன்னோம். இப்பால காசிபர் முதலாயினோர். உபாசித்த திறத்தினைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

முன்னொரு பிரளயமுடிவில், பிரமனானவன் தன் மனத்தால் எழுபுதல்வரை யுண்டாக்கினன் அவருள் காசிபமுனிவர் அறிவும், மேன்மையு முள்ளவராகி யிருந்தனர். அத்தலைவருக்குப் பிரமன் ஏகாட்சர மந்திரத்தை உபதேசஞ்செய்து அதனைச்செபிக்கு முறைமையினையுந் தெளிவுபடச்செய்து மைந்தனே! நீ ஐம்பொறிகளையு மடக்கி, கணேசமூர்த்தியினுடைய திருவடிகளில் மனத்தைநிறுத்தி, நாம் உபதேசித்த அவ்வேகாட்சர மந்திரத்தைச் செபித்து தவஞ்செய்து, அவர் திருவருளால் சகல வானபாக்களையுஞ்சிருட்டி செய்யக் கடவையென றனுப்பினன். அவ்வாறே காசிபர்சென்று தேவவருடம் ஆயிரவருடம் வரையிற் றவஞ்செய்துகொண்டிருந்தனர். அதற்குக் கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து, * அங்குசம் † பாசம், தாமரைமலர் ஒற்றைக்கோடு என்னு மிவைகளைத் தாங்கி யிருக்கின்ற நான்கு திருக்கரங்களோடு, மார்பில் முத்தாரமும் ‡ மும் மதம்பொழிகின்ற யானையினது முகமும், துதிக்கரமும், முடியில் இரத்தினகிரீடமும், அதன்மீது மூன்றாம்பிறைச் சந்திரனும் செவியிற் குண்டலங்களும்விளங்க மூஷிகவாகனமூர்ந்து, அளவற்றசூரியர்களை அறியச்செய்ய வல்ல பிரகாசத்தோடு அவரெதிரிற் பிரத்தியட்சமாயினர். உடனே காசிபர் விரைந்தெழுந்து அனந்தமுறை

* அங்குசம்-யானை சிரத்திற் கொத்தும் ஓர்வகைப் படை.
† பாசம்-கயிறு.
‡ மும்மதம்-கன்ன மதம், கபோல மதம், பீஜ மதமென்ப.

வலம்வந்து மிக்க வுள்ளன்பினோடுந் துதிசெய்து, விழிகளில் ஊற்றெடுத்ததுபோல நீர்த்தாரைகளைச் சொரிந்து அளவளாவிய அற்புதத்தோடும் ஆனந்தக்கூத்தாடி, இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி நின்றனர். அதனை விநாயகமூர்த்திகண்டு, காசிபனே! உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் தருகின்றேமென்று திருவாய்மலர்ந்தருள, சுவாமீ! உலகத்தில் அடியேன் உயிர்த்தொகைகளைச் சிருட்டி செய்யுமாறு வரங்கொடுத்து, தேவரீர் கசியபந்த ரென்னும் பெயரோடு எனக்குப் புத்திரராகி வரவேண்டுமென்று பிரார்த்திக்க, அதற்கவ்வாறே கிருபைகூர்ந்து தமது அடியவருள்ளக் கோயிலையடைந்தனர்.

இப்பால் காசிபர் தமது ஆசிரமத்திற்குச் சென்று தமது பத்தினியார் பதின்மரோடுங்கூடிச் சுகித்திருக்குங்காலையில் அவர்கள் கருப்பத்தினின்று தேவர்முதலிய அளவற்ற § சராசரங்கள் உண்டாயின. அவர்கட்குக் காசிபர் விநாயகமூர்த்தியினுடைய திருமந்திரங்களைச் சோதித்தெடுத்து, ஒன்று, நான்கு, ஐந்து, எட்டு, பன்னிரண்டு, பதினாறு, பத்தொன்பது, என்னு மெழுத்துக்களையுள்ள மந்திரங்களைமுறைமைப்படி உபதேசித்தனர். பின்னர் அவர்கள் யாவரும் ஒவ்வொரு மந்திரங்களைக் கடைப்பிடித்து விநாயகமூர்த்தியை வேறுவேறாகத் தங்களுள்ளத்திற் றியானஞ்செய்து தேவவருடத்தில் ஆயிரவருடந் தவஞ்செய்தனர். அதற்குக்கணேசமூர்த்தி கிருபைகூர்ந்து அவர்கள் தம்மை எவ்வாறு தியானித்தார்களோ அவ்வாறே சிலர்முன் சிங்கவாகனத்தின்மீதும், சிலர்முன் மயில்வாகனத்தின்மீதும், சிலர்முன் பெருச்சாளி வாகனத்தின் மீதும், சிலர்முன் மானவாகனத்தின்மீதும், சிலர்முன் சூரியப்பிரகாசம்போலவும், சிலர்முன் சந்திரப்பிரகாசம்போலவும், சிலர்முன் மேகநிறம்போலவும், சிலர்முன் இரண்டு கைகளோடும், சிலர்முன் நான்குகைகளோடும், சிலர்முன் ஆறுகைகளோடும், சிலர்முன் எட்டுகைகளோடும், சிலர்முன் பத்துகைகளோடும் சிலர்முன் பன்னிரண்டு கைகளோடும், சிலர்முன் ஆயிரங்கைகளோடும், சிலர்முன் வாலபருவமுற்றும், சிலர்முன் தருணபருவமுற்றும், சிலர்முன்குமாரபருவமுற்றும், சிலர்முன் விருத்தபருவமுற்றும், இவ்வாறு பற்பலவிதமாக வுருவங்கொண்டு, யாவருக்கும் பிரத்தியட்சமாயினர்.

---

§ சராசரம்-சரம். அசரம். சரம்-அசைவுள்ளன. அவை. நடத்தல், பறத்தல் முதலிய ஜீவர்கள். அசரம்-அசைவற்றன. அவைகள் மண் மரம் முதலியன.

-னே அவர்கள் திடுக்கிட்டெழுந்து, சிலர் ஏகாங்கமாகவும், சிலர் திரியாங்கமாகவும், சிலர் பஞ்சாங்கமாகவும், சிலர் அட்டாங்கமாகவும், விழுந்து நமஸ்கரித்து, சூரியனைக்கண்ட கமலம்போல யாவரும் முகமலர்ந்து, விழிகளில் நீர்த்தாரைகள் பெருகி, ஆனந்தபரவசங்கொண்டு துதிசெய்வதாயினர்.

## தோத்ராஷ்டகம்.

(*)

பந்தமகற்று மனந்த குணப் பரப்பு மெவன்பா லுதிக்குமோ
வெந்த வுலகு மெவனிடத்தி லீண்டி யிருந்து கரக்குமோ
சந்த மறையா கமங்கலைக ளனைத்து மெவன்பாற் றகவருமோ
வந்த விறையாங் கணபதியை யன்புகூரத் தொழுகின்றாம்.
உலக முழுது நீக்கமற வொன்றாய் நிற்கும் பொருளெவனவ்
வுலகிற் பிறங்கும் விகாரங்க ளுறாதமேலா மொளியாவ
னுலகம் புரியும் வினைப்பயனை யூட்டுங்களைக ணெவனந்த
வுலக முதலைக் கணபதியை யுவந்துசரண மடைகின்றாம்
இடர்கண் முழுது மெவனருளா லெரிவீழ்பஞ்சி யெனமாயுந்
தொடரு முயிர்க ளெவனருளாற் சார்வாழ்பதியு முறச்செய்யுங்
கடவுண் முதலோர்க் கூறின்றி கருமமெவனான் முடிவுறுமத்
தடவு மருப்புக் கணபதிபொற் சரணஞ்சரண மடைகின்றாம்.
பூர்த்தியாகித் தலமாகி முந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி யறிந்தறியாத் திறத்தினானு முயிர்க்குநல
மார்த்தி நாளு மறியாமை யகற்றி யறிவிப்பா னெவனப்
போர்த்த கருணைக் கணபதியைப் புகழ்ந்து சரண மடைகின்றாம்.
செய்யும் வினையின் முதல்யாவன் செய்யப் படுமப் பொருள்யாவ
னைய மின்றி யுளதாகு மந்தக் கருமப் பயன்யாவ
னுய்யும் வினையின் பயன்விளைவி னூட்டிவிடுப்பா னெவனந்தப்
பொய்யி லிறையைக் கணபதியைப் புகழ்ந்து சரண மடைகின்றாம்.
வேத மளந்து மறிவரிய விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவி னடநவிலும் விமலன் யாவன் விளங்குபர
நாதமுடிவில் வீற்றிருக்கு நாதனெவனெண் குணனெவனப்
போத முதலைக் கணபதியைப் புகழ்ந்துசரண மடைகின்றாம்.
மண்ணி னைந்தாங் குணமாகி வதிவா னெவனீ ரிடைநான்காய்
கண்ணி யமர்வா னெவன்றீயின் மூன்றாய் நவில்வா னெவன்வளியி

னெண்ணுமண்டு குணமாகி யிலையவா னெவன்வானிடையொன்று
மண்ண லெவனக் கணபதியை யன்பிற்சரண மடைகின்றாம்.

பாச வறிவிற் பசுவறிவிற் பற்றற்கரிய பரன்யாவன்
பாசவறிவும் பசுவறிவும் பயிலப் பணிக்கு மரன்யாவன்
பாசவறிவும் பசுவறிவும் பாற்றி மேலா மறிவான
தேசனெவனக் கணபதியைத் திகழுச் சரண மடைகின்றாம்.



இவ்வாறு தோத்திரஞ்செய்து, சுவாமீ! அடியேங்கள் குலம் பிறப்பு, உயிர், குணம், கருமம், தவம், தானம், விரதம், கலை முதலான யாவும் பங்கமுறுதலெண்ணம் பரிசுத்தமாயின. இனிஅடியேங்கள் கிருதார்த்தர்க ளாகும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கு விநாயகமூர்த்தி சந்தோஷித்து அவ்வவர்கட்கு அளவற்ற வரங்களைத்தந்து,

இந்தநமது தோத்திரத்தை யாவன்மூன்று தினமும்மைச்
சந்திகளிற்றோத் திரஞ்செயினுஞ் சகலகரும சித்திபெறுஞ்
சிந்தைமகிழ்ச்சுகம்பெருமெண் டினமுச்சரிக்கின் சதுர்த்தியிடைப்
பந்தமகல வோரெண்காற் படிக்கிலட்ட சித்தியுறும்

திங்களிரண்டு தினந்தோறுந் திகழுமொருபான் முறையோதிற்
றங்குமரச வசியமாந் தயங்க விருபத் தொருமுறைமை
பொங்குமுழுவ லாறகிளபயிற் பொருவின் மைந்தர் விழுக்கல்வி
துங்கவெறுக்கைமுற்பலவுந்தோன்று மெனச்செப்பினர்மறைந்தார்.

அன்பர்களே-நீங்கள் செய்ததோத்திரங்களை யாவரேனும் மூன்றுதினம் * மூன்று சந்திகளினுந் துதிசெய்வார்களாயின், அவர்கட்குச்சகல கருமங்களுஞ் சித்தியாகும், எட்டுதினந் துதிசெய்தால் சிந்தைமகிழ்ச் சுகமெய்துவா. சதுர்த்தி விரதத்தில் எட்டுதரந் துதிசெய்தால் † அட்டமாசித்திகளுங் கைகூடும். இரண்டுமாதம் நித்தியம்படி ஒருதரந் துதிசெய்தால் இராசவசியமுண்டாகும். அவ்வாறு இருபத்தொருமுறை துதிசெய்தால் தனந்தானியமுதலிய ‡ அஷ்டஐசுவரியமு முண்டாகும், என்று திருவாய் மலர்ந்து தமது திருவுருவைக் கரந்தருளினர்.

---

* மூன்றுசந்தி - காலை, மத்தியானம், சாயந்திரம். † அட்டமாசித்தியென்பதனை (மதுரைத்) திருவிளையாடற் புராணத்துள் எல்லாம்வல்ல சித்தரான படலத்துட்காண்க. ‡ அஷ்டைசுவரியமாவன: இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்பன.

இப்பால் தேவர்கள் முதலிய யாவருமிக்க வுள்ளன்பினோடும் வெவ்வேறே ஆலயங்கள் சமைத்து, அவைகளில் தாம்விநாயகமூர்த்தியை எவ்வாறு தரிசித்தார்களோ அவ்வாறாய திருவுருவைக்கொண்டு பிரதிட்டைசெய்து, வேதாகம முறைமைப்படி பூசித்து, தேவர்கள் சுமுகரென்றும், முனிவர்கள் ஏகதந்தரென்றும், கந்திருவருங் கிம்புருடரும் கபிலரென்றும், சாரணருஞ்சித்தரும் கஜானனரென்றும், மனிதர்கள் இலம்போதர ரென்றும், மிருகங்கள் விகடரென்றும், பட்சிகளும் மரங்களும் விக்னராசனென்றும், சூரியன்முதலியநவக்கிரகங்கள் கண்ணநாயக ரென்றும், அட்ட¶திக்குப் பாலகர் தூமகேதுவென்றும், நதிகளுந் தீர்த்தங்களும் கணாத்தியட்ச ரென்றும், பயிர்முதல் கிருமி § கீடங்கள்யாவும் பாலசந்திரரென்றும், மற்றுஞ்சீவஜந்துக்களெல்லாம் கஜானன ரென்றும் பெயரிட்டு அளவற்ற தோத்திரங்கள்செய்து பணிந்து மிக்கமகிழ்ச்சியோடும் அவ்வவர்கள் பதிகளிற் சென்று வாழ்ந்திருந்தார்கள்.

ஓ சவுனகாதி முனிவர்களே! இந்தப் பன்னிரண்டு நாமமும் முன்னர், ஆழியைக் கடைந்து அமுதெடுத்தது போலச் சகத்திர நாமங்களினின்றும் அவர்கள் ஆராய்ந்தெடுத்ததாகும். அந்தச் சகத்திர நாமங்களைத் தோத்திரஞ்செய்வதனா லுண்டாகும்பலனை இப்பன்னிரண்டு நாமங்களே தரவல்லதாயின், இவைகளின்பெருமையை விவரித்துச் சொல்ல வேண்டுமோ? இப்பன்னிரண்டுநாமங்களால் யாவரும் விநாயக மூர்த்தியைப் பூசித்து அருசிப்பார்கள். மேலும் இவைகள் எல்லாப் பயனையும் எளிதிற் றரத்தக்கதாதலால் சைவர்களையன்றி, ஏனைய சவுரவர் சாக்தர் வைணவர் முதலிய சகலமதத்தார்களும் ஓதிப் பயன் பெறுவார்கள். விநாயகரைப் பூசனை செய்யாதவர்கள் எவருமில்லை. மேலும் அத் திருநாமங்களைப் பிரதிதினம் விடியற் காலத்திற் சொன்னபேர்கள் கோடியாகம், கோடிதவம், கோடிதருமம், கோடிதீர்த்தம், கோடிஸ்தலம், கோடிமூர்த்தி, கோடி துலாபாரதானம், கோடி கன்னிகாதானம் கோடி கஜதானம், கோடி கிருச்சிர தானம் என்னு மிவைகளால் வரும்பயன்கள் யாவோ அவைக்குக் கோடிபங்கு அதிகமான பயன்களைப் பெறுவார்கள்.

காசிபர் முதலியோ ரனுட்டித்த படலம் முற்றிற்று.

¶ திக்குப்பாலகர்-இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ப.

§ கீடம்-வண்டு. கிருமி, புழு.

சிவமயம்.

கணபதி துணை.

காசிபர்முதலாயினோ ரனுட்டித்த

# சகத்திரநாமப்படலம்.



ஈதுசுரர்கண் முதலானோ ரெவரும் பூசை புரிந்தபடி
கோதிலாதா யறிகென்னக் கூறுங்கமலன் முகநோக்கி
யாது பெயரா யிரமவற்றின் பயன்யாதிவையு முறையென்னப்
பொதிலிருந்தோன் வியாதமுனி புந்திமகிழ்த தெருட்டுவான்.

அறிவென்னும் பெருங்குன்றேறி, அஞ்ஞானாந்தகாரத்தை யற வகன்ற சவுனகாதி மகாமுனிவர்களே! நீங்கள் விரும்பியபடி காசிபர் முதலியோர் அனுட்டித்தபிரணவப்பொருளாம் பெருந்தகை ஐங்கரக்கடவுளுக்குரித்தான சகத்திர நாமங்களோடு, அனுதி பாரத்துவ நாமம் இருபத்து நான்கையும் சேர்த்துச் சொல்லுவோங் கேட்பீர்களாக.

தியானம்.

அஸ்யஸ்ரீ மகாகணபதி சஹஸ்ரநாம ஸ்தோத்ர மந்ரஸ்யா கணேச முனிருஷ்யாம் மஹாகணாதிபதி தேவதா, அநுஷ்டிப் சந்தா, ஊம்படு பீஜம் துண்டம்ஸகதி ஸ்வாஹா,—ஸலகம ஸகலஸங்கட நிவாரணார்த்தே மமமஹாகணாதிபதிப்ரசாத ஸித்யர்த்தே ஜபவினியோகா பவஸஞ்ஸித பாபௌக வித்வம்ஸனவிஸக்ஷணம் விக்னாந்தகாரபாஸ்வந்தம் விக்னராஜ மஹாம் பஜே, ஏகதந்தம், சூர்ப்பகர்ணம், கஜவக்தாம், சதுர்ப்புஜம், பாஸாங்குஸதாம் தேவம், த்யாயேத் ஸித்திவிநாயகம். உத்தமங் கணநாதஸ்ய, வ்ரதம் ஸம்பக்தாம் சுபம், பக்தாபீஷ்ட ப்ரதந்தஸ்மா, த்யா யேத்கீம் விக்னநாயகம்.

கடவுள்துணை.

## ஸஹஸ்திரநாமார்ச்சனை.



ஓம் கணேசாயநம:
கணக்கிரீடாயநம:
கணநாதாயநம:
கணாதிபாயநம:
ஏகதம்ஷ்ட்ராயநம:
வக்ரதுண்டாயநம:
கஜவக்த்ராயநம:
மஹோதராயநம:
லம்போதராயநம:
தாம்ரவர்ணாயநம:
விகடாயநம:
விக்னநாதாயநம:
சுமுகாயநம:
துர்முகாயநம:
புத்தாயநம:
விக்னராஜாயநம:
கஜாநநாயநம:
பீமாயநம:
ப்ரமோதாயநம:
ஆமோதாயநம:
சுராநந்தாயநம:
மதோத்கடாயநம:
ஹேரம்பாயநம:
சம்புவேநம:
சம்பராயநம:
லம்பகர்ணாயநம:
மஹாபலாயநம:
நந்தநாயநம:
அலம்படாயநம:
தனஞ்சயாயநம:
மேகநாதாயநம:
அகநாசநாயநம:

ஓம் விநாயகாயநம
விரூபாக்ஷாயநம
வீராயநம:
சூராயநம:
கணாதியக்ஷாயநம:
வரப்ரதாயநம:
சித்திபுத்திப்ரப்ரசாதநாயநம:
மகாகணபதயேநம:
ருத்ரப்ரியாயநம:
பீமாயநம:
உமாபுத்ராயநம:
ஈசானபுத்ராயநம:
குமாரகுருவேநம:
மூஷிகவாஹநாயநம:
சித்திப்ரியாயநம:
சித்திபதயேநம:
சித்தாயநம:
சித்திவிநாயகாயநம:
சாகலாயநம:
சிம்மவாஹநாயநம:
மோகினிப்ரியாயநம:
அவிக்னத்வகராயநம:
ஜயாயநம:
அற்ஜயாயநம:
அதுற்ஜயாயநம:
கண்டகிராஜபுத்ராயநம:
வில்வகாந்தாயநம:
வில்வவந்தியாயநம:
வில்வமுகாயநம:
கவிருஷபாயநம:
கவியேநம:
துணிக்கிணியேநம:

ஓம் பிரம்மணயாயநம:
பிரம்மஸ்பதயேநம:
கூஷ்மாண்டஸ்யாமஸம்பூதாய
நிதிபதயேநம: (யநம:
பூபதயேநம:
புவனபதயேநம:
பூதபதயேநம:
அவ்வியாயநம:
அமிதாயநம:
சம்மிதாயநம:
ம்தநம:
நிதிப்ரியாயநம:
பதிப்ரியாயநம:
பாதகத்தியார்ச்சிதகூஷித்யேநம:
ஜேஷ்டராஜாயநம:
இரண்யபுராந்தஸ்தாயநம:
ப்ரசமாயநம:
கராஹதத்வம்ஸந்துவேநம:
சித்ராங்காயநம:
உமாங்ககேளீகுதுகினேநம
சுமதாகுலபாலகாயநம
நாதபின்னமகாம்பராயநம
துற்சொற்பனநாசனுயநம
நாதப்ரதிஷ்டிதாயநம
சத்தியோஸாதாயநம
வரதாயநம
சுண்டலினேநம
விப்ராஜநாபுராயநம
ஆரிண்யேநம
க்ரீடினேநம
குணினேநம
ஸ்வர்ணமுஞ்சிமேகலினேநம
பிதாம்பராயநம
கண்டதராயநம
வைமுக்யஹத்தைத்யஸ்ரியே

ஓம் கஜகர்ணுயநம
விஜயாயநம
விற்புஜாயநம
ஸ்வரூபாயநம
சூரியமண்டலமத்யகாயநம
சமனுயநம
சாபித்திஹிர்தேநம
வனமாலிமதாபக்னேநம
பதரேநம
பாலசந்த்ராயநம
கண்டவைசாகஸமஸ்திதாயநம
புருஷாயநம
சுசீலாயநம
கனுதிராஜாயநம
ஸ்வர்ணநேத்ராதிஷாயாயநம
நீபகாயநம
யோகாதிபாயநம
ஸாகேகோஸராயநம
நிராஞ்சனுயநம
ஸ்திராயநம
புககான்னுயநம
சுபானனுயநம
உமாங்கமலஜாயநம
ஸாவாத்மனேநம
தேவதாதாயநம
பௌரிதேஜாபுவேநம
ஸர்வதேவாத்மனேநம
கௌரிசுகாவஹாயநம
தர்மாயநம
தேவதேவேஸ்வராயநம
சிவாக்ரோசஹாரிணேநம
விபசித்தேநம
மிர்த்துஞ்சயாயநம
தாமஹஸ்த்ராயநம
மகாநாதாயநம

ஓம் கம்புகண்டாயநம
சர்ப்பக்ரைவேயபாசுராயநம
ஸ்வேதாயநம
சர்வாலயசம்பூர்ணாயநம
த்ரிதாலையாயநம
சர்ப்பயக்ஞோபவீதாயநம
கடீசூத்ராயநம
சர்வாபரணபூஷணாட்டியாயநம
மஞ்சரியேநம
சர்வமங்களமாங்கல்யாயநம
லம்போஷ்டாயநம
ஐகாமகாயனிபீடாயநம
ஸம்பநாசிகாயநம
சர்வகாரணகாரணாயநம
மகாநுஜாயநம
சர்வசோபாசமன்விதாயநம்
ப்ரஹம்யபூஜாயநம
சர்வசதயம்புஜாயநாயநம
கதாதராயநம
சாரங்கிணேநம
உன்னதப்ரமதாயநம
பீஜபூரிணேநம
சர்வதேவகராயநம
சிரோத்ருதபதாயநம
சுதந்தவேநம
சமேதாகாயநம;
நந்தாநந்திதபீடஸ்ரியேநம
ஸ்வேதாம்பரத்ராயநம
அக்கினிவர்மரதாயநம:
சுவாஸினிமௌலிலாளிதாயநம:
விஸ்வப்ருஷேநம
ஸ்வேதமால்யாவிபூஷணாயநம
நிரங்குசாயநம
சூர்ப்பகர்ணாயநம
அஸ்தநேத்திரியாயநம

ஓம் பாசினேநம:
ஸ்வேதாதபத்ரருசிராயநம
சிதேசாயநம:
சுக்லாங்காயநம:
ஸ்ரம்பஆநாரகும்பாக்ராயநம:
ஸ்வேதசாமரவீசிதாயநம:
க்ருதோத்பலாயநம:
ருக்ஷசவிகாந்ருதேநம:
கிரீடமஸ்தகாயநம:
ருவிணேநம:
பூஸ்வதந்தப்ருதவேநம:
லோகசுபநாயநம:
ரதநமௌலினேநம:
தந்துவாந்தணபநம:
சிவினேநம:
இட்சுசாபதராயநம:
கலபவலிதாயநம:
நிவசலயாயநம:
நிபமசரணாயநம:
சுவாலமாலினேநம:
பூரணாரணபிவருஷசாயநம:
வசினேநம:
ஏகராயநம:
க்ஞாளமுகுரையாயநம:
விதிகாவலினேநம:
மஹீவாரஹவாமாங்காயநம:
ஓம் ஸ்வர்ணகண்டினேநம;
வசுதாராமதாயநம:
பருசபாங்கதாயநம:
கம்புகந்தராயநம:
சக்ரபாணியேநம:
ராமாரமேசபூர்வாங்காயநம:
சரோஜக்ருஜேநம:
ரதிகந்தர்ப்பசமாயநம:
தட்சணோமாமஹேஸ்வராயநம:

ஓம் விசித்ர தாகவேநம:
சமர்த்திதமமகாவ்ரதயேநம:
பூர்ணபாத்ரிணேநம:
அட்சமஸாதராயநம:
குடாராயநம:
பூஷ்ரஸ்தாயநம:
ஆமோதாமோதசனுயநம
ஐகாஸ்ரையாயநம:
விக்னமத்யாஸ்ருதபாதாயநம:
வருணப்ரயாயநம:
விலாஸினீக்ருதோல்லாசாயநம.
சுமங்களாயநம:
தந்தசௌமுக்யசுமுகாயநம:
ப்ரவர்த்தனுயநம:
கரஸ்தாம்ரிரபலாயநம:
மகாசங்கநிதிப்ரபுவேநம:
நித்யாயநம:
சோசிதகேபநிவ்ருதாஸ்ரயாயநம
க்ருதசௌமுகதுற்முகாயநம:
சௌண்டினேநம:
மதனுவத்யாஸ்ருதாங்காயநம:
ஈசானமூர்த்தாயநமா:
வஜ்ராதியஸ்த்ரபரிவாராயநம:
பதயேநம:
நித்யவதம்சிதாயநம:
க்ஞானினேநம
இச்சாதாரநிவேஷவிதாயநம:
யக்ஞியக்ரயாதாராயநம:
லளிதாயநம:
காமாயநம:
பரிஜயாயநம:
விஜயாவகாயநம:
அஜாயநம:
விநியாயநம:

ஓம் காந்தயேநம:
ஜயாயநம:
அஜயார்ச்சிதபதாம்புஜாயநம:
காமினிபாலகாயநம:
தைத்ரெந்த்ரசிகியேநம:
கணசண்டஸ்மாஸ்ரியாயநம:
பவனதர்சனுயநம:
காமினிகேளிலாலிதாயநம:
வலிதாஸ்தயாயநம:
தௌரிநந்தனுயநம:
பிரஹத்பத்மநிதிப்ரபுவேநம:
வாமாராமாஜ்யேஷ்டாமனேரமாயநம;
வீதசோகாயநம:
வாசஸ்திதயாநம:
வாகீஸ்வராயநம:
ஸ்ரீநிகேதனுயநம:
ஸர்வஸத்குருஸம்ஸேவ்யாயநம:
கணநாயகாயநம:
ஸவுந்தர்யமண்டிதாயநம:
ஐராவதாதிஸர்வவாரணுயநம:
அனந்தானந்தசுகதாயநம:
சரஸ்வதியாஸ்ரயாயநம:
நளினகாமுகாயநம:
ஸர்வகாளிகஸம்சித்தயேநம
குருகுத்பபதாயநம:
ஸதோநித்ரமதத்ரவாயநம:
அஸ்த்ரேஸர்வப்ருதேநம:
அனபாயாயநம:
உம் மீஜாத்துங்கசக்திம்தேநம:
ஹாரமுத்ரிதபதாம்புஜாயநம:
நாதாயநம:
விக்னவிர்தேநம:
திவ்யாஸ்த்ராயநம:

ஓம கர்ஜனேநம
குய்யசாராதாயநம
குடாத்பிஸ்தாயநம
கடகும்பாயநம
ஙகாராகாரண்டப்ருதேயநம
கற்கரிகாமாலினேநம
ஙங்காராயநம
கடோதராயநம
கானநாதப்பிரியாயநம
ஙகாரவாச்சியாயநம
சண்டாயநம
சந்தோதுல்லியட்சியாயநம
சந்தாயநம
ஜலத்கண்டோல்லாசத் தாரிணே
நம
ீசாயநம
சண்டேஸ்வராயநம
சரவணலாலஸாயநம
சந்தோமயாயநம
சாரசாரபிதரேநம
சிந்தாமணியேநம
ஜகத்யோனியேநம
சண்டசண்டாயநம
சந்த்ரவிக்ரஹாயநம
ஜகத்சாட்சினேநம
ஸங்காரிப்ரமகுலாயநம
ஜனப்ரபுவேநம
சண்டேசவிக்ரமாயநம
சிமமாசித்தயேநம
ஜகன்மயாயநம
ஸேப்யாயாநம
ஸேப்பாணுயநம
ஜபாயநம
டங்காரவாச்யாய்நம
டுண்டிவிநாயகாயநம

ஓம் ணகாரவாச்சாயநம
வாணிசகாயநம
டங்காராயநம
வீணுகானப்ரமோதராயநம
டிண்டிமுண்டாயநம
டக்கானிநாதமுதிதாயநம
டங்காராகுலநூபுரபதாயநம
ஸடகாயநம
டாமராயநம
டாகினீசாயநம
டம்பாயநம
டஙகாரபல்லவநத்தஸ் ஸ்ர்வ
மந்த்ரசுசித்திதாயநம
டிண்டிமப்பிரியாயநம
தாரகாந்தரஸம்ஸ்தாணுயநம
தண்டப்ரதேயநம
தத்வாணும்ப்ரக்ரதயேநம
ததவாயநம
ஸ்தாணவேநம
தாரகாந்தாயநம
ஸ்தாணுப்ரயாயநம
தாத்ரேநம
த[illegible]யக்ஞாப்சமணுயநம
தனபந்தவேநம
தாரகாயநம
தானந்தமோதயாயநம
தயாவரதேநம
தைதயவாரணதாரணுயநம
திவ்யவிபவாயநம
ஸ்தாவரஜங்கமாயநம
தண்டதாயகாயநம
தனதாயநம
தந்தம்ரபீன்னேபமுகாயநம
தான்யபதயேநம
த்யானினேநம

ஓம் தத்வபதநிரூபிதாயநம
தாதாயநம
தம்ஷ்ட்ராலக்னத்விபகடாயநம
த்யாயாயநம
த்யானபராணாயநம
தரணீதராயநம
நாதப்பிரியாயநம
த்யாதிப்ரமஹாண்டமேகலாயநமபிதாயநம
நந்தாயநம
நாதாயநம
த்யானகாலஸ்வரூபாயநம
நிர்மலாயநம
நிஷ்களாயநம
தேவாரிதமநாயநம
நாதமத்யப்ரதிஷ்டாயநம
டாயநம
ராயநம
த்யானப்ருதேநம
நிராமயாயநம
தமநித்யாயநம
பரமவ்யோமனேநம
பத்மப்ரஸன்னவதனாயநம
பராநந்தாயநம
ப்ரமாணப்ரத்யாதீதாயநம
பரமாத்மனேநம
ப்ரணதாக்ஞானநாசனாயநம
பராபராயநம
ப்ரணதார்த்திநிவாரணாயநம
ப்ரம்ஹணேநம
பரமபாதாயநம
புராணபுருஷோத்தமாயநம
பற்காயநம
பசுபாசவிமோசனாயநம
பணிபதிகுண்டலினேநம
பரந்தாமனேநம

ஓம் பசுபதேயநம
பூரணானந்தாயநம
பராணாற்சிதறங்க்ரியுகளாயநம
பணிபரியாயநம
ப்ரம்ஹார்ச்சிதபதாயநம
பணிஹஸ்தாயநம
அஸ்வர்யநம
பாலகேளிகுதூஹலினேநம
பாவகாயநம
நரம்ஹபராயநம
புருஷஜபமத்தலட்மீகாயநம
ப்ரம்ஹவுத்ப்ரியாயநம
பகவத்பக்திசுலபாயநம
ப்ரம்ஹண்யாயநம
பூதாலயநம
போகதாதாயநம
பரகஸ்பதயேநம
பூநிவர்த்தனாயநம
பதராயநம
பரமஹசார்ம்ணேநம
ப்ரூமத்யகோசராயநம
ப்ரஹத்தனாயநம
பூதிதாயநம
போதமூர்த்தியேநம
மஹாபலாயநம
யக்ஞாயநம
யக்ஞபதயேநம
யக்ஞகோவத்லயேநம
மந்த்ராயநம
மேகலாதீஸ்வராயநம
யாஜகாயநம
மகாவீர்யாயநம
மதிரெட்சனாயநம
மந்தகதிமாயநம



ஓம் மதமத்தாயநம
யக்ஞபலப்ரதாயநம
யஸஸ்கராயநம
மகாப்ராஞயநம
யோககெம்யாயநம
நிரஜாயநம
மந்த்ரபதயேநம
யாஜகப்ரியாயநம
ரஸப்ரியாயநம
மகானுயநம

ரஞ்சகாயநம
மந்த்ரிணேநம
மதோன்மதாயநம
ராஜ்யசுகப்ரதாயநம
லக்ணஸம்பூரிதாயநம
வரேண்யாயநம
வந்த்யாயநம
ராஜ்யரட்சாகராயநம
ரத்னகர்ப்பாயநம
லட்சிணேநம
ரம்யாயநம
வன்னிவதநாயநம
வஜ்ரிணேநம
லட்டுகப்ரியாயநம
வேதாந்தகோசராயநம
லட்மீபதயேநம
விஸ்வதோமுகாயநம
விஸ்வசட்சுஷேநம
லாபக்ருஷ்ணபவிஸ்ருதாயநம
விபவேநம
விதாத்ரேநம
லட்சயாயநம
ஸாஸ்யப்ரியாயநம
வஜ்ரநேத்ரேநம

ஓம் லட்சயாயநம
வாஸ்யபராயநம
வாமதேவாயநம
சத்திகணேஸ்வராயநம
வஜ்ரநிவாரணயநம
ஸமஸாரவைத்யாயநம
நம
ஸ்வஸவராயநம
ஸத்யஸங்கல்பாயநம
ஸிந்தூரிதமகாகும்பாயநம
சம்புசத்திகணேஸ்வராயநம
விஸ்வாதாராயநம
சுகினேநம
அஸ்திகுலநிசாயநம
விவஸ்வதாரகாயநம
அவணயநம
ஸதஸத்வியக்திகாரணயநம
அஸ்த்ததாயநம
ஷடாதாராயநம
ஸ்வஸம்வெத்யாயநம
அம்ஸாயநம
யாயநம
அவ்யகவ்யபுததாயநம
அவயாயநம
ஸாவபேக்ஷாபேக்ஷஜாயநம
ஸ்வதந்த்ராயநம
ஷஷ்டிகுருதுசுமஸ்ராவிணேநம
சுலட்சணயநம
ஸர்வக்ஞாயநம
ஸ்ருஷ்டிஸ்திதிலயக்ரீடாயநம
ஷடாட்சராயநம
இர்லோக்மந்த்ரமத்யாயநம
ஸர்வஸக்திப்ருதேநம
சுரபஞ்சனபேதனயநம
சமப்ராதாயநம

ஓம் சூக்ஷ்மர்பராபராயனுயநம
ஸர்வரஹஸ்யகராயநம
க்ஷேத்ரபர்த்ரேநம
ஸமுத்ரமதநாயநம
க்ஷிப்ரக்ஷேமகராயநம
புக்திமுக்திபலப்ரதாயநம
ம்க்ஷேத்ராதிபாயநம
புட்பகவிமானிமதத்வம்சினேநம
விபவதனுயநம
புத்ரபௌத்ரதாராயநம
ரிணேநம
க்ஷேணிஸரத்ருமாயநம
தூக்கனேநம
ஸௌபாக்யவர்த்தனுயநம
க்ஷேமானந்தாயநம
அபிரூப்யகராயநம
ஸாமமானாதாயநம
ஸ்ரீப்ரதாயநம
ஹரிஷாயநம
வித்யாப்ரதாயநம
தர்மப்ரதாயநம
ரீராயநம
விஜயப்ரதாயநம
கர்ப்பதோஷகாயநம
பந்தமோட்சாயநம
தௌர்பாக்யநாசனுயநம
பாரபிசாரசமனுயநம
சனிேநம
ரவயேநம
கவயேநம
சிவாயநம
புதாயநம
பௌமாயநம
மந்தாயநம
ராகவேநம

ஓம் துஷ்டசித்தப்ரசாதனுயநம
முக்யாயநம
மந்த்ரதந்த்ரப்ரதிவாதி முகஸ்தம்பாயநம
வர்ஷாயநம
மகாலயாயநம
கல்பாயநம
யுகாயநம
அயனுயநம
மாஸாயநம
சந்த்யாயநம
திவாயநம
நக்தாயநம
அகர்சிதாயநம
பட்சாயநம
ராவஸியேநம
தாராயநம
வாராயநம
திதியேநம
யோகாயநம
கரனுயநம
லக்னுயநம
ஹோராயநம
அம்சகாயநம
பாதாயநம
முகூர்த்தாயநம
களாயநம
காஷ்டாயநம
தப்தரட்சனுயநம
களஸ்ருதயேநம
நிமேஷாயநம
மேரவேநம
த்ருவாயநம
சப்தருஷியேநம
காலச்சக்ராயநம

ஓம் விஸ்வஸ்தாவரஜங்கமாயநம
ஸ்ருஷ்டயேநம
ஸ்திதயேநம
சங்காரயேநம
புவேநம
அக்கினயேநம
மருதேநம
வியோமனேநம
காலாயநம
அஹங்க்ருதயேநம
ப்ரக்ருதயேநம
பும்ஸேநம
ப்ரம்மணேநம
விஷ்ணவேநம
ருத்ராயநம
சிவாயநம
ஈசாயநம
சக்தயேநம
நாதவேநம
விந்தவேநம
சதாசிவாயநம
த்ரிதசாயநம
பித்ராயநம
இத்தேப்யோநம
யட்சாயநம
ரட்சஸேநம
கின்னராயநம
ஸாத்யாயநம
வித்யாதராயநம
பூதாயநம
மநுஷ்யாயநம
பசுப்யோநம
ககாயநம
ஸமுத்ராயநம
சைலாயநம

ஓம் ஸரித்ப்யோநம
பவோத்பவாயநம
பூதபவ்யாயநம
பாதஞ்சலாயநம
சாங்க்யாயநம
யோகாயநம
புராணாயநம
ஸ்ருதயேநம
ஸ்மிர்தயேநம
வேதாங்கேப்யோநம
ஸ்தாசாராயநம
மீசாம்ஸாயநம
ந்யாயவிஸ்தாராயநம
ஆயுர்வேதாயநம
தனுர்வேதாயநம
கந்தர்வாயநம
காவ்யாயநம
நாடகாயநம
வைகானஸாயநம
பாகவதாயநம
மானுஷாயநம
பாஞ்சராத்ராயநம
ஆருகதாயநம
சைணாயநம
பாலவைரவாயநம
காளாமுகாயநம
சாக்தாயநம
சௌராயநம
சைவாயநம
பாசுபதாயநம
பௌத்தாயநம
வைநாயகாயநம
ஸதஸத்துவயக்தாயநம
அவயக்தாயநம
ஸசேதனாயநம

ஓம் அசேதனாயநம:
பந்தாயநம
மோட்சாயநம
போகாயநம
யோகாயநம
சத்யாயநம
அணுவேநம
மஹதேநம
ஸ்வஸ்தயேநம
உம்படுவேநம
ஸ்வதாயநம
ஸ்வாக யநம
சௌஷ்டேநம
வஷ்டேநம
வவ்ஷ்டேநம
நமோநம
க்ஞானாயநம
விக்ஞானாயநம
ஏகாயநம
போதனாபோதனாயநம
னந்தாயநம
ஏகாட்சரமந்த்ராதாராயநம
ஏகவீராயநம
ஏகாட்சரபாராயணாயநம
ஏகதந்தயேநம
ஏகானேகஸ்வரூபத்ருதேநம
த்விரூபாயநம
த்விமுகேக்ஷாப்காயநம
த்விரதாயநம
காயநம
த்வைமாதுராயநம
த்விவதனாயநம
த்வயாதீகாயநம
த்வந்தவஹீனாயநம

ஓம் த்ரிதாமாந்த்ரிகராயநம
த்ரிகுணாத்மனேநம
த்ரிலோகாதிசக்திதராயநம
த்ரேதாயநம
த்ரிலோசனாயநம
த்ரிவர்க்கபலதாயகாயநம
சதுர்விதவசோவ்ருத்திபரிவருத்
திப்ரவந்தநாயநம
சதுராத்மனேநம
சதுர்ப்பாகவேநம
சதுர்த்தந்தாயநம
சதுர்வர்ணமயாபாயநம
சதுர்த்திஸம்பவாயநம
சதுர்வர்ணாஸ்ரமாஸ்ராயநம
சதுர்முகாயநம
சதுர்த்திபுஜனப்ரீத்யாயநம
சதுர்ப்பாதரூபாயநம
சதுர்விதயவியமோட்சவரப்ரதா
யகாயநம
பஞ்சகாராயநம
பஞ்சாட்சரமயாயநம
பஞ்சதாலாயநம
பஞ்சவர்ணாயநம
பஞ்சப்ராணகமாத்ராயநம
பஞ்சபாணாயநம
பஞ்சபாபவிநிவாரிதாயநம
பஞ்சக்ருத்யாயநம
பஞ்சாட்சரபாராயணாயநம
பஞ்சசிவாத்மகாயநம
பஞ்சபத்மமயஸ்பூர்த்தயேநம
பஞ்சபட்சப்ரியாயநம
பஞ்சாஸ்யாயநம
பஞ்சாதாராயநம
ஷடாங்கத்வாந்தவித்வம்ஸினேநம

ஓம் ஷடங்குலிமகா இர்தயாயநம ஓம் நவநாராயணஸ்துதியாயநம:

| | |
|---|---|
| ஷட்கோணபீடாயநம | நவநாதமகாநாதாயநம |
| ஷட்குணாயநம | நவநாதஸமாத்யாபினேநம |
| ஷட்வைரிவர்க்கவித்வம்சினேநம | நவநாதவிபூஷிதாயநம |
| ஷட்கர்மினேநம | நவரத்னவிசித்ராங்காயநம |
| ஷட்சக்ரப்ரிவாரிதாயநம | நவத்வாரநிவேஷிதாயநம |
| ஷட்க்ராந்திபேதகாயகாயநம | நவசக்திசிவோத்ருதாயநம |
| ஷண்முகப்ராதாயநம | நவத்வாரபுராவர்த்தாயநம |
| ஷடூர்மிபயநாசனாயநம | நவநித்யானுஸாசிதாயநம |
| ஷட்கர்மதுற்காயநாயநம | நவதுர்க்காநிஷேவிதாயநம |
| ஷட்ரசாஸ்ரயாயநம | தசாஸ்யாத்யேயவிக்ரகாயநம |
| ஷட்சக்ரதாமனேநம | தசப்ராணாயநம |
| ஸத்குணாயநம | தசாட்சரமகாமந்த்ராயநம |
| ஷண்முகாயநம | தசாதமகாயநம |
| ஸப்தபாதாளசரணாயநம | தசாஸ்யாயநம |
| ஸப்தத்வீபோருமண்டலாயநம | தசதிக்பதிவந்திதாயநம |
| ஸப்தரிஷிகணவந்திதாயநம | தசபுஜாயநம |
| ஸப்தஹோதவேநம | தசேந்த்ரயநியாமகாயநம |
| ஸப்தசக்திவரப்ரதாயநம | ஏகாதசாதிபிருத்ரேஸ்துதேநம |
| ஸப்தசுராஸ்ரயாயநம | ஏகாதசாட்சராயநம [டாயநம |
| ஸப்தாப்திகேளிகாஸாராயநம | த்வாதசோர்த்தண்ட தோர்த்தண் |
| ஸப்தகிரியாயநம | த்வாதசாந்தநிகேதனாயநம |
| ஸப்தசந்தோநிதயேநம | தவாதசாதித்யதேஸுசாயநம |
| ஸப்தஸவர்லோகமகுடாயநம | த்வாதசத்வாதசஷ்டாதி தோர்த் |
| ஸப்தசந்தாமோகவாயநம | தண்டா ஆத்ரநிகேதனாயநம |
| ஸப்தசுராயநம | த்ரயோதசாபிதா பின்னவிஸ்வ |
| ஸப்சமாத்ருநிஷேயிதாயநம | தைவாதிதைவதாயநம |

ஸப்தமாத்ருசந்தோமுகப்ரபவேசசதுர்த்தசேந்ரியவரதாயநம

| | |
|---|---|
| ஸப்தாங்கராஜ்யசுகதாயநம | சதுர்த்தசசகத்பதேநம |

அஷ்டைஸ்வர்ய விவர்த்திதாயநமசதுர்த்தசஜகதன்யேநம

| | |
|---|---|
| அஷ்டசரதிஸமானபூஷயேநம | சதுர்த்தசமனுத்துத்யாயநம |
| அஷ்டாங்கயோகபவப்ரதேநம | சதுர்த்தசேந்த்ராயநம |

அஷ்டமூர்த்திதயேமூர்த்தயேநம சதுர்த்திசாகடிம்வ்யாப்யாயநம

| | |
|---|---|
| அஷ்டபத்ராம்புஜாஸ்ரயாயநம | ஸாமபஞ்சத சீபஞ்சதச்சிவ |
| அஷ்டப்ரகிர்திகாரணாயநம | தவமுசுநிர்மலாயநம |

ஓம்ஷோடசெந்துகளாத்மாயகநம
ஷோடசெந்துகளாவாசாயநம
ஷோடசாதாரநிலயாயநம
ஷோடசஸ்வரமாத்ருகாயநம
களாசப்த சிஸப்த தசிசப்த தசா
க்ஷராயநம
அஷ்டாதசௌஷதீஸ்ருஷ்டயே
நம
அஷ்டாதசாதிபதயேநம
அஷ்டாதசபுராணக்ருதயே
அஷ்டாதசவிஜாதிக்ருதேநம
அஷ்டாதசலிபிக்ருதேநம
அஷ்டாதசவிதஸ்மிர்தவேநம
ஏகவிம்ஸத்பும்ஸேநம
ஏகவிம்ஸத்யங்குளிபல்லவாயநம
சதுர்விம்சதித்வாத்மனேநம
பஞ்சவிம்சாக்கியபுருஷாயநம
ஸப்தவிம்சதியோகாயநம
சப்தவிம்ஸதிதாரேயாயநம
த்வாத்ரிம்ஸத்பைரவர்தீசாயநம
சதுர்ஷதிரிம்சன் மகாஹிர்தேநம
சதுர்த்திம்ஸதத்வஸம்பூதயேநம
அஷ்டத்ரிம்சத்கலாதனுவேநம
நவ்வேகோன்பஞ்சாசன் மருத்வர்
கநிற்களாயநம
பஞ்பாதசக்ரஸ்சேணி பஞ்சாய
நம
சதுருத்ரவந்திதசச்சிதானந்தாய
பஞ்சாசத்விஷ்ணுசக்தீசாயநம
பஞ்சாசசன்மாத்ருகாலயாயநம
த்விபஞ்சாசதுத்துவிபஸ்ரேணி
த்ரி ஷந்த்யாட்சரஸம்ஸ்ரைநாய
நம
சதுஷ்ஷஷ்டி மஹாசித்த யோகி
ணிப்ருந்தவந்திதாயநம

சதுஷ்ஷஷ்டி யருத்தநிருத சது
ஷ்ஷஷ்டி கலாநிதிப்ரபுவே
அஷ்டஷஷ்டி மஹாதீர்த்தக்ஷே
சதக்ருதிபவயேநம
சத்தாரவராயுதாயநம
சதபத்ராயமதட்சணாயநம
சதானீகாய
சதமகாயநம
ஸஹஸ்ரபத்ரநிலயாயநம
ஸஹஸ்ரபணிபூஷணாயநம
ஸஹஸ்ரபாதயேநம
ஸஹஸ்ராட்சாயநம
ஸஹஸ்ரநாமசம்ஸ்துத்யாநம
ஸஹஸ்ராட்ச புருகூத மலாபக
னேநம
தசசகஸ்ரபணிப்ருத்பணராஜக்
ருதாசனப்ரியவரசணாயநம
அஷ்டாசீதி சஹஸ்ராஹாரிஷி
யேநம
கணஸ்தோத்ரபாதாயநம
லட்சாதாரப்ரியாயநம
லட்சாதாரமனோமயாயநம
சதுர்லட்சஜபப்ரீதாயநம
சதுர்லட்சப்ரகாசாயநம
சதுர சீதிலட்சாணாஞ் சீவாணாம்
தேஹசம்ஸ்திதாயநம
கோடிசூர்யப்ருதிகாசாயநம
கோடிசீதாம்சுநிர்மலாயநம
சிவோத்பவாத்யஷ்டகோடிவைநா
யகத்துரந்தர மஹாதேவாயநம
சப்தகோடிமஹாமந்த்ர மந்த்ரி
தாவயவத்ருதிமனுதீதாயநம
த்ரியஸ்தரிம்சத்கோடி சூரஸ்ரே
ணிபிரண தபதாம்புயு வாஸ்ரேஷ்
தாயநம

ஓம் அனந்தசக்திச்சிவத்யாணுய நம

அனந்ததேவதாசேவ்யாயநம

அனந்தஸ்ரீயனந்தாயநம

அனந்தமுனிசமஸ்திதாயநம

அனந்தசமஸ்துதாயநம

அனந்தநாமமாத்ருகாயநம

ஓம் அனந்தஸௌக்யாயநம

அனந்தவானந்தபாராயநம

சதுர்வேதிமந்த்ராத்மனேநம

ஷண்ணவத்யதிகப்ரவேநம

சதாநந்தாயநம

அனந்தவானந்தபாராயநம

அனந்தவானந்தசுகாயநம

சகஸ்திர நாமார்ச்சனை முற்றிற்று.

---

## தியானப் பிரயோசனம்.

---

மகாசைவ தவசிரேஷ்டர்களாகிய முனிவர்களே! யாம்கூறிய விநாயக திருநாம விசேஷத்தைக் கேட்டீர்களல்லவா, இந்த ஆயிரத்து இருபத்து நான்கு திருநாமங்களை யாவரேனும் ஆசாரநியதி நியமத்தோடு விடியற்காலையில் துதிசெய்வார்களாயின், அவர்கள் இம்மை மறுமைப்பயன்களை அனைத்தும் நெல்லிக்கனிபோல வடைவார்கள். அன்றியும் ஆயுள், ஆரோக்கியம், ஐசுவரியம், தைரியம், சௌரியம் கீர்த்தி, மேன்மை, மதிநிறைவு, காந்தி, சௌபாக்கியம், தாட்சணியம், தயை, பொறுமை, சாந்தி, நீதி, பிரமேதயசு, உதாரம், காம்பீர்யம், குலம், சீலம், சம்பாதியமுகமும், சபாபூசிதம், ஸ்தவுத்தியம், வீரியம், ஞானம், விஞ்ஞானம் முதலானவைகளோடு, தருமமுதலிய நான்கு புருஷார்த்தங்களையும் அதிசீக்கிரம் அடைவார்கள். இராஜர் அவர்பத்தினியர், அவர்புதல்வர், அவர்மந்திரியர்முதலானோர்வசியமாவர். இடாகினி, சாகினி, பூதம், வேதாளமுதலிய துட்டகிரகங்களெல்லாநெதொலையும் பகை, பிணக்கு, கலகம், துற்கருமம், கொலையாதி பாதகம், இடர், வறுமை முதலியயாவும் எரியில் வீழ்பஞ்சுபோல மாய்ந்துபோம் உலகாக்ஷி, அட்டமாசித்தி, திரிகாலக்ஞானம் வாய்மை, ஒழுக்கம், கொடை, கல்வி முதலானவைகள் எக்காலத்துங் கூடி நிற்கும். குட்டம், அவி சூசிகம், சகந்தரம், பிரமேகம், க்ஷயம், குன்மம், விக்கல், அச்சரம், காசம், சுவாசம், ஆசனக் கடுப்பு, மகோதரம், சூலை, அவமிசுர மூலம், பித்தம், கண்டமாலை, இட்சம், கபம், சோகை, அரோசிகம், வாதஜன்னி, விஷம் முதலான எல்லா நோய்களுந்தீரும்.

மேலும் சூத்திரர், பெண்டிர், பதிதர், இவர்கள் உச்சரிப்பார்களாயின் உடனே பரிசுத்தராகி, மிகுந்த சுகத்தைப் பெறுவார்கள்.

இஷ்டகாமியார்த்தத்தை வேண்டியபேர்கள் உச்சரித்தால் இம்மையிற் சகல அரிட்டங்களுந் தீர்ந்து, மறுமையில் சூரியலோகமுதலான சகலலோகங்களினுடைய போகபாக்கியங்களை அநுபவித்து, மேலான சிவலோகத்தை யடைந்து நந்திகேசசுரர் முதலான கணத்தலைவர்கள் ஆச்சரியங் கொள்ளும்படி சிவபிரானும் உமாதேவியாரும் தம்மைத் தமது புத்திரரைப் போலப் பாதுகாக்க நெடுநாள் அவ்விடத்திற்றானே வாழ்ந்திருந்து, பின்னர் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையால் மட்டும் பூவுலகத்தில் வந்து, சகலபோகபாக்கியங்களையுங் குறைவின்றி யநுபவித்து, அளவற்ற திருப்பணிகளைச்செய்து, ஞானசூரியராகி, சிவத்தில் ஐக்கியமாவார்கள்.

கருயபோகத்தை வெறுத்தவர்களுக்குச்சரித்தால், பாசபந்தங்களினின்றும் நீங்கிப் பரமானந்தசாகரத்தில் மூழ்குவார்கள்.

விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தசி தினத்திலே அவரைப் பூசனைசெய்து உச்சரித்தால் மேற்கூறிய மேலானபயன்களில் நூறுமடங்கு அதிகமான பயன்களைப் பெறுவார்கள் அன்றியும், அவற்றைத் தாமே உச்சரித்தல், ஒருவரை உச்சரிப்பித்தல், கேட்டல் கேட்பித்தல், எழுதல், எழுதுவித்தல், அருச்சித்தல், அருச்சிப்பித்தல், செபித்தல், செபிப்பித்தல் முதலிய இவைகளில் ஒன்றினைச் செய்தாலும், இவைகளைச் செய்கின்ற பேர்களை அவ்வுச்சரித்தன் முதலியவைகளாற் பாராட்டினாலும் மேற்கூறிய மேலான பயனை எளிதிலடைவார்கள்

தினந்தோறும் மூன்றுகாலங்களினு முச்சரிக்கமாட்டாதவர்கள். ஒருக்காலேனும் உச்சரித்தல்வேண்டும். அவ்வாறுநித்தம்ஒருக்காலேனும் உச்சரிக்க மாட்டாதவர்கள், சதுர்த்தி திதிதோறுமாயினும் உச்சரித்தல்வேண்டும். அதற்குஞ் சக்தியில்லாதவன் பிறனொருவனுக்குப் பொருள்கொடுத்தேனும் உச்சரிப்பித்தல் வேண்டும். பொருளுமில்லாதவனாயின், அவனுக்கு அச்சகஸ்திரநாமங்களினும் மேலானதாய் இருபத்தொரு திருநாமங்களுண்டு அவைகள்.

கணபதியே ரம்பன்மோ கன்றரணி தரனே
கலாதரனே கசியபந் தன்விநா யகன்மா
கணபதிகிப் பிரப்பிரசா தனனுசா பூர
கன்வரதன் செயனமுத மந்திரனே யிலக்க
கணபதியே வாசசிகதன் பீஜவிநா யகன்மங்
கலவிநா யகனுடுண்டி விநாயகனே பிரிய
கணபதியே சித்திவிநா யகன்சிந்தா மணியே
காமர்மகோற் கடனென்னக் கரைந்தவிவை யவையாம்.

கணபதி, ஏரம்பன், மோகன், தரணிதரன், கலாதரன், கசியபந்தன், மஹாகணபதி, கிப்பிரபிரசாதனன், ஆசாபூரகன், வரதன், ஜயன், அமுதமந்திரன், இலக்ககணபதி, வாசசிகதன், பீஜவிநாயகன், மங்கலவிநாயகன், உடுண்டிவிநாயகன், பிரியகணபதி, சித்திவிநாயகன், சிந்தாமணிவிநாயகன், மஹோற்கடன்என்னுமிவைகளாகும்

இவைகளையேனும், முன்னர் தேவர்முதலியோரால் வெவ்வேறேயெடுத்து கூறப்பட்டிருக்கின்ற பன்னிரண்டு மகாமந்திரங்களையேனும், உச்சரித்தல் வேண்டும் இவற்றுளொன்றைத் தினந்தோறும் உச்சரித்தோர்களுக்குச் சகத்திரநாமங்களை யுச்சரித்த பயன்களுண்டாகும் அவ்விரண்டையும் அவ்வாறு உச்சரித்தோர்களுக்கு, அப் பயன்கள் எண்மடங்கு அதிகமாகிவளரும் பிணிமுதலிய வேதுக்களால் அவ்வாறு உச்சரிக்க மாட்டாதவர்கள், அம் முப்பத்துமூன்று மந்திரங்களில் ஒரு மந்திரத்தையேனும் உச்சரித்தல் வேண்டும் விரதநியமத்தோடு மேற்கூறிய சகத்திரநாமங்களை விநாயகசதுர்த்தியிற் றொடங்கி நான்குமாதவரையில் உச்சரித்தோர்களுக்குச் சென்றசனனங்கள் இருபத்தொன்றினும், இந்தசனனத்தினும், மேல்வருஞ் சனனத்தினும் தாங்கள்பற்றற்குரிய எல்லாப்பாவங்களையும் விநாயகமூர்த்திவிலக்கி,நினைத்தநன்மைகளனைத்தையும் நினைத்தவண்ண மளித்து, மறுமையிற் சிவலோகத்தில் கணத்தலைமைபூண்டிருக்கத்தக்க பதவியைக் கொடுத்தருளுவர்.

என்று முன்னம் பிரமதேவன் வேதவல்லி படர்தற்கோர் கொழுகொம்பினையொத்த மகா மகத்வமிக்க வியாசபகவானுக்குக் கூறினர். ஆதலால் பெருந்தவப்பேற்றுலகிலாண்டகாரணமூர்த்தியாயுள்ள

எம்முதயாவிக்ரமாகிய விநாயகப்பெருமானது திவ்ய சரித்ராமுர்த்தத்தைச் செவிவாய்த்தேக்கிச் சிவசாயுச்ரார்த்தராகியுள்ள ஓ சோமகார்த்தமகாராசனே! சித்தபூர்வமாகச் சிந்திக்கக்கடவை. என பிருகுமகாமுனிவர் திருவாய்மலர்ந்து ஸ்ரீ பார்க்கவபுராண பிரதமகாண்டத்தைப் பூர்த்திசெய்து ஆசிகூறி யிருந்தனர்

சுபம்! சுபம்!! சுபம்!!!

சகத்திரநாமபடலம் முற்றிற்று.

———.*:———

## அருளிறைவணக்கம்.

தேவர்தொழுதெழுமகருணைச செல்வனேபோற்றி
சிறந்தொளிருமங்கள சொரூபனேபோறறி
யோவறுசித்திகளனைத்து முதவுவோய்போற்றி
யொலிகெழுகிண்கிணிபாத சாலநூபுரங்கண்
மேவியொளிர்சரணனே போற்றிமததாரை
விரவியதிண்கபோலனே போற்றினைதருளின்
பாவமொடு பலபிணியுமட பம்புவறு மைகளும்
பலவானவிடாகளையும் பாற்றுகவின்புறவே.

———

முதலாவது

# உபாசனாகாண்டம்

முற்றிற்று.

———





1 வக்கிரதுண்டா



2 சித்திபுத்திகளை விநாயகக்கடவுள்கலியாணஞ்செய்த

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

பார்க்கவ புராணமென்னும்

# விநாயகபுராண வசனம்.

இரண்டாவது

## இலீலாகாண்டம்.

காப்பு.

பூத்தமலர்த் தவிசிறைவிண் டராபர ரகிலமாதி
புகலறிதா யாற்றடைற யனந்தமின்று
மேத்தவள ரமலமடைந் தாரையுணு மருடகட மல
மிறும்பார்பூத் தபூதமா யனந்தாயோங்கி
னாத்திகமா யருவாமில டைமைகொள்ளக் கசமுகமு
நால்வாயு மதிநதியு முடித்தி மண்ணோர்க
காத்தழைத்த கடவுளிறும பூப்பதமெ னுபபோது
கதித்துநலங் கைதந்த பராதிசைந்து மன்றே

வேத ஆகமாந்தமாக விளங்குமு உத்தமவைதிக சைவம்போலென்றும் நிலைபெற்றுத் தழைத்து, செந்தமிழெனப்பரந்து, சிவனடியார் உள்ளம்போல் காய்த்துப பூத்து ஆனந்தமயமாய், ஸ்ரீ பஞ்சாக்ஷரம்போல் வேண்டுவோர்வேண்டியவண்ணம் விருப்பநல்கி, பிரணவசொரூபம்போல் பேரின்பபோகத்தைக் கொடுப்பனவாகிய நைமிசாரண்ணியத்தில் சௌனக மகாமுனிவராற்செய்துவரும் யாகம் இன்னும் முடிவுபெறுமையால், சௌனகராதி முனிவர்களெல்லாம், மகாதவ சிரேஷ்டராகிய சூதமகாபுராணிகரை நோக்கி, ஐயனே! அலைகடலுக்கோர்கட்டுமரம்போலும், வறிஞனுக்குற்ற பொற்குவியல்போலும் எங்கள்முன்னை தவத்தாற்கிடைத்த கிருபாநிதியே! தேவரீரது திருவாக்காகிய அமுதமுண்ட விசேடத்தால் சாதுசங்கம், சாத்திரமுதிர்ச்சி முதலிய சிவஞானதிக்கங்களை யெல்லாம் எளிதிற்பெற்றனம். அங்ஙனம் இதுகாறும் விநாயகப்பிரபாவத்தைக் கூறிவந்தீர்களன்றே அம்மான்மிய மின்னுமுண்டாயின் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்கச் சூதமகாபுராணிகர் கூறுவதாயினர்.

# விநாயகபுராணம்.

## முதலாவது.

## வக்கிரதுண்ட விநாயகர்

# திருவவதாரப் படலம்.



திங்களும் பணிநீர்க் கங்கையும் பணிந்த
செஞ்சடை விநாயகப்பெருமான்
பொங்கருள் வழங்குங் காதைகள் இன்னும்
புகலென வியாதனங் கிளப்பக்
கொங்குதமிழ்ந் தலர்ந்த முளரிமைக் கடவுட்
குழுப்புருங் குன்றுழைக்க நாதநான
தங்கிய விறலவன் திருவிளையாட
தனைமுறை சாற்றுதல் வல்லேந்தான்

சைவ தவநெறி தழைக்கத் தழைத்த சௌனகாதி மகாமுனி சிரேஷ்டர்களே! நன்று வினவினீர்கள், யானுபகிருதார்த்தனுகின்றேன். சித்தசாந்தமாகக் கேட்டுச் சிந்திப்பீர்களாக. எமது ஆசாரியராகிய ஸ்ரீவேதவியாசரினும் மலர்மகள்வாழும் நாவினராகிய சதுர்முகக்கடவுளை வணங்கி ஞானமூர்த்தியே! நதிமதிமுடித்த செவ்விய சடாமகுடத்தினையுடைய எமது நயானந்தராகிய விநாயகக்கடவுள், அடியார் குறிப்பின் நெறியே நடத்திய திருவிளையாட்டைக் கிருபைசெய்தீர் அதுபோல இன்னும் அவரது லீலாவைபவங்களை சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்க, பிரமதேவன் சொல்லிவந்தனர் அதையாம் தெரிந்தவண்ணம் உங்களுக்கு கூறுகின்றோம் அதாவது:

மும்மதங்களைப்பொழிகின்ற யானைமுகத்தினையுடைய விநாயகக்கடவுள் யுகங்கள்தோறும் அடியார் அன்பின்வழியே கிருபைபுரிவான் கருதி வேறுவேறு திருவுருத்தாங்கி பிராகிருதராதி மூவகை யான்மாக்களையும் இரட்சித்தருளிய திருவிளையாடல் அனந்தமாகும் அளவிடுவதற்காகாது, ஆயினும் அகிலாண்ட ராஜேஸ்வரியாகிய சாக்ஷாத் உமையம்மையார் மணாளராகிய இறைவர், முன்னர் கூரிய வேலாயுதத்தினையுடைய சிவசண்முகக்கடவுளுக்குப் பன்னிரண்டு திருவிளையாடலைக் கூறியிருக்கின்றனர். அவைகளைமாத்திரம் முறையாகச்சொல்லுகின்றேன். அவை வக்ரதுண்டர், சிந்தாமணி விநாயகர், கசானனர், விக்னராசர், மயூரேசர், பாலசந்திரர், தூம்ரகேது, கணேசர், கணபதி, மகோற்கடர், துண்டிவிநாயகர், வல்ல

வைபவிநாயகர், என்பனவாம் இவைகளினின்றும் அனந்தமாகவிரிவு பட்டுள்ள. ஆயினும் இவையே முக்கியமாகும். இதனுள் வக்ரதுண்ட விநாயகர் திருவவதாரமும், அவராற்செய்த வைபவங்களும் உபாசனுகாண்டம் பிரதமத்தில் மூவர் வரம்பெறு படலத்திற் சொல்லியிருக்கின்றோம் இனிச் சிந்தாமணி விநாயகர் திருவிளையாடலைச் சொல்லுவோம் சிறிது சாந்தமாகக் கேட்பீர்களாக.

## இரண்டாவது.

## சிந்தாமணி விநாயகர்

# திருவவதாரப் படலம்.

அக்கர வணிசடை யிறையன சவுனக முனிவீர்காள்
வக்கிர துண்ட ரருட்கதை சிறிதறை விததாமே
னிக்கிறை பயமொழி தவநெறி கபிலற் கருள்வானோர்
தக்கவெ மிறைசிந் தாமணி பரனருள் கதைகேளீர்.

மகாஞான விரதர்களாகிய சவுனகாதி முனிவர்களே! முன்னொருகாலத்தில் தருமமுதலிய நால்வகைப்பொருள்களு நிறைந்த தமிழ்வளநாட்டில், உலகமெங்கனுந் தனதரசாட்சியைச்செலுத்தி வந்த அபிசித்தென்னும் பெயரினையுடைய ஓராசனிருந்தான். அவன் தனதுமனைவியாகிய குணவதியென்பவளோடு அளவளாவி வாழ்வுற்றிருக்கின்றநாளையில், தனக்கு நெடுநாள் புத்திரப்பேறில்லாமல் மனவருத்தங்கொண்டு, அரசாட்சியை அமைச்சர்வசம் ஒப்புவித்து தனதுமனைவியோடும் வனத்தைநோக்கிச்சென்றனன். அப்போது அவ்வனத்தில் ஓராசிரமந் தோற்றக்கண்டு, அதனுள்ளே நுழைந்து, உலகமுழுவதுஞ் செய்தமாதவங்களெல்லாம் ஓர்வடிவங்கொண்டிருந்தாற்போல, விபூதியும் * உருத்திராக்க மாலிகையுமணிந்து வெழுந்தருளியிருக்கின்ற வைசம்பாயன முனிவரைக்கண்டு அடியற்ற மரம்போல நிலத்தில்வீழ்ந்து, பணிந்து, மீட்டுமெழாமலிருந்தனன். அவ்வாறிருப்பவனை, அம்முனிவர் மிகுந்த கிருபையோடும் பார்த்தருளி, அரசனே! எழுந்திரு, நீயார்? நீ இவ்விடத்திற்குவந்த காரணம்யாதென்று வினவினர். அதற்கு அவ்வரசன் ஒன்றும் பேசாமலும் எழாமலுமிருந்தனன். அதனை அம்முனி † புங்கவர்கண்டு,

* உருத்திரன்-சிவன், அக்கம்-கண், உருத்திராது விழியினின்றுண்டாதாதலின் உருத்ராக்கமெனப்பெற்றன. (காந்தமாதிய வுற்பரக்கக் காண்க.) † புங்கவர்-தேவர்.

தமது த்யானநோக்கத்தினாலே அவ்வாசனுண்டாகக் கடவதென்று ஆசீர்வதித்தனர். அதனைக்கேட்டவுடன் தரித்திரனுக்குத் தனங் கிடைத்ததுபோல, அரசன் பெருமகிழ்ச்சிகொண்டெழுந்து, இரு கரங்களையுங்கூப்பி, முனிபுங்கவருக்கெதிராக நின்று, சுவாமி! அடியேன் கற்குந்தோறுங் கரும்பென ருசிக்கவல்ல தமிழ்வளநாட்டரசன், எனதுபெயரை அபிசித்தனெனச்சொல்லுவது, யான் நெடுநாள் புத்திரப்பேறில்லாமையால் மனம் வருந்தி, தேவரீருடைய திவ்ய சரணாரவிந்தங்களையடைந்தேன், கடவுளர் வாக்கு பொய்த்தாலும் கனவிலுந் தவத்தோர் வாக்குப் பொய்க்காதாதலால், தேவரீர் அடியேனுக்குப் புத்திரனுண்டாகக் கடவதென்று ஆசீர்வதித்தபடி அடியேற்குச் சித்திக்கு மார்க்கத்தினையும் அனுக்கிரகித் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு வைசம்பாயன முனிவர் மனதிரங்கிப் பரமசிவத்தினுடைய பஞ்சாட்சரத்தை அவனுக்குப தேசித்து, அரசனே! சமுத்திர நதி சங்கமத்திற்கு மேற்புறத்தில் ஒருவனமுந் தடாகமுமிருக்கின்றன அங்கு நீ சென்று உனதுபத்தினியைப் பணிசெய்யக்கட்டளையிட்டு. நீ நான்கு மாதம்வரையில் இம்மந்திரத்தைச் செபஞ்செய்து, முடிவில் அதற்கேற்ற தருப்பணமாதிகளை நிறைவேற்றி, யதாப்பிரகாரம் உனதுராச்சியத்திற்குச் செல்லுவையெனில் சிறிதுநாளைக்குள் பரமசிவ கடாக்ஷத்தினாலே உனக்குநல்ல புத்திரனுண்டாகுமென்று திருவாய்மலர்ந்து அவனைத் தவத்திற்குச் செல்லுமாறு விடைகொடுத்தனர்.

அவ்வுரையைத்த[illegible] அரசன்செவிக்கமுதாகப் * பூரித்து, மீட்டுமவரைப் பணிந்தெழுந்து விடைபெற்று, தனது பத்தினியாகிய குணவதியுடனே வழிக்கொண்டு முனிபுங்கவர் கூறியருளிய வனத்தின்கணுள்ள தடாகக்கரையை யடைந்தனன். அங்கு, அதற்கு முன்னமே சரஸ்வதி யேவல்செய்யப் பிரமதேவன் தவத்திலிருப்பதைக்கண்டு, அவரையனந்தமுறை பணிந்தெழுந்து மறுநாள் முதல் தனது பத்தினியைப் பணிசெய்துவரக் கட்டளையிட்டு தவநியமத்துடனே தானொருபக்கத்திலிருந்து, அரிய பஞ்சாக்கர மந்திரத்தை ஜெபஞ்செய்துவந்தனன். குணவதியும் சரஸ்வதியும் பணிசெய்யும்வேளைபோக, மற்றவேளையில இருவரும் ஒன்றாகக்கூடிச் சென்று காய், கனி முதலிய வருக்கங்களைச் சேகரித்து வந்து தங்கள் தங்கள் நாயகருக்குக் கொடுத்துவந்தனர். இவ்வாறிருக்கும் நாளையில், ஒருநாள் சரஸ்வதி காமலாகிரிகொண்டு மூறுவலரும்பவும், தனங்கள் விம்மவும், கூந்தல்சோரவும், மேகலை நெகிழவுமாக

* பூரித்தல் - உட்கொளல்.

ஞெரேலென்று தனது காதலன் மடியிற்சென்று இருந்தனள்.
னே பிரமன் தவத்தினின்று நீங்கி, தனது புத்தியையெல்லாம் மன்மதசரங்கட்கிரையாக்கி, உடல் முழுவதும் மயிர்க்குச் செறியும்படியாகக் காமலாகிரியைத் தலைக்கொண்டு, தனது மடித்தலத்திருப்பவள் இன்னாளென்றுதெரிந்துகொள்ளாமல் மயங்கி, இவள் உரோகணியோ, இந்திராணியோ, ரதியோ, மோகினியோ, இலக்குமியோ, திலோத்தமையோ, அரம்பையோ, ஊர்வசியோ, அல்லது மகாவிஷ்ணுவினுடைய மாயசக்திதானோவென்றையுற்று, அவளது முகத்தையும் ஏனைய அவயவங்களையும் நன்றாகப் பார்த்துப் பின்னர் இவள் நமது காதலியேயென்று தெளிவுற்று, உடனே அவளது செவ்விதழூறலைப்பருகுமாறு தனது நான்குவாய்களும், யான்முன்னம் யான்முன்னமென்று ஆவலோடெழுந்து சத்திக்கவும், அவளது கொங்கை, நுதல், கூந்தல், அல்குல் முதலிய தானங்களைத் தடவுமாறு தனது எழுகைகள் எழாநிற்கவும், மற்றொரு கையால் அவளைத் தழுவுமாறு தனது அரையிலுடுத்திருக்கின்ற கலையை நெகிழ்த்தெறிந்தனன். அதனைச் சரஸ்வதி நோக்கித் தவஞ்செய்வோரைக் கலைத்துக் கூடுவது மகாபாதகமென்று ஞெரேலென்று அவன் மடியினின்றும் அப்பாலகன்று, முன்னர் தனது மனத்தின்கணுண்டான காமலாகிரியைத் தணித்துக்கொண்டு, சுவாமி. அவசரப்படவேண்டாம், அரையிலுடுத்திருக்கு மானத்தைக் காத்தருள வேண்டுமென்று சொல்லினள். அதற்குப் பிரமன், பெண்ணே! நீ கூறியபடி பின்னர் நடந்துகொள்ளுவேன், இப்போது என துயர் நீங்குவதன்முன் எனக்குச் சுகந்தரவேண்டுமென்று கேட்டனன். அதற்குச் சரஸ்வதி சொல்லுவாள்: சுவாமி நாம் இங்குவந்திருப்பது பழையபாவ வசத்தினாலேயாம்; மேலினி அப்பாவங்கள் தொலையுமாறு தவஞ்செய்யவந்தவிடத்து இத்தன்மைத்தாகிய அற்பகாரியத்துக்கு உடன்படுவீராயின், தேவரீருடைய கல்வியும், அறிவும், உறுதியும், என்னாகாநிற்கும்? நீர் செய்துவந்த தவந்தான் எவ்வாறு சித்திக்கும்? அத்தவசித்தி வேண்டாமெனினும், அத்தவத்தினுட்பட்ட காலகாலராகிய சிவபெருமான் எவ்விதத்திலுஞ் சபித்துவிடுவார்? ஆதலால், தேவரீர் செய்துவந்த தவமானது நிறைவேறுமவரையில் நீர் எனக்குத் தந்தையும், நான் உமக்குப் புத்திரியுமாகுமென்றிவ்வாறு சபதங்கூறி, அனந்த இனியவார்த்தைகளினாற் பலவாறு அவன் மனதைத் தேற்றினள். அப்படியும் பிரமன் மனந்தேறாமல் விடந்தலைக்கேறினவன்போலக் காமவிகாரந் தலைக்கொண்டு வலுவிற்புணருமாறு அவளை வலித்தனன். உடனே சரஸ்வதி அவனிடத்தினின்று தப்பியோடி மற்றொருபக்கத்திற் றேவர்க

ளோடுங்கூடித் தவஞ்செய்திருக்கின்ற இந்திரனிடத்திற் சென்று நின்றனள். பிரமனும் அவளைப் பின்றொடர்ந்து சென்றனன்.

இவ்விருவரையும் இந்திரன் பார்த்து ஏதோ ஓரதிசய மிருக்கின்றதெனவெண்ணி, பிரமனுக்கு ஓராசனந்தந்து பாதபூசைமுதலியவைகளையும் நடத்தி, ஒரு பாரிசமாகநின்று மிக்க நாணயத்துடனே கூடியிருக்கின்ற சரஸ்வதிமுகத்தையும், ஒளிமழுங்கியிருக்கின்ற பிரமன் முகத்தையும் பார்த்து நீங்களிருவரும் இங்ஙனம் வருவதற்கான காரணமென்னவென்று கேட்டனன். அதற்கவர்கள் ஒன்றுஞ் சொல்லாமலிருந்தனர்.

தாமரைக் கிழவ னென்றுஞ் சாற்றில னிருப்பநின்ற
ஏமரு மமரர் தாமு மியம்புவார் தவமேற்கொண்டு
சேமவண் டிகளிற் பன்னா ளுறைந்திடு மியோகத்தார்க்குங்
காமவெங் கடலைச் சற்றுங் கடப்பது கூடாதென்றார்.

பின்னரங்கிருந்த தேவர்கள் ஆகார முதலியவைகளை நீத்து அளவற்றநாள் அரிய தவத்திலிருக்கின்ற யோகியராயினும், காமக்கடலைநீந்துவது மகாகடினம் என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். அதனைக்கேட்ட பிரமன் உடனே அதிகவேகத்தோடும் எழுந்தனன். அப்போது அவன் வீரியமானது வெளிப்பட்டது. பின்னர் பிரமன், முன்னர் தவஞ்செய்துகொண்டிருந்த தடாகத்தை யடைந்து ஸ்நானஞ்செய்து, சுத்தபவித்திரனாகி, யதாப்பிரகாரந் தனதிருப்பிடத்தை நோக்கிச்சென்றனன். இப்பால் பௌரணவர, அத்தினத்தில் அப்பிரமனோடு தவஞ்செய்துகொண்டிருந்த அபிசித்து மகாராசனும், அவன் பத்தினி குணவதியும், சமுத்திர ஸ்நானஞ்செய்து மீண்டுவருகையில், குணவதிக்குத் தாகமேவிட்டு விரைவிற் றடாகத்தினை யடைந்து தண்ணீரருந்தினள். அத்தண்ணீரோடு பிரமதேவனுடைய வீரியமானது அவளது கருப்பத்திற்சென்று கருவாயிற்று. பின்னர் அரசன் வைசம்பாயனமுனிவர் செபஞ்செய்யுமாறு அநுக்கிரகித்தருளிய நான்கு திங்களுமானவுடன், வேதாகமமுறைமைப்படி தருப்பணாதிகளைமுடித்துத் தனது மனைவியோடு முன்போலநகரத்தைச்சேர்ந்து, தேவர்கடனாதிகளைப் பேரன்பினோடு நிறைவேற்றி வந்தனன். பத்தாந்திங்களில் குணவதி ஒருபுத்திரனைப் பயந்தனள் அப்புத்திரனுக்கு அரசன் சாதகன்மாதிகளைக் கிரமப்படி முடித்துச் சூதகநீங்கியவுடன் சோதிடர் முதலாயினோரை வரவழைத்து நமது புத்திரனுக்கு என்னென்று நாமகரணஞ் செய்யவேண்டியதென வினவினன். அதற்கு அவர்

கன் அப்புத்திரனுடைய திதியாதி நிலைகளை யாராய்ந்து இவன் தேவர்களாலும் பூசிதஞ்செய்யத் தக்கவனென்று தமக்குட் டீர்மானித்து, கணனென்று நாமகரணம் வைக்கச்சொல்லினர். அரசன் அவ்வாறே அவனுக்கு நாமகரணஞ்செய்தனன்.

இப்பால் கணனென்பவன், நாளுக்குநாள் வீறிவளர்ந்து நீண்டவுருவும், மேகநிறமும், பருத்தவிழியும், அகன்றமார்பு முடையவனுகி இவன் வேறொரு பர்வதராஜனென்று சொல்லும்படியாக வீதியில் விளையாடிக்கொண்டிருக்கின்ற பருவத்திற்றனே அரைக்கணத்தில் அளவற்ற யோசனை தூரஞ்சென்று திரும்புவானுகி, ஒருநாள் சந்திரன் கீழ்த்திசையினின்றும் உதயமாகி ஆகாயமார்க்கமாகவரக்கண்டவன் விரைவிலெழுந்து அவன்கரங்களைச் சேரப்பிடித்துப் பின்னர் தொழுதுவணங்கி, அவன் நல்லவார்த்தைகளைப் பேசிக் கெஞ்சவிடுத்திட்டனன். மற்றொருநாள் ஒரு யானையானது மும்மதங்களையுஞ் சலசலவென்று பொழிந்து மிருந்தகோபத்தோடுங்கட்டுத்தறியை முறித்து பாகர்களையெல்லாம அடர்த்துத் துதிக்கை கொம்புவால் இவைகளினுற் படைவீரர்களையெல்லாங்கொன்று அந்நகரத்தினது வாயிலையடைத்துக்கொண்டிருக்க, அந்நகரத்தார் மிக்கக்லேசத்தையடைந்து, இந்தமதயானை முன்னொருகாலத்தில் சர்வசங்கார மூர்த்தியாகிய சிவபெருமான் உரித்தருளிய மதயானையோ? அல்லது ஆலவாயழியுமாறு அமணர்களாலேவப்பட்ட மதயானையோவென்றுகலங்கி, ஆரவாரிக்க, அதை அக்கணனென்பவன் கேட்டு அந்தயானையருகிற்சென்று, அதன்கதுப்பில் வீரிடும்படியாகப்புடைத்து மத்தகத்தை கிழித்தனன்.

உடனே அதினுடைய கதுப்பினும் மத்தகத்தினும் உதிரப்பிரவாக முண்டாகி அப்பிரவாகமும் மதநீரும்ஒன்றுபட்டு நீலகிரியின் மீது இந்திரவில்லிருந்ததுபோலவிளங்க அந்தயானை யிறந்து விழுந்தது இவ்வாறு அளவற்ற அற்புதமான விளையாட்டுகளை நடாத்திவருகின்ற அக்கணனென்பவன், வயதிற் சிறியவனுயினும் வலியில் எவ்வாறு பெரியவனுயினுனே அவ்வாறே தருமம், தானம், ஒழுக்கம், ஆசாரம், விருந்தோம்பல், சிவபூசை, சிவஞானம் சீலம்முதலாகிய நற்குணங்களினும், பெரியவனுகி ஒருநாள் தனது தந்தையைப்பணிந்து விடைபெற்று வனத்திற்சென்று ஓர்தடாகக்கரையிலிருந்து, நித்தலும் விபூதி உருத்ராக்கம் முதலியவைகளை யணிந்து, தாமரை மலரினும், உன் மத்த மலரினும் சிவபிரானை வழிபட்டுக் கந்தமூல பலாதிகளை நிவேதித்து, அவரது பஞ்சாக்கரத்தைச்

செபித்துக்கொண்டு ஆயிரவருடம் வரையில் தவத்திலிருந்து, பின்னர் ஒற்றைக்காலில் நின்று ஜல பாணத்தோடு முப்பது வருடம் வரையிலும் வாயுபட்சணத்தோடும், பத்து வருடம் வரையிலும் நிராகாரத்தோடும், பத்துவருடம் வரையிலும் உக்ரமாகிய தவத்தைச் செய்தனன்.

இப்பால், அவன் தவஞ்செய்கின்ற இடத்தில் தென்றற் காற்றேயன்றி ஏனைய காற்றுகள் வீசினதில்லை சூரியன் வேகமாய்க் காய்ந்ததில்லை, மழை அதிகமாய்ப் பெய்ந்ததில்லை, மிருகங்களும், பறவைகளும் ஒன்றுக்கொன்று பகையானதில்லை, அவன் செய்து வருகின்ற உக்ரமான தவத்தினின்றும் அனலுண்டாகி அவ்வனல் தெய்வலோகமெங்கும் பரந்து தகித்தது அதைத்தேவர்கள் சகிக்க மாட்டாது இவன் சுவர்க்காதி போகங்களில் யாதுவேண்டித் தவஞ் செய்கின்றனனென்று பயந்து, யாவரும் ஒன்றுகச்சேர்ந்து, ஆகாய மார்க்கமாய்க் கயிலாய பர்வதத்தை யடைந்து, சிவபெருமானைப் பணிந்து எழுந்து அளவற்ற வேத ஆகமங்களினால் துதிசெய்து, சுவாமீ! ஒருவன் வனத்தில் விபூதி உருத்ராக்கம் முதலியவைகளை யணிந்த கோலத்தோடு கையில் செபமாலையினை யேந்தி ஒற்றைக் காலில் நின்று பஞ்சாக்ஷரத்தினால் தேவரீரைத் தியானஞ்செய்துக் கொண்டு, உக்ரமான தவத்திலிருக்கின்றனன் அவனிடத்தினின்றும் ஓர் தவாக்கினிபிறந்து சொர்க்கலோக மெங்கும் பரவி, எங்களை எல்லாம் வெதுப்புகின்றது. அதனால் யாங்கள் அனைவரும் தேவரீர் சரணாரவிந்தங்களை யடைந்தனம், இனி அடியேங்களுக்கு யாதொரு துன்பமும் வராவொட்டாமல் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குச் சிவபெருமான் கிருபைகூர்ந்து அவர்கட்கு அஞ்சவேண்டாமென்று அபையாஸ்தந்தந்து இடபவாகனத்தின்மீது பார்வதி தேவியாரோடும் எழுந்தருளி, ஐம்பொறிகளையும் நிக்கிரகித்து, அரிய தவத்தினைச்செய்துகொண்டிருக்கின்ற கணனுக்கு எதிரில் பிரத்தியட்சமாயினர் உடனே கணனனவன் மேகத்தைக்கண்ட மயில்போல வெழுந்து தனதுவருத்தமெல்லாம் வீழும்படியாகக் கர்த்தனுடைய திருவடிகளிற் பலமுறைவீழ்ந்து நமஸ்கரித்து கைகொட்டி ஆனந்தக்கூத்தாடி மும்முறை வலம்வந்து கண்களீரைக் கவிழ்ப்ப, உரை தடுமாற்றங்கொள்ள. உடலெங்கும் உரோமாஞ்சிதம் பூப்ப, அகத்துள் அன்புபொங்க, மிக்கவணக்கத்தோடும் எதிர்நின்று, ஓ பரம்பொருளே! இராசதம் சாத்மீகம் தாமதமென்கிற முக்குணங்களினின்று சகலசீவராசிகளையும் படைத்துங் காத்துந்துடைத்து மிராநின்ற கர்த்தர் தேவரீரே யாதலால் இந்த அடியேனுய்யுமாறு திருவருள் சுரக்கவேண்டுமென்று துதி

செய்தனன். அதற்குச்சிவபிரான்கிருபைகூர்ந்து, அன்பனே! நீகரு தியவரங்களைக்கேள் தருகின்றேமென்று திருவாய் மலர்ந்தனர்.

உடனே கணனாவன் மீட்டுந்தொழுதெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி, சுவாமீ தேவரீருடைய திவ்ய சரணாரவிந்தங்களில் எக்காலத்தும் மாறுதபத்தியும் மேலானபாக்கியமும் அடியேற்கருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவ்வாறே சிவபிரான் தமது திருவடிகளில் பத்தியும் மூவுலகத்தையும் ஆளத்தக்க அரசாட்சியும் பிரமேந்திராதி தேவர்களாலும் அழியாத ஆயுளும் பின்னும் அளவற்றவரங்களையும் அவனுக்குத் தந்து தமது திருக்கைலைக்கெழுந்தருளினர். கணனாவன் தனது நகரத்தை யடைந்து தன்னையீன்ற தாய்தந்தையருடைய பாதங்களைப்பணிந்தெழுந்து தனக்குப் பரமசிவன் கொடுத்தருளிய வரங்களனைத்தையும் அவர்களிடத்திற்கூறிச் சந்தோஷமுற்றிருந்தனன். பின்னர் அவன் தந்தையாகிய அபிசித்துமகாராசன் அவனுக்கு விவாகஞ்செய்து சிலநாள் சென்றபின்பு அவனுக்குப பட்டாபிஷேகம் நடத்தித்தனதரசுரிமையையும் அவன்பாலொப்புவித்துந் தான் தனது மனைவியோடு பிரதிதினம் சிவபெருமானைப் பூசித்து அரிய தவத்தினால் ஆனந்தக்களிப்பில் மூழ்கியிருந்தனன் இப்பால் கணராசன் தனது தந்தைகொடுத்த வுலகத்தைத் தன்வசமாக்கி அன்னியதேசங்களையுங் கைக்கொள்ள வேண்டுமென்று கருதிவிசுவசித்து பிரமதன்-கிரந்தன் - விதந்து என்கிற நான்கு மந்திரிகளையும் தனது புத்திரர்களாகிய சூலபாணி-சுலபன் என்கிற இருவர்களையும் சர்வாயுதபாணியராய் அளவற்ற சேனைகளோடுவரக் கட்டளையிட்டு நாற்புறத்தும் நூற்றைம்பது நூற்றைம்பதுயோசனைதூரம் பரவியிருக்கின்ற சதுரங்கசேனைகளோடுயமனும் அஞ்சிக் கண்புதைக்கும்படியாகத் தான்புறப்பட்டு எதிர்த்து வந்தவர்களை யெல்லாஞ் சங்கரித்துப் பணிந்து வந்தவர்களிடத்திற்கு பகுதிவாங்கிப் பூவுலகத்திலுள்ள சகல ராச்சியங்களையுந் தன்வசப்படுத்தி உடனே சொர்க்கலோகத்திற்சென்று கற்பகவனத்தி லிருக்கின்ற தேவேந்திரனுடைய உச்சைசிரமென்கிற குதிரையைப் பிடித்து அதன்மீது தான் ஆரோகணித்தனன். அதனைத் தேவேந்திரன் தனது தூதர்களா லறிந்து, மிக கோபா வேசத்துடனெழுந்து, வச்சிராயுதத்தைத்தாங்கி, வெள்ளையானையின்மீ தாரோகணித்து நீண்டதுவசங்களாடும்படியான தனது அரண்மனைவாயிலினின்றும் வெளிப்பட்டனன். உடனே யெல்லாத் தேவர்களுஞ் சர்வாயுதபாணிகளாய் நெருங்கினார்கள். நாற் புறங்களினும் இரணபேரிகைகள் முழுங்கின. ஆகாய வெளி

யெங்கும் வெற்றித் துவஜங்கள் தூர்த்தன. வீரர்கள் கரங்களிலெல்லாம் எஃகாயுதங்கள் பிரகாசித்தன பீலிக்குஞ்சங்குகளும், வெண்பட்டுக்குடைகளும் எங்குநிறைந்தன. இவ்வித வாடம்பரங்களுடன் தேவ சேனைகளெல்லாஞ் சந்த்ர சாகரங்களைப்போல ஆர்ப்பரித்துவர தேவேந்திரன் தனது நகரத்தைக் கடந்துவந்து மிக்கபராக்கிரமத்தோடு கரத்தில் வில்லேந்தி தனது குதிரைமீ தாரோகணித்திருக்கின்ற கணராசனையும் அவன் சேனைகளையுங்கண்டனன். அப்போது இவ்வீரனோடு யுத்தஞ்செய்து வெற்றிப் பெறுவது மிகவுங் கடினமாதலால், இவனை இனியவார்த்தைகளாற் சம்மதப்படுத்துவதே சரியானதென்று தனக்குள் ஆலோசித்தவனாய், ஓ குணவதி குமாரனே! ஓ குணக்குன்றமே! கணனென்னும் பெயருக்கேற்ப நன்கு மதிக்கப்படுங் காட்சியோய்! எனது குதிரையை விட்டுவிடும் என்று கேட்டனன். அதற்குக் கணராசன் நகைசெய்து, இந்திரனே! உனது ஐராவத முதலியனவும், எனது வயமாகத் தக்கனவேயென்றுசொல்ல, அதனைக்கேட்டலும், இந்திரன்கோபங்கொண்டு, தனது சேனையைத் தூண்டி, யுத்தஞ் செய்வதற் காரம்பித்தனன். அதனைக் கணராசனால் வெறுந்தாக் கள்ளப்பட்டிருந்த சேனாதிபதிக்குள் ஒரு வீரன்கண்டு தேவசேனைகளோடெதிர்த்து, நாசஞ்செய்து, யாவரும பின்னிட்டோடும்படியாக முடுக்கினன் இவ்வாறு ஓரே சேனாதிபதிக்கு அளவற்ற விம்மிதங்களோடும்வந்த தேவசேனைகளெல்லாம் பின்னிட்டோடலும் இந்திரன் மிகவுமானமுங் கோபமுங்கொண்டு தனது ஐராவதத்தைக் கணராசனருகிற் செலுத்திக் குலிசாயுதத்தால அவன்மார்பிற்றுக்கினன். உடனே கணராசன் மூர்ச்சையாகி மீட்டுந் தெளிந்தெழுந்து குதிரையை இந்திரனருகிற்றூண்டித் தனதுவாளினால் அவனகுலிசப்படையைக் கீழேவிழத்தள்ளினன் அதனால் இந்திரன் இளைப்புற்றிருக்கின்றமையை அவனது ஐராவதங்கண்டு மிகுந்த சீற்றத்தோடும் போர்செய்ய, அதனையுங் கணராசன் அடித்து ஓர் நொடிப்பபோதில் நிலத்தில்விழத்தள்ளினன். இப்பால் இந்திரனுங் கணராசனுங் கைகலந்து மல்லுயுத்தஞ் செய்வதானார்கள் அப்போது கணராசனனவன் பல பேய்க்கூட்டங்கள் தனது வெற்றியைக்கூறித் துணங்கை யாடும்படியாக இல்லிப்பானையில் முகுந்த நீரைப்போல, இந்திரனுடைய முடியில் உதிரவெள்ளம் பெருகும்படி குட்டினான் அதனா லவ்விந்திரன் சோர்பித்து வீழ்ந்து பின்னர் தெளிந்தெழுந்து மானமானது உள்ளத்தில் வாதிக்கும்படியாக வாட்டங்கொண்ட முகத்தோடுஞ் சிரங்கவிழ்ந்து நாணமுற்றிருந்தனன், அதனைக் கணராசன் கண்டு இந்திரனே! இனியொன்றற்கும் அஞ்சற்க யாமுனக்கு விண்ணுல காட்

சிவைய இத்தினந்தந்தோம். எமக்குள்ள அரசாட்சிகளுள் அளவற்ற வளங்கள் மலிந்திருக்கின்றன ஆதலால் இவ்விண்ணுலகவளங்களை யாம் வேண்டிலம். இனி நமது ஆணைக்கஞ்சி நடந்துகொள்ளக்கடவை. அதினின்று மாறுவையாயின் உடனே தண்டனைக்குள்ளாகுவை யென்று சொல்லி மற்றலோகங்களையுஞ் செயங்கொள்ளுமாறு அவ்விடத்தினின்றும் வெளிக்கொண்டனன்.

அக் காரணத்தை விண்டு பிரமனாதியர் கண்டு, இனி நமக்கு யாது சம்பவிக்க விருக்கின்றதோ வென்று பயந்து, யாவரும் மிகுந்த வணக்கத்துடன் கணராசனை யெதிர்கொண்டு அளவற்ற கையுறைகளைத் தந்து இனிய வார்த்தைகளாடி வணங்கிச் சென்றனர். அதற்குக் கணராசன் மனமகிழ்ந்து யாவருக்குந் தனதுகிருபையை வழங்கி அவ்வவர்களுடைய உலகங்களிற் றனது முத்திரைமோதிரச் சுவடை வழங்கும்படி செய்து பூவுலகத்திற்கு வந்து தனது தாய்தந்தையர்களைப் பணிந்தெழுந்து தேவர்களாற் றரப்பெற்ற பல கையுறைகளை அவர்களெதிரில் வைத்து அவ்வவர்களைச் செயித்து வந்த திறங்களனைத்தையுஞ்சொல்லி வேதமுறையினின்றும் வழாதபடி நீதியினைச் செலுத்தி உம்பர்களுங் கண்டு உலப்பெய்தத்தக்க பல தருமாதிகளையிடைவிடாதியற்றி அழகிற்சிறந்த அனேகமாதர்களை மணஞ்செய்து நெடுநாள் களிப்பென்னுங்கடலுண்மூழ்கி வாழ்ந்திருந்தனன். இவ்வாறிருக்கு நாளையில் ஒருநாள் வனத்தின்கணுள்ள சிலவேடர்கள் கணராசன் சமுகத்தில் வந்துபணிந்தெழுந்து அடியேங்களுடைய கூழுங்குடியுங் கெடாதபடி வளர்த்துவருகின்ற குறிசிலே! வனத்தின் கண் பலவகைப்பட்ட மிருகவர்க்கங்கள் மிகுத்து அவ்விடத்துள்ள பயிர்களை யெல்லாம் நாசஞ்செய்து வருகின்றனவென்று முறையிட்டார்கள் அதனைக் கணராசன் கேட்டு, வேட்டையாடுவான் செல்ல வெத்தனித்து, மந்திரிகளைக் கொண்டு சில சேனைகளோடு நாய் வேட்டைக்காரர் வலைஞர் முதலியோரை வரவழைத்துத் தான் நீலவத்திரமுடுத்தி, யிடையில் நீலக்கச்சினை வீக்கி. நீலநிறத்தாலாகிய முன்கை தோற்கட்டுகளையணிந்து. நீலப் போர்வையைப்போர்த்து நீலந்தோய்த்த தலைச்சுற்றினையணிந்து, சுற்றிலும் நீலமணிக்குடை நிழற்றும்படியாகக் கரத்தில் நீல வில்லேந்தி, நீலப்பரிமீ தாரோகணித்துப் பூவுலகை நோக்கிச்செல்லும் யமனைப்போல. வனத்தைநோக்கிச் செல்லுவதாயினன்.

இவ்வாறு கணராசன் செல்லுகையில் முன்னதாக நான்கு ஏவலாளர்கள் நான்கு திசைகளினுமோடி மிருகங்களெல்லாங் கூட்டங்கொண்டிருக்கின்ற விடங்களை யறிந்துவந்துகூற மள்ளர்களெல்

லாம் அவ்வவ்விடங்களிற்கவண்களை யெறிந்து, எங்கும் வலைவிட்டார்கள். வேடர்களெல்லாம் ஞாளிக்கூட்டங்களை யேவிப்பம்பைகொட்டினார்கள். மறவர்களெல்லாம் பற்பல புதர்களையுஞ் சென்று குறைத்து வெட்டினார்கள் படைவீரர்களெல்லாம் வில்லேவலைத்து வேட்டையாடினார்கள். சிங்கங்கள், யாளிகள், வராகங்கள், முட்பன்றிகள், யானைகள், ஒட்டகங்கள், காட்டானைகள், மான்கள், முயல்கள், மரைகள், புலிகள் முதலாயுள்ளயாவுந் தங்கடங்களிடங்களை யகன்று வனமெங்கணும் பாய்ந்துலாவின: அவற்றுட்சில மிருகங்கள் மள்ளர்களோடெதிர்த்து யுத்தஞ்செய்து மாய்ந்தன. சிலமிருகங்கள் ஒன்றோடொன்று அடர்ந்துமடிந்தன சில மிருகங்கள் வலையின்கண் அகப்பட்டிறந்தன சில மிருகங்கள் ஞாளிகளின் வாயிலகப்பட்டு மரித்தன.

இவ்வாறு கணராசனானவன் தனது படைவீரர், மறவர், வலைஞர் முதலாயினோரைக் கொண்டும் ஞாளிக்கூட்டங்களைக் கொண்டும் பலவகைப்பட்ட நாடுகளினுஞ் சென்று வேட்டையாடி யாளி முதலிய மிருகங்களை யெல்லாங்கொன்று திரும்பி வருங்காலையில் தனக்கு மிகவுந் தாகம்மேலிட அதனால் வழிதப்பி இருவிழிகளும் பஞ்சடையும்படியாக அமைச்சர்முதலிய சேனைகளோடு இருண்டகாட்டினுள்ளே புகுந்து சென்றனன். அப்போதவ்விடத்தில் தெய்வலோகத்தினை நிகர்த்த ஓர்வனந்தோற்றக்கண்டு அதனுள் சேனைகளோடு நுழைந்து மல்லிகை முல்லை முதலிய புட்பச்செடிகளெல்லாம் படர்ந்து தென்றற்காற்றினால் எங்கும்பரிமளத்தை வீசாநின்ற ஓர்சோலையையடுத்து அங்கு பெரியோர்களது உள்ளத்தைப் போலத் தெளிந்த தண்ணீரையுடைய ஓர் நதியைக்கண்டு அந்நதியின்கண்மிருந்த ஆவலோடும் ஸ்நானஞ்செய்து சிறிதுதணீர்வெமிழ்ந்து அவ்விடத்துள்ள கந்தமூலபலாதிகளை உழையர்கள் சேகரித்துக்கொடுக்க வாங்கிப்புசித்து தாகசாந்தியுஞ் செய்து பசியையும் இளைப்பையுஞ் சிறிதாற்றித் தன்மீது தென்றற்காற்று வீசும்படியாக ஓர்மரத்து நிழலில் உட்கார்ந்திருந்தனன். இவ்வாறு கணராசன் இளைப்பாறிக்கொண்டிருக்கின்றசமயத்தில் அவ்வனத்தில் வாசஞ்செய்கின்ற கபில மகாமுனிவருடைய சீடர்களிலொருவர் அங்குள்ள நதியில் ஸ்நானஞ்செய்யச் சென்றனர். அப்போது அவர் அந் நதிக்கரையிலுள்ள அரசனையும் அவன் சேனைகளையுங் கண்டு அதனைத் தனது குரவராகிய கபிலமுனிவருக்குத் தெரிவித்தனர். உடனே கபிலமுனிவர் அவ்வரசனை இங்ஙனம் அழைத்துவாரக்கடவை என்று கட்டளையிட அவ்வாறே அச்சீடர் கணராஜனிடத்திற் செல்ல அவரை அவ்வரசன்கண்டு வணங்கித் தாங்கள் இங்குவந்த

காரியத்தைத் தெரிவிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனன். அதற்கு அச்சீடர்! அரசனே! நீர் இங்ஙனம் வந்திருக்குஞ் செய்தியை எனது ஆசிரியராகிய கபிலமுனிவர்தெரிந்து உம்மைத் தமதிடம் அழைத்துவருமாறு ஆக்கியாபித்தனுப்பவந்தனன் என்றனர். அதற்கரசன் மிகுந்த சந்தோஷங்கொண்டு அம்முனி புங்கவரது ஆசிரமத்திற்குச்சென்று இருட்பகையாகிய சூரியனைப் போன்று பிரகாசிக்குஞ் சிந்தாமணியை மார்பின்கண் தரித்திருக்கின்ற கபிலமுனிவருடைய திருவடிகளைப் பேரன்பினோடு பணிந்தெழுந்துநின்றனன். அவனை அம்முனிபுங்கவர் கிருபையோடும் பார்த்தருளி ஓராதனத்திலவனையிருக்கச்செய்து அரசனே நீயார்? இங்கு யாதுகாரணம்பற்றி வந்தனை? என்று வினவ அதற்குக் கணராஜன் சொல்லுவான்: சுவாமீ! எனது நாமம் கணன் என்று சொல்லுவார்கள். யான்வனத்தின்கண் வேட்டையாடி திரும்புங்காலையில் மிக்க இளைப்பினால் வழிதப்பி இவ்விடத்திலணுகி திவ்வியாநதியில் ஸ்நானஞ்செய்து கந்தமூல பலாதிகளைப்புசித்து இளைப்பாறிப் பூர்வஞ்செய்திருக்கின்ற புண்ணிய பலத்தினால் கிருபைக்கடலாகிய தேவரீருடைய திவ்விய சரணார விந்தங்களைத் தரிசிக்கப்பெற்றேனென்று சொல்லினன். அதனை முனிபுங்கவர்கேட்டுச் சந்தோஷித்து அரசனே! இவ்வாசிரமத்திற்கு வந்தபேர்கள் பசியுடன் சென்றதில்லை. ஆதலால் நீயும்போசனஞ்செய்து பின்னருனது பட்டணத்தைச் சேரலாமென்று இசைவிதந்து அவனை சேனைகளோடு வரவழைத்து தந்தவமகிமையை யாவருந்தெரியும்படி மார்பிலணிந்திருந்த சிந்தாமணியை கரத்திலெடுத்து ஓராதனத்தில்வைத்துப் பூசைசெய்து இங்கு வந்திருக்கின்ற யாவருக்கும் விருந்திடவேண்டுமென்றுபிரார்த்தித்தனர். அதன்பேரில் அச்சிந்தாமணியானது அழகு பொருந்திய வோர் நகர முண்டாக்கி அதில அளவற்ற மாளிகைகள்; கூடகோபுரங்கள் முதலியவைகளை நிருமித்து அநேக பரிசாரர்களையும் அளவற்ற தங்கப்பாத்திரங்களையுஞ் சகலவித போசனவர்க்கங்களையுஞ் சிருட்டித்து அரசனுக்கும் அவன் சேனைகட்கும் விருந்திட்டது. அவ்வற்புதத்தைக் காணுந்தோறும் அரசன் பெருமகிழ்ச்சியடைந்து போசனாதிகளை முடித்து மீட்டும் முனிபுங்கவரைக் கண்டுபணிந்து சுவாமீ! தேவரீர் சிருட்டி முதலிய தொழில்களை வேண்டினும் இமைக்கு முன்செய்து நிறைவேற்றவல்ல மகாதவமகிமையை யுடையவராதலால் ஈகையிற்சிறந்த சிந்தாமணியைத் தேவரீர் வைப்பது யாதுக்கு? என்து தந்தைக்கொப்பாகிய தேவரீர் அடியேனைத் தமது புத்திரனைப் பாவித்து அச்சிந்தாமணியை அடியேற்குக் கொடுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

அதனை அம்முனிபுங்கவர்கேட்டு அரசனே! இச்சிந்தாமணியானது
எனது உயிரினுஞ் சிறந்ததாகும். ஆதலால் ஈதொழிய யாதொன்று வே
ண்டினுந் தருவோமென்று சொல்லினர். அதற்கவ்வரசன் அச்சிந்
தாமணிமீது வைத்த ஆசையினால் சம்மதியாது மனதில் விரோதங்
கொண்டு முன்னம் பிரமனிடத்தினின்றும் பகற்போதில் வெளிப்ப
ட்ட வீரியமானது பின்னாய பகற்போதிற்றனை வயிற்றிற் றங்கிக்
கருவாகிப் பிறந்த பழுதினால்; அவன் ராஜகுலத்திற் பிறந்தும்
இராட்சசகுணம் பெற்றுத் தனது அற்புதத்தினால் அச்சிந்தாம
ணியை அம்முனிபுங்கவரிடத்தினின்றும் பலாத்காரமாய்ப் பறித்
துக்கொண்டனன். அதனால் முனிபுங்கவர் கோபங்கொண்டு அடா
மூடனே! மூவுலகத்தின் கண்ணும் அரசாட்சியைச் செலுத்துகின்ற
நீ எனது பொருளைப் பறித்துத் துன்பமுறச் செய்தனை யல்லவா?
விரைவில் கடவுளானவர் உலகத்தின் கண்ணவதரித்து உன்னை நா
சப்படுத்தவேண்டும் பதிதனே இனியென் முன்னர் நிற்பையாயின்
உன்னைச் சபித்து நீறாக்கிவிடுவேனாதலால் விரைவில் உன திருப்பி
டஞ் சேரக்கடவையென்று சொல்லினர். அதற்கு கணராசன் பய
முற்றானாயினும் அச்சிந்தாமணியை மீட்டும் கொடுப்பதற்கு மனமி
ல்லாதவனாய் மிக்க ஆவலோடுங்கொண்டு தனது நகரைச் சேர்ந்து
தான் வனத்தில் வேட்டைக்குச் சென்றது முதல் நடந்த விசேஷ
ங்களை எல்லாந் தனது தந்தையிடத்திற்கூறி தான் கவர்ந்துவந்த
சிந்தாமணியைக்கொண்டு பலவித விநோதங்களைக்காட்டிப் பற்பல
விடர்களையுந் தீர்த்து அளவற்ற சித்திகளோடு மூவுலகத்திலுந்
தனது அரசாட்சியை நடாத்திவந்தனன்.

இப்பால் கபிலமாமுனிவர் ஜீவரத்தினத்தை யிழந்த நாகம்
போலத் தமது சிந்தாமணியை யிழந்தகாரணத்தை நினைக்குந்தோ
றும் நெட்டுயிர்த்து நீங்காத துயரத்தினராகி ஆகார முதலிய
வைகளை நீத்து நமக்குத் துரோகஞ்செய்த மகாபாவியை எவ்வா
றழிக்க வல்லேமென்று யோசித்து விரைவில் அவனுக்குக் கேடு
சம்பவிக்கவேண்டுமென்று அகோர தவத்தினைச் செய்தனர். இவ்
வாறு அளவற்றநாள் மிகுந்த பக்தியோடு தவஞ்செய்து கொண்
டிருக்கையில் விஷ்ணுவினுடைய மாயையானது நாற்றிசைகளிலு
மேல் கீழாகி எங்கும் அக்கினிச்சுவாலையாய்மூடி அவரது கண்ணுக்
குக் காணும்படியாகின்றது. அதை அம்முனிபுங்கவர்கண்டு ஈதெ
ன்ன விபரீதமென்று பயந்தனர். அப்போது அஃது அம்முனிவரைக்
கூவி யான் மாயாசக்தி; எனது பெயர் சாருகாசினி; உமக்குத் துன்
பமளித்த கணனென்பவன் சிவபெருமானுடைய வரத்தினால் திரி

மூர்த்திகளாலும் அறிவுறாத மேன்மைபெற்றிருக்கின்றான் மூன்று தொழிலுக்கும் நாயகராகிய விநாயகமூர்த்தி திருவுருக்கொண்டு வருவாரெனில் அந்நிமிஷத்தில் அக்கணனுக்கு அறிவுண்டாகு மாதலால் அவ்விநாயகரை நோக்கித் தவஞ்செய்யக் கடவையென்று சொல்லியது.

அவை யனைத்தையும் முனிவர்கேட்டு ஐயமா! யான் அவரை நோக்கித் தவத்தைச் செய்யவேண்டிய முறைமையினையுந் தெருட்டவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு ஜாருகாசினி அம்முனிவரைநோக்கி ஓதவசிரேஷ்டரே! முன்னர் யான்கூறிய திருப்பெயரே மந்திரமாகக்கொண்டு அதன் முதலினுங் கடையிலும் ஓங்கார பல்லவத்தையும நமோ நந்தத்தையுஞ் சேர்த்துப் பதினெட்டு லட்சம் உருசெபம்பண்ணி ஓமமவளர்த்தித் தருப்பணம். பிராமண போசன முதலானவைகளையுஞ் செய்தால் அவ்வோம குண்டத்தினின்று விநாயகமூர்த்தியானவர் போதகம தாமரை மலர் மழுவாயுதம் பூமாலை யென்னு மிவைகளை யேந்திய நான்கு திருக்கரங்களுடனே அனந்த ஆபரணங்களையுந் தரித்துக்கொண்டு பிரகாசமுற்ற திருமேனியோடு சிங்கவாகனமூர்ந்து சித்திபுத்திசமேதராய் வந்தருளுவரென்று சொல்லி மறைந்துபோயினள். அவை யனைத்தையுங் கபிலமுனிவர் செவிகுளிரக்கேட்டுத் தாமிழந்த சிந்தாமணியை அப்போதே அடைந்தவர்போல ஆனந்தமுற்றெழுந்து துள்ளி முன்னிருந்த துயரங்களனைத்தையும்போக்கி விநாயகமூர்த்தியினுடைய திருமந்திரத்தை முறைமைப்படி செபஞ்செய்து ஓமந் தருப்பண முதலான கிரியாதிகளை யெல்லாம் நடாத்தி பூஜை முடிந்தவுடன் அவ்வோம குண்டத்தினின்று இரத்தினகிரீடம் குண்டலம் தோளணிமுத்துவடமுதலிய ஆபரணங்களோடு தேசார்ந்து வனப்பெய்தி யிருக்கின்ற திருவுருவமும கருணைபொழிகின்ற திருநேத்திரங்களும் மோதகம் முதலியவைகளை யேந்தியிருக்கின்ற நான்கு கரங்களும் எனது கற்போன்ற மனத்தினைக் கரைக்கவல்ல சேவடிகளும் விளங்க சித்திபுத்திகள் சமேதராகச் சிங்கவாகன மூர்ந்து விநாயகக்கடவு ளெழுந்தருளினர். அவ்வற்புத தரிசனத்தைக் கபிலமுனிவர் கண்குளிரப்பார்த்து சாருகாசினிசொன்ன தனைத்துஞ் சத்தியமென்று பலமுறை பத்தியுடனே சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து உள்ளமுருகி உரோமஞ் சிலிர்த்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி ஐயனே! அடியேன் குலமுதலிய யாவுஞ் சுத்த பவித்திர மாயின இனி சுவாமிகளுடைய திருவடிகளில் அடியேற்கு மாறாத பத்தியே யளித்து அந்தியகாலத்தில் உயர்ந்த முத்தியையுமளித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு விநாயக

மூர்த்தி கிருபைசுரந்து கபிலமுனியே! எண்ணிறந்த பலகோட்டி ருக்கு செய்துவந்த தவங்களினுலடையும் பயன்களையெல்லாம் எமது கிருபையினல் இச்சுணனத்திற்றானே ஓர்நொடிப்போதிலடைந்தனை யா மிவ்வுலகத்தின்கண்ணுள்ள தேவர்கள் முனிவர்கள் பெரியோர் கள் முதலியோருடைய மலபந்தங்களை யொழிக்கவும் வேதாகமங் களிற் கூறியயாகாதி சற்கருமங்க ளெல்லா மென்மேலும் வளர்ந் தோங்கவும் உனக்குத் துன்பநதினைவிளைத்த கணனென்னு மரக் கன் மாளவும சகல வுயிர்களுக்கும நன்மையைச் செய்யவுமாக உனது மனையின்கண்யாம அவதாரஞ் செய்தனம் இப்பொழுதே அக்கணனென்பவனுடலை நாய் நரி கழுகு முதலானவைகட் கிரை யாக்கி ஒப்பற்ற சிந்தாமணியை உனது கரத்திற் றருகின்றே மெ ன்று திருவாய்மலர்ந்தனர் அவையனைத்தையுங் கபிலமுனிவர்கே ட்டுச் சந்தோஷமாயினர்.

இங்கிவ்வாருக அந்தினமிரவில கணராசன் நித்திரை செய்கி ன்றபோது கனவுகண்டுவிழித்து அக்கனவினை யறிவிக்குமாறு ஓற் றரால் தனது தந்தையும அமைச்சரையும் புத்திரர்களையும் வரவ ழைக்க அவ்வாறே அவர்கள் நித்திரைவிட்டெழுந்து கண்துடைத் துக் கொண்டேவந்து அரசனது சமீபத்திற்போயினர் அப்போது அரசன் தனது கனவினுலுண்டான துயரத்தினுற் றலையிரங்கி வந் தவர்களைப் பாராமலும் அவர்களோடு வார்த்தை யாடாமலும் முக வொளி மழுங்கியிருந்தனன் அக்குறிப்பினை அவர்களறிந்து தாங் களும் அவனைப்போல மவுனமாயிருந்தார்கள். அவருள் அவ்வரச னுடைய தந்தையாகிய அபிசித்து மகாராசனெனவன் ஈதென்ன கா ரணமென்று சந்தேகித்து தனது புத்திரனை நோக்கி மைந்தனே இவ்வாறு உனது முகாரவிந்தமானதுவாடவும் எம்மையிங்கழைப் பித்து ஒன்றும்பேசாது நீமவுனமாகவிருக்கவுஞ்செய்த பெருந்துய ரினுக்குக காரணம யாதென்று வினவினன். அதற்குக் கணராசன் ஒன்றும்பேசாதிருந்தனன். பின்னர் விபசித்து முதலிய அமைச் சர்கள் அவ்வரசனைப்பார்த்து ஓ சகலபுவன சக்கிரேஸ்வரா! தேவ ரீர் தந்தை வினவிய கேள்விக்கு மறுமொழி கூருமலிருக்கின்ற கா ரணம் யாதென்று கேட்டார்கள். அதற்கும் வாய்திறந்திலன். இப் பாலவன் தந்தை மிகவுங் கிலேசங்கொண்டு இதற்கென்ன செய்ய வல்லோமென்றேங்கி புத்திரனருகிற்சென்று இனியசொற்களினல் இதனைச் சொல்லுவதாயினன் மைந்தனே! தேவர்கள்முதலிய யாவ ரையும் நினைக்கு முன்னமேவென்று வெற்றிகொள்ளவல்ல பராக் கிரமசாலியாகிய உனக்கு இத்தனை சிந்தாகுலம் வருவதற்குக் கார ணமென்ன? அதனை மறைத்துவைத் திருப்பதினு லாகுங் காரியம்

யாலும் வரத்தக்கதெல்லாம் வந்தேதீரும். எதுவரினும் தைரியா ளும் வேந்தர்கள் தயிரியம்விடப்போமா? திரிலோகங்களையுந்திறை தரவென்ற நீயே இவ்வாறு அதைரியங்கொண்டிருப்பையேல் மற் றோர் என்னபாடுபடார்? நீ இவ்வாறிருப்பது சத்துருக்களுக்கும் பலமுண்டாக்கும் ஆதலால் உனது மனத்தின்கணுள்ள துயரத்தை வெளியிட்டுச் சொல்லுகவென்று கேட்டனன். அதற்குமேல் கண ராசன் சிறிது நிமிர்ந்து என்னருமைத் நந்தையே! இனி எனக்கு இப்பிரபஞ்சவாழ்க்கை கூடிவராதபடி கனவுகண்டேன். அதனால் இவ்வித துயரங்கள் எனக்கு நேர்ந்தன அதனை விவரமாகச் சொ ல்லுவேன் கேட்பீராக° எனது கனவின்கண் கபில முனிவர் அளவி றந்த சேனைகளோடும் வெளிக்கொண்டு வந்ததாகவும் அவரோடு பற்பல ஆயுதங்களை யேந்திய நான்குகரந்தினையுடைய ஒருவன் ஊழித்தீயினை யொப்ப வந்து நமது சேனைகளனைத்தையும் விழுங் கினதாகவும் பின்னரவன் ஒரு மழுவாயுதத்தினை என்மீதுவிட அதுவந்து எனதுசிரத்தை யறுத்துத்தள்ளியதாகவுங்கனவுகண்டு விழித்தேன் அக்கனவே எனது தைரியத்தையும் பராக்கிரமத்தை யும் தேஜஸையுமழித்தது அதனை நினைக்குந்தோறும் என்சரீரம் நடுங்குகின்றது யான்பெற்ற மேலானவரங்களனைத்தையும் இழிவு பெறச்செய்தது இனி என்செய்வேன் இக்கனவையழிக்கும் நிமி த்தமே மங்கையர் மனம்போன்று இருண்ட இவ்விரவில் உங்களை யெல்லாம் வரச்செய்தே னென்றனன்.

இவை யனைத்தையும் பிரமதனென்னு மமைச்சன் கேட்டு ஓ சார்வபௌமா! தேவரீர் இக்கனவினைக் கருதிக்லேசப்படுவது மிக நன்று மிகநன்று சகலலோகங்களும் நடுங்கி ஒடுங்குமபடியாக யுத் தஞ்செய்து வெற்றிகொண்ட சக்கிரேஸ்பரராகிய உமக்கும் ஓர் அச் சம் உண்டாயதென்று சொல்லத் தகுமோ வென்றனன்.

கிரந்த னெனுமந் திரிகேட்டுக் களப்பா னிலத்தி னுட்கிடந்த
உரந்தங் கியவித் தறல்கலப்பி னுடனே முளைத்து மரமாகும்
பரந்த கருத்தா லொருவர்புரி பாவ வினையும் புண்ணியமும்
கரந்து பயனுங் காலதனுக் கதித்துப் பெரிதாய்த் தடித்திடுமே.

அதனைக்கிரந்த னென்னும் அமைச்சன்கேட்டு ஓ பிரமதரே! நீர் என்னவார்த்தை யாடினீர் நிலத்திற்கிடக்கும்வித்தானது சலத் தோடுகூடினால் உடனேமுளைத்து மரமாகும். அதுபோல ஒருவர் செய்த பாவபுண்ணியங்களும் பயனுங் காலத்து அவைகள் கதித் துப் பெரிதாய்த் தடிக்கும். சரீரத்தை வெறுத்துச் சுகத்தையொ

ழித்துப் பலதவங்களில் முயன்று வல்வினைகளனைத்தையும் வாட்டவல்லபெரியோர்கள் ஒன்றைச்சொல்லுவார்களாயின் அச்சொல்லினால் மேல்விளையத்தக்கது விளைந்திடுமே யல்லது வீணிற்போகாது. நமது வேந்தரோ முன்னங் கபிலமுனிவருடைய சிந்தாமணியை ஒருகாரணமுமில்லாமல் பறித்துக்கொண்டனர். அந் நடத்தையைப்போல் எங்குங்கண்டது மில்லை கேட்டது மில்லை. அதனால் அந்த முனிபுங்கவருக்கு மனக்கோதியுண்டாகி உடனே சபித்தனர் அச்சாபந்தான் இதுகாறும் முளையைப்போலிருந்து நாளுக்குநாள் விருத்தியாகி இப்போது பலித்து வருவதுபோ லிருக்கின்றதென்றனன். இவையனைத்தையும் அவனருகிலிருந்து கேட்டிருந்த விசுவசித்து என்னும் அமைச்சன் மிகவும் மனங்கொதிப்புற்று அக்கிரதனென்னு மமைச்சனை உறுத்துப்பார்த்து ஐயா! நீர் நமதமைச்சுரிமைக்கேற்றவாறல்லாதவைகளைப் பேசினீரலவீ!

தந்து மனைக்கேற் றவையறிந்து தாற்றுன காரி காரியங்கள்
அங்க ணறியான் பிறரையுபா வாகப் புகழான கோளுரைப்பான்
சிங்க வருந்தன கேட்டறியான் சிறப்புத் தனைத் தான்புகழ்வான்
இங்கனுரை தநோதப் பவமிலனை யென்றங்கவனைத் தடுத்துரைப்பான்.

ஓர் சபையினகத்தே அறிந்து பேசாதவர்களும், சாமி காரியங்களையறியாதவர்களும், பிறரைப் புகழ்கின்றவர்களும், கோளுரைக்கின்றவர்களும், தமக்கு வருங் கேட்டை யறியாதவர்களும், தம்மைத்தாம் புகழ்கின்றவர்களுமாகிய இவர்களெல்லாம் வீணாய்ச்சனித்தவர்களே யன்றி, ஒரு காலத்திலும் யோக்கியர்களாகாரென்று சொல்லினன் இவ்வாறு பிரதனை, கிரதனை, விசுவசித்து என்னு மமைச்சர் மூவரும் பேசிய வார்த்தைகளனைத்தையும் விதந்துவென்னு மமைச்சன் கேட்டிருந்து உடனே அரசனைப்பார்த்து, ஓமண்டலேஸ்வரா! யாவர் யாது சொல்லினும் சொல்லுக யான் தேவரீருக்கு இதமே பேசவல்லேன். அதையே கனமாகக் கொள்ளல்வேண்டும். தேவரீர் வலிமையிற்சிறந்தவர், இந்திரன் முதலிய தேவர்களையெல்லாஞ் செயித்தவர். தீரத்திற்சிறந்த சேனைகளை அளவற்றதாகவுடையவர். எதிர்க்கினுஞ் சத்துருக்களில்லாதவர். சிவபிரானாற் சாகா வரம்பெற்றவர். இப்படி எல்லாவிதத்திலும் பராக்கிரமத்தினையுடைய தேவரீரை யழிக்க வல்லோர்கள் திரிலோகங்களினுமிரார்கள். தேவரீருக்கு முடிவுநேருமென்று எக்காலத்தும் நினைக்கவேண்டாம் தேவரீர்கொண்டிருக்கின்ற சிந்தாகுலத்தை விடுத்து, கபில முனிவரைக் கொல்வதற்கான உபாயமியாதோ அதனை விரை

விற்கிடவேண்டு மென்று சொல்லினன். ஊழின் வசத்தாற்கெடுங் காலத்துக்கெட்ட மதியே நல்ல மதியாகத் தோன்று மென்னு மேலோர் வாக்கியத்தின்படி கணராசனானவன் விதந்து சொன்ன வார்த்தையினையே மேலாகமதித்து ஊழின்வசத்தால் அறிவுகாலம் நேரிட்டவனாகி ஓர் நொடிப்பொழுதில் கபிலமுனிவர்மீது படையெடுக்குமாறு தனது சேனாதிபதிகளுக்குக் கட்டளையிட்டனன்.

அதையவன் றந்தையாகிய அபிசித்து மகாராஜன் கேட்டு, விழிகள் சிவப்பேறத் தனது புத்திரனைப் பார்த்து, ஓ மைந்தனே! நீ யென்னகாரியஞ்செய்கின்றனை? தேவர்கள் முனிவர்கள் முதலிய யாவருக்கும் மிகுந்த பகையாயினை? அந்தப்பெற்ற பொல்லாத கனவுங்கண்டனை? அது ஒருகாலத்தும் பொய்க்காது, நல்லகனவினால் நன்மையேவரும் தீயகனவினால் தீமையேவரும், நீ இப்போது தவத்திற்சிறந்த கபிலமகாமுனிவர்மீது படையெடுத்துச் செல்லுவது யுக்தமன்று அமைச்சர், சேனாபதிகள் முதலியவர்களோடு அளவற்றபடைகள் கடல்போலிருந்தாலும் பெரியோர்களைச் செயிப்பது மிகவும் அரிதாதலால் இனி நீ பிழைக்கும் வகையினைச்சொல்லக் கேள், இந்நிமிஷத்தில் முன்னர் அவரிடத்தினின்றும் பறித்துவந்த சிந்தாமணியை மீட்டும் முன்னதாக அவரிடத்திற்குக் கொடுத்தனுப்பிப் பின்னர் நீ அவருக்குக் கோபம்வாராதபடி சென்றுபணிந்து தோத்திரஞ்செய்து, உன் பிழையினைத் தீர்த்துக் கொள்ளக் கடவையென்று சொல்லியும் அவ்வசனத்தைக் கவலையொத்த உள்ளத்தனாகிய கணராஜன் கேட்டு, எந்தாய்! தேவரீர் அரசாட்சிக்குள் யானிருக்கினும் தேவரீர் சொல்லும் வார்த்தைகளை உடன்படத்தக்கதன்று சிறியோர்களாயினோர் மானங்கெடாத காரியங்களை யெடுத்துக்கூறினும், மானத்தைக்காக்கவேண்டினோர் அவைகளைத் தழுவிக்கொள்ளுதல் வேண்டும் பெரியோர்களாயினோர் மிகவும் பிரியமாக மனங்கொண்டபடியான காரியத்தைச் சொல்லினும், அச்சொல்லுக்கே கேடுவருமென்று சொல்லித் தனது தந்தை சொல்லிய வார்த்தைகளை மறுத்துப்படையெடுத்தனன் இவ்வாறு கணராஜன் படையெடுத்ததை இந்திரன் முதலிய தேவர்களறிந்து, இவன் நமதுலகத்தை நோக்கியோ படையெடுத்து வருவதென்று நடுங்கினார்கள். மற்ற திசைக்காவலர்கள், நாகேந்திரர் முதலிய யாவரும் அவ்வாறே நடுங்கினார்கள். இப்படி யாவரும் நடுங்கும்படியாகக் கணராசன் பதினொரு அக்குரோணி சேனைகளுடனேவெளிப்பட்டுக் கபிலமகாமுனிவருடைய ஆசிரமத்திற்குவந்தான். அச்சமயத்தில் அம்முனிபுங்கவர், தீர்த்தமாடி விபூதி உருத்திராக்க முத

வியவைகளை யணிந்துகொண்டு விநாயகமூர்த்திக்குப் பள்ளியெழு ச்சித் திருபூசையைநடாத்திக்கொண்டிருந்தனர். அப்போது அவர் சீடர்களுட் சிலர் கணராஜன் படையெடுத்து வந்தமையைப் பார்த்து ஓடிவந்து சுவாமீ! முன்னர்தேவரீரிடத்தினின்றுஞ் சிந்தாமணியைப் பறித்துக்கொண்டு சென்றபாதகன் இப்போது தனதுபடைகளோடும் வநதிருக்கின்றனன். இனி அவனுக்கு நல்லவாழ்க்கையில்லை. சுவாமிகள விரைவிலவனைக கொல்லு முபாயத்தைத் தேட வேண்டுமென்று சொல்லிகொண்டனர் அந்தருணத்தில் கணராஜன் முன்செய்திருக்கின்ற தவற்பேற்றினுலே, அவ்வாசிரமத்தின் கண் அவதரிக்கின்ற விநாயகமூர்த்தியைக் கண்டனன்.

அப்போது அவ்விநாயக மூர்த்தியைக் கபிலமுனிவர் எதிர்நின்றுபூசிப்பதையும, சித்திபுத்திகளிருவருஞ் சுவாமியினுடைய இரு பக்கங்களி லிருப்பதையும, தான் கனவின்கண் எவ்வாறு கண்டானே அவ்வாறே சகலரூபங்களுந தோன்றும்படியாகக்கண்டு இவனுடைய படையினுல் நமதுமாயவுருவம் மாயாமலிராதென்று மனந்துணிந்தனன் இப்பால் விநாயகமூர்த்திக்கு சகநிரநாமங்களால் பரிமள மிகுந்த புட்பங்களைக்கொண்டு அருச்சனை செய்திருக்கிற கபிலமுனிவர் கணராஜன் வநதிருக்கின்றதைப் பார்த்துத் தமது பூசையினைக் குறைவற நிறைவேற்றிப், பலமுறைசாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து வேதாகமங்களினுலே தோத்திரஞ்செய்து, சுவாமீ! தேவர்கள் முனிவர்கள் முதலியோர்க்கு எவ்வளவுமின்றி தீங்கு செய்துவருகின்ற கணனென்னு மசுரன் இங்ஙனம் வந்திருக்கின்றனன். அப்பாதகனடியேற்கு யாதொரு தீங்கினையுஞ் செய்யாதபடி காத்தருளவேண்டுமென்று பிரார்த்திதனர். உடனேவிநாயகமூர்த்தியானவர் கொதித்தெழுந்த விடந்தினுக்கொப்பாகிய சத்துருக்களையெல்லாம் அடங்கவுண்டு ஏப்பமிடும்படியாகத் தமது சிங்கவாகனத்தை ஊர்ந்தருளக் கருதினர். அம்மாத்திரத்தில் சத்திகளையும் படைத்தளித்த தழிக்கவல்ல பராக்கிரமத்தோடு அவர்க்கருகிலிருக்கின்ற சித்திதேவியாரறிந்து, மிக்க பத்தியோடும் பணிந்தெழுந்து, சுவாமீ! அடர்ந்துவந்த சத்துருக்களுக்கு அடியாளிருக்கத்தேவரீர் சென்று யுத்தஞ்செய்யவேண்டுமோ? தேவரீருடைய கிருபாநோக்கத்தைமாத்திரஞ் சிறிதுபாலித்தருளினுல் நெருங்கிவந்த சேனைகளையெல்லாம் இமைப்பொழுதில் வென்று, மீட்டுந் தேவரீர் திருவடி நீழற்கண்வந்து சேருவேனென்று சொல்லினர். அதனை விநாயகமூர்த்தி கேட்டருளி அவ்வாறேசென்று செயித்து வருமாறு உத்தரவுசெய்து, அவ்வம்மையுடைய காதலத்திற் பிரவேசித்தருளினர்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! சத்தசாட்குண்ணிய மூர்த்தியாகிய விநாயகப்பெருமானுடைய இளையோனென்னுஞ் சுப்பிரமணியதேவரது அன்பரா யிராநின்ற அகத்தியமுனிவர் கரத்திற்குச் சத்தசாகரங்களும் ஆசமன நீராயிருக்குமெனில், அப்பெருமானுடைய தேவியார் கரத்திற்கு ஊழிககாலத்தி லுண்டாகின்ற வேலையும், உருத்தெழுந்துவந்தசேனைகளும், அள்ளவுமபோதுமோ!

இப்பால் விநாயகப்பெருமான் விடைகொடுத்தவுடன் சித்திதேவி மிக்கமனக்களிப்புற்று யுத்தத்திற்குச்செல்ல சேனையென்பது தோன்றேனுமின்றித தனிமையாய் யுத்தத்திற்கு வருகின்ற செயலினைக் கணராஜன்பார்த்து, ஓர் பெண்பால நம்மோடு யுத்தஞ்செய்யவருவது வெகுநேர்த்தி! வெகுநேர்த்தி! யென்று கோபித்து, அளவற்றவீரர்களோடுங் கரத்தில வாளினையேந்தி யெழுந்தனன் அதனை யவன் புத்திரர்களாகிய சூலபனுஞ், சூலபாணியுந்தெரிந்து உடனே அவனைப்பணிந்தெழுந்து எந்தையே! இவ்வுலகின்கண் உங்கட்கொப்பான வீரர்கள் எங்கணுமில்லை. எங்களை அவளோடு யுத்தஞ் செய்யுமாறு கட்டளையிட்டால் ஓர் நொடிப்பொழுதில் அவளையும், அவளைச் சேர்ந்தவர் களையும அழித்துத் திரும்புவோமென்று சொன்னார்கள் அப்படி சொல்லிய புத்திரர்களையும் மற்ற வீரர்களையுங் கணராசன்பார்த்து, யானிதுகாறுந் தேவர்முதலியோருங் கண்டஞ்சத்தக்க பராக்கிரமத்தோ டிருக்கின்றனன் ஆதலால் அதற்கொரு குறைவில்லாதபடி இப்போது வந்திருக்கின்ற சத்துருக்களைச் செயித்து வருவதானால அவ்வாறே போய்வாருங்கள். செயமற்றுத தோல்வியுறுவீர்களாயின் மீட்டும் என் எதிரில் வீரதொழியக கடவீர்களென்று சொல்லி விடைகொடுத்தனன். பின்னர் புத்திரர்களும், மற்ற வீரர்களும் சகல சேனைகளோடுந் திரண்டு எழுந்து ஆர்ப்பரித்துவந்தனர். அதனைச் சித்திதேவியார்கண்டு இமைப்போதில் அளவற்றசேனைகளைச் சிருட்டித்தனன். அவர்களுட் சிலர் பத்துகரங்களோடும, சிலர் ஐந்துகரங்களோடும், சிலர் மூன்று கால்களோடும், சிலர் நான்குகால்களோடும, சிலர் ஆறுகால்களோடும், சிலர் எட்டுகால்களோடும, சிலர் நான்கு முகத்தோடும், சிலர் ஐந்துமுகத்தோடும், சிலர் ஆறுமுகத்தோடும், சிலர் பன்னிரண்டுமுகத்தோடும், சிலர் மூன்றுகண்களோடும், சிலர் ஏழுகண்களோடும், சிலர் மேருவையொத்த புஜபல பராக்கிரமத்தோடும் உதித்து வாள், வில், கப்பணம், வச்சிராயுதம், மழுவாயுத முதலிய ஆயுதங்களையேந்தித் தங்களைப் படைத்தருளிய சித்திதேவியாரது திருவடிகளிற்பணிந்து, விடைபெற்று இரதம், கஜம், துர

கம் முதலிய வாகனங்களிலேறிக்கொண்டு ரணபேரி, ஜெயபேரிமுதலியவைகளைச்சத்தசாகரங்களும் அஞ்சத்தக்கதாகமுழக்கிக்குடை கொடி, ஆலவட்டம் முதலிய சின்னங்கள் பல மறைக்கிறும் அடை தவரும்படியாக ஆரம்பரித்து நெருங்கினார்கள். அவர்களைக் கணராசனுடைய சேனைகள்கண்டு. முன்னாமமெதிரில் ஒருதுணையுமின்றித் தனியாகவந்தவிவள், ஓர்நொடிப்போதில் ஒவ்வொருவரைத்தின ஒவ்வொருவயிற்று ளடக்கவல்ல அளவற்ற பூதகணங்களைச் சிருட்டித்து, அவைகட்கெல்லாம் எண்ணிறந்தபடைத்துணைகளையும் உண்டாக்கினள் இவளோடு யுத்தஞ்செய்து ஜெயமடைந்தாலும், அல்லது யுத்தகளத்திற்றுனை வீழ்ந்திறந்தாலும அஃது நமக்குக்கீர்த்தியே யென்று துணிவுற்றுத் தமது சேனைகளையெல்லாம் கிரமப்படி வகுத்து, விசுவசித்தென்பவன் நாற்பதமேனுடும், விதந்தாவென்பவன் நெருப்பேறுடே, கிரந்தனென்பவன், முக்கணனோடும், பிரமதனென்பவன் அறுபதனேடு, சூலபாணியென்பவன் பன்னிருமுகனோடு, கலபனென்பவன் சித்தியமமையோடும் எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள். இவைசன்றி இருதிறப்படைகளினுமுள்ள ஏனைவீரர்கள் யாவரும் ஒருவரையொருவர் இனம்பிரித்தெதிர்த்தும போரிட்டார்கள்

இவ்வாறு சகலசேனைகளுந் கைகலந்து போர்விளைக்கையில் அளவற்றயானைகளும், பரிகளும இறந்துவீழ்ந்தன. எண்ணிறந்த இரதங்கள் முறிந்து ஒடிந்தன சில உயிர்கள் விண்குடியேறின. சிலர் உடல்கள் வாளினால் தைக்கப்பட்டுச் சோனைமழைபோல அவைகளினின்றும்பெருகிய உதிரமானது நதியாகச்சென்று கடலிற்பாய்ந்து குடல்கள், சரலைகள், உறுப்புகள், குருதிகள், தோல்கள், மூளைகள், கொழுப்புகள், பிணங்கள், உரோமங்கள் முதலியவைகளெல்லாம வேறு வேறாக நெருங்கநின்ற அசசெங்களம் எவ்வாறிருந்ததென்னில இவைகளோ தத்தங் கூடி ஒன்றுபட நின்ற அற்பவுடலை ஓர்பொருளாக அகத்தில் மதிக்கின்றோர் யாவர்? அவர்களை இவ்வுடலின்மாட்சி இவ்வகைத்தேயெனக்காட்டி அவமதித்தலைப்போலிருந்தது.

இப்பால் சித்தி தேவியினுடைய சேனைகளும், கணராசனுடையசேனைகளும வலியோடும், வஞ்சினத்தோடும முறைமைப்படி படைகளனைத்தையுந் தாண்டிப்போர்செய்துவந்ததில், சித்திதேவியினுடைய சேனைகட்குச் சிறிது வலி குன்றியது அதனைத்தேவி கண்டு, உடனேயாவரும் அதிசயமுறும்படியாக அதிக உக்கிரத்தோடும ஓர்வீரனைச் சிருட்டித்தனள். அவ்வீரன் இலக்கம் வாளிகளோடும, இலக்கம் வில்லுகளோடும், இலக்கம் கேடயங்களோடும்,

இலக்கங் கரவான்களோடும் உதித்து, ஏனையபடைகளும் ஒவ்வொன்றுக்கு இலக்கம் இலக்கமாக வேந்திய இலக்கம் வீரர்களை ஓர் நொடிப்போதில் சங்கரிக்கத்தக்கதிறத்தோடும், இலக்கமென்னும் பெயரினை வகித்து, கணராஜனுடைய சேனாசமுத்திரங்களிற் புகுந்து, தான் ஒருவனே சத்துருக்களாற் றூண்டப்பட்டு எதிர்க்கும் படைகள்யாதோ அந்தப்படைகட்கெல்லாம் அந்தந்தவாறே படைகளைத்தூண்ட, மாற்றலர்கள் வேறுவேறு இலக்கமிலக்கமாகக்கூடிச் சுற்றிலும் வளைந்து போர்செய்ய அவ்வவர்கள்மீது அளவற்ற பாணங்களை மேகம்போலச்சொரிந்து கணராசனங்கொண்டிருக்கிற இறுமாப்பழியும்படியாகச் சகலசேனைகளையும் ஓர்கணப்போதில் மடித்து, அவ்வரசனுடைய அமைச்சர்களெல்லாம் பின்னிட்டோடும்படியாக முடுக்கி, அவனுடைய புத்திரர் இருவரையும் அவ்வவர்கள் இரதத்தோடு கைப்பிடியாகப்பிடித்து, விநாயகமூர்த்தி சந்நிதானத்திற் கொண்டுவந்துவிட்டு, விண்ணுலகமும் மண்ணுலகமும் படியத்தக்க அவரடிப்பாத பதுமங்களைப் பலமுறையும் பணிந்தெழுந்து சுவாமி! இவர்கள் கணராசனுடைய குமாரர்கள், தேவரீர் சரணாரவிந்தங்களிற் றஞ்சமடைந்தனர். தேவரீர் திருவருளாலெதிர்த்துவந்தவர்களெல்லாம் இறந்தனர் சிலர் பயந்தோடிப்போயினர். கணராசன் மாத்திரம் எம்மோடு வந்து எதிர்த்தவனல்லன் சுவாமிகளுடைய திருவருணிறைந்த திருக்கரத்தினால் இறக்கின்றோர்கள் யாவராயினும் அவர்களெல்லாம் முத்திபெற்றிருக்கின்றமையால், அவ்வரசனையும் சுவாமிகளே சங்கரித்து முத்திகொடுத்தருளல் வேண்டும் சூலபாணியென்றுஞ் சுடலையென்றுஞ் சொல்லாநின்ற இவர்கள் மகாசுத்தவீரர்கள் இவர்கள் என்னோடு நெடுநேரம் அளவற்ற யுத்தங்களைச்செய்து முடிவில் என்று கரத்திலகப்பட்டுக்கொண்டனர் ஓ குணக்குன்றமே! இவர்களியற்கையில் சீலமுடையோர்தலால் இவர்கட்கு அக்கணராசனுடைய அரசாட்சியைக் கொடுத்துக் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன் அவ்வாறே விநாயகமூர்த்தி அவர்களிடத்திற் கிருபையுற்றிருந்தனர்.

இப்பால் போர்க்களத்தில் நின்றும் ஓடிப்போன மந்திரித்தலைவர்கள் எல்லாங்கணராஜனையடுத்தனர் அவருள் சூட்சும புத்தியினையுடைய கிரந்தனென்பவன் அரசனெதிற்சென்று, தேவரீர்குமாரர்கள் இருவரும் யுத்தஞ்செய்யச் சென்றார்களே அவர்கள்செய்த காரியம் யாதேனுந்தெரியுமோவென்று கேட்டுக்கொண்டிருக்கின்ற சமயத்தில், ஒரு தூதுவனோடிவந்து, உடல்வெயர்க்கவும், முகம்வாடவுமாக அரசனெதிர்நின்று, இருவிழிகளினும் நீரைச்சொரிந்து,

அண்ணலே! தேவரீர்குமாரர்கள் சதுரங்கசேனைகளோடுசென்று
கபிலமுனிவருடைய சேனைகளெல்லாஞ் சின்னபின்னமாகவாட்டி
வருகின்றதருணத்தில் ஒருவீரன் அளவற்ற ஆயுதங்களையேந்தி
யுத்தகளத்திலுள்ள நமதுசேனைகளெல்லாம் நடுங்கியொடுங்கும்ப
டியாக வந்துநின்றனன். இவ்வாறு அவன் வந்ததைக் கண்ட[illegible]
ன்றி அவன் யுத்தஞ்செய்யக்கண்டிலன். பின்னர் ஓர்நொடிப்பொ
ழுதில் எல்லாச்சேனைகளும் பூமியின்கண் பிணம்பிணமாய் விழக்க
ண்டனன். அவன் பராக்கிரமத்தை என்னென்று பேசவல்லேன்.
இமமந்திரத்தலைவர்கள் எதிர்த்துப் படையெடுப்பதற்கு முன்னே
அவ்வீரன் இவர்கள்மேரில் ஒவ்வொரு பாணங்களை ஏவி இவர்க
ளுடைய சாமார்த்தியங்களை யெல்லாமழித்தனன். உடனே இவர்
கள் அவனோடு நிடித்து யுத்தஞ்செய்வதற்கஞ்சி ஓடிவந்துவிட்ட
னர். சிறிதுநேரமேனு மிருந்து போர்செய்துநின்ற பெருந்திறத்தி
னராகிய தேவரீர் குமாரர்களை, அவ்வீரன் தேரோடும் வளைத்துக்
கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு போய்த் தனது படைநடுவிற்
வைத்திருந்தனன் பின்னரவர்கள் எவ்வாறாயினரோ அதனையறிந்
திலனென்று சொல்லினன். அச்சொல்லானது தனது செவியிற்
நுழைவதன்முன் மலைபோலத்தேரினின்றும் பூமியின்கண்வீழ்ந்து
புரண்டு புரண்டு, அழுது அழுது, (மதம் பொழிகின்ற யானைகளை
யெல்லாங் கொல்லத்தக்க சிங்கமானது தனது குட்டிகளைச் சரபப்
பட்சிகொண்டுபோக வருத்தப்படுவதுபோல) அறிவழிந்து, மூர்ச்
சையுற்றுப், பின்னருகிருந்தவர்கள் தெளிவிக்கத் தெளிந்து, ஓ
என்னருமைச் செல்வனாகிய சூலபாணியே! ஓ பராக்கிரமசாலியா
கிய சுலபனே ஓ எனது புத்திரசோகத்தினைத்தீர்த்த பெருமான்
களே! ஓ யென்மனதுக்குத்தெவிட்டாத இன்பத்தைத்தரும் அமு
தத்தைப்போன்ற புத்திரசிகாமணிகளே! உங்களை மலைபோல வெ
ண்ணியிருந்த வென்னை இவ்விதத்துக்க சாகரத்துளழுத்தி நீங்கி
விடலாமோ? விரைவில் ஓடிவந்து எனக்கோர் தயிரியத்தைச் சொ
ல்வீர்களோ? மன்மதனையொத்த சுந்தரமும், வீரசிங்கத்தினு மேம்
பட்டவல்லபமும், கல்வித்திரங்களும், சாத்திர சம்பத்துகளும்பெ
ற்று, வில்வித்தை முதலிய பராக்கிரமங்களில் மிகுந்து, சகலலோ
கங்களையுந் திக்குவிஜயஞ்செய்து, தேவர்தானவர்முதலியோர்களை
எல்லாம்வென்று, அளவற்ற கீர்த்திகளை எனக்குண்டாகச்செய்த
நீங்கள் இன்று ஒருவன்கையினு மகப்பட்டீர்களே! புஜபல பராக்
கிரமசாலிகளாகிய உங்களையொருவன் பிடித்துச்சென்ற சேதியைக்
கேட்டவுடன் இந்தப் பாழ்த்தவுயிர் நீங்காமல் இன்னமும் வரு

[illegible]திருக்கின்றதே! ஆயினும் எனது ஊக்கம் தேயசு, ஒளி, துணிவு, வீரம், குலம், அரசாட்சி முதலியயாவும் இன்றுடனிறந்து போனதால் யான் செத்தவனைப்போலாயினேன். ஓ குமாரர்களே! உங்களுக்குவந்தவிபத்தை நினைக்குந்தோறும் என்மனஞ்சோர்வுறுகின்றதே! ஒருவாற்றானும் நிலைபெற்றிருக்கப்படவில்லையே ஐயையோ! இனி என்னசெய்யக்கடவேன்! இனி என்னசெய்யக்கடவேன்! என்று இவ்வாறுபுலம்பிவருந்தும் அரசனை மந்திரத்தலைவர்கள் நோக்கி, இராஜாதிராசனே! உயிர்போவதாயினும் விவேகமுள்ளபேர் மலைபோல அசைவற்றிருப்பார்களேயன்றி, ஆயாசமுறார்கள். உனதருமைச்செல்வராகிய மைந்தர்கள் இவ்விருவரேயென்று யாவரும் சொல்லிப் புகழும்படி சமராபு அளவற்ற கவந்தங்களாடும்படி பகைவருடைய சேனையின்கணுள்ள வீரர்களை யெல்லாங்கொன்று அவர்களுயிரைப பானஞ்செய்துவந்தனர் பின்னர் ஏதோ ஒருகன்மவசத்தினால் அவ்விலக்கன் கரத்தில் அகப்பட்டுக்கொண்டனர். சுத்தவீரராயிருக்கின்ற தேவரீரே அக்காரணத்தை நினைந்து கண்பிசைந்து சரீரமெலிவெய்தப் புலம்பினால் இனியென்னகாரியங்கள் நடக்கும்? நாமெல்லோரு மொருமுகமாகச்சென்று, அவ்விலக்கனையும் அவன்சார்புற்றிருக்குங் கபிலமுனிவனையுங்கொன்றுவிடுவோம். ஒருவேளை தேவரீர் குமாரர்கள் உயிரோடிருப்பாராயின், உடனே அழைத்துக்கொண்டு வருவோமென்றுசொல்லினர்.

அவையனைத்தையுங் கணராஜன்கேட்டுச் சிறிதுமனந் தேறித் தான் இரதத்தின் மீதும், மந்திரித் தலைவர்கள் மதயானைகளின் மீதும் ஆரோகணித்து, முன்னம்போர்க்களத்தினின்றுந் தப்பிப்பிழைத்திருக்கின்ற சேனைகளெல்லாந் தம்மைப் புடைசூழ்ந்துவர, இலக்கவீரன் எங்ஙனமிருக்கின்றனனென்று தேடிக்கொண்டு விநாயகமூர்த்தி எழுந்தருளியிருக்கின்ற விடத்திற்சென்று, மலக்குறும்புகளையகன்ற, யோகீஸ்வரர்களுக்குங் கிடைத்தற்கரிய அவரது திருமேனியை முன்செய்த தவபலத்தினாற் கண்டனராகி, சித்திதேவி இடப்புறத்திலும், புத்திதேவி வலப்புரத்திலும் வீற்றிருக்கின்ற சிங்கவாசனத்தினை யூர்ந்து, மோதகத்தை யேந்திய திருக்கரத்தினோடு மிருக்கின்ற காட்சியைப் பலமுறைதரிசித்து, இதுகாறும் இவ்விதத்தினைப்போல எவரையுங்கண்டதில்லையென்று அதிசயித்தார்கள். அப்போது விநாயகப்பெருமான் முன்னர்! துதிசெய்துக்கொண்டிருந்த கபிலமுனிவரைக் கணராசன்பார்த்து கதிரவன் முன்னிருக்குங்காந்தமானது கனலைக்கக்குமாறுபோலச் சினக்கனலை இடைவிடாது கொட்டுமுகத்தினனாய், ஒகபிலாகருடனை நாகங்கள்

கூடிக் கொல்லுவதுண்டோ, என்னைவெல்லுவதற்கு நீ இப்புருடனை தாபித்தனை? இவனை எனதுகிருபைக்கு பாத்திரனாகும்படி விட்டுக் கடவை. விடாமற்போவையேல் அழலைக்கக்காநின்ற ஓரேகணையி னால் உன்னையும், உனக்குச் சார்வாகவிருக்கின்ற இவனையும் ஓர் கணப்போதிற் கொன்றுவிடுவேன். இவ்வுலகின்கண்ணுள்ள இருடிகளாயினோர் கருணையே வடிவமாகிக்காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் அறுவகைக் குற்றங்களையுங் கடிந்து ஆண்டவனுடைய திருவடிகளையடைவார்கள். இக்குணங் கட்கெல்லா மாறுகப பெருமபாலும் பொருளினையே இச்சித்திருக் கின்ற நீ எவ்வகையாய் இருடியாயினையோ அறிந்திலன்? என்னை எதிர்த்துவநத பலரகவர்கள் எத்தன்மைததான பராக்கிரமசாலிக ளே யாயினும அவாகளுக்கெல்லாம அரிட்டமேசெய்யும்படியாகத் தோன்றியிருக்கின்றனன் இததன்மைததாகிய எனக்கு ஓரடிப்பட மேனுஞ்செய்ய வுங்களா லாகுமா? உங்களாலே நீங்கள் கெட்டீர் கள். இனியாகிலும மேற்சொன்னபடி நடந்துகொள்ளக் கடவை யென்றுசொல்லினன்

இவை யனைத்தையும் கபிலமுனிவர்கேட்டுக் கண்களி லனற் பொறி எழும்பும்படியாகக கோபித்து, அடா உண்டவீட்டிற் கிர ண்டகஞ் செய்யவல்ல துரோகி! கடல்போன்றபாவங்கட்கெல்லாம் நீயுறைவிடமாயினை? தேவர்கள் முதலாயினோரையெல்லாந் தாழ்த் திப், பன்றியைபபோல மையலெனனுஞ் சேற்றில் மயங்கி, வீழ்ந்து கிடக்கின்றனை உன்னைக் கொல்லுவதறகு மனோவாக்கு காயங்களி னாலும் அறிதற்கரியபரமபொருளே விநாயகமூர்த்தியாகவந்து அவ தரித்திருக்கின்றனா குரைககின்ற நாய்கடிக்கவறியாதெனச் சொ ல்லுவாாகள்; அதுபோல நீயுங்கடைவாய் நுரைக்கும்படி கற்றதெ ல்லாம் நொடிக்கின்றனை. இனி உதிரவெள்ளந் திரைகொண்டு மேலெ ழும்படியாக உனது சேனைகளனைத்தும் நாசமாகிக் கடல்போன்ற பேரொலியோடு உனது மனைவியரெல்லாங் கூக்குரலிட்டழும்படி இறக்கப்போகின்றனை, ஆதலால் நீ இப்போது கவிழுஞ்சமயத்துற் றகப்பலோட்டம்போலவும், அவியுஞ் சமயத்துற்ற விளக்கொளி போலவுந் துள்ளுகின்றனை? இனியேனும் அடுத்தவரை ஆட்கொ ள்ளவல்ல விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளிற் சரணமடை டைந்து உய்யக்கடவையென்றனர். இவையனைத்தையுங் கணைச சன்கேட்டு வடவாக்கினியைப்போலக் கொதித்தெழுந்து பர்வதங் களையும் உருவிப்பாயவல்ல தனது வில்லினையெடுத்து வளைத்து விழிகளினின்றும் அனற்பொறி எழும்படியாகச்சீறி, விநாயகப் பெருமானுடைய ஒப்பற்றதிருநுதலில் ஓர்கணையும், இரண்டு புயங்

களில் இரண்டுகணையும், தாமரைமலரையொத்த இரண்டு திருவடிகளில் இரண்டுகணையும் விடுத்தனன். அவைகள் அவன் குறித்த இடத்திற் றப்பாமற்சென்று நீருயின. பின்னர் விநாயகப்பெருமான் இருந்த ஆதனத்தினின்று மெழாமல் தமது கரத்திலேந்திய மழுவாயுதத்தினைபார்த்து நீ தேவர்கள் முனிவர்கள் முதலியோரை வருத்துகின்ற இப்பாதகன்சிரசைக்கடிந்துமீளக்கடவையெனப் பணித்துவிட்டனர், அம்மாத்திரத்தில் மழுவாயுதமானது கோடிசூரியோதயம்போலப்பிரகாசித்துப் பிரசண்டமாருதம்போலவெழுந்து ஆலகாலவிடத்தினைப்போலச் சீறிவர, அதனுற் பன்னிரண்டு சூரியர்களுங் கரிந்தார்கள். எட்டுத்திசைகளுஞ் சோதிமயமாயின அட்டகுலாசலங்களும் எரிந்துபோயின. பூமிகளெல்லாம் வெடித்தன கடல்முழுவதும் வரண்டுவிட்டது அண்டகடாகங்களெல்லாம் நொறுங்கின. உலகங்கள் எல்லாம் முழுவதும் நீருயொழிந்துவிட்டன. இவ்வாறுவிநாயகப்பெருமான் விடுத்தருளிய அம்மழுவாயுதமானது சகலலோகங்களினுஞ் சென்றுலாவி; யாவரும் பயப்பிராந்திகொள்ளும்படியாக அளவற்றஉற்பாதங்களை விளைத்து மகாபராக்கிரமசாலியாகிய கணராசனுடைய முடியையறுத்து நிலத்தில் வீழ்த்திமீட்டும் உலகத்தையெல்லாம் பழையபடிபடைத்து, தெய்வ கங்கையிற்சென்று ஸ்நானஞ்செய்து வந்துதீனசரண்யராகிய விநாயகப் பெருமானுடைய திருக்கரத்தில் யதாப்பிரகாரஞ் சேர்ந்திருந்தது. உடனே தேவர்களெல்லாம் புஷ்பவருஷஞ் சொரிந்தார்கள்.

ஓ சவுனகாதி முனிவர்களே! முன்னொருகாலத்தில் மகாவிஷ்ணுவின் புத்திரனாகிய மன்மதனென்பவன் இவ்விநாயகப் பெருமானுடைய தந்தையாகிய சிவபிரான்மீது மலர்வடிவாகிய பஞ்சபாணங்களையேவியிறந்தனன். இப்போது, பிரமன் புத்திரனாகிய கணராசனென்பவன் எமது தந்தையாகிய விநாயகப்பெருமான்மீது அழல்வடிவாகிய பஞ்சபாணங்களை யேவியிறந்தனன். இவர்களெய்த அப்பஞ்சபாணங்களையும் யோசிக்குமிடத்து, அவைகள் தங்களைக்கொல்லவந்த அறப்பகையாகிய பஞ்சமா பாதகங்களைப்போலும். இப்பால் தேவர்களெல்லாம் உலர்ந்து உறங்கும்படியாக ஓங்கியிருந்த கணராசனுடைய ஆக்கினையனைத்தும் ஓர்நொடியளவிற் புலர்ந்து நீங்குமாறு எழுந்தருளிவந்த புண்ணியமூர்த்தியாகிய விநாயகப் பெருமானது திருவடிகளைப்பணிய வருவான்போலச், சூரியனென்பவன் தனது பகையாகிய இருட்கூட்டங்களையெல்லாம் கலைந்துகீழ்த்திசைக் கடலினுதயமாயினன். கணராஜனும் அவன்சேனைகளும் ஒருமுகூர்த்தவேளையில் மடிந்துநாசமாயினவென்றக்கேட்ட யாவரும்

ஆச்சரியமடைந்தார்கள். விநாயகப்பெருமான் ஏவிய மழுவாயுதமானது கஜராஜனது உயிரைவாங்குங் காலத்துப் பயந்தோடிய அமைச்சர் முதலிய யாவரும் அவன் றந்தையாகிய அபிசித்துமகாராஜனிடத்தில் அடைந்தனர். பின்னர் அவ்வபிசித்துமகாராசன், தனது குமாரன் படையெடுத்துச்சென்றது முதல் அவன் இறந்தவரையில் நடந்தசரித்திரங்களையெல்லாம் அமைச்சர் சொல்லக்கேட்டு தனது சுற்றத்தினரோடுஞ்சூழ்ந்து பிரலாபித்து, ஓவென்றலறி மதிமருண்டு, புத்திரசோபமென்கின்ற வாயுமோதப்பட்டுப், பெருமூச்செறிந்து, சரீரமுழுவதுங்காந்தி, விழிகளில் நீர்ப்பசுமையுற்று உதிரம்பெருக வெயர்த்து நடுநடுங்கி, பிராணன் நிலைபெறாமல் நது, ஓ மதக்களிற்றினையொத்த குமாரன்! எதிர்த்துவந்த சத்துருக்களுக்கு யமனைப்போன்றவனே! மதித்துவந்தோர்களை மகாவிஷ்ணுவைப்போலக் காக்குந்திரனே மகமேருவையொத்த பிரகாசிக்குங்கீர்த்தி பிரதாபனே யுனது சரீரமானது நரிகளாலுங், கழுகுகளாலும் புரட்டிப் பிடிப்பட்டதே? ஓ எனதரிய தவத்திறந்தோன்றிய புதல்வனே நீ என்குலத்தை ஆலமரத்தின்கீழ்விழுதுபோல் ஆதரிப்பையென்றிருந்தேனே? ஆ! ஆ! என்னசெய்தாய் என்னகாரியஞ் செய்தனை? ஐயையோ! தவத்திற்சிறந்த தாபதர்களையும் பகைக்கலாகுமோ? நீ இவ்வுலகில் என்கண்ணெதிரில் வீழ்ந்து எனது நெஞ்சை உருகவைத்தனையே? முன்னே இதம்படப்பச்சொன்னோர்களுடைய சொற்களைச்சிறிதுங்கேளாது பின்னே அகிதம்படப்பச்சொன்னோர்களுடைய வார்த்தைகளையே துணையாகக்கொண்டு சென்று சத்துருக்களெல்லாம் நகைக்கும்படியாக ஓர் கணப்போதில் இறந்தனையே? என்றுபுலம்பியிருக்கின்ற அபிசித்துமகாராசனைக் கிரந்தனென்னும் மந்திரிநெருங்கி, எமதிறைவனே! யான்கூறும் வசனங்களைத்தயைசெய்து கேட்டருளக. தேவரீர் இவ்வாறு விம்மி விம்மி யழுவதுபழுதாகும் இவ்வுலகத்தில் உற்றவர்களழுகின்ற கண்ணீரானது செத்தவர்கள் முகத்தில் வீழ்வது உண்மையேயாயினும் அநித்தியமெய்திய உடலைக்கருதி அவலித்திருப்பதி லென்னபயன் இனி இறந்தோர்க்கு நடத்தவேண்டிய கருமாதிகளை இனிதுமுடிப்பதே மாண்பென்று அவனது கண்ணீரைத்துடைத்து அவனையும் அவன் சுற்றத்தினரையும் அழைத்துக்கொண்டுசென்று, போர்க்களத்தையடைந்து, அங்கு அவன்புதல்வன் வீழ்ந்துகிடக்கின்றதைக்காண்பித்தனன். அதை அபிசித்துமகாராசன் கண்டவுடன் கதறிக்கலங்கிச்சோபித்து மேல்வீழ்ந்து சிரம்வேறு, உடல்வேறாகவிருக்கின்ற கோலத்தைக் காணுந்தோறும் பதைபதைத்து, நிலத்தில் வீழ்ந்து புரண்டு, சர்ப்பத்தைப்போலப் பெருமூச்செறிந்து, அப்பனே! சத்துருக்களிடத்தி லிருக்கின்றகோபமானது இன்னமும்

உனது திருமுகமண்டலத்தில் மாறவில்லையே உனது சிறந்தமனமும் வீரமும், வலியும் எங்ஙனஞ்சென் றொளித்தனவோ? உன்னையொத்த சவுரியவான்களை இனி எங்ஙனங் காணப்போகின்றேன் ஐயையோ அடங்கிய அரசர்களெல்லாமடிகளைவருடவுந், தேவர்களெல்லாம் வீணைவாசிக்கவுமாகப பஞ்சணையமளியிற் பள்ளிகொண்டவனாகிய வுனக்கு இச்செங்களத்திற் பள்ளிகொள்ள நேரிட்டதே? அரம்பாஸ்திரீகள் எதிரெதிர்நின்று ஆடுமபடியான நினதுசமுகத்தில் இப்போது பேய்கள் கூடி அவ்வாறு கூத்தாடுகின்றனவே, குளிர்ந்த சாந்தாற்றிகளால் வீசபபட்டிருந்த உனது சரீரமானது இப்போது கழுகின் சிறகினால் வீசப்பட்டிருக்கின்றதே புட்பவிதானநீழலினும், இரதத்தின் கவிகை நீழலினும தாங்கியிருந்த நினது வடிவமானது இபபோது பருந்தின் சிலகாலுண்டான நீழலில்வதிகின்றதே? சிறந்த கவரிமானுடையவாலினால் வரட்டாநின்ற நினது மருங்குல்கள் இப்போது நரி, நாய் முதலியவைகளின் வால்களாலிரட்ட நின்றனவே? பரிமளமிகுந்த சந்தனாதிகளைத்திமிர்ந்திராநின்ற நினது மார்பானது இப்போது புலவினைவீசும் உதிரங்கள் பூசவிருக்கின்றதே காம்புகளைந்த மலலிகை முல்லை யாதிகளாற்செய்த மெல்லிய அமளியின்மீது பள்ளிகொளளும நினதுவடிவமானது இப்போது பருக்கைகற்கள் நெருங்கிய போர்க்களத்தைப் பொருந்துகின்றதே? பேரிகை, குடமுழா, தண்ணுமை, முரசு முதலியவாத்தியவோசைகளெல்லாம் நாய், நரி, பேய், புள் முதலியவைகளின் ஓசைகளாயினவே? என்றிவ்வாறு தனது புத்திரனுடைய பிரதாபத்தையெல்லாஞ் சொல்லிச்சொல்லித் துக்கித்து, பிணக்குவைகளின் மத்தியில் வீழ்ந்திருக்கின்ற புத்திரனையெடுத்துச் சந்தனக்கட்டைகளையும், அகிற்கட்டைகளையும் பரப்பி அதன்மீது அவனை வளர்த்தி மங்கையர்களாற்சூடும் மலர்மாலையினை யுடையோனுக்குத் தனது வழியின் வசத்தால் அழன்மாலையைச்சூட்டி அவ்வழலை நாற்புறங்களினும் மூட்டி, இதுகாறுங் கணராசனுடைய பராக்கிரமத்தினுக்கஞ்சியிருந்த தேவர்கள் முதலாயினோர் கொண்டவயிற்றெரிவையெல்லாமாற்றி, நமதருமைப்புதல்வனைச இன்றே டொழிந்ததே யென்னும் வயிற்றெறிவோடுந்தனது அரண்மனையிற்சென்று மறுதினம் மந்திரிகளை வரவழைத்து முன்னர் தனதுபுத்திரன் கவர்ந்துவந்த சிந்தாமணியைக்கைக்கொண்டு கபிலமுனிவருடைய ஆசிரமத்தினையடைந்து, சித்திபுத்திசமேதராயெழுந்தருளியிராநின்ற விநாயகப்பெருமானுடைய திருவடிமுன்பு அச்சிந்தாமணியினைவைத்து அங்கிருப்பவரெல்லா மதிசயமுறப் பல்முறைதீர்க்கதண்டஞ்செய்து, அக்

கடவுளை வழிபட்ட கபிலமுனிவரையுஞ் சாஷ்டாங்கமாகப் பணிந் தெழுந்துமீட்டும்.

விநாயகமூர்த்தி சந்நிதியின் முன்னர்வந்து நின்றாகிய தொண் டர்களுக்கடுத்த வினைகளைப்போக்கிப் பாதுகாத்தருளும் பக்தவத் சலனே! பாசபந்தங்களைக் களைந்து நன்னெறிகளை யருட்டித்து வரும் மகத்துக்களுக் கிருப்பிடமாகிய ஞானநாயகனே! விண்டுகளிற் சிறந் திருக்கும் வானவருக்குத் தலைமைபெற்றிருக்கின்ற தேவோத்தம னே! அஞ்ஞான விருளைபபோககிப் பேரானநதத்தைப் பெறச்செ ய்யவல்ல பரஞ்சுடரே! வேதாகமங்கள்முதலியவற்றாலெண்ணியள விடுதற்கரிய கர்த்தனே! சராசரபபிரபஞ்சங்களனைத்தையும் படை த்து, அவைகட்குரிய வினைப்போகங்களை யூட்டியாடும் பரவஸ்து வே! தேவர்களிற சிரேஷ்டமாக விளங்குந்திரிமூர்த்திகளில் முதன் மைபெற்றிருக்கின்ற சிவபிரான் பெற்றருளிய கடவுளே! சிருஷ்டி திதிசங்காரமென்னு முத்தொழில்களை நடாத்திவரு மும்மூர்த்தி களுக்கும முதன்மையாகவிருக்கின்ற விநாயகக்கடவுளே! எல்லா வுயிர்களுந் தேவரீா வயத்தென்றறியமாட்டாத அற்பகுணத்தி னாற் கஜமுகனென்பவன் அவமானத்திற்கஞ்சி சத்துருவைப்போல வந்து தேவரீருடைய மழுவாயுதத்தாலிறநது மேலான கதியினைய டைந்தனன்.

அலகினெடுமபுண் ணியவயத்தா லடைபதுயர்மா னிடப்பிறவி
குலவுமதனைப பெற்றவாநின் குரைபூங்கழற்றாள் வணங்காரேல்
பலனென்பெறுவா பண்ணவருமபரமாநினைசசூழ்ந் திலராயின்
கலதியுடைய ராய்ககிழாய்க் கவிழ்வரிதுசத் தியமாமே.

தருதாரணமே தியானமே சமாதியேயின் றிவைமருவி
வருமாதவர்க ளிருதயததின் வயங்காநின்ற பரம்பொருளே
ஒருவாவிருவர்க் கறியாதாய் மூவராயு மொளிர்பவனே
பெருநான்மறைக்கு மெட்டாத பெருமான் பேரானந்தமே.

சரியைகிரியை வளர்யோகந் தக்கஞான மௌனின்றே
உரியுபணிக ளியற்றுநருக் குவபபுறறவ்வப் பயன்களையே
விரியவுதவும் பெருங்கருணை விமலாநீயிங் கவதரித்துத்
தெரியவெதிர்நின் றனையதனாற் றேவாநின்னைச் சரணடைந்தேன். 11

சுவாமி! அளவற்ற புண்ணியங்களினு லடைப்பது உயர்ந்தமானி டப்பிறவி அதனைப்பெற்றபேர்கள் தேவரீர்திருவடிகளில் வணங்கா ராயின் என்னபயனையடையப்போகின்றனர். சிறந்ததேவர்களேயா யினுந் தேவரீரைச்சரணடையாராயின், உடனே அவர்கட்குக்கலி

யுண்டாகும். அதனால் அவர்கட்கு இழிந்தயோனிகளிற்றோன்றும் பிறந்தழியவரும். இஃது வேதாகமங்களிற்கூறியிருக்கின்ற சத்தியமன்றோ? தாரணை, தியானம், சமாதியென்னும் இவைகளை மருவியிருக்கின்ற மாதவத்தவர்களது உள்ளத்தின்கண் பிரகாசிக்கும்பரம்பொருளே! பிரமனும் விண்டுவினுங் காண்டற்கரிய தெய்வமே! திரிமூர்த்தி சொரூபமாயிருக்கின்ற கடவுளே! நான்மறைகட்கு மெட்டாத் எனது பேரானந்த சொரூபமாயிருக்கின்ற பெருமானே! சரியை, கிரியை, யோக, ஞானமென்று நான்கியல்பின் கண்ணுமிருந்து பணிசெய்யுமன்பினர்க்கு அதனதன்பயன்களை விரியவுதவும் பெருங்கருணையினையுடைய விமலனே: தேவரீர் இவ்வாசிரமத்தி லவதரித்து அடியேங்கள் காணுமாறு எதிர்நின்றீராதலால், தேவரீர் பாதபதுமங்களில் அடியேன் சரணடைந்தேன். இஃதன்றிப் பிறவிகடோறுஞ்செய்து முற்றியதபோபலத்தினால் முன்னமே தேவரீரது திவ்விய சரணாரவிந்தங்களையடுத்து அருள்பெற்ற சுலபனையுஞ் சூலபாணியையும் வருணவொழுக்கங்களி னின்றும வழாத வண்ணமருவிக கணராசனுடைய அரசுரிமையை அவர்கள்பால்ஒப்புவித்துவெண்ணித்துணியுங்காரியங்களில் தனக்கொருவர் நிகரில்லாதவனாகிய கிரந்தனைமாத்திரம் அவர்கட்கு அமைச்சனாக்கி அடியேனை இவ்வுடற்றுச்சிலினின்றும் நீக்கி உயர்ந்த ஞானவைராக்கியச் செல்வத்தினையளித்தருளல் வேண்டும். இதுதான் எனதுகருத்தாகும் இப்பால் தேவரீரதுகிருபை எவ்வாறோவென்று விண்ணபபஞ் செய்தனன். இவ்வாறு சத்தியசந்தனாகிய அபிசித்துமகாராசன் கூறிய அனைத்தையும் விநாயகப்பெருமான் கேட்டு சந்தோஷித்துத் தம்மைச் சரணடைந்திருந்த கணராசன் புதல்வர்கட்கு அவ்வாறேகிருபைசெய்துவிடுத்து, அவ்வரசன் கொணர்ந்துவந்த சிந்தாமணியை எடுத்துக் கபிலமுனிவர் கையில் கொடுத்தருளினர். பின்னர் கபிலமுனிவரானவர் விநாயகப்பெருமானைத் தொழுது எழுந்து அச்சிந்தாமணியை அவர் திருவடியின்கண் வைத்து; சுவாமி தேவரீர் எல்லாவுயிர்களும் உய்யும்படி இங்ஙனம் அவதரித்து, சிந்தாமணியைக் கவர்ந்த கணராசனைச்சங்கரித்து, அதனைமீட்டும் எனக்களித்தமையால், இத்தினமுதல் யாவரும் தங்கள் வினைகள் பொடிபடும்படியாகத் தேவரீரைச் சிந்தாமணி விநாயகரென்று துதித்தல் வேண்டும் இச்சிந்தாமணியைத் தேவரீரது திருமேனியிற் றரித்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அபிசித்து மகாராசனும் பணிந்தெழுந்து, கபிலமுனிவருடைய உள்ளங் களிகூரும்படியாக சுவாமிகள் அதனை அவ்வாறே தரித்தருளவேண்டுமென்றிரந்தனன். பின்னர்

விநாயகப்பெருமானும் அதனை வாங்கி, யாவருங்கண்டு களிக்கும்படியாகத் தமது கண்டத்திலணிந்தருளினர் அன்பர்கள் கொடுக்கும் உடல் பொருளாவியனைத்தையுங் கைக்கொண்டு இன்பமளிக்கவல்ல விநாயகப்பெருமானானவர் கபிலமுனிவராற்றந்த சிந்தாமணியைத் தமது கண்டத்திற் றரித்தருளினமாத்திரத்தில், தேவர்கள் மலர்மாரிசொரிந்தார்கள் அந்தர துந்துபி யைந்தும் முழங்கின சிந்தாமணியைத்தரித்த காரணத்தாற் சிந்தாமணிவிநாயகர் என்றும், கபிலமுனிவர் ஆச்சிரமத்தி லவதரித்த காரணத்தாற் கபிலவிநாயகரென்றும், மலர்ந்தமுகத்தோடு மெழுந்தருளிய காரணத்தால் சுமுகவிநாயகரென்றும், திருநாமஞ்சாற்றினர் இப்பால் அபிஜித்துமகாராஜன் விநாயகப்பெருமானுடைய திருவருளைப்பெற்று விடைகொண்டு, தனதுபட்டணத்திற்சென்று, புத்திரனாகிய சூலபாணிக்குஞ் சுலபனுக்கும் கணராசனுடைய ராச்சியங்களைப் பகிர்ந்துக் கொடுத்து, விண்ணுலகத்தும் மண்ணுலகத்தும் போற்றும்படியாக மனுநீதி முறைமைப்படி செங்கோல் செலுத்துவித்து தந்தானந்தகாலமும் விநாயகப்பெருமானைத் தியானஞ்செய்து, ஞானவைராக்கியம் முதலிய செல்வங்களைப்பெற்று வாழ்ந்திருந்தனன்

பின்னர் கபில நிறம், கருமை நிறம், பசுமை நிறம், வெண்மை நிறம், மஞ்சணிறமென்று சொல்லுகின்ற ஐவகைநிறங்களோடு (காமதேனுவானது தன்கன்றினுக்குச் சுரக்குமாறுபோல) எல்லாவுயிர்கட்கும் இனிமைபுரிந்து ஆட்கொள்ளவெழுந்தருளிய கபிலவிநாயகமூர்த்தியானவர் குற்றமற்ற மகாதவத்தினையுடைய கபிலமுனிவருக்கு அளவற்றவரங்களைக் கொடுத்தருளி தமதுருக்கரந்தனர்.

இப்பால் அம்முனிவரும் உடனே அக்கடவுளைத் தமது தியானத்திற் பிணித்துக்கொண்டனர் இவ்வாறு கபிலமுனிவர் தமது ஆச்சிரமத்தில் வளர்த்தியவேள்விக் குண்டத்தினின்றும் எல்லாவுயிர்கட்கும் இன்பமெய்தும்படியாக விநாயகமூர்த்தி அவதரித்தமையால், அப்போது அவர்க்குண்டான மூன்று திருநாமங்களை யாவரேனும் இடைவிடாது உச்சரித்துவருவார்களாயின் அவர்கள் இடர், பிணி, பாவம் முதலானவைகளினின்று நீங்கிச் சகலபோக பாக்கியங்களோடும் வாழ்ந்திருந்து அந்திய காலத்தில் தேவர்களாயவதரித்து பின்னர் மேலானமோட்ச சாம்பிராச்சியத்தினையும் அடைவார்கள் அத்திருநாமங்களுண்டானதற்குக் காரணமாயிருந்த இச்சரித்திரத்தை அன்போடு கேட்டவர்களும், படித்தவர்களும் அந்த மேலான பயன்களையே யடைவார்கள். என்று சூதபுராணிகர் சவுனகாதி யவர்கட்குக் கூறினர்.

இப்பால் அச்சவுனகாதி முனிவர்கள் சூதமகா புராணிகரைப் பணிந்தெழுந்து சுவாமீ! வேதங்களாலுமறிதற்கரிய விநாயகமூர்த்தியினது திருவடிகளைப் பெற்றிருக்கின்ற அக்கபிலமுனிவருடைய குணாதிசயங்களையும், அவருக்குத் தெய்வலோகத்திலிருக்கும் அச்சிந்தாமணிவந்த வரலாற்றினையுந் திருவாய்மலர்ந்தருளா வேண்டுமென்று கேட்டார்கள்.

அதற்குச் சூதபுராணிகரிசைந்து, ஓசவுனகாதி முனிவர்களே! கபிலமகாமுனிவருடைய குணாதிசயங்களைச் சொல்லுமிடத்து, அவர் ஐம்பொறிகளையுந் தன்வயமாக்கியபுனிதர்; தவங்கட்கெல்லாம் உறைவிடமாக விருக்கின்றசெல்வர்; நிதமும் முத்தீக்களை நெறிவழாமல் வளர்த்து எல்லாவுயிர்கட்கும் ஓரிடையூறுமில்லாதபடி கிருபையாகிய மகாடையைவழங்கும்வரதர்; தமதுயோகத்தினால் அரிய பரம்பொருளை வேண்டும்போதெல்லாம் தன்வயமாக்கு மியல்பினர்; திரிலோகங்களையுந் தமதிச்சைவழி ஆகவும் அளிக்கவும் அழிக்கவும் வல்லதிறத்தர், மகாதவ சிரேஷ்டாகட்கெல்லாந் திலதம்போற் சிறந்து மாதவர்; அவருடையபெருமையை அளவிட்டுரைக்கயாவராலாகும்? அவருக்கு அருமையாகிய அச்சிந்தாமணிவந்தவரலாற்றினையுங்கேட்பீர்களாக முன்னொருகாலத்தில் தேவேந்திரனானவன் பூவுலகத்திலுள்ள அதிசயங்களைப்பார்க்கவந்து, மீட்டுந் தேவலோகத்தைநோக்கிச் செல்லுகின்றபோது, பசியுந தாகமு மேலிட்டவனாகி, அக்கபிலமகாமுனிவர் வசித்திருந்த ஆசிரமத்தில்வா, அவ்வாசிரமத்தில் ஓர்பால் வானம்பாடி, அன்னம், அன்றில்; பெருநாரை; கருநாராு; சக்கரவாகம்; கொக்கு முதலான பறவைகளும்; நானாவித புட்பங்கள் முதலியன நிறைநதிருக்கின்ற தடாகங்களும்; ஓர்பால்; சந்தனம்; தேக்கு; அகில்; அசோகுநாகம்; வேங்கை; நாளிகேரம்; பூகதம்; இலவங்கம்; தேவதாரம; சிற்றேலம்; குங்குமம்; தமாத்தை; வெண்ணொசசில்; அரசு முதலியவருக்கங்கள் மலிந்திருக்கின்ற சோலைகளும; ஓர்பால்முல்லை; மல்லிகை; இருவாட்சி; குருக்கத்தி; சிறுசண்பகம்; வில்வம; நந்தியாவர்த்தம்; பாதிரி; வெட்சி; கோங்கு; துளசி; கூவிளம்; அலறி; கொன்றை; குருந்தம்; சண்பகம் முதலிய புட்பச்செடிகள் நிறைந்திருக்கின்ற நந்தவனங்களும்; ஓர்பால்வெள்ளாம்பல்; செவ்வாம்பல்; வெள்ளுற்பலம்; வெண்டாமரை; செந்தாமரை; நெய்தல்; அநிச்சம் முதலிய புட்பங்களைத்தழுவியிருக்கின்ற சிறந்த ஓடைகளும்; ஓர்பால்; மிளகு; கோட்டம்; அகில்; தக்கோலம்; குங்குமம்; இருவல்; தேன்; அறக்கு; மயிற்பீலி; நாவி முதலிய மலைபடு திரவியங்களையும்; வனம்படு திர

வியங்களையும்; அலைத்துவருகின்றநதிகளும். ஓர்பால் ஒன்றுக்கொன்றுபகைவயிரமில்லாமல் மாதவர்கள்செய்யும்முழுக்கினைப்போலச் சிங்கம யாளி யானை முதலிய மிருகவர்க்கங்கள் முழுக்குஞ்செய்துக் கொண்டிருக்கின்ற பொதும்பர்களும்; ஓர்பால் வேதாகமபுராணங்கள் விசாரிப்போர்களுடைய ஓசையும்; ஓர்பால் விச்சாதரர் கின்னரர்முதலியோர் வாசிக்கும் வீணைகானத்தினோசையும், ஓர்பால் கிளி, குயில், நாகணவாய் முதலியவைகள் பாடுகின்ற ஓசையும், இன்னும் இத்தன்மைத்தான பெருமிதங்கள் அளவற்றனவாகவிருப்பக்கண்டு உள்ளங்குளிர்ந்து தனது குதிரையைவிட்டு நிலத்திலிறங்கி களங்கரகிதமாயிரானின்ற நதியில்மிகுந்த ஆவலோடும் ஸ்நானஞ்செய்து தன்னோடிருந்த எல்லாதமதவர்களையும அவ்வாற்றின்கண்ணேயிருத்தித் தான்தனியே புறப்பட்டுச் சுற்றுமுமாணுக்கர்கள் புடைசூழுமாறு தவத்தின்கண் வீற்றிருக்கின்ற கபிலைகாமுனிவரை யடுத்து, அவரது பாதபதுமங்களிற் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, மிக்க பெருவகையோடு தனதுகைகளைக்கூப்பி மெய்கொட்டி நின்றனன். அதனைக்கபிலமுனிவர் தமதுயோகத்தினாலறிந்து விழித்துத் தனியாயிருக்கின்ற இந்திரனைப்பார்த்து, ஓ சுரலோக சக்கிரேஸ்வரனே! நீ உனது பொன்னகரைவிடுத்து இங்ஙனம்வந்தகாரியம் என்னென்று வினவினா.

இந்திர னேதுவா னிறைவ னீசனைச்
சுந்தர வரிவையா ளைத்தந் தோமிலா
அந்தணர் தமையர சவைத் தடங்கியை
முந்துறக் கண்டு நாமுதா முன்னினேன்.

உயர்ந்தவ ரையினு மொருவ மற்றவன்
வயந்தரு பெருந்திரு மாயு மென்றுநூல்
இயம்பலின் முனிவர ரெழில்கொள் பாதங்கள்
நயந்தகப் போற்றநா னிலத்தில் வந்தநான்.

அதற்குத் தேவேந்திரன் முகமலர்ந்து, சுவாமி! சிவபிரானை, மகாவிஷ்ணுவை, தேவாலயத்தை, பெரியோர்களை, அரசவிருக்கத்தை, அக்கினியை யாவரேனுங் கண்டபோது தொழாதுசெல்வராயின் அவர்கள் எவ்வாற்றானும் உயர்ந்தவர்களாயினும் உடனே செல்வங்களனைத்துங்குன்றி இழந்தோர்களாவரென்று வேதாகமங்களிற் கூறியிருக்கின்றமையால், தவத்திற்சிறந்த முனிவர்களையெல்லாங் கண்டு தரிசிக்க இப்பூதலத்தின்கணிறங்கியயான், தேவரீருடைய பாதபதுமங்களையுந் தரிசிக்குமாறுவந்தனன். அடியேன்வந்தகாரியங்களு முடிவெய்தின. தேவரீரைத்தரிசித்த மகிமையினால் அடியேன் கொண்டிருந்த பசியுந்தாகமும் ஒருங்கே நீங்கின; இனி

யான அமராபதிக்குச்செல்ல விடைகொடுத்தருளவேண்டுமென்றனன். அதனைக் கபிலமுனிவர் கிருபையோடுங் கேட்டு ஓவலாரியே! கதிரவனே உச்சியில்வந்துவிட்டனன். இதுகாறும் இவ்வாச்சிரமத்தில்வந்தவர்களை இளைப்போடு வேறோரிடத்திற்செல்லவிட்டதில்லை. யாகாதிகளைச் செய்கின்றபேர்கள் வரவேண்டுமென்று பிரார்த்திக்கத்தக்க நீ யிப்போது ஏதோ ஒருபுண்ணியபலத்தினால் இங்குவலுவில் வந்தனை. இங்ஙனஞ் சிறிதுநேரமிருந்து யான்தருவது பெருஞ்சலமாயினும் அதனைக் கைகொள்ளவேண்டுமென்று சொல்லித் தேவேந்திரனை அங்ஙனேயிருத்தி, அவனோடுவந்த தேவர்களை எல்லாமழைத்து வருமாறு தமது சீடர்களை ஏவினர். உடனே அவர்களோடி நதிக்கரையிற் றங்கியிருந்த தேவர்களை எல்லாமழைக்க, அவர்கள் விரைவிலெழுந்துவந்து கபிலமாமுனிவருடைய திருவடிகளைப் பணிந்தார்கள். இப்பால் கபிலமுனிவர் சாபபாபரணங்களைத்தரித்த சிவபிரானைத் தியானிக்க அவரது திருவருளால் ஓர்நொடிப்போதில் பலவகைப்பட்ட தேவவுணவுகளெல்லாஞ் சிறக்க உண்டாயின. அவைகளையெல்லாம் இந்திரன் மற்றைத்தேவர்களோடு முண்டு இதுகாறு தனது சொர்க்கலோகத்திலு முண்டறியாத மிகுந்தசுவையுள்ள அவ்வுணவுகளின் குணாதிசயங்களைப் பலமுறைகொண்டாடி அம்முனிவரது மகத்துவத்தை நினைத்து நினைத்து ஆச்சரியங்கொண்டவனாய், தவத்தினுங் குணத்தினுஞ் சிறந்த இவருக்கு நாமொரு பிரீதிசெய்யவேண்டுமென்று நினைத்து உடனே வாயுதேவனைக்கூவி முன்னர் மகாவிஷ்ணு கொடுத்தருளிய சிந்தாமணியானது நமதுபொக்கிசத்தி லிருக்கின்றது, அதனை நீ விரைவிலெடுத்துக்கொண்டு வருவையெனக்கட்டளையிட, அதற்கு வாயுதேவனிசைந் தனதுவேகத்தோடு மனோவேகமும ஒன்றுபடச்சென்று அதனை அப்பொக்கசத்தினினின்றும் எடுத்துவந்து தேவேந்திரன் கரத்திற்கொடுத்தனன் அதனைத் தேவேந்திரன் கையேற்றுக் கபிலமுனிவருடைய திருவடிகளில்வைத்துப் பலமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து அவரது திருவருளைக் குறைவரப்பெற்று விடைகொண்டு தனதுசொர்க்கலோகத்தை யடைந்தனன். பின்னர் அச்சிந்தாமணியைக் கபிலமுனிவர் தமதுகரத்திலணிந்துகொண்டனர். தம்மைக்கருதினோர்களை அளத்துற்ற துரும்புபோலாக்கவல்ல சிவபிரானை உள்ளத்திற் பதிப்பவர்கட்குக் கிடையாதபொருள் யாதிருக்கின்றது.

சிந்தாமணிவிநாயகர் திருவவதாரப்படலம்

முற்றிற்று.

மூன்றாவது

கெஜானன விநாயகா

# திருவவதாரப்படலம்.

—•◇•✠(*)✠•◇•—

இரண்டெனப்படுமவ தாரமேத்திநும்
குரண்டவெள் ளிறகொடு கோலக் கங்கையும்
திரண்டசெஞ் சடையணி தேவை யுன்னுவோய்
முரண்டப வறியென முடித்து மேற்சொல்வான்.

திருமாலு நான்முகனு மறைகளுநா டுதற்கரிய தேவரான, பெருவாய்மை விநாயகனு ரலகினுயிர் வருத்தமெலாம் பேணவுள்ளத், தொருவாத கருணைகொடு சுவேச்சையினுற் கெசானனராயுற்றுப் பேரும், வெருவாத கெசானனரென் றுயர்வாகக் கொண்டருண்மெய்ம்மூர்த்தி தன்னை.

மங்காமற் பலவுலகுந் தரிப்பிக்குந் தாரகத்தை மதைத்துத் துட்ட
சங்கார காரகத்தைத் தரணிபா ரந்தவிர்த் தனைக்கன் மங்கள்
பொங்கார்வத் தெவ்விடத்து நிறுவுவதைப் பத்தருக்கு போக வீடு
சிங்காம லருளுவதைச் சாதுக்க டமைப்புரக்குஞ் செல்வ வாழ்வை.

பெரிதான விக்கினங்க ளனைத்தினையுங் கெடுப்பதனைப் பேசப் பேச, உரிதாகு மூன்றுன வவதாரந் தனையினுநா னுரைக்கலுற்றேன், அரிதானென் றுலகமெலா மெடுத்தேத்தும் வியாதமுனியகம்விள்ளாது, தெரிதாக முடையவர்க ளொருவர்கொணந் தருணாறு நீர்த் தெவ்வு மாபோல்.

ஓ சவுனகாதி முனிவர்களே! அரிபிரமேந்திராதியராலு மறிதற்கரியபரம் பொருளாகியும், பலவுலகங்களையும் மங்காமற்றரிப்பிக்கவல்ல தாரகமாகியும், ஆன்மாக்களுடைய மும்மலங்கட்கும் மும்மதங்களைப்பொழியும் மூர்த்தியாகியும், துட்டர்களையெல்லாஞ் சங்கரிக்கும்படியான காரகமாகியும், வேதாகம புராணங்களோங்கு மாறு தரணிபாரந் தவிர்க்கவல்ல சயம்புவாகியும், எல்லாவுயிர்கட்குங் கன்மங்களையூட்டிப் பிழைப்பிக்குங் கருணாநிதியாகியும், பத்தராயினோர்க்கு இம்மையிற்போகமும் மறுமையில் வீட்டையுமளித்தருளுகின்ற கர்த்தவ்வியமாகியும், சாதுக்களாயினோரை யடுத்துப் புரந்தருளுகின்ற செல்வமாகியும், பெரிதான விக்கினங்களையெல்லாங்கெடுத்து இரட்சித்தருளுகின்ற பெருவாழ்வாகியு மிராநின்ற

விநாயகமூர்த்தியானவர்! கபிலமுனிவருடைய சிந்தாமணியைக் கவர்ந்தகணராசனை வெல்லுமாறும் அவராசிர்மத்தி லவதரித்தும், அதைமீட்டுமவர்க்களித்தும், அதனால் கபிலவிநாயகர், சிந்தாமணி விநாயகர், சுமுகவிநாயகரென்னும் இம்மூன்று திருநாமங்களைப்பெற்றதும், அக்கபிலமுனிவருடைய குணாதிசயங்களும், அவர்க்கு அச்சிந்தாமணிகிடைத்த வரலாறுஞ்சொன்னோம். இப்பால் அவ்விநாயக மூர்த்தியானவர் உயிர்களது வருத்தமெல்லாம் ஒழியுமாறு தமது பெருங்கருணையோடு சுயேச்சையினாற் கஜானனாவதாரஞ்செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

முன்னொரு கற்பத்திற் பிரமதேவனானவன் சத்தியலோகத்தில் வீற்றிருக்கிறபோது கொட்டாவிவிட்டனன். அதினின்றும் ஓர்புருடனுதித்தனன். உடனே சொர்க்கமத்திய பாதலமென்னும் மூவுலகங்களிலும் இரத்தமாரி சொரிந்தது, அப்புருடன் செம்பரத்தம் பூவினைநிகர்த்தநிறத்தினையும், பத்துத்திசைகளினுஞ்சென்று வீசும்படியான இயற்கைமணம் வாய்ந்தவடிவத்தினையும், விண்ணளவிலோங்கிப் பாரித்திருக்கின்ற மெய்யினையும், பஞ்சபுட்பபாணங்களைக் கரத்திலேந்திய மன்மதனையொத்த அழகினையும், யாவருஞ் சிரம்பனென்று சொல்லும்படி வாய்ந்த பதநுசிரத்தினையும் உடையவனாகி எதிர்நிற்க அவனை அப்பிரமதேவனோக்கி நீயாரென்று வினவினன். அதற்கச்சிரம்பன் தனதுள்ளச் செருக்கினைமீக்கொண்டு யான்நினது வாண்முகத்தினின்றும் உதித்தமையால் உனக்கு மகனாகும். அறிவிலார்களைப்போலவென்றும் அறியான் போன்று கேட்டது அதிசயமாயிருக்கின்றது. இனியான் வசித்தற்கு இடமும் பெயருஞ்சொல்லவேண்டுமென்று கேட்டனன். அதற்குப்பிரமன் அன்பு மச்சமுங்கொண்டு. மைந்தனே! நீ சிந்தூர நிறத்தினனாயிருத்தலினால் நினக்குச் சிந்தூரனென்னும் பேருண்டாகுக. திரிலோகங்களினுஞ்சென்று நினக்கினிய தலத்தினைக்கொள்ளுக உலகமனைத்தும் நினது வசமாகுக. விண்டு முதலிய தேவர்களாலும் உனக்கு எக்காலத்தும் யாதொரு அச்சமும் இன்றாக நீ கோபங்கொண்டு யாவரையேனும் நினதுகரத்தாற் றழுவுவையாயின் உடனே அவர்களுடலம் நீறுகுக. தேவர்களால் விடுகின்ற அத்திர சத்திரங்களாலும் உனக்கு இறுதிநேராதாக. இவையனைத்தையும் உனக்கு யான் புத்திரவாஞ்சையினாற் கொடுத்தவரமாகக் கொள்ளுக என்று பிரமதேவன் கூற அவ்வரமனைத்தையுஞ் சிந்தூரன் கைக்கொண்டு, எந்தையே! தவம், தானம், விரதம், வேள்வி, கருமம்முதலியவைகளொன்றுமில்லாதவெனக்கு எல்லா வரங்களையும் எளி

திற் றந்தனையே! யென்றுமகிழ்ந்து விடைகொண்டு, பூவுலகத்தினை நோக்கிச்செல்லுகின்றவன், நமது பிதாவானவர் தவந்தானாதிகளில் ஒன்றையுஞ்செய்யாத நமக்கு அளவற்ற வரங்களை யளித்தனரே அவைகளனைத்தும்பொய்யோ! மெய்யோவென்று ஐயமுற்று, அவைகளைச் சோதிக்கவேண்டும் என்று நிச்சயங்கொண்டு மீட்டும், பிரமதேவனிடத்தில் வந்து சத்தசாகரங்கள் துளும்பவும், அண்டகடாகங்கள் பிளக்கவும், திரிலோகங்களும் நடுங்கவும், உடுக்களனைத்தும் உதிரவும், கர்ப்பங்களெல்லாங் கலங்கவும் பறவைகள் யாவும் மாயவும், விருட்சங்கள் யாவும்வீழவுமான ஆரவாரத்துடனே அட்டகாசஞ்செய்து, அப்பிரமதேவனைத் தனதுகரத்தாற்றழுவிப் பிடிக்கநேர்ந்தனன். அதற்குப்பிரமதேவன் அஞ்சி, அடாமூடனே! நீ இத்தன்மைத்தான துட்டனென்றறியாது புத்திரவாஞ்சையினால் வீணே அனந்தவரங்களை உனக்குக்கொடுத்துவிட்டேன். அப்படிக்கொடுத்த என்னையே தழுவிக்கொல்ல வந்தனையல்லவா? இனி உன்னைக்கொல்ல விநாயகமூர்த்தி அவதரித்தருளுவரென்று சபித்தனன். அதைக்கேட்ட சிந்தூரன் மிகுந்தகோபங்கொண்டு மீளவும், ஒரு அட்டகாசஞ்செய்தான் அதனைப்பிரமதேவன் கண்டு நடுங்கி, அலறிப்பெருமூச்செறிந்து அவ்விடத்தினின்றோடி, வைகுந்தத்தில் ஆதிசேடன்மீது பள்ளிகொண்டிருக்கின்ற விண்டுவினையடைந்து, கண்களில் நீர் சொரியும்படியாக அவரது பாத பதுமங்களில் வீழ்ந்து பணிந்தனன்.

உடனே விண்டுவானவர் அப்பிரமதேவனுக்கு ஓர் ஆசனந்தந்து இருக்கச்செய்து. ஓ சதுமுகனே! உனக்கு இவ்வாறு நெஞ்சுதுடிக்கவும், நெட்டுயிர்ப்பெய்தவும், சரீரம் நடுங்கவும், முகாரவிந்தம் வாடவுமான தீங்கு யாது நேர்ந்ததென்று கேட்க, ஐயனே! யான் கொட்டாவிவிட்டேன்; அதினின்றும் ஓர்புருடனுதித்தனன். அவனை எனது புத்திரனென்றெண்ணி அளவற்ற வரங்களைக்கொடுத்தேன், அவனவைகளைக்கைக்கொண்டுசென்று மீட்டும் என்னையே கொல்லவந்து மிகுந்ததுன்பங்களைச்செய்தனன், என்னசெய்வேன்! அப்பாதகனெதிரில் நிற்க வஞ்சி இங்ஙனம் ஓடிவந்தேன். தேவரீர் அவனை எவ்விதத்திலாகிலுஞ் சங்கரித்து என்னைப்பாதுகாத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவையனைத்தையுந் திருமால் கேட்டுத் துயரமெய்தி "ஆய்ந்தோய்ந்து செய்யாதான் காரியந்தான்சாகக்கேடுதரும்" என மேலோர்சொல்லும் வாக்கியத்திற் கிலக்கியமாகச் சிறிதேனும் அவன் குணாதிசயங்களை ஆராயாது வரங்களைக்கொடுத்துவிட்டனை. இனி உன்னாலும் நம்மாலும் அவன் அழி

பவனன்று. கன்மலயத்தால்வருங் கலக்கங்களையாவர் விலக்கவல்லவர்கள்; அந்தோ! தேவர்களனைவோர்க்குந் துன்பத்தினை விளைத்துவிட்டனை வேத ஆகமநெறிகளனைத்துங்கெடச்செய்தனை. நம்பேராகெட்டெல்லாம் மிகுந்த தாழ்வினையுண்டாக்கினை. சகலதுட்டர்களையும் நாசஞ்செய்வதற்குச் சிவபிரானையன்றி மற்றேனையோராலும் முடிவதன்று. என்று இவ்வாறு இருவரும் வார்த்தையாடிக் கொண்டிருக்கின்ற சமயத்தில் தொல்லைப்பால வலவினைதொடர்ந்து வருமாறுபோல, அச்சிந்தூரன் அப்பிரமனைப் பின்தொடர்ந்து வந்து, அவன் விண்டுவினோடு வசனித்திருக்கின்றவையைக் கண்டனன். பின்னர் அவ்விண்டுவை அப்பாதகன் நோக்கி, ஓ மகாமாயனே நீ என்னோடு யுத்தஞ்செய்ய வராமற்போவையெனில் உன்னையும் உன்னையடுத்திருக்கின்ற இவனையும் இந்நிமிடத்திற் சாம்பராக்கி விடுவேனென்றனன். அதனைக்கேட்டலும் விண்டுவுக்கு மனம் நடுங்கி, அந்நடுக்கத்தை வெளியிற்றோன்றுதபடி தம்முள் மறைத்துக்கொண்டு இவனை வணக்கத்தோடு நல்லவார்த்தைகளாடித் தப்பித்துக்கொள்ளவேண்டுமென நிச்சயித்து, மிகுந்த விநயத்துடனே அவன் முகத்தை நோக்கி, ஓ சுத்தவீரனே! மல்லரோடும் மல்யுத்தஞ்செய்தால் மானமும் புகழுமுண்டாகும். அம்பலைப்புனலோடு யுத்தஞ்செய்தால் பராக்கிரமமுண்டோ? யானோ ஓராலிலையில் ஒன்றிக்கொண்டிருக்கின்ற நொய்மையன். இஃதன்றிப் பிரசாதத்துவிகதத்தொழிலினால் காவற்றலைமைபூண்டிருக்கின்றவன் இப்பிரமனோ வென்றால்; வண்டேறத்தாங்காதபூவில் வசித்துக்கொண்டிருக்கிற எளியன் இதல்லாமல் சாத்திரங்களைக்கூறி உலகங்களையுண்டாக்கும் ஒரே தொழிலினைக் கற்றவன். ஆதலால் யாங்களிருவரும் உன்னோடு யுத்தஞ்செய்யமாட்டோம். நீயோ எல்லாரையும் வெல்லத்தக்க பராக்கிரமசாலி, உன்னோடு யுத்தஞ்செய்வதற்கு, உலகனைத்தையுஞ் சங்கரிக்குந் தொழிலினையுடைய வொருவனிருக்கின்றான் அவனே மகாபலத்தையுடையவன். இதுகாறும் அளவற்றபேரை அதஞ்செய்திருக்கின்றான். யாங்களிருவருங்கர்விக்கின்றபோதெல்லாம் அவன்வந்து எங்களாண்மைகளை யடக்கியிருக்கின்றனன். மலைகளுக்கெல்லாம் மேலான மகமேருவை அவன் கரத்தில் வில்லாகப்பிடித்திருக்கின்றான். பர்வதங்களனைத்தும் ஒன்றாய்த் திரண்டதற்கொப்பான புஜபல பராக்கிரமத்தை யுடையவன். அவனுடைய பத்தினியோ மலைகள்யாவுக்கும் அரசனாகிய இமாசலராசன் புதல்வி, அவன் வீற்றிருக்குமிடமோ வெள்ளிமலை, இன்னும் இத்தன்மைத்தான அளவற்ற பெருமிதங்களினால் அவன் யாவருக்கு மிறைவனாகி யிருக்கின்றனன். ஆதலால் அவனோடு எதிர்த்து யுத்தஞ்செய்து உனதுபராக்

கிரமங்களைச் செலுத்துவையாயின் அதனால் உனக்கு மாண்பும் புகழுமுண்டாவதன்றி, எல்லாவுலகமும் உனது கீர்த்தியைப் பாராட்டும். அவ்வாறின்றி ஓராவிலக்கும அரணிக்ததத்திற்கும் இலக்கானகுறைந்த வலியினையுடைய எங்களோடு நீ எதிர்ப்பதுமிகவும் எளிமையென்று சொல்லினர்.

அவை யனைத்தையுஞ் சிந்தூரன்கேட்டுச் சிவபிரானையே யுத்தஞ்செய்வதற்கு லட்சியமாக்கி, விண்டுவின்சொல்லாகிய மதுவினைப்பானஞ்செய்து, வெறி கொண்டவனைப்போலக்குதித்து, ஊழிக்காலத்தி லுண்டாகின்ற இடியேற்றினை யொப்பவார்ப்பரித்துக், கைலாய கிரியைநோக்கிப் பாய்ந்தனன். அப்பால் விண்டுவும் பிரமனும் அவன்செய்த கோலா கலத்திற்கஞ்சித் தமது செவிகளைப் பொத்திக்கொண்டு, மண்ணிற் செய்த மாவைப்போலவும், மரத்திற் செய்த பிரதிமைபோலவும்; அசைவற்று நின்றார்கள். தேவர்க ளெல்லாம் அறிவற்று வீழ்ந்தார்கள். மற்றைய சீவராசிகளனைத்தும் எவ்வாறாயினவோ? அதனை யாவராலுஞ் சொல்லிமுடிவதன்று. இவ்வாறு கயிலையை நோக்கிப் பாய்ந்துவந்த சிந்தூரனைச் சிவபிரான் யோகத்திலிருந்தமையால் அவன் வந்ததை அறிந்திலர். அவருக் கருகிருந்த சிவகணங்களிற் சிலர் அவ்வவுணனைக்கண்ட மாத்திரத்தில் பயந்து சோர்ந்தார்கள். சிலர் நெடுமூச்செறிந்து ஓடிப்பதுங்கினார்கள். உமாதேவியாரும அவனைக்காண்டலும் மனங்குழைந்துபயந்தனள். சிவபிரானை யுத்தத்திற்கு வருமாறு * அறைகூவிய சிந்தூரன் பின்னர் உமாதேவியைப்பார்த்து; அழகில் இவளின் மிகுந்தவர் ஒருவரையுங் காணேமாதலால், எவ்விதத்திலேனும் இவளைக்கொண்டு போக வேண்டுமென்றுநினைத்து, அம்மனுக்கு நேராகவந்தனன். அவன்வரவைக் கண்ட உமாதேவியார் நடுங்கிப் பூனைவரக்கண்ட கிளிபோலப்பயந்து; அருகிலிருந்த நாயகரைநோக்கி, சுவாமீ! முனிவர்கள் தேவர்கள்முதலாயினோர் உருகிய உள்ளத்தோடும்வழிபாடுசெய்யஅவர்கட்குத் தருமாதிகாற்பொருள்களையுமுதவவல்ல தேவரீருக்கு நீண்டதியானத்திலிருக்கும்படியான பொருள்வேறில்லையே? இனிசெய்யாமற்செய்கின்ற இத்தியானத்தைவிடுத்து முன்னர்தேவரீருக்குப் பிழையினைச் செய்தவர்களை யெல்லாங் கண்ணாலும், நகையாலும், உகிராலுங் காலாலுங் கடந்து ஜயங்கொண்ட பராக்கிரமத்தினை இப்போது என்னைத்துன்பஞ்செய்ய அஞ்சாது வருகின்ற மேலானவலியினையுடைய இப்பாதகனிடத்துங் காட்டியருளல்வேண்டு மென்று பிரார்த்தித்தனர். அதைக் கேட்டலுஞ் சிவபிரான்

* அறைகூவல் - போருக்கழைத்தல்.

விழித்தருளி, உடனே வேங்கையாதனத்தை விட்டெழுந்து கரத்திற் றடியுஞ், சூலமுமேந்தி மகா உக்கிரத்தோடும் அவனெதிரிற்சென்றனர். அவனும் சுவாமியை நீறுக்குவேனென்று தனதுகையாலவரைத் தழுவப்போயினன். அச்சமயத்தில் அவ்விருவர்மத்தியிலும் இமைக்குமுன் விநாயகப்பெருமான் பிராமணவடிவங்கொண்டு விருத்தபிராயத்தோடும வந்துநின்று சிவபிரானையுஞ் சிந்தூரனையும் பார்த்து, நீங்களிப்போது ஒருவரையொருவர் தழுவிப்பிடித்தலைவிட்டு, உங்கள் பராக்கிரமத்தை அத்திர சத்திரங்களினால் யுத்தஞ்செய்துக் காட்டுங்கள் பார்ப்போமென்று அவர்கள் மத்தியில் தமது பரசாயுதத்தினை நாட்டி ஒருபாரிசத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்தனர். அந்தணர் வடிவாய்வந்த விநாயகப்பெருமான் கூறிய வார்த்தைகட்கு இருவருஞ் சம்மதித்து, அத்திரத்திரங்களால் நெடுநேரம்யுத்தஞ் செய்தார்கள் பின்னர் சிந்தூரன அதனைவிடுத்து இவ்வாறு நீடித்துயுத்தஞ் செய்வதில செயமடைவது அரிதென்று நினைத்து, சிவபிரானைத் தனதுகையினாற் றழுவச்சென்றனன். அத்தருணத்தில் இருவர்மத்தியினும நாட்டிருந்த பரசானது எழும்பிச் சிந்தூரன்மீது தாக்கித் தடுத்தது. அத்தடையைத் தப்பித்துக்கொண்டுசெல்லமாட்டாது மீட்டுந்திரும்பிய சிந்தூரனைப்பிராமணவடிவமாய் வந்த விநாயகப்பெருமான் பார்த்து, இனி நீகாலகாலராகிய சிவபிரானுடைய சூலாயுதத்தினால் நீறுகுவை. அமரர் முதலியோரை ஆலபோசனஞ்செய்து ஆட்கொண்டருளிய கிருபாமூர்த்தியையும் பகைக்கலாமோ? திரிலோகங்களினும அவரைப் பகைத்து வாழ்ந்தவர்கள் யாவரிருக்கின்றனர்? இனி தப்பி ஓடிப்போகும் வகையைத் தேடக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர். அதற்குமேல் சிந்தூரன் பயந்து இனியாமிங்கு நீடித்திருந்தால் இறுதிநேருவதற்கையமில்லை. ஆதலால் இவ்வந்தணன் கூறியசொல்லே உறுதியாகுமென்று மனத்தின்கண் கணிச்சயித்து, உடனே அவ்விடத்தின்று நீங்கிப் பூவுலகத்திற் சென்றனன். பின்னர் சிவபிரானயுத்தத்தை நிறுத்தி சந்தோஷமுற்றிருந்தனர்.

இப்பால் உமாதேவியார் அந்தணராய்வந்த விநாயகமூர்த்தியைப்பார்த்து ஐயா எதிர்த்துவந்த சத்துருவை எளிதிற்றொலையவிட்ட நீயாரென்று கேட்டனர். அதற்கவர் வாய்மொழியா லுத்தரங்கூறுது தாம் எடுத்திருந்த பிராமண வடிவத்தை மாற்றி, ஒரு மருங்கிலுஞ்சித்திபுத்திகளோடும் நான்குத்திருக்கரங்களோடும், சிங்கவாகன மூர்ந்து தமது சுரூபத்தைக்காட்டியருளி, ஓ புவனகாரணியே! உன்னைப் பிடிக்க அதிவேகத்துடனே வந்து சென்ற சிந்தூரனைச்

சங்கரிப்பதற்கு யாம் உனது உதரத்தின் கண் அவதரிப்போம் இதனை மறக்கற்க இனியாவர்க்கும் அஞ்சற்க. என்று சில இனிய வார்த்தைகளையாடிக்கரந்தருளினர். அதை உமாதேவியார் கேட்டுச் சந்தோஷமாயிருந்தனர்.

இப்பால் முன்னம் பூலோகத்தை நோக்கிச் சென்ற சிந்தூரனால் அளவற்றசோலைகள், கால்கள், ஆறுகள், வனங்கள், நகரங்கள், நாடுகள் முதலானவைகளோடு, அளவிறந்த வீரர்கள், வேதியர்கள், பெரியோர்கள், முதலானோரெல்லாந் தழுவப்பட்டு, சர்வசங்கார காலத்தைப்போல எங்கும் நிரம்பின. வேதவொழுக்கங்கள், தவங்கள், தானங்கள், மகங்கள், தருமங்கள முதலியவைகளெல்லாஞ் செய்வாரின்றி இந்திரன் முதலிய தேவர்கட்கு அவிப்பாகமுதலானவைகள் கிடையாமல் மிகுந்தபசியால் வாடித் துயரமுற்றார்கள் பூவுலகமுழுவதும் பாழ்படுத்திய அப்பாதகன் மீட்டும் வானுலகத்தையும் பாழ்செய்ய வந்தனன். அதைத் தேவர்களறிந்து பயந்து யாவரும் பிரமதேவனிடத்திற் சென்று பணிந்து முறையிட்டார்கள். அதைக் கேட்ட பிரமதேவன் தானுந்துயரத்துளழுந்தி இனி இதற்கென்ன செய்யக்கடவோமென்று மனங்கலங்கி பின்னர் ஒருவாறு தேறி எல்லாத் தேவர்களோடும் விநாயக மூர்த்தியைத் துதிசெய்வதாயினன்.

யாவனொருவ னயனெடுமா லகிலாண் டமுமீன் றெடுக்கின்றான்
யாவனொருவன் குணமாயு மியமயு மூவருருவாயு
மேவுகுணாதீ தனுமாயும விளங்கா நின்றானத்தகைய
தேவன்கமலத் தாளிணைக்குச் சிறியேம் வணக்கஞ் செய்கின்றாம்.

பூதமைந்து மிருசுருடம புகழ்சேர் துறக்க முடுதிசைவெற்
போதுநதிகுப் யகரியக்க ருரகாரக்கர் மனிதர்கள்கோக்
காதி விருகங் களுஞ்செந்துக் களுநா ளூழ் தழுவே
மூாத னிலைதலழிதலெலவ னருளா லவற்குப் பணிகின்றாம்

உலக முழுதுங் தனதுதரத் துறைவித் திருக்கின் றான்யாவ
னிலகு மனாதி சித்தாந்த மாகி யிருக்கின் றான்யாவ
னுலகில் பலவே றுமுருவ முடையான் யாவன் மலமனுகா
வலகி லறிவன் யாவனவ னடித்தா மரைக்குப் பணிகின்றாம்.

யாவ னொருவ னடியாரை யெய்த்த விடத்திற் புரக்கின்றான்
யாவ னொருவன் றயித்தியரா லினைவா னவரை யழிக்கின்றான்
யாவ னொருவன் வழிபடுவா ரிடருக் கிடரைப் புரிகின்றான்
யாவ னிகரி லாவிறைவ னவன்பொற் றாள்கள் பணிகின்றாம்.

இவ்வாறு பலமுறை தோத்திரங்கள் செய்து சகல சீவராசிகட்கும் ஆதாரபூதமாயிருக்கின்ற கர்த்தனே! வேதவொழுக்கம், தருமம், தான முதலானவைகளெல்லாங் கெடுமாறும், சிறியேங்கள் பல விடர்களுள் விழுமாறும், இடைவிடாது தீங்குசெய்துவருகின்ற கொடும்பாவியாகிய சிந்தூரனென்பவன் எந்த விதத்திற் றேவரீருடைய திருவருளால் நிருமித்திடப்பட்டனனோ அறிகின்றிலேம், ஓ தேவேசா! ஓ மகாதேவா! தேவரீரைத் தீனரட்சகரென்று எல்லாவுயிர்களுந் துதிசெய்கின்றதால், பாதகங்களனைத்தும் ஓர் வடிவமாகி வருகின்ற சிந்தூரனைச் சங்கரித்து அடியேங்களைத் துன்பமணுகவொட்டாமற் காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து அவர்களெதிரில் பிரத்தியட்சமாகி, மிக்கதுயரத்தோடும் பணிந்தழுது தமக்கெதிரில் நிற்கின்ற தீனர்கள்மீது தமது கிருபாநோக்கத்தினைப் பரப்பி, தேவர்களே! நீங்கள் செய்த தோத்திரங்கட்கு மனமுவந்தோம் அத்தோத்திரங்களை யாவரேனும் நமது சந்நிதியிற் சொல்லுவார்களாயின், அவர்களது நோய், வறுமை, இடர், அல்லல் முதலிய துன்பங்களனைத்தையு மறுத்து, அவ்வவர்கள் கோரிய இட்டகாமியார்த்தங்களைக்கொடுப்போம், பிரதிதினந் துதிப்போர்கட்கு எக்காலத்துந் துன்பமென்பதணுகாதியாம் உமாதேவி வயிற்றிற் புத்திரனாக அவதரித்து உமக்கு துன்பத்தினை விளைத்து வருஞ்சிந்தூரனை சங்கரித்து, மீட்டும் பழையபடி திரிலோகங்களையுமளித்து ரட்சிப்போமென்று திருவாய் மலர்ந்து தமது திருவுருவைக்கரந்தருளினர்.

இவ்வாறு அண்டரண்டபுவனங்களாய், மற்றப்பொருள்களைத்துமாய் எல்லாவுயிர்கட்கும் உயிராய், காரணபூதமாய், பிறவுள்ளனவுமாகி; அவற்றிற்குக் காட்சியாயளவுபடாமல் விளங்குந் தேவதேவோத்தமராகிய எமது விநாயகக்கடவுள் திருவாய்மலர்ந்து தமதுருக்கரந்தருளினர். உடனே உமாதேவியுதரத்திற்கருவாயினர். அக்குறிப்பை அத்தேவியாரறிந்து சிவபிரானைத் தொழுதெழுந்து. சுவாமி! அடியாள் வயிற்றிற் கருப்பந்தரித்திருக்கின்றமையால் அவ்வூட்டினந் தணியும்படியாகக் குளிர்ச்சியோடுகூடி வாசனைவீசுகின்ற பலவிருக்கங்களையுடைய நீழலும் அனந்தவளங்களையுடைத்தாயிருக்கின்ற புனிதமுள்ள நதிகளுமெங்ஙனமிருக்கின்றனவோ அங்ஙனமடியாளைச் சேர்க்கவேண்டுமென்று பிரார்த்திக்க அதைச் சிவபெருமான்கேட்டு உடனே ரிஷபவாகனத்தின்மீது தானுந் தேவியுமாக ஆரோகணித்து அளவற்றதேவர்கள் புடைசூழ்ந்து வரும்படியாகப் பூவுலகத்திலிழிந்து, சோதிமரம், அசோகு, கடம்பு, சூதம், சாலம்,

வாழை, புன்னை, குருந்து, தேக்கு, ஆரம், அகில், குங்குமம், வேங்கை, சண்பகம், சாளம், வன்னி, பலாசு, அரசு, அத்தி, இலவங்கம், நரந்தம், புன்னை, பாடலம், மந்தாரம், முருக்கு, கொன்றை, தாதகி, வஞ்சி, கூதளம, குரவு, கோங்கு, மரா, தேற்றுவெள்ளில், நெல்லி, வருக்கை, இலவு, காஞ்சி, வகுளம, நெய்தல், முன்னம், வில்வம், மாதளை, வெட்பாலை குறிஞ்சி, வெட்சி, நொச்சி, கற்பூரவாழை, கமுகு, தெங்கு, நிரகது, மயிலை, மாதவி, பலவிகை, மௌவல், முல்லை, பிசதிகை, ஏலம முதலாயுள்ள விருக்கசாதிகளும, கருங்குவளை, ஆம்பல், கமலம, உற்பலம, அனிச்சமுதலிய புட்பங்கள் மலர்நது அன்ன முதலிய பட்சிகள் நிறைந்து, விளங்குகின்ற அளவற்றபொய்கைகளும, ஒப்பற்ற வளங்களோடுபொலிந்து, வெளியதிரைகளைப் பரப்பிநுரைத்துவிளங்குகின்ற அநந்தபொய்கைகளும கொண்டல்களைத்தும வந்துமேய்நலைச செய்யத்தக்க சிறந்தநதிகளும், சந்திரகாந்தம் பளிங்குமுதலியவைகளாற் கட்டப்பட்டிருக்கின்ற அளவற்ற உப்பரிகைகள் நிறைந்த வீடுகளும, குயில், புறா, கிளி, பூவை, மயில், கின்னரம, வண்டு முதலியவைகள உலாவிப பலவகைப்பட்ட கீதங்களைப்பயிலுகின்ற வெண்மணற்குன்றுகளும, சிங்கம, புலி, கரடி, யானை, முதலியவைகள உல்லாசமாய் உலாவுதலசெய்கின்ற அனந்தம் பொதும்பர்களும இன்னும இத்தன்மைத்தான எண்ணற்றவளங்களை வாய்ந்த பரிபிலி என்னும் வனத்திலேயடைந்து, அரிசந்தனம், கற்பகம், சந்தானம, பாரிசாதம, மந்தாரமென்னும ஐவகைத தருக்கள் அளவற்றனவாக நெருங்கவும பதுமநிதி சங்கநிதி என்னும இருவகை நிதிகள் ஆயிரமாயிரமாக நிறைந்த பலபொய்கைகள் புடைசூழவுமாக வசசிரம், கோமேதகம, புட்பராகமுதலிய நவரத்தினங்களைக்கொண்டு சிந்தாமணியினால அழகுபொருந்தச்சமைத்திருக்கின்ற மண்டபத்தில் தாமுந் தமதுதேவியும இடபவாகனத்தினின்று மிறங்கியமர்ந்தருளினர். இவ்வாறு அசசோலையினகணிநிறைந்த புட்பங்களின் பரிமளங்களோடு கூடிவருகின்ற சிறுதென்றலானது தமது திருமேனியிற் படும்படியாக அம்மண்டபத்தினடுவில்வீற்றிருக்கின்ற அம்மையப்பருடையசந்நிதானத்தின் முன்னர் சிலர் ஆனந்தக்கூத்தாடினார்கள் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்தார்கள், சிலர்கைகூப்பி எதிற்நின்றார்கள் சிலர் பாடல்களினாற் றுதித்தார்கள். சிலர் நான்குமருங்கினுஞ் சூழ்ந்திருந்தார்கள். சிலர் பணிவிடைகளை நடாத்திவந்தார்கள்.

இவ்வித வைபவங்களோடு வீற்றிருக்கின்றகாலத்தில் சிலநாள் சிவபெருமான் யோகத்திலிருந்தனர். உமாதேவியார் தமதுபாங்கியரோடு நடந்துசென்று வெண்மணற் குன்றுகளிலேறியும், பளிங்கு

உப்பரிகைகளி லுலாவியும் மரநிழல்களிலிருந்தும், மலைகளின்மீதிலிவர்ந்தும், பொய்கைகள் ஓடைகள் நதிகள்முதலான இடங்களை யடைந்தும், மிகுந்த இன்பத்தோடு தமக்கிஷ்டமானபடி விளையாடல்செய்திருந்தனர். இப்படியிருக்கும் நாளையில் ஒருநாள் சந்திரசடாதர மூர்த்திக்கு அன்பனாகிய கயமுகாசுரனென்பவன் அங்குவந்து சிந்தாமணியாற் சமைத்திருக்கின்ற விசித்திரமான மண்டபத்தினையடுத்து அதனைத்தனது கொம்பினால் முட்டியெடுத்து நிலத்தில்விழத்தள்ளினான்.

என்று சூதபுராணிகர் சொல்லலும் சவுனகாதிமுனிவர்கள் தொழுது சுவாமி! சிவபிரானுக்கு அன்பனாயிருக்கின்றவன் கயமுகத்தையுடைய ராட்சசனானதற்குக் காரணமென்ன? அன்றியும் அவன் அன்பனாயிருக்கின்ற கயவரைப்போலச் சிவபிரானைச் சற்றுமதியாமல் அவரெழுந்தருளி யிருக்கின்ற மண்டபத்தை முட்டிநிலத்தில் வீழ்த்தவேண்டியதென்ன? அந்த வரலாற்றினையுஞ் சொல்லியருளல் வேண்டுமென்று கேட்டார்கள். அதற்குச் சூதபுராணிகரிசைந்து ஓ சவுனகாதி முனிவர்களே! முன்னொருயுகத்தில் மயேச்சுரனென்னும் ஓரரசனிருந்தான். அவன் நான்கு வேதங்களையு மோதிவஸ்து நிச்சயந்தெரிந்து பதினெண் புராணங்களையும் வழுவரக்கேட்டு தருமசாஸ்திரங்களை யறிந்து நடாத்தி விபூதி உருத்திராக்க முதலியவைகளையணிந்து திரிகாலங்களினுஞ் சிவபூசையும் வழாது முப்பத்திரண்டு லட்சணங்களையு குறைவறவாய்ந்து மலபாசங்களைத் துறந்து மெய்ஞ்ஞானச் செல்வத்தினிலோங்கி அஷ்ட ஐசுவரியங்களோடு மநுநீதி முறைபபடி உலகமுழுவதுந் தனதரசாட்சியினைச் செலுத்திக் குறைவற வாழ்கின்றநாளையில் ஓர்நாள் பிரகஸ்பதி தேவர் அவ்வரசனிடத்திற்செல்ல அவ்வரசன் அவரை எதிர்கொண்டுசென்று அழைத்துவந்து விசித்திரமான ஓராசனத்தின்கணிருக்கவைத்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகளைக்கொண்டு பூசித்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து மிக்கபக்தியோடு பலமுறை தோத்திரஞ்செய்து நின்றனன். பிரகஸ்பதிதேவர் அவன்செய்த வழிபாட்டிற்கு மனமுவந்து அரசனே! யாம் உனது ஆண்மையையும் புகழையும் நீதியையும் ஊக்கத்தையும் பண்பினையும் பலவாறு கேள்வியுற்று உன்னைக்கண்டுபோமாறு இங்குவந்தனம் ஆனால் இதுகாறுங்கேட்டதைவிட இப்போது உனதுகுணாதிசயங்களை நேரிற்காணுமிடத்து எண்மடங்கு அதிகமாகவிருக்கின்றன நமதுபாதங்களிலன்போடு வணங்கிய உனதுசிரமானது முனிவர்கள் தேவர்கள் பெரியோர்கள் முதலியோரால் வணங்கப்படுகவென் றனுக்கிரகித்து

ணர். அதை அவ்வரசன் கேட்டவுடன் அளவற்றமகிழ்ச்சிக்கொண்டு சுவாமி! தேவரீர் கொடுத்தருளிய திருவாக்கு எப்போது அடியேற்குப்பலித்திடுமென்று கேட்டனன். அதற்குப்பிரகஸ்பதி தேவர் சொல்லுவார்: அரசனே நீ எப்போது யானையிடத்திலுற்பத்தியாகின்றனையோ அப்போது நமதுவாக்கு பழுதில்லாது பலிக்கும், இதுவேயன்றி உடனே நீ சிவானுக்கிரகத்தினால் முத்தியுமடைவையென்று சொல்லி எழுந்துபோயினர். பின்னர் ஓர் காலத்தில் மகேச்சுரராசன் தனது நாடுகளையெல்லாங் காத்தற்பொருட்டு அளவற்ற சேனைகளோடும் பட்டணத்தினின்றும் வெளிக்கொண்டு வழியிற் செல்லுகின்றபோது, அவனுக்கெதிரே நாரதமுனிவர் வந்தனர். அப்போது முன்னர் அவ்வரசனுக்குப் பிரகஸ்பதிதேவர் கொடுத்தருளிய வாக்கு பலிக்குங்காலஞ் சமீபித்ததினாலோ அல்லது அவனைப்புடைசூழ்ந்து அளவற்ற சேனைகள் நெருங்கிப்போனதினால் தனதுபார்வை பெட்டாமற் போனதினாலோ, நாரதமுனிவருக்கு அவ்வரசன் வந்தனைமுதலிய வழிபாடுகள் செய்யாமற்சென்றான். அதனால் அம்முனிவருக்கு மிகுந்தகோபமுண்டாகி, ஓ அரசனே! நீ காட்டிற்சஞ்சரிக்கின்ற யானைபோல என்னைவணங்காது செல்கின்றனையாதலால், இந்த ஜனனமொழிந்தபின்பு யானைக்குழாத்தினுள் யானைமுகனாகப் பிறந்து, கயமுகாசுரனென்னும் நாமத்தினைக் கைக்கொண்டு சிலகாலத்தின் பின்னர் சிவபெருமான் கரத்தினால் உனது சென்னி அறுபட்டுமீட்டுமவருடைய கிருபையினாலே கயிலாயத்தின்கண் மேன்மை பெற்றிருப்பாயென்று சொல்லிச்சென்றனர். இவ்வார்த்தைகளைத் தரும நீதியிற்சிறந்த மகேச்சுரராசன் செவியிலேறலும் ஆ! ஆ! என்ன அற்புதம் அற்புதமென்று சந்தோஷித்து முன்னம் பிரகஸ்பதி தேவர் சொல்லியவாறும் இப்போது நாரதமுனிவர் கூறியசெய்தியும் ஒத்துவந்த தல்லவாவென்று ஆச்சரியமுற்றுப் பின்னும் அளவற்றநாள் அரசச்சரீரத்துடன் அரசனாக வாழ்ந்திருந்து தனது ஆயுள் முடிந்தபின்பு பரியவிவனத்தில் வாசமாயிருந்த யானையின்பால் யானைமுகனாகப்பிறந்து கயமுகாசுரனென்னும் பெயரைவகித்து பூர்வக்கியானமுஞ் சிவபத்தியுமுடையவனாய் அளவற்றநாளிருந்து முற்சனனத்தில் தனக்குப்பிரகஸ்பதி தேவரும் நாரதமுனிவருஞ் சொல்லியதையும் அச்சொல்லின்படி மறுசனனத்தி லடைந்ததையும் யோசித்து தன்னையாட்கொள்ளவல்லசாமியையுந் தியானித்து வந்து, சிவபிரானெழுந்தருளியிருந்த மண்டபத்தைத் தனது கோட்டினால் முட்டித்தள்ளினன்.

திருக்கண்டு சிவபிரான் யோகத்திலிருக்கவும் உமாதேவியார் அயர்ந்து நித்திரை செய்திருக்கவுமான காலம் பார்த்து இதுவே நல்லசமயமென்று நிச்சயித்து உடனேவாயுரூபமெடுத்து உலகமாதாவாகிய உமாதேவியார் உதரத்திற் பிரவேசித்து அங்கு நின்மல ஸ்வரூபமாயிருந்து வளர்கின்ற கருவைச் சேதித்து சிரசை வெளியிற் கொணர்ந்து வந்து விந்தவரையினை யடுத்து அவ்விடத்துள்ள நருமதை நதியின் பக்கத்திலே வைத்துவிட்டு மீட்டுந் தனது அரண்மனையிற் போய்ச் சேர்ந்தனன். அண்டர் பிரானாகிய விநாயகப் பெருமானது சிரம்விழுந்தவிடம் பெரிய பள்ளமாயிற்று. அப்பள்ளத்தை யாவருங் கணேச குண்டமென்று சொல்லுவார்கள் அச்சிரத்தினின்றும் பெருகிய உதிரமானது ஆறாயோடிய படியால் அஃது சோணநதி யென்னும் பெயரினால் வழங்கி வருகின்றது கணேசகுண்டத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற சிலைகளனைத்தும் அக்குண்டத்திற் சரிந்து வீழ்ந்து கணேசமூர்த்தியினுடைய திருவுருவத்தை யடைந்து உலக முழுவதும் பூசிக்கத்தக்க அளவற்ற பயன்களைக் கொடுத்துக்கொண் டிருக்கின்றன ஆதலால் அந்தச் சுயம்பு மூர்த்திகளை யெடுத்து யாவரேனும் வேதாகம முறைப்படி பூசித்து வருவாரகளாயின் அவர்கட்கு தரும் முதலிய நான்கு புருஷார்த்தங்களும் கிடைக்கும். சிந்தூரன் வந்துசெய்த இக்கொடிய செயலை அச்சிந்தூரனுக்குங் கருவாகி வளர்ந்த விநாயமூர்த்திக்குந் தெரியுமேயன்றி உமாதேவியாரும் அறியார் சிவபிரான் முதலியயாவரும் அறியார்கள் இத்தன்மைத்தாகிய கொடுந்தொழிலை நடப்பித்துக்கொண்ட விநாயமூர்த்தியானவர் சிரம்போயும் கருவனைத்தும் முற்றுமடியாகவே வளர்ந்தனர்.

இப்பால் உமாதேவியாருக்கு ஒன்பது திங்களுமாகப் பத்தாந் திங்களில் சிவபிரானவரைப் பார்த்துப் பெண்ணே! உனது வயிற்றிற் கருப்பம் நிரம்பிய படியால் இனியாம் கயிலைக்குச் செல்லவேண்டுமெனச் சொல்லி உடனே அவரை ரிஷபவகானத்திற் கொண்டெழுந்தருளினர் யோகத்திலிருப்போர்களுக்கு யோகியாயும் போகத்திலிருப்போர்களுக்குப் போகியாகியுமிருந்து அனுக்கிரகஞ் செய்யவல்ல சிவபிரான் பறியலி வனத்தை விடுத்துத் தமது கைலாய வரையை யடைந்த பின்னர் உமாதேவியார் உலகத்தாரைப்போல நடத்துமாறு இச்சையுற்று ஆதிமத்தியந்த ரகிதமாய் அநாதி வஸ்துவாய் சகல பிராணிகளிடத்துங் காரண பூதமாகப் பொருந்தி என்னையுமோர் பொருளாகக்கொண்டு நடித்துக் களித்திருக்கும் மூலகாரணக் கடவுளாகிய விநாயகமூர்த்தியைப் பிரசவித்தனர். உடனே அவ்விநாயக மூர்த்தியானவர் ஞானசத்தியுத்தராய் அட்டமாசித்திகளையுந் தமது

தவராய் சித்திபுத்திகள் சமேதராய் சிங்கவாகனரூடராய் பத்துத்திருக்கரங்களோடும் ஆயுதங்களோடும் அவதரித்தருள. அவ்வவதாரகோலத்தை உமாதேவியார்கண்டு முன்னமருளியபடியே வந்து அவதரித்தனரென்று மனமகிழ்ந்தனர். பின்னர் விநாயகமூர்த்தியானவர் தம்மையீன்ற உமாதேவியாரைப் நோக்கி அன்னையே! உனக்குயாம் அன்றுசொன்னபடியே கொடுமையின் மிகுந்த சிந்தூரனைக்கொல்லவும் பத்தசனங்களாகிய தேவர்கள் முனிவர்கள் முதலியோர்படுந் துன்பத்தினை நீக்கவும் உமக்குப் பணிசெய்து ஆனந்தமாக்கி வைக்கவுமாக உமது கருப்பத்தினின்றும் அவதரித்தோம் என்று திருவாய்மலர்ந்து, தமது திருவுருவைக்கரந்தருளினர்.

இப்பால் உடனே உமாதேவியார் திகைத்து மயங்கினர். மீட்டும் விநாயகமூர்த்தி சிரமில்லாத குழந்தையாய் வந்திருந்தனர். அதனைக் கண்ட உமாதேவியார் ஆவிசோர்ந்து தலமிசை வீழ்ந்து நெட்டுயிர்த்து அவசமாகி நேத்திரங்களால் இதனைப் பாவியேன் பார்க்கப்படுவதோவென்று பதைபதைத்து ஐயோ! எனது புத்திரனை யாரோவெடுத்துக்கொண்டு சென்று சிறத்தினைச் சேதித்து விட்டு என்முன்னே கொண்டு வந்து வைத்தார்களே! நான் எல்லா விதத்திலும் பாக்கியவதியாயிருந்தும் புத்திரசம்பத்திலே எளியவளாயினேனே! இப்போது எனது கண்முன்னெழுந்தருளிய விநாயகமூர்த்தி எங்ஙனமேனு மொளித்துச் சென்றனரோ! அல்லது சொப்பனமோ? மாய்கையோ! மற்றியாதோ? எனது அருமைப்புதல்வனுக்கு இவ்வாறு சம்பவிக்கலாமோவென்று புலம்பி அன்று எதிர்த்துவந்த சிந்தூரனால் நீராகிப்போனேனாயின் இன்று இத்தன்மைத்தான சம்பவத்தை யாம்பார்க்கவேண்டுவதில்லையே? சுவாமி! அச்சிந்தூரனை அன்றேயேன் விலக்கினீரென்று சொல்லித் தேம்பித் தேம்பி யழுதனர் இவ்வாறு உலகமாதா அந்தப்புரத்திலிருந்து துயரப்படுவதைத் திருவோலக்கத்திலெழுந்தருளியிருந்த சிவபிரானறிந்து சரேலென்று எழுந்து உமாதேவியாரிடத்தில் வந்து நடந்த செய்திகளனைத்தையும், வினவியறிந்து. முழுதுந்தேர்ந்த முதல்வராகிய முக்கண் மூர்த்தியானவர் இப்போது முடியப்போகின்றதையும் இன்ன இன்னபடியென்றறிந்திருந்தும், அவைகளைத் தமக்குள் மறைத்துக்கொண்டு திருமேனியிற் பழுதுகாட்டியருளிய தமது புதல்வரது மகிமையை உலகத்தாரறிந்து கடைத்தேறுமாறு காட்டும்படி நினைத்தவராய் அகத்திலுள்ள மகிழ்ச்சியை அயலாரறியாத வண்ணம் மறைத்தும், உலகத்தவரைப்போல மிகுந்த முகவாட்டத்துடனே தமது புத்திரனைக் கரத்திலெடுத்துத் தொடையின்மீது வைத்துக்கொண்டிருந்தனர். அக்

குறிப்பை நந்திதேவரறிந்து சிவபிரானைப் பணிந்தெழுந்து விடைபெற்றுப் பிரமன், விண்டு, தேவேந்திரன் முதலியோருக்கும் இவ்வற்புதத்தை யறிவித்து அழைத்துவருமாறு சென்றனர். இந்திரன் முதலாயினோர் நந்திதேவர் வரவையறிந்து, உடனே அவரை எதிர்கொண்டு வந்து பணிந்து ஓர் ஆதனத்திலிருத்திப் பூசித்து, சுவாமீ! தேவரீர் இங்ஙனமெழுந்தருளிய காரணத்தைத் திருவாய் மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவர்களை நந்திதேவர் பார்த்து ஓ தேவர்களே! கயிலாயத்தில் உமாதேவியார் திருவயிற்றில் ஓர் திவ்வியமான குழந்தை சிரமில்லாமற் பிறந்தது. அதை சிவபிரான்கண்டு ஒருவாறாயிருக்கின்றனர். ஆதலால் நீங்கள் அங்குவரவேணுமெனச் சொல்லினர், அதை விண்டுமுதலினோர் கேட்டவும் இரக்கமுற்று முன்னர் தாங்கள் அனைவரும் தோத்திரஞ்செய்தபோது பிரத்தியட்சமாகிய வரங்கொடுத்தருளிய விநாயகமூர்த்தியே அவ்வாறு அவதரித்தனரென்று தெரிந்துகொள்ளாமல் அவரவர்களுடைய வாகனங்களிலேறிச் சென்று கயிலாய வரையை யடைந்தார்கள்.

அப்போது நந்திதேவர் முன்னதாகச் சென்று விண்டுமுதலாயினோர் வரவை சிவபிரானுக்கறிவிக்க, அவர் தமது புத்திரனை அந்தப்புரத்தில் நிறுத்தி மீட்டுந் திருவோலக்க மண்டபத்திலெழுந்தருளினர். உடனே விண்டுவாதி தேவர்கள் முறைமையாகப் பணிந்தெழுந்தார்கள் பின்னர் இந்திரனையன் பிரமனமுகத்தை நோக்கி உலகமாதாவாகிய பரமேஸ்வரி யீன்றருளிய குழந்தையை இங்ஙனம் வருவிக்கவேண்டுமென்று சொல்ல, அவ்வாறே பிரமன வரவழைத்தான். அப்போது அக்குழந்தையைச் சில தேவர்கள் பார்த்து இப்பங்கமுற்ற பிள்ளையைக் கொண்டுபோய் கடலிற் போடுங்களென்றுசொல்ல, அவர்களைப் பிறமன் விழிகளிலனற்பொறி பறக்கும்படியாகப் பார்த்துக் கோபித்தனன். அதற்குத் தேவர்களெல்லாம் ஒடுங்கி அச்சங்கொண்டார்கள். பின்னர் பிரமன் தனக்குள் நடுக்கங்கொண்டு இக்குழந்தை அந்தரியாமியாயிருக்கின்ற சர்வேஸ்வரனே! யென்று நிச்சயித்து, ஓ கிருபா மூர்த்தியே அநாதி நித்தராய், உலோகங்களையெல்லாம் உண்டாக்கவல்ல கருத்தாவாய் அடியேங்களுடைய பாவங்களனைத்தையு மொழித்து இடர்களைப் பொடிபடுத்தவல்ல இறையவராய், ஏகானேக சொரூபராய், மனோவாக்குகளுக்கு மெட்டாத வத்துவாயிருக்கின்ற தேவரீர், இவ்வாறு சிரமில்லாது இங்ஙனமவதரித்திருக்கின்ற காரணமென்ன? அவ்விரகசியத்தைக் கவலைக்கடலின் மூழ்கி மயக்கமுற்றிருக்கின்ற அடியேங்கட்கு வெளிப்படுத்தி தெளிவித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதனை [illegible]

கேட்டு பிரணவமந்திர சொரூபியாயிரா நின்ற விநாயகமூர்த்தியினுடைய மகிமையைச் சிறிதுமறியாதவராகி ஓ வாணிகேள்வனே! சரீரத்திற் குண்டான உறுப்புக்களில் பிரதான உறுப்பாயிருப்பதுசிரம். அச்சிரமில்லாமல் பிறந்த குழந்தைகள் எவ்வுலகத்திலேனும் பிழைத்ததுண்டோவென்றனர். அதைப் பிரமன் கேட்டவுடன் கோபித்து, நீர் எவ்விதத்தாற் றகாதவார்த்தைகளை மறைந்த தேவர்களைப் போலப் பேசினீரென்று அவர்வாயினை யடக்கி, ஓ துழாய்மௌலியே ஆணவமலத்திலழுந்திக் கிராதமபக்கத்தினையுடைய சிறியோர்களாகிய நம்மைப்போல உடம்பு நலிகள் கூடாதகாலத்தில அறியுந்தன்மையில்லாத அறிவினையுடையவர் இவர் எங்கும்பரிபூரணவறிவாம், அனைத்தையும் ஒருமிக்கவறியும் பெருமானுமாம். முன்னஞ்சிவபெருமானுடைய வில்லுக்கு நீர் நாணாயிருந்தகாலத்தில் இந்திரன் முதலிய தேவர்களெல்லாஞ் சிதலாய்வந்து அந்நாணை அறுத்தனர். அப்போது அந்நாணாயிருந்த நீர் உம்முடையசிரம் அறுபட இறந்துபோனீரே

போலவும், உலகத்திற் றலைபிறந்தவைகள் உயிர்தரித்துவாழார் எனபதுபோலவும சகல லோகங்களையுந் தோற்றுவித்தழிக்க ஏசு சுயம்பிரகாச மூர்த்தியினைச் சொல்லப்படுமோ? பார்த்த வுலகத்தையுந்தமது இரண்டு பாதங்களினாற்கொண்டு சகலதத்துவங்களும் பொருந்தத்தோற்றுவித்து, உயிர்களைந்து அஞ்ஞானவிருளைப் போக்கு நிமித்தங் கனுவாங்களைக்கொடுத்து இட்டித்து உயிர்தோறும் உள்ளுக்குள்ளே அந்தரியாமியாயிருந்து அறிவு விளங்கவைத்துத் தாயினைப்போலவளர்த்து வருங்கபாபரமூர்த்தியினுடைய திருவுருவில் ஒருருவுமில்லாவிடில் அவர்க்கென்னகுறை? உருவம் வேண்டுமென்றும், வேண்டாமென்றும் வருகின்ற இரண்டு ஊழும் இவர்க்கில்லை. தம்மை அணுகினோர்க்குச் சகல அரிட்டங்களையும் போக்கவல்ல இவரியல்பைத் தேவர்களுமறியார்கள். அத்தேவர்களெல்லாந் தொழத் தலைமைபெற்றிருக்கின்ற நீருமறிந்திலீர் ஆசானுடைய அருமையை அபக்குவர்களறிவார்களோ வென்றுசொல்லினன். அவையனைத்தையுஞ் சர்வஞ்ஞமூர்த்தியாகிய விநாயகக்கடவுளானவர் செவியில்லாமலே கேட்டுச் சந்தோஷித்து, வாயில்லாமலே இதனைவிளம்புவதாயினர்.

ஓ இரணியகருப்பனே! பூர்வத்தில் யாம் சிருஷ்டித்தொழிலை உனக்குத்தந்தபோது ஓர் சலப்பிரவாகத்தில் உன்னால்யாம் எவ்வாறு காணப்பட்டோமோ அவ்வாறே இப்போது ஈஸ்வரியினிடத்தில் உன்னாற்காணப்பட்டோம். ஆனால் சிரமில்லாமற் காணப்பட்டதற்குக் காரணம் யாதெனில், அதனையுஞ்சொல்லுவோங்கேள். எப்போதுங்

தீமைகளை விளைவித்துவருகின்ற சிந்தூரனைக்கொல்லவும், உங்கட்கு அவன் செய்துவருகின்ற அரிட்டங்களை நீக்கவும், வேதாகமநெறிகளை விருத்தியாக்கவும் உமாதேவிக்குப் பணிபுரியவும் இசமனதுவரத்தின் கீர்த்திபொய்க்காதிருக்கவும் பால் திணையாதிகளின்றி இங்குத்தோன்றினம். என்று விநாயகமூர்த்தி திருவாய்மலர்தருளலும், அதனைப் பிரகஸ்பதிதேவர்கேட்டு சுவாமி! தேவரீர் திரிலோகங்களையும் காத்தருளவேண்டி அவதரித்ததாயின் தேவரீருடைய திவ்யசொரூபத்தை யாவருந் தரிசித்துய்யுமாய்க்காட்டி, அடியேங்கள் மனதிலிருக்கின்ற மயக்கத்தை நீக்கி மகிழ்ச்சியைவிளைவித்தருளவேண்டுமென்றனர், அதற்கு விநாயகமூர்த்தி சந்தோஷித்து, ஓ தேவகுருவே! முன்பு மயேச்சுரனென்னுமரசன் உன்னை மிகுந்த பக்தியுடனே பணிந்தபோது நீ அவன் தலைக்குக்கொடுத்தவரத்தினால் பின்பு அவன் கஜமுகாசூரனுகைப்பிறந்து, சிவபிரானுடைய சூலாயுதத்தினாலறுபட்டுச் சாரூபபதவியைப் பெற்றிருக்கின்றனன். அவன் சிரமானது அக்கடவுளாலயத்தோர்பால் வைக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும், அஃது நீண்ட துதிக்கையினோடு மிக்க அழகாயிருக்கின்றது நமது திருமேனியைப்பார்த்து இது என்னவென்று உங்கள் மனதில் எண்ணுகின்ற எண்ணங்கசொல்லத் தீருவதற்கு, அந்தச் சிரத்தை நமது சரீரத்தில் கலக்கச்செய்வதேகருமம். அதற்குமிக்கதுவேறொன்றுமில்லையென்றனர். அதை பிரகஸ்பதிதேவர் கேட்டு, ஓ திரிகாலங்களையுமறியவல்ல கடவுளே! தெளிந்த அறிவினையுடைய மயேச்சுர ராஜன்பொருட்டு அடியேன் கூறியவார்த்தையானது இங்குயாவருமறியுமாறு தேவரீராற் திருவாய்மலர்ந்தருளுவதாயதே! விஸ்வரூபியாயும், விஸ்வேசுரராயும், பத்தர்களுடைய விடர்களைநீக்கவல்ல பரம்பொருளாயுமிருக்கின்ற தேவரீருடைய சுயம்பிரகாசசொரூபத்தை அடியேன் காணும்படியான அறிவில்லாதவனாயினேன். என்று இவ்வாறு பலமுறைமிகுந்த உருக்கத்தோடுந் துதிசெய்துக்கொண்டிருந்தனர். அச்சமயத்தில் நாரதமுனிவர் விநாயகமூர்த்தியைப் பணிந்தெழுந்து ஓ சிற்பரானந்தமூர்த்தியே, நித்தியானந்த நிரூப நின்மல, நிரந்தா, நிராகார, நிஷ்கர்ம, நிர்ச்சங்க நிர்விகார, நிர்க்குண, நிஷ்கிரிய, நிர்விகற்ப, நிரஞ்சன, நிராலம்ப, நிரதிசயானந்தமுதலிய அளவற்ற குணாதிசயங்களைவாய்ந்த தேவரீர் இவ்வுலகமனைத்தினையும் யானைமுகங்கொண்டு காத்தருளும் பொருட்டுத் திருவுளஞ்செய்த மிகுந்த கிருபையோடும் உமாதேவியிடமாக அவதரித்தது மெய்யேயாகும். ஆயினுந்தேவரீர் சிரமானது இடையிலொழிந்ததாகக் காணப்பட்டிருக்கின்றமையால் அஃது யாவராலெ

ழிக்கப்பட்டதோ அதனைத் திருவாய் மலர்ந்து, அடியேங்கட்குண்டா கிய சந்தேகத்தினைத் தெளிவித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்த னர். அதற்கு விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து, ஓ தேவமுனியே! நாம் பரமேஸ்வரிவயிற்றிற் சூலாயிருந்த எட்டாந்திங்களில், முன்னம் பிரகஸ்பதி தேவன், மயேசுரராஜன் வழியிற் சென்றபோது உனக்கு வந்தனை செய்யவில்லையென்று கொடுத்தசாபமானது சரியாதற் பொருட்டும் நமது சரீரத்தினைவிட்டு நீங்கிய சிரமானது விழுந்தவிடத்தி லிருக்கின்ற சிலைகளனைத்தும் நமது சொரூபத்தினை யடையும்பொருட்டும், அவைகளை யெடுத்துப்பூசித்துவருகின்ற ஆன்மாக்களுக்கு வேண்டியவரங்களைக் கொடுத்தற்பொருட்டும், மனிதர்-நாகர்-தேவர்-முதலியோரால் அழிவுபெறாத வலியினைவாய்ந்த சிந்தூரனைச் சங்கரித் தற்பொருட்டும் யாமயானை வதனத்தை யடைந்தபொருட்டுந் திருவுளங்கொண்டு; இந்த மகாதிவ்ய சரீரத்திலிருந்த நமதுசிரமானது நீங்குமாறுயாம கருவாகிவளர்கின்ற சேதியைச் சிந்தூரனுக்கு ஆகாய வாக்கினாலறிவித்தனம அவன் உடனே தனது உருவத்தை மறைத்து மாயரூபங்கொண்டுவந்து ஈஸ்வரியினுதரத்துட்புகுந்து கருவா யிருந்த சிரத்தை யறுத்துக்கொண்டு சென்றனன். இப்போது யான் கசமுகத்தைத்தரித்துக்கொண்டு அச்சிந்தூரனைச் சங்காரஞ் செய் தருளுவமென்று திருவாய்மலர்ந்தனர்.

அவை யனைத்தையும் நாரதமுனிவர் கேட்டு மிகுந்த உவகை யோடுமீட்டும் பணிந்தெழுந்து சுவாமீ! அந்தயானையின் சிரமானது அடியேங்கள் சிரத்திலுற ஏந்தத்தக்கதன்று, அதைக்கொண்டுவந்து தேவரீர் திருமேனியிற் சேர்க்கத்தக்க வல்லபமும் அடியேங்கட் கில்லை. ஆக்கல்-காத்தல்-அழித்தல் என்னு முத்தொழிலுக்கு முதன் மையாயிருக்கின்ற தேவரீரே அதனைவரச்செய்து தரித்தருளவேண்டு மென்று சொல்லினர் அச்சொல நிறைவேற்றுவதற்கு விநாயகமூர்த்தியானவர் மயேசுரனென்கிற யானையின் சிரசையாவருங்கண்டு தரி சிக்கும்படியாக வரச்செய்து தமது திருமேனியிற் சேர்த்துக் கொண்டு மகரகுண்டலம் கிரீடம் முத்துமாலை பொற்றொடிமுதலிய ஆப ணங்களோடு நான்கு புயங்களும் மூன்றுவிழிகளும் விளங்கும்படி இடப்பாகத்திற் சித்தியும் வலப்பாகத்தில் புத்தியுமாகத் தரிசனந் தந்தனர். இவ்வாறு தரிசனந்தந்தருளிய விநாயகமூர்த்தியைத் தே வர்கள் முதலியயாவருங்கண்டு பிணிமுழுவதுமொழிந்து பேரின்பக் கடலி லாழ்ந்தார்கள்.

மீட்டும் பிரமனாதிதேவர்களு முனிவர்களும் விநாயகமூர்த்தியி னுடைய திருவடிகளில் முறைமையோடு தாழ்ந்தெழுந்து இருகரங்க ளையுஞ் சிரமேற்கூப்பிநின்று, பரப்பிரம சொரூபமாக விளங்குங் கர்த்

தனேபோற்றி, திரிமூர்த்திகள்முதலிய சகலருக்கும் மூலகாரணக் கடவுளாக விருக்கின்ற பரம்பொருளேபோற்றி. ஞானசத்தி கிரியா சத்தி சொரூபமாய் அகிலாண்டமெல்லா மதிட்டித்து விளங்கும் சாக்ஷாத் சித்திபுத்திகளிருமருங்கினும் பொருந்தவைத்து சராசரப் பிரபஞ்சங்கள் விருத்தியடையச் செய்தருளும் தயாநிதியேபோற்றி. யானெனது என்னும ஆங்காரச்செருக்கிற்பட்டு, உலகத்தைவாட்டி வரும் அசுரர்களைச் சங்கரிக்கவல்ல தேவ தேவவோத்தமனேபோற்றி, எம்மையொத்தவழித் தொண்டர்கட்கு நாதனுகவிருந்து தடுத்தாண்டு ரட்சிக்கும பக்தவத்சலனேபோற்றி, சோமசூரியாக்கினியைத் திரிநேத்திரங்களாகக் கொண்டிருக்கும ஆதிதேவனேபோற்றி, பிறப்பிலியாய்ச் சலனமற்றி எக்காலத்தும விளங்கும் பெருமையினை வாய்ந்ததாணுவேபோற்றி. எல்லாப் பொருள்கட்கும் முதன்மையாகிய பொருள் யாதோ அதற்கதேப் பொருளேபோற்றி. எறும்புமுதல யானையீறுகச் சொல்லும எண்பத்து நான்குலட்சஞ் சீவபேதங்களிடத்தும அனுன்மாவாகப்பொருந்தி ஆட்டியூட்டியுறக்கும, சகலலோகநாயகனே போற்றி வேத ஆகமமுதலிய சாத்திரங்களின் முடிவில் நின்று நிருத்தச்செய்யும் அண்ணலேபோற்றி. உலகங்களில் வாசஞ்செய்யும பிராணிகள் எத்தகையராயினும் அவ்வவர்கள் வழிபடும அபீஷ்டத தெய்வங்களாக விளங்கி அவர்கள் மனோபீஷ்டங்களைக் கடாட்சித்தருளுய காரணவஸ்துவேபோற்றி. மெய்ப்பத்தினுல தேவரீரை ஆராதித்து தெரிசிக்கப்பெற்ற புண்ணியவான்களுக்கு இம்மையில் போகபாக்கியங்களை யனுபவிக்கச்செய்து மறுமையில் மோட்சசாபிராசசியத்தையுந் தயைசெய்தருளும் அடிகளேபோற்றி. வேதாகமபுராணங்களை யுண்டுபண்ணி அவற்றினை அன்புடன் பதக்கிரமமாய் பாராயணஞ் செய்துவரும் மேன்மை பெற்றவர்களுக்கு மேலானபதவிகளைத் தருதியாக அனுக்கிரகஞ்செய்துவருஞ் சர்வக்ஞனேபோற்றி. முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேலாக விளங்காநிற்குந்தற்பர மூர்த்தியேபோற்றி.

என்று இவ்வாறு அனந்தமுறை ஒருமைப்பட்டமனதோடு தோத்திரஞ்செய்து, ஓ சகலசீவராசிகளும பிழைக்கும்படி எழுந்தருளியநாதனே! தேவரீர் கஜானனனெனுந் திருநாமத்தினைக் கொள்ளல்வேண்டும், மனிதர்கள் தேவர்கள் முதலியோரெல்லாம் அவ்வவர்கள் செய்யுஞ்சற்கருமங்கள் தோறும் தேவரீருக்கு வழிபாடுசெய்ய அவ்வவ்வழிபாடுகளில் சுவாமிகளெழுந்தருளிக் கிருபைபுரியவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்போது சிவபிரானும் உமாதேவியும் அக்கணத்தினின்று நீங்கிச் சந்தோஷமடைந்து

சித்தியைக் கொடுப்பவரும் முத்தியைக் கொடுப்பவரும் இவ்விக்கின ராசர், விக்கினநாயகரென்று செல்வி ஒப்புதற்கரிய தமது குமாரருடைய மேன்மையான குணங்களைப்பார்த்து உவகைபூத்தார்கள். பின்னர் விநாயகமூர்த்தியானவர் தமதழகினால் உலகமனைத்தும் விகடரென்னுந் திருநாமத்தாற்றுதிக்கப் பட்டனர். உடனே உமாதேவியார் அவருக்கு நீராஞ்சன முதலியவைகளைச் சுழற்றிப் பணிசெய்துவரச், சிவபிரான் யாவரும் வியப்படையும்படி அளவற்ற மகிழ்வோடு பூசனைசெய்தனர். இந்திரன், பிரமன் விண்டு முதலிய தேவர்களும் முனிவர்களும் விநாயக மூர்த்தியினிடத்தில் அளவற்றவரங்களைப் பெற்றுத் தத்தமிடங்களிற் போய்ச் சேர்ந்தார்கள்.

சவுனகாதிமுனிவர்களே! இவ்வாறு விநாயமூர்த்தி திருவவதாரஞ் செய்தருளிய தினம் ஆவணிமாதம் பூருவபட்ட சதுர்த்தியாதலால் அந்தச் சதுர்த்தி தினத்தில் விநாயகரைப் பூசைசெய்வோர்கள் அடையும் பயனையார் அளவிட்டுச் சொல்ல வல்லவர்கள். மேலும் அந்த ஆவணிமாதச சதுர்த்தியானது உலகமனைத்தும் பூசிக்கப்பெற்ற இறைவராகிய சிவபிரானை பூசித்த நாள் ஆதலாலும், விநாயகப்பெருமான் திருவவதாரஞ் செய்த மேன்மையையுடையதாதலும், அஃது வருடந்தோறும் அவரைப் பூசிப்பதற்கு முக்கியமாக விருக்கின்றது. யாவரும் விகடரென்று சொல்லத்தக்க பேரழகினை வாய்ந்த கஜானனவிநாயகர் இவ்விருக்க, நாரதமுனிவர் பூலோகத்திலிருக்கின்ற சிந்தூரனிடத்திற் சென்று அவனால் வந்தனம் முதலிய வழிபாடுகளைச் செய்யப்பெற்று அவன்தந்த ஆசனத்திலிருந்து, உன்னையொத்த பராக்கிரமசாலிகள் மூவுலகத்தினுமில்லை யென்று சொல்லினர். அதைச் சிந்தூரன் கேட்டு சந்தோஷித்து நாரதமுனிவரது மலர்ந்த முகத்தை நோக்கி சுவாமி! இதுகாறுமில்லாததாயும், அருமையானதாயும், அற்புதமுற்றதாயுமிருக்கின்ற சரிதம்யாதேனுமுண்டாயின் அதனை அடியேற்குச் சொல்லியருள வேண்டுமென்றனன் அதற்கு நாரதமுனிவர் மகிழ்ந்து, ஓ சமஸ்த வுலகினையும் வென்றதீரனே! நாம் எவ்விடங்களினுஞ் சுபாவமாய்த் திரிகின்றோம். அவ்வாறே உம்மிடத்திற்கும் வந்தனம். உன்னால் நமக்குவேண்டுவது யாதொன்றுமில்லை. இதுகாறுமில்லாத திவ்வியமான சரித்திரமொன்றுண்டு அதனைச் சொல்லுவோம் கேட்பாயாக கயிலாயத்தில் உமாதேவியாருடைய வயிற்றில் சிரமில்லாமல் ஒரு திவ்வியமான குழந்தையுற்பவித்தது. அதற்குமுன் சிவபிரான் யானையின் சிரமொன்றை உருவகித்து ஓர்பக்கல் வைத்திருந்தனர், அச்சிரத்தை அக்குழந்தையானது தனதுதாய் துயரம் நீங்குமாறு தானேவரும்படி செய்து சிரத்திற்றரித்துக்கொண்டது மேலும் அக்குழந்தையோ மிக்க வலிமை

னையுடையது உயர்ந்த அறிவினையுடையது அக்குழந்தைக்கு நிகர் யாரையுங்காணோம் அஃது முதலிற் * கவந்தமாய்ப் பிறந்தது யாது காரணத்தினாலோ அறிகின்றிலம். பின்னர் அதுவே யானைமுகத்தினை தரித்துக்கொண்டிருக்கின்றதென்றனர். இவையனைத்தையுஞ் சிந்தூரன் கேட்டவுடன் அயர்ந்து மூர்ச்சையாகிப் பூமியில் விழுந்து; மீட்டுந் தெளிந்தெழுந்து, உள்ளந்தளர்வெய்தித் துக்கித்து, முன்னம் நமக்கு ஆகாசவாக்கொன்று உண்டாயிருந்தபடி அவனே நமக்குப் பகைவனென்று நிச்சயித்து, ஓ மகதிமுனியே! † கஜானன முகத்தையுடைய மைந்தனை எவ்விதத்திலேனும் யான் கொல்லவேண்டும் கொல்லாது விடுத்தல் அவன் என்னைக்கொல்லுவான். இது சத்தியம். இத்தினமே அவனிருக்குமிடத்திற் சென்று அவன் தந்தையாகிய பரமசிவன் அவனை எவ்விதத்திற் பாதுகாத்து வைத்திருந்தாலும், பற்றி இழுத்துக்கொண்டு வந்து கொன்று பத்துத்திசைகளினும் எனது பராக்கிரமத்தை நாட்டிவைப்பேனென்று சொல்லினன்.

அதனை நாரதமுனிவர்கேட்டு முகமலர்ச்சி கொள்ளத் தானும் முகமலர்ச்சிகொண்டு மிகுந்த ஊக்கத்தோடும் யுத்தத்திற்கெழுந்தனன். அப்போது நாரதமுனிவர் அவனை நோக்கி ஓ புனிதனே! நாம் உனக்கு இதஞ்சொல்ல இங்கு வந்தனம். நீயோ பிரமதேவனுடைய முகத்திற் பிறந்து அதனால் அளவற்ற மேலான வரங்களைப் பெற்று இதுகாறும் ஓர் வருத்தமின்றி வாழ்ந்திருக்கின்றனை. மேலும் அப்பிரமதேவனும் உன்னைக்கண்டவுடன் அஞ்சிப் பதுங்கும் படியாகச் செய்தனை. இத்தன்மைத்தான வல்லபத்தையுடைய உனக்கு நாமுறைப்பதென்ன விருக்கின்றதென்று நயங்கூறி அவ்விடத்தினின்று மகன்று கைலாயவரையை யடைந்து உமாதேவியாரெதிரில் நின்று, ஓ சகத்ரட்சகியே? தேவரீர் குமாரரைக் கொல்லும்படியாகச் சிந்தூரனென்பவன் இதோ வந்துவிட்டனனென்று சொல்லிப் போயினர்.

இவ்வாறு நாரதமுனிவர்சொல்லி அகல்வதன் முன்னர் அழலைக் சொரியும்படியான விழிகளையுடைய சிந்தூரனானவன் கயிலைக்குவந்து விண்ணுலகம் மண்ணுலகம் எல்லாம் நடுங்கும்படி ஊழிக்காலத்தினுண்டாகின்ற இடியேற்றினையொப்பக் கர்ச்சித்து, குரூரமான சொற்களைக் கொண்டு எனக்குப் பகைவனாக இங்கு உதித்திருக்கின்றவன் எவனோ அவன் என்னெதிரில் வரக்கடவன்? யானைமுகத்தோ

* கவந்தம்-தலையற்ற உடம்பு,

† கஜானனர் (கஜம்-யானை, ஆனனம்-முகம்) யானைமுகமுடையவர்.

டு கூடியிருக்கின்ற அவனைக்கொல்லுவதற்கு யான் ராஜகண்டீரவத்தைப் போல வந்திருக்கின்றேன். விண்டு பிரமன் முதலிய தேவர்களில் ஒருவரேனும் என்னெதிரில் நின்று எதிர்த்தவர்களில்லை சராசரங்களை யெல்லாம் ஓர் நிமைப்போதில் சாம்பராக்கி யிருக்கின்றேனென்று சொல்லி ஆர்ப்பரித்தனன். இவ்வாறு ஆர்ப்பரித்து அறைகூவியிருக்கின்ற சிந்தூரன் முன்னே யானைமுகத்தினையுடைய விநாயகமூர்த்தி யெழுந்தருளி, அடா துட்டனே! உன்னைக்கொல்லத்தக்க மகா பராக்கிரமத்தியுடைய வீரன்யாமே? நம்மை விண்டு பிரமனாதியரைப் போல நினையற்க நம்மையெதிர்த்த தேவர்கள், அவுணர்கள், அரக்கர்கள் முதலாயினோரை யெல்லாம் அப்போதைக்கப்போது வந்து சங்கரித்திருக்கின்றனம். வருணம் நான்கினையுங் காய்ந்தனன் நதிகள் முதலானவைகளை யொழித்தனம். மலைகள் முதலானவைகளை யழித்தனம். பிரபஞ்சங்களை யெல்லாம் ஆக்கலும், அழித்தலும் நமது செய்கையே யல்லாமல் வேறாய் நினையற்க உன்னால் மாய்க்கக்கூடாத சகத்தினையெல்லாம் யாம் மாய்ப்போம். உன்னால் மாய்ந்திருக்கின்ற சகத்தையெல்லாம் உனது கண்ணெதிரிற்றானே சிருட்டிப்போம். தேவர்கள் முதலாயினோர்க்கும் மறலியைப்போன்ற நின்னையும் அவவாறே அழித்துவிடுவேம். அதை இப்போது நீ காணக்கடவையென்றனர்.

அவையனைத்தையும் பராக்கிரமத்திற் சிறந்த சிந்தூரன் கேட்டு, இவனை நமக்குப்பகைவனென்று தன் மனதில் நிச்சயித்தும் அவரைச் சிறுகுழந்தை யென்றே அவமதித்து, ஓ பிள்ளாய்! நீ யேன் வீணிலென்னைப் பகைத்துப் பாராவேண்டும்? ஐயோ! உன்னைப் பார்த்தால் எனக்குக் கொல்லச் சம்மதமில்லை, எங்கு மில்லாத பேரழகைப் படைத்திருக்கின்றனை. நீயுன் தாயிடத்திற் சென்று முலைப்பாலுண்டு அவள் கண்களிக்கும்படியாக முன்றிலில் விளையாடச் செல்லுகவென்று. இழிச்சொல் கூறி நகைத்தனன். அதை விநாயகமூர்த்தி கேட்டு அடாசுத்த மூடசிரோமணியே! கனத்த இருட்கூட்டங்களை ஓர் சிறிய திரியினை வாய்ந்த தீபங்கொல்லும். அண்டமுகட்டை யுறுஞ்சும்படியான பெரிய பர்வதங்களை ஓர் சிற்றுளிபிளக்கும். மும்மதங்களையும் பொழிகின்ற யானைக் குழாங்களை ஓர் சிறிய அங்குசமடக்கும். நம்மைச் சிறுகுழந்தையென்றவமதித்துக்கூறினை. யாம்யமனைப்போலவந்து உன்னைக் கொல்லத்தக்க காலனென்றறிந்திலைபோலும், என்று சொல்லி உடனே தமது சிரமானது அண்டகோளகையை யெட்டும்படியாக நீண்டு, பெரிய பர்வதங்களுக்குச் சமானமான புயங்களோடு, சிரம், விழி செவி, முகம், கரம், பாதமுதலிய உறுப்பு

களனைத்தும் ஆயிரமாயிரமாக விளங்க விஸ்வரூபங்கொண்டு, சொர்க்காதி உலகங்களனைத்தும் ஓர் நொடிப்போதில் தமக்குள்ளே யொடுக்கினர். அவ்வற்புதத்தைச் சிந்தூரன் பார்த்து, சிங்கத்தைக்கண்டயானைபோலவும், பயந்து நடுங்கினன். அதனைச் சத்துச் சித்தானந்த சொரூபராய் விளங்கிய விநாயகக் கடவுள் நோக்கி, ஓ பேதாய்! சகல லோகங்களும் நமக்குள் ஒடுங்கியதைக் கண்டனை. மீட்டும் அவைகளை வெளிப்படுத்துவதுங் காண்பாயாக வென்று திருவாய் மலர்ந்து தமது முகத்தில் அந்தணரையும், புசத்தில் அரசரையும், முழந்தாளில வணிகரையும், பாதத்தில் சூத்திரரையும். விழியிற் சூரியனையும், இதயத்தில் சந்திரனையும், நாசியில் அக்கினியையும், உந்தியில் ஆகாயத்தையும், முடியில் விண்ணுலகையும், அடியில் மண்ணுலகையும்: செவியில் திக்குகளையும ஏனைய திருவுருவங்களில் கடல்கள் மலைகள் நதிகள் முதலிய யாவுமுண்டாக்கி; இவையனைத்தையுங் கண்டு நடுக்க முற்றிருக்கின்ற சிந்தூரனைப பார்த்து நகைத்து, முன்னர் நம்மிடத்திலொடுங்கிய உலகங்களை யெல்லாம மீட்டும் நாமே உண்டாக்கி, இதைக் கண்டனை யல்லவாவென்று திருவாய் மலர்ந்து, சரேலென்று நீண்ட துதிக்கரத்தில் அசிந்துரனை வாரியெடுத்துக் குழைத்துத் தமது மத்தகத்தில மகிழ்வோடு பூசிக்கொண்டான்.

இப்பால் திசைகள்தோறுஞ் சென்று கமழும்படியான மரிமளத்தினை வாய்ந்த சிந்தூரனுடைய சரீரமானது ஐங்கரக்கடவுளாகிய விநாயகமூர்த்தியினது மத்தகத்திற்குச் சாந்தாகியது. அவனுயிரானது அக்கடவுளுடைய திருவடிகளை யடைந்து பேரானந்த மெய்தியது. உடனே ஆகாயத்தில் பஞ்சகருவிகளு முழங்கின. தேவர்கள் புட்பவருடஞ் சொரிந்தார்கள் கந்தருவர்கானம் பாடினார்கள். முனிவர்கள் வேதமோதினார்கள். ஞானவித்தகராகிய விநாயகக்கடவுள் பழையபடி குழந்தை யுருவாயமர்ந்தருளினர். உலகமனைத்தும் பேரானந்த வாரியிற்றிளைத்தன. உருத்திரன் விண்டு விரமனாதிய தேவர்களெல்லாம் அவ்விடத்தில் வந்து மிகுந்த பக்தியோடு விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளிற் பூசித்தார்கள். கொன்றைப்பூமாலையினையந்த சிவபிரான் அத்தேவர்கள் வேண்டுதலின் பேரில் கஜானன மூர்த்தியினையாவரினும் மேன்பெற்றிருக்கும்படி வைத்தனர். பின்னர் பிரதேவன் தனது காத்திலிருக்கின்ற கமண்டல தீர்த்தத்தால் விநாயக மூர்த்திக்குப் பாத்திய முதலியவைகளைச் செய்து பூசித்து, காத்திற் செந்தாமரைப் பூவினைக்கொடுத்தனன். அவ்வாறே வருணன் பூசித்து மிகுந்த வல்லபத்தையுடைய பாசத்தைக் கொடுத்தனன். தேவேந்திரனனவன் தனது கற்பகவனத்திற் பூத்த செந்தாமரைமலரி

றுலுஞ் செங்குவளை மலரினாலுங் கட்டப்பட்டிருக்கின்ற பூமாலையை த்தரித்து பூசித்து நிறுலத கிதவாக்கியங்களைச் செய்வித்து மகிழ்ந்த னன். சிவபிரான் சூலாயுதத்தைக் கொடுத்தருளினர். மற்றுமுள்ள வர்களனைவரும் வேறுவேறு பூசித்து அவ்வவர்கள் கையிலகப்பட்ட பொருள்களைக் கொடுத்துத நிக்க தண்டஞ் செய்தார்கள். இவ்வா று யாவராலும் பூசிக்கப்பெறறு கஜானன மூர்த்தியானவர் பின்னர் அங்கிருந்தபடி மறைந்தருளினர்.

இச்சரிததிரத்தைக் கருப்பமுற்ற ஸ்திரீகள் ஈனமாட்டாது வா தனை படுங்காலத்தில் அவர்கட்குச சொன்னால் உடனே வருத்த மனைத்தும் நீங்கிப் பிள்ளையைப் பெறுவார்கள், அக்குழந்தையும் நற் குண நற்செயல்களோடு தளர்வின்றிவளரும், யாவரேனும் யாத்தி ரை செய்யுங் காலத்தில் இதனைச் சொல்லிக்கொண்டு சென்றால் சென்ற விடத்தில் செயம்பெறுவார்கள். அரசர் முதலாயினோரை வெல்லவேண்டி அவர்கள் சபையிற் சொல்லுவோன்; இதனைப் பத்தி யோடு துதிசெய்து சொல்லுவானாயின் அவன் யாராலும தோல்வியு றாது வெற்றி பெற்றுமீளுவன்.

கெஜானன விநாயகர் திருவவதாரப் படலம்.

முற்றிற்று

நாற்காவது

விக்கின விநாயகர்

## திருவவதாரப் படலம்.

கருவினை மயக்கந் தீர்க்குங் கசானன ரவதா ரத்தோ
டருள்விளை யாடல் சொற்றா மருந்தவ வியாத வையம்
பொருளிடர் முழுதுந் தீர்க்கும் விக்கின ராச னென்னுந்
திருவவ தாரங் கேளா னெதிசை முகன் சொல் வானால்.

மகா மகத்வ முற்ற நைமி சாரண்ய வாசிகளாகிய சவுனகாதி முனிவர்களே! விநாயக மூர்த்தி கஜானன திருவவதாரங் கொண்டு பிரமதேவன் கொட்டாவியினின்று முதித்த சிந்தூரனைக்கொன்று, தேவர்கள் முதலாயினோரைக் காத்தருளிய திருவிளையாடலைச் சொ ன்னோம். இப்பால் விக்கினராசர் திருவவதாரங்கொண்டு செய்தரு ளிய திருவிளையாடலைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

வெள்ளியங்கிரிக்குத் தலைவராகிய சிவபெருமான் தமது திருமேனிமுழுவதுந் திருவெண்ணீற்றினை யணிந்திருப்பதுபோல எக்காலத்திலுஞ் சத்தமேகங்களுக்கும் இருப்பிடமாய், அளவிடற்கரிய பனிப்படலங்களால் எங்கும் மூடப்பட்டிருக்கின்றது இமயமலை. அம்மலையிற்றவத்தற்கட் கெல்லாந் திலதம்போலச் சகலவிதங்களினுங் கீர்த்திபெற்ற வுள்ளத்தோடு தத்துவமனைத்தினையுமுணர்ந்து, அவத்தைகளினின்று நீங்கிய மெய்யறிவினால் வேதாகமங்களை யபேட்சித்து வருகின்ற பக்குவர்கட்கு அவைகளைப்போதித்து, அவர்களை அவக்கடலினின்று மெடுத்துப்பாதுகாக்க வல்லவராய், * அகப்பற்றுப புறப்பற்றென்னுமிரண்டினையுந் துறந்தவராய், பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மாநுடம் † என்கின்ற ஐவகை வேள்வினையும் பிரதிதினமியற்றும் இயல்பராய், சிவபெருமானுடைய திருவடிகளையன்றி வேறொன்றினைச் சிந்தைசெய்யாதவராய், சாபானுக்கிரக சாமார்த்தியத்தையுடையவராய் விளங்கிய சவுபரியென்னுமொரு முனிபுங்கவரிருந்தார், அவர்குற்றமற்ற கற்பினும வனப்பினுந்தனக்கொருவர் நிகரில்லாத பெருமையினை வாய்ந்த மனோமையையென்னு மனைவிபணிசெய்ய வாழ்ந்திருக்கும் நாளையில், ஓர் நாள் அம்முனிபுங்கவர் நதியில் ஸ்நானஞ் செய்யச்சென்றனர். அவர்மனைவியானவள் ஆசிரமத்திற் பணிசெய்திருந்தனள். அச்சமயத்தில் கருணை நாயகராகிய விநாயகக்கடவுளுடைய திருவடிகட் கிடைவிடாது பூசனைசெய்து வருபவனும், ஆகாயமார்க்கத்திற் சஞ்சரித்துக்கொண்டிருந்த கிரவுஞ்சனென்னும் ஓர் கந்தருவாசன்; அவ்விருடி பத்தினியைப்பார்த்தனன். உடனே சூத்திரக்கயிற்று வீழ்ந்தாற்போல ஆகாயத்தினின்று மிறங்கி அவ்வாசிரமத்தில் வந்து, தன்னை முடிக்கிய விரகத்தினால் அவ்விருடிபத்தினியை முன்னதாயொன்றுங் கேளாது, காம்பற்றினன். இவ்வாறு பற்றலும் அவ்விருடிபத்தினியானவள் பூனைவாயிற்பட்ட கிளியைப்

* அகப்பற்று, புறப்பற்று என்பன: உயிர்களுக்கு மாயையினுண்டாகிய தனு கரண புவன போகங்கள் நான்கினுள், தனு கரணங்களை யான் எனமதித்தலே அகப்பற்றெனவும் புவனபோகங்களை எனது என்று அபிமானத்திலே புறப்பற்றெனவுங் கூறுவ. இவற்றுள்: தனுவென்பது-தேகத்தை, கரணமென்றது - அந்தக்கரணம் புறக்கரணங்களை. புவனமென்றது - பூதாதிப்பிரபஞ்சத்தை. போகமென்றது சத்தாதிவிடயங்களை. அன்றியும் கரணங்கள் தனுவுக்கு அபேதமாயும், புவனங்கள் போகத்திற்கு அபேதமாயு நிற்கையால், தேகபோக மென்றிரண்டாகவுஞ் சொல்லப்படும்.

போல நடுநடுங்கி மனந்தளர்ந்து தனது கற்பின் வலியால் அவனை யானைமேலெழுஞ் சிங்கத்தைப்போலச்சீறி தனதுள்ளத்திற் கொதித்தெழுகின்ற கோபத்தினாலவனைப்பார்த்து, அடாபாவி! எனது பிராணநாயகரில்லாத சமயம்பார்த்து என்னைக்கைப்பற்றிக் கலவிக்கிழுக்கின்றனை. இனி என்கரத்தைவிடாமற் போவையெனில் உன்னை இந்நிமிடத்தில் நீறாக்கிவிடுவேனென்று சொல்லினள். அத்தருணத்தில் ஸ்நானஞ்செய்யச் சென்றிருந்தசவுபரி முனிவர்மீட்டும் ஆசிரமத்திற்குவந்து, தமது பத்தினியினுடைய கரத்தைக் கிரவுஞ்சன் பிடித்திழுப்பதைப்பார்த்து, கண்களில் அனற்பொறியெழும்பவும் இதழ்கள் துடிக்கவும் புருவங்கள் நெறியவுமாகக்கோபித்து அடா மூர்க்கனே! அபசாரஞ்செய்யாத இவளை நீ கரம்பற்றி இழுக்கவேண்டுங் காரணமென்ன? இவ்வாறு நிர்ஹேதுவாய் அவளது கரத்தைப் பற்றிய குற்றத்தினால் நீ இனி மண்பறித்து வளையிலொளிக்கின்ற மூஷிகமாகக்கடவதென்று சபித்தனர். உடனே அக்கந்தருவராசன் பயந்து சுவாமீ! அடியேன் கிரவுஞ்சனென்னுமரசன் யான் ஆகாயத்திற் செல்லுகின்றபோது இவரழகைக்கண்டு மோகித்துவந்து கரம்பற்றினேன். அதுவன்றியான்பாதகஞ் செய்ததிலேன். அடியேன் இவர் கரம்பற்றிய பிழையினைப்பொறுத்துத் தேவரீர் அடியேற்குக் கொடுத்த சாபத்தினை நீக்கியருளல்வேண்டும், அடியேன் தேவரீரைச்சரணமடைந்தேன். இனி அடியேற்குத் தேவரீரையன்றி வேறுதுணையில்லை என்று பிரார்த்தினன். அதற்கு விருப்பும் வெறுப்பு மற்றசவுபரி முனிவர் மனமிரங்கி ஓ கிரவுஞ்சனே! நெருப்பினுடைய சூடு குளிர்ந்தாலும் நீரினுடைய குளிர்ச்சி வெம்மையானாலும் நமது வாக்கு ஒருகாலத்தும் பொய்ப்பதில்லை. நீ தகாத காரியத்திற்குடம்பட்டனையாயினும் உடனே நம்மைச்சரணடைந்தனையாதலால் உனக்குயாம் கிருபையோடு சாபத்தீர்வு சொல்லுகின்றோம் கேள், திருமாலை இடபமாக ஊர்ந்தருளிய சிவபிரானுடைய குமாரராகிய விநாயகமூர்த்தியானவர் இன்னுஞ் சிலநாளில் பராசரமுனிவருடையகிரகத்தில் அவதரித்தருளுவர். அப்போது நீ அவருக்குவாகனமாகி, விண்டுவாதிதேவர்கட்குங் கிடைத்தற்கரிய பாக்கியத்தைப்பெற்று யாவரும்வந்து பணியும்படியான முதன்மையோடும் முத்தியையும் பெறுவை. போவென்று அனுக்கிரகஞ்செய்தருளினர். அப்பால் மேருகிரியைப்போல மற்றொரு மேருகிரி உண்டானதென்று சொல்லும்படியாக அக்கிரவுஞ்சன் ஒரு மூஷிகமாகி உலகமெங்குந் திரிந்துகொண்டிருந்தனன்.

---

இவற்றுள் வேதமோதல் பிரமயாகம். ஓமம் வளர்த்தல் தெய்வயாகம். பலியீதல் பூதயாகம். தருப்பணமுடித்தல் பிதிர்யாகம். இரப்போர்க்கு உணவுமுதலிய வீதலே மனுடயாகம்.

இவன் சரிதமிவ்வாறாக, இந்திரனெனுமவன் தனது சுவர்க்கலோகத்தில் அரசியற்றி வருகின்ற நாளையில், ஓர் நாள் நாரதமுனிவர் அவனிடத்திற்கு வருவதாயினர். அவர்வரவை இந்திரன் தூரத்தேயறிந்து, உடனே தனது சிம்மாதனத்தை விட்டிறங்கி அளவற்றதேவர்கள் தன்னைப் புடைசூழ்ந்துவர அவரை எதிர் கொண்டுபோயழைத்து வந்து ஓர் சிறந்த ஆதனத்திலிருக்கவைத்து மிக்க பேரன்பினோடுந் துதித்துப் பூசனை செய்தனன் அவன்செய்த பூசைக்குந் தோத்திரங்கட்கும் நாரதமுனிவர் மனமகிழ்ந்து, ஓ தேவராசனே! பூலோகத்தில் ஓர் புதுமையைக்கண்டு இங்குவந்தனம். அப்புதுமையைச் சொல்லுமிடத்து உனக்குந் தேவர்கட்கும் நன்மை பயப்பதாகவேயிருக்கும். அஃதியாதெனில் இமயகிரிக்கும் விந்தகிரிக்கும் மத்தியில் ஏமவதி யென்னும் ஒரு நகரமிருக்கின்றது அந்நகரத்திற்கரசன், அபினந்தனனென்னும் பெயரினையுடையவன், அவன் இப்போது ஓர்பெரியயாகத்தினைச் செய்யத் தொடங்கினன், அந்த யாகத்திற்கு உன்னை வரிக்காது உனது சொர்க்காதிபோகங்கள் தனக்குக்கிடைக்கவேண்டுமென்று குறித்திருக்கின்றனன். மேலும் அந்த யாகத்திற்கு இருதுக்கள் வந்திருக்கின்றார்கள் இந்நிமிடத்தில அவ்வரசனைச் செயிக்காமற் போவையெனில் அவன் செய்யத்தொடங்கிய யாகத்தின் முதனாளிற்றானே உனது பதவியை இழந்துபோவை. அதனால் உனக்குச் சகல இடர்களும் உண்டாகுமாதலால், விரைவில அதற்கேற்றபடி முயலக்கடவையென்று சொல்லி நாரதமுனிவர் எழுந்தருளிப்போயினர். பின்னர் இந்திரன் இதற்கென்செய்யவல்லோமென்னு மாலோசனையிற்றலைப்பட்டவனாகி, அவ்வவர்கள் செய்துவரும் பலகருமங்களிலும் முதலில் நமக்குஞ், சந்திரனுக்கும், பிரமதேவனுக்கும், அவிப்பாகங் கொடுக்க வேண்டுமென்று வேதத்திலும், சுருதியிலும், ஸ்மிருதியிலும், சவுதத்திலும், ஸ்மார்த்தத்திலும் விதித்திருக்க, இதுகாறும் அவ்வாறே யாவருங் கொடுத்துவர இப்போது அம்முறைமையினின்றுந் தப்பி யாகஞ்செய்துவருகின்ற அபினந்தன ராசனைச் சங்கரிக்கத்தக்கவன் உலக மனைத்தையுங்கலக்கி யழிக்கத்தக்க காலரூபியேயல்லாமல் வேறொருவரில்லையென்று தன்மனதில் நிச்சயஞ்செய்தனன். இவ்வாறு நிச்சயிக்குமுன் அக்காலரூபி யென்போன், அவ்விந்திரனுக்கெதிரில் வந்து நின்றான்.

அவனை இந்திரன் சிறக்கப்பார்த்து, ஓ காலரூபியே! இந்நிமிடத்தில் அளவற்ற ரூபங்களோடும் பூலோகத்திற் சென்று அபினந்தனராசனையழித்து அவன்செய்கின்ற யாகத்திற்கும், மற்றுமுள்ளோர்களாற்செய்து வருகின்றயாகங்கட்கும் பலவிக்கினங்களை நாடாத்தி

அழித்துவிடக்கடவை என்று சொல்லியனுப்பினன். உடனே காலரூபியானவன் தனது புருவங்களைநெரித்துக் கோபித்து, அனேகரூபங்களைக்கொண்டு பூவுலகத்திற்சென்று அபினந்தன ராசனுடைய யாகசாலையில் மிகுந்தகோரத்தினோடும் பிரவேசித்து, அவனையும் அவன் யாகத்திற்கு வந்திருக்கின்ற இருத்துக்களையும் நாசஞ் செய்து, மற்றையோரையெல்லாந் தன்னைத் தெண்டனிட்டோடும்படியாமுடுக்கி, அவிர்ப்பாகத்திற்குச் சேகரித்திருந்த பொருள்களையெல்லாம் அள்ளியுண்டு, ஓமகுண்டத்தை யிடித்துத் தள்ளி அதிற்புழுதிகளை நிறப்பிவித்து, யாகசாலை முழுமையுந்தூளாக்கி பலபண்டங்களையமைத்து வைத்திருந்த பாத்திரங்களை யெல்லாம் உடைத்தெறித்து, அவ்விடத்தினின்று நீங்கி, தீக்கூட்டங்கள் எழுந்து செல்லுவதுபோலத் திசைகள்தோறுஞ் சென்று ஆங்காங்கு செய்துவருகின்றயாகங்களை யெல்லாமழித்து, அந்தயாகசாலைகளையும் நாசமாக்கி எவ்விடங்களிலுந் துன்பங்களையே விளைத்துச் சிலரை உருவமாய்ச்சென்று தாக்கியும், சிலரை உருவமாய்ச்சென்று ஒழித்தும், ஓர்நொடிப்போதில் திசைமுழுவதுஞ்சுழன்றும் வேதாகமநெறிகளையெல்லாம் பேதிக்கச்செய்தும், இவ்விதமான விக்கினங்களை நாடோறுஞ்செய்துவந்தனன் இவ்வாறு காலரூபி செய்துவருகின்ற துன்பங்களினாலே அளவற்ற முனிவர்கள் ஓரிடத்தில் ஒன்றுகூடி, சகல சீவராசிகளையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லதயாபரமூர்த்தியைத் துதிசெய்வதானார்கள்.

எண்ணிலா வுயிர்களி னியைபுடங்கிய
நண்ணுநா யகவுயி ரளிற்று கன்மதி
னண்ணுசான் றாகிய வமல வெங்கள்பாற்
றிண்ணிய விக்கினந் தீர்த்தல் வேண்டுமே.

பல்வகைப் பூதமும் படைக்கும் பண்ணவ
நில்வகை யனைத்தையு நிறுத்து நிக்குண
கொல்வகை செய்தருள் கூடுங்கொற்றவ
புல்வகை விக்கினம் புரட்டல் வேண்டுமே.

அங்கமே யுபாங்கமென் றவற்றி னோடுறுந்
துங்கநான் மறைகளுஞ் சுவசமாகிய
வங்கண வடியரோமானி லுங்கிடப்
பொங்கிய விக்கினம் போக்கல் வேண்டுமே.

இவ்வாறு பலமுறை துதிசெய்து, எத்தகையோராலும் யாசிக்கப்படுமிறைவனே! சகலலோகங்களுங்கலக்கும்படியாக இடைவிடாது விக்கினங்களைச் செய்துவருகின்ற காலரூபியினால் அடியேங்கள் படு



3 கணேசர்.



4 உமைசதுர்த்திவிரதம்.

கடைக்கின்றனம். இனி அடியேங்களை அலைக்செய்துவருமவிக்கினங்களினின்றுமெடுத்துக் காத்தருளல்வேண்டும். அடியேங்கள் சக்தியற்றவர்களாய், ஆதாரமற்றவர்களாய், நித்திய நைமித்திய கருமங்களில் ஈனராய், இயல்பான ஒழுக்கங்களில் வேறுபட்டவர்களாய், மயக்கங்கொண்ட மனத்தினை யுடையவர்களாய், எல்லாப்போகங்களையுமிழந்து; தேவரீருடைய சரணாரவிந்தங்களில் அடைக்கலம் புகுந்தோம். ஓ சங்கரா! ஓ சயம்புவே! ஓ தற்பரா! வென்று பலமுறை பிரார்த்தித்தார்கள். அதற்கு விஸ்வரூபியாகியும் வியாபகராகியு மிருக்கின்ற விநாயகப்பெருமான் கிருபைகூர்ந்து அம்முனிவர்கட்கெதிரே அதிரிசியவடிவமாயெழுந்தருளி, ஓ தபோதனர்களே! உங்கள் மனதிலிருக்கும் வேதனைகளையும், பயங்களையும் ஒழிமின்கள். இனியானுங்கள் புந்துன்பஞ்செய்துவருகின்ற விக்கினனை அடக்கவும், வேதாகமநெறிகளைத் தப்பாது வளர்க்கவும், அடியார்களும் சாதுக்களும் வேண்டுவனவைகளை அருள்செய்யவும், மூவுலகங்களையுங்காத்து இரட்சிக்கவுமாகயாம் அளவற்ற தவங்களைச் செய்திருக்கின்ற வரேணிய ராசனுடைய கிருகத்தில் அவதரிக்கப்போகின்றனமென்று திருவாய்மலர்ந்தருளினர். அத்திருவாக்கினை எல்லாமுனிவர்களுஞ் செவிக்கமுதாகக் கொண்டு விநாயகமூர்த்தியினுடைய திருவுருவைக் கண்களாற் காணாதவர்களாயினும், இஃது சுவாமிகளுடைய திருவாக்கே என்று மிகுந்த ஆனந்தத்தினையுடையவர்களாகி, அப்போதே சகல விக்கினங்களையு மொழித்தவர்போல, விநாயக மூர்த்தியினுடைய திருவருளையே கடைப்பிடித்திருந்தார்கள்.

இவர்கள் சரிதமிவ்வாறாக, பூர்வத்திற்றானே பெரியதவங்களைச் செய்து நிறைவேற்றினவனாய் தேவர்கள் வழிபடத்தக்க யோக்கியனாய் திசைகளைத் தினுஞ்சொல்லும்படியான கீர்த்தியையுடையவனாய் வரேணியனெனனும் பெயரினை யுடைய ஓரரசனிருந்தான். அவனுக்குப்புட்பகையெனனும் ஓர் மனைவியிருந்தனள் இவர்கள் நெடுநாள் ஒருபுத்திரப்பேற்றினைவேண்டி அளவற்ற கருமங்களையுந்தானங்களையும் இடைவிடாது செய்துகொண்டுவந்தார்கள் பின்னர் விநாயகப்பெருமானுடைய கிருபையினால் புட்பகைவயிற்றிற் கருவுண்டாகி ஒப்பத்தாந்திங்களில் கருப்பயாதனை கொண்டு ஓர் புதல்வனைப்பெற்றனள் அப்புதல்வனை விநாயகமூர்த்தியானவர் அங்கிருந்தோர் அனைவரும் தன்னைமறைத்துத்தாமே யொரு குழந்தையாயிருந்தனர். அக்குழந்தை மிகுந்த அழகும், யானைவதனமும் மழுமுதலிய ஆயுதங்களையேந்திய நான்கு திருக்கரங்களும் நீண்ட துதிக்கரமும்பெருத்தவயிறும் விளங்கவிருக்கின்றதை அங்கிருந்தவர்கள் பார்த்து அப்பயமடைந்து

ப்போனார்கள் புட்பகமாத்திரம் அவ்வறையினின்றும் அப்பாற்போகக்கூடாதவளாய் மயங்கி பிரசவித்த வேதனையினும் பதின்மடங்கு அதிகமான வேதனையைப்பொருந்தினவளாய், ஐயோ! புத்திரப்பேறு வேண்டி அளவற்றபெருந்தவங்களனைத்தையுஞ் செய்துமுடித்தோமே அப்படிச்செய்தவெமக்குப்புத்திரப்பேறுகிடைத்தும் மீட்டுந்தள்ளிவிடத்தக்கதாய் தெய்வங்கொடுத்ததே? இதற்கினிச்செய்யத்தக்கதென்ன விருக்கின்றதென்று சொல்லிக் கூக்குரலிட்டழுதுக்கொண்டிருந்தனள். அவ்வழுகையோசையை வரேணியராசன் கேட்டுவந்து, அண்டங்களையெல்லாம் அணுவாகவும், அணுக்களையெல்லாம் அண்டங்களாகவும்செய்யவல்ல விநாயகமூர்த்தி யங்கிருக்கக்கண்டு, இப்பிள்ளையால் நமக்கு இடர்வருமென்று நடுங்கி உடனே சிலவீரர்களைக்கூவி இப்பிள்ளையை இவ்விரவிற்றானே கொண்டுபோய் மடுக்கரையில் வைத்து வாருங்களென்று கட்டளையிட்டனன். அக்கட்டளையை அவ்வீரர்கள் தடுக்கக்கூடாதவர்களாகி உடனே அக்குழந்தையை யெடுத்துக்கொண்டுசென்று பராசரமுனிவரது ஆசிரமத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற மடுக்கரையிற் சிலதழைகளை முறித்துப்போட்டு அதன்மீது அக்குழந்தையை வளர்த்தி மீட்டுந் தமதரசனிடத்திற் போய்ச் சேர்ந்தார்கள்.

ஓ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு வேதங்களினுச்சியினும் மாதவத்தர்களினுடைய உள்ளத்தினும், பிரமனாதியருடைய மனத்திலும் நண்ணுதற்கரிய விநாயகக் கடவுளைத் தங்கள் மார்போடணைத்து ஏந்தி வந்த அவ்வீரர்களுந் தழைகளுஞ் செய்த தவந்தானம் யாதோ அதனை யறிகின்றிலேம்.

கருணை நாயகன் குருவெனக் கடைக்கணித் தருளி
வருவ னாயினும் பருவமில் லார்மரு வார்கள்
பொருவிலாதவன் புத்திர னாய்மனைப் பிறந்துந்
தெருளி லாமையின் வரேணியன் றுறவிட்ட னனே.

கருணை நாயகராகிய கடவுளே ஆசிரியவடிவங்கொண்டு கிருபை புரியவருவராயினும், பரிபக்குவமில்லாதவர்கள் அக்கிருபைக்குப் பாத்திரராகார்கள். அதுபோலத் தம்மோடொப்பாரு மிக்காருமில்லாத விநாயகமூர்த்தியே தனக்குச்சிறந்த புத்திரனாகவந்து அவதரித்தும் அப்புத்திரனை ஞானமில்லாமையால் வரேணியராசன் கைவிட்டவனாயினன். ஒப்பற்ற விநாயகமூர்த்தியைத் தாங்கப்பெற்ற மகாதவத்தினையுடைய அம்மடுக்கரையானது கபிலமுனிவருடைய ஆசிரமத்தையுங் கைலாயவரையையும் ஒக்குமேயன்றி, பிரமன் வாழ்கின்ற

சத்தியலோகமுந் திருமால்கண்படுகின்ற க்ஷீராப்தியும் அதற்கு நிகரல்ல அம்மடுக்கரையில் பசிய தழைகளின்மீது விநாயகப்பெருமானெழுந்தருளி யிருக்குங்காட்சி எவ்வாறிருந்ததெனில் மரகதத்தில்விளங்கும் மாணிக்கத்திலைப்போன்றுங் கேசவன் மார்பகத்திருக்குங் கௌத்துவ மணியைப்போன்றுங், கருங்கடலுச்சியிலுதிக்குங் கதிரவனைப்போன்றுமிருந்த தன்றி, உமாதேவியினுடைய திருமார்பில் விளையாட்டயர்தலைப்போன்றுமிருந்தது யானை-புலி-சிங்கமுதலிய கொடியமிருகவர்க்கங்களெல்லாம் விநாயகமூர்த்தியினுடைய திருமேனியைக்கண்டமாத்திரத்தில் மலங்களினின்று நீங்கி மெய்யறிவுதித்து ஓர்கிமையளவும் அவ்விடத்தை விட்டு நீங்காமல் ஊணுறக்க முதலியவைகளையுந்துறந்து பாதுகாத்திருந்தன அப்போது எம்பிரானாகிய விநாயகமூர்த்தியானவர் தமது திருமேனியினொளியைச் சிறிதெழுப்ப அதனால்கோடிசூரியர்கள் ஒன்றாய் உதயஞ்செய்ததுபோலத் திரிலோகங்களிலும் பிரகாசமேலிட்டது. உடனே தேவர்கள் முதலாயினோர்களெல்லாம் அதிசயமாகும்படி இருள்நீங்கியன. சந்த சாகரங்களும் சத்திக்காமலிருந்தன இரவு நீங்கியதென்று கருதி அளவற்றமிருகங்கள் இரைதேடுமாறு தத்தமிடங்களையடைந்தன. சோலைகடோறுமுறங்கியிருந்த பறவைக்கூட்டங்களெல்லாந்திசைகடோறுமெழுந்துபறந்துபோயின சந்திரனொளியும உடுக்களினொளியு மழுங்கிவிட்டன. தெளிந்த நீரிலிருந்த குமுதங்களனைத்து மிதழ்மூடிக்கொண்டனன். தங்கள் தங்கள் தலைவியரோடும புணர்ந்திருந்த ஆடவரெல்லாமெழுந்து நித்திய நியமாதிகளைச் செய்வதானார்கள். இப்பால் அதியதவத்தினால் பாரசுவமுனிவர் தமது அமளியைவிட்டெழுந்து யாம் சந்திசெய்யுங்காலந் தப்பிப்போயதேயென்று பதறிக்கரத்திற் றண்டுகமண்டலமேந்தி அதிதீவரத்தோடும் மடுக்கரையைநோக்கிச் செல்லுவார், அங்குபசியதழைகளின்மீது வடுத்துப்பிரகாசித்துக்கொண்டிருந்த ஜகத்காரணராகிய விநாயகமூர்த்தியைக் கண்டனர். உடனே ஆனந்தபரவசங்கொண்டாடினார். நகைத்தார். திகைத்தார். உடன்முழுவது, ரோமாஞ்சிதம் பூக்தார் இருவிழிகளினும் ஆனந்தபாஷ்பஞ்சொரிந்தார். அருகில்வந்து குழந்தையினுடைய அவயவங்களையெல்லாம் பார்த்துப் பார்த்து மிகுந்த மனமகிழ்ச்சியாயினார். இவ்வாறு பராசுவமுனிவர் களிப்பென்னுங்கடலிற் கரைகாணமாட்டாதவராகி, யாம்செய்த தவப்பயனாலன்றோ நான்குவேதங்கட்கு மெட்டாதவித்தகராகிய விநாயகமூர்த்தியே நமக்குக்கிருபைசெய்யும்பொருட்டு இங்ஙனமெழுந்தருளினர். அந்தோ! இம்மூர்த்தியினுடைய மகிமையையறியாதவர்கள் யாரோ இவரை அங்கேகொண்டுவந்,

வைத்துவிட்டார்களே. தரிசித்தவுடன் மனமாகிழுன்றற்குஞ் சுகத்தை விளைவிக்கவல்ல இவரையீன்றவர்கள் இங்ஙனம்விட்டுச் சென்றது நாமமுன்செய்திருக்கின்ற தவப்பயனேயன்றி வேறில்லை இவ்வெப்பற்றமூர்த்தியை யீன்றவர்கட்கு நிகரானபேர்கள் திரிலோகங்களினுமிரார்கள், அப்புண்ணியசீலர்களே தவம்-தானம்-விரதம்-தருமம் முதலிய ஒழுக்கங்களனைத்தையுங்குறைவற முடித்தார்கள். என்று இவ்வாறு அனந்தமாகப்புகழ்ந்து அக்குழந்தையாகிய விநாயகமூர்த்தியைக் கரத்திலேந்திக் தமது ஆசிரமத்திற்கு மீண்டனர். அச்சமயத்தில் அருணனனவன் நமக்கு முன்னே இருளினை நலியச் செய்தவன் யாவனோ அவன திருவடிகளைத்தொழுது உய்வோமென்றெண்ணி வருவான்போலக்கீழ்த்திசையிலுதயமாயினான். அதைத் தமது ஆசிரமத்தினை நோக்கிச்சென்ற பராசரமுனிவர்கண்டு மயங்கி, அதற்குமுன்னருண்டான ஒளி இக்குழந்தையினது திருமேனியினுண்டாளவொளியேயன்றி வேறல்லவென்று மீட்டுந்தெளிந்து, இதுகாறும்யாம்செய்துவந்த தவப்பயனேயன்றி விசேஷமானபயன்களையும்பழம்நழுவிபாலில் விந்ததுபோல இம்மூர்த்தியாற் கிடைக்கப்பெற்றோமென்று மனமகிழ்ந்து, விரைவிற்றமதாசிரமத்தினையடைந்து, தமதுபத்தினியாகிய வீரியவற்சலையைக்கூவி, பெண்ணே! வருத்தமின்றியாம்பெற்ற இக்குழந்தையை வாங்கிக்கொள்ளுகவென்று பரிவோடுஞ் சொல்லினர். கற்பிற்சிறந்த வீரியவற்சலையும், உடனே முன்றிலின்கண்வந்து அப்புத்திரனுடைய திவ்வியவடிவங்களைப்பார்த்தலும் அற்புதங்கொண்டவளாய் முகமலர்ந்து, தனங்கள் விம்மவும், தோள்கள்பதரவும், கண்கள் துடிக்கவுமாகத்தனது காதலரைவணங்கி எனதருமைத்துணைவரே! தேவரீர் இந்த திவ்வியமான குழந்தையை எங்ஙனமிருந்துகொண்டுவந்தீர்? யானைவதனத்தையுடைய இக்குழந்தையின் திருவுருவம். இதுவேமகத்தான தவங்களினால் வரும்பயன். இதுவேயோகாதிகளால் தியானிக்கப்படுகின்றவஸ்து இதுவே எல்லாச்சோதிகளையும் உண்டாக்குவதற்கு மூலகாரணம். இதுவேவேதகம புராணங்களில் கூறப்பட்டிருக்கின்றபொருள். இதுவேபரப்பிரமமென்றுசொல்லப்படுகின்ற நித்தியம். என்று அனந்தமுறைதுதிசெய்துதனது கரத்திலேந்திக்கொண்டனள். இவ்வாறு மிகுந்தமனமகிழ்ச்சியோடும் வீரியவற்சாலையானவள் அக்குழந்தையைக்கரத்திலேந்திய மாத்திரத்தில் தனது தனங்களில் அமுதஞ்சுரந்து வழிய, அவ்வமுதத்தை அக்குழந்தைக்கு ஊட்டி அளவற்றநாள் அரிய தவங்களைச்செய்து நிறைவேற்றிய புட்பகையனவள் அக்குழந்தையை விரும்பாது துறந்திருக்கச் சிறிதும் வேண்டாதிருந்த வீரியவற்

ஓ சவுனகாதி முனிவர்களே! இனி அவன் பிரமாணத்து முன்னம் பிரகஸ்பதி தேவர் கூறியபடி முனிவர்கள் தேவர்கள் பெரியோர்கள் முதலியோராற் பணியத்தக்க மேன்மையைப் பெற்றிருந்த வரலாற்றினையுஞ் சொல்லுவோம் கேட்பீராக இவ்வாறு கயமுகாசுரனானவன் அன்பர்க்கெளியராகிய சிவபிரான் அமர்ந்திருந்த மண்டபத்தை இரக்கமில்லாதவனைப்போலத் தள்ளுதலும் அங்கிருந்த தேவர்கள் முதலியோரெல்லாம் பயந்தார்கள். உல்லாசமாய்ச் சென்று உலாவல் செய்திருந்த உமாதேவியார் தமது பாங்கியரோடும் வந்து யோகத்திலிருந்த கர்த்தருக்கு அதனையறிவித்தனர். உடனே சிவபிரானுக்குக் கோபமுண்டாகி அவ்வசுரன்மீது தமது சூலாயுதத்தை விடுத்தனர், அச்சூலமானது அவனுடல் முழுவதும் நெருங்கிப் பாய அதனாலவன் சோர்வுறாச் சிவாயநமவென்று சொல்லி நிலத்தில் வீழ்ந்தனன். இவ்வாறு கயமுகாசுரனானவன். சோர்ந்து நிலத்தில் வீழ்ந்தபோது சொல்லிய மநுவானது சிவபிரான் செவியிலேறலும் உடனே அவருக்கு அவன்மீது கிருபையுண்டாகி அச்சோ! கயமுகாசுரன் நம்மைத்தியானிக்கு முள்ளத்தை யுடையவனென்றறியாமல் மண்டபத்தைத் தள்ளினானெனக் கொன்றோமேயென்று மனமிரங்கி அவன் முகத்தைக் ஆவலோடும் பார்த்தருளி அன்பனே! உனக்குவேண்டிய வரங்களைக் கேள் தருவோமென்று திருவாய் மலர்ந்தனர். அதைப் பூர்வஞானத்தினையுடைய கயமுகாசுரன் கேட்டலுஞ் சிவபிரானைப் பணிந்தெழுந்து ஓ கிருபாமூர்த்தியே! தேவரீர் அடியேற்கு அழியாத முத்தினைக்கொடுத்தருளல் வேண்டும். முற்சனனத்தில் அடியேனுக்குப் பிரகஸ்பதி தேவரும் நாரதமுனிவருங் கூறிய வாக்கின்படி இச்சனனத்தில் சமபவித்ததன்றி வேறில்லை அதனால் அடியேற்குத் தேவரீருடைய திருக்கரத்தாலடிபடவுந் தேவரீருடைய பாதபதுமங்களைச் சேவிக்கவுங்கிடைத்ததென்று சொல்லினன். அதனைச் சிவபிரான் கேட்டு அவனுக்குச்சாரூப முத்தியினைக்கொடுத்து அவனது பசியதோலினையுஞ் சிரத்தினையும் உயிரைப்போலக்கைக்கொண்டு தோலினைத் தமது அரையிலுடுத்திச் சிரசைப் பத்தவாஞ்சையினாலோர்பால் வைத்திருந்தனர். அக்கயமுகாசுரனுடைய தோலைச் சிவபிரான் தரித்தருளியதாலே அதுமுதல் அவருக்குக் கிருத்திவாசனென்னுந் திருநாமம் வழங்கிவருகின்றது. அத்திருநாமத்தை யாவரேனும் உச்சரித்தால் அஃதுவருத்த முறுத்துகின்ற சமுசாரவாஞ்சை யென்னும் பெரும்பிணிக்கு மருந்தாகி மெய்ஞ்ஞானமயமாகிய வீட்டைக் கொடுத்தருளும

இப்பால் சத்துருவைப் போலவந்து கயமுகாசுரன் இழுத்துத்தள்
ளிய மண்டபத்தைக் கணங்கள் யாவருங்கூடி எடுத்து முன்போல
லே நிறுத்திவைத்தார்கள். சிவபிரானுமஉமாதேவியும் மனமகிழ்ந்து
பழையபடி திருவிளையாடல் செய்துக்கொண்டிருந்தார்கள். இவ்
வாறு சுவாமியும், அம்மனும் வனத்திலிருக்குமளவில் சிந்தூரனென
வன், யெல்லா வுலகங்களினுஞ் சென்றுலாவி எதிர்த்துவந்தவர்களை
யெல்லாந் தழுவி நீறாக்கி மீட்டுந் தனது அரண்மனையில் வந்துகொ
லுமண்டபத்துக்குள் வீற்றிருந்து மனதில் மிகுந்த கர்வங்கொண்டு
பிரமன் விண்டு உருத்திரன யென்னும மூவர்களும் நமக்குப் புறந்
தந்து திரணமாயொழிந்தார்கள். இந்திரனாதிய தேவர்கள் அரக்கர்
கள் தைத்தியர்கள் முதலியோரெல்லாம் நமமைக்கண்டவுடனோடிப்
பதுங்கினார்கள். ஏனைய வீரர்கள் யாவரும் நமது கரத்தாலழிந்தார்
கள் உலகமனைத்தும பஞ்சுக்கொப்பாகவும நாம் அழலுக்கொப்பா
கவுமிருக்கின்றோம. என்று சொல்லிக்கொண்டிருந்தனன். அப்போ
து தற்செயலாய் அவனுககுக கேழ்ககும்படியாக ஒரு ஆகாயவாக்
குண்டாகி ஓ சிந்தூரா! தன்னைத தானே வீணிற் புகழ்ந்து கொள்
ளுவோனுக்கு உடனே அழிவுவரும. உனககு அழிவுகாலம நேர்ந்த
தனால் உன்னை நீயே புகழ்நது கொள்ளுகின்றனை நிலையில்லாத வுடலை
நிலையாகக் கருதி வீண் கர்வத்தினாற் பேசுகின்றாய் உன்னைக்கொல்லுவ
தற்கு உமாதேவி வயிற்றில ஒன்றான விநாயகமூர்த்தி கருவாகிவளர்
கின்றனர். இன்னுஞ் சின்னாளையுள் உனது பெயருமில்லாமல் முடி
ந்து போவாய் என்று சொலலி அடங்கியது. அவையனைத்தையும்
சிந்தூரன்கேட்டு மனங்கலங்கி சாவுநேர்நதால எப்படி யென்று துய
ரங்கொண்டு இவ்வார்த்தைகளைப் பேசினவன் யாவன் இங்கிடத்
திற் பிடித்து அடிக்கக்கடவீர்களென்று சொல்லிச சில தூதுவரை
யேவினன் அவர்கள் அவ்வாக்கினையைக கடக்கமாட்டாமல் எவ்விட
ங்களினும் ஓடித்தேடிப்பார்த்து ஒருவரையுங் காணாமல்மீண்டுவந்து
விட்டார்கள். இப்பால் சிந்தூரனனவன் நமமைக்கொல்ல வளருகின்
றகருவை இப்போதே அறுத்து ஈஸ்வரியைத் துயரப்படுத்த வே
ண்டுமென்று நினைத்தவனாய் உடனே தானிருந்த சபைவிட்டெழு
ந்து கயிலாயவரையிற் போய்த் தேடிக்காணாதவனாகி அவ்விடங்களி
லுள்ள மலைகள் திசைகள் முதலியவெல்லாந் தேடிச்சென்றனன்
பின்னர் ஈஸ்வரியை யெங்குங்காணாமல் மீட்டும் பூலோகத்திற்கு
வந்து வனங்கள் தோறுந்தேடிக்கொண்டு செல்லுகையில் தேவர்
கள் முனிவர்கள் முதலியோா வசித்திருக்கும் பரியவிகானகத்துள்
நுழைந்து அதன் மத்தியிலிருக்கும் பூங்காவில் உமாதேவியார் வீற்

சலையானவள் அதனையெடுத்து வளர்க்கப்பெற்றாளெனில், அவளது புண்ணியத்திரத்தை யார் அளவிட வல்லவர்கள்.

இவ்வாறு குணங்குறி கடந்த கொள்கையராகிய விநாயகப்பெருமான் பராசுவ முனிவர் ஆசிரமத்தில் நாளுக்குநாள் வளர்பிறையைப் போல வளர்ந்துவருகின்ற நாளையில், முன்னர் சவுபரிமுனிவருடைய சாபத்தினைப்பெற்ற கிரவுஞ்சனென்னு மூடிகமானது ஒருநாள் அம்முனி புங்கவருடைய ஆசிரமத்தினருகில்வந்து மலைகளை யகழ்த்திச் சாய்த்தும், சுவர்களைகல்லித்தள்ளியும், மரங்களைக்கிண்டி வீழ்த்தியும், வேதிகைகுண்ட முதலானவைகளைத் தோண்டிப் பறித்தும். அறைகளிலுள்ள வத்திரங்களையும் புத்தகங்களையும் கடித்தும். பாழாக்கிக்கொண்டுவர, அவ்வுபத்திரவங்களைப் பராசுவ முனிவராற் சகிக்கக்கூடாமல் அதற்கென்ன செய்வோமென்று மனதிற் கவலை கொண்டனர். அக்கவலையை விநாயகப்பெருமானறிந்து நமது கரத்தினால் அம்மூடிகத்தைப் படைத்து அதனது கொடுஞ்செய்கைகளை யடக்குவோமென்று கூறி அம்முனிவருடைய கவலையை யொழித்து, உடனே அம்மூடிகத்தின்மீது தனது பாசத்தை ஏவினர் அப்பாசவரவை அம்மூடிகங் கண்டாலும், பூமியைக் கிழித்துக்கொண்டு போய்ப் பாதளலோகமேழினையும் அழித்துமீட்டு மேலெழும்பிவந்து, சொர்க்கலோகம் உருத்திர லோகம் அக்கினிலோக முதலானவைகளை வலைத்துக்கொண்டு சிவலோகபரியந்தஞ் சென்றது. அதுசென்றவிடங்களிலெல்லாம் வினையைப்போல அப்பாசமூங்கூடச்சென்று, அம்மூடிகத்தினுடைய பராக்கிரமங்களெல்லா மொடுங்கும்படியாகப் பிடித்திழுக்காட்டி விநாயகமூர்த்திக் கெதிராகக்கொண்டுவந்து நிறுத்தி வணங்கியது. அப்போது அம்மூடிகமானது விநாயகமூர்த்தியினுடைய திருமுகத்திற்கு நேராகத்தனது தலையையெடுத்துப்பார்த்து, ஓ சர்வஞ்ஞமூர்த்தியே! அடியேனைக்கொடியனென்றெண்ணி வதை செய்யவேண்டாம். தேவரீரைச்சரணடைந்த அடியேன் சரிதத்தினைச்சிறிது கேட்டருள்க அடியேன்முன்னங் கந்தருவராசனாகவிருந்தேன். எனதுபெயரைக் கிரவுஞ்சனென்று சொல்லுவார்கள். ஓர் நாள் சவுபரிமுனிவருடைய பத்தினியாகிய மனோமையையென்பவள் அழகினைக்கண்டு மோகித்தேன். அதற்கு அம்முனிபுங்கவர் அடியேன்மீது கோபித்துமூடிகமாகச்சபித்தனர் அப்பால் யானவரைச் சரணடைந்தேன் அதனாலவருக்கு அடியேன்மீது கிருபைசார்ந்து இனி நீ தவத்தர்பெருமானாகிய பராசுவமுனிவராசிரமத்தில் அவதரிக்கப்போகின்ற விநாயகமூர்த்திக்கு வாகனமாகி எல்லாமேன்மை

களையும் பெறுவை யென்று அநுக்கிரகத்தருளினர். அவ்வநுக்கிரகத்தின்படியே இப்போது தேவரீரைச்சரணடைந்தேன் ஆதலால் தேவரீரடியேனை முற்றினுங் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தது. அவையனைத்தையும் விநாயகமூர்த்திகேட்டருளி ஓ வலியிற் சிறந்த ஆகுவே! யாமுனது பிரார்த்தனையை இதற்கு முன்னரேயறிவோமாதலால் இப்போது உன்னைக் கொல்லாமற் பிடித்துக்கொண்டு வரும்படியாகவே நாம் பாசத்தைவிடுத்தோம். இனியாதொன்றிற்கும் அஞ்சற்க இத்தினமுதல் நாம் நீங்க மேன்மையோடும் வாகனமாக இருக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தது. உடனே அதன் முதுகில் தாம் ஆரோகணித்து, அதனை நடத்திக்களித்துஞ் செலுத்தி விளையாடி தன்னகரத்தை நாடித் திரும்பிவந்தனர்.

இவ்வாறு விநாயகக்கடவுள் பிள்ளைப்பருவத்திற்றானே பெரிதான வலியினையுடைய மூஷிகத்தைப்பற்றித் தமக்கு வாகனமாகக் கொண்டருளிய விநாயகமூர்த்தியைப் பராசரமுனிவர் பணிந்து, பள்ளங்கண்டு பாய்கின்ற புனல்போலத் தயை தோன்றப் பிள்ளைப்பாய்ச்சி ஒரு பாரிசமாய் நின்று, ஓ லோகநாயகனே! கொடுஞ்செய்கைகளிற் சிறந்த பராக்கிரமசாலியாகிய காலரூபியென்னுமொரு விக்கினனால் சகலபுவனங்களுங்கலங்கி நடுங்குகின்றன. அவனைச் சுவாமிகள் சங்கரித்து உலகங்களில் லோகோபகாரம்புரிந்து விருத்திசெய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அங்ஙனமே செய்தருளுவோமென்று விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்தனர்.

இச்சரிதமிவ்வாறாக, உலகத்தில் நித்தியநைமித்திகங்கள் காமியங்கள் என்று சொல்லப்படுகின்ற யாகமுதலானவைகளை நடக்கவொட்டாமல் யாவரையுஞ் சதாகாலமும் உபத்திரவப்படுத்தி வருகின்றகாலரூபி யென்னும் விக்கினனால் வசிட்டாதி முனிபுங்கவர்கள் யாகாதிகளைச் செய்யாதுவிட அதனால் இந்திரன் முதலானதேவர்கள் அவிர்ப்பாகங்கிடையாமல் வறியராகி பின்னர் அம்முனிவர்களுந் தேவர்களும் ஒன்றாகக்கூடி பிரமதேவனிடத்திற் சென்று பணிந்து, சுவாமீ! சொல்லவுஞ்சகியாத கொடுமையினை விளைத்து வருகின்ற விக்கினனைக்கொல்லுமாறு அடியேங்கட்கு ஒருபாயஞ்சொல்லியருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதற்குப் பிரமதேவன் சொல்லுவான், அன்பர்களே! அநாதியாகிய அமலானந்த அறிவனு

யிருக்கின்ற சோதிவடிவான விநாயகமூர்த்தியானவர் சகல லோகங்களையுங் காத்தற்பொருட்டு பராசுவமுனிவருடைய ஆசிரமத்தில் அவதரித்திருக்கின்றனர். அக்கடவுளை நீங்கள் யாவருஞ்சென்று சரணடைந்து பூசித்து, உங்கள் துன்பங்களை யெல்லாம்போக்கி இன்பங்களை அடைவீர்களென்று சொல்லினன் அச்சொல்லை இந்திரன் முதலிய தேவர்களும் வசிட்டாதி முனிபுங்கவர்களுஞ் செவிகுளிரக் கேட்டு, ஆனந்தபரவசராகி, பூவுலகத்தில் பராசுவமுனிவருடைய ஆசிரமத்திற்கு வந்தார்கள். உடனே பராசுவமுனிவர்கட்கெல்லாந் தனித்தனி ஆசனந்தந்து இருக்கச்செய்து பின்னர் மிகுந்தபேருவகையோடும் அவர்களைப்பார்த்து, ஓ தபோதனர்களே! உங்கள் வரவினால் அடியேன் குலம்; தவம், முதலியயாவுஞ் சுத்தபவித்திரமடைந்தனவென்று முகமலர்ந்து கூறி, உபசரித்தனர். பின்னர் தேவர்களும் முனிவர்களும் அப்பராசுவ முனிவரைப் பலவாறு புகழ்ந்து துதிசெய்து, அடியேங்களையெல்லாம் பாவைபோல இடையறாது ஆட்டுவிடா வித்தருளாநின்ற ஒப்பற்ற முதன்மூர்த்தியே தேவரீருக்குத் திருக்குமாரனாக அவதரித்திருக்கின்றமையால், அம்மூர்த்தியைத் தரிசித்துப் பூசிக்குமாறும், தேவரீருடைய பாதபதுமங்களைத் தரிசிக்குமாறும் யாங்களனைவரும் இங்குவந்தனம், முன்னதாகத் தேவரீருடைய தரிசனத்தைக் கிடைக்கப்பெற்றோம். இனி எமது கர்த்தருடைய தரிசனத்திற் கெதிர்பார்க்கின்றனமென்று சொன்னார்கள். இவ்வாறு சொல்லும் விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து அவர்களெதிரில் மூஷிகவாகனத்தின்மீது எழுந்தருளிவந்தனர். உடனே யாவரும் பயந்தெழுந்து பத்தியோடு பலமுறைபணிந்து, ஓ சகல புவனாதார சொரூபியே! அடியேங்கள் விக்கினஞ்செய்துவருகின்ற இடையூறுகளால்மெலிந்து பிரமதேவரிடத்திற் சென்றேம் அவர் எங்கள்வரவை யோசித்து தேவரீருடைய சந்நிதானத்திற் போகும்படி விடைகொடுத்தனுப்பினர், அவ்வாறே அடியேங்கள் தேவரீருடைய திவ்விய சரணாரவிந்தங்களையடுத்தோம். இனி அடியேங்கள்படுகின்றதுன்பப்பாட்டினை நீக்கியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

அதற்கு விநாயகமூர்த்தி அருள்கூர்ந்து, இனி நீங்கள்யாதொன்றிற்கும் அஞ்சவேண்டாமென்று அபயங்கொடுத்து, அவர்களையெல்லாந் தம்மைப்புடைசூழ்ந்து வருமாறு உத்தரவுசெய்து, தாம் தமது மூஷிகவாகனத்தைச் செலுத்திக்கொண்டு விக்கினனிருக்குமிடத்திற் சென்று தம்மோடுவருகின்ற தேவர்களையும் முனிவர்களையும்பார்த்து

ஓ தீனர்களே! நமது வீரத்தைப்பார்மின்களென்று தமது கரத்திலேந் தியிருக்கின்ற அங்குசத்தையெடுத்து நீ இந்நிமிடத்திற் சென்று பராக்கிரமத்திற் சிறந்த விக்கினனைப்பிடித்துக்கொண்டு வாக்கடவையென்று கட்டளையிட்டு ஏவினர். உடனே அவ்வங்குசமானது சகல புவனங்களும் அதிரும்படியாகச்சென்று, விக்கினனைச்சூழ்ந்து வளைத்திழுத்துக் கொண்டுவந்து விநாயகப்பெருமான் முன்னர்விட்டது அவ்விக்கினன் ஆகாயத்தையளாவிய சடைமுடியும் கடைவாயிற் பிறக்கு நிகரானகோரைப்பற்களும் சகல சீவராசிகளும், நடுங்கும் படியான ஏனையவடிவங்களும் விளங்க தேவர்கள் முனிவர்களுடைய எண்ணங்களையெல்லாம் நாசஞ்செய்யவல்ல தனது பராக்கிரமத்தோடும் விநாயகமூர்த்திக்கெதிராக நின்றான் இவ்வாறு நிற்பவனை விநாயகமூர்த்தி தமது மூடிகவாகனத்தின்மீது இருந்தபடியே நெறித்துப் பார்க்க அப்பார்வையால் விக்கினன்பயந்து இவன்நன்மை இலேசாய் விடுவானல்லன். இவனுடைய வல்லபமெல்லாம் அடியோடு அடங்கிக்கெடும்படி யுத்தஞ்செய்யவேண்டுமென்று தனதுருவத்தை மறைத்து யுகமுடிவிலுண்டாகின்ற பிரளயத்தினைப்போலச் சலவடிவங்கொண்டு, அலைகளை வீசி நாற்றிசைகளினும் பெருகிப்பரந்து பூலோகமுழுவதும் மூழ்கிப்போகும்படியாக நிறைந்து, இந்திரலோகம்-பிரமலோகம்-விண்டுலோகம் முதலிய லோகங்களெல்லாங் கவிழ்ந்துபோம்படியாக மேலோங்கினன். அதைத் தேவர்களெல்லாங் கண்டுபயந்தார்கள். முனிவர்களெல்லாம் இனி நமக்குப்போக்கிடமெங்ஙன மிருக்கின்றதென்று வாடினார்கள். இவ்வாறு விக்கினன் சலப்ரவாகமாயிருக்குஞ் செயலினை விநாயகமூர்த்தி கண்டு, இவன் சாமார்த்தியம் இறுவாவென்று புன்னகைசெய்து அச்சலப்பெருக்கையெல்லாம் பானம்பண்ணும்படியாகத் தமது மனத்திலெண்ணி ஒருகரத்தை நீட்டினர் அதைவிக்கினனறிந்து தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்தவனாய், அச்சலவடிவினின்று மாறி ஓர் காகவடிவங்கொண்டு ஓர் மரத்தின்மீது நின்று பர்வதங்களெல்லாம் பொடிபடும்படியாகவும், சுத்த சாகரங்களும் வரண்டுபோம்படி யாகவும், தனதுசிரகினை விரித்துக்கொண்டு திக்கு யானைகளின் மத்தகங்களெல்லாம் பிளக்கும்படி யாகவும் சூரியன்-சந்திரன்-உடுக்கள்-சுவர்க்கலோக முதலியவைகள் உதிரும்படியாகவும், பேரொலிசெய்து சகல புவனங்களுஞ் செவிடடையச் செய்தனன்.

அப்போது விநாயகமூர்த்தி தமதுகரத்திலிருந்த தாமரை மலரை யவன்மீதுவிட்டனர். அதையவ்விக்கினன் கண்டவுடன் அக்காக வடிவினின்றுமாறி ஊழிக்காலத்திலுண்டாகின்ற வடவாமுகாக்கினி

யைப்போல வடிவங்கொண்டு, மண்ணுலகம் - விண்ணுலகம்-சமுத்திரம் பர்வதம் முதலானவைகளெல்லாம் நீறாகும்படி எரித்தான். அப்போது விநாயகமூர்த்தி மழைவடிவாகிப்பொழிந்து அவ்வக்கினியையவித்தனர் அப்பால்விக்கினன் பிரளயகாலத்திலுண்டாகின்ற சண்டமாருதமும் மழையுமாக வடிவெடுத்துத்துச சுழன்றுசொரிந்தனன். அப்போது விநாயகக்கடவுள், மேகங்களையேவி அம்மழையையுறிஞ்சிவிடச்செய்துபின்னர் அளவறறபர்வதங்களாகத் தாமேயுருக்கொண்டு அச்சண்ட மாருதத்தினையும் வீசவொட்டாமல நிறுத்தினர். அதற்குமேல் விக்கினன் அனந்தமான வசசிராயுதங்களின வடிவங்கொண்டு இநதிரனுடைய வசசிராயுதமும் இடிபட்டதுபோலப பொடிபட்டுப் போகும்படிபாய்நது விநாயகமூர்த்தி கொண்டிருக்கின்ற மலைவடிவங்களெல்லாஞ் சிறிய பாறகளாகும்படியாக வெதிர்த்து யுத்தஞ் செய்தனன். அப்போது விநாயகமூர்த்தி அம்மலைவடிவங்களினின்று ஓர் வேலாயுதத்தை நூதனமாய்ச்சிருட்டித்து, நீ சென்று விக்கினனுடைய உயிரைவாங்கி வாக்கடவையென்று ஏவினார். உடனே அவ்வேலாயுதமானது சூரியனொளியும் மழுங்கும்படியாக அட்டதிசைகளிலும் பிரகாசித்து வாயுவேகமுந் தனக்கு நாணிப்படச்சென்று வச்சிராயுதங்களைப்போல வடிவெடுத்திருக்கின்ற விக்கினனோடு அளவற்ற யுத்தங்களை நடாத்தியது. அதறகுமேல் அவ்விக்கினன். வேலாயுதத்தோடெதிர்க்க நிர்வாகமில்லாமலபயநது, வசசிராயுதவடிவத்தினின்று மாறித்தனது சுயரூபத்தினைக் கொண்டுவநது விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளிற்பணிந்தெழுநது மிகுந்தசாநதத்தோடு இருகரங்களையுசி மேற்கூப்பி, ஓ சர்வவல்லமையுள்ள கடவுளே! அடியேன் தேவரீரை சரணடைந்தேன். சுவாமிகள்விட்ட வேலாயுதம் அடியேனை சங்கரிக்கவொட்டாமற் காப்பாற்றியருளல் வேண்டுமென்று மீட்டும் பணிந்தனன். அதற்கு விநாயகமூர்த்தியானவர் தமது கோபத்தினை மாற்றிக் கிருபைசுரந்து வேலாயுதத்தினை மீண்டும் சும்மாவரும்படி கட்டளையிட்டனர். அதற்குமேல் விக்கினன் பயமகன்று விநாயகமூர்த்தியினுடைய சமீபத்தில்வந்து துதிசெய்து.

குறிகுணங் கடந்த புராணமுத்தொழிலுங் குயிற்றிடுங் காரணமுதலே, யறிவினையிழந்துமிருந்த மோகத்தா லடிகளோ டமரெதிர்ந் திழைத்த, வெறியனென்றனையு மடியரோ டொன்றாய் விரவுற வாண்டருள்புரிக, செறிதரும் பிரமசொரூபனே யெங்குந்திகழ்நிரா காரனேயென்றான்.

ஓ கிருபாமூர்த்தியே! ஓ குறிகுணங்கடந்த பூரணா! ஓ முத்தொழிற்குங் காரணமாகிய முதலே! அடியேன் அறிவில்லாமையினால்

தேவரீர்க்குச் செய்த அபராதத்தினைப் பொறுத்தருளல் வேண்டும் முன்னர் அடியேனைத் தேவேந்திரன் கூவியேவினான். உடனே அடியேன் அளவற்ற விக்கினவடிவங்களைக்கொண்டு சகலலோகங்களையுந் துன்பப்படுத்தினேன் அன்றியும், வெறிகொண்டவனைப்போல சுவாமிகளோடுமெதிர்த்து யுத்தஞ் செய்வதாயினேன் இனி அடியேனைச் சுவாமிகளுடைய அடியார்களுள் ஒருவனாகும்படி கிருபை செய்து ஆதரித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தான்.

அதற்கு இவ்வுலகத்தில் அளவற்ற கொடுமைகளைச் செய்தோர்களாயினும் ஒருக்கால் தம்மையடைந்து சரண்புகுவாராயின் அவர்களை விடாமற் காத்தருள்வதே விருதாகக்கொண்டிருக்கின்ற விநாயகமூர்த்தி கடைக்கணித்து, திரிலோகங்களிலும் அளவற்ற கொடுமைகளை நடாத்திவந்தும், பின்னர் தம்மையடைக்கலமாகப் புகுந்த [illegible] நப் பயமகற்றி,

புரிந்த நின்கொடுமைத் திறந்தினை நோக்கிப் பொங்கிய வெகுளியானின்னை, யரிந்திட நினைத்தா மடைக்கலம் புகுந்தாயாதலினளிக்கிடப் பட்டாய், விரிந்தவை யகத்தினினியெடக்குவகை மேவிட நன்மொழிவிளைத்தி, பரிந்தெமை நினைப்பார் பணிகுவார் புகழ்வார் பாலொருகாலு நண்ணுதி.

வணங்குதல் புரியார் புகழ்தாரார் நினையார் மலிந்த நஞ்சரித்திரங்கேளார், குணங்கொளுமடியார்க் கிடர்களைப் புரிவார் குற்றமுங் கூறுவாரோரா, டிணங்குறு வார்களிவர் முதலான விழுதையார் தமக்கெலாமென்று, மணந்தசெய்தவர்பாற் பலவுருவாகி யரசுவீற்றிருமதிகண்டாய்.

ஓ காலரூபியே! நீ இதுகாறும் செய்துவந்த கொடுமையினால் உன்னைச் சங்கரிப்பதற்கே நினைத்தோம் நீ இப்போது நம்மைச்சரணடைந்தனை யாதலால் உன்னை உயிரோடு விடுத்தனம் இனிநமக்கு உவகையுண்டாகும் படியாக நடந்துகொள்ளுக நம்மைத்தியானிக்கிறவர்களிடத்திலும் பணிகின்றவர்களிடத்திலுந் துதிசெய்கின்றவர்களிடத்திலும், ஓர்போதும் நெருங்கற்க நம்மை வணங்காதவர்கள் துதியாதவர்கள்-நினையாதவர்கள்-நமது சரித்திரங்களைக் கேளாதவர்கள்-நமது அடியார்கட்கு அபசாரஞ்செய்கின்றவர்கள் அவர்களோடு பழகுகின்றவர்கள் அவர்களுடன் கூடுகின்றவர்கள் இன்னும் இத்தன்மைத்தான அயோக்கியங்களை யுடையவர்கள் யாவரேயாயினும் அவர்களிடத்தில் நீ என்றைக்கும் அநேக வடிவங்களாய் நின்று துன்பஞ்

செய்து உனது அதிகாரத்தைச் செலுத்துக இப்போது யாம் கூறிய முறைமைகளிற்றப்பாது நடந்து கொள்வையாயின் நீ உயிருடன் பிழைத்தனை. இல்லையேல் உடனே மாய்ந்தனை. இதையறிந்து புத்தியோடு நடந்துகொள்ளுகவென்று வரங்கொடுத்தனர்.

இப்பால் அவ்வரமனைத்தையுஞ் சிரமேற்கொண்ட விக்கினன் மீட்டும் பணிந்தெழுந்து சுவாமீ அடியேன் ஒருகாலத்துந் தேவரீருடைய கட்டளையைக் கடந்து நடவேன் அடியேனுடைய நாமத்தையுந் தேவரீருடைய திருநாமத்தோடு தரித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தான். அதற்கு விநாயகமூர்த்தி சந்தோஷித்து இது முதல் யாவரும் முன்னே உனது பெயர்வரும்படியாக நம்மை விக்கினராச விநாயகரென்று துதிசெய்யக்கடவர் அவ்வாறு நம்மைத்துதி செய்வோர்களை நீ எக்காலத்திலும் அணுகாதிருக்க வென்று திருவாய் மலர்ந்தனர் அதன்மீது விக்கினன் பெருமகிழ்ச்சி யுற்றவனாகி விநாயகமூர்த்தியை அன்போடு பூசித்து விடைபெற்று அவரிட்டருளிய கட்டளையின்படி துன்மார்க்கங்களை தேடிச்சென்று அவர்களிடத்தில வாசமாயினன். தேவர்கள் பூமாரி பெய்தார்கள் தேவமாதர்கள் விநாயகமூர்த்தியைப் பூசித்தார்கள் இச்சரித்திரங்களை எல்லாம் வரேணியராசன் கேட்டு மிகுந்த ஆனந்தத்தோடு தனது மனைவியாகிய புட்பகையுடனே வந்து சுவாமியைப் பலமுறைபணிந்து பூசித்து, வேண்டியவரங்களைப் பெற்றுச் சென்றனன் முனிவர்கள். தேவர்கள் முதலாயினோரும் சுவாமியைப் பணிந்து பூசித்து சகல இஷ்டகாமியார்த்தங்களையும் பெற்றுத் தத்தமிடங்களிற் சேர்ந்தார்கள். இப்பால் விக்கினராசர் மீட்டும் பராசுவ முனிவருடைய ஆச்ரமத்திற்கு வந்து அம்முனிவருக்குந் தம்மைத்தாய்போல வளர்த்து வந்த அவர் பத்தினிக்குந் தமது பெருங்கருணையினால் அளவற்ற வரங்களைத் தந்து அவர்களிடத்தினின்றும் விடைபெற்றுச் சிவபுரத்திலிருக்கின்ற தமதுலகத்தைச் சேர்ந்து வீற்றிருந்தருளினர்.

விக்கின விநாயகர் திருவவதாரப் படலம்.

முற்றிற்று

ஐந்தாவது

## மயூரேச விநாயகர்.

# திருவவதாரப்படலம்.

கொக்கினை திருகு மலைத்தவர் குமாரனாகிய விநாயக ருலகில், விக்கின ராசராகிய முறைமையை விரித்தனம் வியாதமாதவனே, விக்கினராசராகிய வாறே வியன்மயூரேசரா யுலகிற், புக்கின வசுரர் தமைத்தெறுங் கதையும் போற்றெனப் புகலுவான் பிரமன்.

மகாதவேந்திரராகிய சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தி, விக்கினராசர் திருவவதாரங்கொண்டு கிரவுஞ்சனென்னும் அசுரனாகிய மூடிகத்தை வாகனமாயூர்ந்தருளி, காலரூபியென்னும் விக்கினனை யழித்து, உலகங்களைக் காத்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இப்பால் மயூரேசர் திருவவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லுவோம் கேட்பீராக.

முன்னொரு கற்பத்தில் பிரமதேவனானவன் சிவபெருமானுடைய அநுக்கிரகத்தினால் விண்டுவினுடைய நாபிக்கமலத்தி லுதித்து, வேதாகமபுராணங்களை எல்லாஞ் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளக்கேட்டு அம்முறையின்படி சகல லோகங்களையுஞ் சிருட்டிசெய்து, அவ்வேதாகமபுராணங்கள் எழுதப்பட்டிருக்கின்ற புத்தகங்களை நாடோறும் பூசைசெய்து வந்தனன். அப்பிரமனது சிருட்டியிலுண்டான தேவர்களும், அசுரர்களும், ஒரு காலத்தில் விரோதங்கொண்டு, நெடுநாள் மலைந்து யுத்தஞ் செய்தார்கள். பின்னர் தேவர்களெல்லாம் அசுரர்களோடு நீடித்து யுத்தஞ் செய்யச் சத்தியற்றவர்களாய்த் தங்களுள்ளத்தில் ஓர் துணிவையாலோசித்து வேதமனுக்களைப் படைகளாக்கி, அப்படைகளை பிரமாஸ்திரத்தோடுகூட்டி அவர்கள்மீது பிரயோகித்தார்கள். அதனால் அவ்வசுரர்கள் வலியற்றவராகி மானத்தையும் ஆயுதங்களையு மிழந்து போர்க்களத்தினின்றும் ஓடி அபசயத்தினால்மிகவும் வாட்டமுற்றுத் தங்களுக்கு எப்பொழுதும் அடையறாத சத்துருக்களான தேவர்களை எக்காலத்திற் செயிக்கும்படி நேருமென்று உள்ளத்தில் வெஞ்சினங் கொண்டிருந்தார்கள். அவ்வாறு சிலநாள் கழித்த பின்பு ஓரவுணன் சங்கினைப்போல வடிவுடையவனாய், மிகுந்த பராக்கிரமசாலியாய், அளவற்றவரங்களைப் பெற்றவனாய், சங்காசுரனென்னும் பெயரினனாய் விளங்கியிருந்தனன் அவனுக்கிளையவனாகிய கமலாசுரனென்பவன்; தான் பெற்றிருக்கின்ற பராக்கிரமத்திலும் வரத்திலுந்தன் தமையனைவிடப் பதின்மடங்கதிக

முன்னவனாகி, எல்லாமாயைகளிலுஞ் சாமார்த்தியனாகி யிருந்தனன்,
அவனவ்வாறிருந்தும் தன்றமையனுடைய கட்டளையைக்கடந்து ஓர்
காரியமுஞ்செய்வானல்லன், இவர்களிருவரும் உடலும் உயிரும்போ
லமருவியிருந்தார்கள். அவர்களை முன்னந்தேவர்களால் அபசெயப்
பட்டிருந்த அசுரர்களெல்லாமடைக்கலம் புகுந்து, ஓ மித்திரர்களே!
நீங்களும் யாங்களும் ஒருகுலத்தினரானமோ? எங்கட்குண்டான இழி
வுந்துயரமும் உங்கட்கில்லையோ? முன்னர்த்தேவர்கள் எங்களோடு
யுத்தஞ்செய்து நலிபசெய்தார்கள். ஆதலால், அவர்களை நீங்கள்,
எவ்விதத்திலேனும் வெல்லல்வேண்டும். அவர்கட்கு வேதமனுக்
களே ஆயுதங்களாக விருக்கின்றன அவ்வேதபுத்தகமோ பிரம
தேவனிடத்திலிருக்கின்றது அதைமாத்திரம்முன்னே அபகரிக்க
வேண்டுமென்று முறையிட்டார்கள் அவையனைத்தையுஞ் சங்கா
சுரன்கேட்டு உடனே தனதுதம்பியாகிய கமலாசுரனைப்பார்த்து, நீ
இத்தினம் அப்புத்தகத்தை இங்கேவரும்படி செய்யக்கடவையென்று
ஆக்கியாபித்தான். அம்மாத்திரத்தில் கமலாசுரனெழுந்து தனது
மாயையினால் அரூபியாகிய பிரமனிருக்குமிடத்திற் சென்றனன்.
அப்போது அப்பிரமன் வேதபுத்தகத்தைத் தனக்கெதிரேவைத்
துக்கொண்டு சிவத்தியானத்தினாலே யோகநித்திரை செய்துகொண்டிரு
ந்தனன் அச்சமயத்தில் அப்பாதகன் அவ்வேதபுத்தகத்தைக் கைக்
கொண்டுவந்து தனது தமையன் முன்னாவைத்தனன். அவன் அப்
புத்தகத்தைக் கொண்டுபோய்க் கடலிலொளித்துவைத்துக் காவல்
செய்தான். வேதமுழுவதுங் காவலிலகப்பட்டுக் கொண்டமையால்
மூவுலகங்களிலும் அவ்வேதநெறிகள் வழக்கமில்லாமல் யாவருக்கும்
வறுமைகளும், இடர்களும் மிகுதி வருணாச்சிரமாதி நியதிகளெல்
லாம் மாறுபட்டு, பாவசெய்கைகள் மிகுதியாயுண்டாயின.

பின்னர் பிரமன் நெடுநாள்சென்று யோக நித்திரையைவிட்டு
கண்களைவிழித்தான். அப்போது தனக்கெதிரில்வைத்திருந்த வேத
புத்தகத்தைக்காணாதவனாகி மிக்க துயரத்தினையடைந்து, பின்னர்
அதுசென்ற வரலாற்றினைத்தனது ஞானநோக்கினாலே அறிந்து கொ
ண்டு, அந்தோ! முன்னர் சிவபிரான் நம்மீது கிருபைகூர்ந்து அருளிச்
செய்த வேதபுத்தகமே போய்விட்டால் இனிநமக்கு என்னசெய
விருக்கின்றது? இனி நமதுயிரைக்காத்து என்னபயன் இனி நமது
கடப்பாடு என்னாகும் இனி நமது சிருட்டித்தொழில்தான் எவ்வாறு
நடக்கும்? நமதுவிழிகள் ஒழியவிருப்பினும் மறைகளொழியவிருக்
கும்படி வாய்த்ததேயென்று மனம் வருந்தி, உடனே திருப்பா,

னன். அப்போது விண்டுவானவர் தமது யோகநித்திரையினின்று நீங்காதிருப்பக்கண்டு பின்னர் கைலாயவரையை நோக்கிச்சென்று அடியார்களுடைய மலபாசங்களை யொழிக்தாள வல்ல சிவபிரானுடைய திருவடிகளிற் சாஷ்டாங்கமாக வணங்கிப் பலமுறை துதி செய்து நின்றனன். அவ்வாறு நிற்பவனைச் சிவபிரான் பார்த்தருளி ஓ வாணிகேள்வனே! நீ இங்ஙனம் வந்தகாரியம் யாதென்று வினவினர். அதற்குப்பிரமன் சொல்லுவான் சுவாமி! யான் தேவரீரைத் தியானஞ்செய்துகொண்டு யோகநித்திரையிலிருக்கின்ற சமயம்பார்த்து என் முன்னர் வைத்திருந்த வேதபுத்தகங்களையெல்லாம் சங்காசுரன் கொண்டுபோய்க் கடலுக்குள்ளே வைத்துக் காவல் செய்திருக்கின்றனன். அக்கடலிற் பள்ளிகொண்டிருக்கின்ற திருமாலிடத்திற்குச் சென்றேன். அவர் தமது யோகநித்திரையில் நின்றுநீங்காதிருக்கின்றனர். ஆதலின் உடனே தேவரீரிடத்திற்கு வந்தேன். இதுவே எனது வரவின் காரணமாகும். இனித்தேவரீர் அவ்வசுரனைச் சங்கரித்து அவ்வேதபுத்தகங்களைக் கைக்கொண்டு முனிவர்கள் தேவர்கள் முதலாயினோர் படுகின்ற துன்பவாட்டினை நீக்கி அடியேனைக் காத்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவையனைத்தையுஞ் சிவபிரான் கேட்டு, ஓ பிரமதேவனே! திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கின்ற கேசவன் இன்னுஞ் சிலதினத்தில் தனது நித்திரையை விட்டெழுந்திருப்பன். உடனே அச்சங்காசுரனைக் கொன்று வேதபுத்தகங்களை யாவருக்கு முதவுவனென்று திருவாய் மலர்ந்தனர். அவ்வார்த்தையைக் கேட்டவுடனே பிரமன் பூமியில் வீழ்ந்து மூர்ச்சையாகிச் சிறிது நேரமசைவற்றிருந்து. மீட்டுந் தெளிந்து சிவபிரானைப் பலமுறை பணிந்தெழுந்து ஓ சகல லோகநாயகனே! பாற்கடலில் நித்திரை செய்கின்றவர் விழிப்பதெக்காலம்! சங்காசுரனழிவதெக்காலம்? யான் வேத புத்தகத்தைப் பெறுவதெக்காலம்? முனிவர்கள் தேவர்கள் முதலாயினோர் துயரம் நீங்குவதெக்காலம்? நால்வகை வருணத்தாரும் அவ்வவர்கட்குக் கூறிய கருமநெறியே நடப்பதெக்காலம்? சுவாமிகள திருவாய் மலர்ந்தருளிய அவ்வேதங்களைத் தினந்தோறும் பூசித்து வருகின்ற நியமத்தினின்றுந் தப்பிய எளியேனுடைய கவலை நீங்குவதெக்காலம்? இவையனைத்தும் சுவாமிகள் திருவுளத்திற்கு விளக்கமாயிருந்தும் வாய்விட்டழுங் குழந்தைக்கு வாழைக்கனியினைக் காட்டுமாறுபோல அடியேற்கு ஓர் திருப்தி சொல்லியனுப்பிவிடலாமென்று நினைத்தோ தேவரீர் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளியதென்று மனமயங்கிப் பயந்து அழுதனன். அவ்வாறு அழுது நிற்பவனைச் சிவபெருமான் புன்னகையோடும்

பார்த்தருளி அவன் மீது தமது கிருபா நோக்கத்தினைச் செலுத்தி பிரமனே! இனி நீ ஒன்றற்கும் அஞ்சற்க யாம் சொல்லுவதை ஞாபகத்தோடு கேட்டிடுக நீ முறைகூறிய சங்காசுரனை யன்றி அவனுக் கிளைய கமலாசுரனென்பவன் ஒருவனிருக்கின்றான் அவனோ சகல லோகங்களையு முண்ணத்தக்க பராக்கிரமத்தை யுடையவன், தனது மாயையினாலும், வரத்தினாலும் முனிவர்கள் தேவர்கள் பெரியோர் கள் முதலாயினோரைப் பகைத்துன்பஞ் செய்யத்தக்க கொடியவன். அழலுக்கு மிஞ்சிய கோபத்தை யுடையவன் அவனைக்கொல்லுவ தற்கு ஆயிரம் உருத்திரர்கள் ஒருங்கே கூடினாலும் பதினாயிரம் விண் டுக்கள் ஒருமிக்கச் சேர்ந்தாலும் இலட்சம் பிரமதேவர்கள் ஒன்றாய் விரோதித்தாலும் ஒரு காலத்தினும் அவனைக் கொல்ல மாட்டார்கள். அவன் உயிரோடிருக்கின்றவரையில் தானே தமையனான சங்காசுரனை வெல்லுவதற்கு விண்டுவினாலாவதொன்று? ஆகலால் அடுத்தோர் களுக்குச் சகல விடர்களையும் போக்கி ஆதரிக்கவல்லவர் விக்கினராச ராகும். நீயவரிடத்திற் சென்று சரணடைவையாயின் இப்போதே உலகமுழுவதும் வேதாகமபுராணங்களை வழங்கியருளுவர் எதிர்த்து யுத்தஞ் செய்துவருகின்ற பராக்கிரமத்தினையுடைய கமலாசுரனையுஞ் சங்கரிப்பர் சகலலோகத்திற்கும் இன்பத்தைக் கொடுப்பவர் பின்னர் கேசவன் சங்காசுரனைக் கொன்று, நீ பிரதிதினம் நியமத்தோடு பூசித்துவந்த வேதபுத்தகங்களைக் கொண்டுவந்து உனக்குக் கொடுத்திடு வன் இனியுனது ஆயாசத்தை விட்டுவிடக் கடவையென்று திருவாய் மலர்ந்தனர்.

இவ்வாறு சிவபிரான் சொல்லாகிய அமிர்தத்தைப் பிரமன் பான ஞ்செய்து வளப்ப மிகுந்த ஆனந்தக் களிப்போடு தனது லோகத்திற் சென்று பதுமாசனத்திலிருந்து, விக்கின ராஜருடைய திருவுருவத் தை மனத்திற் றியானித்து, அவரது ஏகாட்சர மந்திரத்தைச் செபஞ் செய்து கொண்டு யோகத்திலிருந்தனன். அந்தயோகத்திற்கு விநாய கமூர்த்தி கிருபை கூர்ந்து பரசு - கமலம் - பாசம் - அங்குசமெனனும் இவைகளைத் தாங்கியிருக்கின்ற நான்கு திருக்கரங்களோடும் திரிநே த்திரங்கள் விளங்கும்படியாக இருமருங்கினுஞ் சித்திபுத்திகள் சமே தராய்ச் சிங்கவாகன மூர்ந்து பிரத்தியட்சமாயினர். உடனே பிரமன் விழித்தெழுந்து மனமுருகி ஆனந்தக்கண்ணீர் சொரிந்து, அடியற்ற மரம்போலச் சாஷ்டாங்கமாக விழுந்து மீட்டுமெழாதபடி பூமியிற் கிடந்தனன். அவ்வாறு கிடப்பவனை விநாயகமூர்த்தி கிருபையோடும் பார்த்து, தமது திருக்கரத்தால் அவன் கரத்தைப் பிடித்தெழுப்பி, பிரமனே! வேதாகமபுராணங்களென்று சொல்லப்படுகின்ற அம்மூ

ன்றும் நமது முகத்தில் மூன்று கண்களாகவிருந்து பிரகாசிக்கின்றன அவைகளை நீ இறந்துபோய் விட்டதாக நினையற்க அவைகளைக் குறித்து இனி யாதொரு துயரமுங் கொள்ளற்க யாம் அவைகளைப் பழையபடி லோகங்களிற் பிரகாசிக்கச் செய்குவம். தேவர்கள் முனிவர்கள் மனிதர்கள் முதலாயினோருடைய துயரம் நீங்குமாறு இப்போதே யாம் பூலோகத்திற்சென்று கமலாசுரனைச் சங்கரிப்போம் பின்னர் கேசவன் தனது நித்திரையினின்று மெழுந்தவுடன் நமது கிருபையினால் அவன் தமையனாகிய சங்காசுரனைக்கொல்லுவன். ஆதலால் இனி உனது கவலைகளை யொழித்து சந்தோஷமாயிருக்கக் கடவையென்று திருவாய்மலர்ந்து, உடனே விநாயக மூர்த்தியானவர் பிராமண வடிவங்கொண்டு வேதாகமபுராணங்களை எழுதியிருக்கின்ற ஓர் புத்தகத்தை யுண்டாக்கி அவைகளைத் தமது தோளின்மீதேற்றிச் சீடர்கள் ஆயிரம்பேர் தம்மைப் புடைசூழ்ந்து வரும்படி அளவற்ற சூரியர்கள் ஏக காலத்திலுதயஞ் செய்ததுபோல் ஆகாயத்தினின்றும் பூலோகத்திலிறங்கி வந்தனர் அவ்வாறவை சுநத ஆசிரமத்தில் வசித்திருக்கின்ற முனிவர் சமூகங்களறிந்து அளவற்ற அந்தணர்களுடைய பிரகாசந்தோற்றக் கண்டு, இப்பிரகாசம் எங்ஙன முதித்து இங்ஙனம் வருகின்றதென்று இமையார் நாட்டத்தினராய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள் பின்னர் அந்தணராய் எழுந்தருளிய விநாயகமூர்த்தியானவர் தமது திருக்கூட்டத்தோடும் அவ்வாசிரமத்தையடைந்தனர் உடனே ஸ்நாநம்-சந்தி-செபம் ஓமம் வேதாத்தியயனம். தேவபூசை-அதிதிபூசை - வைச்சுவதேவம் என்று சொல்லப்பட்ட நித்திய கருமங்களெட்டினையுந் துறந்து, பல இடையூறுகளிலுந் துரத்திலு மூழ்கியிருந்த முனிவர்களெல்லாம் உய்ந்தோம். உய்ந்தோமென்று கூத்தாடி, வெய்யிலால் வாட்டமுற்றிருந்த பயிர்களெல்லாம் மழைபொழியக் கண்டதுபோல மனமகிழ்ந்து, சீடர் கூட்டத்தோடு மெழுந்தருளிவந்த அந்தணர் பெருமானுடைய திருவடிகளில் பலமுறை சாஷ்டாங்கமாக வணங்கி ஆனந்த பரவசங்கொண்டு கைகொட்டிகும்பிட்டு, இதனைச் சொல்லுவதாயினார்கள் ஓ அடியேங்கள் தவத்தின்பேறாக வெழுந்தருளிய வேதவித்தகரே நாடோறும் இடையூறுகள் செய்துவருகின்ற கமலாசுரனால் அடியேங்கள் பலசடங்கலி லுழன்று ஆசார முதலியவைகளை யிழந்து மாசினையடைந்திருந்தோம். இன்று தேவரீரைக் காணத்தக்கபேறு அடியேங்கட்குக் கிடைத்ததினாலே இப்போதே அவ்விடையூறுகளனைத்தையும் நீங்கிச் சகல பாக்கியங்களையும் பெற்றோம். பூருவத்தி லடியேங்கள் பெரிதான தவங்களைச் செய்திருந்தபடியால் இச்சனனத்தில் தேவரீரைக் காணும்படியான சம்பந்தங் கிடைத்தது அடியேங்கள் எளிதில் கடைத்

தேனுமாறு இங்ஙன மெழுந்தருளிய தேவரீர் பூர்வம்வசித்திருந்தது எவ்விடத்து? இப்போது இங்ஙனங்கிருபையோடுமெழுந்தருளியகாரண மென்ன? அதனை அடியேங்கட்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள்.

அதற்கு அந்தணவடிவங்கொண்டெழுந்தருளிய விநாயகமூர்த்தியானவர் கிருபைசுரந்து, ஓ தவத்தர்களே! உலகத்தில் அவ்விய வவ்வியங்கள் சிறிதுமில்லாது நித்தியநைமித்தியமுதலிய கருமங்களின்றிருப்பதை யாமறிந்து, வேதமுதலான சகல நூல்களும் எழுதப்பட்டிருக்கின்ற புத்தகங்களைக் கொண்டுவந்தோம். இவைகளை நீங்கள்வைத்துக்கொண்டு சகலகிரியைகளை முன்போலவே செய்துகொள்ளக்கடவீர்கள். நமது நாமத்தை மல்லாலரென்று சகல சாஸ்திரங்களுங் கூறும் மூவுலகத்தாரும் அப்பெயரே இயம்புவார்கள். நமக்கு இவ்விடத்தில் ஓ ரிருக்கைந்து, உங்கள்கவலைகளனைத்தையும் நீங்கிப் பேரின்ப முற்றிருப்பீர்களென்று திருவாய் மலர்ந்தனர். அதைக் கவுதமர் முதலிய முனிபுங்கவர்கள் கேட்டு மனமகிழ்ந்து, நாம் அளவற்ற தவங்களினால் பிரார்த்தித்துப் பெறத்தக்க வரம் யாதோ அதனை இவ்வந்தணர்பெருமானே கொடுத்தருளினரென்று ஆனந்தமுற்று. அவர் வசித்திருப்பதற் கேற்ற ஓர்விடுதியைத் தெரிந்து கொடுத்து, சகல துயரங்களினின்று நீங்கினவர்களாய்ச் சிலர் பூர்வத்தில் வேதாகமபுராணங்களையுண்டாக்கியபரம்பொருளே யிவரென்று துதிசெய்தார்கள் சிலர் அவைகளை அடியேங்கட்குத் தேவரீர்திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தார்கள். சிலர் அவரா[illegible] நான்குவேதங்களையுங்கிரமமாகச் சொல்லக்கேட்டு ஆனந்தித்தார்கள். சிலர் அவ்வேதங்களினுடைய உண்மைப்பொருள்களைக்கேட்டுச் சந்தேகநிவிர்த்திசெய்துக்கொண்டாகள். சிலர் சாத்[illegible]விசாரணையினால் திரிபதார்த்தங்களினுடைய நிச்சயந் தெரிந்துகொண்டார்கள். சிலர் புராணங்களையெல்லாம் ஆதியோடந்தமாக வினவிப்பேரின்ப மடைந்தார்கள். சிலர் தாங்கள் கேட்டவாறு மற்றையருக்கும் போதனை செய்துக்கொண் டிருந்தார்கள்.

இவ்வாறு அவ்வாசிரமத்திலிருந்த முனிவர்களெல்லாம் மல்லாலருடைய திருவடிகளைத் தினந்தோறும்பணிந்து அவரால் வேதமுதலான சகல நூல்களையும் வரன்முறையாகக் கேட்டுத் தெரிந்துகொண்டு அவைகளைத் தங்கடங்களுடைய சீடர்கட்குத் தாங்களே ஓதுவித்து அவர்களால் உலக முழுதும் அவைகளைப் பரவச்செய்து யாவருஞ் சகல கருமங்களையும் நாடோறும் பூர்த்தியாகச் செய்துவ

கொண்டு சந்தோஷமாயிருந்தார்கள். இப்பால் பிரமனென்பவன் முன்னர் சிவபெருமான் தனக்கருளிச்செய்த வேதநூலைப் பிரதினம் பூசித்ததற்கு உண்டாகிய இடையூற்றினை இன்னும் நீக்கிக்கொள்ளாத சிறிய கவலையையுடையவனாயினும் அவ்வேதநெறிகள் எங்குஞ் செழித்தோங்கி நடந்துவருவதினால் தான் பேரானந்தமுற்றுச் சதாகாலமும் விநாயகமூர்த்தியைத் தியானஞ்செய்து வந்தனன். இவ்வாறு வேதாகமபுராணங்கள் உலகமனைத்தும் பரவிப்பிரகாசமுற்றிருப்பதை உய்யும்வகையுணராத கமலாசுரனறிந்து தனது தமையனாகிய சங்காசுரனையடைந்து, அண்ணலே! யாம் வேத முதலானவைகளை யெல்லாம் அபகரித்தும் வீணாயிற்று, அஃதெவ்வாறெனில் சுந்தர ஆசிரமத்தில ஓரந்தணன் அவைகளைக் கொணர்ந்து வந்தான். அதனால் இரவியைக்கண்ட இருளைப்போல அந்தந்த வருணாச்சிரம தருமங்கள் குறைவில்லாமல நிறைவேறி வருகின்றன. அவ்வவர்கள் யாகாதி விரதங்களைச்செய்து அவிர்ப்பாகந்தந்து வருவதினால், தேவர்களெல்லாம் அவ்வவிப்பாகங்களை யேற்றுப் பூரித்திருக்கின்றார்கள் இனி அத்தேவர்களும் விரதியரும் நம்மை என்னமாய் மதிப்பார்கள், இவ்வுலகத் துள்ளோர்தான் என்னமாய் மதிப்பார்கள்! சிறியோர்களும் கண்டு நகைக்கும்படியான பழிப்பினுக்காளாயினேம் ஓர் காரியத்தைத் திண்ணமோடு செய்யாதிருப்பதேபெருமை அப்படிச்செய்தும் அதிற் பிழைநேருமாயின் அதற்கு மிக்க சிறுமைவேறென்ன விருக்கிறதென்று துயரமுற்றுச் சொன்னான். அதனைச் சங்காசுரன் கேட்டு, மெய்குலுங்கநகைத்து உலகம் பதைக்கும்படியாக இருவிழிகளையும் வேறுகாட்டி தம்பி! ஏன் வீணில் மயங்குகின்றனை மிகுந்த வயிரமான பதார்த்தங்களைச் சேதித்த ஓராயுதத்திற்கு இளம்புல்லைச் சேதிப்பதும் அரிதோ இந்திரன்-பிரமன் விண்டு முதலாயினோரும் நமக்கு நிகராகமாட்டார்களே! மனைகடோறுஞ் சென்று பிச்சையேற்கின்ற ஓரந்தணனோ நமக்கு நிகராகுவன் நீ விரைவில் அவனைக்கொன்று அவன் வைத்திருக்கின்ற வேதநூல்களைக்கைக்கொள்ளுகவென்று விடைகொடுத்தனன். உடனே கமலாசுரன்காட்டைநோக்கிச்செல்லுங் கடுங்கனலைப்போல் வெழுந்து வேவுகாரர்களையழைத்து நமதுசதுரங்கசேனைகளும் யுத்தத்திற்கா யுத்தமாயிருக்கும்படி வள்ளுவனைக்கொண்டுமுரசறைவித்தலும், சங்காசுரனுடைய அரண்மனைவாயிலுக்கு முன் அளவற்ற வீரர்கள் இரதகஜ துரகபதாதிகளாய் வந்து சேர்ந்தார்கள் அதற்குமேல் கமலாசுரனென்பவன் ஸ்நானபான முதலியவைகளைச் செய்து ஆடையாபரணதிகளை தரித்துக்கொண்டு தும்

யைமாலையினைச் சூடி அரமனைவாயிலில் நின்ற யுத்தசன்னத்தனைப் வெளிக்கொண்டு தனது சேனாசமுகத்தில் வந்து அந்தவீரர்கட் கேற்றபின்னும் அளவற்ற ரதங்களையுங்-கஜங்களையும்-பரிகளையும்-படைகளையும்-உதவிசெய்து தானுங் குதிரைமீதாரோகணித்து, வெற்றிச்சங்கம்-பேரிகை முதலானவைகள் சத்திக்கவும், மங்கல கீதங்கள்முழங்கவும், மாகதர்விருதெடுத்துக்கூறவும்குடை-கொடி-குஞ்ச முதலானவைகள் இருமருங்கினும் நெருங்கவும், தூதர்கள் முன்னதாய் ஓடவுமாக யுகாந்தவெள்ளத்திலெழுகின்ற வடவா முகாக்கினியைப்போலச் சகலசேனாசமுத்திரங்களுந்தன்னைப்புடை சூழ்ந்து வரும்படி சுந்தர ஆசிரமத்தைநோக்கிச்சென்றனன். அப்போது அவ்வாசிரமத்துள்ள முனிவர்கட் கெல்லாங்கேட்கும்படி ஒரு ஆகாயவாக்கானது உங்களையும்மல்லாலரையு நெருங்கிப்போர் செய்ய அதிகவுக்கிரத்தோடு கமலாசுரன் வருகின்றான் சாக்கிரதை யாயிருங்கள் என்றுண்டாயது, அவ்வாக்கினைக்கேட்டமாத்திரத்தில் முனிவர்களெல்லாம் பயந்து மல்லாலரிடத்திற்போய்ப்புடைசூழ்ந்து பலமுறை பணிந்தெழுந்து கைகூப்பி, சுவாமி! எவ்வளவேனும் இரக்கமில்லாமல் சகலலோகங்களினுந் துன்பஞ்செய்துவருகின்றகமலாசுரனென்பவன் ஆலகாலவிடத்தினைப்போல அடியேங்களையெல்லாங் கவளமாகக்கொள்ளும் பொருட்டுச் சதுரங்கசேனைகளோடும் வெளிப்பட்டு வருகின்றனன் அப்பாதகனால். அடியேங்கட்குண்டானபயங்கரத்தையாவர் நீக்கவல்லர்கள் இனி அடியேங்கள் யாவரைச் சரணடைவோம் எங்ஙனமேனுந் தப்பிஓடிச்செல்லுவதற்குமோர்வழியையுங்காணோம். ஐயோ? இதற்கென்னசெய்யவல்லோம்! அக்கமலாசுரனைச்சங்கரிக்கத்தக்கவர்கள் யாவரிருக்கின்றார்களென்று சொல்லிக்கண்களில் நீர்சிந்தும் படியாக யாவரும் மனமநொந்துபுலம்பினார்கள்

இவ்வாறுபயந்து புலம்புகின்றமுனிவர்களைமல்லாலராக வந்த ..யகப்பெருமான்கிருபையோடும்பார்த்து ஓ-தவசீலர்களே! நீங்கள்யாவரும் என்பின்னே வந்திருக்கக்கடவீர்கள் ஓர்நாகமிருக்குமிடத்தில் அளவற்ற எலிக்கூட்டங்கள் கடல்போலநெருங்கிவந்தாலும் அந்நாகத்தைவெல்லமாட்டா, இனியென்னை ஒரேழைப்பிராமணனென்றெண்ணுதீர்கள், எனது பராக்கிரமத்தை நீங்களே பார்ப்பீர்களென்று சொல்லி நினைத்தனர். உடனேதமது மாயையினால் அளவற்றசேனைகள் ஆயுதபாணிகளாயும் வீரகண்டாமணியைத் தரித்த கால்களையுடையவர்களாயும் தமது காற்றுகளினால் கடல்களையெல்லாந்தூக்கவல்ல பெருங்கூட்டத்தினராயும் அண்டகடாகங்களை எல்லாம்பொடிசெய்யத்தக்க ஆண்மையினும் பராக்கிரமத்தினும்

யிருந்தவர்களாயும் உண்டானார்கள். அளவற்ற வாத்தியங்கள்முழங்கின, குடைகொடி முதலிய சின்னங்கள் எத்திசைகளினும் நெருங்கி எங்கெங்கும் விருதுகள்பாடினார்கள் அச்சேனைசமுத்திரங்களினுண்டானஓசையானதுபிரளயகாலத்திலுண்டாகுங் கடலொலியினுமிகுத்துச் சத்தித்தது. இச்சேனைகளேயன்றி வேறுவேறான அளவற்ற வடிவங்களோடு அத்திர சத்திரமுதலிய ஆயுதங்களைத்தாக்கியிருக்கின்ற நால்வகைசேனைகளும் எண்ணிறந்தனவாக உண்டாயின. பின்னரிச்சேனைகள்யாவும் தங்களைப்படைத்தருளிய சுவாமியைப் பணிந்தெழுந்து கைகூப்பி கர்த்தனே! அடியேங்களாலாகவேண்டிய பணிகளை ஆக்கியாபித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தன. இவ்வதிசயங்களையெல்லாம் சுவாமியைப் புடைசூழ்ந்திருந்த முனிபுங்கவர்கள்கண்டு பலமுறை வேதாகமங்களாற் றுதிசெய்தார்கள். இவ்வாறு நூதனமாயுண்டான சேனைகளும் முனிவர்களுந் துதிசெய்திருக்கின்ற சமயத்தில் மல்லாலராக வெழுந்தருளியிருந்த விநாயகமூர்த்தியானவர் அவ்வுருவத்தினின்றுமாறிப் பத்துத்திருக்கரங்களும், அவையுள்ள வலதுகரங்களில் தாமரைமலர்பாசம்·பரசு·அங்குசம்-தண்டம்-சக்கரம்-டமருகம்-தோமரம் என்னு மிவ்வைந்தையுந் தரித்தவராய், பருத்துநீண்ட திருமேனியையுடையவராய். சந்திரனைதரித்தகிரீடம் மூன்றுகண்களுந் தரித்தவராய், வீரகண்டாமணியைத் தரித்த திருவடியுடையவராய் எழுந்தருளினர் அவ்வற்புதத்தேவர்கள் முனிவர்கள் முதலாயினோர் கண்டு ஆனந்தமடைந்தார்கள் இவ்வாறுவிநாயகமூர்த்தி செய்தருளிய திருவிளையாடல்களையெல்லாம் முன்னர்கமலாசுரனிடத்தில் நின்றும்ஓடிவந்ததூதர்களில் அதனென்னும் ஒருவன்கண்டு, உடனே அவ்வசுரனி[illegible]த்திற் சென்று பணிந்தெழுந்து, ஆண்டவனே ! சுந்தர ஆசிரமத்தி[illegible]ந்த மல்லாலனென்னு மந்தணன் ஓர் நொடிப்போதில் நால்வகைச்[illegible]னைகளோடு அளவற்ற வீரர்களையுண்டாக்கித்தானுஞ் சர்வாயுதபா[illegible]யாயுத்தத்திற் காயத்தப்பட்டிருக்கின்றனன். அவனை வெல்லவல்லவர்கள் எவ்வுலகங்களினுமிரார்கள் அவன் உண்டாக்கிய சேனைகட்குள் மிகவுமிளைத்தவனுயிருக்கிற ஒருவன் தாக்குவனுயின் நமதுசேனைகள் யாவும் மடியும்போலும், இப்போது அவன் உண்டாக்கியிருக்கின்ற சேனைகள் ஒருவேளை தேவரீர் ஆயுதவல்லபத்தாலிளைக்கினும் உடனேமீட்டும் அளவற்றசேனைகளை யுண்டாக்கி யுத்தஞ் செய்யத்தக்க வல்லமையுடையவன். ஆதலால் இவைகளையெல்லாக் தேவரீர் நிர்க்காலோசனைசெய்தருளவேண்டுமென்று சொன்னான்.

இவ்வாறு உள்ளவித்தையெல்லாம் உரிமையோடு தூதுவன் சொல்லியும் அவைகளைக் கமலாசுரன் சிறிதும் மேயாசியாது, அழிவு காலத்துக்கேற்ற புத்தியினையே மீக்கொண்டு தனதுபராக்கிரமத்தினையே பெரிதாகமதித்து, ஓ வித்தகனே! இதுகாறும் இந்திரன்-பிரமன்-விண்டு-உருத்திரன்-முதலிய யாவரும் என்னெதிரில் நின்றவரல்லர், இப்போதுமுட்டியெடுக்கும் ஓர் அந்தணனோ எனக்கு நிகரானவன். அவனை ஓர் அக்கினி அத்திரத்தினாற் சங்கரித்து விடுகின்றேன் பாரென்று சொல்லிக் கண்கள்சிவந்து அழலைச் சொரியும்படியான கோபத்தோடு உலகத்தையெல்லா மெடுத்து விழுங்கிவிடு

உடனே அவன்சேனைத்தலைவர்களெல்லாம் அவனைப் பணிந்தெழுந்து தமது நால்வகைச்சேனைகளோடு முன்னேநடந்தார்கள். பின்னர் மல்லாலருடையசேனைகளும் பாவத்தோடு புண்ணிய மெதிர்த்தது போலக் கமலாசுரன் சேனைகளோ டெதிர்த்தது இரத வீரர்களோடு இரதவீரர்களும், யானைவீரர்களோடு யானைவீரர்களும், குதிரைவீரர்களோடு குதிரைவீரர்களும், வாள்வீரர்களோடு வாள்வீரர்களும், வில்வீரர்களோடு வில்வீரர்களுமாக நெருங்கிப் போர்செய்தார்கள். வேல்வீரர்களோடு வேல்வீரர்கள், அவருள் சிலவீரர்கள் பறவையொத்த பரிகளைப்பூட்டியிருக்கின்ற தமது ரதங்களைச் சிறகுற்றெழுந்த மலைகளைப்போலவும், உறவோடுபகைக்குங் கயவரைப்போலவும், பகைவர்களுடைய இரதங்களோடு பொருதுவித்து மண்டிலமிட்டார்கள். சிலவீரர்கள் மலைமுழைகளினின்றும் வெளிப்பட்டபறவைகள் அங்குமிங்குமாகப்பறந்து இரைதேடுதல்போல ஒருவர்படைகள் ஒருவர் இரதத்தில் நுழையும்படியாகத் தூண்டி ஆர்ப்பரித்தார்கள் சிலவீரர்கள் மலையின்கண்ணுள்ள விருக்கங்கள் யாவுமழையினால் அற்று வீழ்வதுபோலப் பகைவருடைய இரதங்கள்மீது தமது படைகளைப் பொழிந்து கொடி-கொடிஞ்சிமுதலியஉறுப்புகளை நிலத்தில்வீழ்த்தினார்கள் சிலவீரர்கள் தம்மோடுபோராடவேண்டினோருடைய இரதத்தைக் குறுகும்போது இடையில் அளவற்ற பிணங்கள்வீழ்ந்து தங்களிரதத்தை விடரும்படிச்செய்ய மனம்நொந்து, பின்னர் வேறொரு இரதவீரர்களழைப்ப மகிழ்ந்து போர்செய்தார்கள் சிலவீரர்கள் ஒருவரையொருவரெதிர்த்து குதிரைகளையும் பாகர்களையும் படைகளையுமிழந்து தமதுதலைத்தேரின்மீதும், உயிரை வானின்மீதுங் கூட்டினார்கள், சிலவீரர்கள் பன்னிருகோடி சூரியர்களுந் தமக்குள் பகைகொண்டு யுத்தஞ்செய்வதுபோலத் தமது இரதங்களை ஆகாயமார்க்கத்திற் செலுத்தி ஒருவரோடொருவர் கெடுமொழிகூறிப் போர்செய்தார்கள், சிலவீரர்கள் அந்தரமார்க்கமாகப் பற

ந்து யுத்தஞ்செய்து தமதுவலியும் உயிருங் குன்றும்படியாகப் யில்விழுந்து அங்குள்ள யானை முதலியவைகளையுங்கொன்று உயிர் விடுத்தார்கள் சிலவீரர்கள் தமதுதோள்கள்முறிந்துபோக உடனே சேமத்தேர்களில் சிங்க யேற்றினைப்போலப் பாய்ந்தேறி போராடினார்கள். சிலவீரர்கள் பகைவர்கள் விடுகின்ற படைகளால் உடல்கள் பிளக்கப்பட்டு உதிரவெள்ளமானது தமது பகைவர்களின்மீது பெருகியோடும்படியாகக் கிடைக்க அத்தேர்கள் அருவிபாய்கின்ற மலைகளைப்போலப் பிரகாசித்தன. சிலவீரர்கள்யானைவீரர்களசெய்த போரினால் தமது பரிபூட்டிய இரதங்களிற்றானே உயிரைவிடுத்து அரம்பைமாதர்களுடைய அல்குலென்னுந் தேரிலுவர்ந்து அவர்கள் கொங்கையாகிய யானைகளை இரண்டு கரங்களினாலும் வளைத்துப் போர் செய்தார்கள்

சிலவீரர்கள் இடியை யொத்துச் சத்திக்கும் பெருங்குரலினாலும் மழையைப்போன்று பொழியுமதத்தினாலும் மின்னலைப்போலப்பிரகாசிக்கும் படைகளினாலும், மேகங்களை யொத்து விளங்குந் தமது யானைகளின்மீது அம்மேகத்தை வாகனமாகவுடைய இந்திரனைப் போல விளங்கியுத்தஞ்செய்தார்கள். சிலவீரர்கள் தமது யானைகளால் பகைவருடைய யானைகளைத்தண்டத்தினாலும்புடைப்பித்து நீண்ட கோடுகளினால் அவைகளினுடலம் பிளவுபடும்படியாக முட்டிப் பலபடைகளைக்கொண்டு அப்பகைவருடைய உயிரைமாய்த்தார்கள் சிலவீரர்கள் ஓடுகின்ற இரதங்களோடு தமது யானைகளை யோட்டி வரைசிறகரிந்தோனாகி தேவேந்திரனைப்போல அவ்விரதங்களைமுடித்துச் சாடினார்கள் சிலவீரர்கள் பகைவருடைய தேரைமுட்டி யெடுக்கும்படி தமதுயானைகளையேவ அவைகளவ்வாறே முட[illegible]யுமெடுக்கவலியின்றி முன்னொருபோது கைலாயவரையையெடுத்த[illegible] அசுரனைப்போல ஓலமிட்டு முழங்கின சிலவீரர்கள் குதிரைவீரர்க[illegible]ய்தபோரினால் தமது உயிரையும் யானையையும் விடுத்து அரம்பை[illegible]து தனங்களாகிய இருகோட்டு யானைகளை நித்தலும் அணைந்துவாழ்வுற்றனர் சிலவீரர்கள் பகைவரைக் கொன்றல்லது மீளக்கூடதென்னும் வெஞ்சினத்தை மேற்கொண்டு காற்றோடும்செல்லும்அக்கினியைப்போல தமது குதிரைகளோடுஞ் சென்று கடல்போன்று விளங்குஞ் செருக்களத்தைத் திரைபோன்று விளங்கித் துழாவினார்கள். சிலவீரர்கள் தமது குதிரைகளைப்பகைவர் குதிரைகளின்மீது பாயும்படிவிடுக்க, அவைகளவ்வாறே பாய்ந்து கொன்று உடனே தமது தாளினால் நிலத்தினின்று மெழுந்து ஆகாயத்திற்சென்றுசூரியனுடைய குதிரைகளோடுஞ் சமர்செய்தன. சிலவீரர்கள்பகைவரு

டைய இரதங்களையும் யானைகளையுங் குதிரைகளையுமதஞ்செய்து அவர்கள் விடுத்தவாளியினால் முடிவில் நிலத்தில்வீழ்ந்து தேவமாதர்களுடைய நயனமென்னும் வாளியினால் மன்மதன் செய்யும் சமரைவென்றார்கள் இவ்வாறு இரதவீரர்களும் யானைவீரர்களுங் குதிரைவீரர்களும் ஒருவரையொருவரெதிர்த்து யுத்தஞ்செய்திருக்கப்பதாதியாயிருக்கின்ற சேனைகளிற் சிலர் இளையோர் - முதியோர்-இடிபுண்டோர்-பெண்டன்மை பூண்டோர் என்னுமிவர்களையுங் கரிபரிமுதலியவைகளையு மெதிர்ப்பதைவிட்டுத் தம்மையொத்த படைவீரர்களோடு யுத்தஞ்செய்தார்கள். சிலர் தமதுருவங்களைக் கேடகங்களினால் மறைத்துக் கரத்தில் வாளினையேந்தி ஒருவரை யொருவர் இடசாரி வலசாரியாகச் சுழன்று முடி-தோள்-மார்பு-இடை-தொடை முதலிய உறுப்புகளைக்குறிபார்த்துவெட்டினார்கள் சிலர் தமதுவில்லுகளைக் குனியவளைத்து அளவற்ற சரமாரிகளைஒருவர்க்கொருவர் தூண்டி, மறைந்து போர்செய்வோருடைய வில்லுகளையுந் தூணிகளையுங் கீழேவிழத்தள்ளி மலைபோன்ற தோள்களையும் முடிகளையும் அறுத்தெறிந்தார்கள் சிலர் பகைவருடைய சிரத்தினும் மார்பினுந் தோளினும் நிணம்-மூளை-தசை-முதலியவைகள் சிதறும்படியாகத் தண்டாயுதங்களைக்கொண்டு தாக்கினார்கள். சிலர்கதை-தோமரம்-விண்டி-பாலம்-முசலம்-கப்பணம்-எழு-மழு-சூலம்-குந்தம் முதலிய படைகளை ஒருவர்மீதொருவர் மாறிமாறிவிடுத்துப்போர்செய்தார்கள், சிலர் வீரசொர்க்கத்தினையே முக்கியமாகக் கோரினவர்களாய்த் தமதுபடைகள் முழுவதுமிழந்தும் மெய்யிற்றுக்கி யிருக்கின்ற படைக[illegible]ப்பரித்தும் பகைவர்களை யோட்டினார்கள். சிலர்தகரோடு தகர்த[illegible]குவதுபோல, முகங்களோடு முகங்களைத்தாக்கி ஒருவரையொ[illegible]வர் இறுகத்தழுவி நிலத்தில் வீழ்ந்தார்கள், சிலர் கைகளைக் கை[illegible]ளினாலுங் கால்களைக் கால்களினாலும் பின்னி ஒருவரை யொரு[illegible] உள்ளமுடலும் நடுங்கும்படியாக அதட்டினார்கள். சிலர்முட்டிகளில் முறைமுறையாகக்குத்தி ஜய உச்சாகத்தோடு ஒருவர்க்கொருவர் உயிர்நிலைகூறிப்புடைத்தார்கள். சிலர் தமதுவிழிகளிலனற்பொறி எழும்பும்படி உறுத்துநோக்கித் தோள்களைமாறிமாறித் தட்டி ஒருவர்மீதொருவர் பற்களைப்பதியும்படியாக வூன்றி நுணிநாவைக் கடித்து நிற்போருடைய தாள்களைத்தூவி நிலத்திலறைந்தார்கள். சிலர் பகைவருடையகன்னங்களில் சிவப்பெய்தும்படியாகப் புடைத்து, தலைகளை முறுக்கியெறிந்து கால்களிலணிந்திருக்கும் வீரகண்டாமணியைப்பறித்து வாயில்வைத்துகடித்தார்கள். அளவற்றவீரர்கள் பகைவர்விடுக்கின்றவாள்களினாலும்வேல்களினாலுங் கால்-கை முதலிய உறுப்புக்களையிழந்து மடல்களொழிந்த பனைகள்போலவும்

கி னின்றார்கள். அளவற்றவீரர்கள் தமது சிரங்களை யிழந்து கவந்த மாகியும் மானமொழியாதவர்களாய் யாளிபோலெதிர்த்துவருஞ் ச த்துக்களை வாளினால்வெட்டியெறிந்து நடனமிடுவார்கள் அளவற்ற வீரர்கள் முன்னர் தழைத்தோங்கியிருக்கு முருக்கையும், பலாசை யும், இலவையும்போலச் சமர்க்களத்தினின்று பின்னர் அவ்விருக் கங்களினின்று வீழ்கின்ற பூவையும் கனியையும்போல உதிரமய மானார்கள்.

இவ்வாறு இருதிறப்படைகளும் ஒன்றோடொன்றெதிர்த்து அகோரமான யுத்தங்களை விளைக்கும்போது அளவற்ற பிணங்கள் அச்சமர்க்களத்தில் மலைமலையாகக் குவிந்தன அம்மலைகளினின்றும் பெருகிய வுதிரவெள்ளமானது பலகுமிழிகளோடுந் திரைகளைவீசிக் கொண்டுசென்று கடலிற்பாய்ந்தது அவ்வுதிரவெள்ளத்தி லாழ்ந்து மிதக்கின்ற இரதங்களெல்லாங் கப்பல்களைப்போலவும், யானைகளெ ல்லாம் மலைகளைப்போலவும், குதிரைகளெல்லாம் நீர்நாய்களைப்போ லவும், கைகால் முதலிய உறுப்புகளெல்லாந் தாமரைமலர்போல வும், வெளுத்த நிணங்களெல்லாம் நுரைகளைப்போலவும், நீண்டகு டல்களெல்லாம் பாசிகளைப் போலவும் விளங்கின.

சிலபேர்கள் அவ்வுதிரவெள்ளத்தில் மிதக்குங் கேடயங்களைத் தெப்பமாகக்கொண்டேறி, யீட்டிகளைக் கோல்களாகக்கொண்டு செ லுத்திக் குடல்களை மாலையாசத்தரித்து, யானையின் கோடுகளைகொ ட்டிக்கொண்டு விளையாடல் செய்தார்கள், சிலபேர்கள் யானைகளி னுடைய விலாவெலும்புகளைவில்லாகவும் நரம்புகளைநாணாகவும் வீர ர்களுடையமுதுகெலும்பினை அம்புகளாகவுங்கொண்டு ஒருவரோ டொருவர் விளையாட்டாகச்சமர்செய்தார்கள் சிலபேய்கள் சில கன்றறியாதமுதுமைப்பேய்களுக்குமூளைச்சோற்றினையுந் தலை சிய உபகரணங்களையும் யானையினசெவிகளில்மிதப்பவைத்து அவ களின்குடர்களினால் இறுகக்கட்டி துதிக்கரங்களில் உதிரங்களை நிர ப்பித்தோளிலிட்டுக்கொண்டு சென்றுவிருந்தூட்டின. சிலபேய்கள் பந்தலிட்டாற்போலப் பறந்திருக்கின்ற பருந்துகளுடைய நிழலில் உதிரங்களைதெளித்துத், துகளடக்கி யானைகளின் சரீரங்களால் நாற் றிசைகளிலும் வேலிகோலிப் பிணங்களாகிய தவிசுகளில் விற்றிருக் க அவைகட்கெதிரில் சிலபேய்கள் தோத்திரஞ்செய்தும் சிலபேய்க ள் * துணங்கைகொட்டியுமிருந்தன. இவ்விதமாகப் போர்க்களமா னது சிறப்பெய்தி யிருக்குஞ் சமயத்தில் மானுமயனு மறியாத மல்

* துணங்கை இருகையுமுடக்கி விலாப்புற மொத்தியாடல்

லாலமூர்த்தியினுடைய சேனைகள் கமலாசுரனுடைய சேனைகளையெல்லாம் வெங்கிட்டோடும்படியாகச்செய்ய அதனைக்கண்ட கமலாசுரன் தனதுசேனைகளை கையமர்த்தி ‡ மல்லகதி-மயூரகதி-வியாக்ரகதி வானரகதி-விடபகதி என்னும் ஐவகைநடையினையும் வாய்ந்த தனது குதிரையின்மீதுநின்று, இடியேற்றினைப்போலச் சத்தித்து உலகங்களையழிக்க வெழுந்த வடவா முகாக்கினியின்மீது நெய்க்கடல் பெருகுமாறுபோலக் கோபித்துச் சீறினர். அச்சீற்றத்தைக்கண்ட மாத்திரத்தில் சிலர்நடுங்கியும், சிலர்மெய்மறந்தும், சிலர் ஓடியும் சிலர் ஊக்கமிழந்தும் போனார்கள் பின்னர் கமலாசுரன் தன் குதிரையை இடசாரி வலசாரியாகவோட்டி, மல்லாலமூர்த்தியினுடைய சேனாசமுகங்களிற்புகுந்து தலைகளுருளவும், உதிரம்பெருகவும், குடர்களலையவுமாக அளவற்ற வீரர்களைச் சின்னபின்னமாக வாட்டி, மீண்டும் எமது கர்த்தனெதிரில் வந்துநின்று நாகப்படையை யெடுத்துத் தனது குலகுருவாகிய சுக்கிரனாலுபதேசிக்கப்பெற்ற மறையை நூற்றெட்டுருசெபித்து அதிவேகத்தோடு விட்டனன், அப்படை வெளிப்பட்டமாத்திரத்தில் தேவர்கள்முதலிய சகலரும் விழிகள்கூசி மருண்டு விஷமுண்டவரைப்போலக் களைக்கும்படி ஒன்றனந்தனமாகச் சொலித்துக்கொண்டு சர்ப்பாபரணத்தைத் தரித்த மல்லாளமூர்த்தியினுடைய படைகளோடெதிர்த்து தனதுவேகமுள்ள உயிர்ப்பினாலும் வெப்பமாகிய விடத்தினாலும் விஷமிருக்கின்ற பற்களினாலும், அஞ்சவிழிக்கின்ற பார்வையினாலும் பேரொலி செய்கின்ற குரலினாலும், அளவற்ற சேனைகளை அறப்படவாட்டிநின்றது, அதன்செயலை முக்கண்மூர்த்தியாகிய மல்லாலர்பார்த்துப்புன்னகைசெய்து தமது திருக்கரத்திலிருக்கின்ற சக்கரப்படையை விடுத்தனர். அது ஆயிரமாயிரமாக வுருக்கொண்டு கமலாசுரனுடைய படைகளையெல்லாம் துகள்படுத்தி, ஓர் நிமைப்போதில் நாகப்படையையறுத்தெரிந்து, கர்த்தருடைய திருக்கரத்தில் மீண்டது பின்னர் கமலாசுரன் தேவர்களுங்கண்டு நடுங்கத்தக்கதாகத் தண்டாயுதத்தையெடுத்துத்தாக்கினன். அதற்கு எமது கர்த்தர் இவன் வலியினெல்லையைக் காணுதுமென்று தாமுமொரு தண்டாயுதத்தைத் தாக்கி, நெடுநேரம் அவனோடு சமராடினர். உடனே அவ்வசுரன் மல்லாலருடைய மார்பின்மீது ஓர் கதாயுதத்தை யேவினன், அதை எமது கர்த்தர்கண்டு நகைசெய்து அவ்வவுணன்மெய்முழுதும்வெயர்த்து நடுங்கும்படியாக அதனைத் தமது கதாயுதத்தை விடுத்துத் துகள்படச் செய்தனர்.

† இக்கதி ஐந்தையும் துரககதியென்ப.

பின்னா கமலாகரன் விஷ்ணுவின் சக்கரமும் வாய்புதைத் தேவல் செய்யத்தக்க தனது சக்கராயுதத்தை விதிப்படிசோடசவுபசாரங்களுடன் பூசித்துச் சுழற்றிச் சிவகுமாரனைக் கண்டித்து வருவதாகவேண்டி வேகமாய் செலுத்தினன், அஃது அவ்வாறே நாற்றிசைகளினுஞ் சொலிப்பெய்த அளவற்றதீப்பொறிகளை யிறைத்துப் பற்பல ஆயுதவிதங்களைப் படைத்துச் சொல்லப்படாத வுற்பாதங்களைக் காட்டிப் பிரமாண்ட மாருதமும் பயந்தொளிக்கும்படி வேகங்கொண்டு சீறிவர அதனை விநாயகமூர்த்தியினுடைய திருக்கரத்திலிருந்த சக்கரமானது ஒரு கவளமாய் விழுங்கிவிட்டது. இப்பால்விண்ணவர்கள் ஆண்மையையடக்கவல்ல அவுணனானவன் வடவைக்கனலைத் திரட்டிவடித்து வைத்தாற்போல விளங்குந் தனது சத்திப்படையை விடுத்தனன். அதனைத்தா னவராண்மையை யடக்கவல்ல எமதையனானவர் தமது அங்குசப்படையினாற் றுணிசெய்தனர். உடனே கமலாகரனானவன் விழிகலனற்பொறிபறக்கக் கோபித்துத் தனது மழுப்படையை அதிகவிரைவோடுஞ் செலுத்தினன் அஃது கடலிலெழுந்த கடுவிடத்தைப் போலச்சீறி அடர்ந்துவருதலும் மல்லாலமூர்த்தியானவர் தமது மழுப்படையினைக்கொண்டு அதனைக்கண்டித்தனர். பின்னர் அவுணபாதகன் பாசத்தை யெடுத்து விடுத்தனன். அதனை எமது கர்த்தரானவர் பலதுண்டங்களாக வறுத்தெறித்தனர். இவ்வாறு தனக்கருமையாகக் கிடைத்திருந்த படைகளெல்லாம் விநாயகப் பெருமானாலழிந்துபோன அபாயத்தை கண்ட கமலாசுரன் என்செய்வன் செருக்கற்றுப் பெருமூச்செறிந்து மானமுங்கோபமும் மனதைப்பாதிக்கச் சர்ப்பத்தைபபோலச்சீறி, இனி இவனைத் தெய்வப்படைகளா லதஞ்செய்யவேண்டுமென்று பிரயோகித்தவனாய் வருணாஸ்திரத்தையெடுத்து தூபதீபநைவேத்திய முதலிய உபசாரங்களைச்செய்து, நீபோய் மல்லாலனையும் அவன் சேனைகளையும் நாசஞ்செய்து மீளக்கடவையென்று மந்திரபூர்வகமாகப் பிரயோகித்தனன். அந்தப்பாணமானது வெளிப்பட்டவுடன் சர்வசங்காரகாலத்திற் பரமசிவகடாட்சத்தால் உலகங்களையழிக்க சத்தசாகரங்களையும் உடைத்துக்கொண் டெழும்பெரும்புறக் கடலைப்போலச் சலப்பெருக்கையுண்டாக்கி அலைகளைப்பெருக்கி இடிகளையொத்ததிர்ந்துபுரண்டு அதிவேகமாய் வருவதை தேவாதிதேவராகியமல்லாலர்கண்டு பிரளயவெள்ளத்தைச் சுவற்றுந் தீட்சண்ணியமுள்ள அக்கினியாஸ்திரத்தை யெடுத்துவிட்டனர் அதைவிட்ட மாத்திரத்தில் வானத்திலெழுந்து பகபகவென்று நகைத்துக் கொண்டல்கொண்டலாய்ப் புகையைப் பெருக்கிச் சுவாலைகளை வீசி அனற்பொறிகளைக்கக்கி உலகங்களைமூடியிருந்த சலத்தை நிமைப்போதில்வறள உண்டுவிட்டது.

அதைக்கண்ட கமலாசுரனென்பவன் ரவுத்ராகாரமாகக் கோபித்துத் துரிதமாய் வாயுவாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித்தான், அது வில்லிலிருந்து வெளிப்பட்டவுடன் ஊழிக்காலத்தில் மோதும் பிரசண்டவாயுவைப் பெருக்கிச் சுழல்காற்றைப்போ லெங்கும்வீசி, அக்கினிப்படையினுடைய வலியினையடக்கி நிற்க, அதை மல்லாலமூர்த்தி கண்டு விரைவில் நாகாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித்தனர் உடனே அஃது தேவர்களும் மயங்க உலகத்தை விளக்குஞ் சூரியனுந் தியங்கி வாடும்படி மேலிட்டு விசாலமாகிய படங்களைவிரித்து விஷங்களைக் கக்கிப் பலகோடி சர்ப்பங்களையுண்டாக்கி ஆலகாலவிஷமுமஞ்சச்சீறி வாயுவின் பெருக்கனைத்துங் கிரகித்து, விஷச்சுவாலைகள் பெருகப்பெருமூச்செறிந்து வருவதைக்கமலாசுரன் கண்டு கருடாஸ்திரத்தை யெடுத்து அபிமந்திரித்து அதிவேகத்தோடும் பிரயோகித்தான் அந்த திவ்வியபாணமானது வானத்திலெழும்பி சாங்கோபசாங்கமாய் கருடவுருவங்களைக் கொண்டு விசாலமாகிய சிவந்த சிறகுகளை விரித்து ஆர்ப்பாட்டங்களோடு போய்ச் சர்ப்பக்கூட்டங்களை மடக்கிக் கால்களிலிருக்கின்ற கூரிய நகங்களினற்பிளந்துகொன்றும், மூக்கினற்கொத்தி வாட்டியும் சிறகடியினல் மாய்த்தும், திசையென்கணுஞ் சாடியுங் கோபமடங்காமல் பகைவரைத்தேடி மேலிட்டுவர, அதனை எமதையன் கண்டமாத்திரத்தில்தமதுரிஷபாஸ்திரத்தினை யெடுத்துப் பிரயோகித்தனர் உடனேஅப்பாணமானது வலியகால்களையும் வச்சிரத்தையெடுத்துக் காட்டும் நீண்டகொம்புகளையுங்கொண்டு பெருமூச்சுவிட்டு அண்டகோளகையு மதிர்ந்து நடுங்கும்படி கர்ச்சித்து வெண்டயங்கள் கலீகலீரென்று சத்திக்க ாதங்களைப் பெயாத்துவைத்து, கருடாஸ்திரத்தின்வலியையுஞ் செய்கைகளையும் நிமைப்போதிலடக்கிச சத்துருவைச் சின்னபின்னப்படக் கண்டிப்பேனென்று உருத்துவருவதைக் கமலாசுரன் ரடு விரைவில் ஏமாஸ்திரத்தையெடுத்து மந்திரபூர்வகமாக வில்லேற்பூட்டிப்பிரயோகித்தனன். அந்தப் படையானது அதிகமகிமைகளோடும் ஆர்ப்பறித்து நந்திப்படையோடு மெதிர்க்க வலியற்று மயங்கி நாசமாகியபோது ரிஷபாஸ்திரம் முன்னினு மதிகமான உற்பாதங்களைக் காட்டிச் சமீபித்து வரும்போது கமலாசுரன் அதனுடைய வலிமையும் வேகத்தையும் நிதானித்து நறநறெனப்பற்களைக்கடித்து, உதடடையதுக்கி விழிகளில் தீப்பொறிசிதற மீசைபடபடவெனக்கோபித்துப் பிரமாஸ்திரத்தை யெடுத்துப் பூசித்து வில்லிற்பூட்டி ஆக்ரணுந்தபரியந்தமிழுத்துச் செலுத்தினன். அப்பாணமானது உடனே வானத்திற்சென்று வடவாக்கினியைப்போலச் சீறிக்கொக்கரித்துக் கலகலெனநகைத்துக் கணக்கிறந்த திவ்வியபாணகோடிக

ளைப் படைத்துப் பிரசண்டமாருதத்தைப்பெருக்கி உலகளனைத்து ந்திடுக்கிட்டு நடுங்கும்படி ஆர்ப்பாட்டங்களைச்செய்து அதிகவேகத் தோடுவந்து சிவபிரானுக்கு வாகனமாகிய நந்திப்படையைக் கண்டு பயந்து, கரங்களைக் கூப்பித்தொழுது பிழைத்தோம்பிழைத்தோமெ ன்று கூவிக்கொண்டு திரும்பியது அதைக் கமலாசுரன்கண்டு கா லாந்தகனைப்போலக் கோபித்து உடனே நரசிம்மாஸ்திரத்தை யெடு த்துச் சோடசோபசாரங்களோடும் பூசித்துப் பிரயோகஞ்செய்தான் அது வெளிப்பட்ட மாத்திரத்தில் அளவற்ற மாய்கைகளை விளைத் து எங்கும் இருள்மயமாக மூடி அதிநாக்கிரத்துடன்சர்ப்பத்தைப் போலச் சீறிவந்து நந்திப்படையோடெதிர்த்து அளவற்றயுத்தங்க ளைச் செய்துநிற்க எமதையனுகிய மல்லாலமூர்த்தி அதுகண்டு சர பத்தின் வடிவாகிய வீரபத்திராஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித் தனர். உடனே அத்திவ்விய ஸ்திரமானது வானமீதெழுந்துசீறி வ டவைக்கனலும் ஆலகாலமும் நடுங்கி அஞ்சத்தக்கதாகக்கொதித்து அதிக வேகமாய் வந்து நந்திப்படையுடன் போராடுகின்ற நரசிம்மா ஸ்திரத்தை மடக்கிக்கொண்டு அதன்வீராப்பை மூற்றிலு மடக்கித் துரத்திவிட்டது இவ்விதங்களாகத்தான் செலுத்தியதெய்வப்படை களனைத்தும் பிரயோசனப்படாமல் பின்னிடுவதையும் மல்லாளர் ப டைவீறி யிருப்பதையுங் கமலாசுரன் கண்டு திடுக்கிட்டு நிமைப்போ திற் சராசரப் பிரபஞ்சங்களை வாட்டிச் சாம்பராக்கவல்ல பாசுபதா ஸ்திரத்தையெடுத்து திருமஞ்சன தூபதீப முதலிய சோடச வுபசா ரங்களையும் நடாத்திப் பத்திபூர்வகமாகத் துதித்து, வில்லிற்பூட்டி வட்டாகாரமாக வளைத்துப் பிரயோகித்தனன். அதை மல்லாலமூர் த்தி கண்டமாத்திரத்தில் இதற்கு வீரபத்திரப்படை எதிர்க்கமா ட்டாதென்று நிதானித்தவராய் தம்மிடத்திலிருக்கின்ற பாசுபதா ஸ்திரத்தை யெடுத்து மானதபூசையினல் பல வுபசாரங்களையு நி றைவேற்றி அச்சத்துருவிடுத்தபாணத்தினல் உலகங்கட்குயாதொ ருதுன்பமும் நேராதபடி பாதுகாப்பதுவுமன்றி அவன் விட்டபடை யையுமாற்றித் திரும்புவையென்றுசொல்லி மந்திரபூர்வகமாகப்பிர யோகித்தனர். உடனே அப்பாசுபதாஸ்திரமானது பலமகிமைக ளோடு அதிவேகத்துடன் சென்றெதிர்த்து பிரசண்டமாருதத்தை ஒருபுறத்திலெழுப்பியும் வடவாமுகாக்கினியையொருபுறத்திலெழு ப்பியும் ஆலகாலவிஷத்தைஒருபுறத்திற்பெருக்கியும்தாபாக்கினியை யும் புகைப்படலங்களையும் ஒரு புறத்திலுண்டு பண்ணியும், பூதப சாசு டாகினிமுதலிய வருக்கங்களை ஒருபுறத்திற் சிருட்டித்தும்

தோமரம்-பிண்டி-பாலம்-கப்பணம்-முசலம்-சக்கரம்-எழு-மழுதண்டம்-ஈட்டி-எறி-வேல்-முசுண்டி-கவன்-நாஞ்சில்-இருப்புலக்கை-முத்தலைச்சூலம்-வச்சிரம்-வேல்-வாள் முதலிய ஆயுதங்களை ஒன்றனந்தமாக வீசியும். மேருமுதலிய அட்டகுலாசலங்கள் பிளக்கவும் நட்சத்திராசிகள் நெற்பொரிகளைப்போல வுதிரவும் சூரியன் இரதமும் சந்திரன் விமானமும் பங்கப்பட்டுச் சிதறவும் திசையானைகள் தாவரிக்கமாட்டாது வால்களைத் தூக்கி விரிட்டோடவும், வடவனலும் வெப்பத்தினை யடக்கிபயதுங்கவும், கீழுலவடுக்குகளும் மேலுலகவடுக்குகளுங்கலைந்து மாறுபடவும், சகலசராசரங்களுந் திடுக்கிட்டுமயங்கவும், வானத்தில் வேடிக்கைப் பார்த்திருந்த தேவர்களும் முனிவர்களுந் திகைத்துப் பயந்து திசைதப்பியோடவும் புவியைத் தாங்கிநின்ற கூர்மமுஞ் சேடனும் நொறுங்கிவாடவும் சத்தமேகங்களுங் கலங்கிக்காற்றில் பஞ்சையொப்பப் பறக்கவுமான இவ்வித வுற்பாதங்களைவிளைத்தும் அவுணர்கோன்விட்ட பாசுபதத்தை அதோகதிப்படுத்தித் தானவர்களை நூதனமாகப்படைத்துப் பாதுகாத்துமீட்டுந் தயாபரமூர்த்தியாகிய மல்லாலருடைய திருகரத்தில்வந்து சேர்ந்தது. ரிஷபாஸ்திரமும் அவ்வாறே மீண்டிகர்த்தனையடைந்தது.

இப்பால் கமலாசுரனென்பவன், தான்செலுத்திய பாணம்வியர்த்தமாகத் திரும்பியவுடன் திகைத்துத் தன்னைச் சமுத்திரம்போலச் சூழ்ந்திருந்த இரத கஜ துரக பதாதிகளைக் காணுதவனுயேங்கி இதனையோசிப்பதாயினன் கணப்போதிற் சராசரப்பிரபஞ்சங்களைத்தகித்துச் சாம்பராக்கவல்ல படைகட்கரசாகிய பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தனம் அஃது பகைமையைச் சயங்கொள்ளாமல் அபலமாகத் திரு[illegible]ிவந்துவிட்டது இனிச்செலுத்துவதற்கும் அதனினுஞ்சி[illegible]மென்னவிருக்கின்றது பெருத்துவந்த சேனைகளனைத்[illegible]மாளக்கொடுத்து ஏனென்பாரெவருமின்றி ஏகாங்கியாயிருக்[illegible]றனம் பகைவனோ சகலசேனைகளோடும் விறியிருக்கின்றனம். [illegible]வன் நம்மைவிட்டு நீங்குந்திறத்தினல்லன். ஆதலால் அவனுக்கு முன்னமே நாம் ஒடிப்பதுங்குவது உத்தமமென்று நினைத்துதனது மாயையினல் யாவருங் காணுதபடி அப்போர்க்களத்தினின்றுமறைந்தனன். உடனே மல்லாலமூர்த்தி அக்கமலாசுரன் மறைந்துபோனதையறிந்து இனி அவன்வரும்போது இங்ஙனம் எய்துவோமென்று திருவுளங்கொண்டு சகலமுனிவர்களும் வசித்திருக்கின்ற சுந்தர ஆசிரமத்தை யடைந்தனன். அப்போது மல்லாலருடைய அட்டமூர்த்தத்தில் ஒருவனுகிய சூரியனென்பவன் கொடியஅவுணர்களால் செய்யப்பட்ட போரிலுண்டான ஆசுசத்தை நீக்கிக் கொள்வான் போலத் தனதுவானகிய வீதியைக்கடந்து சிவபிரானுடைய

மேனிபோலச் சிவந்து பிரகாசிக்கின்ற மேற்றிசைக்கடலில் மூழ்கிக் குளித்தனன். உடனே மாலைக்காலமானது கரியின்பராகம் போன்றும் இருண்டபுவன மெங்கும்பரவியது. அஃது எப்படிக்கிருந்ததென்னில் கொடியபாதகராகிய அவுணர்களின் வடிவங்களையும், அவர்களுக்குண்டாகின்ற மாயைகளையும் அவர்கள் செய்துவருகின்ற பாவங்களையும் ஒத்திருந்தது.

இப்பால் போர்முகத்தில் நின்றும் அபசயமடைந்து சென்ற கமலாசுரன் கடலின் மத்தியில் வாழ்கின்ற தன் தமையனான சங்காசுரனிடத்திற் பணிந்துநிற்க அவனை அச்சங்காசுரன்பார்த்துச்சொல்லுவான் பிள்ளாய் ! இன்று காலையில் இங்ஙனமிருந்துசென்றபோது உண்டாயிருந்த முகவிலாசத்தினை இப்போது காணவில்லையே? ஆலைவாயிற்பட்ட கரும்பைப்போல உனது சரீரமெல்லாம் நொறுக்கவந்தனை வீரத்திற்சிறந்த நமது சேனைகளையெல்லாம் பின்னிட்டோடச்செய்தனை பகைவருக்குப் புறங்கொடுத்து வந்தால் வீரர்களாயினோர்க்கு ஆண்மையுண்டாகுமே யாவராலுஞ் சாகாதிருக்கத்தக்க பலமான சரீரத்தினையும் வரத்தினையுமுடைய நீயே ஓர் அந்தணன் செய்யும்போருக்கு அஞ்சி இளைத்தனையென்றால் உலகஞ் சிரியாதா மகா பராக்கிரமசாலியாகிய உனது சரீரத்தில் நின்று இரத்தத்திவலை சிந்தினால் ஒவ்வொரு திவலைக்கும் உன்னையொத்த வீரர் அளவற்றபேர் உண்டாகும்படியான மகத்துவத்தை நீபெற்றிருக்க உன்னைக் கொல்லவல்லவாகள் எந்த வுலகங்களி லிருக்கின்றார்கள். உனது புத்திமயக்கத்தால் உன்னுடைய பராக்கிரமம் உனக்கேதெரியவில்லை, நீ பெற்றிருக்கின்ற வரங்களை நான்பெற்றிருப்பேனாயின் எதிர்த்த சத்துருவை உயிரோடுவிட்டு மீட்டுந்திரும்பி [illegible]வனோ இம்மட்டிலேனும உனது கவலையையொழித்து இத்தினம் [illegible]ய்ந்து விட்ட சேனைகள்போக மற்றசேனைகளையும் இங்கிருக்கின் களையும் நாளைய விடியற்காலையிலழைத்துக்கொண்டு யுத்தத்திற் போகக்கடவையென்று சொல்லினன் அவை யனைத்தையுங் கமலாசுரன்கேட்டு மீட்டுந் தமையனைப்பணிந்தெழுந்து, அண்ணலே தேவரீரிட்டருளிய கட்டளையின்படி உதயகாலையில் யுத்தத்திற்குச் செல்லுகிறேனென்று சொல்லிவிடைபெற்று அன்றிரவுமுழுதும் நித்திரையின்றி எப்போது அருணோதயமாகுமென்று எதிர்பார்த் திருந்தனன்,

இப்பால் சுந்தராசிரமத்திலிருக்கின்றமுனிவர்களெல்லாம்யுத்தத்திற்குச்சென்ற நமது கிருபாமூர்த்தி எப்போது வந்தருளுவரென்றுமாலைக்காலத்தில் தங்கள்தங்கள் காதலர்வரவை நோக்கியிருக்

கின்ற மகிஷையரைப்போலச் செருக்களத்திசையினையேநோக்கி எதிர்பார்த்திருந்தார்கள் உடனேவிநாயகமூர்த்தி அச்செருக்களத்தை விட்டுவந்தனர் பின்னர் முனிவர்களெல்லாம் அவரைப்பேருவகையோடும் பணிந்து நின்றார்கள். அப்போது விநாயகமூர்த்தி கௌதமர்முதலிய முனிவர்களை அன்போடு பார்த்து ஓர்நொடிப்போதில் எல்லாவுலகங்களையும் நீற்ற வல்ல தமது மகத்துவத்தைத் தமக்குள்ளே மறைத்து, அம்முனிவர்களுடைய மனதைச்சோதிக்கவேண்டி ஓ தவபூபதிகளே! நம்மை எதிர்த்துவந்த கமலாசுரனுடையவல்லபங்களை யாவரும் பார்த்தீர்களல்லவா நாம்செய்துவந்த யுத்தங்களுக்கெல்லாஞ் சிறிதேனும் பின்னடையாமல் ரமயுத்தஞ்செய்துநமது சேனைகளையெல்லாம் மாய்த்தான். அவனைப்போன்ற சுத்தவீரன்திரிலோகங்களிலுமில்லையென்று திருவாய் மலர்ந்தனர், அதைக்கௌதமமுனிவர்கேட்டுப் பணிந்தெழுந்து சுவாமி சேனைகளையெல்லாம் மடிந்துபோயினவென்று ஏனையதேவாகள்போலத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளுவ தெற்றினுக்குமுன்னந் தேவரீருடையகிருபையினால் யாவருங்கண்டு சந்தோஷமெய்தும்படியாகச் சகலசேனைகளுமுண்டாயின மீட்டும் அவ்வாறே தேவரீரிடத்தில் யாவும் ஐக்கியமாயின சுவாமிகள் திருவுளங்கொண்டால் இன்னும் வேண்டிய சேனைகள் ஓர் நொடிப்போதிலுண்டாகவோ அப்படியல்லவெனில், தேவரீர் அடியேனிடத்தில் கிருபைவைத்துகட்டளையிட்டருளினால் இன்றுமாய்ந்த சேனைகள் அனைத்தையும் யெழுப்பி இன்னும் அளவற்றசேனைகளையும் நூதனமாக உண்டாக்கவல்லேன் என்று சொல்லினர்.

அதை விநாயகமூர்த்தி கேட்டருளிப் புன்னகைசெய்து ஓ தவமுனியே நீ உள்ளதையே கூறினை நாம் நமது பராக்கிரமம் முதலியவைகளை இந்த உலகத்துள்ளோர் யாவரும் பார்க்கும்படியாக உண்டாக்கினோம். அகஸ்தியன் காசிபன் முதலாயுள்ள சிறந்த இருடிகட்கும், உனக்கும் நமது கிருபையினால் ஆக்கன்முதலிய தொழில்களைச் செய்யத்தக்க வல்லபங்களுண்டாயிருக்கின்றன ஆயினும் ஏகனென்று சொல்லப்படுகிற யாமே முன்னம் மூர்ச்சித்திருக்கின்ற நமது சேனைகளையெழுப்பிக்கொண்டு மூவுலகத்தாருந் துதிசெய்யும்படியாக மீட்டும் யுத்தகளத்திற்சென்று காகமும் நரியுஞ்சூழும்படி அக்கமலாசுரனைச் சங்கரித் திடுவோமென்று அங்கிருக்கின்ற முனிவர்கட்கெல்லாந் திருவாய்மலர்ந்து அமிர்தசஞ்சீவியென்னுமந்திரத்தை உச்சரித்து, தமதிருகரத்தால் சலத்தை மாய்ந்து கிடக்கின்றசேனைகள்மீது தெளித்து யெழுந்திருக்கச்செய்து பின்னும் அள

வற்றசேனைகளை நூதனமாக உண்டாக்கி, மீட்டும்அம்முனிவர்களைப்பார்த்து அன்பர்களே! இப்போது முன்னிலும் அதிகமானசேனைகளை யுண்டாக்கியிருக்கின்றனம் இனியிக்கமலாசுரனைச் சங்கரிப்பதற்கு ஒருபாயஞ்சொன்மின்களென்று கேட்டருளினர். அதற்கம்முனிவர்கள் சகலமுந் தெரியவல்ல சுவாமிகட்குச் சிறியேங்கள் யாது தெரிந்துகொள்ளவல்லேமென்றார்கள். அவர்களுள் காற்கியரென்னும் முனிபுங்கவர் விநாயகமூர்த்தியைப்பணிந் தெழுந்து சுவாமி! தேவரீருடைய பெருங்கருணையினால் அடியேங்கள் திரிகாலஞானங்களை யறிந்திருக்கின்றமையானும், அடியேங்களைத் தேவரீரே நோக்கி ஒருபாயஞ் சொன்மின்களென்று கேட்டருளியதானும், நாயேங்கள் செய்துகொள்ளு விண்ணப்பத்திற்குச் செவிகொடுத் தருளவேண்டும். அந்த யாமத்தனில் கொடிய பாதகனான கமலாசுரன் நாளையதினம் யுத்தத்திற்கு வருவான். அவனைச் சங்கரிப்பதற்குச் சுவாமிகள் ஓர் வாகனத்தை யூர்ந்தருளல் வேண்டுமாதலால் இத்தினந் தேவரீர் சாங்கோபாங்கத்துடனே ஒரு வேள்விசெய்தால் அவ்வேள்வியினின்று மலைபோல ஒருமயிலுண்டாகும். அம்மயிலின்மீது சுவாமிகள் ஆரோகணித்து யுத்தகளத்திற்சென்று அவ்வசுரனைச் சங்கரிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தனர். இவ்வாறு காக்கிய முனிவர் கூறியவை விநாயகப்பெருமான் கிருபையோடுங்கேட்டு ஓ தவசீலனே! உனதுள்ளமும் மனதுள்ளமும் ஒன்றாதலால் உனது கருத்தின்வண்ணமே யிசைகின்றேம் வேள்வி செய்வதற்கு வேண்டிய பதார்த்தங்களை யாவருஞ் சேகரித்து நடத்தற்குரிய திருப்பணிகளை விரைவில் நடாத்தக் கடவீர்களென்று கட்டளையிட்டருளினர். உடனே சிலர் சாஸ்திர விதிப்படி வேள்வி மண்டபத்தைச் சமைத்தார்கள். சிலர் குண்டமண்டலாதிகளைச் செய்தார்கள். சிலர் வேள்விக்குரிய பொருள்களைச் சேகரித்து வைத்தார்கள். சிலர் பலபல திருப்பணிகளை நிறைவேற்றியிருந்தார்கள். அப்போது அண்டர்பெருமானாகிய விநாயகமூர்த்தியானவர். வேள்வித்தீயை வளர்க்கத் திருவுளங்கொண்டவராய்த் தமது தேவியாராகிய சித்திபுத்திகளை நினைக்க, அவர்கள் உடனே வந்து கர்த்தனுடைய இருபாரிசங்களிலும் அமர்ந்திருந்தார்கள் பின்னர் விநாயகப்பெருமான் அத்தேவியாரோடு மெழுந்தருளித் தீர்த்தமாடி ஞானதீக்கை முதலியவைகளை நிறைவேற்றி வேள்வியும், அவ்வேள்விக்குத் தலைமையானகடவுளும் அவ்வேள்வியால் வரும்பயனும் அப்பயனையளிக்கவல்ல முதல்வனும் தாமேயென்று உலகத்தினரறியுமாறு வேதாகம முறைமைப்படி அவ்வேள்வித் தீயை வளர்த்தி, அவிப்பாகம் முதலியவைகளைக் கொடுத்துப் பூரணாகுதியுஞ் செய்து முடித்தனர், உடனே

அவ்வேள்விக்குண்டத்தினின்று நீண்கலாபத்தோடு ஒருபாரித்தமயிலுண்டாகிச்சந்திரனும் உடுக்கூட்டங்களு முதிரும்படியாக வுந்திக்குயானைகளெட்டுமஞ்சிநடுங்கும்படியாகவுங்கூகாவென்றுகூறிச்சத்தித்ததுபாதலலோகத்தில்நாகராஜர்களுஞ்சுவர்கலோகத்தில்வாழ்கின்றராகுகேதுக்களும் அக்கூக் குரலைக்கேட்டுதிடுக்கிட்டுமீட்டும், இம்மயில்சகலலோகங்கட் குமுண்டாயி ருக்கின்ற ஆபத்துக்களைவிலக்கிஆட்கொள்ளும்பொருட்டு எழுந்தருளியவிநாயகமூர்த்திக்குவாகனமாகப்போகின்றமையால், நமக்குயாதொருதீங்கினையுஞ்செய்யாதெனத்தெளிந்துசந்தோஷமடைந்தார்கள். பின்னர்அம்மயிலானது தனது அடிகளைப்பூமியிலேபெயர்த்து மாறிமாறிவைக்குந்தோறும் அப்பூமியைத்தாங்கிநின்ற ஆதிசேடனுடையபணாமகுடங்களெல்லாம்நெரியவும், சத்தசாகரங்களுந்தத்தங்கரைபுரளவும், அட்டகுலாசங்கள்அதிரவும் தனதுகலாபத்தைவிரித்துஆடிக்கொண்டிருக்கையில், விநாயகமூர்த்தியானவர்யாவருஞ்சயசயவென்றுபோற்றும்படியாகஅம்மயிலைவாகனமாகவூர்ந்தருளினர் உடனே ஆகாயத்தில் பஞ்சகருவிகளும்முழங்கினதேவர்கள்சொரிந்தபுட்பவருடத்தினாற் பூமியெங்கணுமிடமில்லாமல்மறைந்தது முனிவர்களெல்லாம் விநாயகமூர்த்தியைமயூரேசரென்று துதிசெய்தார்கள் சுவாமியும்அம்முனிவர்கள்மீதுதமது பரிபூரண கடாட்சத்தினை வைத்தருளினர்.

ஓ சவுனகாதி முனிவர்களே இந்தமயூரேசரென்னுந்திருநாமத்தையாவரேனும் அன்போடு துதிசெய்வார்களாயின், அவர்கள்இம்மையில் சகலவிடையூறுகளி னின்று நீங்கிமேலான செல்வத்தைப்பெற்று கற்பகத்தருவைப்போல வரையாதுவழங்கி, வேதசாஸ்திரசம்பத்தோடு அளவற்றநாள் வாழ்ந்திருந்து மறுமையில்ஜன்மசாபல்யமாகிய மோட்ச சாம்பிராச்சியத்தினை யடைவார்கள்.

இப்பால் விநாயகமூர்த்தி மயூரேசராய்த்திருவவதாரங்கொண்டருளிய காட்சியைத்தரிசிக்க வருவான்போலச்சூரியன்தனதுதேரினைச்செலுத்திக்கொண்டு கீழ்க்கடலி லுதயமாயினன். உடனே முன்னைபோலகைகணித்தற்கரிய. சேனைகளோடுகமலாசுரன்யுத்தகளத்திற்குவந்தனன். அவன்வரவைமயூரேசர்தெரிந்துகொண்டுதேவர்முனிவர் முதலாயினோர்க்குச் சுகத்தைக்கொடுக்குமாறும், கமலாசுரனுடைய மதத்தைப்போக்கிமுத்திகொடுக்குமாறுந்திருவுளங்கொண்டு தமதுமயில்வாகனத்தோடுபோர்க்களத்திற்கெழுந்தருளினர். அச்சமயத்தில் புத்திதேவியார் விநாயகரைப்பணிந்துசுவாமீ ஓர் உழுந்தானது கண்ணடியினின்று உருளுமுன்னம் அடியேன்சென்று மாற்று

னுடையசேனைகளையெல்லா முருட்டிவெற்றிபெற்றுவருவேன். தேவ
ரீர் அடியாள்மீதுகிருபைபுரிந்து விடைகொடுத்தருளவேண்டுமென்
றுபிரார்த்தித்தனர். அதற்கு மயூரேசரிசைந்து அத்தேவிக்கு நால்வ
கைப்படைகளுஞ்சகல சித்திகளு முண்டாகத்தக்கவல்லபத்தையளி
த்துயுத்தத்திற்குச்செல்லுமாறு விடைகொடுத்து அவ்வழகியசுந்தர
ஆசிரமத்திற்றேனமுனிவர்முதலியயாவரும் பணிந்துபோற்றும்ப
டியிற்றிருந்தனர். இப்பால் புத்திதேவியார்தமது பாங்கியரோடுவி
மானத்தின்மீதாரோகணித்து சகல சேனைகளுங்கடல்போலப்புடை
சூழ்ந்து வரவும், பேரிகை முதலியவாத்தியங்கள்மேககர்ச்சனையைப்
போல முழங்கவும், கொடி குடைமுதலியசின்னங்கள்நாற்புறங்க
ளிலும் நெருங்கவுமாகவெருமோலென்றுயுத்தகளத்தில் வந்துநின்றனர்
அவர் வரவைக்கண்ட தூதர்கள் முன்னதாயோடிக்கமலாசுரனைப்ப
ணிந்தெழுந்து, ஆண்டவனே இத்தினம் மங்கலனுடையபத்தினி யு
த்தஞ்செய்யவந்திருக்கின்றனள் அவளைப்பெண்பிள்ளையென்றுதேவ
ரீர்நினைக்கவேண்டாம் அவள்சகலலோகங்களையும்ஆக்கவும்அழிக்கவு
ம்வல்லவளென் றுசொன்னார்கள், அதைக்கேட்டவுங் கமலாசுரன்வி
ரைந்துவந்துபுத்திதேவியாருடையசேனைகளதுமாண்பினையும் அவர
துவிரபராக்கிரமத்தினையும், எங்குங்கண்டறியாதஅவரதுவனப்பினை
யும்பார்த்து மிக்கமகிழ்ச்சியடைந்தவனாகி தனதுசேனைகளையெல்லா
ம்அணிவகுத்துயுத்தஞ்செய்யவிட்டனன். இப்பால்புத்திதேவியார்க
மலாசுரனைச் சூழ்ந்திருக்கின்றவீராதிவீரர்களுடைய ஆண்மைகளைநோ
க்கி அந்நிமிடத்திற் அநேக கோடிகளையும் யழிக்கத்தக்க பராக்கிரம
த்தில் மிகுத்தவர்களையும் சத்துருக்கள் கண்டு நடுங்கும்படியான
கோரரூபத்தை யுடையவர்களையு மிருக்கின்ற அளவற்றவீரர்களையு
ண்டாக்கி யுத்தத்திற்கு விடுத்தனர். அவ்வாறே அவ்வீரர்கள்யுத்தத்
திற்குச்சென்றபோது கமலாசுரனுடையசேனைகளெல்லாஞ்சகலவா
யுதங்களோடும் வந்திருப்பதைக்கண்டுநாமும்ஆயுதந்தரிக்கவேண்டு
மல்லவாவென்று சொல்லித்தங்கடங்கள் சரீரங்களிலுள்ள உறுப்புக
ளைத்தானே ஆயுதங்களாகக்கொண்டு யுத்தஞ்செய்யத்தொடங்கினார்
கள். அப்போதுகமலாசுரனுடைய சேனைகளுள் அநேக பர்வதங்க
ண்மீது அநேக பர்வதராசர்கள் வருவதுபோல சில அவுணவீரர்
கள் அளவற்ற தேர்களினும் யானைகளினுமேறிவந்தெதிர்த்தார்கள்
அநேக சமுத்திரங்களின் மீது அநேக வடவாமுகாக்கினிவருவது
போலச்சில அவுண வீரர்கள அளவற்றகுதிரைகளின் மீதேறிவந்து
அநேக ஆலகால விடங்கள் அநேகரூபங்கொண்டுவருவதுபோலச்

சில அவுணவீரர்கள் அளவற்றபடைகளோடும் வந்தெதிர்த்தார்கள் இவ்வாறுநின்ற அவுண வீரர்களைப்புத்திதேவி படைத்தருளிய பூத வீரர்கள் தங்கள் தங்கள் முடிகளினாலும், அனலைச் சொரிகின்ற விழிகளினாலுங், கைப்பிடிகளினாலும், நகங்களினாலும், நீண்ட பற்களினாலுங், கால்களினாலுந் தொடைகளினாலும் மார்புகளினாலும், புசங்களினாலும், மற்றுமுள்ள அவயவங்களினாலுந் தாங்கிப் பகைவர்கள் விடுகின்ற பாணங்கள் தங்கள் சரீரத்தில் வந்து தைக்கு முன்னமே அவைகளைக்கைகளினாற் பிடித்துச்சிலர் அப்பகைவர்கள்மீதே விடுத்தும், சிலர் தலையின்கண் எறிந்தும்சிலர்வாயிலிட்டு மென்றும் சிலர்துகளாகச்செய்தும் ஆனந்தக்கூத்தாடியும் சிலர்யானைகளைப்பிடித்துயானைகள் மீதேதாக்கி அவைகள் மத்தகங்களைப்பிளந்தும்சிலர்தேர்களைத்தூக்கித்தேர்கள் மீதேதாக்கி அவைகளைமுறித்தும்சிலர் குதிரைகளை யெடுத்துக்குதிரைகள் மீதேதாக்கி அவைகளைக்கொன்றும், சிலர் பதாதிவீரர்களைவாரிப்பதாதி வீரர்கள் மீதேதாக்கிஅவர்களைநசித்தும், சிலர் எதிர்த்து வந்த அவுணர்களைவாரி ஆகாயத்திலெறிந்து, சில்ர் தரையிலே மோதிக்கொன்றும். சிலர் கால்களினால் மிதித்துத்தேய்த்தும்,சிலர் தலைகளைத்திருகிக்கோர்த்துமலைமலையாகத்தரித்தும் சிலர் உதிர மொழுகும்படியாகபபிழிந்தும், சிலர்ஒருகரத்தால் யானைகள் பிளிறும்படியாகப்புடைத்தும்மற்றொருகரத்தாற் கொம்புகளைப்பிடுங்கிஎதிர்த்தவர்களைக்குத்தியும்,யுத்தஞ்செய்கின்ற போதுகமலாசுரனுடைய சேனைகட்குந்சேனைத்தலைவர்கட்குங்கோப முண்டாகிகோடையிடிபோலக்கர்சித்துசூல-மழு-வாள்-கதைசிலைமுதலியஆயுதங்களை ஒன்றனாதமாகவிசிஓர்நொடிப்போதில்புத்திதேவி[illegible]னுடைய சேனைகளை யெல்லாஞ்சின்னாபின்னப்படவாட்டினார்கள்.

இவ்வாறு இருதிறப்படைகளுங்கலந்துபோர்செய்தலினால்அளவற்றபிணங்கள் மலைமலையாகக்குவிந்தன அவைகளினின்றும்பெருகிய உதிரமானது வெள்ளமாயோடிக் கடலிற்பாய்ந்தது.அச்சமயத்தில் பூதசேனைகள் அவுணசேனைகட் கஞ்சி முறிந்து ஓடிப்போக அதைப் புத்திதேவியார் கண்டுவிழிகள் கொவ்வைக்கனியையொத்துச்சிவப் பெய்தக்கோபித்தனர் அக்கோபத்தி னின்றும் ஒர் வீரன் ஆகாயத்தைமுட்டத்தக்க உயரமும். பாவதங்கட்கிணையான புசபலபராக்கிரமும், உலகங்களை யெல்லாங்கவளங் கொள்ளவல்ல கோபமுமுடையவனாய் அண்டாண்டங்களையும் பொடிபடுத்தவல்ல பல ஆயுதங்களோடும் உற்பவித்துபுத்திதேவியினுடைய திருவடிக்கமலங்களைப்ப

ணிந்தெழுந்து அன்னையே? அடியேனுடையதந்தையார் அவரெங்ஙனமிருக்கின்றனர் அதனை அடியேற்குத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்டுக்கொண்டனன்.

அதற்குப்புத்திதேவியார் மகிழ்ந்துமைந்தனே? இதற்குச்சமீபத்தில் அளவற்ற முனிபுங்கவர்கள் வாசஞ்செய்கின்ற சுந்தராசிரமமென்றொரு ஆசிரமமிருக்கின்றது அவ்வாசிரமத்திலுனதுதந்தை தேவர்களும்முனிவர்களும் பணிசெய்துவரக்கீழ்த்திசையிலோர்பெரியமயிலின்மீதெழுந்தருளியிருக்கின்றனர். அவர்பத்து கரங்களையும் அக்கரங்கள்தோறும் ஆயுதங்களையுந் தரித்திருக்கின்றனர், அவரது வலப்பக்கத்தில் சகலசத்திகளையும் படைக்கவல்ல சித்திதேவிவீற்றிருக்கின்றனள். எனறுதிருவாய்மலர்ந்தருள, உடனே அவ்வீரன் சுந்தராசிரமத்தையடைந்து தனதுதந்தையினுடையதிருவடிகளில் அடியற்றமரம்போலச்சாஷ்டாங்கமாகவிழுந்து எழாதிருந்தனன அவன் மீதுமயூரேசர் தமது அருட்பார்வையைப பரப்பித்தம்மைச்சூழ்ந்திருக்கின்றமுனிபுங்கவர்கட்குஅதனைத்தெரிவிப்பதாயினர், ஒதவசீலர்களே? இவன் நமகுப்புத்திரனானவன். இவனால் உங்கட்கு எல்லா இலாபங்களுங்கிடைக்குமாதலால இவனுக்குயாவரும் எக்காலத்தும் இலாபமென்னும்பெயர்வழங்கக்கடவதென் றுதிருவாய்மலர்ந்தருளினர். உடனே சகலமுனிவர்களும் அவ்வீரனை இலாபனென்றுதுதிப்பணிந்தார்கள். பின்னர்மயூரேசரானவர் தமதுதிருவடிகளில்விழுந்திருக்கின்றகுமாரனைத்தழுவியெடுத்து யுத்தத்திற்குப்போகும்படிகடாட்சித்தனர். அக்கடாட்சத்தைஇலாபன்சிரமேறகொண்டு சமர்க்களத்தைநோக்கிச்சென்றனன். அவன்சென்ற ஊக்கத்திற்குமயூரேசர்மநமகிழ்ந்து. இவனதுபராக்கிரமத்தினைகாண்போமென்றுதாமும்அவன்பின்னாகவேசென்றனர். அப்போதுஜம்பாசுரப்பிரம்புடையவர்கள்புடைசூழ்ந்துவரும்படியாக அளவற்ற சேனாசமுத்திரங்கள் மத்தியில் ஜயவுற்சாகத்துடன் வருகின்றஇலாபனைக்கமலாசுரன்கண்டுஓபிள்ளாய்? நீயேன்வீணிற்பிராணனைக்கொடுக்கஇங்குவந்தனைஉன்னையிப்போதேவிட்டுவிடுகிறேன். நீகொண்டிருக்கின்றதுர்ப்புத்தியைவிடுத்து வந்தவிடத்திற்போய் சேரக்கடவையென்றுசொல்லினன். அவன் அவ்வார்த்தையைச் சொல்லிமுடிக்குமுன் இலாபனானவன் அவ்வவுணனுடையசேனைகளிற்புகுந்து, புருவநெற்றியிலேறக்கோபித்து, அதிகவேகமாகவில்லைவளைத்து, அளவற்றபாணங்களைச்சுழன்று சுழன்று ஒன்றனந்தமாகச்சொரிந்து ஆர்ப்பரித்தனன்' அவன் விட்டபாணங்களினாலே அநேக இரதங்களுங், கஜங்களுந், துரகங்க

ளும், பதாதிகளும் முறிந்துமடிந்து சிதைந்துமாய்ந்தன. அநேகவீரர்கள்-கரம்-சிரம்-புயம்-மார்புமுதலியவைகள் நசிந்துகுடர்களும்பிணங்களும் பிறிடும்படியாகவீழ்ந்தார்கள். அவுணவீரர்கள்விடுகின்ற பாணங்களைத்தடுப்பதினால் சிலதுமுறிந்தும் பூமியில்வீழ்ந்தும்,சிலது அப்பூமியைப்பிளந்துகொண்டு நாகலோகத்திற்பாய்ந்தும்சிலது திக்காலொன்றோடி யொளித்துப்போயின பின்னுந்தேவர்களெல்லாங் கண்டு சந்தோஷமடையும்படியாக இலாபன்விடுகின்ற பாணங்கள் அவுணவீரர்களுடைய தலைகள்-புசங்கள்-கைகள்-கால்கள்முதலானவைகளைத் துண்டந்துண்டமாக அறுத்துமேருமுதலியமலைகளிலுஞ் சமுத்திரங்களிலுஞ் சூரியலோகஞ் சந்திரலோகமுதலிய உலகங்களிலும்போய்விழும்படியாக எறிவதன்றி அவ்வீரர்களுடையமனைவியருந் தத்தங்கணவர்களோடு அரம்பைமாதர்களாகச்சென்றுவசிக்கும்படியாகஅவ்வவர்கள்வீட்டில் அவ்வவர்களுடைய பெயர்களைஎழுதியிருக்கின்ற முத்திரைமோதிரங்களோடு கரங்களையுந்தலைகளையும் கொண்டுபோய்

இவ்வாறு விநாயகமூர்த்தி குமாரனால்விடுகின்ற பாணமானது அளவற்ற அவுணர்களைச் சின்னாபின்னப்பட வாட்டிபிணந்-தசை-மூளை-குடர்முதலானவைகளை இடைவிடாதுசொரிகின்றமையால்மலைகளிலிருக்கின்ற-அலகை-புலி-சிங்கம்-யாளி-முதலிய வைகளும் வனங்களிலிருக்கின்ற நாய்-நரி-கழுகு-காக்கைமுதலியவைகளும்அச்சமர்க்களத்தைச் சூழ்ந்துபுகுந்துண்ணவந்தன.இப்போது அவுணசேனைகளில் அளவற்றபேர் மாய்ந்தும் அளவற்ற பேர்கள் ஓடிப்பதுங்கியும் ரணக்களத்தில் ஒருவருமில்லா திருப்பதைக் கமலாசுரன்கண்டு வடவாமுகாக்கினியைப் போலக்கொதித்துப் புத்திதேவியாருடைய குமாரனை எதிர்க்கவந்தான் அவனைஅக்குமாரன்பார்த்துக் குலுங்நகைத்து எனதுபராக்கிரமமுழுவதும் நீதெரிந்துகொண்டனையில்லைஉன்னைவலியனொன்றெண்ணி உன்னோடெதிர்க்காது விட்டிருக்கின்றேனென்று நினைக்கவேண்டாம்எனதுதந்தையின்கரத்தால்நீமாளவேண்டுவதைக்கருதி உன்னைமீதியாய் வைத்தேனேயன்றிவேறில்லை இன்றோநாளையோ அவரதுதெய்வப்படையால் சீரமாயப்போகின்றது அதற்குமுன் என்னோடியுத்தஞ் செய்வதற்கு உனக்குவலியுண்டாயின்வந்து யுத்தஞ்செய்யென்று சொல்லினன் அதைக்கமலாசுரன்கேட்டுஇவனைஎந்த அஸ்திரசஸ்திரங்களினாலும்வெல்லவுங்கொல்லவும்அரிதென்றுநினைத்து மோகனாஸ்திரத்தை யெடுத்து வில்லிற்பூட்டிமந்திரபூர்வகமாகப் பிரயோகித்தான் அதுவெளிபட்டவுடன்இலா

பன் ஒருவனைத்தவிர ஏனையபடை வீரர்களையெல்லாம் புகையைய போலப்பரவி அறிவையழித்துச் சோர்வுபெறச்செய்ய அதனாலால காலம்வெளிப்பட்ட காலத்திற் சகலபிராணிகளும் மெய்மறந்துவா டினதற்கொப்பாகவும் யுகாந்தமுடிவில் ஆன்மகோடிகளெல்லாம்ம காசுழுத்தியிலழுந்தி நித்திரை செய்வதற்கொப்பாகவும் யாவரும்வி ஷப் பரிசம் பட்டுச் சோர்பவரைப்போல விழிகள் சொருகவிட்டும திமருண்டு பிரேதங்களை யொப்பக்கிடந்தார்கள் அப்போதுவிநாயக மூர்த்திதமது குமாரனுடைய அன்பைச் சோதிக்கவேண்டி கமலாசு ரன்விட்ட மோகனாஸ்திரத்தினால் தாமும்முணர்ச்சியற்றவரைப்போ ல ஓர் திருவிளையாடல்கொண்டு நித்திரைசெய்வதாயினர் அதைஇலா பன் சிறிதுமறியாதவனாய் கமலாசுரனோடு யுத்தமுனையிற்றானேயிரு ந்தனன். அச்சமயத்தில்கமலாசுரனானவன் தான்விடுத்தமோகனாஸ் திரத்தினால் இலாபனுடைய பெருஞ்சேனைகளனைத்து மாய்ந்தும் அ வ்வொருவன்மாத்திரம் அவ்வஸ்திரத்திற்கழியாதிருப்பதைக்கண்டு ஆச்சரியமாகி இப்போது இவன் தனியே யிருப்பதினால் இவனோடியு த்தஞ்செய்து செல்வதற்கு இதுதான் தக்கவேளையென்றுதனக்குள் நிச்சயித்து ஏகமுகத்தில் அளவற்ற பாணங்களைப் பிரயோகித்தான் அவையனைத்தையும் இலாபன்தனது பாணங்களாலறுத்தெறிந்து அ வ்வவுணனுடைய மார்பிலுந் தோளிலுந் தொடையிலுங் காலிலும் அ நேகபாணங்களைக் குறிபார்த்துப் பிரயோகித்தனன் இவ்வாறுஅவ் விரண்டுவீரர்களும் ஒருவருக்கொருவர் பின்கொடாமல் வேல் தோ மரம் பிண்டி பாலம் முதலாகிய ஆயுதங்களை விடுவதும்அவைகள் த ம்மேல்வராதபடி தடுப்பதுமாகிய அளவற்ற சமர்களை ஒயாமற்செ ய்து பின்னர் ஆகாயமார்க்கமாகச்சென்று சமராடியும்பாதாளலோ கத்திற்சென்று சமராடியும்சமுத்திரங்களிற் பாய்ந்து சமராடியும்அ ட்டதிசைகளினுஞ்சென்று சமராடியும் தங்கள்தங்கள் பராக்கிரமங் களைக்கூறிச் சமராடியும் தேவதாஸ்திரங்களை விடுத்துச் சமராடியும் இப்படி அனந்தவிதமாக ஆறுநாள்வரையில் இரவும்பகலும் ஓயாம ல்யுத்தஞ்செய்தனர் அப்போது கமலாசுரன்மாத்திரம் கைகள்நொ ந்துங் கால்கள் தடுமாறியுஞ் சரீரமுழுவதும்சோர்ந்தும் இனிஇவ்விட த்தைவிட்டுநீங்கி இளைப்பாறிமீட்டும்யுத்தத்திற்கு வரவேண்டுமென் று யோசித்துடனே புறங்கொடுத்து ஒளித்துக்கொண்டனன்.

இப்பால் இலாபனானவன் புறங்கொடுத்து ஒளித்துப்போனபு ல்லியன்மீட்டும் இச்சமர்க்களத்து வருவானாயின் அவனுடையவீரத் தையும்உயிரையும் வாங்குவோமென்றெண்ணிச்சமர்க்களத்தைவிட்

டுநீங்கிமுன்புமோகனாஸ்திரத்தினாலேஉறங்கிவீழ்ந்துகிடக்கின்றதனதுசேனைகளோடுங்கூடமற்றொருபக்கத்தில்தனதுதந்தையாகியவிநாயகமூர்த்தியும்முனிவர்களுடனேஉறங்கியிருக்கின்றதைக்கண்டு ஆ, ஆ இதென்ன ஆச்சரியம் எல்லாவுயிர்கட்கும் மயக்கத்தைநீக்கிமதியை யளிக்கத்தக்க உலகநாயகரும் மற்றையர்களைப்போலஅவுணபாதகன் விட்ட மோகனாஸ்திரத்தினால்மயங்கிவீழ்ந்துகிடக்கின்றனரேயென்று யோசித்து, ஆயினும் இதற்குமருந்துநம்மிடத்திலிருப்பதால் வருந்தவேண்டுவதில்லையென்றுமீட்டும்விருந்துகண்டவன்போலமனந்தேறி சலத்தை யள்ளிவிநாயகமூர்த்தியினுடைய திருநாமத்தைநூற்றெட்டுருசெபித்து உறங்கிக்கிடக்கின்றவர்களின்மீதுதெளித்து அம்மகாமந்திரத்தை யாவர்செவிகளினும் விழும்படிச்சொல்லினன். இவ்விரண்டுபாயத்தால்விநாயகமூர்த்தி தவிரஏனையமுனிவர்களும் வீரர்களும் உறங்கிவிழித்தவர்போல வெழுந்தார்கள், உடனேயாவரையும் மயக்குவித்த மோகனாஸ்திரமும் வலிகுன்றி ஓடிப்போயது இதனை இலாபன்காண்டாலும்ஆச்சரியங்கொண்டு அம்முனிவர்களைநோக்கிச்சொல்லுவான் தபோதனர்களே நமது பெருமான் உறங்கியிருப்பதற்குக்காரணம் மோகனாஸ்திரத்தினாலென்றெண்ணுவோமெனில், அந்த அஸ்திரம்நசிந்து ஓடிப்போயும் இன்னும்சுவாமிகள்எனதுமனஞ்சந்தோஷிக்கும்படியாகவிழிக்கவில்லை. ஆதலால் இம்மோகம் அவுணன்விட்ட அஸ்திரத்தினால்வந்ததன்று. ஏனையோரைப்போல சுபாவத்தில் அவருக்கு மோகமுண்டாமெனில் சிறிதுமில்லை. ஏதோ என்னிடத்தில் குற்றமிருப்பதால்சுவாமிகள் இப்படியிருக்கின்றனர் மேலும்அம் மோகனாஸ்திரமானது என்னையேநெருங்குதற்கு அஞ்சுமாயின், என்னைஈன்றதயாநிதியையுஞ்சேரவல்லதோ தமக்குத் தாமே அவ் வஸ்திரத்தினால் மோகமுற்றவரைப் போல இந்த ஆறுநாள்வரையில் ஒரேநிலையாக நித்திரைசெய்து கொண்டிருந்தால் அதனைநாமென்னென்றுசொல்லுவோம். அவரதுகடைக்கண்பார்வையிலுண்டானகிருபையைக்கொண்டு யான்அவுணர்கோன் விட்டமோகனாஸ்திரத்தை அதஞ்செய்தேன். பின்னர் அப்பாதகனையும் பின்னிட்டோடப்பண்ணினேன். இதல்லாமல் சுவாமிகளுடைய திருநாமங்களி லொன்றினால்உங்களையும்நமதுசேனைகளையும்பற்றியிருந்தமோகங்களைப்பஞ்சுபஞ்சாகப்பறக்கச்செய்தேன் இப்படிக்கெல்லாம்யான்செய்திருக்கச்சகலலோகங்களையும்ஈன்றளித்தழிக்கவல்ல எனது தந்தைமயங்கினவரைப்போல விருப்பது ஓர் திருவிளையாட்டேயன்றிவேறல்லஅதையும்உங்கட்குத்தெரியச்செய்கின்றேன்பார்,

மென்களென்று ஒருபாயத்தினை நிச்சயித்து தனதுசரீரத்தைமாய்க்கத்துணிந்து அங்கிருந்தவீரர்கட்கு அக்கினியை வளர்க்கும்படிகட்டளையிட்டான் அவர்களும் அவ்வாறே வளர்த்தினார்கள்.

பின்னர் இலாபனானவன் தனது தந்தையாகிய விநாயகமூர்த்தியைத்தியானித்து அவரதுதிருநாமத்தைஅனந்தமுறைஉச்சரித்து, அவ்வக்கினியைமும்முறைவலம்வந்துஅதிற்பாயநெருங்கினன். அப்போது விசித்திரமானஉறக்கத்தினைக்கொண்டிருந்தவிநாயகமூர்த்தியானார் அவ்வஞ்சகத்தை விடுத்துத்தமதுபுத்திரனுடையபத்திக்குமனமகிழ்ந்து அக்கினியில்விழாதே யென்றுகையைப்பிடித்துத்தமது மலர்ந்ததிருமுகத்தோடும் இலாபனைப்பார்த்து, மைந்தனே உனது மனத்தினைச்சோதிக்கவேண்டியாமிவ்வாறிருந்தனம். இனி உனக்கு வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய் மலர்ந்தனர். அதைக்கேட்டலும் இலாபன் ஆனந்த பரவசமாகி பல முறைபணிந்தெழுந்து, அத்தனே தேவரீரை அடியேன்மனத்திலுங்கண்ணினாலுஞ்சதாகாலமும் தரிசித்துக் கொண்டிருக்கத்தக்க வரத்தைக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான். அவ்வாறே சுவாமிகிருபைசெய்துமற்றைச்சேனைத்தலைவர்கட்குந்தமது திருவருட்பார்வை காட்டி, அவ்வவர்கட்குப்பல ஆகாவுகளைக்கூறியருளினார் உடனே ஆகாயத்தில் பஞ்சவாத்தியங்களும் முழங்கின தேவர்கள் பூமழைபொழிந்தார்கள் எங்கும் மந்த மாருதம் விசியது முனிவர் களெல்லாம்சுவாமியைப்பல்முறை கொண்டாடினார்கள்.

விநாயகப்பெருமானுடைய செயலிவ்வாறாக, முன்னர் இலாபனோடுயுத்தஞ்செய்து புறங்காட்டி ஒளித்துக்கொண்டகமலாசுரனானவன் பின்னர் தனது விரர்களோடு நால்வகை யுணவுகளையுமுண்டு தாகசாந்திசெய்துசரீரவருத்தம்நீங்கித், தனதுசதுரங்கசேனைகளையும் பூமிநெளியும்படியாகக் கூட்டிக்கொண்டுமீட்டும்யுத்தகளத்திற்குவந்தனன். உடனேகரை புரண்டு வருகின்ற அவ்வவுண சேனைகளாகிய கடலை நீறாக்கும்படி கதித்தெழுந்துவந்து வடவாமுகாக்கினியைப்போல விநாயகமூர்த்தியானவர் தும்பைமாலைசூடிக்கொண்டுமரகதமலையிற்பூத்த மாணிக்கக்குன்றுபோலப்பர்வதாகிருதியாய்பார்த்திருக்கின்றநீலமயிலின்மீதாரோகணித்துஅம்மலையிலுதித்தசந்திரனைப்போலச் சிலர்வெண்டரளக்குடைபிடிக்கவும், அம்மலையினின்றும்பாய்கின்றஅருவியைப்போலசிலர்வெண்சாமரைகளைவீசவும்அவ்வருவியினொலியைப்போலச்சிலர்பலவிருதுகளையுமுழக்கவுமாகஇரணபேரி

சயபேரி வெற்றிச்சங்கம் முதலிய வாத்தியங்களோடு அளவற்றசே
னைசமுத்திரங்கள் சூழ்ந்துவர யுத்தகளத்திலெழுந்தருளினர், அக்கா
ட்சியைக் கமலாசுரன்கண்டு வடவாமுகாக்கினியைப்போலவும்ஆல
கால விஷத்தைக்கொப்பாகவுஞ்சீறி கறகறெனப் பற்களைக் கடித்து
அனலெழநகைத்து ஓ குறுநரிமேல்வந்த காளாய் அண்ட கடாகங்க
ளையும் பிளக்கத்தக்க புயபராக்கிரமத்தினையுடைய என்னோடு
பறவைமேலேறியா யுத்தஞ்செய்து ஜெயிக்கப்போகின்றனை முன்பு
யுத்தஞ்செய்தவர்களெல்லாம் தமோசலைசிரத்தைவிட்டு அட
க்கிக்கட்டி வீழ்த்தினேன் மகாபராக்கிரமசாலியான சிறுபிள்ளைப்பட வா
ட்டினேன் உன்னையும் யாமெருநமனாலயத்துக்கனுப்பி விடுகின்றபா
ணத்தினாற்பிளப்பேன் அவைகளைத் தேவாசுரர்கள் கண்டுசோரும்ப
டியாக நீறுக்கிவிடுவேன் நீ இதுகாறும் என்சாமர்த்தியத்தை ய
றிந்தனையில்லைபோற காணுகிறது உனக்கு ஊக்கமுண்டாயின்வி
ரைவில் என்னோடுயுத்தஞ்செய்ய வருவாயென்றனன். இவ்வாறுமத
ங்கொண்டுபேசுகின்ற கமலாசுரனைவிநாயகமூர்த்திகண்டுஅடாமூட
சிரோமணி நாம்தேவர்களையும் முனிவர்களையுங்காக்கு நிமித்தம்ஓர்
திருவிளையாடலாக அவதாரஞ்செய்த காரியங்களை நீசிறிதும் அறிந்
தாயில்லை முன்னர் உன்னைப்போலிருந்த அனந்தந்துட்டர்களைச்சங்
கரித்திருக்கின்றனம். மேலும்யுகங்கள்தோறும வக்கிரதுண்டரென்
றும சுமுகரென்றும், கஜானனரென்றும், விக்கினராஜரென்றும்,
இவைமுதலிய அளவற்ற நாமங்களோடு அநேகஅவதாரஞ் செய்தி
ருக்கின்றோம் அப்படி அவதாரங்கள் செய்ததுபோலவே இப்போ
தும்உன்னைச் சங்கரிப்பதற்கு மயூரேசராக அவதாரஞ் செய்தனம்நீ
முதல்நாட்செய்த யுத்தத்திலேயே பின்னிட்டுப் போயினைஇத்தினம்
நமதுபுத்திரனால் அடிபட்டு ஓடிப்போய்மீட்டும்வந்தாய் இப்படிப்ப
ட்ட அற்பனாகிய உனக்குவாயேன் வீரமென்றுன்னமும்நமதாசிர்வா
கத்தைப்பார்க்கக்கடவை யென்றுசொல்லிச் சீறி, நமதுமயில்வாக
னத்தோடும்போய் அவனைத்தண்டாயுதத்தினாலடித்தனர். அவன்த
னதுகுதிரையின்மீதிருந்தவண்ணமே இருப்புலக்கையைக் கொண்டு
சுவாமியினது மார்பிற்குத்தினன் உடனே அவ்விருப்புலக்கையான
துபொடிபொடியாய் நொறுங்கிப்போயது. அதைமந்தரகிரியைப்போ
ன்ற புயத்தினையுடையகமலாசுரன்கண்டு அதிசயித்தனன். பின்னர்
விநாயகமூர்த்தி அவன்மார்பைப் பிளக்கும்படிதோமரத்தையெடுத்
துவிட்டனர் அதைஅவுணன்தனது கேடகத்தினாலும்படைகளினாலு
ந்தடுத்தனன். உடனே விநாயகமூர்த்திஅவன்மீது சூலாயுதத்தைவி

ட்டனர். அவனும் சுவாமிபேரில் சூலாயுதத்தைவிட்டான். இவ்வாறுஇருவரும்பற்பல ஆயுதங்களைக்கொண்டு நெடுநேரம்யுத்தஞ்செய்துகொண்டிருக்கையில் விநாயகமூர்த்தியானவர்இமைக்குமுன் எண்ணற்றபாணங்களையெடுத்து கமலாசுரனுடையசேனைகளின்மீதுசோனைமழைபோற்சொரிந்தனர். அந்தவலியபாணங்கள் ஒன்றனந்தமாகப்பெருகி அக்கினியைக்கக்கிச்சென்று அவனசேனைகளையெல்லாஞ் சின்னாபின்னப்படவாட்டின. அப்போது கமலாசுரன் தமதுசேனைகளனைத்து மடிந்துபோய்விட்டதைப்பார்த்து மனம் பொறாதவனாகியானைக்கூட்டத்துள் சிங்கவேறு புகுந்தாற்போலவிநாயகமூர்த்தியினுடைய சேனைகளிற்புகுந்து தனதுவாளாயுதத்தைநாற்புறத்தும்வீர்வீரென்று வீசிப்பகைகளைத் தடிவதோடு மழுமுதலியபடைகளையெறிந்தும் நீண்ட சூலாயுதத்தைவிடுத்தும் அநேகரைக்கீழ்ப்படுத்தினன் அப்போது விநாயகமூர்த்தியினுடைய சேனைகளிற்சிலர் தலைகள்பிளந்தும் சிலர்கைகள்முறிந்தும் சிலர் தொடைகள் மடிந்தும் சிலர்இடைகளொடிந்தும் சிலர்கால்களறுந்தும் சிலர் குடல்கள் சரிந்தும் சிலர் மூளைகள்சிதறியும் சிலர் பற்களுதிர்ந்தும் சிலர் கவந்தங்களாடியும், சிலர் கவந்தங்களோடியும், இவ்வாறு ரணக்களமெங்கும் விழுந்தும் இறந்தும் களைத்தும் வருந்தினர், அப்போது உதிரமானது பிரவாகமாயோடும் நதியைப்போல இரைச்சலிட்டு பெருகியது அச்சமர்க்களமெங்கும் கழுகுகள் காளிகள் நாய்கள் நரிகள் பேய்கள் முதலிய செந்துக்கள் கூட்டங்கூட்டமாய்வந்து பிணங்களைப்பிடுங்கித்தின்வதுங் கூவுவதும் ஊளையிடுவதுங் கூத்தாடுவது மாயின.

இவ்வாறு கமலாசுரன் அகோரமான யுத்தத்தினை விளைத்ருவதை இலாபன்பார்த்து மனஞ்சகியாதவனாய் மற்றொருசிங்கவேறு சீறிப்பாய்வதுபோலெழுந்து தனது ஓர்கரத்தால் கமலாசுரனுடையகுதிரையின் முகத்திற்குத்தினன் அக்குத்தினால்அக்குதிரை விழுந்திறந்தது அப்பால் கமலாசுரனானவன் தனது குதிரையிறந்ததும் எல்லா ஆட்டங்களும் ஒடுங்கினவனாகி இனியென்னசெய்வோம் என்றெண்ணமுற்று மாயவித்தையினாற் றனதுருபத்தை ஒருவர் கண்ணுக்குந்தோற்றமொட்டாமல் மறைத்து ஆகாயமார்க்கத்திலெழும்பி சுக்கிரனுபதேசித்த மந்திரங்களை உச்சரித்துமிருந்த வல்லபத்தோடும் அந்தரத்திலிருந்தவண்ணமே விநாயகமூர்த்தியினுடைய சேனைகளின்மீது விஷத்தையொத்த தீட்சண்யமுள்ள பாணங்களைக் கோடி கோடியாகச் சொரிந்தனன்.

அவன்சொரிந்த பாணங்களெல்லாம் ஆகாயமெங்கும் பரவிவிழுவதினால் கார்காலத்தில் சொரிகின்ற சோனை மாரியைப்போலவெங்கு மிருள்மூடிக்கொண்டது. அப்போது சுவாமியினுடைய சேனைகள் பயந்தும் - இறந்தும் - உருகியும் - ஓடியும் - அலைவோலைகல்லோலப்பட்டுப் போவதை அதனை மகிமைவனை பார்த்துமிகுந்த கோபங்கொண்டு அடா புத்திகெட்டவனே இதிரிலரன்று யுத்தஞ்செய்வதற்குச் சீர்வாகமில்லாவிட்டால் ஆகாயத்திலமறைந்தா யுத்தஞ்செய்கிறது? இந்தவிடத்தில் உன்னைமூன்று துண்டாக்கி வெற்றிமாலை சூடுகிறேன் பாரென்று தமது திருக்கரத்தி லிருக்கின்ற பாசத்தைவிட்டனர். அப்பாசமானது சூரியனுடைய காந்திக்குமேலான பிரகாசத்துடனேசென்று அவ்வவுணனுடைய மந்திரவல்லமையினையும் மாயையினையுமழித்து, ஆகாயத்தில் நின்றவனைக்கட்டிக்கொண்டுவந்து மயில்வாகனரூடராயிருக்கின்ற விநாயகமூர்த்திக்கெதிரேவிட்டது. அப்போது சகலவல்லமையுமுடைய விநாயகக்கடவுள் கமலைராசனைப்பார்த்து அடா துஷ்டப்பயலே வீரத்தையுடையோர்க்கு யுத்தவேளை வெல்குன்றினும், அந்தயுத்தத்திலேயே தங்களுயிரை விடுவார்கள், நீ அப்படியின்றிப்பேடியைப்போல மறைந்து யுத்தஞ்செய்தனை? இனியேனுந் துன்பமில்லாமல் பிழைக்கவேண்டுமாயின் நம்மை சரணமடையக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர். அச்சொல் அவன்காதில் விழுவதன்முன் வடவானலத்தைப்போலக்கொதித்து தண்டாயுதத்தை சுழற்றி மயூரேசருடைய திருமார்பிலெறிந்தனன். அதைசுவாமி தமதுகரத்திலிருந்த தண்டத்தினாற்றுக்கிப்பொடி செய்து, பின்னர் அதையே அப்பாதகனுடைய மார்புபிளக்கும்படிவீசினார். உடனே அவன் மார்புபிளந்து மலையருவிபோலவுதிரம்பெருகி வெளிப்பட்டு தாரை தாரையாய் வழிந்து பூமியெங்குமபாய்ந்து தேங்கியது. அப்போது அவ்வுதிரத்திலிருந்து ஒவ்வொரு திவலைக்கும் அவனுக்கிணையான வீரர்கள் அளவற்றபேருண்டாகி மலைகளைப்போல உயர்ந்தவடிவமும், மலைகளுக்குச்சரியான புசபலபராக்கிரமமும் மலைகளையொத்த வயிரத்தினையுடைய நெஞ்சமும் மலைகளிற் படருங்கரியமேகவரிசையினைப்பொருவுமார்பும்? மலைகளினின்றுவீழ்கின்ற வெள்ளருவிகட்குச்சமான ஈனதும்பைமாலைகளையும் உடையவர்களாய்வனத்தில் வசிக்கின்ற சிங்கம்-புலி-சரபம்-சார்த்தூலம்முதலிய விலங்குபறவைகளைப்போல அநேகவிதமான பாணங்களையேந்தி மேகக்கர்ச்சனையைப்போலவார்ப்பரித்து, யாவருங்கடலைப்போல சுவாமியையவளைத்துக்கொண்டு வடவாமுகாக்கினிக்கிணையான கோபத்தோடு அலைகளைப்போலநிரைநிரையாய் அளவற்ற பாண

ங்களைப்பிரயோகித்தார்கள். அவ்வற்புதத்தைத்தேவர்களும்முனிவர்களுங் கண்டுபயந்து இனியென்னசெய்வோம்: ஒருகமலாசுரன்செய்யுந்துன்பங்களைச் சகிக்கமாட்டாமல் இருக்கின்றோமே இப்போது அவனையொத்த அசுரர்கள் அளவற்றவே ருண்டானார்களே! இன்னும் உண்டாவார்கள் போலிருக்கின்றதே! ஐயோ நாம் எவ்விதத்தாற் பிழைக்கப்போகின்றோமென்று நடு நடுங்கினார்கள், பிரமன் - விண்டு இந்திரன் முதலாயினோர் ஓடிமகமேருகிரியில் ஒளித்துக்கொண்டார்கள். சிவபிரான்மாத்திரம் கமலாசுரனுடைய மாயையழிப்பதோ மயூரேசருக்கு அரிதென்றுமுகமலர்ச்சி கொண்டிருந்தனர்

இப்பால் விநாயகமூர்த்தியானவர், தேவர்கள் முதலினோர்படுகின்ற கலக்கங்களைக்கண்டு, பாவமேபலவடிவங்களோடுவந்தாற்போலத்தம்மைச் சூழ்ந்துகொண்டு ஆயுதங்களைச்சொரிகின்ற அவுணவீரர்களின்மீது வாயுவேகமனோவேகத்தினும் விசையாய்ப்போகும்படி தமது மயில்வாகனத்தைமுடுக்கியருளினார். அம்மாத்திரத்தில் அம்மயிலானது சுவாமியைத்தாங்கியவண்ணமே கொள்ளிவட்டம் போலவும், கறங்குபோலவும், குலாலசக்கரம்போலவும் சூறைக்காற்றுபோலவும், சுழல்வண்டுபோலவும், நீர்ச்சுழிபோலவும் அட்டகுலபர்வதங்கள் வரையில் நொடிக்குமுன்னே தெள்ளியோருடைய உள்ளமே திரண்டதுபோலக்கலாவி அனந்தமுறை வட்டமிட்டது. அவ்வாறு வட்டமிட்டபோது அம்மயிலின் சிறகிலுண்டான காற்றால் சகலலோகங்களும்நடுங்கின. திக்கயானைகளனைத்தும் வீரிட்டன. மேருமுதலியபர்வதங்களெல்லாமசைந்தன. சத்தசாகரங்களுங் கலங்கின. நாகலோகத்தினரெல்லாம் பயப்பிராந்திகொண்டார்கள். அவுணவீரர்களெல்லாம் உள்ளமும் ஊக்கமும் உடைந்துவருந்தினார்கள். இவ்வாறு அம்மயிலானது வட்டமிட்டுச் செல்லுந்தோறும் அதன்மீதிருக்கின்ற எமதுகர்த்தரானவர் தமது இரண்டு திருக்கரங்களினால் வில்லைவளைத்து அமோகமான பாணவருஷங்களைச்சொரிந்தும். மற்ற எட்டுத்திருக்கரங்களால் சூலமுதலாகிய ஆயுதங்களைவிடுத்தும், அவுணவீரர்களையெல்லாம்பிளந்துபிளந்து சின்னபின்னப்படவாட்டினார். அவ்வவுணவீரர்களுடையசரீரத்தில் சுவாமிவிட்ட பாணங்கள்பாய்ந்துபெருகிய உதிரங்களினின்று நல்லோர்கள்நன்னெறியிற்செலுத்தும் ஓர்பொருளானது பின்னர்எல்லையறுப்பலவாய் வருமென்னும்வாக்கியத்தின்படி மீட்டும் ஒவ்வொரு துளிக்கு அவர்களைப்போல அளவற்றவீரர்களுண்டானார்கள் அவர்களையும் எமதுகர்த்தர் அளவற்ற பாணங்களை விடுத்து நாசஞ்செய்ய அவ்வாறுநாசஞ்செய்யுந்தோறும் அவ்வவர்க

ளுடைய வுதிரங்களில் நின்றுமேலுமேலும் எண்ணக்கூடாத வீரர்கள் உண்டாக்கிக்கொண்டேயிருந்தார்கள்.

இப்படி யுண்டாவதை இலாபன் கண்டு தனதுதாயாராகியசித்திபுத்திகளைத்தியானித்தனன். உடனே அவர்கள் தமதுபுத்திரனுடையகருத்தையறிந்து யுத்தகளத்திற்குவந்து தீனரட்சகராகிய விநாயகமூர்த்திமயில்வாகனரூடராய்யுத்தஞ்செய்கின்றபெருமையையுங்கமலாசுரன்பெற்றிருக்கின்றவரத்தின்மகிமையையுங்கண்டு அதிசயித்து அங்கிடத்தில் ஒன்பதுகோடி பூதவீரர்களை யுண்டாக்கி அவுணவீரர்களின்மீதுவிட்டனர், ஒவ்வொரு அண்டங்களையொவ்வொருவயிற்றுளடக்கவல்ல அப்பூத வீரர்கள் அவுண வீரர்களுடைய கூட்டத்துட்புகுந்து அவர் உதிரம் பூமியில் விழாதபடியெடுத்து யானையானது விளாங்கனியை யுண்ணுமாறுபோல விழுங்கியும், வீழ்ந்திருக்கின்ற உதிரங்களையெல்லாம் நாவினால் நக்கியும், இப்படி எல்லாவீரர்களையும்வயிறாரவுண்டு ஆனந்தமாகிசில பூதர்கள் ஆடினார்கள் சிலபூதர்கள் இன்னும் அசுரர்களுண்டோவெனத் தேடினார்கள். இவ்வாறு உதிரங்களினின்றும் உண்டான அவுண வீரர்களையெல்லாம் பூதவீரர்கள் வயிறாரவுண்டபின்பு, அச்சமர்க்களத்தில்கமலாசுரன் தனக்குஎனென்பாருமின்றி ஏகனாயிருந்த தெப்படிக்கிருந்த தெனில் பூர்வஞ்செய்த தபோபலத்தினால்செல்வத்தைப்பெற்றவர்கள் தருமநெறியேநிற்பார்களாயின் அச்செல்வத்தோடு நீடித்துவாழ்வார்கள் அந்நெறியில்நில்லாமல் அதர்மநெறியில்நிற்பார்களாயின் உடனேசகலசெல்வங்களுங்குன்றி உள்ள மழிவரென்று சொல்லும் வாக்கியத்திற்குச்சாட்சியாக விருந்தது.

இப்பால் ஆணவ முதலிய மும்மலங்களுமொழிந்தவன்மெய்ஞ்ஞானத்தையடையத்தக்கபருவனானாற்போலகமலாசுரனானவன் தனதுநால்வகைப்படைகளையு மொழித்துத்தான்பெற்றிருந்த தொல்லைவரமுஞ்சமீபிக்கும் பருவத்தினனாகி இதனை யோசிப்பதாயினன். நாம் இவனைக்குருவிமீதேறிவந்த காளையென்று அவமதித்தோம் பின்னர் இவன் நம்மோடு அளவற்ற யுத்தங்களைச்செய்ததுமல்லாமல்நமது வரத்தையு மழித்தான். நமது வீரத்தையு மழித்தான் எங்கும் பரவியிருக்கின்ற நமது கீர்த்தியையு மழித்தான் அம்மம்ம இவன் மஹா பராக்கிரமசாலியாக விருக்கவேண்டும் இனி இவனைத் தப்பி ஓடலா மென்றால் எவ்விதத்திலும் நம்மைக்கொல்லாமல் விடான், என்று நினைத்து தனக்குத்தானே சிறிது தேற்றங்கொண்டு தனது வில்லை வளைத்து அளவற்ற பாணங்களை ஒரேமுகமாக விநாயகமூர்

த்தியின் மீது பிரயோகித்தான் அப்பாணங்களை யெல்லாம்விமலை தயன் ஓர் நொடிப்போதிற் பொடி படுத்தித் தமது சூலாயுதத்தால் அவன் கழுத்திலொருகுத்தும்வயிற்றிலொரு குத்தும்இடுப்பிலொரு குத்துமாகக் குத்தினார் இம் மூன்று குத்தினால் அக் கமலாசுரன் ஆகாயத்தை யளாவியமலைகளைப்போல மூன்றுதுண்டாக்கிவடக்கே இமயவரைச்சாரலுக்கும்தெற்கேகிருஷ்ணாநதி தீரத்திற்குஞ்சரியாக ப்பெரும்புறக்கடலோசையைப்போலக்கதறிநாய்நரி கழுகு முதலானவைகட்கோர்பெருவிருந்தாகவிழுந்துஇறந்தான். அவனுடையரத்னகிரீடந்தரித்தவலிபொருந்தியதலைத்துண்டமானதுஇராஜசதனந்த நகரத்திலும்பேரழகினைவாய்ந்தஅவன் நடுத்துண்டமானதுபிரவாள நகரத்திலும்ஆபரணாதிகள் சொலிக்கின்ற அவன் அடித்துண்டமான துயுத்தகளத்திலுமாகவிழுந்தன. அவனுடையபெருமைபொருந்திய உயிரானது விநாயகமூர்த்தியினுடையதிருவடிகளில்ஐக்கியமாயது.

ஓ சவுனகாதி முனிவர்களே சர்வஜீவ தயாபரராகிய விநாயக மூர்த்தியானவர் இவனின்மிக்க பாதகன் ஒருவனும் இல்லையென்றுஜகப்பிரசித்தியாயிருந்த கமலாசுரன் வழங்கிய படைகளை அருச்சனைமலராகவும் அவன் மனதினாற்கூறி மொழிகளை மந்திரமாகவும்அவன் செய்தசமர்த்தொழிலைத்திருப்பணியாகவுங் கொண்டுஅவனுக்குமுத்தியுங்கொடுத்தனரென்றால்எம்போலிகள்செய்யுங்குற்றங்களைக்குணமாகக்கொண்டு இரட்சிப்பதும் அவருக்கு அரிதோ.

இப்பால் பூதவீரர்களெல்லாம் விநாயகமூர்த்தியினுடைய சந்நிதானத்திற்கெதிரில்நின்று குரவைக்கூத்தாடினார்கள். அலகைக்கூட்டங்களெல்லாம் பல குடர்மாலைகளைச் சூடிக்கொண்டுசுவாமியின் பின்புறமாக நின்றுதுணங்கைக் கொட்டிக்கூத்தாடின ஆகாயத்தில் ஐவகைத்துந்துபிகளும் முழங்கின. முனிவர்களெல்லாம்வேதபாராயணத்தோடு வந்துபணிந்தார்கள் தேவர்கள்கற்பகமலர்களைப்பொழிந்தார்கள். மூவுலகத்தாரும்சகல ஆபத்துகளும் இன்றுடனொழிந்தனவென்றுசந்தோஷித்தார்கள், விண்டுமுதலிய தேவர்கள்மிகுந்த பத்தியோடுவந்து பலமுறை பணிந்தார்கள்.

பின்னர் பிரமதேவன் தனது கமண்டல தீர்த்தத்தினாலும்,பற்பல திரவியங்களினாலும் பூசித்தனன். அப்போது அவனுடைய கமண்டலஞ்சாய்ந்துஅதிலுள்ள தீர்த்தமெல்லாம்ஒழுகிப்போயது. உடனேபிரமதேவன் அத்தீர்த்தத்தையெடுத்துமீட்டும் கமண்டலத்தில் நிரப்ப முயன்றனன் அதை விநாயகமூர்த்தி தடுத்துதமதுதிருக்கரத்தால்அத்தீர்த்தத்திற்சிறிது அள்ளிக்கமண்டலத்தில் விட்டுநிரப்பிக்

கொடுத்தனர் அதற்குப்பிரமன் ஆச்சரியங்கொண்டிருந்த அன்போடு பலமுறைபணிந்து துதிசெய்தனன். கமண்டலத்தினின்றும்பூமியில்விழ்ந்த தீர்த்தமானது எங்கும் பெருகிப்பெரிய நதியாகச்சென்று கடலிற் பாய்ந்தது அந்நதியில்கவுதமர் முதலியமுனிவர்களெல்லாம் ஸ்நானஞ்செய்து தருப்பணம் முதலானவைகளை நிறைவேற்றியிருந்தபோன்பிறை விநாயகமூர்த்தியைப் பூசித்தார்கள்பின்னர்விநாயகப்பெருமான் அவ்வவர்கள் வேண்டிய வரங்களைக்கொடுத்து அம்முனிவர்களையுந்தேவர்களையும் பார்த்துஇந்நதிதீரம்நமக்கிஷ்டமாயிருத்தலினாலே நாம எக்காலத்தும் இவ்விடத்திற்பிரியாமல் வசித்திருப்போம் எல்லா நதிகளினும் இது மேலான மகிமையையுடையது. இதில் ஸ்நானஞ்செய்தபேர் இம்மையில் இராசயோகம்பெற்று மறுமையில் விண்டு முதலாயினோருடைய பதவிகளையடைந்து முடிவில் முத்தியையுமடைவார்கள். மரமாயினுங்கொடியாயினுமிந்நதியில் நனைந்தால் அதுவும் மேலானகதியையடையுமென்று திருவாய்மலர்ந்தனர்.

அதற்குமேல்பிரமன் அந்நதியின் தீரத்தில்ஓர்ஆலயஞ்சமைத்தனன். அவ்வாலயத்தில் சகல தேவர்களும்முனிவர்களும்போற்றும்படியாகஎனதுகர்த்தர்மூலட்டானமூர்த்தியாயமர்ந்தருளினர். அவ்வாலயத்தின் கீழ்த்திசையில்விண்டுவானவர்இலக்குமியோடுவீற்றிருந்தனர், அவர்களுக்கெதிரில்ஆசிரியாதேவிவீற்றிருந்தனள், ஈசானியதிசையில்சிவபிரான்உமாதேவியோடுமெழுந்தருளினர். அவர்களுக்கெதிரிற்விரசைதேவிவீற்றிருந்தனள்மேற்குத்திசையில்மன்மதன்இரதியோடுவீற்றிருந்தனன்அவர்களுக்கெதிரில்மாற்சாலதாதகிதேவிவீற்றிருந்தனள். வடக்குத்திசையில் வராகரூபி பூமிதேவியோடுவீற்றிருந்தனள். அவர்களுக்கெதிரில்முத்திதேவி வீற்றிருந்தனள் ஆதலால் யாவரேனும்முற்கூறியகமண்டலநதியில்முன்னமொருமுறைஸ்நானஞ்செய்துஅரிபிரமேந்திராதியர்க்கெல்லாம்தலைமையானமயூரேசரைத்தரிசித்து, மீட்டும் ஒருமுறைஸ்நானஞ்செய்துகிழக்காதிதிசைகளிலுள்ளதுவாரதேவர்களைமுறைமைப்படி பூசித்துபபின்னர்விமலரைப்பூசிக்கவேண்டியது முறைமையாகும். இந்த முறைமைப்படியாவரேனும் ஒருநாள்முழுவதும் உபவாசமிருந்து நான்குகாலமும்பூசித்தால்அவர்கள் தரித்திரங்களொழிந்து இராசயோகத்தையடைவார்கள். வல்லமையில்லாதவர்களாயினுஞ்செயிப்பார்கள்சந்தானமில்லாதவர்களாயின்உடனே எல்லாப்பிணிகளும்நீங்கிச்சுகமனுபவிப்பார்கள். மூடர்களாயின் பின்னர் கீர்த்தியையுந்தேஜசையும் அடைவார்

கள். கடைத்தேறவேண்டினோர் மயூரேசரெழுந்தருளியிருக்கின்ற அந்தத்தலத்திற்குமேலாகிய தலமெவ்வுலகத்திலுமில்லை. கமலாசுரனுடைய சரீரமானது மூன்றுபிரிவாய்ப்பூமியில் வீழ்ந்தகாரணத்தினால் அந்தத் தலத்தைத் திரிசந்திக்ஷேத்திரமென்றுசொல்லுவார்கள். சகலஜீவ கோடிகளும் பூசித்து முத்தியடையும்பொருட்டு அத்தலத்திற் கிணையான இராஜகனாத நகரத்திலும், பிரவாளாகரத்திலும்விநாயகமூர்த்தி யெழுந்தருளியிருக்கின்றனர்.

இக்கதையையாவரேனும் பத்தியோடுகேட்கினும், எழுதினும் படிக்கினும், படிப்போர்க்குப்பொருள்சொல்லினும் அவர்கள் இம்மையிற்சகலபாக்கியங்களையும் அனுபவித்து மறுமையிற்றேவர்களாயனந்தபோக பாக்கியங்களையடைந்து நெடுநாள்வாழ்ந்திருந்து அந்தியகாலத்தில் மகாபாதகங்களினின்று நீங்கிசர்வானுக்கிரகதயாநாயகராகிய விநாயகக்கடவுளின் திருவடிகளையடைவார்கள்.

முந்திய

மயூரேசவிநாயகர் திருவவதாரப் படலம்,

முற்றிற்று

பிந்திய.

மயூரேச விநாயகர்

## திருவவதாரப் படலம். ௭.

வருமயூரேசர் திருவவதாரம் வகுத்தன மற்றையோ ருகத்திற், கருணையங்கடவுள் சிந்துரைவயிறுபக் கவுரிபாற் றிருவவதார, முருவுகொண் டொழுகு கலாபமாமயிலே றார்ந்தனரத்தகு கதையுந், தெருளுற வுரைத்தி கேட்டியாலென் றுதிசைமுகன் வியாதனுக்குரைப்பான்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! விநாயகமூர்த்தியானவர்கமலாசுரனைக்கொல்லுவதற்குமயூரேசராய்த்திருவவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளையாடல்இது அவ்விநாயகமூர்த்தியேசிந்துவென்னுமசுரனைக்கொல்லுவதற்குமற்றொருயுகத்தில் உமாதேவியினிடமாகவுதித்து மயூரேசரென்னுந் திருநாமத்தினைப்பெற்றுச் செய்தருளியதிருவிளையாடலொன்றுண்டு. அதையும் சொல்லுவோம் கேட்பீர்களாக.

மைதலதேயத்தில் கண்டக நகரென்னுமோர் பட்டணமுண்டு அப்பட்டணத்தில் திருமாலுக்கொப்பானவனாகி ஏகசக்ராதிபதியாய் நீதிசாத்திரமுறைமைப்படி அரசுசெலுத்திவந்த சக்கிரபாணியென்னும் ஓரரசனிருந்தான் அவன் தனதுமனைவியாகிய உக்கிரையென்பவளோடும் தர்மபுத்தி சாமபன் என்னும் இரண்டுமந்திரிகளோடும் வாழ்ந்திருக்கின்றநாளையிலே நெடுநாள் தனக்கு ஒரு புத்திரப்பேறில்லாமல் மிகுந்த கிலேசத்தையடைந்து தவம், தானம், தருமம், விரதம். வேள்வி முதலானவைகளை அளவற்றனவாகச்செய்துவந்தான் பின்னர் புத்திரர்கள் பிறந்தும் பூமியில் வீழ்ந்தமாத்திரத்தில் இறந்துகொண்டேயிருந்தார்கள்

அதனால் அரசன் முன்னிலும் அதிககிலேசத்தையடைந்து தனது நகரத்திலுள்ள பெரியோர்களையழைத்து வைத்து மந்திரிகளைப் பார்த்து இதனைச்சொல்லுவதாயினன் அமைச்சர்களே புத்திரப்பேறில்லாதார்க்கு நற்கதியில்லையென்று சாத்திரங்களெல்லாமுரைத்தலால் மிகுந்தபத்தியினால் பலதெய்வங்களை வழிபட்டேன். வேதாகமவிதியோடு பலதானங்களைச்செய்தேன் அளவற்றதருமங்களையன்போடியற்றினேன் மாசற்ற வேள்விகளை மனந்தளராமல் முடித்தேன் இத்தன்மையான பல நல்லொழுக்கங்களை நிறைவேற்றியபுத்திரர்களைப்பயந்தும் பூர்வபாவத்தொடர்பினால் அப்புத்திரர்களில்லாதவனாயினேன் இனி வனத்திற்சென்று தவஞ்செய்தேனும் நற்கதியையடையத்தக்க நெறியைச்சம்பாதித்தல் வேண்டும் ஆதலால் நீங்கள் மனத்திற்கவலைகொள்ளாமல் என்னைப்போல இவ்வரசாட்சியைப் பரிபாலனஞ்செய்துவருவீர்களென்று சொல்லித்தனது பொக்கசங்கள் சேனைகள் நாடுகள் நகரங்கள் முதலான யாவையும் மந்திரிகள்வசமாக்கித் தனதுமனைவியோடும் புறப்படுவதாயினன். அப்போது தீர்த்தயாத்திரையாகச் சென்ற சவுனகமுனிவர் தற்செயலாய் அவ்வரசனைநோக்கிவர அவ்வரசன் இவரைக்கண்டவுடன் அதிகமகிழ்ச்சியோடு மெதிர்கொண்டழைத்துவந்து ஓராசனத்திலிருத்திப் பூசித்து பலமுறைபணிந்தெழுந்து கரங்களையுங் கட்டிக்கொண்டு பயபத்தியோடு எதிர்நின்றனன், அவ்வாறுநிற்பவனை சவுனகமுனிவர்நோக்கி ஓ அரசனே நீ வனத்திற்செல்வதற்கன்றோ இச்சைகொண்டனை அவ்வாறுசெல்லவேண்டுவதில்லை பழையபடியுனதரசாட்சியை நடாத்திக்கொண்டிரு உனக்கு இனி நல்லபுத்திரனுண்டாவனென்று சொல்லினர் அதை அரசன்கேட்டு மீட்டும் பணிந்தெழுந்து சுவாமி இதுகாறும் யாங்கள் அளவற்ற சாந்திகளையுஞ் [illegible]

முதலானவைகளையுஞ்செய்துவந்தும் பிறந்தபிள்ளைகள் ஒன்றேனுஞ் சீவித்திராமல் இறந்துபோய்விட்டன அடியேங்களும் விருத்தாப்பியராயினேம் இனிஅடியேங்கள் செய்யத்தக்ககருமம்யாதேனுமிருக்கின் அதனை திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கம்முனிவர் அவனைப்பார்த்து அரசனேசதாசிவமூர்த்திக்கிடமாயிருக்கின்ற சூரியனுடைய விரதத்தையநுட்டித்தால் உங்கட்கு உடனேசகலதீவினைகளும் நீக்கி நல்லபுத்திரர்களையும் பெறுவீர்கள். அவ்விரதமநுட்டிக்குமமார்க்கத்தினைசொல்லுவோங்கேட்பீராக. இரதசத்தமிக்கு முன்னதாக அயனிசத்தைத் தொடங்கி ஓர் சொர்னகலசம் நிறுத்தி அதன்மீதுபொர்ணதகட்டில் சூரியனுடையசக்கரத்தை எழுதிதாபித்துவைத்து சிவந்தசந்தனம்சிவந்தபுட்பம் சிவந்தவத்திரம் சிவாதஅமுது சிவந்தபாத்திரமுதலானயாவும் சிவந்ததிறமாகச்சேகரித்துக்கொண்டு சதாசிவமூர்த்தியைத் தியானித்து அவருக்கு பிரீதியாகப்பூசைசெய்து பன்னிருமுறைவேறுவேறு அருக்கிய பாத்தியஆசமனாதிகள்கொடுத்து பன்னிருமுறைபிரதக்ஷணமும் நமஸ்காரமுஞ்செய்து பன்னிருமந்திரங்களையுஞ் செபித்துஇவ்வாறு மூப்பதுநாள்வரையில ஐம்புலன்களை யடக்கி உபவாசத்துடனேயிருந்து அநுட்டித்து சித்தசுத்தரானபிராமணர்களைக்கொண்டு லட்சம்நமஸ்காரங்களைசெய்வித்துலட்சம்பிராமணருக்குஉணவுகொடுப்பதுமுறைமையாகும் இவ்வாறுவழுவில்லாமல் முடிக்கக்கடவையென்று சொல்லிஅப்பன்னிரண்டுதிருமந்திரங்களையும் உபதேசித்தனர். பின்னர்சவுனகமுனிவர் கூறியவனைத்தையும்அரசன்பத்தியோடுகேட்டு உட்கொண்டிருந்து மனமகிழ்ச்சியாலுண்டான பேரன்பினால் நவரத்தினங்கள் தனதானியங்கள் வஸ்திராபரணங்கள் முதலானவைகளைசொர்னபாத்திரங்களில் நிரப்பிக்கொண்டுவந்துஅவரெதிரில்வைத்து சுவாமி இவைகளைததேவரீர் அங்கீகரித்தருளல்வேண்டுமென்றுபணிந்து பிரார்த்தித்தான் அவையனைத்தையும்அம்முனிவர்கண்டு அரசனே மரவுரியும் விபூதி உருத்திராக்கங்களுந் தரித்துக்கொண்டுவனத்திற் சஞ்சரிக்கின்ற பரிசுத்தராகிய யாம் இவைகளை அங்கீகரியோம் யாம் தீர்த்தயாத்திரையாக நடக்குமுன்னிலையில் உன்னைக்கண்டு நெடுநாளாயதென்றுநினைத்துஇங்ஙனம் வந்தோமேயன்றி வேறில்லை இனி அத்தீர்த்தயாத்திரைக்கு யாம்செல்கின்றோமென்றெழுந்து விடைகொண்டனர்.

இப்பால் அரசனும்அவன்பத்தினியும் மனக்கவலையினின்றுநீங்கிப்புனிதராகிஐம்புலன்களையுமடக்கிஇம்முனிவர்கூறிய முறைப்படி

யேசூரியனுடைய விரதத்தை ஆரம்பித்துச் செய்துவந்தனர். ஆரம்பித்த இருபத்தொன்பதாநாள் சூரியபகவானானவர் அவ்வரசன் மலடனென்பதையறிந்து அவன்பத்தினியாகிய உக்கிரையென்பவள் கனவில் அவள் கணவனைப்போல வடிவங்கொண்டுவந்து அவளோடு புணர்ந்து கருப்பந்தரிக்கச்செய்துபோயினர். அதை அவ்வுக்கிரையறியாமல் தனது கணவனே வந்து புணர்ந்துபோயினனென்று மனதிலெண்ணி இரவுநீங்கிவிடியற்காலமானபின்பு நித்தியவிதியை நிறைவேற்றிக்கொண்டு, தனது புருஷனைப் பணிந்து எதிர்நின்று சுவாமி! காமமானது கடலைப்போலப்பெருகுமேனுமோர் விரதத்தைத்தொடங்கி அநுட்டிக்கின்றோர்கள் பெண்டிர்களுடன் கூடிச்சுகித்தால் உடனே அவ்விரதம் ஆலைவாயிற் பட்டகரும்பினைப்போல நசிவுறுமேதோவென்று சிரித்துக்கூறினள். நடந்தகாரியங்களொன்றுமறியாத அரசன் தனதுபத்தினியைப்பார்த்துப் பெண்ணே! என்னை இப்படி எள்ளிச்சொல்லுவதற்குக் காரணமென்ன, நடந்த வுண்மையைச் சொல்லுகவென்று கேட்டான், அதற்கவ்வுக்கிரை தேவரீர் இராத்திரி என்னோடு கூடினீரே அதைத்தான் சொல்லுகிறேனென்று புன்னகையோடுங் கூறினள். அதை அரசன் தனக்குள் நிதானித்துப் பெண்ணே! நமக்கு நல்லபுதல்வனைக்கொடுக்கும்படியாகப் பகவானே எனது வடிவங்கொண்டுவந்து உன்னுடன் கூடிப்போனதாயிருக்கவேண்டும், அதற்கு எவ்வளவேனும் ஐயமில்லை, உனது வயிற்றிற் கருவுண்டாயது, இனி உனது மனக்கவலையை விட்டு நீ விரும்பியபதார்த்தங்களை நுகர்ந்து சந்தோஷமுற்றிருக்கக்கடவையென்று சொல்லி, அன்றையதினம் பூசைமுதலானவைகளை முறைமைப்படி செய்து விரதத்தை நிறைவேற்றி மறுநாள் தனது இஷ்டஜன பந்துக்களோடிருந்து போசனஞ்செய்து பெருமகிழ்ச்சியையடைந்தனன்.

பின்னர் அவன்பத்தினி வயிற்றிற்றங்கியகருவானது பூரித்துவளர்ந்துவருவதினால் அவள் குழலிற் குகித்தவள் போலச்சரீரத்திற்றோன்றியவெப்பத்தைச்சகிக்க மாட்டாதவளாய்க் குளிர்ந்து பரிமளிக்கின்ற சந்தனம் பனிநீர் முதலானவைகளைப் பூசிக்கொண்டும் நிலாமுற்றங்களிலும் நதிகள்சூழ்ந்த பூஞ்சோலைகளிலும் உலாவிக்கொண்டும் பொழுதுபோக்கியிருந்தனள். அவ்வாறிருக்கும்போது பத்தாந்திங்களிற்றனது பாங்கியர்களோடு அச்சோலைகளினின்று நீங்கிச்சிந்து நதிக்கரையிலுலாவிக்கொண்டிருந்தனள். அச்சமயத்தில் அவள் கருப்பவாதனை, கொண்டு தேவர்கட்கெல்லாம் இடரைப்பயப்பவள் போலொரு புதல்வனைப்பயந்தனள். அப்புதல்வன் பிறக்கும்போதே

சிவந்த சடைகளும் மூன்று கண்களு முடையவனாய் இரண்டு கரங்களிலுஞ் சூலாயுதமுஞ் சக்கரமுந்தரித்துக்கொண்டிருந்தகாந்தியை வீசுகின்ற சரீரத்தோடுங் கடலோசையுங்கண்டு நடுங்கத்தக்கபெருங் குரலோடிருந்தனன். அத்தன்மைத்தான புதல்வனை உக்கிரைபார்த்துப்பயந்துமூர்ச்சையாயினள் அவளருகிருந்தபாங்கியரெல்லாம்நடுங்கிஓடிப்போனார்கள். பின்னர்வருணனானவன் அந்தணனைப்போல வடிவங்கொண்டுவந்து உக்கிரையைமூர்ச்சை தெளிவித்துக்குழந்தையைத்தனது கரத்திலேந்தி அவளையுங்கூட அழைத்துக்கொண்டுசென்று இராசனெதிரில் வைத்து, இப்புதல்வன்சிந்து வென்கிறநதிக்கரையிற்பிறந்தவனாதலால்அவனுக்குச்சிந்துவென்றே நாமகரணஞ்செய்யவேண்டுமெனச்சொல்லிப்போயினன் அதற்கு அரசன்மனமகிழ்ந்துபுதல்வனுக்குச்சாதக கன்மாதிகளை நிறைவேற்றிச் சிந்துவென்று நாமகரணந்தரித்துத், தேவர்கள்முனிவர்கட்கெல்லாம்அளவற்றதானதிகளை நடாத்தினன்.

பின்னர் சிந்துவானவன் நாளுக்குநாள்வளர்பிறையைப்போல வளர்ந்து சோலைகளிலும் நதிகளிலும் விளையாடும்போது நிலத்தினின்றுந் துள்ளி ஆகாயத்திற் பாய்வான் சந்திரனைப்பிடித்துப்பிழிந்து அமுதபானஞ்செய்வான் தேவேந்திரனுடைய அயிராவதத்தைப்பிடித்துமுகத்தி லறைவான்..அதன்மீதேறித்திக்குகள்தோறும்நடாத்துவான். அதினின்றுமிழிந்துவிட்டுந்தாக்கிரீடைசெய்வான் சமுத்திரங்களிற் பாய்ந்து அலைகளைக்கலக்குவான் அட்டகஜங்களையும் வாரி அட்டகுலாசலங்கண்மீதெறிவான பர்வதங்களெல்லாம் நடுங்கும்படி அவைகளினடிவாரங்களைப்பிடித்தசைத்துக் குலுக்குவான்இவ்வாறு அளவற்றகுறும்புகளோடுவிளையாடும் அச்சிறுவனுடையசெயலை அசுரர் குருவாகிய சுக்கிர னறிந்து இனிஇவனால் அசுரர்குலம் விருத்தியடையுமென்று தன் மனதிற்குறித்தவனாய் அதிகவிசுவாசத்துடன் அப்புதல்வனிடத்தில்வந்து எக்காலத்தும்அழியாதவல்லபம் முதலானவைகளைத்தரத்தக்கமந்திரங்களை அவனுக்குபதேசித்து அப்பா நீ இனி சிவபிரானுடைய திருவடிகளைத்தியானஞ் செய்துமேலான தவங்களை நிறைவேற்றிஅவரிடத்தில் அளவற்றவரங்களைப்பெற்று, அவ்வரங்களின் மகிமையால்தேவர்களையெல்லாம் அடக்கிஅசுரகுலங்கள் தழைத்தோங்கும்படியாகப்பாதுகாத்து,மூவுலகத்தாரும் உனக்குப்பணிசெய்யும்படியான தலைமைபெற்றுவாழ்ந்திருக்கக்கடவையென் றுஆசீர்வதித்துச்சென்றனன் இப்பால்ஸ்நானஞ்செய்யநீரைத்தேடிச்செல்லதற்செயலாய்ஓர்நதி தன்னிடத்தில்வந்

துசெய்யக்கைகூடினதுபோல வெலுவில்மேலான உபதேசங்களைப்பெற்ற அச்சிறுவனானவன் மிகுந்த அன்போடுஞ் சுக்கிரனிடத்தில் அநுக்கிரகம் பெற்றபின்பு வனத்திற் சென்று வலக்காற்பெருவிரலை நிலத்திலூன்றி இடக்காலை அவ்வலக்கால் முழந்தாளின்மீது முடக்கிவைத்து மார்புக்குச்சரியாக இருகரங்களையுங்கூப்பி ஐம்புலன்களையுமடக்கிச்சிவபிரானை நியானித்துச்சூரியனைப்பார்த்தவண்ணமே இரண்டாயிரம் வருடம்அரியதவஞ்செய்தான் அத்தபாக்கினியானது அண்டங்கள் முழுவதும் போய்த்தகித்தது, அக்காலத்தில் சிவபிரான் கிருபைகூர்ந்து அவனெதிரில் மான்-மழு-சதுர்ப்புசங்-காளகண்டம்திரிநேத்திரம்முதலிய அங்கந்தோன்றும்படி நின்றருளினர் அவரைக்கண்டவுடன் பணிந்தெழுந்து அளவற்றதோத்திரங்களைச்செய்தனன். அதற்குச்சிவபிரான் மனமகிழ்ந்து உனக்குவேண்டியவரங்களைக்கேளென்று திருவாய் மலர்ந்தருளினர்.

அப்போது சிந்துவானவன்மீட்டும் பணிந்தெழுந்து ஓ கிருபாமூர்த்தியே அடியேனுடைய சரீரம் எண்பத்துநான்குநூறாயிரம்யோனிபேதங்களினாலும் நாசமில்லாமல்நெடுநாளிருக்கவும், மூன்றுலோகங்களையும்ஒரேகுடைநீழலி லாண்டுகொள்ளவும்பிரமன்முதலியதேவர்களும் அசுரர்களும் பூவுலகின்கணுள்ள அரசர்களும என்னைவணங்கி யாளிட்டபணிகளைச்செய்துக்கொண்டிருக்கவும் தேவரீரிடத்தில் எக்காலத்து மிடைவிடாதபத்தியையான்புரியவும்வரங்கொடுத்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தான். அவனைச்சிவபிரான்பார்த்தருளி ஓ சிந்துவே அகிலகாரணனாகிய கணேசமூர்த்தி அவதாரஞ்செய்தாலன்றி உன்னைபபகைத்துயாவருங்கொல்பவரில்லைமற்றையவரங்களையெல்லாம் நீ வேண்டிய வண்ணமேயளித்தோமென்றுதிருவாய்மலர்ந்து எழுந்தருளினர் பின்னர்சிந்து வானவன்மீட்டுங்கண்டகநகரத்திற்குவந்துசேர்ந்தான்.

இம்மேலாகிய வரத்தினைப்பெற்றுவந்தசிந்துவை அவன்தந்தையாகியசக்கிரபாணி ராசன்கண்டு மிகுந்த ஆனந்தத்தோடும் அவனை ஆலிங்கனஞ்செய்து தனதரசுரிமையை அவனிடத்தி லொப்புவித்தனன்இப்பால்சிந்துராசன் மித்திரனென்றுங்கவுத்துவனென்றும்பெயரினையுடையஇருவரைத்தனக்கு மந்திரிகளாக்கிச்சகலலோகங்களையும்வெல்லுமாறுபடையெடுத்து வணங்காத அரசர்களிடத்தில்உயிர்வாங்கி வணங்கினோரிடத்திற்பகுதிவாங்கிப்பூவுலக முழுவதுந்தனது ஆக்கினை சக்கரத்தை நிறுத்திக். கதம்பாசுரன்-சம்பாசுரன்-கனலாசுரன்கோலாசுரன்-என்னும்நால்வரையுந் தனதுநால்வகைச்சேனைகட்

குந்தலைவராக்கி, அவ்வவர்கட்கு நடத்தவேண்டியசிறப்புக்களையும் நடாத்தித் தனக்கு அடங்காது எதிர்த்துவந்தசும்பாசுரன் நிசும்பாசுரன்-கலாசுரன்-பிரகண்டாசுரன் -விருத்திராசுரன்-முதலானவர்களோடுநெடுநாள்யுத்தஞ்செய்து ஒடுக்கிப்பின்னரவர்கள்வணங்கிவர அவர்களையும் வேண்டியவரிசைகளோடு அழைத்துக்கொண்டுசென்றுசண்டாசுரனுடனே அளவற்றபோர்களைச்செய்துஅவனைக்கொன்றுஅவன்புத்திரனாகிய பிரபலாசுரனுக்குப்பட்டங்கட்டி பின்னுமநேகஅதிகாரமுதலானவைகளையுந்தந்து இவ்வாறுஅவுணராசர்களையெல்லாம்வென்று பின்னர்சொர்க்கலோகத்திற்சென்றனன் அவன்வரவைத்தேவதூதுவர்களறிந்தோடி முப்பத்துமுக்கோடிதேவர்களும் புடைசூழும்படியாக இரத்தினசிங்காதனத்திற்கொலுவீற்றிருக்கின்றதேவேந்திரனைப்பணிந்து ஆண்டவனே திரிமூர்த்திகளுடையபராக்கிரமங்களைச் சிறிதுமதியாத சிந்துராசன்அவுணசேனைகளோடுஇங்குவந்திருக்கின்றனனென்று அறிவித்தார்கள்அதைக்கேட்டவுடன் தேவேந்திரன் ஆயிரங்கண்களுஞ்சிவந்து உள்ளேகோபாக்கினிமூள தனது வச்சிராயுதத்தையேந்தி அயிராவதத்தின்மீதாரோகணித்து தேவசேனைகள் தன்னைப்புடைசூழ்ந்துவர சிந்துராசனுடையசேனைகளுக்கெதிரேசென்றான் அப்போது இருவருடையசேனைகளும்வேறுவேறாக அணிவகுத்து இரதவீரர்களோடு இரதவீரர்களும் யானைவீரர்களோடு யானைவீரர்களும் குதிரைவீரர்களோடுகுதிரைவீரர்களும் படைவீரர்களோடுபடைவீரர்களும் கலந்துபோர்செய்தார்கள். வாளாயுதத்தோடு குதிரையின்மீதேறியிருக்கின்ற சிந்துராசனோடு இந்திரனெதிர்த்துத் தனது வச்சிராயுதத்தினால் அவன்சிரசின்மீது தாக்கினான்.

உடனே சிந்துராசன் அவ்வச்சிராயுதந் தூகள்படும்படி விழிகளிலனற்பொறியெழும்ப உறுத்துப்பார்த்துத் தனதுகுதிரையைமுடுக்கி அயிராவதத்தின் மத்தகம்பிளந்து இரத்தமொழுகும்படியாகத்தனதுகையாலதனைக்குத்தி அதன்மீதிருந்த இந்திரனைக்காலையிழுத்துநிலத்திலே அறையும்படியாக மேலாகத்தூக்கிச்சுழற்றினான் அச்சமயத்தில் தேவேந்திரனவன் சூக்குமதேகமெடுத்து அவ்விடத்தினின்றுமோடி வைகுந்தத்திற்சென்று விண்டுவைச் சரணடைந்திருந்தனன் அதற்குமேல் தனக்குயாவருமெதிரில்லாதசிந்துராசன்தெய்வலோகத்தையுந்தன்வசமாக்கி சிலகாலம்அவ்விடத்திற்றானேயிருந்து அரசுசெலுத்தி சம்மன்நிசம்பன் முதலாயுள்ளஅவுணராசர்களைச்சிலசேனைகளோடும்அவ்விடத்தில்நிறுத்திப்பின்னர்அச்சுவர்க்கலோகத்தைவிட்டுநாகலோகத்திற்சென்றுஅங்காசாள்கின்றநாகராசர்களையு

ம்வணங்குவித்து,மீட்டும் பூலோகத்திற்குவந்துசகலலோகங்கட்கும் இராசதானியாகியதனதுகண்டகநகரத்தையடைந்துசொர்ணத்தாற் செய்து நவரத்தினங்கள்பதித்திருக்கின்ற சிம்மாதனத்தில் ஏகசக்ராதிபதியாய்க்கொலுவிருந்து சகலலோகத்தரசர்களும் வணங்கும்படி சுத்தவீரர்களுடனே உல்லாச காலக்ஷேபமாய் அரசு செலுத்தி எல்லாப்போகபாக்கியங்களையுங்குறைவற வநுபவித்துவாழ்ந்திருந்தனன் இவ்வாறுசிந்துராசன் சகலலோகங்களினுஞ் செய்துவந்ததிக்குவிசயத்தோடு பூலோகத்தில் வாழ்ந்திருக்கின்ற நாளையில் ஒர்நாள்தம்மைச்சரணடைந்தஇந்திரனுக்காக விண்டுவானவர் படையெடுத்து, தமது கெருடவாகனத்தின்மீதேறிச் செலுத்திசொர்க்கலோகத்தை வந்து வளைத்துக்கொண்டுசாதலைத்துணிந்துபோராடவல்ல அவுணவீரர்களோடு யுததஞ்செய்வதாயினர். அப்போது சம்பாசுரனோடுஅக்கினியும், காலாசுரனோடு இயமனும், கமலாகரனோடு நிருதியும்பிரகண்டாசுரனோடு-வருணனும் நிசும்பாசுரனோடு-வாயுவும், பிரபலாசுரனோடு குபேரனும், கதம்பாசுரனோடு மன்மதனும்,சண்டாசுரனோடு-விஞ்சையர்களும்,கோலாசுரனோடு-அச்சுவினிகளும பவுமாசுரனோடு காந்தருவர்களும், வேறு வேறாக நெருங்கி யுத்தஞ் செய்தார்கள். ஏனையஅசுரவீரர்களையெல்லாம் அங்காரகன்முதலியதேவர்களெதிர்த்துப்போராடினார்கள். இவ்வாறு அவுணவிராகளுந்தேவவீரர்களும் ஒருவரோடொருவர்கைகலந்து வேலாயுதங்களால் தாக்கியுங்குந்தங்களினாற்குத்தியும், சக்கரங்களைவிடுதலும், கணைகளைத்தொடுத்தும் பாசங்களால் இறுகக்கட்டியும, அளவற்றபெருங்கோபத்தோடுஇருவகுப்பினரும் இடைவிடாமல்வெகுகாலம்வரையில் யுத்தஞ்செய்தார்கள். இக காரணத்தைச் சில தூதர்களோடி சிந்துராசனுக்கறிவிக்க. அதை அவன்கேட்ட மாத்திரத்தில் மனங்கொதித் தெழுந்து முன்னா தேவர்களைத் துன்பஞ்செய்யாமல் தயவோடுவிடுத்துவந்த குற்றத்தினா லல்லவா இக்காரணம் உண்டாயது. இனி அவர்களையெல்லாம் பிடித்துக்கொடிய சிறையி லிடுவேனென்று தீர்மானஞ் செய்து பூவுலகத்திலிருந்ததனது சேனைகளோடும் ஆகாயத்திற்பாய்ந்துதேவர்களோடுஞ் சமர்செய்துவருந்துகின்றஅவுணவீரர்களையுஞ் சேனைகளையும்பார்த்து இதுகாறும் நீங்கள் செய்த யுத்தம்போதும் இனிநிறுத்துங்கள்என்றுகையமர்த்திக்கருடவாகனத்தின்மீதுவந்து நிற்கின்ற விண்டுவைநோக்கி அறிவற்றவனே நீயுத்தஞ்செய்துவெல்லத்தக்கஆண்மையுடையவனாயின் அவ்வாண்மையையென்னோடுசெய்துகாட்டாமல் யானில்லாதவேளையில் இவர்களோடுநீடிதுத்யுத்தம்

செய்வதும்வீரந்தானே திரிகாலங்களையுமறியத்தக்கஞானமும்யாவரையும் இரட்சிக்கும்படியான தொழிலையும் உடைய நீ என்னோடு பகைத்து யுத்தஞ்செய்தால் நீங்காததுன்பத்தை அநுபவிக்கவேண்டியிருக்குமென்பதைத்தெரிந்துகொள்ளாமற்போயினையே இப்போதேனும் உனக்குயுத்தஞ்செய்து வெல்லத்தக்கபராக்கிரமமிருந்தால் உனது சகலசேனைகளோடும் ஏகனாயிருக்கின்ற என்னொருவனுடன்யுத்தஞ்செய்யக்கடவையென்று சொன்னான் இவ்வாறு சிந்துராசன் சொல்லிமுடியுமுன்னரெதிர்த்தெழுந்தவிண்டுவினோடெல்லாத்தேவர்களும்ஒன்றாகக்கூடிஅவன்மீது அளவற்ற அஸ்திரங்களைபிரயோகித்தார்கள். அதனமீது சிந்துராசனானவன் தனது கரத்திலிருந்ததண்டாயுதத்தினாலே தேவசேனைகளெல்லாஞ்சின்னபின்னப்படமோதி இந்திரன்முதலிய எண்மரும்மூர்ச்சையாகும்படி கொடுமையோடுந்தாக்கிவிண்டுஏறியிருந்த கருடனுடைய வொருபக்கத்துசிறகையறுத்துபூமியில்விழத்தள்ளினான் அப்போதுவிண்டு மிகுந்தகோபத்தோடெழுந்துதமதுகாத்திலிருந்த தண்டாயுதத்தினாலே அவன்சிரத்திற் புடைத்தார். உடனே அத்தண்டாயுதமானது முறிந்துநொறுங்கிப்போயது பின்னர்விண்டுவானவர்தமதுசக்ராயுதத்தைப்பிரயோகித்தார்அதைச்சிந்துராஜன்கண்டு தானுந்தனது சக்ராயுதத்தைபபிரயோகித்தான் அவ்விரண்டுசக்ராயுதங்களும்ஒன்றையொன்றெதிர்த்துப்பிரளயாக்கினிபோலவும்ஆலகாலவிடம்போலவுஞ்சொலித்துககொண்டுசொர்க்கலோகமுதல்எல்லாலோகங்களினுஞ்சென்றுதகித்தன அவ்வுற்பாதத்தை இருவரும்பார்த்து உடனே அவ்வவர்களுடைய சக்ராயுதங்களை அவ்வவர்கள் ஆக்ருஷ்ணம் பண்ணிக்கொண்டார்கள், அப்போதுவிண்டுவானவர் சிறிது நிதானித்துநமது அளவற்ற படைகளுள்ளும்சக்ரப்படைமேலானதாயிருக்க அதற்குமேலானதாகஅவனிடத்தில் ஒருசக்கரமிருக்கின்றது அதுவோ சிவபிரானுடைய சூலாயுதத்திற்கிணையாகச் சமர்செய்யவல்லது. அதுவுமன்றி, அச்சூலாயுதத்திற்குமிணையாக வேறொருசூலாயுதம் அவன்கையில் வைத்திருக்கின்றான். ஆதலால் இவனையுத்தஞ்செய்து வெல்லுவது மிகவுமரிது. இவனுக்கு நம்போலிகளால் இறுதியில்லைஇவனை உபாயங்களினாலேசாந்தப்படுத்திநாம் தப்பித்துக்கொண்டுபோவதே காரியமின்றிவேறொன்றைச்சிந்திப்பதுபழுதாகுமென்றுதமக்குள்நிச்சயித்துமிருந்தகாதலோடும் இதங்காட்டுவார்போல அவனைப்பார்த்து, ஓவீராதிவீரனே புருடர்களுடைய ஆண்மைகளெல்லாம் ஓர்நொடிபபோதில்மாய்ந்துசிந்தும்படிசெய்யத்தக்கபராக்கிரமம் உன்னிடத்திலிருப்பதால்உன

க்குச்சிந்துவென்கிற பெயர் மிகவுஞ் சிறப்புற்றிருக்கின்றது, உனக்கு எந்தவுலகங்களினும் எதிரிகளில்லை உனது பராக்கிரமத்திற்கு யாம் மெச்சினோம். உனக்கு வேண்டியவரங்களைக்கேள் தருகிறோமென்றுசொல்லினர்·

அதைச் சிந்துராசன் கேட்டு விண்டுவினுடைய கருத்து இன்னதென்று தனக்குள் தெரிந்துகொண்டு, அவர்கூறிய மறுபொருளான வார்த்தைக்குச்சரியாகத் தானுமோர் கபடயுக்திகொண்டு! ஓ விண்டுவே; நீ எனக்குவரந்தருவது மெய்யேயாயின் கொடு. அஃதுயாதோவென்று மலைக்க வேண்டுவதில்லை உன்னையான் எளிதான வரமேகேட்கின்றேன். அஃது யாதெனில் எல்லாத்தேவர்களோடும் நமதுகண்டகநகரத்தில்வந்து நாமிட்ட பணிகளை யாவரோடும்நீசெய்திருக்கும்படி வரங்கொடுக்கவேண்டும்இவ்வரங்கொடாமற்போவாயேல் இந்நிமிடத்தில் உன்னையுத்தமுகத்தில்வென்று அவ்வாறேசெய்விப்பேனென்று சொன்னான் சிவபிரானைப்போலத்திரிநேத்திரமும் சடைமுடியும் சூலாயுதமும்பெற்றிருக்கின்ற சிந்துராசன்சொன்ன சொற்களை விண்டு கேட்டவுடன் மாழ்கினவராய்பின்னர் ஒருவாறு தேறி இவன் இனிவலியச்செய்விக்கததக்க காரியத்தை நாமே ஒப்பிச்செய்வது மிகவுமான்பாகும் அதனால் நாம்கொடுத்த வரத்துக்கும் பெருமையுண்டாகுமென்று நினைத்து அந்தோ என்செய்வார் அவ்வாறே தந்தோமென்று சொல்லினர். அச்சொல் முடியுமுன்னமே சிந்துராசனானவன் அவுணர் கூட்டங்களைஏவி, விண்டு இந்திரன்முதலான சகலதேவர்களையும் வளைத்துக்காவலிட்டுப், பிரமனையும் ஆள்விட்டுப்பிடித்து யுத்தமுகத்தில் நின்றதேவர்களல்லாமல், அந்தந்த லோகங்களிலிருக்கின்ற ஏனையதேவர்களையும் பிடித்தபிடியிற்கொண்டுவருமாறு சில அவுணர்களையேவி, வைகுந்தம்முதலியதேவலோகங்களிலெல்லாம் சும்பாசுரன் நிசம்பாசுரன் விருத்திராசுரன் சம்பாசுரன் முதலான அவுணர்களை யிருத்திப்பின்னர் எல்லாத்தேவர்களோடும் அவ்விடத்தினின்று மகன்று, இரணபேரி ஜயபேரிமுதலியவைகள் முழங்கும்படியாகப்பூலோகத்திலிழிந்து, தனதுகண்டகநகரமுழுவதும் அத்தேவர்களைச் சிறையில்வைத்து, அவர்கள் தப்பிப்போகாதவண்ணம அவுணர்களை நாற்றிசைகளினுங் காவலிருத்தி அவ்வவர்கள் அன்போடு அநுட்டித்துவருகின்ற மந்திரங்களையெல்லாம் அவ்வவற்றின் வடிவங்களோடுகளைந்து சிந்துநதியிற்போட்டுவிடச்செய்து எவ்விடங்களில் யாவரேனும் அவ்வவர்களிஷ்டதேவர்களைப்பூசிப்பார்களாயின் அவர்களையெல்லாம்பிடித்து வதைசெய்யக்கட்டளையிட்டு, எல்லாத் தேவர்களுந் தன்னைப்போல ஓர்

வடிவஞ்செய்து வைத்துப் பூசித்துவருமாறு அமைச்சர்களைக்கூவி
எங்கும்பறைபறைவிக்கும்படி ஆக்கியாபித்தனன். அவர்களும் அவ்
வாறே செய்வித்தார்கள் அதனால் சகலலோகங்களிலும் வேதநீதிக
ளிறந்தன யாவரும் சாத்திரவிசாரணையில்லாமல் மாழ்கினர் பெரி
யோர்களெல்லாங்கடவுளே துணையென்றுநம்பி மிகுந்த மனக்கவலை
யோடு மௌனித்திருந்தார்கள் இவ்வாறுதேவர்கள் முதலாயினோரை
ச் சிறையிலிட்டுத்துன்பஞ்செய்யும் சிந்து ராஜனனவன் தனது குல
த்தி லுதித்த உற்கையென்பவளை விவாகஞ்செய்து, அவளால் தன்
மன் அதன்மனென்றும் இரண்டுபுத்திரர்களைப்பெற்று, அப்புத்திர
ர்களோடும் பத்தினியோடும் தாய்தந்தை முதலானவர்களோடும்
அளவளாவி, அவுணர்களையெல்லாம் மேன்மைபெறச்செய்து, தே
வர்களையெல்லாம் துக்க சாகரத்தில் மூழ்குவித்து, சிறிது மிரக்க
மில்லாதபடி நாள்தோறுங் கொடுங்கோலையே செலுத்தி நெடுநாள்
வாழ்ந்திருந்தனன்

அவனால் அளவறநாள் சிறையிலகப்பட்டு துன்பமனுபவிக்கி
ன்றதேவர்களெல்லாம் மிகவும்மனம்நொந்து ஓர்நாள் காவலாளர்க
ளறியாதவண்ணந் தங்கள் குலகுருவாகிய பிரகஸ்பதி தேவரைய
ணிகிதுசுவாமி! இந்திரராசன் நமதுலோகத்திற் படையெடுத்து
வந்தபோது நாம் எவ்வாறடங்கி இருந்தோமோ அவ்வாறேயிருப்
போமாயின் சுகமுற்றிருப்போம்! அசசுகமில்லாமற்போயினும் இவ்
வித ஆபத்துககளிலேனும் அகப்படாமலிருப்போம் பின்னர்தேவே
ந்திரனைநம்பியன்றோ இச்சிறைக்குளாயினேம் இனியேனுமிச்சிறை
நின்றுந்தப்பி எக்காலத்திற் சுகம்பெறுவோமென்று துக்கித்தார்கள்
அதற்குப் பிரகஸ்பதி தேவர் சிறிது ஆலோசித்துத் , மக்குள் ஓர்
நிச்சயஞ்செய்து ஜீவானவர்களை நாம் அனைவரும்சுகம்பெறத்தக்க
மார்க்கத்தினைத்தேடவேண்டுமாயின் என்றைக்கும் நமது இடையூறு
களைநீக்கி இரட்சித்துவருகின்ற விநாயகமூர்த்தியுண்டல்லவா அவ
ரை இப்போதும இவ்வவுணபாதகர்களையொடுக்கும்படியாக மனதி
லன்போடு தியானித்துப் பூசிப்பீர்களென்றுசொன்னார். அவ்வாறே
அத்தேவர்களும், பிரகஸ்பதிதேவரும், விண்டுவும், பிரமனும், ஏனை
ய முனிவர்களும் விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தை நா
டோறும் மனதிற் றியானித்துப் பூசித்துவந்தார்கள். மத்தியில் விநா
யகமூர்த்தியினுடைய சதுர்த்தி வர அப்போதவ்விரதத்தை யாவ
ரும் பத்தியோடு அந்தரங்கமா யனுட்டித்தார்கள். அதற்கு விநாய
கமூர்த்தி கிருபைகூர்ந்து பத்துத் திருக்கரங்களும்; அக்கரங்கள்

தோறும் ஆயுதங்களும் விளங்கும்படியாகச் சித்திபுத்தி சமேதராய்ச் சிங்கவாகனமூர்ந்து மற்றைய அவயவங்களோடும் அவ்வவர்கள் மனந்தோறும் தரிசனந்தந்து அன்பர்களே! முன்னருங்கட்குத் தீங்கு செய்துவந்த கணன் முதலாயினோருடைய உடல்களைப்பிளந்து எவ்வாறு உங்கட்குச் சுகம்மருவச்செய்தோமோ அவ்வாறே யாம் உமாதேவியினிடத்தில் ஆறு கைகளும் வெள்ளைமேனியுமாக அவதரித்து ஓர் பெரியமயில்வாகனத்தை யூர்ந்து இச்சிந்துவையுஞ் சங்கரித்து உங்களைச்சிறையினின்றும் விடுத்தருளுவோம் அதுகாறும் நீங்கள் சந்தோஷமுற்றிருங்களென்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

அதற்குமேல் தேவர்கள் முதலிய யாவரும் விநாயகமூர்த்தி திருவாய் மலர்ந்தருளியதை மனதில் உறுதியாக வைத்துக்கொண்டு அத்தியந்த சந்தோஷத்தைப்பெற்று, அத்தினமே சிறையினின்றும் விடுபட்டு மேலான பாக்கியத்தைப்பெற்றவர்களைப்போல ஆனந்தமாகி நாள்தோறும் விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை மனதிற் தியானஞ்செய்துகொண்டிருந்தார்கள்

## மயூரேசவதாரம்

ஓ சவுனகாதி முனிவர்களே! தேவதேவோத்தமராகியவிநாயகமூர்த்தியானவர் உமாதேவியிடத்திற் புத்திரராக அவதரிக்கும்படி இடைவிடாது தீங்குகளைச்செய்துவந்த சிந்துராசனுடைய திறத்தினைச்சொன்னோம். இனி எமதிறைவராகிய விநாயகக்கடவுள் அவதாரஞ்செய்தருளிய சிறப்பினைச்சொல்லுவோம் கேட்பீர்களாக.

முனீந்திரர்களே! சிந்துராசனுடைய கொடுமைக்கஞ்சித்திரிசந்திக்ஷேத்திரத்தில் வாசஞ்செய்கின்ற கவுதமர் முதலிய முனிவர்கள் தங்கள் உருவங்களைமறைத்துக்கொண்டு சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தார்கள் அளவற்றநாள் உபவாசத்தோடும் அவர்கள்செய்துவந்த தவத்திற்குச் சிவபிரான் கிருபைசுரந்து உமா பரமேஸ்வரி சமேதராய் ரிஷபவாகனத்தின்மீதெழுந்தருளி பூதர் முதலாகிய சிவகணங்கள் புடைசூழ அவர்களெதிரிற் பிரத்தியட்சமாயினர் அவர்கள்சிவபிரானைக்கண்டவுடனே எழுந்திருந்து விழிகளில் ஆனந்தவாரிபெருகபலமுறை சாஷ்டாங்கமாகப்பணிந்து இருகரங்களையுஞ்சிரமேற் கூப்பி வேதாகமங்களினால் அளவற்றதோத்திரங்களைச் செய்தார்கள் அவைகளைச்சிவபெருமான் கிருபையோடு பார்த்தருளி, உங்கட்கு வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்த

னர் உடனே முனிவர்களெல்லாங்கிருத்தார்த்தர்களாயினோமென்று மிருந்த அன்போடுபணிந்து சுவாமி கொடியவனான சிந்துரனால்சகலலோகங்களினும் வேதமார்க்கங்கள் மூழ்கிப்போயின தேவர்கள் முனிவர்களெல்லாம் அவ்வவர்களுடைய வாழ்வுகளழிந்து அப்பாதகனிட்ட சிறைக்குளானார்கள் அடியேங்கள் சிலபேர்மாத்திரம் அவன்கையில் அகப்படாமல் வேதமார்க்கத்தை யனுட்டித்து இங்ஙனேயிருக்கின்றோம். அக்கொடியவனை எவ்விதத்திலேனும் நாசஞ்செய்யவேண்டும் அவனுக்கு நாசகாலம் இப்போதில்லாவிடின் அக்காலம் வருகின்றவரையில் அடியேங்கட்குத் தீங்குநேரவொட்டாமல் காக்கும்பொருட்டுத் தேவரீர் இங்ஙனமெழுந்தருளி யிருத்தல் வேண்டும் தேவரீர் இங்ஙனம் எழுந்தருளியிருந்தால் எளியேங்கள் அச்சமில்லாமல் சுவாமிகளைப்பூசைசெய்துகொண்டு வேதமார்க்கங்களை யனுட்டித்துத்தீவினைகளிற் படாமல் இகத்தில் வாழ்ந்திருப்போம் இல்லாவிடில் இனி அடியேங்கள் பலவகைத்துன்பங்கட் காளாகுவோமென்று பிரார்த்தித்தார்கள் பத்தருக்கெளியரான பரமேஸ்வரர் அம்முனிவர்களுடைய அபீஷ்டத்தை நிறைவேற்றத்திருவுளங்கொண்டு அவர்கள் உள்ளத்தைப்போலப் பரிசுத்தமாய்த் தெளிந்து தண்ணென் றிருக்கின்ற நீர்வளப்பத்தையும் புட்பங்கள் மலிந்த பலபொழில்களாற் சூழப்பட்டிருக்கின்ற நிலவளப்பத்தையும்பார்த்து அவர்கட்கு மகிழ்வுண்டாகும்படி, அன்பர்களே! சிந்துவை ச்சங்கரிக்கின்றவரையில யாம உமாதேவியோடும் இப்பூதகணங்களோடும் இங்ஙனே எழுந்தருளியிருப்போமென்றுதிருவாய்மலர்ந்தருளினர். அதைக்கேட்ட முனிபுங்கவர்களெல்லாம் மேலான மகிழ்ச்சிபொங்கவிருந்தார்கள். பின்னர் கணத்தலைவர்கள் சிவபிரானும் உமாதேவியும் எழுந்தருளி யிருப்பதற்குச் சொர்னத்தினாலும், நவரத்னங்களினாலும் ஓராலயத்தைக் கயிலாயபர்வதத்திற் கிணையாகச் சமைத்தார்கள்; அவ்வாலயத்தில் சிவபிரான் உமாதேவியாரோடு மெழுந்தருளி முனிபுங்கவர்களெல்லாம் பூசிக்கும்படி தமதுகிருபாகடாட்சத்தை வைத்திருந்தனர் அக்காலத்தில்சகலவான்மாக்களுக்கும் யோகநிட்டையைத்தெரிவிப்பவர்போலச் சிவபிரான் யோகபாவனையோடு மிருந்தனர் அதை உமாதேவியார் பார்த்துப் பணிந்து, சுவாமி பிரமன் விண்டுமுதலினோர் நாள்தோறுந்தேவரீரைத்தியானஞ்செய்துநால்வகைப்பொருள்களையும்பெறுகின்றார்கள் இஃதுசத்தியமாயிருக்க, தேவரீர் அவர்களைப்போல விழிகளைமூடிக்கொண்டு தியானிக்கப்படுங்கடவுள் வேறென்னவிருக்கின்றது, எவர்கள்எதைவிரும்பினுங்கொடுக்கவல்லது சிந்தாமணியேயன்றி அதற்குக்கொடுப்

பவர்கள் ஒருவருண்டோ? பிரமன்விண்டு இவ்விருவர்களோடுசகல லோகங்களையுஞ் சங்கரித்துமீட்டும் அவ்விருவர்களுடன்சகலலோகங்களையுஞ் சிருட்டித்துக் காக்கச்செய்கின்ற உருத்திரமூர்த்தியாகியும், அம்மூவர்களையும் உண்டாக்கி இரட்சிக்கின்ற இறைவராகியுமிருக்குந் தேவரீர்யோகநிட்டை செய்வதென்றால் யாரைத் தியானிக்கிறது? அந்தச்சந்தேகத்தை அடியாட்கு நீக்கியருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். இவ்வாறு உமாதேவியார் பணிந்து பிரார்த்தித்ததற்குச் சிவபிரான்கிருபைகூர்ந்து, பெண்ணே! பிரமன் விண்டு இந்திரன் முதலானவர்களால் நாம் எவ்வாறு தியானிக்கப் படுகின்றேமோ, அவ்வாறே நம்மாற் றியானிக்கப்படும் பொருளும் ஒன்றுண்டு. அதை விவரமாகச் சொல்லுவோங் கேள்.

ஏகமாகியும், அனேகமாகியும், மாயையிற்கலந்துசோகமுதலானவைகளிற் சலிக்காதபேரறிவாகியும், அம்மாயையினுற் றனுகரணாதிகள் நான்கினையுமுண்டாக்கி அவைகளை ஆன்மாக்களுக்களித்தும்விகாரங்களிற் படாததாகியும், பந்தம்மோக்கமென்னுமிரண்டினைப்பரப்புவதாகியும், அநாதியாகியும், ஆதியந்தமில்லாததாகியும், அநாதியிற்றனே முத்தியாகியும், அருவமாகியும், உருவமாகியும், அருவுருவமாகியும், இம்மூன்றுமற்றதாகியும், மனம்புத்திசித்தமென்னுமூன்றுமில்லாததாகியும், உள்ளதாகியும், நித்தியமாகியும், நின்மலமாகியும், நிர்க்குணமாகியும், நிராமயமாகியும், அத்துவிதமாகியும், ஆனந்தமாகியும், விளங்காநின்ற மேலான பொருளே நாம் தியானிக்கப்படும் பொருள் அந்தவுத்தமப்பொருளுக்குமேலானபொருள் ஒன்றுமில்லை. அப்பொருள் மனம்வாக்குக்காயங்களினுல் அறிதற்கரிதானபொருளாதலால் அஃது நம்மைச் சுந்தரவடிவாய் எப்பொழுதுங்கொண்டருளி, நம்மைப்பணிகின்றவர்களுடைய பூசனைகளை ஒப்புக்கொண்டு அவர்கட்கு சகலவரங்களையுங் கொடுத்தருளும். இவ்வார்த்தைமகாரகசியமாகும் இதனையாவர்க்கும் வெளியிடாமல் உன்மனதிற் சிந்திக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர்.

அவையனைத்தையும் உமாதேவியார் செவிக் கமுதாகக்கேட்டு மீட்டும் சிவபிரானைப் பணிந்தெழுந்து, சுவாமி! அத்தன்மைத்தான மேலாகியபொருளை அடியாட்குத் தெரிசிப்பிக்க வேண்டு மென்று பிரார்த்தித்தனர். அதற்குச் சிவபிரான் கிருபைகூர்ந்து, பெண்ணே! சீவராசிகள்தோறும்* பரிபூரணமாயிருக்கின்ற அந்த மேலாகிய பொருள் தேவர்களுடைய சிறையைநீக்கும்பொருட்டு இனி உன்னிடத்தில் ஓர் புத்திரனுகஅவதரித்து அளவற்ற திருவிளையாடல்களைநடா

த்தித்தீவினைகளைச் செய்து வருகின்ற சிந்துராஜனைச் சங்கரிக்கும். அதை உனதுகண்ணினாற் காணப்போகின்றனை. அப்பொருள் உன்னிடத்தில் புத்திரனா யவதரிக்கும்படியாக நீசெய்யத்தக்க கருமம் ஒன்றுண்டு. சொல்லுவதற்கரியமந்திரம் ஒன்றுண்டு அவைகளையாம் கூறக்கேட்டு அவ்வாறே பன்னிரண்டுவருட மநுட்டி யென்று சொல்லி, அநுட்டிக்கத்தக்க முறைமையையும் மந்திரத்தையும் உபதேசித்தனர்.

பின்னர் உமாதேவியார் அக்கிரிசந்தி க்ஷேத்திரத்தில் முன்னமேயெழுந்தருளியிருக்கும் மயூரேசவிநாயகருடைய ஆலயத்திலிருந்து தமது காதலர் உபதேசித்தருளிய ஏகாட்சர மந்திரத்தைச்செபஞ்செய்து, பன்னிரண்டுவருடந் தவஞ்செய்திருந்தனர் அப்பால் பராதி தத்துவங்களையெல்லாங்கடந்து எவ்விடத்தும் நீக்கமறநிற்கும் பேரானந்தப்பொருளை ஓர் திருவுருக்கொண்டு உருத்திரமுகம் நடுவும் பிரமமுகம்வலமும், விஷ்ணுமுகம் இடமுமாகமூன்றுமுகங்களை வாய்ந்து சந்திரனைத்தரித்த சடாமகுடங்களும், எழுவிழிகளும், சூலம் மழு-கமண்டலம உருத்திராக்கமாலிகை சங்குசக்கரம்என்னுமிவைகளைத்தரித்திருக்கின்ற ஆறுகரங்களும், கற்பூரம்போன்ற தவளமேனியுமுடைய விநாயகமூர்த்தியாகி, வெள்ளைரிஷபவாகனத்தையூர்ந்து உமாதேவியாரெதிரிற் பிரத்தியட்சமாயினர் உடனே உமாதேவியார் சாஷ்டாங்கமாப்பணிந்து பலமுறை வேதாகமங்களாற்றுதிசெய்தனர், அதன்மீது உமக்குவேண்டியவரம் யாதென்று விநாயகமூர்த்திகேட்க, அதற்கு உமாதேவியார்தொழுது சுவாமீதேவரீர் எக்காலத்தும் அடியேற்கு தரிசனங்கொடுத்து முற்றினுங்காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர்

அதற்கு விநாயகமூர்த்தி கிருபைசுரந்து, ஓலோகநாயகியே!நாடோறுங்கொடுமைகளைச்செய்து நடாத்திவருகின்ற சிந்துவைச்சங்கரிக்கவும், நம்மைவழிபட்ட தேவர்களை சிறையினின்று நீக்கி நல்லபதவிகளைக்கொடுக்கவும், யாம் உமக்குப்புத்திரனாக அவதரித்து உம்மிடத்திலேவளர்ந்து விளையாடிக்கொண்டிருப்போமென்று திருவாய்மலர்ந்து, தாம்முன்னர்வசித்திருந்த மயூரேசமூர்த்தியிற்கலந்தருளினர். அதற்குமேல் உமாதேவியார் சிவபிரானிடத்திற்சென்றுதமக்கு விநாயகமூர்த்தி தரிசனங்கொடுத்த திருவுருவத்தினுடையசிறப்பையும், அவர்கொடுத்தருளியவரத்தையும் விவரமாகத் திருவாய்மலர்ந்து மிக்க பேருவகையுடன் அவரோடு வாழ்ந்திருக்கின்ற காலத்தில், விநாயகமூர்த்திக்குவப்பாகியசதுர்த்திநேரிட அத்தினத்திலோர்மண்

டபத்தை அலங்கரித்துமிருத்திகையினால் விநாயகமூர்த்தியினுடைய திருவுருவத்தைச் சமைத்து வேதாகமமுறைப்படி பூசித்தனர்.

அப்போது அம்மூர்த்தியினின்று ஆச்சரியமாகும்படி விநாயகக் கடவுள் ஓர்பெருஞ் சோதிரூபமாய்வெளிப்பட, அச்சோதியைஉமாதேவியார்பார்க்கமாட்டாது கண்கள்கூசிப்பயந்தனர் அப்பால்சோதியாயெழுந்தருளிய விநாயகமூர்த்தியானவர் அளவற்றகண்களும், அளவற்றவாய்களும், அளவற்ற செவிகளும், அளவற்றமுகங்களும், அளவற்றகைகளும், அளவற்றகால்களுமாய் விஸ்வரூபங்கொண்டு நின்றனர் அதனை உமாதேவியார்கண்டு பயந்தெழுந்து, ஓகுணக்குன்றமே தேவரீர் இவ்வுருவத்தோடிருந்தால் எளியேற்கிணங்குமோ சுவாமிகள் அடியேற்கிணங்கும்படியான பாலகன்வடிவை எடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர் உடனே மனது உள்ளத்திலமர்ந்த விநாயகமூர்த்தியானவர் திங்களொன்பதுஞ்சென்றுபிறந்தபாலகனாய், ஆறுகரங்களும் மூன்றுவிழிகளும்விளங்கும்படி. முத்துமாலையைத் தரித்தமார்போடு உமாதேவியாரெதிரில் அமர்ந்தருளினர்.

பின்னர் குருக்கத்தி நிறம்போலச் சாமளவுருவங் கொண்டு எழுந்தருளிய பாலவிநாயகமூர்த்தியை உமாதேவியார் ஆனந்தத்தோடெடுத்து மடியில்வைத்துத்தமது திருமுலைப்பாலூட்டியருளினர் உடனே ஆகாயத்தில் பஞ்சகருவிகள் முழங்கின தேவர்கள்புட்பவருடஞ் சொரிந்தார்கள் நாற்றிசைகளிலும் மந்தமாருதம் வீசின தேவர்கட்கெல்லாம் வலது தோள்களும் வலதுகண்களுந்துடித்தன சிந்துராசனுடையகண்டகநகரத்தில் உதிரமழைபெய்தது அவனரண்மனையிலுங்கோபுரத்திலும் பகற்போதில் ஆந்தைகள்கூவின அவனுடைய இடதுதோளும் இடதுகண்ணுந்துடித்தன இவ்விதவுற்பனங்களுண்டாகலுந் துன்பத்திலழுந்தியிருந்த தேவர்களெல்லாம் மனமகிழ்ந்தார்கள். கெட்ட வுற்பனங்களைக்கண்டசிந்துராசன் உடனேசில தூதர்களையேவி இவ்வுலகத்திலேதேனும் அதிசயமுண்டாயிருக்கில் அதனைத்தெரிந்துவரக் கடவீர்களென்று கட்டளையிட்டனுப்பினன். அங்கங்கே உலர்ந்த விருட்சங்களெல்லாந் தளிர்த்தன வறந்த பசுக்களெல்லாஞ்சுரந்து கரந்தன இவையனைத்தையும் உலகத்திலுள்ளோர் கண்டு நமக்கெல்லாம் நற்காலம் வந்தாற்போலிருக்கின்றதென்று மனத்துயர்நீங்கிமிக்க அதிசயத்துடனே மகிழ்ந்திரு* ந்தார்கள் கவுதமர்முதலிய முனிவர்களெல்லாம் வரிசைவரிசையாக வந்து சிவபிரானுடைய திருவடிகளில் வந்தனைசெய்து உமாதேவியார் திருக்கரத்தில் அவதரித்திருக்கின்ற பாலவிநாயகமூர்த்தியைச்

சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து அவருக்குக்கணேசரென்றுதிருநாமஞ் சாத்தித் துதித்தார்கள் இவ்வாறு விண்ணவர்கட்கெல்லாந் தொழுகுலமாயும் வேதங்களினுடைய பயனாகியும், கருதுவோர்களுடைய இடர்களைப் பொடிபடுத்துங்களைகணாகியும், எனதுள்ளத்தில் நண்ணி எளியேன்புரியும் பணிகளைக்கைக்கொள்ளு மிறைவனாகியுமிருக்கின்ற விநாயகமூர்த்தியானவர் மனிதர்களுடையமகவைப் போல உமாதேவியாரிடத்திற் குழந்தையாகி வளர்ந்தருளுங்காலத்தில் ஓர்நாள்கிருச்சமதமுனிவர் அத்தலத்தில்வந்து விநாயக மூர்த்தியைப்பணிந்தெழுந்து ஓர் பீதாம்பரத்தை அவர் திருமேனியிற் சாத்தித் தமதாசிரமத்திற்குப்போயினர். இவ்வாறு ஆங்காங்குதவஞ் செய்கின்ற முனிபுங்கவர்களெல்லாம் ஓங்காரப் பொருளா யிருக்கின்ற கணேசமூர்த்தியைக்கண்டுபணிந்து போவதும் வருவதுமாயிருந்தார்கள், அப்போது ஓர்நாள் மரீசிமுனிவர்வந்து தொழுதுபோக அவரை அந்தக்ஷேத்திரத்திலிருந்த முனிபுங்கவர்களெல்லாஞ் சூழ்ந்து சுவாமீ தேவரீர் அடியேங்கட்குத் துன்பம் நேராதபடி ஓருபாயத்தைத் திருவாய்மலர்ந்தருள வேண்டு மென்று பிரார்த்தித்தார்கள் அதற்கு மரீசிமுனிவர் அவ்விருடியர்களைப் பார்த்து அன்பர்களே நீங்கள் என் இவ்வாறு சஞ்சலப்படுகின்றீர்கள் சகல விக்கினங்களையுந் தீர்க்கத்தக்க விக்கினராசரே இங்கு உமாதேவியாரிடத்தில் புத்திராயவதரித்திருக்க உங்களிடத்தில் துன்பமென்பது நெருங்குமா நெருங்காதே ஆயினும் கிரேதாயுகத்தில் பத்துக்கைகளும் சோதியுருவமும் சிங்கவாகனமும் திரேதாயுகத்தில் ஆறுகைகளும்வெள்ளைமேனியும் மயில்வாகனமும் துவாபரயுகத்தில் நாலுகைகளும் சிவந்தமேனியும் பெருச்சாளிவாகனமும் கலியுகத்தில் இரண்டுகைகளும்மேகநிறமும் குதிரைவாகனமுமாகப் பிரகாசிக்கும்.

---

கணபதிதுணை.

# விநாயகக்கவசம்.

ஓ ஓ, மகா தவசிரேஷ்டரே அமிர்துண்டகாரணத்தால்அமரரெனப்பெற்ற தேவர்களும்பகைபிணியாதிய துக்கவசத்தினராயிருக்கின்றனர் நீங்களோ கேட்டல், தெளிதல், சிந்தித்தல்நிட்டைகூடல்என்னும் சதுட்டயங்களையும் சாதுசங்கம் சாத்திரப்பயிற்சி ஓவா முயற்சி யாதிகளையும்நீங்காது இறைவன் றிருநெறித்தாகியசாத்திரஞானமிர்தத்தையுண்டு தேக்கத்தினைத்துயோகீச்சுரரெனப்பெயர்பெற்

நீர்கள் உங்களினுமிக்கா ரெங்குமில்லை எல்லாம்வல்ல இறைவனும் அடியார்குறிப்பி னெறிநின்று நடப்பவராயிருக்கின்றனர் ஆதலால்உங்களிற் சிறந்தோரில்லை யில்லை உங்களையடைந்த யானும் புனிதனுயினேன் சிவயோக ரறியாச்செயலுமுண்டோ இல்லை ஆயினும் எனது புண்ணியப்பேற்றானும் அளவளாவிய எனதுபேராசையினாலும் நீங்கள் விரும்புவதனாலும் இதனைச்சொல்லுகின்றேன் அங்ஙனஞ்சிரத்தாபத்தியினராய்த் தெளிவீர்களாக.

சர்வகாரணராயும், சர்வானுக்ரகராயும், சர்வக்ஞராயும், சர்வாந்தர்யாமியாயும் சர்வதாவாயு மிராநின்றது யாதோ அச்சாக்ஷாத்விநாயகக் கடவுளுடைய மந்திரம் ஒன்றிருக்கின்றது அது விநாயக கவசம் என்றுசொல்லப்படுவது அம்மகாமந்திரத்தை முன்னர் அநேக மகத்துக்களனுட்டித்ததன்றி பின்னர் காசிபமுனிவர் முத்கலமுனிவருக்கும், அவர் மாண்டவியமுனிவருக்கும் அவர் எமக்கும் உபதேசிக்கப்பெற்றது. அங்ஙனம்யாம் முறையாக உங்கட்குபதேசிக்கத் தொடங்கினோம் அதாவது:—

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநாயகர்காக்க வாய்ந்த சென்னி, யளவுபடாவதிகசவுந்தரதேகமதோற்கடர்தா மமர்ந்துகாக்க, விளரறநெற்றியைபென்றும் விளங்கியகாசிபர்காக்கப் புருவந்தம்மைத், தளர்வின்மகோதரர்காக்கத் தடவிழிகள் பாலசந்திரனார் காக்க. ௧

கவினதரங் கசமுகனார் காக்கந்தாலங்கணக் கிரீடர் காக்க,நவில்சிபுகங்கிரிசைசுதர் காக்கநனி வாக்கைவிநாயகர்தாங் காக்க, வவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ் செவிபாசபாணி காக்க, தவிர்தலுறா திளங்கொடிபோல் வளர்மணிநாசியைச்சிந்திதார்த்தர் காக்க. ௨

காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி காக்ககளங் கணேசர்காக்க, வாமமுறு மிருதோளும் வயங்குகந்த பூர்வசர்தா மகிழ்ந்துகாக்க, வேமமுறு மணிமுலைவிக் கினவிநாசன்காக்க விதயந்தன்னைத், தோமகலுங் கணநாதர் காக்கவகட்டினைத்துலங்கே ரம்பர் காக்க. ௩

பக்கமிரண் டையுந்தரா தரர்காக்கப் பிருட்டத்தைப் பாவநீக்கும், விக்கினகரன்காக்க விளங்கிலிங்கம் வியாளபூடணர்தாங்காக்க தக்ககுய்யந் தன்னைவக் கிரதுண்டர் காக்கசகனத்தை யல்ல, லுக்ககண பன்காக்க வூருவைமங் களமூர்த்தி யுவந்து காக்க. ௪

தாழ் முழந்தாண் மகாபுத்தி காக்கவிரு பதமேக தந்தர்காக்க,
வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்கமுன்கையை வணங்குவார்நோ,
யாழ்தரச்செய் யாசாபூ ரகர்காக்க விரல்பதும வத்தர் காக்க, கேழ்
கிளரு நகங்கள்விநா யகர்காக்கக் கிழக்கினிற்புத் தீசர் காக்க. ரு

அக்கினியிற் சித்தீசர் காக்கவுமா புத்திரர்தென் ஞசைகாக்க,
மிக்கவிரு தியிற்கணே சுரர்காக்க விக்கினவர்த் தனர்மேற் கென்னுந்,
திக்கதனிற் காக்கவா யுவிற்கசகன் னன்காக்கத் திகழு தீசி, தக்கவி
திபன்காக்க வடகிழக்கி லீசநந் தனரே காக்க. சு

ஏகதந்தர் பகன்முழுதுங் காக்கவிர வினுஞ்சந்தி யிரண்டன்
மாட்டு, மோகையின்விக் கினகிருது காக்கவிராக் கதர்பூத முறுவே
தாள, மோகினிபே யிவையாதி யுபிர்த்திறத்தால் வருந்துயரு முடி
விலாத, வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா சாங்குசர்தாம் விரைந்
துகாக்க. எ

மதிஞானந் தவந்தான மானமொளி புகழ்குலம்வண் சரீர முற்
றும், பதிவான தனந்தானி யங்கிரக மனைவிமைந்தர் பயினட்பாதி,
கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க காமபவுத்திரர்முன்ஞன, விதி
யாருஞ் சுற்றமெலா மயூரேச ரெஞ்ஞான்றும் விரும்பிக் காக்க. அ

வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி யாதியெலாம் விகடர் காக்க
வென்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ திடினும்பா லிடையூ றொன்
று, மொன்றுறு முனிவரர்கா ளறிமின்கள் யாரொருவ ரோதினுனு,
மன்றவரங் கவர்தேகம் பிணியறவச் சிரதேக மாகி மன்னும். கூ

என்பனவாம்.

இக்கவசத்தை, யாவரேனும் நித்தியகருமங்களை முடித்துப்பரி
சுத்தராய் சித்தசாந்தத்தோடு வசதியான ஓரிடத்திலிருந்துகொண்டு
விநாயகக்கடவுள் திருவுருவங்களை மனதிற்குறித்தபடி துதிசெய்து
வந்தால் அவர்களைப் பற்றியிருக்கின்ற பிணி, வறுமை. பேய், பூதம்
துயரம்; கவலை, பகை, பழி, பாவம் முதலிய தீமைகளெல்லா மொழி
ந்து ஆயுள்; கல்வி, மனைவி, மக்கள், பூமிபொன், மணி, தானியம், கீர்
த்தி, சுகஜீவனம், வாகனம், ஆளடிமை; பந்துஜனசேர்க்கை, தேகதி
டம், மனோதைரியம், முதலிய போகபாக்கிய சித்திகளுண்டாகும்
அன்றி, முக்காலத்திலும் ஓதினால் யாதொரு இடையூறும் வாராது,
யாத்திரை வாசிகள் தோத்திரஞ்செய்தால் சகலவிக்கினங்களுந்தொ
லைந்து, மேலான பயன்களைப்பெறுவார்கள் சமர்க்களத்திற் றோத்திர
ஞ்செய்தால் வெற்றி பெறுவார்கள் பிரதிதினம் ஏழுமுறையாக இரு

பத்தொருநாள்தோத்திரஞ்செய்தால் உச்சாடனம், வித்துவேடணம் ஆக்ருஷ்ணம; தம்பனமுதலிய வித்தைகளெல்லாங் கைகூடும் நித்தம் இருபத்தொரு முறை தோத்திரஞ் செய்தால் கிரகதோஷ முதலானவைகள் நீங்கும்: அரசர்களைக்காணும்போது பத்தியோடு மும்முறை தோத்திரஞ்செய்தால் அவ்வரசன் உடனேவசியமாவன் அம்மந்திரத்தை தாளிப்பனையேட்டில் எழுதிப்படித்தாலும் படிப்பித்துக் கேட்டாலும், அன்போடு பூசித்தாலும் சகல இடர்களுந்தீரும் அன்புஉறுதி. ஆசாரம் இவைகளில்லாதார் என்ன கொடுத்தாலும் இம்மந்திரத்தை அவர்கட்குபதேசிக்கத் தகாது

ஆதலால் முனிவர்களே! நீங்கள் இம்மந்திரமிர்தத்தை அனுட்டிப்பீர்களாயின் உங்களிஷ்டசித்திகளை எளிதிற்பெற்றுசுகிப்பீர்கள் என்றுமரீசிமுனிவர் திருவாய்மலர்ந்து தமது ஆசிரமத்திற்குச்சென்றனர், அதுமுதல் எல்லா முனிவர்களும் அக்கலச மந்திரத்தைச் செபஞ்செய்து வந்தார்கள்

இவ்வாறாக, முன்னர் சிந்து ராசன் விடுத்த தூதர்கள் வாயுவேகமனோவேகமாய்ச்சென்று பூலோகம் நாகலோகம் தெய்வலோகமுதலிய விடங்கள் முழுவதுஞ்சோதித்து எங்குமோர் புதுமையையுங் காணுதவர்களாகி மீட்டும் பூலோகத்தை நோக்கி வரும்போது தண்டகவனத்தி லிருக்கின்ற திரிசந்தி க்ஷேத்திரத்தை யணுகி அங்குவசித்திருக்கின்ற முனிவர்களுடைய தவப்பெருக்கையும், வேதகோஷ்டங்களையும், உமாதேவியாருடனே சிவபிரானெழுந்தருளி யிருக்கின்ற சிலாக்கியத்தையும், வெற்றிவிளங்கும்படியான புத்திரனைப்பெற்ற உமாதேவியாருடைய மனவிருப்பையும், மற்றுமுள்ள செழிப்புகளையுங்கண்டு சிந்து ராசனிடத்திற்சென்று பணிந்து ஆண்டவனே அடியேங்கள் திரிலோகங்களினுஞ்சென்று சோதித்து வந்தோம் ஒரு அதிசயங்களையுங்காணோம் ஆனால் தண்டக வனத்தில் திரிசந்திக்ஷேத்திரத்தில் சிவபெருமான் உமாதேவியோடு மெழுந்தருளி யிருக்கின்றனர்.

அங்கே அளவற்றமுனிவர்கள் தவஞ்செய்துக்கொண்டு மிக்கதருக்கோடிருக்கின்றார்கள். அவர்களுக்குள் எண்பத்தெண்ணாயிர முனிவர்களிருக்கின்றனர். அவர்களோ நினைத்தமாத்திரத்தில் மூவுலகங்களையுமழித்து மீட்டும் உண்டாக்கி ரட்சித்தவர்கள். அவர்களுடைய பெருமைகளை ஒருவராற்சொல்லி முடிவனவன்று. அன்றியும் சிவபெருமானே அவர்களிடத்தில் வந்திருப்பாராயின் அவர்கள்மேன்

மையை எம்போலிகளாற் சொல்லிமுடிவதோ? இதையே ஓரதிசய மாக நினைக்கவேண்டாம். அவ்விடத்திற்றானே மற்றொருபுதுமையை க்கண்டனம். அஃது யாதெனில். உமாதேவியார்செய்த தவத்தினால் சோமவாரமும், விநாயகசதுர்த்தியும், விசாக நட்சத்திரமுங்கூடிய நேற்றையதினத்தில் சிங்கலக்கினத்தில் ஓர்குழந்தை பிறந்திருக்கின் றது. அக்குழந்தை வெள்ளைமேனியும், ஆறுகைகளும், மூன்றுகண் களும், மிகுந்தபராக்கிரமுமுள்ளதாய் முத்துமாலையைத்தரித்த மா ர்போடு விளங்கியிருக்கின்றது முனிவர்களெல்லா மக்குழந்தைக்குக் கணேசரென்று நாமகரணஞ் செய்தார்கள் அதையாவரும் குழந் தையென்று எண்ணாமல் நான்தோறுந்திரிகாலமும் வந்து பணிகின் றனரென்று அறிவித்தார்கள் அவை யனைத்தையுஞ் சிந்துராஜன் கேட்டு முன்னஞ்சிவபிரான் சொல்லியவாக்கின்படி நம்மைக் கொல் லுவதாகக் கணேசமூர்த்தியே இவ்வாறு உமாதேவியிடத்தில் அவத ரித்தனர்போ லிருக்கின்றதேயென்று நினைத்து இதற்கினியென்ன செய்வோமென்று மனதிற்கவலைகொண்டிருக்கின்ற சமயத்தில்'' உன் னை அவனே கொல்லுவான்,, என்று ஒருஅசரீரி உண்டாயது அதனை க்கேட்டவுடனே சிந்துராஜனானவன் புண்ணில் வேல் பாய்ந்தாலெ ன்னக்கோபித்து, இவ்வாறு சொன்னவனார்? அவனை இந்நிமிடத்திற் பிடிமின்கள்; அடிமின்கள் அவனைக் கண்டதுண்டமாய் வெட்டிப் பருந்துக்கெதிரே யெறிமினகள்; என்று ஏவலாளர்கட்காக்கியாபித் தான் அவர்கள்நாற்றிசைகளினும் ஓடிப்பார்த்து கர்த்தனே அவ்வா றுசொன்னவனை யெங்குங் காண்கிலேமென்று கூறினார்கள். அதற் குமேல் சிந்துராஜன்சிறிது மாற்றாதவனாய் விழிகளிரண்டும் அனல் கொப்புளிக்கச் சினந்து எனக்கு மாற்றானாய் வந்த குழந்தையை இன்றேபிடித்து வருவேனென்று ஆங்கிரமித்தெழுந்தான் அதை அ மைச்சர்கள்பார்த்து சிந்துராஜனைப்பணிந்து அவன்மனஞ்சாந்தமாக த்தக்கநெறியினை யாலோசித்து, ஆண்டவனே! விண்டுவேமுதலியதே வர்கள்முனிவர்கள்யாரையும் அகலக்கூடாத சிறையில்வைத்திருக்கி ன்ற தேவரீர் இன்னுங்தொப்புட்கொடி வாடாதகுழந்தையைச் சத் துருவாகக் கருதிப்போவதுதருமமா? தருமத்தைப் பாராவிடினும், அதனால்தேவரீரதுபெரும் புகழும்பெருமையும் பிரகாசமும் ஒருங் கேகுன்றுமன்றோ? இதனிமித்தம் நமதுபடைத்தலைவர்கள்வெளிப்படு வார்களாயின் அஃது இழிவாகுமே சிவபிரானுடையபுதல்வனை ஒரு வராற்கொண்டுவரமுடிவதோ ஆதலால்யுத்தத்தினுமாயையினும்வல் லசில அசுரர்களை இரகசியமாயனுப்பி அவர்களால் அங்கிருப்போர் களறியாவண்ணம் அக்குழந்தையை வதைசெய்வதே கருமமென்று

சொன்னார்கள். அவைகளை ராசன்கேட்டு உடனேபோரினும் மாயையினும் வல்லவர்களாய்ப் பாதகமனைத்தும் ஓர் வடிவமாகக்கொண்ட கொள்கையராய்த் திருமான்முதலிய தேவர்களுங்கண்டஞ்சத்தக்க நீர்மையினையுடையவர்களாயிருக்கின்ற சிலஅசுரர்களைகூவி நீங்கள் எந்த உபாயத்தினாலேனும் எனக்குச் சத்துருவாகிய ஈஸ்வரகுமாரனைவதைசெய்துவரக் கடவீர்களென்று சொல்லி அவர்கட் காடையாபரணமுதலிய சிறப்புகளையும் இரதம் கசம்முதலிய படைகளையும் உதவிசெய் தனுப்பினான்.

அவ்வசுரர்களதற்கிசைந்து பிரதிதினம் வேறுவேறு முறையாக கத்தாங்கள் நாசமடையும்படி கணேசமூர்த்தியினிடத்திற் போனார்கள். அவர்களுள் கிருத்திராசுரனென்பவன் ஓர் கழுகுருபங்கொண்டு தனதுசிறகின்காற்றினால் அநேக பர்வதங்களையும் விருக்ஷங்களையும் நிலத்தில்விழத்தள்ளிப் பெரியமேகங்களெல்லாஞ் சின்னாபின்னப்படும்படி அலைத்துப்பூமியிலுள்ள வலிமையான வத்துக்களையெல்லாம்பொடிபடுத்தி ஆகாயமார்க்கத்திற்பாய்ந்து குருவியானதுநெருப்பை மின்மினிப்பூச்சென்றுகருதித் தனதுகூட்டில்வைக்க எடுத்துக்கொண்டு செல்வதுபோல உமாதேவியார் குளிப்பாட்டி முன்றிலில்வைத்திருந்த பாலவிநாயகமூர்த்தியின்மீது சரேலென்று பாய்ந்து எடுத்துக்கொண்டுபோயினன் அதைமுனிவர்களெல்லாங்கண்டு பயந்துநின்றார்கள். கணநாதர்களெல்லாம் விநாயகமூர்த்தியை மீட்டுக்கொண்டுவருமாறு ஆகாயத்திற்பாய்ந்தார்கள் அதற்கு அவரே தம்மை யெடுத்துச்சென்ற கழுகின்கழுத்தை ஓர்கரத்தாற்பிடித்து நெறித்துமீட்டும் உமாதேவியார்மடியில்வந்தமர்ந்தனர் கழுகுருபங்கொண்டுவந்த கிருத்திராசுரன் தனதுசுயருபத்தோடு பூமியில் உதிரப்பிரவாகமோடும்படியாகவீழ்ந்திறந்தனன். அவன்வீழ்ந்தபோது பத்துயோசனைவிசாலத்திற்கிருந்தமரங் கொடிமுதலானவைகளெல்லாந்தகர்ந்தன. அவன் சரீரத்தினின்றும்பெருகிய உதிரப்பிரவாகத்தில் திரண்டசிலைகளும் மலைகளும்முழுகிப்போயின. இவ்வதிசயத்தைப்பார்த்திருந்த முனிவர்களெல்லாம் மூன்றுநாளைய குழந்தை அதிகமாயையினையுடைய அசுரனைச்சங்கரித்ததல்லவாவென் றாச்சரியமானார்கள். ஏனைய அசுரர்களெல்லாம்பயந்து ஓடிப்போனார்கள்.

அதற்குமேல் இரண்டாந்திங்களில் கேமாசுரனென்றுங்குசலாசுரனென்றும் பன்னிரண்டுயோசனையுயரமுள்ள இரண்டவுணர்கள் ஆகுவாய் உருவெடுத்துவந்து ஒருவரோடொருவர் சண்டை செய்துக்கொண்டு விநாயகமூர்த்தியின்மீது வீழ்ந்தார்கள். உடனே எம

தைதயன் பூனையாகத்திருவுருக்கொண்டு அவ்விரண்டு ஆருவையுங்கடித்துக்கொன்றுவிட்டனர் மூன்றாந்திங்களில் அதிக பராக்கிரமமும் பதினைந்துயோசனைவுயரமுள்ள குரூராசுரனென்பவன் பூனையுருவங்கொண்டு சுவாமிக்கெதிரில்வந்தனன் அதனைச்சுவாமியறிந்து தனதுநான்குவேதங்களையும்நினைத்தருளினர் உடனே அவ்வேதங்கள் நாய்வடிவாகவந்து பூனையாகவிருக்கின்ற அசுரனை கடித்துக்கொன்றுபோயின. நான்காந்திங்களில் பலாசுரனென்பவன் ஓர் முனிவர்குமாரனாகவுருக்கொண்டுவந்து நாம் விளையாடலாம்வாவென்று விநாயகமூர்த்தியை யழைத்தான் அவனை சுவாமி விளையாட்டினாலேயே கொன்றுவிட்டனர் அவன் இறந்தபின்புதனதுசுயரூபத்தோடு இருபதுயோசனை விசாலத்திற்குப் பூமியில்வீழ்ந்தான், ஐந்தாந்திங்களில் வியோமாசுரனென்பவன் ஆகாயத்தையளாவிய ஓர் மாமரமாகவுருக்கொண்டுநின்றான் அதிலுள்ளகாய்கனிகளைச் சில முனிச்சிறார்கள்பறித்துத்தின்று அங்ஙனே மாய்ந்துபோனார்கள் அதனால் அவர்களுடைய தாயர்களெல்லாமிகவுந் துக்கித்து வருந்தினார்கள் அவ்வதிசயத்தை விநாயகமூர்த்தியறிந்து அந்நிமிடத்தில் அம்மாமரத்தருகில்வந்து அதில் தேன்கூடுகட்டி யிருக்கின்ற ஓர்பொந்தினைக்கண்டு நுழைந்தனர் உடனே அப்பொந்தானது சுவாமியை உள்ளேயடக்கி மூடிக்கொண்டது.

அதைப்பார்த்த முனிவர்களெல்லாம்நடுங்கி இஃது மாமரமல்ல ஏதோ ஓர்மாயையென்றுபயந்து ஓடினார்கள். அப்போது சுவாமி அம்மரத்தினுள்ளிருந்தவண்ணமே அதை அலைத்துப்பிளந்து முன்னொருபோது தூணினின்றும் உதித்தநரசிங்கத்தைப்போலவெளிவந்து அதனடியில் இறந்துகிடக்கின்ற முனிச்சிறார்கட்கு உயிர்கொடுத்தெழுப்பினர் பின்னர்யாவரும் ஆனந்தங்கொண்டு ஆயிரத்தெட்டண்டங்களையும் ஒரேகுடையிலாண்ட சூரபன்மனாகியமாமரத்தைச்சுப்பிரமணியதேவர் துணித்தெறிவாராயின் அவர் தமையனாகிய இவருக்கு இம்மாமரத்தைத்துணிப்பது அரிதோவென்றுதுதிசெய்தார்கள். ஆறாந்திங்களில் நாளொன்றற்கு நூறு எருமைகளைத்தின்றுவருவதால் சதமயிடபக்கணியென்னும் பெயரினையுடைய ஓரசுரமாதானவள் இந்திராணியைப்போலவுருக்கொண்டு உமாதேவியாரிடத்தில்வந்து தாயே யான் புலோமசை எனதுகாதலர் அவுணராசனுடைய சிறையிலகப்பட்டு நெடுநாளாகவருந்துகின்றனர் யான் அவர்களினின்றுந் தப்பி யோடிவந்து தேவரீரைச் சரணடைந்தேன் இனியெனக்குத் துன்பமணுகாதபடி தேவரீர்பாதுகாத்தருளவேண்டுமென்று இரந்தாள் அதைக் கருணைநாயகியாகிய உமாதேவியார்

உண்மையென்றேகருதி, ஓ சகியே! சூரியன் இருளையுண்ணுமாறு
போல இன்னுஞ்சிலநாளையுள் அவுணரையெல்லாம் இவ்வறுபுயரா
கிய விநாயகமூர்த்தியுண்டருளித் தேவர்கட்கெல்லாங் கிருபை வழ
ங்குவர். அப்போது இந்திரன்சிறையுமநீங்கும், அதுகாறும்நீ மனக்
கவலையையொழித்து இங்ஙனமிருவென்று திருவாய்மலர்ந்து நல்ல
போசனமும் ஆடையாபரணாதிகளு மவளுக்குக் கொடுத்தருளினர்.

அவ்வாறே அப்பாதகி சிலநாளிருந்து ஓர்நாள் உமாதேவியார்
சோர்ந்து நித்திரைசெய்யும் சமயம்பார்த்து விநாயகமூர்த்தியைக்
கைக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் சென்றனள் சுவாமி அவள் ஒக்
கலிலிருந்தவண்ணமே அவள் செவியைப் பிடித்திழுத்து நிலத்திற்
சாய்த்துநெருக்கி மீட்டும் உமாதேவியாரிடத்தி லெழுந்தருளினர் ஏ
ழாந்திங்களில் கமடாசுரனென்பவன் சுவாமிதிருவிளையாடல்செய்யு
மிடத்தில் ஆமையுருக்கொண்டு மெல்லமெல்ல வூர்ந்துவந்தான் விநா
யகமூர்த்தியானவர் முன்னர்த் திருப்பாற்கடலைக் கலக்கியவிண்டுவாகிய
ஆமையினுடலைத் துழப்பியடக்குந் தமது தாளினால் அவனதுவலியெல்
லாங்குன்றும்படி வைத்துக்கொன்றனர் எட்டாந்திங்களில் உமாதே
வியார்கணேசமூர்த்தியை யெடுத்துக்கொண்டு சிலபாங்கியரோடுஞ்
சோலைகளிற்சென்று வசித்திருந்தனர் கணேசமூர்த்தி அச்சோலையி
ற்றனியேவிளையாடல்செய்திருந்தனர் அச்சமயத்தில் வலியில் மக
மேருவைநிகர்த்தவனும் வேகத்தில் சூரியனுடைய குதிரைகட்கு ஒப்
பானவனுமாகியிருக்கின்ற கற்பகாசுரனென்பவன் ஓர் குதிரையுருவங்
கொண்டு சுவாமிக்கெதிரில்வந்தனன் உடனே அக்குதிரையின்மீது
சுவாமி ஆரோகணித்து அதனை வாயுவேகத்தினும்விரைவாய்த் திரி
லோகங்களினுஞ்செலுத்தி அச்சோலையில்வந்து இறங்கினர் அப்
போதக்குதிரையாகிய அவுணனானவன் குடலறுபட்டுக் கடைவாயி
ல்விலாவி வழியும்படியாக ஓர் பாவதஞ்சென்று கடலில் வீழ்ந்தாற்
போலத்தனது இயல்பானவுருவத்தோடு இருபத்தைந்து யோசனை
விசாலத்திற்கு விழுந்திறந்தான் ஒன்பதாந்திங்களில் துந்துபிக்குர
லுடைமையாற் றுந்துபியென்னும் பெயரினையுடைய ஓரசுரன் விட
த்தை நாவற்கனிகளைப்போலச்சமைத்து ஓர்முனிச்சிறுவன்போல்வுரு
வெடுத்துவந்து கணேசமூர்த்தியையழைத்தான்.

அதனைக்கணேசமூர்த்தியறிந்து தமக்கு உமாதேவியார் அமிர்
தங்கலந்துசெய்துகொடுத்த மோதகத்தோடும் அவனருகிற்சென்று
அவன்கொணர்ந்துவந்த நாவற்கனிகளையெல்லாம் வாங்கித்தலையை
அசைத்தசைத்து உண்டருளியபின்னர் தமதுகரத்திலிருந்த மோத
கத்தை அவனுக்குக்கொடுத்தார் தீயோர்க்கு நல்லபொருளுங்கெட்

டபொருளாகும் என்றுமேமேலோர்சொல்லும் வாக்கியத்தின்படி அம்மோதகத்தை அப்பாதகன்புசித்தமாத்திரத்தில் அதிற்கலந்திருந்த அமிர்தமேவிடமாகி அவனைக்கொன்றது அவன் கொடுத்த விடமே எமதையனுக்கமிர்தமாயது பத்தாந்திங்களில் விண்ணைமுட்டிய சிரத்தினையுடையவனுகியும் விண்டுவாதிதேவர்களும் அஞ்சத்தக்கவலியையுடையவனுகியுமிருந்த அசகாசுர னென்பவன் பூமியைத்தாங்கும் ஆதிசேடனேவென்றுமலைக்குப்படியான ஓர்மலைப்பாம்பாகஉருக்கொண்டு உமாதேவியாரிருக்கின்ற சோலையின்கண்வந்து சிலமுனிச்சிறுர்களோடுஞ் சென்று தனிமேய விளையாடற் செய்திருக்கின்றகணேசமூர்த்தியையெடுத்து இராகு சந்திரனைவிழுங்குவதுபோலவிழுங்கினன். உடனே இடையிற் சர்ப்பக்கச்சினைவீக்கிய எமதுகர்த்தன் உதையகிரியிலெழுந்த இளங்கதிரைப்போல அப்பாம்பின் கட்டைப்பிளந்தெழுந்து திருமேனிமுழுவதும் உதிரமாக உமாதேவியாரிடத்திற் சென்றனர் அவர் தமதுபாலகனை நீராட்டி எடுத்துக்கொண்டு மீட்டுந்தமதுகோயிலை நோக்கிச்சென்றனர் பின்னர் மலைப்பாம்பாகவந்த அசுரன் தனது சுயரூபத்தோடு நூறுயோசனை விசாலம்மலைபோல்விழுந்து இறந்தான் அவனுதரத்தினின்றும்பெருகிய உதிரவெள்ளமானது ஒரு பெரிய ஆறாகவோடிக்கடலிற்பாய்ந்தது பதினோராந்திங்களில முன்போல உமாதேவியார் சிலவிருடியர் பத்தினிகளோடுகுளிர்ந்த பொருளிறசென்று தமது குழந்தையை விளையாடவிட்டிருந்தனர் அப்போது அப்பாலகவிநாயகமூர்த்தி அவ்விருடியர்பத்தினிகளிடத்திற்சென்று ஒருத்திமடித்தலத்தினின்று மற்றொருமடித்தலத்திலேறியும முத்தங்கொடுக்கவேண்டினோர்க்குமுத்தங்கொடுத்தும், சிலர்மார்பிறசென்றுதழுவியும், சிலர் கோரளைப்புல்லி ஏறியும் சிலர் ஆபரணங்களையறுத்தெறிந்தும் சிலரை அடித்தோடி ஓர்மரத்திலே யொளித்துககொண்டும் தம்மை யடித்தோடியபேரை உடனேபிடித்துவந்தும் ஒவ்வொருத்திவிழிகளைமூடிவிட்டுந்தமதுவிழிகளை அவர்மூடிவிட்டால் புன்சிரிப்போடுமோடி மற்றொருத்தியைப்பிடித்துவந்தும இவ்வாறு பற்பல விளையாடல் செய்திருந்தனர் அப்போது சபலாசுர னென்பவன் எட்டுகால்களையும் இரண்டுதலைகளையும் அழலைப்போன்ற விழிகளையும் பிறைபோல் வளைந்த கோரைப்பற்களையுமுடைய சரபப்பட்சியுருவமாய்த் தனதுசிறகைவிரித்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகப்பறந்து வந்தனன் அவனதுசிறகின்காற்றினுல் மலைகளெல்லாமுடிசாய்ந்தும் பறவைகளனைத்துஞ்சின்னபின்னமாகமுறிந்தும் சமுத்திரங்கள்பொங்கி அணைபுரண்டும்போயின அதை இருடியர் பத்தினிகள் கண்டு நடுங்கி ஓடிப்போ

னூர்கள் உமாதேவியார்பயந்து சிவபிரானுக்கறிவிக்குமாறு விரைந்துசென்றனர் ஆயினும் முன்னொருபோது நரசிம்மதனைத்தாக்கிய எண்டோட்சரபத்தினுடைய குமாரராகிய கணேசமூர்த்திமாத்திரமஞ்சாமல் நெடுகவளர்ந்து அவ்வவுணச்சரபத்தினுடைய கால்களைப்பற்றியிழுத்து ஓர்பெரிய பாறையின்மீதுமோதிக் கொன்றனர் அதைக்கண்ட முனிவர்களெல்லாமாச்சரியங்கொண்டு இவர் தந்தை முன்னர் சிங்கத்தைவெல்லுவதற்குச்சிம்புளுருக்கொண்டனர். இப்போதிவர் அச்சிம்புளையே கொன்றமையால் இவரைச்சிம்புட் சிம்புளெனச்சொல்லத்தகுமெனத் துதித்துப்பணிந்தார்கள். பன்னிரண்டாந் திங்களில் வீமாசுரனென்பவன் ஓர் விசுவகன்மாவாக வுருவெடுத்துச்சலாசுரன் சிலாசுரன் என்னு மிருவரை இரண்டு சிலம்புகளாக்கிக் கொண்டுவந்து கணேசமூர்த்தியினுடைய திருவடிக்குமுன்னேவைத்துப்பணிந்தான் சர்வஞ்ஞமூர்த்தியாகிய எமதையன் அவ்வஞ்சகத்தை யறியாதவர்போலத் தமது மனத்தில் வேறோரெண்ணத்தை வகித்து அவனோடு இனியவார்த்தைகளாடி மகிழ்வித்து அச்சிலம்புகளையெடுத்துத்தமது திருவடிகளி லணிந்துகொண்டு நிருத்தமாடினர்.

இவ்வாறு கணேசமூர்த்தி நிருத்தமாடலும் பூதங்கள்-புவனங்கள்மலைகள்-கடல்கள்-உயிர்த்தொகைகள் வேதாகமபுராணங்கள்முதலானவைகளோடுபிரமர்கள்-விண்டுக்கள் உருத்திரர்கள் முப்பத்துமுக்கோடிதேவர்கள்-நாற்பத்தெண்ணாயிரமுனிவர்கள்-கருடர் கின்னரர்-கிம்புருடர் சித்தர்-வித்தியாதரர்-பூதர்-பைசாசர்-ஆகாய வாசிகள் போகபூமியர் முதலாயுள்ளசகலரும் ஆடினார்கள். சிலம்புகளாயிருந்த இரண்டசுரர்களும் அந்நிருத்தத்தைச் சகிக்கமாட்டாது தங்களாண்மை யனைத்துங்குன்றி மிகவும் வருந்தினார்கள். அப்போது கணேசமூர்த்தியானவர் தமது பாதங்களை வீசி உதறினர் உடனே அச்சிலம்புகள் சுவாமி பாதங்களினின்று நீங்கி வீமாசுரன்பேரில் விழுந்துபுரட்டிக்கொன்றது. பின்னர் அச்சிலம்புகளாய் வந்த இரண்டசுரர்களுந்தங்கள் சுயரூபத்தோடு மலைபோல விழுந்திறந்தார்கள். இப்படி அம்மூவருமிறந்தமையை முனிவர்கள் கண்டு சந்தோஷித்து வேதச்சிலம்பைத் திருவடிகளி லணிந்து மேருச்சிலம்பை வில்லாகவளைத்துக் கரத்திலேந்திய சிவகுமாரனுக்கு இம்மாயைச்சிலம்புகளை மாய்ப்பதோ அரிதென்றுபணிந்து துதிசெய்தார்கள். அப்பனிரண்டாந்திங்களிலேயே மற்றொருநாள்சமர்த்திற்சிறந்த ஆவிசனென்னும் பெயரினையுடைய அவுணனொருவன் ஓர் மதயானைப்போல வுருக்கொண்டு திசைகளைக் காவல்கொண் டிருக்கின்ற ஐராவதமுதலிய யானைகளுங்கண் டஞ்சும்படி அட்ட குலாசலங்க

ளையும் பிளந்து சில முனிச்சிரார்களோடு கணேசமூர்த்தி விளையாடல்செய்திருக்கின்ற வனத்தில் வந்தனன். அந்தயானையின் வரவைக்கண்டவுடன் முனிச்சிறார்களெல்லாம்பயந்தோடத்தலைப்பட்டனர் அவர்கட்கு முன்னொருபோது உமாதேவியுங்கண்டு நடுங்கும்படியாகவந்த ஓர் மதயானையைத்தமக்காடையாக உரித்துப் போர்த்தருளிய சிவபிரான் குமாரராகிய கணேசமூர்த்தி அஞ்சாதீர்களென்றுகையமர்த்தி, அந்தயானையினெதிரிற் சிங்கவேறுபோலப் பாய்ந்து தமதுகரத்திலேந்திய அங்குசப்படையினால் அதன் கவுளிற்புடைத்துமும்மதங்களும் அருவிபோலப்பாயும்படியாக இரண்டுமருப்புகளைக்கரத்தாற் பறிப்பிடரியின்மீதேறி அதனதுகழுத்தடியிற் றமது காற்பெருவிரலையூன்றிமேகங்களைப்போலப் பிளிறிட்டோடும்படியாகவலித்து அதனது வலியெல்லாங்குன்றும்படி அஷ்டதிசைகளினுங்கடாவி மீட்டுந்தாமிருந்த வனத்தில் வந்தமர்ந்தனர், உடனேயந்தயானை இடியேற்றினைப்போலக் குரல்காட்டி வீழ்ந்திறந்தது.

இரண்டாமாண்டில்கூடாசுரனென்பவன் கணேசமூர்த்தி விளையாடல்செய்திருக்கின்ற வனத்திலுள்ள ஓர் தடாகத்தில் ஆலகாலமுமஞ்சும்படியான கொடியவிடங்களைக்கலந்து ஆகாயத்தில்தனதுருவைமறைத்துப்பார்த்திருந்தனன் அப்போது அத்தடாகத்திற்படிந்து வருங்காற்றினால் அவ்வனத்திலுள்ள விருக்கங்களெல்லாந்தீய்ந்து விளையாடல்செய்திருந்த முனிச்சிறார்களெல்லா மாய்ந்தனர். அதைக்கணேசமூர்த்தி யறிந்து, தமது கிருபாநோக்கத்தால் அத்தடாகத்தைப்பார்த்தருளினர். உடனே அத்தடாகத்திற் கலந்தவிடமெல்லாம் அமிர்தமாகி அதிற்படிந்து வந்தகாற்றினால் விருக்கங்களெல்லாந்தளிர்த்தன, முனிச்சிறார்களெல்லாந் துயில்விட்டவர்களைப்போல யெழுந்திருந்தார்கள், பின்னர் காமதகனராகியசிவபிரானுடைய குமாரர், தமதுநெற்றி விழியினால் ஆகாயத்தைப்பார்த்தனர் உடனே அவ்வாகாயத்தில்மறைந்திருந்தகூடாசுரன்வெந்துநீறாயினன். மூன்றாமாண்டில் அவ்வனத்திற்கு இருபதுயோசனைதூரத்திலிருக்கின்ற மற்றொருவனத்தில் கணேசமூர்த்தியானவர் சில முனிச்சிறார்களோடுஞ்சென்று அங்கிருந்த ஓர்தடாகத்தில் ஸ்நானஞ்செய்து அதிற்படர்ந்திருக்கின்ற புட்பங்களைக்கொய்து விளையாடல்செய்திருந்தனர். அப்போது விகிர்தாசுரனென்பவன் மகாமீனாகவுருக்கொண்டு அத்தடாகத்தில் வந்து அலைத்தனன். அதைமுன்னொருபோது கடலிற்கிடந்த விண்டுவாகிய மகரத்தை வலையிட்டுப் பிடித்த சிவபிரான் குமாரராகிய கணேசமூர்த்தியறிந்து உடனே அதனை இறுகப்பிடித்துக் கரையிலெறிந்தனர். அவ்வவுணன்தனது

சுயரூபத்தோடு விழுந்து இறந்தனன். இப்பால் கணேசமூர்த்தியானவர், அவ்வனத்தினின்றுநீங்கித் தமதாசிரமத்தை நோக்கிவருகையில் இடும்பாசுரனென்பவன் வழியில் ஓர்பர்வதவுருவங்கொண்டு ஆகாயத்தை ஊடுருவவளர்ந்து அட்ட திசைகளையும் விழுங்கிப்பார்ந்து நின்றனன். அதைக்கணேசமூர்த்திகண்டுநெடுமூச்செறிந்தனர். உடனே அம்மலையானது சண்டமாருதத்திலகப்பட்ட பஞ்சுபோல பிளந்து பொடியாகப்பறந்தது அவ்வற்புதத்தை முனிச்சிறுவர்கள் கண்டு இவர்தம்பியாகிய சுப்பிரமணியதேவர் முன்னொருபோது சகலமாயையினும் வல்ல கிரவுஞ்சகிரியைத்தமது வேலாயுதத்தாற் றுளைத்துப் பொடிபடுத்தினரென்றால். இவர் இம்மலையைவென்றதும் ஓர் வியப்போவென்று சந்தோஷித்தார்கள்.

நாலாமாண்டில், ஓர்நாள் உமாதேவியார் ஸ்நானஞ்செய்து சிவலிங்க பூசைநடாத்திக்கொண்டிருக்கின்றசமயத்தில் வீதியில் விளையாடல்செய்திருந்த விநாயகமூர்த்தியானவர் ஓடிவந்து அம்மனிடத்திற் பாலுண்ணுமாறு அடுத்தனர் அப்போது உமாதேவியார் அவரைச் சிவலிங்கபூசைநிறைவேறுகின்றவரையில் நீ அருகில்வராதேயென்று தடுத்தனர் பின்னர்தடுத்தற்குறிய தலைமைபெற்றகாரியத்தைத்தாமே அவருக்கறிவிப்பார்போல அவர்மனதிற் பாவனை செய்திருந்த வடிவமே தாமாகி ஐந்துமுகங்களுங் காளகண்டமும் பத்துகரங்களும் ஏனைய அவயவங்களுந் தோன்றும்படி சதாசிவமூர்த்தி வடிவாக நின்றனர்; அவ்வடிவை உமாதேவியார்கண்டு அன்புமச்சமுங்கொண்டு சாஷ்டாங்கமாகப்பணிந்து; சுவாமி! அடியேன் செய்தபிழையைப்பொருத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்போது தமது தாயினுடைய மனக்குறையைப் பார்த்து, அன்னையே? இன்றுமுதல்யான் வேண்டும்போதெல்லாந் தடுக்காமலெனக்குப்பாலைக்கொடுத்து வருகின்றீராவென்று புன்னகையோடுங்கேட்டு, மீட்டும்அவர்மடித்தலத்திற் குழந்தையாகிப்பாலுண்டிருந்தனர்.

அச்சமயத்தில் கருத்தமாசுரனென்பவன் காருடவித்தையில் வல்லவன்போல உருவெடுத்து உமாதேவியாரெதிரில்வந்து அங்கு விளையாடிக்கொண்டிருந்த முனிச்சிறுவர்களை எல்லாம் எடுத்து விழுங்கியும், மீட்டுமவர்கட்குவருத்த முண்டாகாதபடிச்சிலரைத்தனது காதுகளினாலும், சிலரைவிழிகளினாலும், சிலரைநாசிகளினாலும்,வெளிப்படுத்தி மீளவும் அக்காது-விழி-நாசிகளின்வழியாக உள்ளேபுகவிட்டும் பின்னரவர்களையெல்லாம் வாயின்வழியாக உமிழ்ந்தும், அளவற்ற விஞ்சைகளை நடாத்தி, இவனையும் விழுங்கி யுமிழ்கிறேன்

பார்மின்களென்றுசொல்லி உமாதேவியார் மடித்தலத்திற் பாலுண்டிருந்த கணேசமூர்த்தியையெடுத்து விழுங்கி மீட்டும் உமிழுமலசரேயென்றெழுந்தனன் அப்போது எமதையன் உமாதேவியார் திருமுகத்தினின்றுந்தோன்றி அவ்வசுரனைக்கன்னத்திற்புடைத்துக் கொன்றனர் அவ்வற்புதத்தைக் கண்ட முனிவர்களெல்லாம் ஆனந்தமடைந்து அண்டகோடிகளையெல்லாந்தமது அகட்டினுள் அடக்கி ஆதரிக்கவல்லகடவுள், ஓர்தானவனுடைய வயிற்றுளடங்குமோவென்று துதிசெய்தார்கள் உலகமாதாவாகிய சாக்ஷாத் உமாமகேஸ்வரியும் கவலையையொழித்து முகமலர்ந்திருந்தனர்.

ஐந்தாமாண்டில், கடகாசுரனென்பவன் ஓர் ஒட்டகமாகவுருக்கொண்டுவந்தனன். அதைகணேசமூர்த்தி யறிந்து, அவன் ஒருகாதத்தூரத்தில்வரும்போதே வீட்டினின்றுசென்றுகொன்றனர். மற்றொருநாள் சாயைப்பிடிப்பதில் வல்லவனான சயாசுரனென்பவன் கணேசமூர்த்தியினுடைய சாயையைப்பற்றவந்தனன். அதையெமதுகர்த்தன் அறிந்து அவனை உறுத்துப்பார்த்தனர் உடனே அழலிற்பட்ட பஞ்சுபோல் மாய்ந்து சாம்பராயினன். மற்றொருநாள்சஞ்சலாசுரனென்பவன் முனிச்சிறுர்களோடுதானுமோர் முனிச்சிறுனாகி, கணேசமூர்த்தியோடு பந்தாடவந்தனன். அதை எமதையனறிந்து அவ்வாட்டத்திலேயே அவன் வலியினைத்துங்குன்றி தோல்வியுறச்செய்தனர். பின்னரவ்வவுணன் புறங்கொடுத்து ஆகாயத்திலெழுந்தனன், அவனோடு விநாயகமூர்த்தியுமெழுந்து போராடிக்கொன்றுவிட்டு மீண்டனர் மற்றொருநாள். கணேசமூர்த்தியானவர் முனிவர்களுடைய மாளிகைதோறும் ஏககாலத்திற்சென்று பலகுறும்புகளைச்செய்து விளையாடினர். அதற்கு அம்முனிவர்பத்தினிகள் கோபித்து, பிடித்துக்கொண்டுசென்று உமாதேவியாரிடத்தில் முறையிட்டு அவர்பாலொப்புவித்து மீண்டனர். அவர்கள்மீண்டு தங்கள்மனைகளில்நுழைவதன்முன், மீட்டும்முன்போலவே அவரவர்மனையின்கண் பல குறும்புகளைநடாத்தி விளையாடல்செய்திருந்தனர். அதை அம்முனிவர்பத்தினிகள்கண்டு அச்சமுற்று ஈதென்ன அற்புதமென்று அதிசயித்து சுவாமியேகமாகியும், அனேகமாகியும் எங்குமாகியும், போகமாகியும் யோகமாகியு மிருக்கின்ற புண்ணியமூர்த்தியாகிய தேவரீருடைய மகத்துவத்தை மோகத்தில் மூழ்கியிருக்கின்ற அடியேங்கள் இன்றறிந்தனம். இனி அடியேங்கள் செய்யும் பூசனைகளைக் கைக்கொண்டு காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்து. அவ்வவர்கள் மனைகடோறும் அவருக்குப் பூசனை செய்து அப்பமோதகம் முதலாகிய சிற்றுண்டிகளை வைத்து நிவேதித்தார்

கள். அதற்கு ஒப்பற்றகணேசமூர்த்தியானவர் மனமகிழ்ந்து இச்சிற்றுண்டிகளை உங்கள்சிறுவர்கட்குக் கொடுமின்கள் இதனால் நமக்குத் திருப்தியாகுமென்றுதிருவாய்மலர்ந்தனர் அன்றுமுதல் கணேசமூர்த்திக்கு நிவேதித்த சிற்றுண்டிகளைத் தங்கடங்கள் சிறுவர்களுக்குக் கொடுத்துவந்தார்கள். அதுபோலவே இக்காலத்திலும் விநாயகமூர்த்திக்கு நிவேதிக்குஞ் சிற்றுண்டிகளைத்தங்கடங்கள் சிருவர்கட்குக் கொடுத்து வருகின்றார்கள்

பரசு, தாமரை, பாசம், அங்குசங்க ளுற்பவம்.

ஆறுமாண்டில் ஓர்விஸ்வகன்மனுனவன் பரசு-தாமரைமலர்-பாசம்-அங்குசம் என்னு மிவைகளைச்செய்துக்கொண்டுவந்து சிவபிரானையும் உமாதேவியாரையும் பணிந்தெழுந்து பின்னரவ்வாயுதங்களைக்கணேசமூர்த்தியினுடைய திருவடிக்குமுன்னேவைத்துவணங்கினன் அவனைக்கணேச மூர்த்திநோக்கி இவ்வாயுதங்கள் யாதென்று வினுவினுர்; அதற்கவன் பணிந்து, சுவாமி! அடியேன் புதல்வியாகிய சமுஞையென்பவளைச் சூரியனுக்கு விவாகஞ்செய்துகொடுத்தேன், அவள் அவனது சரீரவெம்மையை யாற்றமாட்டாது தனது சாயையைத்தன்னைப்போலவடிவாக்கிவைத்து மீட்டுமென் மனையின்கண்வந்திருந்தனள் அவன்பின்னையே சூரியனுந்தேடிவந்தனன் அப்போதவள்பயந்துஓர்பெண்குதிரையாக உருக்கொண்டுவனத்திற்சென்றனள் அதற்குமேல்யானுமனைக்கண்வந்திருந்த சூரியனுடையவுருவத்தை ஆயுதத்திஞற்கடைந்தேன்,பின்னரவன்சாந்தமாகித்தானுமோராண்குதிரையாகவுருக்கொண்டு வனத்திற்பெண்குதிரையாகத்திரிகின்ற தனது பத்தினியைச் சேர்ந்தனன் அப்போது அவர்களிடத்தினின்றும் அச்சுவினிதேவர்கள் பிறந்தார்கள் பின்னரிருவருந் தங்கடங்கள் சுயவடிவைக்கொண்டு வாழ்ந்திருந்தார்கள் சூரியனைக்கடைந்தபோது திர்ந்தபொடிகளால் ஓர்சூலாயுதத்தையும், இவ்வாயுதங்களையுஞ்செய்தேன் சூலாயுதத்தைச் சிவபிரானுக்குக்கொடுத்தேன்,மற்ற இந்தநான்கையும் மூலகாரணமாகிய தேவரீருடைய திருவடிக்கண் வைத்தேன் அடியேன்கிருதார்த்தனுகுமாறு சுவாமிகள் அவைகளைத்தரித்தருளல் வேண்டுமென்றுபிரார்த்தித்தனன். அதன்மீதுகணேசமூர்த்தி கிருபைசுரந்து, அன்பனே உலகிலுள்ளவர்கட்கு உபகாரஞ்செய்யும்பொருட்டு இவைகளையாம் அங்கீகரித்தனமென்றெடுத்துத்தரித்துக்கொண்டு, அவனுக்கு அளவற்ற வரங்களைக் கொடுத்தருளினர். பின்னர் விஸ்வகன்மன்பெருமகிழ்ச்சியோடு சுவாமியிடத்தினின்றும் விடைபெற்றுத்தனது யாதாஸ்தானத்தை யடைந்த

னன் அத்தினம் விருகாசுரனென்பவன் செந்நாயாகவுருக்கொண்டு கணேசமூர்த்திக்கெதிரேவந்தான். உடனேதாம் தரித்தருளிய ஆயுதங்களைப் பரிட்சிப்பவர்போல அதன்மீது அங்குசத்தை யெறிந்து சங்கரித்தருளினர், ஏழாமாண்டில் காசிபமுனிவரும் அவர்பத்தினியாகிய அதிதியும்வந்து கணேசமூர்த்தியைப்பலமுறை பணிந்துசிறந்த வரங்களைப்பெற்றுச் சென்றனர் அத்தினத்தில் கிருதாந்தன் காலனென்னு மிரண்டசுரர்கள் ஆளியாக வுருக்கொண்டு கணேசமூர்த்திக்கெதிரே வந்தார்கள் அவர்கள் துதிக்கரத்தைச்சுவாமிகள் பிடித்துமுன்னும் பின்னுமாக விரிந்து ஒன்றோடொன்று முட்டவிட்டு சின்னாபின்னப்படுத்தி மாய்த்தருளினர்

## மயூரவாகனோற்பவம்

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு தம்மைக் கொல்லவந்த துட்டர்களை யெல்லாந்தாமே கொன்ற விநாயகமூர்த்தியானவர், எட்டாமாண்டில்மயில்வாகனத்தையூர்ந்தருளிய திருவிளையாடலைச்சொல்லுவோம் கேட்பீர்களாக.

காசிபமுனிவருடையமனைவிகள் பதின்மூவருள் வினதையென்பவள் மனைக்குக் கத்துருவென்பவள் சென்றாள் முன்னொருபோது இக்கத்துருவென்பவள், வினதையை வஞ்சகத்தினால் கொடியசிறையில் வைத்தவளாதலால், அதை அவ்வினதையானவள் தன் மனதிலெண்ணி அவள்வரவைக்கண்டும் காணாதவள்போல விருந்தனள். அவள் புதல்வனாகிய சடாயுவென்பவனும் தனது தாயினுடையஉட்கோளை முன்னமே யறிந்திருக்கின்றவனாதலால் அவளுக்கு மாற்றாளாகிய கத்துருவினுடைய கூந்தலையும், மேல்வத்திரத்தையும்பிடித்திழுத்து வீதியிற்றள்ளி எனது தாயை நெடுங்காலங்கொடியசிறைவைத்திருந்த மகாபாவி இன்னும் என்செய்வதற்கு இங்குவந்தனை போபோவென்றுத் துரத்திவிட்டான் அதன்மீது கத்துருவென்பவள் மிகுந்த அவமானத்தால் முகம் வாடித்தனது புத்திரர்களாகிய நாகர்கள்வாழ்கின்ற பாதலலோகத்திற்சென்றனள், அவள் முகவாட்டத்தோடு மிக்ககிலேசத்தினை யடைந்து வருவதை நாகராசனாகிய ஆதிசேடன்பார்த்து, மிகுந்தபயபத்தியுடனே எதிர்சென்றுபணிந்து தாயே தேவர்கள் அசுரர்கள் முதலான ஆன்மகோடிகளைச் சிருட்டிக்க வல்ல காசிபமுனிவருடைய பிரியமுள்ளபத்தினியாகியும், மூவுலகையுந்தாங்கும அடியேனையுள்ளிட்ட நாகராசர்களைப்பெற்ற, தாயாகியுமிருக்கின்ற தேவரீர் மிகுந்த வருத்தத்துடனே முகம்வாடித் தனியாயிங்குவருவதற்குக்காரணம்யாதென்றுகேட்டனன். அதைக்

கேட்டலுங் கத்துருவென்பவள்கலங்கி யழுது, மைந்தனேயெனது மாற்றாளாகிய வினதையிடத்திற் சென்றேன். அவள் என்னைக்கண்டுங் காணாதவள்போல, விருந்தனள். அதன்மீது அவள்புத்திரனான சடாயுவென்பவன, என்னைத்துன்பப்படுத்தினன்தாயென்று சிறிது மறியாமல் என்னைத்துன்ப்ப்படுத்திய சடாயுவையாவரும் அவமதிக்கும்படி நீ இவ்வேசிறையில் வைப்பையாயின் இனியான் உயிரோடு வாழ்வேன். இல்லையேல் இந்நிமிஷத்தில் என்னுயிரை மாய்ப்பேனென்று சொல்லினள். அதைக்கேட்ட ஆதிசேடன் அத்தியந்தகோபங்கொண்டு, இந்நிமிஷத்தில்அச்சடாயுவினுடைய உயிரைவாங்குகின்றேனென்று ஆலகாலத்தைப்போலச்சீறியெழுந்தான் அப்போதுவாசுகி அனந்தன் தக்கன் சங்கபாலன் குளிகன் பதுமன்-மகாபதுமன்-கார்க்கோடகன் என்னும் அஷ்ட நாகர்களும் ஆதிசேடனைப் பணிந்து கர்த்தனே தேவரீர் செல்கின்ற வேலைக்குயாங்கள் செல்லவல்லோமென்று விடைபெற்று அளவற்ற நாகசேனைகளுடன் பலவழியாகப்பூலோகத்தில் வந்து வினதை வசிக்கும் மாளிகையை யடைந்தனர் அதை அவள்புத்திரராகிய சடாயு சம்பாதி சேனன் என்னும் மூன்றுபட்சிராசர்களுங் கண்டு நாகராசர்களின்மீது பாய்ந்து அவர்களையெல்லாஞ் சிறகுகளினாலேயடித்தும் மூக்கினாற்கொத்தியும் நகங்களினாற் கீறியும் சின்னபின்னப் படுத்தினர் அப்போது சிலநாகர்கள் அஞ்சிப்பிலவழியாகப் பாதலத்திற் கோடிப்போனார்கள் அதை வாசுகி முதலிய எண்மருங்கண்டு அணைகடந்தகோபமுற்று அளவற்றயுத்தங்களைச்செய்து அம்மூன்றுபட்சிராசர்களையுங் கைப்பிடியாகப் பிடித்துத்தமது பாதலலோகத்திற் கொண்டுசென்று அவர்களை அகலற்கரிய அருஞ்சிறையில்வைத்துத்துன்பஞ்செய்தார்கள் அதைக்கண்டகத்துரு வானந்தமாயினள்.

இப்பால் வினதையானவள், மிகுந்ததுயரமடைந்து தனதுகாதலனாகிய காசிபமுனிவரிடத்திற் சென்று பணிந்தெழுந்து, நடந்த செய்திகளைவிபரமாகக்கூறி, சுவாமி! எனதருமைப்புதல்வர்களுடைய சிறையினை விடுப்பதற்கு இன்னும் ஓர்பராக்கிரமமுடைய புத்திரன் அடியாட்குண்டாகும்படியாகக் கிருபைசெய்ய வேண்டுமெனப் பிரார்த்தித்தனள். அதைக்காசிபமுனிவர்கேட்டு பெண்ணே! நீயொன்றிற்குமஞ்சற்க சிறைப்பட்டிருக்கின்ற உனது புத்திரர்களைமீட்பதற்குயாம் உன்னுடனேகூடி உனதுவயிற்றில் ஓர்முட்டையை உண்டாக்குகின்றோம். அம்முட்டை கணேசமூர்த்தியாலன்றி மற்றையாவராலும் உடைக்கமுடிவதன்று, அஃது அக்கணேசமூர்த்தியால் உடைப்பட்டவுடன் அதினின்றும் ஓர் மயிலுண்டாகும். பின்னர்

அம்மயிலின்மீது அக்கணேசமூர்த்தி ஏறிச்செலுத்தி, உனது புத்திரர்களுடைய சிறையைநீக்கியருளுவரென்று சொல்லி, வினதையிடங்கூறினர். உடனே அவளகட்டினின்றும் ஓர்முட்டை வெளிப்பட்டது அம்முட்டையை வினதையானவள் நாள்தோறும் அன்போடு பாதுகாத்து வந்தனள் இவ்வாறு பாதுகாத்துவரும் நாளையில், ஓர் நாள் கணேசமூர்த்தியானவர்சில முனிச்சிறார்களோடு கூடி வனத்திற் சென்றுவிளையாடல் செய்திருக்கையில், கறுத்த னிறத்தினையுடைய கிருஷ்ணாசுரனென்னும் ஓரவுணனானவன் ஒருதலையும் இரண்டு சிறகும் மூன்றுமுகமும் நான்குசெவியும் ஐந்துமருப்பும் ஆறு தோகையும் ஏழுகண்ணும் எட்டுக்காலும் உடைய ஓர்பட்சிரூபங் கொண்டு அவ்வனத்திலவந்து சற்றேநடக்கிறதும், சற்றே யிருக்கிறதும், சற்றேபடுக்கிறதும், சற்றேபயநது ஓடுகிறதும்மாக உலாவல் செய்திருந்தனன். அதை அங்கு விளையாடியிருந்த முனிச்சிறார்கள் கண்டு இதோவொரு அதிசயமானபட்சி உலாவிக் கொண்டிருக்கின்றதென்று கணேசமூர்த்திக்கறிவித்தார்கள். அதைக்கணேசமூர்த்திகண்டு உடனே அதனைப்பிடிக்கப்போயினா. அவரோடு அம்முனிச்சிறார்களுஞ்சென்றனர்கள். அப்போது அப்பட்சியாகிய அசுரன் அவர்கையில அகப்படுவதுபால விருப்பதும், நெருங்கத்தூரத்தில் அகல்வதும்,நிற்பதும்,போவதுமாக அளவற்றநாடுகளையும் மலைகளையுங் கடந்துபோயினன். பின்னர் கணேசமூர்த்தியும் அவனோடு விடாமற் றொடர்ந்துபோயினா இவ்வாறுதொடர்ந்து போகப்போக அவ்வசுரன் தமதுகையி லகப்படாமற் போகலும், கணேசமூர்த்தி அதிககோபங்கொண்டு பாசததை ஏவினர். உடனே அவன் தனது சுயரூபத்தோடும் வீழ்ந்திறந்தனன் முனிச்சிறார்களெல்லாம்அவனைத்தமது கைகளினு லறைந்துங்கால்களினுலுதைத்தும் அவ்வவர்கள் கோபத்தைத் தணித்துககொண்டார்கள்

இப்பால் அதற்குச்சமீபத்தில் வசித்திருந்த வினதை யென்பவள் அச்செய்திகளை யறிந்து முட்டையைக் கொண்டுவந்து சுவாமிக் கெதிரில் வைத்துப் பணிநது நின்றனள் சுவாமியும் அவளது அபிப்பிராயத்தை யறிந்து, தமது நகத்தினுல் அம்முட்டையைக் கீறினர். உடனே அதினின்றும் ஓர் மயிலானது ஆகாயத்தை யளாவிய ஓர் பர்வதத்தைப் போல வெளிப் பட்டது அதைக் கணேச மூர்த்தி கிருபை யோடும் பார்த்தருளி அவுணர் குலங்கள் நாச மடையவுந் தேவர் குலங்கள் செழித் தோங்கவுமாக அதன் முதுகி லாரோகணித்து அவன் தாயாகிய வினதையின் முகத்தைப் பார்த்து, ஓ மாதே உனக்கு வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய் மலர்ந்தனர் அதற்கவள் மீட்டும் பணிந்தெழு

ந்து, சுவாமி பாதலலோகத்திற் சிறைபட்டிருக்கின்ற அடியாளுடைய மைந்தர்களை விடுவித்துச் சுவாமிகள் திருவடியிலெக்காலத்தும் மாறுதபத்தியை அடியாட்குக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்குக் கணேசமூர்த்தி அவள் கேட்டவரங்களைக் கொடுத்தருளி, சகலமுனிவர்களும் புடைசூழ்ந்து துதிக்கும்படியாக அம்மயில் வாகனத்தோடும் தமது ஆசிரமத்திற்குவந்து சிவபிரானையும் உமாதேவியாரையும் பணிந்து பழையபடி வீற்றிருந்தனர் அன்றுமுதல் யாவரும் கணேசமூர்த்திக்கு மயூரேசரென்னுந் திருநாமஞ்சாற்றித் துதித்தனர். மகாதவராஜ நிதிகளே! அத்திருநாமத்தை யாவரேனுந் துதிசெய்வார்களாயின், சகல விடர்களினின்று நீங்கி மேலான நன்மைகளைப் பெறுவாரகளென்பதற்கு சந்தேகமுமில்லை. இது சத்தியமென்று நம்பககடவீர்கள்

மோதிரவுற்பவம்.

இப்பால் ஒன்பதாமாண்டில், ஓர்நாள்முன்போலவே சிலமுனிச்சிறார்களோடு தமது மயில்வாகனத்தின் மீதேறி ஐந்து யோசனைதூரத்திலுள்ள ஓர்வனத்திற்சென்று அங்குமிகுந்தபரிமளத்தைவீசுகின்ற ஓர்மலர்ப் பொய்கையைக்கண்டு அதில் ஸ்நானஞ் செயதனர் அப்போது அத்தடாகத்தில் சிலநாக கன்னியரோடும் வாசுகியினுடையபுதல்வியானவள் ஸ்நானஞ்செய்யவந்தனள். அவள் கணேசமூர்த்தியினுடைய திருவுருவைக்கண்டு மோகித்து உடனே அவரருகில்வந்து பணிந்தெழுந்து, என்னையாளவல்ல பெருமானே! தேவரீருடைய பிரதாபத்தை அடியாட்குணர்த்தவேண்டுமென்று புன்னகையோடும் பிரார்த்தித்தனள் அதற்குக் கணேசமூர்த்தியிசைந்து ஓ நங்காய்! நம்மை யாவரும் மயூரேசரென்று துதித்து வேண்டிய வரங்களைப் பெறுவார்கள். நாம்சிவபிரானுக்கும் உமாதேவியாருக்கும் உகந்த புத்திரனாகுமென்று திருவாய்மலர்ந்தனர். அதன்மீது அவள் சுவாமி! அடியாள் வாசுகியினுடைய புதல்வி தேவரீர் அடியாளுடைய மனையிலெழுந்தருளி அடியாள்செய்யுபபணிவிடைகளைக் கைக்கொள்ளவேண்டுமென்றுபிரார்த்தித்தனள். அப்போது முன்னர்வினதைக்குக் கொடுத்திருந்த வரத்தைக் கணேசமூர்த்தி தமது திருவுள்ளத்தில் நினைத்து, அதைவிரவில் முடிப்பதே கருமமென்று தனக்குள் நிச்சயித்து, அவ்வாறே உனதுமனைக்குவருகின்றேமென்று திருவாய்மலர்ந்து அவளும் அவளோடுவந்த மற்றநாக கன்னியரும் புடைசூழும்படியாகப் பாதலலோகத்திற் சென்றனர். உடனே அவள் கணேசமூர்த்தியை ஓர் பொற்பீடத்தெழுந்தருளச் செய்து பாங்கியரெல்லாமேவல் செய்ய பத்தியோடுபூசித்து, உயர்

த வஸ்திராபரணங்களால் அலங்கரித்து தேவாமிர்தத்திற்கிணையானபோசன திரவியங்களைக் கொண்டுவந்துசுவாமிக்கெதிரில்வைத்து நிவேதித்தனள். இவ்வாறு அக்கன்னிகைமிகுந்த பத்தியினாற் றமக்குச்செய்த உபசாரங்களைக் கணேசமூர்த்தி அங்கீகரித்து அவ்விடத்தினின்று நீங்கிவாசுகியிருக்கின்ற சபைக்கெழுந்தருளினர். அப்போது வாசுகிசுவாமிவரவைக் கண்டு எழுந்திராமலும், பணியாமலும் உபசாரஞ்செய்யாமலும் இறுமாப்புற்றிருந்தனன். அதைக்கணேசமூர்த்தியறிந்து மிகுந்தகோபத்தோடு அவனருகிற்சென்றுஅவனுடைய சிரோரத்தினத்தைப் பறித்துக் கொண்டனர் உடனே வாசுகி மயங்கிப்பூமியில்விழுந்து மூர்ச்சையாயினன். அவனைபுடைசூழ்ந்திருந்த நாகர்களெல்லாம் மனங்கலங்கிநடுங்கினார்கள் பின்னர் கணேசமூர்த்தியானவர் சம்பாதிமுதலிய மூன்றுபட்சிராஜர்களையுஞ் சிறையினின்று நீக்கிதம்மோடழைத்துச் செல்கின்றபோது வாசுகிமூர்ச்சைதெளிந்துசுவாமியோடெதிர்க்கவந்தான். அவனை எமதையன்விரலினாலெடுத்து கங்கணமாகத் தரித்துக்கொண்டு பூலோகத்திற்குப்போகும்படித் திருவுளங்கொண்டனர்.

அரைஞாணுற்பவம்,

அதற்குள் அங்குநடந்த அவமானங்களனைத்தையும் ஆதிசேடனறிந்து மிகுந்தகோபத்தோடுநாகசேனைகளைக் கூட்டிக்கொண்டுவந்து கணேசமூர்த்தியுடன்யெதிர்த்துயுத்தஞ்செய்தான் உடனேமுன்னர் தாம்பொய்கைக்கரையில நிறுத்தி வந்தமயிலைநினைத்தருளினர். அந்நிமிஷத்தில் அந்த மயிலானது தனது சிறகின்காற்றினால் அளவற்றநாகர்கள் மடியும்படியாகப் பாதலலோகத்தில் வந்து கணேசமூர்த்தியருகில் நின்றது. அதன்செவியில் கணேச மூர்த்தியானவர் சில மந்திரங்களை யுபதேசஞ்செய்து ஓ கேகயமே! நீ இந்நிமிடத்தில் நாகசேனைகளையெல்லாம் மாய்த்து, ஆதிசேடனைப்பிடித்த பிடியிற்கொண்டுவரக்கடவையென்று ஆக்கியாபித்தருளினர். உடனே அம்மயிலானது மிகுந்தகோபாக்கினியை வீசிச்சென்று சிலநாகங்களைமூக்கினாற்குத்தியும் சில நாகங்களைச் சிறகினால்மொத்தியும், சில நாகங்களைக் கால்நகங்களினால் தத்தியும் சின்னபின்னபடக்கொன்றுயுத்தஞ்செய்துநேர்ந்த ஆதிசேடன்மீது பாய்ந்து அவன்சரீரநடுவில் வடுப்படக்கொத்தி கவ்விக்கொண்டு கணேசமூர்த்திக்கெதிரே கொண்டுவந்துவிட்டது உடனே அவ்வாதிசேடனை எமது கர்த்தனெடுத்து அரையில் நாணாகத்தரித்தருளினர். முன்னர்பயந்து ஓடியநாகர்களெல்லாம் கணேசமூர்த்தியைவந்து பணிந்தனர் பின்னர்கணேசமூர்த்தியானவர் தந்தையார்ச்சித்தத்தைமந்தருமார்சித்து வருவ

துதருமமென்பதுபோல, சிவபிரானர்ச்சித்த சர்ப்பாபரணங்களைத் தாமுமார்ச்சிக்கத் திருவுளங்கொண்டவராய்த் தம்மைச் சரண்புகுந்த நாகர்களையெல்லாம் அங்கதம்-குழை-ஆரம்-முதலியவாபரணங்களாகத் தோள்-செவி-மார்பு-முதலிய விடங்களிலணிந்தருளி வாசுகியின் புதல்விக்கும் ஏனைய நாககன்னியருக்கும் வேண்டியவரங்களைத்தந்து சம்பாதிமுதலிய மூன்று பட்சிராஜர்களுந் தம்மையுடைசூழ்ந்துவரும்படியாக மயில்வாகனத்தைச் செலுத்திக்கொண்டு பூலோகத்தையடைந்தனர்.

முன்னர் கணேசமூர்த்தி பாதலலோகத்திற் கெழுந்தருளிய போது சுவாமியோடு விளையாடல் செய்திருந்த முனிச்சிறார்கள், பின்னர் சுவாமியைக்காணாதவர்களாகி வனமெங்கனுந் தேடித்திரிந்துகொண்டிருந்தார்கள் அச்சமயத்தில் கோராசுர னென்பவன் கொக்காக வுருக்கொண்டுவந்து அம்முனிச்சிறார்களை யெல்லாங் கணேசமூர்த்தியினுடைய கூட்டாளிகளென்றறிந்து அவர்களையெல்லாமெடுத்து விழுங்கிக் கணேசமூர்த்தியினுடைய வரவுக்கெதிர்பார்த்திருந்தனன் உடனே பாதலலோகத்தினின்று வரும் எமதையனைநோக்கி அப்பாதகன் தனதுவாயைத் திறந்துகொண்டுவந்தனன் உடனே கணேசமூர்த்தியானவர் தமது பாசாயுதத்தினால் அவனை இரண்டு துண்டாகவெட்டி தமது கிருபாநோக்கத்தாற் பார்த்தருளினர். அப்பார்வையால் அவ்வசுரன் வயிற்றுளடங்கியிருந்த முனிச்சிறார்களெல்லாம் உயிர்பெற்றுத் துயில்விட்டெழுந்தவர்போல முகமலர்ச்சியோடும் வெளிவந்து கணேசமூர்த்தியினுடைய திருவடிகளிற்பணிந்து, முன்னொருபோது சகலவண்டங்களையுந் துளங்கக்கொத்திய விண்டுவாகிய கொக்கினைச்சினந்த சிவபிரான் குமாராகிய இவருக்குக் கொக்கினை மாய்த்ததும் ஓர் வெற்றியோவென்று துதிசெய்தார்கள். இப்பால் கணேசமூர்த்தியானவர் அம்முனிச்சிறார்களோடும் வனத்தினின்றுநீக்கி, சிவபிரானும் உமாதேவியாருமெழுந்தருளிய திருக்கோயிலையடைந்து பணிந்திருந்தனர். அதற்குமேல் சம்பாதிமுதலிய மூன்றுபட்சிராஜர்களும் கணேசமூர்த்தியினிடத்தில் விடைபெற்று தமது தந்தையாகிய காசிபமுனிவரையுந் தாயாகியவினதையும் பணிந்து கவலையற்ற மனதோடுசுகமுற்றிருந்தார்கள்.

பத்தாமாண்டில் காரளன் விகாரனென்னும இரண்டசுரர்கள் காட்டுப்பன்றியாகவும்காட்டெருமையாகவும் உருக்கொண்டுகணேசமூர்த்தி விளையாட்டயருமிடத்தில் வந்து ஆர்ப்பறித்தார்கள் ஆயினும் முன்னொருபோது பூவுலகத்தையுமளந்த விண்டுவாகியபன்றி

யைக்கடிந்த சிவபிரானுக்கும் அண்டங்களெல்லாம் நடுங்கும்படிவந்த ஓரவுணனாகிய எருமையைவென்ற உமாதேவியாருக்கும்அருமைப்புதல்வராகிய கணேசமூர்த்தியானவர் இக்காட்டுப்பன்றியும் காட்டெருமையுமாகவந்த அவுணர்மாய்கைக் கஞ்சுவரோ உடனே அவ்விருவர்மீதுந் தமதுபாசத்தை விடுத்து மாய்த்து, முன்னர் பிரமனுடைய கமண்டல தீர்த்தத்திலுண்டான நதியில் ஸ்நானஞ்செய்தருளினர். அச்சமயத்தில் பராசமுனிவர்வந்து கணேசமூர்த்தியைப்பணிந்தெழுந்து அளவற்ற வரங்களைப்பெற்றுப்போயினர், அத்தினமே காரக்கியமுனிவரும் வந்து பணிந்து தமக்குப் பரமஞானத்தையுபதேசிக்கும்படி பிரார்த்திக்க அதற்குக் கிருபைகூர்ந்து தமது மந்திரத்துளடங்கிய பதிபசுபாசங்களி னுண்மையை அவருக் குபதேசஞ்செய்துகொண்டிருந்தனர். அச்சமயத்தில் ஊர்த்தனென்னும் ஓரவுணன் புலியாக வுருக்கொண்டுவந்து வெளியில் விளையாடல் செய்திருந்த முனிச்சிறுர்களை பிடித்துத்தின்று சுவாமியினுடைய சந்நிதியை நோக்கிச்சென்றுன் அதைமுன்னர் அகிலமுழுதும் நடுங்கும்படிவந்த புலியை உகிரினுல் வகிர்ந்தருளிய சிவபிரானுடைய குமாரர் கண்டு அவனுடைய நாசியையுஞ் செவிகளையு மறுத்தெறிந்து பற்களையுதிர்த்து, இதைப்போய் உன்னையேவிய தலைவனுக்கு அறிவிக்கக்கடவையென்று விடுத்துத் தாம் மயில்வாகனத்தின்மீதாரோகணித்து இந்நிமிடத்தில் புலியினுலிறந்தவர்களையும் எமனையும் இங்ஙனம் கொண்டுவரக்கடவையென்று தமது பாசத்திற் காக்கியாபித்தனுப்பினர் அவ்வாக்கினையைச் சிரமேற்கொண்டு அப்பாசமானது அதிகவேகத்துடன்சென்று புலியால் விழுங்கப்பட்ட முனிச்சிறுர்களையெல்லாமழைத்தும் யமனை இறுகக்கட்டிக்கொண்டு வந்துவிட்டது, அப்போது யமனுனவன் கர்த்தனைப் பலமுறை பணிந்தெழுந்து சுவாமீ அடியேன் தேவரீருக்கு யாதொரு அபராதமுஞ் செய்ததில்லை அந்தக்கொடுமையான அசுரனுற்கொல்லப்பட்ட சிறுவர்கள்எனதுலோகத்திற்கு வந்தார்கள் எவ்வகைப்பட்ட வேலானதேவர்களாயினும் அவர்களைக் காலமுடிவில் சரீரத்தைவிட்டு நீக்கத்தக்க ஆதிபத்தியம் அடியேனுக்கிருப்பது தேவரீருடைய செயலேயன்றி அடியேற்கோர் சுதந்தரமுண்டோ ஆதலால் சுவாமிகள் அடியேனைக்கோபியாது அடியேன் அறிவின்மையால் தேவரீருக்கு யேதேனுங் குற்றமிழைத் திருந்தேனுயின், அதனைப்பொறுத் துக்காத்தருளவேண்டுமென்று வணங்கியிரந்தனன். அதற்குக் கணேசமூர்த்தி மனதிரங்கி அவனைத் தமது பாசக்கட்டினின்று நீக்கி ஓ கூற்றனே! இன்றுமுதல் நமக்கு அடியாராயுள்ளவரைப் பிடிப்பையேல் உனதுஅதி

காரமுஞ் சரீரமும் உடனே அழிவெய்தும், இதனையறிந்து நடந்து கொள்ளக்கடவையென்று திருவாய்மலர்ந்து அவனுக்குவிடைகொடுத்தனர் உடனே எமனுனவன் இன்று உயிர் தப்பிப்பிழைத்தோம் என்று ஓடித்தனது லோகத்தை யடைந்தனன். அதற்குமேல்கணேசமூர்த்தியானவர் காற்கியமுனிவருக்கு அத்தத்துவப் பொருள்களைப் பூரணமாக வுபதேசித்து அளவற்றவரங்களோடும் அவருக்கு விடைகொடுத்து தமது அருமைக்குரவர்களை யடைந்து வீற்றிருந்தருளினர்.

இப்பால் முன்னர் மூக்கையுஞ் செவிகளையும் பற்களையுமிழந்த உஷர்த்தகனென்னும் அவுணன் மனவருத்தத்துடன் தனதரசனுகிய சிந்துராசனிடத்திற்சென்று கர்த்தனே சிவகுமாரனுகிய கணேசனென்பவன் என்னை இவ்வாறு அவமானஞ்செய் தனுப்பினனென்றுமுறையிட்டான், அச்சமயத்தில் சிந்துராசனுக்குயிர்த் துணையாயிருக்கும் சிலதூதர்கள் அவனைப்பணிந்தெழுந்து ஆண்டவனே தேவரீர் விடுத்தருளிய அளவற்றபேருந் தினந்தினம் ஒவ்வொருவராய் அனேகமாயைகளைச் செய்து வந்தனர் அவ்வாறு செய்துவந்தும்அக்கணேசனை வெல்லுவதற்குச் சக்தியில்லாமல் அனைவருமாண்டனர். இனிக்காலதாமதஞ் செய்யாமல் நமது சேனைகளோடுஞ் சென்று அவனை வெல்லுவதே கருமமென்று சொன்னுர்கள். அதற்கு சிந்துராசன் மிகுந்தகோபங்கொண்டு தனது சிங்காதனத்தைவிட்டு சகல சேனைகளும் யுத்தத்திற்காயத்தமாயிருக்கும்படி உத்தரவு செய்தான், அப்போது அமைச்சர்கள் அவனைப்பணிந்து ஆண்டவனே இப்போது நமக்கு என்னதாழ்ச்சி நேர்ந்தனவென்று சிம்மாதனத்தை விட்டிறங்கினீர். விண்டுவாதி தேவர்கள் தேவரீர் சிறையிற் கட்டுண்டிருக்கின்றனர். மூன்று லோகங்களுந் தேவரீருடைய ஆணையிலடங்கின மேலுங் காட்டில் வசிக்கின்ற கணேசனும் நமதுகாவலைக் கடந்து வந்தவனல்லன் ஆயினும் முன்னர் நடந்திருக்கின்ற விசேடங்களால் அவனைச் சத்துருவென்றெண்ணி இளமைப் பருவத்திற்றனே அவனைக்கொல்லுவதற்கு அளவற்ற வீரர்களையனுப்பினேம் அவர்கள் ஒவ்வொருவரும் பூமியையும் ஆகாயத்தையும்வெல்லவல்ல பராக்கிரமும் மகத்துவமுடையவர்களாயிருந்தும், அவர்களையெல்லாம அச்சிறுவன் ஒருவனே தனது கண்ணினுலும், மூக்கினுலும் காலினுலும், கையினுலும் மேலான பலவகைப்பட்ட ஆயுதங்களினுலும் மாய்த்து விட்டனன். அவனேதான் ஒருவனுகவும் வயதில் அதிக பாலியனுகவும், பராக்கிரமத்தில் சிறந்தவனுகவும் மிருக்கின்றான் அப்படிப்பட்டவனை வெல்லுவதற்குத் தக்க வுபாயத்தை யா

லோசித்து நடத்தவேண்டும் ஆதலால் கனலாசுரனென்பவன் சகல மாயையினும் வல்லவன். யுத்தத்திற் சாகாவரம் பெற்றவன். தேவரீருக்குச் சமமான புஜபலபராக்கிரமத்தை யுடையவன். அத்தன்மையானவனைச் சகலசேனைகளோடுங் கூட்டி முன்னர் அனுப்புவித்து அவன் செய்யும் யுத்தத்தில் எதிரியால் நடக்குங் காரியங்களையறிந்து, அதற்கு மேலான காரியங்களை யாம் யோசித்து நடத்தவேண்டுமென்று சொன்னார்கள், அவ்வாறமைச்சர்கள் சொல்லிமுடியுமுன் சிந்துராஜன் அருகிலிருந்த இரதகஜ துரக பதாதிகளும் வஸ்திராபரணங்களும் அளவற்றனவாகக் கொடுத்து ஓ சுத்தவீரனே சிவ குமாரனாகிய கணேசனென்பவன் வயதிற் சிறியவனாயினும்யுத்தத்திற் பெரியவனாய் நம்மவர்களையெல்லாம் மாய்த்துக்கொண்டு வனத்தில் வசித்திருக்கிறான் நீ இந்நிமிடத்தில் அவன்மீது படையெடுத்துக்கொன்று யுத்தஞ்செய்து ஜெயம்பெற்றுவரக்கடவையென்று சொன்னான் அதைக்கேட்ட கனலாசுரன் இதுகாறும் என்னையனுப்பாதிருந்த காரணமென்ன இப்பொழுதெனை அவனைக் கொல்லவா அல்லது கைப்பிடியாகப்பிடித்து வரவோவென்று சொல்லி மிகுந்த குதூகலத்துடனே அரண்மனையை விட்டு வெளியேவந்தனன். உடனே கனவாய்ப் பாயவல்ல குதிரைகளைப் பூட்டிய அளவற்ற இரதவீரர்களும் அண்டபிண்டங்களையும் நடுங்கச்செய்ய அனேககஜவீரர்களும் வாயுவேகத்தினும் விரைவாகச்செல்லவல்ல எண்ணற்றதுரகவீரர்களும் மிகுந்தபராக்கிரமத்தோடு வெகுவெகுவமாய்ப் போர்செய்ய வல்ல கணக்கற்ற பதாதிவீரர்களும் நெருங்கினார்கள் கவிகைகொடி பிச்சம் முதலிய சின்னங்கள் ஆகாயவெளியை மறைத்தன. இரணபேரி, ஜெயபேரி, வெற்றிச்சங்கம் முதலிய வாத்தியங்கள் கடலோசையை யடக்கின. இவ்வித ஆடம்பரங்களோடு பன்னிரண்டக்குரோணிச் சேனைகள் புடைசூழ்ந்து வரும்படியாகக் கனலாசுரனானவன் யுத்தசன்னத்தனாய் நவரத்தினத் தேரிலேறி திரிசந்திக்ஷேத்திரத்தையடைந்து நாற்றிசைகளிலும் தனதுசேனைகளை முத்திக்கையிட்டனன். அதை யங்கிருந்த முனிவர்கள் கண்டு சிங்கவேற்றைக் கண்ட யானைக்கூட்டம்போல பயந்தோடிச் சிவபிரானுடைய திருவடிகளில் சரணடைந்து சுவாமி கமலாசுரனுக்குப் பதிலானகனலாசுரனென்பவன் சிந்துராஜனுடைய யேவலாற்படையெடுத்து வந்திருக்கின்றனன். மூவுலகங்களினும் தீங்கு செய்பவன். இவனேயன்றி வேறில்லை. சுவாமிகள் இப்பாதகனை விரைவிற் சங்கரித்து எளியேங்களைக் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவர்களைச் சிவபெருமான் கிருபையோடு பார்த்தருளி ஓ முனிவர்களே நீங்

களவனைக்குறித்து அஞ்சாதீர்களென்று கையமர்த்தி மயூரேசரை யழைத்துக் கனலாசுரனென்பவன் யுத்தஞ்செய்ய வந்திருக்கின்றனன். அவனை நீசென்று சங்கரித்துவருவாயென்று சொல்லித் தமது கையிலிருந்த சூலாயுதத்தை அவருக்குக் கொடுத்தருளினர். உடனே மயூரேசர் சிவபெருமானையும், உமாதேவியாரையும் பணிந்து மயில்வாகனத்தின் மீதாரோகணித்து யுத்தத்திற்கு வேண்டியநால் வகைப்படைகளையும் மனதினாற் சிருட்டித்து அவைகள் தம்மைப் புடைசூழ்ந்துவரக் கட்டளையிட்டு, நாற்றிசைகளினுஞ் சூழ்ந்துமுற்றிக்கையிட்டிருக்கின்ற அசுரசேனைகட்குள்ளே புகுந்தனர் அப்போது சிவபிரான் உமாதேவியாரோடும் ரிஷபவாகனத்திலேறி பூதகணங்கள் புடைசூழும்படியாக ஆகாயமார்க்கத்தில் வந்து தமதுபுதல்வர்செய்யும் யுத்தத்தைப் பார்த்துகொண்டிருந்தனர்.

இப்பால் பூதசேனைகளும் அவுணசேனைகளுங் கைகலந்துபோர்செய்யும்போது, தேவசேனைகட்கு அதிகநோபமுண்டாகி அவுணசேனைகளையெல்லாம் அதாகதப்படுத்தினார்கள் அதைக்கனலாசுரன் கண்டு மனந்தாளாமல் தானே மயூரேசருடைய சேனைகளின்மீது பாய்ந்து சிலரைவெட்டியுஞ் சிலரைக்குத்தியும், சிலரையெறிந்தும், சிலரைமோதியும் சிலரைப்பிடித்தும் சிலரைக்கட்டியும், சிலரைக்கீழேதள்ளியும், சிலரைமுறித்தும், சிலரையுருட்டியும், சிலரைத்தடிகொண்டடித்தும் சின்னபின்னப்படுத்தினான். அப்போது பூதப்படைகளுள் அளவற்றபேர் மாய்ந்துபோனார்கள். அளவற்றகவந்தங்களாடல்செய்தன எங்கும் அலகைக்கூட்டங்கள் நெருங்கி வெற்றிபாடின. இரத ஓட்டங்கள்மாறி உதிர ஓட்டங்கள் பெருகின, நாய்நரி கழுகுமுதலியன சமர்க்களமெங்குங் கூடி வியங்கூறின இவ்வாறு பூதப்படைகள் மடிந்துகிடப்பதை மயூரேசர்கண்டு, தமது வில்லை வளைத்து அளவற்றபாணங்களைத் தொடுத்து கனலாசுரனுடைய படைகளையெல்லாம் பொடியாக்கி அவனுடைய தேரையொடித்து அவன்கவசத்தையும் அறுத்துத்தள்ளினர் அதன்மேற்கனலாசுரன் ஒருகுதிரையின்மீதேறி மிகுந்த வீராவேசத்துடன் நாகாஸ்திரத்தைப் பிரயோகித்தனன் அதை மயூரேசர் கண்டு தமதுவில்லில்கருடாஸ்திரத்தைத் தொடுத்து அதிக விரைவாகப் பிரயோகித்தனர். அப்பாணம் வெளிப்பட்டவுடனே கனலாசுரன் விடுத்த நாகாஸ்திரத்தைச் சின்னபின்னப்படவாட்டி, மேலுமேலும் அப்பாதகன் வெடுத்துவிடுகின்ற பாணங்களையெல்லாமறுத்து அவனேறி நடாத்துகின்ற குதிரையைக்கீழே தள்ளிமீட்டும் மயூரேசருடைய திருக்கரத்திலமர்ந்தது அப்போது கனலாசுரன் திகைத்து அக்கணேசனை அ

ஸ்திரசஸ்திரங்களால் வெல்வது மிகவுமரிதென்று நினைத்தவனாய் உடனே ஆகாயமார்க்கத்திற்சென்று திரிலோகங்களும் நடுங்கும்படியாக முறைமுறையாய் அளவற்ற மாயைகளைச் செய்திருந்தான்.

அதை மயூரேசரறிந்து தமதுகரத்திலேந்திய பாசத்தை விடுத்தனர் அப்பாசமானது அளவற்ற மாயவடிவங்களைக் கொண்டுசென்று அவன் செய்துவரும் மாயைகளையெல்லாமழித்தது. பின்னர் கனலாசுரன் வாளாயுதத்தோடு ஏகனாய்வந்து சுவாமியை யழைத்தான் அப்போது சுவாமியும் ஓர் வாளாயுதத்தை யேந்திஅவன்வீசுதலையெல்லாம் விலக்கி அவனுடைய தோளிலொன்றை யறுத்துக் கீழே வீழ்த்தினர். உடனே அறுக்தவழியினின்றும் பெருகிய உதிரத்திலே அவனைப்போன்ற அவுணவீரர்கள்உண்டானார்கள். அதை மயூரேசர் பார்த்து, தமது நெற்றிவிழியைச் சிறிதுவிழித்துப்பார்த்தனர் உடனே உதிரத்தினின்றும் உண்டான அவுணவீரர்களெல்லாமெரிந்துநீறானார்கள். அதைக்கனலாசுரன் பார்த்துக் கோபித்து மயூரேசர்மீது ருத்திராஸ்திரத்தை யெடுத்து மந்திரபூர்வகமாகப்பிரயோகித்தனன் அந்த ருத்திராஸ்தமானது சகலலோகங்களையுமழித்துக்கொண்டு ஆகாயமார்க்கததில்வர அதை மயூரேசர் கண்டஞ்சாமல் இங்கேவருகவென்றழைத்துத் தமது அம்புபெய்தூணியிலடக்கினர். அப்போது கனலாசுரன் ஆலகாலத்தைப்போலச் சீறித் தண்டாயுதமேந்தி யெதிர்க்கவந்தான்.

அச்சமயத்தில் மயூரேசர் தமது கரத்திலேந்திய சூலாயுதத்தை நோக்கி நீ இந்நிமிஷத்தில் அனலாசுரனை நீறாக்கி மீளக்கடவையென்று விடுத்தனர், அவ்வாறே அச்சூலமானது சென்று அவனைநீறாக்கி ஆகாயகங்கையில ஸ்நாநஞ்செய்து மயூரேசருடைய திருக்கரத்திலமர்ந்தது. உடனே மயூரேசரானவர் வெற்றிமாலை சூடிக்கொண்டுயுத்தத்தில் மடிந்தபூதசேனைகளையெல்லாமெழுப்பித் தமதிருக்கையையடைந்தனர். அவரைச் சிவபிரான் மகிழ்ச்சியோடு ஆலிங்கனஞ்செய்து அளவற்ற வரிசைகளையளித்தனர். முனிவர்களெல்லாஞ் சுவாமியைப் பணிந்தெழுந்து வேண்டிய வரங்களைப்பெற்றுத்துயரமற்றிருந்தார்கள்.

இவ்வாறுமயூரேசர் கனலாசுரனோடுயுத்தஞ்செய்துவெற்றிபெற்றுமுனிவர்களுடைய துன்பங்களைநீக்கி ஆனந்தமுற்றிருக்க இவ்விருத்தாந்தங்களையெல்லாஞ் சிலதூதர்கள் வாய்குழறஉடல்வெயர்க்கச்சென்று சிந்துராஜனுக்கறிவித்தார்கள். அதைக்கேட்ட மாத்தி

ராசன்மரம்போலே பிரமித்துநின்று மனதில்மிகுந்தகிலேசங்கொண்
டு இனிமேல்கமலாசுரனுக்கு நிகரானவீரனைக் காணப்போகின்றே
மோவென்று துக்கித்து, இனியென்னசெய்யலா மென்றெண்ணி
கணேசனுடைய வல்லமையைப் படையெடுக்காதவண்ணமே அடக்
கத்தக்க உபாயம்யாதென்றுதனக்குள் ஆராய்ந்து உலகத்திற்கெல்
லாம் உபாகரஞ்செய்துவருகின்றசகலதேவர்களும்நமது வசமாயிரு
த்தலால், இனி அவர்கள் செய்கையை நிறுத்திவிடுவோம் அவ்வாறு
நிறுத்துவோமாயின் நமது சத்துரு எவ்வாறுநிர்வகிக்கவல்லவனென்
றுநிச்சயித்துசூரியனைக்கூவிநீசத்துருவிருக்கின்றவிடத்தில் உனது
கிரணங்களை பரப்பவேண்டாமென்று திட்டஞ்செய்து சந்திரனை
யழைத்து நீமயில்வாகனத்தையுடைய கணேசனிருக்கின்றவனத்தி
லே உன்னுடைய கிரணங்களை வீசாதிருவென்று உத்தாவுபண்ணி,
அக்கினியைநோக்கி நீ சிவகுமாரனிருக்கின்றவனத்திலுள்ள உனது
சுவாலைகளையெல்லாம் இங்கேவரக்கடவையென்று ஆக்யாபித்து,
இந்திரனைப்பார்த்து நீகணேசனிருக்கின்றகாட்டிலே மழைபெய்ய
வொட்டாமல்மேகங்களை நிறுதமென்று கட்டளையிட்டு, வருணனை
க்கூவி நீ விநாயகனிருக்கின்ற வனத்திலுள்ள தண்ணீரையெல்லாம்
வாங்கிக்கொள்ளென்று உத்தரவுசெய்து, வாயுவை யழைத்து நீ
உமாபுத்திர னிருக்கின்ற வனத்திலே வீசாமலிருவென்றும் ஆக்கி
யாபனைசெய்தனன் பின்னா இவர்களெல்லாம் அவனுக்குப்பயந்து
அவன் சொன்னவாறெல்லாஞ்செயது வந்தாாகள் இவ்வாறு சூரிய
னுஞ் சந்திரனுங் காயாமலும், அககினியில்லாமலும், சலமில்லாம
லும் வனத்தில் ஒருகாரியமும் நடவாதிருப்பதினால் முனிவர்களெல்
லாம் மயூரேசரிடததில்வநது பணிநதெழுந்து, சுவாமீ சூரியன்முத
லிய தேவர்களாற் செய்யுந் தொழில்களில் ஒன்றேனும் நடவாதிரு
ப்பதினால் அடியேங்கள் யாதொரு கருமமுஞ் செய்வதற்கிடமில்லா
திருக்கின்றனவென்று முறையிட்டார்கள். அதைமயூரேசர் கேட்டு,
இது சிநதுசெய்தகாரியமென் றெண்ணித் தமது மூன்று விழிகளை
யும் நெறித்துப்பார்த்தருளினர் உடனே வலது விழியினின்று சூரி
யனும் வாயுவும்மேகமுநதோன்றின. இடது விழியினின்று அக்கி
னிமுதலானவைகள் தோன்றி எங்கும்பரவியிருந்தனமுனிவர்களெ
ல்லாமானந்தங்கொண்டு நித்தியகன்மாதிகளைக்கிரமப்படி நிறைவே
ற்றிவந்தார்கள் பின்னர் கணேசமூர்த்தியானவர் சிந்துவோ இவ்வ
ளவு தீங்குகளை நம்மிடத்திற்செய்ய வல்லவனென்று கோபித்து,
சிவபிரானையும் உமாதேவியாரையும் பணிந்து எதிரில்நின்றனர் அக்
குறிப்பினைச்சிவபிரானறிநது முகமலர்ச்சியோடுங் கணேசமூர்த்தி

யைப்பார்த்து; மைந்தனே! எல்லாத்திங்குகளையும் இடைவிடாது செய்துவருகின்ற சிந்துவைச் சங்கரித்து தேவர்களுடைய சிறையி னைநீக்கி அவரவர்கள் பதவிகளை அவரவர் அடையும்படிச்செய்யெ ன்று உத்தரவுசெய்து அளவற்ற பூதப்படைகளையுங் கணநாதர்க ளையுந் துணைகூட்டியனுப்பினர் இப்பால் மயூரேச மூர்த்தியானவர் சுப்பிரமணியர்-வீரபத்திரர்-நந்தி இலம்பகர்ணன் இரணியகருப்பன் அரன்-சோமன்-புட்பதந்தன்-பிரமதன்-பிருக்கி-இரத்தலோசனன்-தாவானலன்-பஞ்சானனன்-சங்கன்-விகடன்-சபலன்-சாமளன் - பூத ராசன் முதலான படைவீரர்களையும், ஏழுகோடி பூதவீரர்களையுந் தந்தைகொடுத்தருளப்பெற்று மீட்டும் அவர் திருவடிகளில் மும்முறை மைப்படி பணிந்தெழுந்து கோவிலுக்கு வெளியே வந்தனர். உட னே தம்மைச் சுப்பிரமணியர்முதலான வீரர்கள் பூதகணங்களோடு ம் வந்துபணிந்தார்கள். அவர்கட்கு விநாயகமூர்த்தி தனித்தனி இரதங்களிலேறிவரக்கட்டளையிட்டு, மயில்வாகனத்தோடும் முனிச் சிரேர்களோடும் மகமேருவைநிகர்த்த மற்றொரு இரதத்தில் தாமா ரோகணித்தனர் சிலபூதர்கள் வெண்சாமரைவீசினார்கள். சிலபூதர் கள் ஆலவட்டமசைந்தார்கள் சிலபூதர்கள் தவளக்கொடைபிடித்தார் கள். சிலபூதர்கள் கட்டியங்கூறினார்கள். பானுகம்பன் தனது ஆயி ரம்வாய்களினும் ஆயிரம்தவளச்சங்கங்களைவைத்து அண்டங்களெ ல்லாமதிரும்படி முழங்கினன் இவ்விதவைபவங்களோடு அகிலகார ணராகிய விநாயகப்பெருமான் வழிக்கொண்டு கொடித்திரள்களினு லும் வாத்திய வோசைகளினும் விமானநடைகளினும் அளவற் றவனங்களுஞ் சமுத்திரங்களும் மலைகளும் ஒன்றாகக்கூடி வருவது போலத்தமது சேனைகளை நடத்திக்கொண்டு சென்றனர். அப்போ து சிந்துராசனுடைய ஏவலினால் இலக்கமசுரர்கள் வழியில்வந்தெ திர்த்தார்கள் அவர்களையெல்லாம முன்னணியிற் செல்கின்ற சிலபூ தர்கள் உதைத்தும் துவைத்தும் நீறாக்கியுஞ்சென்றுகண்டகநகரத் தைச்சமீபித்தனர் உடனே அக்கண்டகநகரத்திற்கு ஒரு யோசனை தூரத்தில் மயூரேசமூர்த்தியானவர் சுப்பிரமணியர் முதலானவர்க ளோடும் மற்றபூதப்படைகளோடு மிறங்கித்தருமசாத்திரவிதிப்படி ஒருதூதனைச்சிந்துராசனிடத்தில் முன்னதாயனுப்பி இனியேனுந் தேவர்களுடைய சிறையைநீக்கி கிரமத்தோடிருக்கும்படி சொல்லு விப்போம்.

அதற்கவன் இணங்கானாயின் உடனேயுத்தமுகத்தில் அவனை ச்சங்கரிப்போமென்று தமதுதிருவுள்ளத்தில் நினைந்தருளி, ஆலோ சனைகளிற்சிறந்தபுட்பதந்தனைக்கூவி, ஒநிபுணனே! துன்மார்க்கனு கிய சிந்துவினிடத்தில்முன்னதாகஒர் தூதனையனுப்பிப்பார்ப்போம்,

அவன் இனியேனும் நன்மார்க்கத்திற்கு வாராவிட்டால் அவனோடு யுத்தஞ்செய்து சங்கரிப்போம், ஆதலால் இங்கிருக்கின்றகணநாதர்கட்குள் தூதுபோகத்தக்கவன் யாரென்றுவினவினார். அதற்கவன் கணேசமூர்த்தியைப்பணிந்து, சுவாமி! தேவரீர் திருவவதாரஞ்செய்தருளிய நாள்முதலாகத்தினந்தோறுந் தேவரீருடைய திருக்கரத்தினாலழிந்த அசுரர்கள் ஆயிரத்திலுமதிகமாகவேயிருப்பார்கள். அவர்களல்லாமல் வீரத்திற்சிறந்த கனலாசுரனும் மேலான யுத்தங்களைச் செய்துமாண்டான் இவையனைத்தையும் அசிந்துநாள்தோறுமறிந்திருந்துந் தேவரீருடைய பராக்கிரமத்தைத்தெரிந்து கொண்டவனல்லன் தேவரீர்கிருபையினால் நீதி முறைமைப்படி ஓர் தூதுவிட்டு நன்மார்க்கங்களைப் போதிப்பித்தாலும் அக்கொடியவன்வழிக்குவருவானல்லன். அதுவுமன்றிப்பராக்கிரமத்திற்குறைந்தவர்கள் தம்மின்வலியாரிடத்திலயோக்கியரான தூதர்களையேவி இனியவார்த்தைகளினாலுந், திரவியங்களினாலுஞ் சிநேகஞ்செய்துகொள்வது முறைமையாகும் பராக்கிரமத்திற் சிறந்தவர்கள் தம்மின் மெலியாரைத் தண்டிப்பதே முறைமையாகும் அவ்வாறிருந்தும் தேவரீர் மிகுந்த கிருபையினால் அப்பாதகனிடத்து ஓர் தூதுவனை அனுப்பும்பட்சத்தில் அத்தூதுவனானவன் தனது சொல்லுக்கு ஒருவேளை அப்பாதகன் இணங்கிவாரானாயின் உடனே அவனை மேலிடவொட்டாமற் சிறிவதைசெய்து மீட்டுமிங்ஙனம்வந்து சேரத்தக்கவனாகயிருக்கவேண்டும். இப்போது இங்கிருக்கின்றவீரர்களுள் மிகுந்த பராக்கிரம சாலியாகிய அச்சிந்துவைக்கொன்று வெற்றிபெறவல்லவர் சுப்பிரமணியதேவர் ஒருவரேயாகும், அவர்தேவரீருக்குத் தம்பியாதலால் அவரைத் தூதனுப்புதல் மரபன்று வீரபத்திரக்கடவுளை யனுப்பினால் அக்கொடியவனிருக்குமிடத்திற் போகுமுன்னமே எதிர்கண்டசூரர்களையும் ஊரையுஞ்சுட்டு நீறாக்கித்தமது மனத்தில்நினைத்தவண்ணமெல்லாஞ்செய்துவிடுவர் அப்பால்தேவரீர் நினைத்தருளியபடி முடியாது அர்த்தலோசனன்-பிரமதன்பிருங்கி-பூதராசன்-நந்தியென்று சொல்லப்பட்ட இந்த அறுவரும் யுத்தஞ்செய்ய வல்லவர்களே எனினும், தூதுசெல்வதற்கு இசைந்தவரல்லர் ஆனால் சுவாமிகளுடைய கட்டளையைத்தடுக்கமாட்டாது சென்றாலும், இப்போது கூறிய மிகுந்த பராக்கிரமத்தினையுடைய இந்த அறுவர்களுக்குள் நந்திதேவர்மாத்திரஞ் சொன்னபடிச்சென்று நல்லபாங்கோடு பேசி மீண்டுவருவர்; பூதராஜனோவென்றால், போனவுடன் பட்டணத்தைச் சுட்டெரித்துப்போடுவன் அடியனோவெனில், அப்பாதகனுடைய சுற்றத்தினரெல்லாமலறும்படி அளவற்ற தீமைகளை நடாத்திவரு

வேன்; அர்த்தலோசனனாயின், செய்யத்தகாத காரியங்களாய் ஆண்சிறைபெண்சிறைபிடிப்பான், பிரமதேவனேனெனில், அசுரர்களைக் காணுமுன்னமே அவர்களையெடுத்தெழுந்து விழுங்குவன்; பிருங்கியும அவ்வாறே அவ்வசுரர்களுடைய குலத்தையெல்லாம் எரித்து நீறுக்குவன்; ஆதலால் நந்திதேவரே அச்சிந்துவினிடத்திற்போகவும் பேசவுந் திராணியுள்ளவர்; ஒருவேளை சத்துருக்கள் தீங்குசெய்யநேர்ந்தாலும் அதற்கு இளையாமல் எதிர்த்தவர்களோடு யுத்தஞ்செய்யவும், மாய்க்கவும்வல்லவர் அவரேயாகும் இப்பால் சுவாமிகளுடைய திருவுளம் எவ்வாறோவென்றுசொல்லினர் இவையனைத்தையும் மயூரேசர்கேட்டருளி, ஓ புட்பதந்தனே! நீசொன்னதெல்லாந் தக்கதேயென்று சந்தோஷித்து உடனே நந்திதேவரையழைத்து ஓ! சிலாதரன்மைந்தனே நீ அவுணபாதகனாகிய சிந்துவினிடத்திற்சென்று அடா மூடனே! உனக்குச் சிவபிரானளித்தருளிய வரத்தோடிருக்கவேண்டுமாயின் இந்நிமிஷத்தில தேவர்களைச்சிறையினின்று விட்டுவிடக்கடவை அவ்வரத்தையும் உயிரையும்இழக்கவேண்டுமாயின் இப்போதே யுத்தத்திற்கு வரக்கடவையெனச் சொல்லிவாவென்றனுப்பினா

இப்பால் விநாயகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளியதனை நந்திதேவர்மிக்க பயபக்தியோடுங்கேட்டு, மயூரேசரைப்பணிந்தெழுந்து சிவபிரானையும் உமாதேவியாரையு மனதிற்றியானஞ்செய்து, அவ்விடத்தைநீங்கிச் சூட்சமரூபத்தோடுஞ் சிந்துராசனுடைய கொலுச்சபைநெருங்கி, அங்கு அவனிற்கும் தாழாமலிருக்குமாறு அவன் சிம்மாதனத்தினும்மேலான பிரகாசத்தோடு ஓர்சிம்மாதனத்தைத் தமது மனதினாற் சிருட்டித்து, அதில அவன்வீற்றிருக்கின்றபராக்கிரமத்தினும் அதிகமான பராக்கிரமத்தோடும் தாம்வீற்றிருந்தனர். இவ்வாறு நந்திதேவர்வந்து வீற்றிருப்பதைச் சிந்துராசன்பார்த்து அளவற்றகாவல்களைக்கடந்து நமக்குமுன் சிங்கவேற்றினைப்போல இவன் இங்கு வந்திருப்பது மிகநன்று. மிகவும் நன்றென்று அதிசயித்து அடங்கற்கரிய கோபத்தோடு நீயார்? எங்ஙனமிருக்கின்றவன்? இங்குயாதுகாரியமாகவந்தனை? யென்றுகேட்டனன் அதற்கு நந்திதேவர் சொல்லுவார் அரசனே? யாம் அந்தமுமாதியுமில்லாத மயூரேசருடைய தூதன்; நம்மை உலகத்தார் நந்தியென்று சொல்லுவார்கள்; நாம் உன்னிடத்தில் வந்தகாரியத்தையும் சொல்லுகின்றோம். ஞாபகமாய்க் கேள்; செல்வமிருக்கின்றவர்களிடத்திற்றெளிவான அறிவிராதென்று சொல்லும் வாக்கியத்தின் பொருளை உன்னிடத்திலும், உனது மந்திரிகளிடத்தினுமிருக்கக்கண்டோம் அஃதெவ்வாறெனில், நீ அருமையாகிய தவங்களைச்செய்து அழியா

தலங்களையும் அளவிடற்கரிய போகபாக்கியங்களையும் பெற்றனை அவ்வாறுபெற்ற அந்தோ! அவைகட்குரியவேத மார்க்கங்களில்நின்று அவைகளையழியாமற் பாதுகாத்து என்றைக்கும் வாழ்ந்திருக்க எண்ணுமற்போயினை நீதானப்படியாயினும் உனது பாக்கியங்களை எல்லாஞ்சந்தோஷத்துடன் உண்டனுபவிக்கின்ற மந்திரிகளென்று சொல்லப்பட்ட பாவிகளும்,நெடுங்கால செலுத்துகின்ற உன்னை அக்கோணலினின்று நீக்கி நெடுங்காலம் வாழும்படியாக உனக்கிதமான வசனங்களைகூறித் தெளிவிக்காமற்போனார்கள்.

இதுகாறும் இவ்வாறே காலங்கழித்து வந்தனை இறந்த காரியமிருக்க இனிமேலாயினுந் தேவாதியரையும் முனிவர்களையுஞ் சிறையினின்று நீக்கி நீதிதப்பாமல்வேதநெறியை யாதரித்துக்கொண்டு இப்போது கிடைத்திருக்கின்ற பாக்கியத்தில் நீமூழ்கி வாழ்ந்திரு. இதை உனக்கறிவிக்குமாறே எமது பெருமான் அனுப்பினார், இக்கருத்து உனக்கில்லாமல் தேவர்களெல்லாம் நகைக்கும்படி மாண்டுபோகக்கருத்திருக்குமாயின்; இந்நிமிஷத்திலேயே நால்வகைப்படைகளோடு ம்யுத்தத்திற்கு வரக்கடவை இந்த நகரத்திற் கொருயோசனை தூரத்தில் எமதுகர்த்தர் இத்தினம வந்திறங்கியிருக்கின்றனர் நீயும்அங்குவந்து அவரைக் காணென்று சொல்லினர், இவையனைத்தையுஞ் சிந்துராசன்கேட்டு குலுங்கநகைத்து அனற்பொறி பறக்கும்படியாகக் கண்களைவிழித்துக் கோபித்து, ஓநந்தியே சிறுவனாகிய உன்னிறைவன் புத்தியைப்போல இங்கு வந்தனை உனது புத்தியும் இனிநடக்கப்போகின்ற கதியினையும் நீயறியாய் அவன்முன்சில எளியவர்களைக்கொன்றதையே பெரிதாகமதித்து அவ்வாறே மேலானஎன்னையுங்கொல்லுவனென்று அஞ்சாமலெவந்துசொல்லினை யானைமுதலிய பலமிருகங்களைக்கொன்று புசிக்கவல்ல சிங்கமாயினும் ஓர் சிம்புள் முன்னே அது யென்னசெய்யமாட்டும் தேரை முதலானவைகளைச் சமயம்வாய்த்தபோதுகொன்றுதின்னவல்லநாகமாயினும் ஓர்கருடன் முன்னே என்னசெய்யக்கூடும் கையில்வாளேந்தவறியாத சிறுவனைப்பராக்கிரமத்திற் சிறந்தவனென் றெளிதாகப்பேசினை இவ்வாறுபேசிய உனதுஎளனம் போகும்படிச்செய்வேன் ஆனால்தூதனென்றுன்னைக் கொல்லாமல்விட்டேனென்று சொன்னான் இப்படி அவுணபாதகனாகிய சிந்துராசன் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் நந்திதேவருக்கதிக கோபமுண்டாகி அடாமூடனே எமதுகர்த்தர் தூதுபோய்ப் பேசிவாவெனறு சொல்லிய கட்டளைக் கடங்கி உன்னைக் கொல்லாமல் விட்டேனே யன்றி அவனிணங்காவிட்டால்

டனேகொன்றுவிட்டுவரக்கடவையென்று ஒருவார்த்தைசொல்லியிருப்பாராயின மாறுபட்டவுன்னையும் இச்சபையிலிருக்கின்றோர்களையும் என்கையினாற்பிசைந்து சந்தனச்சேறாக்கி மார்பிற்பூசிக்கொண்டு உன்னுடைய சேனைகளனைத்தையும் எரித்துச்சாம்பலாக்கிவிடுவேன் மயூரேசரைச் சிறுபிள்ளையென்றும் வலியற்றவனென்றும் ஏளனமாகப்பிதற்றினை அவரிட்டருளிய கட்டளையைக் கடவாமல் உன்னிடத்திற்குவந்த எனது வல்லபத்தைப் பார்த்துப் பின்னர் அவருடைய வல்லபத்தையும் நிதானிக்கக்கடவையென்றுசொல்லி ஒருமூச்சுவிட்டார் அம்மூச்சின் காற்றினால் மண்டபத்தினுடைய உத்திரமானது பிளந்தது. அருகிலிருந்தவர்களெல்லாம் இடியிடித்ததோவென்று நடுங்கிச்சிலர் வெயர்த்தார்கள் சிலர்விழுந்தார்கள் சிலர்மயங்கினார்கள் சிந்துராசன் பயந்து ஒரு முகூர்த்தகாலம் வரையில் திகைத்து மூர்ச்சித்திருந்தான் அச்சமயத்தில் சகலவஸ்துக்களையும் ஆக்கவும் அழிக்கவும்வல்ல நந்திதேவரானவர் தாம் வீற்றிருந்தசிம்மாதனத்தை அங்ஙனேமறைந்துபோகச்செய்து சமீரனென்று ஆகாயமார்க்கமாகச்சென்று நடந்தசெய்திகளையெல்லாம் மயூரேசருக்கறிவித்தனர் அவையனைத்தையும் மயூரேசர்கேட்டுப் புன்னகைசெய்திருந்தனர் அருகிலிருந்தபூதராசனும்புட்பதந்தனுங்கோடிபூதசேனைகளுடன் சென்று சிந்துராசனுடைகோட்டையை நாற்புறமுவளைத்தும் அந்நாற்புரத்தும் நாற்பதுகோடி வீரர்களுடன் காவல்கொண்டிருக்கின்ற சிங்கமுகாசுரன், யாளிமுகாசுரன்; புலிமுகாசுரன், கஜமுகாசுரன், முதலானவர்களுடனே யுத்தஞ்செய்து மாய்த்து ஓர்நிமைப்போதில் மீட்டுந்திரும்பிவந்தனர் முன்னர் நந்திதேவருடைய சுவாசக்காற்றினால் மனந்திகைத்து மூர்ச்சித்துக்கிடந்த சிந்துராசனானவன் பின்னர்தெளிந்தெழுந்து, தன்னைப்பணிந்திருக்கின்ற மந்திரியார்-சேனாதிபதியர் தூதர் சாரணர் முதலானவர்கட்கு ஒருதூதன்வந்துபேசிநடத்தியவிதம் இதுவென்றுசொல்லி இனி அரைக்கணத்தில் நமதுசத்துருக்களுடைய உயிரைவாங்கினாலன்றியான்அசனஞ்செய்கின்றதில்லையென்று சபதங்கூறி இந்நிமிஷத்தில்நமது நால்வகைச் சேனைகளையும் வரவழைக்கக்கடவீர்களென்று ஆக்கியாபித்தான். உடனேவியவாகரோடி வள்ளுவரைக்கொண்டு முரசறைவித்தார்கள் அம்முரசினோசை கேட்டமாத்திரத்தில் அவ்வவர்கள் செய்திருந்த கருமங்களை அந்தந்த வண்ணமேவிடுத்து நால்வகைப் படைகளோடும் இராசவீதியில் வந்து கூடினார்கள்.

இப்பால் தனக்கு மரணமே யில்லையென்று தீர்மானித்து ஒன்றார்களை ஒருதிரணமாகமதித்திருக்கின்ற சிந்துராசன் பரிசனர்போ

வெர ஆயுதச்சாலையுள் நுழைந்து, பொன்னுடையுடுத்தி இடையிற்பட்டுக்கச்சையையிறுக்கி, கூர்மையாய்ச் சொலித்திருக்கும் வச்சிரவாளாயுதத்தை மடியிற்செருகி மேகசர்ச்சனையையொப்பக்கலிக்கும் வீரகண்டாமணியைப் பாதத்திற்கட்டி விசாலமாகிய மார்பினிடத்தில் வயிரங்களினூற்சோதித்திருக்கும் அபேதகவசத்தைப்பிகிந்து கரசாடு விரல்சாடு முதலியவைகளை வரிசைபடத்தரித்து, மின்னலையொப்பப் பிரகாசிக்கும் அலகையுடைய கொடிய பாணங்கள் நிறைந்திருக்கின்ற தூணியை முதுகிலிறுக்கி தங்கத்தினூற் பிரகாசிக்கின்ற வீரபட்டயத்தை நெற்றியிற்கட்டி மற்றும் போர்க்கோலத்திற்குரிய சின்னங்களைத் தரித்து நவரத்ந மயமாகவிளங்கும் கிரீடத்திற்றும்பைமாலையைச் சுற்றி மந்தரகிரியைப் போலப்பாரித்து பொற்கட்டுகள் பிகிந்து இரத்நங்களினும் மணிகள் சந்திக்கவிளங்கும் வில்லை வணங்கியெடுத்து. வீரலட்சுமியைத் தொழுது போற்றி விடைபெற்றுக்கொண்டு ஆயுதசாலையைக் கடந்து ஜெய உற்சாகத்துடன் வெளிவந்தனன்

அச்சமயத்திற் சிலதூதர்கள் அவனைப்பணிந்து ஆண்டவனே! முன்னர் தூதாகவந்துசென்றவனைப்போல இரண்டு வீரர்கள்கோடி பூதசேனைகளோடுவந்து நமது கோட்டைக்கு நாற்புறங்களினு மிருந்த காவலாளர்கள் யாவரையுந் தூளாக்கிப்போயினரென்று சொன்னார்கள் அதைக்கேட்ட மாத்திரத்தில் காய்ந்தபாலானது நெருப்பினூற் சூடேறுந்தோறும் அந்நெருப்பின்மீதே பொங்கி விழுவதுபோலச் சிந்துராசனுக்குக் கோபமேலிட்டுக் கோட்டை மதிற்புறத்தில் முன்போலக் காவல்செய்திருக்கும்படி வேறு சிலவீரர்களை யனுப்பித்தனன் அரண்மனையினுஞ் சிலவீரர்களைக் காவல்செய்து வெளியேவந்து சிலவீரர்களுக்குத் தேர்களும்,சிலவீரர்களுக்குப் படைகளும், சிலவீரர்களுக்குக் கிராமங்களும் சிலவீரர்களுக்கு வஸ்திராபரணங்களும், சில வீரர்களுக்குக்கௌரவமான பட்டப்பேர்களுங் கொடுத்துத் தானுந்தேரேறி இரணபேரி ஜயபேரி வெற்றிசங்கம் திமிலை கரடிகை-காகளம்-சல்லரிமல்லரி முதலிய வாத்தியங்கள் சத்தசாகரங்களைப்போலமுழங்கவும் கொடி-குடை-பிச்சம்-சாமரை-ஆலவட்டம் முதலிய சின்னங்கள் நாற்றிசைகளினும் நெருங்கித்துள்ளவும் மங்கலப்பெண்கள் நடனமாடவுமாக வழிக்கொண்டு தனதுதேரைச்சுற்றி சேமத்தேர்களும் அச்சேமத்தேர்களைச்சுற்றி வீரர்களுடைய தேர்களும் அத்தேர்களைச்சுற்றி யானைகளும் அந்த யானைகளைச்சுற்றி குதிரைகளும் அக்குதிரைகளைச்சுற்றி பதாதிகளும், புடைசூழ்ந்துநெருங்கிவரச் சேனைகளையும் நடத்திச் சென்றனன் அப்

போது அட்டதிசைகளைப்பேர்த்து ஆகாயத்திலெழுந்த தூளிப்படலங்கள் எத்தன்மைத்தாயிருந்ததெனில் கொடிய பாதகனாகிய சிந்துவானவன் தனது குலத்தோடும் மயூரேசரால் மரணமெய்துங்காலம் நேரிட்டதென்று பூலோகம் அனைத்தும் தன்னினமாகிய தெய்வலோகத்திற்குச்சென்று அறிவிப்பது போலிருந்தது.

இவ்வாறு சிந்துராசன் படையெடுத்துத்தனது பட்டணத்தினின்றும் வெளிக்கொண்டு வருவதை நாரதமுனிவரறிந்து விநாயகமூர்த்தியைப் பணிந்தெழுந்து சுவாமி ? வீராதிவீரனாகிய சிந்துராசனானவன் சத்தசாகரங்களைப் போலத்தனது சேனைகளைக் கூட்டிக்கொண்டு இதோயுத்தத்திற்கு வந்து விட்டனனென்று மீண்டனர்; அதைக்கேட்டமாத்திரத்தில் மயூரேசரும் விரைந்தெழுந்து, தமது வீரர்களையும் பூதசேனைகளையும் யுத்தத்திற்கு நடக்கும்படி மூடுக்கினர். அப்போது நந்திதேவர் மயூரேசரைப் பணிந்தெழுந்து சுவாமி வீரபத்திரரும் அடியேனும், மற்றயாவரும் அவனோடியுத்தஞ்செய்து இளைத்துப்போனால் அதற்குமேல் சுப்பிரமணிய தேவரும் தேவரீரும் யுத்தத்திற்குச்செல்லும்படி கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர் அதற்கு மயூரேசர் நந்திதேவரைப்பார்த்து இரண்டாஞ்சம்புவே எதிர்த்துவருகின்றசிந்துவோடு யாம்முன்னின்றுயுத்தஞ்செய்ய மிகுந்தவாஞ்சையுற்றிருக்கின்றோமாதலால் அப்பராக்கிரமசாலியை யாமே சங்கரிக்கவேண்டும் சுப்பிரமணியர் முதலிய நீங்களனைவரும் மற்றவீரர்களோடெதிர்த்து யுத்தஞ் செய்யக்கடவீர்களென்று தமது மயில்வாகனத்தின்மீ தாரோகணித்தனர், உடனே முன்னர் கனலாசுரனை சங்கரிப்பதற் குண்டாகிய பூதசேனைகளும் குமாரதேவர் முதலியவீரர்களும் ஏனையகண நாதர்களும் எக்காலத்தும் விட்டுப்பிரியாத முனிச்சிறுவர்களும் அவ்வவர்களுடைய இரதங்களிலேறிக்கொண்டுவந்து மயூரேசமூர்த்தியைப்புடைசூழ்ந்தார்கள். அப்போது உய்யவகையறியாது எக்காலத்துந் தீங்கினையே விளைத்து வருகின்ற சிந்து ராசனுடைய கொடுங்கோலின் வெப்பத்தினால் வெதும்பிய லோகங்கள் குளிர்ந்து செழிக்கும்படி உதயங் கொண்டு பிரகாசிக்கின்ற பூரண சந்திரனைப் போல மயூரேசருடைய திருமுடியின் மீது பிரகாசிக்கும் படியாகச் சிலபூதகணங்கள் வெண்பட்டுக்குடைபிடித்தார்கள் அளவற்ற கீர்த்திகளுஞ்சேர்ந்து வாசஞ்செய்கின்ற இடம்இதுதானென்று மேலுங் கீழுங்குறிப்பினாற் காட்டுவதுபோலச்சில பூதங்கள் வெண்சாமரைகள் வீசினார்கள் விநாயகப் பெருமானனவர் கிருபாமூர்த்தியாதலால் சத்துருக்களின்மீ துண்டாகிய கோபாக்கினியானது ஒருவேளை தணியவுங்

கூடுமென்று அவ்வக்கினி தணியாதிருக்கும்படி அதற்குத் துணையாக காற்றினைக் கூட்டிவிப்பதுபோல, சில பூதகணங்கள் ஆலவட்டங்களை யசைத்தார்கள். சத்திபகவசமில்லாதிருப்பதே ஓர்கவசமாகக்கொண்டிருக்கின்ற அவ்வசுரராசனுகிய சிந்துராசன் இன்னும் இரண்டொருதினத்தில் மாய்ந்து சகலலோகங்களுஞ் சவுக்கியத்தை யடையுமென்று ஆனந்தத்தினலெழுந்து துள்ளுவதுபோலச் சில பூதகணங்கள் வெற்றிக்கொடிகளைப்பிடித்தார்கள். முன்னை மயூரேசமூர்த்தியைச் சிறுபிள்ளையென்று இகழ்ச்சிசெய்த சிந்துராசனே! இப்போதவரைப்பராபரவஸ்துவென்று தெளிந்துகொள்ளும்படியாக மும்மூர்த்திகட்கும் முதல்வனுகிய விநாயகன் வந்தான. உனை முதலாயினோருடைய உயிரைவாங்கிய கேசவன் வந்தான. சகலர்க்கும் ஆனந்தத்தையுண்டாக்கவல்ல கர்த்தன் வந்தான். சிவபெருமானும் உமாதேவியாருமீன்றபாலன் வந்தான் என்று சில பூதகணங்கள் கட்டியங்கூறினார்கள். சொர்க்கபாதாளபூதலமென்னும் மூன்று தலங்களிலுமுள்ள சகலருமினி அல்லலைவிட்டு சுகமுற்றிருங்கள் உங்களையெல்லாங் காத்தருளவல்ல இஷ்டநாயகன் வந்தானென்று கூவுவதுபோலச் சிலபூதகணங்கள் பேரிகை முதலான வாத்தியங்களை முழக்கினார்கள். வெகுவித வைபவங்களோடு மயூரேசமூர்த்தி யெழுந்தருளியகாலத்தில் தமது பூதகணங்களுடைய பாதங்களினின்றெழுகின்ற தூளியானது ஆகாயத்திலெழுகின்றதெவ்வாறிருந்ததென்னில் பூதலத்திருந்துவருகின்ற சிந்துராசனானவன் எமதுகர்த்தருடைய பூதகணங்களினது பாதம்பட்டுவல்வினைகளினின்று நீங்கி வானகத்தையடையச் செல்லுவாரும்போலிருந்தது.

இப்பால் இரண்டாயிரம்வெள்ளம் வீரர்களோடும் வந்த சிந்துராசனுடைய அமைச்சனுகிய மித்திரனுடனே சுப்பிரமணியக்கடவுளானவர், தமது சகோதரராகிய நவவீரர்களோடு இலக்கவீரர்களும், கோடிபூதவீரர்களும், புடைசூழச்சென்று யுத்தஞ்செய்தனர், வேறொரு இரண்டாயிரம்வெள்ளம் வீரர்களோடு வந்த கவுத்துவனென்னும் அமைச்சனுடனே வீரபத்திரக்கடவுளானவர், கோடிபூதவீரர்கள் புடைசூழச்சென்று யுத்தஞ்செய்தனர். மற்றோர் இரண்டாயிரவெள்ளம் வீரர்களோடுவந்த வீரராசனுடனே நந்திதேவரானவர் கோடிபூதவீரர்கள் புடைசூழச்சென்று யுத்தஞ்செய்தனர். தனித்தனியேகோடி அசுரவீரர்களோடும் வந்த தாவசன் - ஆகாயன் - துர்த்தன் சார்த்தூலன் - என்னும் இந்நால்வருடனே புட்பதந்தன் - பூசராஜன்விகடன் - சபலன் - என்னுமிந்நால்வரும் முறைமைப்படியே சென்றுயுத்தஞ் செய்தார்கள், இவ்வாறே இருதிறப்படைகளினும் முன்ன

அளவற்றவீரர்கள் தத்தம் படைகளோடு வேறு வேறு யுத்தஞ்செய்தார்கள். இரணியகருப்பன், சாமளன் - இரத்தலோசனன் - சோமன் பிருங்கி - பிரமதன் - பஞ்சானனன் - இலம்பகர்னன் - அரன் தாவானலன் முதலான சேனைத்தலைவர்களும், தம்மைவிட்டுப்பிரியாத முனிச்சிரேர்களும், முன்னர்தமது மனத்தாற்சிருட்டித்த பூதவீரர்களும்புடைசூழ்ந்து செயசெயவென்று போற்றிவரும்படியாகச் சகலலோகநாயகராகிய மயூரேசமூர்த்தியானவர், விண்டுமேருமுதலிய தேவர்களையெல்லாஞ் சிறையிடுத் திரிலோகங்களினுந் தனக்கு நிகரில்லாத மகாபராக்கிரமசாலியாகிய சிந்துராஜனுடனே யுத்தஞ்செய்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே இவ்வாறு இருதிறைப் படைகளுள் இரதவீரர்களோடு இரதவீரர்களும், கஜவீரர்களோடு கஜவீரர்களும், பரிவீரர்களோடு பரிவீரர்களும், படைவீரர்களோடு படைவீரர்களுங் கைகலந்து அகோரமான யுத்தத்தைவிளைத்துவருகையில், பூதசேனைகளினும் அசுரசேனைகளினும் சரீரமுற்றுஞ்சல்லடைக்கண்களைப்போலத் துளையுண்டும், நசுங்கியும், கிழிந்தும், பதைத்தும், உளைப்புண்டும், சோர்ந்தும், செத்தும், இவ்விதமாகப் பாடுபாடுகளைப்பட்டுக் கணக்கற்ற வீரர்கள் மாண்டனர். அப்போது வேலாயுதமூர்த்தியாகிய சுப்பிரமணியக்கடவுளையெதிர்த்துநின்றமித்திரனுலவன, தனதுசேனைகளோடு நெடுநேரம் போர்விளைத்திருக்கின்ற சமயத்திலபராக்கிரமசாலியாகிய பூதசேனைகட்கும் இலக்கர்கட்கும் நவவீரர்கட்கும், அதிகம்கோபாவேசமுண்டாகி மித்திரனுடைய நால்வகைச்சேனைகளினும் புகுந்து சிலரையுதைத்துருட்டியும், சிலரைப் பூமியிலமோதியடித்தும், சிலரைக் குடலைரியமிதித்தும், சிலரைப் பஞ்சுபோலச்சதைத்தும், சிலரைப்பூமியுள்ளடங்கத்தாக்கியும், சிலரைத்திசாதிசைகளிலெறிந்தும், சிலரைச்சமுத்திரங்களில்வீசியும், சிலரைவானவெல்லையிற்கடாவியும், சிலரைமூளைகள் சிதறவுதைத்தும், சிலரைக் கரங்களுந்தாள்களும் முதலியவைகளை நறுக்கச்சாடியும், சிலரை அம்மானையாடியும், சிலரைப்பற்கைதபொயப்பெயர்ந்தும் இவ்விதமாகச் சூருவலியை நிகர்த்து, வளைந்துவளைந்து ஒருவரையும் அப்புறம் இப்புறம் அகலவொட்டாமல் குதித்துக்குதித்துக் கடலைக்கலக்கியமத்து கசோபமாக அலைத்துமாய்த்தனர். அதைமித்திரன்கண்டு வடவானலத்தைப்போலக்கொதித்தெழுந்து, பூதசேனைகளினும் இலக்கவீரர் கூட்டத்தினும் புகுந்து - சிரங்கள் - கரங்கள் - தொடைகள் - புஜங்கள் - மார்புகள் கபாலங்கள் முதலியவைகளைக் கண்டித்து, மச்சராசிகளைப் போல உதிரவாரியில்மிதக்கும் அழுந்தியும்போகும்படியாகக்கண்டு

அளவற்றயானைகளையுங் குதிரைகளையுங் காலவேறுதலைவர்களையுந் துணித்து, குலாலன்சக்கரம்போலவும், பிரசண்டமாருதம் போலவும், மாறிமாறிக் கரங்களினாலும், பாதங்களினாலும் அளவிறந்த பூதர்களை மாய்த்து, அரைக்கணப்போதில் இலக்கவீரர்களெல்லாந் திசாதிசைகளிலோடிப்பதுங்கும்படி முடுக்கினன். இவ்வாறு இலக்கர் அபசயப்பட்டுத் திரும்பினதை நவவீரர்களிலொருவனாகிய வீரதீரன்கண்டு, வடவாக்கினியைப்போல மண்டியெரிந்து தனதுந்தேரை விரைவிற்செலுத்திவந்து மித்திரனெதிரில்நிறுத்திச் சகலருந்திடுக்கிட்டுவாடும்படி தனதுவில்லைவளைத்துக் கருணையின்றிச் சரமாரிசெய்துஞ்சேனையெய்யலும், நாறும்படி கருவயிரவுருவமாகிய கணைகளைக் கரவேகமாகச்சொரிந்து, அவனதுவில்லைமுறித்து, வேறொராயுதத்தையுங் கரகரவென்றுமுறித்து அவன் மார்புக்கெதிராகப் பிரயோகித்தனன். அதை மித்திரன்கண்டு இவன் வலியும், வீரமும், விரசாதுரியமும், கரவேகமும், வில்வித்தையின்பெருந்திறமும் மிகநன்று, மிகநன்றென்று நகைத்து மந்தரகிரியை நிகராகும் வில்லைக் கரத்திலெடுத்துத்தேவர்களெல்லாருங்கண்டு வியக்கும்படி அளவற்ற கணைகளைப்பிரயோகித்து எதிரிவிடுத்தகணைகளையெல்லாம் பொடிபடுத்தி மற்றொருகதாயுதத்தை அதிகவேகமாகச்செலுத்தி அவன் விட்ட கதாயுதத்தையும் அவன் பராக்கிரமத்தையும் அழித்து ஆர்ப்பரித்தனன் இவ்விதமாகத் தன்னுடனவனுக்குநேர்ந்த குறையை வீரதிவாகரன்கண்டு, காட்டுத்தீயைப்போலச் சீறித் தேரைத் தூண்டிக்கொண்டுவந்து பகைவனெதிரில் நிறுத்தி ஒப்பற்ற தனது வில்லை வளைத்து அளவற்றவாளிகளைத்தூண்டி அவனைச்சேரச் சின்னாபின்னப்படமுறித்தனன். உடனேமித்திரன் வேறொரு இரதத்திற்பாய்ந்து விஷச்சுவாலை வீசும்படியான வேலாயுதமொன்றையெடுத்து அவன்நெற்றிக்கு நேராகப் பிரயோகித்தனன். அவ்வேலாயுதம் வெளிப்பட்டவுடன் இடிமின்னல் அக்கினிமுதலானவைகளைப்பெருக்கி அதிகவேகமாய்வந்து வீரதிவாகரன் செலுத்திய பாணங்களையெல்லாம்விழுங்கி, அவன் நெற்றியில் உருவிப்பாய்ந்து, மூர்ச்சிக்கும்படிச்செய்து மீண்டது. அதை வீரராகதன்கண்டு ஆலகாலம்போலத்தனது தேரைவிரைவிற்செலுத்திவந்து விண்ணுலகமும் மண்ணுலகமும் நடுங்கும்படி அநேககணைகளைத்தூண்டி, அவன் வில்லை முறித்துச் சரீரமுழுவதுந் துளைபடச்செய்தனன். உடனேமித்திரன் வடவானலத்தைப்போலக் கொதித்தெழுந்து மற்றொரு வில்லினால் அளவற்றபாணங்களைத்தூண்டி அவனுடையவில்லையும் இரதத்தையும் பொடிபடக் கண்டித்தெறிந்து, அவன் வேறொருரதத்திற் பாய்

வதன் முன் இந்திரனுங்கண்டு நடுங்கத்தக்க ஓர் வச்சிராயுதத்தினை யேவி அவன் பராக்கிரமத்தைப்பரித்தனன். அப்போது வீரபுரந்தரனானவன், வாயுவேகத்தினும் முந்திச்செல்லுந் தேரைத்தூரத்தி வந்து நெடிய வில்லைவட்டாகாரமாகவளைத்து கணக்கற்றகூர்மையாகிய சிலீமுகங்களைத் தொடுத்துப்பகைவனுடைய இரதத்தையும், புரவிகளையுஞ், சாரதியையுஞ் சின்னபின்னபடக் கண்டித்தெறிந்தனன். உடனே மித்திரனானவன், வேறொரு இரதத்தையுஞ் சாரதியையுங் கொண்டு விரைந்துவந்து தன்னை யெதிர்த்துவருகின்ற சிலீமுகங்களை யெல்லாமாற்றி, தனது வில்லில பத்துபாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்து வீரபுரந்தரன் பின்னிட்டோடும்படி அவன மார்பை

அதை வீராந்தகன் கண்டு, மனம்நொந்து அதிக வேகமாகத் தனதுதேரை முடுக்கிக்கொண்டுவந்து ரவுத்திராகாரமாகக்கோபித்துப்பாரித்திராகின்ற தனதுவில்லைவளைத்து அண்டகடாகங்களுமதிரக்குணத்தொனிசெய்து இரண்டாயிரம் பாணங்களை ஏககாலத்திற் பிரயோகித்துப்பகைவனுடைய குடை முதலிய சின்னங்களையறுத்தெறிந்து, சத்தசாகரங்களும் பொங்கியாடும்படி சங்கநாதஞ்செய்தான். உடனே மித்திரனானவன் காளகூடத்தைப்போலச்சீறி நாராசங்களைக்கோர்த்துநூறுதிவ்வியபாணங்களை அவன் புயங்களுக்கிலக்காகவிடுத்து அவனது வச்சிரகவசத்தையும் தேரையும்பொடியாகச்செய்தனன். இச்சம்பவத்தை வீரகேசரிகண்டு மனம்பதைபதைக்கப்பொங்கிச்சத்துருவை இந்நிமிஷத்தில் அடர்த்து வாட்டுவேனெனச்சபதஞ்செய்துதேரைக்கொண்டுவந்து எதிரில நிறுத்தித்தங்கக்கட்டிகள் பிணைந்தவெற்றிமாலையை யணிந்திருக்கின்ற தனது வில்லை வளைத்து அனந்தமுறை அளவற்றகணைகளைச் சரமாரியாக மாறிமாறிப்பிரயோகித்துப்பகைவனுடைய இரதத்தையும்வில்லையும் முறிக்கத்தெறிந்தனன் உடனேமித்திரன் வேறொருஇரதத்தையும்வில்லையுமகொண்டு சர்ப்பத்தைப்போலச்சீறித் திசையானைகள் பயந்தோடக்காய்ச்சித்துப்படைகளிற் சிரேஷ்டமாகிய பிரமாஸ்திரத்தைப்பிரயோகித்தனன். அவ்வஸ்திரம்வெளிப்பட்ட மாத்திரத்தில் வீரகேசரி மறுபாணம் விட்டுத்தடுப்பதன் முன் அவனது புட்பமாலையணிந்தமார்பைப்பிளந்து மீண்டது இந்த அபாயத்தைவீரமயேந்திரன்கண்டு, கோபித்துத்தேரைக்குலாலன்சக்கரத்தைப்போலத் திருப்பிக்கோடானுகோடி பாணங்களைப்பிரயோகித்து அவனுடைய விருதுக்கொடியையும் வில்லையுமொடித்தெறிந்து வேறொருவில்லையெடுக்குமுன்னம் அவனுடைய தேரையும் முறியச் செய்தனன் உடனே மித்திரன் ஞெரேலென்று வேறொரு இரதத்திற்

பாய்ந்து மற்றொருவில்லில் முப்பதுபாணங்களைத் தூண்டிமுகத்திற்கிலக்காகப்பத்துபாணங்களும் மார்புக்கிலக்காகப்பத்துபாணங்களும் புயங்களுக்கிலக்காகப்பத்து பாணங்களும் பிரயோகித்து அவனுண்மையைப்போக்கினன் அக்கொடுமையை வீரமாமகேசுரர்கண்டுகண்களில் அழற்பொறிபறக்கக் கோபித்து அதிகவேகமாய்த்தனதுதேரைச்செலுத்தி மகத்துக்களிட்ட சாபத்தினுமதிகவிரைவாகஐந்துபாணங்களை ஏவிப் பகைவனுடைய அம்புபெய்தூணியையும் வில்லையும் அரைக்கணத்திற் பொடிபடுத்தி உடனே ஓர் சூலத்தையெடுத்து அவனது செஞ்சில்உருவிப்பாயும்படியாக விடுத்தனன் அப்போதமித்திரனெனவன், மனம்வாதிக்கச்சர்ப்பத்தைப்போலச் சீறித்தனதுநெஞ்சிற்கு இலக்காகவருஞ் சூலத்தைப்பிடித்து ஓர்கணப்போதில் அவன் மார்பு பிளக்கும்படியாகக் குத்தியெறிந்தனன்.

இவ்வித சம்பவங்களையெல்லாஞ்சுப்பிரமணியமூர்த்திக்கு அடியவராகிய வீரவாகு தேவர்கண்டு காலாந்தகனைப்போலக்கோபித்து, ஒவ்வொரு பாதகனால் நம்மவர்கள் பின்னப்படுவது வெகுநேர்த்தி வெகுநோததியெனப்பொங்கிச்சந்திரனை நோக்கிவரும் இராகுவைப் போலத்தமது தேரைவிரைவிற் செலுத்திவந்து மித்திரனெதிரில்நிறுத்தி, அடா அப்பனே! ஏதோசிலவெற்றியைப்பெற்றனமென்றுவீறியிருக்கின்றனை, அதைவிட்டு விடக்கடவை உனக்குமுனைப்போலவந்தேன் இமைப்போதில உனது பிராணனை வீரசொர்க்கத்திற் சேர்ப்பேன் பதனமாயிருக்கக்கடவையென்று எச்சரித்து மேருவையொத்துப்பாரித்திருக்குந்தமது வில்லையெடுத்து வளைத்து அண்டாண்டபுவனங்களெல்லாஞ்செவிடுபட்டுத்திடுக்கவுஞ்சூரியசந்திராளீதென்ன உற்பாதமென்று தியங்கியோடவும், தேவர்கள சீர்முற்றும்வெயர்த்துக்கிடுகிடென்று நடுங்கவுமாக நாணத்தொனிசெய்து சங்கோபசங்கமாக அளவற்ற திவ்விய பாணங்களைத்தூண்டிப் பகைவனுடையதேரையும் வில்லையும் மகுடத்தையும் பொடிபடுத்தி, அவன் நெற்றிக்கு இரண்டுபாணங்களும் மார்புக்கு மூன்றுபாணங்களும், புயங்கட்குநான்குபாணங்களுமாய்ப்பிரயோகித்து ஆர்ப்பரித்தனர் அப்போதமித்திரனெனவன் சிதறு மூர்ச்சித்தெழுந்து இவனை வில்வன்மையினாலும் மற்றபாணங்களின் முயற்சியினாலும் வெல்வதரிதென்று நிதானித்து வேறொரு இரதத்தையும் வில்லையுங்கொண்டு தானரிதிற்பெற்ற மோகனாஸ்திரத்தையெடுத்து மானதபூசையினாற்சகலவுபசாரங்களையுஞ்செய்துபூட்டிவீரவாகுதேவர்மார்புக்கிலக்காகக்காதளவுமிழுத்துப் பிரயோகித்தான் அப்பாணம் வெளிப்பட்டமாத்திரத்தில் அதி

கமஙிமைகளைக்காட்டிப் புகைந்தெரிந்து வந்து வேறுபடையெடுத்து
விடு தன் முன்னர் வீரவாகுதேவர்மீது பாய்ந்து மூர்ச்சிக்கும்படி
செய்து மீண்டது.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு சிந்துராச
னுடைய அமைச்சனாகிய மித்திரனென்பவன் மகா பராக்கிரமசாலிகளா
கிய இலக்கவீரர்களும், நவவீரர்களும் நிலைகுலைந்து சின்னபின்னப்
பட்டுப்பறக்கும்படி வாட்டித்தனக்கொருவர் நிகரில்லாதபடி வீரப
ராக்கிரமசாலியாய் இரணக்களமெங்குங் காலாந்தகனைப்போல அட்
டகாசஞ்செய்துவுலவுந்திறத்தைச்சுப்பிரமணியக்கடவுள்கண்டு இவர்
திறம் வெகுநேர்த்தியாயிருக்கின்றதெனக் கோபநகைசெய்து, பிரம
னும் விண்டுவுந்தேடிக்காணபரிய சுயஞ்சோதிப்படி வரத்தைப்பெற்ற
மயூரேசமூர்த்தியினுடைய திவ்வியசரணாரவிந்தங்களைப்பத்திவிநயத்
துடன் சிந்திக்க, வாழ்த்திக்கொடிய அம்மித்திரனிருக்குமிடத்திற்
றமது தேரை விரைவிற்றூரநிவந்து இந்திரனாகிய தேவர்கள் களி
க்கவுந்தருமதேவதைகளும் வேதாகமங்களும் வாழ்த்தவும், வீரலட்
சுமியும் பத்திரகாளியுங்கொண்டாடவுமாக இடையிடையிற் றங்கக்
கட்டுகளைப்பூண்டு மணிகள் கலிக்க ஐயலட்சுமி தாண்டவஞ்செய்தி
ருக்குந் தமது மேருவைபொத்த தனுவை இருகைகளுஞ்சேரவளை
த்துப்பிரசண்டமாருதமும் வடவாமுகாக்கினியுந்தியங்கி மயங்கவும்
அண்டங்களும் அவற்றிலடங்கிய புவனங்களுந் தத்தளித்துவாடவும்,
திசையானைகள் துதிக்கரங்களைத் தூக்கி பிறிட்டோடவுமாக டங்கா
ரத்தொனிகாட்டினர். அதைமகாசூரனாகிய மித்திரன்கண்டு, இவனை
எனையவர்களைப்போலச்சுலபமாக நினைக்கப்படாதென நிதானிக்கவ
னாய் எப்போதுமெடாமற் சேமத்தில வைத்திருந்த ஒப்பற்ற வில்லை
த்தாங்கிநாணேற்றி விண்ணவர் மண்ணவர் முதலாயினோர்நடுங்கி ஏங்
கும்படி குணத்தொனிசெய்து ஆர்ப்பரித்தனன்,

அப்போதுமுன்னர் சுப்பிரமணியக்கடவுள்செய்தடங்காரவோ
சையைக்கேட்டுச் சந்தோஷித்திருந்ததேவர்கள், கொடியதுன்மார்க்
கனாகிய மித்திரன்செய்த குணத்தொனியைகேட்டமாத்திரத்தில்யா
வரும்வாடித்திகைத்தவர்களாய், இன்பதுன்பங்களைஏககாலத்திற்கண்
டன மென்று பேசிக்கொண்டிருந்தனர், பின்னர்சுப்பிரமணியக்கடவு
ள் தமதுவில்லிற்பத்துபாணங்களைத்தொடுத்து மித்திரன்விடுக்கும்பா
ணங்களையும், இரதம்-கவசம்-வில-கொடி-குடை-தூணிமுதலானவை
களையும்பொடிபடுத்திவேறேமூன்றுபாணங்களை அவன்நெற்றிக்கிலக்

காப்பிரயோகித்தனர். அக்காலத்தில் மித்திரனென்பவன் பஞ்சேந்திரியங்கள்பேதிக்க மதிமயங்கி பாண்டவனைப்போலத்தேரினின்று வீழ்ந்துநெடுநேரம் மூர்ச்சித்துக்கிடந்து, மீட்டுந்தெளிந்தெழுந்து, அதிக கோபத்தோடு வேறொரு இரதத்திலேறி, மற்றொருவில்லில் அளவற்ற குரூரமாகிய பாணங்களைக்கோடை வருஷத்தைப்போலத் தூண்டிப்பிரயோகித்தான். அதைக்கடம்பமாலையணிந்த வேலாயுதமூர்த்திகண்டுகோடானகோடி குரூரமாகிய பாணங்களை ஏகமுகத்திற்றூண்டி அப்பாதகன்விட்டபாணங்களையெல்லாங் கண்டித்து அவனேறிநடாத்துகின்ற தேரோடுசேமந்தோ முதலானவைகளையுமழித்து துவம்சஞ்செய்தனர் அதற்குமேல் மித்திரனென்பவன் கருடனைப்போல ஆகாயத்திற்பறந்து இந்திராஸ்திரம், அக்கினியாஸ்திரம், எமாஸ்திரம், நிருதியாஸ்திரம், வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம், குபேராஸ்திரம், பாசுபதாஸ்திரம், முதலான தெய்வப்படைகளை ஒவ்வொன்றாகத்தூண்டி யாப்பரிந்தனன். பின்னர் அவைகளெல்லாம் மாலைகளாக என்னையாளவல்ல குமாரதேவருடைய திருவடிகளில் வீழ்ந்து சரண்புகுந்தன.

இவ்வாறு தான் விடுந்தெய்வப்படைகளெல்லாம் அபலமாய்ப்போவதை மித்திரன் கண்டு, இவரை இக்ஷணத்தில யமலோகத்திற்கனுப்புகின்றேனென்று ஆங்கிரமித்து தனதுவாளை யுருவிக்கொண்டோடிவந்து சேர்ப்பாகன்மீதுபாய்ந்துவெட்டநேர்ந்தனன் அப்போது சுப்பிரமணியக்கடவுள் புன்னகைகொண்டு, தமதுபக்கத்துவமுள்ள வச்சிராயுதத்தையெடுத்துக் கரகரவென்றுச் சுழற்றி அவன் மார்பிற்றாக்கினார். உடனே மித்திரனென்பவன் நோடையியுபோல இறைந்துகொண்டு நிலத்தில் வீழ்ந்துபிராணன் நீங்கி வீரசொர்க்கத்தைசேர்ந்தனன்

அதற்குமேல் கந்தாசுரனென்பவன், மிக்க ஆங்காரத்தோடு சுப்பிரமணியக்கடவுளுக்கெதிரேவந்து அவரதுசுந்தரவடிவையும், பராக்கிரமத்தையுமகண்டு இவனை அத்திரசத்திரங்களாற் றொலைத்துவெற்றி பெறுவதுமிகவுமரிதென்று நினைத்தவனாய், உடனே ஆகாயத்திற்பறந்து அங்கிருந்த வண்ணமே அளவற்ற மாயைகளை நடாத்திவந்தனன் அவையனைத்தையும் எமதையனாகிய முருகக்கடவுள் பயன்படாதபடி விலக்கித்தமது தேரையும் அவ்வான வீதியிற்செலுத்தி அவன்முடியிற் கைகொண்டமட்டுமறைந்தனர். உடனே அக்கந்தாசுரன் மூர்ச்சையாகிப்பூமியில் வீழ்ந்திறந்தனன்.

இப்பால், அதைச்சேனன் குரோதனென்னும் இரண்டசுரவீரர்கள்கண்டு, நாலாயிர வெள்ளஞ்சேனைகளோடு பூமி வெளியுமறையாகவந்து கிரவுஞ்சகிரியைப்பிளந்த வேலாயுதமூர்த்தியை வளைந்து நெருங்கியிருள மூடும்படியாக அளவற்றபாணங்களை மழைபோலச் சொரிந்து ஆர்ப்பரித்தார்கள். அதனால் பூதசேனைகளும், இலக்கர்களும், நவவீரர்களும், மனம்புழுங்கிவருந்தினார்கள். அதைப்பிரமனைச் சிறையிட்ட சண்முகப்பெருமான் கண்டு கோபங்கொண்டு உடனே தமது வில்லில் தீயினும் வெம்மைபெற்றிருக்கின்ற அளவற்ற பாணங்களைத்தொடுத்து இமைப்போதிற் பகைவர்விடுத்த பாணங்களையெல்லாம்பொடிபடுத்தி நிலத்தில் வீழ்த்தினர். மீட்டும் வேறுபத்து பாணங்களையெடுத்து ஒருநொடியிற்பிரயோகித்தனர். அத்திவ்விய பாணங்கள் வெளிப்பட்டமாத்திரத்தில் சிடசிடக்குந்தொனிகளுடன் ஆர்ப்பரித்து அன்றுபெருகக்கையிலேறுத்து நிருகிக்கெனறெரிந்து ஒவ்வொன்று பத்துநூறு ஆயிரம் பதினாயிரம் நூறாயிரம் கோடியென்னும் கணக்கின்மேலாகப்பெருகி, பரிசைவரிசையாக நாற்றிசைகளிலும்பரந்து, ஓர் கணப்போதில் அந்த நாலாயிரவெள்ளஞ்சேனைகளையும் மாய்த்தன. இச்சம்பவத்தைச்சேனனுங் குரோதனுங்கண்டவுடனே கனலும் ஆலகாலமும்போன்றுபடம்விரித்தெழுந்ததைப்போல ரவுத்திராகாரமாகக்கோபித்து நாலாயிரவெள்ளஞ்சேனைகளுஞ்சின்னபின்னப்படவாட்டிய சத்துருவை இவ்விடத்திற் கண்டதுண்டமாகக்கொல்லுவோமென்று அதிரமிக்கவெழுந்து தங்கள்கரங்களிற் பற்றியிருக்கின்ற விற்களை வளைத்துப்பலவிதபாண கோடிகளையும், பிண்டிபாலம்-முசலம்-தோமரம்-கப்பணம்-முசுண்டி-எறிவல்-சக்கரம்-தண்டாயுதம் முதலிய படைகளையும், பர்வதங்கள்மீது மேகங்கள் சொரிந்து வருஷிப்பதுபோல அனந்தகோடிகளாகச்சொரிந்து சிங்கநாதஞ்செய்தார்கள். இவ்வாறு அப்பாதகர் விட்டபடைகளுக்கெல்லாம் பிரதியாக வேறு வேறு பாணங்களையெமது குமாரதேவர் விடுத்து அரைக்கணப்போதில் அத்தனை பாணங்களையும்பொடிபடுத்தி உடனே தமது பாசத்தையெடுத்து அதிவேகமாகப்பிரயோகித்தனர். அம்மாத்திரத்தில் அப்பாசமானது வானத்தெழுந்து பலகோடி திவ்வியசரங்களைப்படைத்து அவ்விருவரைத் [illegible] களதிர ஆர்ப்பரித்துவந்து அப்பாதகர்களுயிரைப்பானஞ்செய்து மீண்டது. பூதவீரர்களும் இலக்கவீரர்களும் அளவற்ற மகிழ்ச்சியையடைந்து சண்முகக்கடவுளைத் துதிசெய்தார்கள். நவவீரர் [illegible] ருக்களுடைய மனமெல்லாங்கலங்கும்படி வெற்றிச்சங்கம் [illegible] கள் சுப்பிரமணியக்கடவுள் [illegible]



7 பாலசுந்திரர்.



8 கஜானனர்.

அவனேறிவந்த வீரர்களையுங்கொன்றும் கோபமடங்காதவராய்இன்னுமெதிர்ப்பவர் உண்டோவென்று ரணகளத்திற்றனே எதிர்பார்த்திருந்தனர்.

இவ்விவவாறாக, மற்றோரமைச்சனாகிய கவுந்துவனென்பவனை எதிர்த்து நின்ற வீரபத்திரக்கடவுளானவர் ஒரு கணப்போதில் அவனுடைய சேனைகளையெல்லாங்கொன்று,எங்கும் பிணமலையாகக்குவித்து,உதிரவெள்ளமோடும் படியாகச்செய்து ஆர்ப்பரித்தனர். அதைக்கவுந்துவன் கண்டுபிரசண்ட மாருதக்கினியானது சீறியெழுந்து வருவதுபோல, தனது தேரை விரைவிற்செலுத்திவந்து வில்லைவட்டாகாரமாகவளைத்துப்பூதசேனைகள்மீது அநேகம் பாணங்களைக்கோடைமழைபோலப் பிரயோகித்தான். அப்போது வீரபத்திரக்கடவுள் தமது வில்லில் அநேக பாணங்களைத்தொடுத்து அவன்விட்ட பாணங்களையெல்லாங்கண்டித்து மற்றொருபாணத்தாலவனுடைய தேரைமுறித்து நிலத்திலிட்டு, நெற்றியிடத்திலே அவனை மற்றொருகூரிலேற அதையுமவனொருபாணத்தைக்கண்டித்து சின்னபின்னப்பட்டுருளச்செய்தனர். பின்னர் கவுந்துவன் அதிக வீராவேசத்துடன்விழிகளிலனற்பொறி பறக்கும்படியாகச்சீறி, ஒருதண்டாயுதத்தைக்கரகர வென்றுசுழற்றிவீசி,வேறொரு இரதத்திற்பாய்ந்து ஆர்ப்பரித்தனன். அதை அண்டாகருக்கினையுடைய வீரபத்திரமூர்த்திகண்டு, மகமேருகிரியைநிகர்த்ததாந்தமது வில்லில் ஆயிரங்கணைகளைத்தொடுத்து அவன்விட்ட தண்டாயுதத்தைப் பொடிபடுத்திப்பின் நாகபாசங்களைப்பிரயோகித்து அவனேறிநின்ற இந்திரசமமாகிய தேர்களையும் அச்சுவேறு மச்சுவேறு கொடிஞ்சிவேறு குதிரைகள்வேறாகப்போகும்படிவெட்டியெறிந்தனர். உடனே அப்பாதகன் வடவானலத்தைப்போலச்சீறி கொவ்வைக்கனியையும் அரக்கையும்போலச்சிவந்த விழிகளிலிருந்து தீப்பொறிகளைக்கொட்டி, மீசைதுடிக்கக்கோபித்துச் சமரேலென்று உடைவாளையுருவி இடசாரிவலசாரியாகத்திரிந்துவீரபத்திரக்கடவுளுடைய தேரின்மீதுபாய்ந்தனன், அவ்வளவையுமையன்கண்டு இனி இவனைவைக்கலாகாதென்றெண்ணி விரைவிலெழுந்தரையிற்சொருகியிருந்த சுரிகையை உறையிலிருந்துருவி அக்கவுந்துவனுடைய கரத்தைவாளுடனறுவிழும்படிக்குக்கண்டித்து, அவன்கவுளிலனற்பொறிபறக்கும்படி புடைத்தனர்,உடனே அப்பாதகன் சோர்ந்து மலைபோல மண்ணில் வீழ்ந்துமாய்ந்தனன்.

இப்பால் அதையவனுக்குத் துணையாகவந்த தமனென்பவன் கண்டு, அக்கினிபோல மனம்வேக உதட்டைக்கடித்துப்பாலிக்குமுன்

B.—22

றுதிரியும். பூதகணங்களும்படைவீரராகக் கொண்டவன் நம்மைப்பரா
பவிக்கவுமெளிதாயிற்றோ நல்லகாரியம் இப்போதே இவன்கொழு
ப்பையடக்கி வாட்டுவேனெனக்கோபித்து, மதயானையையொத்தவலி
பெற்றவர்களாயிருக்கின்ற எழுவாயிரவெள்ளஞ் சேனைகளைக்கூட்டிக்
கொண்டு இரணபேரி ஜயபேரிமுதலிய பொற்பறைகளை அண்டங்க
ளதிரமுழக்கி,வீரபத்திரக்கடவுளை நாற்புறத்துமவர்ந்துவளைத்துக்கொ
ண்டனன். அப்போதுவீரபத்திரக்கடவுள்சர்வசங்காரருத்திரனை
ப்போல ஆர்ப்பரித்து மானக்கூட்டத்திற்புலிபுகுந்ததுபோலவும்,எலி
க்கூட்டத்திற்சர்ப்பம்புகுந்ததுபோலவும், கொக்குக்கூட்டத்தில்இரா
சாளிபுகுந்ததுபோலவும், அசுரனுடைய சேனாசமுத்திரத்
திற்புகுந்து தேர்களையெடுத்துத் தேர்களாற்றாக்கியும்யானைகளை
யெடுத்து யானைகளாற்றாக்கியும் குதிரைகளையெடுத்துக் குதிரைகள்
மீதெறிந்தும், ஒவ்வொருவராய், ஆயிரம்பதினாயிரமாகராக்ஷதர்க
ளைச்சேர்த்தெடுத்துத்தரையிலடித்துப்புடைத்தும், சிலரைத்திசை
திசைகளிலெறிந்தும், சிலரைப்படைக்கலங்களினாற்கீறியும்,சிலரைவானத்தே
ற்றியும், சிலரைச்சக்கராயுதத்தால்மோதியும், சிலரைஒருகாலைமிதித்து
மற்றக்காலைப்பற்றிப்பட்டையுரிப்பதுபோலக்கிழித்தெறிந்தும்
சிலரைக்கழுத்தைமுறித்துமண்டையோடுகளைக்காலகளினுஞ்சோத்துககுயவக்
மண்ணைமிதிப்பதுபோலத்துவைத்தும், மின்னலைப்போலப்பிரகாசிக்
கின்ற பட்டாக்கத்திகளையுருவியொவ்வொருவராகவில் அளவற்றரங்
களைக்கண்டித்தும், சிலரைக்கரிகைகளினாற்கீறிக்குடல்கள் வெளிப்
பட்டுறையும்படியடித்தும், சிலரைவாளாயுதமாகக்கொண்டுசின்னபின்னமாக
வெட்டியும் ரணபத்திரகாளிக்குக் களிப்படியாகக் கரியத்தகத்
தைப்படைத்திருக்கின்ற அசுரசேனைகளையெல்லாம வாட்டிப்பம்பம்
மென்று வெற்றிச்சங்கைமுழக்கினார்.

உடனேயப்போதுசும்பன் அதிவீராவேசத்துடன்தனதுதேரை
விரைவிற்செலுத்திவந்துகாலமிருத்தியுபோலத் தனுவை இருகுதைகளுமொ
ன்றுபடவளைத்து அதிலக்கணக்கற்றபாணங்களை அதிகவேகமாகப்
பூட்டிப்பிரயோகித்தனன். அவையனைத்தையும் ஓர் நொடிப்போதில்
எமதுவீரபத்திரக்கடவுள்தமதுகண்டாயுதத்தினால்விலக்கிஅவனைத்
தேரோடுமெடுத்து ஆகாயத்திலெறிந்து அவனுடையசேமத்தேர்களை
யும உடைத்துத்துகள்படுத்தினர். பின்னரப்பாதகன் ஆகாயத்தினின்
றுபாதலலோகத்தில் வீழ்ந்துமூர்ச்சையாகிமீட்டுந்தெளிந்தெழுந்து
உடனே ஓர்வாளையுருவிக் கொண்டோடிவந்து நீபராக்கிரமசாலியே
யானால் என்னோடு வாட்போர்செய்யக்கடவையென்று அட்டகாசஞ்

செய்தான். அப்போது வீரபத்திரக்கடவுள், இவன்றிறத்தையறிவோமென்று தமதிடையிற்சொருகியிருந்தவாளையுருவிக் கரத்திலெடுத்துச் சூறவளியைப்போலவும், திருப்பாற்கடலைக் கடைந்தமந்திரகிரிக்கொப்பாகவுஞ் சுழன்று சுழன்று தமது பாதத்திலணிந்த வீரகண்டாமணிகளிர்களிரென்று சத்திக்கும்படியாகவிளையாடி அவனுடைய தோள்களையுந் தாள்களையுங் கண்டதுண்டமாகவெட்டி, அவன்சென்னியானது கடலிற்போய்விழும்படியாகத் தெறித்து இனியும்பகைவருண்டோவென்று நாற்றிசைகளினுந் தமது விழிகளைப்பறப்பி நகைத்திருந்தனர்.

இப்பால் நந்திதேவரோடு எதிர்த்துநின்ற வீராசனென்பவன்றனது நால்வகைச்சேனைகளோடும் பாரிடங்களை வளைத்துப் பூதசேனைகள் மீது சோனைமாரியைப்போலப் பாணங்களைப் பிரயோகித்து, எழு மழு-கப்பணம்-பிண்டி-பாலம்-முசலம்-சக்கரம் முதலாகிய படைகளை விடுத்து அகோரமாகிய யுத்தஞ்செய்தனன். அதை நந்திதேவர் கண்டு, தமது அரையிலிருந்த உறையிற்செருகியிருந்த வாளாயுதத்தையுருவிக் கரத்திற் பற்றிக்கொண்டு கோபாவேசத்தோடு பொருதிருக்கின்ற அவுணவீரர்களைச் சங்கரிக்கத்தொடங்கி ஒவ்வொருவீரனின் அளவற்ற சிரங்களைத் துணித்தும், கைகளுங் கால்களும் வெட்டுண்டிடையவும், அமோகமாகிய தோள்களைச் சரியவும், அந்தக்கால்கள் மார்புகள் வயிறுகள் முதலிய உறுப்புகளெல்லாந் துண்டுபட்டுத் தெறித்துஞ் சிதறியுஞ் சின்னபின்னமாகிப்போகவுஞ் செய்து எதிரியாகவந்த வீராசன்கரத்தைத் தனது வில்லோடுங்கூட அறுத்தனர். உடனே அவன் மற்றொருகரத்தில் வாளேந்திவந்து நந்திதேவர்மேல் பாய்ந்து அட்டகாசஞ்செய்தனன், அவனை அப்போது நந்திதேவர் தமது வாளாயுதத்தால் இரண்டு துண்டமாகவெட்டியெறிந்தனர். இம்முறையே புட்பதந்தன், தன்னையெதிர்த்துவந்த துலவசனோடு அளவற்ற யுத்தங்களை விடுத்து அவனைமாய்த்தனன். பூதராசன் ஆகாயனென்பவனை யெதிர்த்துக்கொன்றனன். விடன் துர்ந்தனென்பவனோடு போராடி அவனைவெட்டினன். சபலனசார்த்தூலனென்பவனை வதைத்து நாசஞ்செய்தனன். மற்ற அவுணவீரர்களையெல்லாம் பூதராசன் சூழ்ந்துமடித்தனன்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு சுப்பிரமணியக்கடவுள் முதலான வென்மரும், தம்மையெதிர்த்துவந்த தமித்திரன் முதலாகிய அவுணவீரர்களைமாய்த்துச்செயவுச்சாகத்துடனிரும்

க்கமடைந்து அரம்பையர்களுடைய தனங்களாகிய யானைகளோடுங் கண்களாகிய கணைகளோடும் பொருதுசந்தோஷித்தார்கள் சிலவீரர்கள் ஒருவரையொருவர், குந்தத்தினால் மார்பு பிளக்கும்படி குத்திப் பின்னிருவரும் வீரசொர்க்கத்தை யடைந்துமேலான தெய்வமங்கையரோடு குலாவினார்கள், சிலவீரர்கள் பகைவரோடு பொருத இளைப்பினால்சோர்ந்து பிணங்களையே அணைகளாகக்கோலிச்சார்ந்துகொண்டு மற்றையர்செய்யும் போரைப்பார்த்துக்கொண்டிருந்தார்கள். சிலவீரர்கள் தங்கள் காதலியரோடு கலவிசெய்யுங்காலத்தில அக்காதலியர் கையடிக்குங்காலுதைக்கும வாய்கடிக்கும் எவ்வாறு மகிழ்வார்களோ அவ்வாறே பகைவர் விடுகின்ற பாணங்கள் தங்கள்மேனியிற் பாயும் பொழுதுஞ்சிறிதேனும் நோதலையறியாதிருந்தார்கள் இவ்வாறு சமர்க்களத்தில் இருவகைச்சேனைகளும்வீரசொர்க்கத்தினையேமுக்கியமாகக்கருதிப் போராடிக்கொண்டிருக்கையில என்னையாட்கொள்ளவல்ல மயூரேசமூர்த்தியினுடைய சேனாதிபதிகளுங்கைகலந்துஒருவரையொருவர் வெல்லவேண்டுமெனனுஞ் சபதத்தோடுஅகோரமாகிய போரைவிளைத்து இரணியகருப்பன் காலாசுரனை மாய்த்தனன். சோமன் பிரசண்டாசுரனை யழித்தனன். இரக்தலோசனன் பிரபலாசுரனைக்கொன்றனன். இலம்பகர்ணன் சண்டாசுரனுடையவுயிரைப் போக்கினன். சங்கன்சங்காசுரனுடைய வாழ்நாளையழித்தனன்பிருங்கிபௌமாசுரனுடைய ஆவியையுண்டனன். தாவானலன்முண்டாசுரனை வெட்டியெறிந்தனன், பஞ்சானன கண்டாசுரனுடைய சிரத்தையறுத்தனன்.

இவ்வாறுமயூரேசருடையசேனைதலைவர்கள் சிந்துராஜனுடைய சதுரங்கசேனைகளிற் புகுந்துசிலர்வானத்தை யளாவித் திசைகளிற் கிளைகளைப்பரப்பித் தழைத்தோங்கியிருக்கின்ற மராமரமுதலியபருத்தவிருட்சங்களைவேருடன் பிடுங்கிச் சுழற்றிமோதியும், சிலர்மேருகுச்சமமாகப் பாரித்திருக்கின்ற பர்வதங்களைப்பெயர்த்துக் கடாவியும், சிலர்தீயையிறைக்குங் கழு-முஸல-சக்கரம்-பிண்டி-பாலம்-வேல் தண்டம்முதலிய ஆயுதங்களைச்செலுத்தியும், சிலர்யானையணிகளிடத்திற்பாய்ந்து அளவற்றதுதிக்கரங்களை யொன்றாகச்சேர்த்துக் கிறுகிறெனச் சுழற்றிகுதிரைகள்மீதிற்சாடியும், சிலர்சொர்ணமயமாய்இரத்தினகாந்திகளைவீசிப் பாரித்திருக்கின்ற இரதபந்திகளிற்பாய்ந்து, ஆயிரமாயிரமாக தமது விசாலமாகிய கரங்களினால்வாரி அளவற்றமதயானைகள் சின்னபின்னப்பட்டுருளமோதியும் சிலர்கோபாவேசங்களுடன் குதிரைபந்திகளிற்புகுந்து அதிகவேகத்தோடும் பாயவல்ல

பதினாயிரங் குதிரைகளைச் சேர்த்தெடுத்து ஆயிரங்கோடி சத்தவீரர்களாகிய அவுணர்கள் பூமியிலறைபட்டிறக்கவீசியும், சிலசில அவுணவீரர்களைக் குத்திக்கொன்றும், மண்டைகளையுடைத்தும், கால்களைமுறித்தும், கரங்களையொடித்தும், மார்புகளைப்பிளந்துருக்கத் தாக்கியும் வாய்பிளக்கவறைந்தும், வாளாயுதங்கொண்டு வெட்டியும், சூலாயுதங்களினாற்குத்தியும், பிண்டிபாலங்களினால் மோதியும், தண்டங்களினால் சாடியும், சக்கரங்களைச்செலுத்திச் சங்கரித்தும் வெகுதமாகப் பூதவீரர்கள் வீரிஅவுணவீரர்களாகிய சதுரங்கசேனைகளை நாசப்படுத்திவருவதையும் முன்னாதனது சேனாபதிகளாயாண்டையும் அவுணர்பெருமானாகியசிந்துராஜன் கண்டபாத்திரத்தில் விஷப்பற்களையுடையசர்ப்பத்தைப்போலச்சிறி நல்லகரியபல்லைக்காட்டியென்றுநகைசெய்து அபலராகிய இப்பூதங்கள் முருமுழக்கமமைப்படிக்கும் வாட்டுவாரோ இக்கிமிடத்தில் வாகாவிரூபமையடக்கிக்கொள்வோமென்றுகாலாந்தகனைப்போல் கோதியெழுந்து தாவியிமைக்கணடலாகாரமாகவளர்ந்து சகலருந்திடுக்கிட அகாரங்களஞ்சுமொருபாணிசெய்து ஒருபுறம்விஷத்தொலைவயப்பட்டெழுந்த பாணவருணங்களைப்பொழிந்தும் ஒருபுறத்திலகணிச்சி சக்கரம்-வேல்-தண்டம்-முசலமசப்பணம்-பிண்டி-பாலம்-முசலபரசு பட்டாகியும், ஒருபுறத்தில பிரமாஸ்திரம்-வருணாஸ்திரம்-தம்போலாஸ்திரம் - அக்கினியாஸ்திரம் முதலியதெய்வப்படைகளைப்பிரயோகித்தும் ஒருபுறத்திலதங்கள் வீசுகின்ற விருட்சங்களுமபாறைகளும் பொடிப்பொடியாகப்பலணைகளைத்துண்டியும், இவ்வாறு காலவல்லமையைப்போலத்தாறுதிசைகளினுஞ் சுழன்று சுழன்று அமோகமாகிய அஸ்திரசஸ்திரங்களுமனைவலையை வீசியதைப்போலப்பலதிசையிலுஞ்சுற்றிக்கொண்டு பூதவீரர்களுடையபாதங்களைத்தனடித்தும், பருத்தியிருக்கின்றதோள்களைச்சரித்தும், ஆசானுபாகுவாக நீண்டிருக்குங் கரங்களைத்தறித்தும், சிவந்தமயிரையுடைய சிரங்களைவெட்டியெறிந்தும், விசாலமாகியமார்பைப்பிளந்தும், துமசஞ்செய்தன. அக்கணம்பூதவீரர்கள் அலலோல கல்லோலப்பட்டு மண்டைதிறந்தும்; மூளைகள் சிதறியும்விழிகண்தெறித்தும் வஞ்சகம்பேசும்வாய்களைப்பிளந்தும், பற்களுதிர்ந்தும அந்திவானத்தையொத்த தலைகளபறந்தும், வலியகழுத்துகளொடிந்தும், புயமலைகளசரிந்தும, கரங்கள் முறிந்தும், மார்புநெக்கு விட்டும்; வயிறுகிழிந்தும், குடல்களறுந்தும், தொடைகள்தகர்ந்தும், கால்கள் தறிந்தும், சரீரமெங்கும்பத்தல்பத்தலாய்வெடித்தும், உறுப்புக

னைத்துஞ், சக்கைசக்கையாக வெட்டுண்டும், சதைந்தும், சிதைந்தும், நிலத்திற்புதைந்தும், அலைந்தும், உலைந்தும், களைத்தும், இளைத்தும், துடித்தும், பதைத்தும், சோர்ந்தும், மூர்ச்சித்தும், துன்பப்பட்டும், மாண்டும், மயங்கியும் இவ்விதமாகப் படாதபாடுகள் பட்டு மடிந்தனர்.

அதை சிவகாருண்யம் பதிமான்மிய முதலிய நல்லொழுக்கங்களைவாய்ந்தகணநாதர்களுக்குள் பஞ்சானனனைக்கண்டு, பாபமே உருக்கொண்டிருப்பதைப்போலக் கரியமிகங்களைப் படைத்த அவுணர்கட்குத் தலைவனாகிக்கொலைபாதகங்களைக் குடிகொண்டிருக்குமனத்தினையுடையசிந்துராஜனெதிர்ப்புறமாத்தேரை அதிகவேகமாய்ச் செலுத்திக்கொண்டுவந்து வடவாமுகாக்கினியைப்போலச் சீறிப்பார்த்திராநின்ற தனதுவில்லைவளைத்து அண்டங்களதிர நாணத்தொனிசெய்து சத்தசாகரங்களும் ஓங்கி வாடும்படிக்கு ஆர்ப்பரித்துக் குரூரமாகிய ஈராயிரம் பாணங்களைக் கோடைமழைபோலப் பொழிந்துபூதசேனைகள்மீதுபகைவனவிட்ட பாணங்களையெல்லாம் பொடிபடுத்திமீட்டுந் தீயையொத்த ஆயிரம்பாணங்களை அவனசரீரமெங்கும்போர்க்கும்படியாகப்பிரயோகித்தனன் உடனே சிந்துராஜனவனதனதுவில்லில் ஆயிரம்பாணங்களைத்தூண்டியெதிர்வரும்பாணங்களைச் சின்னபின்னப்படுத்தி, மீட்டுமைந்துபாணங்களால் கணநாதனுடைய தேரைப் பொடிபடுத்தினன் அப்பொழுது பஞ்சானனன்வேறொருதேரிற்பாய்ந்து நூறுபாணங்களால் சிந்துராசனுடையசாரதியைவெட்டியெறியவுடனே அவன்வேறொரு சாரதியைத் தனது தேரிலிருத்தி ஒருவச்சிரவாளியையெடுத்துநெற்றிக்கிலக்காகப் பிரயோகித்தனன், அதுவெளிப்பட்டுக் குறிதப்பாமல்வந்துபாய்ந்தவுடன் பஞ்சானனன் உதிரப்பிரவாகமோடும்படியாக விழுந்து மடிந்தனன்.

இச்சம்பவத்தைத் தாரவாலன் கண்டு, காலாந்தகனைப்போலக்கோபித்துத் தனதுவில்லில் நூறுகணைகளை ஒரே தொகையாகத் தொடுத்துப் பிரயோகித்துச் சிந்துராசனுடைய வில்லைப் பொடிபடுத்தினன். உடனே அவன்வேறொருவில்லைவளைத்து அளவற்ற கணைகளைத்தூண்டித் தாரவாலனுடைய தேரை முறித்தெறிந்து அவன்வேறொரு இரதத்திற்பாய்வதன்முன் தன்னோடுற்பவித்த சூலாயுதத்தை மார்புக்கிலக்காகப்பிரயோகித்தனன். அவ்விலக்கின்படி அச்சூலாயுதமானது அதிவேகமாய்வந்து மார்பிற் பாய்ந்தவுடன் தாரவாலன் பதைபதைத்துச்சோர்ந்து பூமியில்வீழ்ந்தனன். அதைப்பிருங்கிகண்டு விழிகளில் அனற்பொரிபறக்கக் கோபித்து ஓர்நொடிப்போதில் ஆயிரங்க

ணைகளைத் தூண்டி சிந்துராசனுடைய கிரீடத்தையும் வில்லையுந் தேரை யுங்கீழே வீழ்த்தி அவுணர்களெல்லாங் கலங்கும்படியாகச் சங்கநாதஞ் செய்தனன். உடனே சிந்துராசன் நாணமுற்று மனதில் மானம்வாதிக்கவெழுந்து வேறேயொரு தேரையும் வில்லையுங்கொண்டு எதிர்வந்து பிருங்கியினுடைய வில்லை ஒடித்தெறிந்து அவன் மார்புக்கிலக்காகப் பத்துக் கணைகளைப் பிரயோகித்தான். அக்கணைகள் வந்துபாய்தலும் பிருங்கி மூர்ச்சையாகி மீட்டுந் தெளிந்தெழுந்து மிகவுங் கூர்மை யுள்ள நூறு வயிரக்கணைகளை அவன் மார்புக்கு நேராக விடுத்தான். அவைகளவன் சரீரத்தில் பட்டமாத்திரத்தில் முனைகளொடிந்து துகள்பட்டுப் பறந்துபோக மீட்டும் ஓர் தண்டாயுதத்தை யெடுத்

கரவேகமாகச் சுழற்றி வீசினன்.

அதற்குச் சிந்துராசன் சிறிதுமுறுவலித்துத் தனது கையிலிருந்த தண்டாயுதத்தினால் பிருங்கிவிடுத்த தண்டாயுதத்தினையும் அவன் வலியையும் மாய்த்து ஆர்ப்பரித்தனன், அப்போது சங்கனென்பவன் ஆலகாலவிடம்போலக் கொதித்தெழுந்து தனது வில்லில் அளவற்ற கணைகளைப் பிரயோகித்துச் சிந்துராசனுடைய வில்லையுங் கவசத்தையுங் கொடியையும் பொடிசெய்தனன். உடனே அவுணராசன் வேறொருவில்லையெடுத்துவளைத்து எட்டுபாணங்களால் சங்கனுடைய தேரை ஒடித்தெறிந்தனன் பின்னர் சங்கன் வேறொரு இரதத்திற்பாய்ந்து தனதுவில்லில் பத்துக்கணைகளைத் தூண்டிப் பகைவனுடைய ரவிகையைக் கீழேவீழ்த்தி. மீட்டும் ஐம்பதுகணைகளைப்போக்கி அவனுடைய இரதத்தையும் பொடிப்படுத்தினன். சிந்துராசன் உடனே வேறொருதேரிலேறி ஓர் மழுவாயுதத்தை அதிவேகமாகப் பிரயோகித்தனன். அதைச் சங்கன் தனதுகதாயுதத்தினாற் பொடிபடுத்தி மற்றொரு வயிரவாளியகல் அவ்வவுணராசன் கட்டியநெற்றிப்பட்டத்தையறுத்தெறிந்தனன் அதனால் சிந்துராசன் நாணங்கொண்டு, அள்ளிப்பிசைவான்போலவார்ப்பரித்துஓர் வேலாயுதத்தை அவன்தோளுக்குக் குறிபார்த்துப் பிரயோகித்தான். அதுவெளிப்பட்டுத் தனதுதோளிற்பாய்ந்தமாத்திரத்தில் சங்கனவன் தனது உடைவாளினால் சிந்துராசனைக் கீழேவிழத்தள்ளி மிகுந்த கோபத்தோடுங் கோபித்து நிலத்தில் வீழ்ந்தனன். உடனே அவுணராசன் உயங்கேதமென் றெழுந்து தனதுதேரிற்பாய அதை இலம்பகன்னன் கண்டு இவன்வலியைச் சற்றுநேரத்திற்கலக்கிவாட்டுவேனென்று சப்தக்கூறிச் சர்ப்பங்களைப்போல் விஷச்சுவாலையைவீச வல்லகடோரமாகிய பாணங்களை அமோகமாகப் பிரயோகித்தான் அவையனைத்தையும் சிந்துராசன் ஓர்நொடிபோதிற் றுகள்படுத்தித்தனது

வில்லில் ஐந்து பாணங்களைத் தொடுத்து இலம்பகன்னனுடைய தேரைச் செலுத்தும் சாரதியின் சரீரத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து மாய்த்தனன். பின்னர் கணநாதன் வேறொரு சாரதியை நிறுத்தி ஐந்து பாணங்களால் சிந்துராசனுடைய இரதசாரதியைக் கொல்ல, உடனே சிந்துராசன் ரௌத்திராகாரமாகக் கோபித்து வேறொரு சாரதியாற் றன்றேரை நடாத்தி நூறு தீட்சண்ணியமுள்ள பாணங்களால் கணநாதனுடைய வில்லையும் இரதத்தையும் ஒடித்தெறிந்தனன். அதற்கு இலம்பகன்னன் சிறிதும் இளையாது வேறொரு இரதத்தையும் வில்லையுங்கொண்டு அஷ்டதிசைகளும் நடுநடுங்கும்படியாகத் தனது சக்கராயுதத்தை யெடுத்துச் சகரநரவென்று கூறி வீசினன். அது வெளிப்பட்டமாத்திரத்தில் அவுணாசலமெல்லாம் அல்லோலகல்லோலப்பட்டுத் திகைக்கும்படியாக வாடிச் சிந்துராஜனுடைய கவசத்தை யறுத்தெறிய, அதனால் மிகுந்த கோபங்கொண்டு கணநாதனேறிநடாத்துந்தேரை முறித்தனன். உடனே இலம்பகன்னன் வேறொரு இரதத்திற்பாய, அதையும் அவ்வாறே முறித்து அவனெடுத்த வில்லையுங் கண்டித்தெறிந்தனன். உடனே இலம்பகன்னனுக்கு அதிக கோபம் பிரவேசித்துக் காளகூட விஷத்தைப்போல வெரித்தோடித் தனது வாளைச் சிந்துராசனுடைய மார்பில் வீசினான். அவனுந் தனது வாளை வீசி இலம்பகன்னனுடைய ஆண்மையை யடக்கினன். கணநாதன் வீசிய வாளானது சிந்துராஜனுடைய மார்பிற் றாக்கியமாத்திரத்தில் கூர்மழுங்கித் துகள்பட்டுப்போயிற்று. அவ்வற்புதத்தை ஆரக்தலோசன் கண்டு அவனெதிர் நின்ற வரத்தின் முயற்சியை நினைந்து அதிசயித்து இன்னும் இவன் பராக்கிரமத்தைக் கண்டறிவோமென்று தனது வில்லைக் குனிய வளைத்து ஆலகாலத்தைப்பொழியும்படியான ஆயிரம் பாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்து ஓர் கணப்போதிற் சிந்துராசனுடைய தேரையும் வில்லையும் நீறாக்கி, அவன் மற்றொருதேரையும் வில்லையுங் கொண்டுவருமுன் மீட்டும் ஆயிரம் பாணங்களைக் கடாவி அவனை வைத்திருந்த தேர்களையெல்லாம் பொடிபடுத்தி ஆர்ப்பரித்தான். உடனே சிந்துராசன் ஆரக்தலோசனுடைய தேரிற்பாய்ந்து அதிக கோபத்தோடு கெற்றெற்றென்று பற்களைக் கடித்துத் தனது காலாற் பலங்கொண்டமட்டும் உதைத்துக் கையிற்பிடித்திருக்கின்ற தண்டாயுதத்தினால் அவனைச் சிரத்தில் மோதி மாய்த்தனன்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு சிந்துராசனானவன் பஞ்சானன *முதலிய கணநாதர்களோடு போராடி வெற்றி கொண்டும் தனக்கிருந்த அளவற்ற இரதங்களும் படைகளும் மாண

டுபோனமையைக்குறித்துமனம் நொந்து, மீட்டிங்தேறி ஓர் குதிரை யின்மீது ஆரோகணித்து இன்னும் எதிர்ப்பவருண்டோவென்று நாற்றிசைகளினும் விழிகளைப்பரப்பி அச்சமர்க்களத்திற்றனியிருக் கும்போது: சில தூதர்கள் கண்டக நகரத்திற்கோடி அவனிருக்கிற நிலைமையை அவன் மைந்தர்களுக்கறிவித்தனர். உடனே அவர்கள் விருப்பாக்கனென்னும் ஓர் சேனாதிபதியையனுப்ப, அவன் சுராயிர வெள்ளஞ்சேனைகளோடு ஆயிரம் இரதங்களும் புடைசூழ வாயுவே கத்திலும் முந்திவெளிக்கொண்டுவந்து சமர்க்களத்தில் ஏகாகி யாய்க் குதிரையின்மீதாரோகணித்திருக்கின்ற சிந்துராசனைப்பணி ந்து நின்றனன் அவனைச்சிந்துராசன் பார்த்து ஓ விருபாக்கனே! இந்த அமரின்கூட்டத்தையாமே அரப்போம். நீ அருகிற்சும்மாவிரு வென்று சொல்லினன். அச்சமயத்தில் கணநாதரு ளொருவனான சோமனென்பவன், தனது தேரைக்கொண்டுவந்து எதிரில் நிறுத்தி வில்லைவட்டாகாரமாகவளைத்துச் சோனையாரியைப்போல் அளவற்ற பாணங்களைப்பிரயோகித்தான்.

அதை அவுணர்கோனாகிய சிந்துராஜன்கண்டுநகைத்துத்தனது வில்லில் ஆயிரங்கணைகளைத் தூண்டிக் கணநாதன்விட்ட பாணங்களை யெல்லாம் பொடிபடுத்தி, மீட்டிங்கூர்மையுள்ள ஐந்து கணை அவன் புயங்களுக்கிழுக்காகவெய்தினன். உடனேசோமன்தனதுவீரமனைத்துங் குன்றி வீழ்ந்தனன். அதை அரனென்பவன் கண்டு மனம் பதை பதைக்கப்பொங்கி இப்பாதகனை இக்கிமிடத்தில் வாட்டுவேனெனச் சபதங்கூறி வந்து தனது வில்லில ஓர் பாணத்தைத் தொடுத்துப் பிரயோகித்துச் சிந்துராஜனுடைய பொன்முடியை மண்ணில் வீழ்த் தினன் உடனே அவன் மற்றொருபொன்முடியைத்தரித்து, இரண்டு பாணங்களால் அக்கணநாதனுடைய வில்லையும் இரதசாரதியையும் வீழ்த்தினன் பின்னர் அரனனவன், வேறொருசாரதியையும் வில்லை யுங்கொண்டு அதிக வேகத்தோடு ஆறு பாணங்களை தூண்டிச் சிந்து ராஜனுடைய கவசத்தையும் வில்லையும் அறுத்தெரிந்தனன். அதனால் அச்சிந்துராசன வெகுண்டு, விண்டுவினுடைய சக்கரா யுதத்தையும் பின்னிட்டோடச்செய்யவல்ல தனது சக்கராயுதத்தை யேவினன். அதை அவன் தனது வச்சிராயுதத்தினாற்கண்டித்து, ஓர் தண்டாயுதத்தை அவன் மார்புக்கிழுக்காகக் கறகறவென்று சுழற்றி வீசினன். உடனே சிந்துராஜன் அதனைத்தனது கதாஸ்தத் தினாற்றாளாக்கித் தைலீகமுள்ள ஓர் வேலாயுதத்தையெடுத்து அதிக விரைவோடும் பிரயோகித்தனன். அவ்வேலாயுதம் வெளிப்பட்ட மாத்திரத்ன்றதில் அனற்சமூகங்களைப் பெருக்கிக்கொண்டுவந்து அ

விடுகின்ற பாணங்களையெல்லாம் விழுங்கி அவன் மார்பிலுருவிப் போயது. அச்சம்பவத்தைச்சாமளன்கண்டு இவன் முனைவுறுதியைச் சற்றுநேரத்திற்கலக்கி வாட்டுகின்றேனென்று ஆக்கிரமித்துத்தனது வில்லிலிருந்து ஒரேமுகத்திற் பதினாயிரங்கணைகளைத்தூண்டி ஆர்ப்பரித்தனன். உடனே அவுணர்பெருமானும் பதினாயிரங்கணைகளைத் தூண்டி அவையனைத்தையும் பொடிபடுத்தி, மீட்டும் நூறு கணைகளைத்தொடுத்து அக்கணநாதனேறி நடாத்துகின்ற இரதத்தையும் சேமத்தேர்களையும் முறித்து வீழ்த்தினன். பின்னர் சாமளன் ஓர் கதாயுதங்கொண்டு சிந்துராஜனேறி நடாத்துகின்ற குதிரையின்மீது மோதினன், அதைக்கண்ட சிந்துராஜன் மிகுந்த வீராவேசங் கொண்டு தனது முத்தலைச்சூலத்தால் அவன் நெற்றியிற்குத்தி மாய்த்தனன்.

அக்கொடுமையை இரணியகருப்பன்கண்டு இப்பாதகனால் நம்மவர்கள் மாய்ந்தது வெகுநோதந்து வெகுநோதமெனப் பொங்கித்தனது வில்லில் ஐந்து பாணங்களைப்பிரயோகித்துச்சிந்துராஜனுடைய குதிரையைநிலத்தில்வீழ்த்தினன். உடனே அச்சிந்துராஜன் இடியேற்றினைப்போலக் கர்ச்சித்தோடி, இரணியகருப்பனை தேரோடு மெடுத்து ஆகாயத்திலெறிந்து, வேறொரு குதிரையிற்றேறி யார்ப்பரித்தனன். பின்னர் கணநாதன் தனது இரதம் உடைந்துபோகலும், வேறொரு இரதத்திலேறி அழலைச்சொரியும்படியான பத்து பாணங்களால் பகைவன் விடுகின்ற பாணங்களையெல்லாங்கண்டித்து மற்றொரு பாணத்தால் அவன் கையிலேந்திய வில்லையு மொடித்தெறிந்தனன். உடனே சிந்துராஜன் வேறொருவில்லையெடுத்துக் கணநாதனுடைய இரதசாரதியைக்கீழ்த்தள்ளி எமனுலகடைஞ்சத் தக்க எழுபாணங்களை அவன் நெற்றிக்கு நேரிற் குறிபார்த்துப் பிரயோகித்தான். அதனால் இரணியகருப்பன் ரோசித்து, மீட்டும் தெளிந்து தனது முத்தலைச்சூலத்தையெடுத்தோடி அவுணர்பெருமானுடைய மார்பிலழுத்தினன். அவன் மார்பிற்பட்டமாத்திரத்தில் முனைமழுங்கிப்போனதைக் கணநாதன் கண்டு வேறொருபடையையெடுக்க அதற்குமுன்னம் அவுணபாதகனாகிய சிந்துராஜன் ஓர் வச்சிராயுதத்தையெடுத்து வீசினன். பின்னர் அவ்வச்சிராயுதந் தாக்கியவேகத்தால் இரணியகருப்பன் சோர்ந்துமடிந்தான்.

இவ்வாறு சகல மகிமைகளினுஞ் சிறந்த கணநாதர்களெல்லாம் ஒவ்வொருவராய் அவுணராஜனோடு யுத்தஞ்செய்து சின்னபின்னப்பட்டதை, எனையடிமையாகவுடையமயூரேசமூர்த்திகண்டு இத்தன்மைத்தான மேலானபராக்கிரமசாலியை நாமேயுத்தஞ்செய்து ஆட்கொள்ளவேண்டுமெனத்திருவுளங்கொண்டார். அக்குறிப்பைச்சார

லென்ன மேலும் அவனிடத்தில் தமக்கிருக்கின்ற பரிபூரணகடாட்
சத்தினால் இரணக்களத்தில் அவனையொருபொருளாக மதித்துச்
சண்டைசெய்ய வந்தவர்போலச்சடிதியிலெழுந்தருளி அவன் அறிக்
குமடியாக தமது அருமைத்திருமேனியை வெளிப்படக்காட்டி இருபா
லோகக்கும் பாலித்தனரென்றால், தேவதேவோத்தமராகிய விநாய
கப்பெருமானுடைய திருவிளையாடலை யாவரறிந்து போற்றப்
படும்.

இவ்வாறு சிந்துராசன் மயூரேசமூர்த்தியினுடைய சுயம்பிர
காச சொரூபத்தை நேரிற்கண்டபெற்றும், பிராரத்த வினையின்
சம்பந்தப்பட்டவனாயிருத்தலைப் பேசுவதாயினன். ஓ சிறுவனே? நான்
பலநாளுள்ளும் உடலும்வருந்த அரிய தவங்களைச்செய்து வரம்
பெற்றிருக்கின்றமுயற்சியினால் ஏககாலத்துஞ்சலனமற்று இக்காயத்
துடனிருக்கவல்லேன். அண்டாகளையெல்லாஞ் சிறைப்படுத்தி
னேன். சகல லோகங்களையுஞ் செயித்திருக்கின்றேன். எண்பத்து
நான்குலட்சஞ் சீவராசிகளாலும் மடியாவரம்பெற்றேன் இப்போது
நீ உனக்குதவியாகக்கொண்டுவந்த பூதவெள்ளங்களெல்லாம் அக்கினி
முன்பட்ட பஞ்சுமலையைப்போலச் சயாக்கனத்திற் கிரையாகப்
போனதைக் கண்டனை உனது சேனாபதிகளுங்கொடியபோரைச்
செய்து வாடினார்கள் முதலணியில் விசைவுடையிற் சிறந்திருந்த
மற்ற வீரர்களும் என்னுடன் யுத்தங்களைச்செய்து ஒவ்வொருவராய்ச்
சின்னபின்னப்பட்டு மாண்டனர். இவையனைத்தையும் உண்மை
யாகப்பார்த்திருக்கின்றனை, இப்படியிருக்கப் புறவணியிற்றப்பி மீந்
திருக்கப்பாலனாகிய நீ யொருவனோ சகலலோகங்களையும் வென்றசெய
சாலியாகிய என்னுடன் சண்டைசெய்து வெற்றிபெற விருக்கின்றனை
உன் கருத்திற் கொண்டிருக்குந் தீமானத்தைப்பார்க்குமிடத்தில்
வெகு மோசமாயிருக்கின்றது? மேலும் தேவாதிதேவனுடைய சர்வசங்கார
மூர்த்தியாய சிருட்டி-திதி-சங்காரம் திரோபவம்-அநுக்கிரகமென்
னும் பஞ்சகிருத்தியங்களையும் நடாத்திச்சராசரப்பிரபஞ்சங்களை
நடப்பிக்கும் உனது பிதாவாகிய பரமசிவனும் எனது சிறைக்கணகப்
பட்டிருக்கின்ற அரிபிரமேந்திராதிதேவர்களும் என்னுடன் போர்
செய்ய இயலாதவிருக்கும்போது, நேற்றுதித்தபாலனாகிய நீயோ
சகலரையும் வென்ற ஜயசாலியாகிய என்னுடன் சண்டைசெய்யுந்
திறமுடையவன் சகல லோகங்களும் கொண்டாடிப்போற்றுங்கீர்த்
தியபிரதாபத்தையும் படைத்திருக்கின்ற நமது பெருமைகளைச்
சிறிதும் யோசித்துப்பார்த்தவனல்லை குழந்தைப்பருவமாதலால்
முன்னிலை சிலவரைவென்றதைப்போல என்னையுஞ்சொற்பமாக நினைத்
தப்பாவிய சேட்டையினால் இவ்வரிய போரைச்செய்து முடிக்கலா

மெனக்கருதி ஓர்மயிலின்மீது சிறுபிள்ளை விளையாட்டாக எதிர்வந்தனைப்போற்காணுகின்றது உன்னை இப்போதே ஓரம்பினாற் கொன்றுவிடுவேன். ஆயினும் உனக்குத்தப்பிப்பிழைக்க வேண்டுமென்னுங் கருத்திருக்குமாயின்விட்டுவிடுகின்றேன்நீ இக்கிமிடத்திலோடிஉனது தாய்தந்தையருடைய மனங்குளிரும்படி வாழ்ந்திருவென்று சொன்னான். அவையனைத்தையும் அருவுருவாகவிளங்கும மயூரேசர்திருச்செவியிலேற்றுப யுன்னகைசெய்து, கொடியசெய்கைகளை நடாத்திவரும் கயவனே! நீ வியர்த்தமாகிய வார்த்தைகளையாடினை உனதுகருத்தின்வண்ணம் முடிவதொன்றேனுமில்லை. வயிரமலைக்கொப்பாகிய உனதுமார்பைதுளைக்கும்படியாய் எவப்போன்றபாணங்களை அவ்வார்த்தைகட்கு மறுமொழிகூறும் அண்டரண்ட புவனங்களனைத்தினையும்வென்றோம மிகுந்த வலியையுடையோம் சகலரும் கொண்டாடுங்கீர்த்தியைபபெற்றோம சிறந்த தேவாஸ்திரங்களைச் சம்பாதித்திருக்கின்றோம், அழிவறவச்சிரதேகத்தைப்படைத்திருக்கின்றோம் கணக்கிறந்தவெளாருசேனைகளை யுடையோம அண்டர்களையெல்லாம் நிகரில்லாமல வென்று சிறைபடுத்தினோம், என்கின்ற மமதை கொள்ளவேண்டாம். இவையனைத்தையும ஓர் நொடிப்போதில் அழித்துவிடவல்லேம் தேவ தேவோத்தமராகிய சிவபெருமான் கொத்தெருளியவரங்களைபபாலனசஞ்செய்து வெல்லவல்லனோ வென்று அகங்கொளவேண்டுவதில்லை அளவறறநாள் அண்டர்களையெல்லாந்தயைதாட்சண்ணியமிலலாமல சிறையில்வைத்துக்கொடுங்கோல் செலுத்திவந்த உனது சவுரியத்தினையும் புயவன்மையையும் உனது விழிக்குப்பாலனுகத்தோறறுகின்ற யாமேயடக்கிநாசஞ்செய்வோமாதலால், இனி வீணவாாதததையாடாது உனது பெருமையையும் பராக்கிரமத்தையுங் கைத்திறத்தினாற் காண்பிக்கக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர் அதைக்கேட்டலும் அவுணர்பெருமானாகிய சிந்துராசனுக்கு அதிககோபம் பிரவேசித்து, வடவைக்கனல்போலச்சீறி நல்ல காரியம் உனது விருப்பை இக்கிமிடத்திலடக்கிப் புத்திபண்ணிவைக்கிறேனென்று உருத்துத்தங்கக்கட்டுகள் பூண்டு மந்தரகிரியைப்போல் விளங்கும்பாரித்தவில்லையெடுத்து நிறுத்தி, இருகுதைகளும்ஒன்று படவளைத்து நாணேறறிச்சத்தலோகங்களும் நடுங்கும்படியாகக் குணத்தொனிசெய்து, சோனைமாரியைப்போல அளவற்ற பாணங்களைத்தொடுத்துவிட்டனன். அவன் விட்டபாணவருஷங்களினால் மலைகள்பிளந்தும், வானுலகழிந்தும்; சமுத்திரங்கள் கிழிந்தும், திசைக்கரிகள் சோர்ந்தும் பூமிகள்பிளந்தும்போயின.

இவ்வாறு சகலலோகங்களுஞ் சின்னாபின்னப்படும்படி, மழைக்காலத்தில் புற்றிலிருந்து புறப்படும் ஈசலைப்போலச் சிந்தூரன் விடுத்த அமோகமாகிய பாணங்களெல்லாம பிரபஞ்சமெங்கும் பறந்து தகித்தலும், நின்மலமூர்த்தியாகிய விநாயகக்கடவுளானவர் தமது மேருகிரிக்குச்சமதையாக விளங்கும் தனுவைவளைத்து, வாசுகியைப்போல நீண்டிருக்கும் நாரியைமாட்டிச் சர்வசங்காரகாலத்தில பிரசண்டவாயுவினால மோதப்பட்ட ஆயிரங்கோடி அண்டங்களும் ஏககாலத்தில் உடைந்தெழும் பேரொலியைப்போலக் குமுறி முழங்கும் படிக்குக்குணத்தொனிசெய்தனர் அவ்வதிர்ச்சியினால் உலகங்களுக்கச்சாணியாகவிருக்கின்ற இமயகிரி கிடுகிடென்றசைந்தது; அஷ்டதிசைகளும் நடுக்குற்று குலகிரிகள்நெக்குவிட்டு திசையானைகள் வீறிட்டுமயங்கி, அண்டகோளகைகளதிர்ந்து, பூமிபாதலம் வரையிற்பத்தல்பத்தலாகப்பிளந்து, அசைச்சுமந்திருக்கின்ற ஆதிசேடனுந்தத்தளித்து ஆயிரம் பணமகுடங்களைக்கொண்டு தாங்க வருந்தி விஷங்களைக்கக்கினன். மற்றுமுள்ளபிராணிகளும் நிலைகலங்கிவாடும்படியாகக் குணத்தொனிகாட்டிய விநாயகபெருமான், பின்னர்கோடைகால மேகத்தைப்போலத்தமது வில்லில் கணக்கிறந்த குரூரமாகிய சரங்களைப்பூட்டிச்செலுத்தி மீறிவருகின்றபகைவன் கணைகளைக்கண்டித்தெறிந்து, மீட்டும் பத்துக்கணைகளைத் தூண்டி அவனுடைய நெற்றிமார்பு இரண்டுபுயம் இரண்டுதொடை இரண்டு பாதம் இவைகளைத்துளைந்தனர். உடனே சிந்தூராஜன், தனது குதிரையை விட்டுத்தேரின்மீது பாய்ந்து மூர்ச்சையானான். அப்போது கண்டகநகரத்தினின்றும்வந்து அருகிலிருக்கின்ற வீரபராக்கிரமத்தையுடைய விருபாக்கனென்பவன், அதிக கோபங்கொண்டு காளகூடத்தைப்போலமண்டியெறிந்து, கொவ்வைக்கனியையொப்ப விழிகள்சிவந்து, தீப்பொறிகள் குபீல்குபீலெனக்கொட்ட வுருத்துப் பார்த்துப், பற்கள்நெறநெறவெனக்கடித்து உதட்டையதுக்கி, விஷச்சுவாலையைவீசவல்ல கடூரமுள்ளபாணங்களை அமோகமாகப் பிரயோகித்தனன். அவைகளின் கொடுமைகளை மயூரேசமூர்த்தியோடு வந்திருக்கின்ற முனிச்சிறார்கள்பார்த்து உடனே அளவற்ற கோடி தீட்சண்யமான பாணங்களைத் தூண்டிப், பகைவன்விடுத்த பாணங்களையும் அவனைப்புடைசூழ்ந்திருக்கின்ற இரண்டாயிர வெள்ளஞ் சேனைகளையுமதஞ்செய்து பின்னரவரோடு மெதிர்த்து; ஓர் கணப்போதில்உனதுமனவுறுதியைக்கலக்கிவாட்டுகிறோமென்று சபதங்கூறி, தண்டாயுதங்களைக் கிறுகிறுவெனச் சுழற்றிமோதியும், வேலாயுதங்களைக்கடாவியும், சக்கரப்படைகளைச்செலுத்தியும், தோ

மாங்களையெதிர்த்தும் இவ்வாறுயாவருந் தனித்தனி வகைவகையாய் அகோரயுத்தங்களைச்செய்து அவனை மாய்த்தனர்.

இப்பால் மிகவும் எளியனாய்த்தனியாய்த்தேரின்மீது மூர்ச்சித்துக்கிடந்தசிந்துராஜன், மூர்ச்சைதெளிந்தெழுந்து தனக்குதவியாகவிருந்த விருபாக்கனும் அவன் சேனைகளும் முனிச்சிருக்கிறார்களாய் மடிந்ததைப்பார்த்துமனம்நொந்தவனாயினும், சிறிதுதேறிவிழிகளில் அக்கினிபொறிசிந்த உறுந்துநாசிகளினும்வாயினும் அனற்சுவாலையெழப்பெருமூச்செறிந்து தனது பாரித்தவில்லில் சூரியாஸ்திரத்தைத்தொடுத்துப்பிரயோகித்தான். உடனே மயூரேசமூர்த்திதமது சூலாயுதத்தைவிடுத்தனர். அதுவெளிப்பட்டவுடன்மிகுந்ததீட்சண்ணியத்தைக்காட்டியெங்கும் அனலையிறைத்து ஆர்ப்பரித்துவந்து சிந்துராஜன்விடுத்த அஸ்திரத்தைக் கண்டதுண்டப்படுத்தி, அவன் கிரீடத்தைக்கீழேவிழத்தள்ளி, அவனது செவிகள் சின்னபின்னப்பட அறுத்தெறிந்து, மீட்டும் எமது கர்த்தருடைய திருக்கரத்தில் வந்து சேர்ந்தது. பின்னர் சிந்துராஜன் மிக்க துன்பத்துடனே நாணமும் அச்சமும் மேலிட்டவனாய், உடனே தனது இரதத்தைவிட்டிறங்கி; ஓர் வஸ்திரத்தால் முக்காடிட்டுக்கொண்டு, யாவருமறியாதபடி தமது நகரத்தையடைந்து, அரண்மனையினோர் மூலையில் கால்களைமுடக்கித் தலைகவிழ்ந்திருந்தனன்.

இவ்வாறுசிந்துராஜன்சென்றமையைமயூரேசரறிந்துதமதுசேனைகளில்மாய்ந்த பூதர்களையுஞ்சேனைத்தலைவர் களையுமெழுப்பியழைத்துக்கொண்டு பாசறையிலமர்ந்தருளியிருந்தனர். சுப்பிரமணிய தேவர் முதலான மற்றைத்தலைவர்களும் அவரவரது அவ்வவருடைய பாசறைகளில் அமர்ந்திருந்தார்கள். இப்பால் சூரியனானவன், இச் சமர்க்களத்தில் நமது படையானது சிந்துராஜனுக்கு உதவிசெய்யாது மாண்டுபோனதால் இனிநாமும் வாழோமென்று அஸ்தமனமடைந்தவன்போல்மேற்றிசைக்கடலில் மறைந்தனன்.

இப்பால், சமர்க்களத்திற் றோல்வியடைந்துசென்ற சிந்துராஜனுடையமனதைப்போலஎங்கும் இருள்நெருங்கியது; வணங்காரையெல்லாந் தமது மனக்கருணையினால் வென்று ஆட்கொள்ளவல்ல விநாயகமூர்த்தியினுடைய திருவுளத்தைப்போல ஆகாயத்தில்சந்திரனானவன் சோடசகலைகளோடுமுதித்தனன். அப்போது பாசறைகளிலிறங்கியிருந்தகணநாதர்களெல்லாம் மயூரேசமூர்த்தியைமும்முறை வலம்வந்துபணிந்து, வேதாகமங்களினால் அளவற்ற துதிகளைச் செய்து ஆனந்தக்கூத்தாடினார்கள். அவர்கட்கெல்லாம் எமது கர்த்

தன் பேரருளை வழங்கியிருந்தனர். பிணக்குவியல்கள் மலைமலையாகக் குவிந்திருக்கின்ற சமர்க்களம் முழுவதும் பேய்கள [illegible] களையருந்தித் துணங்கையாடுவதாலுண்டான வோசையும் [illegible] வீழ்ந்தவர்களுடைய உயிரினைக்காக்கும்படியாக அவ்வவர்கள் சுற்றத்தினர் தூபதீபம் மணிமுதலியவைகளைக்கொண்டு இணங்குகின்ற வோசையும்பெருத்திருந்தன. கண்டகநகரத்தின் வீடுகளிலும் மாளிகைகளிலுமுள்ள மங்கையரெல்லாரும் யுத்தஞ்செய்யச்சென்ற அவ்வவர்கள்காதலருடையமீட்சியைக்காணாது, அழுகின்றசத்தமே எங்குமிகுதியாயிருந்தது.

இப்பால், அரண்மனையில்மனமடிவினோடுசங்கடப்பட்டிருக்கின்ற சிந்துராஜனிடத்தில் அவன்பத்தினியாகிய உற்கையென்பவள் சென்றுபணிந்தெழுந்து எனதுபிராணநாயகனே! தேவரீர் அண்டங்களையெல்லாஞ்சிறைக்கண் வைத்தீர் சகலலோகங்களையும் ஒரேகுடையில் ஆண்டு வருகின்றீர். அசுரர்களையெல்லாம் அடிமை கொண்டீர்; பிரமனுதிமூவராலும் அழியாவரமபெற்றிருக்கின்றீர் இதன்மைத்தான மேலானப்பராக்கிரமங்களைப் பெற்றிருக்கின்ற தேவரீர்மிகுந்த மனமடிவோடுங்கிலேசமடைந்த காரணமியாது அதனையடியாட்குத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுகேட்டனள். அதற்குச்சிந்துராசன் சிறிதுசிபிர்த்து தன்கண்ணிலும் அவள்கண்ணிலும்சலமொழுகும்படியாகத் துக்கித்துபபெருமூச்செறிந்து என்மனதுக்கினியகாதலியே நீகூறியவனைத்தும் உண்மையேயாயினும், என்னைமுடிக்கச்சிவபிரானிடத்தினின்றும் ஆறு கரங்களோடு ஒருபுதல்வன் இப்பூவுலகத்திற் பிறந்திருக்கின்றான் அவன்பிறந்தநாளிற்றானே அவன் எனக்குச்சத்துருவென்றறிந்து. நாள்தோறும் அளவற்றவீரர்களை யனுப்பினேன் அவர்களனைவரும் அவன்கரத்தால்மடிந்தார்கள். சகலபராக்கிரமங்களினுஞ்சிறந்தகனலாசுரனைக் கடல்போன்றசேனைகளைக்கூட்டியனுப்பினேன், அவன் அளவற்றயுத்தங்களைச்செய்துஞெயம்பெறாமல் சேனைகளோடும் மாண்டான். சூரியன்சந்திரன் அக்கினிமுதலியதேவர்களை அவனிருக்கின்ற வனத்திற்போகாதபடி ஆக்கியாபித்தேன்; அவன் அதையறிந்து ஓர் நொடிப்போதில் அவர்களை யெல்லாம்வேறேயுண்டாக்கிக்கொண்டு யுத்தத்திற்குவந்துதேவர்களை யெல்லாஞ்சிறையினின்றும்விடச்சொல்லிபபராக்கிரமமுடைய ஓர் தூதனை யனுப்பினான், அவன் அவ்வாறேயிங்குவந்து நடத்திச்சென்றகாரியத்தை நீயறிந்திருக்கின்றனை பின்னரச்சிவகுமாரனைச்சிறு பிள்ளையென்று எண்ணு பேதமைப்புத்தியினால் அவனோடியுத்தஞ்செய்யச்சென்றேன் அந்தயுத்தத்தில் நமது அமைச்சர்களும் அளவற்றவீரர்களும் அமோ

கமசகிய சேனைகளும்மாண்டார்கள். உடனே நானும் அவனைற்று யுத்தங்களைநடாத்தி அச்சிறுபிள்ளையின் கரத்தால் இரண்டுசெவிகளையும் மானத்தையுமிழந்தேன். சிறையிலிருக்கின்றதேவர்களெல்லாம்நகைத்து எள்ளனருசெய்யும்படியாக எனது பெருமைகளைந்துங்குன்றி வந்தேன் வயதிற்சிறியவனாயினுஞ் சார்த்திறத்திற்பெரியவனாகவிருக்கின்ற அப்பாலனைச்செய்ப்பதுமிகவும்அரிதாகவிருக்கின்றது, இனியென்னசெய்யப்போகிறேனென்று துயருற்றுச்சொன்னான். அவையனைத்தையும் அவன்பத்தினியாகியஉற்சசயெனபவள் கேட்டுஎன்னுயிர்க்குயிராணநாயகனே! யாகமுதலானவைகளைச்செய்து சகலதேவர்கட்குந்திருப்திசெய்துவாழுமையா அரசகுலத்திலுதித்தஇராசாதிராசனாகியதேவரீர் இப்போது அந்தேவர்களைப்பூசியாது அவர்கட்குத்தீங்குசெய்கின்ற அசுரர்களையாதரிக்கிறீர், அன்றி அந்தேவர்களைச்சிறைப்படுத்தினீர் அதனாலேசகல அபத்துக்களும்வந்துசேர்ந்தன. இனியேனும் அத்தேவர்களை விட்டுவிட்டாலெல்லாமடைந்தேறலாம், தேவரீருடைய சித்தம் எவ்வாறோவென்று சொல்லினள். இவ்வாறுதனது பத்தினியானவள் உரிமையோடுவணங்கிக்கூறிய மொழிகளைத்திடச்சித்தத்தையுடையசிந்தூராசன் கேட்டு பெண்ணே! நீசொல்லுவதனைத்தும் உண்மையே, ஆயினும்யான்சொல்லுவதையுங்கேள்நமது படைவீரர்களும் அமைச்சர்களும் அளவறுசேனைகளும் யுத்தத்தில் மாய்ந்துபோனபின்பு தேவர்களைச்சிறையினின்றும் விட்டுவிட்டால் திரிலோகங்களுநகைப்பார்கள் சனைவிபூதிகளையடைந்தபின்பு அவர்களைச்சிறையினின்றும் விட்டு யான் உயிரோடு இப்பூவுலகில் வாழ்ந்திருப்பதை பார்க்கினும் இன்றுமே என்னுற் கூடியவரையில் பெரிதாயுந்தருசெய்து மயூரேசனுடைய ஆயுதத்தினால்இறப்பேனாயின் என்றைக்கும் நிலையான புகழும் முத்தியுங்கிடைக்குமாதலால் இப்போதுதேவர்களைவிடக்கூடாது. நீ உனதிருப்பிடத்திற்செல்லுகவென்றுசொல்லினன். அதன்மீது பிராணநாயகி மனம்நடுங்கி அந்தப்புரத்திற்சென்றனள். உடனே இராப்பொழுதுநீங்கிற்று. பின்னர் சூரியனானவன், தன்னோடு நித்தலும்பொருதுகின்ற தானவர் குழாத்தைச்சாடியருளவேண்டுமென்று ஞானவித்தகராகியமயூரேசமூர்த்தியைப்பிரார்த்திக்க வருவான்போலக்கீழ்த்திசைக்கடலிலுதயமாயினன்.

இப்பால் சிந்தூராசன் தனது நித்தியநியமங்களைநிறைவேற்றிக் கொண்டு சிங்காதனத்தின்மீது வீற்றிருந்தனன், அப்போது அவன் மைத்துனராகிய கலனென்பவனும் விகலனென்பவனும் வந்து அவ

ளைப்பணிந்துநின்றார்கள். அவர்களைச்சிந்துராசன் பார்த்துநான் யுத்த்திற்குச்செல்லுகின்றேன் நீங்களிருவருமிங்ஙனமிருந்து இப்பட்டணத்திற்பூதர்கள் வந்து தீங்குசெய்யவொட்டாமல்காத்துக்கொண்டிருங்களென்றுசொல்லினன் அதை அம்மைதந்தையரிருவருங்கேட்டு பணிந்து அத்தனே அப்பகைவர்களையாங்களேசென்றுவென்றுவருகின்றோம். தேவரீர் உத்தரவுகொடுத்தருளவேண்டுமென்றுகேட்டார்கள் அவ்வாறே சிந்துராசன் உத்தரவுகொடுத்தான் பின்னரவர்கள் நாலாயிரவெள்ளஞ் சேனைகளோடு யுத்தகளத்திற்குச் சென்றார்கள். உடனே அவ்வரலாற்றைநாரதமுனிவர் விநாயகமூர்த்தியைப்பணிந்தறிவித்தனர் அப்போது அருகில்நின்ற நந்திதேவரும், புட்பதந்தனும் சுப்பிரமண்ணியமூர்த்தியும், வீரபத்திரக்கடவுளும், விநாயகமூர்த்தியிடத்தில்விடைபெற்று அளவற்ற பூதங்களோடுஞ் சமர்க்களத்திற்சென்றார்கள். பின்னர் இருதிறப்படைகளுங்கைகலந்து நெடுநேரம் போராடுகையில் அளவற்றசூரியர்கள் அர்த்தராத்திரியிலுதித்துளங்குமிருக்கின்றஇருட்கூட்டங்களைவெதுவெதுத்துவிழுங்குவதுபோலச் செம்மேகத்தையொத்த அளவற்றபூதசேனைகள் கருமேகத்தை நிகர்த்த அவுணசேனைகளிற்பாய்ந்து அங்கங்கேரதங்களையும்யானைகளையுங் குதிரைகளையுஞ் சின்னபின்னப்படுத்திச்செம்பட்டமயிர்படிந்தசிரங்களைக்கண்டித்துமண்டைகளைப்பிளந்தும, கற்கம்பத்தையொப்பத் திரண்டுவலிபெற்றிருக்கின்றபுசங்களையறுத்தும, விசாலமாகிய இரத்நாபரணங்களையணிந்திருந்த மார்புகளைச்சேதித்தும், வீரவண்டயங்களணிந்தகால்களை வெட்டித்தள்ளியும் உரத்துப்பேசும் வாய்களைப்பிளந்தும், உறுத்துப்பார்க்கும் விழிகளைக்கல்லியும், கோபித்துப்பெருமூச்செறியும மூக்குகளைக்கிள்ளியும்வீரங்கள்பேசியநாக்களையறுத்தும் பலகைகளைப்போலப் பருத்திருப்படிகளைத்தாக்கியும், வீராவேசங்களினாற்றுடித்துக்கொண்டிருக்கும் மீசைகளைக்கொளுத்தியும் மோவாய்களைச்சிதைத்தும்வயிரகுண்டலங்கள் தரித்தசையுஞ் செவிகளையறுத்தும்வீரபட்டங்களைத்தூள்படுத்தியும் இரத்நகசிதமாகச்சொலித்திருக்கின்ற கிரீடங்களை நொறுக்கியும், படைகளைச்செலுத்தநீட்டுங்கரங்களைவெட்டியும், பாணங்களை முறித்தும் மற்ற ஆயுதங்களைப்பொடிபொடியாக நாசப்படுத்தியும். யாளிபுலிகரடிபன்றிமனிதர்தேவர்கள் முதலாயினோரை வாரிவாரிப்பருக்கவாய்களிற்போட்டுவிழுங்கி நிறைத்துவைத்திருக்கின்ற தொந்திவயிறுகள்பீறிக்குடல்கள் சர்ப்பங்களையும் அதா அதப்படுத்தி மாய்த்தனர்.

அச்சம்பவத்தைக் கலனும்விகலனுங்கண்டு கோபாக்கினியானது மனதைவாட்ட, விழிகளிலனற்பொறிகளைப் பெருக்கிப்பெருமூச்செறிந்து சயவுற்சாகத்தோடுவீற்றிருக்கின்ற பூதசேனைகளைவாட்டவிணைந்து இருவருஞ் சூறுவளிக்காற்றைபோலத்தங்களிரதத்தைச்சுழற்றிக் கூர்மையுள்ளகொடியபாணங்களை அமோகமாகப்பொழிந்தனர். அதனால்சூரியனைச்சூழ்ந்தபனிக்கூட்டத்தைப்போலப்பூதசேனைகள் கலங்கி,சிரமற்றும்,மூளையிறைந்தும்,தோள்கள்சரிந்தும், மார்புபிளந்தும்,கால்களொடிந்தும்,மதிமயங்கிவீழ்ந்தும்மூர்ச்சித்தும்குப்புறவீழ்ந்தும்சின்னாபின்னப்பட்டுபோயின. அதைநந்திதேவர்கண்டு தமது தேரைவிரைவிற்செலுத்திக்கொண்டுசென்று பார்வதாகிருதியாகப்பாரித்திருக்கின்றவில்லில அநேகசிலீமுகங்களைத்தொடுத்து அவ்விருவர் விடுகின்றபடைகளையெல்லாம்பொடிபடுத்தினார். உடனேஎமனுங்கண்டஞ்சத்தக்க அவ்விருவர்களும் அளவற்றசரங்களைத்தூண்டிநந்திதேவருடையவில்லையொடித்தெறிந்தனர் அதனால்நந்திதேவருக்கு அதிககோபமுண்டாகி தமதுகோட்டினால் அவ்விருவர்களுடையவில்லையும்இரதத்தையும்பொடியாக்கினர், பின்னரவர்கள்நந்திதேவர்மீது பாசத்தையேவிப் பிணித்துச்சமாக்களம் நடுவில்நிறுத்தி ஆர்ப்பரித்தார்கள். அதைப்புட்பதந்தன்பார்த்துச் சகியாதவனாய்நந்திதேவரை அப்பாசத்தினின்றும் விடுத்து அப்பாதகருடையவிற்களையும்பொடிபடுத்தி, அவர்களமாபுக்கிலக்காக எவவேழுபாணங்களைப் பிரயோகித்தான். அதனாலவர்கள்மூர்ச்சையாகிவிட்டுத்தெளிந்தெழுந்து, தங்கள் வச்சிராயுதத்தினால புட்பதந்தனுடைய ஆற்றலை யடக்கினர்கள் அதைவாட்படையேந்தியவீரபத்திரக்கடவுள் கண்டுரவுத்திராகாரமாகக் கோபித்துத்தமதுவிரல்களைமுடக்கி விகலனுடையசிரத்திற் குட்டினர், உடனே அவன்சோர்ந்துமூர்ச்சையாகி இறந்தனன். பின்னர் சுப்பிரமணியமூர்த்தியானவர் கலனென்பவனைப்பிடித்திழுத்து கிலத்திலறைந்தனர். அவனும்அவ்வறையினாற்சரீரமெல்லாஞ்சின்னாபின்னப்படமாண்டனன். அப்போது இரண்டாயிரந் தோளினையுடைய பாநுகம்பன் தனது ஆயிரம்வாய்களினும் ஆயிரவீரசங்கங்கள்வைத்து அண்டங்கள்திரமுழக்கினன்.

இவ்வாறு அவ்விரண்டுவீரர்களும்மடிந்துபோகவும்இரணபூமியிற்பட்டவர்கள்போகமற்ற அவுணர்களெல்லாம் பிராணபீதியினாலிரைந்து பலதிசைகளினும் ஓடிப்பதுங்கினார்கள்; இந்த அபசயத்தை உடனேதூதர்களோடிச்சிங்கராசனுக்கறிவித்தார்கள். அதனாலவன் மிகுந்த கிலேசத்தை யடைந்து இனியென்ன செய்யப்போகின்றோ

மென்று பரிபவமுற்றிருந்தனன் அதை அவன்குமாரர்களாகிய தன்
மனென்பவனும் அதனமனென்பவனும்தெரிந்தவர்களாய் அவன்பாதத்
திற்பணிந்தெழுந்து; தந்தையே!எதிர்த்துவந்தசத்துருக்களுக்கு அடி
யேங்களிருக்கத் தேவரீர் கிலேசமடையவேண்டிய தென்னைக்கு?
எங்கள் மாதுலரைக்கொன்ற கந்தனையும வீரபத்திரனையுங் கொன்று
மயில்மீதிருக்கின்ற அவாகள தலைவனையும் இனணிமிடத்திற் கைப்
பிடியாகபபிடித்துக்கொணடு வருகின்றேம. அடியேங்கட்கு விடை
யில் உத்தருவு கொடுத்தருளவேணடுமென்று கேட்டாாகள். பராக்
கிரமத்திறசிறந்த தனது புத்திராகள சொன்னதைக் சிந்துராஜன்
கேட்டு துயரத்தினின்றுநீங்கி ஒருவாறுமனந்தேறி இதுசாறுமடிந்து
போகமிருந்திருக்கிற சேனைகளைக்கூட்டிக்கொண்டுசென்று சயம்
பெற்றுவாரக்கடவீாகளென்று உத்தரவு செயதனுப்பினன். அவர்
களும்மேலான செலவததைபபெறறவாகளபோலமகிழ்ந்து யுத்தஞ்
செய்யததுணிந்து எணணாயிரவெள்ளஞ் சேனைகளுடனேயுத்தகளத்
திறகுசசென்றாாகள.

அபபோதுசுபபிரமணியமூாத்திக்கு அருகிலிருந்தநவவீரர்கள்
சமுத்திரம்போல ஓங்கிவருகின்ற அவுணசேனைகளைப்பார்த்து ஓர்க
ணபபோதில் அவாகளை அதஞசெய்து வருகின்றேமென்று விடை
பெற்றுசசென்றுயானைக்கூட்டங்களிற்புகுந்தசிங்கமேறுபோலஅவு
ணசேனைகளிற்புகுந்துஅவவவர்களுடைய பாரிததவிறகளில் அமோ
கமாகிய பாணங்களைப் பிரயோகிதது யாவரையுஞ் சின்னா பின்னப்
படவாட்டி நிறைநிறையாக விருக்கின்ற தேரணிகளிற் பாய்ந்து
சொர்ணமயமாகவிருக்கின்றவண்டில் அச்சுமச்சு குத்துக்கால்முத
லியவைகளோடு நவரத்நமயமாக விளங்குங்கொடிஞ்சை கொடிகொத்
துமணி முதலியவைகளைப் பலதிசைகளினும பறக்கச்சாடி, அவைக
ளிற்கட்டியிருந்த புரவிக்கூட்டங்களைக்கணடதுண்டப்படத்தறித்து
சாரதிகள் கழுத்துகளையறுத்தெறிந்துயானையணிகளிற்புகுந்துஇருப்
புலக்கைகளைபபற்றிச் சுலாவித்திரியுந்துதிக்கரங்களைப்பனைமறிவதை
ப்போலக்கண்டித்து, நவரத்னமுகபாடத்தைச் சிதைத்து, மத்தகத்
தைப்பிளந்து; மூளைகளையிறைதது நீணடுதொங்கும் உதட்டைச்ச
ரித்து சொர்ணபூண்களை தரித்திருக்கிறபருத்தகோடுகளைப் பிறைக்
கொப்பாகக்கண்டித்தெறிந்து, பாகர்களைக்கீழேவிழத்தள்ளி,தலைவர்
களைச் சின்னாபின்னபபடக்கொன்று உரலையொப்ப விருக்குங்கால்க
ளைத்தறித்து, கணிலுகணிலென மாறியொலிக்கும் மணிகளைப்பொடி
யாக்கி, நீலகிரியைப்போலக்கதறிவீழுமபடிக்கு நடுமுதுபாதியில்வெ
ட்டித்தள்ளிகுதிரைப்பந்திகளாற்றாவிப்பொறகுச்சகளினால்அலங்க

ரிந்திருக்கும் பிடரிமயிரினையுடைய கண்டத்தைவெட்டி, செவிகளை யரிந்து, இரத்தினமயமாக விளங்குஞ்சேணியைப்பொடிபடுத்தி, வண்டயங்களைப்பூண்டு அலைகளையொப்பாத்தாவுங் கால்களைக்கண்டித்து: அவைகளின்மீதிருந்து போர்செய்யும் வீரர்களைத்தண்டித்து, மிகுந்த பாராக்கிரமசாலிகளாய்ப் படையேந்திருக்கும் பதாதிவீரர்களைச் சூழ்ந்து கரங்களிற்கொண்ட பாரிதகவிற்களைமுறித்து. அம்புக்கூடுகளை அதப்படுத்தி, போர்செய்யவேண்டுமென நினைந்த நெஞ்சைப் பிளந்து, பாணங்களைத் தொட்டகரங்களைக்கண்டித்து, கிரீடங்களைக் காற்றிற்பரக்கடித்து, விருதுக்கொடிகளையறுத்து, நுரைகளைப்போல வெளுத்து அலைகளுக்கொப்பாக அலைசந்திருந்தவெண்சாமரைகளைச் சிதைத்து, பளபளத்துவிளங்கும் வீரபட்டமணிந்த நெற்றியைத் துளைத்து சித்திரமயமாகவிருக்கும் அருகுகளையும் ஆலவட்டங்களையுஞ் சிதறடித்து, படபடத் தொனிகளுடனேவானத்தை யளாவியிருக்கின்ற துவசங்களைக்கண்டித்து, முத்துக்களினாலும் வெண்பட்டுக்களினாலும் நவரத்தினங்களினாலும் அலங்கரித்து சீலைப்பரப்பியிருக்கின்ற சந்திரவட்டக்குடைகளைக் காற்றாடிகளைப்போலப் பறக்கச்சாடி, மகரதோரணங்களை வானத்திற செல்லமோதி இரணபேரி ஜயபேரி-வெற்றிசங்கம்-எக்காளம்-சின்னம்-குடமுழாமுதலியபோர்ப்பறைகளைப்பிளந்து, இவ்விதமான கோலாகலமாக போரைச் செய்து, குயவன திகிரியைப்போல இரணக்களமெங்குஞ் சுழலளிக்காற்றிலும் முடுகித்திரிந்து கொடிய பாதகனாகிய சித்திராஜனுடைய புத்திரர்களின் இரதகஜதுரகபதாதிகளோடுங் கூடிய எண்ணாயிர வெள்ளஞ்சேனைகளையுஞ் சின்னாபின்னப்படுத்திவெள்ளிடையாக்கினார்கள்.

இவ்வாறுதங்கள் சதுரங்கசேனைகளும் உடைந்துபோன எளிமையைத்தனமனும் அதன்மனும் பார்த்து அதிக கோபாவேசங் கொண்டு ஞெரேலென்றுதங்கள் தேர்களைமுடுக்கி மந்திரகிரியைப் போலும் பாரித்திராகின்ற தங்கள் விற்களைவளைத்துநாணேற்றி அந்நவவீரர்கள்மீது அமோகமாகிய கொடியபாணங்களைச் சோனைமழைபோலப்பெய்து ஆர்ப்பரித்தார்கள். அப்போது மேலான பராக்கிரமத்தையுடைய நவவீரர்களுஞ்சங்கடப்பட்டு; வீரமார்த்தாண்டன் மனமூக்கமற்றுப்பிரமித்துவிட்டனன். வீரராக்ஷகன்களைத்து வீழ்ந்தனன் வீரமகேந்திரன் கரமதிலேந்தியவில்லோடு மதிமயங்கினின்றனன். வீரதீரன் சரீரம் பதைபதைக்கவோடினன். வீரமகேசுரன் சரீரத்திற்பெருகும் உதிரத்திலமூழ்கி அசைவற்றிருந்தனன். வீர

கேசரிகோபித்து அடியற்ற மரம்போல விழுந்தனன். வீரபுரந்தரன் எழுந்திருக்கச்சக்தியற்றுக்கிடந்தனன். வீராந்தகன் கண்பறுந்தடைந்து தோற்றமற்றுத் தழுவியிருந்தனன், வீரவாகு தேவர் சற்றே பின்னிட்டார். இவ்வாறு சேனைத்தலைவர்கள் ஒன்பதின்மருஞ் சின்னாபின்னப்பட்டு வாடிவருந்தி களைத்துமருண்டு திகைத்து சோர்ந்து ஒளித்துக்கிலேசித்துச் சண்டைகொடுக்கவலியுந் தைரியமுமில்லாமல் நடுநடுங்கிப் போனதைச் சண்முகப்பெருமானாகிய சுப்பிரமணியமூர்த்தி கண்டுமனம்பொறாமல் அதிகோபாவேசத்துடன் அவ்விருவர்களுடைய சிகையையும் பிடித்து நிலத்தில் மோதினர், உடனே அவ்விருவர்களும் மாண்டார்கள். பின்னர், சுப்பிரமணிய தேவர் நவவீரர்முதலிய சேனைத்தலைவர்களையும் அவுணபாதகரால் மடிந்த பூதவீரர்களையுமெழுப்பி அழைத்துக்கொண்டுசென்று மயூரேசமூர்த்தியினிடத்தில் அமர்ந்திருந்தனர்.

இப்பால் சிந்துராஜனென்பவன் புசபலபராக்கிரமத்தினையுடைய தனது புத்திரர்களிறந்த செய்தியைத் தூதர்களாலறிந்து மேககர்ச்சனையைக்கேட்ட நாகத்தைப்போல ஓய்ந்துவெண்ணையையொப்ப உருகி மனமடிந்து அழத்தொடங்கினன். அவன் அழத்தொடங்கவும் அவன் சுற்றத்தினரெல்லாம் அழுதார்கள். அப்போது அவனுடைய புரோகிதனானவன் அரசனுக்குத் தேறுதல் சொல்லத்தொடங்கி, ஓ மண்டலேஸ்வரா! தேவர்களையெல்லாஞ் சிறையில்வைத்தீர், திரிமூர்த்திகளாலுமழியாதமேன்மை பெற்றீர், இத்தன்மைத்தான பெருமிதங்களையுடைய உமக்கு யாதோ ஒரு காரணத்தால் பகைவந்துகூடினால் அதற்குத்துயரங்கொள்ளலாமா? நித்தியரென்னும் பெருமையினைப்படைத்த வியாசர்முதலிய முனிபுங்கவர்கட்கும், இந்திரன்முதலிய தேவர்கட்கும், யாவரையும் அதிகதியதிசையறிந்துகொல்லவல்ல யமதருமராஜனுக்கும், பிரமாதிமூவர்கட்கும், அழிவெய்துங்காலம் ஒன்றுண்டாயிருப்பதைக் கேட்டதில்லையோ? ஒருவனுக்கு அனந்தம் பிறப்புண்டாகையால் அவனுக்குத்தாய் தந்தையரும் அனந்தம்பேருளர்; புத்திரர்களும் அனேகருளர்; சுற்றத்தினரும் அவ்வாறேயிருப்பர். ஆகலால் தந்தையார்? தாயார்? புத்திரர்களார்? சுற்றத்தினரார்? ஓர்காற்றின்மோதலினால் அளவற்றதுரும்புகள் ஒருபக்கத்திற்சேரும் மற்றொருகாலினால் அவைகளனைத்தும் பலதிசைகளிற்பிரிந்துபோம். பகற்போதிற்பறவைகளெல்லாம் பலபுலங்களிற்சென்றுமேயும் இராக்காலம்வந்தால்யாவும் ஓரிடத்திற்சேரும்; மீட்டும்மறுநாளகாலையில் இங்கொன்றுமாய்ப்பறந்துபோம், இதுபோலன்றோ நமது வாழ்க்கையின்திறம்? இவ்வாறாக நமதுவாழ்க்கை யழிவுறுமென்றுமனதில்நின்

காத்துயரத்தைவைப்பீராகில் உடனே கவலையுண்டாகும். அக்கவலையுண்டாகுந்தோறும் வலியொடுங்கும். உமது வலியொடுங்குந்தோறுஞ் சத்துருக்களுக்கு வலிமேடும். அவர்கட்கு வலிமேலிட்டமாத்திரத்தில் சகலமான கெடுதிகளுஞ் சம்பவிக்கும். அக்கெடுதிகள் சம்பவிப்பதினால் இதுகாறுமடைந்தகீர்த்திகளனைத்தும் பாழாகப்போம் ஆதலாற்சத்துருக்கள் உண்டானபோதே அவர்களைக்களையவேண்டிய மார்க்கத்தினைத் தேடவேண்டுமென்று சொல்லினன்.

பத்தியிற்கூர்ந்தபுரோகிதன்சொன்னதனைத்தையுஞ் சிந்துராசன் மிகுந்தபத்தியோடுங்கேட்டுத்துயரத்தினின்றும் நீங்கி. தனது சுற்றத்தினரோடு போசனாதிகளை முடித்து விசாலமாகிய ஆயுதசாலையைச் சேர்ந்து பாசுபதமுதலியதிவ்வியபாணங்களையும்பலதேவர்கள்வேண்டிக்கொடுத்த அஸ்திரங்களையுஞ் சேகரித்துக்கொண்டு, கூறியகணைகளடங்கியிருக்கின்ற அம்புபெய்தூணியைமுதுகிலிறுக்கி, கரங்களில் திவ்வியமாகிய கோதைகளை மாட்டி விரல்கட்டாறும் பொன்மயமாகிய புட்டில்களைத்தரித்துச் சுந்தரதயிலத்தினால் வாரிச்சேர்த்துக்கட்டியிருக்கின்ற சிகைவிளங்குஞ் சிரத்தினிடத்தில் கோடிசூரியப்பிரகாசமாகச்சொலித்திருக்கின்ற வயிரமுடியையணிந்து அதன்மீது தும்பைமாலையினைச்சூடி மற்றபோர்க்கோலத்தையும் பூர்த்தியாகமுடித்துக்கொண்டு வெளிவந்து மகமேருவோ மந்தரகிரியோவெனச்சந்தேகிக்கும் உன்னதமுள்ளதாய் நவரத்தின காந்திகளைவீசிப்பரந்திருக்கும் இரதத்தில் ஆரோகணித்து இரணபேரி சயபேரிமுதலியவாத்தியங்கள் அண்டங்களதிரமுழங்கநாற்புறத்தும் இரதகஜதுரக பதாதிகளாகிய சயினியங் யகாந்தவெள்ளத்தினை நிகர்த்துப் புடைசூழ்ந்துவரச் சக்கரவாளகிரியைப்போலப்பாரித்து வளைந்திருக்கும் மதில்கள்சூழ்ந்ததனது கோபுரவாயிலைத்தாண்டி ரணபத்திர காளியானவள் குதிகொண்டு நடமாடும்படியான சமர்க்களத்தை யடைந்தனன்.

அவன்வரவை அகில காரணராகிய மயூரேசமூர்த்திதெரிந்து தாமும் யுத்தத்திற்கெழுந்தருளினர். அப்போது சுப்பிரமணியதேவர் அவரைப்பணிந்தெழுந்து அண்ணலே தேவரீர் அங்ஙனேயிருந்து அடியேனை யுத்தத்திற்குச்செல்ல விடைகொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவ்வாறே மயூரேசமூர்த்தி விடைகொடுக்கப்பின்னர் வீரபத்திரக்கடவுள், நந்திதேவர் புட்பதந்தன்பிருங்கி பூதராசன் இரணிய கருபபன் முதலியதலைவர்களோடு அளவற்ற வீரர்களும் பூதசேனைகளும் புடைசூழ்ந்து வரும்படியாகச்சுப்பிரமணியதேவர் தமது இரதத்தை முடுக்கியுத்தகளத்திற் சென்றனர்

அப்போது அளவற்ற இரதவீரர்கள்புடை சூழும்படியாக வந்து சிங்கராஜன் சுப்பிரமணிய தேவரோடும் எதிர்த்தான். கஜவீரர்கள் வீரபத்திரக்கடவுளோடும் நந்திதேவரோடும் எதிர்த்தார்கள். துரக வீரர்கள் புட்பதந்தனோடும் பிருங்கியோடு மெதிர்த்தார்கள். பதாதிவீரர்கள் பூதராஜனோடும் இரணியகருப்பனோடும் எதிர்த்தனர் இவ்வாறு சிங்கராஜனுடைய சதுரங்கசேனைகளுந் தனித்தனியே யெதிர்த்து வரலும், பூதராஜனும் இரணியகருப்பனும் பதாதிவீரர்கட்குள்ளே புகுந்துதமது தேர்களைவிட்டிறங்கிக்கதை-சக்கரம்-தோமரம்-பிண்டிபாலம்முதலிய ஆயுதங்களினாலுந் தேவாஸ்திரங்களினாலும் அளவற்ற யுத்தங்களைச்செய்து சின்னபின்னப்படுத்தி யுத்தகளம் முழுவதையும் பிணங்களால் மறைத்து, மீட்டுந் தமது தேர்களிலேறிச் சந்தோஷமுற்றிருந்தார்கள், பிருங்கியும்புட்பதந்தனுந் தங்கள் இரதங்களை விடுத்துக்குதிரைகளின்மீதேறிச் சிங்கராஜனுடைய குதிரை வீரர்கட்குள்ளே புகுந்து இடசாரிவலசாரியாகச்சுழன்று, வேலாயுதம் - மழுவாயுதம் - வாளாயுதம் - சூலாயுதம் - முதலியவைகளைக் கொண்டு யாவரையுஞ்சங்கரித்து குதிரைகளையெல்லாந் திசாதிசைகளில் வீழும்படி யெறிந்து, வெற்றிமாலையோடும் தங்கள் இரதத்திலேறி இன்னுமெதிர்ப்பவருண்டோவென்று எதிர்ப்பார்த்திருந்தார்கள் வீரபத்திரக்கடவுளும் நந்திதேவரும் யானைவீரர்கட்குள்ளே புகுந்து சர்வசங்கார ருத்திரரைப்போல விசுவரூபங்கொண்டு சில யானைகளைக் காலினாலுதைத்தும்,சிலயானைகளைக்கையினாற்குத்தியும் சிலயானைகளைப்பூமியிலேயறைந்தும்; சிலயானைகளைக்கடல்மலைஎண்டிசை ஆகாயமுதலிய இடங்களில் வாரிவாரியெறிந்துஞ்,சமர்செய்து அவைகளின் மீதேறியிருந்தேவீரர்களையெல்லாஞ்சங்கரித்து;மீட்டுந் தங்கள் இரதத்தின்மீதேறி இளைப்பாறினார்கள்.

இப்பால சுப்பிரமணியதேவர் இலட்சத்தொன்பது வீரர்களோடும் இரதவீரர்கட்குள்ளேபுகுந்து அவைகளையெல்லாம் இமைப்போதில் விண்குடியேற்றி அவர்களேறியிருந்த தேர்களினுடைய வண்டில் அச்சு மச்சு குத்துக்கால் கொடுங்கைகொடி குடைமுதலிய உறுப்புகளை வெவ்வேறாகச் சிதைத்துச் சிங்கராஜனுடைய இரதத்தையும் முறித்தெறிந்தனர். அதன்மீது சிங்கராஜன் மனங் கொதித்து இவனை இமைப்போதிற் பூமியிற் பதாதியாயிருக்கும்படி செய்கிறேனென்று சபதங்கூறி, ஓர் பெரிய தண்டாயுதத்தோடு சண்முகப்பெருமானுடைய இரதத்தின் சிகரத்துக்குச்சரியாக ஆக்ராமித்தெழும்பி அத்தண்டாயுதத்தைக் கரகரவென்று சுழற்றித் தேரின்மீது மோதினன். அப்போது முருகக்கடவுள் தமது வில்லில்

பத்து கணைகளைத்தொடுத்து அத்தண்டாயுதத்தைப் பொடிபடுத்தி மீட்டுஞ்சிலகணைகளைப்பிரயோகித்து அவனுடையகவசம்கிரீடம்வில் அம்புமுதலானயாவையும் தூம்சப்படுத்தினர். அதனால் சிந்துராஜன் முகம்வாடி வேனிற்காலத்து ஒதியமரம்போலத் தலைகவிழ்ந்து நின்றான், அவனை யெமதையனாகிய சுப்பிரமணியக்கடவுள் நோக்கி அடா மதியற்றவனே! அளவற்ற சேனைத் தலைவர்களும், அமைச்சர்களும், மைத்துனர்களும், புத்திரர்களும் யுத்தகளத்தில் மாண்டார்கள். நீயுமநேற்றையதினம் பின்னிட்டோடிப்போயினை இத்தினம் வந்து நிராயுதனாய்த் தனியாய் நிற்கின்றனை. இனிமேனும் எம்மை வணங்கிப் பிழைக்கக்கடவை. இனிநடக்கப்போகின்றகதியைச்சற்று மறிந்தாயில்லை. தேவர்களுடைய சிறையையும் முனிவர்களுடைய குறையையும் மூவுலகத்திலும் செய்துவருகின்ற கொடுமையையும் தயைதாட்சண்யமற்ற உனது உயிரையும் இந்நிமிடத்தில் எனதுகையொன்றினாற் சிதைத்து என்னை யுத்தத்திற்கேவிய மயூரேசமூர்த்திக்கு ஆனந்தமுண்டாக்குவேன்; ஆனால் தருமத்தை நினைந்து அவ்வாறு செய்யாமல்விடுத்தேன் நீ இப்போது சகல சேனைகளும் வாகனங்களும்மற்றும் நிராயுதனாய் ஏனென்பாரொருவருமின்றித் தனியாயிருக்கின்றனை; இன்று உனது நகரத்தைச்சேர்ந்து இளைப்பாறி மற்றுமுள்ள அவுணசேனைகளையும் ஆயுதங்களையுங்கொண்டு நாளையதினம் வாவென்று கிருபையோடுந் திருவாய்மலர்ந்தனர். அவையனைத்தையுஞ் சிந்துராஜன கேட்டுவெட்கமுற்று; அங்கேநிற்க மனமில்லாமல் நகரத்தை நோக்கிச்சென்று தனதரண்மனையிலிருந்தனன். சுப்பிரமண்ணியதேவரும் மற்றுவீரர்களுடனேசென்று விநாயமூர்த்தியைப்பணிந்து களித்திருந்தனன். அப்போது சூரியனானவன் வேலாயுதமூர்த்தியாகிய சுப்பிரமணியதேவர் முதலாகிய தலைவர்கள் நெடும்போர் விளைத்ததினால் அடைந்த இளைப்பையாறிக் கொள்ளுமாறும் அவுணர்களுடையயுத்தத்தாலடைந்ததனது வெம்மையைநீக்கிக்கொள்ளுமாறு மெண்ணினவனைப்போல மேற்றிசைக்கடலிற்குளித்துமறைந்தனன் உடனே இருட்கூட்டங்களானவைதமது உபகாரங்கொண்டு சஞ்சரிக்கின்ற அவுணர்கள், பேய்க்கூட்டங்கள் நடமாடுஞ் சமர்க்களத்தில் வீழ்ந்திறந்தமைக்கு மனம்வருந்தி அவர்களைக்காணும்படியாக ஐங்கரப் பெருமானுக்கஞ்சிப் பையப்பையச் செல்லுமாறுபோல எங்கும்பரவினன். பின்னர்சந்திரனானவன்வெவ்விதாகிய போரில்வெற்றிகொண்ட தமது சேனைத்தலைவர்கட்குவிநாயகமூர்த்திவழங்காநின்ற திருவருளைத்தானும் ஏற்கவருவான்போல இருட்கூட்டங்களையெல்லாஞ்சீத்து ஆகாயத்தில் வெளிப்பட்டனன். அப்

போது மயூரேசமூர்த்தியானவர் சமர்செய்து வந்த சேனைத்தலைவர்கட்கெல்லாஞ் சந்தோஷமுண்டாக்கித் தமது பாசறையிற்சென்று அமர்ந்திருந்தனர்.

அரண்மனையைச் சேர்ந்த சிந்துராஜன், முன்னாள்போல வேசற்றுத் தக்கார் முதலியோரழும்படித் தானுமழுது, துயரமுற்றிருந்தனன். இப்பால் சூரியனனைய பராக்கிரமத்திற் சிறந்த சிந்துராஜனுக்கு இன்றழிவுகாலம் நேர்ந்ததாதலால் அவனைக் கணேசமூர்த்தி சீறுஞ் சமயத்தில் அவர் விழிகளினின்றுதித்த வெகுளித்தீக்கு நாம் சகாயப்படுவோமென்றெண்ணி வருவான்போலக் கீழ்த்திசைக்கடலில் உதயமாயினன். உடனேயாவரும் நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு சந்தோஷமுற்றிருந்தனர். அப்போது நாரதமுனிவர் வந்து விநாயகமூர்த்தியைப் பேரன்பினோடும் பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி, இதனை விண்ணப்பஞ்செய்வதாயினர். தீனராகிய தொண்டர்கட்குற்ற வினைகளைப்போக்கிப் பாதுகாத்தருளும் பேரருட்டு விருதுக்கொடியைநாட்டியிருக்கும் பக்தவச்சலனே! நொடிக்குமுன்னே சகலலோகங்களையும் நீறுக்கவல்ல நுதல்விழியினைபடைத்த சுவாமிகள், இச்சிந்துராஜனோடு நெடுநாள் தமதருமைத் திருக்கரத்தில் ஆயுதங்களைச் சுமந்து யுத்தஞ்செய்யத் திருவுளங்கொண்டருளியதைப் பார்க்கின் ஈதொரு திருவிளையாட்டேயன்றி வேறில்லை. சுவாமிகள் திருமேனியை இடைவிடாது தரிசிப்பதனாலே அவனும் மகாதவத்தினையுடையவனாயினன். சுவாமிகள் அவனோடு நீடித்து யுத்தஞ்செய்யாமல் சீக்கிரமாய் சுவாமிகள் அடியேங்கள் மீது கிருபைவைத்து ஓர்கணப்போதிலவனை சங்கரித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு மயூரேசமூர்த்தி புன்னகை செய்து ஓ மகாமுனிவரே? நேற்றையதினம் அச்சிந்துவானவன் நமது தம்பிசெய்த போரிற்களைத்து நாணமுற்றுத் தனது அரண்மனையைச் சேர்ந்தனன். இன்று அவன் சமர்க்களத்தை நோக்கிவருவானாகில் அவ்வாறே முடித்தருளுவோமென்று திருவாய்மலர்ந்தனர். அவ்வாக்கியத்தை அருகிலிருந்த பிருங்கியென்னுங் கணநாதன் கேட்டு விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளிற்பணிந்தெழுந்து, சுவாமீ! அடியேற்கு உத்தரவுசெய்தால் அச்சிந்துவானவன் தனதுபடைகளோடு யுத்தகளத்திற்கு வரும்படி செய்கின்றேனென்றனன். அவ்வாறே கணேசமூர்த்தி விடைகொடுக்க, உடனே, பிருங்கியானவன் கண்டகநகரைநோக்கிச்சென்று மண்ணையும் விண்ணையும் இரண்டடியாக அளந்த விண்டுவைப்போல விஸ்வரூபங்கொண்டு நகர்ப்புறத்திற் காவல்கொண்டிருக்கும் அவுணவீரர்களைச் சின்னபின்னப்பட

ட்டி, உள்ளேபுகுந்து புஜபலபராக்கிரமசாலிகளாகிய நூறுகோடி மூலப்படைகளையுமெதிர்த்துளத்தகையருங்கொண்டாடித்துதிக்கும் படிக்குக் கோலாகலமாகிய போரைச்செய்துதிருப்பாற்கடலைக்கடைந்த மந்தரகிரிக்குச் சமதையாகப் பாரித்திராநின்ற பாதங்களைக் கொண்டு சிலரைஉதைத்துப்பூமியிற்றேய்த்தும்,சிலரைகருடல்சரிய மிதித்தும், சிலரைப்பஞ்சுபோலச்சதைத்தும், சிலரைப் பூமியுளடக்கத்தாக்கியும், சிலரை திசாதிசைகளினெற்றியும்,சிலரைச்சமுத்திரங்களில்வீசியும்,சிலரைவானவெல்லையிற் கடாவியும், சிலரைமூளைகள் சிதரவதைத்தும் சிலரைக்கரங்கள் தோள்கள் முதுகுகள் நுறுங்கச் சாடியும், இவ்வாறு கால்களைச் சக்கிராகாரமாகச்சுழற்றிச் சின்னா-பின்னப்பட மாய்த்தலுங்கோபந்தணியாமல் தனது கரங்களால் சிலரைப்பற்றிக் கழுத்துகளையொடித்தும், சிலரைப்பற்றி மார்புகளைக்கிழித்தும், சிலரைப் பிளந்தெறிந்தும், சிலரைப் பதைபதைக்கத் தோலையுரித்துவீசியும், சிலரைப்பிசைந்தும், சிலரைக்கசக்கியூதியும், சிலரைவாரிவாரி அண்டகோளகைக்கப்புறத்தில் வீசியும், சிலரைப்பல்லுதிரமோதியும், சிலரைக்காலையுந் தலையையும் வட்டாகாரமாகச்சேர்த்துச் சக்கரங்களைப்போலுருட்டியும், சிலரை அம்மானையாடியும், சிலரைப்பந்தையொப்பவெறிந்தும், இவ்வாறு சூருவளியை நிகர்த்துவளைந்து வளைந்து ஒருவரையும் அப்புறமிப்புறம் போகவொட்டாமலலைத்து நொடிக்குமுன் முந்நூறுகோடி மூலப்படைகளைக்கொன்று சொர்ணமயமாய் நவரத்தின காந்திகளை வீசிமேருவையொப்பப்பரித்து வானத்தையளாவநின்ற கோபுரத்தை வேருடன் பறித்தெறிந்து, சிந்துராஜன்வீற்றிருந்து, அரசு செலுத்துஞ் சபாமண்டபத்தைத் தூளாக்கி, அவுணராஜன் வாசஞ் செய்யு மரண்மனையையும். அவன் செல்வப் பெருக்கையுமதப்படுத்தி, அவுணவீரர்கள் வாசமாயிராநின்ற மாடமாளிகைகள் உப்பரிகைகள முதலியவைகளை யிடித்தெறிந்து அளவற்ற மிருகங்களும் பறவைகளும் உல்லாசமா யுலாவியிருக்கின்ற சோலைகள் தோப்புகள் உய்யானவனங்கள் செய்குன்றுகள் மேடைகள் மாடங்கள்முதலியவைகளைப்பறித்து அஷ்டதிசைகளினும் வீசி, அளவற்ற சிரங்களைக்கொண்டு சொலித்திராநின்ற சித்திரக்கூடங்களை வாரியெறிந்து இராச வீதிகளிலெறிந்து சந்திரகாந்தம் இந்திரநீலம் முதலியவைகளாற் சமைத்திருக்கின்ற மேனிலைகள திண்ணைகள் முதலியவைகளைப்பாதங்களினுலுதைத்து உருட்டிப், பகடசாலைகள் நாடகசாலைகள், ஆயுதசாலைகள, கல்விச்சாலைகள் முதலியவிடங்களை இடித்துகரவி, தடாகங்கள், சித்திரக்குளங்கள், ஏரிகள், மடுக்கள் முதலான

வைகளை உருத்தோன்றுமற்பாதங்களினுற்கலக்கி,தேர்க்கொட்டாரங்கள் யானைகூட்டங்கள் குதிரைச்சாலைகள் படைவீரர்விடுதிகள் முதலானவைகளைத் தகர்த்து படுத்தி, அவைகளிலிருக்கின்ற இரதகஜதுரகபதாதிகளைவாரிவாரித்திசைகளில்வீசி, பாதலம்வரையிலாழ்ந்து அண்டமுகட்டையளாவியிருக்கின்றகொத்தளங்களைப்பெயர்த்து பலசூத்திரங்களும், படைகளும் கருவிகளும் பொருந்தி விளங்கும் மதில்களை வீரவண்டயமணிந்தபாதங்களைகொண்டுருட்டி, பெரும் புறக்கடலைப்போல விசாலமாயாழ்ந்திருக்கும் அகழிகளைத் தூர்த்து; சகலலோகங்கட்கு மதிபனுய்க்கொடுங்கோல நடத்திவருஞ் சிந்து ராஜனுடைய மனைவியை அந்தப்புரத்தினின்றுமிழுக்கொண்டுவந்து அவனெதிரில்நிறுத்தி ஓர்வாளினுல அவளுடைய பரிமளமிகுந்த கூந்தலையறுத்தெரிந்து ஆர்ப்பரித்தனன்.

அக்கொடுமையைச் சிவகாருண்ணிய மென்ப தெவ்வளவு மில்லாமல் உலகங்களுக்கு யமனைப்போல அரசுசெலுத்திவருஞ் சிந்துராசன்கண்டு அதிககோபவெப்பத்தினுல் தேகமெங்கும் வெயர்த்தொழுக, விழிகள் கொவ்வைக்கனியைப்போலச்சிவந்து அக்கினிபொறிகளையிறைக்க சிவாசம் விடுந்தோறுந்தீயும் புகையும் வெளிப்பட உரப்பிக்கொண்டுவடவையையப்போல மண்டியெரிந்து தனது பாரித்தவில்லை வட்டாகாரமாகவளைத்து நாணேற்றி நாகாஸ்திர முதலிய தெய்வப்படைகளைப்பூட்டி ஆக்ராணுத்தமாக இழுத்துப் பிரயோகித்தான். அதைப்பிருங்கியென்னுங் கணநாதன் கண்டுதிரிபுராதிகளையெரித்த சிவபிரானைப்போலபபுன்னகைசெய்துஅவ்வவுணராசன்விட்ட அஸ்திரங்கட்கு மாறுகத்தானும் கருடாஸ்திரம் முதலியதெய்வப்படைகளைப்பிரயோகித்தவைகளைக்கணடித்தனன். இவ்வாறு பிருங்கியென்பவன் சிந்துராசனேடு சிறிதுநேரம் யுத்தஞ்செய்திருக்கின்றபோது அவனுடைய கிரீடம் பூமியில் விழும்படியாகத் தனது காலால் அவன் சிரததிலுதைததது ஞெரேலென்று ஆகாயமார்க்கமாகச்சென்று மயூரேசமூர்த்தியெழுந்தருளியிருக்கும் பாசறையையடைந்து அவருடைய திருவடிகளிற் பலமுறை பணிந்து களித்திருந்தனன்.

இப்பால்சிந்துராசனுனவன் பிருங்கியுதைத்த உதையினுல்கீழே விழுந்து மூர்ச்சையாகி மீட்டுந்தெளிந்தெழுந்து சுற்றுமுற்றும் பார்த்துததனது நகரமழிந்த செயல்களையும் சமுத்திரம்போலிருந்தமூலபலமுதலிய சேனைகள் மாண்டகாரணத்தையும் நினைந்து அதிகதுக்கசாகரத்திலழுந்தித்தனது மனைவிக்குண்டாகிய கேட்டையும் தனக்கு நேர்ந்த அவமானத்தையும் எண்ணியெண்ணி இதனைப்பேசிக்கொள்

வதாயினன் செவ்வந்த சடைமுடியையுடைய சிவபிரான்பெற்ற சிறு பிள்ளையானவனொருவன் சண்டைகொடுக்க அதனைக்காக்க வலியில்லாமல் அவன் விட்டபாணத்தினாலிரண்டு செவிகளையுமிழந்தோம், மறுநாள் அவனுடைய தம்பியாகிய சுப்பிரமணியனால் நமது பெருமைபெற்றபாணமெல்லாந் தொலைந்தோம். இன்று அவனுடைய சேனைத்தலைவர்களிலொருவனால் நமது நகரத்தையும் மனைவியினது கூந்தலையும் அறுத்தெறியப்பார்த்தோம் அன்றியும் அவனுதைத்த வுதையினால் நமது மகுடஞ்சிதையப்பெற்றுப்பிரேதத்தைப்போலக் களைத்து வீழ்ந்தோம். இந்த யுத்தம் ஆரம்பித்த நாள்முதல் பெரும் புறக்கடலைப்போல நம்மைச்சூழ்ந்திருந்த இரதகஜதுரகபதாதிகளையும், பராக்கிரமசாலிகளாகிய மூலப்படைகளையும், அதிசூரர்களாகிய சேனைத்தலைவர்களையும் விவேகசாலிகளாகிய அமைச்சர் மைத்துனர் புத்திரர்முதலாயினோரையும் பறிகொடுத்து இப்போது தனிமையாக யாதொரு சகாயங்களுமின்றித் தந்தகவுபாதையால் மிகவும் வருந்தி வாடுகின்றோம் வெகுகாலமாகப்பலரையும் வென்றிகொண்டு அரசு செலுத்தி வந்த நமது ஆண்மைத்திறம் வெகுதூரந்தீயாகவிருக்கின்றது. இன்னும் நமது விற்றிறத்தினால அரியபாணங்களைத்தயிரியங்கொண்டு செலுத்துவோமாயின பகைவனது பிராணனை வாங்குவதும அல்லது அவனதுபடைகளைவெல்லுவதும மிகவும் அரிது ஆதலால் வீண்யோசனைசெய்வதிற பிரயோசனமில்லை. இனியாம் பகைவனால இறத்தலொன்று அல்லது அவனை வெல்லலொன்று இவ்விரண்டிலொன்றை இத்தினமேமுடித்து வரக்கடவோமென்று சபதங்கூறி அதிகங்காபத்தோடுந்தனியனாயச்சமாகக்களந்தலையடைந்தனன் தூதுவனைக்கூவி இன்று செய்யும யுத்தத்திற்குச்சுப்பிரமணியன் வீரபத்திரன முதலிய தலைவர்களை வேண்டிலேன மற்றைச் சேனைத்தலைவர்களையும வேண்டிலேன. மயிலவாகனராந்விநாயகனொருவனுடனே யான தனியாயுத்தஞ்செய்யவேண்டி வந்தனன் இதனை அம்மயூரேசனிடத்திற்சென்று அறிவிக்க அதற்கு வேண்டுவோர் வேண்டப்பட்ட விழுப்பொருளை இமைக்குமுன் எண்ணற்றனவாக வளிக்குங்கிருபாமூர்த்தியாகிய விநாயகப்பெருமானிசைந்து தமது மயிலவாகனத்தை விரைவிற்றூண்டிச் சமாக்களத்தையடுத்தருளினா பின்னா சிந்தூராசனானவன் தனக்கடுத்த விபத்துக்களையெல்லாம் நினைந்து நினைந்து அதிககோபங்கொண்டு தான்பிறந்த போதே உண்டான சக்கரத்தையெடுத்து தூபதீபநைவேத்திய முதலிய உபசாரங்களை மனப்பூர்வமாக நிறைவேற்றிச்சகலலோகங்களுங் கலங்கும்படி கரகரவென்று சுழற்றிவீசினன், அதுவெளிப்பட்டமாத

திரத்தில் அளவற்றமகிமைகளைககாட்குத்திரிபுவனங்களுமநடுங்கும் படியாக அனலைச்சொரிந்து ஆவ் ஆவென்று ஆதிக வேகத்தோடு மேவிட்டு வருவதை எமது கர்த்தரறிந்து அதனைச்சிறிதுஞ்சட்டைபண்ணுமல் நகைத்திருந்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே தமக்கு எக்காலத்தும் முடிவில்லாதவராகியும் சகல படைகளுக்கும் ஆதாரமாகியும்நெடியவனுலு மறியவொண்ணுத நிமலராகியுமிருக்கின்ற கணேசமூர்த்தியை அச்சக்கரம் என்னசெய்யும் உடனே அஃதுகணேசமூர்த்தியையடுத்துமும்முறைவலம்வந்து அன்பர்கள்செய்யுமருச்சனை மலரைப்போல அவரது திருவடிகளில் வீழ்ந்து அடைக்கலமாயது, அதைத் திரிநேத்திரமும் சடைமுடியையும் மேலான முதன்மையும்பெற்ற சிந்துராசன் கண்டு நல்லகாரியமெனக்கோபநகை கொண்டவனுய் மானமும்வீரமும் மனதை வாட்ட வடவையுங்குளிர்ந்து போம் படிச்சீறி பிறந்தபோதே உண்டான படையாகியமற்ருெரு சூலாயுதத்தையெடுத்து தூபதீபநைவேதநியமுதலிய உபசாரங்களையானத பூசையினுல் நிறைவேற்றி, இங்கிவிடத்தில் எனது சத்துருவை வாட்டி என்னைக்காத்து இரட்சிக்கவேண்டுமென்று பிரார்த்தித்து விடுத்தனன் உடனே எமது காததரும் தமது பாசாயுதத்தை விடுத்தனர் அவ்விரண்டு தெய்வீகபபடைகளும் ஒன்ருேடொன்று பல மகிமைகளுடன் வேகமாய்ச்சென்றெதிாதது ஓாபுறத்தில் பிரசண்டமாருதத்தை யெழுப்பியும் ஓர்புறத்தில வடவாமுகாக்கினியைக் காட்டியும் ஓர்புறத்தில் ஆலகாலவிடத்தைபபெறிக்கியும்ஓாபுறத்தில் தாபாக்கினியையும்புகைபபடலங்களையும உண்டுபண்ணியும் ஓர்புறத்தில் உருததிரர் வயிரவர் வீரபததிரா காளி-துர்க்கைமுதலாயினேரைத் தோற்றுவித்தும் ஓர்புறத்தில் பூதபைசாசடாகினி வருக்கங்களைக்கக்கியும ஓர்புறத்தில் இடிமின்னல்குமுறல்களைப்பெருக்கியும் ஓர் புறத்தில் அக்கினிசிலைவிஷம் முதலியமழைகளைப்பொழிந்தும் ஓர்புறத்தில யானை புலி சிங்கம கரடி குதிரை முதலிய முகங்களையாய்ந்தும் ஒன்றனந்தமாகபபெறறிருக்கின்ற அசுரர்களைச்சிருட்டித்தும், ஓர்புறததில் வருணுஸ்திரம் வாயுவாஸ்திரம குபேராஸ்திரம் நாராயணுஸ்திரமசராபாஸ்திரம் முதலியதெய்வபபடைகளையுண்டாக்கியும ஓாபுறத்தில தோமரம்-பிண்டி-பாலம்-கபபணம்-முசலஞ்சக்கரம-எழு-மழு-தண்டம-ஈட்டி-வச்சிரம்-எறிவேல்-முசுண்டிமுதலிய ஆயுதங்களைபபடைத்தும் இவ்வாறுகொடுமையென்பன அனைத்தையும் பெருக்கிச்சராசரப பிரபஞ்சங்களனைத்துந் திகைத்து வாடும் படிக்குச் சர்வசங்காரக்கடவுளானவர் இரண்டு உருவைக்கொண்டு

திருவிளையாடல் செய்கின்றதைப்போல ஒன்றுக்கொன்று பின்னிடையாமல் விண்ணுலகம் மண்ணுலகம் முதலிய இடங்களிலுலாவி கறுத்தசலசமிர்ததிபெற்றகடலினிடத்தும்பெரும்புறவெள்ளத்தும் சக்கரவாளகிரிமீதிலும் அண்டபித்திகைச்சாரலிலும் பாதலத்திலு ந்திசைகளிலும்பரந்து அதிகவிநோதங்களைச்செய்து அண்டத்துக்கப் புறங்களிலுமோடிக்கொடியபோரைவிளைத்து ஆர்ப்பரித்தன.

அப்போது மயூரேசர்விட்ட பாசாயுதமானது மீறி நாம் இச்சூலத்தோடு நீடித்துயுத்தஞ்செயலதுவெகுநேர்த்தியென்று கோபித்து, ஓரொடிப்போதில் அச்சூலாயுதத்தினைத்துகளாக்கி, சிந்துராசனுடைய மார்பைப்பிளந்து கீழேவீழ்த்தி, தன்னிடத்துஞ்சூலத்தினிடத்துமுண்டாகிய பாணமுதலியவைகளைத்திருப்பிக்கொண்டு, தங்கள் கொடுமையினால் மாறுபட்ட அண்டரண்ட புவனங்களனைத்தையும் நிலைப்பிரகாரம் பெறச்செய்து சத்துருக்களாகிய அவுணப்பதர்களொழிய ஏனைய சீவராசிகளனைத்தையு மெழுப்பி மீண்டுதன்னைச்செலுத்தியருளிய மயூரேசமூர்த்தியினுடைய திருக்கரத்தில் முன்போலவேசென்று வீற்றிருந்தது. தேவர்கள் புட்பவருடஞ்சொரிந்தார்கள் ஆகாயத்தில்பஞ்சகருவிகளுமுழங்கினவர்களெல்லாம் வேதாகமங்களினாற்றுதி செய்தார்கள் சண்முகப் பெருமான் முதலிய தலைவர்களெல்லாங் களிப்புற்றுத்தாழ்ந்தார்கள்.

இப்பால் சிந்துராசன்யுத்தகளத்தில் மடிந்தமையைத் தேவர்களைச்சூழ்ந்து காவல்கொண்டிருந்த அவுணர்கள் தெரிந்து இகரவொருவரை யோடிப்பதுங்கினார்கள். தெய்வலோகத்தையாண்டுகொண்டிருந்தசம்பாசுரன், கும்பாசுரன், விருத்திராசுரன் சம்பாசுரன்முதலாயினோர் தனித்தனியே ஓடிமறைந்தார்கள் அப்போது மயூரேசமூர்த்தியானவர் கிருபைகூர்ந்து அவுணர்காவலினின்றும் விடுபட்டிருக்கின்ற தேவர்களை யழைத்து வருமாறு வீரபத்திரக்கடவுளுக்காக்கியாபித்தனர் அவர் அத்தேவர்களையெல்லாங்கொண்டுவந்து விநாயகப்பெருமானெதிரில்விட அவர்களெல்லாருங் கவலைகளினின்று நீங்கி வேதாகமங்களினால் அளவற்ற துதிகளைச்செய்தார்கள் பின்னர் கணேசமூர்த்தியானவர் அவர்கட்கெல்லாந்தமதுகிருபாநோக்கத்தையருளி, இதுகாறும் அவுணப்பதர்களாற் சிறைக்கணகப்பட்டுவாடியிருந்தீர்களோவென்று உபசரித்து நீங்களனைவரும் பழையபடிசென்று வாழ்வீர்களென்று அவரவர்கட்கு வேண்டிய வரங்களையு மளித்தருளி விடைகொடுத்தனர்.

அப்போது சிவபெருமான் உமாதேவியாரோடு இடபவாகனத்தின் மீதெழுந்தருளிப் பூதகணங்களனைத்தும் புடைசூழவந்து மயூரேசமூர்த்தியையும் சண்முகப்பெருமானையும் மிகுந்தகாதலோடு ஆலிங்கனஞ்செய்து ஏனையதலைவர்கட்கெல்லாந்தமது காட்சியினை யளித்தனர் உடனே அனைவரும் அவருடைய பாததாமரையைப் பலமுறை வணங்கி அவரிடத்தினின்றும் ஆனந்தமுற்றிருந்தனர் சிவபெருமான் உமாதேவியாரோடுந்தமது திருக்கயிலைக் கெழுந்தருளினர்.

அதற்குமேல் சக்கிரபாணியென்னுமரசன் தனதுகுமாரன்மடிந்தமையைக்கேட்டுமிகுந்த துக்கத்தோடுமெழுந்துசமர்க்களத்தையடைந்து அங்கு வீழ்ந்திருக்கின்ற சிந்துராசன் முதலாயினோரைத் தகனஞ்செய்து அவ்வவர்கட்குரிய கருமங்களை எல்லாம் கிரமப்படி நிறைவேற்றிமயூரேசமூர்த்தியைவந்து பணிந்தனன். அப்போது வானவர்குழாதனைக்காத்தற்பொருட்டுவாகைமாலை சூடியிருக்கின்ற உறவு பகையற்றகணேசமூர்த்தியானவர் அவனைப்பார்த்து அரசனே நீகருதியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தனர். அதனை இராஜன்கேட்டு சுவாமி! அடியேன் தேவரீருடைய திவ்வியசரணாரவிந்தங்களைத்தொழுதும் கண்ணால்தரிசித்தும் வழுத்தியும் பிழைத்தேன் எனது மைந்தனோதேவரீரை நிந்தித்தும், பகைத்தும், யுத்தஞ்செய்தும் பேரின்பமான முத்தியையடைந்தனன். ஆதலால் இதைவிடவெனக்கு மேலானவரம்யாதுவேண்டியது. ஆயினும் இத்தேவர் முதலானவர்களோடுந் தேவரீர் எனது மனையின்கணெழுந்தருளி அடியேன் செய்யும்பூசையினைக் கைக்கொள்ளவேண்டுமென்றுபணிந்திரந்தான் அதற்கு மயூரேசமூர்த்தியிசைந்து கிருபைவழங்கித்தமது திருக்கூட்டத்தோடு மெழுந்தருளினர். உடனே சக்கிரபாணிமஹாராஜன் இச்செய்தியைத் தனது நகரத்திலுள்ள பிரமுகாளுக்கறிவிக்க அவர்கள் அந்நகரமுழுவது மலங்கரித்து அவ்வவர்களுந் தனித்தனியே கையுறைகளேந்தி யெதிர்வந்து விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளிற்பணிந்தார்கள். அவர்கட்கெல்லாம் விநாயகமூர்த்தி கிருபைசுரந்துகண்டக நகரத்தையடைந்து ஓர்பால், மங்கலவாத்தியங்கள் முழங்க, ஓர்பால், பாவையர்நாட்டியஞ்செய்ய, ஓர்பால் முனிபுங்கவர்கள் துதிக்க ஓர்பால் தேவர்குழாங்கள்வாழ்த்த, இவ்விதவைபவங்களோடு இராஜவீதிகளைக்கடந்து, சூரியசந்திராள்வசிக்குமேனிலைகளை வாய்ந்த அரண்மனையிற்பிரவேசித்து, நவரத்தினமயமாயிராநின்ற சிங்காதனத்திலெழுந்தருளினர். சுப்பிரமணியதேவர்முதலான

தலைவர்களெல்லாம் வேறுவேறுதனங்களில் முறைமைப்படி வீற்றிருந்தார்கள். உடனே சக்கிரபாணிமகாராஜன், கற்பகாதி மலர்களைக் கொண்டு பரிவாரதேவர்களைப் பூசித்தபின்னர் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளை அன்போடுபணிந்து ஆராதித்தான், அதற்கு மயூரேசமூர்த்தி கிருபைசுரந்து பததுகரங்களும் அக்கரங்கள்தோறும் பத்துபடைகளும், தேசார்ந்து வனப்பெய்திருக்கின்ற திருவுருவமும் விளங்கிச் சித்திபுத்திகள்சமேதராய்ச் சிங்கவாகனமூர்ந்துகாட்சி தந்தனர். அக்காட்சியை யாவருங்கண்குளிர தரிசித்து அடக்கற்கரிய மகிழ்வோடு அற்புதங்கொண்டு சயசயவென்று போற்றி ஆனந்தக்கூத்தாடினார்கள். அப்போது விநாயமூர்த்தியானவர் சக்கிரபாணி மஹாராஜனை நோக்கி, அரசனே! உனதுகுமாரன் அளவற்றநாள் கொடுங்கோல் செலுத்திவந்தனன் அதனால் அவனைப் போர்முகத்தினின்றுங் கொன்றனம். இனிவுனது செங்கோலினால் உலகத்தைக் காத்து அந்தியகாலத்தில் நமது திருவடிகளில் அயிக்கியமாகுக வென்று திருவாய்மலர்ந்து, எழுந்தருளி சொர்க்கலோகத்தினுஞ் சிறந்து கண்டக நகரத்தைத்துறந்து தம்மோடுதொடாந்துவரும பிரமுகாளையும் சக்கிரபாணிமகாராஜனையும அங்கனேநிறுத்தி, அறமுதலிய நாற்பயன்களையுஞ் சிறககவளிக்குந் திரிசந்திக்ஷேத்திரத்வதயடைந்து வதிந்தருளினா.

இப்பால் சண்முகப்பெருமான் முதலியவீரர்களும் விண்டுவாதிதேவர்களும், நாரதராதி முனிவர்களுமனமகிழ்ந்து பூரணபொருளாகியும், புண்ணியமுதலாகியும், தம்மைபபோற்றுவார்க்கு இடாகொடுத்தருளுந்தேவதேவோத்தமராகியுமிராநின்ற விநாயகமூர்த்தியைப்பூசித்தார்கள். பின்னர்விண்டுவாதிதேவர்கள், எமதுகர்த்தனிடத்தில் விடைபெற்று அவ்வவர்களுடைய பதவிகளைசசேர்ந்துஆனந்தமுற்றிருந்தார்கள். இப்பால்நந்தியாதி கணநாதர்களும், முருகப்பெருமான் முதலியசேனைத்தலைவர்களும்: கைகடவாது கலந்திருப்பச் சித்திபுத்திகளோடும் அங்கனேசிறிது நாள்வசித்திருந்து, தமதுமயில்வாகனத்தைச் சண்முகப்பெருமானுக்கருளி இன்றுமுதல் எவ்வுலகமுமஉன்னைமயூரத்துவசனென்றுரைக்கவென்று அநுக்கிரகஞ்செய்து அவரையும்மற்றவீரர்களையும் தத்தமிருக்கையிற்செல்லுமாறு விடைகொடுத்துத்தமதுபரிசனங்கள்முனிச்சிரேஷ்டர்களோடுந்தாமெழுந்தருளிசகலவான்மாக்களாலும் பூசிக்கப்படுகின்றதமதுலோகத்தையடைந்தருளினர். அதுமுதல் விநாயகப்பெருமானுடைய திருவருளைக்கொண்டு சென்ற சக்கிரபாணிமகாராசன் தருமசாத்திரங்களின் முறைமைப்படி தனது அரசாட்சியைச்செலுத்திவந்தனன். அதனால் சதுர்வே

தங்களுந் தழைத்தோங்கின; திரிலோகங்களுந் துன்பமில்லாமல் வாழ்ந்தன; தேவர்கள் அவிற்பாகமுதலியவைகளைப் பெற்றுக்களித்திருந்தார்கள். தேவாலயங்களெல்லாம் பழையபடியோங்கிப் பூசை கொண்டன.

மயூரேச விநாயகர் திருவவதாரப்படலம்

முற்றிற்று.

---

ஆறுவது.

பாலசந்திர விநாயகர்

## திருவவதாரப் படலம்.

எம்பிரானுமையாரிடத்தவதரித்திங்கிருமைபூண் சிந்துரனைத் தப்பி, யும்பரார் சிறையை நீக்கிய துரைத்தாமுயா தவச்சௌனகமுனிவீர், நம்புமூ விண்டாந் திருவவதாரமஙலத்தகுபாலசந்திரனென், றிம்பர்வாழ்த் திசைக்கு மருநெறித் தாய தியாதெனி லியம்புதுங் கேளீர்:

ஓ சவுனகாதி முனிவர்களே! முந்திவிநாயகமூர்த்தியானவர் மயூரேச அவதாரத்தில் வேதசாஸ்திரங்களைத் தேவர்களிடத்தினின்றுங் கவர்ந்த கமலாசுரனைச்சங்கரித்து, மீட்டும அவ்வேத சாஸ்திரங்களை அத்தேவர்கட்குத்தந்த திருவிளையாடலும, பிந்திதேவர்களைச் சிறையில்வைத்த சிந்தாசுரனைக்கொன்று மற்றஅவுணர்கள்செய்தமாயையினையொழித்த திருவிளையாடலுஞ்சொன்னோம் அவரேமற்றொருபோது பாலசந்திரர் திருவவதாரங்கொண்டியமனுடைய வீரியத்தினின்றும் உதித்த அனலாசுரனுயிரை வாட்டுமாறுஓர்பிராமணச்சிறுவனைப் போலத் திருவுருக்கொண்டுசென்று அவ்வசுரனைவிழுங்கித், தேவர்களைக்காத்துப்பின்னர் அவனைவிழுங்கியவெப்பத்தை எண்பத்தெண்ணாயிர முனிவர்கள்செய்த மகத்துவமுள்ள தூர்வைஅருச்சனையையேற்றுவிலக்கியருளியதிருவிளையாடலொன்றுண்டு அதனை முன்னமே உபாசனாகாண்டத்திற் சொல்லியிருக்கின்றோம். இப்பால் தூமகேதுதிருவவதாரங்கொண்டு செய்தருளியதிருவிளையாடலைச் சொல்லுவோங் கேட்பீர்களாக.

பாலசந்திர விநாயகர் திருவவதாரப்படலம்

முற்றிற்று.

ஏழாவது
தூமகேது விநாயகர்
# திருவவதாரப் படலம்.



*விறன்மிகு மனலா சுரனுயிர் வாட்ட விப்பிரச் சிறுவனைத் தோன்றி, யறன்மிகு தேவர் பூசைகொண் டருளு மவ்வவ தாரமா மதனை யுறமுன மூரைத்தா மறிகவின் பேடுழன் றுரைத்திடுக் திரு வவ தாரம், பிறவிவிட் டோடச் சாற்றுதுங் கேளீர் பெருந்தவச் சௌனக முனிவீர்.*

ஓ சவுனகாதிமுனிவர்களே! விந்தியமென்னுந்தேயத்திலே மகி பாதினியென்னுமோர் நகரமுண்டு. அந்நகரத்தில் தானவர்கட்கெல் லாந் தலைவனாய், வானவர்க ளஞ்சும்படியான ஆண்மையினையுடைய வனாய் மெய்முடி கேசம் தந்தம் இவைகள் சாமளநிறத்தினனாய், அள வற்ற இரத்தினாபரணங்களைத்தரித்தகாட்சியினனாய்பராக்கிரமத்திற் சிறந்தசதுரங்கசேனைகளையுடையவனாய், சிவபிரானுடைய திருவடித் தாமரைகட்கு இடைவிடாதஅன்பினனாய்,அவனடியார்வேண்டுவன வற்றை யுதவிய பூசைசெய்கின்ற பத்தியினனாய், இருக்கும்போதும், நடக்கும்போதும், நினைக்கும்போதும் எப்போதும் பரமசிவத்தைத் தியானிக்கும் உள்ளத்தினனாய், வறியவராய் ஏற்றுருக்குமாற்றூது கொடுப்பதினால் கற்பகவிருக்ஷத்தைநிகர்த்தகையினனாய், எல்லாரும் புண்ணியமே இவனாக உருக்கொண்டுவந்ததென்று சொல்லும்படி யான புகழையுடையவனாய், தன்னுயிர்போல் மன்னுயிர்களைக்காத்தி ரட்சிக்கும் தயையுடையவனாய் மகமேருவின் சிகர்த்த செல்வத்தினை யுடையவனாய், சகல குணங்களிலும் மேலானவனாய் தூமாசுரனென் னும் பெயரினையுடைய ஓர் அரசனிருந்தனன், அவ்வரசனுக்குத்தன துமனம்போல வழிபடத்தக்கசிந்தாமணி தருமமூர்த்தி சம்பாதி-விபு லன்-கிட்காமன்-புத்திமான்-வித்துருபன்-ஒட்டன் என்னும்பெயரினை யுடைய எட்டமைச்சர்களும், சுமதி-சுகரி-சுப்புரு-சுமனோகரி-சுநேத் திரியென்னும் ஐந்துமனைவியர்களும், மகிபாலன்-நந்தன் - வீரபத்தி ரன்-தசரதன் என்னும் நான்கு குமாரர்களுமிருந்தார்கள், இந்தக்கு மாரர்கட்கும் அமைச்சர்கட்கும்சேனைத்தலைவர்முதலியமற்றைப்பரி சனங்கட்கும், அததுமராசன் தனது மாளிகையைப்போல அழகு பொருந்திய மாளிகை முதலான செல்வங்களைக்கொடுத்து சகலபோ

கங்களையும் தேவேந்திரனைப்போல அனுபவித்துக்குபேரனைப்போல அளவற்றபாக்கியங்களைப்பெற்று அரசாட்சிசெய்துவருகிறநாளையில் ஒருநாள் சந்திரகாந்தங்களாற் சமைத்திருக்கின்ற தனது கொலுச்சபையில் நவரத்தினமயமாயிராநின்ற சிங்காதனத்தின்மீதுவீற்றிருந்து மங்கையர்கள் செய்யும் ஆடல்பாடல் முதலியவைகளைக்கண்டுங் கேட்டுங் களிப்புற்று அயற்புறத்துமன்னவர்களெல்லாம்அடிவணங்கித்திறைதர அவர்கட்குக் கருணைவழங்கியிருக்கின்ற சமயத்தில் நான்கு வேதங்களையுமோதி, ஆறங்கங்களையு முணர்ந்துமற்றையநூல்களையெல்லாம்தெளிந்து நிறைந்த உள்ளத்தினராய் கோடி சூரியர்களைப் போல பிரகாசிக்குங் கீர்த்தியைப்பெற்றவராய் சந்திரசடாதரமூர்த்திக்கு அன்பினராய் திரிகாலங்களையு மறியவல்ல புண்ணியசீலராயிராநின்ற பிருகுமகாமுனிவர் தமது சீடக்கூட்டங்களோடும் அங்ஙனம் எழுந்தருளினர் அவரைத்தூமராசன்கண்டு இத்தபோதனர்நாம்முன்னர் செய்திருக்கின்ற புண்ணியபலத்தினால் வந்தனரென்று மனமகிழ்ந்து மிகுந்த பத்தியோடெதிர் கொண்டழைத்துவந்து, யோக்கியதரமான ஓராதனத்திலவரை யெழுந்தருளச்செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதிகளைக்கொண்டு பூசித்து பரிமளமிகுந்த புட்பவகைகளினாலருச்சித்து அளவற்ற தோத்திரங்களைச்செய்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து இதனைச்சொல்லுவதாயினன்.

சுவாமீ! தேவரீர் இங்ஙனமெழுந்தருளியதால் அடியேனுடைய கோத்திரமுங் குலமுஞ் சுத்தபவித்திரமாயின. அடியேன் சகலவிதத்திலுங்கிருதார்த்தனாயினேன். நினைத்ததெல்லாம் நொடிக்குமுன் உண்டாக்கத்தக்க வல்லபத்தையுடைய தேவரீருக்கு அற்பனேனிடத்தில் பெறத்தக்கதுஏதுமில்லையாயினும் தேவரீரையொத்தவர்கள் ஓர்காரியத்தைக்குறியாமல் ஓரிடத்திற் செல்லுவதில்லையாதலால் இங்ஙனந் தேவரீரெழுந்தருளிய காரியத்தை அடியேற்குத்தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்குப்பிருகு மகாமுனிவர் அவனைப்பார்த்து அரசனே தருமரூபியாய் எப்போதுஞ் சிவபிரானைத் தியானிக்கின்ற உள்ளத்தினையுடையவனாகலால் உன்னைக்காணவேண்டிப்பரிவோடும் வந்தோமேயன்றி வேறில்லை, அவ்வாறே உன்னைக் கண்டனம். இனிநமதாசிரமத்திற்குச்செல்லுகின்றோமென்று சொல்லினர். அதற்குமேல் தூமராசன் முனிபுங்கவரைமீட்டும்பணிந்தெழுந்து இருகரங்களையுங்கூப்பிசுவாமீ எல்லாவுலகமுந்தாழ்வாகச்சொல்லுகின்ற அசுரகுலத்திலடியேனவதரித்தும் அளவற்ற செல்வமும் சிறந்த அரசாட்சியும், கற்பிற்சிறந்த மனைவியர்களும் பராக்கிரமத்

தையுடைய புத்திரர்களும், மேலான போகங்களும் சத்துருக்களுக்கு இடையாதவீரமும், பெரியோர்கள் மதிக்கத்தக்கயோக்கியமும், சிவ பத்தியும், சிவனடியார்களிடத்தி லன்பும், மனிதர்களிடத்தில் தாபி னுஞ்சிறந்ததயையும் இன்னு மித்தன்மைத்தானநற்குணநற்செய்கை களெல்லாம் ஒருகாலத்தினும்மாறுபடாதுபொருந்தியிருப்பது எந்த விதத்தினலோ அதனை அடியேற்குத்தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான.

அதற்குப் பிருகு மகாமுனிவர் சந்தோஷித்து அரசனே! முற்ச னனத்தில் விருதியென்னும பெயரினையுடைய ஓரரசனுகப்பிறந்து வேதாகமபுராணங்களை நன்கு யுணர்ந்து அதற்குத்தக்கபடி மநுநீதி யின் முறைவழாமல் அரசாட்சிசெய்துதேவர்கள்முதலாயினோர்க்கு அன்போடு பூசைசெய்து, சத்ததீவுகளையும் ஒரேகுடை நீழலிலாண்டு பெரிதான போகபாக்கியங்களையனுபவித்து சிவபிரானையும் அவரடி யார்களையும மிக்கவனபோடும பூசிதது எலலாததருமங்களையுந்தாழ் வில்லாமல் மேன்மேலும் நிறைவேறறிததிரிகாலவர்தனங்களையுந்தவ றுமற்செய்து அளவற்ற தானங்களை அனபோடியற்றி இகபரமிரண்டு முனவசமாகததககதாய் வாழ்ந்திருக்கினற நாளையில் தொண்ணூற் றொன்பது யாகங்களைநிறைவேற்றி நூறுவது யாகந்தொடங்கிச்செய் வதாயினை அதனைததேவேந்திரனறிந்து இந்தநூறுயாகஞ்சரியாகச் செய்துமுடியுமாயினீ அவனது அரசுரிமைக்குவந்துவிடுவாயென்று பயந்து அந்தயாகததை நிறைவேறறவொட்டாமற செய்யததக்கது எந்த வுபாயததினலென்று ஆலோசித்துககொண்டிருந்தனன் அச்ச மயததில நாரதமுனிவா அவனிடததிறசென்றனா அவரை இந்திரன் காண்டலும் இனியாம எண்ணியகாரியததை இலேசாய் முடித்துக் கொள்ளலாமென்று மகிழநதவனய் உடனே அவரை யெதிர்கொண் டழைத்துவந்து ஓராதனததி லிருககச்செய்து அளவறற பூசைகளை யுந்தோததிரஙகளையுஞ்செய்து சுவாமி சகல நற்குண நறசெய்கைகளி னுஞ்சிறந்த விருதியென்னு மரசன் தொண்ணூறறொன்பது அசுவ மேதயாகஞ்செய்துமுடிதது இததினமறறொருயாகததையுஞ்செய்ய த்தொடங்கினன். அதைத்தடுபபதற்கு அடியேனு லாகாமையால் தேவரீர கிருபைசெய்து அதனை நடத்த வொட்டாமற்றடுத்து அடி யேற்கு இச்சொர்க்கலோகாதி பததியத்தை நிலைபெறச்செய்தருள வேண்டுமெனறு பிரார்த்தித்தனன.

ஓ துமராசனே! நீ எப்பிறப்பிற்செய்த வினையோ சகலமுந்தெ ரிந்த அமமுனிவர் அதற்கிசைந்துஓர்பிராமணராக வடிவங்கொண்டு

தண்டூன்றித்தலைநடுங்கித் தோல்நரைத்து கைநடுங்கிப் பார்க்கின்றோ
ர்களெல்லாம் மனதிரங்கும் படியாகக்கால்துவண்டு, உடல்சரிந்து.
சிவநாம கீர்த்தனைகளைச்செய்துக்கொண்டு சகலமுந்துறந்தவனைப்
போல உனது யாகசாலைக்குள்ளேவுந்தனர். அவ்வாறு வந்தவரை நீ
பிராமணரென்றே நினைத்து, அவரை யெதிர்கொண்டழைத்துவந்து
ஓராதனத்திலிருக்கச்செய்து, அருக்கியமுதலானவைகளைக்கொடுத்து
பிரவித்தரித்திரனுக்குப் பெரும்பொருள்கிடைத்ததுபோல மனமகி
ழ்ந்து சுவாமீ! தேவரீர் யார் சுவாமிகள் இங்ஙனமெழுந்தருளியகார
ணம் யாது அதனைச்சொல்லவேண்டுமென்று கேட்டனை அதற்குப்பி
ராமணராகவந்த நாரதமுனிவர் உன்னைப்பார்த்து அரசனே நம்மை
யாவருஞ்சிவசன்மனென்று துதிப்பார்கள் யாம் உன்னிடத்தில் ஓர்
காரியமாக வந்தனம் அஃதுயாதெனில உமது மனைவியின்மீது நமக்
கிச்சையுண்டாயிருக்கின்றமையால் அவளை நமக்குத்தரல்வேண்டு
மென்று கேட்டனர். அப்போது நீ மனம்வருந்தி சுவாமீ சிவபிரான்
கிருபையோடீந் திருவாய்மலர்ந்தருளிய வேதாகமங்களில் விதித்தவி
தியாதோ அவ்வாறு நடந்து வருவார்களாயின் அவர்கட்கு எக்கால
த்தும் புண்ணியமும் புகழுமுண்டாகும் அவைகளில் விலக்கானவை
களை யநுசரித்தால் பாவமும்பழியும் நேரிடும் ஒருவனுக்கு ஒருவன்
சந்தோஷத்தோடு கொடுக்கும்பொருள் யாதோ அஃது இம்மைமறு
மை இரண்டிற்தும் உதவியாகயிருக்கவேணடும் அவ்வாறின்றி இரு
மைக்கு மகாதபடி கொடுத்தால் பின்னர் கொடுப்பேனும் ஏற்போ
னுங்கொடிய துட்டர்களாகி யெல்லாநரகங்களினும் வீழ்வார்களாத
லால் எனைக்குரிய மனையாளொழிய ஏனைய பதார்த்தங்களில் யாது
வேண்டினுந்தருவேனென்று சொல்லினன். அதை பஞ்சவடிவாய்
வந்த மறையவர்கேட்டுச்சொல்லுவார் அரசனே யாம் இதுகாறும்
பிரமசரிய நிலையிலிருந்தனம். அப்பிரமசரியம், கிரகஸ்தம், வானப
பிரஸ்தம், சந்நியாசம் எனச்சொல்லுகின்ற நான்கு நிலைகளினுங்கிரக
ஸ்தாசிரம நிலையானது மிகவுஞ்சிறப்புடையதாதலால் அந்நிலையை
நமதுள்ளம் விரும்பியது அவ்விருப்பத்தை நிறைவேற்றத்தக்கவர்கள்
உன்னையன்றி வேறொருவரில்லை இரப்போரிடத்திலிரக்கமும் அவர்
கள் கோரியது எவ்வளவைப்பட்ட பதார்த்தங்களே யாயினும் அவை
களை இல்லையென்னாது கொடுக்கத்தக்க ஈகையும், உன்னிடத்திலுண்
டாயிருக்கின்றமையால் யாகஞ்செய்கின்றபோது ஒருவன்வந்து இரப்
பானெனில், அவ்விரப்பைபிரபுவி அனுபபுமாறு வேதாகமங்களிற்
கூறியிருக்கின்றபடி நீ நிறைவேற்றவில்லையென்று நல்லகுணத்தை

யும் அழகையும்வாய்ந்த உனதுமனைவியை இச்சித்துக்கேட்டனம் அதற்கு மிகுந்த ஆவலோடும் வந்திருந்த அதிதியானவன் வறியனாயேகும்படி உன்னிடத்தில் இவ்வுலகத்தாரறியவிருக்கின்ற உனது மனையைக் கொடுக்கமாட்டாதவகைகண்டிதமாகச்சொல்லி நம்மை வீணேபோகும்படி கைவிட்டனை இஃது உனக்கழகோவென்று சொல்லினர்.

அதனை நீதடுத்து அந்தணரே! எனது இராச்சியமும்எனக்கோர் மனைவியாதலால் அக்கையமனைவியைக் கொடுக்கின்றனை வாங்கிக் கொள்ளுக. அதற்குசசம்மதியில்லாவிடின் அளவற்ற கன்னியர்களை வரவழைத்துத்தருகின்றேன்: அவருள்தேவரீருக்கிஷ்டமானவளைக்கைக் கொண்டு கிரகஸ்தாசிரமத்தினை யாதரித்துக்கொள்ளுகவென்றுபிரார்த்துக்கூறினை, இவ்வாறு பிரார்த்தித்துக்கூறியும், அதற்கவர் ஒப்புக் கொள்ளாமல் அரசனே! ஒருவனொருபொருளையிச்சித்தால் அப்போதே அவனிச்சைப்படி அப்பொருள் கிடைக்குமாயின், அஃது தாழ்ந்த பொருளாயினும் உடனே அவனுக்குவாட்டந்தீர்ந்துமேலானமகிழ்ச்சியைக்கொடுக்கும் அவ்வாறின்றி அப்போதே அவன் இச்சித்ததைப் பார்க்கினுஞ்சிறந்தபொருள் வேறொன்றுகிடைத்தாலும் அஃது அவன்வாட்டத்தினைத்தணித்து மகிழ்ச்சியைத் தரமாட்டாது, இதனைநன்றாயறியக்கடவை இலக்குமிமுதலியதேவ மாதர்களினுஞ்சிறந்து அழகினையுங் குணத்தினையும்வாய்ந்த உனதுமனையாட்டியை விரும்பிக்குழைகின்றனமது மனத்திற்கு உனதுயிராச்சியத்தையுஞ், சிங்காரமுள்ள கன்னியரையும் அளவற்றதிரவியங்களையும், ஏனையமேலானபதார்த்தங்களையுங்கொடுத்தாலும் அவைகளை என்ன திருப்தியினைச்செய்ய மாட்டும். யாமிச்சித்தபடி கொடுப்பதுண்டாயின் உனது மனைவியைக்கொடு. அல்லையேல்நீயிச்சித்தது என்னிடத்திற கிடைக்கமாட்டாதென்று சொல்லி நமக்கு விடைகொடு நாம் வந்தவழியேநீங்கித் திரும்பிச்செல்லுகின்றோமென்று விருத்தபிராமணர் சொல்லினர். அதற்குநீ அறநன்றியைக் கொடுக்கத்தக்க பொருளையான் கொடேனாயினும், தேவரீர் இங்ஙனமிருந்துபோசனஞ்செய்து சிநேகவாற்சல்லியத்தை நடாத்திஎழுந்தருளவேணுமென்றுபிரார்த்தித்தனை அப்போது அந்தணனைப்போல வடிவங்கொண்டுவந்து இந்திரனுடைய கருத்தின்வழியேயிருக்கின்ற நாரதமுனிவர் நகைசெய்து, கண்கள் கொவ்வைக்கனியையொப்பச்சிவந்து, மனதிற்கபடத்தையேவைத்து உன்னைமிகுந்த கோபத்தோடும் நெறித்துப்பார்த்து, சிறிது மிரக்கமில்லாத அரசனே! வருணாச்சிரமத்தினைப்பார்க்கினும் முத்தியைத் தரத்தக்கது வேறொன்றுமில்லை. அத்தன்மைத்தானவருணாச்சிரமத்

தை உறுதியாகப்பிடிக்கேதோர்களுக்கு மறுமொன்றிலும் ஆசையிருக்கலாகாது. ஆசையுள்ளவர்களாயின் அவர்கள் அவ்வாச்சிரமத்தை உறுதியாகப் பிடியாரெனச் சொல்லவேண்டும். அப்படியிருக்க, முதல்வருணமானபிரமசரியத்திருக்கின்றநமக்கு இரண்டாம்வருணமான கிருஹஸ்தாசிரமத்தினைக்கொடாமற்போயினை. நல்லவருணாச்சிரமநிலைகளில்லாமற்செய்கின்ற தொழில்களினைத்துன்பத்தை விளைக்கத்தக்க இராட்சசத்தொழிலுக்குச்சமானமாகும், அதுபோல நீ மேலான யாகத்தினைச்செய்தும் இராட்சசத்தொழிலையுடையவனாயிருக்கின்றனை ஆதலால் மேல்வரும்பிறவியில் நீ இராட்சசனாகப் பிறக்கக்கடவையென்று சபித்து மீட்டும் உன்னை உருத்துப்பார்த்து இறிதேனும்இரக்கமில்லாமல்யாம் யாசித்ததைக்கொடாதபிழையினால் எமக்கு அவமானம் உண்டாக்கினையல்லவாவென்று கோபித்து, யாகசாலையிலிருந்த ஓமகுண்ட முதலானவைகளையும் பகர்ந்தங்களையுமழித்துச்சின்னாபின்னஞ்செய்துப்போயினர். பின்னர் நீ நடந்த செயல்களையெல்லாம்போதித்தாரகமுனிவரேதேவேந்திரனுடைய புணர்ப்பினால் இங்ஙனமவந்து இவ்வாறுசாபமிட்டுச்சென்றனரென்று யாகசாலையினின்றும் அரண்மனையிற்சென்று முன்போலவே சிவபூசை முதலானவைகளைச்செய்துகொண்டு அச்சனனத்திற் காலங்கழித்து இச்சனனத்தில்நாரதர்கூறிய சாபத்தின்படி தீமைசெய்கின்ற இராட்சசகுலத்திற்பிறந்தனை, அவ்வாறு பிறந்தும் முன் செய்திருக்கின்ற நல்வினைகளினாலே சகல நற்குணங்களையும்வாய்ந்து, யோக்கியாயோக்கியங்களையறிந்து சற்கருமங்களையே நடாத்திவருகின்றனையென்று சொல்லிப்பிருகுமுனிவர் தமதாச்சிரமத்திற்கெழுந்தனர் இவையனைத்தையுந் தூமராசன் கேட்டு தனதுமனத்துள் வைத்துக்கொண்டு, முன்போலவே சகலகருமங்களையும் வழுவின்றி நடாத்திக்கொண்டு வந்தனன்.

மாதவமிக்க சவுனகாதி முனிவர்களே? இவ்வாறு தூமாசுரன் வழுவின்றி வாழ்கின்ற காலத்தில், சகலபுவன கர்த்தராகி அடியார்களுடைய துன்பங்களையொழிக்கவல்ல விநாயகப்பெருமான் தூமகேது திருவவதாரங்கொண்டருளிய திருவிளையாடலைச்சொல்லுவோம் கேட்பீராக. முற்கூறிய தூமாசுரன், அரசியற்றிவருகின்றமகிபாதினியென்னு நகரத்தில அரசகுலத்திற் பிறந்தவனாய மேலானசெல்வத்தையும் கீர்த்தியையும்பெற்றவனாய். வேதாகமநெறிகளிற் றவறாதவனாய். பராக்கிரமத்திற் சிறந்தவனாய்மாதவராசனென்னும்பெயரினையுடையவனாய், ஒருவன்வசித்திருந்தனன். அவனுக்குச்சுற்பிறசிறந்த சுமுகையென்னும் பெயரினையுடையமோர்மனைவி யிருந்தனள். இவ்

விருவரும் அன்றிலைப்போல இணைபிரியாது வாழ்ந்துகொண்டு தருமமுதலானவைகளைத் தாழ்வில்லாற்செய்து தேவர்களைப்போல சகலபோகங்களையு மனுபவித்து இல்லறநெறியை இனிதுநடாத்திவருகின்றகாலத்தில் இவர்கட்கு நெடுநாள் ஓர் புத்திரோற்பத்தியுமில்லாமையினாலே மனம்வருந்தி அந்தணர் பெரியோர் முனிவர்கள் வறியோர் முதலியபேர்கட்கு அநேகதிரவியங்களையும் ஆடையாபரணாதிகளையுங் கொடுத்து அநவரதநாள் தவங்களைச்செய்துவந்தனர். அதனாலும்புத்திரனின்மையினால், ஓர்நாள் மாகவராசன்தனது மனைவியைப்பார்த்துக்கோபித்து இதனைப்பேசுவதாயினன் பெண்ணே இளமைவனப்பு அணிகலன்-சிருங்காரம்-திரவியம் முதலானவைகளாற் குறைவறவிருந்தும் நம்மை நற்கதியிற் சேர்ப்பிக்கவல்ல ஓர்புதல்வனில்லாவிடின் அவைகளா லென்ன பிரயோசனமதிற்காம், நாடோறும் உலகமெல்லாம் உன்னைமலடியென்றுசொல்லவுங்காணவில்லையா இப்பிரபஞ்சத்தில் நீயுமோர்பெண்பிள்ளையாக என்னைப்பிடித்தனையா சீ சீ உனது முகத்தைக்காணுந்தோறும் எனது மனமானது அழலாய்க்கொதிக்கின்றதே இவ்வாறிருப்பதைவிடக்காட்டிலேனுஞ் செல்லலாகாதா? இவ்விதபழிப்பினுக்கிலக்காகியசரீரத்தினை இந்நாட்டினுள் ஏன்வீணிற்சுமந்துகொண்டிருக்கின்றனை இனி என்னெதிர்முன்னர் வாராதொழிகவென்றுசொல்லிப்பின்னுஞ்சொல்லுவான் ஐயோ இவ்வுலகத்திலே யாவருந்தெய்வம் ஒன்றுண்டென்று சொல்லுவார்களே அத்தெய்வம் என்னிடத்திற்பொய்த்ததோ பூருவம் என்னபாவஞ்செய்திருக்கின்றேனோ இப்போது என்னதவங்களைச்செய்தும் என்னதருமங்களை நடாத்தியும் ஓர்புத்திரப்பேறில்லாமற்போமோவென்று தனக்குத் தானேசொல்லி வெறுத்துத்துக்கித்தனன்.

இவைகளையெல்லாம் அவன்மனைவியாகிய சுமுதைகேட்டவுஞ் சோகித்து பூமியிலே மூர்ச்சையாகிவீழ்ந்து வெகுநேரம்வரையிற்றெளியாமலிருந்து பின்னர்சிறிது தெளிந்தெழுந்து, தன்னையீன்றதாதவர்களையுந் தெய்வங்களையும்நொந்து, அதிக துயரத்தையடைந்து, இனிதவஞ்செய்வதே கருமமென்று துணிந்து வனத்திற்சென்றனள். அவ்வனத்தில் அளவற்ற சிங்கங்கள், புலிகள், கரடிகள் முதலான துட்டமிருகங்கள் எங்கணுஞ்சஞ்சரித்துக்கொண்டிருக்கவுமஞ்சாது மகாவிஷ்ணுவை மனதில்நினைத்து, ஆகாரம் நித்திரைமுதலானவைகளை நீத்து, வேறொரு சிந்தையுங்கொள்ளாமல் சிலையைப்போல அசைவற்றிருந்து, சரீரமெங்கும்புற்றுகள் வளர்ந்துமூடிக்கொள்ளும்படியாகப்பன்னிரண்டுவருடஞ்சலியாமல் மிக்க வைராக்கியத்தோடு

தவஞ்செய்துகொண்டிருந்தனள். அத்தவத்திற்கு எல்லாமூர்த்தங்களுந் தாமாகவிருக்கின்ற விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து அவள்தியானித்தவாறே தமதுகரங்களில் சங்குசக்கரங்கோதண்ட முதலானவைகளையேந்தி மகாவிஷ்ணுவைப்போலத் திருவுருக்கொண்டு அவளெதிரிற்பிரத்தியட்சமாயினர். அவரைக்கறபிற சிறந்தமேலான தெய்வமே நமக்குவழிகாட்டுந்துணையென்று தனதுள்ளத்தில் உறுசுமுதை கண்டு நாராயணமூர்த்திவந்துவிட்டனரென்று ஞெரேலென்றெழுந்து கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சொரிய, உடலெங்கும் உரோமாஞ்சிதம் பூப்ப, இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி, சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து; தனது மனத்திலுள்ள துக்கங்களையெல்லாம் விண்ணப்பஞ்செய்வதாயினள். அடியேனையாட்கொள்ளுமாறு கிருபைசெய்தெழுந்தருளிய கர்த்தனே! சமுசாரமென்னும்பெரிய சமுத்திரத்திலிருக்கின்ற அடியேங்களைக்கதியென்னுங் கரையிற்சேர்ப்பிக்கவல்ல ஓர் புத்திரனில்லாமையால் அடியேனைக் காதலர் பலவாறு சீற அதனால் மிகுந்த மனவருத்தத்தோடு இக்காட்டில்வந்து தேவரீரைத் தியானஞ்செய்துகொண்டு தவத்திலிருக்கின்றேன். இங்கு அளவற்ற மிருகங்கள் சஞ்சரித்துக்கொண்டிருந்தும் இந்நாள்வரையில் அவைகள் என்னைக் கொன்றுதின்னாமல் விட்டுவிட்டதையோசிக்குமிடத்து அடியேனைப்பாவியென்றுநினைத்தனபோலும், கிருபைக்கடலாகவிருக்கின்ற தேவரீர், மனமுருகிவாடுகின்ற அடியேனை முற்றிலுங் காத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அப்போது அரவணைச்செல்வராகவந்த விநாயகமூர்த்தி அச்சுமுதையைப் பார்த்து ஓ மடவாய்! உனக்குவேண்டியவரங்களைக்கேள் தருகின்றோமென்று திருவாய்மலர்ந்தனர்.

அதற்கவள் அவரைப்பணிந்தெழுந்து சுவாமி! தேவரீருக்குச்சமானமான பராக்கிரமத்தினையுடைய ஓர்புதல்வனை அடியேற்குத்தரல்வேண்டும்! இதுவே யான்கேட்டுக்கொள்ளக்கருதியவரமாகும், அவ்வரம் அடியேற்குக் கிடைத்தாலமாத்திரம் என்னைக்கோபத்தோடும் விலக்கியகாதலர்முகத்தின் முன்னஞ்சென்று இனிவாழ்ந்திருப்பேன். கிடையாவிடில் இங்ஙனே தேவரீருக்கெதிரில் உயிரைமாய்த்துக்கொள்ளுவேனென்று விண்ணப்பஞ்செய்துகொண்டனள். இவ்வாறு சுமுதையானவள் மிக்க உறுதியோடுங்கூறியவசனங்களைச்சுவாமிகேட்டு சந்தோஷங்கொண்டு, அளவற்ற பக்தியையுடையவளே! உனதுகருத்தின்படி நம்மையே நீ புத்திரனாகப் பெறுவையாதலால் இனியொன்றற்கு மஞ்சலையென்று திருவாய்மலர்ந்து தமதுகரங்களை அவள்சென்னியின்மீதுவைத்து அனுக்கிரகஞ்செய்து வரந்தருளினர்.

இப்பால் கிடைத்தற்கரிய வரத்தினைப்பெற்று ஆனந்தமுற்றிருக்கின்ற சுமுகையானவள் அவ்வனத்தைவிட்டுத் தனது நகரத்திற்குப் போகும்படியாகத்திரும்பினள். அப்போது வழிதெரியாமல் விம்மித் துயரமடைந்து (சமுசாரமென்னுங்காட்டில் வாதனையென்னு மிருகங்கள்தாக்கச் சுற்றமென்னுங் கொடிகள் நாற்புறத்து மிழுக்குமாறாக மென்னுங்கானலைச் சலமென்று கருதித்தாவுகின்ற உள்ளமென்னும் ஓர்மானுக்கு அட்டாங்கயோகமே அதனது தாபாக்கினியைத்தணிக்க வல்லமேகமாகும், அத்தன்மைத்தான மேகத்தாற்பொழிந்த திவ்விய தீர்த்தமாகிய)பரவத்துவைமனமுதலாகிய முக்கரணங்களாலும் அங்கைநெல்லிக்கனிபோல எளிதிலடைந்தும், அதனை அக்கருத்துவிருத்தாது கைவிட்ட பயித்தியக்காரியாகிய வெனக்கு வழிகாட்டத்தக்கவர்கள் யாவரிருக்கின்றார்கள். ஆயினும் நம்பினோரைக்காத்து இரட்சிக்வல்லமேலான தெய்வமே நமக்கு வழிகாட்டுந்துணையென்று தனதுள்ளத்தில் உறுதியாகநினைத்து அவ்வனத்தைவிட்டு நடந்துகொண்டேயிருந்தனள். அவ்வாறு நடந்துகொண்டிருக்கையில் அவளெண்ணப்படி அந்தமேலான தெய்வமே வழிகாட்டச்சென்றவர்போல அவ்வனத்தையெல்லாங்கடந்துசென்று தனது நகரமானது எளிதிற்றோற்றக்கண்டு அதனைச்சமீபித்தனள். அப்போது அந்நகரத்தார்கண்களுக்குச் சுமுகையினுடைய தேஜசானது அவள்செய்த தவமகிமையினாலே ஒருசோதிவருகின்றதாய்த் தோற்றி, இதென்ன அற்புதமென்று திகைத்தவராய் பன்னிரண்டுசூரியர்களும் ஒன்றாகக்கூடிவருகின்றார்களோ? அல்லது சந்திரனுடைய? காந்தியோ? அதுவுமல்லவெனில், பிரளயாக்கினியின் தேஜசோ? ஒன்றுந்தெரியவில்லையே, இச்சோதி யெவ்வளவுமழுங்காமல் வருகின்றதேயென்றுமயங்கிப், பின்னர் அவள்சமீபித்துவருதலும் அவர்கள் சந்தேகங்களினின்றுநீங்கி, முன்னர்வனத்திற்சென்றசுமுகையேபல்லவரங்களைப்பெற்றுவருகின்றனளென்றுதெளிந்துயாவருமெதிர்கொண்டுசென்றுசுமுகையைப்பணிந்தெழுந்து, தாயே! தேவரீர் இந்நகரத்தைநோக்கிமீண்டுவந்தது அடியேங்கள் செய்த பூசாபலத்தினாலன்றோ இனித்தேவரீர்எக்காலத்துஞ்சுகமுற்று வாழ்கவென்று அநேக உபசாரவார்த்தைகளைக்கூறி, அவள்காதலனுடைய க்ஷேமத்தினையறிவித்து ஆனந்தமுற்றிருந்தனர்.

பின்னர்சுமுகையானவள், அவர்களெல்லாந்தன்னைப்புடைசூழ்ந்துவரும்படியாக அவ்வவர்கட்குத்தக்கபடி மறுமொழிகள்கூறித்தனதுநகரத்திற்குச்சமீபமாகவந்தனள், அவள்வரவை மாதவராஜனறிந்து அளவற்றநாள் திசைதப்பிக் காணாமலிருந்தகப்பலைமீட்டும் சு

வனைப்போல ஆனந்தமுற்றுத்தேவர்கட்கும் முனிவர்கட்கும்பூசனைபுரிந்து ஆடையாபரணமுதலானவைகளைத் தானஞ்செய்து,தனது நகரத்தின்கணுள்ள நாகரிகர்களைக்கூவிச்,சதுரங்கசேனைகளோடுந்தனது மனைவியை எதிர்கொண்டழைத்து வருமாறு உத்தரவுசெய்தனன். அவ்வுத்தரவை அவர்கள் சிரமேற்கொண்டு அளவற்றசந்தோஷத்துடனே அவளையெதிர்கொண்டு சென்று நவரத்நமயமாயிராநின்ற ஆடையாபரணாதிகளைக் கொடுத்து, அணிந்துகொள்ளச்செய்துசிவிகையிலேற்றி சகலவைபவங்களோடும, அந்நகரத்துக்கோபுரவாயிலில் நுழைந்து, இராஜவீதிகளையெல்லாங்கடந்து, அரசனதுஅரண்மனையிற் கொண்டுபோயவிடுத்து, விடைபெற்று,யாவருந்தத்தமிருக்கையை நோக்கிச்சென்றார்கள் பின்னர் சுமுதையானவள் தனதுநாதனைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, அவனெதிரில் ஆனந்தவெள்ளம்பெருகநின்று, முன்னர் அவன் தன்னிடத்திற்காட்டியகோபத்தினால் நகரைவிட்டுச்சென்றதுமுதல்நடந்தகாரியங்களையெல்லாம்அவனுக்குவிவரமாகக்கூறினள். அவையனைத்தையும்மாதவராஜன் ஆனந்தத்தோடுங்கேட்டுதனதுபத்தினியின்மனங்குளிரும்படியாகப் பலவிதவுபசார வார்த்தைகளைக்கூறி அவளோடு சல்லாபமாய்க்கலந்துசகல போகபாக்கியங்களையுங் குறைவின்றி யநுபவித்துவந்தனன்.

அவ்வாறிருக்குங் காலத்தில் விநாயகமூர்த்தியினுடைய கிருபையினால்சுமுதை கருப்பமுற்றனள்,அதுமுதல் அவளதுதிருவயிற்றெழிற்குப்பையாகி நம்மைப்போலத்திருமாலைத் தாங்கிற்றில்லையென்றுசெம்மாப்புற்றிருந்த மெல்லிய இலைகளையுடைய ஆலமரமானது தனதுவீறனைத்து மொழிந்து பழுமரமென்னும் பெயரைவகித்து புத்திரனுருவங்காணவேண்டி நெடுநாள் சூரியனைநோக்கித்தவஞ்செய்திருந்தது அவளது கண்களானவை இனிமேலும்நமது காதலனுடைய புதல்வியைவாட்ட லொத்ததன்றென்று கருதினாற்போலக்குழிந்து காட்டி உள்ளிட்டன. விநாயகமூர்த்தி பிரத்தியட்சமானகாலத்தில்அவரை பலமுறைதுதித்துப்புகழடைந்த அவளதுபவளத்துண்டத்தைப் பழித்தசெவ்வாயைநண்ணிய அதரமும்அப்புகழையடைந்ததென்று சொல்லும்படி வெளுத்தது சந்தனம் புட்பம் ஆடை ஆபரணம்முதலியவைகளைத்தமக்குத்தமது நாயகியணியாதிருப்பதைக்கருதிப்பயந்துசந்தாபங்கரிந்ததுபோலும், அவள் கருப்பமுற்றாளென்று யாவருக்குஞ் சாட்சிகாட்டுமாறுபோலவும் அவளது முலைக்கண்களானதுநீலமணிபோலக்கறுத்தன. அற்பசுகங்களைவிடுத்து ஆண்டவனுடையதிருவடிகளை நாடினோர்கள் மேலானசுகத்தையடைவரென்றுசான்றோர்

கள்சொல்லும் வாக்கியத்திற்கிலக்கியமாக அன்னபானுதிகளையொழி த்து அளவற்றநாள் தவஞ்செய்திருந்த அவளுதரமானது நாளுக்கு நாள் மேன்மேலும் பெருகிவளர்ந்தது எந்நாளும் பகைவைத்திருந்த வரைப்பார்த்தவரில்லை யென்பதற்குச்சாட்சியாக நெடுநாள்தன்னைக் காணவொட்டாமல் நெரித்து வருத்திய தனங்கட்கு இப்போதுகாம் மையேதாழுங்காலநேர்ந்ததென்று உவகையோடு வெளிப்பட்டது போல் அவளது மின்னைவென்றமெலலிய இடையானது வீங்கிப்பரு த்தது இலக்குமிமணாளராகிய விண்டுவானவர் உதரத்துளிருந்துசெ ய்கின்றயோகத்திற்கு ஒரிடையூறும் வரலாகாதெனநினைத்தனபோல் அவளது பாததாமரைகள் நூபுரமுதலானவைகள் மெல்லசத்திருக்கு ம்படி தளர்நடைகொண்டன இவ்வுலகின்கணுள்ள கருப்பிணிகள் உண்ணத்தகாத வற்றை யுண்ணப்புகுவது உவப்பினாலன்றிவேறென் றினாலன்றென்று அறிந்திருக்கின்ற அவளெண்ணமானது மண்ணை யுண்டமாலுக்கு மண்ணையே கொடுத்தோமென்று நினைத்ததுபோல அட்டிலின்கணுள்ள புகைமேறுண்ட மண்ணை ஆவலோடும்உண்டது இவ்வாறு சுமுனையினுடைய உதரத்தில் தங்கிய கருவானது வளர் ந்து வருந்தோறும் மாதமாதம அவளுக்குக்கருப்பச் சின்னங்கள்யா வும் விளங்கி வந்தன.

அக்காலத்தில அந்நகரத்தில் அரசாட்சிசெய்துகொண்டிருந்த தூமாசுரனானவன் முற்சனனத்தில்நாரதமுனிவரிட்டசாபத்தினாலே அசுரகுலத்திற்பிறந்ததனமையினாலோசெங்கோல்முறைமையினின் றும் பிறழ்ந்தது ஒருநாள் மந்திரிகள் பிரதானிகள் முதலாயினோர்பு டைசூழ்ந்து வரும்படியாகச் சதுரங்கசேனைகளோடும வெளிக்கொ ண்டு அடுத்த இராச்சியங்களில் யுத்தஞ்செய்துவெற்றிகொள்ளுமாறு சென்றனன். அப்போது அவன் கேழக் கும்படியாக ஆகாயத்தில்ஓர சரீரியுண்டாகி "ஓ தூமாசுரனே! நீ செங்கோல் முறைமையினின்றுந் தப்பிமறுபுலத்தரசர்மீது படையெடுத்துச்செல்லுகின்றனை. உன்னை சங்கரிப்பதற்குமகாவிஷ்ணுவேவந்துசுமுனைவயிற்றிற்கருவாகிவளர் கின்றனர்" என்றுசொலலி மறைந்தது அதனைத்தூமராசன் கேட்ட தும் நடுநடுங்கிப்பதைபதைத்து,மூர்ச்சையாகி,மீட்டுந்தெளிந்தெழுந் து,தனது நகரத்தினைநோக்கி அமைச்சர் முதலாயினோருடன்அரண் மனையிற்சேர்ந்து இனி எனசெய்யக்கடவோமென்று எண்ணமிட்டுக் கொண்டு நமது இராச்சியமும்,உயிரும் ஏனையயாவும் அன்றேயழிந் துபோய்விட்டனவாக யிருக்கின்றதேயென்றுமனம் அடியோடுமயங் கியிருந்தனன் அப்போதுஅவ்வாறேமூடிவதற்குக்காரணமாகத்தரும

பூர்த்தியென்னும் மந்திரியானவன், அவ்வசுரனைப்பார்த்து மனுநீதிமுறைமைப்படி அரசியற்றிவருகின்ற இராஜாதிராஜனே ஒருவனுக்கு நாசம்வருகின்றகாலத்தில் அதனைதேவேந்திரனும், பிரமதேவனும், சிவபிரானும், ஏனையதேவர்களாலுந் தடுக்கமுடியாது, அது போலவே ஒருவனுடைய திரவியங்களையும் அசக்கமுடியாது; அளவற்றதவங்களினாலே உமக்குமேலானபாக்கியங் கிடைத்திருக்கின்றது.

அதனையாவரால் அழிக்கக்கூடும் ஆதலால் தேவரீருக்கு எக்காலத்தும் மரணமில்லை, சமுத்திரவயிற்றில் நாராயணமூர்த்தியே பிறந்தருளுவாராயின் அவரை நாமனைவரும் அடுத்து வணங்குவோம் அதற்காக அஞ்சவேண்டுவதென்னையென்று சொல்லினன் அதை விபுலனென்னும் அமைச்சன்கேட்டு அவனைக் கோபித்துத் தடுத்து; கவலைக்கடலில் மூழ்கியிருக்கின்ற அரசனைப்பார்த்து ஆண்டவனே வெற்றியின்மிகுந்த பராக்கிரமமுடையோனைச் சுத்தவீரரென்று சொல்லுவார்கள் அதனாலவனுக்கு எல்லாச்சுபங்களும் வந்து பொருந்தும் அத்தன்மைத் தானவீரனுக்கு வனங்களிற்சென்று வேட்டையாடுவதும், எதிர்த்து வந்த சத்துருக்களைச் சங்கரிப்பதும் சுபாவதன்மமாயிருக்கின்றன; ஆதலால்தேவரீருக்குச் சத்துருவாகச் சமுத்திரவயிற்றில் வளர்கின்ற கருவையழிப்பதில் ஒருபாவமுமில்லை மிகுந்த வஞ்சகமும் விண்டுவுக்குச்சுபாவமான குணமாகவிருக்கின்றமையால் அவருடைய மாயையின்திறம் ஒருவராலறியத்தக்கதன்று அப்படிஒருவேளைதேவரீடத்தில் கிருபையைப்பாதுபோலிருந்து பின்னாநாசமாக்குவர் இனிதேவரீருக்கு அருளவழங்கியிருக்கின்றசிவபிரானைத்தியானித்து சமுத்திரவயிற்றில் வளர்கின்ற கருவை விரைவில் சேதிப்பதே கருமமென்று சொல்லினன். அதை தூமராசன்கேட்டு கொடிய கொலைத்தொழிலுக்குப்பயந்துவிபுலனுடையயோசனையைத்தன் மனத்திற்கொள்ளாது விடுத்துமுன்னிலும் அதிகமாகக்கவலை கொண்டிருந்தனன் அக்குறிப்பைச்சுபாதியென்னும் அமைச்சனறிந்து புத்திமானென்னு மற்றோரமைச்சனைப்பார்த்துச்சொல்லுவான ஐயோநமதுவேந்தருக்கும இவ்வித இடுக்கண்வந்து நேர்ந்ததேயென்றுசொல்ல, அந்தப்புத்திமானவரறிவைநெருப்பிற்சுடுமென்று சொல்லிக்கொண்டு அரசனருகில்வந்து இவ்வுலகத்தைக்களைகணாயிருந்து காத்தருளும இறைவனே சமுத்திரவயிற்றிற் கருவாகிவளர்கின்றமகாவிஷ்ணு வெளிவருவாராயின் உடனே அசுரகுலத்தை வேரோடுகளைகுவர் எவ்விதத்திலுக் அன்பும்விளையுமேயன்றி இன்பம்விளையமாட்டாது முடிவற்ற வாழ்வினை வேண்டுவையாயின் அம்முண்மரத்தைமுளையிற்றானேகளைதல்



9 மலலாலரெனவந்த மயூரேசா.



10 கணபதி.

அவள் கணவனாகிய மாதவகணவனாகியமாதவராசனும்நித்திரைசெய்
திருக்கப்பார்த்து இதுவே நல்லதருணமென்று நிச்சயித்து யாவருக்
குந்தெரியாதபடி நான்குவீரரை விடுத்து அரவந்தெரியவொட்டா
மல் கதவைப்பெயர்த்து மெல்லமெல்ல அந்தப்புரத்தில் நுழைந்து
அயர்ந்து நித்திரைசெய்திருக்கின்ற சுமுதையும், அவள் கணவனையும்
மஞ்சத்தோடே உபாயமாயெடுத்து அநந்தரையடுத்த ஓர்காட்டினுள்
அசையாமற்கொண்டுபோய் ஓரிடத்தில்வைத்துஇதனை ஆலோசிப்ப
தாயினன். ஒழியாதநித்திரையில் மெய்மறந் திருக்கின்றவர்களைக்
கொல்லுவதுமகாகொடுமை அதனினும பெண்டிரைக்கொல்லுவது
பெருங் கொடுமை அப்பெண்டிரைக கருப்பத்துட னிருக்கும்போது
கொல்லுவது அதனிலும் பெருங்கொடுமை அந்தோ ஏன் இவ்விதக்
கொடுமைகளில் யாம் வீணே அகப்பட்டுக்கொண்டனம.

இவற்றினின்று ஒருவாறுதப்பித்துக்கொள்ளுவோமென்றெண்
ணுறுவோமாயின் அவற்றைவிட அரசனுடைய ஆக்கினையை மிக
வும்பெரிதாக எண்ணவேண்டியிருக்கின்றது. நாமும அவனாக்கினைக்
கஞ்சிவந்து சகல காரியங்களுஞ் செய்துவிட்டோம இனி நீடித்து
யோசனைசெய்திருப்பதில என்னபயன்என்று தனக்குத்தானே மிக்க
துயரத்தோடே எண்ணமிட்டுக்கொண்டிருந்தனன. அச்சமயத்தில்
சுமுதையானவள், நித்திரைநீங்கிக்கண்விழித்து நாற்றிசைகளிலுங்
காடாகவிருப்பக்கண்டு, ஈதென்னகாரணமென்று பயந்து நடுநடுங்கி
அரண்மனையில்நித்திரை செய்துகொண்டிருந்தநாம இப்போதுகாட்
டிலிருந்துகண்விழித்தோமே இதென்னசொப்பனமோ அல்லது
உண்மைதானோ? இவ்விரண்டுமன்றி ஓர்மாயையோ? வேறுயாதோ?
வொன்றுந்தெரியவில்லையே! சத்தியசந்தனராய், சுத்தவீரராய், பஞ்
சேந்திரியங்களையும வென்றவராய்; ஒருவர் பொருண்மீதும் இச்சை
கொள்ளாதவராய், தருமாதிகளிற் றவராதிருக்கின்ற நமதுநாயகரை
யும் அவ்வறநாள்வனத்திலிருந்து அரியதவங்களைச்செய்து நாராய
ணமூர்த்தியினிடத்தில் வரம்பெற்று அவ்வரத்தினால் நிறைந்த கருப்
பத்தோடிருக்கின்ற நம்மையுங்கொல்லும்படியாகயாரோ துட்டர்
கள்நமதரண்மனையிற்புகுந்து அயர்ந்து நித்திரைசெய்யுஞ்சமயத்தில்
நம்மை இம்மஞ்சத்தோடு மெடுத்துக்கொண்டுவந்து இக்காட்டில்
வைத்தார்களே ஐயையோ நமது பொல்லாதவினை இவ்வாறு செய்
வித்ததால் இதற்கு என்னசெய்வோம்தெய்வமே என்றுபலவாறுஎண்
ணமிட்டுக்கொண்டு அடக்கற்கரிய துயரத்துடனே தனதுநாயகனைத்
தட்டி சுவாமீ விரைவிலெழுந்தருள்க எழுந்தருள்க நம்மை யாரோ

இக்காட்டிற்கொண்டுவந்து வைத்தார்களே இதைத்தேவரீர் அறியாமல் நித்திரைசெய்கின்றீரே என்றுசொல்லி எழுப்பினள் அதைக் கேட்டவுடன் மாதவராசன கண்விழித்து திடீரென்று எழுந்துமனதில் அச்சங்கொண்டு நாற்றிசைகளையும் பார்த்தான்.

அப்போதுவிகதருமன் அவனெதிரில்வந்து அரசனேயான்தூமாசுரனுடைய சேனாபதி அவன் ஓர்நாள் திக்குவிஜயஞ்செய்யச்செல்லுகின்றபோது ஆகாயவாக்கொன்றுண்டாகிற் தூமாசுரனே! உன்னைக் கொல்லும்படியாக மாதவராசனிடத்தில் மகாபராக்கிரமசாலியாகிய ஓர் குமாரன் பிறக்கப்போகின்றான் என்றுசொல்லியது அதனை அவ்வரசன் கேட்டு உடனே உங்களைக்கொல்லும்படியாகத் தீர்மானித்து அதை நிறைவேற்றும்பொருட்டு என்னை ஏவினன், அதனிமித்தம் யான் உங்களை இக்காட்டிற்கொண்டுவந்து வைத்தேன் பின்னர்பழியையும்பாவத்தையுந் தீர்த்துவந்த மாயோசித்து ஆலசியமாயிருந்தேனென்றுசொல்லினன்! அவையனைத்தையுஞ் சூழ்ச்சிகேட்டுத் திடுக்கிட்டமகியப்பான் விழிகளில் நீர்ததும்ப உருக்கமோசித்து வீழ்ந்துமீட்டுந் தெளிந்தெழுந்து ஐயையோ! திருமாதவனே! நாராயணமூர்த்தியே! சகலஜீவராசிகளையுங் காத்தருளுகின்ற நாதனே! தேவரீருடையதிவ்விய சரணாரவிந்தங்களைப்பணிந்தவெளியவர்கட்கும் இந்தஆபத்துவரலாகுமோ என்றிவ்வாறு பலமுறை தோத்திரங்களைச்சொல்லுமாறுகொடிய பாதகனுகிய தூமாசுரனுலேவயப்பட்ட விகதருமனைப்பார்த்து அப்பா உத்தமனே! முன்னொருகாலத்தில் ததீசி யென்னும் ஓர்மகாமுனிவர் தேவர்களின் பொருட்டுதமது உயிரைவிடக்குமாறிசைந்து தெய்வத்தன்மையை யடைந்திருக்கின்றனர் அதுபோல நல்லோர்கள்பிறருக்கு உபகாரஞ்செய்வதையே பெரிதாகநினைப்பார்கள். நீயும் நல்லவனுகையால்எங்களைக் கதியாய்க்கொல்லலாகாதென்றுமனதிரங்கித்துப்பரியந்தம்ஆலசியஞ்செய்திருந்தனை இனிமேலுமெங்களைவதைசெய்யாமல் முழுதுங்காப்பாற்றுவிடுவையாயின் உனக்கு நிகரானநீதிபரர்எவ்வுலகங்களிலுமிரார்கள். ஐயோ ஒருஅபராதமுஞ்செய்யாதஎங்களைக் கொல்லும்படியாக மிக்ககீர்த்தியினைவாய்ந்த அரசன் உனக்கு ஆக்கியாபித்ததுஎன்ன அநியாயம் புத்திரப்பேற்றினைவேண்டியஎனதுகாதலர் மனங்குளிரும்படியாகஅளவற்றநாள் அரியதவங்களைச்செய்து வயிற்றிற் கருவடைந்திருக்கின்றேன், ஆதலால் எங்களை உயிரோடுவிடுவித்து உங்களரசன் சந்தேகமுறாது சந்தோஷமாகும்படி ஏதேனுமோர் யுக்தியினையோசித்து அவனுக்குத் திருப்திசெய்திடுக அல்லா

கர்த்தனே! இராஜரீகஞ் செய்கின்றபேர்கள் துயரத்திற்கிடங்கொடுக்கலாகுமோ? துயரமேலிடுந்தோறும் ஆண்மை குன்றிப்போகும். ஆண்மை குன்றவே சத்துருக்கள் தலையெடுத்துமேலிடுவார்கள். அப்பால் அபலனென்று உலகத்தாரெல்லாஞ் சொல்லுவார்கள். இப்பூவுலகில் தேவரீருடைய செங்கோலினுக் குட்படாததேயங்கள் எங்குமில்லை? ஆதலால் காட்டில்விடப்பட்டவர்கள் தேவரீர் கையிலகப்பட்டவர்களேயன்றி வேறில்லை. அப்படியிருக்கதேவரீர் ஏன் இவ்விததுயரத்துளழுந்திமயங்கவேண்டும். இனிநடத்தவேண்டியமார்க்கத்தினைச்சிறிது கேட்டருள்க. மாதவராஜனையும், சுமுதையையுங் கொல்லக்கருதுவது நன்றல்ல. அஃது பழியையும்பாவத்தையும் உண்டாக்குமாதலாலும், எண்ணிய வெண்ணப்படி நிறைவேறாமற்போனபடியினாலும், அவர்களைக் கொல்லுவதைவிட்டுப் பிறக்கப்போகின்றபிள்ளையைமாத்திரங் கொல்லவேண்டும். அதற்குமந்திரம், தந்திரம், யுத்தம், மாயைமுதலானவைகளில் சிறந்தவீரர்கள் நால்வரையாராய்ந்து இப்போதே அவர்களை அக்காட்டிற்செலுத்தி அச்சுமுதையானவள் பிரசவிக்குங் காலத்தை எதிர்ப்பார்த்திருந்து பிரசவித்தவுடன் அக்குழந்தையைக் கொல்லச்சொல்லி உத்தரவுசெய்தனுப்பவேண்டும். அவ்வாறேஅவர்கள்செய்து செயங்கொண்டு வருவார்களாயின், பின்னர் நமக்கு எங்குஞ் சத்துருக்களில்லையென்று சொல்லித்தூமராஜனுடைய மனோவியாதியை ஒருவராய் நீங்கினன் இவ்வாறு புத்திமான்கூறிய அற்புதத்தினைத் தூமராஜன்கேட்டு, அவனையும் மற்ற அமைச்சர்களையும், பார்த்து எவ்விதத்திலேனும் நீங்களே அதற்குத்தக்கபடி செய்துநிறைவேற்றுங்களென்று உத்தரவுசெய்தான். அவ்வாறே அவ்வமைச்சர்கள் நான்குவீரர்களை நியமித்து அனுப்பினார்கள். அவ்வீரர்கள் நால்வரும் உடனே சுமுதையிருக்கின்ற காட்டினுட்சென்று யாவரும் அறியாதபடி ஓரிடத்தில் மறைவாகப்பதுங்கி அவர்கள் பிரசவிக்குங் காலம் வருமளவுமகாத்து எதிர்பார்த்திருந்தார்கள். இவள் சரித்திரம் இவ்வாறாக;

முன்னர் சுமுதையினுடைய ஆபத்தை நீக்கும்படியாக வுண்டான வீரர்கள், பின்னர் தூமராஜனுடைய சேனைகளைச் சின்னாபின்னப்பட வாட்டிச்சரேலென்று மறைந்துபோனார்கள். அதற்குமேல் சுமுதையானவள், தானுந் தன்தலைவனும் தனியர்களாகியிருந்ததலால் இன்னுந்தூமராஜன் பலபடைகளை அனுப்புவானென் றெண்ணி, மிகுந்த மனக்கவலைகொண்டிருந்தனன். மாதவராஜனானவன் இன்னும் இராக்காலம் நீங்காமையால் ஒருவேளை சிங்கம்-புலி-கரடி-யானைமுத

வியமிருகங்கள் வருமென்றெண்ணி அவைகளைச்சங்கரிக்கும் பொருட்டு உறையிற்றங்கிய வாளாயுதத்தைக்கரத்திலேந்தி அவ்விரவுமுழுவதும்அதிஜாக்கிரதையோடிருந்தனன். அப்போது மூவுலகையுமீரடியாலளந்தமாதவமூர்த்தியை மைந்தனாகப்பெற்ற மாதவராஜனும் சுமுகையும் மயக்கந்தீர்ந்து உய்யும்படியாக எழுந்தவன்போலச் சூரியனானவன்கீழ்த்திசைக்கடலிற்குளித்தெழுந்து உதயகிரியினுச்சியிற் கிரணங்களை எண்டிசையினும் வீசிப்பிரகாசித்தனன். உடனே அவ்விருவருடைய இருக்கண்களும் இருந்தோடியனபோலக் கூதிராலுண்டானகுளிரும், இருளும் எங்குமில்லாதபடிமறைந்தது. பின்னர்சுமுகையும மாதவராஜனுஞ்சிறிது மனக்கலக்கந்தீர்ந்தவர்களாய், அவ்விடத்தில் நின்று நீங்கி அக்காட்டினருகே மற்றோரிடத்திற்சென்று கந்தமூலபலாதிகளைச் சேகரித்துக்கொண்டிருந்தனர். இவ்வாறேபிரதிதினம் வேறுவேறிடங்களில் முற்றுந்துறந்தமுனிவர்களைப்போலச் சஞ்சரித்துக்கொண்டு எப்போதும் எமது ஐயனைப்பிரசவிக்கப்போகின்றோமென்று எண்ணமுற்றிருந்தார்கள். பின்னர், சுமுகைக்குப்பிரசவகாலம்நெருங்க, முன்னர் அவளுக்கு வரங்கொடுத்தருளிய விநாயகமூர்த்தியானவர், அவளையும் அவள்தலைவனையும் காத்தருளும்பொருட்டுத் திருவுளங்கொண்டு, ஓர்குழந்தைவடிவமாகிச் சிவந்து பிரகாசிக்குந் திருவுருவமுமவெளுத்து அழகுற்றிருக்கின்ற திருமுகமும சந்திரனைத்தரித்த திருமுடியும், குண்டலமணிந்திருக்கின்றசெவிகளும் மழுப்படை, தாமரைமலர், செபமாலை, மோதகம் என்னுமிவைகளையேந்திய நான்குதிருக்கரங்களும், சோமசூரியாக்கினியென்றுசொல்லும்படியான மூன்றுவிழிகளும், கண்டவர்கள் கடைத்தேரும்படியான ஏனைய அவயவங்களும பிரகாசிக்கும்படியாக அவர்களெதிரிற் பிரத்தியட்சமாயினார். உடனே சுமுகையும் மாதவராஜனும் அக்குழந்தையினுடைய திருக்கோலத்தைக் கண்குளிரத் தரிசித்தும் அன்புபொங்கியமனத்தினராகி ஆனந்தங்கொண்டு, மனக்கவலைகளினின்று நீங்கி, மகிழ்ச்சிபெற்று, மறவர்களையன்றி யேனையருஞ்சஞ்சரிக்காத அக்காட்டினுள் சிறுகுழந்தையாகவந்த நீயாரென்று வினவினார்கள். அதற்குக்கணேசமூர்த்தி கிருபைசுரந்துபத்தியிற்சிறந்த அச்சுமுகையைப்பார்த்து அன்னையே வளர்பக்கத்தைக்கொண்ட பாலசந்திரனைப்போலப்பத்தசனங்கட்குப் பிரகாசத்தினைப்பெருக்கிக் கவலையென்னுமிருளைக்கடிவதில் திரிலோகங்களினும் பாலசந்திரரென்று சொல்லத்தக்க விநாயகமூர்த்தியே நாம்முன்னர் நீ புத்திரப்பேறுவேண்டிவனத்தில அரியதவங்களைச்செய்தபோது நாம் நீ தியானித்திருந்த நாராயணனாகிவந்து உனது கவலையொழித்தனம்.

இப்போது நம்முடைய பயத்தினால் இக்காட்டில் அலைந்துகொண்டிருக்கின்ற உங்கள் துயரத்தை நீக்குமாறு சிறுகுழந்தையாக உன்னிடத்திற்கு வந்தோம். எவ்வெவர்கள் எந்தெந்த தெய்வத்தைவழிபட்டார்களோ அவ்வவர்கட்கு அந்தெந்ததெய்வமாகி வரங்கொடுத்தருளுகின்ற தலைத்தெய்வம்யாதோ அதுவேநாம், உங்களுக்கும் அவ்வாறேவந்தனம், பாவனையிதுவாயினும், உங்களைநமக்குத்தாய்தந்தையாகக்கொண்டோம்; அதேதெனில்: முன்னர்நீவனத்தில்தவஞ்செய்தபோது விண்டுவினுடைய ரூபங்கொண்டுவந்தநம்மைப்பார்த்து தேவரீரைப்போலவொருபுத்திரனையளித்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தனை. அதற்கு அவ்வாறே வருவோமென்று வரந்தந்தோம். அவ்வரத்தைக்காத்தற்பொருட்டு யாங்களிருவரும் உங்கட்குப்புத்திரராகவேண்டிய முறைமையிருப்பதால் உனது கருப்பத்திற் கருவாய்த்தரிக்கும்படி விண்டுவுக்கு உத்தரவுசெய்தோம். நாம் ஸ்வேச்சையாக உங்கட்குப்புத்திரனாய்வந்தோம், இதனைஉண்மையாகநம்புதி கடவை. இனிதுராமன்யுத்தத்திற்குவரவிருக்கின்றனன்; அவனையாமே சங்கரித்து உனதுஉதரத்திலிருக்கின்றகருவையும் உங்களையும்அபாயம்வரவொட்டாமற்காப்பாற்றுவோம் முன்னொருதினம்நடு இரவில் உங்களைக்கொல்லும்படியாக அரண்மனையினின்று மெடுத்துவந்து இக்காட்டில்வைத்த விததுருமன முதலாகிய வீரர்களைக்கொல்லவும், கவலைக்கடலில்முழ்கியிருந்த உங்கட்குயாதொரு மோசமும் வராதபடிகாப்பாற்றவும், வந்தவர்கள் எத்தனையரோ அத்தனையரும் நமது கணங்களாகும் அக்கணங்கள் நமது திருவருளினாலே வீரராகவர்து சத்துருக்களை அதஞ்செய்தார்கள்? இதையுந் தெரிந்திருக்கக்கடவை இனியுனது கருப்பத்திலிருக்கின்ற நாராயணன் வெளிப்பட்டுவளர்ந்து உனக்கும் உன்புருஷனுக்குஞ்சந்தோஷம்வரச்செய்து தூயன் ஆண்டுவருகின்ற வுலகங்களையெல்லாந்தானாண்டுசகலதிசைகளினுந்தனது செங்கோலைச்செலுத்திவருவான். நீங்களும் அந்தியகாலத்தில்நமதுலகத்தையடைவீர்கள்.

அன்றியும், நமதுபாலசந்திரனென்னுந் திருநாமத்திற்குஉலகத்தார்பாலனும் பருவத்திற்சந்திரனைத்தரித்தவனென்றும, பாலப்பருவத்தினையுடையசந்திரனைத்தரித்தவனென்று, ஆன்மாக்களுடையமலபந்தவிருளைப் பாலசந்திரனைப்போல விலக்கியாட்கொள்ளுஞ் சுபாவத்தையுடையவனென்றும், உரைசெய்வார்கள். அந்தவளமைமிகுந்ததிருநாமத்தை எவ்வகைப்பட்ட இன்னல்கள்நேர்ந்தாலும் உச்சரிப்பையெனில், அவ்வின்னல்களனைத்தும்பறந்துபோகும்; இதனைச்சத்

தியமாக நம்பக்கடவையென்று திருவாய்மலர்ந்தனர். இவையனைத்தையுஞ் சுமுறைகேட்டுச் சந்தேகங்கொண்டனள். அப்போது ஒருவருமறிவிக்காமல்சகலத்தையுந் தாமேயறிந்துக்கொள்ளத்தக்க பாலசந்திர மூர்த்தியானவர், அதனையறிந்துஅக்குழந்தைரூபத்துடனேவாயினைத்திறந்துதமது பெருந்தகைமையைக்காட்டினர் உடனேசுமுறையானவள் திறந்தவாயினிடத்தில்முப்பத்துமுக்கோடிதேவர்கள்-நாற்பத்தெண்ணாயிரமுனிவர்கள்-வசுக்கள்-மநுக்கள்-கருடர்-கின்னரர்-கிம்புருடர்-காந்தருவர்-இயக்கர்-விஞ்சையர்-பூதர்-பைசாசர்-உரகர்-முதலாகிய உயர்திணையும், கீழுலகங்கள், மேலுலகங்கள்-மலைகள்-நதிகள் காடுகள்-கடல்கள்-மிருகங்கள்-பறவைகள் முதலாகிய அஃறிணையுந் தோற்றக்கண்டு தனதுமனத்திற்கொண்ட சந்தேகத்தினைமாற்றி, சுவாமியைபலமுறைவாழ்த்தி, ஆனந்தசாகரத்தில்மூழ்கி, திரிமூர்த்திகளும் ஏனையதேவர்களும் முதன்மையாகவிருந்து அநுக்கிரகஞ்செய்யவல்ல மூர்த்தியிவரேயென்றுதுதிசெய்தனள் உடனேபாலசந்திரமூர்த்தியினுடைய கிருபையினால் அச்சுமுறையினுடைய தனங்களிற் பகீரதியைபோலப்பால் சுரந்து பெருகியது, அப்போது சுமுறையானவள் அப்பாலசந்திர மூர்த்தியை எடுத்துத் தனது மடியின்மீது வைத்துக்கொண்டு பெருகி வருகின்ற பாலை எனது காந்தனுக்கு அன்போடும் ஊட்டினள். இவையனைத்தையும் முன்னர்மாயையினால்வந்துமறைந்திருக்கின்றநான்குவீரர்களுங்கண்டுவிநாயகமூர்த்தியினுடையவல்லபத்தையறிந்து மனதிலச்சங்கொண்டு அவ்விடத்தினின்றுமோடித்தூமாசுரனைப்பணிந்தெழுந்து அவனெதிரிற்கைகூப்பிநின்றுஇதனைச்சொல்லுவதானார்கள் ஓ இராஜாதிராஜனே! கேட்டருள்க; சுமுறையினுடைய கருப்பத்திலிருக்கின்றபிள்ளை இன்னும் பிறக்கவில்லை; ஆனால் அவனெதிரில் மனிதனாயில்லாத ஒருமகன் இப்போது பிறந்தான்; அழுதந்திரனுக்கே அடியேங்கள்நொந்து நிலத்தில்மூர்ச்சையாகிவிழுந்தோம்; சிலநேரத்தின்பின்னர்தெளிந்தெழுந்து அச்செய்தியையறிவிக்குமாறு தேவரீருடைய திருவடிகளை யடைந்தனமென்றுசொன்னார்கள்; முன்னமேதுக்கசாகரத்துள்மூழ்கியிருந்த தூமராஜன்அதைக்கேட்டவுடனே பின்னர் துக்கமேலிட்டவனாய்த் தானும்மதிமயங்கி மூர்ச்சித்து வீழ்ந்தனன். அச்சம்பவத்தை அருகிலிருந்த அமைச்சர்கள்கண்டு சிலசைத்தியோபசாரங்களைச்செய்து தெளிவித்தார்கள்.

பின்னர், தூமராஜனவன் தெளிந்தெழுந்து சத்துருநேரிட்டபோதுதாமதப்பட்டிருப்பது அரசர்க்கழித்தகுணமன்றாதலால், இனி விரைவில் அவனைப்போர்முகத்திலவெல்லவேண்டுமென்றுதுணிந்து

வடவைபைப்போலக் கோபித்துக் கொவ்வைக்கனியிலும் விழிகள் சிவக்கச் சீறிச் சபையிலிருக்கின்ற சகலரையும்பார்த்து நீங்களனைவரும் சர்வாயுதபாணியராய் உங்கள் வசத்திருக்கின்ற சேனாசமுத்திரங்களையெல்லாங் கூட்டிக்கொண்டு அதிசீக்கிரத்தில்வந்துசேரக்கடவீர்களென்று ஆக்கியாபித்தனன் உடனே அக்வாக்கினையை அமைச்சர்கள் சேனாதிபதியர்புத்திரர்முதலிய யாவருஞ்சிரமேற்கொண்டுபலதிசைகளிலும் நெருங்கியிருக்கின்ற தங்கள் சேனைகட்குமுரசறைவித்தனர். உடனேசர்வசங்காரகாலத்தில் சத்தசாகரங்களும்பெரும்புறக்கடலும் பெருக்கெடுத்தெழுவதைப்போலச் சகலசேனைகளும் அதிக உச்சாகங்களுடன் பேரொலிசெய்து அண்டங்களுங் குலுங்கத்தக்கதாகவார்ப்பரித்துவந்து நெடுநாளில்லாதசண்டைஇப்போதுகிடைத்ததென்னுங்களிப்போடு தங்கள்தங்கள் தலைவரைச்சேர்ந்தன பின்னர்த்தலைவர்கள் வயிரகவசங்களையணிந்து பாரித்தவிற்களைத்தாங்கித் தேவாஸ்திரங்களைச்சேகரித்து விஷத்துவையிலிட்டுக்கூரிய அலகையுடையபாணங்கள் நிறைந்திருக்குந் தூணிகளை முதுகிலிறுக்க, முத்தலைச்சூலம்-சக்கரம்-வேல்-தோமரம்-பிண்டி-பாலம்-எறி-ஈட்டி-எழுமழு முதலியபடைகளையுமெடுத்துக்கொண்டு தங்கள்தங்கள் சேனைகளோடு தூமராஜனுடைய அரண்மனைவாயிலே நெருங்கினார்கள்.

உடனே தூமராஜன்போர்க்கோலத்திற்குறியசின்னங்களையெல்லாந் தரித்துக்கொண்டு நவரத்நமயமாக விளக்குங் கிரீடத்திற்றும்பைமாலையைச்சூடித்திசைகளிலும் கடல்களிலும் வாகனத்திலுந்தாவும் வேகமுள்ளனவாய் இடியையொப்பக்கனைக்குங்குரலோசையைப்பெற்றபுரவிக்கூட்டங்களும், கன்னமதம்-கபோலமதம்-பீஜமதமெனச்சொல்லாநின்றமும் மதங்களையும் பெருக்கிப்பர்வதாகிருதியாக வீறிட்டு இருப்புலக்கைகளைத்துதிக்கரங்களிற்பற்றி அண்டங்கள்அதிரச்சுழற்றிவரும் யானையணிகளும்பொன்வண்டில் அச்சுமச்சுக்குத்துக் கால்கொடுங்கைமுதலிய சிங்காரங்களைக்கொண்டு குதிரைகள்சிங்கங்கள்-புலிகள்-யானைகள்-முதலியவைகளை அளவற்றனவாகப்பூண்டுநவரத்நமயமாய்ப்பிரகாசிக்குந்தேரணிகளும். நிமைப்போதில் அண்டங்களனைத்தையும்பிசைந்துதும் வலிமையுடையவர்களாய்பகைவரில்லாமையாற்புஜங்கள் தினவுண்டுவாடியிருந்த அளவற்றபதாதியணிக்தும் புடை சூழும்படியாகத்தனதுகோபுரவாய்களினின்றும்வெளிக்கொண்டு பொன்மலையைப்போலப் பாரித்திருக்கின்ற தனதுதேரில் மணிகள் கலகலவென்று சத்திக்கும்படியாகவிசிங்கத்தைப்போலப் பாய்ந்துகொடி டிலை சாமரை ஆலவட்டம் முதலியபோர்ச்சின்

கள் இருமருங்கிலும்நெருங்க இரணபேரி சயபேரி வெற்றிச்சங்கம் முதலியவாத்தியங்களோடு தனதுசேனைத்தலைவர்களும் இரதத்தை முடுக்கிச்சென்று மாதவராசனிருக்கின்ற காட்டை வளைத்துக்கொண்டு வேதாகமங்களாலெண்ணி யளவிடற்கரிய பாலசந்திரமூர்த்தியைத் தனதுமடித்தலத்தில்வைத்துத் திருமுலைப்பாலூட்டி யிருக்கின்ற சுமுதையெதிரிற் சென்று மணிகள்பதித்துப் பொற்கட்டுகள்பூண்டிருக்கின்ற மந்தரகிரியைப்போன்ற தனதுவில்லை இருகுதைகளும்பொருந்தவளைத்து அளவற்றபாணங்களைச் சோனைமாரியைப்போலக் கரவேகமாகப்பிரயோகித்தனர் அப்பாணங்கள் வெளிப்பட்டமாத்திரத்தில் புகைந்து எரிந்துகொண்டுவந்து பாலசந்திரமூர்த்தியினுடைய திருமேனியிற் கருத்தமேகங்களைப்போலச் சூழ்ந்துகொண்டன அதைச்சுமுதையும் மாதவராசனுங்கண்டு திகைத்து சரீரமுழுவதும்வியர்த்து மிகவும் பயந்துநடுங்கினார்கள்

அப்போது பாலசந்திரமூர்த்தியானவர் புன்னகைகொண்டு தமதுதாய்தந்தையர்பயந்து நடுங்குவதைப்பார்த்து நீங்கள் யாதொன்றற்கும் அஞ்சாதீர்களென்று திடங்கூறித் தமது திருவாயினின்று கொண்டல்கொண்டலா யெழும்பிவரும்படிப் புகைப்படலங்களைவிட்டனர். அப்புகைப்படலங்கள் வெளிப்பட்டமாத்திரத்தில் ஊழிகாலத்தில் உலகங்களை யழிக்கவெழுகின்ற பிரளய வெள்ளத்தைச் சுவற்றவல்லமேகங்களைப்போல அஷ்டதிசைகளையும் இருள்மயமாக மூடிக்கொண்டன. உடனே பாபகர்மாவாகிய தூமராசனும் சக்கரங்களைப்போலத் திரிலோகங்களும் அதிசயிக்க அவன்சேனைகளும் ஒருவரையொருவர் காணமாட்டாதுமயங்கிப் பாதலலோகத்தில்வீழ்ந்து இறந்துபோனார்கள் தேவர்களெல்லாஞ் சயசயவென்றுகொண்டாடிப் பாரிசாதமுதலிய புட்பங்களைவாரி யிறைத்தார்கள் முனிவர்களெல்லாம் பலபூசாத்திரவியங்களைக்கொண்டு பாலசந்திரமூர்த்தியைப்பூசித்தார்கள் மாதவராசனுஞ் சுமுதையும் பயமகன்று ஆனந்தமடைந்தார்கள். பாலசந்திரமூர்த்தியானவர் தூமராசனுக்கு கேடுவருவதுகாட்டும்படி ஓர் உற்பாதமாய் விளங்கியதினாலும் அவனையும் அவன் அமைச்சர் முதலாயினோரையும் அவ்வவர்கள் சேனைகளோடு ஓர்நொடிப்போதில் தூமத்தாற்றொலைத்து வெற்றிக்கொடிநாட்டி யருளியதாலும் அவருக்கு அன்றுமுதல் தூமகேதுவென்று மற்றொருதிருநாமம்விளங்கியது பின்னர் பாலசந்திரமூர்த்தியாகவந்து தூமகேதுவென்னும் பெயரினைவகித்தருளிய விநாயகமூர்த்தியானவர் மாதவராசன்முதலியோர் தரிசிக்கும்படியாகத்தம

துதிருவுருவைக்கரந்து மலபாசங்களையொழித்து, மேலானஞானச் செல்வத்தை யடைந்திருக்கின்ற பெரியோர்களது மனக்கோயிலில் வதிந்தருளினர் இக்கதையை யன்போடு நினைக்கின்றவர்களும் தீவினைகளினின்றுநீங்கிப் பேரானந்தசுகத்தை யனுபவிப்பார்கள்.

இப்பால் மாதவராசனும்சுமுகையும் யதாப்பிரகாரந்தமதுபட்டணத்தைச்சேர்ந்து முடிவில்லாத பெரும் பாக்கியத்தைப்பெற்று சகலசவுக்கியத்தையும் ஆனந்தத்தையும் அநுபவித்துக்கொண்டிருந்தார்கள் இவ்வாறு சிலநாளிருந்தபின்பு சுமுகையானவள்மகிமை பொருந்திய புத்திரனை மகிழ்ச்சியோடுபெற்றனள் அதை மாதவராசனறிந்து தனக்குப் புத்திரனாவந்த மாதவனுக்குச் சகல மங்கலத்தோடும் வேதாகமமுறைமைப்படி சாதக கன்மாதிகளைநிறைவேற்றி அளவற்ற தருமாதிகளை நாடோறுஞ்செய்துவந்தனன், சுமுகையானவள் தனது தவந்தகுமாரனைப்பிரதிதினங் குளிப்பாட்டி தனதுமுலைப்பாலினை அன்போடு மூட்டி. நவரத்னமயமாகிய சுட்டியினையும் அரைவடம்பொற்றண்டை முதலிய ஆபரணங்களையுந்தரித்துச்சிராட்டி பவளக்கால்கள் வயிரச்சட்டங்கள் நீலரத்னப்பலகை முதலியவைகளாற் சோடித்த தங்கச்சங்கிலிகளிற்றொங்கும் அழகியதொட்டிலில்வளர்த்தித் தாலாட்டி நாளுக்குநாள் வளர்பிறையைப்போல வளர்த்துப் பாராட்டிவந்தனள் இவ்வாறு அவ்விருவர்களுந்தம்மைப்பாராட்டிவளர்த்துவந்தாலும் அவர்களுக்குப் பிள்ளைக்கலிதீர்த்தருளிய நாராயணமூர்த்தியானவர் நாளுக்குநாள் கற்போருடைய உள்ளத்தைப்போல வளர்ந்துவந்தனர். இப்பால் மாதவராசன் தனது குமாரனுக்குப் பிள்ளைப்பருவமநீங்கியபின்னர் பட்டாபிஷேகமுதலியவைகளைச் சிறக்கச் செய்து தூமராசனுடைய அரசாட்சியை அவர்பாலொப்புவித்துத் தனது பத்தினியுந்தானுஞ் சதாகாலமும் விநாயகமூர்த்தியைத்தியானித்து அந்தியகாலத்தில் மோட்ச சாம்பிராச்சியத்தையடைந்து பேரானந்தத்தை யனுபவித்தார்கள்முன்னர் உலகமனைத்தையுஞ் சிறுசுடரினைவாய்ந்த விளக்கினைப்போலவிருந்துகாத்த தூமராசனுடைய அரசாட்சியை யெல்லாம் பின்னர் நாராயணமூர்த்தியானவர் பெருஞ்சுடரினைவாய்ந்த பந்தமாகவிளங்கிப் பாதுகாத்து புத்திரமித்திர களத்திராதிகளுடனே சகலபோக பாக்கியங்களையும் அநுபவித்து வாழ்ந்திருந்தனர்.

தூமகேதுவிநாயகர் திருவவதாரப்படலம்

முற்றிற்று

## எட்டாவது,

# கணேசர் திருவவதாரப்படலம்.

வேழனுந் திருவவ தாரஞ்சாற் றிடுமே
லெட்ட தாமவ தாரநற் சரிதநீ திசைகூ
ரொட்டு மார்வமோ டொழுகுமேதன வாரிசத்தண்ண
ணட்ட கேண்மையி னுறைதருஞ் சவுனக முனிவீர்.

ஓ சவுனகாதிமுனிவர்களே? விநாயகமூர்த்தியானவர் தூமகேது திருவவதாரங்கொண்டு மாதவராசனுக்கும் அவன் மனைவியாகிய சுமுகைக்குந் தீங்குசெய்யவந்த தூமராசனைக்கொன்று அவ்விருவரைப்பாதுகாத்தருளிய திருவிளையாடலைச்சொன்னேனும். அவரேமற் றொருபோது கணேசமூர்த்தி திருவவதாரங்கொண்டு தம்மிடத்தில் அளவற்ற வரங்களைப்பெற்ற பெலியென்னுமோர் தானவனானவன், தனது திரிபுரங்களோடுஞ்சென்று திரிலோகங்களையும் அழிக்க, அக்கொடுமைக்குத் தேவர்கள்முதலியோர் அஞ்ச அதற்குச் சிவபிரான்மனதிரங்கித் தம்மைத்தியானிக்க, அப்போது அவர் திருமுகத்தில் ஐந்துமுகத்தோடுந்தோன்றி, அவர்க்கு அத்திரிபுரங்களைநீறுக்கவல்லவரங்களையுதவி, யாவருங்கணேசரென்று போற்றும்படியாக விளங்கியருளிய திருவிளையாடல் முன்னமே உபாசனா காதையிற் சொல்லியிருக்கின்றனம் இப்பால் கணபதி திருவவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

கணேசர் திருவவதாரப்படலம்

முற்றிற்று.



## ஒன்பதாவது,

# கணபதி திருவவதாரப்படலம்.

—————:*:—————

அன்ப னேயவன் சரித்திர முன்னமே யறைந்தா
மொன்ப தாமவ தாரமென் றறைதரு காதை
யின்ப மார்தர வியாதனுக் கலர்மக னிசைத்தாங்
கன்பி னீரறை குதுமுள மொருமையி னுணர்வீர்.

ஓ சவுனகாதிமுனிவர்களே! வெண்டாமரைசெந்தாமரைமலர்களை ஆதனமாகக்கொண்ட சரஸ்வதி இலக்குமிகள்மூலமாக எல்லாவுலகங்களையும் படைத்துங்காத்துமிராநின்ற பிரமனும் விண்டுவுந் தத தம்நிலைகளிற் பிறழாதவண்ணம் உயர்ந்த வெண்மை நிறத்தினைக் கொண்டதாய், நால்வகைத்தோற்றம் எழுவகைப்பிறப்பு, எண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதங்களா யுள்ள சீவான்மாக்களெல்லாங் கனமங்கட்கிடான சரீரங்களையெடுத்துத் தாபத்திரயாக்கினிகளாற் றகிக்கப்படுந் துயரங்களினின் றுநீங்கி, இளைப்பாறும்படியாக ஆனந்தநிருத்தஞ்செய் தருளுகின்ற எமது சதாசிவமூர்த்தியைத்தாங்குந் தகைமையையுடையதாய் கண்டோர்கட் கெல்லாம் புகலிடமாகியிருந்து மீட்டும் பிறவிசசாகரத்தினைக் காணாதபடி மேலாகிய முத்திவீடளிக்க வல்லதாய் சந்திரன் கங்கை விபூதி விடை அயிராவணம் என்னுமிவைகளை வெள்ளிதாகக்கொண்ட சிவபெருமானவர், தமது திருமேனியும் தானும் வெள்ளிய சாத்விகத்திற் கொண்டருளியதால் அதனைவற் கிசையும்படியாகத் தானும் வெள்ளிய நிறத்தினைக்கொண்டதாய் எண்ணமுதலிய முக்குணங்களினுளுந் தன்னைவழிபடுந் திருமாலினைத் தாங்குந் திருப்பாற்கடலோடு ஏனையகடல்களு மேலெழுகின்ற யுகாந்தகாலத்தில், அப்பிரளயத்தினுள் யாமடங்குதல் அடாதென்று அதனினுமேலோங்கி யெழுந்து அண்டமுகடுவரையில் அளாவி ஒளிசெய்யவல்லதாய் தெளிந்த மெய்யடியார்க்குப் பெருமை பொருந்திய போகத்தையுந் திருவருளையும் வழங்குதலன்றி தம்மையும்வழங்கி அருளிச்செய்யவல்ல எமது சிவபெருமானுடைய பெருங்கீர்த்தியென்னுந் திருமேனியானது எக்காலத்தும் அவனைத்தணவாது அழிவற்ற ஆவலோடுஞ் சுமந்து அவனைப்போலவே கெடாதபெருமையைப்பெற்றதுபோல ஊழிகள் தோறுமழியாமல் ஓங்கவல்லதாய், சத்தசாகரங்களும் ஒன்றுடனொன்று கலக்கவருகின்ற யுகாந்தகாலத்தில் தத்தஞ் சுபாவநிலைகளி

னின்றுமாறித் தடுமாற்றங்கொள்ளுகின்ற திருமால் கண்படுமிடத்தையும் அவனுதிப்பதுமமாகிய பிரமனிடத்தையுங் கண்டு எமது உருத்திரமூர்த்திக்கு இடையாத்தலமாகி எக்காலத்தும் உடையா வுறுதியோடு நகைப்பதுபோல என்றும் ஒரேயியல்பாய்ப் பிரகாசிக்கவல்லதாய் நம்மைச்சிவபிரான் திருவுருவாகக் கொண்ட செயலாலன்றோ அடுத்தோர்களையும் பெரியாரென்று சொல்லும்படியாக நன்மைகளை விளக்கின்றோம் இனி அக்கடவுளுக்கு இடமுமாகி அவரைத்தாங்கிநிற்போமாயின் எக்காலத்தும அழியாநிலைமைபெற்றிருப்போமென்று சாத்துவிகமானது உருக்கொண்டு உலகினோடும் ஆர்த்தல்போல ஆரவாரிக்கும அருவிகளையுடையதாய் மேருவும்மந்திரமும் எமதுசிவபிரான் வசிக்கப்பெற்றமையாலும அவைகள் ஓரரசன் வருத்தியபின்னர அவன் கருதிவந்த பொருளினைத் தந்தும் அமுதம்வேண்டிய தேவர்கட்குக் கடலைக்கலக்கக் கசினையளித்தும் இருந்தனவேயென்று எள்ளித்தன்னைச் சுற்றி வாயவளைத்தோர்க்கு வெள்ளியைநிரப்பவல்லதாய் அகத்தும் புறத்தும் ஒரேதன்மையையுடைமையினாலும சிவபெருமானுடைய அருமைத்திருவடிகள்தனை துசென்னியில மருவப்படுதலினாலுந் தெளிவியவறிஞர்களா லெடுத்து ஏத்தப்படுகின்ற சிறப்பினாலும், மலபாசங்களைத்துறந்த மெய்ஞ்ஞானியர்களைப்போன்றதாய; ஓர்பால தாமரைமுதலிய மலர்வருக்கங்களெல்லா மலர்ந்தும ஓர்பால வயிரமுதலிய மணிவருக்கங்களெல்லாம் சூழ்கொண்டும் ஓர்பால சிவகங்கைமுதலிய தீர்த்தங்கள்சிறந்தும் ஓர்பால பலாக்கனிமுதலிய பழவருக்கங்கள் பரவியும் விளங்குவது கயிலையங்கிரி.

அக்கயிலையங்கிரியில் இமாசலராஜன புத்திரியோடு எழுந்தருளிய எமது சிவபெருமானுடைய திருவடிகளைத் திருமால்முதலிய தேவர்கள்வழிபட்டு வைகுந்தமாதி பதவிகளைப பெறுவார்களாயின் அப்பெருமானுக்கே உறைவிடமாயிருக்கின்ற அதன் பெருமையை உம்பர்களாலுஞ் சொல்லப்படுவனவோ! அக்கிரியின்க ணுள்ளவாகிய கொடி மரம் மிருகம் புள்ளினமமுதலியவைகளை யோசிக்குமிடத்து ஒவ்வொன்றும் கற்பகமகாமதேனு பதுமநிதி சிந்தாமணிமுதலியவைகளாயிருப்பதன்றி, அவைதருகின்ற பொருள்களையுந்தருவன. சனனங்கடோறும் பெரியமாதவங்களைச்செய்து எல்லாப பொருள்களையுமறிந்த யோகியர்க்கல்லது யேனையவர்கட்கெல்லாம் அக்கயிலாயத்தின்கணுள்ள கொடிமுதலானவைகளா யிருக்கத்தக்கவாழ்வு மரிதாகும் அன்றியு மிருவகைப் பற்றுக்களையு மொழித்துச் சிவபெருமானுடைய திருவடிகளிற் பற்றுடையாருக்கே அக்கயிலை யிடங் கொடுப்ப தல்லாது, மற்றையர்க்கெல்லா முறவேண்டிய தளித்து

அப்பால்முடிக்குவதன்றி எக்காலத்தும் அன்னவர்க்கு இடமாகும் வகையில்லை இத்தன்மைத்தாகிய கயிலையங்கிரியில் அடியார்க்கருள் செய்யும் பொருட்டு இமாசலராசன் புதல்வியாகிய உமாதேவியா ரோடு சிவபிரா னெழுந்தருளி யிருக்கின்ற நாளையில் கார்முதலிய இருதுக்களின் காற்றிற்பட்ட இலை பூவாதியவைகள் சிறந்தனவல்ல வென்று கருதினாற்போல, முன்னொருபோது சிவபெருமானுடைய தழல்விழியால் பூளைப்பூவினைப்போல மடிந்து யாவர்க்குங் காமநோ யளிப்பவனாகிய மன்மதனுடைய அணிவிழாச்சிறக்கும்படி இளவே னிலானது தனது தென்றற்காற்றினால் இறந்துகிடக்கின்ற கானக மாதிகளைமிதித்துத் தளிர்முதலானவைகளைத் தத்தம்நிலைமைகளிற் குன்றாதபடிநிரப்பியது அக்காலத்தில் யாவருக்கும் இனிமைசெய் வோர்க்குற்ற வறுமையானது நீடியாதுநசிப்பனபோல இறந்துபோ கிய இருதுக்களினால் இலைமுதலியவைகளைத் தீர்ந்த கொடிமரம்மு தலானவைகளெல்லாம் பொருக்கென்றுதளித்து, மலர்கனிமுதலிய வைகள் தோன்றநின்றன. மிககசாந்தமுமனமையு முடையோரிடத் தில் அடையாதார் ஒருவருமில்லை யென்றுசொல்லுவதுபோல அக் கொடிமரம் முதலியவைகடோறுந் தும்பிவண்டு சுரும்புமுதலியபல விதபறவைகளும் நெருங்கியிருந்தன தன்னைச்சார்ந்த ஓர்பொருளி னாலல்லது சுபாவத்தில தனதுகுணத்தைக்காட்டாத பூமிக்குச்செய் நன்றியை மதித்தல்போல, அங்குள்ளசோலைமுதலானவைகள், மலர் முதலானவைகளைசிந்தி வாசனையூட்டுவதோடும் சிறிதும்நீரில்லாமற் சுருங்கித் தம்மை நெருங்கியிருக்கின்ற படு தடாகம் ஆறுமுதலிய வைகளினுடைய நிரப்பைத்தாமே நீக்கவெண்ணினாற்போலத் தாழ்த்த பொழில்களெல்லாமவைகளும் அவைகளில் தேனைச்சொரிவன. துட்டர்களாயினோர் தமக்குநன்றிசெய்தோரிடத்துங் கட்டமாகிய காரியத்தைச் செய்வதுபோல அத்தடாக முதலியவைகளினுள்ளம துரமானநீரினைப் பானஞ்செய்தெழுந்த எட்டியாதிகள்தம்மிற்கைத் திருக்கின்ற காய்முதலியவைகளை அவைகளிற்சொரிவது தம்மைய டைந்தோர்கள் பக்குவர்களாயினும் அபக்குவர்களாயினும் அவர்க ளையுயர்த்தவல்ல ஞானசாரியரைப்போல வண்டினங்களானவை எ ட்டியாதிவருக்கங்களிற் கவர்ந்துவந்ததேனையும் ஏனைய நல்லவிருக் கங்களில் முகந்துவந்ததேனையும் ஒன்றாகக்கூட்டிப் பக்குவப்படுத் துவது கிடைத்தற்கரிய பலநூல்கடோறுமுள்ள பொருள்களையெல் லாமாராய்ந்தெடுத்து யாவரு மினிமையெய்தும்படி தொடுக்கவல்ல நாவலர்களைப்போலத் தேனீக்களானவை, பூக்கடோறுமுள்ளதேன் களை யெல்லாஞ் சிறுகச்சிறுக முகந்துபோய் ஓர்பக்கத்தில் சார்ந்து

தேங்கும்படி பலகூடுகளைத்தொடுப்பன இவ்வாறவ்வீக்கூட்டங்கள் பிரயாசையோடு தேன்களையீட்டுவனவாயினும், தேவர்கட்குபயோகிக்கப்படுபனவாயுள்ள மலர்களையும் அவைகள் சிதைக்கின்ற தீங்கினால் அவைகளையழிப்பதே புகமென்று சிலர் ஆங்காங்குதொடுத்திருக்கின்ற கூடுகளை யழிப்பார்கள் குற்றஞ்செய்தோரைச் சினந்துபொருள்பறித்தல் வேலேந்துமரசர்க்கு விதியாதல்போல சிலர்விடியுமுன்னமேசென்று மலர்களை ஊறுசெய்கின்ற ஈக்களை யழித்து அவற்றின் கூடுகளிலிருக்கின்ற தேன்களைக் கைக்கொண்டு செல்வார்கள் அங்குள்ள சோலைகளனைத்தும் மேகங்கள் யொப்பவீசுகின்ற தேன் மழையினால் மயிற்கூட்டங்கள் அச்சோலைகளைவிட்டு நீங்கினலன்றி அயர்வுறாது குயில்களும் அவைகளைவிட்டு நீங்கினலன்றிக்கூவாது. புறத்தேவர்களையுடைய அணிலாதிகள் நல்லமாங்கனி முதலியவைகளையுண்டு தூய உண்டியருடைய குணத்தைத் தெரியப்படுத்தும் மந்திகள் தீயனவும் அவையல்லனவுமான கனிகளை விழைந்து உயர்வுந்தாழ்வுமான உண்டிகளை யருந்துவோருடைய தன்மையை விளக்கும் அங்குள்ள தடாகங்களோறுந தமதுநணவனுகிய சூரியனுக்கு ஞாதியாயிருக்கின்ற சந்திரனாலும் பனியினாலும் அழிந்தவகைபோக ஏனைய தாமரைகளெல்லாம வண்டினங்கள் மொய்க்கும்படியாக அலர்வன ஆம்பல முதலியவைகள் மலாந்திருக்கின்ற தடாகங்களெல்லாந் தெளிந்து மிக்கவனப்போடு சிறப்புற்றன நீண்ட ஆறுகளெல்லாம் நுண்ணியமணல்களைபபறப்பி அதனமேல் கருமணல்களைவார்த்து நடுவேபுனலொழுகிச் செல்லும்படியாகத் தம்மைவிழைந்த உயிர்கட்கெல்லாம் வெயிலின் வெப்பத்தை நீக்குவ வரையாது கொடுப்போரிடத்தில் வறுமை வந்தடுப்பினும் அவர்களக்காலத்தும் உள்ளபொருளைக் கரவாது வேண்டினேர்க்கு உதவுதல்போல் அங்குள்ள மலைகளெல்லாம் இறந்துபோன கார்காலததிற்பருகிய புனல்களை அவ்விளவேனிற் காலத்தும் இடைவிடாது பொழிகுவ இத்தன்மைத்தாகிய இளவேனிற்காலம்வந்தபோது சாம்பசிவமூர்த்தியானவர் குளிர்ச்சிவேண்டித்தமதுதேவியாரோடும் உய்யானவனத்தையடைந்து அதில் கொன்றை கூவிளம் கோங்கு மந்தாரம் பாடலம் புன்னாகம் சண்பகம் வாழைவகுளம் அசோகு முதலாகிய விருக்கங்கள் மலிந்திருக்கின்ற அலங்காரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே வந்து அங்கிருந்த ஓர் சித்திரமண்டபத்து ளெழுந்தளினர்.

அப்போது உமாதேவியார் அம்மண்டபசுவர்களிலெழுதியுள்ள சித்திரங்களைப் பார்த்துக் கொண்டேவா அவைகளில் ஓர்பால்சத்த

கோடிமகாமந்திர சொரூபங்களும் அவைகட்கெல்லா முதலில் பிரணவமந்திரசொரூபமும் அதில் ஆண்யானையும் பெண்யானையும் புணர்ச்சிசெய்திருக்கும்பாவனையாகவெழுதியிருப்பதைக்கண்டு சுவாமி! இதென்னவென்று சிவபிரானைக்கேட்டனர். அதற்கவர் தமதுதேவியாரைப்பார்த்து பெண்ணே யாம் உன்னோடு சம்பந்தமாகி லோகங்கட்குபகாரமாய் நடப்பிக்கத்தக்க கருணாரசமாகுமென்று திருவாய் மலர்ந்து புணர்ச்சிசெய்திருக்கின்ற அந்த யானைகளில் ஆண்யானையைப்பார்த்துக் கொண்டிருந்தனர் உமாதேவியார் பெண்யானையைப்பார்த்துக்கொண்டிருந்தனர். இவ்வாறுலோககாரணர்களாகிய இருவரும் அவைகளை அன்போடுபார்த்துக்கொண்டிருத்தலும் அந்தயானைகளினுடைய புணர்ச்சி முடிவில் பிரணவஸ்ரூபியாயிருக்கின்ற விநாயகமூர்த்தியானவர் ஊழிகாலத்தில் கோடிசூரியர்கள் ஒன்றாய் உதயஞ்செய்ததுபோல அளவற்ற பிரகாசத்தோடும் உதித்தருளி சிவபிரானையும் உமாதேவியாரையும்பணிந்தனர் உடனே அவ்விருவரும் ஆனந்தங்கொண்டு தமக்குப்புத்திரனாகத்திருவவதாரஞ்செய்தருளிய விநாயகமூர்த்தியைப் பரிவோடெடுத்து அணைத்து உச்சிமோந்து உள்ளம்பூரித்துத் தங்கள் மடியின்மீது வைத்துக்கொண்டு சிவபிரான் இதனைத் திருவாய்மலர்ந்தருளுவாராயினர். ஓ குமாரனே என்னில் வேறாகாமல் மனகருப்பிள்ளையாகியிருக்கின்ற உன்னை யார்வணங்குகின்றார்களோ அவர்கட்குச்சகல விடையூறுகளையுந் தீர்த்து அவர்கள் விழைந்த காரியங்களை விரைவில் கைகூடும்படியாக அநுக்கிரகஞ்செய்திடுக கணங்கட்கெல்லாந் தலைமைபெற்றிருந்து கிருபையை வழங்குக அதனால்யாவரும் உன்னைக்கணபதியென்று சொல்லுக உன்னையாவரும் எக்காரியத்திற்கும் முன்னதாகவணங்குக அவ்வாறு வணங்காதோர்க்கு இடர்களைப்புரிக இதுவன்றி அசுரர்கட்கெல்லா மரசனாய் யாவருமஞ்சத்தக்க கோரனாய் மிககொடிய நெஞ்சையுடையவனாய் தேவர்கட்கெல்லாந் துன்பத்தை விளைக்கின்றவனாய் கஜமுகனென்னும் பெயரைவகித்தவனாய் ஒரு அசுரனிருக்கின்றான் அவனை சீக்கிரத்தில் சமர்க்களத்திற் சங்கரித்து விண்டுவே முதலியோர் மூழ்கியிருக்கின்ற துக்கசாகரத்தைத் தீர்த்து அவர்களைக் கிருபையோடுங் காத்தருள்கவென்று திருவாய்மலர்ந்து உமாதேவியாரோடு அச்சித்திர மண்டபத்தைவிடுத்துக் கணபதிப்பெருமானையழைத்துக்கொண்டு சென்று அவரைத் தமது கைலாய வாய்தலின் முகப்பிலிருக்கவைத்து அந்தப்புரத்திற் சென்றருளினர்.

அப்போது நந்திதேவர் முதலிய கணத்தலைவர்களும் விண்டு முதலியதேவர்களுங்கருணாநிதியாயெழுந்தருளிய கணபதி மூர்த்தியைப்பணிந்தெழுந்து வேதாகம முதலியவைகளாற்றுதிசெய்து விடைபெற்று அவரதுபெருங்கருணையினால் அவ்வவர்களுடைய பெரிய அதிகாரங்களைச் செலுத்துவதாகப் போனார்கள் அந்தப்புரத்திற் சென்ற சிவபிரானும் உமாதேவியாரும் சரசசல்லாபத்தோடும் அளவளாவிமகிழ்ச்சி யுற்றிருந்தார்கள் இவ்வாறு மகிழ்சசிபொங்க சரசசல்லாபத்துடனே அளவளாவி யிருக்கின்றபோது சிவபிரான் உமாதேவியாரைப்பார்த்து பெண்ணே நாமிருவருஞ் சூதாடுவோம் அச்சூதில் நீதோற்பையாயின் உனது ஆபரணங்களை யெல்லாங் கொடுத்து விடக்கடவை, யாம் தோற்போமாயின் எனது ஆபரணங்களைக்கொடுத்து விடக்கடவோமென்று திருவாய்மலர்நதனர் அதற்கு உமாதேவியார சம்மதித்து அப்போது சிவபிரானை தரிசனஞ்செய்யவந்திருந்ததமது சகோதரனாகிய விண்டுவைக்கூவி, ஓசேட்டனே இப்போதுயாமிருவரும் ஆடப்போகின்ற சூதுக்கு நீசாட்சியாகவிருக்க வேண்டுமென்று கேட்டனர் அதற்கவர சம்மதித்திருந்தனர். பின்னர்சுந்தரர்முதலிய பரிசனங்களெல்லாம் அக்குறிப்பினையறிந்து சூதாடு கருவிகளைக்கொணர்ந்து வந்து சிவபிரானெதிரில் நீட்டினார்கள் அவைகளைச்சிவபிரான் விண்டுவினிடத்திறறநது இவைகளைக் கிரமப்படி வைத்திடுகவென்று கட்டளையிட்டனர அவ்வாறே விண்டு அவைகளை யெல்லாங்கிரமப்படி வைதது அவ்விருவர்களுடைய ஆட்டங்களையும் பார்த்துக் கொண்டிருநதனர அவ்வாட்டம் முடிவில் உமாதேவியார் கெலித்தனர். அதைச்சிவபிரான்கண்டு பரியாசத்தினாலோ முற்றியாது காரணத்தினாலோ உமாதேவியாரைப் பார்த்து பெண்ணே! நமக்குத்தோற்றனை ஆதலால. உனது ஆபரணங்களையெல்லாங் கழற்றி நம்முன் வைக்கக்கடவை யென்று திருவாய்மலர்ந்தனர். அதனைக்கேட்டலும் உமாதேவியார சிவபிரானைப்பார்த்து நகைத்து சுவாமி அடியாள்கெலித்திருக்கத் தேவரீர் குற்றமற்றவேதங்களைத்திருவாய் மலர்ந்தருளிய வாக்கினால் எற்றினுக்கு இத்தன்மைத்தானபொய்யை நாணமில்லாமற் சொன்னீர்கள். தேவரீருடைய திருமேனியிலுள்ள ஆபரணங்களை வாங்கி என்முன்னேவைத்தருள்கவென்று கூறினள். அதற்குச்சிவபிரான் புன்னகைகொண்டு பொய்ச்சாட்சி சொல்லும்படியாக விண்டுவுக்குத்தமது புருவத்தை நெரித்துச்சைகைகாட்டி, மீட்டும் உமாதேவியாரை நோக்கிநாமேகெலித்தனமென்றுதிருவாய்மலர்ந்தனர். அப்போது விண்டுவானவர் என்செய்வார, மேல்வரும்வினைவைச்சிறிது மறிநதுகொள்ளாதவராய்

உமாதேவியாரைப்பார்த்து அம்மணீ! இப்போது அவர் மிக்குளிர்தோற்
றமையால் உமது ஆபரணங்களை அவருக்குக்கொடுக்கவேண்டாமோ
வென்று கூறினர். அதைக்கேட்டலும் உமாதேவியார்கோபித்து, அ
வ்விண்டுவை உறுத்துப்பார்த்து அறிவற்றவனே! எங்களுடையவெ
விப்பையுந் தோற்பையுங் கண்ணிற்கண்டிருந்தும் என்னலாபத்தை
விழைந்து உண்மையைச் சொல்லாமல் பொய்சாட்சி சொல்லினை. நீ
இவ்வாறு சொன்னமையால் இனிகண்கெட்டமலைப்பாம்பாகி துன்ப
முறக்கடவையென்று சபித்தனர்.

கேட்டீர்களோ சௌனகாதிமுனிவர்களே! சகல லோகங்களை
யும் அளிக்கவல்ல விண்டுவானவர் சிவபிரானுடைய சார்பைப் பெற்
றிருந்தும் ஒருபொய்சாட்சியினால் சகித்தற்கரிய சாபத்தினைப்பெற்
றாரெனில் இவ்வுலகத்தில் பிரதிதினமும் பொய்யையேபெரும்பாலு
ங்கூறி வாழ்கின்றவர்கள் அடையத்தக்க நரகவேதனையை யாவரால்
அளவிடக்கூடும்.

இவ்வாறு உமாதேவியாரிட்ட சாபத்தைக் கேட்டலும் விண்டு
வானவர் நடு நடுங்கி சிவபிரானுடைய திருவடிகளில் வீழ்ந்துபணி
ந்தெழுந்து சுவாமி! தேவரீருடைய திருப்புருவ நெரிப்பிற்கஞ்சி உ
ரைத்த பிழையினைப்பொறுத்து உமாதேவியார் கொடுத்தசாபத்திற்
கு ஓர்தீர்வு சொல்லியருளல்வேண்டுமென்றுப் பிரார்த்தித்தனர். அத
ற்கு அளவற்றகாலம் ஆணவமலத்தில்மூழ்கி மறைபட்டிருந்த ஆன்
மாக்களை முத்தியில் விடவேண்டுமென்று நினைத்து கடல்போலுந்த
மது பெருங்கருணையினாலே திருமேனிகொண்டு அவர்களை அவ்வா
ணவ இருளினின்று மெடுத்து, அவர்க ளிச்சித்த தனுகரண புவன
போகங்களைக்கொடுத்து, அவைகளினிடமாக நல்வினை தீவினைகளை
யூட்டி, அவ்விருளை யொப்பில மலபரிபாக முண்டாக்கி, முத்தியிற்
சேர்ப்பிக்க வல்ல சர்வஞ்ஞமூர்த்தியாகிய சிவபிரான் திருவுளிபசுரந்
து ஓ இலக்குமிகேள்வனே! வடதீவிற்சென்று நமது திருவடிகளைத்
தியானஞ் செய்துகொண்டிரு. இன்னுஞ்சிலதினத்துள் மூவுலகத்தா
ருக்குந் துன்பஞ்செய்து வருகின்ற கஜமுகாசுரனைக் கணபதிமூர்த்
தியானவர் சங்காரஞ்செய்து அவ்வழியே வருவர். அக்கால் அவரை
நீபார்த்தபோது உனக்குற்றசாபமானது நீங்குமென்று சிவபிரான்
திருவாய்மலர்ந்தனர். அதை விண்டு கேட்டு மனமகிழ்ந்து, உடனே
அவ்வடதீவினையடைந்து ஓராலமரத்தடியில் ஏழுயோசனை விசால
த்திருக்கின்ற இருண்டபொந்தினுள் குருட்டு மலைப்பாம்பாகித் தம
து பயங்கரமான ரூபத்தை நினைக்குந்தோறும் அருவருப் புற்றவ
ராய் சதாசிவபிரானுடைய திருவடிகளையுங் கணபதிமூர்த்தியினு

டைய திருவருளையுந் தியானஞ்செய்துகொண்டு தவத்திலிருந்தனர் விண்டுவின் செய லிவ்வாறாக.

இந்திரன் முதலியதேவர்கள், அசுரர்கள் செய்யுங்கொடுமைக்குப் பயந்து சகலதிரவியங்களோடுங் கயிலாயத்தை நோக்கிச்சென்று, முதல் வாய்தலின் முகப்பிலே கணத்தலைமைபெற்று வீற்றிருக்கின்ற எமது கர்த்தனைப்பணிந்து பூசித்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி வேதாகமங்களினால் அளவற்ற தோத்திரங்களைச் செய்து நின்றார்கள் அவர்களைக் கணபதிமூர்த்தி கிருபையோடும்பார்த்து அன்பர்களே! உங்களுக்கு வேண்டியவைகளைக் கேட்பீர்களாகவென்று திருவாய்மலர்ந்தனர் அதற்கு அமரர்கள் ஆனந்தங்கொண்டு அடியேங்களை நாடோறும் வருத்திவருகின்ற கஜமுகாசுரனைத் தேவரீர் சங்காரஞ்செய்து அடியேங்களுடைய ஆபத்தை நீக்கியருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதற்கு கணேசமூர்த்தி, அவ்வாறே செய்தருளுவமென்று கிருபை வழங்கித்தமது சிம்மாசனத்தைவிடுத்து பூதர்கட்கெல்லாந் தலைவராய் மலையைப்போன்று பாரித்துவிளங்குஞ் சரீரத்தினால் அசலமென்னும் பெயரை வகித்திருக்கின்ற ஒருவனைக்கூவி அவனது கந்தரத்திலாரோகணித்தருளினர். உடனே இரணபேரி ஜயபேரி வெற்றிசங்கம் முதலியவாத்தியங்கள் முழங்கின கொடி-குடை சாமரை முதலிய சின்னங்கள் இருமருங்கிலு நெருங்கின இடியேற்றினை யொப்பச்சத்திக்கும் பெருந்தொனியையுடையவர்களாய், பிரளயாக்கினியைச் சொரிகின்ற கண்களை வாய்ந்தவர்களாய் பருவதங்களை பொருதுவிளங்கும் புஜங்களில் அளவற்ற ஆயுதங்களை யேந்தினவர்களாய், அநேகபூதவீரர்கள் புடைசூழ்ந்தார்கள் பின்னர் கணேசமூர்த்தியானவர் இவ்வித ஆடம்பரங்களோடு கயிலாயத்தினின்றும் வெளிக்கொண்டு கஜமுகாசுரன் அரசாட்சிசெய்துவருகின்ற மதங்கநகரத்தின் சமீபத்திலமர்ந்தருளினர் யோகியர் தங்கள் தங்கள் ஞானவுணர்ச்சியினாலறிந்தாலல்லது மற்றேனையோரால் அறியவொண்ணாத கணபதி மூர்த்தியானவர் இவ்வாறு யுத்தசன்னத்தராய் வெருக்கொண்டு வருவதைக் கஜமுகாசுரனறிந்து ஆயிரம் வாகினிசேனைகள் தன்னைப்புடை சூழும்படியாக வெளிக்கொண்டு கொடிமுதலிய சின்னங்களோடும் அமரர்களுங்கண்டு நடுங்கத்தக்க ஆயுதங்களோடும்வந்து யுத்தஞ்செய்யத்தொடங்கினன். அப்போது பூதவீரர்கள் தாக்கிய தாக்கலிலே அளவற்ற அவுணவீரர்கள் துடைகளற்றும் இடைகளொடிந்தும், வாள்கள்முறிந்தும், கால்கள்மடிந்தும், தலைகள்பிளந்தும், சிலைகளிறுந்தும், பலதிசைகளிலுஞ் சின்னபின்னப்பட்டு ஓடிமாண்டார்கள், அதைக்

கஜமுகாசுரன் கண்டவெடலைவயைப் போலக்கொதித்து தனித்துவில் வில் அளவற்றபாணங்களைப் பிரயோகித்துச் சமீபத்திலிருந்த பூத வீரர்களை யெல்லாங்கொன்று கணபதிமூர்த்திக்கெதிரேவந்து விண்டுவாதிதேவர்களாலுங் காணுதற்கரிய அவரது திருமேனியைத்தனது தவமுதிர்ச்சியினாற்கண்டு சிறிதும் அஞ்சாதவனாய் இதனைச் சொல்லுவதாயினன். ஓசிறுபிள்ளாய் இதுகாறும் என்னோடு பகைத்துயார் உயிரோடிருநதார்கள் தேவர்கள்செய்த தோத்திரத்திற்குடன்பட்டு நீஎன் வீணிலழிவு தேடிககொள்ளுகின்றனை யான்விட்டுவிடுகிறேன் இனியேனுந் தப்பிததுக்கொள்ளு இல்லையேல்,என்னோடியுத்தஞ்செய்ய ஆசையிருக்குமாயின் நீகற்றிருககின்ற ஆயுதவல்லபங்களை இப்போதேகாட்டு சிறிதும எனதுபராககிரமத்தை யோசித்து எதிர்க்கவந்த உனனைக கோரியனுப்பிய தேவர்களை யெல்லாம் நாசஞ்செய்து வெற்றிமாலை தரிககின்றேன் நான்சிவபிரானுடைந்திருக்கின்ற வரங்களைசசிறிது மறிந்தாயில்லையென்று சொலலினன்

அதற்குக் கணேசமூர்த்தி புன்னகைசெய்து, அடா பேதாய்! உனககு வரங்கொடுததருளிய அசசிவபிரானுடையகிருபையினாலேயே உன்னைச்சங்கரிதது தேவர்களையெல்லாம் யதாப்பிரகாரம் சொர்க்கலோகத்தில் நிலைபெற்றிருககச செய்கின்றேன் பார் இதைஉண்மையாக நம்பக்கடவை நீஎன்வீணிற்பேசுகின்றாய்? அச்சமின்றிஎன்னோடியுத்தஞ்செய்ய வல்லபமிருநதால விரைவில் நடத்துகவென்று திருவாய் மலர்ந்தனா அதை அவுணாபெருமான் கேட்டுக்கோபித்துத்தனது மேருவையொதத வில்லைவட்டாகாரமாக வளைத்து,அளவற்ற குரூரமாகியபாணங்களைக் கோடைமழைபோலப் பொழிந்தான் அவைகளையெல்லாம் எமதுகர்த்தர் தமதுகதாயுதத்தினால்விலக்கி அவன்பிடித்திருந்த வில்லைக்கண்டித தெரிந்தனர் பின்னர் கஜமுகாசுரன் மற்றொருவில்லையெடுத்து வளைதது அளவற்றசரங்களை முன்னினும் அதிகமாகத்தொடுத்துவிட்டான் அவைகளையுங்கணபதிமூர்த்தி தமதுமுசலத்தினால் விலக்கி வில்லையும் பொடிபடுத்தினர். பின்னர் கஜமுகாசுரனானவன் அதிக உக்கிரத்தோடு நெருங்கிவந்து மற்றொரு வில்லில் இந்திராஸ்திரம் வருணாஸ்திரம் வாயுவாஸ்திரம்,பிரமாஸ்திரம் நரசிம்மாஸ்திரம் முதலிய தேவாஸ்திரங்களை மாறிமாறிப்பிரயோகித்தான் அவையனைத்தும் வெளிப்பட்ட மாத்திரத்தில் அனந்த உற்பாதங்களை விளைத்துக் கொண்டுவந்து எமது கர்த்தருடையதிருவடிகளில் வீழ்ந்துவிட்டன. அதைக்கஜமுகாசுரன்கண்டு ஆச்சரியமுற்று மீட்டும் ஓர்தண்டாயுதத்தை யேந்திவந்து யுத்தஞ்

செய்தான் அத்தண்டாயுதத்தைக் கணபதி மூர்த்தியானவர் தனது கதாயுதத்தினாற் றுகள் படுத்தி அவுணர்பெருமான் மார்பிற்றாக்கினார் உடனே அவன் சிறிதுநேரஞ் சோபித்திருந்தனன். அப்போது சுவாமி, தமது மழுவாயுதத்தினால் அவனுடையசேனைகளை யெல்லாஞ் சாம்பலாக்கினர். பின்னர் கஜமுகாசுரன் சோபந்தீர்ந்து, தனது சேனைகளெல்லாம் அழிந்து கிடக்கின்றமையைப்பார்த்து இவன்மேலான பராக்கிரமசாலியேயன்றி சிறுவனல்லவென்று நிச்சயித்தும் மானம் மேலிட்டவனாய், மீட்டும் அளவற்ற ஆயுதங்களைக்கொண்டு யுத்தஞ் செய்தனன். அவன் பெற்றிருக்கின்ற சிறந்தவரத்தைக் கணபதிமூர்த்தி யாலோசித்து, தமது வலப்புறக் கோட்டின் முனையையொடித்து அவன்மீது விட்டனர். அது வெளிப்பட்டமாத்திரத்தில சகல லோகங்களுங்கலங்கும்படியாக வாயபரித்துச்சென்று கஜமுகாசுரனுடைய மார்பைப் பிளந்துபோய்ச் சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்து, மீட்டும் சுவாமிகளிடத்தில வந்துசேர்ந்தது

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! பகைவர்வந்தபோது அவர்களைப்பாதத்தினாலும், உகிரினாலும், நகையினாலும், பார்வையினாலும்வென்று வெற்றிகொள்ளவல்ல சிவபிரானுக்குத் தமதுகொம்பினால் அவ்வவுணனுடைய வுயிரைமாய்த்ததும் ஒருபுகழோ? பின்னர் கணபதிமூர்த்தியானவர் சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்துவந்த கொம்பினை ஓராயுதமாகத் தமது திருக்கரத்தி லேந்தியருளினர். அப்போது தேவர்கள் புட்பவருடஞ் சொரிந்தார்கள். முனிவர்களெல்லாம் வேதாகமங்களினாற் பலமுறைதோத்திரஞ்செய்து பணிந்தார்கள். முன்னர் எம்பெருமானுடைய கோட்டினாற் பிளக்கப்பட்ட மேருகிரி அடியோடேபெயர்த்து வீழ்ந்ததும்போலநிலத்தில்வீழ்ந்த கஜமுகாசுரன், பின்னர்மலைக்கு நிகரான மூடிகமாகி, வட்டமாய்ச் சிவந்து அழலையுமிழ்கின்ற விழிகளும, திசையானைகளை யெல்லாம் வீட்டத்தக்க நீண்டவாலும், கடைவாய்க்கு வெளிப்பட்டிருக்கின்ற பருத்த பற்களும், நீண்டுநிமிர்ந்து அழுத்தமுற்றிருக்கின்றமுகமும் சரீரமுழுவதும் நிறைந்திருக்கின்றமயிரும், மலைகளையும் விருக்கங்களையும் உதைத்துச்சாய்க்க வல்லகால்களும், ஆகாயத்தை யளாவவுயர்ந்து உம்பருலகத்தையு மழிக்கத்தக்க முதுகும் பார்த்தவர்கள் அஞ்சிப் பயங்கொள்ளும்படியான கோரரூபங்கொண்டு சகலலோகங்களையுங் கலக்கிநாசம்பண்ணும்படி நடந்தான். அவ்வுருவத்தைத்தேவர்களு முனிவர்களும் பார்த்துப் பயந்து பல திசைகளினும் ஓடிப்பதுங்கினார்கள் இத்தன்மைத்தான கொடியரூபத்தோடு எதிர்த்துவருகின்ற ஆகுவினுடைய பராக்கிரமத்தை எமதுகர்த்தன்கண்

டு இமைப்போதில் அதனை அசைவறப்பிடித்து முதுகிலாரோகணித்தருளினர். சுவாமியினுடைய திருமேனி தனது சரீரத்திற்பட்ட மாத்திரத்தில் அவனுடைய அஞ்ஞானவிருள் விலகிப்போய் மெஞ்ஞான ஒளிமிகுந்து மேன்மைபெற்றனன் சித்தர்கள் சாரணர்கள் முனிவர்கள் தேவர்கள் முதலாயினோர், ஆகுவை வாகனமாகவூர்ந்தருளியிருக்கின்ற கணபதிமூர்த்தியைப் பூசித்தார்கள் கஜமுகாசுரன் மார்புபிளக்கப்பட்டு உதிரம் பெருகவிழுந்த படுகளத்தை உலகத்தார் மாரொத்தமயமென்று சொல்லுகின்றார்கள் அவ்விடத்தில் கணேசமூர்த்தியானவர் ஓர் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து பூசித்து அத்தலத்திற்குக் கணபதீச்சுரமென்று திருநாமந்தரித்தனர் அளவற்றசேனைகளோடு கஜமுகாசுரன் யுத்தகளத்தில் இறந்தானென்று அசுரராஜனறிந்து பயந்து தானொருபட்சிரூபங்கொண்டு மேருமலையிலிருக்கின்ற ஓர் குகையிலொளிந்துகொண்டான் அசுரர்குருவாகிய சுக்கிரனும் ஆகாயமார்க்கமாய் மறைந்துபோயினன் இந்திரன் முதலிய தேவர்களெல்லாங் கணபதிமூர்த்தியினிடத்தில் விடைபெற்றுத் தம்பதங்களை யதாபிரகாரமடைந்து வாழ்ந்திருந்தார்கள்

பின்னர் கணபதிமூர்த்தியானவர் தமது ஆகுவாகனத்தை நடாத்திக்கொண்டு சகலசேனைகளும் புடைசூழ்ந்துவரும்படியாக வடதிசையை நோக்கி யெழுந்தருளினர் அம்மாத்திரத்தில்நெடுநாள் ஓராலமரப்பொந்தில் குருட்டுப்பலைப் பாம்பாகியிருந்த விண்டுவானவர் அவ்வடிவத்தினின்று நீங்கிப் பழையபடி தெய்வரூபம்பெற்றுக் கணபதிமூர்த்திக்கெதிரில்வந்து பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பிநின்று ஓ அட்டமூர்த்தசுபா யிருக்கின்ற அமலனே? தேவரீருடைய தரிசன வீட்சண்ணியத்தால் அடியேற்கு உமாதேவியார் கொடுத்தசாபம் ஒன்றேயன்றி அடியேனுடைய மலபந்தங்களும்நீங்கும்படியான பேற்றினையடைந்தனன் இனி இதைவிடயான்பெறத்தக்கபேறு வேறென்னவிருக்கின்றது? என்றுமிக்கமனமகிழ்ச்சியோடும்புகழ்ந்து, புட்பம்முதலிய திரவியங்களாற் பூசனைசெய்து வேதாகமங்களினுந் தோத்திரம்புரிந்து கைதட்டி நிருத்தமாடி, மீட்டும் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து சுவாமி? அடியேற்குத் தேவரீர் தரிசனம் கொடுத்தருளிச் சகல நன்மைகளையுங் கிடைக்கச் செய்த இத்தினம் மாகழிமாதம் சஷ்டியாதலால் வருடந்தோறும் வருகின்ற இத்தினத்தில யாவரேனுந் தேவரீருக்கு வழிபாடு செய்வார்களாயின், அவர்கள் சகலவரிட்டங்களினின்றுநீங்கி இட்டகாமியார்த்தங்களைப்பெற்றுய்யும்படி அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

அதற்குக்கணேசமூர்த்தி, அவ்வாறே செய்தருளுவமென்றநுகிருபைகூர்ந்து அவ்விண்டுலையுந் தம்மோ டழைத்துக்கொண்டு சகலசேனைகளோடுங் கயிலாயத்திற்குச் சென்று சிவபிரானையும் உமாதேவியாரையும்பணிந்து விடைபெற்று, தனது யதாஸ்தானமாகிய மூதற்கோபுரவாய்தலின் முகப்பிலெழுந்தருளினர் அப்போதுவிண்டுமுதலாயினோர் கணேசமூர்த்தியைப் பூசனைசெய்து சுவாமி! அடியேங்கள் இதுகாறும் மிகுந்த கொடுமையான கஜமுகாசுரனுக்குக் குட்டிக்கொள்ளுதல் முதலாகிய வணக்கங்களைச் செய்து அவனுடைய பணிவிடைகளை நடாத்திவந்தனம அவ்வணக்கத்தை இன்றுமுதல் அடியேங்கள் தேவரீருக்கெதிரே செய்கின்றனம் அவைகளைத்தேவரீர் வணக்கமாகக் கொண்டருளல்வேண்டும் அவ்வாறு தேவரீருக்கு வணக்கஞ்செய்வோர்கள் யாவராயினும் அவர்கட்கு இஷ்டகாமியார்த்தங்களைக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்து, அவ்வாறே தாங்க ளனைவரும் வணக்கஞ்செய்து சகலவரங்களையும் பெற்று அவ்வவர்களுடைய பதவிகளையடைந்தார்கள். என்று சூதபுராணிகர்சொல்ல, அவரைச்சவுனகாதிமுனிவர்கள் பணிந்தெழுந்து சுவாமி! கஜமுகாசுரன்யார்? அவன்பெற்றவரங்கள்யாவை! அவைகளையுந்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்றுபிரார்த்தித்தனர் அதற்குச் சூதபுராணிகரிசைந்து, ஓ சவுனகாதிமுனிவர்களே! முன்னொருகாலத்தில் தேவேந்திரன் அசுரேந்திரனோடு யுத்தஞ்செய்து அவனைப் பின்னிட்டோடப்பண்ணித் தான்வெற்றிப்பெற் றிருந்தனன். பின்னரசுரேந்திரன் வலியுற்று நமது குலத்தில் தேவேந்திரனைச்செயிக்கத்தக்கவீரர்கள் ஒருவருமில்லையென்று மனந்தளர்ந்து தனதுகுலக்குருவாகிய சுக்கிரனைப்பணிந்தெழுந்து சுவாமி! இப்போது எங்கள்குலத்திலிருக்கின்றவர்களுள் தேவேந்திரனைச்செயிக்கவல்ல வீரமுடையவர்கள் ஒருவரு மில்லையே! அதனாலவன்வீறி எங்களை வெல்லுகின்றானே! தேவரீருடைய அருட்சூட்சியினால் நிலைபெற்றிருக்கின்ற எங்கள்குலமானது இவ்வாறு துன்பப்பட்டழியலாகுமா! இனியேனும் அவ்வாறாகாமல் செழித்தோங்கும்படி அடியேன்நடந்துகொள்ளத்தக்கது யாதேனுமுண்டாயின் அதனைத் தேவரீர் கிருபைகூர்ந்து திருவாய்மலரவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்குச்சுக்கிரனனவன் மேல்நடக்கப்போகின்றகாரியத்தைத் தனது சூக்ஷமபுத்தியினாலறிந்து, ஓ அசுரேந்திரனே! வசிட்டமுனிவருடையமாபிலே மாகதரென்னும் ஓர் முனிவர்வனத்திலே முத்தியை வேண்டி அரியதவஞ்செய்துகொண் டிருக்கின்றனர். அவரை எவ்விதத்திலேனும் வசப்படுத்திக் கூடும்படியாக உனதுகுலத்தில் ஓர் கன்னிகைக்

குத்திட்டஞ்செய்தனுப்பிவை அவள்வயிற்றினின்று யானைமுகத்து டனே ஒருவனுதிப்பான். அவன் தேவேந்திரனையடக்கி உங்கள்குல த்தைத் தழைத்தோங்கும்படியாகச் செய்வன், ஆதலால் அதனை வி ரைவில் நடாத்தக்கடவை யென்றுசொல்லி விடைகொடுத்தனன். பின்னர் அசுரேந்திரன் இதுகாறுமடைந்திருந்த துன்பங்களெல் லாம் இத்தினமே போய்விட்டனவென்று மனமகிழ்ந்து சுக்கிரனைப் பலமுறைதுதிசெய்து அவ்விடத்தினின்றுநீங்கித் தனதுபட்டணத் தையினிதடைந்து அசுரகுலத்திலுள் அழகிற் சிறந்தவளாயிருக் கின்ற விபுதையென்னும் ஓர்கன்னிகையிடத்திற்சென்று தனதுமன க்குறையையுஞ் சுக்கிரன்சொல்லிய சூட்சினையும் அறிவித்தான். அ தற்கவளிசைந்து அநதிமிடத்தில தவஞ்செய்திருக்கின்ற அம்மரகத முனிவரிடத்திற்சென்று, அவர்செய்யுந தவமகிமையைப் பார்த்து, இலக்குமியே எதிர்வநதாலும் இவர் சபலிப்பவராயிருக்கவில்லையே வலுவிற்போ யணையலாமென்றால சபித்து நாசமாக்குவரே? தவங்க லைந்தபோதுங் கூடாதக்கவரல்லவே' நமதரசனுடைய இஷ்டத்தை எவ்விதத்தில திருப்திசெய்யப் போகின்றேமென்று எண்ணமிட்டு மனங்கலங்கி, மீட்டுந்தெளிந்தெழுந்து எண்ணியகாரியங்களைக் கு றைவில்லாம லடையததக்கவர்கள் தவத்தர்களேயாதலால், இந்தவ சியை வசமாக்குவதற்கு யாம் தவஞ்செய்தே வசமாக்கிக் கொள்ள வேண்டுமென்று தனக்குள் நிச்சயித்து கவலைகளினின்று நீங்கிமரக தமுனிவர் தனக்கு மணாளராகவேண்டு மென்று மனதிற் றியானஞ் செய்துகொண்டு பசிதாகமுதலியவைகளை யடக்கி ஓர்பாரிசத்திலி ருந்து தனது அழகுற்ற சரீரமெல்லாம் மழுங்கி வருந்தும்படியாக அளவற்றநாள் தவஞ்செய்துகொண்டு வந்தனள்.

இவ்வாறு அவள்செய்கின்றதவமும் பழவினையும் ஒன்றுபட ஒரு நாள்மரகதமுனிவர் தமது தவத்தைவிடுத்துக் கண்களைவிழித்தனர். அப்போதவ்விடத்தில் ஆணையும்பெண்ணையுங்கூடிப் புணர்ச்சி செய்திருக்க அதை யம்முனிவர்கண்டு காமவிகாரந் தலைக்கொண்டு மன்மதனுடைய கருப்புவில்லுக்கிரையாகிமயங்கினர். அதைவிபுதை யானவளறிந்து தமது தவம் ஈடேறியதென்றுமனமகிழ்ந்து தானுந்த னது தவத்தைவிட்டெழுந்து ஞெரேலென்று அம்முனிவர் அருகிற் சென்று வல்லிகொடிபோலநின்றனள். அவளையம்முனிவர்காணலும் ஓர்சிறியகாட்டினுள் மூண்டிருக்கின்ற கனலோடு காற்றுங்கூடினால் பின்னவ்வழல் யாவையுந்தகிக்க மேலெழுவதுபோல, அவருக்குள் ளே பற்றியிருந்த காமவிகாரமானது அவரினின்றுமீறி மேலோங்

கித் துன்பஞ்செய்தது. அதன்பேரில் அம்முனிவர் விபுதையைப்பார்த்து, ஓ பெண்கள்நாயகமே! நீ கன்னிகையா ஒருவனுடையமனைவியா? நீ என்னிடத்திற்கு வந்தகாரியம்யாது? சொல்லுகவென்றுகேட்டார். அதற்குவிபுதையானவள் அவரைப்பணிந்தெழுந்துசுவாமி! அடியேன்கன்னிகையே! தேவரீருக்கு அடியேன்மனையாளாகிப் பணிசெய்யும்படியான நன்மையைக்கோரி அளவற்றநாள் தவஞ்செய்துகொண்டிருக்கிறேன், இப்போது எனதுதவம் நிறைவேறும்படியாகத்தேவரீரும் விழித்தருளியதால் இனி அடியாட்குக் கிருபை புரியவேண்டுமென்று பிரார்த்தித்தனள் அதற்கம்முனிவர் சந்தோஷித்து பெண்ணே நாம்செய்த தவபயனே இவ்வாறு நம்மிருவோரையும் பொருந்தக் கூட்டிவைத்ததாதலால, இனி நீ உனது சங்கடங்களையெல்லாம் விடுத்து ஓர்பெண்யானையாக வுருக்கொளளுகவென்றுசொல்லினர். அவ்வாறே அவள் பெண்யானையாயினள், பின்னர் மரகதமுனிவர் ஆண்யானையாக வுருக்கொண்டு அவளோடு கூடிபபுணர்ந்தனர். அபபோது இரண்டுகொம்பையுடையவனும், நீண்ட துதிக்கரத்தையுடையவனும் மேககர்ச்சனையைபோன்ற குரலினையுடையவனும் கஜமுகாசுரன் பிறந்தான். ஓர் சிங்கக்குட்டியானது தாய்வயிற்றுநின்று முதிக்கும்போதே யானையினுடைய மத்தகத்திற்பாய்ந்து பிளப்பதுபோல அக்கஜமுகாசுரன் தனது தாயுதரத்தினின்றும் உதித்தபோதே சகலலோகங்களையும் வாரியுண்ணத்தக்க தொழிலைக்கைக்கொண்டவனும், ஓர்பட்டாக்கத்தியை வீசிக்கொண்டு பர்வதங்களையெலலாங் கால்களினுலுதைத்துத்தள்ளியும், கைகளினால் அண்டகடாகங்களைக் குத்திப்பொடியாக்கியும், சத்தசாகரங்களிலும், பாய்ந்து அதனைக்கலக்கியுப், பத்துத்திசைகளினு மோடியார்ப்பரித்தும், எங்குங்காற்றுடிபோலப்பாய்ந்துதிரிந்து கொண்டிருந்தான் இவனன்றி இன்னுமளவற்ற அநேக அசுரவீரர்கள் விபுதையாகிய பெண்யானையினுடைய மயிர்க்கால்களினின்று சர்வாயுதபாணியர்களாயும் அழலைச்சொரியும் விழிகளையுடையவர்களாயும் பிறந்து ஆர்ப்பரித்தார்கள்.

இத்தன்மைத்தான கோரங்களைப்படைத்தபிள்ளைகளை ஆண்யானையாயிருந்த மரகதமுனிவர் பார்த்துப்பயந்துயாவரும் நல்லதென்று கூறுந்திருப்பாற் கடலானது ஓர்காலத்தில்யாவரும் அறியும்படியாக விடத்தைக்கக்கியதுபோல புகழத்தக்க தாபனாயிருந்தும் சகலலோகங்கட்கும் அழியாததுயரத்தை யுண்டாக்கினேனேயென்று இலைசித்து மனம்புழுங்கிவாடி தமதுபுத்தியைத்தாமேதேற்றிக்கொண்டு தம்மைப் பிடியானையாகி கூடியவிபுதையைப்பார்த்து, நீயென்னகுலமென்றுகே

ட்டுத் தெரிந்துகொண்டு, அவனைத்தனது பதவியைநோக்கிச் செல்லுமாறு விடைகொடுத்துத் தாம்முன்போலவேதவத்திலிருந்தனர். அவ்விபுதையுந் தானினைத்துவந்தகாரியங் கைகூடியதென்னுஞ் சந்தோஷத்துடன்சென்று தனதிருக்கையையடைந்தனள். கஜமுகாசுரனும்மற்றவீரர்களும் தேவர்கள் முதலியசகலஜீவராசிகளையுங்கொன்று தின்றுக்கொண்டு சர்வசங்காரகாலத்தி லெழுகின்ற உருத்திர மூர்த்தியினுடையகைக்கு இளைப்பாற்றினார்கள் அதனால் சகலலோகங்களினுந்தருமம்-தானம்-ஈகை-அருள்-சீலம்-வேதவொழுக்கம் முதலான எந்தக்கருமங்களு மழிந்துபோய், இலக்குமியானவள் எவ்வுலகங்களினும்வசித்தலன்றித் தாமரைப்பூவொன்றினையே இடமாகக்கொண்டிருந்தனள். இவ்வாறு அபபாதகர்கள் உலகமனைத்தையுங்கனல்பற்றியகாட்டைப்போல நாசமாக்கிக்கொண்டு இயமகிரியைச்சேர்ந்து அங்குதவஞ்செய்திருக்கின்ற பெரியோர்களையெல்லாம் உபத்திரவஞ்செய்து யாவரும் இதுதானோ பிரளயகாலமென்று சொல்லும்படியாகத்திரிந்துகொண்டிருந்தார்கள் அப்போது சுக்கிரனானவன், அவர்கட்குமின்னும் மேலானகாரியங்களை உபதேசிக்கும்படியாக ஆலோசித்துசொல்லுவானாகித் தானும் நாம்பேசும்முன்னமே யென்செய்கின்றானோவென்றுபயந்து, கஜமுகாசுரனுக்கெதிரே சென்றுமைந்தனே! நாமுனது குலத்திற்குமந்திரியுங்குருவுமாகும்மனது குலத்தைவிருத்திசெய்யவேண்டியிப்போது யாம் உனக்குமேலான உறுதியைச்சொல்ல வந்தோமென்றனன். அதைக்கஜமுகாசுரன்கேட்டு அவனைப்பணிந்தெழுந்து, சுவாமி! இனி எனக்குச் சொல்லவேண்டியது யாதேனு முண்டாயின் அதனைச் சொல்லியருளவேண்டுமென்று கேட்டனன். அதற்குமேல் சுக்கிரன்சந்தோஷங்கொண்டு, அன்பனே! யானைமுகத்தோடுங் கூடியவுனக்கும் உனது குலத்தினருக்கும தேவேந்திரன் பகைவனாயிருக்கின்றான். அவன் உனது வரலாற்றினைகேட்டுச் சகலசேனைகளோடும் வெளிப்படுவனாயின் அப்போது நீ அவனை என்னசெய்யமாட்டுவை. நீயாரிடத்திலும் வரங்கள் முதலானவைகளைப் பெறவில்லை. ஆதலால் வேறொருகாரியத்தில் மனத்தைச் செலுத்தாமல் இனியேனுஞ்சிவபிரானைநோக்கித்தவஞ்செய். அவருடையகிருபை உனக்குண்டாயின், அப்போதே எல்லாத்தேவர்களும் உனது ஏவலைக்கேட்பார்கள். நீநினைத்தகாரியங்களெல்லாம் நினைத்தவண்ணமே கைகூடும், இதைச்சத்தியமாக நம்பக்கடவையென்று சொல்லினன்.

இவ்வாறு இதமானகாரியங்களைக் கூறியதனது ஆசிரியனைக்கஜமுகாசுரன்மீட்டும் பணிந்தெழுந்து பலமுறைதுதிசெய்து தவத்தின்

தீதுண்டான இச்சையினால் உடனே விடைபெற்றுத்தனது தம்பியர்கள் புடைசூழும்படியாக மகாமேருகிரியின் ஓர்பக்கத்திலிருந்து ஆயிரம்வருடஞ் சருகுகளைப்பட்சித்துக்கொண்டு, ஆயிரவருடஞ் சலபானஞ்செய்துகொண்டும் ஆயிரவருடம் யோகாமிர்தம் புசித்துக்கொண்டும் இவ்வாறு நாலாயிரவருடம் அகோரமாகிய தவத்தைச்செய்தனன். அத்தவத்திறகுச் சிவபிரான் கிருபைகூர்ந்து அவனெதிரிற் பிரத்தியட்சமாகி உனக்கு வேண்டியவரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்தனன். உடனேகஜமுகாசுரன் பணிந்தெழுந்து ஆனந்தபரவசமூற்று இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி, சுவாமி! விண்டு முதலிய உயர்திணைகளினாலும் யானை முதலிய அஃறிணைகளினாலும், அத்திரசத்திரங்கள் முதலிய ஆயுதங்களினாலும் அடியேன்எக்காலத்தும் அழிவில்லாமலிருந்து தேவர்கள் முதலாயினோர் இரவும் பகலுமடியேனை ஏவல்கேட்டு நடந்துகொள்ளும்படியாய் அரசாட்சி செய்யவேண்டும் ஒருவேளை சுவாமிகளுடைய கிருபையினால் அடியேற்கு முடிவுநேருமாயின் அப்போது அடியேன் மேன்மைபெற்றிருக்கும்படி வரங்கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன் அவ்வாறே சிவபிரான் அவனுக்கு வரங்களைக்கொடுத்தருளி அந்தர்த்தானமாயினர்.

இப்பால் கஜமுகாசுரன்தனது தம்பியரோடு அவ்விடத்தினின்று நீங்கத் தனதிருப்பிடத்திற்கு வந்துவிட்டனன், அப்போது அசுரேந்திரனும் சுக்கிரனும் அவனிடத்தில் வந்து கலந்தார்கள் தேவதச்சனானவன் அவ்விடத்தில் சகலவளங்களோடும் ஓர் நகரமுண்டாக்கி அதற்கும் தங்கநகரமென்று பெயரிட்டுக்கொடுத்தான் அந்நகரத்தில் கஜமுகாசுரனிருந்து திரிலோகங்களினும் கொடுங்கோல்செலுத்தித் தேவர்கள் முதலிய யாவரும் தன்னைவணங்கும்படியாக அரசாட்சிசெய்து வந்தனன். கச்சபநிதி-கர்பநிதி- சங்கநிதி- பதுமநிதி-நந்தநிதி-நீலநிதி-மகாநிதி-மகா பதுமநிதி-முகுந்தநிதி என்கின்ற நவநிதிகளும் அரிசந்தனம்-கற்பகம்-சந்தானம்-பாரிசாதம்-மந்தாரம் என்கின்ற பஞ்சதருக்களும் காமதேனு சிந்தாமணி முதலியனவும் அப்பதங்கநகரத்தையடைந்து பணிசெய்திருந்தன இந்திரன் முதலிய தேவர்களும் கிரீடாதிபதிகளான இராஜர்களும் மிகுந்த பயபத்தியுடன் தினந்தோறும் வந்து அவனைப்பணிந்து ஏவல்செய்துகொண்டு எல்லா இயமாப்புகளையுமொழிந்திருந்தார்கள் சுக்கிரனும் அசுரேந்திரனும் அவனுக்கு அமைச்சரானார்கள். பின்னர்கஜமுகாசுரனானவன் தனதுகுலத்திலும் தேவர்குலத்திலும் நாகர்குலத்திலும் உள்ளமிக்க அழகான ஸ்திரீகள் அநேகரைக்கலியாணஞ்செய்துகொண்டு சகலபோகபாக்கியங்

ளையுங் குறைவற அனுபவித்துத் திரிலோகங்களிலுங் கொடுங்கோல்செலுத்திவருகின்றநாளையில் ஓர்நாள் தன்னைப்பிரதிதினம் பயபத்தியோடு பணியவருகின்ற தேவர்களை அப்பாதகன் பார்த்து ஓ விண்ணவர்களே! இன்றுமுதலாக நீங்கள் நம்மைப்பணியவருகின்றபோதெல்லாம் இருகரங்களையும் முட்டிபிடித்து மூன்றுதரஞ் சிரசில் குட்டிக்கொண்டு பின்னர் அக்கரங்களைமாறிச்செவிகளைப்பிடித்துத்தோப்புக்கரணம் போடக்கடவீர்கள், இதுவே நீங்கள் நமக்கு இட்டமாகச்செய்யத்தக்கவணக்கமென்று ஆக்கியாபித்தனன். அன்றுமுதல் தேவர்கள் யாவரும் அவ்வாறே செய்துவந்தார்கள். மனதில் எவ்வளவேனும் தயையில்லாமல் தேவர்களையேவல் செய்வித்துவந்தகஜமுகாசுரனுடையபிறப்பும், அவனுக்குப்பாக்கியம் வந்த வரலாறும் இதுவாகும். இத்தன்மைத்தானகொடும்பாவியை ஓர் நிமைப்போதில் வென்றகணபதிமூர்த்தியினுடைய திருவவதாரமகிமையைக்கூறிய இச்சரித்திரத்தைப்பிரதிதினம் பாராயணஞ்செய்வோர்கள் சகல அரிஷ்டங்களினின்றும் நீங்கி மெய்ஞ்ஞான சுகத்தையடைந்து வாழ்வார்கள்.

கணபதி திருவவதாரப் படலம்

முற்றிற்று



பத்தாவது.

மகோற்கட விநாயகர்

# திருவவதாரப் படலம்.



கணபதியென் றுலகேத்துங் கண்ணுதலா ரவதாரங்
குணமுறக்கேட் டனையன்றே கோதின்மகோற் கடரென்ன
வணவுறுமைபிரண்டா மவதார மிதுவிசைகூர்
குணமலிதெய் வதநெறியிற் கொண்மினுன் முனிவீர்காள்.

ஓ சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தியானவர் கணபதி திருவவதாரங்கொண்டு தேவர்களை வருத்திய கஜமுகாசுரனைக்கொன்று விண்டுவினுடைய சாபத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இப்பால் மகோற்கடாவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளையாடலைச்சொல்லுவோம் கேட்பீர்களாக.

தாமரைத் தடாகங்களும், குடிவளப்பமும், வயற்செழுமையுஞ் சிறந்துவிளங்கியிருக்கின்ற அங்கதேயத்தில், சகலசெல்வங்களையும்பெற்றோங்கிய காத்திரமென்னுமோர் பட்டணமுண்டு. அப்பட்டணத்தில் குடிகொண்டிருக்கின்ற அந்தணர்கட்குள், வேதமுதலிய சாத்திரங்களை யாராய்ந்துணர்ந்த உள்ளத்தினனாய், போகபாக்கியங்களில் இச்சைவையாது யாகாதிகளைச்செய்கின்றவனாய், இரவுத்திரகேதுவென்னும் பெயரினையுடைய ஓர் அந்தணனிருந்தான் அவனுக்குக்கற்பினும் அழகினும் அருந்ததியையும் இரதியையும் நிகர்த்தசாரதையென்னும் பெயருடைய ஓர் மனைவியிருந்தனள். இவ்விருவர்களும் உடலுமுயிரும்போல வாழ்ந்திருக்கின்ற நாளையில் அவர்கட்கு இரட்டைப்பிள்ளைகள்பிறந்தார்கள் உடனே தந்தையாகிய இரவுத்திரகேதுவானவன் அவர்கட்குச்செய்யவேண்டிய கருமங்களைச்செய்து நிறைவேற்றி ஒப்பற்றகணிதர்களைக் கூவி திதிபாதி நிலைகளை யாராய்ந்து. தேவாந்தகனென்றும் நராந்தகனென்றும் நாமகரணஞ் செய்தனன் தாயாகிய சாரதை அவர்களை ஆட்டியும் ஊட்டியும் அன்போடு வளர்த்துவந்தனள்.

இவ்வாறு இருவரையும் சாரதை பாராட்டிவரும்போது, அப்பிள்ளைகள் நாளுக்குநாள் வளர்பிறையைப் போலத் தொட்டிலில் வளர்ந்துகொண்டிருக்குஞ்சமயத்தில் சின்னாள் விண்ணுலகைப் பகைவர்போல மல்லாந்து ஆகாயத்தைப்பார்த்தும், சின்னாள் பாதலத்தைக் கொள்வார்போலக் கவிழ்ந்து நிலம் பார்த்தும், சின்னாள் அறங்களெல்லாந் தழைத்திருக்கும்படியாக வுட்கார்ந்தும், சின்னாள் மறங்களனைத்தும் வளர்ந்தோங்கும்படியாக வெழுந்தும், சின்னாள் நல்லோர்களுடைய செம்மையல்லால் புறங்கொண்டு செல்வதாகநடந்தும், சின்னாள் எங்குஞ்செயிர்விளையாடும்படியாகத் தெருக்களில் விளையாடியுமிருந்தார்கள், இவ்வாறு இவர்களைமல்லாந்துங், கவிழ்ந்தும், இருந்தும், எழுந்தும், நடந்தும், விளையாடியும் இருக்கின்ற காலத்திற்றானே பாரித்த சரீரத்தையுடையவர்களாகித் தங்களடிகளைப் பெயர்த்துவைக்குந்தோறும் பூமியைத் தாங்கிநின்ற ஆதிசேடன் நெளியவும், தாங்கள்குதித்துவிளையாடுந்தோறுந் தங்கள் முடிபட்டு உடுக்களுதிரமாகவிருந்தார்கள் அவர்கட்கு ஆறும்வயதில் இரவுத்திரகேதுவானவன் உபநயனஞ்செய்வித்துவேதாகமாதிகளையும் ஓதுவித்தனன் அவர்களும் அவைகளைத் தெளிவுபெறவோதித் தமது தந்தையினும் பதின்மடங்கு அதிகமானார்கள். அக்காலத்தில் ஓர்நாள் நாரதமுனிவர் அவ்விடத்தில்வர, அவரை இரவுத்திரகேதுவும்சாரதையும் எதிர்கொண்டழைத்துவந்து

ஓராதனத்திலிருத்திச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, அளவற்ற தோத்திரங்களைச் செய்துபற்பல உபசாரவார்த்தைகளைப் பேசித்தமது புத்திரர்களாகிய தேவாந்தகனையும் நராந்தகனையும் அழைத்து, அவர்கள் நாரதமுனிவரைப் பணியச்செய்து சகல வான்மகோடிகட்கும் நன்மையைவிளைக்க வெழுந்தருளிய கிருபா நிதியே! இப்புத்திரர்கட்குப் பூரணாயுளுஞ் செல்வமுங் கிடைக்கும்படியாகத் தேவரீருடைய அமிர்தவாக்கினால் ஆசீர்வதிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கு அம்முனிபுங்கவர் கிருபைகூர்ந்து தம்மைப் பணிந்திருக்கின்ற பிள்ளைகளிருவரையுந் தமதுமடித்தலத்திலெடுத்து வைத்துக்கொண்டு உச்சிமோந்து சரீரமுழுவதுந் தடவிமீட்டுங் கீழேவிடுத்து அவ்விருவருக்கும் ஸ்நாநஞ்செய்வித்து, விதிப்படிதீட்சை புரிந்து, பஞ்சாக்ர உபதேசஞ்செய்து அதைசெபிக்கவேண்டிய முறைமையினையுங்கூறி, மைந்தர்களே! இன்றுமுதல் இம்மகா மந்திரத்தைச் செபஞ்செய்து வருவீர்களாயின், உங்கட்குச சிவபிரானுடைய கிருபையினால் யாதொருதீங்குஞ்சேராது சகலசித்திகளுங் கைகூடும் தேவர்களெல்லாம் உங்களைப் பணிவார்களேயன்றி நீங்கவர்களைபபணியா திருக்கத்தக்க யோக்கியம் உங்கட்குண்டாகுமென்று அனுக்கிரகஞ்செய்து போயினர் அதற்குமேல் அபபுத்திரர்கள்சகல செல்வங்களையுந் தவஞ்செய்து பெறவேண்டுமென்று ஆலோசித்து, உடனே தாய்தந்தையரைப்பணிந்து விடைபெற்றுப் பலவிருக்ஷங்கள் மலிந்திருக்கின்ற ஓர்வனத்திற் சென்று அவ்வனத்தினடுவில் ஓர் சோலையும் அச்சோலைமத்தியில் ஓர் தடாகமும் அத்தடாகத்தினருகில ஓர்சிவாலயமுமிருக்கக்கண்டு அச்சிவாலயத்தி லெழுந்தருளியிருக்கின்ற சிவலிங்கத்தைப் பூசைசெய்து ஓர்காற்பெருவிரலை நிலத்திலூன்றி பஞ்சேந்திரியங்களையுமடக்கிநான்மருங்கினும் அக்கினியைவளர்த்தி ஆயிரம்வருடம் ஒருபொழுதுஅன்னமுண்டு, ஆயிரம்வருடம் தண்டுகளைப்புசித்தும், ஆயிரம்வருடம்கிழங்குகளையருந்தியும, ஆயிரம்வருடம் இலைகளைமேய்ந்தும், ஆயிரம்வருடம் கனிகளைநுகர்ந்தும், ஆயிரம்வருடம் காய்களைக்கறித்தும், ஆயிரம்வருடம் சருகுகளை அயின்றும், ஆயிரம்வருடம் சலபானஞ்செய்தும், ஆயிரம்வருடம் வாயுபட்சணஞ்செய்தும், ஆயிரம்வருடம் நிராகாரமாயிருந்தும் இவ்வாறு பதினாயிரம்வருடம் சூரியனைப்பார்த்துக்கொண்டு அருமையான தவஞ்செய்தார்கள் அத்தவத்திற்கு அருட்கடலாகிய சிவபெருமான்கிருபைகூர்ந்து அவர்கள் தம்மையெவ்வாறு தியானித்தார்களோ அவ்வாறே நீலகண்டமும் ஐந்துமுகமும் பத்துகரங்களும் பதினைந்துவிழிகளும் சடைமுடியில் மூன்றாம்பிறைசந்தி

ரனும்விளங்கும்படியாக உமாதேவிசமேதராய் இடபவாகனத்தையூர்ந்து அளவற்ற சிவகணங்களுந் தேவர்கள் முனிவர்கள் முதலியோரும் புடைசூழ, அவர்களெதிரே பிரத்தியட்சமாயினர் உடனே அவர்கள் கர்த்தனுடைய திருவுருவங்களை தியானித்தவாறே தரிசித்து அருயற்றபனைபோலச் சாஷ்டாங்கமாகவிழுந்தெழுந்து பலமுறைதவஞ்செய்துநின்று இருவிழிகளினும் ஆனந்தபாஷ்பஞ்சொரிந்து உடல்முழுவதும் உரோமஞ்சிலிர்ப்பக் கசிந்துருகிட்டு நெஞ்சமுருகிக்கரங்களைச் சிரமேற்கூப்பி சாமவேதங்களினால் அளவற்ற தோத்திரங்களைச் செய்தார்கள், இவ்வாறு அவர்கள் வரம்பெற்ற அன்போடு செய்தது திகட்குச்சிவபிரான் சந்தோஷித்துத் தமதுகிருபாநோக்கத்தால் அவர்களைப் பார்த்து அன்பர்களே! நீங்கள் கருதியவரங்களைக் கேளுங்களென்று திருவாய்மலர்ந்தனர். அதை அவ்விருவர்களுங்கேட்டு ஆனந்தித்துத் தங்கள் திடசித்தத்தாலும ஆலோசித்து சுவாமி! இருவகைப்பொழுதினும் இருவகைத்திணையினும இருவகைப்படையினும் அடியேங்கள் இறுதியில்லாமலிருக்கவும பிரமன் விண்டு முதலியதேவர்கள் அடியேங்களிட்ட பணிகளைச்செய்யும்படியான செல்வமும் கிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்திததார்கள். அதற்குச் சிவபிரான்கிருபையோடும் அவர்களைப்பார்த்து ஓ இருவர்களே! விநாயகமூர்த்தியினுடைய திருக்கரத்தாலன்றி ஏனையோரால் உங்கட்கு நிரியாணமில்லை திருவாய்மலர்ந்து அவர்கள்கோரிய மற்றவரங்களையுந் தெய்வப்படையுங்கொடுத்தருளி அந்தர்த்தானமாயினா.

பின்னர் அவ்விருவர்களும் அளவற்ற மகிழ்ச்சியோடு தங்கள் பட்டணத்திற்குச்சென்று தாய்தந்தையரைப் பணிந்தெழுந்துதாங்கள் பெற்று வந்தவரங்களையெல்லாம் அவர்கட்குக்கூறிச்சிலநாள் ஆசோதையுற்றிருந்து அதற்குமேல் திரிலோகங்களையும் ஆளவேண்டுமென்று இச்சைகொண்டுதிதிவார நட்சத்திரயோககரண முதலியவைகள் சுபமாயிருக்கிற ஓர்நாளை ஆராய்ந்து அந்நாளில்நித்திய விதிகளைமுடித்துநெய்யுங்கண்ணடியும்பார்த்துவேதியர்கட்கு அளவற்றதானங்களைக்கொடுத்து அவ்விருவர்களில் மூத்தவனானதேவாந்தகனவன்நராந்தகனையழைத்துதம்பி நீ இப்பூவுலகத்தையும் பாதாளலோகத்தையும் உன்வசப்படுத்தி அரசாட்சிசெய்து கொண்டிரு யான் தெய்வலோகமுழுவதும்வசப்படுத்தித் தேவர்களையெல்லாம்பணி கொள்கின்றேனென்றுசொல்லி அவனிடத்திலுந்தனதுதாய்தந்தை யரிடத்திலும்விடைபெற்றுச்சிவத்தியானஞ்செய்துகொண்டு ஆகாயமார்க்கமாகச்சொர்க்கலோகத்திற்குச்சென்று அமராவதி பட்டணத்திற்கு வெளியேயிருக்கின்ற

கற்பகச்சோலையைக்காவலாளர் காலாலுந்தள்ளியுதைத்து அச்சோலை கல்லோலப்படுத்தினன். அதை அங்கிருந்தோர்களிற் சிலர்பயந்தோடி தேவேந்திரனைப்பணிந்தெழுந்து, ஆண்டவனே இதோ ஓரவுணன்வந் தூமதுகற்பகவனத்தையழிக்கின்றானென்று அறிவித்தார்கள் அதைக்கேட்டலும் இந்திரனுக்கு மிகுந்தகோபமுண்டாகித்தனது சேனைத் தலைவர்களைக்கூவிநமது கற்பகவனத்தை ஓரவுணன்வந்து அழிக்கின்றானும், நீங்களிந்நிமிஷத்தில அங்குச்சென்று அவ்வவுணனைக்கைப்பிடியாகப்பிடித்துக் கொண்டுவந்துயானையின்காலில் இடறுவிக்கக்கடவீர்களென்று ஆக்கியாபித்தான் அவர்களும் அதற்குடன் பட்டுத்தங்கள் தங்கள்சேனைகளோடு வெளிக்கொண்டு தேவாந்தகனை வளைத்துச்சமர் செய்தார்கள் அப்போது சிவானுக் கிரகத்தால் மேலானபராக்கிரமத்தினையடைந்திருக்கின்ற தேவாந்தகன், அதிககோபங்கொண்டு, யானைகூட்டத்துள் ஒணடிசிஙகம் புகுந்தது போலத் தேவசேனைகளிற் புகுந்துவிமானங்களைத்தூக்கி விமானங்கள் மீதெறிந்தும், இரதங்களைத்தூக்கி இரதங்கள் மீதுவீசியும், யானைகளைத்தூக்கி யானைகள் மீது எற்றியும், குதிரைகளைத்தூக்கிக் குதிரைகளின்மீது விடுத்தும்பதாதிகளைத் தூக்கிப் பதாதிகள்மீது தாக்கியும், இவ்வாறு காலாந்தருத்திரனைப் போல நிமைப்போதில் நால்வகைசசேனைகளையும் அதப்படுத்தி அச், சேனைகட்குத் தலைவராகவந்த வீரர்களையெல்லாங்காலினாலுதைத்தும் கையினாலடித்தும் அனலெழும்பக்கண்களை விழித்தும்: பெருமூச்செறிந்தும், ஆர்ப்பரித்தும், நகைத்தும், குனித்தும், தோள்களைத்தட்டியும், உலாவியும், நிமிர்ந்தும சின்னாபின்னப்படுத்தி விட்டனன்.

இச்சம்பவத்தை இந்திரன்கேள்வியுற்று வடவானலத்தைப்போலக் கொதித்தெழுந்து பின்னும் அளவற்ற சேனைகளோடு தனது ஐராவதத்திலேறித்தேவாநதகனைநோக்கிச்சென்றனன். அத்தேவாந்தகன் இந்திரனையும் அவன் சேனைகளையும் பார்த்தமாத்திரத்தில் ஓர்மங்கையானவள் ஓராடவனைக்கண்டு வலிதிற்கூடவந்தால் அவ்வாடவனுக்கு எவ்வாறு காமக்கனல் அதிகறிக்குமோ அவ்வாறு அவனுக்குக்கோபக்கனலதிகரித்து மந்திரகிரியை யொத்துப்பாரித்திருக்கின்ற தனது கொடுமரத்தை இருகைகளும் பொருந்தகவளைத்து ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினாயிரமென்னுங் கணக்கினுமதிகமாக அளவற்ற திவ்யபாணங்களைக்கோடைமழைபோலப் பொழிந்து ஓர் கணப்போதில் இந்திரனுடைய சேனைகளையெல்லாங் கொன்றனன், அதை இந்திரன்பார்த்து ஆலகாலம்போலக்கொதித்து தனது ஐராவதத்தை விரைவில் முடுக்கிச்சென்று வச்சிராயுதத்தினால் தேவாந்தகனுடைய மார்பில்

இடிபோலப் புடைத்தான். அப்போதவ்வச்சிராயுதமானது கருங்கற் பாறைமீதுறைந்த அல்லிக்கொடியைப்போலப் பொடிப் பொடியாய்ச் சிதறிப்போய்விட்டது, இவ்வாறு வச்சிராயுதஞ் சிதறிப்போகலும், இந்திரனானவன் தனது அயிராவதத்தைக் குனித்துக் கொம்பினால் அவன் மார்பைப் பிளக்கும்படியாக முடுக்கினான் அஃது அவ்வாறே குனிந்து தனது மார்புக்கு நேராக வருதலுந் தேவாந்தகன் ஓரறையினால் அதனுடைய வீறுப்பை யடக்கி மற்றோரறையினால் இந்திரனுடையபற்களெல்லாம் பலபலவென்று உதிரும்படியாகக் கன்னத்திலே புடைத்தான்.

உடனே இந்திரன் அவ்வடியைத் தாளமாட்டாமல் கீழேவிழுந்து மூர்ச்சையாகிப்பின்னர் தெளிந்தெழுந்து இனியாம் இங்கு நீடித்திருந்தால் இப்பாதகன் அரைக்கணத்தில்நம்மைக்கொல்லுவானென்று பயந்து கரந்தோடி மகமேருகிரியிலிருக்கின்ற ஓர் குகையில் ஒளித்துத் தவஞ்செய்துகொண்டிருந்தான். பின்னர் இச்சம்பத்தை இந்திராணியும் மற்றத் தேவர்களுங் கேட்டுப்பயந்து அவர்களும் அவ்வாறே சென்று அம்மலைக் குகைகளிலொளித்துக்கொண்டார்கள், சொர்க்கலோக மனைத்துங்கலங்கின. அதற்குமேல் தேவாந்தகன் செயபேரிகையறைவித்து இந்திரனுடைய அயிராவதத்திற்றான் ஆரோகணித்து இராசவீதிகளை வலமாகவந்து சுதன்மத்திலிருக்கின்ற சிங்காதனத்தில் ஒற்றைக்குடையின் கீழிருந்து இருமருங்கினும் வெண்சாமரைகள் வீசவுந் தேவர்கள் யாவரும் பணிந்து தோத்திரஞ் செய்யவும், அரம்பையர் நடனமாடவுமான கோலத்துடனே கொலுவிருந்து தேவேந்திரனைப்பார்க்கினும் பதின்மடங்கு அதிகமாக யான் உங்களையெல்லாங்காப்பாற்றுகின்றேன் என்னைச்சத்துருவென்றெண்ணி நீங்கள் கலிய வேண்டாம், யாவரும் பழையபடி அவ்வவர்கள் யதாஸ்தானத்தையடைந்து, களித்திருக்கக் கடவீர்களென்று சொர்க்கலோகமெங்குங் கலிதூங்கும் படியாகச்சொல்லி முரசறைவித்தான் அதை யாவருந் திண்ணமாக நம்பித்தத்தமிருக்கை யடைந்தார்கள். பின்னர் தேவாந்தகனானவன், அவ்வாறடைந்தவர்களிடத்தில் கிருபையும், அடையாதவர்களிடத்தில் கொடுமையும் வழங்கி முன்னர் யுத்தகளத்தில் உடைந்து சென்ற தேவசேனைகளையும் மிகவும் வருந்தி வாட்டமுற்றிருக்கின்ற அவ்வவர்கள் மரபினரையும் சிலவியவர்களை ஏவிவரவழைத்து அவர்கட்குப்பல ஆதரவுகளையுஞ் சந்தோஷத்தையுஞ்செய்து தனதருகிற் சூழ்ந்திருக்கின்ற அவுணர்களையுங்காத்து அவ்வவர்கட்கேற்க சில அதிகாரங்களைக்கொடுத்து சிவபிரான் கொடுத்தருளிய மெய்ய[illegible]

விளங்கினவனாய்ப் பின்னர் அவ்விடத்தினின்றும் படையெடுத்து சத்தியலோகத்தையும் வைகுந்தத்தையும் நோக்கிச் சென்றனன். அவன் வரவையும் அவன் பெற்றிருக்கின்ற வரங்களையும் பிரமனும் விண்டுவுமறிந்து நாம் அவனோடு எதிர்த்து யுத்தஞ்செய்வதில் அனுகூலமில்லையென்று நிச்சயித்து அவ்விடங்களினின்றும் ஒழிமறைந்திருந்தார்கள், பின்னர் படையெடுத்துவந்த தேவாந்தகன் அவ்விரண்டு லோகங்களினும் உடையவர்களில்லாமையைக்கண்டு அவ்விடங்களிலிருந்த பாக்கியங்களையெல்லாங் கைக்கொண்டு அவ்வுலகங்களை அவுணர்களாற் பாதுகாத்துவரக் கட்டளையிட்டு மீட்டுஞ்சுவர்க்கலோகத்திற்கு வந்து அதையே தனக்கு உறவிடமாகக்கொண்டு சகல சந்தோஷத்துடன் அரசாட்சி நடாத்தி வந்தனன்.

அவன் தம்பியாகிய நராந்தகனும் பூவுலகத்திலிருக்கின்ற அரசர்களில் எதிர்த்து வாராதவர்களை எமலோகத்திற் சேர்த்துப், பணிந்து வந்தவர்களிடத்தில் பகுதிவாங்கி ஆதரித்து, எல்லாராச்சியங்களையுந் தன்வசப்படுத்தித் தன்னோடு சயவுச்சாகத்துடன் குலாவியிருக்கின்ற அவுணர்கட்கெல்லாஞ் சந்தோஷஞ் செய்வித்து அவர்களையழைத்துக் கொண்டு நாகலோகத்திற்குச்சென்றான். அப்போதவ்வவுணர்கள் மாயையினாற் கருடரூபங்கொண்டு அவ்வுலகத்திலிருக்கின்ற நாகர்களையெல்லாம் பிடித்துப்பிடித்து விழுங்கினார்கள். அதை நாகராசனாகிய ஆதிசேடனறிந்து நாம் இவர்களோடெதிர்த்து யுத்தஞ்செய்வது சரியல்லவென்று தீர்மானித்துத் தனது நகரத்திலுள்ள நாகரத்தினமுதலிய திரவியமெல்லாமெடுத்துக்கொண்டுவந்து நராந்தகனெதிரில்வைத்துவணங்கினான். அத்திரவியங்களை அப்பாதகன் கைக்கொண்டு, தன்னைவணங்கிய ஆதிசேடன்மீது சிறிதுங்கிருபைசெய்யாமல் அவனைச் சிறையில்வைத்து அவனுடைய அரண்மனையினும் மற்றவிடங்களினுமுள்ள பொருள்களையெல்லாங் கொள்ளையிட்டு, ஓரவுணனுக்கு அவ்வுலகத்தை யாளும்படியாக அதிகாரங்கொடுத்து மீட்டும் பூலோகத்திற்கு வந்து முனிபுங்கவர் முதலாயினோரை தேவர்கட்கு அவிர்ப்பாகந்தரவொட்டாமல் சிறைப்படுத்தி அரசாட்சி செய்துவந்தனன். இவ்விருவர்களுடைய பராக்கிரமத்திற்கு இவர்கள் பிதாவாகிய இரவுத்திரகேது சந்தோஷித்து தனது குலத்தில் அழகிற் சிறந்திருக்கின்ற பெண்களை விவாகஞ் செய்தனன் பின்னர் அப்பெண்களை அவ்விருவர்களுங்கூடிப் பலகொடுமையான புதல்வர்களைப்பெற்றுச் சகலபோகபாக்கியங்களுங் குறைவற வனுபவித்துக் கொண்டுவந்தார்கள்.

இவ்வாறு இராட்சசகுலம் மேலிட்டு தேவர்குலம் கீழிட்டுப் போகலும், அதிதியானவள் நாளுக்குநாள் மேலான மகிழ்ச்சிபெற்று வாழ்ந்திருந்தனள். திதியானவள் நாளுக்குநாள் குழைந்து மிகவுந்துயரமடைந்து தனது நாயகராகிய காசிபரைப்பணிந்தெழுந்து இதனைமுறையிடுவதாயினள். சுவாமி! தேவரீருடைய கிருபையினால் அடியாளீன்று வைத்த சொர்க்காதிபதியாகிய இந்திரன் முதலாகிய தேவர்களையெல்லாம் தேவாந்தகனென்றும் நராந்தகனென்றுஞ் சொல்லாநின்ற இரண்டவுணர்கள் அளவற்ற துன்பங்களைச்செய்து வருத்துகின்றார்கள். அவ்வருத்தத்தை அவ்விந்திரன் முதலாகிய தேவர்கள் சகிக்கமாட்டாதுபலதிசைகளினுமோடிப் பதுங்கியிருக்கின்றார்கள். அவர்கள் அவிர்ப்பாக முதலியவைகளையுங் கொடுக்காதபடி முனிவர்கள் முதலாயினோரைச் சிறைப்படுத்தி யிருக்கின்றார்கள். சுவாமிகள் திருவுளத்திற்கு யாவுந் தெரிந்திருக்கலாம் ஆதலால் தேவரீர் அடியாள்மீது கிருபைகூர்ந்து அப்பாதகர்களை யழிக்கத்தக்க ஓர் பராக்கிரமமுள்ள புத்திரனை இத்தினமே அடியாட்குத் தரல்வேண்டுமென்று பிரார்த்தித்தனள். இவ்வாறு பிரார்த்தித்த அதிதியைக் காசிபர் பார்த்துத் தமக்கு முன்னொருபோது விநாயகமூர்த்தி கொடுத்தருளியிருக்கின்ற வரத்தையோசித்துப் பெண்ணே! மிக்க பராக்கிரமசாலிகளாகிய தேவாந்தகனும் நராந்தகனும் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து ஒருவராலும் அழியாத மேலான வரங்களைப் பெற்றிருக்கின்றார்கள்.

ஆதலால் விபலருளோடுங் கூடிய ஆன்மாக்களைப் புனிதமாகும்படி பஞ்சகிருத்தியங்களை நடாத்துகின்ற கடவுளாய்ப் பரப்பிரமமென்று சொல்லுகின்ற ஓர் பொருளாய் எக்காலத்துந் தனிமுதலாய் மேலான தத்வமூர்த்தியாய் அடுத்தோர்கட்கெல்லாம் ஆனந்த பதவியைக் கொடுக்கத்தக்க பசுபதியாயிருக்கின்ற கர்த்தா யாரோ அவரே அல்லலிருந்து துக்க சாகரத்துள் அழுந்திக்கிடக்கின்ற நம்போலிகட்கு அவற்றினின்றுநீக்கி மேலான சுகக்கரையிலேற்றி வேண்டியவரங்களைக் கொடுத்தருளும்படியாகத் தமது வரம்பெற்ற பெருங்கருணையினால் விநாயகரென்று சொல்லப்படுகின்ற ஓர் பெரிய திருநாமத்தைத் தரித்துக்கொண்டு அற்பவுயிர்களெல்லாம் ஆனந்தத்தை யடையும்படியாய்க் கஜானனமூர்த்தியாயெழுந்தருளியிருக்கின்றார். அத்தன்மைத்தான மேலான மூர்த்தியே நமக்குப்புத்திரனாக அடுத்தாலல்லாமல், உனது சிந்தையுளடங்கியிருக்கின்ற துயரத்தைநீக்கிச் சந்தோஷத்தைக் கொடுப்பவர்களெவ்வுலகினுமில்லை. வேதாகம முதலியவைகளாலளவிடுதற்கரிய அம்மூர்த்தி நமக்குப் புத்திரனாகவரத்தக்கமார்க்கத்தினை

யுஞ் சொல்லுவோங்கேள், அம்மூர்த்தியானவர் தம்மைத் தியானிக்கப்படுவார் தியானிக்குமுன்னம் அவர்கள் உள்ளத்தையே கோயிலாகக்கொண்டு வீற்றருளுகின்ற பெருங்கருணையை யுடையவராதலால், அவருடைய திருவடிகளை மனதில் தியானஞ்செய்து அவரது திருமந்திரத்தையுஞ் செபித்துப் பூசித்தால் உடனே அவர் புத்திரனாக வந்தருளுவர். ஆதலால் இன்றுமுதல் நீ அவ்வாறே செய்துவரக் கடவையென்று சொல்லிப் பிரணவ வல்லபத்தோடு நமோனந்தத்தோடும் பஞ்சாட்சரத்தை யுபதேசஞ் செய்து அதை அநுட்டிக்கத்தக்க முறைமையினையுங்கூறினர். அவையனைத்தையும் அதிதியானவள் மிகுந்த பத்தியோடுங்கேட்டு மிக்க பசியடைந்தோர்க்குத் தேவாமிர்தங்கிடைத்தது போல மனமகிழ்ந்து முன்னிருந்த துயரங்களை நீக்கித் தனது நாயகரிடத்தில் விடைபெற்று அவ்விடத்தினின்று நீங்கி ஓர் வனத்திற்சென்று ஐம்பொறிகளையுமடக்கி ஆகாரமுதலியவைகளை நீத்து விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை மனதிற்றியானித்து அவரது பஞ்சாக்கர மந்திரத்தை அனுட்டிப்போடு செபஞ் செய்துக்கொண்டு நூறுவருடந் தவத்திலிருந்தனள். இவ்வாறு சரீரம் முழுவதும் வாட நெடுநாள் தவஞ்செய்துக்கொண்டிருக்கிற அதிதியின்மீது விநாயகமூர்த்தி கிருபைகூர்ந்து கோடிசூரியர்களுங் குருடடையும்படியான தேஜசோடு செபமாலிகையும பத்துத்திருக்கரங்களுங்கொண்டு நுதலிற் கஸ்தூரிப் பொட்டும் சடையில்மூன்றுமபிறைச் சந்திரனும் விளங்கச் சிங்கவாகனத்தின்மீது பிரத்தியட்சமாயினர். உடனே அதிதியானவள் விழித்தெழுந்து தன் பெண்மையினால சுவாமியினுடைய பிரகாசத்தைப்பார்க்கபயந்து விழித்தவிழிகளைமீட்டும் மூடிக்கொண்டு கர்த்தனே தேவரீருடைய பிரகாசத்தைப்பார்க்க அடியேனுடைய விழிகள் கூசுகின்றமையால் சாந்தவுருவோடு காட்சிகொடுத் தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதை விநாயகமூர்த்தி கேட்டு உடனே மிகுந்த மனமகிழ்ச்சியோடு சாந்தரூபமாயினர். பின்னர் அத்திருவுருவினுடைய வனப்புகளை அதிதியானவள் தனது கண்குளிரக்கண்டு மிக்க சந்தோஷத்துடன் பணிந்தெழுந்து பலமுறை வலம்வந்து அளவற்ற தோத்திரங்கள் செய்து இருகரங்களையுங் கூப்பி எதிர் நின்று ஓ! தயாநிதியே' முனிவர்களையுந் தேவர்களையும் ஒடுக்கி எக்காலத்தும் இழுக்கினைச் செய்துவரும் அரக்கர்களையுந் தைத்தியர்களையுந் துணைக்கொண்டு தேவாந்தகனென்றும் நராந்தகனென்றும் இரண்டவுணர்கள் அரசாட்சி செய்து வருகின்றார்கள். அவர்களைச் சங்கரித்துத் திரிலோகங்களினுமுள்ள துன்பங்களை நீங்கும்படியாகத் தேவரீர் ஒரு புத்திரனாகவுவ

தரித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனள், அதற்கு முன்னமே அவள்கணவராகிய காசிபருக்கு அருள்சுரந்திருக்கின்ற விநாயகப் பெருமான் அவ்வாறே வருவோமென்று திருவாய்மலர்ந்து தமது திருவுருவைக்கரந்தருளினர். பின்னர் அதிதியானவள், அவ்வனத்தினின்று நீங்கித் தனது கணவரையடைந்து பணிந்தெழுந்து தனக்கு விநாயகமூர்த்திகொடுத்தருளிய வரத்தைத்தெரிவித்துப் பிரதிதினம் அளவற்றமகிழ்ச்சியோடு விநாயகமூர்த்தியைப் பூசைசெய்துவந்தனள்.

இவ்வாறு நடந்துவருகின்ற நாளையில், உலகங்களில் தருமநெறிகள் தவறிப்போனமையால் பூமிதேவியானவள் துட்டர்களைச்சுமக்கமாட்டாது துன்பப்பட்டு, மகமேருகிரியை யடைந்து அங்கேபல குகைகளினும் ஒளித்துவாசஞ்செய்கின்ற தேவர்கூட்டத்துள்பிரமதேவனைக்கண்டு பணிந்தெழுந்து, சுவாமி! உலகங்களில் துர்ச்சனர்கள் மிகுத்து தருமநெறிகள் வழுவிப்போனமையால் இனி அடியேன் அத்துர்ச்சனர்களைச்சுமக்கமாட்டேன், தேவரீர் சர்ச்சனர்களையும் அடியேனையுங் காப்பாற்றுவிட்டால் எத்துணைபோதும் வாழ்ந்திரேன். வீணே துயரப்பட்டுப்பாதலத்தில் வீழ்ந்துபோவேனென்று முறையிட்டனள். அதைபிரமன்கேட்டு அவட்கு நீ அஞ்சவேண்டாமென்றுதிடங்கூறிப்பின்னர், எல்லாத் தேவர்களோடும் விநாயகமூர்த்தியைப்பூசித்துத்தோத்திரஞ் செய்தனன் அப்போது ஆகாயத்தில்விநாயகமூர்த்தியானவர் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யும்பொருட்டு காசிபருக்குப்புத்திரராக அவதரிக்கப்போகின்றனர்" என்றுஒருவாக்கு உண்டாயது அதைப்பிரமன் கேட்டு, மீட்டும் பூமிதேவியைப்பார்த்து, அம்மணீ! இப்போதுண்டாகிய அசரீரிவாக்கை நீயுங் கேட்டனையன்றோ! ஆதலால், இன்னுஞ் சிறிதுகாலம அத்துட்டர்களைச்சுமந்துகொண்டிரு; பின்னர் இவ்வளவு துன்பமும் ஒருமிக்கநீங்கும், இனிமேல் யாவருக்கு மின்பமுண்டாகு மென்றுசொல்லி அவளுக்கு விடைகொடுத்தனுப்பி முன்போலவே சகல தேவர்களோடும் விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளை மனதிற் றியானஞ்செய்துகொண்டுதவததிலிருந்தனன்.

இவ்வாறாக, முன்னர் வரம்பெற்றநாள்முதல் பிரதிதினமும்விநாயகமூர்த்தியைப் பூசைசெய்யும்நேமத்தினைப் பெற்றிருக்கின்ற அதிதியானவள், ஒருநாள் சுவாமியை மிக்கவுருக்கத்தோடுத் தியானித்துத் தோத்திரஞ் செய்தனள். அப்போது விநாயகக்கடவுள், கிருபைகூர்[illegible]திக்கெதிரில் ஆயிரம் முடிகளும், ஆயிரம் நெற்றிகளும்

ஆயிரம் முகங்களும், ஆயிரஞ்செவிகளும் ஆயிரம் வாய்களும், ஆயிரம் நாசிகளும், ஆயிரந் தோள்களும், ஆயிரங்கைகளும், ஆயிரந்தொடைகளும், ஆயிரம் அடிகளுங்கொண்டுகைகள்தோறும் ஆயுதங்களும், நெற்றிகள்தோறும் கஸ்தூரிப்பொட்டுகளும், மார்பிற் சிந்தாமணிமாலைமுதலிய அளவற்ற ஆபரணங்களையுந்தரித்து, அளவற்றசோதிகள் ஒருமிக்க வுதித்தாற்போலச் சிங்கவாகனத்தின்மீது பிரத்தியட்சமாயினர். உடனே அதிதியானவள் பணிந்தெழுந்து பலமுறை வலம்வந்து இருகைகளையுங்கூப்பி எதிர்நின்று உள்ளமுருகும்படியாக அளவற்ற தோத்திரங்களைச்செய்து அவ்வவர்கள் கோரினபயன்களை அங்கை நெல்லிக்கனிபோல அருளிச்செய்யவல்ல வள்ளலே! முன்னர் அடியேன்துபாசீங்குமாறுசுவாமிகள் வறங்கொடுத்தபடி இப்போதுமுடித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதைவிநாயகமூர்த்திகேட்டு யாமுனக்கு முன்னர்கொடுத்தவரத்தை முடிக்கும்படியாகவேஇப்போது இருக்கோலத்தோடுவந்தனமென்று திருவாய்மலர்ந்தனர். அதற்கு அதிதியானவள்மீட்டுமவரைப் பணிந்தெழுந்து சுவாமி! இத்தன்மைத்தானபெரியவடிவத்தோடு அடியேனுக்குப் புத்திரனாகவந்தால், அடியேன் தேவரீரை எவ்வாறு காதலிலேந்தி எவ்வாறு வளர்க்கவல்லேன், இவ்வடிவம் உலகத்தார்க்கும் இசைவாயிராததால், எல்லாரைப்போலத்தேவரீரை அடியேன்கைகளிலேந்திக் குளிப்பாட்டி முலைப்பாலூட்டி வளர்க்கும்படியாக மிருதுவான குழந்தைவடிவாகிவந்து துட்டசிந்தையுடைய அசுரகுலம் நாசமாகும்படி வளர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள் அதற்குவிநாயகமூர்த்தியானவர் அவ்வாறே அதிதியினுடைய ஆசையை நிறைவேறும்படியாக திருவுளங்கொண்டு உடனே அன்றுபிறந்த குழந்தையைப்போல வடிவங்கொண்டுதமது பவளம்போன்ற திருவாயினைத்திறந்து அழுதனர். அவ்வழுகையோசை வெளிப்பட்ட மாத்திரத்தில் உலர்ந்திருந்தவிருட்சங்களெல்லாந்தளிர்த்து மலடிகளெல்லாங் கருப்பமடைந்தார்கள் எங்குமந்தமாருதம் வீசியது ஆகாயமெல்லாம மறுவின்றி விளங்கியது. வேள்வித்தழல்களெல்லாம் வலஞ்சுழித்தெழுந்தன சகல தீர்த்தங்களுந்தெளிவடைந்தன தேவர்கட்கெல்லாம்வலதுதோளும் வடதுகண்ணுந்துடித்தன அசுரர்கட்கெல்லாம் இடதுதோளும் இடதுகண்ணுந்துடித்தன; இத்தியாதி உற்பாதங்கள் எங்குமுண்டாகும்படி தனக்கெதிரில் வாய்விட்டழுதிருக்கின்ற குழந்தையை எல்லாத்தேவர்கட்கும நன்றாமென்று சொல்லும்படியான அதிதியானவள் ஒன்பதுமாதமுஞ் சுமந்து பெற்றவளைப்போல அதிக ஆசையோடும் மகிழ்ச்சியோடுங் கைகளிலேந்தித்தனது தனங்களிலே விம்மிநின்று சுரந்தபாலை

னட்டினள், அவ்வற்புதத்தைமேலான தவங்களையுடைய காசிபரான வர் அதிகமகிழ்ச்சியோடுங் கண்டு தமது புத்திரர்க்குச்சாதககன்மாதி களை வேதாகமவிதிப்படி நிறைவேற்றி, மகோற்கடரென்று நாமகரணஞ்செய்தனர். சுவாமியும் நாளுக்கு நாள் பாலசந்திரனைப்போல வளர்ந்து வந்தனர்.

இவ்வாறு அரிபிரமேந்திராதியரும் அறிதற்கரிய விநாயகமூர்த்தியானவர் மகோற்கடரென்னுந் திருநாமங்கொண்டு வளர்ந்துவருகின்ற இரண்டாமாதத்தில் இவ்வற்புதசெய்தியை வசிட்டர்வாமதேவர் முதலிய முனிபுங்கவர்கள் நாரதமுனிவர் சொல்லக்கேட்டு அப்போதேபரத்தை யடைந்தவர்போல மேலானமகிழ்ச்சிகொண்டு சுவாமியைத்தரிசிக்கவந்தார்கள். அவர்களைக்காசிபர் எதிர்கொண்டழைத்துவந்து சந்தோஷமாய்க்கலந்து ஒருவர்க்கொருவர் க்ஷேமாதிசயங்களை விசாரித்துக்கொண்டு பின்னர் யாவரும்வந்து மகோற்கடமூர்த்தியைக் கண்குளிரத் தரிசித்துப்பணிந்திருந்தார்கள் அப்போது வசிட்டமுனிவர்காசிபரைப்பார்த்துத் திரிமூர்த்திகளாலும் பெறுதற்கரிய பேற்றினை எளிதிலடைந்ததவசிலரே! இக்குழந்தையினுடைய அவயவமானது முப்பத்திரண்டு இலக்கணங்களையும் வாய்ந்திருக்கின்றது, ஆதலால இந்த மலாகிதமான மூர்த்தியேயன்றி மலசகிதமாயிருக்கின்ற நம்மிலொன்றன்று, இத்தன்மைத்தான மேலானமூர்த்தியானது, அசுரர்குலங்களை வேரோடுங் களைவேரோடுங்களையவும தேவர்குலங்களையும முனிவர்கூட்டங்களையு மாதரித்து, உலகங்களில்வேதாகமநெறிகளை நிலைநிறுத்தவும், தேவரீரும தேவரீருடையபத்தினியாருஞ்செய்த தபோபலத்தினல் உங்கட்குப்புத்திரராகத் திருவவதாரஞ்செய்திருக்கின்றது. இப்போது திரிலோகங்களினுங் கொடுங்கோலைச்செலுத்திவருகின்ற தேவாந்தகனும் நராந்தகனும், இப்புதல்வரைச்சத்துருவென்றறிந்து இருவருக்குப்பலவிடர்களைப்புரிவார்கள், ஆனல் இவர் உலகங்களிலுள்ள சகலவிடர்களையுந்தீர்த்து ஆதரிக்கவல்லமூர்த்தியாதலால், ஓர் இடரும் இவரையணுகாது ஆயினும் லோகசவாட்சணைநிமித்தம் நீங்களிருக்கவேண்டிய சாக்கிறதையிற் பிழையாமலிருக்கவேண்டுமென்று சொல்லினர் அதற்குமேல் காசிபரானவர்வந்த முனிவர்கட்கெல்லாம் விருந்தூட்டிச்சந்தோஷமடைந்தனர் பின்னர் அம்முனிவர்களெல்லாம் காசிபரிடத்தில் மிக்க அன்போடு விடைபெற்று அவ்வவர்களுடைய ஆசிரமத்தை யடைந்தார்கள்.

இப்பால் மகோற்கடமூர்த்திக்கு வயதொன்றாகு முன்னமே நராந்தகனிருந்து அரசாட்சி செய்துவருகின்ற பட்டணத்திலே

இரத்தமழை பொழிந்து ஆகாயமுழுவதுங்கறுத்து வால்நட்சத்திர முதலிய கற்பங்கள் தோன்றி நின்றன. அதன்மீது நராந்தகன் கணிதர்களைக்கூவி இப்போது கண்டிருக்கின்ற வுற்பாதங்களுக்கு இனி நடக்கப்போகின்றது யாதென்று வினவினன். அதற்கவர்கள் கணித சாத்திரங்களிற் சோதித்தறிந்து நராந்தகனைப்பார்த்து, ஓ மண்டலேஸ்வரா! தேவரீர்கேட்டவாறே சோதித்தறிந்தனம் ஆயினும் உள்ள காரியத்தைவிளம்புவோ மென்றால் தேவரீருக்குக்கோப முண்டாகுமேயென்று அடியேங்கள மனம் பயமடைகின்றதென்று சொன்னார்கள். அதை நராந்தகன்கேட்டு கணிதர்களே! நீங்கள்பயப்படவேண்டியதில்லை நடந்திருக்கின்ற உற்பாதங்கட்கு ஏது நீங்கள் சாத்திரங்களில யாதுகண்டீர்களோ அதனையொளிக்காமற் சொல்லுங்களென்றுபரிவாய்ச்சொல்லினன். அதறகுமேல் அச்சோதிடர்கள் பயநீங்கி ஓ ராசாதிராசனே! உள்ளவிதத்தையே யாங்கள் சொல்லக்கேட்டருளுக, அஃது யாதெனில் காசிபமுனிவரும் அதிதியுந்தவஞ்செய்ய அவர்களிடத்தில் நம்மையெல்லாமபணிசெய்யும்படி ஓர்பிள்ளைபிறந்துவளர்ந்துவருகின்றது இந்த ஏதுதப்பாமல அழிவுகாட்டு மென்பதற்கு அந்த வுற்பாதங்களெல்லாம் இவ்விடத்தில் உண்டாயினவென்றுசொன்னார்கள். அதைநராந்தகன்கேட்டு மிகுந்த ஆலோசனைகளிற்றலைப்பட்டவனாகி ஐயோ! இவ்வேளுவுக்கினியென்ன செய்வோம் சிறுகுழந்தையைசென்று கொலவது நமது பராக்கிரமத்திற்குச்சரியல்லவே அவ்வாறு செய்வோமாயின் நமது பாக்கியங்களெல்லாம் பாழாகுமேயென்று பலவாறு சிந்தித்துமீட்டும் ஓர் உபாயத்தையெண்ணிவிரசையென்னும் பெயரினையுடைய ஓர்வுணமாதரைக்கூவி நீ இந்தவிடத்திற் சென்று நமக்குத்துன்பஞ்செய்ய உதித்திருக்கின்றகுழந்தையைக்கொன்றுவரக்கடவையென்று அனுப்பினன், உடனே அவ்விரசையானவள்கருத்தநிறமும், நெருப்பையொத்தகண்களும் சிவந்தமயிரும்பத்துயோசனை விசாலம் உயர்ந்திருக்கின்ற சரீரமும் யானைதந்தங்களைப்போல நீண்டகோரைப்பற்களும் விளங்கியிருக்கின்ற தனதுவடிவத்தைமறைத்து ஓர்பிராமணஸ்திரீயைப்போல வடிவங்கொண்டு காசிபருடைய ஆசிரமத்திற்சென்றனள். அப்போது காசிபர் ஸ்நானஞ்செய்யச்சென்றிருந்தனர். அதிதியானவள் விநாயகபூசை செய்துகொண்டிருந்தனள் ஏனையசீடர்முதலாயினோர் வேறுவேறு பணிகளில் பிரவேசித்திருந்தார்கள். இச்சமயத்தில் அப்பாதகி உள்ளேநுழைந்துமகோற்கடமூர்த்திதனியாயிருக்கக்கண்டு அவரையெடுத்துவாயிலிட்டு விழுங்கித்திரும்பினள் அப்போது அவள்வயிற்றுனட்[illegible]

தியானவர் அங்கிருந்தபடியேதமது நுதல்விழியைச்சிறிது திறந்தனர் உடனே அவ்விரசை வயிற்றில் வடவாமுகாக்கினியைப்போல அழலுண்டாகி அதிகதாகங்கொண்டு அங்கிருக்கின்ற தடாகமுதலியவைகளிலுள்ள சலங்களையெல்லாம் வறண்டு போகும்படியாகப்பானஞ்செய்தனள், அவ்வாறுபானஞ்செய்தும் அந்தாகந்தணியாமையால் பின்னரவர் ஆகாயகங்கையைப் பானஞ்செய்தனள். அவ்வாறு பானஞ்செய்தும் அத்தாகந்தணியாமையாலபின்னரவள் ஆகாயகங்கையைப் பானஞ்செய்யநினைத்து மேலெழும்பினள், அப்போது கருணாநிதியாகியமகோற்கடமூர்த்தியானவர் இனி எங்குபோகின்றனையென்றுதமது சிறியகாற்பெருவிரலினை ஊன்றினர். அம்மாத்திரத்தில் திரிலோகங்களையும் வாய்மடுக்கவல்ல அப்பாதகியானவள் முன்னொருபோது இராவணனாலெடுக்கப்பட்ட கைலாயவரையானது சிவபிரானுடைய திருவடிகளாலூன்றப்பதைப்பற விருந்தாற்போல அசைவற்றுப்பூமியிலே வீழ்ந்தாள். உடனே இடையிற்சர்ப்பக்கச்சினைவீக்கிய எம்பெருமானனவர், அவளை நிலத்தில் விழவழுத்திய தமதுகாற்பெருவிரல் நகத்தினாலேயே அவள்வயிற்றை உதிரப்பிரவாக முண்டாகும்படியாய்ப்பிளந்து தம்மைவிழுங்கிய மதயானையை வெளிப்படத்தோன்றிய தமது பிதாவைப்போல வெளிக்கொண்டனர். அப்போது முன்னர் பூசைசெய்துகொண்டிருந்த அதிதியானவள், அப்பூசையினைநிறைவேற்றித்தனது புதல்வனை எடுக்கவந்து காணாதவளாகித்தானுந்தனது தலைவரும் மிகுந்த துயரமடைந்து அளவற்றகாடுகளிலும் வெளிகளிலுந்தேடிச்சென்று பின்னர் அப்பாதகியினுடையமார்பில்தமது குமாரர்பதிந்திருப்பதைக்கண்டுபயந்து, முன்னும்பின்னும் பார்த்து,மிகுந்த ஆனந்தங்கொண்டு உடனே நின்மலமூர்த்தியாகிய குழந்தையையெடுத்துச்சென்று திருமேனிமுழுவதுந் தோய்ந்திருக்கிற உதிரக்களையெல்லாங் கழுவிக்குளிப்பாடி நீராஞ்சனம் முதலியசாந்திகளைச்செய்து பாலூட்டினள்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே? விரசையென்னும் அந்தராட்சசியானவள் மிகவுங் கொடுமையையுடையவளாயினும், சுவாமியைக்கொல்லுமாறு வாய்மடுத்தாளாயினும் அவள் அவருடைய திருவுருவைக்கண்ணாரக்காணவுந் தீண்டவுங்கிடைக்கப் பெற்றதினாலே அப்போதே அவள்மலபாசங்களினின்று நீங்கி மோக்ஷசாம்பிராச்சியத்தையடைந்தனள். இவள் இறந்துபோனமையை நராந்தகன்கேள் [illegible]டு மிகவும் ஆச்சரியங்கொண்டு மீட்டும் மகோற்கடமூர்த்திக்கு [illegible]வது வயதாகுங்காலத்து, உதத்தனென்றுந் துந்துபியென்

றாம் பெயரினையுடைய இரண்டவுணர்களைக் கூவியனுப்பினன். அவ்விருவர்களுங் கிளிப்பிள்ளை வடிவங்கொண்டுகாசிபருடைய ஆச்சிரமத்தில்வந்து மரங்களின்மீதிருக்கிறதும் முற்றங்களிலிறங்குகிறதும்வெய்யலிற் காயவைத்திருக்கின்ற தானியங்களைக்கொறிக்கின்றதுமாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்கள். அந்தை அதிதிமடியின் மீதிலிருந்து முலைப்பாலுண்டருளுகின்ற மகோற்கடமூர்த்திகண்டு இக்கபடர்களைக்கொல்லவேண்டுமென்று திருவுளங்கொண்டு, தமது தாயினுடைய முகத்தைப்பார்த்து அம்மா! இக்கிளிப்பிள்ளைகளை யெனக்குப்பிடித்துக்கொடுவென்று கேட்டனர். அதற்கு அதிதியானவள் என்செல்வனே பறக்கின்றகுருவியென்கையில் அகப்படுமாவென்று மறுத்தனள். உடனேமகோற்கடமூர்த்தியானவர் அதிதியினுடைய மடியினின்றுங் குதித்தெழுந்து ஆகாயத்திலேபருந்து வடிவங்கொண்டுபறந்துதம்மைக்கண்டோடுகின்ற அக்கிளிகளிரண்டையுந் துறத்திப்பிடித்து சிறகுகளையெல்லாம்பறித்தெறிந்து, மூக்கினாலும் நகங்களினாலும் உடல்களைப்பிளந்து பூமியில்விழ உதறித்தாம் முன்போலவே குழந்தைவடிவாகித்தாய்மடியில் வந்து பாலுண்டருளினர். அதை அதிதிகண்டு இவர்தந்தையாகிய சிவபிரான் முன்னொருபோது கிளிப்பரிபூட்டிய இரதத்தினையுடைய மன்மதனை இமைப்போதில் நீறுக்கினனெனில். இப்போதிவர் இக்கிளிப்பிள்ளைகளைக்கொன்றதோ ஒருபுகழென்று துதிசெய்தனள். காசிபர் அவருக்குப்பூதசாந்திசெய்து சந்தோஷமுற்றிருந்தனர், கிளிப்பிள்ளை வடிவங்கொண்டுவந்த அவ்விரண்டவுணர்களும் மிகவுங் கொடியரால் மறைநெறிகளிற் பிறழ்ந்தவர்களாயிருக்கினும், அவர்கள் எம்பெருமானாறறுக்கப்பட்டு இறந்தமையால், பழயபந்தங்களையெல்லாம் விடுத்து ஆனந்தசாகரத்திற் படிந்தார்கள்.

இப்பால் மகோற்கடமூர்த்திக்கு மூன்றுவது வயதாகலும் தந்தையாகிய காசிபர் அவருக்குசவுனச் சடங்கினை வேதாகமமுறைப்படி நிறைவேற்றினர். பின்னர் ஒருநாள் விதிபாதம்வர, அத்தினத்தில்அதிதியானவள் தனதுபுத்திரனை யெடுத்துக்கொண்டு அடுத்தாற்போலிருக்கின்றவோர்பொழிலுள்ள தாமரைமுதலியவைகள் மலிந்திருக்கின்றசேரமவதியென்னுந் தடாகத்தை நோக்கிச்சென்று, அத்தடாகக்கரையில் லோகநாயகராகிய மகோற்கட மூர்த்தியைவிடுத்து, அத்தீர்த்தத்துளிறங்கி ஸ்நானஞ்செய்துகொண்டிருந்தனள், அப்போது சுவாமியும் அதிதிகாணாதபடி அத்தீர்த்தத்திலிறங்கினர் மழலைமொழியுங்குறுநடையுமுள்ள அவரைப்பத்துயோசனைப்பிரமாணமான வடிவோடு அத்தடாகத்திலிருக்கின்ற ஓர் முதலையானது எடுத்துக்கொண்டுபோய்விட்

டது. அதை அத்தடாகக்கரையிலிருந்தோர்கள்கண்டு பதைபதைத்து
ஐயையோவென்று இரங்கிவாடினார்கள் அப்போது அதிதியானவள்
அச்சம்பவத்தைக்கேட்டுத் திடுக்குற்று வாயளவுதீர்த்தத்திலிறங்கிப்
பார்த்து அப்பாலிறங்கக்கூடாமல் மயங்கித் துயரமுற்றனள். அந்த
வேளையில் சிலமாணாக்கர்கள் தற்செயலாய்வந்து அச்சம்பவத்தினைக்
கேட்டு மிக்கதுணிவோடு அத்தீர்த்தத்திலிறங்கி நீந்திச்சென்றார்கள்.
அவர்களை அம்முதலையானது நெருங்கவொட்டாமற் சீறிச்சுவாமியை
வாயிற்கவ்வியபடி மேலெழும்பிவிழிகளில் அனற்பொறிகளையிறைத்து
இடம்வலமாகச்சுழன்று திரிந்து, மீட்டும் அடியிற்சென்றொளித்தது.
அப்பால் அச்சீடர்கள்மேலேவந்து அதற்குமுன்னமே அத்தீர்த்தத்
தில் ஸ்நானஞ்செய்து சென்று தமதாசிரமத்தில் செபஞ்செய்துகொ
ண்டிருக்கின்ற காசிபருக்கு அறிவிக்குமாறு விரைந்தோடினர் அச்ச
மயத்தில் மகோற்கடமூர்த்தியானவர் அம்முதலையின் முதுகிலாரோக
ணித்து, அத்தடாகத்திலிறங்கியிருக்கின்ற பறவைகளெல்லாம் பறந்
தோடவுந் தாமரைமுதலியபுட்பவினங்கள் துவளவும், நாற்கரைகளி
னும் அலைகள் புரண்டோடவுமாக அல்லோல கல்லோலப்படுத்தியே
லெழும்பிமரக்கலத்தையோட்டி விளையாடுவதுபோலச் சிறிதுநேரம்
குறும்பாய் விளையாடல் செய்திருந்தனர். அப்போது அதிதியானவ
ள்தனதுகுமாரனை முன்னர் துன்பத்தோடுபார்த்தகண்ணினால் பின்
னர் இன்பத்தோடுபார்த்து இருகரங்களையுயர்த்திநின்று, அப்பா என்
சாமி! என்கண்மணியே! இத்திருவிளையாடல்போதும் இனிவிரைவில்
அம்முதலையைச்சரிங்கரித்துவந்தருள்கவென்று வேண்டினள். அவ்வே
ண்டுகோளுக்கு மகோற்கடமூர்த்தி கிருபைகூர்ந்து தாமேறி நடத்து
கின்ற அம்முதலையைக்கரைமீதேற்றினர், அஃது கரைமீதேறிய மாத்
திரத்தில் உயிர்விட்டிறந்தது. உடனே அதனுடலினின்று ஓர் திவ்விய
புருடன்வெளிப்பட்டுவந்து மகோற்கடமூர்த்தியைப் பலமுறைபணிந்
தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பிநின்று இதனைப்பேசுவதா
யினன் கர்த்தனே? அடியேன்முன்னர் கந்தருவர்கட்கெல்லாம் அர
சன் அடியேன்பெயரைச்சித்திரனென்று சொல்லுவார்கள். ஒருதினம்
அடியேன் ஓர்விவாகத்தைமுடிக்கத்தொடங்கினேன். அவ்விவாகத்தி
ற்குப்பிருகுமுனிவர் வந்தனர். அவர்வந்தவேளையில் தேவர்முதலாயி
னோர்வந்து கூடியிருந்த கலியாணமண்டபத்தில் அக்கலியாண விவகா
ரங்களிலே அடியேன் ஞாபகம் வைத்திருந்தமையால் அம்முனிவரை
எதிர்கொண்டழைத்துவந்து வந்தனமுதலிய வழிபாடுகளைச்செய்யா
திருந்தேன்.

அதற்கு அம்முனிபுங்கவர் கோபங்கொண்டு நீவிவாகசப்பிரமத்தில்மூழ்கி வந்தபெரியோர்களுக்கு வணக்கஞ்செய்யாம லிருந்தனை, ஆதலால் இனி நீதடாகத்திலே முதலையாக முழுகிக்கொண்டிருக்கக் கடவையென்று சபித்தனர். பின்னரடியேன் பயந்து அவர்திருவடித் தாமரைகளையே பணிந்தெழுந்து சுவாமி அடியேன் அறிவின்மையாற் செய்தகுற்றத்தைப்பொறுத்துத் தேவரீரிட்ட சாபத்தை நிவர்த்தி செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தேன். அதற்கப்புண்ணியமூர்த்தி கிருபைகூர்ந்து, ஓ கந்தருவராசனே இனி விநாயகக்கடவுள் துஷ்டஜனநிக்கிரகஞ் செய்யும்பொருட்டு காசிபருக்குப் புத்திரராக அவதரிக்கப்போகின்றனர். அம்மேலான கடவுளுடைய திருக்கரம்பட்ட மாத்திரத்தில் உன்னை இச்சாபம்விட்டு நீங்குமென்று திருவாய்மலர்ந்து எழுந்தருளினர். அவ்வாறே பாவியான அடியேற்கு இத்தினந் தேவரீருடைய கிருபாகடாட்சங்கிடைத்தது இதுகாறும் இத்தடாகத்தில் அடியேன் முதலையாகவிருந்து மலர்பறிக்கவும், ஸ்நானஞ்செய்யவும் வருகின்றபேர்களுக்கெல்லாந் துன்பத்தைவிளைத்துக்கொண்டிருந்தேன். இத்தன்மைத்தான கொடியவனை இப்போது கரையேற்றி இன்பத்தைக்கொடுத்ததற்கு என்னகைம்மாறு செய்யவல்லேனென்று துதிசெய்தனன். அச்சமயத்தில் மகோற்கடமூர்த்தியினுடைய கிருபையினால் ஆகாயமார்க்கத்திலிருந்து ஓர் தெய்வவிமானமிறங்கியது. அதைக் அச்சித்திரன்பார்த்து மீட்டும மகோற்கடமூர்த்தியைப் பணிந்தெழுந்து ஓ! சகலலோகநாயகனே! ஓ-தத்துவப்பொருளே! ஓ மூலகாரணக்கடவுளே அடியேன் யெல்லாவிதத்திலுங் கடைத்தேறுமாறு கடாட்சம்வைத்தருளிய கிருபாமூர்த்தியே யென்று அளவற்ற தோத்திரங்களைச்செய்து, சுவாமியினிடத்தில் விடைபெற்று விமானத்தின்மீதேறி ஆகாயமார்க்கமாகச் சென்றனன்.

அதற்குமேல் மகோற்கடமூர்த்திக்கு நாலாவதுவயது வந்தது. அப்போது கயிலாயத்திலே சிவபிரானைத்தரிசித்து யாழ்வாசிக்கச் செல்லுகின்ற ஆகா-ஊகூ-தும்புரு என்னும் மூன்று கந்தருவர்கள் காசிபருடைய ஆசிரமத்திற்கு வந்தார்கள். அவர்களைக்காசிபர் எதிர்கொண்டழைத்துவந்து பல உபசாரங்களைச்செய்து, ஒருவர்க்கொருவர் க்ஷேமலாபங்களைவிசாரித்து பின்னர் நீங்கள் விருந்துண்டுபோகவேண்டுமென்று வேண்டினர். அதற்கம்மூவருமிசைந்து தடாகத்திற்சென்று ஸ்நானஞ்செய்துவந்து புட்பஞ்சந்தனம்முதலிய திரவியங்களைச்சேகரித்து தாங்கள் பிரதிதினம் பூசித்துவருகின்றவிநாயகர், சிவபெருமான், உமாதேவி, கண்டு சூரியன் என்கிற ஐந்துவிக்கிரகங்களை

யும் ஓர்பொற்பலகையின் மீதிருத்தித் தியானஞ்செய்துகொண்டிருந்தார்கள். அவ்வேளையில் சிலமுனிச்சிறார்களோடும் விளையாடல்செய்திருந்த பராபரப்பொருளாகிய மகோற்கடமூர்த்தியானவர் அவ்விளையாட்டினின்றும் வந்து, அவர்கள் வைத்துப்பூசித்திருந்த ஐந்துமூர்த்திகளையும்பார்த்து அவைகள்மறைந்து போகும்படியாக ஓர் திருவிளையாடல்செய்தனர் பின்னவர்கள் தங்கள் தியானங்களினின்றும் நீங்கி மற்றப்பூசனைகளையும் நிறைவேற்றித் தொடங்கும்போது தாங்களெதிரில்வைத்திருந்த விக்கிரகங்களைக் காணாதவர்களாகி மதிமயங்கிக் காசிபரையழைத்து சுவாமி அடியேங்கள் ஆன்மார்த்தமாகப்பூசிக்கின்ற ஐந்து விக்கிரகங்களையும தியானஞ்செய்கின்றபோது இப்பொற்பீடத்தினின்றும் யாரோ திருடிக்கொண்டுபோய்விட்டார்கள். இனி அடியேங்களுயிரை மாய்க்கின்றோமென்றுசொன்னார்கள். அதைக்காசிபர்கேட்டவுடன் மிக்கதுயரமடைந்து விருந்தாகவந்தவர்கள் பூசித்துப்போசனஞ்செய்து போவதற்குமுன் அவர்கட்கு இவ்விதத்துன்பமுண்டானது நமது தீவினையேயென்று மாழ்கி தம்மிடத்தில் பணிசெய்திருக்கின்ற சீடர்களையெல்லாம்கூவி இவர்கள் பூசித்திருந்த விக்கிரகங்களை யாரேனுமெடுத்திருந்தால் விரைவிற்கொண்டுவந்து கொடுத்துவிடக்கடவீர்கள் கொடாது வைத்திருப்பீர்களாயின் இவ்விடத்தில் உங்களை நீறாக்கிவிடுகின்றேனென்று கோபித்துச்சொல்லினர். அதற்கு அச்சீடர்கள்பயந்து காசிபரைப்பணிந்தெழுந்து சுவாமி தேவரீருடைய பெருங்கருணையினால் நன்மையேசெய்து கடைத்தேறவேண்டுமென்றடுத்திருக்கின்ற அடியேங்கள அயலாருடைய பொருள்களைத்திருடுவோமோ ஆனால் தேவரீர் அடியேங்கள்மீது கிருபைசெய்து சுவாமிகளுடைய குமாரரைக்கேட்டருளவேண்டுமென்று சொன்னார்கள் அதற்குக் காசிபரிசைந்து அவரைநீங்களே விரைவில் அழைத்துவாருங்களென்று கட்டளையிட்டனர். உடனே அவர்கள் மகோற்கடமூர்த்தியைத்தேடிச்சென்று எங்குங்காணாமல் ஔபாசனஞ்செய்கின்ற அறைவீட்டிலே திருமேனிமுழுவதுந் திருவெண்ணீறணிந்த கோலத்தோடு விளையாடல்செய்திருக்கக்கண்டு பெரியவேதங்களாலுமறியப்படாத மகோற்கடமூர்த்தியைப் பேரிட்டழைத்து வந்து பிதாவின்முன்னேவிட்டார்கள். அப்பிதாவாகியகாசிபரும் உலகமுறைமைப்படி கையிலோர் பிரம்பினையேந்தி கோபங்கொண்டவரைப்போல எதிர்நோக்கிப்பிள்ளாய் இங்குவந்த இம்மூவரும் பூசனைசெய்திருந்த சிவலிங்கமுதலான மூர்த்திகளை நீயேகவர்ந்து கொண்டுபோயினை ஆயினும் அவைகளை எங்கேயொளித்துவைத்தனை; சொல்லுக

வென்றுகேட்டனர். அதற்கு மகோற்கடப்பிள்ளையார் திருநகைசெய்து தமது வாயினைநன்றாகத்திறந்துகாட்டி அவைகளை இங்கேதான் ஒளித்துவைத்திருக்கின்றேனென்று திருவாய் மலர்ந்தனர் இவ்வாறு திறந்துகாட்டியவாயினின்று உமாபரமேஸ்வரருடனே கயிலாயமும் விண்டுவுடனே வைகுந்தமும் பிரமனுடனே சத்தியலோகமும் இந்திரனுடனே அமராபதியும் அவுணர்நாயகர், இயக்கர் மனிதர் என்னுமிவர்களுடனே அவ்வவர்கள்வசிக்கின்ற எண்ணிறந்தபதிகளும், அளவற்ற நதிகளும், அளவற்றவனங்களும், அளவற்றமலைகளும், அளவற்றசமுத்திரங்களும், புஷ்பங்கள்மலிந்த அளவற்ற நந்தவனங்களும் பறவைகளுலாவுகின்ற அளவற்றநிலங்களும், பதினாலுலோகங்களும், அஷ்டதிக்குப்பாலர்களும், இன்னும் அளவற்றபதார்த்தங்களும் வெளிப்படக்காசிபமுனிவர்கண்டனர். மணம்நொந்திருந்த ஆகா ஊடீ ஆம் புருவென்னும் மூவரும் அற்புதத்தைக்கண்டு அளவில்லாத ஆச்சரியமாகி மகோற்கடமூர்த்தியினுடைய திருவடிகளின்மேல்விழுந்து நமஸ்கரித்து பரிமளமிகுந்தபுட்ப முதலானவைகளைக் கொண்டு பூசித்து நின்றனர். அதற்குக்கருணாமூர்த்தியாகிய மகோற்கடர் மனமகிழ்ந்து அக்காலவர் சந்தோஷிக்கும்படியாக அவர்கள் ஐந்துமூர்த்திகளைத் தமது திருமேனியினின்றும் எடுத்து அவர்கள்கையிற் கொடுத்தருளினர். அதற்குமேற் அம்மூவரும் சுவாமியைநோக்கிகர்த்தனே சகலலோகங்களைத் திருவாயினினுங் காட்டியருளிய தேவரீரை அடியேங்கள் அறிவின்மை மிகுந்தபுத்தியினாலே குழந்தையென்று நினைத்தோம் அக்குற்றத்தைத் தேவரீர் பொறுத்தருளவேண்டுமென்று அளவற்ற தோத்திரங்கள்செய்து தத்தம்பூசனைகளைக்குறைவற நிறைவேற்றிப்பழம்நழுவிப் பாலில்வீழ்ந்தாலொத்தபான்மையராய்க்காசிபரை வணங்கி, மிகுந்த பெருவகையோடும் விருந்துண்டு, சிலநேரங்கேண்மையாராட்டிப்பின்னர் விடைபெற்றுக் கயிலாயகிரிக்குப் போய்விட்டனர்.

அதற்குமேல் சகலலோகநாயகராகிய மகோற்கடமூர்த்திக்கு ஐந்தாவது வயதாக, அப்போது காசிபர் தமது புத்திரர்களாகிய தேவர் இராக்கதர் முதலான யாவரையும் வரவழைத்துப்பிள்ளையாருக்குவேதாகம விதிப்படி உபநயன கலியாணத்தைமுடிப்பதாயினர் அங்குவந்திருந்த முனிவர்கள் யாவரும் பிள்ளையார்மீது மந்திராட்சதையைத்தூவினார்கள். அச்சமயத்தில் மகோற்கடமூர்த்தியைக்கொல்லும்படி நராந்தகனால் அனுப்பிய இராக்கதர்களில் பெரிதானசரீரமும் விண்டுவாதியோரும் நடுங்கத்தக்கவன்மொழியும், மேலானபராக்கிர

மும் உள்ள பிங்களன்-விகிர்தன்-சபலன்-விசாலன் பிங்காட்சன் என்னும் பெயர்களைப்படைத்த ஐந்துபேர் தங்கள் ரூபத்தை மறைத்து முனிவர்கள்போலவிபூதி உத்திராக்கந்தரித்துக் கைகளிற் றண்டுமகண்டலங்களைத்தாங்கிக்கொண்டுவந்து அட்சதைகளில் அஸ்திரங்களை ஆவாகனஞ்செய்து தாங்களுமுனிவர்களைப் போலவே சுவாமியின் மீது அட்சதைதூவினார்கள் அவ்வட்சதைகளில் ஆவாகனஞ்செய்திருந்த தேவாஸ்திரங்களெல்லாம் உடனே தத்தம்ரூபங்களோடு வெளிப்பட்டு சுவாமியின்மீது விழுவதற்கஞ்சி யாவருங்காணும்படியாக அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தன. அப்போது கைதவர்க்குக் கைதவராகிய மகோற்கட மூர்த்தியானவர் அவைகளைத்தமது திருக்கரத்திலேந்திப்போய்வேடங்கொண்டுவந்த அந்த ஐந்து இராக்கதர்கண் மீதும்வேற ஐக்திரிசிகளையெடுத்துத்தூவினர் உடனே அவ்வைந்தும் அஸ்திரங்களாகப்பாய்ந்து அதிக பராக்கிரமத்தோடு மலைப்போலப் பரித்திருக்கின்ற அவ்வைந்திராக்கதர்களையுஞ் சங்கரித்தன.

அவ்வற்புதத்தைக் கண்டயாவரும் சுவாமியை வேதாகமங்களிலுள்ள அளவற்றதோத்திரங்களைச் செய்தனர். அதற்குமேல் உபநயனத்திற்குரிய சடங்குகளெல்லாங் குறைவறச்செய்து நிறைவேறின பின்னர் தேவர்களெல்லாரோமொரிடத்திற்கூடி சகலபுவன கர்த்தாவாகிய மகோற்கடபிள்ளையாருக்குக் கிடையாதபொருள் எவ்வுலகங்களினுமில்லையாயினும் யாமெல்லாங் கடைத்தேறும்படியான சில உபசாரங்களைச் செய்வோமென்று ஆலோசித்து யாவருஞ் சிவபெருமானைப் பணிந்துநின்றார்கள். அக்குறிப்பைச்சிவபிரானறிந்து பினாகம், திரிசூலம், உடுக்கை, மழு, சடை மதி என்னுமிவைகளை மகோற்கடப்பிள்ளையாருக்குக்கொடுத்து சடையில்கங்கையைத்தரித்து விருபாக்கன், பாசபாணி, பாலசந்திரன் என்னும்பெயர்களையுங்கொடுத்தனர் அதற்குமேல் உமாதேவியார் சிங்கவாகனங்கொடுத்து சிங்கவாகனரென்று பெயரிட்டு துட்டர்களையெல்லாஞ் சங்கரிக்கக்கடவை என்று ஆசீர்வாதஞ்செய்து மீட்டுமொருவாளாயுதத்தைக்கொடுத்து கட்கதரென்னும் மற்றொருபெயரையுங்கொடுத்தனர். இப்பால் பிரமன் தனது அடையாளமாக நவரத்னமயமாயிருக்கின்ற ஒருகமண்டலமும், ஒரு திவ்வியபரிமளத்தோடு மிருக்கின்ற ஒரு தாமரைப்பூவும் மகோற்கடமூர்த்தியினுடைய திருக்கரத்திற்கொடுத்துப் பிரமபதியென்னும் பெயரிட்டுப்பணிந்தனன். விண்டுவானவர், திவ்வியமான ஓர் பீதாம்பரமும் சக்கராயுதமும் வைத்து விஷ்ணுபதியென்னும் பெயரிட்டுப்பணிந்தனர். பிரகற்பதிதேவர், ஓர் இரத்தினபாலிகையை வை

த்துப்பாதனென்னும் பெயரிட்டுப்பணிந்து காசிபருக்கும் பாரனந்தரென்னு ஓர்பெயரிட்டனர். வருணதேவன் ஓர் பாசத்தைவைத்து சர்வப்பிரியதேவனென்னும் பெயரிட்டுப்பணிந்தான், சமுத்திராசன், பிராமணவடிவங்கொண்டுவந்து ஓர் முத்துமாலையை திருவடிக்கீழ்வைத்து மாலாதரனென்னும் பெயரிட்டுப்பணிந்தனன், ஆதிசேடன், தானே ஒருபடுக்கைமெத்தையாகி மகோற்கட மூர்த்தியைத்தாங்கிப்பணிராசவாசனெனும்பெயரிட்டு பணிந்தனன் யமதருமராசன், ஓர் தண்டாயுதத்தைவைத்து தண்டாதரனென்னும் பெயரிட்டுப்பனிந்தனன், அக்கினிதேவன், நுதற்கண்ணை மறைத்துவந்த மகோற்கடப்பிள்ளையாருக்குயாவையும் நீற்றவல்ல ஓர் சக்தியைக்கொடுத்து தனஞ்செயனென்னும் பெயரிட்டுப்பணிந்தனன் வாயுதேவன் மிகுத்தவலுமையைக் கொடுத்துப் பிரபஞ்சனென்னுமோர் பெயரிட்டுப் பணிந்தனன். இவ்வாறு அடைக்கலப்புகுந்த தேவர்களெல்லாம் வனம்வாக்கு காயமென்னும் மூன்றினொடு படைக்கல முதலியவைகளைப் பத்திபூர்வமாகக்கொடுத்துப்பணிந்துநிற்க, மகோற்கடப் பிள்ளையார்யாவருமானந்த மெய்தும்படி அப்படை முதலியவைகளை மிக்கமகிழ்வோடு மேற்றுக்கொண்டு அவ்வவர்கட்குச் செப்பத்தக்க அனுக்கிரகங்களையுஞ் செய்தருளினர்.

இப்பால் இந்திரனானவன் மகோற்கட மூர்த்தியினுடைய திருவிளையாட்டினுளிலா. பறறெநினைலா தான்மாத்திரம் மதிமயக்குற்றவனாய் எல்லாதேவர்கட்கும் அரசனாகவிருக்கின்ற என்னையாவரும் வணங்கவேண்டுவதே யல்லாமல் யாரொருத்தரையும் வணங்கேன் சகல வெள்ளங்களுந் தாழும்படியான சமுத்திரமானது ஓர்சிறியகுட்டைநீரையுமிச்சிப்பதோ! எல்லா மிருகங்களும் பணிந்துபோகத்தக்க இராசகண்டீரவமானது அற்பமான புல்லையும் இச்சிக்குமா என்றிவ்வாறு மூடத்தனமாகப்பேசி அதிக கர்வத்தோடு நின்றனன். அப்படி நிற்பவனைக்காசிமுனிபவர் புத்திரவாஞ்சையினுற் பார்த்து ஓசுவர்க்கலோக வாசனே முன்னர் உனது அரசை நடக்கவொட்டாமற் செய்த சத்துருக்களுடைய யுத்தத்திலே நீ தோத்து இப்போது யாவுமிழந்திருக்கின்றனை இஃதேயெனும் உனது போகபாக்கியங்களைப் பெற்று உனது அரசையும், வீரத்தையும் நீகைமேற்றுக்கொள்ளநினைத்தாயில்லைதறுகண்ணர்களாகியதேவாந்தகனையும் நராந்தகனையுஞ்சங்கரித்து, மூவுலகங்களையும்பாதுகாத்து, எங்கும்வேதாகமநெறிகளை நிலைகாட்டி, உன்னையுங் காத்தருளும்பொருட்டு சர்வவல்லமையுள்ள ஈச்சுரனே இங்குசிறுபிள்ளையாகத்திருவவதாரஞ் செய்திருக்கின்றதை அறிந்திலையே? அவர் இதுகாறுஞ்செய்தருளிய திருவிளையாடல்களைச்சிறிதும் அறிக்

தில்போதும் ஐயோ, எனதையன் திருவவதாரஞ் செய்தருளி ஓராண்டாவதற்கு முன் விரசையென்னும் அரக்கியைச் சங்கரித்தனர். இரண்டாவ தாண்டில் உதத்தன் துந்துபியென்னு மிரண் டசுரர்களைச் சங்கரித்தனர், மூன்றாவதாண்டில் சித்திரசேனன்னுங் கந்தருவனுக்குச் சாபந் தீர்த்தருளினர், நான்காமாண்டில் ஆகா முதலியமூன்று கந்தருவர்கட்கு அவர்கள் பூசித்துவந்த பஞ்சமூர்த்தங்களை மறைத்து மீட்டுந் தமது திருமேனியினின்றுங் கொடுத்தனர்.

இப்போது நடந்துவருகிற ஐந்தாமாண்டில் பஞ்சவடிவாய்வந்த ஐந்தசுரர்களை யாவருங்கண் டதிசயிக்கும்படி சங்கரித்தனர். அவ்வற்புதத்தை நீயும் பார்த்தனை. தற்காலத்தில் சிறுபிள்ளையா யிருக்கிறவர்களுடைய சிறியவிளையாட்டுகள் இவ்வாறானால் பிற்காலத்தில் இவர் பெரியவரான பின்பு செய்யப்போகின்ற பெரிய விளையாட்டுகளை யாவரா லறியக்கூடும், மைந்தனே! இனியேனும் சுகத்தினைப் பெறக்கோறி, நீயும் அவரைப் பத்தியோடு பூசனைசெய்யென்று சொல்லினர் தனது தந்தையாகிய காசிபர் இவ்வாறு கூறியும் இந்திரன் அவைகளை ஒப்புக் கொள்ளாமல் சுவாமியைச் சோதிப்பான்போல வாயுதேவனைக் கூவி நீ உனது பராக்கிரமத்தோடுஞ்சென்று மகோற்கடமூர்த்தியை அசைத்து வருவாயென் றேவினன். உடனேவாயுதேவன் சுவாமியினுடைய பெருமையினை யறிந்தானாயினும் அதனை இந்திரனுக்கு மறிவிப்பான்போல மிண்டிமேலெழும்பிச் சண்டமாருதமாய்ச சுழன்று தாக்கி, யுகாந்தகாலமோவென்று அஷ்டதிசைகளி லுள்ளோரெல்லாம் நடுங்கும்படி தனது பராக்கிரமமெல்லாந் தோன்ற வீசினான். அவ்வீசலினால் அண்டப் பித்திகளிடிந்தன. சமுத்திரங்க ளுடைந்துபோயின. பர்வதங்கள்யாவும் பொடியாயின. மரங்கள்யாவும் முறிபட்டு வீழ்ந்தன. தேவலோக முழுவதும் பூவுலகம்போலப் புழுதி மூடிக்கொண்டது. அனந்த சீவகோடிகள் இறந்துபோயின, இவ்வாறு மகோற்கடப் பிள்ளையார் மீது வீசிய காற்றினாலே சகலலோகங்களும இவ்வண்ணமா யலையும்போது தேவாந்தகனும் நராந்தகனுங் கோபங்கொண்டு நமக்குப்பயந்து ஒடுங்கிக்கிடந்த வாயுதேவனுக்கு இவ்வளவு அதிகாரங்கொடுத்தவர்கள் யாரென்று ஒற்றர்களைக்கூவி விசாரித்துவரக் கட்டளையிட்டனர்.

அவர்கள் அக்கட்டளையின்படி சென்று விசாரித்து வருமுன்னம் அக்காரியங்களை முன்னமே அறிந்திருக்கின்ற சில வொற்றர்கள் அவ்வசுர ராசர்களெதிரில் ஓடிவந்து ஆண்டவர்களே! நமது பகைவனாகிய காசிபனை வெல்லும்படியாக இந்திரனுடைய உத்தரவின்பேரில்

வாயுதேவன் தனது வலியெல்லாங்கொண்டு வீசுகின்றனன். இனி அக் காசிபன் முதலாயினோர், எவ்வாறுவார்களோ அறிகிலேம் அவன் வீசுகின்ற சண்டவேகத்தினால் தேவர்களெல்லாந் திகைத்து நின்று கின்றார்களென்றனர் அதைத் தேவாந்தகனும் நராந்தகனுங்கேட்டுச் சந்தோஷமடைந்தனர். இவ்வாறு வாயுதேவன் தனது வலியனைத்தை யுங்கொண்டு சகல விருட்சங்களும் ஆகாயத்திற் பஞ்சுபோற் பறந்திலை ய வீசியும், மகோற்கட மூர்த்தியினுடைய திருமேனியில் ஒரு ரோம மேனும் அசையவில்லை. அதன்மீது இந்திரன் அக்கினிதேவனைக்கூவி நீயும் வாயுவோடுசென்று உனதுவலிமையைக்காட்டக் கடவையென்று கட்டளையிட்டனன். உடனே வாயுதேவனோடு அக்கினிதேவனும் சண்டமாருதமும் வடவாக்கினியுமாகக் கலந்து சர்வ சங்காரகாலத்திற்பஞ் சபூத பௌதிகரத் மகமாயுள்ள சகங்களையெல்லாம் பஸ்பஞ் செய்வது போலத் தகித்து வருவதினால், சத்த சமுத்திரங்களுஞ் சலமின்றி வற் றிப்போயின. சகல லோகங்களும் அக்கினிச்சுவாலையால் வாடிப்போ யின இவ்வதிசயத்தை மகோற்கட பிள்ளையார் கண்டு சிறிது புன்ன கை செய்தனர் அப புன்னகையை அக்கினிதேவன் தாளமாட்டாது மூர்ச்சையாயினன். அதற்குமேல் மகோற்கட மூர்த்தியானவர் இந்தி ரன்கொண்டிருக்கின்ற அறிவின்மையை நீக்கத் திருவுளங்கொண்டு ஓர் விசுவரூபமெடுத்து அனந்த முடிகளும், அனந்த சிரங்களும், அனந்த முகங்களும் அனந்த விழிகளும், அனந்த செவிகளும், அனந்த வாய் களும், அனந்த புயங்களும், அனந்த கரங்களும், அனந்தவிரல்களும் அனந்த மார்புகளும், அனந்தவயிறுகளுமாகி ஏனைய அவயவங்களும் அனந்த வனந்தமாய் விளங்க சகலமுந் தாமாகி நின்றனர். அப்படி நின்றபோது அவருடைய திருவடிகளெல்லாங் கீழேழு லோகங் கட்கு மப்பாற் போயிறங்கின அவருடைய செவிகளெல்லாம் அஷ்ட குலாசலங்கட்கு மப்பாற்போய் விளங்கின அவருடைய மயிர்க்கால்க டோறும் அளவற்ற அண்டங்கள் தொங்கின. அநேகஞ் சூரியர்கள் ஏககாலத்தி லுதயமானாற்போல அவருடைய திருமேனிகளில் ஓர்சோ தி உண்டாயது. அச்சோதில் அனந்த விஷ்ணுக்கள், அனந்த பிரமாக் கள், அனந்த இந்திரர்கள், அனந்த தேவதைகள், அனந்தமுனிவர்கள், அனந்த விஞ்சையர்கள், மற்றுமுண்டானபேர்களும் அனந் தானந்த மாகத் தனித்தனியே விளங்கிச் சேவித்திருந்தனர். இவ்வாறு சகல புவன கர்த்தாவாகிய மகோற்கடமூர்த்தி யெடுத்திருக்கின்ற விசுவரூபத் தைக் கர்வங்கொண்டிருந்த இந்திரன்பார்த்து மிகவும் பிரமைகொண்டு சுவாமியினுடைய மயிர்க்கால்களிற் றொங்குகின்ற அளவற்ற அண்டங் களில் ஓ ரண்டத்துள் நுழைந்து அதற்குள்ளே ஈரேழுபுவனங்களுள் லோ

கங்களும் விண்டு, பிரமன், இந்திரன் முதலான தேவர்களும், ஏனைய சீவராசிகளும், ஆலம் விரைகள்போலவும் பனங் கொட்டைகள் போல வும் அனேக வனேகமாக விருக்கக்கண்டு தனக்கு நேர்ந்திருந்த மதி மயக்கத்தையுங் கர்வத்தையு மொழித்து நல்லறிவு உதித்து அங்கிருந் து வெளிவருவதற்கு எத்தனங்கொண்டான். அவ்வாறு வெளிவருதற் குச் சக்தியில்லாமற் றிகைத்து அங்கிருந்தவண்ணமே மகோற்கடமூர் த்தியினுடைய திருவடிகளை மனதிற் றியானித்து மிகுந்த பத்தியோடு துதிசெய்வதாயினன்.

தினந்தினம்வை யகமிறைஞ்சத் திகழ்தேவ தேவநின்னை
யனந்தசத் தியமென்றும் விசுவாத்து மாவரென்று மனந்தானந்த
மனந்தூய வடிவார்க்கு மாறாது வழங்குமொரு வள்ளலென்று
மினந்தும்மை யில்லாத சிறியேனு மிப்பொழுதிங் கறிந்தேனெந்தாய்.

விச்சுவந் தியரென்றுங் கணேசரென்றும் விச்சுவமா மீசரென்றும்
விச்சுவா திகரென்றும் பரேசரென்றும் விச்சுவா தீதரென்றும்
நிச்சலுநித் தியரென்று நிகழ்ச்சி தானந்த சொரூப மென்றும்
முச்சகநா யகரென்று மீசரென்று முனையடியேன் முழுப்பக்கண்டேன்.

சர்வவியா பகரென்றுஞ் சுகதுக்கஞ் சர்வருக்குந் தருவாரென்றுஞ்
சர்வவித்தை களுக்குமா கரமென்றுஞ் சருவான்ம சொரூபரென்றுஞ்
சர்வபொருட் களுக்குமிருப் பிடமென்றுந் தகுசர்வே கானரென்றுஞ்
சர்வான்ம ஞானத்தி லாபாச ரென்றுமுனைச சரணஞ் சார்ந்தேன்.

ஐந்தொழிற்கா ரணரென்றுங் காரணாதீதரென்று மரன்மால் வேதன்
றந்தலைவ ரென்றுர்தா பரசங்க மத்தினிச்சை தன்னை நாடி
நந்தலுற வழங்குமொரு நாதரென்றும் விஞ்ஞான சொரூபரென்றும்
புந்தியுரை கடந்தபூ ரணரென்று மறிந்துன்னைப் புகழாநின்றேன்.

இவ்வாறு தோத்திரஞ்செய்து ஓ பராபரவஸ்துவே! முன்னர் அடியேனுடைய பேதமைபுத்தியினாற் றேவரீரைச் சிறுபிள்ளையென்று நினைத்த பெருங்குற்றத்தைப்பொறுத்தருளி அடியேனிடத்தில் தேவரீ ருடைய திருவருட்பார்வைவழங்கி அடியேனை வெளியில்விடுத்து,முன் போலத் தேவரீருடைய சாந்தரூபதரிசனந் தந்தருள வேண்டுமென்று பணிந்து பிரார்த்தித்தனன் அதற்கு மகோற்கடப் பிள்ளையார் மகிழ் ந்து, அவனை வெளியிலே விடுத்துத் தாம் முன்போலவே பிள்ளைப் பருவத்தினராகி யிருந்தனர் அதற்குமேல் தேவர்கள் புட்பவருடஞ் சொரிய ஆகாயத்தில் பஞ்சவாத்தியங்களும் முழங்க, தேவரம்பையர் நாட்டியஞ்செய்ய, கந்தருவர்கள் கானம்பாட,முனிவர்கள் வேதமோத

இவ்வித வைபவங்களோடு இந்திரனனவன் மகோற்கட மூர்த்தியை அளவற்ற சிறப்பினோடும் பூசனைசெய்து சுவாமிக்கு எக்காலத்துந் திருவடிப்பணி செய்திருப்பதற்கு இரண்டு தெய்வஸ்திரீகளைவைத்து, கற்பகவிருட்சமும் அங்குசமும் வச்சிராயுதமும் பிள்ளையாருடைய திருவடிகளில்வைத்து விநாயகனென்னுந் திருநாமமிட்டுத் தோத்திரஞ் செய்தனன் மகோற்கடப்பிள்ளையார் மீட்டுந் தேவேந்திரனிடத்தில் கிருபையுற்று சத்துருக்களுடைய யுத்தத்திற்கு இடையாத பராக்கிரமத்தை அவனுக் கனுக்கிரகஞ்செய்து, அவன்சொன்ன தோத்திரங்களை யாவர் துதிசெய்தாலும் அவர்கட்குச சகல சம்பத்துகளும் அளிப்போமென்று வரமுங்கொடுத்து விடைகொடுத்தனர் பின்னர் தேவேந்திரன், அவ்விடையை முடிமேற்கொண்டு, மீட்டும் பலமுறை பணிந்தெழுந்து மகமேருகிரியைநோக்கிசென்றனன். மற்றைத்தேவர்முதலியயாவருஞ்சுவாமியைப்பணிந்து விடைபெற்றுத் தத்தமிருக்கையை யடைந்தார்கள்.

அதற்குமேல் மகோற்கடமூர்த்திக்கு ஆறுவது வயதாகுங்காலத்தில், தாமே தமது சுயேச்சையினல் சகலலோகங்களினும் விளையாடும்படித் திருவுளங்கொண்டு அங்குசம பாசு, பாசம், கமண்டலம், தண்டாயுதம், தாமரைப்பூ மான்றோல் பீதாம்பரம்: முத்துமாலை; மூன்றும்பிறைசசந்திரன், கத்தூரிபபொட்டு, தருப்பையென்னு மிவைகளெல்லாம் பிரகாசிக்கும்படி தரித்துக்கொண்டு சிங்கவாகனமூாநது, ஒருநாள் விண்டுலோகத்திற்கும், ஒருநாள பிரமலோகததிற்கும் ஒருநாள் சொர்க்க லோகத்திற்கும், ஒருநாள் நாகலோகததிற்கும், ஒருநாள் அஷ்டதிசைகளுக்கும், ஒருநாள மூவுலகங்களுக்கும், ஒருநாள் வனங்களுக்கும்' ஒருநாள் மலைகளுக்கும், ஒருநாள் சமுத்திரங்களுக்கும், ஒருநாள் தீவுகளுக்குமாகச்சென்று விளையாடல் செய்திருக்கின்றநாள்களில், ஒருநாள் காசிபமுனிவருக்குச் சீடனுகிய நராந்தகனுக்குப் பிரியவசனங்களைக் கூறிக்கொண்டு காசியிலே அரசாட்சி செய்பவனுய் ஓரரசனிருந்தான். அவன் தனது புத்திரனுக்கு விவாகஞ்செய்ய நினைத்துப் புரோகிதத்தொழிலுக்கு காசிபரை யழைத்துக்கொண்டுபோகும்படிதானே சுதீர்வாய் அவ ராசிரமத்திற்குவந்து அவரைத்திர்க்கதண்டஞ் செய்தனன். அவ்வரசனைக் காசிபமுனிவர் புத்திரவாஞ்சையோடும் பரிந்தெடுத்து, ஓராசனந் தந்திருக்கச்செய்து அன்பனே! நீவந்தகாரியம் யாதென்று வினவினர். அதற்குக்காசிராசன் அஞ்சலியஸ்தனுய் சுவாமீ! அடியேன்குமாரனுக்கு விவாகஞ்செய்யுமாறு எத்தனித்திருக்கின்றேன் அவ்விவாகம் சுவாமிகளெழுந்தருளாது நிறைவேறுவதன்று அடியேன் சுவாமிகளையழைத்துச் செல்லத்தக்கபுண்ணிதனல்லேனுயினும்

அக்காரியத்தைவந்து நிறைவேற்றவைப்பது சுவாமிகளுடைய பெருங் கடமையென்றான், அதற்குக் காசிபர் கிருபையுற்று அரசனே! யாம் சாதுர்மாகிய விரத மாரம்பித்தோ மாதலால் யாம் வருவதற் கொவ் வாது நமது குமாரனாகிய மகோற்கடன் அக்காரியத்தைச் சிறப்பெய்த நடத்த வல்லவனென்றுசொல்ல உடனே மகோற்கடமூர்த்தியை யழைத்து. அப்பனே இவன் காசிதேசத் தரசன் இவன் உன்னைப் பணியும் படிவந்தனன். இவனை உனக்குச் சீடனாக்கும், ஆதலால் இவன் மனதிற்கு மகிழ்ச்சியுண்டாகும்படி உனது காட்சியைக்கொடுத்து, இவனோடுகூட நகரத்திற்குச்சென்று. இவனுடைய புத்திரனுக்கு விவாகஞ் செய்து முடித்து. மீட்டும் இவ்விடத்திற்கு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அதற்கு மகோர்கடமூர்த்தியானவர் இனி வருங்காரியங்களை யாலோசித்து அதற்கிசைந்தனர், பின்னர் காசிராஜன் தனது ஆசிரியரிடத்தில் விருந்துண்டு மிக்கமனமகிழ்ச்சியோடு விடைகொண்டு அவரதுபத்தினியாகிய அதிதி யிருக்குமிடத்திற்சென்று பணிந்தனன். அவ்வதிதி அவனைப்பார்த்து அரசனே! இம்மகோற்கடனே சிறுவன் இவன் ஒன்றையுந் தேறாமல் துடுக்காய்ச் செய்யத்துணிவன், சிறிதும் பயமறியாதவன், இவனால் அனந்த இடையூறுகளும் உற்பாதங்களும் உண்டாகுமாதலால் அவைகட்கெல்லாம நீ காப்பாற்றி இப்போது நீ எவ்வித வரிசையினு லழைத்துக்கொண்டு போகின்றனையோ அவ் வாஞ்சையோடு மீட்டு மிவ்விடத்திற் கொண்டுவந்து சேர்க்கவேண்டுமென்று கட்டளையிட்டு, சுவாமியைத் தனது கரத்தினாற் பிடித்துவந்து அவ்வரசன்கையி லொப்புவித்தனள்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! அரிபிரமேந்திராதியராலும் அரியவேதங்களாலு மறிதற்கரிய பராபரவஸ்துவாயிருக்கின்ற மகோற்கட மூர்த்தியை அதிதியானவள் தனது அருமைத் திருக்கரத்தினாற்பிடித்துக் காசிராசனிடத்தி லொப்புவிக்க இனி முத்திவீட்டைத் தனக்குக் காணியாட்சியாகக்கொள்ள வல்லோனாகிய அவ்வரசன் மிகுந்த உவகையோடும் எமது கர்த்தரைப்பணிந்து கைப்பற்றினனென்றால் இவர்கள் பூர்வத்திற் செய்திருக்கின்றதவத்தின் பெருமையினை யார் அளவிட்டுரைக்க வல்லவர்கள்.

இப்பால் காசிராசன் மகோற்கட மூர்த்தியைப் பணிந்தெழுந்து அவரை அளவற்ற தோத்திரங்களோடும் வரிசைகளோடும் இரதத்திலேற்றித் தானுமேறித் தனது காசிநகரை நோக்கிச் செலுத்தினன். அவ்வாறு செலுத்தப்பட்ட இரதமானது கண்டக பர்வதத்திற்குச் சமீபத்தில் வர, அப்பர்வதச் சாரலில் பதினாயிரம் வருடமாய்ப் புகையுண்

ஆகாரமாகப் புசித்துக்கொண்டு இரௌத்திரகேதுவுக்கு இளையவனும் தேவாந்தகனுக்கும் நராந்தகனுக்குந் தகப்பனுமான தூமாட்சனென் னும் பெயரையுடைய ஓரவுணன் மகாவல்லமையுள்ள ஓராயுதம்பெற வேண்டி சூரியனைநோக்கித் தவஞ்செய்திருந்தனன். அவன் தவத்தின் முடிவுநாளுங் காசிராசன் அவ்விடத்தைச் சமீபித்தநாளும் ஒன்றாய்நே ர்ந்தால் அத்தினம் அவ்வேளையில் சூரியனானவன் தனது லோகத்திலி ருந்த வண்ணம் அவன் தவத்தினுக் கிரங்கி ஓராயுத மனுப்பினன் அவ் வாயுதமானது ஆகாயமெல்லாம் அளவற்ற சோதியைவீசிக்கொண்டு பூமியை நோக்கிவர அதை மகோற்கட மூர்த்திபார்த்து அதன்வல்ல பத்தை யாமறிவோமென்று நினைத்துச் சரேலென்று இரதத்தினின்றும் ஆகாயத்திற் பாய்ந்து சர்ப்பத்தைக் கருடன் பிடிப்பதுபோல அவ்வா யுதத்தைத் தனதுகரத்தாற் பற்றி மீட்டும் இரதத்தில் வந்திருந்தா சூரி யனைநோக்கித் தவஞ்செய்து கொண்டிருக்கின்ற அந்த தூமாக்ஷனமீது ஏவினர் அது அவர் திருக்கரத்தினின்றும் வெளிப்பட்டமாத்திரத்தில் அதிக வல்லபத்தோடுஞ்சென்று தீயராயினோர் பெய்யுந் தவமானது உடனே அவருக்குத் தீமையைவிளைக்குமென்று சொல்லும் மேலோர் வாக்கியம்போல. அப்பாதகனுடைய தலையையறுத்துக் கீழே தள்ளி யது அவனுடைய சரீரமானது ஐந்நூறுபனை விசாலத்திற்கு விழுந்தது இவ்வற்புதத்தைக காசிராசன் பார்தது மனதில் அதிசயமும பயமுண் டாகி ஐயோ! நமக்கு வல்லமையில்லாததினு லன்றோ நராந்தகனுடைய ஏவற்பணிகளை நடாததிக்கொண்டு யாவரும் புகழும்படியாக இதுகா றும் ஒரு சங்கடமுமிலலாமல் அரசாட்சிசெய்து வருகின்றோம் நமது குமாரனுக்கு ஒரு விவாகம் நடப்பிக்கவேணுமென்று இத்தினம் இவ ரை இங்ஙன மழைத்துவந்தோம் அதனால் நமது சம்பத்துங் குடியுங் குலமும் ஒருங்கே நாசமாகும்படியாய் நேர்ந்ததே இவரோ புரோகித ருடைய குமாரர் அவனோ தனது வெற்றியினால் திரிலோகங்களையுமட க்கி ஆண்மைகொண்டிருக்கின்ற அரசன் இந்தச்சிறியவருடைய சார் பால் நமககுயாது கூடிவரப் போகின்றது

அந்தப் பெரியவனுடைய சார்பையித்தினம் சுத்தமாயிழந்து போ னோமே ஆ அ, ஆ அ, என்னசெய்தோம் இனி என்னசெய்யப்போகி றோம் என் றிவ்வாறு நினையாததெல்லாம் நினைந்து நினைந்து துயரமு ற்றிருந்தனன் அக்குறிப்பினை மகோற்கட மூர்த்தி அறிந்தும அறியா தவர்போல விருந்தனர். அச்சமயத்தில் இறந்துபோன தூமாட்சனுக் குப் பணிசெய்திருந்த மகா பராக்கிரமசாலிகளாகிய சகனென்றும் மனுவென்றுஞ் சொல்லாநின்ற அவன் புத்திரர்களிருவர் வந்து

மகோற்கட மூர்த்தியைப்பார்த்து, ஓ பிள்ளாய்! உனக்கு ஒருபிழையுஞ் செய்யாமல் அளவற்ற நாளாய் அரியதவஞ் செய்துகொண்டிருக்கின்ற எங்கள் பிதாவை வீணே கொன்றனையே! அறிவற்றவனே! உனது திருவாகம் அவ்வளவு பெரிதோ? அதை இப்போதே அறிகின்றோம், கர்வங்கொள்ளாதே யென்று சொல்லிப் பயந்திருக்கின்ற காசிராசனைப் பார்த்து, அடா பேதாய், நீ அன்றோ ஆடிக் காற்றிலிலையும் இலவம் பஞ்சுபோல எங்கும் நிலைப்படாமல் துன்பப்பட்டுக்கொண்டிருந்தனை, அப்படி யிருந்த உன்னைச் சகலபாக்கியங்களையும் அநுபவிக்கவைத்து உனக்கு வேண்டிய உபகாரங்களைச்செய்த எங்கள் பிதாவுக்குப் பிரதியுபகாரம் இச்சிறுவனைக்கொண்டு அவர் உயிரைவாங்கும்படி செய்வித்தனையல்லவா நன்மை செய்தோர்க்குத் தீமை செய்வோர்களுடைய சம்பத்தும் ஆயுளும் நிலைபெறாதென் ற பெரியோர்கள் சொல்லும்வாக்கியத்தை உலகத்தா ரறியும்வண்ணம் இப்போதே உன்னிடத்தில் செய்துகாட்டுகிறோம் பாரென்றுசொல்லி ஆக்கிரமித்து அவ்வரசன்மேல் விழவந்தார்கள். அப்போ தவ்வரசன் பின்னும் பயந்து நடுக்கமுற்று ஒருவர்க்கொருவர் குறைவற்ற பராக்கிரமத்தினையுடைய வீரர்களே! உங்களுக்கு இடையூறு செய்யும்படி இச் சிறுபிள்ளையை யானழைத்து வந்தவனல்லன், யானடத்தப்போகின்ற விவாக நிமித்தம் அழைத்துவந்தேன். எவ்வளவும் அச்சமும் பயமுந் தெரியாத மிகவு மிளமையான இச்சிறுவன்செய்த பெரும்பிழையை நீங்கள் பொறுக்கவேண்டும். திரிலோகங்களினுங் கீர்த்திபெற்றிருக்கின்ற நீங்களே எங்கள்மீது கோபித்து உபத்திரவஞ் செய்யத்தொடங்கினால் யாங்கள் என்ன செய்யப்போகின்றோம் என்றிவ்வாறு மனங்கலங்கி நடுங்கும் பலமுறைதாழ்ந்த வசனங்களாற் பிரார்த்தித்தான், அதை மகோற்கடமூர்த்தி கேட்டு தாமும் பயந்தவர்போல ஒரு திருவிளையாட்டாகக் காசிராசனைப் பார்த்து அரசனே, என்னை எனது தாய்தந்தையரிடத்தி லிருக்கவொட்டாமற் கொண்டுவந்தனை, வந்தவிடத்தில் சத்துருக்களானோர் உபத்திரவஞ் செய்யவந்தால் நீ அவர்களோ டெதிர்த்து யுத்தஞ்செய்துக் கொன்று, என்னைக் காப்பாற்றுகிற வகையைத்தேடாமல் அவர்களோடு இதமான வார்த்தைகளைப் பேசுகின்றாய், அவ்வாறு பேசினும் அவர்கள் மூர்க்கர்களாகையால் உன்னையு மென்னையு மோதாமல் விடார்கள். உன்னினும் பராக்கிரமமுடைய அரசன் உன்னைக் கோபித்தால் உனது உயிரும் சம்பத்துமே போய்விடும். எனது தந்தையினுடைய மனது சிறிது கோணுமாயின் இப்பிறப்பில் தவம் தானம் சம்பத்து உயிர் முதலானவையாவும் நாசப்படுவதன்றி மறுபிறப்பிலும் வாழ்வைக்கெடுத்து

ஏழு பிறவியும் பலதுன்பங்களை விளைக்குமென்று நீ யறிந்தாயில்லை ஒருவனுக்குத் தவசிலாகிய எனது தந்தையினுடைய கிருபை சிறிதுண்டாயின் மேலான பராக்கிரமசாலிகளாகிய அரசர்களா லுண்டாகுமிடர்கள் அவனுக்குச சிறிதுமில்லை சந்திரனிடத்துற்ற முயலைப்பிடிப்பதற்கு சிங்கம் வல்லதோ என்றிவ்வாறு கிருபாநிதியாகிய மகோற்கடமூர்த்தி திருவாய்மலர்ந்தனர் இப்பால் காசிராசன் முன்னர் அவ்வவுணர்கள் கூறியவன் மொழிகளையும், பின்னர் மகோற்கடமூர்த்தி திருவாய் மலர்ந்தருளிய இன்மொழிகளையுங்கேட்டு இருதலைக் கொள்ளியிலகப்பட்ட எறும்போல அவனது மனம் ஒரு நிலைப்படாமல் அங்குமிங்குமாகச் சுழல, அக்காட்சியை மகோற்கடமூர்த்தியறிந்து, எதிர்த்துவந்த இரண்டவுணர்கள் மீது ஒரு பெருமூச்சுவிட்டனர் அப்பெருமூச்சானது முன்னொருபோது நந்திதேவருடைய உயிர்ப்பு கருடனை அந்தரத்தி லலையச்செய்ததோ அவ்வாறு அவர்களைக் கொன்றுவாரிக்கொண்டுபோய் நராந்தகனுடைய கொலுச்சபையிலே இரண்டு பர்வதங்களைப்போலப் போட்டது அப்போது அளவற்ற உத்திரங்களுடைந்து பொடியாயின வச்சிரத் தூண்களனைத்தும் பிளந்துபோயின அழகுறச்சமைத்திருந்த மேடைகளெல்லா மிடிபட்டன, எங்கும் புழுதிகளெழும்பி அவனுடைய சபையையெல்லாம் மூடிக்கொண்டன. இவ்வித உற்பாதங்களை நராந்தகன் கண்டு பயந்து, ஞெரேலென்று சிம்மாசனத்தினின்று மிழிந்து அந்தப்புரத்திற் சென்று, ஒளித்துக்கொண்டு மனங்கலங்கித் தூதர்களை விரைவிற்கூவி இவ்வுற்பாதம் யாதுகாரணத்தால் வந்ததோ அதனை அறிந்துவரக் கடவீர்களென்று துரத்தினன்.

உடனே அவர்களும் அவ்வாறேசென்று தெரிந்துகொண்டு, பதைத்தும் வெயர்த்தும் ஓடிவந்து நராந்தகனைப் பணிந்து நின்று ஆண்டவனே, காசி இராசனெனவன் தனது புத்திரனுக்கு விவாகஞ்செய்யு நிமித்தம் தன்னுடைய புரோகிதனாகிய காசிபமுனிவரிடத்தில் சென்று அவரிடத்தில் பாலசந்திரனைப்போல வளர்ந்துகொண்டிருந்த மகோற்கடனை அழைத்துக்கொண்டு மீட்டுங் காசிப்பட்டணத்தை நோக்கிச் செல்ல அம்மார்க்கத்தில் தேவரீருடைய சிறிய தந்தையாகிய தூமாட்சர் தவஞ்செய்துகொண்டிருக்க அப்புதுமையை அச் சிறுவன்பார்த்து ஓர் விளையாட்டாக அவரைக்கொன்றனன். அதை அவருக்குப் பணிசெய்திருந்த அவர் புத்திரர்கள்கண்டு உடனே அச்சிறுவனிடத்திலோடித் தங்களுக்குண்டாகிய மனவருத்தத்தினால் அவனைப் பலமுறைவைது எதிர்த்து நின்றனர். அதற்கச்சிறுவன் கோபங்கொண்டானில்லை அத்திரசத்திரங்களையுந் தொடவில்லை தனது பெருமூச்சியினாலேயே

அப்புத்திரர்களிறக்கும்படிசெய்து அவர் சரீரங்கள் இச்சபையில் விழவுந்தள்ளினான். அவர்கள் இங்கேவிழுந்தவுடனே சபைமுழுவதுமழிந்துபோனதன்றி சபையிலிருந்தவர்களிற் சிலர் துவையலானார்கள், சிலர் தோள்முதலிய அவயவங்களை யிழந்தார்கள். சிலர் தப்பி ஓடிப்போனார்கள். இப்போது அக்காசிராசன் அச்சிறுவனோடு தனது தேரைச்செலுத்திக்கொண்டு அம்மார்க்கமாகப் போகின்றானென்றார்கள். அவையனைத்தையும் நராந்தகன்கேட்டுக் கோபங்கைகொண்டு, பெருமூச்செறிந்து இங்கிருந்துவெளிப்படு முன்னமே தண்ணீரினின்று நீங்கிய முதலையைப்போலக் காசிபனிடத்தினின்றுநீங்கிச்செல்லுகின்ற அம்முனிச்சிறுவனைக் கொல்லுகின்றேனென்று வைராக்கியஞ் செய்துகொண்டுகொடுமையிற்சிறந்த இராக்கதர்களில் ஐந்நூறுபேரையழைத்துநீங்கள் இந்நிமிடத்திற்சென்று காசிபன் மகனையுங் காசிராசனையுங் கைப்பிடியாகப்பிடித்து நமக்குமுன் கொண்டுவந்து விடக்கடவீர்கள். ஒருவேளை அவர்கள் மறங்கொண்டு போர்செய்வார்களாயின் உடனே அவர்களைக்காக்கைக்கும் கழுகுக்கு மிரையாக்கி வாருங்களென்று ஆக்கியாபித்தனன் அம்மாத்திரத்தில அவர்கள் இதோ முடித்தோமென்று பணிந்தெழுந்து ஓர்நொடிப்போதில் சூரியனை மேகங்கள்சூழ்ந்துகொண்டாற்போலக் காசிராசனுடைய தேரைசசுற்றிலுஞ் சூழ்ந்து ஆர்ப்பரித்துக்கொண்டு மகோறகடமூர்த்தியைபபிடிக்க நெருங்கினார்கள். அப்போது எமதையன் ஓராயுதமேனுங்கைப்பற்றாது மேககர்ச்சனையைப்போல ஒரு பேரொலிகாட்டினர். அப்பேரொலிக்கு அவ்வீரர்கள் தாளமாட்டாது பேரிகையோசையினைக்கேட்ட அசுணமா எவ்வாறு நடுங்கி இறக்குமோ, அவ்வாறுயாவரும் பூமியிலேவீழ்ந்துபதைபதைத்து இறந்துபோனார்கள், காசிராசன் தனது தேரைசசெலுத்திக்கொண்டு போயினன். அவ்வதிசயத்தைக்கண்ட சிலதூதர்கள் விரைந்தோடி நராந்தகனைப் பணிந்தெழுநது. ஆண்டவனே? முன்னர்தேவரீருடைய கட்டளையின்படிசென்ற வீரர்களெல்லாங் காசிராசனுடைய தேரைச்சூழ்ந்து கொண்டார்கள். அப்போது அவ்விராசனோடிருக்கின்ற அப்பிராமணச்சிறுவன் கோடைகாலத்து இடியைப்போல ஓர் தொனியிட்டு ஆர்ப்பரித்தான், அத்தொனிக்கு நமது வீரர்கள் தாளமாட்டாமல் சர்ப்பங்களைப்போல பூமியில்விழுநது இறந்துபோனார்கள், ஆண்டவனே; உருவிலே சிறுவனென்று நினைதது அந்தத்தெய்வச்சிரேஷ்டனைப்பகைத்தால் சகல துன்பங்களும் வரும் அவனுடைய வலியைக்குறித்துயோசனைசெய்து அவனைப்பூசித்தால் பெருமை பெறுமென்று சொன்னார்கள். அதைக்கேட்டமாத்திரத்தில் காய்ந்த செ

ப்பூசியைக் காதிலேற்றினாற்போல நராந்தகனுக்குக் கோபமேலிட்டு சரீரமெல்லா மழல்போலச்சிவந்து தனக்கு அழிவுகாலஞ்சேரிட்டபடியால் துர்ப்புத்திமேலிட்டவனாகிய, மிக்க ஆவேசத்தோடும் அத்தூதர்களைப்பார்த்து அறிவீனர்களே! யுத்தத்தில் எதிர்த்துவாராதவனைத்தெய்வச்சிரேஷ்டனென்று சொன்னீர்கள். உங்களுடைய பேதமைப்புத்தியினால் உங்களுக்கு நீங்களே பேடியென்று காட்டிக்கொண்டீர்கள். யாங்களோ சிவபிரானைநோக்கி அளவற்றநாள் தவஞ்செய்து அரியவரங்களைப்பெற்று பிரமன் முதலிய தேவர்களையெல்லாம் ஒடுக்கி நமக்கு ஏவலாக்கி வைத்திருக்கின்றோம் எங்களுடையபராக்கிரமத்தை எவ்வளவும் யோசியாமற்போனீர்கள் அம்முனிப்பயலோ சேறறையதினைத்தி னுதித்தவன், ஒருகல்வியுங் கல்லாதவன். ஆயுதபரிட்சை யொன்றுந் தெரியாதவன், அரியதவங்களைச்செய்துபெரியவரங்களைப் பெறாதவன் ஓர் சேனையேனு மில்லாதவன், யாதுமற்று ஒருவனாயிருக்கின்றவனையே நீங்கள் மேலான வீரனென்று சொன்னீர்கள். ஒரெலி பூமியைத்தோண்டி மலையைச்சாய்க்குமோ ஓர்விட்டிற்பூச்சி வடவாமுகாக்கினியையவிக்குமோ அதுபோல. ஓர் சிறுபையல் என்னுடனே யுத்தஞ்செய்து கொல்லுவானென்று நீங்கள் அவனை என்னிலு மேலாகச்சொன்னீர்களல்லவா! ஆ. ஆ ஆ, ஆ! நன்றாயிருக்கின்றது நன்றாயிருக்கின்றது என்றிவ்வாறு அத்தூதர்கள்மீது தன்னுயிரைப் பாதுகாத்துக்கொள்ளும்வகை யின்னதென்று தெரிந்துகொள்ளாத நராந்தகன், கோபாவேசங்கொண்டு அவர்களை அத்தடசணமே கொன்றுவிட்டு. வேறே சிலதூதர்களைத் தனது மனதிற்கேற்றபடி ஆராய்ந்துவைத்து, மாயையிலும் யுத்தத்திலும்வல்ல சில அவுணர்களை அந்தியிடத்தில் வரவழைத்து, அவர்கட்கு அளவற்ற வெகுமதிகளைக்கொடுத்து, ஓ நண்பர்களே? நீங்கள் யாவரும்விரைவிற்சென்று காசிராசனையும்காசிபனுடைய மகனையும் பிடித்துக்கொண்டு வாருங்களென்று ஆக்கியாபித்தனன்." அவ்வாறே செய்துவருகின்றோமென்று அவ்வீரர்கள் பணிந்து விடைகொண்டார்கள்.

இப்பால் விடைகொண்டு காசிராசனை நோக்கிச் சொல்லுகின்ற அவ்வீரர்கள் ஓரிடத்தில் யாவரும் ஒருமிக்கக்கூடி மேலான வல்லமையையுடைய மகோற்கடனுக்கெதிரே நாம்போய் வென்றுவருவது மிக வுமரிதாதலால் நாமனைவருந் தனித்தனி வெவ்வேறு மாயவடிவங்களைக்கொண்டு சென்று அவ்விருவரையுங் கொல்லவேண்டும். அல்லது மற்றெந்தவிதத்தாலாவது அவர்களைக்கைப்பிடியாகப்பிடித்து, நமது அரசனெதிரிற் கொண்டுவந்து விடவேண்டும். இந்த இரண்டிலொன்றைச்

செய்து நமது ஆண்டகைக்குச் சந்தோஷமுண்டாக்கிவைப்பதே நமக்குரிய பெருங்கடமையென்றிவ்வாறு யாவருந் தீர்மானஞ் செய்துகொண்டு அதிக வேகத்தோடும் நடந்தார்கள். அதற்குள்ளே காசிராசன் மகோர்கடமூர்த்தியினுடனே அனேகங்காடுகளையும் மலைகளையுங்கடந்து சென்று தனது நகரவெல்லையை யடைந்தனன். அப்போது அரசன் வருகிறசெய்தியை அமைச்சர்களும் அந்நகரவாசிகளும் அறிந்துகாசிப்பட்டணம் முழுவதும் அலங்காரஞ் செய்வித்து வீதிகளையெல்லாம் தேவேந்திரலோகம்போலச் சந்தனம். பனிநீர், தமனியப்பொடி, மலர்கள் இரத்தினங்கள் முதலியவைகளால் அழகுறச்செய்து அளவற்ற வரிசைகளோடு மெதிர்சென்று பணிந்தார்கள் இவ்வித வையவங்களோடு தேவதேவோத்தமராகிய மகோற்கட மூர்த்தியானவர் நகரத்தினுள் ளேபிரவேசிக்க அப்போது அவ்விபவங்களைக் காணவந்த ஸ்திரீகளெல்லாம் மகோர்கட மூர்த்தியினது அற்புதமாகிய ரூபலாவண்ணியங்களை நேத்திரோற்சவமாகக்கண்டு அளவற்ற ஆசைப்பெருக்கென்னுங்கடலில் மூழ்கினார்கள். அவருட்சிலர் பர்வதங்கள் மீதிருக்கும் அரம்பாஸ்திரீகளைப்போல ஆகாயவளவிலோங்கிய உப்பரிகையின்மீதிருந்து தமக்குள்ள புத்திரவாஞ்சையோடு மகோற்கட மூர்த்தியைக் கண்டு தரிசிக்க உடனே அவர்கள் மனமானது கரையுமாறு இரண்டு குசங்களிலும் பால்சுரந்து பாயும்படி நின்றார்கள். சிலர் மலைமுழையிற்றவஞ்செய்கின்ற சந்திரனைப்போலத் தங்கடங்கள் முகங்களைச்சாளரங்களின் வழியாக நிறுத்திக் கொலைத்தொழிலை தமது கண்கள்குளிரும்படித் தரிசித்தார்கள். சிலர் வட்டிலின்கணுள்ள பாலைக் கிள்ளைக் கூட்டுந்தொழிலோடு விரைந்துசென்று மகோற்கட மூர்த்தியினுடைய பேரழகைக்கண்டு அக்கிள்ளையினையே அவர்பால் தூதாகவிடுத்தார்கள் சிலர் தாங்கள் எழுதிக்கொண்டிருந்த சித்திரத்தைவிடுத்துமகோற்கடமூர்த்தியைத் தரிசிக்கச்சென்று மீட்டும்வந்து முன்னெழுதிய வுருவத்தை முடிக்கவெண்ணினவர் அவ்வுருவோடு மகோற்கட மூர்த்தியினுடைய வுருவையும் எழுதிமுடித்து ஆச்சரியப்படுவார்கள். யிவர் ஒருகண்ணுக்கு அஞ்சனந்தீட்டி யோடிவந்து இருபாதியாகியமகோற்கட மூர்த்தியைத் தரிசித்துச்சென்று, மற்றொருகண்ணுக்குமஞ்சனந்தீட்ட அப்படித்தீட்டியும் சுவாமியைத் தரிசித்ததனாலுண்டான ஆனந்தபாஷபத்தால் முன் தீட்டிய அஞ்சனமழிந்துபோக. ஒருகண்மையினர்களேயானார்கள். சிலர் அண்ணலாராகிய மகோற்கடமூர்த்தியைக் கண்டவுடன் தமது ஆசைப்பெருக்கத்தால் அணிகளெல்லாங் கழன்றவிழ, அவைகளை மீட்டு மெடுத்தணியவர் தமது மதிமயக்கத்தால்

நுதலிலணியும்படியான இரத்தின மாலைகளை மூலைகளுக்கும் மூலையிலணியும்படியானமுத்துமாலைகளை நுதல்களுக்குங் கால்களிலணியும்படியான கிண்கிணிகளைக் கரங்களுக்குங் கரங்களிலணியும்படியான வளைகளைக் கால்களுக்கு மணிவார்கள். இவ்வாறு பேதைமைமுதல் பெதும்பையீறுயுள்ள எழுவகைப்பருவங்களுடைய ஸ்திரீகளெல்லாங் கண்கள் கிழிந்தும் வளைகளிழந்துங் குழல்கள் சோர்ந்தும் வார்கள் நெகிழ்ந்தும் மேகலையொழிந்தும் நின்றார்கள். அங்கு வந்திருந்த ஆடவர்களும் இம்மணித்தேரின்மீது வருகின்ற புண்ணியமூர்த்தி முன்னர் திரிபுராதிகளை யெரித்தருளிய சிவபிரானோ? விண்டுவோ? பிரமனோ? அறிகிலேமென்று பேசிக்கொள்ளுவார்கள், இவ்வண்ண மாடவரும் ஸ்திரீகளும் ஆசைக்கடலில் மூழ்கி ஆனந்த மெய்தும்படி எமதையனுகிய மகோற்கடமூர்த்தியொருவரே புத்திரனாக நினைத்தவர்கட்குப்புத்திரனாகவும். பிதாவாக நினைத்தவர்கட்குப் பிதாவாகவும் (தமையனாகவும், தம்பியாகநினைத்தவர் கட்குத் தம்பியாகவும், மருமகனாக நினைத்தவர்கட்கு மருமகனாகவும, மைத்துனனாக நினைத்தவர்கட்கு மைத்துனனாகவும், மாமனாக நினைத்தவர்கட்கு மாமனாகவுந் தரிசனங் கொடுத்ததல்லாமல், மாலாக நினைத்தவர்கட்கு மாலாகவும், பிரமனாக நினைத்தவர்கட்குப் பிரமனாகவும், இந்திரனாக நினைத்தவர்கட்கு இந்திரனாகவும், சிவபிரானாக நினைத்தவர்கட்குச்சிவபிரானாகவு மிருந்து எவ்வெவர் எந்தெந்த தெய்வமாக நினைக்கின்றார்களோ அவ்வவர்கட்கு அந்தந்த தெய்வமாகத் தரிசனந்தந்து யாவருக்கும் பேரானந்தத்தையளித்துக்கொண்டுச் சென்றனர்.

அச்சமயத்தில் நராந்தகனேவிய அவுணவீரர்களில் தந்துரனென்றும் விகண்டனென்றுஞ் சொல்லுகின்ற இரண்டுவீரர்கள் அக்காசிநகரத்துப்புரோகிதனுடைய குமாரர்களைப்போல மாயரூபங்கொண்டு மகோற்கட மூர்த்திக்கெதிரே மிக்க அன்புடன் வருகின்றவர்போல அதிகவேகமாய் வந்தார்கள். அவர்களை சுவாமியும் ஆவலோடு எதிர்கொள்பவர்போல உடனே தேரைவிட்டுக் குதித்து அவர்களருகிற் சென்றனர் அப்போது அப்பாதகர் சுவாமியைத்தழுவ நேர்ந்தனர், சுவாமியு மதற்கிசைந்து தாமுமவர்களைத்தழுவுவார்போல இருவரையும் ஒன்றாக இறுகத்தழுவி அவர்களுடைய பராக்கிரமத்தையும், வலிமையையும், வஞ்சனையையும் மாயையினையும், சரீரத்தினையும் ஒரு மிக்கவலித்து அனிச்சம்பூவைக்கசக்கியெறிவதுபோலத் தமதுகரத்தினால் அவர்களைக் கசக்கியெறிந்து மீட்டுந் தேரின்மீதாரோகணித்தனர், அவ்வற்புதத்தை யாவருங்கண்டு ஆச்சரியமடைந்தார்கள். உடனே யதங்க

னென்றும் விதுலனென்றுஞ் சொல்லுகின்ற இரண்டவுணர்கள் சண்ட
மாருதம்போல வுருக்கொண்டுமேகங்களனைத்துங் கீழ்மேழுபுதிரும்படியா
கமிருந்த ஆரவாரங்களைக்காட்டிக் காசிபட்டணத்திலுள்ள மாடமா
ளிகை கூடகோபுரம் முதலானவைகளெல்லாம் பெயர்த்திடித்து வீதி
களிலே குப்பல் குப்பலாகத்தள்ளி, சுவாமி ஆரோகணித்திருக்கின்ற
இரதத்தையும் பெயர்க்கும்படி மறித்தார்கள் இவ்வாறாகவே அந்நகர
த்திலுள்ளவர் என்செய்யவல்லர். யாவரும் அல்லோல கல்லோலப்ப
ட்டுவருந்தினார்கள் அவ்வஞ்சகத்தை மகோற்கடப் பெருமானறிந்து
தமதரைக்கண்ணிறைந்திருக்கின்ற ஆதிசேடனை யெடுத்து விடுத்தனர்;
அவ்வாதிசேடன் வெளிப்பட்ட மாத்திரத்தில் தனது ஆயிரம் வாய்க
ளையுந்திறந்து சண்டமாருதத்தையெல்லாஞ் சீறி விழுங்கிவிட்டனன்.
அதனால் அப்பாதகர் வலியிழந்து தங்கள் சுயரூபத்தோடு சுவாமிக்
கெதிரில் நின்றார்கள் உடனே மகோற்கடமூர்த்தி இரதத்தினின்றுங்
குதித்து, ஒருகரத்தால் அவர்கள் இரண்டுகையினையும் பிடித்துக்கிறு
கிறென்று சுழற்றி நெற்கதிரை போதுவதுபோல பூமியிலறைந்து அப்
பட்டணத்திற் காப்பாற்போய் விழும்படியாக எறிந்து வீதிகளில் அழி
ந்து கிடைக்கின்ற மாடமாளிகையெல்லாம் பார்த்தருளினர் அவைக
ளனைத்தும் வீதிகளைவிட்டெழும்பி தொப்பிரகாரந் தத்தம வடிவங்க
ளைப்பெற்று முன்னிலு மதிமமாக அழகினை யடைந்திருந்தன. இவை
யனைத்தையுங் காசிராசன் பார்த்து; அச்சோ, நமது அறிவின்மையி
னால் முன்னர் இவரைச்சிறுபிள்ளை யென்று நினைத்தோமே? ஆ, ஆ!
என்னகாரியஞ்செய்தோம் இதுகாறும் இவர் நடாத்திவந்த காரியங்
களைப்பார்த்தால் அற்புதங்களாகவே யிருக்கின்றன இவர்சகலலோக
சரண்ணியராகிய கர்த்தாவேயன்றி வேறல்லவென்று தனக்குள் திடங்
கொண்டுமிருந்தபத்தியோடும் ஆவலோடும் அனந்த முறைவலம்வந்து
அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்காரஞ்செய்து தனது தேரை விரை
விற்செலுத்திக்கொண்டுதோரணமுதலாகிய அலங்காரங்களால் நிறைந்த
தனது அரண்மனைவாய்தலின் முன்னதாகவந்தனன். அப்போது கூட
னென்னும் ஓரவுணன் சுவாமியை உள்ளே நுழையவொட்டாமல்
தடுக்கவேண்டுமென்றெண்ணி அவ்வாய்தலில் ஓரடைக்கல்லாக வடிவ
ங்கொண்டிருந்தனன். அக்காரியத்தை மகோற்கடமூர்த்தியறிந்து சமீ
பத்திலிருக்கின்றகாசிராசனை நோக்கி அரசனே! இவ்விடையூறு நீங்கு
வதற்குப்பிள்ளையாருக்கு ஆயிரந் தெங்கின்கனியுடைக்கவேண்டு மெ
ன்று திருவாய்மலர்ந்தனர், அதை அருகிருந்தவர்கள்கேட்டு உடனே
ஆயிரந் தெங்கின்கனிகளைப் பொதிகளிலேபோட்டுக் கொண்டுவந்து

வைத்தார்கள், அவர்களின்மீது மகோற்கடமூர்த்தி மந்திர நீர்தெளித்து அங்கிருந்த மூழுக்களைப்பார்த்து நீங்களனைவரும் ஒவ்வொருகனியையெடுத்து இவ்வடைக் கல்லின்மேரில் தூளாகும்படி அறையுங்களென்று கட்டளையிட்டனர்.

அக்கட்டளையை அங்கிருந்தோர் யாவருஞ் சிரமேற்கொண்டு ஒவ்வொருவர் ஒவ்வொருகனியையெடுத்து அப்பாறை மீதறைந்தார்கள். பின்னர் அவ்வவையும் அத்திரங்களாகி அப்பாறையைப் பொடிப்பொடியாகச் சிதைத்துவிட்டன. அதற்குமேல் பாறைவடிவங்கொண்டிருந்த அப்பாதகன் தனது சுயரூபத்துடனே ஆக்கிரமித்து நின்று அரசன்முதலிய யாவரும் பயநதோடும்படி யத்தனித்தான். அதனை மகோற்கடமூர்த்தியறிந்து, தமது பாசாயுதத்தை அவன்மீதுவிடுத்து அவனுயிரைமாய்த்தனர், உடனே அவ்வவுணன் ஓர்பர்வதம்போலப் பூமியிலேவிழ அதை யாவருங்கண்டு நடுக்கமுற்றார்கள் அப்போது மகோற்கடமூர்த்தியானவர் தமது புருவங்களைநெளித்துப் பூமியைப் பார்த்தனர். உடனே பூமியானதுபிளந்து அவன்சரீரம் பாதலத்திற் போய்விழும்படி விழுங்கிவிட்டது. அவ்வற்புதத்தை யாவருங்கண்டு ஆனந்தமடைந்தார்கள். அதற்குமேல் மகோற்கடமூர்த்தியானவர் இரதத்தினின்றமிறங்கிப் பூமியிலேநின்றனர் அப்போது சுமங்கிலிய ஸ்திரிகள்வந்து சுவாமிக்கு அரக்குநீர் சுற்றிப்போயினர் அரசனும் சிலையினைச்சுற்றி யெறிந்து கன்றூறாகழித்து கூட்டங்கூட்டமாயிருக்கின்ற சனங்களைவிலக்கித் தனது முன்னங்கையை நீட்டினன், அக்கையின்மீது மகோற்கடமூர்த்தியானவர் தமது திருக்கரத்தினைவைத்துக் கொண்டு திருவடிகளிற் பாதுகைசூடி மெல்லமெல்ல அரமனைக்குள்ளாகச்சென்று சொர்னத்தாற்சமைத்து நவரத்தினங்களாற் பதித்திருக்கின்ற சபாமண்டபத்தையடைந்து நமது அன்பர்களுள்ளம் போன்று சின்னங்களாற சமைக்கப்பட்டிருக்கின்ற ஆதனத்தின்மேலெழுந்தருளினர். அப்போது அங்கிருந்தயாவரும் மிகுந்த பக்தியோடு பணிந்தார்கள், ஸ்திரீகள் நாட்டியஞ்செய்தார்கள், சுவாமி தம்மைப்பணிந்தெழுந்தவர்கட்கெல்லாம் அருள்வழங்கினர். பின்னர் அரசன் அங்கிருந்தவர்களையெல்லாம் விலக்கித் தனதுமனைவியர் மக்கள்முதலான யாவரையு மழைத்துச் சுவாமியைப் பணியும்படிசெய்து பின்னர் தானும் சுவாமியுமாகப் போசனஞ்செய்து முடித்து அர்த்திக்காலம் வந்தவுடன் சுவாமிக்குப்பள்ளியறை சோடித்துவைத்தனன். அதில் மகோற்கடமூர்த்தியெழுந்தருளினர். அரசன் சிலகாவலரைக்கூவி அப்பள்ளியறைவாய்தலைக் காத்திருக்கும்படிசெய்து, தானும் நித்திரைசெய்

தனன். முன்னர் தேவேந்திரனால் விடுத்த இரண்டுதோழியர்களும் சுவாமிக்கு இராமுழுதுந் திருவடிப்பணி செய்திருந்தார்கள்.

அநாதியிற்றானே ஆணவவிருளில் மறைபட்டிருந்த ஆன்மகோடிகளெல்லாங் கன்மங்கட்கிடான சரீரங்களையெடுத்து தாபத்திரயாக்கினிகளாற் றகிக்கப்படுந் துயரங்களினின்றுஞ் சிறிதிளைப்பாறும்படி சர்வசங்காரகாலத்தில் அவைகளை தமதுகரத்தி லொடுக்கிவைத்து மகாசுழுத்தியிலிருக்கும்படி அக்காலமுடிவரையில் தாமும் பிரமானந்தநித்திரைக்கொண்டு மீட்டுமவைகட்குத் தனுகரண புவனபோகங்களாற் கன்மங்களைப்புசிப்பித்து அக்கன்மவொப்பில் பாசபந்தங்களைப் போக்கி முத்தியிற்சேர்க்குநிமித்தந் திரிமூர்த்திகள் சொரூபமாகச்சகளங்கொண்டருளிய விநாயகமூர்த்தியானவர் அவ்வான்மாக்கள் நித்த நித்த மனுபவிக்கின்ற அல்லல்களினின்றுநீங்கிச் சிறிது சுகத்தையனுபவிக்கும்படியாக நித்தியசுழுத்தியையுந் தரவெண்ணித் தாமத்திருப்பள்ளியில் அமைத்திருக்கின்ற மலரமளியின்மீது சிவானந்தநித்திரை செய்தருளினர்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! காசிராஜன் தனதரண்மனையைச்சேருகின்ற வரையில் மகோற்கடமூர்த்தி செய்தருளிய திருவிளையாடல்களிதுவாகும் பின்னர்செய்தருளிய திருவிளையாடல்களையும் பாந்தமாகச்சொல்லுவோங் கேட்பீர்களாக, சர்வான்மாக்களும் நித்தியசுழுத்தியிலிருந்து சிறிதுசுகத்தை யனுபவிக்கும்படி சிவானந்தநித்திரைசெய்தருளிய மகோற்கடமூர்த்தியானவர் பின்னரவ்வான்மாக்களெழுந்து வினைப்போகங்களைப் புசிக்குமாறு வைகறைப்போதில் தழுது திருவிழியை மலர்த்தி உலகமனைத்தும் உய்யும்வகையைநாடி நித்தியநியதிகளை நிறைவேற்றும்படி ஒப்பாருமிக்காருமில்லாத தாமுமநித்தியநியதிகளை நிறைவேற்றித் தம்மைத் தரிசித்தோரெல்லாஞ் சனனவாதையினின்று மொழியும்படியாகப்பின்னர் வீதியிலேவிளையாடல்செய்கின்ற பிள்ளைகளோடு தாமும்விளையாடல்செய்வாராயினர். இவ்வாறு சகலபுவன கர்த்தாவாகிய விநாயகமூர்த்தியானவர் காசிராஜன் கடைத்தேறும்படி அவன் அரண்மனையிலெழுந்தருளியிருக்கிறாரென்று அவ்வரசன் புரோகிதராயிருக்கின்ற தருமதத்தர் கேள்வியுற்று மிகவும் ஆனந்தபரவசத்தராய் அவ்வரமனைக்கு வந்தனர். அவ்வரவைக்காசிராசனறிந்து அவரை எதிர்கொண்டழைத்து வந்து ஓராதனத்திலிருத்திப் பூசைசெய்து இருகரங்களையுங்கூப்பி சுவாமி தேவரீர் இங்ஙனம் எழுந்தருளுவதான பெரும்பாக்கியமடியேற்குக்கிடைத்தது யாதுகாரணத்தினாலோ அதனைத் திருவாய்மலர்ந்த

ருளவேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கு அந்தப்புரோகிதர் சொல்லுவார் அரசனே சகலலோகங்களும் உய்யும்படித் திருவவதாரஞ்செய்தருளிய நமதுகர்த்தாவை இந்நகரத்திலுள்ளோர் யாவரும் சீவன்முத்தியடையும் படியாக நீ யழைத்துவந்தனன்றே நான்கு புருஷார்த்தங்களையும் மேலான கீர்த்தியோடு பெற்ற நின்னைப்போன்ற புனிதர்கள் இவ்வுலகின்கண் யாவரிருக்கின்றார்கள் இத்தன்மைத்தான மேலானபாக்கியத்தை நீயடைந்திருக்கின்றனை யாதலால் நமது மனத்தின்கண் ஓரிச்சையுண்டாயது அஃதுயாதெனில் நமக்கு இரண்டுபுத்திரிகள் உற்பவித்திருக்கின்றனர். அவர்களை உனதுபாக்கியமாய்வந்த மகோற்கடமூர்த்திக்குக் கன்னிகாதானமாக விவாகஞ்செய்விப்பதற்கு ஓரிச்சைகொண்டிருக்கின்றோம், அவ்விச்சையை நீயே நிறைவேற்றிவைக்கவேண்டுமென்று சொல்லினர் அதை அரசன் செவிகுளிரக்கேட்டு நமது ஆசிரியருடைய குமாரற்குச்சரியான சம்பந்தத்திலே விவாகஞ்செய்து முடிக்கவேண்டுவது முறைமையேயாதலால் நேரிட்டகாரியத்தைக் கூட்டிமுடித்துவைப்பதே தகுமென்று துணிந்துசுவாமி அவ்வாறேசெய்து முடிப்போமென்று சொல்லினன் அதைத்தருமதத்தர்கேட்டவுடன் அவ்விடத்தினின்று நீங்கி வீதியில்சிறுபிள்ளைகளோடு விளையாடல்செய்திருக்கின்ற மகோற்கடமூர்த்தியினிடத்தில் வந்து அவரதுகரங்களைப்பிடித்துக்கொண்டு கட்டழகினையுடையர்களாய் நமது தந்தையாகியகாசிபர் எனக்குமிகவும் அருமைச் சினேகர் யாங்களிருவரும் உடலில் இரண்டாகவிருப்பதேயன்றி உயிரில் ஒன்றாகவேயிருப்போம் அப்படிப்பட்டவருடைய தவத்தினாலே அவரிடத்தில் அவதாரஞ்செய்த உம்மை முக்கியமாய்க் காணவேண்டிமிகுந்த ஆவலோடும்வந்தேன்: இனி எனது கிரகம் பவித்திரமாகும்படி இத்தினமேநீர் அவ்விடத்திற்குவந்து எனது புத்திரிகளிருவோரையும் விவாகஞ்செய்துகொடுக்கப்பெற்று எனது குலங்களைக்காத்தருளவேண்டுமென்றுசொல்லி மகோற்கடமூர்த்தியை ஓர்பல்லக்கின்மீதேற்றிச் சகலவைபவங்களோடுந் தமது ஆசிரமத்திற்கு அழைத்துக்கொண்டுபோயினர். அப்போது காமனென்றுங்குரோதனென்றுஞ் சொல்லுகின்ற இரண்டசுரர்கள் கழுதைவடிவமெடுத்துக் கொண்டு ஒன்றோடொன்று சண்டைபோடுவதுபோல நான்குதிசைகளிலும் புழுதிமூடிக்கொள்ளும்படி சுவாமிக்கருகேவந்தார்கள். அதை மகோற்கடமூர்த்தியறிந்து ஓர் திரணமெடுத்து இரண்டாகக்கிள்ளி அந்த இரண்டுகழுதைகளின்மீதும் வீசினர். உடனே அத்துரும்புகள் இரண்டுவேங்கையாகி அவ்விரண்டிராட்சசக்கழுதைகளையும் பிடித்திழுத்



11 மகவாகவக்த மயூரேசர்.



12 தூமகேது.

துக்கொண்டு வனத்திற்குப் போய்விட்டன. இவ்வாறு மாயாகாரியங்களிலேவல்ல அவுணவீரர்களில் அளவற்றபேர் மகோற்கட மூர்த்தியினுடைய வல்லபத்தை அறிந்துகொள்ளாமல் விட்டிற்பூச்சிகள்தாமே விளக்கில் வீழ்ந்து இறக்கின்றாற்போல, நாடோறும் இறந்துவருகின்றதைகேள்வியுற்றிருந்த தருமதத்தர் நேரிலுங்கண்டவராகி, மகோற்கடமூர்த்தியைச் சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி சுவாமீ! இதுகாறுந் தேவரீர் செய்தருளிய திருவிளையாடல்களையெல்லாம் எனது இரண்டு செவிகளுங் குளிரும்படி கேட்டு அளவற்ற மகிழ்ச்சி யடைந்திருந்தேன். இப்போது நேரிற் செய்தருளிய திருவிளையாட்டை யெனது இரண்டு கண்களுங் குளிரக்கண்டு பேரானந்தக் கடலில் மூழ்கினன். ஓ பராபரப் பொருளாகிய கர்த்தனே! மானைக்காட்டி மானைப்பிடிப்பதுபோல், வேதங்களாலு மறியக்கூடாத தேவரீர், அடியேங்களை யெல்லாம் நற்கதியிலே சேர்ப்பிக்கு நிமித்தம் அடியேங்களைப்போல ரூபங்கொண்டு உண்ணல் - உடுத்தல் - உறங்கல் முதலானவைகளையுஞ் செய்து, விளையாடுகின்றீர். தேவரீருடைய பெருமையை யாவராலறியக்கூடும். என்றிவ்வாறு அளவற்றதோத்திரங்களைச்சொல்லி அவ்விடத்தினின்று நீங்கிச சுவாமியை யழைத்துக்கொண்டு சிறிது தூரஞ் சென்றனர். மீட்டுங்குண்டனென்னு மோரவுணன் யானை ரூபங்கொண்டு மும்மதங்களும் ஒழுகிப்பாயும்படி அதிக வேகத்துடனே சகலரும் நடுங்கி ஓடத்தக்கதாகச் சீறிக்கொண்டு தடுக்க வந்த வீரர்களையெல்லாம் அதா அதப்படுத்தி, அடுக்கடுக்கா யிரானின்ற மாடமாளிகைகளை யெல்லா மிடித்தெறிந்து, தனது பார்வைக்கெதிரே கொண்டுவந்த பிடியானைகளெல்லா முடுக்கி, எங்கும் அல்லோல கல்லோலப் படுத்திக்கொண்டு மகோற்கட மூர்த்திக்கருகில் திருப்பாற்கடலைக் கலக்கிய மந்தர கிரியைப்போல ஆர்ப்பரித்துக்கொண்டு வந்தான். அப்போது தருமதத்தர், பயந்து மெய்மறந்து தமக்குச் சுவாமியின் மீதிருக்கின்ற விழைவினாலே, அவரைத் தோளின்மீதேற்றி, அப்பாலோடிப்போக வேண்டுமென்று கருதி, மகோற்கட மூர்த்தியை யெடுக்க நேர்ந்தனர். உடனே மகோற்கட மூர்த்தியானவர் தம்மை எடுக்கநேர்ந்த தருமதத்தருடைய கரங்களை இம்மென்று தள்ளிப் பயந்து ஓடி வருகின்றவர்களை யெல்லாம் அஞ்சாதீர்களென்று கையமர்த்தி நேரேலென்று பல்லக்கினின்று மிறங்கி அச்சமற்று வருகின்ற அந்தயானையின் சமீபத்திற்சென்று அதன் மத்தகத்தின்பேரில் தமது கரங்கொண்டமட்டு மறைந்து, வாலைப்பிடித்துக் கிறுகிறென்று வட்ட

மாகச்சுழற்றி, துதிக்கையைப் பிடித்துப் பறபறவென்று முன்னும்பின்னுமாக விழுத்து, பாதங்களினால், என்புகள் முறியும்படியாக வுதைத்து, சிறிது தூரம்போய் அங்கிருந்து வந்து பிடிகொடாதவனைப் பார்ந்து, குப்புறக் கீழேவிழத்தள்ளி, அதன் மத்தகத்தை மிதித்த வண்ணம் பிடரின் மீதேறியுட்கார்ந்து, யாவருங்கண்டு சந்தோஷிக்கும்படியாக அதனை நான்கு வீதிகளினும் ஓடவிட்டு உபத்திரவப் படுத்தினார். அவ்வுபத்திரவத்தை அவ்வுணாகிய யானைசகிக்கமாட்டாமல், பூமியின்மேல் வீழ்ந்திறந்தது அதற்குமேல் மகோற்கட மூர்த்தியானவர், ரீட்டும பலலகசின் மீதாரோ கணிதது தருமதத்தருடைய ஆசிரமத்தை யடைந்தனர் உடனே தருமதத்தா சுவாமியை ஓராதனத்தி லிருத்தி சந்தனம் புட ம முதலிய திரவியங்களைக்கொண்டு பூசைசெய்துக் கொண்டிருந்தனா. அப்போது முன்னர் இறந்துபோன தூமாட்சனுடைய மனைவியாகிய சிரமை யென்பவள், தனது கணவனுக்குநேர்ந்த சம்பவத்தைக்கேட்டு மனமவருந்தி, ஒரு தீங்குசெறபாத மது பராக்கிரமசாலியாகிய கணவனைக்கொன்ற காதகன் எவனோ? அவனை எவ்வித வுபாயத்தினாலேனும் யாமகொல்லவேண்டுமென்று வஞ்சினங்கொண்டு தருமதத்தருடைய பா ஞ்சினுமள ஒா ஸ்திரீயைபபோல ரூபங்கொண்டு விடங் கலந்திருக்கின்ற துயிலத்தைக் கையிலேந்தி வந்து மகோற்கட மூர்த்தியை மிகுந்த பக்தியோடு பணிந்து தோத்திரஞ் செய்து சுவாமீ! இத்தயிலம் பரிமளம் ஊட்டப்பட்டிருக்கின்றது ஸ்நானஞ் செய்வதற்கு உகாபோக்கிய முானது. இதைத் தேவரீருக்கென்றே பானருமையாய்ச் செய்துகொண்டு வந்தேன. ஆதலாலிதை சுவாமிகளுடைய திருமேனியில் பூசும்படி உத்தரவாகவேண்டுமென்று பிரார்த்திதனள அவ்வஞ்சகத்தை மகோற்கடமூர்த்தியறிந்து ஒப்புக்கொண்டனா. உடனே அப்பாதகி சுவாமியை வேறோராதனத்தி லிருக்கவைத்து அவருடைய முடியிற் றயிலத்தை விடுத்த தேய்த்துத் திருமேனி முழுவதும அத்தயிலத்தையே கடவினள.

கேட்மாகளோ சவுனகாதி முனிவாகளே! முனனொருபோது தேவாகள முதலிய யாவரும பயந்தோடும படியாகத் திருப்பாற் கடலின் கணுதித்த ஆலகாலவிடத்தைச் சிவபிரான அமுதாகப்புசித்தன ரென்றால், அவர் குமாரராகிய மகோற்கட மூர்த்திக்கு இவ்விடத்தயில மென்ன செய்யவல்லது, ஒருத்தா பாறகேடுசெய்ய நினைத்தவர்கட்கு அக்கேடு அவர்களைத்தானே பற்றுமென்று பெரியோாகள சொலலும வாக்கியத்தைப்போல அத்தயிலத்திறகலந்த விடமெல்லாம அச்சிரமையைக் கேதலைகொண்டு இறந்துபோயினள். இவ்வற்புதத்தை அங்கிருந்த

யாவருங்கண்டு ஆனந்தமடைந்தார்கள். இப்பால் மகோற்கட மூர்த்தி யானவர் ஸ்நானஞ் செய்தனர். உடனே தருமதத்தர் வீடுமுழுவதும் அலங்காரஞ் செய்தனர். காசிராசன் தனது சேனாசமுத்திரங்களோ டும் வந்துசேர்ந்தனன். மகோற்கட மூர்த்தி வேறோரிடத்திற் சென்று சகல வாபரணங்களையும் தமது திருமேனியி லணிந்து கொண்டனர். தருமதத்தருடைய புத்திரிகளாகிய சித்தி புத்திகளும் நீராடித் திரும ணக்கோலங் கொண்டனர். பின்னர் தருமதத்தர் என்பவர் மகோற்க டமூர்த்தியையுஞ் சித்திபுத்திகளையுஞ் சமீபாணப்பந்தலி லெழுந்தருளா ச்செய்து முத்திக்களையும் ஓமகுண்டத்தி லெழுப்பி, அக்கினியின் முன் பாக மந்திரநீரினால் தமது புத்திரிகளை மகோற்கட மூர்த்திக்குத் தத் தஞ் செய்தனர் முன்னமே தமக்குத் தேவியர்களாயிருந்த சித்திபுத்தி களை மகோற்கட மூர்த்தியானவர் மீட்டும் உலகமெல்லாங் கடைத்தே றுமாறு தருமதத்தரினின்று மேற்றுக்கொண்டவராய், விவாஹசடங்கு களையுங் கிரமப்படிசெய்து முடித்திருந்தனர்.

என்று சூதமுனிவர் சொல்லி வரும்போது சௌனகாதி முனிவர் கள் அவரைப் பணிந்தெழுந்து சுவாமீ! அச்சித்திபுத்திகள் யார்? தரு மதத்தரென்பவர் யார்? அதனையுந் திருவாய் மலர்ந்தருள வேண்டுமெ ன்று பிரார்த்தித்தனர் அதற்குச் சூதபுராணிக ரிசைந்து ஓ சௌனகா திமுனிவர்களே! சதுர்வேதங்களாலும் இன்னும் அறிதற்கரிய வக்ரது ண்டமூர்த்தியானவர் காசிபமுனிவருக்குப் புத்திரராக வரப்போகின்ற செய்தியை முன்னமே பிரமதேவனறிந்து அக்காலத்திலும் அவரைத் தரிசிக்க வேண்டுமென்னும் விழைவால் தருமதத்தராக வந்து பிறந்தி ருந்தனர் பின்னர் அவ்வக்ரதுண்ட மூர்த்திக்கு ஞானசத்தியுங் கிரியா சத்தியுமாகி எக்காலத்தும் பிரிதலில்லாத சித்திபுத்திகளும் முன்போ ல தேவதங்களை சுவாமி விவாகஞ் செய்துகொள்ளும் நிமித்தம் பிரமதே வனாகிய அத்தருமதத்தரிடத்தில் புத்திரிகளாகி, முன்வகித்திருந்த திருநாமத்தினையே வகித்து வளர்ந்து கொண்டிருந்தனர். அதனால் மகோற்கட மூர்த்தி அவர்களை யாவரும் உய்யும்படியாக விவாகஞ்செ ய்துகொண்டனர்.

இப்பால் விவாககாரியங்களை யெல்லாம் நிறைவேற்றி யருளிய மகோற்கட மூர்த்தியைக் காசிராசன் பணிந்தெழுந்து சுவாமீ! தேவ ரீர் அடியேனுடைய அரண்மனைக் கெழுந்தருள வேண்டுமென்று பிரா ர்த்தித்தனன். அதற்குப் பராபர வஸ்துவாகிய மகோற்கட மூர்த்தி யிசைந்து தமது தேவிமார்களோடு சிங்கவாகனத்தி லாரோகணித்த

னர் காசிராசன் தனது படைகளோடு குதிரைமீதேறினன் அந்நகரத்திலுள்ளோர் யாவரும் பற்பல வரிசைகளோடு நான்கு மருங்கிலுஞ் சூழ்ந்தனர். மங்கள வாத்தியங்கள் தாம்தாமென முழங்கின. முனிபுங்கவர்கள் யாவரும் வேதாகமங்களாற்றுதி செய்தார்கள். இவ்விதவைபவங்களோடு எமதையனாகிய மகோற்கட மூர்த்தி தருமதசதருடைய மனையினின்றும் வெளிக்கொண்டு காசிராசனுடைய அரண்மனையைச் சேர்ந்து, சித்திபுத்திகளை அந்தப்புரத்திலிருத்தித் தாம் அடியவருள்ளம்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற சபையில் இரத்தினமயமாயோங்கிய சிம்மாதனத்தின்மீது யாவருந் தரிசிக்கும்படியாக வெழுந்தருளியிருந்தனர். அப்போது காசிராசன், ஒரு பக்கத்திலிருந்து அங்குவந்திருந்த அமைச்சர் முதலிய தனது துணைவர்களைப் பார்த்து அன்பர்களே! நமது குமாரனுக்கு விவாகஞ் செய்விக்க வேண்டுமென்னுங் கருத்தை ஆசிரியராகிய காசிப முனிவருக்கு யானறிவிக்க அவர் இப்புண்ணிய மூர்த்தியை யனுப்பினார். யான் செய்த தவத்தின் பெருமையை என்னென்று சொல்லுவேன், அரிபிரமேந்திராதியராலுங் காண்டற்கரிய கருணாநிதியே! இக்காசியிலுள்ளோர் யாவரும் தரிசித்துப் பரிசுத்தராகும்படி வந்திருக்கின்றனரென்று சொல்லினன். அதனைக் கல்வியினுங் கேள்வியினுஞ் சிறந்து, ஆலோசனையினும் புத்தியினும் மிகுதிருக்கின்ற ஓர் மந்திரி அவ்வரசனைப் பார்த்து ஆண்டவனே! துன்மார்க்கத்திற் சிறந்த தேவாந்தகனுக்கும் நராந்தகனுக்கும் நமது தீவினைகளைப் போக்கத்தக்க இக்கர்த்தாவினாற் பகையாயினும். அவர்கள் எவ்விதத்திலும் படையெடுத்து இங்கேவருவார்கள். அப்படி அவர்கள் வந்து சுவாமிகளுடைய திருக்கரத்தினால் முத்தியடைந்த பின்பு நமது விவாகத்தை யத்தனித்தால் ஓர் இடையூறில்லாமல் நிறைவேறும். அதற்குமுன் யத்தனஞ் செய்தோமாயின் இடையிடையில் அப்பாதகர்களுடைய சல்லியங்கள் நேரிட்டுக் கொண்டேயிருக்கும். ஆதலால் ஒருபட்சம், அல்லது ஒரு மாதமளவும், யாதொன்றுஞ் செய்யாமல் சும்மாயிருக்க வேண்டுமென்று சொன்னான், அதற்கு அரசன் ஒப்புக்கொண்டனன். சுவாமியும் புன்னகை செய்து அவ்விரண்டவுணர்களும் இங்ஙனம் விரைந்து வந்து எமது கையினால் மடிவரல்லாமல் எங்ஙனம் போக வல்லவர்களென்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாக்கியத்தை அமைச்சர் முதலிய யாவரும் செவி குளிரக்கேட்டு ஆனந்த பரவசத்தராகி, ஒவ்வொருவராய் சுவாமியைப் பணிந்து விடைபெற்றுத் தத்த மிருக்கையை யடைந்தார்கள். பின்னர் அஸ்தமனகாலம் வந்துவிட்டது. உடனே மகோற்கடமூர்த்தியானவர் உலகத்தாரைப்போலத் தாமும் சந்தியா வந்

தனம் முதலியவைகளை நிறைவேற்றிப் போசனஞ்செய்து தமதுதேவியர்களோடு சப்பிரகூடமஞ்சத்தின்மீது பள்ளிகொண்டருளினர். அவ்விரவில் விதாரணன் சுவாலாமுகன் வியாக்கிரமுகன் என்று சொல்லுகின்ற மூன்றசுரர்கள் அப்பட்டணத்தை யழிக்கும்படி வந்து விதாரணன் பெருங்காற்றாகவும் சுவாலாமுகன் நெருப்பாகவுங் கலந்து அப்பட்டணத்துக் கோபுரவாய் தலைப்பிளந்து உள்ளே நுழைந்தார்கள். வியாக்கிரமுகன் அவ்வாய்களில் ஓடி வருகின்றவர்களை யெல்லாங்கொல்லும்படியாகத் தனது மேலுதடு ஆகாயத்தையும் கீழுதடு பூமியையும் பொருந்தும்படி வாயைத் திறந்துகொண் டிருந்தனன். இவ்வாறு இம்மூவருங் கூடிசெய்துவந்த கொடுமையினாலே மாட மாளிகைகளெல்லாம் எரிந்தன பஞ்சலோகங் களெல்லாம் பொடிந்து உருகிப்போயின. இரதங்களெல்லாம பொரிந்தன. கற்களனைத்தும் பொடிப்பொடியாயின. ஆகாயமுழுவதும் புகைப்படலங்கள் மூடிக்கொண்டன. விருட்சங்களனைத்துங் கரிந்தன அந்நகரத்திலுள்ளோர் யாவரும் நித்திரையினின்று திடுக்கிட்டெழுந்து மனங்கலங்கிப் பல்திசைகளிலும் ஓடியொளிக்க இடந்தேடினார்கள். சிலர் எவ்விடங்களிலுந் தீப்பட்டெரிவதினாலே தங்க இடமில்லாமல் தத்தளித்தார்கள். சிலர் யானைகளையவிழ்த்து விட்டார்கள், சிலர் பசுக்களை யவிழ்த்து விட்டார்கள் சிலர் கன்றுகளை யவிழ்த்துத் துரத்தினார்கள். சிலர் விருத்தர்களையும் சிறுபிள்ளைகளையுங் குழந்தைகளையும ஏந்திக்கொண்டு இவர்களை எங்கேவைத்துக் காப்பாற்றுவோமென்று ஏங்கினார்கள் சிலர் தங்கவிடமில்லாமல் நெருப்புக் கிரையானார்கள். ஒருவாறு தப்பியோடிப் போகின்றவர்களும் வியாக்கிரமுகனுடைய வயிற்றினுக்கிரையானார்கள். இவ்வாறு அம்மூன்று பாதகர்களால் காசிநகரமுழுவதும். அல்லோலகல்லோலப்பட்டதன்றி நெருப்புச் சுவாலையினா லுண்டாகின்ற சத்தமும் யானை குதிரை முதலானவைகளா லுண்டாகின்ற சத்தமும் சனங்களுடைய கூக்குரல்களினாலுண்டாகின்ற சத்தமும், ஒன்றாகக் கலத்தலினால் வெகுதூரத்திலிருக்கின்றோர்களுங் கேட்டவுடன் நடுங்கிப் பயந்து போயினர். இச்சம்பவத்தை யறிந்த சில தூதர்கள் விரைந்தோடி அரசனையெழுப்பி யறிவித்தார்கள். அவ்வரசன் அதைக் கேட்டவுடன் பயந்து மகோற்கட மூர்த்தியிடத்திற் சென்றெழுப்பியறிவித்தனன் நனவிற்சுழுத்தியோடிருக்கின்ற மகோற்கடமூர்த்தியானவர் ஒன்றுமறியாதவர்போல விரைந்தெழுந்து வெளிக்கொண்டு பயந் திருக்கின்ற அரசனைத் தேற்றிக் கமண்டலத்திலிருந்த சலத்தைத் தமது திருக்கரத்திற்கொண்டுவீசி வடவாமுகாக்கினியையுஞ் சண்டமாருதத்தை

யுந் தொலைத்து அந்தந்தரூபத்தைக் கொண்டுவந்த இரண்டவுணர்களையுங் கொன்று அப்பட்டணத்தி னுடைய வாய்தலின் வழியையடைந்து வாயைத் திறந்துகொண் டிருக்கின்ற வியாக்கிரமுகனிடத்திற்சென்று தாமும் ஓர் பேருருவைக்கொண்டு அப்பாதகன் பூமியில் வைத்திருக்கின்ற கீழுதட்டின்மீது தமது இரண்டு திருவடிகளை வைத்து மெறித்து ஆகாயத்தை யளாவிய மேலுதட்டைத் தமது திருக்கரங்களில் பற்றிக்கிழித்து ஓர் பர்வதம்போலப் பூமியிலே வீழும்படிக் கொன்று இறந்துபோன வுயிர்களையும் அந்நகரத்தையுந் தமது கிருபாநோக்கத்தாற் பார்த்து முன்னிருந்தபடியே யாவையு முண்டாக்கி அரண்மனையைச் சேர்ந்தனர். அவ்வற்புதத் திருவிளையாட்டினை அரசன் பார்த்து இருவிழிகளினும் ஆனந்த பாஷ்பஞ் சொரியும்படியாக சுவாமியெதிரில்வந்து பலமுறைப் பணிந்தெழுந்து, வேதாகமங்களாலே அளவற்ற தோத்திரங்களைச்செய்து. சுவாமி, இத்தினம் தேவரீரிடத்தினில் சிருஷ்டி, திதி, சங்காரமென்கிற முத்தொழில்களையுங் கண்டேன் அடியேனுடைய தீவினைகளெல்லாம விட்டேன். பிரமவிண்டுக்களாலும் அநுபவித்தற்கரிய சுகத்தை யானனுபவித்தேன். என்று பலமுறை துதிசெய்து ஆனந்த பரவசனாகி யிருந்தனன்.

இப்பால் அவ்வவுணபாதகர்களுடைய உள்ளக்கறுப்பும் உடற்கறுப்பும் ஒழிந்துபோனமையை மகோற்கடமூர்த்தி யஞ்சுவிக்கக்கறுத்தவான் கறுப்பானது கண்டு ஒழிந்ததுபோல இருளொழிந்து உடனே அக்காசிப்பட்டணத்தினுடைய நூதனவலங்காரத்தைத் தரிசிக்கவருவான்போலச் சூரியன் கீழ்த்திசைக்கடலி னுதயமாயினன். அதற்குமேல் காசிராசன் காலைக்கடன்களை நிறைவேற்றி அந்தப்புரத்தி லிருக்கின்ற தனது பட்டமா தேவியையடைந்து, பெண்ணே! நாமெல்லா முய்யும்படி மகோற்கட னென்னுந் திருநாமத்தோடு அவதரித்தருளிய சுவாமிகள் என்னோடு காசிபருடைய ஆச்சிரமத்தைவிட்டு வருகின்ற மார்க்கத்திலே தூமாட்சனென்பவனைச் சங்கரித்தருளினர். பின்னர் தம்மையெதிர்த்துவந்த அவன் புத்திரர்களிருவோரையுந் தமது சுவாசத்தினால் ஓர் நிமைப்போதில் சங்கரித்தருளினர். அதற்குமேல் நராந்தகனுடைய ஏவலினால்வந்த ஐந்நூறு அவுணவீரர்களைத்தமது ஓர் கர்ச்சனையினால் நாசமாக்கினர். இப்பட்டணத்திற்கு வந்தபின்பு மாயையினால் வடிவங்கொண்டுவந்த அளவற்ற அவுணவீரர்களை மாய்த்தனர். இவைகளையெல்லாம் யாவருஞ்சொல்ல நீ கேட்டிருக்கின்றனையல்லவா இன்னுமித் தன்மைத்தான உபத்திரவங்கள் எத்தனைவரினும் ஓர்நிமைப்போதில் அவரே நீக்கவல்லவர். நாம்முற்பிறப்பில்யாது தவஞ்செய்தி

ருக்கின்றோமோ அறியோம்! வேதங்களாலும் காணற்கரிய கர்த்தாவே நம்மிடத்தில் வந்திருக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றிருக்கின்றோம். ஆதலால் இந்த மேலான மூர்த்திக்கு யாம் சதாகாலப்பணி செய்துகொண்டிருப்போமாயின், தருமம் முதலிய நான்கு பொருள்களையும் எளிதிற் பெறலாமென்று சொல்லினன். அவையனைத்தையும் இராசபத்தினிகேட்டு ஆனந்தபரவசத்தாளாகி சுவாமிக்குத் தனதுகையினால் அன்பே முழுவதும் பரிமளிக்கும்படியாக விருந்து சமைத்தனள். அதை அரசன்கண்டு தனது கையினால் சுவாமிக்குத் தயிலமாட்டி, வாசனையூட்டி, யிருக்கின்ற திவ்விய தீர்த்தங்களினால் ஸ்நானஞ்செய்வித்து, திருவொற்றுடைசாத்தி, தனமாகச் செய்யப்பட்டிருந்த குழை அங்கதம் பொன்முடி கடகம் முதலிய இரத்தினாபரணங்களையும் பீதாம்பரமுதலிய வஸ்திரங்களையும் அன்போடு தரித்துத் துதி செய்தனன். அதற்குமேல் இராஜபத்தினிவந்து தீர்க்க தெண்டஞ்செய்து சுவாமி! தேவரீர் அமுதுசெய்யத் திருவுளங்கொண்டருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்கு மகோற்கடமூர்த்தி யிசைந்து அரசனுந்தாமும் போசனஞ்செய்கின்ற விடத்திற்சென்று வெவ்வேறு ஆசனங்களிலிருந்தனர், உடனே இராசபத்தினியானவள் இருவருக்கும் பரிகலமமைத்து அதில் நால்வகை யுண்டிகளையும் பரிமாறினள் பின்னரவ்விருவரும் சந்தோஷத்தோடமுது செய்துகொண்டிருக்கையில் அரசன் சுவாமியையும், அவர் பரிகலத்தையும் பார்த்தனன். அப்போது அவர்மீது தானணிந்த ஆபரணங்களன்றிப் பின்னுஞ் சிலமேலான ஆபரணங்கள் பிரகாசிக்கவும் பரிகலத்தின் தனதுபத்தினியிட்ட பதார்த்தங்களன்றி இன்னுஞ் சில இனிமையான பதார்த்தங்கள் விளங்கியிருக்கவுங்கண்டு ஈதென்ன ஆச்சரியமென்று திகைத்து, ஞானோலென்று சுவாமியைத்தொழுது கர்த்தனே நானணிந்த ஆபரணங்களும், எனது மனைவிபடைத்த பதார்த்தங்களும் தவிர இன்னுஞ்சிலபதார்த்தங்களும் ஆபரணங்களும் விளங்கிப் பிரகாசிக்கின்றனவே ஈதென்ன அற்புதம்? இக்காரியத்தை அடியேற்கு இன்னதெனத் தெரிவித்தருளவேண்டுமென்றுப் பிரார்த்தித்தான். அதற்கு மகோற்கடமூர்த்தி புன்னகைசெய்து அரசனே, நமது திருமேனியில் திவ்வியமான ஆபரணங்கள் பிரகாசிப்பதும், நமது பரிகலத்தில் வேறு வேறான பதார்த்தங்கள் விளங்கியிருப்பதும் உனக்கு விவரமாகச் சொல்லுகின்றோம் கேள். நமதன்பர்களிலொருவன தண்டகவனத்திலே வசித்திருக்கின்றனன். அவன்பெயர் புருசுண்டியென்பார்கள். அவனோ தேவர்களும் வழிபடத்தக்க யோக்கியதையையுடையவன். அப்படிப்பட்டவனே

இத்தினம் தனக் கிணையான விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்திவிரத மாதலாலே, நம்மை மிகுந்தபத்தியோடு பூசனைசெய்து இவ்வாபரணங் களையும் உணவுகளையும் நமக்கு அற்பிதஞ்செய்தனன். அவன் பத்தி பூர்வமாக அற்பிதஞ்செய்த யாவும் இங்கேநமக்கு இஷ்டமாயின. அவ னுடைய பெருமைகள் யாவராலுஞ்சொல்லி முடிவதன்று. நீகண்ட அதிசயத்திற்கு இதுதான் காரணமென்று திருவாய் மலர்ந்தனர். அ வை யனைத்தையும் அரசன் செவிகுளிரக்கேட்டு ஆனந்தபரவசனாகி உட னே வாய்பூசிவந்து, கர்த்தனே! அத்தன்மைத்தான மேலான முனிவ ரை அடியேன் அவசியம் பணியவேண்டும். அவரை இங்ஙன மழைத் து அவருடைய திருவடிகட்குச் செய்யத்தக்க பணிவிடைகளை அடி யேன் செய்தல்வேண்டும். ஆதலால் சுவாமிகள் அடியேற் குண்டாகிய இச்சையை நிறைவேற்றிவைப்பது பெருங்கடமையென்று பணிந்து விண்ணப்பஞ்செய்தான். அதற்கு மகோற்கடமூர்த்தி திருவாயுற்று, அரசனே! அவ்வன்பன் இங்கேவர வேண்டுமெனில். யாம் சொல் வதைக்கேள், நீ இப்போது தண்டக வனத்திற்சென்று தவசிரேஷ்ட னை அவனுடைய மேலான பாதங்களைப்பணிந்து துதிசெய்து இருக ரங்களையுஞ் சிரமேற்கூப்பி நின்று உனது அபீஷ்டங்களை அவனிடத் தில் விண்ணப்பஞ்செய்து யாம் விவாக நிமித்தம் உனது கிரகத்திலவந் திருப்பதையும் உன்னைவிட்டு யாம் அழைத்துவரச் சொன்னதையும் விவரமாகச்சொல்லி, அழைத்துவரக் கடவையென்று திருவாய் மலர்ந் தருளினர். அதைக் கேட்டவுடன் அரசன் அளவற்ற மகிழ்வையடை ந்து சுவாமி சட்டளையிட்ட வண்ணம் அப்போதே பணிந்து விடை பெற்று இரதத்தின்மீதேறி வாயுவேகத்தினு முந்தி அளவற்ற மலைக ளையுங் காடுகளையுங்கடந்து தண்டகவனத்தைச்சேர்ந்து திரிமூர்த்திக ளுடைய உலகங்கட்கிணையான ஆச்சிரமத்தை யடைந்து தவசிரேஷ்ட ராகிய புருசுண்டி முனிவரைக்கண்டு அவருடையபாத பதுமங்களைப் பலமுறை பணிந்தெழுந்து இருகரங்களையும் சிரமேற் கூப்பிநின்று வேதாகமங்களினால் அளவற்ற தோத்திரங்கள்செய்து நின்றனன். அவனை அமமுனிபுங்கவர்பார்த்து அரசனே! நீயார்? இங்குவந்த காரியமென்ன? சொல்லென்று கேட்டனர். அதற்கரசன் ஆனந்தமா கி சுவாமீ? அடியேன் காசிதேசத்தரசன். அடியேனுடைய கிரகத்தில் விநாயகமூர்த்தி யெழுந்தருளி யிருக்கின்றனர். நேற்றையதினம் சுவா மியும் யானும்போசனஞ் செய்துகொண்டிருக்கும்போது தேவரீருடை ய பூசாமகத்துவம் சுவாமியினிடத்தில் விளங்கியது. அதன்மீது சுவாமி கள் தேவரீருடைய மகிமையினைத் திருவாய்மலர்ந்து தேவரீரைத் தம்

மிடத்திற்கு அழைத்து வரும்படி அடியேற்குக் கட்டளையிட்டனுப்பினர். அதுகாரணமாக அடியேன் இவ்விடத்திற்கு வந்தேன். ஆதலால் தேவரீர் அடியேன்மீது கிருபை செய்து எழுந்தருளுமென்று பிரார்த்தித்தனன். அவையனைத்தையும் புருசிண்டி கேட்டு அரசனே! விநாயகமூர்த்தி யென்பவர் யார்? அதனை விவரமாகச் சொல்லுகவென்று கேட்டனர். அதற்கரசன் சொல்லுவான்: சுவாமி, விநாயகமூர்த்தி காசிப முனிவருக்குப் புத்திரராக அவதரித்திருக்கின்றனர். அவர் அடியேனுடைய புத்திரன் விவாகநிமித்தம் இப்போது எனதுகிரகத்திலெழுந்தருளியிருக்கின்றன ரென்றனன். அதற்குமேல் புருசுண்டி முனிவரவனைப்பார்த்து அரசனே! விநாயகமூர்த்தி தேவர்கள் முதலியோராலும் தொழத்தக்க காசிப முனிவருக்குப் புத்திரராக அவதரித்திருப்பது மெய்யேயானால், அவருடையமரபு எவ்வகைப் பட்டதென்று கேட்டனர். அதற்கரசன் அவரைப் பணிந்தெழுந்து சுவாமீ! வேதங்களாலும் விண்டு பிரமாதிகளாலும் மனமவாக்கு காயங்களாலும் ஏனைய அளவைகளினாலும் அவ்விநாயக மூர்த்தியினுடைய இயற்கைகாண்பதரிது. எங்கும் நிறைபொருளா யிருக்கின்ற அவருடைய இயற்கை அவ்வாறு இருக்கினும், அவருடைய கிருபையினால் அடியேன் அறிந்தமட்டுஞ் சொல்லுகிறேன். பிராகிருதி ரகிதராயும் பரிபூரணராயும், ஞானம் பத்திவைராக்கிய சமபன்னராயும், நிரந்தர சந்தோஷத்தையடைந்தவராயும், நித்தியதிருத்தி யடைந்தவராயும், சச்சிதானந்த பிரமசொரூபராயும், தேசகாலவஸ்து பரிச்சேதரகிதராயும், சுசாதிவிசாதி சுகதபேத ரகிதராயும், சட்பாவ விகாரரகிதராயும், சுத்த புத்த முத்த நித்திய பரமானந்த சொரூபராயும், சர்வபரிபூரண கருணாசாகரராயும் நிர்வியாச்சிய நிர்லேப நிர்ச்சங்க நிர்வாண நிஷ்காம நிரூப நிரந்தர நிர்வயவ நிர்விசேஷானந்த நிருபத்திரவ நிபந்த நிர்விகற்ப நிர்க்குண நிரஞ்சன நிச்சல நிஷ்ப்ரபஞ்ச சொரூபராயும், அச்சேத்திய அக்கிலேத்திய அசோஷிய அதாகிய அசல அவர்க்கிய அநாமய அக்ஷர அப்பிரமேய அசிந்திய அந்நியமாகிய அக்குரோத அலாக்கிய அதிரிசிய அநாசிரய அனாதார அனந்த அகண்டாகார ஸ்வரூபராயும், விசுவதைசத பிராஞ்ஞைக் கதீதமான பிரத்தியக்கு சைதன்னியராயும், விராட்டிரணியகர்ப்ப வவ்வியாகிருதங்களை யறிகின்ற சர்வசாட்சியராகியும், மூலப்பிரகிருதியகண்டாகார விருத்தியானந்த விருத்தியதீதராயும், கிருதகிருத்தியராயு மிராநின்ற விநாயகக் கடவுள் தமது சுயேச்சையால் துஷ்டசன நிக்கிரக சிஷ்டசன பரிபாலனஞ் செய்யு

பொருட்டு அதிதியினுடைய புத்திராக அவதரித்திருக்கின்றனரென்று மகத்துகள் யாவருஞ் சொல்லக் கேட்டிருக்கின்றேன். அஃதன்றி அடியேனுடைய கண்களினால் அவர் அளவற்ற அவுணவீரர்களைச் சங்கரித்து, அவர்கள் செய்த இடையூறுகளையெல்லா மொழித்து, சகல ஆன்மாக்களையும் பாதுகாக்கக் கண்டிருக்கின்றேன் அந்நிட்களமூர்த்தியினுடைய பெருமையை யான்கண்டவளவிற் சொன்னேனன்றி சரியானபடி யாவராற் சொல்லக்கூடுமென்றனன். இவையனைத்தையும் புருசுண்டிமுனிவர் ஆனந்தபரவசராய்க் கேட்டு, அரசனே! நீ சொன்னதனைத்தும் உண்மையே. உனது கண்களைச் சிறிதுநேரம் மூடிக்கொண்டிருந்து பின்னர் விழித்திடுகவென்று கூறினர். அவ்வாறே அரசன் கண்ணைமூடிக்கொண்டனன். அப்போது புருசுண்டி முனிவர் அவ்வரசன் முடியின்மீது தமது கரத்தை வைத்து வாங்கினர். பின்பு அரசன் கண்களைத் திறந்தனன். திறந்தபோது அவ்வனத்தையும் புருசுண்டி முனிவரையுங் காணாதவனாகிக், காசிபட்டணத்தையும் அரண்மனையையுங்கண்டு, அதில் மகோற்கட மூர்த்தி எழுந்தருளியிருக்கப்பார்த்து அளவற்ற ஆச்சரியமும் ஆனந்த பரவசமுங் கொண்டு, மகோற்கட மூர்த்தியினுடைய திருவடிகளைப் பணிந்தெழுந்து தான் தண்டக வனத்திற்குப் போனது முதல் நடந்த சங்கதிகளையும் விவரமாகச் சொல்லினன். அவையனைத்தையும் மகோற்கட மூர்த்தி கேட்டு புன்னகைசெய்து, அரசனே! நீ மீளவும் அவனிடத்திற்சென்று கஜானனமூர்த்தி உன்னையழைத்து வரச்சொன்னாரென்று சொல்லுவையாயின் உடனே வருகுவனென்று திருவாய்மலர்ந்தனர். கருணைக்கடலாகிய மகோற்கட மூர்த்தி இவ்வாறு திருவாய் மலர்ந்தருளலும் அரசனதற்கிசைந்து விட்டுப்பணிந்தெழ, அவ்வாறெழுந்தவன் சுவாமியையுங் காசிநகரத்தையுங் காணாது முன்போலத் தண்டக வனத்தையும் புருசுண்டி முனிவரையுங் கண்டு ஆச்சரியமாகி அவருடைய திருவடிகளிற் பணிந்தெழுந்தனன். அப்போது புருசுண்டி முனிவர் சந்தோஷமுற்று, அரசனே! நீ மீட்டும் வந்தகாரியம் யாதென்று வினாவினர். அதற்கு அரசன் சொல்லுவான்: சுவாமீ! அதிதியிற்சிறந்த தேவரீரைக் கஜானனர் அழைத்துவரச் சொன்னாரென்று சொல்லினன். அவ்வசனத்தைக்கேட்ட மாத்திரத்தில், புருசுண்டிமுனிவர் பரவசராகி உடல் முழுவதும் புரோமாஞ்சிதம் பூத்து விழிகளில் ஆனந்த பாஷ்பஞ்சொரிந்து பூமியிலே வீழ்ந்து புரண்டு மெய்ம்மறந்து நெஞ்சமுருகிப் பலமுறை விம்மி விம்மி ஓவென்றலறிப் பத்தியென்னுங் கடலின் மூழ்கிக் கரைகாண மாட்டாதராகி அரசனையுந் தம்மோடழைத்

தூக்கொண்டு மத்தியிலொருபாதமும் அவிமுத்தத்திலொருபாதமுமாக வைத்துச் சென்று அவ்வரசனுடைய அரண்மனையை யடைந்தனர். பின்னர் பல அதிசயங்களை உடனிருந்தறிந்த அரசனானவன், அம்முனிவரைக் கொலுச்சபையிலழைத்து வந்து நவரத்தின மயமாகிய சிம்மாதனத்திலிருக்கவைத்து, முறைமைப்படி பாதபூசை முதலியவைகளைச் செய்து, அநேக இரத்தினங்களையும் விசித்திரமான பட்டுகளையும், அளவற்ற ஆபரணங்களையும், அழகிக்கும்படியான பல விம்பிதப் பொருள்களையும், அவர் திருவடிகளில் வைத்துப் பணிந்தனன். அதற்குப் புருசுண்டி முனிவர் சந்தோஷங் கொண்டு அரசனே! கஜானனமூர்த்தி எங்ஙன மிருக்கின்றன ரென்று கேட்டனர், உடனே வீதியில் சிறுபிள்ளைகளோடும் ஆடல் செய்திருந்த மகோற்கட மூர்த்தியானவர், கன்றைத் தேடி வருகின்ற பறவைப்போல எதிரே வந்தனர். வேதங்களாலும் இவ்வுருவன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்று காட்டுதற்கரிய மகோற்கட மூர்த்தியை அரசன் தனது கையினாற்சுட்டி, இவர்தான் கஜானனமூர்த்தியென்று காட்டினான் அவ்வாறு காட்டலும், புருசுண்டி முனிவர் சுவாமியைப்பார்த்து முன்னர் தாம் தரிசித்திருக்கின்ற திருமேனியைக்காணாது இரண்டு கரங்களும் மனித முகமும் படைத்த வினைய அவயவங்களோடு மேவியிருந்ததைக்கண்டு இவர்தானோ கஜானனமூர்த்தியென்று மனதிற் சந்தேகங் கொண்டனர். அச்சந்தேகத்தை மகோற்கட மூர்த்தியறிந்து, உடனே முன்னர் அவருக்கு எவ்வாறு தரிசனந் தந்தருளினரோ அவ்வாறே தரிசனந்தருளினர். பின்னர் புருசுண்டி முனிவர் நினைத்து தமது அகத்தில் எவ்வாறு எக்காலும் தரிசித்துக் கொண்டிருக்கின்றாரோ அவ்வாறே புறத்திலும் பத்துகரங்கள், அக்கரங்கடோறும் ஆயுதங்கள், சந்திரனைத் தரித்தசடாமகுடம், யானைவதனம், ஒற்றைக்கோடு, சிலம்பணிந்த திருவடிகள். இருமருங்கினுஞ் சித்திபுத்திகள், சிங்கவாகனம் முதலியனவுங்கண்டு அதிசயமாகி முன்போலவே ஆனந்தபரவசமுற்று மெய்ம்மறந்து பூமியிலே விழுந்து புரண்டெழுந்து ஆனந்தக்கூத்தாடி பலமுறை வலம்வந்து வேதாகமங்களினால் துதிசெய்து கண்களிலே இடைவிடாமல் ஆனந்த வெள்ளத்தைப் பெருக்கி மனமானது அனலிறபட்ட மெழுகுபோல் உருகும்படிநின்று ஓவென்றலறிக் கர்த்தனே! ஓ ஆண்டவனே! ஓ கிருபாநிதியே பிரமானந்த சொருபனே! தேவரீரையாரோ வென்று நினைத்த அடியேனுடைய குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தினர். அதற்குக் கஜானனமூர்த்தி கிருபையுற்று, அன்பனே! எவரெவர் எங்கெங்கு

வடிவமாக நம்மைத் தியானிக்கின்றார்களோ, அவரவர்கட்கு அந்தந்த வடிவமாகத் தரிசனந்தந்தருளுகின்ற பெருங்கருணையினையுடைய யாம் துட்டரைச் சங்கரித்தற் பொருட்டும், சிட்டரைப்பாதுகாத்தற் பொருட்டும்; இப்போது அதிதிக்குப் புத்திரராக அவதரித்து மகோற்கடரென்னுந் திருநாமத்தை வகித்து இங்ஙன மிருக்கின்றோம். நீ நம்மைச் சந்தேகங் கொண்டதினாலே மூவுலகத்தாருங் காணுதற்கரிய திருவுருவத்தை முன்போல உன்னெதிரிற் காட்டினோம். ஓ பத்தியிற் சிறந்தவனே! உனக்குவேண்டிய வரங்களைக்கேள் தருகின்றோ மென்று திருவாய் மலர்ந்தனர் உடனே புருசுண்டிமுனிவர் பணிந்தெழுந்து, இருகரங்களையுஞ் சிரமேற்கூப்பி! ஓ பரம்பொருளே! தேவரீரை யான் எக்காலத்தில் எந்த உருவாய்த் தியானிக்கின்றேனோ அக்காலத்தில் அந்த உருவாய அடியேற்குத் தரிசனம் கொடுத்தருளி எப்போதும் தேவரீருடைய திருவடிகளிற் சலியாத பத்தியுங்கொடுத்து அடியேன் தெரியாமையினாற் பிழைசெய்தேனாயினும் அதனைப் பொறுத்தருளல் வேண்டும். அன்றியும் அடியார்கள் விரும்பிய காரியங்களை யெல்லாம் விக்கினமில்லாமல் நிறைக்கின்றபடியால தேவரீர் ஆசாபூசிதரென்னுமோர் திருநாமதனையுந் தரித்தருளல் வேண்டும். இவையே யான் தேவரீரிடத்தில் பெற்றுக்கொள்ள விரும்பிய வரங்களென்று பிரார்த்தித்தருளினர். அசமதக் கஜானனமூர்த்தி மனமகிழ்ந்து அவர்விழைந்தபடி வரங்கொடுத்தருளி அறுவகைச் சுவையோடுங்கூடிய நால்விதவுண்டிகளையும் அம்முனிவருடன் கூடவிருந்து போசனஞ் செய்து தாமுமவருமாக அம்மையம சபாமண்டபத்தில்வந்து வீற்றிருந்தனர். பின்னர், அரசன் ஆனந்தக்கடலில் மூழ்கினவனாகி இத்தினம் திரிமூர்த்திகளாலுங் காணுதற்கரிய திவ்விய தரிசனத்தை எளிதிற் கிடைக்கப்பெற்றோம். இதைவிட மேலானபாக்கியம நமக்கென்ன விருக்கின்றதென்று சுவாமியையும் அம்முனிவரையும் பலமுறை பணிந்தெழுந்து அஞ்சலியஸ்தனாய் நின்றனன். அச்சபையின்கண் வந்திருந்த அங்கஸ்த்தினரும் அவ்வாறே பணிந்தெழுந்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டு தத்தமிருக்கையை யடைந்தார்கள். அதற்குமேல் புருசுண்டிமுனிவர், மகோற்கட மூர்த்தியினிடத்தில் விடைபெற்றுச் சென்று தண்டகவனத்திலிருக்கின்ற தமது ஆச்சிரமத்தை யடைந்து நித்தியானந்தசுகத்துடனேகூடி வாழ்ந்திருந்தனர்.

அத்தினம்போய் மறுதினங் காலையில் அரசனானவன் சகலபரிசனங்களும் புடைசூழ தமது சபாமண்டபத்திற் கொலுவிருந்தனன். அப்போது எல்லா மாயைகளினும் வல்லமேகனென்னும் ஓரவுணன்

சோசியனாகவடிவங்கொண்டு வலதுகையிற் செபமாலிகையும், இடது கையிற் புத்தகமுமேந்திவந்து அரசனெதிரிற்போய் நின்றனன். அவனுக்கு உடனே அரசன் வணக்கஞ் செய்து ஆசனத்திலிருத்தி, ஐயா! நீயார்? இங்குவந்தகாரியம் யாது? உமது கையிலிருக்கின்றது என்ன புத்தகமென்று அன்போடு வினவினன். அதற்கு வஞ்சகவடிவங்கொண்டு வந்தசோசியன், தான் கருதிவந்த காரியஞ் சித்தியாகுமென்று நினைத்தவனாய் அண்ணலே, நாம் கந்தருவலோகத்திலிருக்கின்றன சோசியன். நமது கையிலிருக்கின்றது சோதிடசாத்திரம். நாம் ஒருபயனைக் குறித்தன்று இங்ஙனம் வந்தது, லோகோபகாரமாகவே இங்ஙனம் வந்தோம் யாவரொருவர்தமக்கு நட்டப்பொருளாக இதனைத்தேடுவார்களோ அவர்களை உலகங்கட்கெல்லா மிதஞ்செய்வார்கள். அது போலப் புவிபாலும் மன்னவர்கட்கு இதமின்மையாயின், அவனுடைய கையில் அடங்கிய வுலகங்கட்கு மிதமின்மையா மாதலால், உமக்கு இதமான காரியங்களைச் சில சொல்லுகின்றோம் அதை நீர் ஊக்கத்தோடும் ஞாபகத்தோடுங் கேட்கவேண்டும். நமக்கு எப்போதுந் திரிகாலக்கியானமுந்தெரிந்துகொண்டேயிருக்கும் அதை நீர் அறிவேண்டில் முன்னடந்ததும், இப்போது நடக்கின்றதும், இனி நடக்கப்போகின்றதும் யாம் சொல்லுகின்றோங்கேள், தோன்றலே! நெருப்பை மின்மினிப்பூச்சென்று கருதி அதனைத் தனது கூண்டிலுள்ளே வைத்துக்கொண்டு நாசமடைகின்ற குருவியைப்போல நீர் ஓர் பிராமணப் பிள்ளையைக்கொண்டுவந்து இப்பட்டணத்தில் வைத்திருக்கின்றீர் அதனால் அளவற்ற இடையூறுகள் நேர்ந்ததைப் பார்த்திருக்கின்றீர். அப்பிராமணச் சிறுவன் விக்கினாசனாதலாலே அனேகவிக்கினங்கள் அடிக்கடி நேர்ந்துகொண்டேயிருக்கும். ஓர் விக்கினமுமில்லாதவுமக்கு அவன் இங்கிருக்கின்றவரையில் வியோமத்தை விட்டொழியாத காற்றுபோல. விக்கினம் ஒழிகிறதில்லை. நீர் பூர்வத்திற்செய்த நல்வினைப்பயனால் இதுவரையில் வந்த விக்கினங்களனைத்து மொழிந்துபோயின. இனி விளையப்போகின்ற விக்கினங்கள் வெகு விபரீதங்களை விளைவிக்குமேயன்றி வீணிற்போவதில்லை ஆதலால், அப்பிராமணச்சிறுவனை விரைவில் இப்பட்டணத்தினின்றுங் கொண்டுபோய்க் காட்டிற்சேர்த்திடுவீராயின் உம்மிடத்திலே தீராத கோபத்தை வைத்திருக்கின்ற நராந்தகனும் முன்போல அன்புவைத்திருப்பன். அப்பால் யாதொன்றிற்கும் பயமில்லை. இஃதன்றி, இன்னமும் ஒன்றுசொல்லக்கேள், அசுத்தன்-ஆருசன்-கபடன்-அதிசூரன்-தனக்கு மிக்கவன் என்னும் இவ்வைவருக்குள் ஒருவனுடைய சினேகமிருந்தாலும் கந்தருக்களில்

லாமலே கேடுவிளையும். இவ்வைவருள் அப்பிராவணச்சிறுவன் உமக்கு மிக்கவன். அன்றியும், அதிசூரன் இவ்விரண்டு டாயிருத்தலினால் நீர் உயிர்தப்பிப்பிழைத்தலரிது. பிழைக்க வேண்டுவீராயின் இந்நிமிஷத்தி லவனுறவை யொழித்தல்வேண்டும். இதுகாறும் உமக்கு யாம் உண்மையான காரியங்களைச் சொன்னோமேயன்றி வீணானகாரியங்களைச் சொல்லவில்லை அறிந்தவர்கள் அறியாதவர்களுக்கு அறிவிக்க வேண்டுவது நீதியாதலால். சகலமும் அறிந்தயாம் நீர்மனமறிந்து மாயாதவண்ணம் லோகோபகாரமாகச் சொன்னோம் என்றனன். அவையனைத்தையும் அரசன் கேட்டு அவன் சொன்னதெல்லாம் வஞ்சமாகுமென்று தனக்குள் நிச்சயித்து மேலுக்கு ஒப்புக்கொண்டவன் போல அப்பாதகனைப்பார்த்து, ஓ சோதிடபண்டிதரே! நீர் கூறிய தனைத்தும் உண்மையே, அக்காளையை நீரேபிடித்துக்கொண்டுபோய்க் காட்டில் விடுமென்றுசொல்லி அருகிருந்த உடையார்களைக்கூவி இவருக்கு நீங்கள் வீதியிலே விளையாடிக்கொண்டிருக்கின்ற மகோற்கடரைக்காண்பித்து அவரை இவர் அழைத்துக்கொண்டுபோமபொழுது யாவரேனுந் தடுத்தால் அவர்களை விலக்கித் தடையில்லாமல் இவர் அழைத்துக்கொண்டுபோம்படி செய்துவரக் கடவீர்களென்று கட்டளையிட்டனன். அக்கட்டளையை உடையார் வாய்புதைத்துக்கேட்டு சோதிடரையழைத்துக்கொண்டுசென்று குகையிலிருக்கின்ற சிங்கத்தை யானைக்குக்காட்டு மாறுபோலத் திருமேனி முழுவதும் புழுதி படும்படியாக வீதியிலே விளையாடல்செய்திருந்த மகோற்கடமூர்த்தியைக் காண்பித்தார்கள்.

உடனே மகோற்கடமூர்த்தி அச்சோசியனருகில்வந்து அவனுடைய வஞ்சகத்தைத தாமறிந்துகொண்டு, ஐயா! அரண்மனையில் ஓர் சோசியர் அரசனிடத்தில் வார்த்தையாடிக் கொண்டிருக்கின்றனரென்று சிலர்சொன்னார்கள். அவர் நீதானோ வென்றுசொல்லித் தமது திருமேனி முழுவதுங் குலுங்க நகைத்துக் கேட்டனர். அவ்வளவில் அவ்வஞ்சகனுடைய மனமானது கலங்கி, நான்தானென்று சொல்லினன், அதற்குமேல் மகோற்கடமூர்த்தியானவர் இப்பட்டணத்திற்கு என்ன இடுக்கண் சம்பவிக்கவிருக்கின்றது எனக்கென்ன அபாயம் நேரிடும் அவைகளை உமது கூர்மபுத்தியினாலாராய்ந்து சொல்லவேண்டுமென்று கேட்டனர், அக்கேள்விக்கு அப்பாதகன் பயந்து மனமும் உடலும் நடுக்குற்றவனாகி, அந்நடுக்கம் அக்கிழப்பருவத்தாலும் வாதரோகத்தாலும் உண்டானதுபோல வேறு காட்டிச் சமாளித்துக்கொண்டு சுவாமி கேள்விக்கு உத்தாரஞ் சொல்

லத்துணிந்துவந்தனே! இப்பட்டணத்திற்கு யானையினாலும் இருட்டினாலும் சலத்தினாலும் தப்பா திடுக்கணுறும் இதுண்மை, ஒருவேளை இம்மூன்றுந் தப்பினால் அளவற்ற அபாயங்கள் ஒருவருக்குந் தெரியாமல் வரும் உனக்கு வரவிருக்கின்ற அபாயத்தினையுஞ் சொல்லுகின்றேன் கேள் முதல் கிணற்றில் விழுந்திறந்து போவாய்; அது தப்பினால் விஷந்தின்று சாவாய், அதற்குந் தப்பினால் பின்னர் அநேக அபாயங்கள் நேரிடும்; இவையனைத்தும் நான்கு தினத்திற்குள் உண்டாகும், அந்த நான்கு தினமும் என்பின்னாகக் காட்டிற்கு வந்திருப்பையெனில், இவ்வபாயங்கட்கெல்லாம் உன்னைப் பாதுகாத்து, மீட்டும் இப்பட்டணத்திற் கழைத்துவந்து யதாப்பிரகாரம் சுகமாயிருக்கவைப்பேன். என்று சொல்லினன். அவையனைத்தையும் மஹோற்கடமூர்த்திகேட்டு, ஐயா! நீர் சொன்னதனைத்தும் உண்மையோ; நானும் இப்போதே உம்மோடே காட்டிற்கு வருவேனென்று சொல்லி அவனுக்கு வெகுமானஞ் செய்பவர்போலத் தமது மார்பிலணிந்திருந்த முத்துமாலையைவாங்கி அவ்வஞ்சகனுடைய கழுத்திலே போட்டனர். அம்மாத்திரத்தில் அம்முத்துமாலையினின்றும் அழற்சுவாலையுண்டாகி அப்பாதகனைச் சுட்டு நீறாக்கியது. அவ்வற்புதத்தை யாவருங்கண்டு ஆச்சரியமடைந்தார்கள்.

அதற்குமேல் கூடபனென்றுங் கந்தனென்றுஞ் சொல்லுகின்ற இரண்டசுரர்கள் ஓர் பழங்கிணறாகவுந் தவளையாகவும் உருவமெடுத்துக்கொண்டிருந்தார்கள். அதை மஹோற்கடமூர்த்தியறிந்து அப்பட்டணத்திற்கு வெளியில் எங்குந் தென்னைகள் கட்டப்பட்டிருக்கின்ற தோப்புகளில் விளையாடச் செல்லுகின்றவரைப்போலத் தம்மோடிருக்கின்ற சிறுவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டுசென்று அக்கிணற்றினுக் கருகேபோய் விளையாடிக்கொண்டிருந்து, பின்பு அதனையெட்டிப்பார்த்தனர். கற்றப்பிள்ளைகளும் எட்டிப்பார்த்து இதனாழத்தை யறிவோமென்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு, ஒவ்வொருவராய் அக்கிணற்றிலேயிறங்கிச் சோதித்து ஒருவராலும் ஆழத்தினளவு காணமாட்டாமல் மீட்டும் வெளியில்வந்து தனியேநின்றிருக்கின்ற மஹோற்கடமூர்த்தியைப்பார்த்து, நீயோ சில சாமர்த்தியங்களையெல்லாஞ்செய்கின்றனையே! இக்கிணற்றில்மாத்திரமிறங்கி அதனடிப்பாரப்பில் மணலை நின்கையிலெடுத்துக்கொண்டு வருவையாயின் நீயெல்லா விதத்திலுஞ் சமர்த்தனாவாயென்று சொன்னார்கள். அதற்கு மஹோற்கடமூர்த்தி புன்னகைகொண்டு தமது இளமைப்பருவத்திற்குத் தக்கபடியே அதற்கிசைந்து, ஆ! ஆ! இதோ மணலை அள்ளிக்கொண்டு

வந்தேன் பாருங்களென்று சொல்லி ஞெரேலென்று கிணற்றுக்குள்ளே குதித்துப் பாய்ந்தனர். அந்நிமிஷத்தில் கிணறாயிருந்த அவுணன் விரிந்து பெரிய கடல்போலே யமர்ந்திருந்தனன். அதற்குள்ளே தவளை யாக அடங்கியிருந்தவன் அவ்வுருவிற்றானே பெரிய பர்வதம்போல் உலாவியிருந்தனன். உள்ளேகுதித்துப்பாய்ந்த மகோற்கடமூர்த்தி யானவர் விரைவில் அதனுழத்தினளவையறிந்து தண்ணீர் நுரைத்துக் குமிழி யெழும்படியாக அடிப்பாப்பின்று மணலையள்ளி யகரத்தோடு வெளியேவந்து அதனைத் தமதுகூட்டாளிபிள்ளைகளுக்கெதிரிலெறிந்து எங்கும்பரந்து ஆரவாரித்திருக்கின்ற சலத்தில் விளையாடிக்கொண் டிருந்தனர். அப்போது மலைபோலப் பாரித்திருந்த மண்டுகமானது மகோற்கட மூர்த்தியினுடைய பாதத்தைப் பிடித்து மிகவும் கொடூர மாக அழுத்திக் கடித்தது உடனே சுவாமியானவர் அமமண்டுகத்தி னுடைய கால்களிலொன்றைப் பிடித்திழுத்துக் கரையிலே யெறிந் தனர் அம்மாத்திரத்தில கிணறாகவிருந்த அருணனும் தவளையாக விருந்த அவுணனும் அவ்வுருவங்களினின்றுமாறித் தங்கள சுயரூபங் களைக்கொண்டு பூமியிலே மலைபோலேவீழ்ந்து இறந்துபோனார்கள். இவ்வற்புதத திருவிளையாடலை அரசன் முதலாயினோர் கேட்டு ஆனந் தமடைந்தார்கள்.

இவ்வாறு நராந்தகனேவிய அவுணவீரர்கள் யெல்லாம் தனி யாகவுங் கூட்டமாகவுஞ்சென்று மகோற்கடமூர்த்தியால் அழிந்து போக, அதை நராந்தகன் கேள்வியுற்றிருந்த கோமுங் கவலையுங் கொண்டவனாகி மீட்டுஞ்சிறிது தேறித்தனதுதந்தைக்கு இளையவனாகிய பதங்காவர னென்பவனுக்குப் புத்திரர்களாகி அம்பாரன்-அந்த காசுரன்-துங்காசுரன்-என்னும் பெயர்களை வகித்திருந்த தனது தம்பி மார் மூவரையும் வரவழைத்து அவர்கட்கு அளவற்ற வெகுமதிகளைச் செய்து அகத்திற்கொண்டிருக்கின்ற கவலையானது முகத்திலுந்தோன் றும்படியாக அவர்களைப் பார்த்து அன்பிற்சிறந்த இளையோரே! நீங் கள் குழந்தைப் பருவத்துள்ளபோதே தேவர்களெல்லாங்கண்டு நடுங் கும்படி யாகத்திசையானைகளை யெல்லாஞ்சென்று கலக்கினீர்கள் இர ண்டுபல் முளைப்பதற்கு முன்பே பாதாளலோக முழுவதுங் கொள்ளை யிட்டு அங்குள்ளவர்களை யெல்லாஞ்சிறையில் வைத்தீர்கள். மங்கை யர் மையல்செய்யற் கிடமில்லாத பிள்ளைப் பருவத்திறுதேனே திரி லோகங்களையெல்லாம் வென்று வலம் வந்தீர்கள், இப்போது சகலகலை களையும் கற்றிருப்பதன்றி, எல்லாவிதத்திலும் பராக்கிரமசாலிகளா யிருக்கின்றீர்கள். உங்களுக்குச சயமகாதகாரியம் எந்த உலகங்களி

யிருக்கின்றது. தருப்பையும் மாவிலையும் உலர்ந்த சமிதைகளையுங் காட்டிற் பொறுக்கிவந்து ஔபாசனஞ் செய்து கொண்டிருக்கின்ற காசிபனுக்கு ஒருமகன் பிறந்திருப்பது உங்களுக்குந் தெரியுமல்லவா? அவனே நம்மவர்களை யெல்லாந் துரும்பாக மதித்து அளவற்ற பேரை மாய்ந்தனன். அவன் இப்போது காசிப்பட்டணத்தி லிருக்கின்றான் நீங்கள் விரைவில் அப்பட்டணஞ் சென்று அப்பையலை எவ்விதத்தினாலேனுங் கொன்றுவரக் கடவீர்களென்று கட்டளையிட்டான். அவ்வார்த்தையைக் கேட்ட மாத்திரத்தில் அம்மூவரும் அவனைப் பணிந்தெழுந்து, அண்ணா! தேவரீர் அடியேங்கட்குத் தமையனாக விருப்பதினாலும், எங்களை முற்றினுங் காப்பாற்றுவதினாலும்கண்ணை இமைகள் காப்பதுபோல எங்களையே நினைத்து எங்களுக்கேற்ற காரியத்தையே கட்டளையிட்டீர்கள அன்றியுந் தேவரீருக்குச் சிறிய தந்தையாகிய எங்கள் பிதாவானவர் நேற்றையதினம் அப்பையலைச் சுழற்காற்றாகச் சென்றழைத்தனர். அதற்கப்பையல் அவரை வீணேகொன்றான். அக்கொடுமையை நினைக்குந்தோறும் உள்ளம் பகீலென்று பதைக்கின்றது ஆகலால் அப்பகைமையை யாங்களே போய் முடித்து வருகின்றோம் இத்தனஞ்சென்றால் வேறேநானில்லை யென்று சொல்லி ஆக்கிரமித்தெழுந்தார்கள். இவ்வாறு ஆக்கிரமித்தெழுந்த அம்மூவரும் உடனே காசிப்பட்டணத்தை யடைந்து அவருள் அந்தகாசுரனென்பவன் சூரியனுங்கண்டு ஒளிக்கும்படியாக ஓர் நொடிப்போதில் எல்லாவுலகங்களினும் பகற்போதை மறைத்து இருள்மூடச் செய்தனன். உடுக்களுஞ் சந்திரனுங் காணப்படாத அம்மாய விருளானது இரவைப் போலிருண்டு போனதால், கைகட்குங் கண்கள்தெரியாமல்போயின. அப்போது பற்பல விவகாரங்களிலிருந்த யாவரும் திடீரென்று வந்த அவ்விருளுக்குப் பயந்து சூரியனுக்குஞ் சந்திரனுக்கும் இறுதிநாள் நேர்ந்ததோ? உமாதேவியார் சிவபிரானுடைய விழிகளை மீட்டுந்தமது கரத்தினால் மறைத்தாரோ: அல்லவெனில் விந்தபர்வதமானது முன்போல் வளர்ந்ததோ? மற்றை யாதுகாரணமோ? நடுப்பகலிலே கல்வியற்றவர்களுடைய மனத்தினுமிருந்த இருளானது எங்கும் மூடிக்கொண்டதே யென்றுநடுங்கித் துயரமுற்றார்கள். அந்தணர் - அரசர் வைசியர் சூத்திரரென்னும் நால்வகை வருணத்தார்களுந் தத்தந் தொழில்கள் நடந்தேறாமைக்கு வருத்த முற்றார்கள். மைந்தர் - சேவகர் ஏவலாளரென்னு மிவர்கள் மனக்குழப்ப மில்லாமல் அவ்விரவைமெச்சி ஆனந்த நித்திரைசெய்தார்கள் காமுக ராயினோர் மிகுந்த சந்தோஷத்தோடு மங்கையரிடத்திற் பற்பல கலவிகளைச் செய்து கொண்டு இன்

பவெள்ளத்தி லழுத்தினார்கள். அவ்விருளுக்குப் பயந்து கலங்கிண
ங்காத சில ஸ்திரீகள் தீமுதலிய விளக்கங்களைத்தங்கடங்கள் மனைகளி
ல்வைத்து வருத்த முற்றிருந்தார்கள் தொழில்மூலமாகச் சென்ற யா
வருந்தத்தம் பதிகளைமீட்டும் வந்து சேரமாட்டாமல் எவ்வெவர் எங்கி
ருந்தார்களோ அவ்வவர் அங்கங்கே யிருந்து கவலையுற்றார்கள் இரை
தேடிச்சென்ற பறவைகள் முதலிய யாவும் இராக்காலத்தில் வந்து ஒடு
ங்குகின்ற தத்தம் பொழில்களையுங் குகைகளையுங் காணமல்வருந்தின,
இவ்வாறு சகல சீவான்மாக்களுந் துன்பமடையும்படியாக அந்தகாக
ரன் எங்குமிருளாக மூடிக்கொண் டிருக்கத் துக்காசுர னென்பவன் த
னது மாயையினால் அக்காசிப்பட்டணத்தைச் சுற்றிப் பத்துயோசனை
ப்பரப்பில் எங்கும் போகவும் வரவும் வழியில்லாமல் மலையாகச்சுற்றி
வளைத்துக் கொண்டனன். அம்மலையின்மீது சோதிமரம் சோதிக்கொ
டி சோதிப்புல் சோதிமணி என்னு மிவைகள் அளவற்றனவாய் சோதி
யே யுருக்கொண்டதுபோலப் பிரகாசிக்க அதனை யாவருங்கண்டு
ஈதென்ன அதிசயமோ தெரியவில்லையே? இப்பட்டணத்திற்குச் சமீ
பத்தில் நவரத்தின முதலானவைகளா லுண்டான பிரகாசத்துடனே
யானை - சிங்கம் - புலி முதலியவைகளால் உலாவப் பட்டிருக்கின்ற
ஓர்மலை ஆகாயத்தை யளாவவுயர்ந்து எங்கும் வளர்ந்திருக்கின்றதே
இதற்குமுன் யாங் கண்டதில்லையே? யென்று மனங் கலங்கினார்கள்.
இப்பால் அம்பாசுரன் அப்பாவகத்தின்மீது தவழ்கின்ற மேகவுருவா
கி நெருப்பைப்போல மின்னல்களைவீசி ஆகாயமெங்கும் பரந்து மூடி
க்கொண்டு விபரீதமான இடிகளை யுண்டாக்கி சமுத்திரமே ஆகாயத்தி
லெழும்பி நதிகளையே தாரையாக விடுவதுபோல அளவற்ற வருஷங்க
ளைச்சொரிந்தான். அவ்வருஷ தாரைகளினாலே பாறைகளெல்லாங்கிழி
ந்தும், மாடமாளிகை கூடகோபுரங்களனைத்து மிடிந்தும், அந்நகரமு
ழுவதும் அழிந்து போயின உடனே பிரளய காலத்தில் சத்த சாகர
ங்களும் ஒன்றாக ஆகாயத்தை யளாவப்பொங்கி சக்கர வாளகிரியைச்
சேர்ந்து நாசஞ் செய்வதுபோல துங்காசுரனால் வளைத்துக்கொள்ளப்ப
ட்ட காசிப்பட்டணத்தின்மீது அம்பாசுரனால் பொழியப்பட்ட வருஷ
ங்கள் அப்பட்டணம் முழுதும் பெரும்புறக் கடல்போல நிரம்பியிருந்
தன. அக்கொடுமையை மகோற்கட மூர்த்தியறிந்து பத்துயோசனை
யுயரத்தில் எண்டிசைகளையும் பரந்தோடும்படியான கிளைகளோடுங்கூடி
எண்ணற்ற விழுதுகள் நிலங்கிழித்துப் பாய்ந்திருக்கின்ற ஓ ராலமரத்
தை யுண்டாக்கித் தாமதற்கேட்டபடி ஓர்பெரிய பறவையுருக்கொண்டு
அம்மரத்தின்மீதேறி யுட்கார்ந்து இரண்டு சிறகுகளையு முதறினார். உட

னே. அவ்விரண்டு சிறகுகளினின்றும் உண்டான காற்றினால் மேகங்களெல்லாம் பஞ்சிற்றொடர் நுனியைப்போலக்கலைந்து சுற்றியிருக்கின்ற மலைகளிலே யொதுங்கின. பின்னர் அம்மலையும் இடிந்து பொடிபட்டுப்போயிற்று அப்போது மகோற்கட மூர்த்தியானவர் தமது நுதல்விழியைத் திறந்தருளினர். அந்நுதல் விழியினின்றும் உண்டான தீயினால் இருளெல்லா மொதுங்கிப் பிரவாகமாய் நிறைந்திருக்கின்ற சகல முழுவதும் வறண்டு போய்விட்டது. இவ்வாறு இருளாகவும், மலையாகவும், மழையாகவும் வந்து பலகொடுமைகளைச் செய்த அவ்வபாதகர்களுடைய மாயைகளை யெல்லாம் எமது மகோற்கட மூர்த்தி கொண்டருளிய பறவையின் காற்றினா லழிந்தும், அப்பாதகர் அப்பறவையின் வலியை அறிவோமென நினைத்து அம்மூவரு ளொருவன் மற்றோராலமரமாயினன். ஒருவன் கண்ணியாயினன். ஒருவன் வேடுவனாகி முன்னருண்டான ஆலமரத்தின்கணுள்ள பறவையை போட்டினன். உடனே பறவைவேடங் கொண்டிருக்கின்ற மகோற்கட மூர்த்தியானவர் அவ்வேடனைத் தமதுமூக்கினாற்கவ்விக்கொண்டு சென்றுவேறுபுண்டாயிருக்கின்ற ஆலமரத்திற் பாய்ந்து, அதிலிருக்கின்ற கண்ணியோடு அவ்வாலமரத்தைக் கால்களினாற் றூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாய்த் தேவலோகம் வரையிற்சென்று அங்கிருந்தபடி அவ்வால மரத்தையுங், கண்ணியையும், வேடனையும பூமியிலே விழும்படி விடுத்தனர். அம்மாத்திரத்தில் அம்மூவரும் உயிர்நீங்கி அவர்களுடைய சரீரம் மூன்றும் அவர்கள் தாயாகிய பிரமரை யென்பவளுடைய வீட்டுவாயலில் வீழ்ந்து நொறுங்கின. இவ்வாறு பிரேதமாய் நொறுங்கி வீழ்ந்த மூவரையும் அங்கிருந்த சிலசேடியர்கண்டு திடுக்கிற்று உல்லாசமாய் உலாவிக்கொண்டிருக்கின்ற பிரமரை யிடத்திலோடி அம்மா! உமது குமாரர்கள் மூவரும் பிரேதமாகி நமது வீட்டு முன்றிலில் வீழ்ந்திருக்கின்றனரென்று சொன்னார்கள். அதைக்கேட்ட மாத்திரத்தில பிரமரை யென்பவள் நடுக்குற்று நாமிதுவரையில் ஒரு துற்சகுனங்களையுங் காணாதிருக்க நமது புத்திரர்கள் எவ்வாறிறப்பார்களென்று கைகளை நெறித்துக் கொண்டோடி முற்றத்திலே நொறுங்கி வீழ்ந்திருக்கின்ற மூன்று பிரேதங்களையும் பார்த்து நமது பிள்ளைகளே யென்று நிச்சயித்து நெடுநேரம் மூர்ச்சித்துக்கிடந்து, மீட்டுந் தெளிந்தெழுந்து தனது கையினால் மக்களா! மக்களா! வென்று மார்பிலறைந்து கொண்டு கூந்லானது நாற்றிசைகளினும் விரிந்து பூமியை வரும்படியாகப் புரண்டு புரண்டு அழுதனள். அப்போது அருகிருந்த சேடிகள் அவளைத்தே

ற்ற, ஒருவாறு தேறியெழுந்து, அதிக கோபா வேசத்தினைக்கொண்டு என்பிள்ளைகளை எவன் கொன்றானோ அவனை யான் கொல்லாவிட்டால் அக்கினி சாட்சியாக விவாகஞ் செய்து கொண்ட கணவனுக்குத் துரோகஞ் செய்தவள் போகின்ற பாதகம் யாதோ ? அப்பாதகத்தில் யான்போகக்கடவேனென்று சபதஞ் செய்து கொண்டு, இனி கொல்லப்பட்ட என் மைந்தரோடு கொன்றவனையும் ஒன்றாக வைத்துத் தகனஞ் செய்வேனேயன்றி இவர்களை மாத்திரந் தகனஞ்செய்யேனென்று சொல்லி அந்நாள் வருகிற வரையில் தனது மக்களாகிய மூன்று பிரேதங்களையும் தயிலத்திலிட்டுக் காப்பாற்றும்படி சேடியர்கட் குத்தரவு செய்து உடனே சில தூதர்களைக்கூவி எனது பிள்ளைகளைக் கொன்றவன் எவனோ ? அவனை விரைவில் அறிந்துவரக் கடவீர்களென்று பல வெகுமதிகளை அவர்கட்குக் கொடுத்தனுப்பி பின்னுஞ் சில தூதர்களை பழைத்து அவ்விபத்தைத் தனது நாயகனாகிய பதங்காசுரனுக்கு அறிவித்துவருமாறு கட்டளை யிட்டனள். அவ்வாறே அவ்விருவரு வகுப்பினரும் தத்தமேவலை நோக்கிச் சென்றார்கள்.

இவரிவ்வாறாக, பறவையுருவங்கொண்டிருந்த மகோற்கட மூர்த்தியானவர்மீட்டும் பழைய வடிவத்தினைக்கொண்டு அந்தகாசுரன் முதலிய மூவராலழிபட்டிருக்கின்ற நகரத்தை தமது அருட்கண்ணாற்பார்த்தருளினர். உடனே அந்நாகமானது முன்னினும் மேலான விம்பிதங்களை வாய்ந்து பிரகாசித்தது. இறந்து கிடக்கின்ற உயிர்களனைத்தும் மீட்டும் உயிர்பெற்றெழுந்து தத்தமிருக்கையை யடைந்தன. பின்னர் மகோற்கட மூர்த்தியானவர், அரசன்முதலிய யாவருந் தம்மைப் புடைசூழ்ந்து துதிசெய்யும்படியாக அரண்மனையின்க ணெழுந்தருளி யிருந்தனர்.

முன்னர் பிரமரை யென்பவள் ஏவலால் இரண்டு பிரிவாகச் சென்றதூதர்களில் ஒரு பிரிவார், நராந்தகனுடைய தூதர்களால் பதங்காசுரனிறந்துபோன மெய்யைக்கேட்டு அசசெய்தியை அவளிடத்திற்சென்றார்கள். அதைக்கேட்ட மாத்திரத்தில் அவள் மீட்டும் மூர்ச்சையாகி வீழ்ந்து பின்னர் தெளிந்தெழுந்து அளவற்ற துக்கசாகரத்தில் மூழ்கினவளாகி, ஐயையோ ! மிக்க பராக்கிரம சாலிகளாகிய எனது பிள்ளைகளிறந்துபோன தல்லாமல் என் பிராணநாயகரும் இறந்து எனது யிரைவாட்டினரோ வென்று புலம்பி அழுதுகொண்டிருந்தனள். அச்சமயத்தில் மற்றொரு பிரிவார் விரைந்துவந்து அம்மா ! உமதுகுமாரர்கள் காசிராசனிடத்தி லிருக்கின்ற ஓர் பிராமணப் பிள்ளையா லிறந்துபோனார்கள். உமது கணவரும் இன்னு மளவற்றபேரு டிவனுற்றானிற்

ந்துபோயினரென்று சொன்னார்கள். உடனே பிரமரையானவள் அளிந்த கனியிற்பட்ட கடுங்காற்றைப்போல மனந்தளர்ந்து ஆ ஆ ஆ ஆ, நன்றாயிருக்கிறது நன்றாயிருக்கிறது அவுணருடைய பராக்கிரமமெல்லா மிவ்வாறு நசிக்குமா? ஓர் பிராமணப்பிள்ளையால் நமது கணவரும் பிள்ளைகளும் ஏனயவீரர்களும் அழிந்தார்களென்றால், இதைவிட அவமானம் நமது குலத்திற் கென்னவிருக்கின்றது. இத்தினம்யானே போய் அப்பிராமணச் சிறுவனுயிரைவாங்கி மடிக்கின்றேனென்றெழுந்து மேலான கீர்த்தியைப்பெற்ற அதிதியைப்போல வடிவெடுத்து சில அவுணவீரர்கள் சீடராகவும், சில அவுணபாதர்கள் சேடியராகவும் உருக்கொண்டு தான் கொண்ட கோலத்திற்கேற்றபடி புடைசூழ்ந்து வரச்செய்து, கொடிய விடத்தினைக் கலக்கப்பட்டிருக்கின்றதேவாமிர்தத்திற்கிணையான சில பண்டங்களை கையில்வைத்து பெரியோர்களுங் கண்டவுடன் வணக்கங் கொள்ளத்தக்க வேடத்தோடு காசிப்பட்டணத்திற்குச் சென்றனள். அப்பட்டணத்திலுள்ள ஆடவரும் ஸ்திரீகளும் அவளைக் கண்டவுடன் அதிதிவந்தனளென நினைத்து ஆனந்தமயமாகி சிலர் புட்பங்களைக்கொண்டுவந்து தூவினார்கள் சிலர்பாதத்திற் சலத்தினைவிட்டுப் பூசைசெய்தார்கள். சிலர் பரிமளப்பொடி தூவினார்கள் சிலர் மாலைதரித்தார்கள். சிலர் தாம்பூலங் கொண்டுவந்து கொடுத்தார்கள் சிலர் கனிவருக்கங்களைக் கொண்டுவந்து உபசரித்தார்கள். சிலர் ஆபரணங்களையும் வஸ்திரங்களையுந் தந்தார்கள். சிலர் பொன்னையும் இரத்தினங்களையும் பொழிந்தார்கள். சிலர் என்ன காட்சி கிடைத்ததென்று வியந்தார்கள். சிலர் எமது துன்பமனைத்தும்போயினவென்று நயந்தார்கள். சிலர் சனங்களை விலக்கிக்கொண்டு சென்று அருகிற் கூடினார்கள். சிலர் அவ்வரவை அரசனுக்கறிவிக்குமாறுவோடினார்கள். சிலர் பண்ணோடுங்கூடிப் பாடினார்கள். சிலர் பரதசாஸ்திரப்படி ஆடினார்கள். இவ்வாறு சகலரும் ஆனந்தங்கொண்டு உபசரிக்கும்படியாக வஞ்சவடிவங்கொண்டுவந்த அப்பாதகி நேரேயென்று அரண்மனையிற்சென்று இராஜஸ்திரீகள் வசிக்கின்ற அந்தப்புரத்திற் சென்றனள். உடனே அவ்வந்தப் புரவறையில்-காப்பாளர் அரசன்றேவிக்கறிவிக்க, அரசன்றேவி எதிர்கொண்டுசென்று தாயினுஞ் சிறந்தீர் வந்தீரோ? வாருமென்றழைத்துவந்து ஓர் தங்கச் சிங்காசனத்தின்மீது இருக்கவைத்து பாதபூசை முதலிய உபசாரங்களைச்செய்து அம்மா, முனிவருடைய துணையில்லாமல் தேவரீர்மாத்திரம் தனியே வருதற்கான காரணம் யாதென்று கேட்டனள். அதற்கு அக்கொடியாள் அவ்வரசன்றேவியைப்பார்த்து மகளே, அன்பிற்சிறந்த அரி

வைபர் ஒருகாலத்துப் புருடனைப் பிரிந்திருக்கினுமிருப்பர் தமது புத்திரர்களை ஒரு கணமேனும் பிரிந்திருக்கமாட்டார்கள் யானும் எனது மகோற்கடமூர்த்தியைக் காணுதிருக்கமாட்டாமல் முனிபுங்கவரைத் தனியே வனத்தின் கண்விடுத்து வந்தேனென்று சொல்லினள். அதைக்கேட்டவுடன் அரசன்றேவி, ஓர் சேடியைக் கூவிவீதியிலே விளையாடல் செய்கின்ற மகோற்கடமூர்த்தியை யழைத்துவாருங்களென்று கட்டளையிட்டனள். மற்றொருசேடிக்கு அரசனை யழைத்துவரும்படி ஆக்கியாபித்தனள். அவ்வாறே அவர்கள் அவ்விருவரிடத்திலுஞ்சென்றறிவித்தார்கள் உடனே அரசன் மனமகிழ்ந்து அப்பாதகியிடத்தில் விரைந்துவந்து அவளுடைய பாதங்களிற் பூக்களைச்சொரிந்து பூசைசெய்து இரத்தினங்கள் வஸ்திராபரணங்கள் கனிவர்க்கங்கள் முதலியகையுறைகளைத்தந்து, அன்னையே அடியேனையு மோர் பொருளாக நினைத்துத் தேவரீர் இங்ஙன மெழுந்தருளினீரோ வென்று பலசார்ந்த மொழிகளினுற்றுதிசெய்து அனந்தமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து, தேவரீர் அடியேன்மீது கிருபைவைத்து சிலநாள் இங்கிரும் எனது குமாரனுடைய விவாகம் நிறைவேறிய மறுநாளைக்கே உம்மையும் மகோற்கடமூர்த்தியையும் அடியே னழைத்துக்கொண்டு சென்று எனது குருசுவாமிகளிடத்தில் வசிக்கும்படி விடுத்து, மீட்டும் இந்நகரத்திற்குத் திரும்புகிறேன் அதுகாறுந் தேவரீர் தயைவைத்திருத்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதனை இப்பாதகிகேட்டு அரசனே! யானொரு நிமிடமேனும் மகோற்கட மூர்த்தியைப்பிரிந்திருக்கேன். என்னை எவ்வாறே மயக்கி அவரையழைத்துக்கொண்டுவந்துவிட்டனை. அது முதல் கன்றைப் பிரிந்ததலையீற்று பசுவைப்போலத் தயங்கினேன். இனி அரைக்கணமேனும் குழந்தையைப் பிரிந்து எனது முனிபுங்கவருக்குப் பணிசெய்யும் வலியிலேன். அம்முனி புங்கவரும் அரை நிமிடம் என்னைப் பிரிந்திரார். ஆதலால் இப்போதே மகோற்கடமூர்த்தியை என்னோடுகூட்டி அனுப்பிவிடவேண்டுமென்று கேட்டனள். அச்சமயத்தில் மகோற்கடமூர்த்தி வந்தனர். வந்தவரை அப்பாதகி எனதருமைக்குழந்தாய் வாருமென்று தழுவி விரைவிலெடுத்துத் தனது மடியின்மீது வைத்துக்கொண்டனள் அவள் வஞ்சகத்தை சுவாமியறிந்து அம்மா! எனக்கு என்னகொண்டு வந்தனையென்று கேட்டனர். உடனே அவ்வஞ்சகி தனது சேடியர்களிடத்திற் கொடுத்து வைத்திருந்த சிற்றுண்டிகளைவாங்கி மகோற்கட மூர்த்தியினுடைய திருக்கரத்திற்கொடுத்தனள். அவையனைத்தையும் எமதையன் விரைந்து வாங்கி வாங்கி வாய்மடுத்தனர். விடங்கலந்திருக்கின்ற அச்சிற்று

ண்டிகளை சுவாமி வாங்கிப்புசிக்கப் புசிக்க அவைகளைச்கொடுத்தாரக்ஷசிக்கும் அவளுக்குச் சிடராகவும் சேடியராகவும் வந்த அவுணருக்கும் அவுண ஸ்திரீகளுக்கும்விட வேகந்தலைக்கேறி இறந்து போனார்கள் அவ்வற்புதத்தை யாவரும்பார்த்து ஆச்சரியங்கொண்டு முன்னர் அப் பாதகி இன்னுளென்று அறிந்துகொண்டு மகோற்கடமூர்த்தியை அளவற்றவேதாக மங்களாற் றுதிசெய்தார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே ! இவ்விதமாக அவுண பாதகர்கள் வந்துசெய்த அளவற்றவஞ்சனைகளையெல்லாம் எமது மகோற்கடப்பெருமானறிந்து அவைகளை யவர்களுயிரோடு நாசமாக்கிய திருவிளையாடல்கள் இன்னுமனந்தமுள. அவைகளை விரிக்கிற்பெருகுமாதலால், இதுகாறுஞ்சொல்லிய வளவில நிறுத்தி மற்றொருபோது அக்காசிப்பட்டணத்திலுள்ள வீடுகள்தோறும் தாமொருவரே ஏககாலத்தில் அநேகராகி விருந்து புசித்தருளிய திருவிளையாடலைச்சொல்லுவோங் கேட்பீர்களாக.

ஓர்நாள் அக்காசிநகரத்துள்ள யாவரும அரசனுடைய கொலுச் சபையில்வந்து மிக்க மனவுருக்கத்தோடு மவனைப்பணிந்தெழுந்து ஆண்டவனே ! சகலலோகங்களுஞ் சுகமடைதற் பொருட்டுத் திருவவதாரஞ்செய்தருளிய மகோற்கட மூர்த்தியைத் தேவரீர் இந்நகரத்துள்ளோர் யாவருங் கிருதார்த்தர்களாகும்படி அழைத்துவந்து வைத்திருக்கின்றீர் அதற்கு யாங்கள் செய்யுங் கைம்மாறு ஒன்றையுங் காணோம், பூபாலகராயினோர் தம்மையடுத்த சனங்கட்குத் துன்பங்களைப்போக்கி இன்பங்களை யூட்டுவிப்பது அவர்களுடைய கடமையென்று சொல்லிய நீதி சாஸ்திரப்படி, தேவரீரும் அக்கடமையை அடியேங்கட்கு உண்டாக்கிப் பாதுகாத்து வருகின்றீராயினும், அடியேங்கள் தேவரீரிடத்தில் விண்ணப்பஞ்செய்து கொள்வதற்கான ஒருகுறை யிருக்கின்றது, அவ் விண்ணப்பத்திற்குத் தேவரீர் செவி கொடுத்தருளல் வேண்டும். அதாவது; அடியேங்களுடைய வீடும் பாக்கியமும் பயனடையும்படியாக மகோற்கட மூர்த்திக்கு அமுது செய்விக்க விருப்பங் கொண்டிருக்கின்றோம். அவ்விருப்பத்தைத் தேவரீர் தயைசெய்து அங்கீகரித்து சுவாமியை அடியேங்களோடு அனுப்பல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கரசனவர்களைப் பார்த்து ஓ பத்தியிற் சிறந்தவர்களே ! கிருபைக்கடலாகிய மகோற்கடப் பெருமான் இப்பட்டணத்தில் வசிக்கின்ற நாளெல்லாம், யாவர் சமீபத்திலிருந்து அமுதூட்டித் திருப்தியடைவதல்லாமல் ஒரு நாளாயினும் அந்த மேலான மூர்த்தியையாம் பிரிந்திருக்கமனமொவ்

வோம் அன்றியும் அவருடைய இச்சையின்படியாய் அன்புசெய்து நடந்துகொள்வதேயன்றி நமதிச்சையின்படி அவரை வரச்செய்வது தகுதியன்று. அவருடைய குறிப்பு உங்கள் மீதிருந்தாலும் அவர் ஒருவர் நீங்கள் பலர் ஆதலால் அக்கிருபாமூர்த்தி ஒவ்வொருமனைக்கு ஒவ்வொரு நாள்வரினும் அனேகவருடஞ்செல்லும் இதனைத் தீர்க்காலோசனைசெய்யக் கடவீர்களென்று சொல்லினன். அச்சமையத்தில் மகோற்கடமூர்த்தியும் அங்ஙனம்வந்து அளவற்றபேர்களால் சபை நிறைந்திருப்பதைக்கண்டு நீங்கள் யாவரும் இங்கே கூடியிருக்கின்ற காரணம் யாதென்று வினவியருளினர் அக்கிருபாவசனத்தை அந்நகரத்தார் கேட்டமாத்திரத்தில் உடன்முழுது மூரோமஞ் சிதம்பூத்து அளவற்ற களிப்பின் மூழ்கினவர்களாகி யாவரும் பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பிநின்று ஓபரம கருணாநிதியே! ஓபக்தவத்சலனே! ஓதீனசரண்ய மூர்த்தியே! அடியேங்களெல்லாந் தேவரீருக்குத் திருவமுது செய்விக்கவேண்டி எமதாண்டகையாகிய இராசாதி ராசனிடத்தில் விண்ணப்பஞ் செய்துகொண்டோம் அதற்கவர் சம்மதமாக வில்லையென்று யாவரும் ஒரேவிதமாகச் சொன்னார்கள்.

அவர்கள் சொல்லியதை சுவாமிகேட்டு யாவரும் சந்தோஷிக்கும்படி சற்றே நிதானித்து அன்பர்களே, இராசா எப்போதும் போலவே நமக்கு போசனஞ்செய்விக்கட்டும் நீங்கள் யாவரும்போயுங்களுங்கள் வீடுகள்தோறும் விருந்து செய்யுங்களென்று திருவாய் மலர்ந்தனர். அத்திருவருளையாவருஞ் சிரமேற்கொண்டுசென்று அவ்வவர்களுடைய வீடுகளையும் முற்றங்களையும் வீதிகளையும் அலங்காரஞ்செய்து அவ்வவர்கட்குண்டான செல்வத்திற்கேற்றபடி விருந்து சமைத்தார்கள். இவ்வாறு யாவரும் தங்கள் தங்களுடைய வீடுகளில் தனித் தனியாய் அத்தியந்த சந்தோஷத்தோடு விருந்துசெய்துகொண்டிருக்கின்ற நாளில் அந்நகரத்தில் சுக்கிலரென்று மோரேழைப்பிராமணர் நித்திய தரித்திர ராகவிருந்தும் அவரும் அவருடைய கற்பிற் சிறந்த வித்துருமையென்கின்ற பத்தினியும் மனமொத்துதினந் தினம் பிச்சையில் தங்களுக்குக் கிடைத்தமட்டும் ஒவ்வோர்திதிக்கு அமுது செய்வித்துக்கொண்டு காலந்தள்ளி வருவார்கள். அத்தினமும் பழையபடி சுக்கிலரானவர் தமது கையில் ஓர் தண்டமும் உபாதானப் பாத்திரமு மேந்திக்கொண்டு வீடுகள்தோறும் பிச்சைக்குச் சென்றனர். சென்றவர் அத்தினத்தில் ஒரு வீட்டிலேனும் ஓர் பிடியரிசியும் போடப் பெறாதவராகி வீணே பலவீடுகள்தோறும் அலைந்து திரிந்து மீட்டுந் தமது மனைக்கண்வந்து, தமது பத்தினியாகிய வித்துருமையைக்

கூவுப்பெண்ணே இது வரையில் கொஞ்சமாயேனுங் கிடைத்து வந்ததில் எஞ்சியிருப்பது புல்லரிசித் தவிடாயினும் அதனைப் பாகமாய்ச் சமைத்துவைக்கக்கடவை. இத்தினம் இந்நகரத்தாரெல்லாம் மஹோற்கடமூர்த்திக்கு விருந்து செய்கிறார்கள். யாமும் அவருக்கு விருந்து செய்து பிறவித்துன்பத்தை யொழித்துக் கொள்ளுவோமென்றனர். அவையனைத்தையும் வித்துருமைகேட்டு, சுவாமி! இந்நகரத்திலுள்ளவர்களெல்லாம் செல்வத்தின் மிகுந்தவர்கள். மஹோற்கடமூர்த்தியானவர் இத்தினம் அவர்கள் வீடுகள்தோறுஞ்செய்த அறுசுவை போஜனங் கூடியவுண்டியை உண்ணவிருப்பது நிச்சயமே. அவர் நமது ஏழைக்குடிலுக்கும் எழுந்தருளுவரோ வென்றனள் அதற்குச் சுக்கிலர் அவளைப்பார்த்துப், பெண்ணே! நம்மிடத்திலும் அவரதுபெருங் கருணையிருக்குமாயின் வருவரென்று சொல்லித் தாமவ்விடத்தினின்று நந்தவனத்திற்குச்சென்று வன்னிப்பத்திரமும் அறுகு மெடுத்துவந்து அவற்றில் பழுதில்லாதபடி ஆய்ந்து வைத்து, கங்கையிற் சென்று ஸ்நானம் பண்ணிப் பூசைசெய்து கொண்டிருந்தனர். அவருடையபத்தினியும் எஞ்சியிருந்த புல்லரிசியையெல்லா மெடுத்து ஆராய்ந்து மிக்க பாகத்தோடு சமைத்துவைத்தனள். இவ்வாறு அந்நகரத்தினரெல்லாம் மஹோற்கடமூர்த்திக்கு விருந்து செய்கிற சம்பிரமத்திலிருக்க, அதை நாரதமுனிவா றிந்து சனகர் முதலிய முனிபுங்கவர்கட்கு அறிவித்தனர் உடனே அவர்கள் காசிராசனுடைய அரண்மனையை நோக்கி வந்தார்கள் அம்மாத்திரத்தில் அரசன்விரைந்து எதிர்கொண்டு சென்று அவர்களைபக்தியோ டழைத்துவந்து தனித்தனி இரத்தின சிங்காதனங்களி லிருக்கவைத்து, பாதபூசை முதலிய வுபகாரங்களைச் செய்து, கற்பகம் காமதேனு-சிந்தாமணி- நவநிதி முதலியவைகளை யெல்லாம் அடுத்தபேருக்குக் கடைக்கண்பார்வையில் கொடுத்தருளத்தக்க வல்லபமும். மகத்துவமுடைய சுவாமிகளெல்லாம் அற்பனாகிய அடியேனிடத்தில் வந்தகாரணம் யாதோ அதனை யான்கடைத்தேறுமாறு திருவாய்மலர்ந்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அதற்கம்முனி புங்கவர்கள் அவனைப்பார்த்து, ஓ லோகபாலனே! தியான சமாதிகளாலே பெறத்தக்க பேறாகிய ஓர் நிட்களப்பொருளை! உனது மனைக்கண் உலகமெல்லாம் உச்சீவித்தற் பொருட்டு சகளமாயெழுந்தருளி யிருப்பதாகக் கேள்வியுற்ற யாங்கள், அதனைத் தரிசிக்கவும் அதற்குத் தொண்டுசெய்யும் பேற்றினைப்பெற்ற நின்னைக் காணவும் வந்தோமென்று சொன்னார்கள். அச்சமயத்தில் மஹோற்கட மூர்த்தி

அங்கன மெழுந்தருளினர். உடனே சனகர் முதலாயினோர் சுவாமியைப் பலமுறை பணிந்தெழுந்து வேதாகமங்களினால் அளவற்ற தோத்திரங்களைச் செய்து, அவருடைய கிருபையைப் பெற்றவர்களாகித் தம்பதிகளைச் சேருவதற்கு விண்ணப்பஞ் செய்தார்கள். அதற்கு மகோற்கடமூர்த்தி அம்முனிவர்களைப் பார்த்து அன்பர்களே! இராசனுடைய வீட்டிலே நம்முடனிருந்து விருந்து சாப்பிட்டு பின்னரும் கள் பதவிகளைச்சேரலா மென்று திருவாய் மலர்ந்தனர் அதறகம் முனிவர்கள் மகாபாக்கியமென்று ஆனந்தித்து கங்கையில் ஸ்நானஞ் செய்யச் சென்றார்கள். அந்நகரத்தின ரெல்லாந் தங்கடங்கள் மனைகளி லெல்லாப்போசனங்களையுஞ் சமைத்துவந்தார்கள். அப்போது சுக்கிலரென்கிற ஏழைப்பிராமணருடைய பத்தியை உலகத்திலுள்ளோர்கட்கு அறிவித்தற் பொருட்டு முன்னதாய் அவருடைய புற்கூரை வீட்டினுடைய முன்றிலின்கண் எழுந்தருளி நின்றனர் அதைக்சுக்கிலர்கண்டு எனது செல்வமவந்ததென்று ஆனந்தக்கடலாடி. ஓர்கமண்டலத்திற் சலங்கொண்டுவந்து அவரது திருவடிகளின் அபிஷேகித்து, அவ் வபிஷேகித்த சலத்தைத் தமது சிரத்தின்மீது புரோட்சித்துக் கொண்டு, புறவிருளையெல்லாந் தொலைந்து, அகவிருளுந் தொலைவெய்தும்படி உள்ளினுங்கொண்டு சிதலைபாற்றின்னப்பட்டிருக்கின்ற வோர் மணையின்மீது, எமது கர்த்தனை யெழுந்தருளச்செய்து, வன்னிப்பத்திரத்தினாலும் அறுகினாலும் திருவடிகள் குளிரும்படியாக மிகுந்த பத்தியோடு அருச்சித்து, வேதாகமங்களினாற் பலமுறை துதிசெய்து. வெகுநாள் பிரிந்ததைத மூடாமல் அங்கங்கே சூரியகிரணத்தாற் பாயப்பட்டிருக்கின்ற ஓரறைவீட்டில் சுவாமியை யழைத்துக்கொண்டு போயிருக்கவைத்தனர். உடனே அவர் பத்தினியாகிய வித்துருமை வந்து சுவாமியைப் பணிந் தெழுந்து. தான் சமைத்துவைத்த புல்லரிசிச் சோற்றையுங் குழம்பையும மோதகம் அப்பம் முதலியசிற்றுண்டிகளையும் ஓர் டரிகலத்தில் வைத்து ஓ கிருபாமூர்த்தியே! யேழை அடியேங்களாற் சமைத்துவைதத இவ்வுணவையும தேவரீர் அங்கீகரித்துக் கிருபையோடும் புசித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனள். அவளன்புக்குச் சுவாமி மனமகிழ்ந்து பத்தியோடு பரிமாறிய வுணவுகளை யெல்லாங் கிருபையோடு புசித்துக் கைபூசிமற்றோரிடத்தில் ஓர் தருப்பைச் சயனத்தின்மீது எழுந்தருளினர். பின்னர் சுக்கிலர் சுவாமியருகில்வந்து இளைப்பாறு கிறவரையில் தமது கையில் விசிறியேந்திப்பணி செய்திருந்தனர். இவ்வாறு மிகுந்த அன்போடு பணிசெய்திருக்கின்ற சுக்கிலரை சுவாமிபார்த்து அன்பனே! அதிதிபூசை செய்வாருள்,

உன்னையொப்பவர் இவ்வுலகின்கண் எவ்விடத்திலுமில்லை. நீபோய் போசனஞ்செய்து உனது மனைவியோடு மிங்ஙனம் வருகவென்று திருவாய்மலர்ந்தனர். அவ்வாறு சுக்கிலர் சென்று சுவாமி புசித்தருளிய பரிகலச் சேடத்தைத் தமதுமனைவியோடுண்டு, பின்னர் அவளுடன் மிக்க மனமகிட்சியோடு சுவாமியிடத்தில்வந்து பணிந்தனர் பணிந்தவர்கள் மீட்டுமெழுவதற்குமுன் சதுர்வேதங்களாலுங் காணுதற்கரிய கர்த்தர், தமது சுயரூபத்தை அவர்கட்குச் கடாட்சிக்கத்திருவுளங்கொண்டு யானைவதனமும் பத்துக்கரங்களும் விளங்கும்படியாய் ஏனைய அவயங்களெல்லாம் பிரகாசிக்க இருமருங்கிலுஞ் சித்திபுத்திகள் சமேதராய்ச்சிங்கவாகன மூர்ந்து தரிசனந்தந்தனர். அத்தரிசனத்தைக்கண்ட சுக்கிலரும் விதர்ப்பையும் அளவற்ற களிப்பிலாழ்ந்தவராகி விழிகளில் ஆனந்தபாஷ்பஞ் சொரிந்து, மீட்டும் பலமுறைபணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி அளவற்ற துதிகளைச் செய்தார்கள், அவர்களை எம்பெருமான் கிருபையோடு பார்த்தருளி, அன்பர்களே உங்களுக்கு வேண்டியவரங்களைக் கேளுங்களென்று திருவாய்மலர்ந்தனர். அதைக்கேட்டவர்கள் சுவாமியைத் தொழுதெழுந்து ஓ கிருபாமூர்த்தியே! அடியேங்கட்குத் தேவரீருடைய திவ்வியசரணாரவிந்தங்களில் இடைவிடாத பத்தியும் முத்தியுங் கொடுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவ்வாறே அவர்கட்கு சுவாமிகொடுத்தருளி, இந்திரன்குபேரன் முதலாயினோரும் பொறாமை கொள்ளத்தக்கபோக பாக்கியங்களை அவர்கட்குத்தந்து, மீட்டும் மகோற்கடப்பிள்ளையாராகத்திருவுருக்கொண்டு அரசனுடைய மனை யின்கணெழுந்தருளினர். அப்போது முன்னரே ஸ்நானஞ்செய்யச்சென்ற சனகாதி முனிபுங்கவர்கள் தங்கடங்கள் நியமங்களைமுடித்துக்கொண்டுவந்தனர் உடனே அரசன்தனது சுற்றத்தினரையெல்லாம் வருவித்து, சுவாமியை அமுது செய்வதற்கழைத்தனன். அந்நகரத்தினரும் வொருமிக்கவந்து சுவாமியையழைத்தார்கள். அவர்களை சுவாமிபார்த்து இலையிடுங்கள். இதோவந்தனமென்று திருவாய்மலர்ந்தனர். அதைக்கேட்டமாத்திரத்தில் யாவரு மனமகிழ்ந்து தத்தம் வீடுகளை நோக்கிச் சென்றார்கள் அவர்கள் செல்லுமுன்னம் மகோற்கடப்பிள்ளையார் அவ்வவர்கள் வீடுகள்தோறு மெழுந்தருளி யிருந்தனர். அதை அவ்வவர்களுங்கண்டு அந்தோ? பிழைத்தனம்பிழைத்தனமென்று திடுக்குற்றெழுந்து பணிந்து மிக்க

வுள்ளன்போடு சுவாமிக்கு அமுதுபரிமாற ஆரம்பித்தார்கள். அரச னுடைய மனையிலும் எப்போதும்போலத் தாம் சனகாதி முனிவர் களும் அரசனும் அவனுடைய பந்துக்களும் தமது பந்தியிலிருந் துண்ணும்படியாகத் திருவமுதுசெய்தனர். ஏனையர் மனைகளிலும் அந்த ஏககாலத்திற்றானே ஓர் வீட்டில்தயிலமிட்டுக்கொண்டுஸ்நானஞ் செய்கின்றவராயும், ஓர் வீட்டில் சந்தியாவந்தனஞ் செய்கின்றவ ராயும், ஓர் வீட்டில் தியானம் செய்கின்றவராயும், ஓர்வீட்டில் போச னஞ் செய்கின்றவராயும். ஓர் வீட்டில் சங்கீதங் கேட்கின்றவராயும், ஓர்வீட்டில் நாட்டியம் பார்க்கின்றவராயும் இருந்தனர்.

இவ்வாறு வீடுகள்தோறும் வேறுவேறாக வேண்டியபடி விளை யாடல் செய்து, அந்த நகரத்தின்கணுள்ள பேர்க்கெல்லாந் தமது திரு வருளைவழங்கி, அளவற்றபாக்கியங்களையும் அவர்கட்குக் கொடுத் தருளினர். இவ்வற்புதத் திருவிளையாடல்களை யெல்லாம் சனகாதிய முனிபுங்கவர்கள் பார்த்துப்போனந் தக்கடலிற் றிளைத்தவர்களாகிய அத்தினம் முழுவதும் மங்களமனையிருந்து, மறுநாள் முதல் அந்நகரத் தின்கண் சிற்பசாஸ்திரவிதிப்படி ஓராலயஞ்சமைத்து, அவ்வாலயத் தில் மகோற்கட மூர்த்தியினுடைய திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து, அம்மூர்த்திக்குத்தமது அபிதானத்தால் சனகாதிகணேச ரென்று திருநாமந்தரித்து, அவ்வாலயத்தருகில் ஓர்தடாகந் தொடு வித்து, அத்தடாகத்திற்குக் கணேசகுண்டமென்று பெயரிட்டு, அதில தாங்கள் ஸ்நானஞ்செய்து. கணேசமூர்த்திக்கும் அத்தீர்த்தத்தால அபிஷேகமாட்டி, வேதாகமவிதிப்படி பலநாள் பூசித்துவந்தார்கள். அவர்களிடத்தில மகோற்கடமூர்த்திக்குக் கிருபையுண்டாகி சித்தி புத்திகள் சமேதராய் சிங்கவாகனமூர்த்தியாய்யானைமுகமும் பத்துக்கரங் களும் விளங்கும்படியாக அவர்கட்குக் காட்சிகொடுத்தருளினர். அக் காட்சியைக்கண்டவுடன் அம்முனிபுங்கவர்கள் ஆனந்தக் கடலாடி அளவற்றதுதிகளை அன்போடுசெய்து பணிந்தார்கள் அவர்கட்குள்ளன் னையபோரடிமை யாகவுடைய கணேசமூர்த்தியானவர் தவத்திலும், யோகத்திலும், ஞானத்திலும்; நற்குணத்திலும மேன்மையாகக்கடவீ ரென்று வரங்கொடுத்தருளி; மீட்டுமுன்போலவே மகோற்கடமூர்த்தி யாகத் திருவுருக்கொண்டு விளையாடல் செய்திருந்தனர் பின்னர்சனக ராதியமுனிவர் மிகுந்த அன்பினால்சுவாமியை விட்டுப்பிரியமாட்டாத வர்களாகி, அந்நகரிற்றானே சிலகால மிருந்து தாங்கள் பிரதிட்டை செய்த கணேசமூர்த்தியை, முற்றினும்பூசித்துத் தங்கடங்கள் பதவி களைநோக்கிச்சென்றார்கள். சனகர்முதலிய நால்வராலும் பூசித்த அம்

மூர்த்தியைப் பின்னர் தேவர்கள் முனிவர்கள் முதல் அந்நகரத்தி லுள்ளோர்யாவரும் பூசித்துச்சகல துன்பங்களினின்று நீக்கி, மகோற் கடமூர்த்தியினுடைய கிருபையும், அளவற்றவரங்களையும் பெற்று வாழ்ந்திருந்தார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இது காறும் தமது அறக்கருணையால் அடியார்களுக்குப் பற்பல திருமேனிகளைக்கொண்டு செய்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இப்பால் தமது மறக் கருணையால் கொடியவனாகிய நராந்தகனோடு யுத்தஞ்செய்த திருவிளை யாடலைச் சொல்லுவோம் கேட்பீர்களாக

பிரமன்விண்டு உருத்திரனென்னும் நாமங்களைப்பெற்ற திரி மூர்த்திசொரூபமாக விளங்கிச்சராசரப் பிரபஞ்சங்களை யெல்லாம் படைத்துங் காத்துஞ் சங்கரித்து மிராநின்ற வேதாகமங்களாலுந் தேடிக் காண்பரிய மூலாதாரக் கடவுளென்னும் மகோற்கட மூர்த்தி யானவர், நராந்தகனா லேவப்பட்ட அவுணவீரர்களை யெல்லாம் மீட்டுந்திரும்பச் செல்லவிடாமல் சங்கரித்து வந்தபடியால், அப்பாதகன் கோபந்தலைக்கொண்டு, நாமனுப்பியவீரர்கள் மகோற் கடனைக் கொன்றார்களோ? அல்லவெனின், மாண்டார்களோ? இது காறும் ஒருவரேனுந் திரும்பிவரக்காணோமே? இதை விரைவிலறிந்து கொள்ள வேண்டுமென்று தனக்குள் உத்தேசித்து, நூலனென்றுஞ் சகலனென் றுஞ்சொல்லுகின்ற இரண்டு தூதர்களைக்கூவி, நாம் மகோற்கடனைக் கொன்று வரும்படியேவிய தூதர்களில் ஒருவரேனும் மீண்டு வரக்கா ணோம். அவர்கள் எங்கு எவ்வாறாயினரோ? அதனை விரைவிலறிந்து வரக் கடவீர்களென்று ஏவினன். உடனே அத்தூதர்கள் மானிட வடிவோடு காசிநகரத்துள்வந்து, நராந்தகனுடைய வீரர்களையெல் லாம் மகோற்கட மூர்த்தியானவர் ஒவ்வொரு விளையாட்டினால் நாசஞ் செய்ததையைக் கேட்டுத் திடுக்குற்று, வீதியிலே சிறார்க ளோடுமே விளையாடல் செய்கின்ற மகோற்கட மூர்த்தியையுந் தமது மலவிருளொழியும்படியாகத் தரிசித்துப், பார்வைக்கெளிய னாய்ப் பலசிறார்களோடுமே விளையாடுமிவன், நமது சுத்தவீரர்களை யெல் லாங் கொன்றானென்பது என்ன ஆச்சரியம்? இவனைநாமே பிடித்துக் கொன்று, நம்மையனுப்பிய நராந்தகற்குப் பெருமகிட்சியை யுண்டா க்குவோமென்று நினைத்து, தங்கள் சுயரூபத்தோடு மெழுந்து மகோற்கட மூர்த்தியினுடைய திருக்கரங்களைப் பிடித்தார்கள். அப் போது சுவாமி, அக்கைகளையுதறி மீட்டுமவர்களைத் தமது திருக்காரத்

தாற் பிடித்துக்கொண்டு, தாமுமவர்களைப்போல பெரிய ரூபமெடுத்து அவ்விருவரையும் பூமின்கண் அறையப்போயினர். அதற்கப்பாதகர்கள் பயந்து துதிசெய்து சுவாமீ! அடியேங்கள் நராந்தகனு லேவப்பட்ட தூதர்கள். அடியேங்களைத் தேவரீர் கொல்லாது காத்தருள வேண்டு மென்று பிரார்த்திக்தார்கள். அதைக் கிருபைக் கடலாகிய கர்த்தன் கேட்டு, அவர்களை நிலத்தில் விடுத்து இதுகாறும் பற்பல பஞ்ச வடிவங்களோடு நம்மிடத்து வந்த உங்கள் வீரர்களை யெல்லாங் கழுகுகட்கும் பருந்துகட்கும் இரையாக்கினேம். இன்னும் வரத்தக்கவர்கள்யாவரேனும் இருக்கின் அவர்களையுங் கொல்லக் காத்திருக்கின்றேம். அறிவென்பது எள்ளத்தனையு மில்லாத நராந்தகனிடத்தும் தேவாந்தகனிடத்தும் நீங்கள் சென்று இதுகாறு முடித்ததையும் இனி முடியப்போகின்றதையுஞ் சொல்லுவீரேல், இதுகாறு முடிந்தமையை உலக முழுவதுஞ் சொல்லும் இனி முடிக்கப்போகின்றமையை யாமே சொல்லக்கேண்மின்கள் அவர்களிப்போது அனுபவிக்கும் பெருஞ்செல்வத்தினையும் வலியபிராணனையும் இன்னுஞ் சிலநாளனுபவிக்க வேண்டுவரர்களாயின் தாங்கள் செலுத்திவருகின்ற கொடுங்கோலைக் கடந்து, உண்மையாகிப வேதநெறிகளை வளர்த்து தேவர்கட்கெல்லாம் அவ்வவர்களுடைய பதவிகளை முன்போல அனுபவிக்கக் கொடுத்து, தீவினையிருளின்றோடு முடிந்ததென்று உலகமெலாஞ் சொல்லிச் சந்தோஷமடையும்படியாகச் செங்கோலை நடாத்திவரச் சொன்மின்கள், அச்செல்வத்தினையும் போக்கடிக்குக் கொள்ள வேண்டுவார்களாயின், இத்தினமே தங்கள் சேனைகளோடு யுத்தத்திற்கு வரசசொல்லுங்கள் இதைச் சொல்லும நிமித்தமே உங்களைக் கொல்லாது கிருபையோடு விடுத்தனம். நீங்கள் விரைவிற் சென்று அவர்கட்கு அறிவியுங்களென்று விடைகொடுத்தனுப்பினன்.

உடனே அத்தூதர்களியாவரும், உய்ந்தோமுய்ந்தோமென்றோடி நராந்தகனிடத்திற் சென்று பணிந்தெழுந்து ஆண்டவனே! தேவரீருடைய கட்டளையின் படியே சென்ற நமது வீரர்களெல்லாம் அம்மகோற்கடனை முன்னின்று வெல்லுவது மிகவும் அரிதென்று நினைத்து தனித்தனி வெவ்வேறு மாயா ரூபங்களைக் கொண்டு சென்று சகலரும் அக்காசிப் பட்டணத்தில் அச்சிறுவ னொருவனு லிறந்தார்கள். அவர்களுட் சிலர்கள் இறந்த விவரங்களை யெல்லாங் கேள்வியுற்ற வண்ணஞ்சொல்லுகின்றேம்? நந்துரனென்பவனும், விகண்டனென்பவனும், அப்பட்டணத்துப் புரோகிதர்களாகிப் போயிறந்தார்கள். பதங்கனும், விதுலனும் காற்றுருக்சென்றிறந்தார்கள். கூடன்சிலையாகி யிறந்தனன்

காமனும் குரோதனும் கழுதைகளாகிச் சென்றிறந்தார்கள் குண்டன் யானைவடிவங் கொண்டிறந்தனன் சிரம்பை அச்சிறுவனுக்குத் தனது கையினால் விதைக்காயிலமிட்டிறந்தனள் சுவாலாமுகன் நெருப்பாகி யிறந்தனன். விதாரணன் வாயுவாகி யிறந்தனன் மேகன் சோதிடனாகி யிறந்தனன். கூடனுங் கந்தரனுங் கிளையுந்தவளையு மாகியிறந்தார்கள். அந்தகன் துங்கன் அப்பன் என்றுள இவர்கள் இருள்மலை மழையு மாகியிறந்தனர் பிரமரை அதிதியாகி யிறந்தனள். இவ்வாறு இங்கிருந்துசென்றமேன்மை பாராக்கிரமத்தினை யுடையநமதுவீரர்களெல்லா மிறந்தார்கள். யாங்களும் அச்சிறுவனைப் பிடிக்கநேர்ந்தோம். அப்போதச்சிறுவன் எங்கட்குச் செய்ய நேர்ந்தகோலாகலத்திற்கஞ்சி உடனே கீழ்ப்பணிந்தோம். அதற்கவன் எங்களை மாத்திரம் விடுத்து உங்களரசர்கட்குச் செல்லுமுன் உயிரும் வேண்டுமானால் அவர்கள் இதுமுதலேனும் செங்கோல்செலுத்துக: இல்லையெனில் இகதினமே சகல சேனைகளோடும் போர்க்களத்திற்கு வருகவென்றுசொல்லி எங்களை விடுத்தனன். அச்சிறுவனோவெனில், ஆயுதங்களுமில்லாதவன் அருகிற்றனக்கொருதுணையு மில்லாதவன். சிறிதுஞ் சேனையில்லாதவன் பலசிறார்களோடு திண்ணையிடத்திற்சென்று விளையாடுந் தகுதியுடையவன். இத்தன்மைத் தானவன் தன்னைப்பெரிதாக்கின்ற சதுருக்களை இமைப்போதி லழிக்கின்றான் ... சகலமுமவனேயல்லவா! அச்சிறுவனுடைய பாராக்கிரமத்தையும் அவன் இதுகாறும் நமரவரைச்செய்த கொடுமைகளையும் யாமறிந்தவளவினுங் கேட்ட வளவினுஞ் சொன்னோம் இனித் தேவரீர் சித்த மடியேங்கள் பாக்கியமென்று சொன்னார்கள்.

அவையனைத்தையும் நராந்தகன்கேட்டுத் தனக்கு அருந்துணையாகவிருந்த சுற்றத்தினரும் அசுரர்களும்போய், ஒருசிறுபையனுக்குப் பின்னிட்டிறந்துபோனார்களே என்னும மனவருத்தமானது ஒரு பக்கத்திலிருக்க, மானமுங்கோபமும் மேற்பட்டவனாகி, உடனே தனக்கு உரிமைபாராட்டவல்ல மந்திரிகளை யழைத்து இனிநாமே காசிப் பட்டணத்திற்சென்று அச்சிறுவனையழிக்கவேண்டி யிருத்தலால், இந்நிமிஷத்தில் நமது சேனைகட்கெல்லாம் யுத்தத்திற்காயத்தமா யிருக்கும்படிகட்டளை செய்வீர்களென்று ஆக்கியாபித்தான். அம்மாத்திரத்தில் அவ்வமைச்சர்களும் புத்தியென்று தொழுது வெளிவந்து சில காரியக்காரர்களையழைத்து நமதுநால்வகைச்சேனைகளும் நிமைப்போதில் யுத்தத்தோடு இங்ஙனம் வந்துசேர்வதாக வள்ளுவனைக்கொண்டு எங்கும் முரசறைவிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டனர் அக்க

ட்டளையை யவர்கள் வள்ளுவனுக் கறிவிக்க, அவனும் பேரிகையோடு ஓரானையின் மீதேறி நராந்தகனுடைய சேனைகள் எவ்வெவ் விடங்களிலிருக்கின்றனவோ அவ்வவ் விடங்களிற் சென்று முரசறைந்தனன். அம்முரசி னோசையைக்கேட்ட சகல சேனைகளும் உடனே சர்வாயுத பாணியராக நராந்தகனுடைய அரண்மனை வாய்தலில்வந்து நெருங்கினார்கள்.

இப்பால் நராந்தகனானவன், தனது கொலுச்சபையைக் கடந்து ஆயுதசாலையிற் புகுந்து வஜ்ரகவசத்தை யெடுத்து விசாலமாகிய மார்பிலணிந்து, திவ்விய பாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புபெய் தூணியை முதுகிலிறுக்கி, விரல்கடொறுங் கோதைகளை மாட்டிப் பர்வதாகிருதியாக விளங்குந் தனுசைக் கரத்திற் கொண்டு தும்பை மாலையைக் கிரீடத்திற் சுற்றித் தண்டாயுதம் வேல் சக்கிரம் முதலிய ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு வெளிவந்து, அளவற்ற திவ்விய அசுவங்களைப் பூட்டப்பட்டு நவரத்தினமயமாய் சொலித்திருக்கின்ற தனது சொர்ண இரதத்தின்மீது சிங்கராசனைப்போலத் தாவியேறி, யாவரும் இந்திரனோ? இவனென்று சந்தேகங் கொள்ளும்படிக்குக் கெம்பீரமாய் வீற்றிருந்தனன். அத்தருணத்தில் தனக்குத் தோழராய்ப் பிராணபதமாக விருக்கின்ற அமைச்சர் முதலாயினோர் சர்வாயுத பாணியராய்த் தங்கள் தங்கள் வாகனங்கள்மீது ஏறினர். வீராதி வீரராக விருக்கின்ற அளவற்ற சேனைத்தலைவர்கள், பல புரவிகளைப் பூண்டிருக்கின்ற தேர்களிலேறி வில் வாள் வேல் சக்கரம் பிண்டிபாலம் முசலங்கப் பாணமாகிய ஆயுதங்களையுங் கொடியபாண விதங்களையும் தாங்கினவர்களாய்த் தமது காவலிலிருக்கின்ற சகல சேனைகளையுங் கூட்டிக்கொண்டு சத்தசாகரங்களும் பெருகியதைப்போல ஆரவாரித்து அத்திர சத்திரங்களை வராளமாகத்தாங்கி நமக்குப் போர்கிடைத்த தென்கிற ஜயவுற்சாகத்துடன் வந்து மகாபாதகனாகிய நராந்தகனுடைய இரதத்தைப் புடைசூழ்ந்து நெருங்கினர்.

இப்பால் தங்களரசன் குறிப்பையறிந்த சேனாதிபதிகளும் தத்தம் படைகளைத் தூண்ட அதனுள் பலவெள்ளக் கணக்கில் கடல்போலவிளங்குஞ் சேனைகளும் அரண்மனை வாய்தலினின்றும் வெளிக்கொண்டு இரணபேரி ஜயபேரி வெற்றிச்சங்கம் - சின்னம்-கோடு ஆகுளிகாளம் பறைகுட - முழா சல்லரி - மல்வரி - முதலிய பொற்பறைகள் கணகணவென்று முழங்கவும், துசபடங்கள் வாகனத்தைமூடிப் படபடவென்றசையவும், பூரணச்சந்திரனைப்போல முத்துக்களினாற் சோடித்த

க்கிறந்த தவளக்குடைகள் நான்கு மருங்குங் கவிக்கவும், மந்திரகிரி யைப்போல விளங்குந்தேர்கள் தெற்கரத்தொணிகளைச் செய்தோடவும் மதயானைகள் வீறிட்டுப்பகைவரைச் சீறிப் பிரசண்ட மாருதத்தைப் போலவேகமாய் நடக்கவும், புரவிக்கூட்டங்களானவை நான்கு பாதங் களினும், பூண்டிருக்கின்ற பொன்வெண்டயங்கள் கலிக்க, அலைகளுக் குச் சமதையாகத்தாவி, வானவெல்லையினுந் திசைகளினுஞ் சமுத்திர ங்களினும்பாய்ந்து இடிமுழங்கினைப்போலக் கனைத்தோடவும், பிறை யையொத்த கோரதந்தங்கள் விளங்க, அரக்கினுஞ் சிவந்து உருண் டகண்களை யுறுத்தித், தீப்பொறிகள் சிதறப்பார்த்துப் பூமிநடுங்கும் படியாகக் கால்களைப் பெயர்த்துவைத்து நடக்கும் ஆலகாலத்தை யொ த்த அவுணப்படைகள் வீராவேசங்களுடன் சிங்கநாதமும் அட்ட காசங்களைச் செய்து ஆர்ப்பரிக்கவும், சத்தசாகரங்களும் ஏககாலத்தி ல் ஒன்றுய்க்கூடி முத்தியடைவருவது போல அளவற்றகாடு களையும் மலைகளையுங் கடந்து காசிப்பட்டணத்தைவந்து வளைத்துக் கொண்டு, அப்பட்டணத்து நாற்புறத்துஞ் சூழ்ந்த வூர்களை யெல்லாம் நெருப்பி ட்டுக் கொளுத்தியும் கொள்ளையிட்டும் சகலவுயிர்களையுங் கொன்றும் தங்கள் தங்கள் வயிறுநிரம்பத் தின்றும் திரிந்துகொண்டிருக்தார்கள்.

அச்சம்பவத்தை யறிந்த சிலதூதர்கள் காசிராசனிடத்தி லோடி அறிவித்தார்கள், அதைக்கேட்ட மாத்திரத்தில் அரசனுக்கு அதிக கோபமுண்டாகி உடனே அமைச்சர்களை வரவழைத்து நமது பட்ட ணத்தின்மீது நராந்தகன் படையெடுத்து வந்தான். நீங்கள் விரைவில் நமது நால்வகைச் சேனைகளையும் போர்க்கோலத்தோடு வெளிப்படும் படி உத்தரவுசெய்யக் கடவீர்களென்று ஆக்கியாபித்தனன். அதற் கவ்வமைச்சர்கள், அரசனைப்பணிந் தெழுந்து, ஆண்டவனே! பிரகற் பதி தேவருடைய புத்திக்கு மேலான புத்தியையுடைய தேவரீருக்கு மற்றையர் ஆலோசனையைச் சொலலப் புகுவது அறிவின்மையாயினும், ஒவ்வோரமையங்களில் அடியேங்களால் சொல்லப்படுவன வற் றைத் தக்கபடி ஆராய்ந்து சொல்லவேண்டு மென்று நீதிநூல்களிலுள் ளபடியால், அவ்வாறே அடியேங்கள் மனத்தின்க ணுண்டாகிய யோ சனைகள் சிலவுள. அவைகட்குத் தேவரீர் செவிகொடுத் தருளல்வேண் டும். படையெடுத்து வந்த வேற்றரசர் மெலியார்களாயின் அவர்களை யெதிர்த்து யுத்தஞ்செய்தழிக்க வேண்டும் ஒத்த வலியினராயின் அவ ர்களைக் கூட்டிவந்து துணைகளைப் பேதித்துத்தன் வசப்படுத்திக் கொண் டு பின்னர்வெல்லு மாற்றலினுலவர்களை வெல்லல்வேண்டும் இவ்விரண் டு மின்றி வலியர்களாயின் அவர்கட்குக் கன்னி வத்திரம் பொன்முத

வியவைகளைக் குறைவறக்கொடுத்தும், உவகைபெற விருந்தூட்டியும், மனமிரங்கும்படித் துதிசெய்தும், சிநேகஞ்செய்து கொள்ளல்வேண் டும் இவையனைத்தும் அரசர்க்குணர்த்தி யிருக்கின்ற நீதிநூல்களின து துணிபு நாமோ எளியர்கள் நமக்குப் பகையாகிவந்த நராந்தகனோ மிகவும் வலியன் அவனுடைய சேனைகளெல்லாங் கடல்போலப் பிரகா சிக்கின்றன. நமது சேனைகள் ஓர் சாலிற்றங்கிய நீர்போலிருக்கின்றன. அவனுடைய பராக்கிரமம் சூரியகிரணம் போலச் சகல புவனங்களினு ஞ் சொலிக்கின்றது. நமது பராக்கிரமமோ மின் மினிப்பூச்சியி னொளி யைப்போல மின்னுகின்றது. அடியேங்கள் சொல்லிய இவ்வாலோச னைகளெல்லாம் அடிகளுடைய திருவுள்ளத்தினு முண்டு. ஆதலால் மே லான சேனைகளோடும் பராக்கிரமத்தோடும்வந்த அக்கொடியவனாகிய நராந்தகன் நம்மைத் துன்பப்படுத்தாத விதமாக நாமவனுடையபாத த்தைச் சரணமடைவதே முடிவு, இம்முடிவைத் தீர்க்காலோசனை செ ய்து விரைவில் நயந்து கொள்ளவேண்டுவதே நம்போலியர்க் கேற்ற கருமமென்று சொன்னார்கள். இவையனைத்தையும் அருகிற் கேட்டுக் கொண்டிருந்த புரோகிதர் முதலாயினோரும், இப்போது அமைச்சர் களாற் கூறப்பட்ட கருமமே தக்காலத்தில் முடித்துக்கொள்ள வேண் டிய கருமமென்று சொல்லினர். பின்னர் சகலபுவன கர்த்தா வாகிய மகோற்கட மூர்த்தியினுடைய திருவடித்தாமரைகளில் மடைதிறந் தாலொத்த பத்தியை வைத்திருக்கின்ற காசிமகாராசன் புன்னகை செய்து. நிகரற்ற ஆலோசனைகளை யுணர்த்தவல்ல மனுநீதிகளில் குறை வற்ற கேள்விகளையுடைய அமைச்சர்களே! நாம் கொடியபாதகனாகிய நராந்தகனுக்கு எளியரா மென்பது திண்ணமே. ஆயினும், அநாதிவஸ் துவாய் ஆதிமத்தியாந்தரகிதராய் சகல பிராணிகளிடத்துங்காரணபூ தமாகப் பொருந்தி நடிப்பித்துக்களித்திருக்கு மேலவராய் ஒப்பாரு மிக்காரு மில்லாத மகோற்கட மூர்த்தியே நமமையெல்லாம்பாதுகாத் திரட்சிக்கும் பொருட்டு இங்ஙனம் எழுந்தருளியிருக்கின்றனர். அத் தேவனும் அப்பாதகனுக்கு எளியரோ! இப்போது படையெடுத்துவ ந்த இவ்வந்தகனையும், இவன் சகோதரனாகிய மற்றோரந்தகனையும் இமைப்போதில் சங்கரித்து எல்லாவெற்றிகளும் நம்மைச் சேரும்படி யாம் ஒன்றுன பரமேஸ்வரனே நம்மிடத்தி லெழுந்தருளி யிருக்க, நம க்கினி யென்னகுறை நேரவிருக்கின்றது? அன்பர்களே? இனிநீங்கள் யாதொன்றிற்கு மஞ்சாதுநமது பராக்கிரம மெல்லாம் பாழாகாதபடி விரைவில் சகலசேனைகளோடும் யுத்தத்திற்காயத்தமாகக் கடவீர்க ளென்று ஆக்கியாபித்தனன், அதன்மீது அமைச்சர்களும் மற்றுபரி

சனங்களும் அரசனைப் பணிந்தெழுந்து ஆண்டவனே! மேலான கடவுள் இங்ஙன மெழுந்தருளி யிருப்பதைச் சிறிதும் யோசியாது அடியேங்களுடைய புத்திமயக்கத்தில் பற்பலகூறினம். அக்குற்றங்களைத் தேவரீர் பொறுத்தருளல் வேண்டும். இதோநமது நால் வகைச்சேனைகளையும், ஆயத்தப்படுத்து கின்றோமென்று சொல்லி, அந்தச் சேனைகளிருக்கு மிடங்கடோறும் வள்ளுவனைக்கொண்டு முரசறைவித்தார்கள் அம்முரச வோசையைக்கேட்ட சேனைகளெல்லாம் போர்க்கோலத்தோடும் வெளிக்கொண்டுவந்து அரசனுடைய அரண்மனைத்தலை வாயலை நெருங்கினார்கள்.

அதற்குமேல் அரசன் மூலகாரணக்கடவுளாகிய கணேச பூசை செய்து. போசனாதிகளை முடித்துக்கொண்டு, ஆயுதசாலையுள். நுழைந்து பொன்மலையாகிய மகாமேருவின்மீது சந்திரனது சோடசகலைகள் பரவிக்காட்டுவதுபோல் வயிரக்கவசத்தைச் சொர்ணவடிவைப் பெற்ற மார்பிடத்திறுக்கித் திவ்வியபாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்பு பெய்தூணியை முதுகிற்கட்டி இரத்தினமயமாகிய புட்டில்களை விரல்கடோறு மணிந்து பகைவருயிரை யுண்ணும் யமனை யொத்த பாரித்தவில்லைத் தொழுதெடுத்து இடக்கரத்திற்பற்றிப் பற்பல தேவாஸ்திரங்களை வலக்கரத்திற்றாங்கி சிரோரத்தினமயமாகச் சோடித்திருக்கின்றகிரீடத்தின்மீது தாமரைமாலையைச்சூடி தண்டாயுதம் வேல், சக்கரம் முசலம்-பாசம்முதலிய ஆயுதங்களை யெடுத்துக் குகையிலிருந்து புறப்பட்ட இராசகண்டீரவத்தைப்போல வெளிவந்து சத்தசாகரங்களும் பெருக்கெடுத்ததுபோல அதிகவுற்சாகங்களுடன் ஆர்ப்பரித்திருக்கின்ற நால் வகைச் சேனைகளையு மழைத்துக்கொண்டு, அரமனை வாய்தலில் வந்திருக்கின்ற சேனாதிபதிகளை யெல்லாங்கண்டு. அவ்வவர்கட்கு அளவற்ற கிராமங்கள் யானைகள் குதிரைகள் ஆயுதங்கள் ஆபரணங்கள் முதலிய் வெகுமதிகளைச் செய்து பொன்வண்டில் அச்சு - மச்சு - குத்துக்கால் கொடுங்கை இடக்கியம் கொடை முதலிய சிங்காரங்களைக் கொண்டு நவரத்தினமயமாகப் பிரகாசித்திருக்குந் தேரின் மீதாரோகணித்து, விருதுக் கொடிகள் மகாதோரணங்கள் துசபடங்கள் வெண்சாமரைகள் வெண்பட்டுக் குடைகள் ஆலவட்டங்கள் மயிற் பிஞ்சுகள் முதலிய சின்னங்களானவை நாற்புறத்தும் விளங்க, தோற்கருவி துளைக்கருவி-கூற்றுக்கருவி-சஞ்சக்கருவி - நரம்புக்கருவி யென்னும் ஐவகைக்கருவிகளில் பதினெண் வாத்தியங்கள் அண்டங்களதிர முழங்க, அளவற்ற பெரியோர்களும் முனிவர்களும் மங்கலவாழ்த்து சொல்லும்படியாக அரமனைவாயிலைக் கடந்துதனது பகைவர் வடவையைப்

போலச்சீறி யெதிர்பார்த்திருக்கும் இரணக்கள வெல்லையைச் சேர்ந்து தனது இட்டதெய்வத்தினை மனதிற்றியானித்து, மதம் பொழிகின்ற யானைகட்குச் சிங்கமானது தனது வரைக்காட்டுமாறு கர்ச்சனையிடுவதுபோலச் சத்துருக்களடங்கும் படியாக வெற்றிச்சங்கினை முழக்கினன். அம்முழக்கினைக் கேட்டநராந்தகனுந் தனது இட்டதெய்வத்தினைத் தியானித்து வெற்றிச் சங்கினை முழக்கினன்.

பின்னர் அரசர் தம்பிரான் சேனைகளும், அவுணர் தம்பிரான் சேனைகளும் அதிக வேகத்தோடு ஒன்றோடொன்று நெருங்கி இரதவீரர்களோடு இரதவீரர்களும், யானைவீரர்களோடு யானை வீரர்களும், குதிரை வீரர்களோடு குதிரைவீரர்களும். பதாதிவீரர்களோடு பதாதிவீரர்களும், கைகலந்தெதிர்த்து ஈதுதங்களினம் ஈதுபிறரின மென்று தெரிந்து கொள்ளுவதற்கு வமையாக ஆகாயமெங்குந் தூளிபடலங்கள் போர்ப்ப அத்தூளிபடலங்களை உதிரவெள்ளங்கள்மாய்ப்ப, இவ்வித ஆடம்பரங்களோடு இரண்டினங்களுஞ் சமர்புரியுங்காலத்தில். இரதமற்றவர்கள் யானை மீதேறியும், யானையற்றவர்கள் குதிரைமீதேறியும், குதிரையற்றவர்கள் நிலத்தின் மீதிருந்தும், நிலத்திலிருந்தவர்கள் வேறு கதியின்றிமாய்ந்தும் வாளற்றவர்கள் வாளிகளைத்தொடுத்தும், வாளியற்றவர்கள் வேல்களைவிடுத்தும், வேலற்றவர்கள் சூலத்தினைச் செலுத்தியும், சூலமற்றவர்கள் சக்கரத்தைத் தூண்டியும், சக்கரமற்றவர்கள் மழுவையேந்தியும் மழுவற்றவர்கள் எழுவைக்கடாவியும், எழுவற்றவர்கள் கதையற்றவர்கள் முசலத்தினையடுத்தும், முசலமற்றவர்கள் விசனங்களி லிருந்தும், இவ்வாறு யாவரும் அளவற்ற படைகளைமாறி மாறி எடுத்து யுத்தஞ்செய்தபோது இருவகைச்சேனைகளினுங்கணக்கற்ற ரூபர் மண்டைதிறந்தும் மூளைகள் சிதறியும்: விழிதெறித்தும், வாய்கள் பிளந்தும், பற்களுதிர்ந்தும், கழுத்துகளொடிந்தும், புயங்கள் சரிந்துங், கரங்கல் முறிந்தும், வயிறுகிழிந்தும், குடல்களிசைந்தும், துடைகள் தகர்ந்தும், கால்களொடிந்தும்போயினர். அப்போதவ்வெல்லையெங்கும் பற்பலகோடி கவந்தங்கள் கூத்தாடின, பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் அங்கிருக்கின்ற நிணமாகங்களை யெல்லாந் தெவிட்ட வுண்டு அரசர் பெருமானுடைய வீரத்தினையும் அவுணர் பெருமானுடைய வீரத்தினையும் புகழ்ந்து பாடிக்கொண்டு திரிந்தன, கழுகு-பருந்து காக்கை முதலியவைகள் நிணங்களை யெல்லாந் திருத்தியாகப் புசித்து வானவெல்லையிற் பந்தலிட்டுலாவின, நாய் நரி முதலியவைகள் பிணங்களைப்பிடுங்கித் தின்று ஊளையிட்டுத் திரிந்தன? அளவற்ற வீரர்தங்கள்

முடிசிதறிக்க வந்த தங்களாகியும் பட்பல வாட்போர்களை விளையாடிச் சொர்க்கம் புகுந்து அங்கு அரம்பையருடைய நடனங்களைப் பார்த்துக்கொண்டு மிருந்தார்கள்: இவ்விதமாக இருவகைச் சேனைகளினுமுள்ள இரதகஜதுரகபதாதிகள் அளவற்றன மாண்டும், காசிராசனுடைய அமைச்சர்களும் சேனைத்தலைவர்களும் எவ்வளவேனு மனத்தின்கணச்சமில்லாமல் மிக்கபராக்கிரமத்தோடு அவுணவீரர்களை யெல்லாம் இடைவிடாது அதஞ்செய்து கொண்டிருந்தனர் அதனால் அவுண சேனைகள் மிகுதியும் வலியுள்ளன வாயிருந்தும் தயிரியமும் பராக்கிரமமுங் குறைபட்டவர்களாகிக் காசிராசனுடைய சேனைகட்கெதிர் நிற்கமாட்டாது பின்னிட்டோடத் தலைப்பட்டார்கள்,

இப்பால் அதனை நராந்தகன்கண்டு, ஆ, ஆ! நமதுசேனைகளுடைய பராக்கிரம மிகநன்று மிகநன்று வெனக்கோபநகைகொண்டு, ஓ அறிவற்றவர்களே ! அற்பசேனைகள் செய்யும் போரினுக்கஞ்சி ஏனோடுகின்றீர்கள், நின்மின்கள் நின்மின்களென்று கையமர்த்திப் பிரளயத்திற்குநிகரான அளவற்ற ஆயுதங்களை நாற்புறத்தும் வீசிக்கொண்டு அதிகவீராவேசத்துடன் ஓடிவந்து தானேயுத்தஞ்செய்ய நேர்ந்தனன். அதனைப் பின்னணியிலிருந்த காசிராசனும் அமைச்சர்களும் பார்த்து நன்றேயென்று தங்கள் சேனைகளை முன்னணியிலே கொண்டு வந்து நிறுத்தி அவுணராசன் விடுகின்ற படைகட்கெல்லாம் பிரதியாக வேறு வேறு படைகளைவிடுத்து யுத்தஞ் செய்தார்கள். இவ்வாறு காசிராசனும்,நராந்தகனுங் காலாந்தகரைப்போலச்சீறி ஒருவரை யொருவர் வெல்ல வேண்டுமென்னுங் கருத்தினால் தமது விற்களில் அளவற்ற திவ்வியபாணங்களை ஒ[illegible]முனையிற் பூட்டிக் காட்டினிடத்தில் கல்மழை பொழிவதற்கொப்பாக இரதகஜதுரகபதாதிகளின் பெருக்கின்மீது பிரயோசித்தனர். அம்மாத்திரத்தில் இருவருடைய பாணங்களும் ஒன்றோடொன்றுராய்ந்து நாற்புறங்களினுந் தீக்களை யிறைத்து அதிக டவதத்துடன் ஆலகால விடத்தினைப்போலச் சீறிச்செழித்தோங்கித் தழைத்திருக்கின்ற தோப்புகளில் சூறைக்காற்று புகுந்தாற்போல இருவகைச் சேனைகளையும் வாட்டி வருகின்றபோது மேருகிரியைப்போலப் பாரித்திருக்கின்ற தோணிகளெல்லாஞ் சிதைந்து அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கை முதலிய உறுப்புகள் பின்னப்பட் டிறைந்தும், தமது கர்ச்சனையினால் திசையானைகளையுங் கலங்கச் செய்யவல்ல யானைப் பந்திகள் முழுவதுங் கலங்கி மத்தகம் துதிக்கை தோடுமுதலிய அவயவங்கள்முறிந்தும் அலைகளைப்போலத் தாவிப்பாய்வல்ல புரவிக் கூட்டங்களெல்லா மயங்கி வெண்டயங்கள் கலிக்குங் கால்களும் முகவணிகளுஞ் சிதைந்

தும், ஜயவுற்சாகத்தோடும் வீரபராக்கிரமத்தோடும் போராட வல்லப தாதிக ளனைத்தும் நடுங்கிச்சிரம் கரம் - உரம் - கால் தொடை அங்க க்கள் கண்டதுண்டப்பட்டு மாண்டும் போயின. இவ்விதமாக அவ்விரு திறத்தாருடைய சதுரங்க சேனைகளும் சின்னபின்னப் பட்டழிகின்ற போது மனிதர்கட்கெல்லாம் யமனென்று சொல்லத்தக்க பெயரினைப் படைத்த அவுணராச னவன், காசிராசனுடைய சேனைகளின் நடுவே நூழிலாட்டோடுந் துண்ணென்று பிரவேசித்து அவ்வரசனை அவன் புத்திரர்களோடும் அமைச்சர்களோடும் கைப்பிடியாகப் பிடித்துச்சிறையி லிட்டனன். உடனே அவுண பாதகர்கள் ஜயபேரி யடித்தனர். அவ்வேளையை வேறு வேறாய் நின்று யுத்தஞ் செய்கின்ற அவுணராசனுடைய சேனைத் தலைவர்க ளெல்லாம் கேட்டு ஞெரேலென்று அவனிடத்தில் வந்து பணிந்தெழுந்தனர். அவர்களை நராந்தகன் பார்த்து ஓ சுத்த வீரர்களே! நாம் வந்த காரியம் பலித்தது காசிராசனைச் செயித்தனம். அவன் எமக்குத் தோல்வி யடைந்தவனே யாம். எக்காலத்திலும் அழிவுறாத காசிநகரமும் நமது வசமாயிற்றென்று சந்தோஷ வார்த்தைகளைப் பேசித் தான் சிறையிட்ட அரசன் முதலியோரை அழைத்துக் கொண்டு காசிநகரி பிரவேசிப்பதாயினன்.

இச்சம்பவங்களை யெல்லாம் அறிந்த சில தூதர்கள் அவ்வரசன் பத்தினியாகிய அம்பை யிடத்தில் விரைந்தோடி அறிவித்தார்கள் அதை யவள் கேட்டவுடன் வேடன் செலுத்திய பாணம்பட்டு வாடும் மானைப்போலக் கதறிக் கூந்தலவிழ்ந்து நிலத்தில் புரளச் சரீரம் நடுநடுங்கத் துக்கவெப்பத்தினால் விழிகளினுதிரமான நூற்றெறித்தோடக் கோடுகோடெனப் புலம்பித் தாமரையிற்பட்ட சலத்தை யொப்பமனம் நிலைபெறாமல் கலங்கினவளாகி வலையிற்பட்ட மஞ்ஞையை நிகர்த்துவாடிப் பரதவித்துத் திகிற்பட்டு ஐயையோ! நமது காவலருடைய பராக்கிரமும் புத்திரர்களுடைய ஆண்மையுங் அமைச்சருடைய சாமார்த்தியமும், சேனைத் தலைவர்களுடைய வீரமும் ஒன்றுமில்லாமற்போய் இவ்விதவாபத்தும் நேர்ந்ததோ? என்னுசைக் கணவரையும் குமாரர்களையும் உரிமையிற்சிறந்த வுனைய துணைவர்களையும் எப்போது இங்கு வரக்காணப்போகின்றேன்? தெய்வமே யென்று புலம்பி தீயிற்பட்ட புகையைப்போலப் பதைபதைத்து வாடுவள், நாற்றிசைகளினும் விழிகளைச் சுற்றிப்பார்ப்பள், கரங்களைப் பிசைந்துகொண்டு இனி யென்ன செய்வதென்று தியங்குவள், நேர்ந்த வாபத்தைப் பலவா றெண்ணுவள், பின்னர் சிறிதுநேரம் அசைவற்றுச் சோர்ந்துகிடப்பள், கரங்களை விரி

த்து அவ்வனியாயமெங்கேனு முண்டோவென்று தன்னைத்தானு சாவுவள். எனது வாழ்வுக் கழிவு நேர்ந்ததோ வென்று பலமுறை வாயிலறைந்து கொள்ளுவள், சரீரம் புழுங்கி வெயர்க்க வருந்துவள், சமுத்திரத்தி னலைகளின் பெருக்கடங்கும் படிக்குப் பெருமூச்செறிவள், நிலத்தைக் கரங்களினலே தழாவி மோதுவள், இவ்விதங்களாக அரசன் பத்தினியாகிய அம்பை யென்பவள் துக்கசாகரத்துண் மூழ்கிமுன்னர் சகலரும் நடுங்கும்படியாக வந்த இடையூறுகளை யெல்லாம் நீக்கியருளிய நமது கர்த்தர் இங்கு இருக்கின்றாரன்றோ? அவர் இப்போதும் எழுந்தருளிப் போர்க்குச் செல்லுவாரெனில், அவ்வவுணர்களைச் சங்கரித்து நமதுயிரைக் காப்பாற்றுவரென்று சிறிது மனந்தேறி உடனே தன்னிருக்கையை நீங்கிச்சென்று மகோற்கட மூர்த்தியைப் பணிந்தனள். அப்போதவள் வந்து பணிந்தெழுந்த குறிப்பினைத் தாமறிந்துகொண்டு அம்மணி! நீ அஞ்சவேண்டாம் சத்துருவினுடைய சேனைகளையும அவனால்நேர்ந்த இடையூறுகளையும் இந்நிமிஷத்தில் நாசஞ் செய்கின்றோம். நீபயபடாமல் அந்தப் புரத்திற்குச் செல்லுகவென்றுவிடைகொடுத்து, அதிககோபத்துடனே யுத்தத்திறகு வெளிக்கொண்டனர்.

அப்போது சுவாமியினுடைய முகத்தினின்றுஞ் சிலவீரர்கள் ஐந்துமுகத்தோடும், சிலவீரர்கள் பத்துமுகத்தோடும், சில வீரர்கள் ஆறுமுகத்தோடும் சிலவீரர்கள் ஆயிரமுகத்தோடும், உண்டாகி அம்முகங்களுக கிரட்டியான கைகளையும் அக்கைகள்தோறும் படைகளையும் ஆயிரம்யோசனை யுயர்வையும் அவ்வுயர்வுக் கேற்றமற்ற வுறுப்புகளையும் பெற்றவர்களாகி எதிரில் நின்றார்கள். அவர்களுள் சுருண்டு நீண்டிருக்கின்ற முகமயிரும், சிவந்த அழற்பிழம்பை வீசவல்ல மூன்று கண்களும், நாற்புறந்தும் நிமிர்ந்தாடும்படியான சடைகளும், அடிவரையில வீழ்ந்து தொங்குகின்ற தாடியும், சகல பராக்கிரமங்களினுஞ் சிறந்த குரூரனென்னும் பெயரினைப் படைத்த ஓர் வீராதிவீரன்மகோற்கட மூர்ததிக் கெதிர்நின்று பணிந்து சுவாமி! அடியேனைப் பசியானது மிகவும வாட்டுகின்றது. விரைவிலெனக்கு ஆகாரங் கொடுத்தருளவேண்டு மென்று பிரார்த்தித்தான். அதற்குசுவாமி நராந்தகனுடைய சேனைகளைச் சுட்டிவீரனே! இதோ எதிரிலிருக்கின்ற சேனைகளையெல்லாம் வாய்மடுத்து அச்சேனைகட்கு நடுவேயிருக்கின்ற காசிராசனையும் அவன் புத்திரர்களையும் அவன் அமைச்சர்களையும் கொண்டு வந்துவிடுவாயாக, அப்பாலும் பசி யடங்காதாயின் இன்னுமளவற்ற ஆகாரங்களைக் கொடுக்கின்றோமென்று விடைகொடுத்தனுப்பினர், உடனே

அக்குரூரன் புத்தியென்று சந்தோஷித்து வனத்தினைநோக்கிச் செல்லும் வடவைக்கனல்போல நராந்தகனுடைய சேனைக்கெதிரே சென்றான். ஏனையவீரர்களும் அவனைப் படைசூழ்ந்து நடந்தனர் இப்பால் குரூரனானவன் சகலரையும் பின்னேநிறுத்தி தானொருவன் மாத்திரம் நராந்தகனுடைய சேனைக்குள் புகுந்து சிலரை ஆரவாரத்தினாற் கொன்றும் சிலரை உறுத்த பார்வையினாற் கொன்றும் சிலரைக் கைகளால் இழுத்துக் கொன்றும், சிலரைக் கால்களினால் இடறிக்கொன்றும் சிலரைப்பூமியி லறைந்து கொன்றும், சிலரைத தேரின்மீ தெறிந்துகொன்றும் சிலரை யானையின்மீது கடாவிக்கொன்றும், சிலரைக் குதிரைமீதறைந்து கொன்றும் கோபமடங்காதவனாய்த் தேர்களையெடுத்துத் தேர்கள்மீதறைந்தும் யானைகளையெடுத்து யானைகள்மீதறைந்தும் குதிரைகளையெடுத்துக் குதிரைகள்மீது சாடியும், பதாதிகளை யெடுத்துப் பதாதிகள்மீது மோதியும், இவ்வாறு நாலவகைச் சேனைகளையுஞ் சின்னாபின்னபடக்கொன்று அளவற்றவீரர்களை வாய்மடித்தும் போதாதுஇன்னுஞ் சேனைகளுண்டோவென்று நாற்றிசைகளினும் விழிகளைப் பரப்பிக் குரூரனானவன் அட்டகாசஞ் செய்துகொண்டிருந்தனன்.

அச்சம்பவத்தை நராந்தகன் கண்டமாத்திரத்தில் அதிக உக்கிரம பிரவேசித்து விழிகளில் அனற்பொறிகள்சிதறி ஆலகாலத்தைப்போலச்சீறி அதிவேகத்துடன் அசுராந்தகனாகிய குரூரனெதிரில் தனதுதேரை நடாத்திவந்து இதோ உன்னுண்மை யடக்கி யமலோகங் குடியேற்றுகிறேனென்று சபதம்பேசி வில்லை யெடுத்து வளைத்து ஊழிகாலத்து மழைபோல அளவற்ற பாணங்களை ஒரே தொடையிற் பூட்டிப் பிரயோகித்தான். அவன்விட்ட பாணங்களெல்லாம் வச்சிரப் பாறையின் மீது விழுந்த மழைத்துளியைப்போலக் குரூரன்மீது பட்டு உடைந்தும் குறைந்துஞ் சிதைந்தும் பொடிந்தும் மடிந்தும் முறிந்தும்போயின இவ்வாறு புகழுற்றவர்களைப் பொன்னுலகு எவ்வாறு நீக்கிடுமோ அவ்வாறு தான்விட்ட பாணங்களெல்லாம் குரூரனிடத்திற் சென்று பயன் படாதுபோனதை நராந்தகன் கண்டு மனங்கலங்கி வருந்தினவனாய் உடனே தையிரியத்தைவிடாது காட்டழலைப்போலச்சீறி இந்நிமிஷத்தில் இவன் பிராணனை யமலோகங் குடியேற்றுகின்றேனென்று கோபித்து ஓர்வேலாயுதத்தையெடுத்துப்பிரயோகித்தனன். அவ்வேலாயுதமானது திரிலோகங்களையும் ஏககாலத்தில் விழுங்குவதுபோலவுக்கிரமித்துவர அதனைக் குரூரன் தடுக்காது அருகேவரப் பார்த்து ஒரு பெருமூச்சு விட்டனன். அம்மூச்சினால் அவ்வேலாயுதமானது [illegible] இலை[illegible]போல [illegible]



13 உதண்டிவிநாயகர்.

14 துண்டிராஜர்.

டிந்துபறந்துபோயது. அதற்குமேல் நராந்தகன் மந்தரகிரியைப்போ
லப் பாரித்திருக்கின்ற ஓர் கதாயுதத்தை அதிவேகமாகப் பிரயோகித்
தான். உடனே அக்கதாயுதம் வெளிப்பட்டுப் பிரசண்டமாருதம்போல
இரணக்களமெங்கும் உலாவிக்கொண்டு குரூரனுடைய மார்புக்கு
நேராகவர அதை அவன் கண்டமாத்திரத்தில் சர்வசங்கார மூர்த்தி
யைப்போலப் பொங்கி விருகளிற் றீப்பொறிகள் குபீல் குபீலென்று
கொட்ட உறுத்துத் தனது மார்பைக்காட்டினன். அப்போதக்கதாயு
தமானது அவன் மார்பிற் பட்டு கல்லின்மீதெறிந்த காளானைப்போல
நுறுங்கிப்போயது. அப்பால் நராந்தகன் ஆலகாலம்போலப் பொங்கி
ஓர் முசலாயுதத்தையெடுத்து இடம் வலமாகச்சுற்றிக் குரூரனுடைய
தோளுக்கிலக்காக வீசினன். அப்போது குரூரனுக்கு அதிககோபம்
பிரவேசித்துத் தனது புயங்களைநோக்கி வருகின்ற முசலத்தினைத்தன
துகரத்தினாற்பற்றி மீட்டும் நராந்தகனுடைய இரதத்தின்மீதெறிந்த
னன். அம்மாத்திரத்தில் நராந்தகனுடைய இரதமானது காதலனைச்
சேர்ந்த பாவையர்க்குப் பசலையெவ்வாறு பறக்குமோ அவ்வாறுஉடை
ந்து பொடிபட்டு நுறுங்கிப்போயது அப்போது நராந்தகன் வேறொ
ருதேரிலேறிச சூலாயுதத்தை யெடுத்துவிட்டனன் அதைக்குரூரன்
தனது விரலினாற்றெறிக்க அது பூமியைக்கிழித்துக்கொண்டு பாதாள
லோகத்திற் சென்றது. அதற்குமேல் நராந்தகன் ஓர் சக்கராயுதத்தை
யெடுத்துப் பிரயோகித்தான். அதைக்குரூரனவன் பூமியில் விழாத
படி தனதுகரத்தை நீட்டி ஓர் தொடியைப்போலத் தரித்துக்கொண்ட
னன். அப்பால் அவுணராசன் சிங்கதந்துக்கொப்பாகச்சீறி இனி இதனி
னுஞ் சிறந்தவாயுதமொன்றுமில்லையென்று ஓர் மழுவாயுதத்தையெடுத்
துவிடுத்தனன். அதைப்பூதராசன் ஓர் நிமைப்போதில் தனது காத்தா
ற்பற்றி அனிசசம்பூவினைப்போலக் குழைத்தனன். இவ்வாறுதான்விடு
க்கின்ற ஆயுதங்களெல்லாங் குரூரனால் சின்னபின்னப்பட்டு நாசமடை
ந்ததை வஞ்சகங்கள் குடிகொண்டிருக்கும் வனத்தினையுடைய நராந்
தகன் கண்டு இரவுத்திராகாரமாகக் கோபித்து, வடவாமுகாக்கினி
சீறியெழுந்ததுபோலத் தனது தேரைச் சூராவளிக்காற்றினுங் கடுகிச்
செலுத்திவந்து உரையிற்சொருகியிருந்த வாளாயுதத்தினை லவனைவெ
ட்டினன். அவ்வாள் அக்குரூரனுடைய மெய்ம்மிற் பட்டமாத்திரத்
தில் இரண்டுதுண்டங்களாகி நிலத்தில்வீழ உடனே நராந்தகனுன
வன் மற்றோராயுதத்தினை யெடுக்க நேர்ந்தனன். அதற்குமுன் குரூ
ரனவன் அப்பாதகனுடைய தேரைத் தனது காலினுலெட்டியுதைக்க

அவ்வுதைபட்டமாத்திரத்தில் அத்தேரானது நராந்தகனோடு நூறு காததூரம் உருண்டுசென்று அச்சுவேறு மச்சுவேறு கொடிஞ்சைவேறு குத்துக்கால் வேருகப்போயது.

உடனே நராந்தகன் பூமியிற்குதித்து ஓர் சிறிய சகட்டின்மீது வாயுவேகத்தினு முந்திவந்து இனி இவனை தேவாஸ்திரங்களினுல் வெல்லுவதே காரியமென்று தீர்மானித்து மகமேருவுக்கொப்பாகப் பாரித்திராநின்ற தனதுவில்லையெடுத்துநாட்டி வட்டகாரமாக வளை த்துநாணேற்றித்திசைகளதிரக் குணத்தொனிசெய்து அதில் வருணு ஸ்திரத்தை அபிமந்திரித்துத் தொடுத்து ஆக்ரணுந்தபரியந்த மிழுத்து ப்பிரயோகித்தனன். அது வெளிப்பட்டமாத்திரத்தில் அதிக விரை வோடும் வானத்தெழுந்து அளவற்ற இடிகளையும் மின்னல்களையுங்கா ட்டி அமோகமாகிய நீரைப்பெருக்கி எங்குஞ் சலப்பிரவாகத்தினையுண் டாக்கி ஆவ்ஆவென்று சீறிக்கொண்டுவர அதைக்குரூரன் தனது கரத் தை நீட்டிப் பிடித்துத் தண்ணீரைப் போலத் தனது வாயிலிட்டு விழு ங்கினன் பின்னர் பகைவன் வாயுவாஸ்திரத்தைப பிரயோகித்தனன். அவ்வஸ்திரமானது பிரசண்ட மாருதத்தைப் பெருக்கிப் பர்வதங்கள் விருட்சங்கள் முதலானவைகளைப் புரட்டிக்கொண்டுவர அதை வீராதி வீரனுகிய குரூரன் கரத்திலேந்தி சர்ப்பத்தைப்போலப் புசித்துவிட் டனன். பின்னர் நராந்தகன் அக்கினியாஸ்திரத்தை யெடுத்துப் பிர யோகித்தனன், அவ்வஸ்திரமானது உடனே அட்டதிசைகளினும் பர விக்கொடியவனலை யிரைத்துக்கோடையிடிகளைப் போலயிறைந்து வட வைக்குச் சமதையாகச்சீறி மேலிட்டுவர அதன் உக்கிரத்தையும் மகத்துவத்தையுங் குரூரன்கண்டு விழிகளிற் சுவாலை வீசுர்படியாகப் பிடித்து வாயிலிட்டு விழுங்கினன் பின்னர் நராந்தகனுனவன் பிரமாஸ் திரத்தை யெடுத்துப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரம் வெளிப்பட்ட மாத்திரத்தில் அளவற்ற கொடிய பாணவிதங்களைப் பெருக்கிக் கலகல வென்று நகைத்து விஷங்களைக்கக்கி இடியேற்றினைப்போல முழங்கிக் கொண்டுவந்து தன்னைச்சமீபிக்க அதனை ஓர் நொடிப்போதில் தனது வாயை ஆவென்று திறந்து விழுங்கினன். பின்பு இராட்சதப்பாதகன் மனம்பொறுமல் தான் முன்னம் அரிய தவங்களைச் செய்து மகாவிஷ் ணுவிடத்திற் பெற்றுவைத்திருந்த நாராயணுஸ்திரத்தை யெடுத்து மனப்பூர்வகமாக தூபதீப நைவேத்தியம் முதலிய பூசைகளை நிரப்பிவ ணங்கிப்போற்றி ஓபடைகளுக்கரசே! அதோ நிற்கின்ற பூதகணத்தலை வனுடைய சிரத்தைக்கண்டித்து அவன் பிராணனை யுண்டுவாக்கடவை யென்று வேண்டி அதிகவேகத்தோடும் பிரயோகித்துக் களித்துப்பார்

த்திருந்தனன். அவ்வஸ்திரமானது வெளிப்பட்டவுடனே தகத்தகாயமாய்ப் பிரகாசித்து அனலையிறைத்துப் பலகோடி அஸ்திரங்களைப்படைத்துக் கோடியிடிகளைப்போலக் குமுறியெரிந்து புகைந்துகொண்டு எங்குந்தன்மயமாய் அதிக மகிமைகளைக்காட்டிச் சீறி இரைந்து பகைவனெங்கே யென்று தேடிச் சமீபத்தில் வந்தமாத்திரத்தில் அதையுங் குரூரனானவன் விநாயகமூர்த்தியினுடைய கடாட்சத்தினால் ஓர் கவளமாக விழுங்கினன். அவ்விசயத்தை நராந்தகன் கண்டு பிரமித்துமுன்னம் அளவற்ற மகிமைகளையுடைய பலவாயுதங்களை விடுத்தோம். அவைகளெல்லாம் அவன்மீது குறிதப்பாது சென்றும் பயன்பெறாமல் நுறுங்கிப்போயின. பின்னர் மகாதபோபலங்களினால் கிடைக்கப்பெற்றிருந்த ஒப்பற்றதேவாஸ்திரங்களை விடுத்தோம். அவைகளையெல்லாம் பதிலுக்கு ஒன்றும்விடாமலே கனிந்தவாழைக் கனியைப்போல உட்கொண்டனன் இனியாம செய்யவேண்டிய முயற்சிகளென்ன விருக்கின்றது. இவன் செய்கைகளைப் பார்க்குமிடத்தில் மகா அற்புதமாகவிருக்கின்றன ஆயினும் இவனுடைய திறத்தை இன்னு மறிவோமென்று ஆக்கிரமித்துக் கோடையிடியைப்போலக்குமிறி அடா பூதப்பயலே! நீயோ என்னை வெல்லவல்லவன், இதோ உனது பிராணனைவாங்கி யமலோகங் குடியேற்றுகின்றேன் பாரென்று வசைமொழிகளைப்பேசித் தனக்குப்பிராணபயமாய்வைத்திருந்த யாவராலுந் தடைசெய்தற்கரிய பாசுபதாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகிக்க நேர்ந்தனன். அவ்வாறெடுத்துப் பிரயோகிப்பதன் முன்னங்குரூரனானவன், அவ்வவுணபாதகனைச் சகட்டினோடு மெடுத்துச் செண்டைப்போல அதிவேகமாய்ச் சுழற்றி ஆகாயத்திலெறிந்து அவன்மீட்டும் பூமியில் விழுவதன்முன் அங்குச்சிறைக்கணகப்பட்டிருந்த காசிராசனையும் அவன் புத்திரரையும் அமைச்சர்களையும் அழைத்துக்கொண்டு சென்று அவர்களை மகோற்கடமூர்த்தியினுடைய சந்நிதானத்தின் முன்னர் விடுத்துப் பணிந்தனன். உடனே அரசன் முதலாயினோரும் பணிந்தார்கள், அப்போது மகோற்கடமூர்த்தியானவர் குரூரன் முதலாயினோர்க்கு அநுக்கிரகஞ் செய்து இனிநாமே அவுணராசனைச் சங்கரிக்க வேண்டுமெனத் திருவுளங்கொண்டனர். முன்னர் ஆகாயத்தில் எறியப்பட்ட சகடமானது நராந்தகனோடு சத்தலோகங்கள் வரையிற்சென்று அவ்விடத்தினின்றும் பூமியில்வீழ்ந்து நுறுங்கித்துகளாயது. பின்னர்நராந்தகன் சிறிது நேரம் மூர்ச்சையாகிகிடந்து மீட்டுந்தெளிந்தெழுந்து, ஆஆஆஆ! என்னகாரியஞ்செய்தோம். இதுபரியந்தம் மகோற்கடனை உருவத்தினாலும் வயதினாலும் சிறுவனென்றுநினைத்து அவனுடைய பெருமைகளை மதி

க்காமல் மிகவும் இகழ்ச்சியல்லவோசெய்தனம், அவன் நம் முன்னர் ஒருவனாய் வந்துநின்றான். பின்னர் அவன் தன்னுடைய முகத்தினின்று அளவற்றவீரர்களை யுண்டாக்கினான் அவ்வீரர்களுள்ளும் ஒருவனே நம்முடன் வந்தெதிர்த்தான், எதிர்த்த அவ்வொருவனும் ஓராயுத மேனுங்கையினாற் றொட்டவனல்லன்? தனது ஆரவாரிப்பு முதலிய வேதுக்களினாலேயே நமது கடல்போன்ற சேனைகளையெல்லாங் கலக்கி வாட்டினான். பர்வதங்களையும் பொடிபடுத்தவல்ல நமது ஆயுதங்களை யெல்லாந்தும்சப்படுத்தினான், அளவற்றதவங்களினாற் கிடைக்கப்பெற்றிருந்த தேவாஸ்திரங்களையெல்லாம் வெல்லக்கட்டியைப்போலப் பிடித்து விழுங்கிவிட்டனன் அவனுண்மையை என்னென்று பேசப்படும் இதுபரியந்தம் அரிபிரமேந்திராதிகளை சயமடைந்தநமது பராக்கிரமங்களை ஓர் நிமைப்போதில் அழித்துவிட்டனன் மகோற்கடனுடைய முகத்திலுதித்த அளவற்றவீரர்களில் ஒருவனே இவ்வகைத் தானவனால், ஏனைய வீரர்களுடைய திறங்களை யாவராற் கணிக்கக்கூடும், இனிமகோற்கடனே சுதாவில் வந்து யுத்தஞ்செய்ய நேர்ந்தால் யாம் என்னபாடுபடோம், இனித்தேவர்களுங் கண்டஞ்சத்தக்க மாயவித்தைகளினால் யுத்தஞ்செய்து அச்சிறுவனை அதஞ்செய்யவேண்டுவதே யல்லது மற்றொருவிதத்தினாலவன் மாளத்தக்கவனன்றென்று தீர்மானித்து உடனே அளவற்ற மேகரூபங்களாய் உருக்கொண்டு மின்னல் இடிகளைப்பெருக்கி அண்டங்களதிரக்குமுறி யாவரும் பிரளயகாலம் நேர்ந்ததென்று பிரமிக்கும்படியாக யானைத்துதிக்கைபோல் அமோகமாகிய வருஷதாரைகளைப் பொழிந்துகின்றனன்.

அதை மகோற்கடமூர்த்தி கண்டு, இவ்வஞ்சகன்செயல் நன்றாயிருப்பதென்று உறுத்துத் தமதுவில்லில் அதிகமகிமைகளைப் பெற்றிருக்கின்ற தீட்சண்ணியமுள்ள சரங்களைத்தொடுத்து ஓ படைகளே? நீங்கள் பிரசண்டமாருதவடிவத்தினைததாங்கி வேகமாய்ப்பாய்ந்து நராந்தகன் கொண்டிருக்கின்ற மேகவுருவங்களை இமைப்போதில் மாற்றிவரக்கடவீர்களென்று ஆக்கியாபித்துப்பிரயோகித்தனர். அத்திவ்விய பாணங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தில் அதிகவேகங்கொண்டு கடையுகக்காற்றினுமேலிட்டு அண்டகடாகமதிர்ந்து குலகிரிகளுருண்டுமற்றப்புவனகோடிகள் அல்லோலகல்லோலப்பட்டுத் தயங்கும்படி ஆர்ப்பரித்துத்தாவி, விண்-மண்-திசா திசைகள் முதலிய விடங்களில் நிறைந்து உலகமெல்லா மிருளடையும்படி ஆகாயவெளிமுழுவதும் மூடிக்கொண்டிருக்கின்ற மேகங்களையெல்லாம் நிமைப்போதில் நாசஞ்செய்து, பழையபடி உலகங்கள் களித்திருக்க நிறுத்தி, உருவநாமக்கிரியை

களற்றுப், பராபரவஸ்துவாக விளங்கும் மகோற்கடப் பெருமானுடைய சந்நிதானத்தையடைந்தன.

அதற்குமேல் நராந்தகன் ஊழித்தீயினுருக்கொண்டு பூமிமுதல் அண்டகோளபரியந்தங் கொழுந்து விட்டெரியச் சுவாலையைவீசிச் சராசரப் பிரபஞ்சங்களையெல்லாங் கொளுத்தியுஞ் சுட்டுஞ்சாம்பலாக்கியுங் கரித்தும் எரித்தும் இவ்விதப் பாடுகளைப் படுத்தியு மிருந்தனன். அதை மகோற்கட மூர்த்திகண்டு கோபித்து, தமது திருக்கரத்திற்பற்றி யிருக்கின்ற வில்லையீறாக்கித் தெய்வீகமுள்ள சிலபாணங்களைப்பூட்டி ஓபடைகளே! சாங்காலம் நேர்ந்த காரணத்தினால் அவியுஞ் சமயத்துற்ற விளக்கினைப்போல அவுணபாதகன் அதிகவல்லமையைப் பெற்றவனால் பூமண்டலமும் ஆகாயமுற்றும் நிறைந்த அழலுருவாகியிருக்கின்றனன் நீங்கள் சத்தசாகரப் படிவத்தினைத்தாங்கிப் பெருகி அலைகளின் வலியினால் நிமைப்போதில் அதனைக்கரைத்து உருத்தோற்றும லழித்துத் திரும்பக்கடவீர்க ளென்று பிரயோகித்தனர். அச்சிறந்த பாணங்கள் வெளிப்பட்டவுடன் *பிரளயவெள்ளத்தினும் பதின்மடங் கதிகரித்துப்பாய்ந்து வானத்தையளாவத் திரைகளைமோதி அண்டங்களதிர முழங்கி அதிவேகங்கொண்டு பாய்ந்து மண்விண்ணெங்கும் அழன்று நின்றதீக்களையெல்லாம் அதப்படுத்தித்தமது சாகர வுருவங்களினின்றுமாறிப் பழையபடி செருக்களத்திற் றிருவிளையாடல் செய்திருக்கின்ற மாமதிநிறைவனைச் சேர்ந்தன.

உடனே நராந்தகன் சராசரப் பிரபஞ்சங்களை வாட்டவல்ல பிரசண்ட மாருதப்படிவத்தினைத் தாங்கி ஓமென்று மிரைச்சலைக்காட்டி வீறிமேவிட்டு அண்டபுவனங்களி னடுக்குகள் குலைகுலைந்து தத்தளிக்க மோதியும், திகைத்து நிற்கின்ற பூதவீரர்கள் பதைபதைத்துக் கைகாலொடிந்தலையத்தக்கதாக மாறியும், திசைகளனைத்துஞ் செவிடுபடக்கலக்கியும், குலகிரிகள் சிறுதேர்களைப்போ லுருளத்தள்ளியுங், கடல்களைக் கலக்கியும். இவ்வித உற்பாதங்களைக்காட்டிப் பேரொலிசெய்து நின்றனன். அப்பாதகன் செய்துவருகின்ற அனர்த்தங்களை லோகநாயகன் கண்டு கோபநகைகொண்டு மன்னுயிர்கள் படுந்துக்க வருத்தந்தனையொழிப்பதாய்த் திருவுளங் கொண்டவராய் அத்தட்சணத்தில் குரூரமாகிய திவ்வியபாணங்களை ஆராய்ந்தெடுத்து தமது ஒப்பற்ற தனுசிற்பூட்டி ஓகணைகளே! நீங்கள் விசாலமாகிய படங்களை வாய்ந்த பல்லாயிரங் கோடிநாகவினங்களி னுருவங்களைக்கொண்டு தாவி அவுணபாதகன் செய்யும் மாயா வல்லபங்களனைத்தையும் நிமைப்போதி லழித்து மீளக்கடவீர்களென்றேவினர். அம்மாத்திரத்தில் அப்பாணங்

கள் விறிவானத்தெழுந்து பற்பல சிரங்களைக்கொண்டிருக்கும் படங்களை விரித்துவிஷச்சுவாலை பெருகப் புஸ்புஸ் என்று சீறிமேலிட்டு எங்கனும் பாந்து நார்கட் கெல்லாம் யமனைப்போலச் சகல பிராணிகளையும் அலைத்துத்திரிகின்ற அவுணபாதகனுடைய வாயுவின்பெருக்கனைத்தையும் உண்டுவெற்றியுடன் பழையபடிக்கு மகோற்கட மூர்த்தியினுடைய சந்நிதானத்தை யடைந்தன

இவ்விதங்களாகத் தான் கொள்ளுகின்ற வடிவங்க ளனைத்தையும் மீறவொட்டாம லடக்கிவருவதை நராந்தகன் நினைந்து நினைந்து மானமும் வயிரமும் மனதைச்சுட்டலைக்க மண்டியெரிந்து இரவுத்திராகாரமாகக் கோபித்துதியும் புகைப்படலமும் வீயத்தக்கதாகப் பெருமூச்செறிந்து நல்லகாரியம் இச்சிறுவன் சாமார்த்தியங்களை யறிகிற் போமென்று உறுத்துறூதனமாகிய கோர ரூபங்களைக்கொண்டு மகோற்கடமூர்த்தியை வெல்லக்கருதி ஒருபுறத்தில் பலகோடியிராக்கதர்உருவங்களை பெற்றுப் பிரளயவெள்ளத்தைப்போல வளைந்து கொண்டு எம்மவரை அதாறுதப்படுத்திய வுன்னைச் சொற்பமாக விடமாட்டோம், பாலகனுகை விருந்தபோதிலும் இரங்கோம். எத்தலங்களிலோடியொளிப்பினும் தொடர்ந்து வாட்டுவோம். சிறைச்சாலையி லடைத்துவருத்துவோ மெனப் பல வசைமொழிகளைப்பேசிச் சத்திசூலம் பிண்டிபாலம் கப்பணம்கணிச்சி சக்கிரம் தண்டாயுதம் குந்தம் வளைதடி முதலிய ஆயுதங்களை அமோகமாகச் செலுத்தியும், ஒருபுறத்தில் பூதங்களாகவந்து பர்வதங்களை வீசிக்கர்ச்சித்தும், ஒருபுறத்தில்எமனைப்போல அளவற்ற வுருவங்கொண்டு நின்று ஆவ் ஆவென வாயைத்திறந்து மேலிட்டும், ஒருபுறத்தில் பேய்க்கூட்டங்களாக நின்று விழிகளானவை அனலையொப்பக்காந்தி வாய்களில் அனற்பொறிகளை யிறைத்துச் சீறியும். ஒரு புறத்தில் புகைப்படலங்கள் மேலிட பிரளயத் தீயுருக்கொண்டு அதிக ஓசை யெழுமண்டியெரிந்து வாட்டியும், ஒருபுறத்தில் பிரசண்டமாருதமாக ஓவென்னு மிறைச்சலைக்காட்டிச் சகலருந்திடுக்கிட்டு வாடமோதியும், ஒருபுறத்தில் சர்வசங்காரகாலத்து சராசரப்பிரபஞ்சங்களையழிக்கும்வெழும் பெருவெள்ளத்தைப்போலத் தாவி அலைகளைமோதிப் பூதப்படைகளை வாரியலைத்தும், ஒருபுறத்தில் ஆலகாலவிஷத்தை யொப்பக்கனன்று எதிர்ப்பட்ட வனைத்தையுங் கொளுத்தித் திரிந்தும், ஒருபுறத்தில் காளமாநாகங்களி னுருக்கொண்டு விஷச்சுவாலைகளைக்கக்கி மேலிட்டுக் கடிந்து வருத்தியும், ஒருபுறத்தில் மேகசாலங்களாய் மின்னல் இடிகளைப்பெருக்கி அக்கினிகள் முதலிய மழைகளைப் பொழிந்து சாடியும் ஒருபுறத்தில் கடாந்தகாரமாகிய இருள்வடி

வுகொண்டு சிதராதியர் திகைக்கும்படிக்கு மூடியும், ஒரு புறத்தில் இடியேற்றினைப்போல அண்டங்களதிரக் குமுறிக் கலக்கியும், ஒருபுறத்தில் வரைகளாய் விழுந்துகொன்றும், ஒரு புறத்தில் சதுரங்கசேனைகளினுருக்கொண்டு எதிர்த்து நம்மவரைக்கொன்ற பழியைவாங்குவோம், குத்துவோம், வெட்டுவோம், கொல்லுவோம் உதிரத்தைக்குடிப்போமென்று பல கொடுமைகளைப்பேசி திரிந்தும், ஒருபுறத்தில் அளவற்ற யானைகளாய் மதங்களைப்பெருக்கி வீறிட்டுத் துதிக்கரங்களில் இருப்புலக்கைகளைக் கொண்டு சுழற்றிச் சாடியும், ஒருபுறத்தில் அநேக சிங்கராசர்களைப்போலக் கர்ச்சித்தலைத்தும், ஒரு புறத்தில் பலச்சக்கரவாகப் புள்ளினுருப்பெற்றுப் பெருங்காற்றெழச் சிறகுகளை வீசிப் பூதவீரர்களைச் சருகினைப்போலப் பறக்கடித்து மிருந்தனன்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! ஜயசாலியாகிய நராந்தகன் முடித்த மாயவித்தைகளின் பெருக்கத்தையும் கொடுமைகளையும் இன்னவிதமென்று விரித்துச் சொல்லவும் போதுமோ? அம்மம்மா! அவன் சாமார்த்தியங்களுக்கு இவ்வுலகங்களில் ஒரு வரையும் ஒப்புசொல்லக்கூடாது, இவ்விதமாக அப்பாதகன் பற்பல வுருவங்களைத்தாங்கி சொல்லக்கூடாத கொடுமைகளையும் அனர்த்தங் களையும் விளைத்து வருவதை எமதையன்கண்டு அவனெடுக்கின்ற வுருவங்களுக்கெல்லாம் பதிலாகத் தாமும் வேறுவே றுருக்கொண்டு அழித்து வந்தனர். அப்பால் நராந்தகன், இனி என்னசெய்ய வல்லோமென்றெண்ணமுற்று இச்சிறுவனை நாம் வெல்லுவதரிது. பராக்கிரமத்திலும் வயதிலும் நம்மினும் பெரியவன் ஒருவனிருக்கிறான். அவன் வந்தாலன்றியா மாத்திர மிவனை வாட்டுதல் கூடாது. என்று தீர்மானித்து உடனேசில ஒற்றர்களைக்கூவி நடந்தகாரியங்க ளனைத்தையுந் தனது தமையனுக் கறிவித்து வருவாறு விடைகொடுத்தனுப்பி, அவன் வருகிறவரையில் நாம் சும்மாயிருக்கக்கூடாதென் றெண்ணி மேருகிரிக்கிணையான ஓர் வில்லையெடுத்து வளைத்து அதற் கொடூரமான அம்புகளை அளவற்ற கோடிகளாகத் தொடுத்துப் பிரயோகித்தனன். அதை மகோற்கட மூர்த்திகண்டு தாமுமோர் மந்திரகிரிக்கு நிகரான வில்லையெடுத்துக் குனித்து அதில் அவனினுமேலாக அளவற்ற சிலீ முகங்களைதொடுத்துப் பிரயோகித்தனர். பின்னரவ் விருதிறப் படைகளும் வெளிப்பட்ட மாத்திரத்தில் ஒன்றோ டொன்று உராய்ந்து கொண்டு நாற்றிசைகளினுந் தீப்பொறிகளை யிறைத்து நாகங்களை யொப்பச் சீறிக்கொண்டு நெடுநேரம் அளவற்றபோர்களைச் செய்து இற்கையில் மகோற்கட மூர்த்தியினுடைய பாணங்கள் அவுணராசனுடைய கொடி

யகணைகளை யெல்லாஞ் சின்னபின்னப்படுத்தி அவனுடைய சரீரத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து அவனுடைய இரதங்கள், சாரதிகள், பதாதைகள், குதிரைகள், வில்லுகள், அம்புகள், கிரீடங்கள், ஆபரணங்கள், முதலானவைகளை நாசஞ்செய்து அவன் புயங்களிரண்டினையும் அறுத்து ஒருபுயத்தை அவன் தந்தைக்கு முன்னும் மற்றொருபுயத்தை அவன் தமயன்முன்னும் கொண்டுபோய்வீசி எம்மை யடிமையாகவுடைய மகோற்கட மூர்த்தியினுடைய சந்நிதானத்தை யடைந்தன, இவ்விதமாக இரண்டு புயங்களு மற்று நிற்கின்ற நராந்தகனுடைய கோபத்தை அந்தரவாசிகளாயிருந்த தேவர்கள் கண்டு ஆனந்தக்களிப்பின் மூழ்கிக் களிமிகுதியினாற் கர்த்தனைப்புகழ்ந்து கற்பகமலர்களை யிறைத்துக் கொண்டாடினர்.

அப்பாதகனுக்கு விரதபலத்தினாற் குறைந்த புயங்கள் எதாப்பிரகாரங்கிளைக்க அதனால் நராந்தகன் முன்னிலும் அதிக உக்கிரத்துடன் உளங்காரித்து நிற்ப அதைக் களிப்புற்றிருந்த தேவாதியர்கண்டு மனந்திடுக்கிட்டுத் தேகமெவெயர்த்து நடுநடுங்கி இவ்விடத்தில் நிற்போமாயின் இன்னு மிப்பாதக னென்செய்வனோ வென்னு பேக்கத்தினாற் பலதிசைகளினும் ஓடத் தலைப்பட்டனர், இக்காரணங்களைத் தேவதேவோத்தமனும் சுயஞ்சோதிவடிவாக விளங்கு மகோற்கடப் பெருமான்கண்டு நீங்கியபுயங்களை மீளத்தோற்றநின்ற அவன் தவதன்மையும் அத்தவத்தை நாசமாக்கவல்ல காரியத்தையும் நிதானித்து யோசிக்கின்றபோது அசுரேந்திரனானவன் நாகசர்ப்பத்தினைப் போலச்சீறி மகோற்கட மூர்த்தியைப் பார்த்து இதனைப் பேசுவதாயினன். ஓ பாலனே! இவ்விதமாக நீ அளவற்றகாலம் உனது சுடுசரங்களைக்கொண்டு எனது உறுப்புக்களைக் கண்டிப்பையாயினும் மீளமீளக் கிளைத்து யதாப்பிரகாரம் சண்டை கொடுக்குந் திறத்தைப் படைத்திருக்கின்ற அதிசூரனுகும் என்னுடன் போராடி இரண்டு கரங்களைப் பெற்றிருக்கின்ற நீ பற்பல பாணங்களைச் செலுத்திச செலுத்திக் கைகால்களோய்ந்து இளைப்பதன்றி யாதொரு பிரயோசனங்களையும் பெறவறி'ாய் அத்தகைய அபலனாகிய பிள்ளாய் நீ யோ எதிர்த்துச் சண்டை கொடுக்கவல்லை யான்பூருவத்தில் சிவபிரானைக் குறித்து அளவற்ற தவங்களைச்செய்து பெற்றிருக்கின்ற சிறந்தபேறுகளைக் கேட்டதில்லையோ! உன் தகப்பனை யொத்தவன் எனது மனவுறுதிக்கு மெச்சிப் புகழ்ந்திருக்குங் காரியங்களை எவ்வளவும் எண்ணிப் பார்த்தவனல்லை, சற்றுங் காரணகாரியங்களைப் பகுத்தறியும் விவேகம் இன்னமும் விளங்காத பாலனாதலால் போராடி அழிந்துப்போக

லாமென நினைத்துச் சிலபூதரைக் கூட்டிக்கொண்டு துரிதமாக வந்துவிட்டனை, பிள்ளைமைப்பருவத்தினால் கொண்ட துணிவு உனது பிராணபரியந்தம் வந்து நேர்ந்துவிட்டது, நீ இன்னும் அளவற்றயுகங்கள் வருந்தித் தலைகீழாய் நின்று பொருந்தபோதிலும் யான் பின்னிடையப்பட்டவனன்று. ஆகலால் நீ உத்தேசித்திருக்கிறபடிக்கு என்னை முடிக்க உன்னாலொருபோது முடியாது, உன்னைப் பெற்றவனாலு மாவதில்லை. இந்நிமிஷத்தி லுன்னைப்பற்றிக் கசக்கி, வாயிற்போட்டுக்கொளளவல்லேனாயினுங் குழந்தைப் பருவத்தினால் முன்பின் யோசியாமல் வந்துவிட்டனையென்றும் உன்பிதாவானவர் நம்மிடத்திற் பரிபூரண கடாட்சம் வைத்திருப்பதனாலும் மனம்பொறுத்தேன், இதைக்கருதி இந்நிமிஷத்திற் பிராணனைத் தப்பித்துக்கொண் டோடுவையாயின் அரிதிற்பெற்ற வுனது தாய்தந்தையர்க்குப் பிள்ளையாய் இன்னுஞ் சிலபோது, பிழைத்திருப்பை, தெரியாமையினால் நீ செய்திருக்கின்ற குற்றங்களை மன்னித்து விட்டுவிடுகிறேன் என்று சொல்லினன். இவ்வார்த்தைகளனைத்தினையுங் கர்த்தன் திருச்செவிகளிலேற்றுக் குறுநகை செய்து அவுணராசனே! நீ என்னசெய்யப் போகின்றனை நீ சனித்தபோது விதித்தகாலங்கழிந்து உன்னரிய பிராணனையுங் கொண்டு போகப் பின்புறத்தில் இயமனுங் காத்துத் திரிகின்றனன்? விவேகமற்றவனே வீண்வார்த்தைகளை யாடுவதிற் பயனென்னை? இனியோர் கணப்போதினுள் உனது உயிரை வாங்கவிருக்கின்றேன். அதை நீயே காணவிருக்கின்றனை உனக்குச் சிவபிரான்கொடுத்த மேலானவரங்களெல்லா முடியுங்காலம் வந்துநேர்ந்ததென்று திருவாய்மலர்ந்து, சிவபிரான்கொடுத்தருளிய பிநாகமென்னும் மேருவில்லினை இருகுதைகளும் பொருந்தவளைத்து அண்டங்களதிரக் குணத்தொனி செய்து சிவபிரான் திரிபுரனுடைய வுயிரைவாட்டிய பாணத்தை அதிற்றொடுத்து ஓ படைகளுக்கரசே! மாயவித்தைகளைச்செய்து புவனங்களை வாட்டுகின்ற இக்கொடிய பாதகனுடைய சிரத்தைவிடாமற் கண்டித்து நிமைப்போதில் மீளக்கடவையெனப் பணித்து, அளவற்ற வீரர்களையெல்லாம்வென்ற ஜயப்பிரவாகத்தினையுடைய நராந்தகன் சிரத்தினுக் கிலக்காகப் பிரயோகித்தனர். அத்திவ்வியபாணம் வெளிப்பட்டமாத்திரத்தில் கோடிசூரியப் பிரகாசத்தினைப் பரப்பிச் சண்டமாருதமு மஞ்சப்பாய்ந்து தீபாக்கினியை வீசி விஷங்களைப்பெருக்கிப் பலதேவாஸ்திரங்கள் முதலிய வுற்பாதங்களைப் படைத்துவிட வேகத்தினையொப்பச் சீறிச்சென்று அவுணராசனுடைய சிரத்தைக் கண்டித்து,

அதனை அவன் தந்தையினுடைய முகத்தின்முன் கொண்டுபோயெறிந்து, மீட்டும் எமதுகரத்தன் திருக்கரத்தி லமர்ந்தது அங்கிமிஷத்தில் அவனுடைய தபோபலத்தினால் மீட்டும் பழையபடி சிரமுண்டாகப்பெற்று, இரண்டு புயாசலங்களையுந் தட்டித் தேவர்கள் சூரியராதியர்கள் குலைகுலைந்து நடுநடுங்கி வாடத்தக்கதாக ஆர்ப்பரித்தனன்.

அவ்வற்புதத்தை மகோற்கட மூர்த்திக் கருகிருந்து பார்த்துக்கொண்டிருக்கின்ற வீரர்களுங் காசிராசன் முதலானவர்களுங் கண்டு ஐயையோ! இப்பாதகனுடைய சிரமானது இவ்வளவு அரிதிற்றுணிபட்டுஞ் சிவபெருமானுடைய வரத்தினால் மீட்டும் முளைத்து நிற்குமானால் இவன் எவ்விதத்தில நாசப்படுவதென்று கலங்கி வாடினார்கள். பின்னர் - ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்ல எமது மகோற்கட மூர்த்தியானவர் அவன் பெற்றிருக்கின்ற வரத்தின் மகிமையைத் திரிலோகங்களினும் பிரகாசிக்கச் செய்ய வேண்டு மென்று திருவுளங்கொண்டவராய், மீட்டும் தமது பிநாகத்திற் பாணத்தைத் தொடுத்துப் பிரயோகித்து அவனுடைய சிரமானது சொர்க்க லோகத்தில் அரசியற்றிவருகின்ற அவன் தமயனாகிய தேவாந்தகன் முன்னர் விழும்படி செய்தனர். உடனே அவனுக்கு வேறொருதலையுண்டாக அதனையும் அவ்வாறே கண்டித்து, அவன் மனைவியர்முன்பு விழும்படி செய்தனர் இவ்வாறு அபபாதகனுக்கு சிரங்கள் முளைக்குந்தோறுந் தாமும் அச்சிரங்களை யெல்லாம் இடைவிடாது கண்டித்து பூலோகம் புவலோகம் - சுவலோகம் - சனலோகம் - தபோலோகம்-மகாலோகம் சத்தியலோகமென்னு மேழுலகங்களினும், அதலம்-விதலம்-சுதலம்-தராதலம்-இரசாதலம்-மகாதலம்-பாதாளம்-என்னுங் கீழேழுலகங்களினும், அளவற்ற மலைகளினும், வனங்களினும் நதிகளினும் சமுத்திரங்களினும் ஏனைய விராசசியங்களினும் பரந்தருளும்படியாக வெறிந்து தமது திருக்கரங்களின் பராக்கிரமத்தை யாவரும் தரிசிக்கும் படியாகக்காட்டிப் பின்னர் அவ்வவுணராசன் எவ்வித வுயிர்களினாலும். எத்தன்மைத்தான ஆயுதங்களினாலு மாள்வதரிதென்று தேர்ந்து சகல லோகங்களுந் தம்மிற் காணும்படி சத்தசாகரங்கள், பெரும்புறக்கடல் சூழ்ந்த பூமண்டலங்கள், அதினுட்பட்ட திசைகள், தீவுகள், விண்ணுடுகள் எறும்புமுதல் யானை யீறாகச்சொல்லாநின்ற எண்பத்துநான்குலட்ச சீவபேதங்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் இருடிகள், கெருடகாந்தருவர், சித்தவித்தியாதரர் பன்னகர், அவுணர், கின்னரர், கிம்புருடர் ஏகாத சருத்திரர், துவாதசாதித்தர், சூரியசந்திரர் முதலிய நவக்கிரகங்கள், இருதுக்கள்

காலங்கள் முதலான சமஸ்தமும் ஆதிதேவனாகிய மகோற்கட மூர்த்தியினுடைய திருமேனியி லமைந்ததல்லது வேறொன்றில்லை யெனச் சகலருந் திருட்டாந்தமாகத் தரிசித்துக் கிருதார்த்தராதற்பொருட்டுவிசுவரூபத்தைக் கொண்டருளினார். அவ்வற்புதத்தை நராந்தகன்பார்த்து அளவற்ற வேதாகமங்களினாலுந் தேடிக் காண்பரிய சுயஞ்சோதிப்படிவத்தினை நேரிற்கண்டும், பிராரத்தவினையின் சம்பந்தப் பட்டவனாய் முன்னம் பாலனாகவிருந்தவிவன் நம்மை யெதிர்த்து யுத்தஞ்செய்து வெல்ல நிர்வாகமற்று, இப்போது ஓர் மாயத்தினால் ஓர் பெரிய ரூபங்கொண்டு நிற்கின்றனன், இனிநாமும் இவனைப்போலப் பேருருக்கொண்டு வெல்லவேண்டுமென்று யோசித்தவனாய், தானும் உருவத்தில் மாத்திரம் சரியானவனாகி சுவாமியெதிரில் அட்டகாசஞ்செய்து நின்றனன், அக்குறிப்பினை எமதையனறிந்து அவனுடைய மார்பைத் தமது திருவடியின் பெருவிரலின் நகத்தினாலூன்றிப் பிளந்து உயிரை விண்ணுலகேற்ற உடலை பூமிமீதுதள்ளி அனிசசப்பூவினைப் போலத் தேய்த்தருளினார்.

இச்சுபகாரத்தைக்கண்ட தேவர்கள் ஆனந்தக்களிப்பின் மூழ்கிப் பஞ்சகற்பக மலர்களை வாரிவாரிச்சொரிந்து வாழ்த்திச் செயங்கொண்டாடினார்கள். குரூரன்முதலிய வீரர்களுங் காசிராசன் முதலியோருமிக்க மகிழ்ச்சியடைந்தவர்களாகி விசுவரூபங்கொண்டிருக்கின்ற சுவாமியைப் பலமுறைப்பணிந்தெழுந்து கர்த்தனே! இப்பெரிதான திருமேனியை அடியேங்கள் தரிசிக்கும் வல்லபத்தினையுடையோமல்லோம், சுவாமிகள் சுயரூபத்தினைக்காட்டி ஆட்கொண்டருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். உடனே அவர்கள் பயம்நீங்குமபடியாக அவ்விசுவரூபத்தினை மாற்றிப் பழயபடி மகோற்கட மூர்த்திப் படிவத்தினைத்தாங்கி சகலசேனைகளும் புடைசூழ்ந்து வருமபடியாகச் சமர்க்களத்தினின்று நீங்கிக் காசிபட்டணத்தை யடைந்து யதாப்பிரகாரம் அரசனுடைய அரண்மனையின்கணெழுந்தருளி யிருந்தனர். அப்போது நரர்கட்கெல்லாம் அந்தகனென்னும் பெயரினைப்படைத்து சகல வுயிர்களையும வாட்டிவநத கொடுமபாதகனுக்ப அவுணராசன் மாண்டமையை ஏனையதீபங்களுக்கும் அறிவிக்கச் சொல்லுவான் பொலச் சூரியனானவன் மேற்றிசைக்கடலில் அத்தமான மாயினன்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இது பரியந்தம்மகோற்கடமூர்த்தியானவர் நராந்தகனைச் சங்கரித்து முத்திகொடுத்தருளிய திருவிளையாட்டினைச் சொன்னோம். இனி அவன்தமையனாகிய தேவாந்

தகளையுஞ் சங்கரித்து முத்திக்கனுப்பிய திருவிளையாடலை பார்தமாகச் சொல்லுவோம் கேட்பீர்களாக.

சொர்க்கலோகத்திலே விண்வெளி தேவர்களெல்லாந் தனது நடக்கும்படியாக அரசியற்றிவந்த தேவாந்தகனுனவன் தன்னெதிரில் திடீரென்று விழுந்த தலையினைக்கண்டு இது நமது தம்பியினுடைய தலையேயென்று நிர்மாணித்து தனதுள்ளத்திற் பலவாருன எண்ணங்களை யெல்லா மெண்ணிப் பரிதபித்திருக்கின்ற சமையத்தில், அங்கிருந்த சிலர் அத்தேவாந்தகனை வணங்கி நின்று ஆண்டவனே! இத்தன்மைத்தான தலைகள் அளவற்றனவாய் உதிரத்தோடு சகல லோகங்களிலும் விழுந்துகொண் டிருக்கின்றன வென்று சொன்னார்கள். அதைக்கேட்டவுந் தேவாந்தகன், சிறிதுமனந்தேறி, இவ்வொன்றேயன்றி அனேகந்தலைகளைக் கண்டதாகச் சொல்லுகின்றமையால், அவன் மாண்டவனல்லன், இவ்வளவிலேனும் அவனோடு யுத்தஞ்செய்யத்தக்கவன் காசிபனுடைய புத்திரனேயன்றி வேறொருவனல்லன். நாமும இனித் தாமதஞ்செய்யாமல் பூவுலகத்திற்குச் செல்லவேண்டுமென்று சொல்லிக்கொண் டிருக்கையில் முன்னர் நராந்தகனு லேவிய தூதர்கள் அப்போது வந்த தேவாந்தகனைப் பணிந்தெழுந்து ஆண்டவனே! காசிராசனுனவன் தனது புத்திரனுக்கு விவாகஞ் செய்யும் நிமித்தங் காசிப முனிவனுடைய புத்திரனைப் புரோகிதனுக வழைத்துக் கொண்டுபோனன் போகிறமார்க்கத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த தேவரீருடைய சிறிய தந்தையைக் கொன்ருன் அச்சம்பவத்தை அவருடைய பிள்ளைகள் இருவோருங்கண்டு எதிர்த்தார்கள். அவர்களையும் அப்போதே கொன்றனன். அதைத் தேவரீருடைய தம்பியார்கேட்டு அவ்வரசனழைத்துவந்த சிறுவனைக் கொன்றுவரும்படியாக அவர்கள் தனித்தனியாகவுந் துணையாகவும் அளவற்ற மாயவுருவங்களைக்கொண்டு சென்று அச்சிறுவனுடைய கரத்தினுல் மாண்டார்கள். அதன்மீது தேவரீருடைய தம்பியார் சகல சேனைகளோடுஞ் சென்று யுத்தஞ் செய்துகொண்டிருந்தனர். இப்போதவர் அளவற்ற யுத்தங்களினுல் இளைப்புற்றுத் தேவரீரையல்லாமல் சத்துருவைக் கொல்லுவது மிகவுமரிதென்று நிதானித்து இவ்விடத்திற் கெம்மை யனுப்பினரென்று சொன்னார்கள். அவையனைத்தையுந்தேவாந்தகன்கேட்டு, முட்டிஏற்றுத்திரியும் பிராமணச் சிறுவனுடைய பராக்கிரமம் மிகநன்று எனக் கோப நகைகொண்டு உடனே அமைச்சர்களைக்கூவி நஞ்சேனையாவும் யுத்தத்திற் காயத்தமாகும்படி கட்டளையிடுவீர்களென்று ஆக்கியாபித்தான், அவ்வேளையில் அவர்கள் தந்தையாகிய இரௌத்திர

கேடுதன்பவன் தன்னெதிரில்வீழ்ந்த தலையை சிவிகையின்மேலேற்றிவந்து தேவாந்தகன் முன்னே வைத்து மைந்தனே உனது தம்பி காசிராசனுடன் யுத்தஞ்செய்யச் சென்றனன், அவன் அவ்விடத்தில் இறந்தாற்போற் றோற்றுகின்றது அவனுடைய தலை நமது முன்னேவந்து வீழ்ந்தது அதையும் இதோ கொண்டுவந்திருக்கிறேன் பாரென்று காட்டினன் அதைத் தேவாந்தகன் பார்த்துத் தந்தையே தம்பியினுடைய தலை இவ்வொன்றுதானோ? அளவற்றவிடங்களில் அளவற்ற தலைகள் விழுந்துகிடக்கின்றன அதேனெனில் அவனுக்குச் சிவபிரான் கொடுத்தருளிய வரத்தினால் தலைகள் அனேகமாக வளர்ந்து கொண்டு வருகின்றன. அவன் இறப்பானென்று தேவரீர் நினைக்கவேண்டுவதில்லை. நானும் அவ்விடத்திற்கு யுத்தஞ்செய்யப்போகவிருக்கிறேன்: தேவரீர்யாதொன்றிற்குங் கவலையுறாமல இருக்கையைச் சேர்ந்திருக்கலாமென்று விடைகொடுத்தனுப்பி இனி நடக்கப்போகின்ற காரியத்திற் கேற்றபடி அளவற்ற சேனைகளை கூட்டிக்கொண்டு அவர்களெல்லாம் அனேக வெகுமதிகளைச் செய்து அரண்மனையினின்றும் வெளிக்கொண்டு பூலோகத்தை நோக்கிச் செல்லுவதாயினன் அப்போது நராந்தகனுடைய இறந்தலையறிந்த சில அவுணதூதர்கள் வாயினும் வயிற்றினுமறைந்துகொண்டு, கண்களில் நீர்ப்பெருகக் கோடுகோடெனப் புலம்பி வாயுவேகத்தினும் மேலிட்டு யுத்தசன்னத்தராய் வருகின்ற தேவாந்தகனெதிரிற் சென்று அடியற்ற பனையைப்போல அவன் பாதத்தில் விழுந்து வாயெழாமற் சற்றுநேரங்குழறி கடைசியில் இதனை விண்ணப்பஞ் செய்வதாயினர்.

ஆண்டவனே! என்னசொல்லப்போகின்றோம், காசிபமுனிவர் புத்திரனை அழைத்துவந்திருக்கின்ற காசிராசனோடு தேவரீருடையதம்பி அளவற்ற சேனைகளுடன் சென்று போராடினர் அதனால் காசிராசன் முதலியோர் பட்டபாட்டை யாவராலுஞ்சொல்லிமுடிவதன்று பின்னர் அவனழைத்துவந்த அப்பிராமணச் சிறுவன் போருக்குவந்து இமைப்போதில் தனது முகத்தினின்றும் அளவற்ற வீரர்களையுண்டாக்கிக் கொடிய சமரை விளைவித்தனன். அதற்கும் அவரஞ்சாது பற்பல மாயவித்தைகளைக் கொண்டு போராடினர். முடிவில் அச்சிறுவன் ஓர்பாணத்தினால் வெட்டியெறியுந்தோறும் வளர்ந்துவந்த சிரங்களையெல்லாம் பலபுவனங்களினுஞ் செல்ல வீசித்தனது விசுவரூபத்தினால் அவரைத்தரையிற் குழையும்படி தோய்த்துக் கொன்றுவிட்டுத்தனதுபடைத்தலைவர்களெல்லாம் புடைசூழும்படியாகச் சயப்பிரதாபத்துடன் காசிநகரைச்சேர்ந்து களித்திருக்கின்றனன் என்றுசொல்லினர்.

அச்சொல் தனதுசெவிகளில் விஷத்தைப்போல நுழைந்த மாத்திரத்தில் மனந்திடுக்கிட்டுத் துயரவெப்பமானது தேகத்தைக் கொளுத்த மயிர்க்கால்கடோறும் அழற்சுவாலைவீசித் தகிக்க விழிகளில் நீர்ப்பெருக்குற்று உதிரம்பாய வாய்புலர்ந்து சுவாசமெழுந்தோறும் புகைப்படலமும் வெப்பமும் தோற்றச் சோர்ந்து பதை பதைத்து வருந்தி அக்கினியை யுண்டவன்போலக் களைத்து விழுந்து, கடகடவெனப்புரண்டு, நிலைதெரியாமல் வழுவிக் குண்டாங்கரணம் போட்டுருண்டு சத்தமேகங்களும் ஒருமித்துக் கர்ச்சிப்பதுபோலக் கதறிக் கரங்களைத்தட்டி நிலத்திலறைந்து திகைத்து மதிமயங்கித் தனக்குக்கிடைத்திருந்த வலியும் வீரமும்மானமும் மற்றுமுள்ள சிறப்புகளையுமிழந்து விசனமென்னும் நீர்ச்சுழியிற்பட்டுத்தியங்கி ஓ என்னையனே ! ஓ என்னப்பனே ! ஓ என்னுசைத் துணைவனே ! தானவர் குலத்தினை விளக்க வந்த தலைவனே ! உன்னையொத்த வீராதி வீரனைத் தூதரோடி வந்து மாண்டனனென்று சொல்லுவார்களோ ? ஆதியில் இந்திரனாதிய தேவர்களையும், பூமண்டலத்தினரையும் புறந்தந்தோடப் போர்முனையில் வென்று தமியேனுக்கு வெற்றியைத் தந்தனையே ? அத்தகைய ஜயசாலியாகிய உன்னை இத்தினம் சமர்க்களத்தில் ஓர் பாலன் கொல்லவுமாயிற்றோ ? நமக்கஞ்சிப் பணிகின்ற யமனும் உன்னரிய பிராணனைப் பயமற்றுக் கொண்டுபோகத் துணிந்தனனோ ? சண்டை கிடைத்ததென்று கேட்டவுடன் மகிழ்ந்து புயாசலங்கள் வானத்தளாவப் பூரித்து மேல் நடந்துவாட்டும் வீரபராக்கிரம சம்பன்னனே ! சத்திராதிகளென்னும் மதயானைக் கூட்டங்கட்கு வலியசிங்கராயனை யொத்த கண்மணியனே! உன்னைப்பறிகொடுத்து யாதொரு துணையுமின்றிப் பரதவிக்கின்ற என துன்பத்தினைநீக்கத் தயிரியங்களைச் சொல்லித்தேற்ற மனமிரங்காயோ ? உன்னைப் பிதாவைப்போலவும், பிள்ளையைப்போலவும், எக்காலத்தும் நம்பியிருந்த என்னைச் சுத்தமாய்மறந்துவிடலாகுமோ? உன்னையே பிராணபதமாக நம்பியிருந்த என்னைச்சற்றும் நினையாமல் இப்பூவுலகத்திலுள்ள சம்பத்துக்களை விடுத்து சொர்க்கலோக போகத்திலிச்சைவைத்து அவ்வாழ்வை நீமாத்திரந்தனித்துப்போய் அனுபவிக்கவுங் கற்றனையோ ? ஓதுணைவனே ! உனது திருமுகப்பொலிவைஇனி எக்காலத்திற் காணப்பெறுவேன் ? நம்மை யரிதிற்பெற்ற தாய்தந்தையர் இக்காரியத்தை யறிவார்களாயின் என்ன பாடு படுவார்களோ உனது சிரத்தினைக்கொண்டு மதிமயங்கிவந்த தன்றாதக்குத் தம்பி யாவனாலு மிறக்கானென்று பல வுறுதிகளைச் சொல்லி யனுப்பினேனே! ஐயோ! இனி இதைக் கேள்வியுற்றாராயின் தமியேனை எவ்விதங்களில்

நிந்திப்பரோ ! யானுந் தோற்றதில்லையே யென்று இவ்விதமெல்லாகச் சொல்லிப் புலம்புகிற தேவாந்தகனை அருகிருந்த அமைச்சர் முதலாயி னோர்தேற்ற, ஒருவாறு தேர்ந்து மானமுங் கோபமும் மனதைவாட்ட நல்லகாரியம் நல்லகாரியமென்று சிரக்கம்பிதஞ் செய்து எனதுபிராண னையொத்த அருந்துணைவனைக் கொன்றவீரன் எவனோ அவனைக்கொ ன்று வெற்றிமாலைசூடாமல் ஏனையா மாலைகள் முதலாகிய அலங்காரங் களை மறந்தும் வேண்டேன் அதுபரியந்தம் எவ்வகைப்பட்ட பசிவரி னும் உணவுங்கொள்ளேன் என்று சபதங்கூறி மதயானையை யொத்த வலிபெற்றவர்களாய் அளவற்ற சிரங்களையுங் கரங்களையு முடையவர் களாய் சிங்கம் கரடி புலி யாளி யானை இத்தகைய மிருகங்களின்முகங் களைப் படைத்தவர்களாய் வீரபராக்கிரம சாலிகளாய் இருட்கூட்டத் தினைச் சீய்க்கவல்ல வில்-வாள்-தோமரம் - பிண்டி - பாலம். கப்பணம் முசுண்டிமுதலிய ஆயுதசவரட்சணைகளைப் பெற்றவர்களாய் தன்னைப் புடைசூழ்ந்திருந்த நால்வகைச் சேனைசமுத்திரங்களையுங் கூட்டிக்கொ ண்டு இரணபேரி-சயபேரி-வெற்றிச்சங்கம்-தவுண்டி-மல்லரி சல்லரி-தக் கைமுதலிய பொற்பறைகள் அண்டங்களதிர முழங்க துசபடாங்கள் வானத்தையளாவப் படபடென்றசைய வெண்சாமரை ஆலவட்ட முத லிய இராப சின்னங்களைப் பலகோடி அவுணமுதியோர்கள் பலர்திர ள்ந்து இராசாதிராசனே சயப்பிரதாபத்தைப் பெற்றுவாக் கடவை யெ ன்று பலவாழ்த்துகளைப்பேசிப் புஷ்பங்களை யிறைக்க சுமங்கல மங்கை யர்கள் பற்பல ஆலங்களைச்சுழற்றி நிற்கபட்டுவர் புகழ விருதுவசனங் கள் பாமாலைசாற்ற இவ்வித சம்பிரமங்களோடு பூலோகத்திலிறங்கி அ ளவற்ற மகிமைகளோடுஞ் சிறப்புற்றிருக்கின்ற காசிநகரத்தை யடைந் து நராந்தகனும் மகோற்கடனும் யுத்தஞ்செய்த சமர்க்களம் எங்ஙன மென்று விசாரித்து தெரிந்துக்கொண்டு அங்ஙனந் தனது சேனைகளை யெல்லாம் நிறுத்தித் தானுமிருந்தனன். அப்போது முன்னர்நராந்தக ன்செய்த சமர்ச்சுவையினை யறிந்து மேற்றிசைக்கடலில் மறைந்து செ ன்ற சூரியனானவன்மீட்டுந் தேவாந்தகன் செய்யுஞ் சமர்ச்சுவை யினை யுமறிவோ மென்று வந்தவன் போலக் கீழ்த்திசைக் கடலி னுதைய மாயினன்.

இப்பால் நராந்தகன் சகோதரனாகிய தேவாந்தகனுடைய வர லாற்றினையறிந்த அவ்விடத்திய தூதர்கள் காசிராசனிடத்தி லோடிப் பணிந்தெழுந்து, ஆண்டவனே ! தேவாந்தக னனவன் அளவற்ற சேனைகளோடு இப்பட்டணத்திற்கு வெளியில் இறங்கி யிருக்கின்றா னென்று சொல்லினர். அதை அரசன்கேட்ட மாத்திரத்திற் றடுமாறி

மகோற்கட மூர்த்தியிடத்திற் சென்று பணிந்தெழுந்து அளவற்ற தோத்திரங்களைச்செய்து ஓ சகலபுவனாதார கர்த்தனே! நராந்தகனுடைய தமையனாகிய தேவாந்தகன் யுத்தசன்னத்தனாய் சொர்க்கலோகத்தினின்றும் வெளிக்கொண்டு இங்ஙனம் வந்திருக்கின்றனன். அவனையுந்தேவரீர் சங்கரித்து அடியேனை முற்றினுங் காத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான் அவனை மகோற்கடமூர்த்தி கிருபையோடும் பார்த்து அரசனே! அஞ்சவேண்டாமென்று திடஞ் சொல்லி அத்தேவாந்தகன் கண்டு நடுங்கத்தக்க ஓர் பெரிய வடிவத்தினைக் கொண்டு, நான்கு கரங்களும், அக்கரங்களில் வில்-வாள்-பரசு-பாசம் என்னும் நால்வகை ஆயுதங்கள் விளங்க, சித்திபுத்திகளுடனே சிங்கவாகனமூர்ந்து, கொடிகொடை முதலிய சின்னங்களோடு, பற்பல பூதவீரர்கள் புடைசூழும்படி, ஆகாயமார்க்கமாக அப்பட்டணத்தினின்றும் வெளிக்கொண்டு சமர்க்களத்திலிறங்கி அங்குஜயவுற்சாகத்தோடு ஆர்ப்பரித்திருக்கின்ற தேவாந்தகனுடைய சேனாசமுத்திரங்களைக்கண்டு தமது இடப்பாகத்திலிருக்கின்ற சித்திதேவியை நோக்கிப் பெண்ணே! இதோ நமக்கெதிரில் நின்ற பெரிதான சேனைகளை யழிகத்தக்க வேறேசில சேனைகளைச்சிருட்டிக் கடவையென்று திருவாய் மலர்ந்தனர். உடனே சித்திதேவியார் அவ்வாக்கினைச் சிரமேற்கொண்டு சுவாமியை வலம்வந்து பணிந்து, அணிமா-மகிமா-கரிமா இலகிமா-பிராத்தி-பிராகாமியம்-ஈசத்துவம்-வசித்துவம் எனச் சொல்லா நின்ற அட்டமா சித்திகளை எண்விதசத்திகளாக்கி, அவ்வவர்கட்கேற்ற நால்வகைச் சேனைகளையும் ஆயுதங்கள் முதலியவைகளோடு உண்டு பண்ணினர்.

அவ்வதிசயத்தையுந் தேவாந்தகன்கண்டு தனது சேனைத்தலைவர்களைக்கூவி ஓ வீரர்களே! நாமிங்குவந்தபின்பு பகைவனுடைய சேனை மிகவும் அற்பமாகவந்தது. இப்போது அவ்வற்பமும் சத்தசாகரங்களைப்போல அளவற்ற சேனைகளாய் விளங்குகின்றன. இத்தன்மைத்தான மகத்துவத்தினைப்படைத்த சேனைகளோடு நாமெதிர்த்துவென்றோமாயின், நமக்கு யழியாதகீர்த்தி யெங்கும்பரவி நிற்கும். ஒருவேளை அழிந்தோமாயினும் அக்கீர்த்தி நமக்குக் கிடைப்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. ஆதலால் நமது சேனைகளை அணிவகுத்துப்பகைவனுடைய சேனைகளைச்சின்னபின்னப் படுத்தக் கடவீர்களென்று சொல்லி அளவற்ற வெகுமதிகளைச் செய்தனன், அவ்வாறே அப்படைத்தலைவர்கள் சகல சேனைகளையும் அணிவகுத்து யுத்தஞ்செய்வதாயினர்.

அந்தயுத்தத்தினுடைய திறத்தினைத் திருமான்முதலிய தேவர்கள் ஆகாயமார்க்கத்திற் கூடிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்,

இப்பால் இருவகைச் சேனைகளினுமுள்ள வீரர்கள், வெற்றிச் சங்கம் முதலியவைகளை முழக்கித் தமது முடிகளிற் றும்பை மாலைகளைச்சூடி அணிமாசத்தியுடனே கத்தமனும், மகிமாவுடனே-எக்குமனும், லகிமாவுடனே தால் சங்கனும், கரிமாவுடனே-தீர்க்கதந்தனும், பிராப்தியுடனே-,கண்டனும், பிராகாமியையுடனே - காலாந்தகனும், ஈசத்துவத்துடனே-துற்சயனனும், வசித்துவத்துடனே இரத்தகேசியும் ஏனைய சேனைகளுமாக வெதிர்த்துந் காடாந்தகாரமாகிய இருட்கூட்டமும் அதைநாசப்படுத்தவல்ல சூரியனுடைய கிரண சமூகங்களும் ஒன்றுக்கொன்று போருக்கெழுந்தது போல ஒருவரை யொருவர் விற்களைவளைத்துக்கொடிய தீட்சண்ணியமுள்ள பாணவருஷங்களைப்பொழிந்தும், தோமரம்-பரசு - சூலம்-குந்தம் - குறுந்தடிமுதலிய ஆயுதங்களை வீசியும், இந்திராஸ்திரம்-வருணாஸ்திரம்-வாயுவாஸ்திரம் அக்கினியாஸ்திரம் முதலிய தெய்வப் படைகளைப் பிரயோகித்தும் வானளாவநிற்கின்ற பர்வதங்களைப் பிடுங்கிக் கிறுகிறெனச் சுழற்றிப் பந்தைப்போலக்கடாவியும், திரைகளைமுடிக்கிளைகளை விரித்திருக்கின்றபாரித்தமரங்களை வேருடன்பிடுங்கிச் சுழற்றிமோதியும், ஒவ்வொரு கைத்தில் நூயிரம்பதினாயிரம் யானைகளைவாரித் தோணிகள் நூறுங்கி விழவீசியும், பல இரதங்களைத்தூக்கி அளவற்ற குதிரைப் பந்திகள் நிலத்திறைபட்டுருளச்சாடியும், கணக்கிறந்த குதிரைகளைத் தூக்கி அதிவற்றசேனைகள் சின்னாபின்னப்பட்டு மாளத்தாக்கியும், கழுத்துகளை முறித்தும்,. காங்களை யொடித்தும், விலாக்களொடியக் குத்தியும்; மார்பிளக்கவறைந்தும், கால்களைத் தட்டியும், விழுந்துருள உதைத்தும், நிமத்தைகவ்விக் கொண்டிருக்க மோதியும் வானத்திற்பறக்கஎற்றியும், திசைகளில்வீசியுந், சமுத்திரத்திற்கு மிளவிடவெறித்தும், சுள்ளிகளைப்போல வொடித்தும், பேயாத்தினால் மேல் விழுந்து வட்டியையக்கடித்தும். உதிரத்தைக் குடித்தும். இடித்தும், குத்தியும், மோதியும், தட்டியும்முட்டியும் மொத்தியும்; பிசைந்தும், கசக்கியும், கிட்டிவும், மாதாம்போன்ற புஜங்களை ஒடித்தும். தலைகளைநெரித்தும், மூளைகளைவாய்வழியிற்கக்கக்கருக்கியும் , கண்மணிகளைப்பிடுங்கி நட்சத்திரவீதிகளி லெறிந்தும், வயிற்றைப்பீறிக் குடர்களைப் பிடுங்கி மாலையாகப்போட்டும், வாரி நிலத்திலறைந்தும், வலிய கால்களினற்றுதைத்தும், சதைத்தல் இவ்விதங்களாம ஒருவர்க் கொருவர் அமோகமாகிய யுத்தத்தைவிளைத்தனர்.

அக்காலத்தில் இருதிறச் சேனைகளிலும் அளவற்றபேர் மாண்டு இரணக்களமானது அலைகளைச்சுருட்டி மோதிக் கொண்டோடவும், மூளைகள் சந்திரகாந்தப்பாறைகளைப்போல இரைந்துகாட்டவும், பிண கலைகள் பெருத்தோங்கவும், பூதபசாசங்கள்-காளிக்கூட்டங்கள்-உதிரமாமிசங்களைத் தெவிட்டவுண்ட வெறியினால் ரணபத்திரகாளியைப் புகழ்ந்து தித்தோமென்று நடித்துத் துணங்கைக் கூத்தாடவும், நாய் நரிகள் இங்குமங்கும் ஊளமிட்டோடவும்-கழுகு-பருந்து - காக்கைகள் பசியற்றுவானமெல்லையிற் கூச்சலிட்டுலாவவுமாகி யிருந்தது.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! அக்காலத்தில் ரணக்களமிருந்த வேடிக்கையை இவ்வகைத்தெனப் பேசப்படுமேதோ, இவ்விதமாகச் சித்திதேவியினுடைய சேனைகளுந் தேவர்களுடைய சேனைகளும் வெஞ்சினமுமம, நெடுமொழியுங்கூறித் தத்தமிறைவர்களுடைய கண்களில் நீர்பெருகும்படியாகச் சமர்செய்துமாண்டு வீரசொர்க்கத்தினையே முக்கியமாகக் கருதிப்போராடு முன்னிலையில் சித்திதேவியினுடைய சேனைகள் மேலிட்டு வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்து சத்துருக்களைஎறி வந்த கோடானுகோடி இரதங்களையு மெடுத்து ஒன்றுடனொன்றைத் தாக்கிப்பொடியாக்கி யெறிந்தும், மிக்க மதம்பொருந்திய யானைகளின் துதிக்கைகளைப் பற்றி இறுகி நெறநெறனச்சுழற்றி யானைகளின்மீது மோதிச்சின்னாபின்னப்படச் சாய்த்துப, குதிரைப்பந்திகளைவாரி குதிரைப்பந்திகண்மீ தெறிந்தும் சப்படக் கொன்றும், சில தேவசேனைகள் பிரசண்ட மாருதத்தைப் போலச் சுழன்று அளவற்ற அவுணவீரர்களைவாரி அவுண சேனைகளின்மீது மோதிக்கண்ட துண்டப்படச் சாடியும், மலைகளையொத்தப் புயங்களைக்கொண்டு தாக்கிப்பல அவுணர்களை உருட்டியும், வலிய கரங்களினால் கோடையிடிகளையொப்பக்குத்திக் கொன்றும், பாதங்களைச்சுலவி ஒவ்வோருதையிற் கணக்கிறந்த இராட்சதரைத் தரையிற் கிடத்தியும், ஒவ்வோரறையினாற் கோனுகோடி அவுணவீரர்களை மடித்தும்; பல அவுணவீரர்களுடைய சிரங்களானது பெருங் காற்றிற்பட்டுதிராநின்ற தெங்கின்குலைகளைப்போல இரணக்கள மெங்கும் புரளும்படிக்கு மோதியும்; இவ்வாறு அமோகமாக விருக்கின்றமான் கூட்டங்களிற் சிங்காரசர்கள் பாய்ந்தலைப்பதைப்போல எதிர்த்துவந்த அவுணசேனைகளையெல்லாம் அதப்படுத்தி விறியிருக்கின்ற சமயத்தில, அவுணசேனைகள் மனவூக்கமற்று நிலைகலங்கித் தத்தளித்து இறந்தவர்கள்போக மற்றையர் பயபீதியினால் தளர்ந்து பின்னிடைவதை வலியும்வீரமும்பெற்று, அணிமாசத்தியோ டெதிர்த்து நின்ற

கந்தமனென்னும் சேனைத்தலைவன் கண்டமாத்திரத்தில் மண்டியெரிந்துமானமும் கோபமும் மனதைவாதிக்கத் தனதுதேரை அதிக விரைவோடுந் தூரத்திக்கொண்டுவந்து, அவுண சேனைகளையெல்லாம் பயப்படாதீரென்று ஆதரித்து நிறுத்தித், தனதுபாரித்த வில்லையெடுத்து நிறுத்தி நாணேற்றி மணிகள் சத்திக்கத்தக்கதாக வளைத்து விஷத்துவையலிட்டிருக்கின்ற அளவற்ற பாணங்களை ஒன்றனந்தமாகப் பிரயோகித்தார்ப்பரித்தனன். அப்பாணங்கள் வெளிப்பட்டவுடன் வானத்தெழுந்து பற்பல அனற்பொறிகளை யுண்டுபண்ணிக் கொண்டு அதிக வேகத்தோடுசென்று புத்தினிடத்திற் சர்ப்பசங்களுழைவதைப் போலப் புசபல பராக்கிரமசாலிகளாகிய சேனைகளிற் பாய்ந்து உருவிச்செல்ல அக்கொடுமைக்குத் தேவசேனைகள் ஆற்றப் படாதவர்களாய்க் கலங்கிவாடிப் பின்னிட அதை அணிமாதிசத்தி கண்டு, தனதுதேரை அப்பாதகனருகிற் றூத்திவந்து அடா இராட்ச்சப்பயலே! ஏன்தலைகீழாகவிழுகின்றனை? மிஞ்சவேண்டாம், இனி உன் சிலம்பமொன்று மிங்ஙனம் நடவாது. உன் பிராணனைக்கொண்டு போக யமனைப்போலவந்திருக்கின்றேன், இனிநீபிழைத்து ஊரைப் போவோமென்னும் எண்ணத்தை விட்டுவிடக்கடவை யென்றுபல வசைமொழிகளைக் கூறி, வெற்றிமாலை யணிந்திருக்குந் தனது தண்டாயுதமொன்றை யெடுத்துக் கிறுகிறெனச் சுழற்றி அவனுடைய தேரின்மீது கோடையிடியைப்போல மோதினன். அப்போதிரதமானது அச்சுவேறுமச்சுவேறாகச் சிதைந்து குதிரைகள் சின்னபின்னப்பட்டு சாரதிதலையுடைந்து மாண்டதை அவுணவீரன்கண்டு இரவுத்திராகாரமாகக் கோபித்து தனது வில்லிற கணக்கிறந்த பாணங்களைத் தொடுத்து அடிபேயே! இச்சிறந்த பாணங்களினால் உன்சிரத்தை வெட்டிப் பூமியிற்றள்ளிச் சயம்பெறுமற்போவேனாயின் இனியென் பிராணபரியந்தம் இவ்வில்லைக்கரத் திறசெடுவதில்லையெனப் பிரதிக்கினைச் செய்துப் பிரயோகித்தனன். அப்படைகள் வெளிப்பட்டமாத்திரத்தில் அதிகமகிமைகளைக்காட்டி அட்டதிசைகளினும எரிந்துபுதைந்து கொண்டுவருவதை அணிமாசத்திகண்டு அதிக கோபாவேசத்தோடு அப்பாதகனுடைய தேரிற்பாய்ந்து அவன் கரத்திற்கொண்டிருந்த வில்லையொடித்தெறிந்து அவன்சிகையைப்பிடித்து மேனதூங்கிசுழற் காற்றினைப்போல வட்டாகாரமாகக் கிறுகிறெனச் சுழற்றி வீசினள் உடனே அக்கந்தமன் விருப்பனைத்து மடங்கிப்பித்தனைப்போலமதி மயங்கிச்சோர்ந்து பெருங்கூச்சலிட்டுப்பதைபதைத்துத் துடிதுடித்து மாண்டனன். இவ்வாறே மகிமாசத்தியானவள் தனது வேலாயுதத்தினால் எக்குமனென்பவனைக் கொன்றாள். லகிமாசத்திகாலசங்கனென்

பவனை ஓர் வாளாயுதத்தினால் வதைத்தனள். கிரிமாசத்தி தீர்க்கதந்தனைச் சூலத்தினால் மாய்த்தனள் பிராத்திசத்தி கண்டனென்பவனைத் தனது கையினாற்குத்தி நாசஞ்செய்தனள். ஈசத்துவசத்தி துற்சயனென்பவனை ஓரம்பினாற் சாய்த்தனள். வசித்துவசத்தி இரத்தகேசனை ஓர் வச்சிராயுதத்தைவிட்டு வதைத்தனள்.

இவர்கள்செய லிவ்வாறாக, பிராகாமியசத்தியோடு மெதிர்த்துநின்ற காலந்தகனென்பவன் மகாபராக்கிரமசாலியாய் நெடுநேரஞ் சிறிது மிளையாது போர் செய்துவர அவன் வீரத்தினை அச்சத்திகண்டு இவ்வற்பன் நமது படைகளோடு நீடித்து யுத்தஞ் செய்வது வெகுநேர்த்தி வெகுநேர்த்தியெனக் கோபநகைசெய்து, தனது சேனைகட்குத் தயிரியங்களைச் சொல்லிக் கூட்டிக்கொண்டு இரதத்தைத் துரத்திக்கொண்டுபோய் அவுணசேனைகளை நாற்புறத்தும் வளைத்துத் தங்கத் தகடுகள் பூண்டு இருகுதைகளினும் மணிகள் சத்திக்கும் யாரித்தவில்லை வட்டாகாரமாக வளைத்துத் திசைகளதிரக் குணத்தொனி செய்து விஷத்துவைய மிட்டிருக்கின்ற திவ்வியபாணங்களை அமோகமாகப் பூட்டிப்பிரயோகித்தனள் அப்பாணங்கள் அனலை யிறைத்துப் புகைகளைப்பெருக்கி அதிக உற்பாதங்களை விளைத்துக்கொண்டு தடைக்கஞ்சாமல்மீறி வேகமாய்ப் பாய்ந்து அவுண வீரர்களுடைய சரீரங்களில் சுறுக்கு சுறுக்கென்று தைத்து சல்லடைக் கண்களாகத் துளைத்துவாட்ட, அவ்வுபத்திரங்களை யவ்வீரர்கள் சகிக்கமாட்டாமல் தயிரியத்தை விடுவித்துத் தலைவிரிகோலமாய்த் திசையெங்கணும் பறந்தொளிக்கத் தொடங்கினர். அதைக் காலாந்தகன்கண்டு, மனம்புழுங்கி நம்மவர்களிப்பாடுபடுவதோவெனச் சீறி கண்களி லனற்பொறிகள் சிதறத் தக்கதாகத் தனது தேரை விரைவிற் றுரத்திவந்து பிரகாமிய சத்தியெதிரில் நிறுத்தி மேருவையொத்துப் பாரித்திரா நின்றவில்லை வளைத்துத் திசைகளதிர டங்காரத்தொனி செய்து அரிய தவங்களினாற் பெற்று யாவராலுந் தடைசெய்வதற்கரிய கொடிய பாணங்களைத்தேடி யெடுத்துப்பூட்டி இவைகளினால் உன்னரிய பிராணனை வாங்குகின்றேனென்றுபேசிப் பிரயோகித்தனன் அப்பாணங்கள் வில்லிலிருந்து வெளிப்பட்ட மாத்திரத்தில் குறுகுறென்னுஞ் சத்தத்துடன் அதிக மகிமைகளைக் காட்டிக்கொண்டு வந்து பிராகாமியசத்தியினுடைய தேரையும் வில்லையும் பொடிபடுத்தின. அக்கொடுமையா லச்சத்தி திடுக்கிட்டு இந்திரியங்கள் லேங்கி வாயுலர்ந்து மனம்கடுங்கி சோம்பித் வில்லையும் பாணங்களையுந் தேரில் நழுகவிட்டுத் தேக மெங்கணும் வியர்க்கக் கிலேசித்து, யாதொரு செய்கையுமற்றிருந்தனள் அச்சம்பவத்தை வசித்துவ சத்திய

நின்று இந்த அபலனோ நம்மவர்கட்கு இவ்வித இடையூறினைச் செய்ய வல்லவனென்று ஆக்கிரமித்துத் தனது தேரை மனோவேகத்திலு மூன்றித் துரத்திக்கொண்டு வந்து சண்டமாருதத் தினைப்போல அவனுடைய தேரிற்பாய்ந்து இமைப்போதில் அவனுடைய கழுத்தை முறித்துத் தலையானது கடலிற்போய் விழும்படி யெறிந்தனள். உடனே மூர்ச்சையாகித் தேரில்விழுந்து கிடந்த பிராகாமிய சத்தியானவள் மூர்ச்சை தெளிந்தெழுந்து பகைவ னெங்கே யென்று தேடினள். அதைமுசலன் பல்லனெனச் சொல்லாநின்ற இரண்டு அவுணசேனாபதிகள் கண்டு அளவற்ற சேனைகளோடுந் தமது தேரை வாயு வேகத்திலும் விரைவாகத் துரத்திக்கொண்டு வந்து விழிகளிற்றீயெழ உறுத்துப்பார்த்து அடிபேய்களே ! சற்றும் எண்ணிக்கை யில்லாமல் எம்மவர்களை இப்படிக்குக் கொல்லத் துணிவீரோ ? உங்கள் பிராணனைக் கொண்டு போகும் யமனைப்போல இங்குவந்திருக்கின்றோம் சற்று நேரத்தில் உங்களைத் தென்னாட்டிற் குடியேற்றுவோம். இதுவரையில் நீங்களெதிர்த்துப் போராடினவர்களைப்போலே எங்களை நினைக்கவேண்டாமென்று இவ்விதவீரங்களைப்பேசி வாயுவேகத்திலு மேலிட்டுத் தங்கள்மீது உறுத்து வருவதை வசித்துவசத்திகண்டு, இந்திர தனுசையொத்த வில்லைக் கொண்டு. இடியைநிகர்த்த குணத்தொனியைக் காட்டி மின்னலைப்போன்ற அலகையுடைய சரங்களை சோனைப் பெய்யலுக்குச் சமதையாகச் சொரிந்து ஆர்ப்பரித்தனள்.

அப்பாணங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தில் நாற்றிசைகளினும் வடவா முகாக்கினிகளைப் பெருக்கிக்கொண்டு சென்று அவ்வவுணர்களுடைய சேனைகளிற் பாய்ந்து புகை தெரிந்துகொண்டு ஒருவரையும் அப்புறம் இப்புறம் போகவொட்டாமல் வளைத்துக் சரீரமுற்றுந் தொளைத்தும், பிளந்தும், கண்டதுண்டமாக வெட்டியும், கால்களைத் தரித்தும், புசங்களைச்சரித்தும், மார்பை பிளந்தும், சிரங்களைக கண்டித்தும், வயிற்றைப்பீறிக் குடர்களை யிறைத்தும், மேருவைப்போலப் பாரித்திருக்கின்ற தேர்களெல்லாம் அச்சொடிந்து வண்டிகளுருண்டு மச்சுகள் நுறுங்கிக் கொடிங்கைகள் துகள்பட்டுக்கொடை கொடி முதலியவைகள் பறந்து போகும்படி நாசப்படுத்தியும், நீலகிரியைப் போலக்கறுத்த தேகத்தைப் பெற்றிருக்கின்ற மதயானைகளெல்லாம் வீறிட்டுக் கலைந்து இரத்தின முகபடாமணிந்த மத்தகங்கள் பிளந்துபனையையொத்த துதிக்கரங்கள் வெட்டுண்டு பிறையை யொப்ப விளங்குந் தந்தங்கள் இறைந்து பாரித்த கால்களற்று வீழும்படிக்குத் தும்சப்படுத்தியும், அலைகளைப்போலத்தாவிச் சமர்செய்யவல்ல பஞ்சலட்சணங்களாகிய

குதிரைகளெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டுப் பின்னி விட்டிருக்கும் பிடரி மயிரையுடைய சிரங்களறுந்து சொர்ன வெண்டயங்கள் கலிக்குங் கால்கள் தறிந்து சாமரங்களை யொத்த வால்கள் பாக்து மாளும்படிக்குச் சாடியும், இவ்விதமாக இரதகஜதுரகபதாதிகளாகிய சேனைகளை யெல்லாம் அகா அதப்படுத்தின. அக்காலத்திற் பெருகிய உதிரமானது கடலைப்போல இரைந்து அலைகளைவீசிச் சமுத்திரத்திற் பாய்ந்தது. சமர்க்கள முழுவதும் பிணமலைகள் பெருத்துவானத்தையளாவக்குவிந்தன. பலகோடிக வந்தங்கள் கூத்தாடின. அவ்வரிய போரிற் பிழைத்திருந்த சில அவுணர்கள் அதிககாயங்களினால் மனம் வருந்தி நிலைபெற்று நிற்கபடாமையால் திகைத்துத் தங்கள் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு மானத்தையும் வீரத்தையும் பறிகொடுத்தோடி திசாதிகளினும், பூவட்டங்களினும், பர்வதச் சாரல்களினும், வனாந்தரங்களினுந், தீவாந்தரங்களினும் பதுங்கினர். இவ்விதமாக அவுணசேனைகள் வலியிழந்து பின்னிடுவதையும் தேவ சேனைகள் அலங்கார உயித்தியங்களைச் செய்து சயசாலிகளாய் வீறித்திரிவதையும் அதிசூரர்களாகிய முசலனும் பல்லனுங்கண்டு மனம்புழுங்கி நம்மவர்கள் இப்பாடு படுவதோவெனச்சீறி மந்தரகிரியை யொத்துப் பாரித்திருக்கின்ற தங்கள் விற்களை வளைத்துக் குரூரமாகிய அளவற்ற பாணவிதங்களைத் தொடுத்து தமது சேனைகளைச் சின்னபின்னப் படுத்திய வசித்துவசத்தியின்மீது கரவேகமாகப் பிரயோகித்தனர். அம்மாத்திரத்தில் அப்பாணங்கள் திகுதிகென்றெரிந்து வந்து பலகொடுமைகளை விளைக்க, அதனைவசித் துவசத்தி சகிக்கமாட்டாது சிறிது தளர்ந்தனள். அத்தளர்ச்சியை அணிமாசத்தி யறிந்துவந்து தனது வில்லில் அளவற்ற பாணங்களையும், சக்கரம் - பிண்டி - பாலம் - தோமரம் - கப்பணம்-முசலம்-சூலம்-தண்ட முதலிய படைகளையுஞ் செலுத்தி ஆர்ப்பரித்தனள் அதற்கு அவ்விரண்டவுண சேனாதிபதிகளும் இளையாது தாங்களும் பல பாணங்களையும் படைகளையும் பதிலுக்குப் பதில் பிரயோகித்து அணிமாசத்தி தனது தேரோடு பின்னிட்டோடும்படி செய்து இரணக்களமெங்குஞ் சக்கிராகாரமா யுலாவிக்கொண்டிருந்தனர். அப்போது பிராத்தி சத்தியும் ஈசத்துவசத்தியும் ஈதென்ன விபரீதமென்று திகைத்து தமது இரதங்களைத் தூரத்தி ஓடிவந்து அடா அவுணப்பயல்களே! எம்மை நீங்களோ வெல்ல வல்லவர்கள் ? இதோ வுங்களுயிரைவாங்கி யமலோகங் குடியேற்றுகின்றோம் பாருங்களென்று வசை மொழிகளைப்பேசிக்கொண்டு தங்கள் விற்களில் தேவாஸ்திரங்களைப்பூட்டி ஓ படைகட்கரசே! அதோ நிற்கின்ற அவுணவீரர்களுடைய சிரங்களைக் கண்டித்து அவர்கள் பிராணனையுண்டு மீண்டுவரக் கடவீர்களென்று சொ

ல்லைப் பிரயோகித்தார்கள். அவர்கள் விடுத்த அவ்விரண்டு அஸ்திரங்களும் வெளிப்பட்டவுடன் தகத்தகாயமாய்ப் பிரகாசித்து அனலை யிரைத்துப் பலகோடி பிரம்மாஸ்திரம் - வருணாஸ்திரம் - வாயுவாஸ்திரம் - குபேராஸ்திரம் முதலியவைகளைப் படைத்துக்கு முறியெரிந்து புகைகொண்டு எங்குந்தமதுமயமாய் அதிக மகிமைகளைக் காட்டிச்சீறி யிரைந்து காடாந்த காரமாகிய இருட்பெருக்கைப் பிரகாசம்பொருந்திய கிரணங்களையுடைய சூரியனானவன் எங்கு மில்லாதபடி மாய்ப்பதுபோல அவுண சேனைகளை யெல்லாம் நாசப்படுத்தி இரணக்களமத்தியில் மகாபராக்கிரமத்தோடு வீற்றிருக்கின்ற அவ்வவுண சேனாதிபதிகளுடைய மாயங்களையுஞ் சிரங்களையும் கண்டித்தெறிந்து வானகங்கையில் முழுகி மீட்டுந் தம்மைச் செலுத்திய சத்திகளிடத்திற் சென்று சேர்ந்தன.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே ! எத்தகையராலுஞ் சகிக்க வொண்ணாத அவுணசேனைகள் இவ்விதமாக இரைந்து பரந்து போனதையும் அவர்களைப் போற்றியிருந்த வீர பராக்கிரம சாலிகளாகிய கணக்கிறந்த படைத்தலைவர்கள் சின்னாபின்னப்பட்டு மாண்டதையும், தேவசேனைகளும் பூதவீரர்களும் சயவுற்சாகங்களுடன் களித்து இரணக்களமெங்கும் எதிரின்றித் திரிவதையும் சகல தேவர்களையும் வென்ற வீராதி வீரனாகிய தேவாந்தகன் கண்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலக் கொதித்துத் தீயும் புகையுமெழ நகைத்துக் கற்பக மலர்களை யணிந்த புயாசலங்களையுடைய இந்திரன் முதலிய தேவர்கள் தங்கள் பதங்களையிழந்து சின்னாபின்னப்பட்டு வாடியோடக் கொடிய போரைச் செய்த செயசாலிகளாகிய நமது சேனை வீரர்கள், இத்தினம் அபலராகிப் பூதங்களினாலும் படை வீரர்களினாலும் இப்பாடு படுவதோ ? சகல தேவர்களையும் வென்ற கீர்த்திப் பிரதாபத்தினைப் பெற்ற எனது கண்காணச் சத்துருக்கள் வலியுள்ளவர்களாய்ப், புசபல பராக்கிரமசாலிகளாகில் இராட்சதவீரர்களை வாட்டிச் ஜயம்பெறுவது வெகுநேர்த்தியாக விருக்கின்றது ? நடந்துபோன காரியங்களை நினைந்து நினைந்து மனம் வருந்துவதினால் பிரயோசனம் ஒன்றுமில்லை, இனி காலதாமதஞ் செய்யாமல் நானே போர் முனையில் நடந்து சத்துருக்களை வளைத்துக்கொண்டு கொடிய போரைச் செய்து ஓர் நாழிகைப் போதிற் சின்ன பின்னப்பட வாட்டிக் கொல்லுகிறேனென்று சபதம்பேசித் தனது குலகுருவாகிய சுக்கிரனை மனதிற்றியானித்தான், உடனே அச்சுக்கிரன் அவனிடத்தில் வந்து அவன் கருத்தின் வண்ணம் இரணக்களத்தில் இறந்து கிடக்கின்ற அவுணசே

னைகளை யெல்லாம் அவன் செழும்பினன், அதை ஈசத்துவசக்தி கண்டு விழிகளில் வடவாமுகாக்கினி தோன்றும் படியாக ஆலகால விடத்தைப்போலக் கோபித்துத் தனது புருவத்தை நெரித்தனள். அவளுடைய கோபத்தினின்று அதிக இரவுத்திராகாரத்தோடு மற்றொருசத்தி உற்பவித்து அக்கிரனிடத்திலோடி அவனை யெடுத்து விழுங்கித் தனது வயிற்றில் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றனள், அவனால் பிழைத்தெழுந்த சேனைகளெல்லாம் ஈசத்துவ சத்தியினுடைய கோபாக்கினியால் மீட்டு மிறந்துபோனார்கள். அச்சம்பவத்தைத் தேவாந்தகன் கண்டு கோபமிகுதியினாற் புருவம் நெற்றியிலேற மண்டியெரிந்து வாயுவேகமும் மனோவேகமும் பிற்படத்தக்கதாகத் தனது தேரை விரைவில் முடுக்கிக்கொண்டு சென்று மகமேருவுக்குச் சமதையாகப் பாரித்துத் தங்கத்தகடுகள் பூண்டிருக்கும் வில்லினை யெடுத்து நாணேற்றிச் சர்வசங்கார காலத்தில் தேவாதி தேவனாகிய சிவபிரான் அண்டரண்ட புவன சராசரங்களை யொடுக்க நினைத்தபோது ஊழிமேகங்ளொன்றுபட்டு வருஷிப்பதைப்போலக் களிப்புடன் வீற்றிருக்கின்ற அணிமாமுதலிய எட்டுசத்திகள்மீதும் அவர்களுடை சேனைகள்மீதும் அப்பாணங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தில் கோடையிடிகளைப் பெருக்கி, விழிகள் கூசமின்னித், தீயைவீசிப் புகழ்ந்து, பற்பலகொடுமைகளைக் காட்டி அதிக மகிமையுடன் பிரசண்ட மாருதத்தைப்போல வேகங்களைக்கொண்டு குறுகுறெனச்சீறிவர, அதை ஐயசாலிகளாகிய பூதசேனைகள் கண்டமாத்திரத்தில் வடவையைப்போலச்சீறிக் குழிபட்டிருக்கின்ற விழிகளில் தீப்பொறிகள் சிதறத்தாவி அஷ்டகுலாசலங்களுக்குச் சமதையாக ஓங்கிநிற்கின்ற பர்வதங்களைப் பெயர்த்துக்கொண்டு தேவாந்தகனுடைய மார்புக்கிலக்காகக் கிறுகிறெனச் சுழற்றிவெவென வீசி ஊழிக்காலத்திற் பெருகும் இடிகளைப்போல ஆர்ப்பரித்தனர். அப்பர்வதங்கள் அதிகவேகத்தோடும் திசைகள் தோன்றாதபடிநிறைந்து குமிறிமேலிட்டுச் சென்று தேவாந்தகனுடைய மார்பிற்போய்த் தாக்கிய மாத்திரத்தில் மலையின் மீதெறிந்த வெள்ளரிக் கனியைப் போலத்தூள்பொடியாகிப் பிரயோசனப் படாமற் போயின. பின்னர் பூதசேனைகள் கதை-முத்தலைச்சூலம்-சக்கரம்-வேல்-தோமரம் - பிண்டிபாலம் எறியீட்டி எழு-மழு-காலபாசம்முதலிய ஆயுதங்களை ஒன்றனுந்தமாகவீசி யுத்தஞ் செய்தார்கள். அவைகளை யெல்லாந் தேவாந்தகனனவன் அளவற்ற பாணங்களைத் துண்டிப்பொடிபடுத்தி மீட்டுங் குரூரமாகிய கோடானுகோடி பாணங்களைக் காவேகங்கொண்டு செலுத்திப்பூதசேனைகளுடைய சரீரங்களை யெல்லாஞ் சல்லடைக் கண்கள் போலவ

கும்படி துளைத்தனன். அக்கொடுமைக்கு அப்பூதசேனைகள் ஆற்றமாட்டாது மதிமருண்டு வாடியும் சோர்ந்தும் மரணமூர்ச்சை யடைந்தும் பங்கப்பட்டும் மானமிழந்தோடியும் இவ்விதமாகத் தாபமித்து எதிரில் நின்று போராட வகையில்லாமற் பின்னிட்டனர்.

அச்சம்பவத்தை அணிமாதி அட்டமாசத்திகளுங்கண்டு மனம்பொறாமல் தயிரிய சாலிகளாய்த் தங்களிரதங்களை வாயுவேகத்திலு முந்தித் துரத்திக்கொண்டுவந்து வானையளாவி நிற்கின்ற பர்வதங்களையும் திசைகள் மூடத்தழைத்திருக்கின்ற மரங்களையும் தண்டம் பிண்டிபாலம்-எழு மழு முதலிய ஆயுதங்களையும் சோனைமாரியைப்போல அமோகமாய்த் தேவாந்தகன்மீது சொரிந்து அட்டகாசஞ் செய்தார்கள். அச்செய்கைக்கு இராசாதி இராசன் நகைத்துப் பிறைதனையொத்த தனது வில்லில் அதிகதீட்சண்ணியமுள்ள பாணங்களை அபாரமாகப்பூட்டிப் பிரயோகித்துத் தன்மீதுவருகின்ற பர்வதங்கள் முதலானவைகளைத் தூள் பறந்தோடக் கண்டித்தும்; துண்டித்தும், தண்டித்தும் சின்னபின்னப்பட வெட்டியும், தட்டியும், இடித்தும், பொடித்தும், இவ்விதமாக இமைப்போதில் சூரியன்முன் பனிபோல விலக்கி ஆர்ப்பரித்து மீட்டும் ஆயிரங்கோடி நாராசங்களைச் செலுத்தி அவர்களேறியிருந்த பரித்தேர்களை வண்டில் அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கை கொடிக்கொடை முதலிய உறுப்புகள் வெவ்வேறாகச் சிதைந் துருளும்படிக்குச் சாடிவேகமுள்ள குதிரைகளைக் கண்டதுண்டப்படுத்திச் சாரதிகளைக்கொன்று, அவர்களைச் சூழ்ந்திருக்கின்ற பூத சேனைகள்மீது பின்னும் அளவற்ற கடூரமாகிய பாணங்களைப் பிரயோகித்தனன். அவ்வாளிகள் வெளிப்பட்டவுடன் புகைந்து தீயையிறைத்துக் குறுகுறென்றும் ஆவ்வென்றும் உரப்பிக்கொண்டு அதிவேகமாகவந்து பாய்ந்து பூதசேனைகளுடைய மார்பையுங் கண்டத்தையும் முகத்தையும் புயங்களையுஞ் சல்லடைக் கண்களாகத் துளைத்தும் கண்டித்தும் பிளந்தும் வெட்டியும் ‘இரணக்களமெங்கும் உதிரப் பிரவாகம் பெருக்கெடுத்தோடச்செய்தன. இவ்வாறு தங்கள் இரதங்களும் பூதசேனைகளுஞ் சின்னபின்னப்பட்டுச் சிதறி மயங்கிப்போனதை அட்டமா சத்திகளுள் அணிமாசத்திகண்டு மனம்நொந்து மானமுங் கோபமும் மனதைவாட்ட வடவா முகாக்கினியைப்போலக் கோபித்து, அதிகவேகத்தோடும் தேவாந்தகனுடைய இரதத்திற் பாய்ந்து தனது வாளாயுதத்தைக் கிறுகிறெனச்சுழற்றி அவன் புயத்தின்மீது வீசினள். அப்போதவ்வாளாயுதமானது அவன் புயத்தின்மீது பட்டுத்துணி பட்டுப்போயது. உடனே தேவாந்தகனவன் ஊழியனலை யொப்பக் கொதித்து

உருத்தெழுந்து தானுமோர் வாளாயுதத்தை யெடுத்து அணிமாசக்தி யின்மீது வீசினன். அதனை அவள் தனது கையினாற்பறித்து நாற்றிசைகளினும வீர்வீரெனத்சி அவனுடைய சொர்ன மகுத்தினிலுள்ள இரத்தினங்களெல்லாஞ் சிதறிச் சரீரமுழுவதும் வெட்டுண்டு நெற்றியிற்கட்டப்பட்டிருக்கின்ற பட்டமுஞ் சின்னபின்னப்பட்டு நிலத்தில் உதிரும்படியாகச் செய்தனள். உடனே தேவாந்தகனானவன் மண்டியெரிந்து சர்ப்பத்தைப்போலச் சீறி வேறொரு வாளாயுதத்தைக் கரத்திற்கொண்டு அணிமாசக்தியினுடைய நாசியை யறுக்கும்படி நேர்ந்தனன். அதனை யச்சக்தியானவள் தனது கையிலிருந்த வாளாயுதத்தினால் துணித்து மீண்டனள். அப்போது தேவாந்தகனானவன் இரவுத்திராகாரமாகக் கோபித்து, அடிபேயே! எங்கே ஓடுகின்றனை நில்லுநில்லு. யான்வைத்திருக்கின்ற படைகளிலெல்லாம் அற்பமாகிய வோர்வாளாயுதத்தை ஒடித்துவிட்டோமென்று கெர்வமடையாதே? முன்பு தேவர்களையெல்லாஞ் சின்னபின்னப்பட வாட்டி ஜயம்பெற்றிருக்கின்றநான் இப்போதுனக்கும் உன்னுடன் வந்திருக்கின்ற இப்பெண்பிள்ளைகட்கும் அஞ்சுவேனென் றெண்ணவேண்டாம், இதோ உங்களனைவரையு மிமைப்போதில் வாட்டி விண்குடி யேற்றுகின்றேனென்று ஆக்கிரமித்து மந்தரகிரியைப்போல விளங்குந் தனது வில்லையெடுத்து நாட்டியிருகுதைகளும் ஒன்றுபடவளைத்து நாணேற்றிக் குணத்தொனி செய்தனன். அத்தொனியைக்கேட்ட மகிமாசக்தியானவள் மண்டியெரிந்து, அனலையொப்பச் சொலித்திருக்கும் முண்டைக் கண்களுடைய அவுணனே! ஏன் இதற்குள் பொரியைப்போலத் துள்ளுகின்றனை? சற்றும் பயமில்லாமல் எங்கள் முன்னம் இவ்வித வார்த்தைகளைப் பேசியபடியால், உனக்கு முடிவுகாலஞ் சமீபித்தது இனிப்பதனமாய்த் தப்பித்துக்கொள்ளக் கடவையெனச்சொல்லித் தனதுகரத்திலேந்தியிருந்த சக்கராயுதத்தை விடுத்து அவுணராசனுடைய கொடையினை நிலத்தில் வீழ்த்தினள். உடனே அப்பாதகன் மானமேலிட்டவனாகித் தனது தேரினின்று நிலத்திற் குதித்து அதிககோபாவேசத்துடன் தண்டாயுதத்தைக் கரவேகமாகச் சுழற்றிக்கொண்டு இடசாரி வலசாரியாகச்சுழன்று தன்னையெதிர்த்து நிற்கின்ற எட்டு சத்திகளையும் அப்புறமிப்புறம் போகவொட்டாமல் வளைத்துக்கொண்டு ஒவ்வொருகுறிவைத்து மோதியும், அவர்கள் மோதலைத் தடுத்தும், ஆட்டுக்கடா வினைபோலச்சிறிது பின்னிடைந்தும், மீட்டுமவர்களருகிற்சென்று மார்பு புயம் துடை முதலிய விடங்களில் கோடை யிடியைப்போலத் தாக்கியும், இவ்விதமாக இரணக்களமெங்குஞ் சுழற் காற்றி

லைப்போல வட்டணைவந்து எமனுங்கண்டு நடுங்கும்படிக்குத் தண்டாயுதப்போரினை வரிசைக்கிரமப்படி நடத்தி அகோரயுத்தத்தினைச் செய்தனன். அந்த யுத்தத்திற்கு அவ்வெண்வகைச்சத்திகளும் ஆற்றமாட்டாதவர்களாய்த்திகைத்து அணிமாசத்தி பலஹீனப்பட்டு மயங்கினாள். மகிமாசத்தி காயங்களின் உபத்திரவத்தினால்வருந்தித் தூக்கித்திருந்தனள். கரிமாசத்தி மனவூக்கமற்றுப் பிரமித்து நின்றனள். லகிமாசத்தி மிகவும் வருந்தி ஏங்கினள். பிராத்திசத்தி சரீரம் பதைபதைக்க நின்றனள். பிராகாமியசத்தி எழுந்திருக்கச் சக்திபற்றுக் கிடந்தனள். ஈசத்துவசத்தி துக்கசாகரத்தி லழுந்தினள். வசித்துவசத்தி பலவிதமாகவைது பெருமூச்செறிந்தனள். இவ்வாறு சித்திதேவி படைத்தருளிய அட்டமாசத்திகள் மயங்கியும் தூக்கித்தும் பிரமித்தும் ஏங்கியும் பதைபதைத்தும், சக்திபற்றும், சோபித்தும், பெருமூச்செறிந்தும், படாதபாடுகளைப் பட்டுப் பின்னிட்டதை விநாயகமூர்த்தியினுடைய வலதுபாகத்தி லிருக்கின்ற புத்திதேவியார்கண்டு தீயெழநகைத்து, ஒருபாதகன் நம்மவரையெல்லாம் இப்பாடுபடுத்துவதோ வென்னமனம் வாதிக்கத் திருமேனி முழுவதும் புழுங்கி மயிர்க்கால்கடோறும் அனல்வீசக் கொதித்து விநாயகமூர்த்தியினுடைய திருவடிகளிற்பணிந்தெழுந்தனர். உடனே அவரெதிரில் இரண்டு பர்வதங்களைப்போன்ற முலைகளும், மேகமண்டலத்தையளாவிய முகமும், ஆகாயத்தையளாவிய முடியும், அட்டதிசைகளினும் பரந்து சிவந்திருக்கின்ற சடைகளும், அழலெழச்சிவந்து காட்டுகின்ற விழிகளும், பற்பல ஆயுதங்களையேந்திய நீண்ட கரங்களும், அடியெடுத்து வைக்குந்தோறும் ஆதிசேடனை நெளியச்செய்யவல்ல பருத்தகால்களுமுடைய ஓர் சத்தியானவள் புத்திதேவியென்னும் பெயரோடுண்டாகித் தன்னைப் படைத்தருளிய புத்திதேவியாரைப் பணிந்தெழுந்தனள். உடனே புத்திதேவியார் அச்சத்தியைப்பார்த்து மகளே! இதோ நம்மெதிரில் வீரபராக்கிரமத்தோடு நிற்கின்ற தேவாந்தகனையும் அவனைக் கடல்போலப் புடைசூழ்ந்திருக்கின்ற சேனைகளையுஞ் சின்னபின்னமாக நாசஞ்செய்து பின்னர் இங்ஙனமீளக்கடவையென்று ஆக்ஞாபித்து விடைகொடுத்தனர். அச்சத்தியும் அதற்கிசைந்து சென்று தேவாந்தகனுடைய சேனாசமுத்திரங்களில் சகல பிராணிகளையும் வாட்டவெழுந்த ஆலகால விடத்தினைப்போலப்பாய்ந்து சிலரை சின்னபின்னப்பட வாரிப்பூமியிலறைந்தும் சிலரை ஆகாயவெளியிற்சுழற்றிக் காற்றிற்சருகையொப்பவீசியும், சிலரைவிண்டு பிரமனுலகங்களில் அலறிவிழச் செலுத்தியும், சிலரைச் சத்தசாகரங்களினும் பெரும்புறக்கடலினுந் தவளைக

லைப்போல மிதக்கும்படிக்குக் கடாவியும், சிலரைத் தூக்கித் தெங்கின் கனியையொப்பச் சூரியனுடைய ரதத்தில்மோதியும், சிலரைத் திசைகடோறும் இறைத்தும், சிலரை அம்மானையையொப்பச் சுலவியெற்றியும், சிலரைச் சரீரம் நொறுங்கும்படியாக அண்டச்சுவரிற் றாக்கியும், சிலரைப்பந்தைப்போலெறிந்தும், சிலரை யமலோகஞ் சேர்த்தும், சிலரைப் பொன்னாட்டிற் போக்கியும், சிலரை வடவைக் கனலுக் கிரையாக்கியும், சிலரை வாயுமண்டலத்திற் சக்கிராகாரமாகச் சுழல வீசியும், சிலரைத் தீவாந்தரங்களி லெறிந்தும், சிலரை உலகமெங்கணும் பரப்பியும், சிலரை வலியபாதங்களால் தேய்த்துக்கொன்றும், சிலரை விரல்களினலெற்றி மாய்த்தும், சிலரை மண்ணுடன் கலந்துபோக மிதித்தும், சிலரை உதைத்துருட்டி வதைத்தும், சிலரைப்பருத்த கரங்களினற் பிசைந்தூதியும், சிலரைப் பனைநாரினைப்போலக் கிழித்தெறிந்தும், சிலரைக் கற்பகத்தையொத்த புயங்களினற்றாக்கி வாட்டியும், சிலரைப் பாயும்வேகத்தினல் மாய்த்தும், சிலரை அதட்டிக் கொன்றும், சிலரை வார்த்தையுரப்பிற் சிதைத்தும், சிலரைவெறித்த பார்வையால் மடித்தும், சிலரை எழுவாயுதத்தினல் வதைத்தும், சிலரை மழுப்படையைக்கொண்டு மாய்த்துஞ் சிலரைக் கொழுவின லடக்கியும், சிலரை முத்தலைச் சூலத்தினற் குத்திக் களத்திற் படுத்தியும், சிலரைத் தண்டாயுதத்தினல் மோதிக் கொன்றும், சிலரை வில்லினலெய்து வீழ்த்துகள் படுமதியும், இவ்விதங்களாக இரணக்கள முழுவதுங் சூறைமாருதம் போலச் சுழன்று சுழன்று தேவாந்தகனுடைய சேனைகளில் ஒருவரையுந்தப்பவிடாமல் நாசஞ்செய்து பின்னர் அவனையு மெடுத்துத் தனதுபிலத்தையொத்த வாயிற்போட்டு மெல்ல மெல்ல உமிழ்நீரைப் போல விழுங்கிக்கொண்டு அவ்விடநின்று நீங்கித் தனது தலைவியாகிய புத்திதேவியை நோக்கிச்சென்றனள்.

அப்போது யாவராலும் அழியா வரம்பெற்றிருக்கின்ற தேவாந்தகனனவன் சூக்குமவடிவோடு அவள் வயிற்றினின்றும் வாயின்வழியாக வெளிப்பட்டு உய்ந்தோம் உய்ந்தோமென் றோடித் தனது தந்தையிருக்கின்ற காத்திரமென்னும் பட்டணத்தையடைந்து இளைப்பாறினன். அச்சத்தியுந் தன்னையீன்ற புத்திதேவியாரிடத்தில் வந்து பணிந்தெழுந்து கரங்களைச் சிரமேற் கூப்பிநின்று அளவற்ற துதிகளைச்செய்து அன்னையே! தேவரீரிட்டருளிய கட்டளையின்படியே தேவாந்தகனைப் புடைசூழ்ந்திருந்த சேனைகளையெல்லாம் மாய்த்தேன் அவனையும் எனது வாயிலிட்டு விழுங்கி வயிற்றில் வைத்திருந்தேன் பின்னவன் சூட்சும வடிவங்கொண்டு வெளிப்பட்டு ஓடிப்போயினன்

இனிமேலும் அவன் யுத்தஞ்செய்ய வருவானாயின் தப்பாது கொல்லு
கின்றேனென்று சொல்லி அங்ஙனே யிருந்தனன். முன்னர் காத்திர
நகரைநோக்கிச் சென்ற தேவாந்தகனானவன் அங்குவசித் திருக்கின்ற
தனது தந்தையை யடைந்து பணிந்தெழுந்து தனக்கு நேர்ந்த அபசய
ங்களைக்கூறி இனி எனது சத்துருவை இமைப்போதில் வெல்லத்தக்க
உபாயத்தினை எனக் கருளல் வேண்டுமென்று பிரலாபித்துக் கேட்டுக்
கொண்டனன்.

சகல மந்திரங்களினும் வல்ல இரவுத்திரகேதுவானவன், தமது
குமாரன் சொல்லிய வினைத்தையுங் கேட்டு அவனுக்கு வெற்றியைத்தர
வல்ல ஓர் மந்திரத்தைத் தனக்குள் ஆராய்ந்து அதனைச் சாஸ்திரவிதிப்
படி அதனது பீஜத்தோடும் அனுட்டிக்கத்தக்க முறைமை யோடும்
அவனுக்குபதேசித்து மைந்தனே! ஒரு வேள்விமுன்னிலையில் இம்மகா
மந்திரத்தைச் செபஞ்செய்து வருவையாயின் அவ்வேள்விக் குண்டத்
தினின்று சகலமானபேரும் நடுங்கும்படியாக வோர்குதிரை யுண்டா
கும். அக்குதிரையின்மீது நீ யேறிக்கொண்டு யுத்தஞ் செய்வையாயின்
உடனே ஜயமடைவையென்று சொல்லினன். அக்காரணத்தைச் சூரி
யனானவன் கண்டு பயந்து மறைந்தவன் போலத் தனதுகிரணங்களனைத்
தையும் ஒடுக்கிக்கொண்டு சென்று மேற்றிசைக்கடலில் குளித்தனனு
டனே அவுணபாதர்களுடைய மனம்போல எங்கு மிருள் மூடிக்
கொண்டது. அன்றிரவிற்றானே தேவாந்தகனானவன் ஆறுகோணமாக
ஓர் ஓமகுண்டஞ் சமைத்து அதில் சாத்திரமுறைமைப்படி தீயினைவளர்
த்தி அவ்வோமத்திற்கு வேண்டிய பொருள்களனைத்தையுந் தனித்தனி
யே அதிற்சொரிந்து தனது தந்தையா லுபதேசிக்கப்பெற்ற மந்திரத்
தை அனந்தமுறை கணித்திருந்தனன். அப்போது அவ்வோமகுண்ட
த்தினின்று மைநாக பர்வதம்போல மகாபராக்கிரமத்தோடு ஓர்கறுத்த
குதிரையானது உலகமெல்லாம் நடுங்கும்படியாக உண்டாயது. அத
னோடு அண்டங்களையெல்லாங் கைகளினாற்றட்டிப் பெயர்க்கவல்ல வலி
யும் வீரமுமுள்ள அளவற்ற சூரர்கள் ஆயுதபாணியரா யுண்டானார்கள்
அவ்வற்புதத்தைத் தேவாந்தகன் பார்த்து நமுய்வித்தக்க மார்க்கம்
இதைவிடவேறென்ன விருக்கின்றதென்று சந்தோஷித்து அவ்வேள்
வியைப்பூரணாகுதிசெய்து நிறைவேற்றினன். உடனே தனது ஒற்றை
வண்டிலைப் பூண்ட தேரில் ஏழுபச்சைக்குதிரைகளைப் பூட்டி நடத்து
கின்ற சூரியனானவன் அவ்வேள்விக்குண்டத்தி னின்றும் உதித்தகுதி
ரையைக் காணுதற்கு வருவான்போலக் கீழ்த்திசைக் கடலில் உதய
மாயினன்.

இப்பால் தேவாந்தகனுனவன், நித்திய விதிகளை முடித்துக் கொண்டு அறுவகைச்சுவையோடு பிராமண போசனஞ் செய்வித்து சொர்க்கமத்திய பாதாளங்கள், திசைகள், தீபாந்தரங்கள் முதலியவிடங்களில் தான்வைத்திருந்த அளவற்ற மூலப்படைகளை எக்காலத்தில் வரவழைத்து அவர்கட் கெல்லாங்கரி, பரி, தேர், படைக்கலம் முதலிய சிறப்புகளைக்கொடுத்து ஓமகுண்டத்தினின்று முதித்த குதிரையின்மீது ஆரோகணித்து அக்குதிரையோடு முதித்தவீரர்களும் தன்னைப் புடைசூழ்ந்து வரும்படியாக அந்நகரத்தினின்றும் வெளிக்கொண்டு முன்போலவே யுத்தகளத்தை யடைந்தனன். மகோற்கட மூர்த்தியும் முன்னையநாள் அத்தமானகாலத்தில் யுத்தகளத்தை விட்டு அரசனுடைய அரண்மனையின் கண்படுக்கிருந்து அத்தினங்காலையில் நித்தியவிதிகளை முடித்துக்கொண்டு யுத்தகளத்தை யடுத்தனர் ஓர் பால்முன்னர் நராந்தகனுடைய யுத்தத்தினு லுண்டான குரூரனும், ஓர்பால் அணிமாதி அட்டமாசத்திகளும், ஓர்பால்பத்திதேவியாலுண்டான பௌத்தேவியும், ஓர்பால்சித்திதேவியாலுண்டான சேனைகளும் ஓர்பால்மகோற்கட மூர்த்தியாலுண்டான பூதவீரர்களும், தனித்தனியே அணிவகுத்து நின்றார்கள் தேவாந்தகனும தனது சேனைகளையெல்லாம் அணிவகுத்து நின்றனன்

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே? இவ்வாறு இரணபேரி ஜயபேரி, வெற்றிச்சங்கம் தவண்டை, மல்லரி, சல்லரி, ஆகுளி; சின்னம், எக்காளம், தம்பட்டை முதலிய போர்ப்பறைகள் கோடைகால இடிகளுக்கொப்பாகக் கணகணென் றதிரத்தக்கதாய்ப் புறப்பட்டு வந்த இருவகைச் சேனைகளினும் உள்ள இரத கஜ துரகபதாதிகளின் பெருக்கை என்னென்று சொல்லுவேன்? பொன்மயமாகிய வண்டில் அச்சு மச்சு முதலிய சிறப்புகளைப் பெற்ற தேரணிகள் இவ்வளவெனக் கணிக்கப்படுவனவோ? சித்திரமுகபடாம் பிரகாசிக்கப் பிறையைநிகர்த்துக் காட்டுங் கோடுகளில் வயிரப் பூஷணங்களைத் தரித்து இருப்புலக்கைகளைத் துதிக்கரங்களிலேந்தி நீலகிரியையொத்த பாரித்த தேகங்களுடன் மேகங்களுமஞ்சியோட விறிட்டுச்செல்லும் யானைக் கூட்டங்களை ஒருவராலுங் கணிக்கப்படாது இரத்தின வெண்டயங்கள் கால்களிற் சத்திக்க அலைகளைப்போலப் பாயும் வேகமுள்ள புரவிப்பந்திகள் அளவிடப்படுவனவோ? வில்வாள் வேல் தண்டம் சூலம் சக்கரம் தோமரம் பிண்டிபாலம் முசலம் கப்பணம் முதலிய பற்பல படைகளைத்தாங்கி வீராவேசத்துடன் வடவையும் ஆலகாலமும் பலவுருக்கொண் டெழுவதைப்போற் கொக்கரித்துச் சீறிவரும் படைவீ

ர்களின் பெருக்கைப் பிரமனாலும் நிதானிக்கப்படாது. இத்தகைய சதுரங்க சேனைகளினும் பெருத்துண்டான பலவாத்தியவதிர்ச்சியும் ரதங்களோடுங் கற்காத்தொனியும் மதயானைகள் வீறிடு மொழியும் புரவிப்பந்திகளின் கனைப்பிரைச்சையும் படைவீரர்களுடைய ஆரவாரங்களும் ஏகமாயோங்கிப் பிரளய காலத்தைப்போல் மண்விண் திசைகளெங்கணுஞ் செவிடுபட முழங்கின. ஆகாயத்தை யளாவிச் செல்லும் இரதபந்திகளின் மீது நாட்டியகொடிகளும், யானைகள் மீது விளங்குஞ் சண்டாக்களும், படைவீரர்கள் தாங்கியிருக்கின்ற வெற்றித் துவசங்களும வானமெல்லையை மூடிப் படபடென்றசைந்தன. இவ்வித ஆடம்பரங்களுடன் சுமர்க்கள முழுவதும் ஊசிநாட்ட விடமில்லாமல் நிறைந்திருக்கின்ற இருதிறச் சேனைகளு மனவெழுச்சியுடன் போரைக்குறித்து மேலிட்டு இரதவீரர்களோடு இரதவீரர்கள் கைகலந்து கெறகரத்தொனிகளைச் செய்தோடும் பொன்வண்டில்களை யுருட்டி அச்சுக்களைத் துகள்படுத்திக் குத்துக்கால்களை நுறுக்கிப் பலகொத்து மணிகள் கலகல வென்றசையக் கொடுங்களைச் சிதைத்துச் சொர்ன கலசங்களை நிலத்திலுருட்டிச் சாரதிகளைமாய்த்துப் பூட்டி யிருக்கின்ற புரவிப்பந்திகள், சிங்கநிரைகள், புலிக்கூட்டங்கள், முதலியவைகளைக் களத்திற்கிடத்திச சிறகற்ற பர்வதங்களுக் கொப்பாக அளவற்ற இரதங்களை இரணக்களம முழுவதுங் குவித்தும், யானைவீரர்கள் மேலிட்டு இருபுறங்களினுமாறி யொலிக்கும் யருத்தமணிகளைக் கலகலவென றசைந்தாடத் தாக்கி இரத்தினமயமாகிய சித்திரமுகபடாம் போர்த்திருக்கும் மத்தகத்தைச் சிதைத்து இருப்புலக்கைகளைப் பனையை யொத்தசையும் பருத்த துதிக்கரங்களைச் சர்ப்பங்களைப்போலச் சமர் பூமியெங்கனும் புரளத்தரித்து. நட்சத்திர ராசிகளுக் கொப்பாக முத்துக்கள திசைதோரு மிறையும்படிக்குத் தவளநிறம் பெற்ற வலிய தந்தங்களைப் பிளந்து, சிறியவிழிகளைக் கல்லி யெறிந்து மேகங்களுமஞ்ச வீறிடுந் தொனியைப் பெற்ற பருத்த கழுத்துக்களை வெட்டி, உரலைப்போன்ற பாரித்த கால்களைத்தகர்ந்து, அசைவு பெற்றிருக்கும் வால்களைத் துண்டித்து, நீலகிரிக்கொப்பாக விளங்குங்கரிய உடல்களை இருகூறுக்கிக், காளமேகங்கள் வழுவியதுக் கொப்பாக அளவற்றயானைகளையுத்தகள முழுவது வீறிட்டு விழத்தள்ளியும், குதிரை வீரர்களோடு குதிரைவீரர்கள் மலைந்து சத்துருக்கள் திடுக்கிடும்படிக்குப் பிடரிமயிர்க ளலைக்கனைக்குங் குரலோசையினைவாய்ந்த கழுத்துகளைத்தரித்துக் சிதைத்துச் சாமரையையொத்த நீண்டவால்களைக்காற்றிற் பறக்க வெட்டியெறிந்து, வெண்டயங் கல்கல்லென வொலிக்கப்பாயுங்

கால்களை முறித்துக்கடலி னிடத்தெழும்பி அலைகள் மறிவதைப்போல வட்டோர்க்கள மெங்கணும் அளவற்ற குதிரைகளைமாய்த்தும், படைவீரர்களோடு படைவீரர்கள் முனைந்து சிரங்களிற் கவித் திருக்கின்ற வயிரமுடிகளைச் சிதைத்தும், வீரபட்டங்களைத் துகள் செய்து முத்தாரங்களை தாங்கிக் கலகலென்னு மோசையெழ வசினிக்கும் கழுத்துகளை யறிந்து கொடுமைகளைப்பேசும் வாய்களைப் பிளந்து பற்களை யுதிர்த்துத்தீயெழ உருத்துப்பார்க்குங் கண்களைக்கல்லி மணிகளிட்டிழைத்திருக்கும் வாகுவலயங்களைப் பொடிபடுத்திப் பர்வதாகிருதியகா ஓங்கித்திரண்டிருக்கும் புயங்களைச் சரித்து வயிரகவசங்களைத் துகள் செய்து விசாலமாகிய மார்பைப்பிளந்து விற்களையும் பாணங்களையுங் கொண்டிருக்கும் கரங்களைக்கண்டித்து வீரவெண்டயங்களை நுறுத்தெரிஷபத்தினைப்போலக் கெம்பீரகாக நடக்குங் கால்களைத் துண்டித்து முதுகுகளில் இறுக்கியிருக்கும அம்புடைய் குதைகளை அறுத்தெறிந்து அவைகளி லடங்கியிருநதபல படைகளைத துகள் படுத்தி, சண்டமாருதத்தின் மோதலிற்பட்ட மரங்களைப்போல யுததகள முழுவது மளவற்ற பதாதிவீரர்களை சின்னபின்னபபட வாட்டியும், இவ்வாறு வீராதிவீரர்களாய் புசபலபராக்கிரமசாலிகளா யிராநின்ற இருதிறப் படைகளினுமுள்ள நாலவகைச் சேனைகளுங் கலந்து போராடுகையில் அவுணசேனைகள் மனவெழுச்சியுடன் மேலிட்டிருபபதைத் தேவசேனைகள் கண்டு வடவாமுகாக்கினியைப்போலச சீறி இபபாதகர்களுடைய வலியை அடக்கவேணுமென்று கெக்கலி கொட்டிமரங்கள் பர்வதங்கள் ஏனைய படைகள் முதலானவைகளைக் கொண்டு தாக்கிய போது அவுணசேனைகளும் தீரமாகக் கொதித்து மின்னலைப்போலப் பளபளத்து விளங்கும் வாளாயுதஙகளைவீசி வெட்டியும் கூரியவேலகளினுற் குத்தியும் பருத்ததண்டாயுதங்களைக் கறகறெனச் சுழற்றிமோதியும், தங்கத்தகடுகள் பதிநதிருக்கின்ற நீண்ட விற்களை வளைத்து நாணேற்றிக் குணத்தொணிகொண்டு விடத்தொவைய விட்டிருக்கின்ற கொடிய பாணவருஷங்களைப பொழிந்தும் கப்பணங் கழுமுள்பிண்டிபாலம் சக்கரம் சூலம் முதலிய படைகளை ஒன்றனந்தமாகக் கடாவியும் வாட்டுவதாயினர். அக்கொடுமைக்குத் தேவபடைகள் சிறிது மஞ்சாமல் இட்சித்தராய் வடவைவைப்போற் பொங்கி வானத்தை யளாவித் திசைகளை மூடித் தழைததிருக்கின்ற மராமரங்களைச் சக்ராகாரமாச்சுழற்றிக் கைகொண்டமட்டும் மோதியும், பருத்த மலைகளைக்க செண்டை யொப்பக் கடாவியும், இருப்புலக்கைகளினுற் சாடியும் தண்டாயுதங்களைக் கொண்டு மோதியும், வளைதடிகளை வீசியும் அளவற்ற யுத்தங்களைச்செய்தனர். இவ்விதமாக சயசாலிகளாகிய தேவ



15 மகோத்கடர்





16 வல்லபைகணேசர்.

சேனைகளும் அவுணசேனைகளும் பின்னிடையாமல் ஒருவரை யொருவர் வெல்லவேண்டுமென்கிற ஆவேசத்தினால் கைகலந்து போராடு முன்னிலையில் இருதிறச் சேனைகளிலும் அளவற்றபேர் சின்னபின்னப்பட்டு இரணக்களமெங்கனும் மலைகளைப்போல விழுந்து குவிந்தார்கள். அப்போது அச்சமர்க்களத்தி லுண்டான உதிரவெள்ளமானது ததும்பிக்கொண்டோடி கடலிற் பாய்ந்து அக்கடலினுடைய கருநீரையெல்லாஞ் செந்நீராக்கியது. அப்பிரவாகத்தில் காக்கை கழுகு பருந்து முதலியவைகள் முழுகிக்களித்து வானத்தெழுந்து சிறகுகளை யுலர்த்தி வட்டமிட்டன. நாய்நரி முதலிய மிருகங்கள் மாமிசங்களையும் மூளைகளையும் பிடுங்கி வாரிவாரித்தின்று ஊளையிட்டன. பலகோடி கவந்தங்கள் நாடகரைப்போல நடித்தன. பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் பசிதணிந்துக் கரங்களைக் கோத்துக்கொண்டு பம்பை சுற்றியும், வெறியாடலைச்செய்தும், திததோமென நடித்தும, படைவீரர்களுடைய புகழைப் புகழ்ந்தும, பாடியுங் கொண்டாடின.

இவ்வாறு யுத்தகளமானது பொலிவுற்றபடி இருதிறச சேனைகளும் பின்னிடையாமல் அநேகமாகிய போரைவிளைத்துவரும்போது முன்னர் மகோற்கட மூர்த்தியா லுண்டான குரூரனனவன் தனதுசேனைகளில் அளவற்றபேர் மாண்டிருப்பதைக்கண்டு தனதுதேரை மனோவேகத்திலும் விரைவாகத் தூரத்திக்கொண்டுவந்து தேவாந்தகனெதிரில் நிறுத்தி அடா ராட்சசப்பயலே! நேற்றையதினம் ஓர் பெண்பூதஞ்செய்த போரினுக்கஞ்சிப் பின்னிட்டோடிப்போயின நீ இத்தினம் மகாபராக்கிரமசாலியா யுத்தகளத்தில் வந்து சண்டைகொடுக்க நேர்ந்தனை, இத்தினம் நீ எவ்விதத்திலும் ஊரைப்போய் சேருவோமென்னும் எண்ணத்தை விட்டுவிடக்கடவை, இதோ சற்றுநேரத்தில் உனதுயிரை யமலோகத்திற் குடியேற்றுவன் பயந்தோடினும் விடமாட்டேனென்று அதிககோபங் கொண்டவனாய்த் தன்கரத்தில் மேருகிரியைப்போல் விளங்கும் வில்லை நிறுத்தி நாரியைப் பிகிர்ந்து ஒருதரம் டங்காரவோசையைக் காட்டினன். அவ்வோசையி னதிர்ச்சி கிரியினால் அண்டங்களனைத்தும் அல்லோல கல்லோலப்பட்டு அவற்றுட்பட்ட பிராணிகள் பொறிகலங்கித் திப்பிரமைகொண்டு நின்ற நின்ற விடங்களிற் சோர்ந்து கிடந்தன. இவ்விதமாகக் குரூரனனவன் பலவசைகளைக்கூறி நாணொலியைக் காட்டியமாத்திரத்தில் தேவாந்தகனானவன் கோபமிகுதியினால் வடவையைப்போலச்சீறி, அடா பூதப்பயலே! சற்றும் பயமில்லாமல் இவ்வார்த்தைகளை என்முன்னம் பேசினை உனக்

கும் உன்னைச் சேர்ந்தவர்கட்கும் முடிவுகாலஞ் சமீபித்தது பதன மாய்த தப்பித்துக்கொள்ளக் கடவையெனச் சொல்லித் தனது கரத்தில் மந்தரகிரியைப்போல விளங்கும் பாரித்த வில்லைநாட்டி நாணைற்றிட்டுக் குணத்தொனி காட்டினன். அத்தொனியினால் அந்தரவாசிகளும் மற்றையரும் திகிற்பட்டு மிகவும் வாடி மயங்கினர். இப்பால் குரூரனானவன் தேவாந்தகனுடைய செய்கைக்கு மெச்சிச் சிரக்கம்பிதஞ் செய்தவனாய்த் தனது கரத்திற்பிடித்த வில்லென்னு மேகயானதுகணைகளென்னு மழைதாரைகளைப் பெய்ததுபோல அதிக குரூரங்களைப் பெற்றிருக்கின்ற வயிரவாளிகளை அமோகமாகச்செலுத்தி ஆர்ப்பரித்தனன் அவைகள் வெளிப்பட்டவுடன் புகைதெரிந்து அனலை வீசி எங்குமுபரந்து அதிவேகமாக வரும்போது தேவாந்தகன் தன்வில்லில் அளவற்ற பாணங்களைப் பூட்டிப் பெரும்புறக் கடல்மீது சோனைமாரி பெய்வதற்கொப்பாகப் பிரயோகித்துச சிங்கநாதஞ் செய்தனன். அப்பாணங்கள் வெளிப்பட்ட மாத்திரத்தில ஒன்றனந்தமாகப் பெருகித் தீயையும புகைப்படலங்களையும வீசி சிடசிடென்றுக் குறுகுறென்றும் இரைச்சலிட்டுக்கொண்டு மேலிட்டுச் சர்ப்பங்களைப் போலச் சீறி உருத்துப் பாய்ந்து பூமண்டலம் வானமெல்லை அஷ்டதிசைகள் மற்றைப்புவனங்க ளெங்கணும் நெருங்கி ஆரவாரித்திருக்கின்ற கணக்கிறந்த பூதவெள்ளங்களையும் தோணிகளையும் யானைக்கூட்டங்களையும் புரவிப்பெருக்கையும் வளைந்துகொண்டு தாக்குகையிற்போது தேவசேனைகளினுடைய தோணிகளினது உருளை-அச்சு-மசசு-குத்துக்கால் கொடிங்கை முதலானவைகள் வெவ்வேறாகப பின்னப்பட்டுக் குவிந்தும் மதயானைக் கூட்டங்கள் பனையைபோன்றதையுந் துதிக்கை வேறு, பிறையையொத்த தந்தங்கள் வேறு, மதகளத்தை நிகர்த்தமத்தகம்வேறு, உரலினைப்பொருவுங் கால்வேறாகக் கண்டிக்கப்பட்டு மலைகளாகச் சேர்ந்தும் குதிரைப்பந்திகள் சவரியினைப்போன் றதையும் பிடரிமயிரினைவாய்ந்த கழுத்துகள் துணிபட்டுக் கடிவாளம் பொடிபட்டு அலைகள்போற் றாவுங் கால்களறுபட்டு சாமரையைப்போன்றதையும் வால்கள் தெறிபட்டு ரணக்களமெங்கும் நிறைந்தும் மகா பராக்கிரமசாலிகளாய்ப் பலபடைகளை யேந்திச் சண்டை செய்கின்ற பதாதிவீரர்கள் நவரத்தின கிரீடங்களைத் தாங்கிய சிரங்கள் வெட்டுண்டுவரைகளை யொத்த தோள்கள் சரிந்து மார்பு பிளந்து வயிறு கீறுண்டு குடல்களிறைந்து கால்களகற்று ரணக்களமுழுவதுங்குன்றுகளைப்போலக் குவிந்தும் இவ்விதமாகச் சூறாவளிக் காற்றினிடத்தகப்பட்ட மேகங்களைப்போலக் குரூரனுடைய நால்வகைச் சேனைகளும்

ராந்தகனேவிய சரங்களினாற் சின்னபின்னப்பட்டு மாளும்போது சித்திதேவியாலுண்டான அணிமாதி அட்டமா சத்திகளும் இளைத்தவர்களாகி புத்திதேவிபடைத்த பவுத்திதேவியும் அக்கொடுமைக்கஞ்சி வருந்தினாள். மகோற்கட மூர்த்தியாலுண்டான பூதகணங்க ளெல்லாம் பயந்து திக்கொருவரா யோடத் தலைப்பட்டனர். இவ்வாறுதேவ சேனைகளை யெல்லாம் அதப்படுத்திய தேவாந்தகன் அதிக வுற்சாகத்துடன் ரணக்கள மெங்கும் உலவி வருவதையும் தனது சேனைகள் பின்னிடுவதையுங் குரூரன் கண்டு நீங்கள் ஒன்றற்கு மஞ்சவேண்டுவதில்லை யெனக் கையமர்த்தி நிறுத்தித் தனது சேனை அவுணராசனெதிரிற் றுரத்திவந்து காளகூடத்தைப்போல மண்டியெரிந்து கொவ்வைக்கனியையொப்ப விழிகள் சிவந்து தீப்பொறிகள் குபீல் குபீலெனக் கொட்ட உறுத்துப்பார்த்து பற்களை நறநறெனக் கடித்து உதட்டையதுக்கி மயிர்க்கால்கடோறும் அனலெழும்படியாகச் சர்ப்பத்தைப் போலச் சீறி நல்லகாரியம் சற்றும் எண்ணிக்கை யில்லாமல் நம் வரை வருத்திய உன்னாணவத்தை இமைப்போதிலடக்கி வாட்டுகின்றே னெனக் கோபித்துச் சொர்க்கம் மத்தியும் பாதலம் கடல்கள் மலைகள் திசைகள் தீவாந்தரங்கள் முதலானவைக ளெல்லாங் கலங்கித் திப்பிரமை கொள்ளும்படியாகத் தனது வில்லில் ஊழியிற் பெய்யு மேகத்தைப் போல அளவற்ற பாணங்களை ஒரு தொடையிற் பூட்டிப் பிரயோகித்துச் சத்தசாகர வெல்லையினும் அவைக ளிடையிற்பட்ட தீவுகளெங்கணு நிறைந்திருக்கின்ற கணக்கிறந்த அவுண வெள்ளங்களையும் புரவிப் பெருக்கையும் யானைக் கூட்டங்களையும் தோணிகளையுந் தும்சப்படுத்தினன். அக்காலத்தில் அவுணராசன் வடவையைப்போற் சீறித் தனது வில்லில் அளவற்ற கொடிய பாணங்களைப் பிரயோகித்துச் சிங்கநாதஞ்செய்தனன் அவைகள் வெளிப்பட்டவுடன் புகைந்தெரிந்து அனற்பொறிகளை யிறைத்து அதிவேகங் கொண்டுவரக் குரூரனானவன் தனது வில்லில் அளவற்ற தீட்சணியமுள்ள சரங்களைப் பூட்டிப் பிரயோகித்துச் சராந்தகனேவிய பாணங்களின் வீறுப்பை யடக்கி மற்றொருசரத்தினால் அவன் கையிலிருந்த வில்லைப் பொடிபடுத்தினன். உடனே தேவாந்தகன் மற்றொரு வில்லையெடுத்து அதில் கணக்கிறந்த பாணங்களைக் குரூரனுடைய உடல் முழுவதுந் தைக்கும்படியாகப் பிரயோகித்தான். அம்மாத்திரத்தில் குரூரனானவன் கோபநகை செய்து நல்லது உன் வீறுப்பை இதோ அழிக்கிறே னென்று தீயினுங் கொடுமையுற்ற பலபாணங்களினால் தன்மேல் வருகின்ற கணைகளைத் துகள்படுத்தி வடவைத்தீயும் ஆலகாலமு மஞ்சும்படியான வே

றே மூன்று பாணங்களினு லப்பாதகனுடைய கழுத்தணிகளையும் இரத்ன கிரீடத்தையும் செவிகளிலணிந்த குண்டலங்களையும் பொடிபடுத்தினன். இப்பால் தேவாந்தகனுனவன், அளவற்ற தவங்களினுற் பலதேவர்களிடத்தினின்றும் பெற்றிருந்த மணிமுடி முதலானவைகள் சின்னபின்னப்பட்டுப் போகலும் சீவரத்தினத்தையிழந்த நாகம்போலமதிமயங்கி மானமுங் கோபமும் மனதைவாட்ட ஞெரேலென்று தனது வில்லை இருகுதைகளு மொன்றுபட வளைத்து இனி இவனைத் தெய்வப்படைகளினுல் வெல்லுவேனெனத் தீர்மானித்துத் திரிலோகங்களுந்திகைத்து வாடும்படிக்கு வியாக்கிராஸ்திரத்தை யெடுத்துப் பூட்டித் தனது மனதினுல் சோடச வுபசாரங்களையுஞ் செய்து பிரயோகித்தனன். அவ்வஸ்திரம் வெளிப்பட்ட மாத்திரத்தில் வலிய கால்களையும் வச்சிரத்தை யொத்துக்காட்டும் நீண்டபற்களையும் பெற்றிருக்கிற பல்லாயிரங்கோடி வியாக்கிரங்களினுருக்கொண்டு உலகங்க ளெங்கும் நிறைந்து பெருமூச்சுக்களைவிட்டு அண்டகோளகையு மதிர்ந்து கிடுகிடாய்க்கும்படிக்குக் கர்ச்சித்து பிறையைப்போல வளைந்திருக்குங் கூரியகரங்களினுல் அளவற்ற பூதர்களை வாரிவாரி வயிற்றைப்பீறி அதாகதப்படுத்துவதைக் குரூரன்கண்டு, மிரைவில் தனது வில்லில் கஜாஸ்திரத்தைப்பூட்டிப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரம் ஒன்று அளவற்ற கஜங்களாய் மதங்களைப் பெருக்கி வீறிட்டுத் துதிக்கரங்களில இரும்புலக்கைகளைக் கொண்டு சுழற்றிப் பிலத்துவாரங்களை நிகாத்தவாய்களைத் திறந்துகருமாறுமலையில் விளங்குந் துருத்திக் கொபபாக விஷச்சுவாலை பெருகப் புஸ்புஸ் என்று பெருமூச்சுகளைவிட்டு மைநாக பர்வதங்கள் அளவற்ற உருவினைக்கொண்டு வந்ததைப்போல மேலிட்டு ஆலகாலவிஷமு மஞ்சச்சீறி, அஷ்டதிசைகளைத் தாங்கும் ஐராவதமுதலிய யானைகளைப் பிடித்துத் தள்ளிய், பூமிக்கச்சாணியாகப் பாதலம் வரையிற்போய் வானம் வரையி லுயர்ந்திரா நின்ற மகமேருவைக் குலுங்கத்தாக்கிக், •கால்களினுற் பெயர்த்து, விழிகளில் வடவாமுகாக்கினியை வீசிச், செவிகளினசைவினுல் சண்டமாருதத்தைப் பெருக்கிப், பிலத்திலிருக்கின்ற சேடனுதியாக ஷாசர்கள் திகைத் தேங்கும் படிக்கும் பூமியைக் கால்களினுற்றுக்கி, அண்டகோள்கை நெக்குவிட் டதிரும்படியாகப் பிறையையொத்த கோடுகளினுல் முட்டி, சொர்க்கமத்தியபாதலமெங்கும நடுநடுங்கக் கூந்தலிட்டு, அவுணபாதகனேவிய அத்திரத்தின் வலிமையையொடுக்கிப், பின்னர் அவனையுங் கொல்லுவதாக ஆக்கிரமித்துச் சென்றது.

அப்போது தேவாந்தகனானவன், காலாந்தகனைப் போலக் கோதித்துத்தானரிதிற் பெற்றிருந்த சிம்மாஸ்திரத்தைச் சோடச உபசாரங்களுடன் வழிப்பட்டுப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரமானது வெளிப்பட்டவுடன் அளவற்ற நாரசிங்க வடிவங்களைக் கொண்டு, நெருங்கிநின்டிருக்குஞ் சிவந்த மயிர்களைச் சிலிர்த்து, வடவையைப்போலச்சீறிக் கொக்கரித்து விழிகளில் அனற் சமூகங்களைவீசி நாசிகளில் பிரசண்டமாருதத்தைப் பெருக்கி, உலகங்களனைத்துந் திடுக்கிட்டு நடுங்கும்படிக்கு ஆர்பாட்டங்களைச் செய்துகொண்டு சென்று குரூரன் விட்ட கஜாஸ்திரத்தைத் தகள்படுத்திப், பின்னர் அவனையும் பாய்ந்து கொல்லுமாறு சீறிச்சென்றது அப்போது குரூரனானவன் நல்லகாரியம் நல்லகாரியமென்று நகைத்துச சரபாஸ்திரத்தை விதிப்படி பூசித்துப் பிரயோகித்தனன். அத்திவ்வியாஸ்திரம் வானத்தெழுந்து சீறிக் கணக்கிறந்த சரபசார்த்தூல வுருக்களைக்காட்டி வடவைக்கனலும் ஆலகாலமும் நடுங்கி அஞ்சக்கொதித்து அதிவேகத்துடன் சென்று அவுணராசன் சிம்மாஸ்திரத்தை நாசமாக்கி, அங்குள்ள அவுண சேனைகளை யெல்லாம் அதாகதப் படுத்திக்கொண்டிருந்தது. அக்கொடுமையைத் தேவாந்தகன் கண்டு தான்செலுத்திய தேவப்படைகளனைத்தும் பிரயோசனப்படாமற் பின்னிடைதையும் பகைவன்படை வீறிட் டிருப்பதையும் நிதானித்து, இப்படை முற்காலத்தில் விண்டுவானவர் நாரசிங்க வடிவைக்கொண்டு உலகங்களைத் தத்தளிக்கச்சீறிய கொடுமையை யடக்கப்பரமசிவ கடாட்சத்தினால் வீரபத்திரக்கடவுள் திருவவதாரத்தினைக்கொண்ட தெய்வப்படையாதலால் இதனை வேறொன்றினால் வெல்லுவதரிது நாமும் அத்தகச்சிறந்த படையைக் கொண்டே தடைசெய்யவேண்டுமென யோசித்துக்காலும சரபாஸ்திரத்தை யெடுத்து சாத்திர விதிப்படி பூசித்துப் பிரயோகித்தனன். அப்படையும் முன்னர் குரூரன்விட்ட படையைப்போல அளவற்ற மகிமைகளைக்காட்டி யெழுந்து அவுண சேனைகளெல்லாஞ் சின்னாபின்னப்பட வாட்டிக்கொண் டிருக்கின்ற சரபாஸ்திரத்துட னெதிர்த்துச் சராசரப் பிரபஞ்சங்க ளனைத்தும் அல்லோலகல்லோலப்பட்டு வாடி யொடுங்கும்படிக்கு ஒன்றுக்கொன்றுபின்னிடையாமல் அகோரயுத்தங்களைச செய்து கொண்டிருக்கும்போது, பிரமன் முதலிய தேவர்கள் மானிடர் பாதலவாசிகள் முதலாயினோர் கரங்களைக்கூப்பிப் பத்தி விசுவாசங்களுடன் துதித்து ஒ படைகளுக் காசாகவிருக்கின்ற சரபாஸ்திரங்களே ! எறும்பு முதல் யானையீறாகச் சொல்லாநின்ற சகல பிராணிகளும் வாடிப் பின்னப்பட வொட்டாமல் இரட்சிக்கவேண்டும். உங்களால் நேர்ந்திருக்கின்ற வருத்தங்களுக்குத் தாபரி

க்க வொட்டாமல் சகல பிராணிகளும் சோருகின்றன. இதனைத் திருவு ளத்திற் கொண்டு கிருபையுற்றுப் பாதுகாக்க வேண்டுமென்று பலவிதங்களினாற் போற்றுவதை அவ்வஸ்திரங்க ளறிந்து மன்னுயிர்களுக் கிரங்கி உடனே தங்கள் செய்கைகளை யுள்ளடக்கிக் கோபந்தணிந்து தங்களை விடுத்தவர்க ளிடத்திற் போய்ச் சேர்ந்தன. பின்னர் குரூரனென்பவன் அவற்றின் செய்கைகளைக் கண்டதிசயித்து அரையிலிருக்கும் உறையிற் சொருகிய வாளாயுதத்தைக் கரத்திலேந்தி ஞெரேலென்றுதேரைவிட்டு நிலத்திற் பாய்ந்தனன். அம்மாத்திரத்தில் தேவாந்தகனென்பவன் மனந்தளர்ந்து ஏதோ இவன் திடமென்று ஓரெண்ணங்கொண்டு நம்மோடு வாட்போர் செய்ய வருகிறான். இனி யிவனை வாட்போரினும் வெல்லுவதரிது இனி யென்ன செய்வோ மென்று யோசித்துத்தனது மனத்தில் ஓர் துணிவைக்கொண்டு ஆகாயத்தில்உருத்தோற்றாதபடி மறைந்து பூர்வத்தில் தனது தவமுயற்சியினால் பெற்று வைத்திருந்த மோகனாஸ்திரத்தைக் கரத்திலெடுத்துத் தூபதீப நைவேத்திய விதிகளை மானதபூசையில் நிரப்பி மந்திரத்தை யுச்சரித்து ஓ தேவாஸ்திரமே நீ இந்நிமிஷத்தில் அதிகமாகச் சென்று நமக்குச் சென்ம வயிரிகளாகத்தோன்றி வருத்துகின்ற தேவசேனைகள் பூதவீரர்கள் முதலாயினோருடைய அறிவைப்போக்கி வாட்டித் திரும்பக் கடவை யென்று போற்றிச் செலுத்திக் குரூரன் முன்னே ஓர் கந்தருவாஸ்திரத்தை யெடுத்துவிட்டனன்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! தேவாந்தக னென்னும் மகா கொடும்பாதகன் முதலிலேவிய மோகனாஸ்திரமென்னும் படையோ எத்தகைய வீரபராக்கிரம சாலிகளின்மீதிற் செலுத்தப்படுமாயினும் நெருங்கியவுடன் அவர் பஞ்சேந்திரியங்கள் நிலைகளைப்பேதித்து அறிவை யழித்துப் பிரேதத்தைப்போலச் சோபித்துக் கிடக்கச் செய்யவல்லது, அத்தகைய சிறப்புள்ள வெற்றிப் படையானது வெளிப்பட்ட மாத்திரத்தில் உக்கிராகாரமாகக் கோபித்துக் கிரணங்களைப்பரப்பி உலகங்களை மகிழச் செய்துலவுஞ் சூரியனொளியையடக்க காடாந்தகாரமாகிய இருளைப்பெருக்கிப் பூமியிலிருக்கின்ற பல்லுயிர்களும் நடு நடுங்கித் தெளிவில்லாமல் அந்தகரைப்போலத் தியங்கிவாடித் தத்தளிக்கத்தக்கதாகச் சிறி நகைத்துக்கொண்டுவர அதன் மகிமைகளையும் வலிமையும் தேவசேனைகளும் பூதப்படைகளுங் கண்டவுடன் துக்கசாகரத்திலழுந்திப் பயப்பிராந்தி கொண்டு மனந்திடுக்கிட்டுவாடி மூர்ச்சித்தனர். அவர்கட்குத் தலைவராக விருந்த வீரர்களும் பித்தரைப் போல மதிமயங்கித் தேரைவிட்டு நிலத்தில்வீழ்ந்து சோர்ந்தனர், அணிமாதி

அட்டமாசத்திகளுந் தங்கள் மீது விழுகின்ற பகைவன் பாணத்தைத் தடுக்க வகையற்றவர்களாய்க் காத்திருந்த விற்களையும் பாணங்களையுஞ் சோரவிட்டுக் களைத்து விழுந்தனர் குரூரனவன் இந்தப்படையை எந்த வுபாயத்தினால் வெல்லலாகுமென்று யோசித்து யாதுந் தோன்றாம லிருந்தனன். அதற்குள் தேவாந்தகன் இரண்டாவதேவிய கந்தருவாஸ்திரமானது அளவற்ற கந்தருவர்களுடைய வடிவங்களைக்கொண்டு சிலது பேரியாழ் - சகோடயாழ் - மகரயாழ் - செங்கோட்டியாழென்னும் பலயாழ்களை வாசித்துக்கொண்டும், சிலதுதோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி - கஞ்சக்கருவி - மிடற்றுக்கருவியென்னும பலவாத்தியங்களைச் செய்து கொண்டும், சிலது பயிரவி-தேவக்கிரியை-மேகவிராஞ்சி-குறிஞ்சி-பூபாளம முதலிய பலசங்கீதங்களைப் பாடிக்கொண்டும, சிலதுபாவம்-இராகம்-தாளம் என்னு மூன்றுமடங்கிய பரதசாத்திர விதிப்படி அங்கம் உபாங்கம் - பிரத்தியாங்கம்-அலர்முகராகம்-கரப்பிரசாரம் - சிரகாகருமம் - காகேத்திரம் - கரகரணம் தானகம்-சுத்தசாரி-தேசிசாரி-நியாயம்விருத்தி - பிரவிசாரம்-பூமண்டலம்-ஆகாயமண்டலம்-சுத்தக்கரணம்-உற்புலித கரணம்-அங்ககாரம் இரேசிதம் ஆகிய இருபது பேதமும், இவற்றுள் எண்வகை நிருத்தமும், இரேகாதி அங்கம் பதினாறும், நால்வகைக் கரணமும், இருவகைக் கரமும், கால்வகை புரிகை முதலாகிய பதினாறும், மடிப்புவகை இருபத்தெட்டும், பூசாரிகள் பதினாறும், முப்பத்திரண்டு தேசிசாரிகளும், முப்பத்தைந்து ககனசாரிகளும், பதினாறு பாடபேதங்களும், பததொன்பது, படகபேதங்களும், இருபத்தெட்டு பாடவகைகளும், பஞ்சதாளமும் சத்ததாளமும நவதாளமும் தசதாளப் பிரமாணமும சிதக்கட்டளை இருபத்தெட்டும் சாளைமுதலிய கட்டளை முப்பத்தைந்தும் பிறவும் நன்றாகவறிந்து நடனமாடிக்கொண்டும், இவ்வாறு ஒவ்வொன்றும் ஒவ்வொரு விநோத சாலங்களைக்கொண்டு குரூரனெதிரிற் சென்று ஆரவாரித்திருந்தன.

அப்போது குரூரனவன் வாட்போருக்கஞ்சி மறைந்து போன தேவாந்தகன் மீட்டும் வருவானாயின் அவன் வலியையடக்கி வாட்டுவோமென்று எண்ணிக் கந்தருவர்கள் செய்யும் ஆடல்களைக் கண்களிக்கப் பார்த்தும் பாடுகின்ற சங்கீதங்களைச் செவிகுளிரக் கேட்டும் வேடிக்கையானந்த முற்றிருந்தனன். அக்காரணத்தை ஆகாயத்தில் மறைந்திருக்கின்ற தேவாந்தகன் கண்டு நமக்குச் சகாயகாலம் உண்டாயிற்றென்று களித்து விரைவில் யாவரு மறியாதபடி யுத்த களத்துக்குவந்து வேதாகம விதிப்படி ஓர் திரிகோணகுண்டத்தை யமைத்து அதி

ல் ஓமாக்கினியை மந்திரபூர்வகமாக உண்டாக்கி, ஆயிரம் அவுணர்க ளைப்பெலியிட்டு, அவர்கள் மாமிசங்களையும் உதிரங்களையும் ஆயிரமா யிரங் குடங்களில் நிரப்பி, ஆகுதிகொடுத்துப், பஞ்ச முத்திரையென்னு மாதனத்திலிருந்து அதிக உக்கிரமாக ஓர்யாகஞ் செய்து முடித்தனன் அப்போதந்த யாககுண்டத்தினின்றும் ஓர் பெரிய பெண் பூதமானது உலகமெல்லாம் நடுங்கும்படி ஆகாயத்தை யளாவியபெரியஉருவத்தோ டுவட்டமாய்ப் பருத்திருக்கின்ற கண்களும், கோரைப் பற்களும், மலை களுக்கு நிகரான ஸ்தன்னியங்களும், நீண்டமயிர்களும், பிலத்துவார ங்களையொத்த பெரியவாயும், வடவா முகாக்கினியைவீச வல்ல நெட் டுயிர்ப்பும், ஆலகாலமும் நடுங்கும்படியான கோபமுங்கொண்டு உற்ப த்தியாகித் தன்னைவருவித்த தேவாந்தகனைப் பார்த்து, ஓ இராசாதிரா சனே! என்னைப் பசியான துஊழிக்காலத்தி லெழும்புப்வடவையைப்போல் வாட்டுகின்றது, அப்பசி உன்னைவிட்டு நீங்கததக்கமார்க்கத்தினை விரை வில்யோசித்து முடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டது. அதற் குத் தேவாந்தகன் சந்தோஷித்து மகோற்கட மூர்த்தியினுடைய சே னையைக்காட்டி, ஓ பாரிடமே! இதோ நிற்கின்ற சேனைகளையெல்லாம் உனது பசிடீரத்தின்னக் கடவையென்று சொல்லினன். அப்பாதகன் அச்சொல்லை முடிக்குமுன்னம் அப்பூதமானது மோகனாஸ்திரத்தினால் மயங்கி மூர்ச்சையாகிக்கிடக்கின்ற சேனைகளையெல்லாம் எடுத்து வாயி லிட்டுக் கொள்ளும்படியாக விரைந்து ஆக்கிரமித்துவர அக்கொடுமை யையும் முன்னர் யுத்தகளத்தில் நடந்த செயல்களையு மறிந்திருக்கின்ற மகோற்கட மூர்த்தியானவர் [illegible]வுணபாதகனுடையமோகனாஸ்திரத்தின் வலியை யடக்க வேண்டுமெ[illegible] திருவுளங் கொண்டு உடனே ஞானப் படையை எடுத்து வில்லிற்பூ[illegible]ப் பிரயோகித்தனர். அப்படைவெளிப் பட்ட மாத்திரத்தில் இருளை[illegible]டுஞ் சூரியனைப்போலச் சொலித்துச் சிறிப்பாய்ந்து தேவாந்தகன் [illegible]செலுத்தியிருக்கின்ற மோகனப்படையை அதப்படுத்தியது, தெலசேனைகளும் பூதவெள்ளங்களு மடைந்திருக்கி ன்ற மயக்கங்களெல்லாம் சூரியனைக்கண்ட பனிப் படலத்தைப்போலப் பறந்துபோயின. குரூரனெதிரி லாடல்பாடல் செய்திருந்த கந்தருவப் படையானது விலகிப்போய் விட்டது. இப்பால் குரூரனானவன் தேவா ந்தகன்செய்த வஞ்சகங்களை யெல்லாந் தெரிந்துகொண்டு இப்பாதகன் நம்மவரை மோகனப்படையினால் வாட்டியதல்லாமல் நம்மையுங் கந்த ருவப்படையினால் மயக்கினனேயென்று கோபங்கொண்டு முன்னங் காத்தி லேந்தியிருந்தவாளினால் அப்பாதகனை வெட்டவோங்கிச் சென்

னன். அதற்குள் புத்திதேவியாலுண்டானபௌத்தேவியானவள் அவனைநிறுத்தி, தேவாந்தகனேவிய பூதத்தை வாவென்று யுத்தஞ்செய்வதாயினள் பின்னர் இரண்டுசண்டமாருதங்கள் ஒன்றோடொன்றெதிர்ப்பதுபோலஅவ்விரண்டு பூதங்களு மொன்றோடொன்றெதிர்த்து விழிகளில் வடவைக் கனலெழக் கோபித்துக் கரங்களைப் பிசைந்துகொண்டு பூமிபெயரும்படிக்கும் பாதங்களைப்பெயர்த்து முன்னடி வைத்துப் பின்னடிவாங்கிப் பாய்ந்தும் புசங்களைத் தட்டியும், ஒருவரை யொருவர் உருத்துப் பார்த்தும் வீரங்களைப்பேசியும், கரங்களைப் பிடித்தமாக்கிக்கொண்டு முகத்திலும் புயத்திலும் மார்பிலும் மற்ற உறுப்புகளிலும் குறிகொண்டு குத்தியும்! அதைத் தடுத்து மீளத்தாக்கியும், கற்பகத்தை யொப்பவலிய புயங்களினலடித்தும், கால்களைப் பின்னித்தட்டியும், உதிரம் பீறிட்டோட நெற்றியினுந் தலையினுங் குட்டியும், கன்னம பிளக்கவறைந்தும, இடசாரி வலசாரியாகத்திரிந்தும், இவ்விதங்களில் இருவரும் அண்டங்களையெல்லாஞ் சுற்றியும் அலைகடலெல்லாஞ் சுழன்று பூவட்டமெங்கணுஞ் சுலாவியும் உரகர்வாழ்கின்ற பாதலங்களிற் சென்று குலாவியும், ஒருவர்க்கொருவர் பின்னிடையாமல் மற்போரைச்செய்துகொண்டு வரும்போது, பவுத்தேவியானவள் அதிக தீரத்தோடு மேலிட்டுக் கோடைபிடிகளைப்போலக் கரங்களினலும், புஜங்களினலும் இடைவிடாது தாக்க அத்தாக்கலைத் தேவாந்தகனுடைய பூதமானது தாளமாட்டாது வலிகுன்றிக்கை கால்சோர்ந்து இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடும்படியாகச் சோர்ந்து நிலத்தில் வீழ்ந்தது உடனே பவுத்தேவியானவள் அவனுடைய வொருகாலைத் தன்னொருக[illegible]லினல் மிதித்துப் பனைநாரை[illegible]போலக்கிழித்து ஒரு கீற்றினைக் கீழ்த்திசைக்கடலிலும் வேறொரு கீ[illegible]னை மேற்றிசைக் கடலிலுமெறிந்து யுத்தகளத்தினின்றும் நீங்கித்[illegible]ளையீன்ற புத்திதேவியினிடத் சென்று சேர்ந்தனள்.

இப்பால் தனது பூதம் நாசப்பட்டதைத் தேவாந்தகன்கண்டு இரவுத்திராகாரமாகக் கோபித்துத் தனது தேரை இரணக்கள மெங்கணுஞ் சக்கிராகாரமாகச்சுழற்றித் தேவசேனைகள்மீதும், பூதகணங்கள்மீதும், அளவற்ற பாணங்களைச் சோனைமாரியைபபோலப் பிரயோகித்தனன். அதைக் கணேச குமாரனாகிய குரூரன்கண்டு, அடா கள்வனே! முன்னம் வாட்போருக் கஞ்சியொளித்தனை? நீ மீட்டும் வெட்கமில்லாமல் சண்டைசெய்யவந்தனை? இனி எவ்விதத்தாற்றப்பிப்போகவிருக்கின்றனை? இதோ உன்னரிய பிராணனை வாங்கி வீரசொர்க்கத்திற்குடி யேற்றுகிறேனென்று சீறித் தனது வில்லில் சர்ங்கோப சாங்க

மாகச் சரவருஷங்களைச் சொரிந்தனன். அக்காலத்தில் தேவாந்தகனு னவன் கணக்கிறந்த கொடியபாணவகைகளைக் கோடைகாலத்து மழை த்திவலைகளைப்போல ஒன்றன்பி ன்ஒன்றாகச் செலுத்திக் குரூரன் விட் டகணைகளையெல்லாம் பொடியாக்கி அவனுடைய தேரையும் நுறுங்கி விழச்செய்தனன். அதனால் குரூரன் அதிக கோபம் பிரவேசித்து உட னே மற்றொரு தேரிலேறி அவுணராசன் செலுத்திய பாணங்களுக் கொப்பாகத்தானும் அளவற்றபாணங்களைச் செலுத்தினன். இவ்விரு வீரர்களுஞ்செலுத்திய பாணகோடிகளின் கொடுமைகளைத் தேவர்கள் முதலாயினோர் ஆற்றமாட்டாது திகைத்து மிகவும் வாடிப் பதுங்கினர் பூதப்படைகளும் அவுணப்படைகளுங் கைகாலாடப்படாமல் கண்ட துண்டமாகவெட்டுண்டும், மாண்டும், சோர்ந்தும், பலதிசைகளினு மிறைந்தும், இவ்விதமாக இரணக்களத்தில் ஒருவருந் தோற்றப் படா மல் மறைந்தனர். அணிமாதி அட்டமாசத்திகளும் ஏனைய சேனைத்த லைவர்களும் பலகாயங்களைப் பட்டுவருந்தித்திகைத்துப் படாத பாடு களைப்பட்டு நின்றனர். இவ்வாறு வடவையும் ஆலகாலமும் பகைத்துப் பொருவதைப்போல இருதிறத்தாரும்போராடித் தங்கள் தேர்களைநொ டிப்போதில் அனந்தமுறைச் சக்கிராகாரமாகவும், வட்டணை யாகவும், இடசாரி வலசாரியாகச் சுழற்றித் தூர்த்தியும், சூரிய சந்திரர்கள் தங்கள் கதிகள் தப்பிச்செல்ல அளவற்ற சரவருஷங்களைத் தூண்டியும், இர ணக்களத்தில் ஒதுங்கிப் பதுங்கியிருந்த சேநாணிகளைப் பொடிபட வாட்டியும், யானைப் பந்திகளைக் கண்டதுண்டப்பட வெட்டிக் குவித் தும், குதிரைப் பெருக்கைச் சிதைத்துக்கிடத்தியும் அவுண வீரரை மடக்கிக்கொண்டு சின்னாபின்னப்படக் கூண்டித்தும, பூதவெள்ளத் தை யலைத்துச்சிரம்-கரம்-உரம்-பதம் முதலிய வுறுப்புக்களை வெவ் வேறாகவெட்டி யெறிந்தும், தங்களிரதங்களை மேலுலக மேழினுஞ் செலுத்தி வானவெல்லை யெங்கணும் பவனிவந்தும், பூலோக முழுவ தும் உலாவியும், சத்த சாகரங்களிற் சென்று சுழன்றும் சக்கிரவாளகி ரிக்கு அப்புறத்திற்பாய்ந்தும், பாதாளலோகங்களைக் கதக்கியும், சத் தியலோகம் வைகுந்தம் முதலிய வைப்புகளிற்சென்று உலாவியும், மீட்டுஞ் சமர்க்களத்தையடைந்து பலவீரங்களைப் பேசியும், இரத மோடும் வேகத்தினால் ஒருவரை யொருவர் முட்டியும், தெறகரத்தொ னிகளைச்செய்தோடும் வண்டில்களை இடிகளை யொப்பத் தாக்கியும், விண்ணவர்கள் திகைத்து மயங்கும்படிக்கு க்ஷணப்போதில் அஷ்ட திசைகளிற் பாய்ந்தும் மீண்டும் இடையிடையில் சக்கரம்-பாசம் தண் சூலம் முதலிய படைகளை எறிந்தும், ஒருவரையொருவர் சீறிப்

பார்த்து நீயெவ்வளவு உன்சாமர்த்திய மெவ்வளவு உன்னை கொடிப்போதில் வாட்டி நிலத்திற்றள்ளுகின்றேனென்றும் கொடிய சபதங்களைப்பாடியும், தங்கள் விற்சாதுரியங்களையும் கரவேக சரவேகங்களையும் நி. ணித்துப் புகழ்ந்துவிட நாகங்களைப்போலச் சீறியும், அண்டங்களதிர நகைத்தும், பாதலவாசிகள் நடுங்கக் கர்ச்சித்தும், சிங்கநாதங்களைச்செய்தும், பர்வதாகிருதியாகப் பருத்திருக்கும் புயங்களைத் தட்டியும். மீசைகளை முறுக்கியும், இந்த யுத்தம் வெகு கோர்த்தியாகவிருக்கின்றதென்று களித்துப், அடிக்கடி சயத்தைக்குறித்து வெற்றிச்சங்கங்களைப் பொம்பொமமென் றூதியும், இப்படிக்கு வீராதி வீராகிய அவ்விருவரும் கொடிய சித்திரப்போரைச் செய்துவரும்போது பூமண்டல வெல்லையில் வாசஞ்செய்பவரும் விண்ணகத்திற் சஞ்சரிப்பவரும் அவர்கள் செய்கைகளைப் பார்த்து அற்புதங் கொண்டவர்களாய் இந்தச சூரரைப்போலச் சண்டைகொடுக்க அவரை இதற்கு முன்னம் யாவரையுங் கண்டிலம் கேட்டதுமில்லை இக்காலத்திலுந் தெரிந்ததுமில்லை பிறகாலத்திலுங் கிடைக்கபாட்டாது, புசபலபராக்கிரமசாலிகளாகிய இவர்கள் சவுரியத்திற்கிணையெடுத்துக்காட்ட யாவருமில்லையெனக் கொண்டாடினர். அப்போது குரூரனானவன் மேலிட்டுத் தேவாந்தகனுடைய தேரிற்பாய்ந்து வச்சிராயுதத்தினைக் கிறுகிறெனச்சுழற்றி விசாலமாய் வயிரத்தினைப்போல உறுதிபெற்றிருக்கின்ற மார்பு நெக்குவிட்டு உதிரம்பெருகும்படிக்குக் கோடையிடியைப்போலத் தாக்கிமீண்டனன் அத்தாக்கலினால் தேவாந்தகன் சோர்ந்து மூர்ச்சித்து மீட்டுந்தெளிந்தெழுந்து ஓர் தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டுவந்து வயிரக்குன்றினைப் போலப் பாரித்திராநின்ற குரூரனுடைய தோளின்மீது எமனுங்கண்டு அஞ்சும்படிக்கு மோதினன். அம்மோதலைக் குரூரன் சகிக்கமாட்டாது பெருமூசசெறிந்து மூர்ச்சித்துத் தேரிற்பாய்ந்தனன்.

பின்னர் தேவாந்தகன் அவன் தெளிந்தெழுந்திருப்பதற்குமுன் மற்றத் தேவசேனைகள் பூதவெள்ளங்கள் மத்தியில்தனது தேரை முடுக்கிவந்து தனது வில்லில கணக்கிறந்த திவ்வியாஸ்திரங்களைப் பிரயோகித்துச் சிங்கநாதஞ்செய்தனன். அவ்வஸ்திரங்கள் ஒன்றனந்தமாகப் பெருகிச் சிலது அனற்படிவமாய்த் திசை யிறைத்தோடியும், சிலது ஆலகாலவிடத்தை யொப்பமண்டி எரிந்து தகித்தும், சிலது காடாந்தகாரமாகமூடிப் பூதர்களைத் திசை தெரியாமலலைத்தும், சிலது காலாந்தகனை நிகர்த்துச் சீறிப்பாய்ந்தும், சிலது அனலைக்கக்கிக்கொடியகர்ப்

பத்தைப்போல விரிக்கொண்டு தாவியும், சிலது சூரியகிரணங்களுக்கு ச்சமதையாகச் சொலித்து மேலிட்டும், சிலது மின்னலைப் பரப்பிக் கொண்டோடியும், சிலது கோடைபிடிகளைப் பெருக்கியுலாவியும், சில து சக்கரத்துக்குச் சமதையாகச் சுழன்றும், சிலது வச்சிராயுதங்களைப் போலத் தாக்கியும், சிலது இந்திர தனுசுக்கொப்பாகப் பற்பலவான மேகங்களைப் பெருக்கி அதா அத்ஞ்செய்தும், சிலது சூலங்களுக் கொப்பாகப் பாய்ந்தும், சிலது பிரசண்ட வாயுவைப்போல வேகங் கொண்டுலாவியும், சிலது சூறாவளிக்காற்றினுக்கொப்பாக எதிர்த்தவர் களைப் புட்டியும், சிலது வாளாயுதங்களைப்போலச் சங்கரித்துத் திரிந் தும், சிலது பாரித்த தண்டாயுதங்களாய் வாட்டியும், சிலதுவேலைநிக ர்த்ததும்சஞ்செய்தும், சிலது சிங்கம் பிலியாகியகொடியமிருகங்களுக் கொப்பாகக் கர்ச்சித்துக்கொன்றும், இவ்வாறு அவுணபாதகன்விட்ட பாணங்களெல்லாம் மகோற்கட மூர்த்தியினுடைய சேனசமுத்திரத் திற்புகுந்து ஒருவரையும் அப்புறமிப்புறம் போகவிடாமல் அல்லோல கல்லோலப் படுதலும்போது அந்தரவாசிகளாய்ச் சமர்க்களத்தில் நட க்கும் விநோதங்களைப் பார்த்துக்கொண்டிருந்த விண்டுவாதி தேவர் கள், திப்பிரமைகொண்டு இன்று மிப்பாதகன் என்னசெய்ய விருக் கின்றனனோவென்று வருந்திகாலாதிகளிற் பிராணனைக்கொண்டுபோ கும் கூற்றுவனைக்கண்ட மன்னுயிரைப்போல நடுநடுங்கிக் குலை குலைந் துமதி மயங்கி எங்கணும் நிற்கவும் பயந்து தலைத்தலை சிதறியோடி ஞான நாயகராகிய மகோற்கடமூர்த்தியைக் குறித்துப் புலம்பி முறை யிடுவதாயினர்.

தீனராகிய தொண்டர்களுக் குற்றவினைகளைப் போக்கிப் பாது காத்தருளும்பொருட்டு விருதுக்கொடியை நாட்டியிருக்கும் பக்தவச் சலனே! தமது வழியடிமைகளாக விருக்கின்ற அடியேங்களை வாட்டி யலைக்குஞ் சத்துருக்களை இடியேற்றினை யொப்பவலைக்குந் தீனசரண் ணியனே! அடுத்தோர்களுக்கு அஞ்ஞான விருளைப்போக்கிப் பேரா னந்தத்தைப்பெறச் செய்ய வல்லபராஞ்சுடரின் மூலமே! வேதாகமங் கள் முதலியவற்றினால் எண்ணியளவிடுதற்கரிய கர்த்தனே! திரிமூர்த் திகளில் முதன்மை பெற்றிருக்கின்ற சிவபிரான்பெற்றருளிய கடவுளே பாமாலைகளினாற் புகழவல்ல தொண்டருக் கெளிமையான ஞான நாய கனே! என்றிவ்வாறு அனந்தமுறை துதிசெய்து, ஓஓ சகல புவனதா ரக்கர்த்தனே! ஓஓ சச்சிதானந்தப்பொருளே! ஓஓ பரப்பிரம சொரூபி யே! அடியேங்கள் முறையிடுந் துக்கவருத்தங்களைத் திருச்செவிகளி லேற்றுப் பாதுகாத்து இரட்சிக்கவேண்டும் சுவாமிகள் காலதாமதஞ்

செய்தால் சர்வசங்காரகாலத்தைப்போல நாசமடைவோம், ஓதீனத
யாளனே! கொடியரிற் கொடியனாகிய இத்தேவாந்தகன் செய்யுஞ் செ
ய்கைகள் தேவரீர் திருவிழிகளிற் காணப்படவில்லையோ? இன்னமுஞ்
சற்றுநேரந் தேவரீர் பராமுகமாயிருந்தால் அக்கள்வன் பிரபஞ்சங்க
ளனைத்தையுந் திமைப்போதிற்கவளீகாஞ்செய்து போடுவதற் கைய
மில்லை. மேலும், என்னென்ன அனர்த்தங்களைச் செய்வனோ தோற்ற
வில்லை ஓ எமது குலதெய்வமே! விரைவில் திருவுளமுற்றுத் தேவாந்த
கனாகிய இப்பாதகனைக்கொன்று மன்னுயிர்கள்படும் வருத்தங்களை
நீக்கியாள வேண்டுமென்று பலவாராகத் துதித்து வேண்டினர்.

அவ்வேண்டுகோளை எமது கர்த்தன் திருச்செவிகளிலேற்றுத்தே
வாந்தகனாலாகிய உலக உபத்திரவங்களைத் தவிர்த்து நிலைபெறச்செய்
யத் திருவுளங் கொண்டவராய்ச் சாரதியாகிய வாயுதேவனைப்பார்த்து
நமதுதேரை விரைவில் தேவாந்தகனெதிரிற் கொண்டுபோகக் கடவை
யென்று திருவாய் மலர்ந்தனர் அவ்வாக்கியம் இந்திரன் முதலாகிய
தேவர்களுடைய செவிகளில் அமுதத்தினைப்போல நுழைந்தமாத்தி
ரத்தில் சந்தோஷசாகரத்தில் மூழ்கித் தேகபரவசத்தராய் ஆனந்தக்
கூத்தாடி செயமுண்டாகக் கடவதென்று வாழ்த்தினார்கள் அப்போ
துவாயுதேவன் புரவிகளையதட்டி நவரத்தினமயமாகிய தேரைமணி
கள் சத்திக்க வாயுவேகத்தினுங் கடுகித் துரத்திக்கொண்டுபோய் இர
ணக்களத்திற் சுயசாலியா யுலாவிக்கொண்டிருக்கின்ற தேவாந்தகனு
டைய தேருக்குநேராக நிறுத்தினன் அப்போது அண்டாண்டபுவன
ங்களை யெல்லாம் வென்று சகலலோகங்களினுந் தனது அரசாக்ஷியி
னைச் செலுத்தி நீடித்திருக்கும் ஆயுளையும் வயிரதேகத்தினையும் பெற்
றிருக்கின்ற அமரர்கட்கெல்லாம் எமனென்று சொல்லும் படியான
இராக்ஷதனாகிய தேவாந்தகனானவன் தனக்கெதிரில்வந்த நவரத்தி
னமயமாகிய தேரினிடத்தில் பரிசுத்த மனத்தினையுடைய ஞானவா
ன்கள் கருத்தினுக்குமெட்டாத நின்மலக்கடவுளாகிய மஹோற்கடமூர்
த்தியினது சூரியனொளியினும் மேலிட்டுக்காட்டுஞ் சுயஞ்சோதிவடிவத்
தினை நேரிற்கண்டு, அதுபரியந்தஞ் செய்திருந்த கொடியவினைகளனை
த்தினையும் போக்கப்பெற்றவனாய்ச் சிறிது நிதானித்துச் சர்வசங்கார
மூர்த்தியாகிய சிவபிரானளித்தகுமாரன் இவனேயாகுமென்று நிச்ச
யித்து, சுத்தவீரனாதலாற் கோபாக்கினி மனதைவாட்ட எமது கர்த்த
னைப்பார்த்து, ஓ பாலனே? மேலான தவங்களைப் பெற்றிருந்த எனது
தம்பியைக்கொன்றனை? அதனால்யாவராலும் வெல்லுதற்கரிய வெனக்
குநீ மாறுபட்டனை? பிரமன் விண்டு - உருத்திரன் முதலிய தேவர்க

ளெல்லாம் ஒன்றாகக்கூடி என்னுடன் அளவற்றநாள் யுத்தஞ்செய் தாலும் அதிவீரனாகிய என்னை ஒருக்காலத்திலும் வெல்ல மாட்டார்கள் உனக்குதவியாகக் கூட்டிக்கொண்டுவந்த வீரர்களெல்லாம் அக்கினிமுன்பட்ட பஞ்சுமலையைப்போலச் சமர்க்களத்துக் கிரையாகப் போனதைக் கண்டனை? அந்த வீணரைப்போல நீயு முடிந்து போவை யேயன்றி வெற்றிபெறப் போகின்றதில்லை. இனியேனுஞ் சாகாமற் பிழைத்திருக்க மனமுண்டாயின் நான் சொல்லுவதைக் கேள்? உன்னை இப்போதே உயிருடன் விடுகின்றேன் நீயிவ்வாயுதங்களை எடுத்தெனக்குத் தொந்தரை கொடுக்காமல் என்னை யடுத்து வாழ்ந்துக் கொண்டிருவென்று தனது பிரதாபங்களையும், வீரத் தன்மையையும் செயப் பெருக்குகளையும் அவுண பாதகன் விரித்து விரித்துச் சொல்ல அவையனைத்தையும் அருவுருவாக விளங்கும் மகோற்கடப்பெருமான் கேட்டுப் புன்னகை செய்து ஓ அவுணராசனே! விண்ணுலகமுழுதும் துன்பத்தை விளைத்துக்கொண்டிருந்த அற்பபுத்தியினையுடைய நீயும் மண்ணுலகமுழுவதும் கொடுங்கோலைச்செலுத்தி ஆண்டுவந்த உனது தம்பியும் தாய்வயிற்றிற் கருப்பமான நாள்முதற்கொண்டு நேற்றையவரையில் சகோதரரென்று சொல்லும்படியாக வாழ்ந்தீர்கள். அத்தன்மைத்தான உங்களிருவரில் ஒருவனைச் சொர்க்க லோகத்தில் தேவனாகயிருக்கவைத்தோம், அவனுக்குச் சகோதரனைப் பிரிந்தோமென்னும் வருத்தமிருக்குமல்லவா? ஆதலால் அவனுக்கு அவ்விடத்திலும் நீயே சகோதரனாயிருக்கும்படியாகவும் யுத்தகளத்தில் மாண்டு அங்குசென்றிருக்கின்ற உனது சேனைகளும் உன்னையே அரசாக்கிக் கொள்ளும்படியாகவும், இப்போதே தேவனுக்கி அங்கனுப்புகின்றோம் அஞ்சவேண்டாமென்று திருவாய்மலர்ந்தனர்.

அவையனைத்தையும் தேவாந்தகன்கேட்டு, அதிககோபங்கொண்டுகொவ்வைக்கனியை யொப்ப விழிகள் சிவந்து அழற்சுவாலை யெழுப் பெருமூச்செறிந்து வடவையைப்போலச்சீறி மந்தரகிரிக்குச் சமதையாகப்பாரித்து நீண்டிருக்கும் வில்லைக் கரத்திலேந்தி இருதுதைகளும் ஒன்றுபடவளைத்து நாணேற்றி அதில் விஷயங்களைக்காக்கவல்ல தீட்சண்ணியமுள்ள பாணவருஷங்களை அபரிமிதமாகப்பூட்டி மகோற்கடமூர்த்தியின்மீதும் அயர் ஆரோகணித்திருக்கின்ற இரதத்தின்மீதும் உதயகிரியைப் பனிப்படலம் மூடியதைப்போலச் சொரிந்து சிங்கத்தை யொப்பக் கர்ச்சித்தனன். அதனை மகோற்கட மூர்த்திகண்டு இவன் வில்வித்தை வெகுநேர்த்தி வெகுநேர்த்தி யென்று நகைத்து மகமேருவென்னும் பினாகமாகிய வில்லைத் தமது கரத்திலெடுத்து வளைத்து

அதிலே கணக்கிறந்த பாணங்களைத்தொடுத்துவிடுத்துத் திசையிறைத்துக்குமுறிக்கொண்டு மேலிட்டு வருகின்ற அவுணன் படைகளையெல்லாஞ் சின்னபின்னப்பட வாட்டிப்பின்னர் இரண்டு கணையினால் அவனுடைய தூணியையும் வில்லையும் பொடிப்படுத்தினர். உடனே தேவாந்தகன் வேறொரு வில்லை யெந்திவந்து சுவாமியினுடைய தேரின்மீதுமிகவுந் தீட்சண்ணியமுள்ள ஆயிரம்பாணங்களை பிரயோகித்தான் அப்போது எமதையனும் அத்தொகைப் பாணங்களினால் அவையனைத்தையும் துகள்படுத்தி வேறே மூன்றுபாணத்தினால் அப்பாதகனுடைய தேரையும், தேர்ப்பாகனையுங், குதிரைகளையுந் துணித்து நாசமாக்கினர் அதற்குச்சற்று மிளையாது உடனே மற்றொரு தேரில்வந்துதனது வில்லில் பதினாயிரங்கணைகளை ஒரே தொடையிற் பூட்டிப் பிரயோகித்தனன். அக்கணைகளுக்கு மாறாக மகோற்கட மூர்த்தியானவர் பற்பல வாளிகளைத் தூண்டி அதஞ்செய்து, பின்னுஞ் சிலகணைகளினால் அவனுடைய கிரீடத்தையும் வில்லையுந் தேரையும் சேமத்தேர்களையும் நொறுக்கிப் பொடிபடுத்தினர். பின்னர் தேவாந்தகனானவன் முன்னர் தனது தந்தையுபதேசித்த மந்திரத்தின்படி ஓமகுண்டத்தினின்றும் உதித்த குதிரையின்மேரில் ஏறிக்கொண்டுவந்து ஓர் வாளாயுதத்தைக் கறகறவென்று சுழற்றி மகோற்கட மூர்த்தியினுடைய மார்பின்மீது வீசினன் உடனே எமதையனானவர் தமது மழுவாயுதத்தினால் அவன் வாளையும் அவனேறியிருந்த குதிரையையுஞ் சின்னபின்னமாக நிலத்தில் வீழ்த்தினர். இப்பால் தேவாந்தகன் பாதசாரியாய் நின்று மனமானது மனதை வாதிக்க இரவுத்திரா காரமாகக் கோபித்து இப்பாலன் எந்தபாணங்களினாலும் சளையப்பட்டவனன்று ஆதலால் தேவாஸ்திரங்களைச்செலுத்தி வாட்டிச் செயப்பிரதாபத்தைப்பெறக்கடவேனெனத் துணிவுகொண்டவனாய், அம்புபெய் தூணியிலிருந்த வருணாஸ்திரம், வாயுவாஸ்திரம், கருடாஸ்திரம், எமாஸ்திரம், நிராயணாஸ்திரம் என்னும் ஐவிதபடைகளையு மெத்துத்தூப தீபநைவேத்தியம் முதலிய உபசாரங்களை மானதபூசையினால் நிறைவேற்றி வில்லிற்பூட்டி நீங்கள் போய்ச் சத்தசாகரங்களைப்போல ஆரவாரித்திருக்கின்ற தேவசேனைகளையும் பூதவெள்ளங்களையும் அதப்படுத்துவதன்றி, அவைகட்குத் தலைவராகவிருக்கின்ற வீரர்களையும் சிவகுமாரனையும் நாசப்படுத்தி மீளக்கடவீர்களென்று மந்திரபூர்வமாகப் பிரயோகித்தனன். அதை எமதையன்கண்டு, அவைகட்குமாறாக அக்கினியாஸ்திரம், நாகாஸ்திரம், ரிஷபாஸ்திரம், பிரமாஸ்திரம், சரபாஸ்திரம் என்னும் ஐவகைப் படைகளைப்போக்கினர். பின்னர் அவுணர்

பெருமான்விட்ட அத்திரங்களும், தேவர்பெருமான்விட்ட அத்திரங்களும் வெளிப்பட்டமாத்திரத்தில் ஒவ்வொன்று அளவற்ற வடிவங்களைக்கொண்டு வருணாஸ்திரம் சர்வசங்காரகாலத்தில் உலகங்களையழிக்கச் சத்தசாகரங்களையு முடைத்துக்கொண்டெழும் பெரும்புறக் கடலைப்போலச் சலப்பெருக்கை யுண்டுபண்ணி அலைகளைப்பெருக்கி அதிகவேகமாய் புரண்டுவர, அக்கினியாஸ்திரமானது ஊழிகாலத் தெழும் வடவாமுகாக்கினியைப்போல அனற்சுவாலைகளை வீசி உலகங்களை மூடியிருந்த சலப்பெருக்கை நிமைப்போதில் வரளவுண்டது வாயுவாஸ்திரம் யுகாந்தகாலத்தெழும் பிரசண்டமாருதத்தைப் பெருக்கிச் சூறுவளியைப்போல வேகங்கொண்டு வீசியது நாகாஸ்திரமானது விசாலமாகிய படங்களை விரித்துக் கொண்டுவந்து சூரியனுந் தியங்கி வாடத்தக்கதாக மேலிட்டு வாயுவின் பெருக்கைளத்துங் கிரகித்தது, கருடாஸ்திரம் விசாலமாகிய சிவந்த சிறகுகளை விரித்துக்கொண்டு நாகாஸ்திரத்தினாலுண்டான சர்ப்பக்கூட்டங்களைமடக்கிக் கூரியநகங்களினால் பிளந்தும், மூக்கினாற்கொத்தியும், சிறகடியினால் மாய்த்துமழுதப்படுத்திய துரிஷபாஸ்திரமானது அண்டகோளகையு மதிர்ந்து கிடுகிடாய்க்கும்படிக்குக் கெர்ச்சித்துவந்து கருடாஸ்திரத்தினுடைய வலியையும் செய்கைகளையும் நிமைநேரத்தி லழுத்தியது எமாஸ்திரம் அதிக மகிமைகளைக்காட்டி ஆர்ப்பாட்டங்களைச் செய்துகொண்டு நந்திப்படையுடனெதிர்க்க, பிரமாஸ்திரமானது வடவைபைப்போலச் சீறிக் கொக்கரித்துக் கணக்கிறந்த திவ்விய பாணகோடிகளைப் படைத்து நந்திப்படையோ டெதிர்த்துநின்ற எமாஸ்திரத்தை நாசப்படுத்தியது நாரசிங்கவடிவைக் கொண்டிருக்கிற நாராயணாஸ்திர மானது அளவற்ற மாயைகளை விரித்து எங்கும் இருளின் பெருக்கை நிரப்பி அதிக உச்சாகத்துடன் சர்ப்பத்தைப்போலச் சீறிவந்து நந்திப்படையுடனெதிர்த்து யுத்தஞ்செய்ய வீரபத்திரவடிவங் கொண்டிருக்கின்ற சரபாஸ்திரமானது வடவைக்கனலும் ஆலகாலமும் நடுங்கி அஞ்சக்கொதித்து அதிகவேகமாய்வந்து நந்திப்படையுடனே போராடுகின்ற நாராயணாஸ்திரத்தை யடக்கிக்கொண்டு அதன் வீராப்பையெல்லாமடக்கித் துரத்திவிட்டது இவ்வாறு தெய்வப்படைகள் பத்தும் ஒன்றையொன்றெதிர்த்துப் போராடுகின்ற சிங்காரங்களைத் தேவாந்தகன் கண்டு அப்போரில் தனது படைகள் பின்னிட்டதையும், மகோற்கட மூர்த்தியினுடைய படைகள் வீறியிருப்பதையும் நினைந்து நினைந்து மனம் வருந்தி மீட்டுந் தைரியங்கொண்டு எந்தப்படையழியினும் பரமசிவகடாட்சத்தினாற் பெற்றிருக்கின்ற இப்படையு மழியுமோவென்று யோசித்து

நிமைப்போதில் சராசரப் பிரபஞ்சங்களையும் வாட்டிச் சாம்பராக்கவல்ல உருத்திரமூர்த்திவடிவாகிப் பாசுபதாஸ்திரத்தை யெடுத்துத் திருமஞ்சன தூபதீபமுதலிய சோடச உபசாரங்களையும் மானபூசையினால் முடித்து பக்தி பூர்வமாகத் துதித்து வாழ்த்தி வில்லிற்பூட்டி. வட்டாகாரமாக வளையவளைத்துப் பிரயோகித்தனன்.

இவ்வாறு தமது பிதாவினால் அனுக்கிரகித்திருந்த படையினைப் பகைவன் செலுத்தக்கண்ட மகோற்கடமூர்த்தியானவர் உடனே தாமும் தம்மிடத்திருந்த பாசுபதாஸ்திரத்தினை யெடுத்துப் பிரயோகித்தனர். பின்னர் அவ்விரண்டு தெய்வீகப்படைகளும் விரிவானத்தெழுந்து மேலோகநாயகனாகிய உருத்திரவடிவங்களைக்காட்டி ஒருபுறத்தில் பிரசண்டமாருதத்தை யெழுப்பியும், ஒருபுறத்தில் வடவாமுகாக்கினியைக் காட்டியும், ஒருபுறத்தில் ஆலகால விடத்தைப் பெருக்கியும் ஒருபுறத்தில் வயிரவர்களைச் சிருட்டித்தும், ஒருபுறத்தில் பத்திரகாளிகளை யுண்டுபண்ணியும், ஒருபுறத்தில் வீரபத்திரர்களை வெளியிட்டும் ஒருபுறத்தில் துர்க்காதேவிகளை வரவழைத்தும், ஒருபுறத்தில் சண்டிகளைத் தோற்றக்காட்டியும், ஒருபுறத்தில் பூதபசாசடாகினி வருக்கங்களைக் கக்கியும், ஒருபுறத்தில் எமகாலகிங்கிலியரைச் சிருட்டித்தும், ஒருபுறத்தில் காடாந்தகாரமாகிய இருளைப்பெருக்கியும், ஒருபுறத்தில் எமகாலகிங்கிலியரைச் சிருட்டித்தும், ஒருபுறத்தில் காடாந்தகாரமாகிய இருளைப்பெருக்கியும், ஒருபுறத்தில் அக்கினி மழையைப் பொழிந்தும், ஒருபுறத்தில் இடிமின்னல் குமுறல்களை யுண்டாக்கியும், ஒருபுறத்தில் அவுணர்களைப் படைத்தும், ஒருபுறத்தில் அதிக வீரபராக்கிரமத்தோடு கூடிய பூதங்களைச் சிருட்டித்தும், ஒருபுறத்தில் சடாமுனிக்கூட்டங்களை யுண்டாக்கியும், ஒருபுறத்தில் சக்கரம் தண்டம் முசுண்டி முதலிய படைகளைப் படைத்தும், ஒருபுறத்தில் அக்கினியாஸ்திரம் நாகாஸ்திரம் பிரம்பாஸ்திரம் முதலிய தெய்வப்படைகளைக் கக்கியும், ஒருபுறத்தில் எமதண்டம் காலபாசம் முதலியவைகளை யுண்டாக்கியும், இவ்வாறு அவ்விரண்டு பாசுபதாஸ்திரங்களும் பற்பல காட்சிகளைக்காட்டி மண்விண்ணெவ்விடங்களினுமுலவி, அல்லோலகல்லோலப் படுதும்போது பூதவெள்ளங்களும் தேவசேனைகளும் பஞ்சேந்திரியங்களும் நிலைபிறழ்ந்து கைகால் நடுங்க இளைத்துச் சோர்ந்தனர் அணிமாதி அட்டமாசத்திகள் மதிமருண்டு வாடினர். சூராதியவீரர்கள் பயப்பிராந்தியினால் திகைத்து மகோற்கட மூர்த்தியருகிற்சென்று சூழ்ந்தனர் அவுணபாதகர்களனைவருங் குலை குலைந்து

நடுநடுங்கிச் சின்னபின்னப்பட்டுச் சோர்ந்தனர் வானத்தை யளாவ நின்றதேரணிகள் பொடிப்பொடியாய்க் குவிந்தன. மதயானைக் கூட்டங்கள் வெறியடங்கி வீரிட்டு மாண்டன புரவிப்பந்திகள் வாயுவைப் போலத் திசைகெட்டோடின. பதினாலுலகங்களில் வாசஞ்செய்கின்ற பிராணிகளனைத்தும் பயப்பிரசந்திகொண்டு இது தானோ பிரளயகால மெனத் துக்கசாகரத்திற் சேர்ந்தனர். இவ்விதமாய் சராசரப் பிரபஞ்சங்களைத் தான் திகைத்து வாடும்படிக்குச்சங்காரக் கடவுளானவர் இரண்டு கலைக்கொண்டு விளையாடுவதைப்போல இரண்டு பாசுபதாஸ்திரங்களுஞ் சீறி ஒன்றுக்கொன்று பின்னிடையாமல் சிலநேரம் வினோதப்போராக்காட்டித் தங்களிடத்துண்டாகிய பாணகோடிகள் முதலியவற்றைத் திருப்பிக்கொண்டு தங்கள் கொடுமையில் மாறுபட்ட அண்டங்கள் - புவனங்கள் விண்-மண்-பாதலம் முதலிய விடங்களை யதாப்பிரகாரம் நிலைபெறச்செய்து தங்களைச்செலுத்திய தலைவர்கள் கரத்தில் வந்து சேர்ந்தன.

அதனைக்கண்ட தேர்க ளெல்லாஞ் சந்தோஷப் பெருக்கினால் கரங்களைக் கொட்டி நகைத்து பாசு பதாஸ்திரத்தினால் பாதகன் செயம் பெறாதகாரணத்தினால் அவனுக்கு நாசகாலம் வந்துவிட்டதென்பதற் கையமில்லையெனக் களித்தனர். அப்போது தேவாந்தகன் தனது பாணம் வியர்த்தமாகத் திரும்பியதையும், சமுத்திர போலத் தன்னைச் சூழ்ந்திருந்த சதுரங்க சேனைகள் மாய்ந்ததையும் கண்டு திகைத்துக்கணப்போதில் சராசர பிரபஞ்சங்களைத் தகித்துச் சாம்பராக்க வல்ல பாசுபதாஸ்திரத்தை விடுத்தனம். அதுந்து பகைவரை வென்று வெற்றிபெறாமல் அபலமாகத் திரும்பிவிட்டது. இனி செலுத்துவதற்கு அதனிலுஞ் சிறந்தபாண மென்னவிருக்கின்றது இனி மாய்கைப்பெருக்கினாலல்லது இப்பாலனைச் செயிக்கவொண்ணாதென்று நிதானித்து விரைவில் சுக்கிரன் தனக்குபதேசித்திருந்த மோகன மந்திரத்தைச் செபித்து அதன் முயற்சியினால் அளவற்ற மாயப் போர்களை விளைத்து ஆரவாரித்தனன், அம்மாயங்களையெல்லாம் நிமைப்போதில் எமதாண்டவன் ஞானபடையினைச் செலுத்திமாய்த்தனர். இவ்வாறு தேவாந்தகனுடைய பராக்கிரமத்தை விண்டுவாதி சகலருங் கண்டு பிரமிக்கும்படி நொடிப்போதில் சகலலோகங்களையும் நீறுக்கவல்ல எமதையன் அவனோடு ஒருநாள் முழுவதும் யுத்தஞ்செய்து மறுநாள் விடியற்காலையில் அவன் முன்னர் தவமுயற்சியினாற் சிவபிரானிடத்திற் பெற்றிருக்கின்ற வரங்களை யோசித்து உடனே சகலராலும்போற்றப்படுகின்ற யானைமுகத்தினைக்கொண்டு தமது தந்தங்களிலொன்றை

யொடித்தனர். அச்செயலைத் தேவாந்தகன் கண்டு தனக்குச் சிவபிரான் திருவாய் மலர்ந்திருக்கின்ற முடிவினைக் கருத்தி லெண்ணிக்கணேசமூர்த்தி யொடித்துக் கையில்வைத்திருக்கின்ற கொம்பினைப்பறித்து முறித்தெறியும்படிக்கு மேலிட்டு ஓடிவந்து தேரின்மீது பாய்ந்தனன். அப்போது சுவாமி அக்கொம்பினால் அவன் சிரத்திற் குத்தினர், உடனே அவன் சிரமானது ஆயிரம்பத்தலாகப் பிளந்து அவனுயிரானது சோதிரூபமாக யாவருங்காண வெளிக்கொண்டுவந்து விநாயகப்பெருமானுடைய திருவடிகளில் ஐக்கியமாயது.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்விதமாகத் தேவாந்தகன் மாண்டுபோனதைத் தெரிந்த பூதசேனாதிபதியாகிய பானுகம்பன் அதிகமான உற்சாகத்துடனே வானத்தை யளாவப் புயங்கள் பூரித்துக்கர்த் தன் குணாதிசயங்களையும் வெற்றிப் பாட்டினையும் ஆனந்த பரவசனாய்க் கொண்டாடிப் போற்றித் தேவர்கள் கரங்களைக் கொட்டி வாழ்த்தெடுப்பத் தனது சுந்தரமுள்ள ஆயிரம் வாய்கள்தோறுந் தவள நிறம் பெற்றிருக்கின்ற உன்னதமுள்ள சுரிமுகச்சங்கங்களைச் சேர்த்து உலகங்க ளனைத்துஞ் செவிடுபட்டுத் திகைத்து மதிமருண்டு வாடிச் சோரும்படிக்குப் பேரொலி யெழப் பொம்பொம்மென் றூதினன். மகா விஷ்ணுவானவர் மனமகிழ்ந்தவராய்ப் பவழத்தைப் பழித்து விளங்கும் தமது சிவந்த அதரத்தில் பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்கினைவைத்து முழக்கினர். இந்திரனுக்குண்டாகிய சந்தோடத்தின் பெருக்கை இப்படிப்பட்டதென்று யான் போலியர்களாற் சொல்லப்படுவதோ? பிரமன் முதலிய ஏனையதேவர்கள் நகைமுகராய் ஆனந்தக் கூத்தாடி, எமது ஐயன் பெருமைகளைப் பலமுறை கொண்டாடிப்போற்றி மகரந்தங்களை இறைத்துத் தேனைப் பெருக்கித் திசாதிசைகளிற் பரிமளித்திருக்கும் பஞ்சதற் பகமலர்களை வாரி வாரிச் சோனைப் பெய்யலையொப்பக் காத்தனெழுந்தருளியிருக்கின்ற திருத்தேரின்மீது சொரிந்தனர். கருடகாந்தருவர் ஆகாயத்தில் தோற்கருவி - துளைக்கருவி - முதலிய வாத்தியங்களை அளவற்ற களியாடல்களோடு முழங்கி ஆனந்தித்தனர். மூன்று லோகங்களிலுமுள்ள பிராணிகள் முன்னரவனாலுண்டான துன்பங்களையெல்லாம் போக்கிச் சந்தோஷசாகரத்தி லாழ்ந்திருந்தனர் சகலலோகங்களிலுந் தருமதேவதையானவள் குதிகொண்டு விளையாடினள்

இப்பால் என்னை யடிமையாகவுடைய விநாயகப் பெருமானானவர் அப்போது கொண்டிருக்கின்ற யானைவதனத்தினை மாற்றி முன்

போலவே மகோற்கட வடிவங்கொண்டருளினர். உடனே காசிராசனுந் தேவர்கள் முனிவர்கள் முதலாயினோரும் புத்த முதத்தைத் தெவிட்ட உண்டவர்களைப்போல மனமகிழ்ச்சி பெற்றவர்களாய்த் தேகபாவசப் பட்டு சத்த சாகரங்களு மொலித்தெழுமாறுபோல ஆனந்தக்கூத்தாடி விழிகளிற்போத நீரைப் பெருக்கி உடன் முழுவதும் உரோமாஞ்சிதம் பூத்து, வேதவாக்கியங்களினாற் பலமுறை துதித்து, சந்தனம் புட்பந் தூபதீபம முதலிய உபசாரங்களை ஆகமவிதிப்படி நிறைவேற்றித் தம திடத்திற் கடாக்ஷித்திருக்கின்ற திருவருளின் பெருக்கை நினைந்து நினைந்து களிமிகுதியினாற் செயசெயவெனப்போற்றிக் கொண்டாடி னர். இப்பால் மகோற்கடமூர்த்தியானவர் செயபேரி வெற்றிச் சங்கம் முதலியவைகள் அண்டங்களதிர முழங்க, பூதவீரர்கள் யாவரும் ஐயன் கிருபைப் பெருக்கின் காரணங்களையும் வீரபராக்கிரம சேயப்பி ரதாபத்தையும் மங்கள கரமாகிய குணசம்பத்துகளையுங் கொண்டா டிப் புடை சூழ்ந்துவர, சித்திபுத்திகள் சமேதராய்ச்சிங்கவாகனமூர்ந்து எழுந்தருளி அணிமாதி அட்டமாசத்திகளும் பவுத்தேவியென்கின்ற பெண்பூதமும் குரோன் முதலிய வீரர்களும் அதிக மனவெழுச்சியு டன் ஆரவாரித்து இருமருங்கிலும் நெருங்கிக், காசிப் பட்டணத்தில் வந்து அரசனுடைய அரண்மனைக்குள்ளே நுழைந்துகொலுச் சபை யில் நவரத்தின கசிதமாய் விளங்காநின்ற சிங்காதனத்தில் வீற்றரு ளினர்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! மகோறகட மூர்த்தி யானவர் மகாவரப்பிரசாதியாகிய தேவாந்தகனைச் சங்காரஞ்செய்தரு ளியவிதம் இது. இனிக்காசிராசனுடைய குமாரனுக்கு விவாகஞ் செய்து முடித்து மீட்டுங்காசிப முனிவரிடத்திற்சென்று அவ்விடத் தினின்றுந் தமது லோகத்திற் கெழுந்தருளி காசிராசனுக்கு முத்தி யைக்கொடுத்தருளிய விதத்தையுந் தொகுத்துச சொல்லுகின்றோங் கேட்பீராக. இப்பால் கொலுச் சபையி லெழுந்தருளி யிருக்கின்ற மகோற்கடமூர்த்தியைக் காசிராசன் பணிந்தெழுந்து இருகரங்களை யுஞ் சிரமேற் கூப்பிநின்று, ஓ பக்தவச்சலனே! ஓ பரஞ்சுடரே! ஓதீன தயாளுவே! தேவரீர் செய்தருளிய யுத்த வலங்காரங்களைத் தரிசிக்க, வந்த தேவர்கள் முதலிய யாவரும் இனித் தேவரீருடைய கிருபையி னால் நடத்தப்போகின்ற விவாக மகோற்சவத்திற்கு இங்ஙனே இருந்து போகும்படியாக சுவாமிகள் அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனன். சுவாமியுமதற்கிசைந்து யாவரும் விவாகத்திற் கிருந்துபோகும்படி கட்டளையிட்டருளினர். அதற்குமேல் காசிராசன்

சுவாமியிடத்தில் விடைபெற்றுச் சென்று சகல தேசங்கட்குங் கலியாணப் பத்திரிக்கை யனுப்பவும், விவாகத்திற்கு வேண்டிய பதார்த்தங்களைச் சேகரிக்கவும் மந்திரிகட்குஉத்தரவுபண்ணி, அங்கிருக்கின்றதேவர்கள் முதலாயினோர்க்குத் தக்கபடி உபசாரங்களைச் செய்து அவ்வவர்கட்கு வேண்டுங் காரியங்களில் ஒரு தாழ்வுமில்லாதபடி நடாத்திவந்தனன் விவாகப் யத்திரிலகையைப் பார்த்த மறுதேயத் தரசர்களும்பந்துசனங்களும் மற்றுமுள்ள நகரவாசிகளுந் தங்கடங்கள் பரிவாரங்களோடுஞ் சுற்றத்தினரோடும் வந்து காசிராசனுடைய அரண்மனையைச் சேர்ந்தனர். விவாகத்திற்கு வேண்டிய காரியங்களையெல்லாம் அமைச்சர்கள் கிரமப்படிசெய்து நிறைவேற்றிவைத்தார்கள்.

இப்பால் சகலலோக நாயகராகிய மகோற்கட மூர்த்தியானவர் புரோகிதராகி நல்ல முகூர்த்தங்களைப்பார்த்து அங்கு தர்ப்பணம் முதலிய கிரியைகளைச் செய்துவைத்து இராச புத்திரனையும் மகததேசத்து இராசன் புத்திரியையும் விவாக மண்டபத்தி லிருக்கவைத்து ஐந்துநாள் வரையில் நவக்கிரக பூஜை முதலியவைகளை வேதாகம முறைமைப்படி நிறைவேற்றி அதற்குமேல் அங்குவந்திருந்த பிரமனாதிய தேவர்கள் முனிவர்கள் முதலாயினோரை அவ்வவர்கள் யதாஸ்தானத்திற்குப் போகும்படி விடைகொடுத்து யுத்தகளத்தில் சாத்துவ சத்தியாலுண்டான மற்றொரு சத்தியை வரவழைத்து அவள் முன்னரெடுத்து விழுங்கியிருந்த சுக்கிரனை உமிழச்செய்து, அச்சுக்கிரனைப பழையபடி ஆகாயத்திற் சஞ்சரிக்கும்படி விடுத்தருளினர். பின்னால் சுவாமியினிடத்தினின்றும் விடைபெற்றுச செல்லுகின்ற தேவர்கள் முதலாயினோரைக் காசிராசன் பணிந்து நிற்க அவர்கள் அக்காசிராசனைப் பார்த்து, ஓ தவசிலனாகிய இராசாதிராசனே! கரைகாணாத துக்க சாகரத்துள் மூழ்கி ஓராதரவுமில்லாமல் மயங்கி யிருந்த எங்களுக்குத் தக்கபடி பேரின்பங் கிடைக்கும்படியாக ஞானவான்களாலுங் காண்டற்கரியவொண்ணாத பரப்பிரம வஸ்துவை இங்ஙன மழைத்து வந்து அவுணர்களை யெல்லாந் தொலைத்து எங்களுடைய சத்துருக்களையுந் துன்பங்களையும் போக்கின சற்குண நிதியாகிய உனக்கு யாங்கள் என்னைகைம்மாறு செய்யப்போகின்றனம், நீ திரிகரணத்தாலும் ஒன்றானகர்த்தாவை வழிபட்ட காரணத்தினால் உன்னைத் தரிசித்த பேர்கள் தர்மார்த்த காமமோட்ச மென்கின்ற நால்வகைப் புருஷார்த்தங்களையுமெளிதி லடைவார்களெனில், நீ இவ்வுலகத்தில் விரும்பத்தக்க காரியம் ஒன்றுமில்லை. ஆயினும் உன்மீது எங்கட்குண்டா யிருக்கின்ற பிரீதியினாலே யாங்கள் கொடுக்கின்றவரங்களையும், ஒப்புக்கொள்ள

வேண்டுமென்று சொல்லி அவ்வவர்கள் தங்களாற்றலுக் கேற்ற வரங்களைத் தனித்தனிகொடுத்துத் தத்தம்பதிகளை நோக்கிச்சென்றார்கள். பின்னர் மகோற்கட மூர்த்தியானவர் காசிராசனை நோக்கி, அரசனே? இன்றையதினம் அஸ்தமயானத்திற்கு முன்னே நாமும் நமது தாய் தந்தையரிடத்திற் செல்லவேண்டு மாதலால் விரைவில் இரதத்தைத் தருவிக்கக் கடவையென்று சொல்லினர். அச்சொல்லைக் கேட்டமாத்திரத்தில் அரசன் ஆவைப்பிரிந்த கன்றுபோல விம்மி விம்மி யழுது அறிவழிந்து மூர்ச்சையாகிவீழ்ந்து மீட்டுந்தெளிந்தெழுந்து, சுவாமியை யழைத்துக்கொண்டு வந்தபோது மீட்டும் விரைவிற் கொண்டு வந்து விடும்படி அதிதியாகிய தாயினால் சொல்லப்பட்டதை நினைந்து சிறிது துயரத்தினின்றும் நீங்கிச் சித்திபுத்திகள் முதலான சத்திகட்கும் குரூரன்முதலிய வீரர்கட்கும் மகோற்கட மூர்த்திக்குந் தக்கபடி வெவ்வேறு இரதங்களைச் சோடித்துக்கொண்டு வரும்படி அமைச்சருக்காக்கியாபித்தனன் அவர்களவ்வாறே இரதங்களை அரண்மனைவாயிலிற் கொண்டுவந்து நிறுத்த மகோற்கடமூர்த்தியானவர் சிரோரத்தினங்களினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தை விட்டிரங்கி அரசன், அமைச்சர், சேனைத்தலைவர் முதலாயினோர் புடை சூழ்ந்து போற்றிவர, வெண்சாமரைகள், ஆலவட்டங்கள் குடைகள், கொடிச்சீலைகள் முதலிய சின்னங்களைப் பல ரசைத்துச்செல்ல, திருச்சின்னம் பிள்ளாங்குழல் முதலியவைகளைப் பலர் வாசிக்க, அருகில் தீவட்டிகளைப் பலரேந்தி நடக்க, பட்டுவர் புகழ, வித்து வசனங்கள் கொண்டாட, கட்டியக்காரர் எச்சரிக்கை சொல்ல தேவமங்கையர்கள் நடிக்க, சுமங்கலிகள் ஆலங்களைச் சுழற்றிவர, இவ்விதவைபவங்களோடு சித்திதேவி புத்திதேவி முதலாயினோருடன் கொலுச்சபையினின்றும் வெளிக்கொண்டு அவ்வவர்களை வேறு வேறு இரதங்களிலேறிவரக் கட்டளையிட்டு, நவரத்தினமயமாயிராநின்ற மற்றொருதேரில் அரசன் சாரதியாக விருக்கும்படி தாமாரோகணித்து, சயபேரி-வெற்றிச்சங்கங் குடமுழா முதலிய வாத்தியங்கள் அண்டங்களதிர முழங்கும்படிக்கு உட்கோட்டையைக் கடந்து வெளிக் கோட்டையில் வரும்போது அங்கு வசிக்கின்றவர்களெல்லோரும் மெலிந்த உள்ளத்தோடு மெய்யன்புகள்ள ஓடிவந்து மகோற்கட மூர்த்தியினுடைய தேரைப் புடைசூழ்ந்து சுவாமியினுடைய பிரிவை யாற்றமாட்டாதவர்களாய் விழிகளில் நீரருவி பாயும்படியாகத் துக்கித்து நின்றார்கள். அவர்களை மகோற்கடமூர்த்திதேற்றி, ஓ பத்திமையிற் சிறந்தவர்களே? நம்மைக் கணபதி மூர்த்தமாகப் பொன் முதலியவைகளினாலே சமைத்து உங்

கள் மனைகடோறும் வைத்துப் பூசித்து எல்லாக் கிலேசங்களையும் நீக்கிக்கொள்ளக்கடவீர்களென்று அனுக்கிரகஞ் செய்தருளினர் அவ்வனுக்கிரகத்தை யாவருஞ் சிரமேற்கொண்டு மீட்டுந் திரும்பிவிட்டார்கள். உடனே முன்னர் சுவாமியோடு பிரதிதினம் விளையாடல் செய்திருந்த சிறுவர்கள் யாவரும் ஓடிவந்து கர்த்தனைப் பணிந்தெழுந்து நடுநடுங்கிக் கிலேசித்து விழிகளில் நீரருவியைப் பெருக்கி, ஓ கருணைக்கடலே! ஓ எங்கள் கண்மணியே! ஓ பெருஞ்செல்வமே! ஆன்மகோடிகட்கு மலவிருணீக்கி முத்தியைத்தர வல்ல பராபரமாயிருக்கின்ற தேவரீர் அப்பெருமைக் கேற்றபடி யிராமல் அடியேங்கள் சிறுமைக்கேற்றபடி இப்பூவுலகத்தில் ஓர் பாலனாக அவதரித்து விளையாடுகின்றவனைப்போன்றும், விளையாடல் காட்டுகின்றவனைப்போன்றும், தோழனைப்போலவும், தோழனல்லாதவனைப் போன்றும், கொடுப்பவன் போன்றும், கொடுப்பதை யேற்பவன்போன்றும், அடிப்பவன் போன்றும், அடிப்படுகின்றவன்போன்று மிருக்கின்ற அடியேங்களிலொருவராகிப் போசனாதிகளை யுண்டும், ஆடையாதிகளை யுடுத்தும், ஆபரணாதிகளை யணிந்தும், எல்லா விளையாடல்களையும் இதுகாறு மெங்களோடுங் கூடவிருந்து விளையாடிக்கொண்டிருந்த தேவரீர் இத்தினம் அடியேங்களைவிட்டுப் பிரிந்து போகும்படி நினைத்தபடியால், நீர்வற்றிய குளத்தில் மீன்குட்டிகள் பதைத்து இறக்குமாறுபோல இனியடியேங்களிறந்துபோவது சித்தம். அல்லாவிடில் தேவரீரோடுகூட வந்துவிடுகின்றோம், சுவாமிகளைப்பிரிந்து ஓர் கணப்போதும் உயிர்வைத்திரோம், என்று இவ்வாறு பலமுறை விம்மி விம்மி அழுது குறையுற்றார்கள். அவர்களை மகோற்கடமூர்த்தி கிருபையோடும் பார்த்தருளி, ஓ அன்பிற் சிறந்தவர்களே! யாம் உங்களைவிட்டுப் பிரியோம் எக்காலத்தும் உங்களுடைய சூட்சுமபுத்தியில் வசிப்போம். உங்கட்கு யாதேனுந் துன்பம் நேருமாயின் அப்போதே நம்மை நினைமின்கள், அத்துன்பங்களையாமே நிவர்த்திசெய்தருளுவோம் என்றிவ்வாறு பலதேறுதல் சொல்லி அவர்களை யனுப்பிவிட்டனர்.

இப்பால் காசிராசன் தேரை விரைவிற்றூண்டி அந்நகர முழுவதுந்தாண்டி அளவற்ற நாடுகளையுங் காடுகளையுங்கடந்து காசிப முனிவருடைய ஆச்சிரமத்திற்குச் சமீபமாகச் செலுத்திக்கொண்டு வந்தனன். அவ்வரவைக்காசிப முனிவரும் அவர் பத்தினியாகிய அதிதியுமறிந்து எதிர்கொண்டனர், உடனே மகோற்கடமூர்த்தியானவர் நமது தாய்தந்தையர் வந்தார்களென்று ஆனந்தமுற்று செல்லென்று தேரைவிட்டிறங்கி அவர்கள் எதிரிற் சென்றனர். அப்போது தந்தையா

ஓய காசிபமுனிவர் அத்தியந்த சந்தோஷத்தோடு சுவாமியை அணைத்துக்கொண்டனர். அதிதியாகிய தாயும் சுவாமியைத்தழுவி ஆனந்தமுற்றனள். அருகிலிருந்த மற்ற முனிவர்கள் முதலாயினோர் சுவாமியைப்பலமுறைவந்தித்து உபசரித்தார்கள். அவ்வவர்கட்குத் தக்கபடி சுவாமியும் பற்பல உபசாரங்களைச் சொல்லியருளினர். பின்னர் காசிராசனானவன் காசிபமுனிவரையும் அவர் பத்தினியையும் பணிந்தெழுந்து கைகூப்பிநின்று, என்னையாளுடையவர்களே உங்களுடையதிருபாகடாட்சத்தினால் பூமிபாரம் நீங்கி விவாகமும் நிறைவேறியது முன்னர் நீங்கள் உத்தரவு செய்தபடி சுவாமியை விரைவில் அழைத்துவராமலிருந்ததற்குக் காரணம் யாதெனில் இவ்விடத்தினின்று வெளிக்கொண்ட அத்தினமே தமக்கெதிரில் ஆயுதபாணியராய் வந்த அளவற்ற அவுணர்களைக் கொன்றனர். அதற்கடுத்த மூன்றுநாள் யாவரும் ஆனந்த மெய்துமபடி சித்தி புத்திகளை விவாகஞ் செய்தருளினர். ஐந்தாநாள் மூன்று அவுணர்களைச் சங்கரித்தனர்; ஆறுநாள் சோதிடனாகவந்த ஓரவுணனை மாய்த்தனர். ஏழாநாள் கிணறாகவும் தவளையாகவும் வந்த இரண்டவுணரை நாசஞ்செய்தனர். எட்டாநாள் அம்பாசுரன் முதலாயினோரை அதஞ்செய்தனர். ஒன்பதாநாள் அம்பாசுரனுடைய தாயைக் கொன்றனர். பத்தாநாள் நமது பட்டணத்தி லுள்ளோரால் செய்யப்பட்ட விருந்தை நுகர்ந்தருளினர் பதினோராநாள் நராந்தகனைச் சொர்க்கலோகத்திற் கனுப்பினர் அப்பால் இரண்டு நாள் தமையனாகிய தேவாந்தகனுடனே அளவற்ற யுத்தங்களைச் செய்து பதினாலாம்நாள் உதயத்தில் அவனையுஞ் சொர்க்கலோகத்திற் கனுப்பினர். அதற்குமேல் ஐந்துநாள்வரையில் எனது குமாரனுக்கு விவாகஞ்செய்வித்தருளினர். இருபதாம்நாளாகிய இத்தினம் உங்களிடத்தில் யதாப்பிரகாரம் வந்துசேர்ந்தனர் என்று அவ்விடத்தினின்று புறப்பட்டநாள் முதல் பிரதிதினம் மகோற்கடசுவாமிகள் நடாத்திய திருவிளையாடல்களை யெல்லாம் பாங்தமாகச் சொல்லினன். அவ்வற்புதத்திருவிளையாடல்களையெல்லாம் காசிபமுனிவரும் அதிதியும் செவிக்கமுதாகக் கேட்டுச் சந்தோஷித்து காசிராசனையும், மகோற்கடமூர்த்தி முதலானோரையும் ஆச்சிரமத்திற் கழைத்துக்கொண்டு சென்றுவிருந்திட்டனர் அத்தினமெல்லாம் யாவரும் ஒருவரோடொருவர் அளவளாவியிருந்து மறுதினங் காலையில் காசிராசனானவன் மகோற்கடப்பெருமான் முதலாயினோரை அணைகடந்த பத்தியோடும் பணிந்து துதிசெய்து அளவற்ற வரங்களைப்பெற்று சுவாமியினுடைய திருவடிகளில் மனதை நிறுத்தி அரிதில் இவ்விடத்தினின்று நீங்கிக் காசி

நகரைவந்து சேர்ந்தனன், அப்பால் சிலநாள்களுக்குப்பின் மகோற்க டமூர்த்தியானவர் காசிபமுனிவரையும் அதிதியையும் கிருபையோடு பார்த்து, குரவர்களே! நீங்கள் அளவற்றநாள் அரிய தவங்களைச்செ ய்து நம்மைத் தரிசித்துப் பிரார்த்தித்தபடி யாம் உங்களிடத்தில் புத் திரனுக அவதரித்துத் துட்டர்களை யெல்லாஞ் சங்கரித்துச் சிட்டர்க ளையெல்லாம் பாதுகாத்துத் தேவர்கட்குச் சொர்க்கலோக முதலான வைகளைக் கொடுத்து எங்கும் வேதாகம நெறிகளைப்பரவச் செய்தோ ம், இனி நமதுலகத்திற்குச் செல்லவேண்டுமென்று திருவாய் மலர்ந் தனர். அதைக் கேட்டவுடன் முனிவரும் அதிதியும் ஓர் முகூர்த்த காலம் வரையில் பொறிகலங்கி நின்று விழிகளில் அருவிபாய எமது கர்த்தனைப் பார்த்து, ஓ எங்கள் குலதெய்வமே! எக்காலத்தில் தேவ ரீருடைய திருவுருவைக்கண்டு தரிசிக்கப்போகின்றோ மென்றுபுலம்பி னார்கள். அவர்களை மகோற்கட மூர்த்திபார்த்து, அன்பர்களே! நாம் உமாதேவியிடத்தில் குழந்தையாக அவதரிக்கப் போகின்றனம். அப் போது நீங்கள் நம்மைக் காணலாம் கிலேசப்பட வேண்டா மென்று தேற்றி, சித்திபுத்தி முதலான நமது பரிசனங்களோடும் மறைந்து ஆனந்த புவனமென்கின்ற தமது லோகத்தை யடைந்தருளினார். அத ற்குமேல் காசிபமுனிவரும் அவர் பத்தினியும் ஓர் ஆலயஞ் சமைத்து மகோற்கட மூர்த்தியைப்போல சொர்ணத்திலோர் திருருவஞ் செய்து வைத்துப் பிரதிதினம் வேதாகம முறைமைப்படிப் பூசை செய்துவந் தார்கள். அவ்வாறே உலகின்கணுள்ள மற்றையருந் தங்கடங்கள் வீடு கள்தோறும் விநாயக மூர்த்தியைப்போல ஒருருவஞ் சமைத்து வை த்து நாளது வரையில் சகல பாக்கியங்களையு மனுபவித்து வருகின் கின்றார்கள்.

காசிராசன் தனது நகரஞ் சேர்ந்தபின்னர், சகலலோகநாயகரா கிய கர்த்தாவே தனது ஆசிரியருடைய புத்திரராகித் தனது புத்திரனு டைய விவாகத்தினிமித்தம் அரண்மனையில வந்திருந்து உண்ணல் உடு த்தல் முதலானவைகளைச் செய்து அளவற்ற அற்புதத் திருவிளையா டல்களை நடாத்தி யிருந்த செயல்களை யெல்லாம் நினைந்து நினைந்துமற் றொரு காரியத்திலும் மனதைச் செலுத்தாமல் தவத்திற்சிறந்த அரிய பெரியோர்களுடைய சொர்ப்பனத்துங் காண்டற் கருமையா யிருக்கி ன்ற வல்லுவை நனவில் நேராகக்கண்டு தரிசிக்கும்படி எளிதிற்கிடை த்திருந்தும் பாவியேன் கை நழுவவிட்டேனே? சூரியனில்லையவிண்மணி யை யிழந்த வுலகமும், கண்மணியை யிழந்த விழிகளும், கண்மணி

யை யிழந்த நாகமும், உண்மணியை யிழந்து வாடுகின்றனன்றோடுமோ. ப்பாகா. என்றிவ்வாறு பலமுறை தனக்குத்தானே நொந்துகொண்டு கற்போன்ற நெஞ்சையுடையவர்களும் கண்டவுடன் கரையும்படியாக உள்ளுக்குள்ளே அனலிற்பட்ட மெழுகுபோல உருகிவிழிகளில் நீர்ப் பசுமையற்று நெடுகவேங்கியேங்கி மகோற்கடமூர்த்தியினுடைய ஆலயத்தில் அடிக்கடி அன்பாய்ச் செல்லுவதும், அங்கு செய்யத்தக்க கருமங்க ளின்னவையெனத் தெரியாமல் மதிமயங்கி வாடுவதுமாக யிருந்தனன். அவ்வா றிருக்கும் நாளையில், ஒருநாள் முற்கல முனிவர் தற்செயலா யங்கெழுந்தருளினர். அப்போது எல்லா வடிவங்களையும் மகோற்கட மூர்த்தியினுடைய வடிவமாக நினைந்து நினைந்து தாபரித்திருக்கின்ற காசிராசன் அம்முனிவரையும் மகோற்கட மூர்த்தியாகவே நினைத்து மிக்க பத்தியோடு மெதிர்கொண்டு பணிந்து பலமுறை துதிசெய்து, சுவாமி ! அடியேனுடைய நாதராகிய மகோற்கட மூர்த்தியினுடைய திருவடிகளை எக்காலத்திற்காணப்பெறுவேனென்றுகேட்டனன். அதற்கம்முனிவர் சந்தோஷங் கொண்டு அரசனே ! ஐயாயிர வருடஞ் சென்றபின் அக்கருத்தாவினுடைய திருவடிகளைக் காணப் பெறுவை. அதுபரியந்தம் இங்கே உபாசாட்சியினைச் செலுத்திக் கொண்டிரு முடிவிலவ் விநாயகக்கடவு ளுன்னிடத்திற்கு ஓர் விமான மனுப்புவர் இஃதுண்மையென்று சொல்லிப் போயினர், பின்னர் ராசனவன் மனந்தேறி மழைத்துளிக் கெதிர் பார்த்திருக்கின்ற சாதகப் பட்சியைப்போல விநாயக மூர்த்தியினுடைய திருவடிகளைத் தியானஞ் செய்து சுவாமியினுடைய திருவுருவத்தை பூசித்துக் கொண்டு வந்தனன். இவ்வாறு ஐயாயிரவருடஞ் சென்ற பின்னர் சிறையினின்று வெளிப்பட்டவர்போல அரசன் மேலான மகிழ்ச்சிகொண்டு, தனது அரசுரிமையைப் புத்திரனிடத்தி லொப்புவித்து விநாயக மூர்த்தியினுடைய திருவருளுக் கெதிர்ப் பார்த்திருந்தனன். அப்போது தம்மை விழைந்தோர்கள் ஆண்பாலாராயினும் பெண்பாலாராயினும் அவர்கள் இருதயகமலத்தில் சதாகாலமும் வாசஞ் செய்தருளுகின்ற விநாயகக் கடவுள் ஓர் தெய்வவிமான மனுப்பினர். அவ்வற்புதத்தைக் காசிராசன் கண்டு ஆனந்தபரவசனாகி, ஆடிப்பாடிக் கரையற்ற களிப்பினால் கரங்களைக் கொட்டி, அனந்தமுறை வலம் வந்து பூமியில் அடியற்ற மரம்போல வீழ்ந்து பணிந்தெழுந்து சுவாமியினுடைய பேரருளை வியந்து வியந்து துதிசெய்து அளவறறமேலான சந்தோஷ காத்தோடும் அவ்விமானத்தின்மீ தாரோகணித்தனன். அம்மாத்திரத்தில் அவ்விமானமானதுமே

ழுந்து குய்யகர் உலகம் முதலிய சகல உலகங்களையுந் தாண்டி

அண்டப்பித்தியிலே பிரகாசித்திருக்கின்ற கந்தருவலோகங் கவுரிலோகம் முதலியவைகளைக் கடந்து சிவலோகம்போய்ச் சேர்ந்தது உடனே அரசனானவன் விமானத்தினின்று மிறங்கி அங்கே நவரத்தினமயமா யிராநின்ற ஆலயத்தில் அளவற்ற சிவகணங்கள் புடைசூழும் படியாகச் சிம்மாதனத்தி லெழுந்தருளி யிருக்கின்ற விநாயகமூர்த்தியினுடைய திருமுன்னர் சென்று அனந்தமுறை பணிந்தெழுந்து நாத் தழும்பேறும்படி வாழ்த்தி அடியேனைப் புன்மையினின்று நீக்கிப் புரந்தருளவேண்டும் இறைவனே என்று பிரார்த்தித்தனன் அப்போது அநுவை மேருவாக்குவதுபோல அடுத்தவர்களுடைய மலபாசங்களை நீக்கித் தன் மயமாக்கவல்ல விநாயகக் கடவுளானவர் உடனே அவ்வரசனுக்கு மேலான அறிவைக்கொடுத்துத் தமது சாமீபத்தி லிருக்கும்படியான காட்சியையு மளித்தனர்

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! இவ்வாறு காசிராசனானவன் விநாயகமூர்த்தியினுடைய பெருங்கருணையினால் அகண்டாகார பரிபூரண சோதிமயமாகிய பேரின்ப முத்தியையடைந்து பிரமானந்த சாகரத்தின் மூழ்கி யிருந்தனனென்றால், அவன் செய்திருக்கின்ற தவத்தின் பெருமையை யாவர் உரைசெய்ய வல்லவர்கள் என்று சூதபுராணிகர் கூற சவுனகாதி முனிவர்கள் அவரைப் பணிந்தெழுந்து சுவாமீ முன்னர் விநாயகக்கடவுள் தமது ஆனந்த புவனமென்கின்ற லோகத்திற் கெழுந்தருளினரென்று திருவாய்மலர்ந்த தேவரீர் மீட்டும் அக்கடவுளுடைய வனுக்கிரகத்தினால் காசிராஜன் சிவலோகமடைந்து விநாயக மூர்த்தியினுடைய சாமீபமுத்தியை யடைந்தானென்றது அடியேங்களுடைய மனத்திற் சந்தேகத்தினை யுண்டாக்கியது ஆதலால் சுவாமிகள் அச்சந்தேகத்தை நிவர்த்திசெய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதற்குச் சூதபுராணிகர் நல்ல கேழ்வியை யேவினீர்களென்று சந்தோஷித்து, ஓ அருந்தவர்களே சிவலோகத்தி லெழுந்தருளியிருக்கின்ற சிவபிரானொருவரே சிருட்டியாதிமுத்தொழில்கட்கும் பிரமன் முதலிய மூன்று மூர்த்திகளானதுபோலத் தம்மை விழைந்தோர்க்குச் சகல விக்கினங்களையு நீக்கிவேண்டிய வரங்களை யளித்துத் தேவர்மக்கள் முதலியயாவரும் வழிபடத்தக்க தெய்வமாகி எல்லாக் கடவுளர்க்கு முன்னதாகப் பூசைகொண்டுதம்மோடொப்பாரு மிக்காருமில்லாத பெருமை தோன்றும்படியாக விநாயகமூர்த்தியென்னுந் திருநாமத்தினைத் தரித்தருளி சகல வான்மகோடிகட்கும் இம்மையிலே போகபாக்கியங்களையும் மறுமையில் மோக்ஷ சாம்பிராச்சியத்

தினையும் எளிதில் அருள்செய்யும்படி வேறே ஒரு திருவுருவங்கொண் டருளினர். ஆதலால் சிவபிரானென்னுந் திருமேனிக்கும் விநாயமூர்த் தியென்னுந் திருமேனிக்குஞ் சிறிதே பேதமாகும். ஆயினும் அவ்விர ண்டு திருவுருவங்களினு முள்ளவஸ்து ஒன்றாகவேயிருக்கும். அவ்வரு வங்களிலும் ஐந்து முகங்களும் பத்துக்கரங்களும் பதினைந்து விழி களும் சந்திரனைத்தரித்த சடைமுடியும் சர்ப்பாபரணமும் ஆக்கல் முத லிய முத்தொழில்களும் பூதகணங்களும் கொன்றைவன்னி அறுகு முதலியவைகளை யணிந்திருக்கின்ற சிறப்பும் பேதமில்லாமல் ஒத்திருக் கின்றதைக் கண்டிருக்கின்றீர்கள். அத் திருவுருவங்களிலுள்ள வஸ்து வும் ஒன்றாதலாலே அம்மூர்த்திகள் வசிக்கின்ற உலகமும் ஒன்றாகவே யிருக்கின்றது. அவ்வுலகமே ஆனந்த புவனமென்றும் நிஜலோகமெ ன்றும் சிவலோகமென்றும் வழங்கப்பட்டிருக்கின்றது. அதனால் முத் திவளத்தை யளிக்கத்தக்க கணேசமூர்த்தி வாழ்கின்ற உலகமும் அது வேயாகும். அக் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளில் அன்புவை த்த மெய்யடியார்கள் மிக்கமகிழ்வோடு வாசஞ்செய்கின்ற உலகமும் அதுவேயாம் ஆதலால் சிவபிரான் விநாயகக்கடவுளென்னு மிரண்டு திருமேனிகட்கும் அத்திருமேனியி லிருக்கின்ற இரண்டுவஸ்துக்களுக் கும் அவர்கள் வசிக்கின்ற உலகங்கட்குஞ் சற்றும் பேதமில்லையென் றறியக்கடவீர்கள்.

மகோற்கட விநாயகர் திருவவதாரப் படலம்

முற்றிற்று.

பதினோராவது

## உடுண்டி விநாயகர்

# திருவவதாரப் படலம்.

ஆதலான் மலைவே யில்லை யறமகோற் கடர்தஞ் செய்கை
யோதின மவரே மீள வுமையிடந் தோற்றி நம்மை
மேதக வருளு டுண்டி விநாயக னென வாறுங்
காலலி னறைவா மின்பக் கடலுளீ ரினிது கேண்மின்.

ஓ சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தி மகோற்கடர் திரு வவதாரங்கொண்டு நராந்தகனையுந் தேவாந்தகனையும் நாசஞ்செய்து காசிராசனுக்கு முத்தியளித்த திருவிளையாடலைச் சொன்னோம், இப் பால் உடுண்டிவிநாயகர் திருவவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளை யாடலைச் சொல்லுவோம் கேட்பீர்களாக

இப்பூவுலகத்திற் சகலராலும் புகழத்தக்க கைவர்த்தமென்னுந் தேயத்திலே தசபடங்கள் முதலிய சிறப்புகளை வாய்ந்த பன்மகமென்னுமோர் பட்டணமுண்டு, அப்பட்டணத்தில் பிரமசுரனென்னுமோர் அசுரன் சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளைக் கருதி அளவற்றநாள் தவஞ்செய்தனன். அத்தவத்திற்குச் சிவபெருமான் கிருபைகூர்ந்து பிரத்தியட்சமாக, உடனே அவ்வசுரன் கோம்மென் றெழுந்திருந்து வேதாகமங்களினால் பலமுறை துதிசெய்து நின்றனன் அப்போது சிவபிரான் நீகோரியவரம் யாதென்று கேட்டருள, அதற்கவ்வசுரன் மீட்டுந் தொழுதெழுந்து, ஓ தீனதயாளுவே ? எனது கையை யாவர்முடியில் வைத்தாலும் அவர்கள் உடனே வெந்து சாம்பலாகும்படியான வரத்தினைக் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான், அதற்குக் கர்த்தன் புன்னகை செய்து அவனிச்சைப்படி கொடுத்தருளினர். அப்பொழுதே அப்பாதகன் அவ்வரத்தைச் சோதிப்பவனாகித் தனது கையை சுவாமியினுடைய திருமுடியின்மீது வைக்கயத்தனித்தனன் அதை சுவாமியறிந்து தாம் கொடுத்தருளிய வரத்தைத் தாமேயழிப்பது தகுதியல்லவென்று கருதி, அப்பாதகனது கண்ணுக்குத் தோற்றாதபடி வியாகபகராயினர். அப்போதவ்வசுரன் எதிர்நின்ற திருவுருவைக் காணாதவனாகி சொர்க்காதி புவனங்களினுந் திசைகள்-தீபங்கள்-வரைகள்-வனாந்தரங்கள் முதலிய இடங்களினுந் தேடித்திரிந்தனன். அச்செய்தியை விண்டுவறிந்து விஸ்வரூபியாயிருக்கின்ற சிவபிரானை இக்கொடியவன் காணவல்லனோ ? இவன் பெற்றிருக்கின்ற வரத்தினால் இனித் திரிலோகங்களையும் நிர்முக்கத் துணிகுவன். இவனை நாம் ஒருபாயத்தினாலழித்துவிட வேண்டுமென்று தீர்மானித்து கோடிசூரியப் பிரகாசமாய் இலக்கணத்திற்கு மேற்பட்ட வடிவுடன், மோகினி ரூபமெடுத்து மாய்கைக் கரசியான பார்வதிகண்டாலும் மயங்கத்தக்க நடைநொடி பாவனைகளைப் பெற்று, எண்ணிறந்த மனிதர்களேககாலத்தில் பஞ்சபுட்பபாணங்களைக் காவேகமாகப் பிரயோகிப்பதுபோலத் தெளிந்த நீலமணிபோலக் கறுத்து, வெண்மையொளிகொண்டு, கடையிற் செவ்வரி பாய்ந்து, நெருங்கிய கருமைவாய்ந்த மெல்லிய உரோமங்களைப் பொருந்தி நீண்டு விளங்குகின்ற விழிமலர்களை நாற்றிசைகளினுஞ் சுழற்றிப் பார்த்து மேககாலங்களைப்போன்று கண்டவர் வியப்பெய்த நீண்டு, பரிமளித்து நெய்த்து இருண்டுதாழ்ந்து பூங்கொத்துகளைப் பொருந்தி விளங்குகின்ற கூந்தலை இருமருங்கினுந் துவளும்படியாக அலைந்து, புடைபரந்து மேலெழுந்து நீலமணி கோர்த்ததற் கொப்பான சிலிமுகம் வாய்ந்து இடைதோன்றாமல் நெருங்கி மார்பி

ணிட முழுவதும் நிறைந்து தடையின்றிப் பருத்துப் பூரித்துத் தம்மு ளிரண்டு மொத்து இடையினை வருத்தி நிமிர்ந் திருக்கின்ற தனங்களில் ஒன்றை வெளிப்படுத்தி, செம்பஞ் சூட்டிய பாதங்களிலணிந்த சிலம்புகளுங் கரங்களி லமைந்த வளையல்களுங் கலிக்க, அன்னத்தைப் போல மெல்லன நடந்து, அரும்புகின்ற புன்முறுவலையிளைத்து க்கிளியை நிகர்த்துக் கொஞ்சி வசனித்துப் பிரமசுரா னெதிரிற் சென்றனர்.

அம்மாத்திரத்தில் அவ்வசுரான் அனலிற்பட்ட மெழுகைப்போல மனங்கரைந்து விரகாக்கினிமேலிட்டு உள்ளத்தையும் உடலையும் வாட்டச்சோர்ந்து வெம்பிகாமவெள்ளம் பெருகவருந்தி யானையுண்ட விளாங்கனியைப்போல வுள்ளுடைந்து சிவகடாட்சத்தினால் வந்த மோகினியின் இலக்கணவடிவைப் பாதாதிகேச பரியந்தம் நோக்கி நோக்கித்தாபரித்திருக்கப்படாமல் மெல்ல மெல்ல நெருங்கிக் கூரிய வேலைப்போல விளங்கிக் காதளவுமோடிச் செவ்வரிபரந்து மைதிமிர்ந்து பாலையொப் பவெளுத்து விடத்தினுங் கறுத்து மான்பார்வையினைப் பழித்த நேத்திரங்களைப் படைத்திருக்கும் பெண்கள் சிகாமணியே? உமது திருநாமம்யாது! நீர் இருக்குமிடம் பூவுலகமோ! பொன்னகரோ! பிரமனுலகோ? மன்மதன்பதியோ? வைகுந்தநாடோ? சற்றே திருவாய்மலர்ந்தோதும் பெண்ணே கண்ணே? எனது தவப்பேற்றினால் இங்ஙனமெழுந்தருளினீர்? உமது சுந்தரவடிவையும் நிலையையுங் கண்டமாத்திரத்தில் மனந்தாளவில்லை. செல்வப்பெருக்கினையுடைய பொன்னகரத்தினும், சமுத்திரஞ் சூழ்ந்த பூமண்டலப பரப்பிலும், ஆதிசேடனையொத்தவன் வாழும் பாதலத்தினும், அதிக சுந்தரவதிகளாகிய பெண்களனைவருக்கும் நாயகமாகப் புகழவல்ல சர்வமங்கள ரூபலாவண்ணியமுள்ள உமது பெருமைகளை யாவராற் புகழப்படும்? கறுத்து நீண்டிருக்குங் கூந்தலைவாய்ந்த பாவாய்! உமது மங்களகரமாகிய தோற்றம் எதிர்ப்பட்ட மாத்திரத்தில் இத்தலத்தைக் கடந்தப்புறம் போகச் சம்மதபபடாமல் மதிமயங்கி வருந்துகின்ற எனது மனங்களிக்கத் தக்கதாகப் பவழத்தை யொத்துக் கேசயத்தைப் பழித்துவிளங்குந் திருவாயை விண்டு ஓர் வார்த்தையாடீரோ! அல்லது தமது அருள் நோக்கத்தைச் செலுத்தி எனது விண்ணப்பத்தினைச் செவிகொடுத்து வினவி மறுமொழியாட மாமிரங்கீராயின் யானென்ன செய்வேன்! எனது மனமுந் தேகமும் பூரித்துக் களிக்கும்படி நகை முகத்தை யாயினுங் காட்ட வொண்ணுதோ! அஃதில்லாமற் போயினும் சேற் கெண்டையைப்போலவ் பிறழுந் திருநோக்கித்தினைக் குளிர்ச்சியாகச் செலுத்த

நினையீரோ? உமது தரிசனை கிடைத்தமாத்திரத்தில் மனநிலை கலங்கிப் பொறிகள் மயங்கிக் காமக்கவலையிற் பட்டுழலுந் தமியேன் இனிகளித் துய்பிழைக்கும் மார்க்க மொன்றைக் காட்டாமலுஞ் சற்று மென்னிடத் தன்மைச் செலுத்தாமலும்; இரக்கமற்று இவ்வாறே இருப்பீராயின் சத்தியமாகச் சொல்லுவேன் எக்காலத்திலுந் தீராத பழி பாதகம் உம்மைச்சேருவதற் கையமில்லை. பராமுகமாயிராமற் றுரிதமாயடியேன் பேரிற் கிருபைசெய்து உமதிணக்கத்தைக் கடாட்சிக்க வேண்டும், நீரிட்ட பணிகளைச் செய்யக் காத்திருக்கின்றேன். நீர் விரும்பியவனைத்தையும் இன்னிமிடத்திற் றரவல்லேன், காமநோயினாற் பிராணனையிழப்பதற்கு முன்னந் தயைசெய்து அதற்குரிய வின்பரசத்தைக் கடாக்ஷித்துப் பாதுகாப்பதன்றி, இனியான் மன்மதசரங்கட் கிரையாகாமல் உமது கடககங்கணங்களணிந்த திருக்கரத்தினாற் பிடித்தணைத்து ஆதரிக்கவேண்டுமென்று வெளுத்த பற்களைத்திறந்து கரங்களை நீட்டிப் பற்பல விதங்களாகக் கெஞ்சிக் கெஞ்சி இரந்து அக்கினியிற் பட்டகாந்தண்மலரையொத்து மெய்கருதி விரகாக்கினியினாலே இறந்தவனைப்போல இவ்விதங்களாக அலைந்துழன்றனன்.

இவையனைத்தையும் விண்டுவாகிய மோகினிகேட்டுப் புன்னகையோடு சிலதரம் வீணைவாசித்தும், சிலதரம் சங்கீதங்களைப் பாராட்டியும், சிலதரம் சாஹித்தியங்களை விரித்தும், சிலதரம் பரதவிதிப்படி நடித்தும், அன்னத்தைப்போல மெல்ல மெல்ல நடந்தனள். இவ்வாறு புன்னகைமாத்திரமரும்பி மறுமொழியாடாமற் செல்லுகின்ற மோகினியினுடைய குறிப்பைப் பிரமாசுரன் கண்டு கோங்கரும்பையொப்பக் குருத்துப், பொற்குடத்தைப் பழித்து விம்மித் ததும்பித் தேமல்பரந்திருக்குந் தனபாரங்களைப் படைத்த பெண்ணமுதே! உமது மங்களகரமாகிய வடிவின் பொலிவையுங் குணாதிசயங்களையுங் கண்டபோதே மன்மதசரங்கட்கிரையாகி விரகாக்கினியைத் தாபரிக்க மாட்டாமல் மிகவும் வருந்தி துலைதூரத்தி லிருந்து உம்மையே நாடி வருகின்றேன், இனித் தேவரீர் செந்தாமரை மலரையொத்த திருவடிகளல்லது வேறுகதியில்லை எக்காலத்திலும் உம்மைப் பிரியவறியேன். சற்றும் இடைவிடாமற் கலந்து குலவியிருக்க விரும்பினேன், மாவடுவைப்போலப் பாக்தோடி யிருக்கும் விழிகளையுடைய வனிதாரத்தினமே! தீனனாகிய யான் தம்மைவிட்டுப் போகவுந் துணிவனோ! அப்படிக்குச் செய்யவெத்தனப்படினும் மனமொருமித்து நிற்குமோ! உடலைப் பிரிந்து உயிர் தாபரித்திருக்க வல்லதோ! இக் காரணங்களை

விரித்து விரித்துப் பேசவும் வேண்டுமோ! மின்னலையொப்பக் காட்டி; மறையும் மெல்லிய இடையையுடையபேதாய்! மைதிமிர்ந்து வேலைப் போலக் காட்டுந் தேவரீர் கூரிய கண்களின் சுழல்வலையிற் பட்டு வாடி வருந்தித் திகைத்தலதிபடுகின்ற அடியேனுக்குத் தமது பூர்ணகிருபா நோக்கக் கடையையாவது காட்டலாகுமோ? இதையன்றி இனியான் பிழைக்கும் மார்க்கம் வேருண்டோ? இவ்வபாயகாலத்திற் சிறிதுத யைசெய்து தேவரீருடைய திருக்கரத்தினால் அடியேனை யணைத்து ஊசலாடி இவ்வுயிரைக் காக்கக்கடவீர். கண்ணாடி யொன்றேயன்றி மற்றவைகட் கொப்பாகாது வட்டமாய் விளங்கும் அழகிய கபோலங் களையுடைய நங்காய்! அடியேன் பிறந்தபோதே தேவரீர் களித்து நீராடுவதற்கு யோக்கியமான சுனையாகவாவது கொங்கைகளினிடத் திற் பூசும் பரிமளமிகுந்த சாந்தமாகவாவது கறுத்து நீண்டிருக்குங் கூந்தலிற் சொருகவல்ல சுகந்தகந்தங்களைவீசும் புதியமலராகவாவது உருப்பெற்றுத் தம்மைச்சேர்ந்து மகிழ்ச்சி பெறறிருக்கும் பாக்கியத் தைப் பெறுமற் போயினேன் இப்போது விரகாக்கினி மேலிட்டுத் தேகத்தையும் மனதையுஞ் சுட்டுக் கொளுத்துதலினால் மிகவும் வாடு கின்றனன். தமது கிருபைக்குப் பாத்திரனதற் பொருட்டு இனி யான் செய்து கொள்ளவேண்டுங் கடமையாதோ ஒன்றுந் தோற்றவில்லை. அதைத் தயைசெய்து காட்டுவீராயின் தேவரீருடைய மனோபீஷ்டப் படிக்குக் காத்திருக்கின்றனன். ஓ என்னுசைக் கண்மணியே! எனது மனங்களிப்பெய்த விளங்கி அடியேன் பின்பற்றி வருவீராயின் அந்தி மிடத்தில் பொன்னுலக வாழ்வைப பெற்றிருக்கும் அரம்பாஸ்திரீகளை யாவரும் வணங்கிவேண்டிய தொண்டுகளைச்செய்து போற்றிவரும்படி யாக வைப்பதன்றித் தெய்வலோக முற்றினும் நீரேயனுபவித்துக் களி த்திருக்கவைப்பேன். தேவரீர் மனதில் விருப்புற்றவைகளைத் திருவாய் விண்டு சொல்லுவீராயின் அவைகள் எத்தகையவாயினும் ஓர் நொடிப்போதிற் றேடித்தரவல்லேன். என்று இவ்விதங்களில் பற்பல இன் சொற்களைப்பேசிக் காமலாக்கினியினு லுண்டாகும் வருத்தங்களைக் காட்டிக் கெஞ்சித் தொடர்கின்றபோது மோகினியானவள் சிறிது மனமிர க்கினவள்போல நின்று, ஓ அரசனே! யான் நாட்டியஞ் செய்கின்ற பெண். நீரோ தீரத்தோடு சகலரையுஞ் சயிக்கவல்லவீரர் யான் ஒன் றினும் நாட்டமில்லாமல் என்னிச்சையாற் செல்கின்றபோது என்னி டத்தில் நீர்காமலாக்கினியினால் உளம்மயங்கிக் கருத்தழிந்து பித்தனை யொப்பப்பேசிக் கலவியை யிச்சித்து வழக்காடுவது ஞாயமோ? ஆயி னும் பரதசாத்திரத்திற் கூறியமுறைமைப்படி எனக்கெதிர்நின்றுயான்

செய்யும் அபிநயத்தைப்போல நாட்டியஞ் செய்ய வல்லவர் யாரோ அவர்களையான் சேர்வதல்லது எனதுமனம் வாடியகாலத்தும் மற்றொருவரையான் சேரேன், இதுவே எனது பிரதிக்ஞை யென்று சொல்லினள். இவ்வாறு விஷ்ணுவாகிய மோகினி சொன்ன வஞ்சகத்தைப் பிரமாசுரன்கேட்டுச் சிறிதும் அதனை அறிந்துகொள்ளாதவனாகி மேகத்தை நிகர்த்த கரிய கூந்தலையுடைய மின்னே என்னுயிரே! நீர் எவ்வண்ணம் அபிநயம் பிடிக்கின்றீரோ அவ்வண்ணமே யானும் உமக்கெதிர் நின்று பிடிக்கின்றேன், அதன் பின்னேனுஞ் சிறந்த பவளத்துண்டுபோற் றிரண்டு விளங்குகின்ற தமது செவ்விதழூறலைக் கிருபை செய்ய வெண்ணுவீரோ வென்றுகேட்டனன். அதற்கு மோகினியானவள் அவ்வாறே ஆகுகவென்று சொல்லித் தனது கரங்களைக் கூப்பிக் கொண்டு அவ்வசுரனுக்கெதிரில நின்றனள். அவனுந் தனது கரங்களைக்கூப்பிக்கொண்டு அம்மோகினிக் கெதிரில் நின்றனன். பின்னர் மோகினியானவள் தனது கரங்களி லொன்றைப் பிடித்துத் தன்தலைமீது வைத்தனள். அப்போது அவ்வசுரன் தான் பெற்றிருக்கின்ற வரத்தினை மறந்தவனாகித்தானும் அவ்வாறே தனது கையைப் பிடித்துத் தன்தலைமீது வைத்துக்கொண்டனன். அந்நிமிஷத்தில் முன்னர் சிவபெருமானுடைய நகையால் திரிபுரத்தார் எவ்வாறழிந்தார்களோ அவ்வாறு பிரமாசுரன் வெந்து சாம்பராயினன். மோகினி வடிவங் கொண்டு வந்த விஷ்ணுவானவர் சந்தோஷ சாகரத்தில் மூழ்கினர்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே? கிடைத்தற்கரிய மேலான வரத்தைத் துட்டர்களாயினோர் தேவர்களிடத்திற் பெற்றவர்களாயினும் அவ்வரத்தினாற்றாமே யழிவரென்று மேலோர் சொல்லுவார்கள். அதுபோலவே உலகத்தை யெல்லாம் நீறாக்கவல்ல வரத்தினைப் பெற்ற இவ்வசுர பாதகன் தானே அவ்வரத்தின் பயனை யடைந்தவனாயினான். பின்னர் விஷ்ணுவானவர் அம்மோகினி வடிவோடு பான்மகமென்கின்ற அவ்விடத்திற்றானே வந்திருந்தனர். அதுமுதல் அத்தலத்தை யாவரும் முகுநதை யென்று வழங்குவார்கள். இவ்வாறு பிரமாசுரனுக்கு நேர்ந்த சம்பவத்தினை அவன் குமாரனான துராசதனென்பவனறிந்து தங்கள் குலக்குருவாகிய சுக்கிரனிடத்திற்சென்று பணிந்தெழுந்து கண்களில் நீரைச்சொரிந்து தனது தந்தைக்குநேர்ந்த கொடுமைகளைச் சொல்லித் துக்கித்து, சுவாமீ! எனது தந்தையாரை நீறாக்கிய விஷ்ணு முதலிய எல்லாத் தேவர்களையும் அடக்கி அவர்கட்கெல்லாம் யானே தலைவனாகி திரிலோகங்களையுஞ் சயப்பிரதீபத்துடனொரு

ம்படியாகத் தேவரீர் கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தான்; அதற்குச் சுக்கிரன் மனதிரங்கி நீ பயப்பட வேண்டாமென்று பலதேறுதல்களைச் சொல்லித் தீக்ஷைசெய்து, சிவபெருமானுடைய பஞ்சாக்கரத்தை யுபதேசித்து, நீ இம்மந்திரத்தினால் பெரிய தவங்களைச்செய்து அரிய வரங்களைப் பெறுதியென்று விடைகொடுத்தனன். அம்மாந்திரத்தில் துராச்சதன் அமுதுண்டவனை யொப்பக்களிப்பெய்தி மிக்க இறுமாப்புடனே வனஞ்சென்று தனது ஒற்றைக் *காலங்குட்ட விரலை நிலத்திலூன்றி வெய்யல் - பனி - மழை - குளிர் முதலானவைகட்குஞ் சாது சரீரம்முழுவதும் புற்றுக்கள் மூடிக்கொள்ளவும், அப்புற்றுக்களினின்று செடிகள் முளைக்கவுமாக மெய்ம்மறந்து, இடை விடாமல் பஞ்சாக்கரத்தைச் செபஞ் செய்துகொண்டு ஆயிரம் வருடம் வரையில் நிராகாரமாயிருந்து அரிய தவத்தினைச் செய்தனன். அத்தவத்திற்குச் சிவபெருமான் மனதிரங்கி உமா தேவியாரோடு இடப வாகனத்தின் மீதெழுந்தருளி அவனெதிரில் வந்து அத்துராசதன்மீதுமூடிக்கொண்டிருக்கின்ற புற்றுக்களையுஞ் செடிகளையுஞ் நீக்கும்படி தமது பூதகணங்கட்காக்கியாபிக்க அவ்வாறே அவர்கள் நீய்த்துச் சுருதிகளாலு மறிதற்கரிய சுவாமி வந்தாரென்று தெரிவிக்க, உடனேதுராசதன் பதறியெழுந்து பலமுறை சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பி விழிகளில் ஆனந்த பாஷ்பஞ் சொரிந்து உடன் முழுவதும் உரோமாஞ்சிதம் பூத்து மொழிதடுமாறி மனமுருகி வேதாகமங்களினால் அளவற்ற துதிகளைச் செய்து நின்றனன். அத்துதியனைத்தையுஞ் சிவபிரான்கேட்டு சந்தோஷித்து உனக்குவேண்டிய வரங்களைக் கேளென்று திருவாய் மலர்ந்தனர். அப்போது துராசதன் மீட்டும் பணிந்தெழுந்து, ஓ நித்தியப்பொருளா யிருக்கின்ற கர்த்தனே! தேவரீராக தேவரீரதுசத்தியமாக. நும்மிருவாற் றரப்பட்ட தனையராக, அரவணையிற் றுயில்கின்ற விண்டுவாக, பதுமபீடத்தனாகிய பிரமனாக, பின்னும் வெவ்வேறா யிருக்கின்ற பலவகைப்பட்ட தேவர்களாக, உரகர்களாக, தானவர்களாக, நரர்களாக, பனிதர்களாக,நாறகான் மிருசம் முதலிய பல உயிர்களாக, இந்த எண்பத்து நான்கு நூறாயிரமென்னும் தோற்றங்களல்லாமல் இனிவேறே தோற்றம் யாதேனுமுண்டாகுமெனில் அதனாலாக, இவ்வகைப்பட்ட நீங்கள் யாவரும்பலமுறை என்னைக் கொல்லும்படி முயன்றீர்களாயினும், யான் இறக்காம லிருக்கவுந் தேவர்கள் முதலிய சகலரும், எனதேவலுக் கிசையும்படி திரிலோகங்களையும் யானரசாண்டிருக்கவும், அவ்வாறு அரசாளுங் காலத்திலும், செல்வச் செருக்கி லழுந்தாமல் தேவரீருடைய திருவடிகளி

ல் குறையாத பத்திவைத்திருக்கவும், கிருபை செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தான். அவையனைத்தையுஞ் சிவபிரான் கேட்டருளித்தேஜோன்மயமாய் எங்கும்போக்குவரத் தில்லாமல் நிறைந்திருக்கின்ற நமது சத்தியே உமையினிடத்தில் விநாயகராக வந்து உனது சிரத்திற்றனை வைத்து அடக்குவது தவிர ஏனையவரங்க வனைத்தையுந் தந்தோ மென்று திருவாய்மலர்ந்து அந்தர்த்தான மாயினர்.

இப்பால் துராசதனனவன் விண்டுவாதிய தேவர்கள் கவலைகொள்ளும்படியாக சிவபெருமானிடத்தில் சகலவரங்களையும் பெற்றுக் கர்த்தனெழுந்தருளிய திசையை நோக்கிப் பலமுறை பணிந்தெழுந்து மிகுந்த இறுமாப்புடன் முகுந்தை யென்னும் பட்டணத்திற் போய்ச்சேர்ந்தனன். இவனிவ்வாறு பலவரங்கள் பெற்றுவந்த தன்மையை இராக்கதர்கள் அறிந்து உடனே அவனையாவரும் பணிந்து கூடினார்கள். பின்னர் துராசதனனவன், அவ்விராக்கதர்களும் நால்வகைச் சேனைகளும் புடைசூழும்படி யுத்த சன்னத்தனாய்ச் சகல ஆயுதங்களையும் தரித்துக்கொண்டு பூவுலகத்தை நோக்கிச்சென்றனன், அதுகண்ட அரசர்கள் யாவரும் உடனே வெளிக்கொண்டு வந்து சிலர் பலபோர்களைப் புரிந்துமானத்தினு லிறந்தார்கள் சிலர் அப்போரிற் றோற்றுத் திசாதிசைகளில் மறைந்தார்கள். சிலர் அவனைப்பணிந்து பகுதி செலுத்துவதானார்கள், சிலர் அவனுக்கு ஏவல்களைச் செய்பவல்ல சேவர்களானார்கள் இவ்வாறு இத்துராசதன் பூவுலகத் தரசர்களை யெல்லாம்வென்ற பின்பு பொன்னுலகை நோக்கிச் சென்றனன். அச்சமபவத்தைத் தேவேந்திரனறிந்து உடனே தனது சுற்றத்தினரோடு வெளிப்பட்டுக் காசிநகரைச் சேர்ந்தனன். அதையறிந்த துராசதன் அவ்வுலகத்தை யோராக்கனால் ஆளும்படி செய்து சத்தியலோகத்திற்குப் போகினன். அங்கரசாளுகின்ற பிரமனனவன் பயந்து தானும் அவ்வாறே காசிநகரைச் சேர்ந்தனர். அதுகண்ட துராசதன் அவ்விடத்திலும் ஓராக்கதனை அரசாளவைத்து வைகுந்தலோகத்தை யடைந்தனன். அவ்வைகுந்த வாசிகளாகிய விண்டுவும் அவ்வாறே காசிதேசத்தைச் சேர்ந்தனர். பின்னர் துராசதன் அவ்விடத்திலும் ஓராக்கனை யாளவைத்து இவ்வாறே மற்றலோகங்களையுங் கைகொண்டு ஆங்காங்கு ஒவ்வோராக்கனை அரசாளவைத்து தான் பூவுலகத்திலுள்ள முகுந்தை யென்னும் பட்டணத்தில்வந்து திரிலோகங்களுந் தனது ஆக்கினையின்படி நடந்து கொள்ளக்கொடுங்கோலைச் செலுத்தித் தன்னினுமிக்கார் எவ்வுலகங்களினு மில்லையென்னு மிறுமாப்புள்ளனே அரசாட்சி செய்து வந்தனன். இவ்வாறிருக்கும் நாளையில் ஒருநாள் அத்துராசதனனவன் சகல ருஷிசனங்களுந்

தன்னைப் புடைசூழும்படியாகக் கொலு விருக்கின்றபோது எவ்வு லகங்களும் நமது ஆக்கினைக்குள்ளாயின. ஆகவே இனி நமக்கட ங்காத தொன்று மில்லையென்று சொல்லினன். அதை அருகிருந்த அமைச்சர்கள்கேட்டு, ஆண்டவனே! பிரமன் விண்டு உருத்திரன் முதலாயுள்ள தேவர்களும், முனிவர்களும், சித்தர்களுந் தத்தமி ருக்கையைக்கடந்து இப்போது காசிநகரை யடைந்திருக்கின்றார்கள். அக்காசியை வென்றாலன்றோ திரிலோகங்களுந் தேவரீருடையகுடை க்குளடங்குமென்றனர். அதைத்துராசதன் கேட்டமாத்திரத்தில் இது வோநமக்கரிதென்று புன்னகைசெய்து அங்கிமிடத்தில் சகல சேனை களோடும் வெளிப்படக்கடவீர்களென்று ஆக்கியாபித்தனன். அவ்வா க்கினைக் கேட்ட யாவரும் ஒருசேரவென்று யுத்தசன்னத்தராய் சமு த்திரம்போல வந்து நெருங்கினார்கள். உடனே துராசதனனவன் அச் சேனைகளனைத்தையும் நடத்திக்கொண்டுசென்று காசிநகரைச் சேர்ந் தனன். அக்கொடியவன் வரவைத் தேவர்முதலாயினோர்க ளறிந்துகா சிநகரை யாள்கின்ற விசுவநாத மூர்த்தியைய டைந்து சரண் புகுந்தார் கள். அப்போது விசுவநாதர் அவனுக்குத் தாங்கொடுத்தருளிய வரங் களை நினைத்து அவனை யடக்கத்தக்கநாள் இன்னும் வரவில்லையென் றுநிதானித்து மிக்க சோர்வோடுஞ் சரண்புகுந்திருக்கின்ற தேவர்கள் முதலாயினோர்க்குத்தக்கபடி தயைவார்த்தைகளைக்கூறி அவர்களோடு தாமும் அக்காசிநகரத்தினின்றும் வெளிக்கொண்டு கேதாரமென்னுந் தலத்தையடைந்தனர்.

பின்னர் துராசதனனவன், காசிநகரத்துள் நுழைந்து தேவர் கள் முதலாயினோரும் மாயமாய் மறைந்துபோன செய்தியை யறிந்து நகைத்து மிகுந்த சந்தோஷத்துடன் அளவற்றநாள் அக்காசிநகரிற்று னே இருந்து திரிலோகங்களினுந் தனது ஆக்ஞாசக்கரத்தைச் செலு த்திவந்தனன். இவ்வா றெண்ணிறந்தநாள் அத்துராசதன் சகல லோ கங்களினுங் கொடுங்கோலைச் செலுத்தி வருவதனால் தேவர்கட்கு அவிற்பாகமும், ஸ்திரீபோகமுங் கிடையாமல் மனம்நொந்து யாவ ரும் பிரமனிடத்திற் சென்று பணிந்து அதனைச் சொல்லுவதானார்கள் ஓ வாணிகேள்வரே! நம்மை யெல்லாம் எங்கும் நிலைபெறவொட்டாமல் துர்க்கிருத்தியஞ் செய்துவருகின்ற துராசதன் எப்போது நாசமடை வன்? இவனையடக்கி நாசஞ்செய்யவல்லவர் யாவர்? இவனுக்கு இத் தன்மைத்தான சிறந்தவரங்கள் கிடைத்தது யாவரால்? இவையனைத் தையு மடியேங்கட்குத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தீர்கள் அதற்குப் பிரமன் சொல்லுவான் ஓ மித்திரரே.

இராசதம் தாமதம்சாத்விக மென்னும் முக்குணங்கட்கும் பிரமன் விண்டு உருத்திரன் என்னும் மூன்று மூர்த்திகளாக விருப்பதன்றி அம்முக்குணங்களைத தாந்தாமே ஆண்டருளுவதால் குணேச னென்றும், அக்குணவிகாரங்களிற் பொருந்தமில்லா திருப்பதினாற் குணரகி தனென்றும், அக்குணங்களைக் கடந்திருப்பதினாற் குணாதீத னென்றும் சகலலோகங்களிலும் பரிபூரணமா யிருத்தலால விசுவவியாபியென்றும் அவ்விசுவத்தை யாண்டு அழியாவலந் தோன்றலால் விசுவகர்த்தனென்றும் அவ்விசுவத்தைப் பிரளயகாலத்தில் சங்கரிப்பதால் விசுவசங்காரியென்றும் மேலானதென்று சொல்லத்தக்க யாவற்றுள்ளும் மேலாகி யிருத்தலினால் பராபரனென்றுஞ் சொல்லுகின்ற சிவபிரான் ஒருவருண்டு. அச்சிவபிரானுடைய தேசோன்மயமாகிய ஓர் சத்தியே உமாதேவியாருடைய திருமுக மண்டலத்தில் விநாயகமூர்த்தி யென்னுந் திருநாமத்துடனே அவதரிக்கும். அக்காலமே அத்துராசதன் நாசமாகுங்காலம். அவனுக்குமேலான வரங்களைக் கொடுத்தவர் இவ்விசுவநாதரேயாம் இனி அப்பாதகனுடைய நிலைகளனைத்தையுங் கலக்கி இறுதிசெய்ய வல்லவர்முன்சொன்ன விநாயக மூர்த்தியேயாதலால், அம்மூர்த்தி திருவவதாரஞ் செய்தருளும்படி விரைவில் உமாதேவியாரை மிக்கமனவுறுதியோடு துதிசெய்வீர்களாக வென்றனன். அவையனைத்தையுந் தேவர்கள் செவிகுளிரக் கேட்டு கவலைக் கடலினின்றுங் கரையேறினவர்களாய் யாவரும் உமாதேவியாருடைய சந்நிதானத்திற் சென்று துதிசெய்வதானார்கள்.

ஒருத்தியாகியுலகனைத்து மோம்புமாறுளேயுலகத்தில்
வருத்தமகற்றப்பலவுருவாய் வயங்காநின்றசத்தியே
கருத்தனையகன்றவுருவாளே கடவுள்முனிவர்முதலோர்செய்
பெருந்தவழிபாட்டினுக்கிரங்கும் பேரானந்தப்பெண்ணமுதே.

குணமேசொரூபமானவளே குணத்தையாளுங்கோமளமே
குணகாரணமேகுணாதீதக் கொம்பேவேதந்துதிப்பவளே
தணவாதவனிதரிப்பவளே தருதாபாசங்கமந்தனக்கு
நிராதாரமானவளே நீடுந்தேவசொரூபியே.

அடியார்பிழையறுத்தவர்கட்கடக்கில்பொருளுங்கொடுப்பவளே
கொடியார்சுகத்தைக்குமைத்தவர்க்குங் கோதில்கருணைசுரப்பவளே
மிடியால்வருந்துமெமைப்புரப்ப வேண்டும்வேண்டுமெக்காலு
முடியாமுதல்வி அடியேமை முழுத்தவருள்செய்தளித்தருளே.

இவ்வாறு துதிசெய்து நிற்கின்ற தேவர்களெதிரில் உமாதேவியார் தமது சோடசகலைகளால் நிறைந்ததிஷ்களங்க பூர்ணசந்திர பிம்பம் போன்ற முகாரவிந்தமும், நீலரத்தினம் போலும் வண்டுகளுக்கு நிகராகிய அழகிய அஞ்சனங்களால் நிறைந்ததிருவிழிகளும், பிரவாளரத்தினங்களுக்கு நிகர்த்த அதரோஷ்டங்களும், கஜராச துதிக்கையைப் போன்ற நீண்டபாகுக்களும், செங்காந்தள்ளுக் கொப்பாகிய அஸ்தங்களும், நூதனமாகத் தளிர்த்துச் சோபித்துக்கொண்டிராநின்ற பல்லவங்களையொத்த பழங்களும், மதித்தமதத் தேயத்தின் மஸ்தகத்தைநிகர்த்தகுசகும்பங்களும் மிருகராசநிடைக்குச் சமானமாகியசிற்றிடையும் விளங்கும்படியாகத் தெரிசனந்தந்து, ஓ விபுதர்களே ! உங்களுக்குவேண்டிய வரம்யாதென்று திருவாய்மலர்ந்தனர். அப்போது தேவர்கள் உய்ந்தோம் உய்ந்தோமென்று ஆனந்தபரவசத்தாலாடி,மீட்டும் வேதாகமங்களால் பலமுறை துதிசெய்து அராசதன் செய்துவருகின்ற கொடுமைகளையும் அவனால் தாங்களனுபவித்து வருகின்றதுன்பங்களையும்விபரமாகச்சொல்லி! ஓ சகலபுவனேஸ்வரி ! இனித்தேவரீர் தீனராகிய அடியேங்கண்மீது கிருபைசெய்து எல்லாத் துன்பங்களையும் நீக்கிச்சுகத்தைக் கொடுத்தருளல் வேண்டும். இதுவே யாங்கள் கருதியவரமென்று பிரார்த்தித்தார்கள். இவ்வாறு அவுணபாதகனுடைய கொடுமைகளையும், அவனால் தாங்களடைந்திருக்கின்ற இடுக்கண்களையும், உமாதேவியார் கேட்டமாத்திரத்தில் மனங்கொதித்து விழிகள் செந்தாமரைக் காடுபோற் செவப்பக் கோபங்கொண்டனர். அம்மாத்திரத்தில் தேவியாருடைய முகத்திலிருந்து கோடிசூரியர்கள் எக்காலத்தி லுதயஞ்செய்ததுபோல அளவற்ற பிரகாசங்களையுடைய திருமேனியும், சந்திரனைத்தரித்த சடாமகுடமும், துதிக்கரங்களோடுகூடிய ஐந்து முகங்களும், பத்துக்கைகளும், அக்கைகள்தோறும் படைகளும், கஸ்தூரிப்பொட்டிட்ட நெற்றியும், பூணூலணிந்த மார்பும், அளவற்ற நாகாபரணங்களும், பற்பல இரத்தினாபரணங்களும், துஷ்டசனர்களைச் சங்கரிக்கும்படியான இரவுத்திரமும், சிஷ்டசனர்களைப் பரிபாலிக்கத்தக்க கருணையும், விளங்கும்படியாக எண்குணமாயும், ஏகவஸ்துவாயுமிராநின்ற விநாயகமூர்த்தி திருவவதாரஞ்செய்தனர்.

அப்போது உமாதேவியார் கோபமாறி ஆனந்தங்கொண்டு விநாயகமூர்த்திக்கு வக்கிர துண்டரென்று திருநாமந்தரித்தருயாவரும்வியப்பெய்தும்படியாகப்பூசனைபுரிந்து வேதாகமங்களால் பலமுறை துதிசெய்து சிங்கவாகனங்கொடுத்து, சுவாமீ? இராக்கதர்களால்சுகமிழந்து வருந்துகின்ற தேவர்களைக் காப்பாற்ற வேண்டு மென்று பிரார்த்தித்த

னர். விண்டு முதலிய எல்லாத்தேவர்களும் வக்கிரதுண்ட மூர்த்தியை ப்பணிந்து துதிசெய்து, ஓவிக்கினராசரே! பத்தர்கட் குறியவரா யிரு க்கின்ற வித்தகரே! மறைகள் கடந்தவரே! புண்ணிய முதல்வரே? பூரணரே? எமது கர்த்தாவாகிய தேவரீர் பாதபங்கயங்களைத் தரிசித் துத்துதிசெய்ய அடியேங்கட்கு கிடைத்தபோதே பெரிதானபேறுகள் பெற்றோம், சுத்தபவித்திரர்களாயினோம். எம்மை யடைந்திருந்த துன் பங்க ளனைத்தும் நீங்கின. நாங்கள் வசித்திருந்த பதவிகளை மீட்டுங் கிடைக்கப் பெற்றனம் என்று சொன்னார்கள். இப்பால் வக்கிரதுண்ட மூர்த்தி தேவர்களுடைய குறிப்பைத் தெரிந்துகொண்டு உமாதேவி யாருடைய திருவடிகட்கு வந்தனைபுரிந்து யாவருஞ் சயசயவென்று துதிசெய்யும்படியாகச் சிங்கவாகனத்தி லாரோகணித்து அளவற்ற பூதசேனைகளோடுங் காசிநகரைநோக்கி எழுந்தருளினர். அவர் பின் னர் விசுவநாதரும் உமாதேவியாரும் விண்டுபிரமனாதிய தேவர்களும் முனிவர்கள் முதலிய சகலருங் காசிப்பட்டணத்திற் சென்றார்கள் முன்னர் துராசதனுடைய கொடுமைக்கு ஆற்றாதோடிய விசுவநாதர் முதலிய சகலரும விநாயகமூர்த்தியை முன்னிட்டுக் கொண்டுவந்ததை அவுணராசன் கேட்டுக் கோபங்கொண்டு தனது சேனைகளனைத்தையும் வெளிப்படும்படி முரசறைவித்தான். அம்மாத்திரத்தில் மழையொலி யைக்கேட்ட பயிர்களைப்போல அவனது நால்வகைச்சேனைகளும் உவ கைகொண்டு பூமிதேவிபொறுப்ப தரிதெனவந்து பணியும்படி சக்கிர வாளகிரியைச்சூழ்ந்த பெரும்புறக்கடல்போலத் தன்னைப் புடைசூழ உடனே தான் சகல வாயுதங்களையுஞ் சேகரித்துக்கொண்டு இரதத் திலேறி ச் சேனைபெருக்கோடு காசிநகரத்திற்கு வெளியே வந்

இப்பால் துராசதனோடுவந்த அவுணசேனைகளுடனே பூதசேனை கள் எதிர்த்து விசயலட்சுமி குதிகொள்ளும்படியாக அளவற்ற யுத் தங்களைச் செய்தார்கள். அப்போது யுத்தகளமுழுவதும் பிணங்கள் மலைமலையாகக் குவிந்தன. ஆகாயமுழுவதுங் கழுகுகளும் பருந்துக ளும் ' ந்தலிட்டுலாவின எங்கும் உதிரவெள்ளம் பெருக்கு இறைச்ச லிட்டது. அந்த யுத்தத்திலே பூதசேனைகள்மீறி அவுண சேனைகட் குவலிகுன்றியது. குடைகொடிமுதலிய சின்னங்கள் அறுபட்டன பூத சேனைகள்மீது துராசதன் பாய்ந்து, வில்லைவளைத்து ஒவ்வொரு தொ டையில் ஆயிரமாயிரமாக அளவற்ற பாணங்களைப் பிரயோகித்தான். அதனால்வீறியிருந்த பூதசேனைகட்கு வலிகுன்றியது குடை கொடிமு தலிய சின்னங்கள் அறுபட்டன. இரதகசதுரகமுதலியவைகள் சின்

னாபின்னமாயின. இவ்வாறு பூதசேனைகள் தமதுபடைகளும்நடைகளு மற்றுப் பூமியில் வீழவும், துராசதனானவன் சயமடைந்தவனாகக்கருதி மீட்டும் அதிவேகத்தோடு தனது இரதத்தைச் செலுத்திக் கொண்டு சென்று வக்கிரதுண்டமூர்த்தியை எதிர்க்கவந்தனன். அப்போது சுவாமி அத்துராசதனைப்பார்த்து, ஓ அவுணராசனே! அரிய தவங்களினால் சிவபிரானிடத்தில் மேலானவரங்களைப் பெற்றிருக்கின்றனை? அவைகளைப் பின்னர் காப்பாற்றிக் கொள்ளும் வகையை நாடாமல் வீணே ஒழிக்கும் வகைதேடினை இனிமேலும் அவ்வரங்களையொழித்துக்கொள்ளாமல் சுகமடையவேண்டிய மார்க்கத்தைச் சொல்லுகின்றோம் நினைவாய்க் கேழ்ப்பையாக சொர்க்கலோகத்தை முன்போலத் தேவர்கள் ஆளும்படிவிடுத்து, நீ நம்மைச் சரணடைந்து நன்மார்க்கத்திலிருக்கக்கடவை அவ்வாறிருப்பையாகில் இன்னும் அளவற்றகாலம் எல்லாப் போகபாக்கியங்களையு மனுபவித்துக்கொண்டு அதனால் விளைகின்ற ஆனந்தக்கடலில் விளையாடிக்கொண்டிருக்கலாம். இல்லையேல் இப்போது தேவர்களெல்லாம் உன்னால் எவ்வளவுதுன்ப மனுபவிக்கின்றார்களோ அவ்வளவு துன்பமும் இனி நம்மால் உன்னைவந்து சூழ்ந்துகொள்ளும் என்று திருவாய்மலர்ந்தனர். இவையனைத்துங்காய்ந்த ஊசி காதில் நுழைந்ததுபோல அவன்செவியிற் பட்டமாத்திரத்தில் அதிககோபங்கொண்டு, ஆஅ-ஆஅ பிள்ளாய்! நீ சொன்னவார்த்தைகள் மிகவழகாயிருந்தன, பராக்கிரமத்திற் சிறந்த விண்டுவே முதலியோர் என் கண்ணுக்கு முன்னர் நிற்கப்பயந்து ஓடிப்போயினர். பெரியோர்களிடத்திற் பழக்கமில்லாத பாலகனாதலினால் இளங்கன்றுபோல சிறிது மச்சமில்லாமல் என்னிடத்தில் இவ்விதவார்த்தைகளைக் கூறினை, அளவற்ற தவங்களைச்செய்து சிவபிரானிடத்தில் மேலானவரங்களைப் பெற்றிருக்கின்ற என்னை வெல்லுவது உன்னாலாகாது இனி தப்பிப்பிழைக்க வேண்டுமேயேல் உன்னை விடுகின்றேன், இப்போதே பின்பாராமற்சென்று உனது தாய் தந்தையரிடத்திற் சேர்ந்திடவையென்று சொல்லினன், அதை சகலலோகநாயகராகிய கர்த்தன் கேட்ட மாத்திரத்தில் கோபநகைசெய்து, மீட்டு மவனைப் பார்த்து அடாபேதாய? சிவபிரானிடத்தில் அரியவரங்களைப் பெற்றிருக்கின்றோமென்று கெர்வப்படவேண்டாம், அவர்கொடுக்கின்ற வரத்தினாலேயே கெட்டுப்போனவர்க ளனேகருண்டு அவர்களுள் நீயுமொருவனாயினை என்று சொல்லித் தமது சிங்கவாகனத்தை அவனுடைய தேருக்குநேராகச் செலுத்திக் கரத்திலிருந்த மழுவாயுதத்தினால் அவன் மார்பிறுருக்கினர். அத்தாக்கலினால் அவன் சரீரத்திற்கோ ருணமு

யில்லாமற் போனதினால் தாரகதன் இடியேற்றினைப்போலக்கர்ச்சித் துச்சீறிச் சுவாமியின்மீது தனது வாளாயுதத்தைச் சுழற்றி வீசினன் அவ்வாளைச் சுவாமி தமது மழுவாயுதத்தினால் விலக்கி அவன் நெற்றி யில் தமது காத்தினாற் குத்தித்திரும்பினர். அக்குத்தினால் அவனது நெற்றியினின்று உதிரவெள்ளம் பெருகியது. அப்போது தாரகதனு னவன் மூர்ச்சையாகிச் சற்றுநேரம் உயிர்நீங்கினவனைப்போ லிருந்து மீட்டுந் தெளிந்தெழுந்து யுத்தஞ்செய்ய வலியற்றுநாணித் தனதிருக் கையைநோக்கிச்சென்று ஆயாசந்தீர்த்துக்கொண்டிருந்தனன்.

யுத்தகளத்தி லிறந்து கிடக்கின்ற பூதர்களையெல்லாம் சுவாமியெ ழுப்பிக்கொண்டு தமது பாசறையிற் சேர்ந்தருளினர். அப்போது இருளைநீக்கி உலகத்தை விளக்கவல்ல சூரியனானவன் மேற்றிசைக்கட லிற் குளித்தனன். உடனே விண்ணவரைக் காக்கவந்த விநாயக மூர்த் தியினுடைய கிருபையைப்போல சோடசகலைகளோடு நிறைந்த சந்தி ரனானவன் உதயமாயினன். உலகத்துள்ள சராசரங்களெல்லாம் அவ் வெண்ணிலவில் மூழ்கித் திருமேனி முழுவதுந் திருவெண்ணீற்றினைய ணிந்த தொண்டர்கட் கொப்பாயின. இப்பால் தாரகதனானவன் தன து மந்திரிகளை யருகிலழைத்துவைத்து யானைமுகத்தோடு யுத்தஞ் செய்யவந்த ஓர் சிறந்த புருடனைச் சிறுவனென் றெண்ணினேன். பின் னரவனைக் கலந்து பார்க்குமளவில் அவனுக்கு நிகராயினோர் ஒருவரு மில்லை. வலியிற்பெரியவனாயினுஞ் சேனையிற் சிறிதேயுடையவனாயிருக் கின்றனன் யாமோ வலியினுஞ் சேனையினும் அவனினு மிகுந்தே யிருக்கின்றோம். ஒருவேளை யவனுக்கு யாம்தோல்வி யடையவுங்கூடும் ஆதலால் இனி நமக்குள்ள எல்லாச் சேனைகளையுங் கூட்டிக்கொண்டு நாளைய தினம் யுத்தத்திற்குப் போகவேண்டுமென்று சொல்லினன். உடனே அமைச்சர்கள் அவ்வாறே செய்யக்கடவமென் றெழுந்து, திரிலோகங்களினும் அட்டதிசைகளினுமுள்ள சகல சேனைகளும்வந்து சேரும்படி எங்குந் தூதர்களை யனுப்பினார்கள். அந்த தூதர்களால் அங் குமுள்ள எல்லாச்சேனைகளும் வந்து தாரகதனுடைய அரண்மனைவா யிதலை நெருங்கின அப்போது யுத்தகலங்காரத்தைக் காணவருவான் போலச் சூரியனானவன் கீழ்த்திசைக்கடலி லுதயமாயினன்.

இப்பால் தாரகதனானவன் நித்தியவிதிகளை நிறைவேற்றிக்கொ ண்டு கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, கைப படை, மூலப்படை என்னு மறுவகைப் படைகளும், மந்திரியர், கரு மாதிகாரர், சுற்றத்தார், கடைகாப்பாளர், நகரமாக்கள் படைத்தலை

வர், இவுளிமறவர், யானைவீரர் என்னு மெண்வகைத் துணைவர்களும், தக்கமுறைமைப்படித் தன்னைப் புடைசூழ்ந்து வரச்சென்று யுத்தகளத்தை படுத்தனன் விநாயகமூர்த்தியும் பூதவீரர்களுடனே வந்து சேர்ந்தனர். இப்பால் துராசதனோடுவந்த பெருஞ்சேனைகளைச் சுவாமி பார்த்து இவையனைத்தையும் ஓர் கணப்போதில் யாமே வெல்லுது மென்றுகருதி, தம்மைச்சூழ்ந்துவந்த தேவர்களும் பூதர்களு மருட்கையடையும்படி சிலவடிவம் சிங்கவாகனத்துடனே பத்து கைகளும் சிலவடிவம் மயில்வாகனத்துடனே ஆறுகைகளும், சிலவடிவம் பெருச்சாளிவாகனத்துடனே நாலுகைகளும், சிலவடிவம் மான்வாகனத்துடனே இரண்டுகைகளும், இவ்வாறு பற்பலவாகனங்களிற் பற்பலவடிவங்களாக ஐம்பத்தாறு பேதமாகத் திருவுருக்கொண்டு துராசதனுடைய சேனைசமுத்திரத்திற் புகுந்து சமர்விளையாட்டினைச் செய்தனர் அப்போது அச்சேனை வீரர்களின் அளவற்றபேர் வீரசொர்க்கத்தை யடைந்தார்கள். அளவற்றபேர் சோர்ந்து விழுந்தார்கள். அளவற்ற பேர் பாதலலோகத்தில் மறைந்தார்கள். அளவற்றபேர் திசைதிசைக ளிலோடிப் பதுங்கினார்கள் இவ்விதமாகத் தனது சேனைகளனைத்தும் அழிகின்றதைத் துராசதன்பார்த்து நம்மவருமா இப்பாடு படுவதோ வென்று கோபித்து, அக்கினியாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகித்தனன். அவ்வஸ்திரமானது எங்கு மனற்சுவாலைகளைவீசிக்கொண்டு பூத சேனைகளெல்லாம் நடுங்கும்படி ஆக்ரமித்துவர அதை சுவாமி பார்த்து நகைத்துப் பர்சனியாஸ்திரத்தை யெடுத்து விடுத்தனர். அம்மாத்திரத்தில் அவ்வத்திரமானது அளவற்ற மின்னல்களையும் இடிகளையும் பெருக்கி சத்தமேகங்களும் கலந்து வருஷிப்பதுபோல மழைகளைச் சொரிந்து அக்கினியாஸ்திரத்தினுடைய வலியையடக்கியது. அதைக் கண்ட துராசதன் வாயுவாஸ்திரத்தை யெடுத்து விடுத்தனன் அவ்வஸ்திரமானது பர்சனியாஸ்திரத்தா லுண்டான மேகங்களை யெல்லாஞ் சின்னபின்னப்படுத்தி எங்கும் பிரசண்டமாருதத்தைப் பெருக்கிக் கொண்டுவர, அதை சுவாமிகண்டு பர்வதாஸ்திரத்தை யெடுத்துப் பிரயோகம் பண்ணினர். அப்பர்வதாஸ்திரம் வெளிப்பட்ட மாத்திரத்தில் மந்தரம் இமயம் முதலிய அளவற்ற பாவதங்களை யுண்டாக்கி பூமி தொட்டு ஆகாயவரையில் முட்டி வாயுவாஸ்திரத்தின் வலியைத்தொலைத்தது. பின்ன ரவுணராசனானவன் இனியிவனை உருத்திரப்படையினால் வெல்லுவே மெனக்கருதி அதனைச் சோடசவுபசாரங்களோடு பூசித்துப் பிரயோகித்தனன். அப்படை வெளிவந்த மாத்திரத்தில் வீறி வானத்தெழுந்து பர்வதாஸ்திரத்திலுடைய வீறுப்பினையடக்கிப் பூத

வீரர்களுடைய சமூகத்திற்புகுந்து சின்னாபின்னமாக்கியது. உடனே சுவாமியுந் தம்மிடத்திருந்த உருத்திரப்படையினை விடுத்தனர். பின்னர் இரண்டு உருத்திரப்படைகளுங்கூடி அளவற்ற போர்களை விளைத்தன. அதனால் அண்டவடுக்குகளெல்லாங் குலைந்தன. சத்த சாகரங்களும் வற்றிப்போயின. பூதலத்திலுள்ள சராசரங்களெல்லாம் தீயின. இப்பால் அவ்வத்திரங்களிரண்டும் ஒன்றோடொன்று நெடுநேரம் யுத்தஞ்செய்து சமர்க்களத்தில் இறந்து கிடக்கின்ற சேனைகளையெல்லாம் விரைவிலெழுப்பித் தம்மையேவிய தலைவர்களிடஞ்சென்று சேர்ந்தன.

பின்னர் அவுணராசனானவன், அரியதவத்தினால் கிடைத்திருந்த உருத்திரப்படையும் வெற்றிபெறாமற் றிரும்பியதை யெண்ணி யெண்ணி யேக்கமுற்று மானமுங் கோபமும் மேலிட்டவனாகித் தன்னுருவத்தை மறைத்துப் பற்பலமாயைகளை விளைத்தனன். அவன் மாயைகளையெல்லாம் ஞானசொரூபியாகிய எமது கர்த்தன் ஓர் நொடிப்போதிலொழித்தருளினர். இவ்வாறு துராசதனானவன் அனேக அஸ்திரங்களை மாறிமாறி விடுத்தும் அளவற்ற மாயைகளைச் செய்தும் பயன்பெறாமற் போனதினால், மனம் நொந்து இப்பாலனாகிய வக்ரதுண்டனை வெல்லலொன்றினுங்கூடாது ஆதலால் இனியாம் தப்பி மறைந்து போவதே உத்தமமென்று தீர்மானித்தான். அதை சுவாமியறிந்து அவனுக்கு சிவபிரான் கொடுத்தருளிய வரத்தையும் யோசித்து அண்டமுகடுடையளாவத்தக்கதாக ஓர் பேருருவோடு மவனெதிரில் வந்து அவனுச்சியில் ஒருபாதத்தையூன்றி மற்றொருபாதத்தைக் காசித்தலத்தில் வைத்து, ஓ அவுணராசனே! நீ சிவபெருமானிடத்தில் அழியாவரம்பெற்றிருப்பதினால் இக்காசிபட்டணத்து மேற்றிசை வாய்களில் எக்காலத்தும் நமது பாதத்தின்கீழிருந்து இவ்விடத்தில் பழிபாதகங்களைச் செய்து வருகின்ற துட்டர்களை யடக்கிக்கொண்டிருக்கக் கடவையென்று அநுக்கிரகஞ் செய்தனர் மேலான தவங்களைச் செய்து அரியவரங்களைப் பெற்றிருக்கின்ற துராசதனானவன் தனது சிரத்தில் விநாயகமூர்த்தியினுடைய திருவடியை வைக்கப்பெற்றதினால் உடனே சகல மாயாபாசங்களினின்று நீங்கி மெய்ஞ்ஞான செல்வத்தைப் பெற்று நித்தியானந்த சொரூபனாகி அவ்வவர்கள் செய்து வருகின்ற தீமைகளையெல்லாம் நிவர்த்திசெய்துக்கொண்டிருந்தனன். தேவர்கள் கற்பகமலர்களைச் சொரிந்தார்கள். ஆகாயத்தில் பஞ்சவாத்தியங்களு முழங்கின. முனிவர்கள் வேதாகமங்களினாற் றுதிசெய்தார்கள். மற்றுமுள்ள மெய்யடியார்களெல்லாம் விநாயகமூர்த்தியை அளவற்ற துதிகளினாற் கொண்டாடி ஆனந்த மெய்தினர். சிவபிரான்முன்போலவே உமா

தேவியாரோடு காசிநகரத்து ளிராநின்ற திருக்கோயிலில் எழுந்தருளி பிரமனுதியர் புடைசூழ்ந்து வணங்கும்படி வீற்றிருந்தனர். திரிலோகங்களிலு முண்டாயிருந்த எல்லாத் தீங்குகளு மொழிந்தன. எங்கும் வேதாகமவிதிகள் தழைத்தோங்கின. ஆங்காங்கு யாகாதிகிரியைகள் நிறைவேறின. இந்திரன் முதலிய தேவர்கட்கு இடைவிடாது அவிர்ப்பாகங் கிடைத்துவந்தன. வன்னி மந்தாரை அறுகு இவைகளினல் தேவர்கள் முனிவர்கள் முதலியயாவரும் விநாயகமூர்த்தியை வழிபட்டு அவரது பெருங்கருணையினுற் றங்கள் பதங்களை யதாப்பிரகாரமடைந்து ஆனந்தமெய்தினூர்கள். தருமமுதலிய நான்கு பொருளையுமெளிதிற்றரவல்ல எமது கர்த்தனுக்குச சகலரும் உடுண்டிவிநாயகரென்னுந் திருநாமத்தைச்சாத்தித் துதிசெய்தார்கள். அதுமுதல் அக்காசி நகரமும் உடுண்டி நகரமென்னும் மற்றொரு பெயரையும் வகித்திருக்கின்றது. இஃதன்றி விசுவநாதமூர்த்தி சந்நிதிக்கெதிரே ஐந்துமுகத்தோடுகூடிய வக்கிரதுண்டமூர்த்தி யமர்ந்தருளினர். கோயிலுக்குச் சத்தாவரணமாக நூர்சுற்றிலும் மற்ற ஐம்பத்தாறு மூர்த்திகளும் வதிந்தருளினர். ஆக ஐம்பத்தாறு மூர்த்திகளையும் நாளதுவரையில் தேவர்கள் முதலிய சகல வான்மாக்களும் பூசித்துப் பெறத்தக்க பேற்றினையடைந்து வருகின்றார்கள். இந்த ஐம்பத்தாறு மூர்த்திகளில் ஒருமூர்த்தியை விதிவிலக்கொன்றாந் தேறுதபெண்கள் பூசித்தாலும் அவர்கள் சகல துன்பங்களினின்றும் எளிதில் நீங்கி எல்லாப போகபாக்கியங்களையும குறைவறப்பெற்று சுகமாக வாழ்ந்திருப்பார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே? துராசதனுடைய ஆண்மையை யடக்கும்படி உடுண்டிவிநாயகர் திருவவதாரங் கொண்டருளிய அவரே மற்றொருபோது திவோதாசனென்னு மோரரசனிடத்திற்சென்ற ஓர் திருவிளையாடலுண்டு அதனையும் பாந்தமாகச் சொல்லுகின்ரும் கேட்பீர்களாக. பூர்வத்திலே பாற்பமெனச்சொல்லுமோர் கற்பகமிருந்தது அக்கற்பத்தில் சுவாயம்பு மநுவென்னுமோர் சக்ரவர்த்தியிருந்தனன். அவன் இறந்து போயினபின் அறுபதினுயிரவருடம மழைபொழியாமல் சகல தேசங்களுங் காடாகியழிந்தன. இவ்வாறு அழிந்துபோகலும் பிரமனவன் மனமிரங்கி இனி இவ்வுலகங்களைப் பாதுகாக்க ஓரரசனை நியமிப்பானுகிப் பூவுலகமுழுவதுந் தேடிச் சென்றனன். அவ்வாறு செல்லுகையில் காசிநகரத்தில் அரசகுலத்தினனுன இரிபுஞ்சயனென்னு மொருவன் அரிய தவத்தினைச் செய்து கொண்டிருக்கக் கண்டு அவனருகிற் சென்று அவன தவத்தைப் புகழ்ந்து, அரசனே! பூமியில் அரசாட்சி செய்வாரின்றிச் சகலதேசங்

களுங்காடாயின எல்லாப்பொருள்களு மழிந்துபோயின ஆதலால் நீ உனது செங்கோலைக்கொண்டு அரசாட்சி செய்யவேண்டும் உனக்கு ஆதிசேடன் தனதுபுத்திரியாகிய அநங்கமோகினியை விவாகஞ்செய்து கொடுப்பன் தேவர்கள் கற்பகவிருட்சத்திலிருந்து அனேக ஆடையாபரணதிகளைக் கொடுப்பார்கள் அப்போது நீசகலபோகபாக்கியங்களையுங் குறைவின்றி யனுபவித்திருக்கக்கூடும் உன்னையாவருந் திவோதாசனென்று அருமைப்பெயரிட் டழைப்பார்கள் என்று பற்பல சந்தோஷவார்த்தைகளைக்கூறி அப்போதே அவனுக்கு அரசாட்சிக்குரிய கிரீடத்தினையுந் தரித்தனன். அதற்கு இரிபுஞ்சயன் பிரமனைப்பணிந்தெழுந்து, சுவாமி! தேவர்கள் காசிநகரத்தைவிடுத்து அப்பாற்போனாலன்றியான் உலக அரசாட்சியினுக் குடன்படேனென்று சொல்லினன். அதற்குப் பிரமன் அவ்வாறே செய்யுமென்று ஒப்புக்கொண்டு வழக்கப்படி விசுவநாதமூர்த்தியைத் தரிசிப்பதற்கு அவரது சன்னிதானத்திற்குச்சென்றனன். அப்போதுசிவபிரான் அளவற்றநாளாய்த்தவஞ் செய்துக்கொண்டிருக்கின்ற மந்தரகிரிக்கு அனுக்கிரகஞ் செய்யும்படி உமாதேவியாரோடு இடபவாகனத்தின் மீதெழுந்தருளி விநாயகர்-சுப்பிரமணியர் நந்திகேஸ்வரர் முதலிய தலைவர்கள்பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்கள் பிருங்கிமுதலிய கணநாதர்கள் இந்திரன்முதலிய திக்குப்பாலகர்கள்மாதேவர்முதலிய பதினொருருத்திரர்கள் அமரர்முதலிய பதினெண்கணத்தர்கள் முப்பத்துமுக்கோடிதேவர்கள் எண்பத்தெண்ணாயிரம் இருடிகள் புடைசூழ்ந்துவரவும் இடக்கை-உடக்கை உடுக்கைமுதலிய தப்பட்டைவாத்தியங்களையுட கொடி-கொடை சாமரை ஆலவட்டமுதலி● சின்னங்களையும் பூதகணங்களேந்தி இருமருங்கினு மாராவாரித்து நடக்கவும் இவ்விதவைபவத்தோடு அம்மந்தரகிரிக்கு நேராகச்சென்றனர். அப்போது அம்மந்திரகிரியும் அதனருகிற் றவஞ்செய்துகொண்டிருந்த மரீசிமுனியும் சுவாமியை எதிர்கொண்டு பணிந்து துதிசெய்தார்கள் அவ்விருவரில் சிவபிரான் மரீசிமுனியைப் பார்த்து உனக்குவேண்டிய வரத்தினைக்கேளென்று திருவாய்மலர்ந்தனர். அதற்கம்முனிவர் சுவாமீ? அடியேற்குத் தேவரீருடைய திருவடிகளில் இடைவிடாதபத்தியும் சிவலோகவாசமுந் தரவேண்டுமென்று பிரார்த்தித்தனர். உடனே பரமசிவகடாட்சத்தால் அவரெண்ணத்தின்படி ஓர் விமானம் வர அதில் அம்முனிவர் ஆரோகணித்துச் சிவலோகம்போய்ச் சேர்ந்து வாழ்ந்திருந்தனர்.

இப்பால் சிவபிரான் மந்தரகிரியைப்பார்த்து உனக்கு வேண்டிய வரம் யாதென்று கேட்டனர். அதற்கு மந்தரகிரியானது மீட்டும்

பணிந்தெழுந்து, சுவாமீ! எல்லாத்தலங்களினுஞ் சிறந்த காசித்தலத்திலே சுவாமிகள் எவ்வாறு வாசஞ்செய்கின்றீரோ அவ்வாறே குசத்தியிலிருக்கின்ற அடியேனிடத்திலு மெழுந்தருளி சகலருக்கும் வேண்டிய வரங்களை யனுக்கிரகஞ் செய்துகொண்டு அடியேற்குப் பெருமையையும் மகிமையையுங் கிருபைசெய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தது. அத்தருணத்தில் பிரமனும் சுவாமியைப் பணிந்தெழுந்து, கர்த்தனே! உலகத்தில் அரசாட்சி செய்பவரில்லாமல் அறுபதினாயிரவருடம் மழையில்லாமல் சகலதேசங்களும் காடாயின. அதில் எவ்விதத்திலேனும் உலகத்திற்கு ஓரரசனை நியமிக்கவேண்டுமென்று கருதிச் செல்கின்ற அடியேன் காசித்தலத்தில் அரிய தவத்தினைச் செய்துகொண்டிருந்த இரிபுஞ்சயனென்னு மோரரசனைக் கண்டு அரசாட்சிசெய்ய வைத்தேன். அவனோ காசித்தலத்தில் தேவர்களுடைய சஞ்சாரமில்லையாகில் இவ்வரசாட்சிக் குடன்படுவேனென்றனன். அதற்கடியேன் அவ்வாறே செய்யுதுமென்று சொல்லி சுவாமிகளிடத்தில் விண்ணப்பஞ்செய்துகொள்ள வந்தனன். இவ்வுலகம் விர்த்தி யடையுமாறும் காசித்தலத்தில் தேவர்களுடைய சஞ்சாரமொழியுமாறும் சுவாமிகள் மந்தரகிரிக்கு அவ்வரத்தினைக் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். அதற்குமேல் சிவபிரான் மந்தரகிரிசெய்த அரியதவத்தினையும் பிரமதேவனுடைய விண்ணப்பத்தையு நிதானித்து அவ்வாறே மந்தரகிரிக்கு வரங் கொடுத்தருளி, தம்மோடுவந்த தேவர்களுடன் அக்கிரியிற்றானே யெழுந்தருளியிருந்தனர், அன்றுமுதல் காசித் தலத்தில் தேவர்களுடைய சஞ்சாரமில்லாதிருந்தது திவோதாசனும் அக் காசித்தலத்திற்றானே யிருந்து ஆதிசேடன் புத்திரியாகிய அனங்கமோகினி யென்பவளை விவாகஞ்செய்து தேவர்கள் தந்த கற்பகவிருட்சத்தினுடைய ஆபரணதிகளைத் தரித்துக்கொண்டு தனது கீர்த்தியானது எண்டிசைகளிலும் பரவும்படியாக நீதிவழுவாமல் செங்கோல் செலுத்தித் தவந் தானமுதலிய எல்லாத தன்மங்களையும் நடாத்தி அரசாட்சி செய்துவந்தனன்.

அவன் செய்துவந்த அரசாட்சியினால் திங்கடோறு மும்மாரிபெய்தன. எங்கும் பயிர்வர்க்கங்கள் செழித்தன. ஊர்கடோறுங் குடிகள் தழைத்தோங்கின. யாகாதிகிரியைகள் குறைவின்றி நடந்துவந்தன. தேவர்கட்குச் சதாகாலமும் அவிர்ப்பாகமுங் கிடைத்து வந்தது. எல்லாவான்மாக்களும் ஆனந்தமயமாகி யிருந்தார்கள். பிச்சுமழை-மழையின்மை-பிருகாற்று-தன்னரசு-வேற்றரசு-துன்மரணம்-பாவவினை - கள்வர்-தரித்திரர்-பிணியாளர்-விதவையர்-மலடர் முதலிய குற்றங்களினை

த்தும் பெயரில்லாமலொழிந்தன காளுக்குநாள் தகுதியான காரியங்களை தளைத்தோங்கின. இதல்லாமல திவோதாசனுவன் கங்கையில்வந்து ஸ்நானஞ் செய்தபேர்களை யழைத்து உடனே ஸ்நானஞ் செய்வித்தல் கோவிலிருக்கின்ற விசுவநாதர் உடுண்டி விநாயகர்-சுப்பிரமணியர்-திருமால் - வயிரவர் தண்டபாணி முதலிய மூர்த்திகளைத் தொழாதிருக்கின்றோரை யழைத்துப் பகுதியாய்த் தொழச் செய்வித்தல் முதலிய நன்மார்க்கங்களையுங் கடைப் பிடித்தனன். இவ்வாறு திவோதாசனுவன் அளவற்றநாள் தனது செங்கோன் முறைமையில் வழுவாதபடி அரசாட்சி செய்துவந்தும் தேவர்கள் காசியிற் சஞ்சாரமில்லாதிருப்பதைக் குறித்து மனங் தளர்வுற்று இயாவருக்குங் குலக்குருவாகிய பிரகஸ்பதி தேவரிடத்திற் சென்று பணிந்தெழுந்து சுவாமீ! இனி அடியேங்கள் காசித்தலத்தில் எவ்வாறுசஞ்சரித்திருக்கக்கூடுமென்றுகேட்டார்கள். அதற்குப் பிரகஸ்பதி தேவராலோசித்து, அன்பர்களே! அவ்விடத்தில் நடந்துவருகின்ற நன்மார்க்கங்கள் வறுமாயின் உடனே எல்லா மாறுபாடுகளுமுண்டாம். அப்பால் தடையின்றிப் போகக்கூடுமென்று சொல்லினர். அதைத் தேவேந்திரன் கேட்டு உடனே அக்கினிதேவனைக் கூவி நீ இன்றுமுதல் காசியில் அக்கினி யிலாதபடி செய்யவேண்டுமென்று சொல்லினன் அவ்வாறேயவன் செய்ய, முதலுல் வேள்வியாதிய கிரியைகள் நடந்துவந்தற்கு வழியில்லாமல் முனிவர்களெல்லாம் திரண்டோடித் திவோதாசனிடத்தில் முறையிட்டார்கள். செங்கோன் முறையிற் றவறாத திவோதாசன் அதைக் கேட்டமாத்திரத்தில் மனந்தளர்ந்து தேவர்களெல்லாங் கூடிச்செய்த சூழ்ச்சியாகுமென்று தீர்மானித்து! ஓ அருந்தவர்களே! இவ்வக்கினி யொன்றேயல்லாமல் மழையையுங் காற்றையும் சூரியசந்திரரையும் அவ்வாறே வசிக்கவொட்டாமற் செய்யினும் செய்யட்டும் நானே யாவுமாயிருந்து தருமநெறிகெடாதவகை செய்விக்கின்றேன் நீங்களிருக்கையிற் சேருங்களென்றனன். அதுகேட்ட முனிவர்களெல்லாங் களிகொண்டு நடந்தார்கள், பின்னர் திவோதாசனுவன் தானே அக்கினியாயும் மேகமாயும் காற்றாகியும் சூரியசந்திரராகியு மிருந்து அவைகளினின்று தானும் வேறாகி அரசாட்சி செய்து வந்தனன்.

கேட்டீர்களா சவுனகாதி முனிவர்களே! செங்கோன் முறைமையிற்றவறாத அரசனிருப்பானாயின் இப்பூமிதேவிக்குக் கிடைத்தற்கரிய பொருள் என்ன விருக்கின்றது. இப்பால் திருவோதாசனுவன் உலகம் முழுவது மளிக்க வல்ல அரசனும் அவ்வுலகத்திற்கு வேண்

டும்பொருள்களை விளைப்பவனுந்தானே யாகியிருத்தலும் தேவர்களெல்லாம் வெட்கித் தலைகவிழ்ந்தார்கள் காசித்தலத்திலுள்ள எல்லாவுயிர்களுங் களிப்படைந்தன. இவ்வாறு எண்பதினாயிரவருடங் கடந்தபின்னர் விசுவநாதமூர்த்தி மந்தரகிரியை வெறுத்தவராய்க் காசித்தலத்தை நினைந்து தேவர்களைகூவி இனியாம் காசித்தலத்தில் வசிக்கும்படி எண்ணினோம், ஆதலால் நீங்களவ்விடஞ் சென்று திவோதாசன் செங்கோல் முறைமையிற் றவறும்படி செய்யுங்களென்று கட்டளையிட்டருளினர், அக்கட்டளையைத்தேவர்கள் சிரமேற்கொண்டு யாவருந் தனித்தனி வேறுவே றுருவங்களை யடைந்துசென்று தம்மாற்கூடிய முயற்சிகளைச் செய்தார்கள். அவ்வாறு செய்தும் திவோதாசன் தருமநெறியிற் கெடாதிருப்பக்கண்டு மனந்தளர்ந்து சிவபிரான்பணித்தருளிய கட்டளையை முடித்திலோமே! அந்தோ! இதென்னபாவமென்று துக்கித்து அப்பிழை நீங்குமாறு பாவருந்தங்க ளபிமானத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்தார்கள் அக்காரணத்தைச் சிவபிரானறிந்து யோகினிகளை விடுத்தனர். அவர்களும் அத்தேவர்கள் போலாயினர். பின்னர் சூரியனையேவினர் அவனும் அவ்வாறேயாயினன். அதன்பின் பிரமனைவிடுத்தனர் அவனும் அவ்வாறே யாயினன் அப்பால் கணநாதர்களை யெல்லாம்விடுத்தனர் அவர்களும் அவ்வாறே தம்மாற்கூடிய உபாயங்களைச் செய்துங் காரியம் நிறைவேறாமற் கவலைகொண்டு முன்சென்றவர்களைப்போல தாமுந் தவத்திலிறங்கினார்கள் இவ்வாறு தம்மேலேவப் பட்டவர்களெல்லாம் மீட்டுந் திரும்பாமற் றவஞ் செய்திருப்பதைச் சிவபிரானறிந்து இக்காரியத்தைமுடிக்கவல்லவர் விநாயகமூர்த்தியேயென்று தமக்குள் நிச்சயித்து உடனே உடுண்டி விநாயகரிடத்தில் தமதெண்ணத்தை யறிவித்தனர். அதற்கெமது கர்த்தனிசைந்து இலக்கணவடிவின் மேற்பட்ட பேரழகினை வாய்ந்த ஓர்பாலசோதிடராய்த் திருவுருக்கொண்டு கரகமலத்தில் ஓர் புத்தகத்தினைத்தாங்கி திரிகாலவர்த்தமானங்களையு மறிந்து சொல்லவல்லவராய்க் காசிநகரத்துட் சென்று அவ்வவர்களுடைய நித்திரையில் சிலபயங்கரமான சொப்பனங்களை யுண்டாக்கியும் அக்கனவைப் பகலில் அவர்களிடந்தோறுஞ் சென்று தாம்சோதிடத்தினா லறிந்து சொல்பவர்போல ஒன்றினும் பிழையாமற் சொல்லியும், இக்கனவினால் இன்னபயன் கூடுமென்று உரைத்தும், அவ்வாறே பலிக்கும்படி செய்வித்தும், அந்நகரத்திற்சில உற்பாதங்களை யுண்டாக்கி இன்ன உற்பாதத்தால் இன்னகெடுதி நேருமென்று போதித்தும், ஆகாயத்தி லிருக்கின்ற கோள்களை மாறுபடுத்தி அதையாவருக்குங் காட்டி இன்னமா

றுபாட்டினால் இன்னதாழ்வுகள் நேருமென்றுசாற்றியும், இக்கனவுகளினாலும் உற்பாதங்களினாலும் கோள்களுடைய மாறுபாடுகளினாலும் இந்நகரம் உண்மையாய் அழிந்துவிடும் ஆதலால் நீங்களனைவருந்தப்பிப்பிழைக்கவேண்டுவீரேல்இப்போதுவேறுதேசங்களிற்சென்றுவாழக்கடவீர்களென்று அஞ்சுவித்து, அந்நிமிடத்திலவ்வூரினின்றும் ஓடச்செய்தும் அஞ்சி ஓடிப்போனவர்கள்போக நின்றவர்கள் இனிநமக்கு என்னதீங்குவிளையவிருக்கின்றதோவென்று பயந்துசெய்யத்தக்க நற்கருமங்களில் மனதைச் செலுத்தாமல் மாறுபடும்படி நடாத்தியும் இவ்வாறுநகரத்தினரையெல்லாம்பயந்தோடவும்முறைமைதப்பவுஞ் செய்தபின்னர், திவோதாசனுடைய அரமனையில் அந்தப்புரத்தில் நுழைந்து அங்குவசித்திருக்கின்ற இராச ஸ்திரீகளிடத்திற் றனித்தனிசென்று அவர்கட்கு முன்னடந்ததையும், இப்போது நடக்கின்றதையும், இனிநடக்கப்போகின்றதையும், உள்ளதுள்ளபடியே சொல்லியருளினர். அவர்களுள் லீலாவதியென்பவள் சோடசவுபசாரங்களோடும் பூசித்து நிறுதிக்கொண்டு அப்போதே ஓர்தூதுவனைக்கூவி வேதவாக்கியம்போலயாவையும் உள்ளபடியறிந்துசொல்லவல்ல ஓர்சோதிடர் இங்ஙனம்வந்திருக்கின்றாரென்று அரசனுக்கறிவிப்பாயென வாக்கியாபித்தனள். அவனவ்வாறேசென்று அறிவிக்க, அரசன் அவனைப்பார்த்து அச்சோதிடரை இங்ஙனமழைத்துவாருங்களென்று கட்டளையிட்டனன். அக்கட்டளையைக் கேட்டமாத்திரத்தில் எமதுகர்த்தராகிய சோதிடர் அரசன் கொலுச்சபையிற்சென்று கண்டவுடன் அவன்மனமுழுவதுங்குழையும்படி பிரபஞ்சமாயையினை நீத்த துறவினரைப்போலக் குளிர்ந்த முகத்துடனே அவனெதிரில் நின்றனர் திவோதாசன் சுவாமியின் வரவைக் கண்டமாத்திரத்தில் எதிர்கொண்டழைத்துவந்து ஓராதனத்திலிருத்தி மிக்கபேருவகையோடும்பணிந்து துதிசெய்துசுவாமீ! இதுகாறும் இவ்வுலகத்தைப் பஞ்சேந்திரியம்போலப் பாதுகாத்து அரசாட்சிசெய்துவந்தேன், அவ்வரசாட்சியில் அடியேற்கிப்போது வெறுப்புண்டாயிற்று. ஆதலால் இவ்வாட்சி என்னை விட்டொழியுமோ அல்லது முன்போலவே இருக்குமோவென்று மனதிற்சிறிதுங் கவடமில்லாமற் கேட்டனன். அதற்கு வேதநெறியிற் பிழையாத மெய்யடியார்கட்கு நற்கருமங்களையே சாற்றவல்ல பெருங்கருணை வாய்ந்த விநாயகமூர்த்தியானவர் தாமே உத்தரங்கூறுது அரசனே! இத்தினத்திற்குப் பதினேழாம்நாள் ஓர் அந்தணர்வருவர் அவரே

நீகேட்ட கேழ்விக்கு மறுமொழி கூறுவர். அவர்சொல்வதை நீயன் போடுகேட்டு நடந்துகொள்ளுகவென்று சொல்லினர். அவ்வாக்கி யத்தை அரசன் செவிக்கினிமையாகக்கொண்டு சுவாமிக்கு விடை கொடுத்தனுப்பி அந்தப்புரத்திற் சென்றனன். இப்பால் உடுண்டி விநாயகர் காசிநகரத்திற்சென்று நடாத்திய திருவிளையாட்டினையும், திவோதாசனுக்கு ஓரந்தணன்வருவானென்று உணர்த்திவந்த காரி யத்தையும், சிவபெருமா னுணர்ந்து விண்டுவை அந்தணராகப்போ கும்படி உத்தரவுசெய்தருளினர் உடனே விண்டுவானவர் பவுத்த னுகவும் இலக்குமி கவந்தியாகவும் உருக்கொண்டு இருவருங் காசி நகரத்திறசென்று பவுத்தனுகிய விண்டுவானவர் ஆடவர் கூட்டத் துட்புகுந்து நம்மைப்போல உயிர்வைத்திருக்கின்ற பசுக்களையும் ஆடுகளையுங் கொலைசெய்து வேள்வி நடத்துகின்றீர்களன்றே அவ் வேள்விகளினுல் வரும் புண்ணியமானது அக்கொலையினுல் நேரும் பாவத்திற் கெதிர்நிற்கவல்லதோ கொலையானது இம்மையிற் சகல புண்ணியங்களையுங் கெடுப்பதன்றி மறுமையில்நரகத்தினையும்விளை க்குமென்று அறியீர்களோ? பாவகருமங்களைப் புண்ணியகருமங்க ளென் றெண்ணி நடத்துவோர்க்கு அருள் எங்ஙனங்கிடைக்கும்? அந்தோ கொலையே சகல பாவங்கட்குந்தாய்தந்தையாக சகலசாத் திரங்களும் முறையிடுகின்றனவே. என இவ்வாறு பசுத்தம்ப முத லியவைகளைச்செய்து யாகாதி கிரியைகளை நடத்திவருகின்றவர்க ளுடைய மனமெல்லாம் மாறுபடும்படியாகப் போதித்து, அவர்கள் செய்துவருகின்ற மற்றெல்லாக் கருமங்களினும் பலகுற்றங்களைக் காட்டிவந்தனர். கவந்தியாகிய இலக்குமியானவள் மங்கையர் கூட் டத்துட்புகுந்து பிரமன் புத்திரர்களாகிய காசிபர்மரீசி ர்கள்முத லாயினேர் ஒருவருக்கொருவர் சகோதரர்களாகியிருந்தும் தக்கனு டைய புத்திரிகளைமற்றையர் விவாகஞ்செய்து தேவர்கள் முதலிய சகலரையும் பெற்றுமேன்மை யடைந்தார்கள். அவர்களே அவ்வா று நீங்கள் வெவ்வேறு முறைநிலை வைத்துக்கொண்டு இன்ப மனு பவிக்கின்றீர்கள் முறைமைபாராட்டி யனுபவிப்பதினு லுண்டாகு மின்பமும் ஓரின்பமோ? உயிர்மக்களாயினேர் ஒருகாலத்துஒருபொ ருளால் ஐம்புலனு நுகர்தற் சிறப்புடைத்தாய் இன்பத்தைக் காத் தற்பொருட்டு முறைநீப்பரேயன்றி பலகாலத்து பலபொருளால் பலதுன்பங்களையும் விளைப்பதாகிய முறைகாத்தற்பொருட்டு இன் பத்தை நீக்குவரோ? ஐயோ இதென்னபாவம்! நினைத்தவர்களுடனே கூடியனுபவிக்கின்ற இன்பமே யின்பம். நினையாதவர்களிடத்தில்

முறைமைபாராட்டிக் கூடுவதினால் பலதுன்பமே. என இவ்வாறு அக்கினிசாட்சியாய் விவாகஞ்செய்த கணவர்களையேயன்றி ஏனையோரை எள்ளத்தனையும் நினையாத மங்கையரெல்லாங்கற்புநிலைமையினின்று கலையும்படியாகப் போதித்தனள். இவ்விருவர்களுடைய போதனையினாற் காசிநகரத்திலுள்ள ஆடவர்களும், ஸ்திரீகளுந்தந் தம்நெறிகளிற் பிறழ்ந்து பிரஷ்டத்துவ மடைந்தார்கள். இவ்வாறு பதினாறுநாள் சென்ற பின்னர், பதினேழாம்நாள் காலையில் திவோதாசனெழுந்து இத்தினம் ஓரந்தணர் வருவாரென்று சோதிடர் சொல்லிப்போயினரேயெனத் தன்னது மனதில் நினைத்தனன் அப்போதே அவ்வந்தணராகிய விண்டுவானவர் அரசனெதிரிற்போய் நின்றனர். அவரைக்கண்டவுடன் அரசனானவன் ஆசனங்கொடுத்திருக்கச்செய்து சாஷ்டாங்கமாகப் பணிந்தெழுந்து இருகரங்களையுங்கூப்பி எதிர்நின்று சுவாமி! தேவரீர விண்டுவென்று யானறிந்துகொண்டேன், தேவரீருடைய வஞ்சகத்தொழிலினால் இம்மேலான காசிநகரத்திலுள்ளோர் மாறுபட்டு நெறிபிறழ்ந்தாரகளென்று மறிந்தேன், இவையனைத்தும் தேவர்களாற் செய்த சூட்சியென்று தெரிந்துகொண்டேன், எனது அஞ்ஞான மனைத்துந் தொலையும்படி கிருபையோடு முன்னமெழுந்தருளிய உடுண்டி விநாயகருடைய வல்லபத்தையுங் கண்டறிந்தேன், முற்காலத்தில் அளவற்றபேர் தேவர்கட்கெல்லாம் பலதுன்பங்களை விளைத்து நாசமாயினர் அதுபோலே யானும் எனது அறிவின்மையினால் தேவர்களையெல்லாம் புறப்படுத்தினேன், இனியேனு மத்தேவர்களைப் புறப்படுத்தியபாவங்களெல்லாமொழிந்து சிறந்த பேரின்பத்தை யானடையுமார்க்கம் தேவரீர் கிருபைசெய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்' அவையனைத்தையும் விண்டுகேட்டு இவன் எண்பதினாயிரம் வருடம் நீதியிற்றவறாதபடி அரசாட்சிசெய்து வந்தவனாதலால், இவனிடத்தில் உண்மையையே பேசவேண்டுமென்று நினைத்துத்தமது நிசரூபத்தை அவனுக்குக்காட்டி அரசனே! இக்காசித்தலத்தை விசுவநாதமூர்த்திக்குக்கொடுத்திடுவையாயின் அளவற்ற புண்ணியங்களைச் செய்தோர்கட்கு என்னபேறு கிடைக்குமோ அப்பேறு உனக்குக் கிடைத்திடுமென்று சொல்லித் தமதிருப்பிடஞ்சென்று, தமதூர்தியாகிய கருடனையழைத்து தாம் காசிநகரத்திற்சென்று நடத்திய காரியங்களையெல்லாம் மந்தரகிரியி லிருக்கின்ற விசுவநாத மூர்த்திக்கு அறிவித்து வரும்படி ஏவினர் பின்னர் திவோதாசன் விண்டுசொல்லிட்டுபோனவார்த்தையினை நினைந்து மனமகிழ்ந்து காசிநகரத்தை விசுவ

நாதமூர்த்திக்கே விடுத்துத்தன தரசுரிமையைத் தனது புத்திரனிடத்தில் ஒப்புவித்துத் தனது பொக்கசத்திலுள்ள பொருள்களிற் பாதியெடுத்து விசுவநாதமூர்த்திக்கு யாவரும் வியக்கத்தக்க ஓர் கோயிலினைச்சமைத்து அதில் ஓர்சிவலிங்கத்தினைப் பிரதிட்டை செய்து பூசித்துவந்தனன் இவ்வாறு சிலகாலம் ஆனபின்பு சிவபிரான் அவ்வரசனை அச்சிவலிங்கத்திற்றானே ஐயிக்கியஞ் செய்தருளினர் முன்னர் விண்டுவால் விடப்பட்ட கருடனானவன் மனோவேகத்திலும் விரைவாக மந்தரகிரியிற்சென்று விசுவநாதமூர்த்தியைப் பலமுறைபணிந் தெழுந்து தாமனுப்பிய உடுண்டி விநாயகராலும், மகாவிஷ்ணுவினாலும் நடந்தேறிய காரியங்களையெல்லாம் விவரமாகச் சொன்னான். அவையனைத்தையும் விசுவநாதமூர்த்தி கேட்டுசந்தோஷமாகச் சகலசனங்களோடும் வெளிக்கொண்டுகாசித்தலத்தையடுத்தனர். உடனே காசியிலிருந்த துண்டிராசர்முதலாயினோர்சிவபிரானை எதிர்கொண்டுசென்று வணங்கினார்கள் அவர்களையெல்லாஞ் சிவபிரான் தம்மோடழைத்துக்கொண்டு சென்று காசித்தலத்துள் நுழைந்து சகலருஞ் சயசயவென்றுபோற்றும்படியாகத்திருக்கோயிலின்கண்சென்று வீற்றிருந்தருளினா உடனே அந்நகரத்தினரெல்லாஞ் சென்று பணிந்தார்கள். விசுவநாதமூர்த்தியும் விசாலாட்சியம்மனும் முகமலர்ந்து இம்மேன்மையான காசிநகரவாழ்க்கையை உம்மாலன்றோ கிடைக்கப்பெற்றோமென்றுசொல்லித்துண்டிராசரைமிக்க பேருவகையோடு மணைத்து உச்சிமோந்து தமக்கெதிர்நிற்கின்ற விண்டுவின்மீது கிருபாநோக்கத்தைக் கடாட்சித்தருளினர். அப்பால் மாசிமாதம் அமரபட்சத்து அங்காரக சதுர்த்தி வர அந்நாளில் சந்திரோதயகாலத்தில் தேவர்கள் முனிவர்கள் முதலாயினோரோடு சிவபிரான் துண்டிவிநாயகரைப் பூசித்து அக்காசித்தலத்தில் எக்காலமும் பிரியாதிருக்கத்தக்க வாழ்க்கையைப் பெற்றனர்.

உடுண்டி விநாயகர் திருவவதாரப் படலம்.

முற்றிற்று



கடவுள் துணை.

பன்னிரண்டாவது

# வல்லைவிநாயகர்

# திருவவதாரப் படலம்.

பதினொன்றான வவதாரம் பகர்ந்தா மினிப்பன்னி ரண்டென்னத்
துதிசெ யவதா ரமும்புகல்வாந் தொடுத்த விழைவாற் கேளென்று
பொதிசெ யிதழி னமுதருத்தும் பொறிவண்டூது மலர்க்கமலத்
ததிபன் வியாத முனிவனுக்கங் கருள்செய்தாங்குள் ளுறக்கேளீர்.

ஓ சவுனகாதி முனிவர்களே! விநாயகமூர்த்தி உடுண்டி விநாயகர் திருவவதாரங்கொண்டு துராசதனை வென்று காசிநகரைக் காத்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம், இப்பால் வல்லைவிநாயகர் திருவவதாரங்கொண்டு செய்தருளிய திருவிளையாடலைச்சொல்லுவோங் கேட்பீர்களாக

முன்னொருகாலத்தில் பிரமதேவரானவர் தமதுசத்தியலோகத்தில் மரீசி முதலிய சிறுவிதிகளும் தேவர்கள் முனிவர்கள் முதலாயினோரும் பரிசுத்தமனத்தினராய்ப் புடைசூழ்ந் திருக்கும்படி சிங்காதனத்தில் வீற்றிருக்கின்றபோது ஒருநாள் தமதுபுத்திரருட்சிறந்த மரீசியென்பவர் அவரைப்பணிந்தெழுந்துசிருட்டிதிதிசங்காரமென்னும் முத்தொழில்களை நடாத்திவரும் மும்மூர்த்திகளுள்தலைவராய் அம்மூர்த்திகட்கு முத்தொழில்களைச் செய்வித்தவராய், ஞானமே வடிவாகவுடையவராய், சத்தியமான வேதப்பொருள்களில் வல்லவராய் சகலலோகங்கட்குமீசராய், எல்லாப்பொருள்களுக்குங் கர்த்தாவாய், சருவவியாபியாய், சீவசாட்சியாய்இன்னுமிவ்வகைப்பட்ட குணநிசயங்களுடைய முதல்வர்யாரோ அவரை அடியேங்கட்குத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதற்குப் பிரமதேவன் தம்மோ டொப்பாரு மிக்காருமில்லாதவிநாயகமூர்த்தியைத் தியானஞ்செய்து தமகருள்வஸ்து நிச்சயந்தெரிந்துகொண்டு ஆனந்தபரவசத்தராய் விழிகளில்போதநீரைப்பெருக்கி நாத்தழும்பேறும்படி வேதங்களினாற் றுதிசெய்து மிக்க மனவுருக்கத்தோடு மரீசிமுனிவரைப்பார்த்து மைந்தனே! முன்னொருகாலத்தில் மூலவாணவத்தின் செருக்கினால் யானும் விண்டுவுந் தனித்தனிப் பிரமம்யானென்றுதருக்கி யுத்தஞ்செய்தனம். அப்போது மூல

லகத்தில் எங்க ளிருவரின்மத்தியில் கொழுந்துவிட்டெரிகின்ற அக்கினிரூபமாய் அண்டகோடிகண்முழுவதும் நீண்ட சோதிதோன்றியது. அவ்வாறு நின்ற சோதியெவரோ அவரே ஆகாயமத்தியகர், அவரே சர்வேசர், அவரே கணேசர், அவரே மூவருள்ளும் முதன்மையாய் நீ வினவிய குணங்களனைத்தும்பொருந்தி நின்றவர்என்று சொல்லினன். அதற்கு மரீசிமுனிவர் மீட்டும் தொழுதெழுந்து சுவாமீ! சகல வுயிர்களையும் ஆக்கல் அழித்தலாதி தொழில்களைப் பெற்று வாழ்கின்ற உங்களைப்போல அந்த அரனும் அழித்தற்றொழிலைப் பெற்று இருப்பதால் அவர் உம் மூவருளொருவராயிருக்க வேண்டுமேயன்றி உம்மிருவருக்கும் மேலானவராய் முதன்மைபெற்றிருப்பது எந்தகாரணத்தாலென்று வினவினன். அதற்குப்பிரமன் புன்னகைகொண்டு மைந்தனே; ஆதியில் என்னையும் விண்டுவையுஞ் சிருட்டித்து எங்கட்கு ஆக்கவுமளிக்கவுமானவல்லபமுங்கொடுத்து எங்களிதயத்தின்கண்ணுமிருந்து எங்களின் முந்நிலையில் அவ்விரண்டு தொழில்களையும் நடாத்துகின்றார். மேலும் மோகிதராகிய எங்களை இவ்வாறு சிருட்டித்துக் காத்தபின்பு எங்களைச் சங்காரமுஞ் செய்கின்றனர் அன்றியும் ஆதியில்வேதாகமகலைகள்யாவையுமுண்டாக்கி எங்கட் கோதுவித்தவரும் அவரே, பூவில் மணமும் அழலில் வெப்பமும், எள்ளில் நெய்யும், மணியிற் பிரகாசமும், விறகிற் றீயும்போல ஆன்மாக்கள் தோறும் நிறைந்திருக்கின்றவரும் அவர் ஒருவரே. அவருடைய சங்காரத்தி லழியப்பட்ட எங்களை மீட்டுந்தமது பெருங்கருணையினால் சிருட்டித்துங்காத்துமெல்லாச் சுகங்களையுங் கொடுத்தருளுகின்றனர் ஆதலால் சங்கார கர்த்தன் அவ்வொருவரே எங்கட்கு முதல்வரென்றறியக்கடவையென்றனன். அப்பால் மரீசிமுனிவர் மீட்டும் பிரமதேவனைப்பார்த்து அத்தனே? தேவரீர்கூறியதனைத்து முண்மையே. எல்லாம் பிரமமயமென்று தம்மையொத்த மேலோர்கள் சொல்லியிருக்க சங்காரகர்த்தராகிய உருத்திரமூர்த்தியால் சகல வேதாகம புராணங்களுமுண்டானதன்றி அவைகளையெங்கட் குபதேசித்ததுவும் அவரேயென்று தேவரீர் எவ்வாறு சொல்லக்கூடும். அச்சந்தேகத்தினை அடியேற்கு நிவர்த்திசெய்தருளவேண்டும் என்று கேட்டனன் அதற்குப்பிரமதேவன் சந்தோஷங்கொண்டு முன்னர் தாம் மகேச்சுரரால் உபதேசிக்கப் பெற்றவோர் அநுபூதியை அம் மரீசிமுனிகருக்குச் சொல்வதாயினர்.

மாயையைத் தொழிற்செய் தியக்கிடவந்த மாயையிற் கலந்து நிற்றலினால், மாயையைக்கடந்த வவர்தமைமாயா சுரூபியென்றுரை

வழங் குதல்போ, லாயவெப் பொருளும் விரவிநிற்றலினு லத்தகு மொற்றுமை நோக்கி, மேயநல் லுபகா ரத்தினு லெவையு மேதகு பிரமமென் றதுவே.

தங்குமொற் றுமையாற் சொன்னதே யன்றிச் சகலமும் பிரம மோவாகா, மங்குத லின்றிச் சகலமும் பிரம மயமெனுஞ் சுருதியி னருத்த, மெங்கணு மெந்தப் பொருளினுமிறைவரிமைபக் குடன்மன் னுகின்றுரென், றங்கவர் தம்மை யுரைத்ததே யாகு மதுவன்றியொ ன்றன்ற தன்றே.

அன்னதா கையினுற் பிறப்பிறப்பின்றி யகிலவாதிக்கமாய் விபு வா, யன்னிய மின்றிச் சகலவான்மாவினந்தரியாமியாயிருக்கு, முன் னரு மீசர் யாவரோ வவரே முழுதருள் கணேசுரன்னவரே, மன்னி யசகத்துக் கொருபெருங் கர்த்தர் மற்றுவே றொருவரு மிலரே.

அவன்பரஞ் சோதி தத்துவாதீத னருவின னனகற் குணத் தோன், சிவன்பரத் தினுக்கும் பரன்வெகுரூபி திகம்பர தத்துவ னீசன், றவறினிற் குணத்தன் சர்வகல்யாணந் தமக்குமோர் கார ணனென்ன, வெவர்களுந் துதிக்கப் படுவராக் கணேச ரெங்களைத் தினப்புரக்கின்றார்.

வெளியெனவவர்தா மனைத்தையும் பொதிந்து விளங்குகின் றாரவருள்ளே, வெளியிடை யனைத்துங் கிடப்பனபோல விரவின வா ருயி ரனைத்து, மொளியுறு ஞானக தரவுரி வுரிததாங் குறுசமு சா ரத்தி நீங்கிக், களிபெறு மிந்த வியல்பறிந்தவரே கவியுடைக் கழலி ணையடைவார்.

இத்தகு கவியின் மகத்துவ மென்று வியம்பிடமுடியுமோமுடி யா, வுத்தமவேத மானதியாதோ ரிடததுபசாரமாவெனையும், வைத் துநே மியையுஞ் சொல்வதோ வந்த வைப்பினு மிதார்த்தமே யாகத், தத்துவாதீத னுனதேவேசன் றன்னையே சொல்வது கண்டாய்.

அன்னியமான பாவனைதன்னு லரிமுதற் றேவரைக் குறித்து, மன்னிய முனிவர் தங்களைக் குறித்துப் வகுத்திடுங் கருமங்க ளெல் லாம், பன்னருமேக பாவனையதனுற் பரவுதேவேசர்தம்பாங்காத், துன்னுவ தலது வேறொரு பாலுந் துன்னுறு தெனச் சொலுஞ் சுருதி.

எங்கள்பா லிருந்து தனுகர ணங்க ளியக்கியொற்றித்துநிற்கை யினு, லெங்களை யாளுஞ் சம்புவினுடைய வெழிற்பணுடைப் பாதிக

டமையு, மிங்குபோட் டவர்கட் கருள்வரமாதி யியல்புறு மருளையுஞ் சுருதி, யெங்கணுக் கியல்பா யுள்ளனவாக வியம்பிடு முகமனுமொருசார்.

மயக்கினாற் சிவனோ டொப்ப வெங்களையும் வைத்தெவனுரைக் கின்றானவனே, சய்க்கொடும் பாவி யாய்நரகத்திற் றாழ்குவன் யாவ னெங்களையு, மியக்குமீச் சுரனோ டொப்பமேலாக வியம்புகின் றானந் தப் பாவி, பபக்குமெத் துயர்க்கு மாகரமான பனைகயெனப் பாவி யா னின்றேம்.

அதிகபுண் ணியங்க ளியற்றினோர்க்கின்ப மருள்சிவனுங் கணேச்சுரரே, பதியவ ருள்சேர் நாங்களே பசுக்கள் பன்னிய விதற்கொருசான்று, முதிர்கட லுலகில் விதியினா லெம்மான் முற்றிய பூசனை கொண்டு, கதிகொடுத் தனேகங் கணேசமூர்த் திகடாங் கவின்றிருக்கின்றன காணாய்.

அந்தமூர்த் திகளே புத்திமுத்திகளை யாதரித்திரந்தவர்க் கெல்லாஞ், சிந்துமா மழைபோல் வழங்குகின் றனவச் செய்கையான்மரீசியே நீயும், பந்தம்வீ டிரண்டுந் தமக்குறாக் கணேசர் பதங்களே சரணமா வடைதி, யிந்தவா றெனக்கு மயேச்சுரர் தம்மா லியம்பிடப் பட்டது கண்டாய்.

இவ்வாறு பிரம நிச்சயத்தையும், வேதாகமபுராணங்களுண்டான காரணத்தையும், அப்பிரமமே துஷ்டசன நிக்கிரகஞ் சிஷ்டஜன பரிபாலனஞ்செய்யும்பொருட்டு கணேச மூர்த்தியாகத் திருவவதாரங்கொண்டெழுந்தருளியதையும், விவரமாக உபதேசித்து மைந்தனே அளவளாவியமோகவுள்ளத்தினாய் கணேசருக்குமேலானமூர்த்தியுண்டென்று சிறிதும்நினையற்கவென்று சொல்லினன். இவையனைத்தையும் மரீசிமுனிவர்கேட்டு சந்தேகங்களினின்று நீங்கித் தெளிவெய்தி, முன்னொருபோது அப்பிரமனுடைய சிருட்டியா லுண்டான மானதசரசுஎன்னுந் தடாகக்கரையிற்சென்று மேலான செல்வத்தைப்பெறவேண்டுமென்று கணேசமூர்த்தியை மனதிற் றியானித்து மழைபனிவெய்யலாதிகட் கிளையாது, இருபத்தோராயிரவருடம் நிராகாரமாகவிருந்து அரியதவத்தினைச் செய்தனர். அத்தவத்திற்கு கணேசமூர்த்தி மனதிரங்கி நவரத்தினஆபரணங்களால்அலங்கரிக்கப்பட்டிருக்கின்ற மூடிகவாகனத்தின்மீது மழுவாயுதத்தினைத்தாங்கிய திருக்கரத்தோடு தரிசனந்தந்தனர். உடனே மரீசிமுனிவர் திகைத்தெழுந்து அனந்தமுறைச் சாஷ்டாங்கமாகப் பணிந்

தையும் அநுபவித்தே தீரவேண்டும். முத்தியும் அக்கடவுளனுக்கி ரகத்தா லல்லது அவனுக்குக் கைகூடாது. என்று பலவாறு தமக்குள் சிந்தித்து அம்மரீசி முனிவரிடத்திற் சென்றனன். உடனே அம்முனிவர் பிரமதேவனைப் பணிந்தெழுந்து அண்ணலே! யான் வாசஞ்செய்வதற்கு ஓர் திவ்விய நகரத்தினைச் சிருட்டித்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டனன். அதற்குப் பணிந்தகுமாரனை ஆசீர்வதித்துத் திரிலோகத்திலுமில்லாத ஓர் நகரத்தினைச் சிருட்டித்து அதற்குப் பிரமநகரமென்று பெயரிட்டுக் கொடுத்தனன். அந்நகரத்தில் மரீசிமுனிவர் பிரவேசித்து நவரத்தினமயமாய் கோடி சூரியோதயம்போல விளங்குஞ் சபாமண்டபத்தில் கொலுவிருந்து பிரகற்பதி பகவானைச்சேர்ந்த அளவற்றதேவர்களும் சுக்கிரபகவானைச் சேர்ந்த எண்ணற்ற இராக்கதர்களும் சூரியன்முதலிய கோள்களும் இந்திரன் முதலிய திசைக்காவலர்களும் மற்றுமுள்ள சகலரும் பணிந்து புடைசூழும்படியாக அரசாட்சி செய்துவந்தனர். அப்போது பிரமதேவன் தேவவல்லியென்னும் ஓர்கன்னிகையைச் சிருட்டித்துக்கொடுக்க அம்மரீசிமுனிவர் வேதாகம விதிப்படி விவாகஞ் செய்து மேலான ஆயிரம்பிள்ளைகளையும் பெண்களையும் ஈன்று சகல போகபாக்கியங்களையுங் குறைவறப்பெற்று வாழ்ந்திருந்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! இனிமரீசிமுனிவருக்கு விநாயகமூர்த்தி கொடுத்தருளிய வரத்தினால், உமாதேவியார் வல்லபையாகத் திருவுருக்கொண்டதும், அவ்வல்லபையை எமது கர்த்தன் கணேசமூர்த்தியாகத் திருவுருக்கொண்டு வந்து விவாகஞ் செய்தருளியதுஞ் சொல்லுவோம் கேட்பீர்களாக.

இவ்வாறு மரீசிமுனிவர் அரசாட்சிசெய்துவருகின்றகாலத்தில் ஒருநாள் கைலாயத்தில் விண்டுவாதியதேவர்கள புடைசூழ்ந்துவரும்படியாகச் சிவபிரான் திருவோலக்க மண்டபத்தில் வீற்றிருக்கின்ற போது உமாதேவியார் சிவபிரானைப் பணிந்தெழுந்து ஓ சகலதேவர்கட்குமேலான கடவுளே! ஓ அடியார்கட் கருள்செய்யவல்ல வள்ளலே! ஓ எங்கும் வியாபியாயிருக்கின்ற சோதியே! ஓ சுருபானந்தரே இவ்வுலகங்களிலுள்ள சராசரங்களி னிலைமையை அடியாட்குத் தெரிவித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள். அதற்குச்சிவபிரான் கிருபைகூர்ந்து பெண்ணே! நிமித்தம் துணை உபாதானமெனச் சொல்லுகின்ற மூன்றுகாரணத்தினால் உலகங் காரியப்படுகின்றது. அக்காரணம் மூன்று மின்றிக் காரியமான உலகமில்லை. இவற்றுள் நிமி

த்தகாரணம்பாம் துணைக்காரணம் நமது சத்தி. உபாதானகாரணம் மாமாயை இம்மூன்றினுள் துணைக்காரணமாகிற சத்தியேயென்றறியக் கடவையென்றனர் அதைக்கேட்ட உமாதேவியார் தருக்கி நின்று சுவாமீ! சத்தியானேயாகில் எவ்விதத்தில் யோசிக்கினுந் தேவரீர்க்கு உடலும் உருவமும் யானன்றி வேறில்லை எனத்தைசவினுலன்றோ சகலலோகங்களு மசைகின்றதென்றனர் இவ்வாறு உமாதேவியார் தருக்கிக்கூறிய வார்த்தையினைச் சிவபிரான்கேட்டுக்கோபங்கொண்டு, பெண்ணே! நமதுபெருமையை எவ்வளவும் ஒருவரால் காணுதற்கருமையாயிருக்க நீ சிறிதும் நாணமில்லாமல் நமக்கு முன்னே உன்னைநீயே புகழ்ந்துகொண்டனை, சிருட்டிமுதலிய முத்தொழில்களும் சூரியனுக்குமுன் கமலம்போலப்பூத்து நின்றொழிதல் நம்மாலன்றி மற்றொருவராலாவதில்லையென்பதை இப்போதே தெரியச்செய்கின்றோம் பாரென்று உலகங்களிலுள்ள சத்திகளையெல்லாம் ஒடுக்கிக்கொண்டனர் அம்மாத்திரத்தில் சூரியன்-சந்திரன்-அக்கினி யென்னும் முச்சுடர்களும் இல்லாமற்போயின. அதனால் இரவும்பகலுமில்லாமல் எத்தொழில்களுமறாறு சர்வசங்காரகாலம் போலாயது. அச்செயலை உமாதேவியாரறிந்து இனியாம்யாதுசெய்யக்கடவோமென்று பயந்துநடுங்கி, தாம்கொண்டிருந்த கருத்தினையெல்லாமொழித்து, சிவபிரானுடைய வல்லபமின்றி ஒன்றும் நிலவுதலில்லையெனத் தமக்குள்நிச்சயித்து அவரது திருவடிகளில் அனந்தமுறை தொழுதெழுந்து இருகரங்களையுங் கூப்பிநின்று துதிசெய்வதாயினர்

சயதேவ தேவ சயபத்தர் நேச சயவெங்கு நின்ற தலைவ
சயவா ரணங்கண் முறையிட்டு மின்னு மறியாமை நின்ற சரண
சயநா ரணற்கு மறையோற்கும் யார்க்குந் தனுவாதி நல்கு மிறைவ
சயநாத வின்று னியல்புள்ள வாறு தமியேனுணர்ந்து தொழுதேன்.

வித்தின்றி நாறு வளரப் பணித்து விமலத் தடைந்த வுயிரின்
கொத்தின்றியேனை வினையிற் படர்ந்து குழையாவி யாவு மலமார்
ரித்தின்றி யைந்து தொழிலானு முத்தி பெறவாகி நின்ற பெரும
த்தின்றி யினறு னியல்புள்ளவாறு தமியேனுணர்ந்துதொழுதேன்

அணியாய மான மணியின் சுகங்க ளடைதோறு மாறு தகர்வுற்
றினியேது வேறு கதியென்று தம்மு னிறுமாந் திருக்கு பவரை
இனியாது மும்மைம் யுருவா யிருந்து தரிசிற் பிரிதது மருவும்
—ியீச வின்று னியல்புள்ள வாறு தமியேனுணர்ந்துதொழுதேன்:

இவ்வாறு உமாதேவியார் துதிசெய்து கர்த்தனே! தேவரீரையன்றி ஓரணுவும் அசையாதென்பதை யறிந்தனன். அடியாள் அறிவின்மையினால்செய்த அபராதத்தினைப் பொறுத்துக்காப்பதன்றி பழையபடி உலகத்தையெல்லாம் உண்டாக்கி யருளவேண்டு மென்று பிரார்த்தித்தனர். அதற்குச் சிவபிரான் மனதிரங்கி முன்னர் பதினொருகோடி உருத்திரர்களுண்டாகும்படி நினைத்தருளினர். அம்மாத்திரத்தில் அவர்களெல்லாம் நித்திரையினின்றுநீங்கினவர்களைப்போல பொள்ளென் றெழுந்தார்கள். எழுந்த பதினொருகோடி யுருத்திரர்களும் ஏகசித்தர்களாய்ச் சிவபெருமானுடைய திருவடிகளை மனதிற்றியானித்து நடந்தகாரியங்களனைத்தும் கர்த்தனது திருவிளையாட்டென்றறிந்து உறங்கியிருக்கின்ற ஆன்மகோடிகட்கெல்லாம் அறிவையுண்டாக்கும்பொருட்டு திருவிடைமருதூரென்னுந் தலத்தினைச்சார்ந்து சிவராத்திரியாகிய அவ்விரவில் நாலுகாலமும் வேதாகமவிதிப்படி பூசைசெய்தார்கள் அப்பூசனைக்குச்சிவபிரான்கிருபைகூர்ந்து அவர்களெதிரிற் பிரத்தியட்சமாயினர் உடனே அவ்வுருத்திரர்களெல்லாந் திகைத்தெழுந்து அனந்தமுறை தீர்க்கதண்டஞ்செய்து கரங்களைச் சிரமேற்கூப்பிநின்று துதிசெய்வதானார்கள்

போற்றி விச்சுவ ரூபனு யிருந்தபூ ரணனே
போற்றி யாவையும் படைத்தளித் தழிக்கும்புண் ணியனே
போற்றி யெவ்வகைப் பொருளுக்குஞ் சுதந்தரப் பொருளே
போற்றி யெற்றைக்கும் பொன்றுறாத் தனுவுடை முதலே.

வீர போற்றிமும் மலத்தையும் வேரொடுங் களையுஞ்
சூர போற்றிதுட் டரையடுஞ் சூலங்கை யேந்துந்
தீர போற்றிநற் றிருவிடை மருதெனச் சிறந்த
வூர போற்றியெம் முளத்தம ரொருவனே போற்றி.

இவ்வாறு யாவருந் துதிசெய்து ஓ சர்வேசனே! சகலலோகங்களையும் பழையபடி யுண்டாக்கி யருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குச் சிவபிரான் மனமகிழ்ந்து அவ்வாறே சகலலோகங்களுமுண்டாகுகவென்று அநுக்கிரகஞ் செய்து அன்பர்களே! உங்களுக்குவேண்டிய வரங்களைக் கேண்மின்களென்று திருவாய்மலர்ந்தனர் உடனே அப்பதினொருகோடி உருத்திரர்களும்மறுபடியும் பணிந்தெழுந்து, ஓபக்தவச்சலனே! யாமெல்லாம்இவ்விரவில்தேவரீரைவேதாகமவிதிப்படி எவ்வாறு நாற்காலமும்பூசித்தோமோ அவ்வாறே இனியாவரும்பூசிக்கவேண்டும். இச்சிவராத்திரியால் அடியேங்க

டருண்டாகிய புண்ணியமெவ்வளவோ அவ்வளவும் அவ்வவர்களுக்கு உண்டாகவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதுவும் சிவபிரான் கொடுத்தருளி அந்தர்த்தானமாயினர். இவ்வாறு அவர்கள் கேட்ட வரங்களைச் சிவபிரான் கொடுத்து மறையுமுன்னமே அவரது பெருங்கருணையினால் விண்டு முதலாயினோர் அறிவுடையவர்களாயெழுந்தார்கள் சூரியனாதி முச்சுடர்களும் உலகத்திற் பிரகாசித்தன. இப்பால் அறிவுடையவர்களாயெழுந்த தேவர்கள் முனிவர்கள் முதலாயினோர் இவையனைத்தும் சிவபெருமானுடைய திருவிளையாட்டென்றறிந்து யாவரும் அந்தத் திருவிடைமருதூரிற்றானே சென்று எமதுகர்த்தனை வேதாகமமுறைப்படி வழிபட்டுப் பின்னர் யாவருங் கயிலாய வரைக்குச் சென்று சிவபிரானை அனந்தமுறைப் பணிந்து துதிசெய்து ஓ தீனசரண்யராகிய கிருபாளுவே! யாங்களனைவரும் அளவற்ற நாள் இருளிற்கிடந்து நித்திரை செய்திருந்தனம், பின்னர் சுவாமிகளுடைய கிருபையினால் அந்நித்திரை நீங்கி அறிவுற்றெழுந்தனம் சுவாமிகளுடைய திருவிளையாட்டாயினும் நித்திரையிலிருந்த அத்தனை நாளும் யாங்கள் நித்திய கன்மாதிகளாற்றின்று நேர்ந்த குற்றம் நீங்குமாறு ஓர் பிராயச்சித்தந் தமைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அதற்குப் பக்கபாதமென்பதோர் சிறிதுமில்லாத எமது கர்த்தனானவர் சந்தோஷித்து ஓ தேவர்களே! இக்குற்றம் பார்ப்பதியினுடைய தருக்கினாலுண்டானதால் நீங்கள் செய்துகொள்ளவேண்டிய பிராயச்சித்தமொன்றுமில்லை இன்றுமுதல் நீங்கள் யாவரும் விசனமில்லாமல் சகல கருமங்களையும் வேதாகமமுறைமைப்படி செய்துகொள்ளலாமென விடைகொடுத்தனர் அதை அவர்களனைவருங்கேட்டு மனமகிழ்ந்து தத்தம்பதிகளை நோக்கிச்சென்று எல்லாக் கருமங்களையும் வழுவின்றி நடத்திச் சுகமுற்றார்கள்

இப்பால் உமாதேவியார் பரமேஸ்வரருடைய திருவுளக்குறிப்பினையுணர்ந்து மிக்க பயபக்தியுடனே காந்தனைப் பணிந்தெழுந்து சுவாமீ அடியாளபொருட்டுத் தேவரீர் சகலலோகங்களையும் இருளிலொடுக்கிவைத்தபடியால் அப்பாவமென்னைவிட்டொழியுமாறு யான் செய்துகொள்ளவேண்டிய பிராயச்சித்தம் யாதோ அதனைத் தேவரீர் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குச் சிவபெருமான் புன்னகைசெய்து மிக்கமனமகிழ்ச்சியோடு உமாதேவியாரைப்பார்த்து, பெண்ணே நீ நமக்குமுன்னிருந்து உன்னை நீயே உயர்த்திப்பேசினை? அப்பெரும் பிழையினால் உலகத்தில் இருள்மூடிக்கொண்டது. அதனால் சகல வான்மாக்களுந் தத்தங்க

குமங்களினின்று நீங்கும்படியான குற்றம்விளைந்தது. நீசகலவான்மாக்களுக்குந் தாயாதலால் இவ்வுலகில் குழந்தைக்கு வியாதிநேர்ந்தால் அழியாதிருக்கும்படி அக்குழந்தையை யீன்றதாய் மருந்தருந்துவதுபோல நீயே பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டுமென்று திருவாய்மலர்ந்தனர். அதற்கு உமாதேவியார் மனமிசைந்து மீட்டுந்தொழுதிறைஞ்சி சுவாமீ! அடியாளே பிராயச்சித்தஞ்செய்துகொள்ளவேணுமென்று திருவாய்மலர்ந்தருளியதால், அப்பிராயச்சித்தம் யாது? அதனை யியற்றுந்தலம் எது? அவைகளையும் அடியாட்குக் கிருபைசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குக் கர்த்தன் உமாதேவியாரைப் பார்த்து பெண்ணே, பூவுலகத்தில் மிகவுஞ் சிறப்புற்றதாய் தருமஸ்வரூபமாய் யமனோடு முற்பவித்த நலத்தினால் யமுனையெனும் பெயரைவகித்ததாய் அடுத்தோர்கட்கு நற்கதியைத்தர வல்லதாய் ஓர் நதியுண்டு. அந்நதியில் ஓர் தாமரைப்பூவிலே நீ சங்குவடிவங்கொண்டு சிலநாள்வரையில் நமதுதிருவடிகளைச் சந்தோஷமாய்த்தியானஞ்செய்துக்கொண்டிரு. அதற்குமேல் மரீசிமுனிவன் அந்நதிக்கு வரநேரும். அப்போதவன் நீசங்குவடிவோடிருக்கின்ற கமலத்தைக்கண்டு ஆச்சரியமாகி அருகில் வருவான் அச்சமயத்தில் நீயோர் கன்னிகையாருக பின்னரவன் உன்னை மகளாகக் கொண்டுபோய் வளர்ப்பான் அக்காலத்தில் நீ நமதுருவைத் தியானித்து ஏகாக்கர மந்திரத்தை இடைவிடாது செபஞ்செய்துகொண்டிருக்கக்கடவை உனக்குப் பன்னிரண்டாவது வயதாகுங்காலத்தில் நாம் அவ்விடத்தில் எழுந்தருளி உன்னை விவாகஞ்செய்துகொண்டு உனதுகுறையைமுடிப்போம் என்று திருவாய்மலர்ந்தனர் அம்மாத்திரத்தில் உமாதேவியார் சிவபிரானிடத்தினின்றும் விடைபெற்றுச்சென்று யமுனாநதி தீரத்தையடைந்து அந்நதியிற் பூத்திருக்கின்ற அளவற்ற கமலங்களுள் ஒருகமலத்தினுடைய மத்தியில் சங்கவடிவாகித் தமது இருதயகமலத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைத் தியானஞ்செய்து கொண்டிருந்தனர். உமாதேவியார் வாசஞ்செய்யத்தக்க மேன்மையையடைந்த அக்கமலமானது ஏனையகமலங்களினுஞ் சிறந்ததாய் தேவர்களுங் கண்டு வியப்பெய்தும் நிலைமையி லிருந்தது.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! தம்மையடைந்தசகவான்மாக்களையும் ஆணவ விருளினின்று நீங்கிப்பரிபாகஞ்செய்யவல்லசங்கரியே இவ்வாறு சங்கவுருவாகியிருந்தமையாலல்லவா அச்சங்கும் தன்னையடுத்தது எவ்வகைப்பட்ட நோயினும் அதனைப் பரிசுத்

தமான தீர்த்தமாக்குகின்றது. மேலும் அவ்வெமுனைநதியை யடுத்த பலகால்களிற்பூத்த கமலங்களெல்லாம் குவிந்தும் மலர்ந்து மிருப்பதினால் பாவஞ்செய்தோர்களுடைய செல்வத்தைப் போன்றன. அவ்வெமுனையிற்பூத்த கமலங்களெல்லாம் அவ்வாறின்றி எக்காலத்தும் ஒரே தன்மையாய் மலர்ந்திருப்பதினால் புண்ணியஞ்செய்தோர்களுடைய செல்வத்தைப்போன்றன. அக்கமலங்கள் தமக்குப் பகையாகிய பனியினால் கருகுதலில்லாமல் மிக்கமேன்மையை யடைந்திருக்கின்றகாட்சி எதுபோலுமிருந்ததெனில், எம்மைப்போல உமாதேவியாரைச் சார்ந்தார்க்கெல்லாம் மலப்பகையினாலுண்டாகுந் துன்பஞ்சாராதென்னும் உண்மைப்பயனைத் தெரிவித்தல்போல விருந்தது உமாதேவியாரை வழிபட்ட மெய்யன்பனை ஞானசகத்தைப் பெறுவதன்றி அவனைப் புடைசூழ்ந்தோர்களும் அப்பேற்றினைப்பெறுவரென்பதற்கு அவரைத்தாங்கிய மலரேயன்றி ஏனையமலர்களும் வாட்டம்நீங்கி யிருப்பதே சாட்சியாகும். அன்றியும், உமாதேவியாரை உள்ளத்தேதாம்பிய ஞானவான்களை உறங்குதலும் விழித்தலுமற்று மேலானபயனைப் பெறுவாகளாயின், அவரைத் தாங்கப்பெற்ற அக்கஞ்சம் கூம்புதலும் மலர்தலுமில்லாது மிக்கமேன்மையடைந்திருப்பது ஓர் வியப்போ? மேலும் எமதன்னையின் சார்பையடைந்த தூயவர்கள் பஞ்சேந்திரியங்களினால் அலைப்புறார்களென்பதுபோல, அக்கஞ்சமும பொறிவண்டு தேன்வண்டு பொன்வண்டு கரிவண்டு முதலியவைகளால் ஊறுபாடில்லாத உயர்வினை யடைந்தது இவ்வாறு அளவற்ற மகிமைகள் விளங்கும்படி லோகநாயகியாகிய உமாதேவியார் அக்கமலத்தில் சங்கவுருவாய்த் தங்கியிருக்கின்றகாலத்தில் தைமாதத்திலே மகநட்சத்திரம்வர அப்புண்ணியகாலத்தில் அளவற்றபேர் அவ்வெமுனையில் ஸ்நானஞ்செய்யச் சென்றார்கள். அவர்களோடு மரீசிமுனியும் தமது மனைவியாகிய தேவவல்லியோடு அந்நதிதீரத்தில்வந்து சாஷ்டாங்கமாக வணங்கித் துதிசெய்து, சங்கற்பஞ்சொல்லித தீர்த்தமாடி, திருவெண்ணீறு உருத்திராட்சமுதலிய சிவசின்னங்களை யணிநது, விதிப்படி தருப்பணமாதிகளை நடாத்திச செபஞ்செய்யுங்காலததில் தமதுநல்ல ஊழின்வசத்தால் அந்நதியினுடைய அலங்காரங்களைப் பார்ததனர். அப்போது அதிலுள்ள கமலங்கள் பனிக்குச் சற்றும் வாடாமலிருப்பதையும் ஓர் கமலமாத்திரம் ஏனையகமலங்களினுஞ் சிறந்து விளங்கி யிருப்பதையும் அக்கமலமத்தியில் ஓர் தைவீகமுள்ள சங்கம் வசித்திருப்பதையும் பார்த்து ஆச்சரியமாகி அச்சங்கினையெடுக்கும்படி அதனை

ருகிற்சென்றனர். அவ்வேளையில் சங்கவடிவாயிருந்த உமாதேவியார் தாமொரு திருமேனிகொள்வதும் அத்திருமேனியோடு சிலகாற்பயில்வதும் பின்னர் விடுப்பதும் தமதிச்சையின் வழியேயல்லது வேறில்லையென்னுங்கருத்தை யாவரும் உணர அறிவிப்பார்போலமறைந்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே! தாம்விழைந்த வழியல்லது தம்மைப்பெற முயன்றோர்கள் விழைந்தவழி தம்மைக்கொடாத ஓர்தலைமையைத் தெரிவிப்பார்போல லோகநாயகிமறைதலும், மரீசிமுனி மதிமருண்டனர். அப்போது மூாத்திதலந் தீர்த்தமென்னுமிம்மூன்றி னியல்பையறியாது அவைகளை யடுத்தோர்களும்உடனேபார்த்தும் வாய்ந்துந்தோய்ந்தும் பயன்பெறுவதுபோல அச்சங்கினுடைய இயல்பை யறியாதடுத்த மரீசிமுனிவர் பின்ன ரச்சங்கம் பெண்குழந்தைவடிவாகி யிருக்கக்கண்டனர். இவ்வாறு விண்டுவே முதலாய் சகலவான்மாக்களையும் பெற்றெடுத்து வளர்க்கவல்ல தாயாகிய உமாதேவியார் அளவற்ற சுந்தரத்தோடு ஓர்பெண்குழந்தை வடிவாகலும், அதை மரீசிமுனிவர்கண்டு தமக்குமுன் சிவபிரான் கொடுத்தருளிய வரத்தினை நினைந்து எல்லாத் தீவினைத்தொடர்புக்களையும் நீக்கி மேலான கதியினைக கொடுத்தற்பொருட்டு அரிபிரமேந்திராதியராலு மறிதற்கரிய மகேஸ்வரியே நமதுநிமித்தம் இவ்வாறு குழந்தையாக அவதரித்தனரென் றுணர்ந்து மிக்க மனமகிழ்ச்சியோடும் அக்குழந்தையைக் கரத்திலேந்திக் கரையேறிவந்து தமது பத்தினியாகிய தேவவல்லியைப்பார்த்து பெண்ணே! இக்குழந்தையை இருவினைத்தொடர்பினால் ஆணவவிருளிற் கட்டுண்டுவருகின்ற ஏனையகுழவிகளைப்போல நினையற்க இஃது சகலலோகங்களையுந் தனது பஞ்சகிருத்தியத்தினாலாட்டி மேலானபேற்றினைக்கொடுக்கத்தக்க குழவியாகும் இதனை இன்றுமுதல் அன்பாய்ப் பாராட்டிப் பால்கொடுத்து வளர்த்துக்கொள்ளுகவென்று சொல்லி அவள்கையிற் கொடுத்தனர். இவ்வாறு கர்த்தனை யொருகாலும் விட்டுப்பிரியாததேவியை தேவவல்லி கரத்திலேந்திய மாத்திரத்தில் தனதுகுசங்களில் மிகுதியான பால்சுரக்க. அதனை லோகநாயகிக்கு உண்ணக்கொடுத்தனள். லோகநாயகியும் தமதன்பர் கொடுக்கும் உடல்பொருளாவியைப்போல எல்லாவுலகங்களுங் குளிரும்படி அத்திருமுலைப்பாலை உண்டருளினர். இப்பால் அகளவடிவாயிருக்கின்ற மகேஸ்வரியைச் சகளவாக்கிக்கொடுத்த அவ்வெமுனையை மரீசிமுனியும் அவர்பத்தினியும் பணிந்தெழுந்து சகல பரிசனங்களுந் தம்மைப் புடைசூழ்ந்துவரும்படி அந்நதிக்கரையினின்று நீங்கித் தமது

பிரமநகரத்தினைச் சேர்ந்தனர். அந்நகரமும் அக்குழந்தையினுடைய ஒளியையும் குணங்களையுங்கண்டு ஆச்சரியமாகி இக்குழந்தை நமக்கு சகல புருஷார்த்தங்களையுங் கொடுத்து பிரமாதிசர்வலோகேசர்களும் அடைதற்கரிய விலக்ஷணக் ஞானபத்தினை யுண்டாக்கி அநாதிபிரகிருதி சம்பந்தமான இவ்வுலக சம்சாரபந்தநக்க நிவாரணங்களைச்செய்து மஹோத்தம பரமகதியையும்அருளும்படி அவதரித்ததென்று துதிசெய்து முடிவற்ற பிரமானந்தக்கடலில் மூழ்கியது இப்பால் நாமரூபக்கிரியா சொரூபமாயிருக்கின்ற உலகங்கட்கு அவைகளையொழிக்கும்படி நாமரூபக்கிரியா சொரூபமாயெழுந்தருளிய எமதன்னைக்கு வல்லபையென்று ஓர் திருநாமஞ்சாற்றித்துதித்தனர் அதுமுதல் லோகமாதாவாகிய உமாதேவியார் சகலலோகங்களையுஞ் சூத்திர தாரியைப்போல ஆட்டுவித்தாலல்லது தாமே ஆடாதென்னுங் கருத்தினால், அவ் விளமைப் பருவத்திற்குரிய எல்லாத் திருவிளையாடல்களையும் யாவரும் களிகொள்ளும்படி விளையாடியருளினர் இவ்வாறு விளையாடி வருங்காலத்தில் வல்லபை தேவியாருக்கு ஐந்தாவது பருவம் ஆக, அப்பருவத்தில் தாம் ஒருகாலத்தும் பிரிதலில்லாத சிவபிரானுடைய வாமபாகத்தினை யடையக்கருதித் தமது குரவரிடத்திற் சென்று யான் இதுமுதல் சிவபிரானைக்கருதித தவஞ்செய்யவேண்டுமாதலால், விரைவில் ஓர்தவச்சாலையை யுண்டாக்கித் தரவேண்டுமென்று கேட்டருளினர். அவர்களவ்வாறே ஓர் தவச்சாலையினை யுண்டாக்கிக் கொடுத்துப் பணிசெய்வதற்குப் பாங்கியரை நியமித்து விருத்தரையும் பேடிகளையுஞ் சுற்றிலுங் காவலிருக்கவைத்து, எல்லாக் காரியங்களையுங் குறைவற நடாத்தினார்கள். பின்னர், வல்லபைதேவியார் அத்தவச்சாலையை யடைந்து சுற்றிலும் அளவற்றமுனிவர்கள் தவஞ்செய்யும்படியாகத் தமதுமனதில் சிவபெருமானுடைய திருவடிகளைதியானித்து இரவும்பகலும் ஏகாக்கரமனுவைச் செபஞ்செய்துகொண்டு ஆகாரநித்திரை யில்லாமல் அரியதவத்தினைச் செய்துவந்தனர் அவரது தவவலிமையைத் தாயாகிய தேவவல்லிகண்டு ஆச்சரியமாகித் தனது கணவராகிய மரீசிமுனிவரைப் பணிந்தெழுந்து சுவாமீ! தமது அருமைத் திருமகளான வல்லபை இவ்விளமைப் பருவத்தில் ஆகாரமுதலியவைகளைநீத்துத் தவஞ்செய்யவேண்டிய வாசை எவ்விதத்தா லுண்டாயதென்று கேட்டனள் அதற்கு மரீசிமுனிவர் நகைசெய்து பெண்ணே! நமதுகுழந்தையாகிய வல்லபையினுடைய பெருமையை யாவராலும் அறிந்து சொல்லுவதற் கரிதாகும் ஆயினும் ஒருவாறு அறிந்தவரையிற் சொல்லுகின்றேன்கேள்,

சில வேளை சிவ்வாராகிய சதாசிவமூர்த்தியினுடைய வாமபாகத்தில் மணியில் ஒளிபோலவும், சூரியனிடத்தில் ஒளிபோலவும், உடலில் உயிர்போலவும் எக்காலத்தும் பிரிதலில்லாமல் வசித்திருந்து அவராற்சிருட்டி-திதி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகமென்னு மைந்தொழிலையும் ஆன்மாக்களுடைய இச்சையின்படி நடப்பித்து இருவினையொப்பு மலபரிபாக முண்டானபேர்களை முத்தியிற்சேர்க்கவல்ல உமாதேவியாரே வல்லைபையென் றறியக்கடவை இத்தன்மைத்தான பெருமையினையுடைய உமாதேவியார் முன்னர் யான் செய்த அரியதவத்திற்கிரங்கி சிவானுக்கிரகத்தினால் இப்பூவுலகத்தில் நமக்கோர்குழந்தையாகிவந்து மீட்டும் தமது விநாயகருடைய வாமபாகத்தினையடையக்கருதித் தவஞ்செய்கின்றனர் இனி அவரை ஏனையமக்களைப்போல நினையற்கவென்று சொல்லினர். இவையனைத்தையுந் தேவவல்லி கேட்டமாத்திரத்தில்புளகாங்கிதமுற்றுப் பிரமமானந்தக் கடலின் மூழ்கினள்

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! இவ்வாறு தாய்தந்தையர் தமது அருமைப் பெருமைகளைப் பாராட்டித் துதிசெய்து வந்தபடி வல்லைபைத்தேவியார் பன்னிரண்டுவயதாகும்வரையில்தவஞ்செய்துவந்தும் எமதுகாத்தர் மனந்தரித்திருப்பாரோ உடனே பகீரதியைத் தரித்த சடைமுடிமுதலிய கோலங்களைமறைத்து விபூதி உருத்திராக்கமணிந்து ஓர் பிராமண வடிவங்கொண்டு அத்தவசசாலை யருகிலெழுந்தருளினர். அதை வாயில் காப்பாளர்களறிந்து வல்லைபைத் தேவியாரிடத்திற்சென்று ஓர் சிவபத்தர் வாய்தலில் வந்திருக்கின்றனரென்று அறிவித்தார் உடனே வல்லைபைத்தேவியார் அவரையெதிர்கொண்டுபணிந்து தமது தவசசாலையுள் அழைத்துக்கொண்டுசென்று ஓராதனத்தி லிருக்கச்செய்து அருக்கியபாத்தியாதிகளைக் கொடுத்து பூசித்துக்குளிர்ந்த இன்பமுகத்தோடு அஞ்சலியஸ்தராய் எதிர்நின்று சுவாமி! தேவரீர் இங்ஙன மெழுந்தருளி வந்த காரணத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்கு மாறுவேடங்கொண்டுவந்த எமதுகர்த்தர் புன்னகைசெய்து ஓபெண்கள்நாயகமே! உம்மை விவாகஞ்செய்யு மிச்சையினால் இங்ஙனம் வந்தேன், அக்காரியத்தை அன்புகூர்ந்து நிறைவேற்றுவீராயின் எல்லாப் பயன்களையும் பெற்றவ ராவீரென்றனர். ஒப்பற்றவர்கூறிய இவ்வாக்கியமானது வல்லைபையுடைய திருச்செவிகளி லேறியமாத்திரத்தில் காய்ந்தவூசி காதி

யர்ந்தா லொத்து சிவசிவாவென்று இருசெவிகளையும்பொத்திக்கொண்டு, ஆ-ஆ! இவ்வந்தணன் என்னவார்த்தையைச் சொல்லினனென்று கிலேசித்து புருவங்களைநெரித்து இருவிழிகளுஞ் சிவந்து உதடுகள் துடிக்கும்படி அவரைப்பார்த்து, அறிவற்றவனே! சகலலோகங்களையும் படைத்தளித் தழிக்கின்ற கருத்தனாய் எவ்வெவ்வரங்களைவேண்டித் தவஞ்செய்யினும் அவ்வவர்க்கு அவ்வவ் வரங்களை வரையாதளிக்கின்ற வள்ளலாயிருக்கின்ற ஈசனுக்குமெய்யன்பையுடையவளொன்னும் நிச்சயத்தையறியாமல் இவ்வித்வார்த்தையினைப் பேசினையனரே? அப பரமபரப்பொருளாகிய பகவானையல்லது கனவின்கண்ணும் மற்றொருவரைக் குறியேனென்று சொல்லினர் அதற்கு எமதுகாத்தரும் கோபங்கொண்டவரைப்போலப் பார்தது மின்னலை யொப்பககாட்டிமறைபு மெல்லிய யிடையினையுடைய நங்காய்! பெண்களாயினோா எலலாக கலைஞானங்களையுங் குறைவறக கற்றோர்களாயினும், அவர்க ளறிவுபேதமைப் பாலதேயெனப் பெரியோாகூறுவர்; நீ கூறியவாா்த்தையும அதுபோலவேயிருக்கின்றது, உனது எண்ணம நிலைபெறுமென்று நினையற்க, உனக்கு அத்தலைவா நேருவரென்னுங்கருத்தை விட்டுவிடக் கடவையென்று சொலலினர் இவ்வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் வல்லபையார்க்கு முன்னிலும் அதிககோபமுண்டாகி ஓபோதமற்றவனே, நெருப்பையுங் குளிர்விக்கத்தக்க உக்கிரமாகிய தவங்கள் அளவற்றனவாகச் செய்யேன அதற்கும எமதுகர்த்தன் மனமிரங்கிவாராராயின் உண்மையாய் எனதுசரீரத்தை ஒழித்துவிடத்துணிவேன் நீயெனக்கு புத்திசொல்லவந்தது போதும போவென்றுசொல்லினர் அதற்கும் அவ்வநதணா அப்பாற் செல்லாது பித்தனைப்போல அங்ஙனேயிருந்தனர் அதனால் வல்லபையார் தாமே அப்பாற்செல்லுவதற்கு அடியெடுத்தனர். உடனே அந்தணராகவந்தஎமது கர்த்தன் அவ்வுருவத்தினின்றுமமாறித் தமது நிஜரூபத்தோடு அனந்தங்கோடி சூரியர்கள் உதயஞ்செய்தாலொத்த பிரகாசத்தினோடு பத்துகைகளும் அளவற்ற ஆபரணங்களும் விளங்கும்படி மயில்வாகனத்தின்மீது மூலகாரணக் கடவுளாகிய கணேசமூர்த்தி வடிவங்கொண்டு தரிசனந்தந்தனர் அத்தரிசனங்கண்ட மாத்திரத்தில் வல்லபையார் கோபத்தினின்றுமமாறி அன்பும்நாணமும் அச்சமுங்கொண்டு சுவாமியைப் பலமுறைப்பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரமேல்வைத்து மிக்கபேருவகையோடு மெதிர்நின்று ஆண்டவனே! அடியேன் அறிவின்மையிற்செய்த பிழைகளைப்பொறுத்துத் தேவ

ரீருடைய திருவடிகளில் நீங்காதபத்தியைக் கிருபைசெய்யவேண்டுமென்றுபிரார்த்தித்தனர். அதற்குக் கணேசமூர்த்தி மனதிரங்கி; ஓ வல்லபையே! நீசெய்த மேலான தவத்திற்கு யாம் மனமுவந்துவந்தனம் உனக்குவேண்டிய வரங்களைக் கேளென்று திருவாய்மலர்ந்தனர் அப்போது வல்லபையார், மீட்டும் பணிந்தெழுந்து சுவாமீ! தேவரீருடைய வாமபாகத்தில் எக்காலத்தும் பிரியாமலிருக்க வரந்தரம்வண்டுமென்றுபிரார்ததித்தனர் அதற்கு எமது கர்த்தன் அவ்வாறே தந்தனமென்று திருவாய்மலர்ந்தனர்.

இவர்க ளிவ்வாருக இதற்கு முன்னமே சிலதூதர்கள் மரீசிமுனிவரிடஞ்சென்று, சுவாமீ! வல்லபையாருடைய தவச்சாலையிலே ஓரந்தணர்வந்து வார்த்தையாடுகின்றன ரென்று அறிவித்தார்கள் அதை மரீசிமுனிவர் கேட்டமாத்திரத்தில் அவ்வந்தணர் கணேசமூர்த்தியேயென்று தமக்குள் நிச்சயித்து அவ்விருவருக்கும் விவாஞ்செய்து முடிக்கத் தமதுமனதிலெண்ணி அவ்விவாகத்திற்குவேண்டுங் காரியங்களை விரைவில்முடிக்கும்படி காரியக்காரர்களுக்காக் கியாபித்து தேவர்கள் முனிவர்கள்முதலிய சகலருக்கும் திருமணப்பத்திரிகை யனுப்பிவரவழைத்து அவ்வவர்கட்குத் தக்கபடி விசாரணைசெய்து எங்கெங்கும் பூரணகும்பந் தூபதீபமுதலிய மங்கலப்பொருள்களை நிரப்பி, ஆகாயமுகட்டை யளாவிய பந்தர்கடோறும் பற்பல கொடிகளைநீட்டி பெருதத குலைவாழைமரங்களை ஆங்காங்கு நாட்டி, நவரததின மயமாகிய தோரணங்களை நிரை நிரையாகக் கட்டி, அந்நகரமெங்கும் கோடணை புரியும்படியாக எல்லாக் காரியங்களையுங் குறைவற நடப்பித்து, தேவர்களும் இதற்குமுன் கண்டறியோமென்று அற்புதங்கொள்ளும்படி கலியாணமண்டபத்தினைச் சோடித்து, அக்கலியாணததிற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் ஆங்காங்கு விதிப்படி யமைததுவைதது, முனிவர்கள் முதலாயினோர் தம்மைப் புடைசூழ்ந்துவரும்படி வல்லபையாருடைய தவச்சாலையை யடைந்து, வேதங்களாலு மறிதற்கரிய கணேசமூர்த்தியைக்கண்டு பணிந்தெழுந்து, தமதுபுத்திரியையும் சுவாமியையும் அரண்மனைக்கு அழைததுவந்து, அரம்பையரால் நாட்டியஞ்செய்திருக்கின்ற விவாகமண்டபத்தில் சுவாமியை யிருத்தித், தமதுபுத்திரியை மணக்கோலஞ் செய்விக்கும்படி அந்தப்புரத்திற் கனுப்பினர். உடனே தெய்வமங்கையரெல்லாம் வல்லபையாரைப்பணிந்தெழுந்து அவர் தரித்திருந்த மரவுரிமுதலிய தவவேடத்தினைமாற்றி சுகந்த பரிமளமிகுந்த தயிலாதிகளைச் சடைபற்றியிருக்கின்ற கூந்

விற் றிமிர்ந்து, சந்தோதகங்களினால்முழுக்காட்டி, அகில் சந்தனத் தூபங்களினால் சரத்தினைப்புலர்த்தி, சிலையுயர்ந்தபட்டாடையினைத் தரித்து, கூந்தலினிடத்தில் பரிமளமிகுந்த புட்பங்களைச்சூட்டி, முத்துமாலை-சரப்பளிமுதலிய ஆபரணங்களைத்தரித்து, பூரணச்சந்திரனை பழிக்கும் முகாரவிந்தத்தில் திலதப்பொட்டிட்டு மற்றுமுள்ளவெல்லாக் கோலங்களையுங் குறைவறநடாத்தி, பல மங்கலவாத்தியங்களோடு விவாகமண்டபத்தி லெழுந்தருளி யிருக்கின்ற கணேசமூர்த்தியினுடைய பக்கலில் எழுந்தருளச்செய்தார்கள், விண்டுமுதலிய தேவர்களெல்லாம் கற்பகவிருட்சத்தினுடைய மலர்களால் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளை பருச்சித்து, மிக்க மனமகிழ்ச்சியோடு இருமருங்கினுங் கைகட்டிநின்று துதிசெய்தார்கள். இலக்குமி முதலிய தெய்வமங்கையரெல்லாம் வல்லபைத்தேவியாருடைய திருவடிகளிற் றாழ்ந்து பரிமளமிகுந்த புட்பங்களைத் திருவடிகளிற் சொரிந்து அளவற்ற மகிழ்ச்சியோடும் இருமருங்கினும் நெருங்கினார்கள் கின்னரர சங்கீத சாகித்தியங்களை வீணைமுதலியவைகளை ஏந்தி வாசித்தார்கள். அரமபையர் பரதசாத்திர விதிப்படி நிருத்தஞ் செய்தார்கள் சிலதேவர்கள் தோற்கருவிமுதலிய பஞ்சவாத்தியங்களையும் ஊழிகாலத்து மேகத்தினையொப்ப முழக்கினார்கள் இவ்வாறு அக்கலியாணமண்டபமானது சகல வைபவங்களோடும் பொலிவுற் றிருக்கின்றபோது, நேமித்திருந்த சுபமுகூர்த்தகாலம் வாய்ப்ப அவ்வேளையில் தேவவல்லியானவள் நறுமணமூட்டப்பட்டிருக்கின்ற பூரணகும்போதகத்தினைக் கரத்திலேந்திவந்து பார்க்க, மரீசிமுனிவர் கணேசமூர்த்தியினுடைய திருவடிகளை அபிஷேகஞ்செய்து, வல்லபையினுடைய திருக்கரங்களைப் பிடித்துக் கணேசமூர்த்தியினுடைய திருக்கரத்தில்வைத்து, தாராதத்தஞ் செய்து வணங்கினன் யாவராலுங் கணித்தற்கரிய கணேசமூர்த்தியானவர் மனமகிழ்ந்து ஏற்றுக்கொண்டனர் அக்கலியாண மகோற்சவத்தைத் தரிசிக்கவந்த யாவரும் கிருதார்த்தரானார்கள். பிரமனானவன் ஓமகுண்டத்தைசமைத்து முத்தீககளையும்மந்திரபூர்வகமாக வமைத்தனன். விண்டுமுதலிய ஏனையதேவர்கள் வேதபாராயணஞ் செய்தார்கள் அவ்வவர்கட்கும் எமது கர்த்தரானவர் தமது கிருபாநோக்கத்தினை வழங்கியிருந்தனர்

அச்சமயத்தில் விண்டுவும் இலக்குமியும் தமது புத்திரிகளாகிய மோதை-பிரமோதை-சுமனை-சுந்தரி-மனோரமை மங்கலை-கேசினி கீர்ந்தை-சாருகாசை-சுமத்திமை-நந்தினி காமதை என்னும் பெயரினையுடைய தமதுபுத்திரிகள் பன்னிருவரையும் கணேசமூர்த்திக்கெ

நீரில் அமிழ்த்துவந்து சுவாமீ! அடியேங்கள் அருமையாக வளர்த்தெடுத்த இம்மகவையைத் தேவரீர் அங்கீகரித்து எம்மை யாட்கொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குக் கணேசமூர்த்தி அருள்வழங்கி அப்பன்னிருவரையும் ஏற்றுக்கொண்டு அவ்விண்டுவைக் கிருஷ்ணியோடும் பார்த்து ஓ சர்ப்பசயனனே! நீ பல அவதாரங்களைக்கொண்டு திரிலோகங்களையு மிரட்சித்துவரக் கடவையென்று அருள்செய்து இன்னுமுனக்கு வேண்டியவரங்களைக் கேள் தருவோமென்று திருவாய்மலர்ந்தனர் அதற்கு விண்டுவானவர் மீட்டும் பணிந்தெழுந்து சுவாமீ! மலபாசங்களிற்சிக்கித் தேவரீருடைய திருவடிகளைக் காணாமல் இளைத்த அடியேனுக்குத் தேவரீருடைய நின்மல ஞானத்தைககாட்டி வேதங்களாலு மறியக்கூடாத விசுவரூபத்தினையும் அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அவ்வாறே செய்வோமென்று கணேசமூர்த்தியானவர் விண்டுவுக்குத் தீக்ஷைசெய்து தமது உண்மைஞானததினை உபதேசித்து அண்டாண்ட புவனங்களை யெல்லாம் விளக்கவல்ல தமது விசுவரூபத்தினைக் காட்டித் தருளினா தவத்திற்சிறந்த மரீசிமுனிவர்முதலிய சகலரும் வெவ்வேறு வரங்களைப் பெற்று ஆனந்தமடைந்தார்கள். இப்பால் கணேசமூர்த்தியானவர் வல்லபைத்தேவியாரையும் விண்டுவினுடைய புத்திரிகள் பன்னிருவரையும் தமது மருங்கி லிருக்கவைத்துக்கொண்டு பல மங்கலவரிசைகளோடுதமது லோகமாகிய மணித்தீபத்தினை யடைந்து வதிந்தருளினர். ஏனைய தேவர்கள் முனிவர்கள் முதலாயினோ வல்லபேசுரரைப்பணிந்து துதிசெய்து விடைபெற்று அவ்வவர்களுடைய பதிகளைச்சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள் அவவிவாக மகோற்சவத்தினைத் தரிசித்த பேர்களெல்லாம் சகல போகபாக்கியங்களையுங் குறைவறப் பெற்று வாழ்ந்திருந்து அந்தியகாலததில் தீவினைகளினின்று நீங்கிப் பரிபூரண சுகத்தை யடைந்தார்கள் வேதசாஸ்திரததிறங்களினாலும்மற்றெவ்வகைப்பட்ட பிரமாணங்களினாலும் அறிதற்கரிய கருததராகி துஷ்டசண நிக்கிரகஞ் சிஷ்டசன பரிபாலனஞ் செய்யும் பொருட்டு பற்பல அவதாரங்களைககொண்டு திருவிளையாடல செய்தருளிய விநாயகமூர்த்தியினுடைய சரிததிரமானது தேவர்களாலும் முனிவர்களாலும் பாராயணம்பண்ணததககதாயும் எக்காலததும் வேதமுடியி லிருக்கத்தக்கதாயும பாசபநதங்களை விலக்கத்தக்கதாயுமிருககின்றது.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே! சிவபிரான் சுப்பிரமணியக் கடவுளுக்கு உபதேசித்தருளிய பன்னிரண்டாவது அவதாரத்தினுடைய சரித்திரங்க ளிவையாகும் இவைகளை யாரேனும்

இட்ட சித்திபெறக் கோருகின்றவர்கள் பாராயணம்பண்ணக் கடவார்களென்று சூதபுராணிகர் சொல்லிமுடித்தனர். அவ்வாரச் சவுனகாதிமுனிவர்கள் தொழுதெழுந்து சுவாமீ! விண்டுவுக்கு வல்லபைகணேச ருபதேசித்தருளிய யோகஞான தத்துவங்களையும், அவர்க்குத் தரிசனங்கொடுத்தருளிய விசுவரூபத்தினையும் அடியேங்கட்கு விவரமாகத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அதற்குச் சூதபுராணிகர் இசைந்து சொல்லத்தொடங்கினர்.

வல்லபை விநாயகர் திருவவதாரப் படலம்

முற்றிற்று.

பதின்மூன்றாவது

## வியாச மகாமுனிவர்

# உபதேசம்பெறு படலம்.

இன்னண மலரின்மேலோ னியம்பலும் வியாதனென்பான்
றுன்னிய வன்பின் மீட்டுந் தொழுதரி யோகஞானந்
தன்னைவல் லபைகணேசர் சாற்றிடப் பெற்றானென்றப்
அன்னதுந் தமியேன் றேற வருளென வருள்வான் வேதன்

ஓ சவுனகாதி முனிவர்களே! இதுவரையினும் விநாயக பிரபாவமுடிந்ததன்றே? இனி உங்கள் அருந்தவங் கூட்டுவித்ததுபோலும், அவ்விநாயகக் கடவுள் விண்டுவுக்கு உபதேசித்தருளிய உபதேசத்தினை விரும்பினீர்கள். யானும் அதனாற் கிருதார்த்தனாயினேன். ஓ அரிய தபோநிதிகளே! எமது கருணைக்கடலாகிய கணேசப் பெருமானிடத்தில் விண்டு உபதேசிக்கப்பெற்றபடி பிரமதேவனுக் குபதேசிக்க, அப்பிரமதேவன் எமது ஆசிரியராகிய மகா மகத்துவமிக்க வேதவியாசமுனிவருக்குப் பாரதமாக உபதேசித் திருக்கின்றனர். அதனை அவ்வாறே உங்களுக்குச் சொல்லிவருகின்றோம். சித்தசாந்தமாகத் தெளிவுபடக் கேட்பீர்களாக.

காண்டல்கருதலுரைகளினாற் கதுவுமேனை யளவையினான்
மூண்டமனமாதிகண் மூன்றான் மறையோன் றிருமாலாதியரால்
வேண்டுமளவு முயன்றாலு மெய்ம்மைசிறிது மறியலுறாப்
பூண்டகருணைவிநாயகர்தம் பொருவில்ஞானம்புகலக்கேள். (௧)

உருவமருவமுபயமென வுணர்க்கப்படுமூவர்கட்மக்கும்
கருவிகரணமுதற்பலவுங் கண்டுபரந்துதுடைத்துமறைத்
தருளுமுதலாயவருளமு முறியாப்பொருளாய்த்தனதருளான்
மருவுமொளியாயெங்குநிறை வாய்மையெதுவோவதுபிரமம். (௨)

அந்தப்பிரமமெரியிரும்பையடுத்தாங்கறிவைத்தொடர்ந்துருக்கொ
டிந்தவுலகில்விநாயகரென் றிணையில்பெயர்தனுண்மையினைப் [ண்
பந்தமகன்றோர்தெரிந்துகொளப் பரிந்துவிளையாட்டயர்ந்திருந்து
மூந்துமலத்தாலொருவருமம் முதல்வரியற்கையுணர்ந்திலரால். (௩)

இருளுமொளிரவிருண்டமல மென்றுமறியாமையைக்கெடுத்து
மருவியிருத்தலாற்சனன மரணமானபிரபாக
மொருவர்தமக்குமொழியாதவ் வொருவரானவிநாயகனு
ரருளின்வழியேயுயர்போக மடையினலதுமுனிவரனே. (௪)

ஒன்றேயானபொருளின்கண் யோகமென்னுங்கருத்தில்லை
யொன்றோடொன்றுசேர்ந்துழியே யோகமென்னுங்கருத்துளதா
மொன்றோடொன்றுசேர்ந்தவற்றி னொழிந்துநில்லாதவையாகா
தொன்றுநின்றசம்பந்தம் யோகமென்பருணர்ந்தோரே (௫)

அந்தயோகம்நான்காகு மவைதாமகமேயகம்புறமே
வந்தபுறமேபுறப்புறமே வகுத்தவிவையாமிவையெட்டாம்
பந்தமொடுமுத்தியினுறழுப் பகர்துமிவற்றின்முறையானே
சிந்தைமயக்கமறத்தவங்கள் செய்துமுடித்தமாதவனே. (௬)

உயிர்தான்மூலமலத்தினொடு முற்றபந்தமகமாகுஞ்
செயிர்சேர்மாயைகன்மமொடு சேர்ந்தபந்தமகப்புறமாம்
பயிலாநின்றதனுகரணப் பந்தம்புறமாம்புறப்புறமா
மயர்சேர்புவனயோகத்தின் மருவாநின்றபந்தமே (௭)

அதனாற்கணேசர்திருவருளா லடையும்யோகமாவதுதான்
மதமார்மூலமலத்தினொடு மருவுபந்தமன்றுபல
விதமார்மாயைகன்மமொடு மேவுபந்தமன்றேனை
யிதமாரிரண்டுபந்தமுமன் றின்னுமிவற்றுள்விதந்துரைப்பாம். (௮)

வேறு.

இருமுதுகுரவர்பாங்க ரீட்டியவினைகடம்மாற்
கருவெனவுறுஞ்சம்பந்தங்காணுறும்யோகமன்று
மருமலர்க்குழலினார்கண் மன்றலும்யோகமன்று
வொருமையின்மாதராசை யோகமும்யோகமன்று (௯)

எண்வகைச்செல்வம்வெவ்வே றெய்தலும்யோகமன்று
நண்ணுறுமவையோராங்கு நணுகலும்யோகமன்று
திண்ணியபிணிகளாதிச் செயிர்களும்யோகமன்று
மண்முதலுலகமாளும் வாழ்க்கையும்யோகமன்று (௧௦)

பொறிகளைம்புலனிற்சென்று புல்லலும்யோகமன்று
பறிமனமொன்றிற்சென்று பற்றலும்யோகமன்று
குறியொடுமொருவனட்புக் கொளவதும்யோகமன்று
செறிதருசித்தியெட்டு நிவணலும்யோகமன்று (௧௧)

பிறவியான்முறைமைபெய்தும் பெற்றியும்யோகமன்று
மறுவறுவருணச்செய்கை மருவலும்யோகமன்று
நெறியினாச்சிரமநான்கி னிற்றலும்யோகமன்று
பெறுமதக்கடவுளாரவா பேணலும்யோகமன்று (௧௨)

வேறு

மானுயிரணா யாமமபிரத்தியாகார மந்திரமாகியசத்தமலாகயோக
ம், பேணலுறுமுயாமயோகமன்றுவிண்ணிற்பிறங்குபலவுலகத்தும்பெ
ட்டபோகங், காணுறுபந்தமுமயோகமன்றுதிங்கட் கடவுள்கன்றகட
வுண்முதற்கடவுளாதிப், பூணுறுதெய்வதமுமயோகமன்று புகரில்
பதமுத்திகளும் யோகமன்று (௧௩)

ஆக்கன்முதலைந்தொழிலும் புரியாமனுற லதிகாரபந்தமுநல்
யோகமன்று, போக்கறவில் லாவுலகிற் பலவேறுநற் புணர்தருசம்ப
ந்தமெலாம் யோகமன்று, பாங்கியமாகியநவந்தெசய் முனிவரேறே
பந்தமுறுசம்பந்தநான்குந்தொற்று, மேதகுபரிவின் னவராலுமம
றிய சிவாண்ணா விடுறுசம்பந்தமொரு நான்குஞ்சொல்வாம் (௧௪)

பக்குவம்புண் ணியமூலபாகஞ்சத்தி பதிதலிருவினையொப்புப்
பயின்றகாலைத், தொகுமல டந்தமெலாங் கழித்த வான்மாச் சுத்த
மாய்ச் சுத்தவவத்தையினிற் சொன்ன, பதுவிக்கு புண்ணியமும்
புரிந்துமேலாம் பரத்திறைடு மொன்றுகாதிரண்டுமாகா, தத்துவித
மாயேகமாகியின்பா யபாவமாநிலையாகச் சம்பந்தமாகும் (௧௫)

அருணிலையேமுத்தியென வழுதநிற்ற லகப்புறச்சம்பந்தமரு
ளுப்சாரத்தை, மருளறக்கண் டிடல்புறச்சம்பந்தமந்த வாய்மையரு
ட்டொழிலினைத்தான்செய்யவெண்ணல், பொருவில்நாளென்றே

மருளாற்காண்டல புறப்புறச்சம்பந்தமிவை நான்கினுள்ளு, மிருள
றுமாதவவகச்சம் பந்தமொன்றே யிணையிலுயர்யோகமென வியம்பு
நாலே.

வேறு.

சிறந்தயோகநான்குள்ளுஞ் சிறந்தயோகந்தனைப்பெற்றோர்
பிறந்துபிறந்தும்வருகின்ற பெரியசமுசாரத்தடையார்
மறந்துநினைந்தும்வினையீட்டி மாயாபோகந்தனுகரா
ரிறந்தவெணதியானென்னு மிருளிற்படார்களொருநாளும் (கஎ)

உலகினுறங்கியுலகிறந்த வொருவான்பொருளில்விழித்தந்த
வலகில்பரமானந்தமய மானவமுதப்பெருங்கடலிற்
கலவிமுழிகித்திளைப்பார்கள் கருணைநிறைந்தவுளத்தினராய்
நிலவுமுலகமொருமூன்று நெடிதுபரிபாலனஞ்செய்வார். (கஅ)

பிழைதீர்தாங்கள்பெறும்பேறு பிறருக்குபதேசித்திடுவார்
விழையார்விழையப்படும்பொருளைவெறார்கள்வெறுக்கப்படும்பொரு
தழைகாமியமூன்றையுமில்லா தனுவினடுக்குமபிருர்த்தம் [ளைத்
பழையோன்மணியம்புதுமணியம் பாற்றியாங்குகதானுகரார். (ககூ)

வேறு.

சகலமுஞ்சொரூபமாகையாற்சகலபூதமுஞ்சொரூபமேயாக
விகலறக்காண்பார்சீவன்முத்தர்களா யிருப்பர்களுலகினுள்ளவர்க்கு
புகலனுக்கிரகப்பொருட்டுலகத்திற் புரையறசசரிப்பர்காமாதி [ப்
திகழுமிந்திரியம்வென்றவரோடுஞ்செம்பொனுமொப்பவேகாண்பார்

தக்கயோகத்தால்வசிகரமாயத் தன்னிடத்தமாசொரூபத்
மிக்கபாவனைகள்கடந்தபாவனையால்வேறறக்கண்டுகொண்டிருக்கும்
பொக்கமிலுளத்தையுடையரொன்றானும் புரைபடார்வேறுதான்படார்கள்
பக்குறுபகையாலடிபடாரிழுக்கப் படார்படுசத்தமிக்குடையார்:

உள்ளவூழ்வினைகளொழிதருங்காறு முழிதருமுடலிடைவந்து
நள்ளிருவினையின்பயங்களைத்தமக்கு நல்லனதீயனபுரிவோர் [க
கொள்ளவேதார்~ ள்பிரமமொன்றனையேகுறிப்பறக்குறித்திருப்பார்
டெள்ளியவிவனையித்தகுயோகச் செய்தியரேயறிவாரே. (உஉ)

அறிவித்தாலறியுமாருயிர்க்கணுதியாகியவாணவமருளாற்
பிறிவித்தானந்தம்பெருக்கியொன்றுமிப்பிரமமாகியவிநாயகனை
கிறுவித்தாரணியீ ருணநாதா திநிலைபெறுதத்துவமவற்றாற்
செறிவித்தாருயிர்க்குத்தனுகரணதிசெயிரிலைந்தொழில்புரிகெ

கரிசிலந்தொழில்செய் காரணர்தமக்குங் காரணன்மாயையிற் பலவாய், விரிதருமுலகில்வியாபியாய்நின்றும் விகாரமாதிகடனக்கில்லான், றெரிசதாசிவனைதிகழ்பராசத்தி சிந்துரமுகவன்மால்கதிரென், றறியவைவர்களாய்ப்பூசைகொள்கின்றுனுயிர்க்கெலாம்நாயகனவனே. (௨௪)

பேறிழவின்பம்பிணிவளர்மூப்புப பேதுறச்சாதலென்றுனைக்கு மாறிலுமோவாதுயிர்களைப்பலா மனைவறச்செலுத்தியுந்தனக்குக் கூறியவிருப்புவெறுப்பிணையிலலான கூடிய பெய்வுயிளையுமயக்கும் வீறியமாயைமடக்கமுமில்லான விளங்கியவனுதியேயமலன். (௨௫)

படைகளாற்பிளக்கப்படானழலமுற்றப்படான்சலத்தினைத்திடப் படான்மிக், கடைவளியுணக்கப்படான்வெளிபோல வகிலமுமிறப்பினுமிறவான், றடையறவொன்று மின்னதென்றறியாத் தத்துவன்றகுபிரமாண, மிடைவிறையரியா வப்பிரமேயன் விளங்குமெஞ்ஞானியர்க்கறிவோன். (௨௬)

இத்தகுபெருமானினையடியிறைஞ்சி னிரண்டறக்கலந்துநானறலை யுத்தமயோகமென்றுமுனுரைத்தயோகமேயோகமவ்வியோகச் சித்தயோகியரேயோகியராவார்கடெளிந்தவேதாந்தமேமுதலா மெத்துசாத்திரத்தினிசத்தமேநுகர்வார்விளங்கியகேட்டலாதிகளால்

பிறங்குமெய்ஞ்ஞானயோகியராமிப் பெற்றியரென்றுமெவ்விடத்து, முறங்கியமனன்கைப் பொருளெனத்ததமுறுவருணத்துயர் நிலையி, னறங்களாற்றன்மந்தரங்களையொழியி னல்லதையகற்றுதல் செய்யார், மறங்களர்மலங்கள் பிறர்க்கறச்செய்வார் வறிதுமியாவெனதெனப்புரியார் (௨௮)

இதுதெரியாதமூடர்கண்முனிவே யிறப்பொடுபிறப்பினைவினைத்துமுதுதுயர்பரிக்குங் கன்மமேவிழைந்து முற்றுறப்புரிந்துவிண்ணுதிக், கதுவுபுன்போகஞ சத்தியமென்று களித்தினி தார்ந்துணர்வழிந்து, பதியெனும்பிரமத் தியல்பறியாது பவந்தொறும்பலமுறைச்சுழல்வார். (௨௯)

ஆதலிற்பிரமத் தியல்பினையறிய வாதரித்தலைக்கடத்தமது, மேதகுமொழுக்கம் புரிந்திறைவனுக்கு வியத்தகக்கொடுத்திடினது தா, னேதருஞ்சித்த சுத்தியைச்செய்தேயுயர்ந்தஞானத்தினுக்குரிய, வேதுவைத்தோற்றப் பிறப்பிறப்பினைப்பின் னெய்துறு ரவர்கண் மாதவனே. (௩௰)

அந்தநீகருமமாற்றுகமுனிவே யறைவருணச்சிரமத்தி
னந்தபிமானந்தனையொருகாலு நண்ணுதலின்றிவை பகத்தோர்

மந்தமாகியபுல்லறிவினைவிடுத்து வழிநடந்துயந்திடும்பொருட்டே
யிந்தயோகத்தையெய்தவல்லாதா ரியற்றிடும்யோகமுமிசைப்பாம்.

வேறு

அட்டமூர்த்தமா யடங்கியவகிலத்துமொன்று
மொட்டிநின்றருள் பிரமத்தையுள்ளவாறுணர்ந்து
முட்டில்வையகத் தாறுதொழின்மொழிபிரமத்திற்
பட்டமெய்த்தொழி லெனவதைப்பார்த்தலும்யோகம். (௬௨)

இந்தயோகத்தையுடையவனின்னலேற்சகத்திற்
வந்தவோகையின்வெகுளியின்வறுமையின்வாழ்வி
னந்துவான்பொருளிழவினினலிபிணியடைவி
னந்தமேவரும்போகததினடைவினிலிறப்பில். (௬௩)

சாரிலாபத்தில்லாபத்திற்சயத்தபசயத்திற்
சேருமானத்திலமானத்திற்றெருளின்வன்மருளில்
கூருமயோகததின்வியோகநதிற்கோதினிற்குணத்தி
லாருமின்னனபோல்வனவணையவற்றுள்ளும் (௬௪)

மில்குபுத்திரர்சத்துருமித்திரர்பந்து
புல்குறத்திரும்பசுமணிமுதற்பொருளிடத்தும்
மில்குசெங்கதிர்சூரியன்சநதிரன்பெருநீர்
மல்குசெங்கனல்சிவன்சததிமாயவன்பிரமன். (௬௫)

இந்திரன்முதறம்றேவர்களியக்கர்கநதருவ
சிந்துமாநதிதீர்த்தங்கேததிரஞ்செறிமனு
ரிந்தநல்லிடததினுஞசமபுத்திவைத்தெதை
மந்தவத்துவைக்காண்குவாகத்தினும்புறததும (௬௬)

வருணமாசசிரமத்தினைவழுவறப்புரிந்து
கருணைநாயகனுகியகணேசாபாலந்தப்
பொருணிலாவுநன்மங்களைப்புகன்றினிதளித்தே
மருணிலாவுமஞ்ஞானத்தின்வந்து ...ரவரே. (௬௭)

பாவபுண்ணியப்பயத்தினைபபரம
தேவனற்பதங்கருதியசெல்வரேபொறியின்
மேவலற்றுறுபந்தமாகியவினைநீங்கித்
தாவலின்பமாகியதனிப்பாத்தினைச்சார்வார் (௬௮)

உள்ளமைம்பொறிவழிவிடையத்திடையுறுங்காற்
றெள்ளுகின்றநற்றெய்வவாக்கியமெனஞானத்

தெள்ளலின் றிநின் றிடவயிராக்கியமீண்டு
நள்ளவன்னதுபிரமத்திற்றிறபுத்திநன்றாம். (௩௯)

இட்டமானவைபோற்றனக்கயிதமேயீட்டி
நட்டமேயுறுமுதகத்துப்பொருள்களினைசையை
விட்டுமேதகுபிரமத்தின்விரவியொன்றாகப்
பட்டதாகியபுத்தியேதிரபுத்திபார்க்கில். (௪0)

அனையதாகலின் பிட்டினையாதரித்தவர்கள்
வினையெலாந்தரும்பிடையூத்தின்மேவியபொறியை
யெனையுறுவகைமீட்டிரும்பிரமமெய்ஞ்ஞான்று
நினைதல்வேண்டுமெய்த்தவத்திடைநின்றமாமுனியே. (௪௧)

மீட்டிடாதுதன்மனத்தினைவிழைபொறிவழியே
யீட்டமாகியவிடையத்தினெய்துறவிடுப்பி
னாட்டமாயதிலழுந்திநாடியங்கழுந்திற்
கோட்டமேபுரிகாமமா[illegible]ங்குரோதமுமாமே. (௪௨)

அதுவுண்டாகவஞ்ஞானமுண்டாமதனாலே
பதியதாகியபிரமத்திற்படர்நினைவிறக்கு
மிதுவுண்டாகவேபிரமமெஞ்ஞானமின்றாகி
வதியஞ்ஞானியாய்முன்புபோற்பிறப்பிடைவருவான். (௪௩)

அன்னதாகையான்மனம்பொறிவழிவிடாதடக்கி
யென்னையாளுடைக்கணேசனாரிருபதத்தென்றுந்
தன்னதார்வமெலாந்தரிப்பித்தலேவேண்டு
மின்[illegible]ம்தாம்வழிபாட்டினாலிருஞ்சுகமாமே (௪௪)

நதியெலாங்கடலடைவதுபோலநாடோறும்
பதியின்மாட்டுறுகாமங்களனைத்தையும்பாய்த்து
மதியதேதிரபுத்தியானெனதெனுமயக்க
விதியிலாதமெய்ஞ்ஞானியேவீட்டினையடைவான். (௪௫)

பொருவின்மாதவனேயிதுவேபுணர்பிரம
சொருபமாகியபுத்தியச்சொரூபமாய்நின்றோன்
கருமம்யாதுமில்லாமலேயிருப்பன்மன்கரும
மருவினின்றிடுஞ்சுதந்தரன்பிரமத்தைமருவான். (௪௬)

மருவுமிந்தியவகுப்பினன்மாதவமுனியே
கருமயோகத்தைக்கரிசறச்செய்ததன்பயனை

யாருவுமார்வத்தையுடையவனேபரன்கமலத்
துருவமெல்லிலைநீரினொட்டான்வினையவனே (௪௭)

அறிவதாய்நமதறிவுறாபிரமத்தையவாவி
னெறியினாற்பலகருமமூறிகழ்பலன்குறியா
துறுதியாற்செயல்கருமயோகங்களிவ்வியோகம்
பிறவில்சாங்கியயோகத்தைக்காட்டுபெயரும். (௪௮)

வேறு.

தழைதருவேதாயோகஞ் சாங்கியயோகமென்ன
விழைவனவிரண்டினுள்ளும் விளங்கியவேதாவென்னும்
பிழையறுகருமயோகம் பிறங்குசாங்கியயோகத்துக்
குழைழுவளரேதுவற்றாற் சாங்கியயோகமெல்லாம் (௪௯)

சாங்கியயோகந்தன்னாற் றனைமறந்திறக்குங்காறு
நீங்குறுன்கருமயோக நெறியினையுணர்ந்தோன் கன்மம்
வீங்கியபயனைநாடி விளைப்பவன்றிருடனந்தத்
தூங்கலேகொடியபாவி தொன்மைமேதராதநீரால் (௫௰)

மல்கியவுயிர்கட்கெல்லா மகிழ்ச்சிவானவராலாய
தல்கியதேவர்க்கின்ப மாயதெச்சங்கடம்மா
லொல்கியவெச்சம்வேதத் துதித்தனவுயர்ந்தவேத
நல்கிடப்பட்டதென்று நசிந்திடாப்பிரமத்தானே (௫௧)

ஆகையாலனையதாகி யகம்புறமாஞ்சொரூபத்
தேகமாய்விரவித்துய்க்கு மின்பமேமெயினபமாகும்
போகமானவைகளெல்லாம் புல்லுறுத்துன்பமாகு
மோகையான்மகார்களாட லுயர்ந்தவர்க்கிழிந்தவர்போல் ()

வேறு.

உலகர்போகத்தையொழிந்தியானெனதெனுஞ்செருக்கும்
விலகிமேதகுபிரமத்தின்விரவியொன்றாகிக்
குலவுமா[illegible]ந்தக்கடலிடைக்குளித்தவர்தம்மை
யலகுகாண்பரிதாங்கடலயிரலகிடினும். (௫௩)

மடமையாற்றனைப்பிரமமென்றெண்ணுறுமதியோ
னுடன்விராவியபிரமத்தினுண்மை யயுணரான்
கடவுளாம்பிரமத்தினுட்டனதியல்கண்டோ ப
னடலையாகியவெனதுயானென்பதுநவிற்றான். (௫௪)

கன்மயோகமும்வியோகமுங்கரைத்தனவவற்று
ணன்மையாவதுவியோகமேகவிற்றியயோகம்
வண்மையாகியபந்தமேவளர்ப்பதுவியோகந்
தன்மையானவிஞ்ஞானமேதருவதுமுனிவே. (௫௫)

மதியின்யாதனின்யாதனின்வழுவினுணதனி
னதனினேதலையடைதரானருஞ்சுகமுறுவான்
மதியின்யாதனின்யாதனின்மருவினுணதனி
னதனினேதலைமருவுவனவ[illegible]துயன்றுன்பம். (௫௬)

சுருதிகன்மங்கடொகுத்தமிருதிகன்மங்க
ளொருவுறுசமதமங்களாலுஞற்றியப்பயனை
மருவுறுதநல்வியோகத்தின்வளரும்விஞ்ஞானங்
குருவின்பேரருளாலவருங்காதறுமுனிவே. (௫௭)

குருவினன்மலந்துடைத்துவருஞானங்கூடாது
கருமமாமையும்பயன்றனைக்கருதியேபுரிவார்
பொருளிலாதவினணவர்களாய்ப்போகங்களுகர்ந்து
மருவுபூமியின்மறுவலும்வருவாரகற்சார்பின். (௫௮)

கன்மநன்றுசெய்ததன்பயன்கருதுவதொழிந்து
கன்மநிட்டையையுடையராய்க்கரிசெலாமறுக்குந்
தன்மைமல்கியதவநிட்டையுடையராய்த்தவரு
நன்மைமல்கியஞானநிட்டையைநண்ணுவரால். (௫௯)

ஞானநிட்டையையுடையவர்ஞானமேவடிவ
மானமெய்ப்பெரும்பிரமமேயாவர்பின்பிறவார்
வானமுட்டியதவத்தினேய்வழங்கும்யோகத்தை
யீனம்விட்டுயர்பிரமமாயிருந்தனைகேண்மோ (௬௰)

அறியுநீரதொன்றேயதுபிரமமேயதனை
யறியுஞானமேஞானமாயருந்தவமுனிவே
செறிசராசரமாகியதிரளெலாமதுவே
பிறிதராவுயிர்ப்பேதமும்பேசியவதுவே (௬௧)

மண்ணிற்கந்தமுநீரினிற்சுவையும்வைதழலி
னண்ணுருபமும்வளியினிற்பரிசமுநவைதீர்
விண்ணிற்சத்தமும்வேறுமவ்வவற்றினீங்காத
வுண்மையாங்குணமனைத்துமப்பிரமமேயுரவோய். (௬௨)

இனையதாகியபிரமத்தைபிறந்துயிர்போங்கா
னினையின்வேறுறநிலையதுவாகவேநிற்பார்
வினையின்மீட்டுேறார் விண்டுவைவேதனையாதி
தனைவிராவினோர் தாங்களுமீள்குவர்சாதம். (சுரு)

தெய்வம்யாதனைச்சேர்ந்தெவர்போற்றினுமந்தத்
தெய்வமாயிருந்தவர்க்கருள்வரங்களைச்செறிக்குந்
தெய்வந்தேர்வரும்பிரமமாகியவிநாயகனே
தெய்வம்யாவையும் வழிபடுந்தேவனுமவனே. (சுச)

வேறு

காலம்பிரமபாவனையேகருதல்கருசினுபாசனையென்
றாலுமிவற்றினெடுங்கருமமாக்கல்வேண்டுமறிவுடையோர்
காலமிரண்டக்கினிசோதிமயமாங்கதிரோன்கதியொன்று
சாலவமிழ்தச்சோதிமயந்தானுந்திங்கட்கதியொன்று. (சுரு)

வெண்மைகருமைப்பக்கமெனவிளங்குமிவற்றுளடங்கியிடும்
வண்மைவளர்க்கும்பலகாலவகுப்பும்பிரமபாவனைதான்
றிண்மையுலகில்வேறின்றிச்செறிந்தோன்றுனபிரமத்தி
னுண்மையுணர்தல்கருதல்சதசத்தையுள்ளபடிமரித்தல். (சுசு)

இருவேறுருகுமுபாசனைதானெழிலார்புறப்பூசனைசாலக்
கருகாநிற்குமகப்பூசையெனவேகரைந்தபுறப்பூசை
மருவார்மலர்மஞ்சனந்தூபமணித்தீபாதித்திரவியங்கொண்
டுருகாநின்றவன்பினொடுமொருகோட்டிறையையருச்சித்தல் ()

துகடீரகப்பூசனைபூதசுத்திபிராணுகருடனஞ்செய்
திகலார்புத்திவியாபாரமிறுத்துத்திரபத்தியிற்குருவின்
முகனுல்வருமந்திரமகணித்துமுதல்வனுருவந்தியானித்து
மிகமாமறையின்மேற்றத்திரங்கள்விளம்பிவணங்கிவழிபடலாம்

புரப்பூசனையத்திறப்பூசைபொருவிலகப்பூசனைதிரமாஞ்
சிறப்பார்முனியேயாதலினுற்சிறந்ததாகுமகப்பூசை
மறப்பேர்ன்பபேயிவையொழிநதுவாழவேண்டிற்காலமுத
லுறப்பூதலத்திற்கருமங்களுளுற்றும்பயனைக்கருதாதே. (சுஎ

எச்சமழலோடிமனுநெய்மீண்டுமவுசுதியானமுடற்
றுச்சிலறுந்தோத்திரநீதிதுடங்கும்பத்தியுபாசனைக
ணச்சுஞ்சகலதிரவியங்கணவில்காரணங்கள்சதசத்து
வெச்சென்மரணமமிர்தமிவையெல்லாவினைவும்விநாயகனே

அந்தவிறைவன் றிருவுருவிலாற்றுஞ்சாப்பூசனையாக்
வெந்தைதவடிவுள்ளகத்திருத்தியியற்றட்சரப்பூசனையாக
சிந்தைவிழைவிற்புரிகின்றோன்றிகழ்சண்டாளவிழிகுலத்தில்
வந்தபிறப்புள்ளவனேனுமறையோர்குலத்திலுயர்ந்தவனும். ()

பிறப்பினுயர்ந்தபிராமணனாய்ப் பெரிதுமறைகள்பயின்றுணர்ந்
சிறப்பவிருந்தானாயிடினுந்தேவதேவன்றிருவடியி [தும்
லிறப்பவழிபாடியற்றுதானிழிசண்டாளகுணத்தோரு
ளறப்புத்திநையயில்லாவிழிஞனுவனுவனிதுமெய்யே (எஉ)

வேறு

சேத்திரசேத்திரக்கிஞனென் றிவற்றையாய்ந்த செயமையனே விஞபகனுக் குரியவனுவன், சேத்திரமாவது பூதமைந்து தன்மாத்திரையைந்து கன்மவிந்திரியமைந்து, வாய்ந்திடு ஞானேந்திரியமைந் தாங்காரமனம்புத்தி சித்தமென் றிவையென்மூன்று, மேத்தியசேத்திரக்கிஞன்று னிவற்றையாய்ந்த வியத்தினனுமென்றறிக முனிவரேறே (எங)

தத்துவகாரணமான பரகிருதிமாயைத்தான் மூன்றுமவைதை வியாசுரிராட்சசியே, முத்திரமாகியவிவைதாரு சகலவுயிர்மாட்டு முயங்குவனவிவற்றினிடைப்படுசின்னமிரண்டும், பத்திபுரிவியாத முனிவேயினைத்துத்தொருத்துப் பகருதுவ கேடைவியெனப்பகர் குணந்தான்பரமர், முத்தியினுக்கேதுவென விருங்கு மொழிந்தவை தாமுடம்வளர்பந்தத்துக்கேதுவாயிருக்குமே (எச)

பலனுரைத்தாமினித் தைவிசியான முறை தந்திடக்கேள்பரன்மனையை[illegible]யாமை கோருரையாடாமை, குலவுமுயிரகொல்லாமை வெகுளாமை நன்றிகொல்லாமை கருணையுடனிருத்தனெறியொழுக, விலகுமுடற் காந்தியமையம் பொறுமை சீலமினியமொழி கொடை தவநதானங்களுறுவாய்மை, மலர்தலைமையகம் பெறினுநடுவுநிலை பிழையாமனவணமை எவாக்கும் வணக்கமுறன்முதலாம்.

ஆசுரியின் சின்னங்களரவமிகு வார்த்தையறைதல் பிடித்தது நீததாயினுஞ் சாதித்து, மாசுபடுமபிமானமஞ்ஞானங்கெறுவம்வளர் கோபமாதிகளா மிராட்சசிக்குச்சின்ன; நேசமெரீஇமனஞ்சென்றவழிச்சேரன் மோகமிட்டேர மகங்காரந் தனைமதித்துத்தருக்க, மேறுசிகனந்தணர்தேவர் வேதசாத்திரங்க டெளிந்த பெரியோரிந்தை யெவர்க்கும் பகையாதல். (எசு)

தன்குருவை விடுத்தனை யோரைவழிபடுதல்சாக்துகள் வாக்கியத்தின் விசுவாசமின்மை, நன்குதருமாசாரமின்மைபாசண்டர்

நவிற்றுநவைவாக்கியத்தின் விசுவாசமுண்மை, கன்மமியற்றுமை வழிபடற்குரிய பெரியோர்கழல்கள் வணங்காமை யுயிர்க்கொலையாவிசாரம், வண்மையொடும் புரிகத்தனு குதலாதிகளா மாதவனே இனித்தவங்கண் மூன்றுரும்வகுக்கின். (எஎ)

அன்வைதாங்காயிகமே வாசகமானதமே யாமென்பரவற்றினுட்காயிகதவந்தானித்த, மன்னியிடுஞ் சுதன்மபரிபாலனஞ்செய்திடுதல்வாசகமாந் தவம்பிரியவசன மேயுரைத்து, நன்மைதரும் வேதசாத்திரத்தை விரையாது நவையறப பாராயணஞ்ந செய்திடுவது மானதந்தான், றுன்னியவந்தக்கரணச்சுத்திய தாய்ப்புலனிற்றுன்று மற்பொறியைந்து மடக்குவதாமுனியே. (எஅ)

அவை மூன்றுந் தைவிமுதன் மூன்றுனுமும்மூன்று மவற்றுட் சாத்துவிதமாந் தவநற்கன்ம, நவையில்பயன்கருதாது செய்வதிராசதமாய் நண்ணுதவம் புகழொன்றே நாடியிருந்கன்மந், தவறறவே பிறரியப்பிரகாசமாகத தானபுரிதல் தாமதமாந் தவமபிறரைவருந்திக், கவலையுறுததிடுநதவமா மாதலினுற் பின்னர் கரைந்த விரண்டினுஞ்சனனமரணங்களுவுறுமே (எகூ)

கிளர்தானமூன்றுருங் கேடின்மறை விதிவாககியப்பிராமாணங்களினுற்பாதநிரத்திற்றேசம், வளர்காலமறிந்து சிர்த்தையிற் பிறர்க்குத்தோன்று மரபினிரும் பொருள்கொடுத்தெவ்வளவுகொடுத்தோமென், றுளநெகிழக் குறையுறுதல் சாத்துவித்தான முபகாரம் புரிந்தவர்கட் குபகாரம்புரிதல், தளராது வரும்பயனைக் குறித்தொருவர்க்களித்தல தகவருத்ததொடும்புரித விராசதமாந்தானம். ( )

காலமொடுதேசங்க ளின்றிய பாத்திரத்திற் காமர்பொருள்பிறரறியக் கொடுததளித்தேனென்று, சாலவெடுத் துரை[illegible]ரத்துத் தன்னைமேம்படுததற் றுமதமாநதானமினி ஞான மூன்றுருஞ், சீலமுனியேயழிதன் மாலையவாய்ச்சிததாய்ச செறிபல பூதஙகளினும் பிரமத்தை யொன்றுய்க், கோலமுறு நித்தியமாய்க் காணலுறு ஞானங் கோதற்றசாத்துவிதஞானமெனக் கூறும் (அக)

பற்பலபூதங்களினும் பிரமத்தைதவேறுய்ப் பார்த்தலிராசதஞானம் பரப்பிரமந்தன்னை, யுற்பவமாதிகளுடைய வுலககாரணமாயுன்னுமற்சத்தியமாச் சததாகமன்ற, வற்பவிடையங்களினு ளொன்றுக வெண்ணு மஞ்ஞானந் தாமதஞானங் கன்மமூன்று, பொற்புறுநித்தியகன்ம மாதிமயனுதி புந்திசெயாதியற்றுவது சாத்துவிதக்கன்மம்.

மிக்கக்லேசத்தினுற் பயன்விழைவுதன்னுல் வெம்பகையாலாரவாரத்தினுற்பிறவாற், றக்கருமம்புரித விராசதகன்மங்கள் சார்பயினைப்பெறவிழைந்தஞ் ஞானத்தாற்றனக்கே, பொக்கமுறச்செய்துகொ

ருக்கன்மங்களனைத்தும் புரைபடுதாமதகன்ம |மிவ்வாறுகுலத்தா, லொக்கவனந்தம் பலனைக் குறித்திடைவிடாம லூக்கமொடு புரிகின் ற விராக்கதகன்மத்தோர். (௮௩)

இருபத்தெண்கோடி நரகத்தினும்வீழ்ந் தின்னலெய்தியபின கழ்புவியிற் பிறவியில்வந்திடுங்காற், குருடுமுதலியவங்க வீனராய்ச் சாதிகுல வீனராய்க்குறளராய்ப் பிறந்துகணேசர், மருமலர்ச் சேவ டிப்பத்தி யீனராய் மோகவலையினராய் மூடராய் வழுவினராய் மீட் டுங், கருதரியபாவங்கள் பலபுரிந்துநாளுங் கடுப்பினொடு முண்டுடு த்துக் களித்துமிவத்தருக்கி. (௮௪)

நானேகத்தா நானேபோத்தா வீச்சுரனுநானே நானேசாத்த னறிந்தவனானேயென், றுணுதுமொழிந்துபெருநரகத்தின்மீட்டுமழு ந்துவர்க ளினிப்பத்தி மூன்றிராககதமே, தானுருங்கன்மமா சுரிகன் மமொழிந்து தைவியெனுங் கன்மத்தை யாசிரித்துக் கணேசர், வா னேய்பத்திமைபுரிதல் சாத்துவிதப்பத்தி மற்றைய தேவரைப் பணி யும் வந்தனையுமதுவே.

இயக்கராக் களைகுறித்துப் பத்தியினால் வழிபாடியற்றுவிராச தபத்தி யிதுபவத்தைக் கொடுக்கு, நயக்குமறைவிலக்கியகன்மங்க ளெலாம்புரிந்துநன்றாகத் தனதுடலேபுரிந் துயிருக்குயிராம், வியக் குமருட்கணேசனை யுண்ணுதலைகைபூதம் வேதாளமிவைகுறித்துக் கொலையாதிபுரிந்து, மயக்கமுறும்பத்திதா மதபத்தியிதுவே மூட்டு வதாமிருபத்தெண் கோடிநரகமுமே (௮௬)

…த்ததவமாதிகளைப் புரிந்திடுங்கர்த்தர்களா மூவரகங்கார த்தைவிட்டவன்சாத்துவிகத், திறைந்தபெருங்கத்தன் சுகதுக்கத் தையுள்ளானுயிரும்பலத்தி னாசையைவைத் தவனிராசதனே, சூழ்ந்த வறிவினனாகிப் பிறர்செல்வஞ் சாலக்கண் டழுக்காறுண்டுபவன்றா மதகத்தன்முனியே, யழிந்துவிடுஞ் சுகமூன்று துக்கமூன்றாகுமவற் றினையு மொருங்குதொகுத்தன் றகுதுநன்றறிமோ. (௮௭)

சாத்துவித சுகதுக்க மாவனதாந்தொடக்கந் தனில்விடமாய்த் துக்கத்தைத் தணப்பித்தந்தத்தி, லேத்தனுறுமமுதமா மிவைவிரத மாதியியற்றனுறுஞ் சன்மார்க்கத்தாமிராசதத்தின், பூத்தனுறுஞ்சுக துக்கந் துடக்கத்திலமிழ்தாய்ப் பொல்லாததுன்பத்தைவளர்த்தேய ந்தத்தி, னீத்தீலருங் கொடுங்காலகோடிவிடமாகுநிகழ்விடையபோ கங்களா, லாகுமிவையே. (௮௮)

கடையானதாமதத்தாஞ் சுகத்துக்கந்தொடங்குங் காலமுதல
ந்தமுறுங்காறுஞ் சுகம்போன்று, துடையாதபெருந்துக்கமாய்விளை
யுமிவைதாந் துனமார்க்கத் தார்பிறனில் விழைதன் முதற்றொழிலா,
லடைவாகு மாதலினுற் சாத்துவித முடையவன்பின னேவிநாயக
னுர் சொரூபத்தையடைவான், விடையாதசாத்துவித மேவாதாரெ
ல்லாமிககபவநரகினிடை மேவுவர்மாதவனே. (அகூ)

வேறு

இன்னணந்திருமாற்கநா ளெம்பிரானுரைத்தலேரடுங்
கன்னியந்துளவமாலையோன் காதலின்வீழ்ந்து தாழ்ந்து
பொன்னவிர்கொன்றைவேணிப் புண்ணியபாவடியேனின்பா
லின்னுமொன்றிரக்கவுற்றே னிரங்கெனவிளக்கிவிள்வான். (கூ0)

மறைமுதலனைத்தினாலும் வருநதிதுவென்றுகாணு
நிறையுநின்னுண்மைஞான நிரம்பியகருணைதன்னுற
குறைவறவுணர்ந்தநாயேன் குடங்கையாமலகமென்னக்
கறையறமுழுதுந்தேர்ந்தேன் காதரமுழுதுந்தீர்ந்தேன். (கூக)

இனியொருகுறைவுமில்லை யாயினுமெம்பிரானே
முனிவருட்சிறந்தவாய்ந்த முதன்மைசேர்வியாசனங்கைப்
புனிதனமுன்னொருநாளெம்பாற் பொற்புறவந்துளானின்
றனிவருவிசுவரூபஞ் சொற்றனன்சிறிதுகேட்டேன். (கூ௨)

அதுதனைக்கண்ணுற்காண வடியனேற்கினிதுகாட்டா
யிதுபொழுதருளாயாயி னெளியனேனுய்யேனென்று
கதுமெனவீழ்ந்துதாழ்ந்தான் கண்ணசனர்கருணைகூர்ந்து
மதுமழைபொழிந்தாலென்ன வாய்மலர்ந்தருளிச்செய்- (கூ௩)

கற்பனைகடந்தநந்தங் காமருவிசுவரூப
மற்புதமாகுமந்த வற்புதந்தனைச்செந்தீ
விற்பொலிவூனக்கண்ணால விண்டுவேகாணொணாது
சிற்பரஞானக்கண்ணுற றெளிந்தவாகாணினல்லால் (கூ௪)

ஞானவாள்விழியையின்பா னல்குதுங்காண்டியென்று
ஞானவாள்விழியைச்சால நல்கினானவைதிரந்த
ஞானவாள்விழிசியக்கொண்டே நாரணனினிதுபார்த்தான்
ஞானநாயகனுர்கொண்ட நயததகுவிசுவரூபம். (கூ௫)

முடித்தலையெங்குஞ்சேர்த்த முகமலரெங்குமின்ன
விடித்தருள்விழிகளெங்கு மிருஞ்செவியெங்குமாய்தம்
பிடித்தகைத்தலங்களெங்கும் பிறங்கியகவானகளெங்கு
மடித்தலமெங்குமேனை யவையவமனைத்துமெங்கும். (கூ௬)

கொண்டருளுறுவிற்சாலக் குழுமியவுரோமந்தோறு
மண்டமுமண்டந்தோறு மமரர்களாதியாக
விண்டிடுஞ்சருக்கமுமேவழ் விதங்களுநேரேகாணக்
கண்டுபேரின்பவெள்ளக் கடலிடைபடிந்தான்மாயன். (௯௭)

விம்மிதம்விளையாநிற்கும் விழுமியவுருவஞ்சாலச்
செம்மலாரருளப்பெற்றேன் சிறியனேனந்தோவென்று
கைம்மலர்முடியிலேறக் கட்புனலிழியவுள்ளங்
கொம்மெனவுருகிநைந்து குழையநின்றிதனைச்சொன்னான் (௯௮)

கனைத்துவண்டுளருங்கொன்றைக் கண்ணியாநினதுவாக்கா
லனைத்துநம்முருவமென்றே யறைந்தனையதற்கோர்சான்றா
வெனைத்துநின்னுருவமான வியற்கையென்விழியிற்காட்டி
வினைத்தொடக்கறுத்தாய்நாயே னென்னெனவிளம்புகேனே. (௯௯)

அத்தனையிந்தக்காட்சி யறிந்தவருளரோவென்று
நதினன்விணுவினின்[illegible]தனாரருளிச்செய்வார்
பத்தியையுடையராகிப் பயின்றமெய்யோகஞ்சான்ற
வுத்தமச்சனகராதி யுறுதவரனேகர்மாயோய். (௱)

நம்முடைஞானக்கண்ணா னமதருளுருவங்கண்டு
மும்மலமிரியல்போக முத்தராயின்பம்பெற்றா
ரம்மையோருகத்தினம்மை யருமகவாகப்பெற்ற
மம்மர்தீர்தவத்தா[illegible]வேணியனென்னுமன்னன் (௧0௧)

நமதருட்கீதைகேட்டு நம்முருக்காட்டக்கண்டு
விமலத்[illegible]ந்தானந்த வெள்ளத்துட்டோந்துவாழ்ந்தான்
சமதமமுடையார்க்கிந்தச் சாத்திரஞ்சாற்றுகென்ன
வமலனாரருளிச்செய்தா ராழியான்றெளியமாதோ. (௧0௨)

அத்திருகணேசர்கீதை யாழியானுணர்ந்துநன்மை
மெத்தரியம்மணன்பால் விழைவொடுங்கொடுத்தானந்த
வுத்தமன்மனுவுக்கீந்தா னுவனிடைமுனிவர்பல்லோர்
பத்தியிற்கேட்டுப்பாரம் பரையினால்விளக்கினாரே (௧0௩)

இயம்பியகணேசர்கீதை யிழுதையர்கேட்டாராயினு
பயந்தருபாவமுற்றும் பாற்றிவான்கதியைச்சார்வா
ரயந்தருசன்மார்க்கத்தா ரன்புறக்கேட்டாராயிற்
சம்புவாகியகணேசர் தாளிணைநீழல்சார்வார். (௧0௪)

ஓ சவுனகாதி முனிவர்களே? விண்டுவுக்கு வல்லபைக் கணேசர் உபதேசித்தருளிய யோகஞானமும், அக்கடவுள் அவருக்குக்

கடாட்சித்தருளிய விசுவரூபத்தின் விபரமும், அவற்றைப் பிரம்ம வேதவியாசமுனிவருக்குஉபதேசித்ததும் இதுவாகும் இம்மெய்ஞ் ஞானத்தினை நீங்கள் யாவரும்வழிபட்டு பிரம்மாநந்தசுகத்தையடை வீர்களென்று சூதபுராணிகர் சொல்லியருளினர். அவ்வாறுமைமிசமு னிவர்களெல்லாம் அத்தியந்த சந்தோடத்தோடுவணங்கிவாழ்த்தின வர்களாய் சுவாமீ! தேவரீர் அடியேங்கள்செய்த தவமுயற்சியினால் இங்ஙன மெழுந்தருளி பதினெண் புராணங்களினு முதன்மையாக விளங்கும் விநாயகமகத்துவத்தை அடியேங்கட்கு எளிதில்போதை யாகும்படி தெருட்டினீர் அவைகளை யடியேங்கள்கேட்டுக் களிப்ப டைந்ததன்றி முத்திவீட்டிற்கும் பாத்திரராயினேம். மேலும்இவ்வ ரிய மானிடதேக மெடுத்ததற்குப் பெறவேண்டும் பலன்களை யெல் லாம் ஒருங்கெய்தினேம் இத்தகைய மேம்பாட்டைக் கிடைக்கச் செய்த தேவரீர்க்கு நாயினேங்களால்முடிக்கும் கைம்மாறேதேனு முண்டோவென்று பலபலவிதங்களிற்போற்றி, அன்றுமுதல் அவ்வி திகாசத்தைப் பிரதிதினம் பாராயணஞ்செய்துவாழ்ந்திருந்தார்கள்.

## வாழி-விருத்தம்

திங்களையணிந்தவைங்கைச செம்மல்பொற்சரணம்போற்றி
பங்கின்வீற்றிருந்தசித்தி புத்திதம்பதங்கள்போற்றி
யங்கவர்க்கன்புசெய்யு மடியவரடிகள்போற்றி
நங்குருநமச்சிவாய னளினபாதங்கள்போற்றி.

அருள்பொழிகணேசன்செய்ய வடிமலர்வாழ்கவன்னான்
பொருவிலிப்புராணமோங்கிப் பொலிகவீது நல்லோரு
மருவுகபயன்களுங்கு மன்னுகவுலகமெலலாந்
திருவொடுசிறக்கவெங்கு செயிரிலாச்சைவமென்றும்.

## இலீலாகாண்டம்.

முற்றிற்று.

---

விநாயக புராணம் சம்பூர்ணம்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

